# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

# A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

## முதன்மடலம் — இரண்டாம் பாகம்

## (ஆ, இ, ஈ)

முனைவர். **இரா. மதிவாணன்**
*முதன்மைப் பதிப்பாசிரியர் – இயக்குநர்*

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல்
அகரமுதலித் திட்ட இயக்ககத்திற்காக அச்சடிப்பு

உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்,
தரமணி, சென்னை – 113.

செ. சொ. பி. அகரமுதலித் திட்ட இயக்கக வெளியீடு – 2

முதற்பதிப்பு : தி. பி. 2022



A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE.

**விலை: உருபா 150.00**

குறியீட்டெண் : Colon No.P 31–J, 3;4" K M4

*Published by :*
*Directorate of Tamil Etymological Dictionary Project.*

**Copies available at**

*International Institute of Tamil Studies*
*Tharamani, Madras – 113.*

*Typesetting by:*
*AR Laser & Logic Services Mylapore, Madras – 600 004.*
*Savithri Laser Printing Madras - 600 028.*

*Printed at : SRI YESES PRINT HOUSE, MADRAS - 600 005.*

**Dr. C. Aranganayagam**
Minister for Education
Govt. of Tamilnadu.




Fort, St. George,
Madras -- 600 009.

# FOREWORD

Compilation of dictionaries, of which there are several kinds, is considered a cardinal requisite for activities connected with the promotion of language growth. Especially imperative is the need for an etymological dictionary in Tamil, which seeks to determine and elucidate the root of every word in the language to facilitate higher research by linguistic specialists as well as act as a guide to general scholars who are interested in ensuring that the language keeps pace with progressing knowlege of the modern times. The first volume part I of the Comprehensive Etymological Dictionary of Tamil Language was compiled by the late lamented linguistic luminary G. Devaneya Pavanar and published on Thiruvalluvar Day in 1985, during the platinum jubilee year of Perarignar Anna.

I take immense pleasure in penning a foreword again, this time to the subsequent parts which together with the earlier one complete the portion relating to vowels in Tamil. Perarignar Anna, in his greetings dated 9.8.1967, eulogizing Pavanar for his yeoman services, has stated, "Pavanar, by his ceaseless service to Tamil language has elevated the stature of all of us. His erudition is replete with definition and dauntlessness. Anyone devoted to Tamil could not but cherish with earnest fondness the savant, who after considerable research, gave us to understand the ingenuity and immaculacy of Tamil language. I bow my head to pay homage to Pavanar. Long live Pavanar! hail to Tamil!".

The Government of Tamilnadu is rendering singular service to the cause of Tamil Development by closely treading the footsteps of such nobles as Maraimalai Adigalar, Magaral Karthikeyanar, Thavathiru Gnanaprakasar, Pavanar, Pavendar

Bharathidasan etc., Who had illuminated the path, in 20th century, even like the morning star.

The establishment of the Tamil University by our Former Chief Minister Makkal Thilagam Puratchi Thalaivar happens to be a towering accomplishment among several such endeavours in the sphere. It is a matter of pride and pleasure that the succeeding parts of the dictionary should appropriately be published during the Chief Ministership of Puratchi Thalaivi **Dr. J. JAYALALITHA.**

It is my ardent hope and fervent wish that all the volumes to complete the project will be published erelong and adorn as a jewel the sacred person of Tamil Mother. I take this opportunity to heartily congratulate Dr. Avvai Natarajan, Secretary to the Government, Tamil Development-Culture Department for his untiring efforts as also Dr. R. Madhivanan, chief Editor and Director of the project who is editing the ensuing volumes of the dictionary.

I am sure that the publication will be accorded a warm enthusiastic reception by the Tamil world and put to profitable use.

**Dr. C. Aranganayagam.**

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

## பதிப்புரை

தொன்மை சான்ற அன்னைத்தமிழில் சொற்பிறப்பியல் அகரமுதலி முழுமையாக வெளியிடும் நோக்கில் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் மொழிஞாயிறு ஞா. தேவநேயப்பாவாணர் தலைமையில் 8.5.1974 அன்று, அப் போதைய தமிழக முதலமைச்சர் கலைஞர் **மு. கருணாநிதி** அவர்களால் உருவாக்கம் பெற்றது.

தமிழ் வளர்ச்சிக்கு அடிப்படையான பணிகளில் அகரமுதலி உருவாக்குவதும் தலைசிறந்த தமிழ்ப்பணியாகும். ஆங்கில மொழிகளில் நூற்றுக்கணக்கான அகரமுதலிகள் வெளியிடப் பட்டிருப்பதால் ஆங்கில மொழியின் வளர்ச்சி உலக அரங்கில் உயர்ந்தோங்கியுள்ளது என்று உலக அறிஞர்கள் ஒப்புக் கொள்கின்றனர். சொல்லின் பொருளை மிகத் தெளிவாகப் புரிந்துகொள்வதற்கும், தமிழில் புதிய படைப்புச்சொற்களை உருவாக்குவதற்கும் மொழியாராய்ச்சியாளர்களுக்கும், மொழியைக் கற்கும் பிறமொழியாளர்களுக்கும் உதவும் வகையில் சொற்பிறப்பு அகரமுதலிகள் (Etymological Dictionaries) உலகில் பல மொழிகளிலும் வெளியிடப் பட்டுள்ளன. ஆங்கிலத்தில் மட்டும் 5 சொற்பிறப்பியல் அகரமுதலிகள் (Klein, Skeat, C.T. Onions, Chambers, Weakley ஆகியோரால் தனித் தனியே தொகுக்கப்பட்டவை) வெளிவந்துள்ளன. இந்திய மொழிகளில் சமற்கிருதம், மராத்தி, குசராத்தி, நேப்பாளி, தெலுங்கு ஆகிய மொழிகளில் சொற்பிறப்பு அகரமுதலிகள் வெளிவந்துள்ளன. தமிழில் முழுமையான சொற்பிறப்பு அகரமுதலி வெளிவராத குறையை இந்த அகரமுதலித்திட்டம் நிறைவாக்குகிறது. எந்த வேரிலிருந்து எந்தச் சொல் பிறந்தது என்பதையும், பிறமொழியிலிருந்து கடன்பெற்ற சொல்லாக இருந்தால் எம் மொழிச்சொல் எவ்வாறு திரிந்தது என்பதையும், அச்சொல் அம்மொழியின் இனமொழிகளில்எவ்வாறுவழங்குகிறதுஎன்பதையும்,அச்சொல்லின் மறுவடிவங்கள் எவை என்பதையும், சொல் வடிவிலும் பொருள் வடிவிலும் எவ்வகைத் திரிபுகளையும்

மாற்றங்களையும் அச்சொல் அடைந்துள்ளது என்பதையும் விரிவாக ஆராய்வது சொற்பிறப்பு அகரமுதலியின் நோக்கம். பொதுவகையான அகரமுதலி தொகுப்பதைவிட, சிறப்புவகையான சொற்பிறப்பியல் அகரமுதலி தொகுப்பதற்கு அரிய ஆய்வுத் திறனும் கடிய உழைப்பும் பெரிதும் வேண்டும் அரும்பணியாதலால் தொகுப்புக்காலம் எதிர்பார்ப்பதை விட நீட்டிப்புக்குள்ளாவது தவிர்க்க முடியாததாகிறது. உலகப்புகழ்பெற்ற பன்மடல எருதந்துறை ஆங்கில அகரமுதலி (Oxford Dictionary) நானூற்றுவர் உழைப்பில் 75 ஆண்டுக்காலத்தில் நிறைவுற்றுள்ளது. திரவிடச் சொற்பிறப்பியல் ஒற்றைமடல (ஆங்கிலப்பதிப்பு) அகரமுதலியை (5600 சொல் விளக்கங்கள்) பேராசிரியர் பரோவும் எமனோவும் 33 ஆண்டுகளில் நிறைவுறுத்திவெளியிட்டனர். ஒருசொல்லின் சொல்வளர்ச்சி பொருள்வளர்ச்சிகளை ஆராய்வதற்கு அம்மொழியின் வட்டார வழக்குச் சொல்லாட்சிகளையும், இலக்கியச் சொல்லாட்சிகளையும் இலக்கணக் கட்டமைப்புகளையும் ஒப்புநோக்கியபின், தமிழின் இன மொழிகளான திரவிட மொழிகள் நாற்பதிலும் இனச்சொல் வகைமைகளை அறிய வேண்டியுள்ளது. உலக மொழிகளில் சொற்பிறப்பு அகரமுதலி ஒரே மடலமாகத்தான் வெளியிடப்பட்டுள்ளது. ஆயின், தமிழில் 10 மடலங்களும், துணை மடலங்கள் இரண்டும் ஆக பன்னிரு மடலங்களாக வெளியிடும் தொலைநோக்குத் திட்டமாகவே இந்தச் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்டமும் அமையவேண்டியுள்ளது.

அகர எழுத்தில் தொடங்கும் 6500 சொற்களைக் கொண்ட முதன் மடலத்தின் முதற்பாகம் 1985 ஆம் ஆண்டு திருவள்ளுவர் நாளில் வெளியிடப்பெற்றது. 1981 ஆம் ஆண்டில் மொழிஞாயிறு அவர்களின் மறைவுக்குப்பின் அவர் எழுதி முடித்த "ஆசைமொழி" என்னும் சொல்வரையுள்ள பகுதிகள் இந்த முதன்மடல இரண்டாம் பாகத்தில் சேர்க்கப்பட்டுள்ளன. அவர் விட்ட இடத்திலிருந்து தொடங்கி உயிரெழுத்துகள் முடிய தொகுக்கப்பட்டவை முதன்மடலத்தில் இரண்டாம் மூன்றாம் பாகங்களாக வெளியிடப்படுகின்றன. ஆ, இ, ஈ ஆகிய எழுத்துகளில் தொடங்கும் சொற்கள் இரண்டாம் பாகத்திலும் உகர முதல் ஔகாரம் முடிய உள்ள எழுத்துகளில் தொடங்கும் சொற்கள் மூன்றாம் பாகத்திலும் இடம்பெற்றுள்ளன. ககரம் முதல் வகரம் வரைப்பட்ட அனைத்துச் சொல்லடைவுகளும் முடிவுபெற்றுள்ளன. இவை இனி சொல் விளக்கங்கள் எழுதப்பெற்று அடுத்து வரும் மடலங்களாக வெளியிடப்பெறும்.

பாவாணர் நூல்களிலிருந்தும் நூற்றுக்கு மேற்பட்ட அவருடைய ஆய்வுக் கட்டுரைகளிலிருந்தும் தொகுக்கப்பட்ட வேர்ச்சொற் குறிப்புகள் உரிய இடங்களில் சேர்க்கப்பட்டுள்ளன. பாவாணர் வேர்மூலம் காட்டாத சொற்களுக்கு அவர் நெறிமுறைகளைப் பின்பற்றி நான் வேர்மூலம் காட்டியிருக்கிறேன்.

உலகில் எம்மொழியிலும் இயற்சொல், திரிசொல், திசைச்சொல், அயற்சொல் என்னும் நால்வகைப் பாகுபாடுகளைக் காணலாம். இவற்றுள் தமிழிலுள்ள கொச்சை

வழக்குகளுக்கும் மருவித் திரிந்தவற்றுக்கும் வடதமிழ் எனப்படும் பாலிபிராகிருத மொழிகளிலும்ஏனைத்திராவிடமொழிகளிலும்திசைச்சொல்லாகமாறியவற்றுக்கும் மூல வடிவங்களை மீட்டமைத்துச் செந்தமிழ்ச் சொல் வடிவம் காட்டுதலாலும், மறைந்து போன செந்தமிழ்ச் சொல் வடிவம் காட்டுதலாலும், மறைந்து போன செந்தமிழ்ச் சொற்களையும் வேர்மூலங்களையும் ஏரண அடிப்படையில் பொருத்திக் காட்டுதலாலும், தமிழில் காலந்தோறும் வந்து கலந்த பிற மொழிச் சொற்களுக் கேற்ற செந்தமிழ்ப் படைப்புச் சொற்களைச் சேர்த்திருந்தலானும் தமிழ்ச் சொல்லா சமற்கிருதச் சொல்லா என்னும் ஐயம் தெளிவித்துத் தமிழ்ச் சொற்களை வேறுபடுத்தி வேர் மூலம் விரித்துக் காட்டி இது தென் தமிழ்ச் சொல் அல்லது வடதமிழ்ச் சொல் என ஐயம் நீக்குதலானும் பொதுவாகத் தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி எனப்பெயரிடாமல் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி எனப்பெயரிடப் பட்டுள்ளது.

பாவாணரின் சொற்பிறப்பு ஆராய்ச்சி, ஞால முதன்மொழிக் கொள்கை என்னும் கதிர்வீச்சின் அடிமுடியைத்தேடும் பணிக்கு அடிப்படையிட்டிருக்கிறது. இந்த நோக்கு பாவாணர் உள்ளத்தில் மட்டும் அரும்பவில்லை. உலகில் பல்வேறு அறிஞர் களிடையிலும் முகிழ்த்துள்ளது. மாந்தருள் மாணிக்கமாக விளங்கிய இந்தியத் தலைமையமைச்சர் நேரு பெருமகனார் தம்மகளார்க்கு எழுதிய மடலில் "அப்பா, அம்மா" போன்ற அடிப்படை உறவுச்சொற்கள் உலகமொழிகள் அனைத்திலும் ஒருசீராக உள்ளனவென்றும் உலகமொழிகள் ஓரே மூல மொழியிலிருந்து தோன்றினவா என்பது ஆராயப்படவேண்டும் என்றும் குறிப்பிட்டிருக்கிறார்.

பாவாணரைப் போன்றே, சொல்லை ஆராயும்போது, பொருளை இயைத்தே ஆராய வேண்டும் என்று அமெரிக்க மொழி நூல் வல்லுநர் சோம்சுகி கருதியிருக்கிறார் என்பது பின்வரும் அவருடைய கூற்றால் வெளிப்படுகிறது.

"Language involves the making of inferences from behaviour to psychological function ..... meaning is the relationship of psychological system. [Chomsky 1965, An Introduction to the psychology of Language (P.16)]

பதினேழாம் நூற்றாண்டில் வாழ்ந்த செருமானியப் பேரறிஞர் இலேபினிசு

"All Languages are merely variations of the same roots, though now often mixed and confused so that these roots cannot be recognised except by careful comparison of a large number of languages and dialects" (Leibniz 1962) என்று கூறியிருக்கிறார்.

கபோர் சென்து கதொல்நை என்னும் அங்கேரி நாட்டு மொழி நூலறிஞர் துரானிய குடும்ப மொழிகளுக்குத் தமிழ்மொழியே தாயாகும் என்பதை "Tamil is the Sanskrit of Turanian Languages" எனச்சுட்டிக் காட்டியிருக்கிறார்.

உலக முதன் மொழியில் வேர்ச் சொற்களே முதலிடம் பெற்றன என்பதை பேரறிஞர் மாக்சுமுல்லர் கோடிட்டுக் காட்டியிருக்கிறார் *. எம்மொழியிலும் பெயர்ச் சொற்கள் அனைத்தும் வினைச்சொற்களிலிருந்து தோன்றினவே. உலகத் தொன் மொழிகளில் மிகப் பழமையானவை கிரேக்கம், எபிரேயம், இலத்தீனம், சமற்கிருதம், தமிழ், சீனம் என்பவை. இவற்றில் இலத்தீனம், எபிரேயம், சமற்கிருதம் என்னும் மூன்றும் பேச்சு வழக்கிலில்லாதவையெனினும் இந்த ஆறு மொழிகளிலும் அடிப்படை வினைச் சொற்களில் வேர்கள் ஒன்றாக இருக்கின்றன. சான்றாகச் செய்தல் எனப் பொருள்படும் கரு–த்தல் என்னும் தமிழ்ச் சொல் சமற்கிருதத்தில் 'க்ரு' என்றும் வடபுலமொழிகளில் 'கர்' என்றும் கிரேக்க இலத்தீன் எபிரேய மூலங்களில் cr–(create) என்றும் சீனமொழியில் 'கய்' என்றும் நின்று நிலவுகிறது. இத்தகு அடிப்படை வினைகள் நூற்றுக்கணக்கில் எடுத்துக்காட்டப்பட்டுள்ளன. உயிரிபயிரிகளின் (flora and fauna) பெயர்களும் (உலகத்தொன்மொழிகளில் ஒரு சீராக ஊடாடியிருப்பதும்) கண்டறியப்பட்டுள்ளன.

பாவாணரின் ஞால முதன்மொழிக் கொள்கைக்கு அண்மைக்காலத்தில் உலக மொழியியல் அறிஞர்களிடையே ஆக்கம் தருவோர் எண்ணிக்கை மிக விரைவாகப் பெருகி வருகிறது.**

"மொழியின் உருவாக்கம் மாந்த இன வரலாற்றில் நினைத்துப் பார்க்க இயலாத மாற்றங்களை ஏற்படுத்தும் புரட்சித்தன்மை வாய்ந்ததாகும். அத்தகைய உருவாக்கம் ஒரே ஒருமுறைதான் நிகழ்ந்திருக்க இயலும்" என்று 1969–இலேயே ஆரிஒய்ச்சர் கூறியுள்ளார்.[1]

---

* "The Primary roots are the most important in the early history of language". (Maxmuller 1881, Lectures on the Science of Language.)

** It is nice to know that a common language perhaps 20,000 years ago had a root word for the earth which turned much later, into a technical term for the complex polymers that make up the connective tissues of soil. Modern linguists have moved into new area of enquiry as specialised as particle physics. [Levis Thomas 1982, Debating the unknowable – Span – May 1992.]

1. "The invention of language was so far reaching, so revolutionary, that it must have occurred just once" – Hary Hoijer (quoted p.58 of LANGUAGE TO DAY by Archibald A. Hill; Basic Books; New York, 1969.)

ஞால முதன்மொழி தோன்றி ஒன்று பலவாகியதை ஆய்வு செய்து மாரிசு சுவாதேசு 1972இல் ஆய்வு நூல் ஒன்றை வெளியிட்டார்.[2]

ஞால முதன்மொழி ஆய்வுப்பணியில் நம்காலத்தில் கூர்ந்து முனைந்துள்ள அறிஞர்கள் செவரோசுகின், கிரீன்பெர்கு ஆகியோரின் ஆய்வுநிலைகளை விளக்கும் விரிவான கட்டுரைகளை "ATLANTIC MONTHLY" (April, 1991), "SCIENTIFIC AMERICAN" (November, '92) ஆகிய இதழ்களில் காணலாம்.[3]

இவ்வகரமுதலியின் ஆய்வுகள் அவ்வறிஞர்களிடையே பரவின், மொழியியலிலும், குறிப்பாக, ஞாலமுதன்மொழி ஆய்விலும் வியத்தகு புதுமைகள் நிகழும் என்பதில் ஐயப்பாடின்று.

திராவிட மொழிகளுக்கு முதன் முதல் சொற்பிறப்பியல் அகரமுதலி தொகுத்த அறிஞர் இருவருள் ஒருவரான இங்கிலாந்து நாட்டு வடமொழிப் பேராசிரியரும் திராவிடவியல் வல்லுநருமாகிய பெருந்தகை பரோ அவர்கள் இவ்வகரமுதலியின் முதல் மடலம் முதற்பாகத்தைக் கண்ணுற்றபின் "செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலியின் அனைத்து மடலங்களும் முழுமையாக வெளிவருமாயின் குறிப்பாகத் தமிழாய்வுப் புலங்களுக்கும் பொதுவாகத் திராவிட மொழிகளின் ஆய்வுப்புலங்களுக்கும் மெய்யாகவே குறிப்பிடத்தக்க கொடையாக விளங்கும்" என்று குறிப்பிட்டிருக்கிறார்.[4]

பாவாணரின் சொற்பிறப்பு ஆராய்ச்சி முழுமையாக வெளிவருமாயின், உலக அறிஞர்களின் கூர்த்தநோக்கினை ஈர்த்து மேன்மேலும் வளர்ந்துவரும் ஆய்வுலகத்தின் கையில் விளங்கும் பல்லாயிரம் கருவி நூல்களுள் குறிப்பிடத்தக்க ஒன்றாக இருக்கும் வகையில் இலங்கும் என்பதால் நாளும் நாளும் பாடாற்றுவதே எங்கள் கடமையென்று கனிவொடும் பணிவொடும் தெரிவித்துக் கொள்கிறேன்.

இலக்கணம் மொழிக்கு வேலி:

தாய்மொழி பல்வேறு கிளை மொழிகளாகச் சிதைந்து போய்விடாமல் மொழியின் இலக்கணம் காப்பாற்றுகிறது. சொல்லின் சரியான ஒலிப்பையும் நுட்பமான பொருளாழத்தையும் அகரமுதலிகள் வரையறுக்கின்றன. அதனால் தான்

---

2. Morris Swadesh – "THE ORIGIN AND DIVERSIFICATION OF LANGUAGE" (Routledge and Kegan Paul, London 1972)

3. "THE ATLANTIC MONTHLY (April, 1991); "Quest for the Mother tongue" by Robert Wright.
"SCIENTIFIC AMERICAN" (November, 1992) "Linguistic Origins of Native Americans" by Joseph N. Greenberg and Merritt Ruhlen.

4. It is prepared on a very extensive scale, and it will when complete be a remarkable contribution to Tamil studies and indeed Dravidian studies in general – T. Burrow.

இவற்றை மொழியின் பாதுகாப்பு அரண்கள் என்று அறிஞர் குறிப்பிடுகின்றனர். தரமான அகரமுதலி தரமான மொழி வளர்ச்சிக்கு அளவுகோலாகும். சொல்லின் நுண்பொருளை ஆய்வது ஒரு கருத்தைச் செறிவுறப் பேசும் அறிவு நுட்பத்திற்கு அடிப்படையாகிறது.

ஒரு மொழியில் அறிவியல் பெருகும் போது எச்செய்தியையும் நுட்பமாகவும் திட்பமாகவும் வரையறுத்துப் பேசவேண்டியிருக்கிறது. அதற்கேற்ற சொற்களை மொழி வழங்கியாக வேண்டும். அகரமுதலித் தொகுப்பாளர்கள் அத்தகைய வெல்லும் சொற்களைத் தெள்ளத்தெளிய எடுத்துக்காட்டவேண்டும். சான்றாக, பழிகூறுதல் என்னும் பொருளில் பழித்தல், இடுவந்திகூறுதல், இட்டூறு மொழிதல் என்னும் சொற்கள் ஆளப்படினும் ஒவ்வொன்றும் வெவ்வேறு பொருளாழம் கொண்டவை.

| | | |
|---|---|---|
| பழித்தல் | – | ஒருவரிடம் காணப்படும் குற்றங்களை எடுத்துக்காட்டி இகழ்தல். |
| இடுவந்திகூறுதல் | – | குற்றமில்லாதவன் மேல் பொய்யாகக் குற்றம் சாட்டி இகழ்தல் |
| இட்டூறுகூறுதல் | – | ஒருவன் செய்யவேண்டிய நற்பணிகளை உரிய காலத்தில் செய்யாததற்காகப் பழித்துரைத்தல். இச்சொல் இக்காலத்தில் நிட்டூரம் என்றும் நிஷ்ட்டூரம் என்றும் வழங்குகிறது. |

வடசொல் தென்சொல் வரையறை:

எம்மொழியிலும் காலப்போக்கில் பிறமொழிச் சொற்கள் புகுந்து தாய்மொழிச் சொற்கள் போலவே தோற்றமளிப்பதுண்டு. அதனால் தாய்மொழிச் சொல்லையும் பிறமொழிச் சொல்லென்றே ஐயுறும் வாய்ப்புகளும் ஏற்பட்டுவிடும். தமிழும் சமற்கிருதமும் 2000 ஆண்டுகளுக்கு மேலாக ஒன்றோடொன்று ஊடாடியதால் வட சொல் எது தென்சொல் எது என்னும் வரையறைச் சிக்கல்கள் தோன்றுமிடங்களில் சொற்பிறப்பியல் அகரமுதலி விளக்கம் தருகிறது. ஆர்ப்பாட்டம் என்னும் சொல்லைப் பலரும் வடசொல் என்றே கருதுகின்றனர். ஆர்ப்பாட்டம் (ஆர்ப்பு + ஆட்டம்) எனச் சரியான தமிழ் வேர்மூலம் காட்டப்பட்டுள்ளது.

கந்தாயம் : (கந்து + ஆயம்) தவணைமுறையில் வாங்கப்படும் வரி.
கந்து = சிறியது
ஆயம் = வரி [குறிப்பாக ஆநிரைகள் (மாடுகள்) மீது வாங்கப் பட்ட வரி].

வேர்மூலச் சிக்கல்கள் :

பாவாணர் பயிற்றிய சொற்பிறப்பு நெறிகளால் அணுகியும் பிடிபடாத சொன் மூலங்களும் பழந்தமிழ்ச் சொற்களில் காணப்படுகின்றன. பேயனார், பேய்மகள்

இளவெயினி, ஆதிமந்தி போன்ற தமிழ்ப் பெயர்களின் வேர்மூலங்கள் சரியாகப் புலப்படாத போது உலகமொழிகள் அனைத்திலும் தமிழ்ச்சொற்கள் திரிந்துள்ள நெறிமுறைகளை நுணுகி நோக்கிச் சரியான வேர்மூலங்கள் கண்டறியப்பட்டுள்ளன. முன் – முந்து என்று திரிவது போல மன்னனைக் குறிக்கும் 'மன்', என்னுஞ்சொல் 'மந்து' எனத்திரிந்து வழங்குவது யாழ்ப்பாண வழக்கு. மந்து = அரசன், மந்தி = அரசி. ஆதிமந்தி = மூத்த இளவரசி. இருகுறில் இணைந்து தனிநெடிலாகும் என்னும் சொற்பிறப்பு நெறிப்படி (ஒ.நோ. பகுதி – பாதி. மிகுதி – மீதி) பெரு – பே எனத்திரியும். அதன்படி பெரியனார் என்னும் பெயர் பேயனார் என்று திரியும். பெருமகள் – பேமகள் – பேய்மகள் (பேய்மகள் இளவெயினி), பெருமகன் பேமகன் – பேகன். திராவிட மொழிகளில் ஒன்றான துதவர் மொழியில் பெரிய தெய்வம் 'பேதெவ்' என்றும், பெருந்தேன் 'பேஸ்தேன்' (பிரசம்) என்றும் திரிதலைக்காணலாம். தெலுங்கிலும் பெருங்குன்றம் – பேனுகெண்டா – பெனுகொண்டா என்று திரிதலையும் காணலாம். எனவே சொற்பிறப்பு நெறிமுறைகளால் மிக அரிய சொல்லாட்சிகளின் வேர் மூலத்தையும் எளிதில் காணமுடிகிறது.

*அரிய சொல் விளக்கங்கள் :*

சில சொற்களுக்குச் செறிவான சொல்விளக்கங்கள் தரப்பட்டுள்ளன. ஆதன், ஆதி, ஆதிபகவன், ஆந்தை, ஆவுடையாள், ஆனைச்சாத்தன் இடாகினி போன்ற சொல் விளக்கங்களைக் காணலாம். பிற அகரமுதலிகளில் உள்ள குறைபாடுகள் சுட்டிக் காட்டித் திருத்தப்பட்டுள்ளன. இலக்கண உரையாசிரியர்கள் செய்த தவறுகளும் திருத்தப்பட்டுள்ளன. சிலப்பதிகார மூலத்தில் "ஆரிக்கும் பாடல்" என்பதற்கு 'ஆரிரக்கும் பாடல்' என்பதே சரியான பாட வேறுபாடு என்பதும், 'அக்கு' என்னும் சாரியையும் 'ஆநின்று' என்னும் நிகழ்கால இடைநிலையும் இலக்கண ஆசிரியர்களால் பிறழக்கொள்ளப்பட்டன என்பன போன்ற ஆராய்ச்சிக் கருத்துகளும் தக்க சான்றுகளுடன் நிறுவப்பட்டுள்ளன.

வண்ணனை மொழியியல் (Descriptive Linguistics) மக்கள் பேச்சு வழக்கையே சரியான மொழி அமைப்பாக ஏற்றுக்கொள்கிறது. ஆயின், ஒன்றனையும் ஒருவனையும் உயர்வுக்காகப் பன்மைப்படுத்தும் பேச்சு வழக்குகளைத் தொல்காப்பியர் "வழக்கி னாகிய உயர்சொற் கிளவி இலக்கண மருங்கின் சொல்லா றல்ல" என்று மறுத்திருக்கிறார். வழக்கும் செய்யுளுமாகிய இரண்டிலும் சான்றோர் ஒப்பிய வழக்காறுகளைச் செவ்விய சொல்லாட்சிகளாக மரபிலக்கணம் (Tradional Grammar) வகுத்துக்காட்டுகிறது. காலத்தால் முந்தைய சொல்லாட்சி காலத்தால் பிந்தைய சொல்லாட்சிக்குச் சொன்மூலமாகிறது. The earliest recorded word may be regarded as root என்பது மேனாட்டார் சொற்பிறப்புக் கொள்கை. இந்த மூன்று கொள்கைகளையும் முழுமையாக ஏற்றுக்கொள்ளாமல் மக்களின் பேச்சு வழக்கிலுள்ள கொச்சைச்

சொல்லாயினும், இலக்கியங்களில் இடம் பெற்ற செஞ்சொல்லாயினும், கடன் பெற்ற அயற்சொல்லாயினும், காலத்தால் முந்தைய சொல்லாயினும் அதன் உண்மையான வேர்மூலம் கண்டறிந்து சொல் வடிவிலும் பொருள் வடிவிலும் அதன் திரிபுற்ற பாங்குகளைப் புலனாய்ந்து கூறுவதே சரியான சொற்பிறப்பு முறை என்று பாவாணர் அகரமுதலித் திட்டம் செயற்பாட்டு நெறிமுறைகளை வகுத்துக் கொண்டிருக்கிறது.

**அகரமுதலியின் நோக்கமும் பயன்பாடும் :**

அகரமுதலியின் பயன்பாட்டை மேனாட்டார் களஞ்சியப்பயன்பாடு (Store - house function of a dictionary), முறைமன்றப் பயன்பாடு (Court-function of a dictionary) என்று இருவகையாகக் கூறுவர். ஒருமொழியில் இன்னசொல் இந்த அகரமுதலியில் இடம் பெறவில்லையென்று குறைகூறாதவண்ணம் கல்லாத மலைவாழ் மக்களின் சொல்லாட்சிகள் முதலாகப் பல்கலைக் கழகப் படைப்புச் சொல்வரை அனைத்தையும் திரட்டித் தருவது முதல்வகையான அகரமுதலியின் களஞ்சியப் பயன்பாடு கருதியது. சொல்லின் சரியான பொருளை வரையறுப்பதும் சொல்லிலுள்ள சொற்குற்றம் பொருட்குற்றங்களை நீக்கிச் சொல்லின் சரியான வடிவம் இது, சரியான பொருள் இது, சரியான பலுக்கம் இது என்று வரையறுத்துத் தீர்ப்பு அளிப்பதும் இரண்டாம் வகையான அகரமுதலியின் முறை மன்றப்பயன்பாடு. சொற்பிறப்பியல் அகரமுதலி இவ்விருநோக்கங்களையும் உள்ளடக்கியது. 'இட்லி' என்னும் சொல்லின் சொற்குற்றம் கண்டறியப்பட்டு அதன் பழைய வரிவடிவம் 'இட்டளி' என்று காட்டப்பட்டுள்ளது. ஆறறிவுடைய மாந்தனை உயர்திணை என்று கூறிய தொல்காப்பியர், ஏனைய உயிர்களை இழிதிணை என்று கூறி இழிவுபடுத்துவது தமிழ் மரபுக்கு தகாதது என்பதை மரபு வழி ஆய்ந்து, உயர்திணை அல்லாத உயிர்களை அஃறிணை (உயர்வு அல்லாத திணை) என்று குறிப்பிட்டார். பிறர் மனத்தைப் புண்படுத்தாத அஃறிணை என்னும் சொல்லாட்சியின் உயர்வை அறியாது ஏனைய உயிர்களை இழிதிணை என்று நன்னூல் இலக்கணம் கூறுவது தமிழ் மரபுக்கு ஒவ்வாதது என்று தெளிவு படுத்தப்பட்டுள்ளது. இடப் பெயர்களின் பழந்தமிழ்ப் பெயர்கள் சுட்டிக் காட்டப் பட்டுள்ளன. சான்றாக நாமக்கல் என்னும் ஊரின் பழைய பெயர் "ஆரைக்கல் பாறை" என்று தலைப்புச் சொல்லாகவே எடுத்துக் காட்டப்பட்டுள்ளது. தமிழ் வளர்ச்சிக்கு அடிப்படையான புதிய படைப்புச் சொற்கள் ஆங்காங்கு சேர்க்கப் பட்டுள்ளன. எடு: Substitute – ஆளீடு, மாற்றீடு. மறைந்து போன தமிழ்ச்சொற்கள் பலவும் இடம்பெற்றுள்ளன. எடு: இலைக்கிள்ளல் (மறைந்து போன பழங்கால விளையாட்டு). தமிழில் புகுந்துள்ள பிறசொற்களுக்கான தமிழாக்கங்கள் முறையாகத் தரப்பட்டுள்ளன. எடு : சமாதானம் – இடையீடு. சமையத்துறையில் புகுந்த வடசொற் களுக்கான தமிழ்ச்சொற்கள் முறையாகத் தரப்பட்டுள்ளன. எ–டு: ஆறாதாரம் (ஒக நிலைகள்).

| வடசொல் | தமிழ்ச்சொல் |
|---|---|
| மூலாதாரம் | பாலகம் |
| சுவாதிட்டானம் | அகட்டகம் |
| மணிபூரகம் | மூச்சகம் |
| அனாகதம் | நெஞ்சகம் |
| விசுத்தி | சுழியகம் |
| ஆக்கினை | உச்சகம். |

மறைந்து போன தமிழ்ச் சொற்கள் மட்டுமன்றி மறைந்து போன தமிழ் நூல்கள், மறைந்து போன இசைக்கருவிகள் (இலைக்குழல், இழுகுபறை, இன்மணியாரம்) பண்பாட்டுக்கூறுகள்,செடிகொடிகள் ஆகியவற்றின் பெயர்களும் இடம்பெற்றுள்ளன. சிந்துவெளி முத்திரைகளில் காணப்படும் அரிய சொல்லாட்சிகளுக்கான வேர் மூலங்களும் சொற்பிறப்பியல் அகரமுதலியில் இடம்பெற்றுள்ளன. சிந்துவெளி முத்திரைகளில் காணப்படும் ஒற்றைக்கொம்பன் (Unicorn) எருதின் பெயர் 'உச்சிக் கொம்பன்' என்றும், காண்டாமிருகத்தின் பெயர் 'கல்யானை' என்றும் முத்திரைகள் செய்யப் பயன்பட்ட மாவுக்கல்லின் (Soft stone) பெயர் 'எழுதுகல்' என்றும் தரப் பட்டுள்ளன. ஏற்கெனவே பண்டைத் தமிழர் பாதுகாத்து வைத்திருக்கும் பழந்தமிழ் ஆட்சிகளும் தவறாமல் இடம்பெற்றுள்ளன. சொல்லாட்சிகளின் வேர்மூலங்கள் மட்டுமன்றிச் செடிகொடிகளின் பெயர்களும் விலங்கு பறவைகளின் பெயர்களும், அடிப்படைச் சொற்களாக இருத்தலால், அவைகளும் எடுத்தாளப்பட்டுள்ளன. தமிழ் மருத்துவர்களால் சிறப்பாக ஆளப்படும் மருத்துவச் சொற்களும் கல்வெட்டுச் சொற்களும் எடுத்தாளப்பட்டுள்ளன.

பாவாணரின் மரபார்ந்த இலக்கண நோக்கு தமிழ்மொழியின்மூல வேர்களை 52 ஆக வரையறுத்துக் காட்டியது. இவற்றொடு பாவாணர் பார்வைக்குத் தப்பிய 'இல்'— துளைத்தற்கருத்து வேர்ச்சொல் விளக்கம் என்னால் புதிதாகச் சேர்க்கப்பட்டு அடிப்படை மூல வேர்களின் எண்ணிக்கை 53 ஆயிற்று. அந்த அடிப்படையே பன்மடலப் பேரகரமுதலி உருவாக வழிவகுத்தது. பாவாணர் பால் பெற்ற பயிற்சியும் என் முயற்சியும் தமிழ்ப் பெருமக்களின் முன் இப்படையலாக மலர்கிறது. பாவாண ருக்குப் பின் அவர் பணியை நிறைவாக முற்றுவிக்க முனைப்புற்ற நிலையில் தமிழக அரசுக்கும் குறிப்பாக மாண்புமிகு புரட்சித் தலைவி டாக்டர். **ஜெ. ஜெயலலிதா** அவர்களும் தமிழகக் கல்வியமைச்சர் மாண்புமிகு **செ. அரங்கநாயகம்** அவர்களும் தமிழ் வளர்ச்சி பண்பாட்டுத் துறையின் செயலாளர் முனைவர் ஔவை நடராசனாரும் ஊக்கிப்புரந்து வரும் ஒப்புரவுக்கும் நன்றிக் கடப்பாடுடையேன்.

முதன்மடல முதற்பகுதி 1985 ஆம் ஆண்டு வெளியிட்ட போது அகரமுதலித் திட்டத்தின் உருவாக்க முயற்சிக்கு முன்னின்ற பெருமக்களும் உருவாக்கிய செம்மலோரும் அகரமுதலிப் பணியாளரும் பல்லாற்றானும் ஊக்கியும் உதவியும்

துணைநின்ற சான்றோரும் முன்னுரையில் குறிப்பிடப்படவில்லையென்னும் குறை சுட்டிக்காட்டப்பட்டது. மொழி ஞாயிறு ஞா. தேவநேயப்பாவாணர் அவர்களே, பதினோராம் மடலத்தில் தமிழகரமுதலி வரலாறு விரிவாகக் கூறப்படவிருப்பதால் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் திட்டத்தின் உருவாக்கம், பணிக்குழு, செயற்பாடு, வெளியீடு ஆகியவற்றில் துணைநின்ற அனைவர் வரலாறும் விரிவாக எழுதப்பட விருப்பதால் அகரமுதலி முன்னுரைகளில் சுட்டப்பட வேண்டா என்று தொடக்கத் திலேயே முடிவெடுத்ததால் அந்நிலையே இங்கும் கடைப்பிடிக்கப்பட்டுள்ளது.

இந்த முதன்மடல இரண்டாம் பாகம் வெளிவர ஆவன செய்த உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்துக்கும் அச்சகத்தாருக்கும் எம் நன்றி உரியது.

**இரா. மதிவாணன்**
முதன்மைப் பதிப்பாசிரியர் – இயக்குநர்
செந்தமிழ்ச் சொற்பிறப்பியல்
அகரமுதலித் திட்ட இயக்ககம், சென்னை – 28.

சென்னை – 28.
8.5.1992

# வண்ணப்படங்களின் பட்டியல்


| படத்தாள் எண் (1) | படத்தின் பெயர் (2) | எதிரும் பக்கம் (3) |
|---|---|---|
| | ஆட்டின் வகைகள்: | 56 |
| 1. | காட்டாடு<br>குறும்பாடு<br>கொடியாடு<br>செம்மறியாடு | |
| 2. | மலையாடு<br>வெள்ளாடு<br>+<br>ஆப்புளாண்டம்<br>ஆவல்லி | |
| 3. | ஆந்தை வகை:<br>கொம்பு ஆந்தை<br>கோட்டான்<br>ஊமன்<br>குடிஞை | 104 |
| 4. | குரால்<br>கூகை<br>மூங்கன் | |
| 5 | ஆமை வகைகள்:<br>நிலத்தாமை<br>கடலாமை<br>நன்னீர் ஆமை<br>நீராமை<br>விண்மீன் ஆமை | 112 |

# வண்ணப்படங்களின் பட்டியல்

| படத்தாள் எண் (1) | படத்தின் பெயர் (2) | எதிரும் பக்கம் (3) |
|---|---|---|
| 6. | ஆரைக்கீரை வகைகள்:<br>நீராரை<br>புளியாரை<br>வல்லாரை<br>ஆனை நெருஞ்சி | 152 |
| 7. | இசைக் கருவிகள்:<br>தோற்கருவி<br>நரம்புக்கருவி<br>கஞ்சக்கருவி<br>துளைக்கருவி | 240 |
| 8. | ஈக்கள் வகைகள்:<br>வீட்டு ஈ<br>இறைச்சி ஈ<br>கண் ஈ<br>கள் ஈ | 416 |
| 9. | பழ ஈ<br>ஆட்டு ஈ<br>மாட்டு ஈ | |

# ஆ

**ஆ**[1] ā, 1. அகரத்தின் நெடில், தமிழ்நெடுங் கணக்கின் இரண்டாம் உயிரெழுத்து ; second letter of the Tamil alphabet, long vowel, lengthened form of 'a'. 2. அவ்வொலியைக் குறிக்கும் வரிவடிவு; written character representing that sound.

இற்றை மொழியியலார் இதைப் பிறப்பிடம் நோக்கி நடுவக்குவியாத் தாழ்நெடில் (central, unrounded low long vowel) என்பர்.

*"அஆ ஆயிரண் டங்காந் தியலும்" (தொல். எழுத்து. பிறப்.3)*

இந்நெட்டுயிரின் அடையாளமாகிய கால் 'ா' வரிவடிவு குறில் உயிர்மெய்களுடன் இணைக்கப்படுகிறது.

**ஆ**[2] ā, சு.பெ.எ. (adj.) சேய்மைச் சுட்டு ; demons. letter or pronominal adj. pointing to what is remote, that, those.

*"ஆயிடை வருதல் இகார ரகாரம்" (தொல். எழுத்து, 463 )*

*"வடவேங்கடம் தென்குமரி ஆயிடை" (தொல். பாயி.)*

**ம., க., தெ., து., பட., கச.** ஆ

**குறிப்பு** :- *'ஆ' என்னும் நெடிலே இயற்கைச் சேய்மைச்சுட்டு. அதன் குறுக்கமே 'அ'.*

*நெடில் வடிவம் இன்று தெலுங்கு, கன்னடம், மலையாளம் முதலிய திரவிட மொழிகளில் வழங்கி வரினும், தமிழுலக வழக்கில் வழக்கற்றுப் போயிற்று.*

*"உடன்பிறந்தார் சுற்றத்தார்" என்னும் மூதுரைப் பாட்டில், "அம்மருந்து" என்பது "ஆமருந்து" என்றிருத்தல் வேண்டும்.*

*மலையாளம் பழஞ்சேர நாட்டு மொழியாதலால், அதில் வழங்கும் நெடிற்சுட்டு வழக்கைச் சேரநாட்டுத் தமிழ் என்றுங் கொள்ளலாம்.*

*கண்டறிசுட்டு, பண்டறிசுட்டு, உலகறிசுட்டு, உய்த்துணர் சுட்டு என்னும் நால்வகைச் சேய்மைச் சுட்டுகளுள், முதல் இரண்டாகவே நெடுஞ்சுட்டு இன்று வழங்கும்.*

அகரச்சுட்டு பார்க்க; see **agara-c-cuttu,**

**ஆ**[3] ā, இடை. (part.) விளியீறு ; vocative ending. அண்ணா, ஐயா.

*'அன்' ஈற்றுப்பெயர் ஈறுகெட்டு அயல் நீண்டும் நீளாதும் அண்மை விளியாம். எ-டு : ஐய, ஐயா, அண்ண, அண்ணா.*

**ம., து.** ஆ

*ஈற்றயல் நீள்வதே இக்காலப் பெருவழக்கு. சேய்மை விளியாயின், அளபெடுத்தல் இன்றியமை யாதது.*

எ-டு : அண்ணாஅ, ஐயாஅஅ.

*அகர ஈறு கெடாது நீண்டு விளியாவது தெலுங்கியல்பு.*

எ-டு : பிட்ட (bidda ) – பிட்டா (biddā )

. பிட்டலு என்னும் பன்மைப் பெயர், பிட்டலாரா என்று விளியேற்கும்.

இங்ஙனம் தெலுங்கில் ஆகாரம் வருமிடத்துத் தமிழில் ஏகாரம் வரும், அல்லது ஈற்றயல் நீளும். எ-டு: மகள் – மகளே; மக்கள் – மக்காள், மக்களே; பிள்ளை – பிள்ளாய், பிள்ளையே; பிள்ளைகள் – பிள்ளைகாள், பிள்ளைகளே.

**ஆ**[4] ā, பெ. (n.) ஏழிசையுள் முதலான குரலின் பழைய குறி; old symbol representing the first note of the gamut.
*"ஆ ஈ ஊ ஏ ஐ ஓ ஔ எனும்
இவ்வேழெழுத்தும் ஏழிசைக் குரிய". (திவா.)*

**ஆ**[5] ā, இடை. (int.) பல்வகைக் குறிப்பு : 1. இரக்கக் குறிப்பு ; Ah! exclamation expressing pity, regret. "ஆவம்மா வம்மா வென்னம்மா வகன்றனையே" (சீவக. 1804). 2. துயரக்குறிப்பு; exclamation expressing grief. ஆ! ஆற்றேன் (உ.வ.) 3. வியப்புக் குறிப்பு ; Ah! exclamation expressing wonder, admiration. "ஆகற்றவா கடவானிச் சுனைப்புனமே" (திருக்கோ.60). 4. இகழ்ச்சிக் குறிப்பு; exclamation expressive of contempt. ஆ! மிக நன்றாயிருக்கிறது. (உ.வ.) 5. நோவுக் குறிப்பு; exclamation expressing unbearable pain. ஆ! வலிக்கிறது. (உ.வ.) 6. புழுக்கக் குறிப்பு; interjection expressing sultriness. ஆ! வெந்தேன். (உ.வ.) 7. நினைவுக் குறிப்பு; exclamation expressing recollection. ஆ! மறந்தேன் (உ.வ) ஆ! அந்த நாள் ஒரு பொன் நாள்! (உ.வ.); ஆ அந்நாள் இனி வருமோ? (உ.வ.)

**ம., க., தெ., து., பட., கச.** ஆ

E. ha, hah.

**ஆ**[6] ā, இடை. (part.) ஈற்று வினாவிடைச் சொல்; inter. term. அவன் வந்தானா? (உ.வ. ).

**தெ., க., து., பட.** ஆ

**ஆ**[7] ā, இடை. (part.) பல்வேறு எதிர்மறையிடை நிலை : 1. எதிர்மறை வினைப்பெயரிடை நிலை;

sign of neg. vbl. n. செய்யாமை. 2. எதிர்மறைப் பெயரெச்ச இடைநிலை; a sign of neg. rel. part. செய்யாத வேலை. 3. எதிர்மறை வினையெச்ச இடைநிலை; sign of neg. vbl. part. செய்யாது போனான், செய்யாமைப் போனான், செய்யாமே போனான், செய்யாமற் போனான்.

**ம., க., தெ.** ஆ

*[அரு → அருமை → ஆமை. அரு = அரிது (ம. அருது), அரியது, முடியாது, கூடாது, தகாது. இக் குறிப்பு வினைமுற்று, முற்றெச்சமாகி வினையெச்சமாகவும் அகரவீறு சேர்ந்து பெயரெச்சமாகவும் வழங்கும். கூடாமைக் கருத்தில் வினை செய்யாமைக் கருத்துத் தோன்றும்.*

### 'ஆ' என்னும் எதிர்மறையிடைநிலை வந்த வகை

உடன்பாட்டுவடிவில் ஆற்றலை (potency) அல்லது இயல்பை (possibility) யுணர்த்தும் துணைவினைகள், எதிர்மறைவடிவிற் பெரும்பாலும் விலக்கை (prohibition) அல்லது மறுப்பை (refusal) உணர்த்துகின்றன.

| எ—டு: | உடன்பாட்டுவினை | எதிர்மறைவினை |
|---|---|---|
| | நீ இதைச் செய்யக்கூடும். | நீ இதைச் செய்யக்கூடாது. |
| | யாரும் அங்குப் போகப்படும். | யாரும் அங்குப் போகப்படாது. |
| | நான் வரமுடியும். | நான் வரமுடியாது. |
| | அவன் எழுத மாட்டுவான். | அவன் எழுத மாட்டான். |

அருமை என்னும் பண்புப்பெயர், முறையே சிற்றளவு, மதிப்புயர்வு, விரும்பற்பாடுமிகை, கிடையாமை, இயலாமை ஆகிய பொருள்களை யுணர்த்தும். அதன் அடிப்பிறந்த அரிது என்னும் குறிப்பு வினைமுற்று, உடன்பாட்டு வடிவிலிருப்பினும், இயலாமையை யுணர்த்தும்போது எதிர்மறைப் பொருள் கொண்டு, எதிர்மறை வினை போலாவதால், மேற்குறித்த 'கூடாது', 'படாது' என்னும் துணைவினைகள் போன்றே விலக்கு வினையாகி விடுகின்றன.

| எ—டு : | | |
|---|---|---|
| | நீ மழையத்துப் போகரிது. | நீ மழையிற் போகக்கூடாது. |
| | நீ வெயிலத்துப் போகரிது. | நீ வெயிலிற் போகக்கூடாது. |

'அரிது' என்பது கொச்சை வழக்கில் 'அருது' என்று திரியும். ஆதலால், 'போகரிது' என்னும் பண்டைச் சேரநாட்டு வழக்கு, இன்று மலையாளத்தில் 'போகருது' என்று வழங்குகின்றது.

"பனியென வரூஉம் கால வேற்றுமைக்(கு)
அத்தும் இன்னும் சாரியை யாகும்"
(தொல். எழுத்து. 241 )

"வளியென வரூஉம் பூதக் கிளவியும்
அவ்வியல் நிலையல் செவ்வி தென்ப".
(தொல். எழுத்து. 242 )

"மழையென் கிளவி வளியியல் நிலையும்"
(தொல். எழுத்து. 287 )

"வெயிலென் கிளவி மழையியல் நிலையும்"
(தொல். எழுத்து. 377 )

இவை சேரநாட்டுத் தமிழுக்கு மட்டுமன்றி, முந்நாட்டுத் தமிழுக்கும் பொதுவாகச் சொல்லப் பட்டவை. ஆதலால், பனியத்துக் கொண்டான், வளியத்துக் கொண்டான், மழையத்துக் கொண்டான், வெயிலத்துக் கொண்டான் என்று நச்சினார்க்கினியர் எடுத்துக்காட்டிய அத்துச் சாரியை வழக்கு, இன்று இறந்துபட்டதென்றே கொள்க.

அருமை என்னும் சொல் மையீறு பெற்ற பண்புப் பெயராதலால், அரு என்னும் முதனிலையே இயல்பான சொல்லாகும். அரிது என்பது அதனின்று திரிந்த (படர்க்கை) ஒன்றன்பாற் பெயர் அல்லது குறிப்பு வினைமுற்றே. அதன் மூவிட ஐம்பால் வடிவங்களும் வருமாறு :-

| | | |
|---|---|---|
| தன்மை – | ஒருமை | : அரியேன் |
| | பன்மை | : அரியேம், அரியோம் |
| முன்னிலை – | ஒருமை | : அரியை, அரியாய் |
| | பன்மை | : அரியீம், அரியீர் |
| படர்க்கை – | ஆண்பால் | : அரியன், அரியான் |
| | பெண்பால் | : அரியள், அரியாள் |
| | பலர்பால் | : அரியர், அரியார் |
| | ஒன்றன்பால் | : அரியது, அரிது |
| | பலவின்பால் | : அரியன, அரியவை, அரிய. |

**ஒ.நோ:** பண்புப் பெயர் : பெருமை

**முதனிலை** : பெரு

| | | |
|---|---|---|
| தன்மை – | ஒருமை | : பெரியேன் |
| | பன்மை | : பெரியேம், பெரியோம் |
| முன்னிலை – | ஒருமை | : பெரியை, பெரியாய் |
| | பன்மை | : பெரியீம், பெரியீர் |
| படர்க்கை – | ஆண்பால் | : பெரியன், பெரியான் |
| | பெண்பால் | : பெரியள், பெரியாள் |
| | பலர்பால் | : பெரியர், பெரியார் |
| | ஒன்றன்பால் | : பெரியது, பெரிது |
| | பலவின்பால் | : பெரியன, பெரியவை, பெரிய |

நன்னூலார், மையீறு பெற்ற பண்புப்பெயரைப் பகாச்சொல்லாகவும் இயற்சொல்லாகவும் கொண்டு,

'ஈறுபோதல்' என்பதை ஒரு பண்புப்பெயர்த் திரிபாகக் கூறியது தவறாகும்.

**ஒ.நோ** : 'white' என்ற முதனிலையும் 'ness என்ற ஈறும் சேர்ந்தே 'whiteness' என்னும் ஆங்கிலப் பண்புப் பெயர் தோன்றும். "whiteness" என்ற இயல்பான சொல்லே, 'ness' என்னும் ஈறு நீங்கி 'white' என்றானது என்று, ஆங்கிலர் எவரும் கொள்ளார், சொல்லார். இங்ஙனமே அருமை பெருமை என்னும் பண்புப் பெயர்களும் என அறிக.

அரு என்னும் முதனிலையினின்று திரிந்த மூவிட ஐம்பாற் குறிப்பு வினைமுற்றுகள், தெரிநிலை வினைகளோடு கூடித் துணைவினைகளாகும்போது பின்வருமாறு அமையும்.

| | | |
|---|---|---|
| தன்மை – ஒருமை | : | செய்யரியேன் |
| பன்மை | : | செய்யரியேம், செய்யரியோம் |
| முன்னிலை – ஒருமை | : | செய்யரியை, செய்யரியாய் |
| பன்மை | : | செய்யரியீம், செய்யரியீர் |
| படர்க்கை– ஆண்பால் | : | செய்யரியன், செய்யரியான் |
| பெண்பால் | : | செய்யரியள், செய்யரியாள் |
| பலர்பால் | : | செய்யரியர், செய்யரியார் |
| ஒன்றன்பால் | : | செய்யரியது, செய்யரிது |
| பலவின்பால் | : | செய்யரியன, செய்யரியவை, செய்யரிய. |

இவ்வெதிர்மறை வினைகளினின்றே இற்றை வடிவுகள் பின்வருமாறு திரிந்துள்ளனவாகத் தெரிகின்றது.

செய்யரியேன் – செய்யேன், செய்யரியேம் – செய்யேம், செய்யரியோம் – செய்யோம், செய்யரியாய் – செய்யாய், செய்யரியீர் – செய்யீர், செய்யரியான் – செய்யான், செய்யரியாள் – செய்யாள், செய்யரியார் – செய்யார், செய்யரிது – செய்யாது, செய்யரிய – செய்யா. இவற்றுள் ஈற்றிரண்டும் திரிதல்; ஏனைய தொகுத்தல். ஆயினும் படர்க்கை வினைகட்கெல்லாம் 'ஆ' பொதுவாயிருத்தலால், அதனையே எதிர் மறையிடை நிலையாகவும் எதிர்மறைப் பலவின்பால் வினை முற்றீறாகவுங் கொண்டனர் போலும்.

**கால்டுவெலார்**, எதிர்மறை வினைச்சொற்களிற் காலங்காட்டும் இடைநிலையின்மையால், அது வினை நிகழாமையைக் குறித்து, எதிர்மறை வினைச் சொல் வடிவிற்குத் தோதாயிற்றென்று கருதினார். அது ஒரு வகையிற் பொருத்தமாகத் தோன்றினும், செய்திலன், செய்ததில்லை என இன்மை குறித்துத் துணை– வினைகளொடு கூடிக் காலங்காட்டும் எதிர்மறை வினைச் சொற்களும் உண்மையாலும், செய்யவில்லை என்னும் வாய்பாட்டு வினைமுற்றும் செய்யாத என்னும் பெயரெச்சமும், செய்யாது என்னும் வினையெச்சமுமே முக்காலத்திற்கும் பொதுவாயிருத் தலாலும், செய்யான், செய்யாள் முதலிய ஐம்பால் வினைமுற்றும் பொதுவாக எதிர்காலத்திற்கே யுரியனவாதலாலும், அவர் கூற்று உண்மையான தென்று கொள்ளற் கிடமில்லை யென்க.

சிறிது, பெரிது முதலிய ஒன்றன்பாற் குறிப்பு வினைமுற்றுகள் ஈரெண் மூவிட ஐம்பாற்கும் பொது வான முற்றெச்சங்களாய்ப் பயன்படுத்தப்படுவது போன்று, செய்யாது என்னும் எதிர்மறை வினை யெச்சமும் ஈரெண் மூவிட ஐம்பால் பொதுவாகப் பயன்படுத்தப்படும்.

எ–டு : செய்யாது வந்தேன், வந்தேம், வந்தாய், வந்தீர், வந்தான், வந்தாள், வந்தார், வந்தது, வந்தன.

'செய்து' என்னும் உடன்பாட்டு வினையெச்சம் அகரவீறு பெற்றுச் செய்த என்னும் பெயரெச்சமானாற் போன்று, செய்யாது என்னும் எதிர்மறை வினையெச்சமும் அகரவீறு பெற்றுச் செய்யாத என்ற பெயரெச்சமாகும்; பின்னர் ஈறு கெடின், 'செய்யா' என்று நிற்கும்.

நீ செய்யரிது என்னும் எழுவாய்த் தொடர் செய்யரிது நீ என்று வினைமுற்றுத் தொடராய் மாறுவது போன்றதே செய்யாதீ (செய்யாதே) என்னும் எதிர்மறை யேவலும்.

முன்னிலைப் பெயர்கள், ஏவல் அல்லது முன்னிலை வினைமுற்றீறாகும்போது பின்வருமாறு திரியும்.

ஒருமை : ஊன் → நூன் → நீன் → நீ → ஈ → இ.
ஈ → ஏ → ஐ.
பன்மை: ஊம் → நூம் → நீம் → ஈம்.
நீ + இர் = நீயிர் (நீவிர்) → நீர் → ஈர்.
ஊம் → உம்.

எ–டு : செய்யாது + ஈ = செய்யாதீ → செய்யாதி.
செய்யாதீ → செய்யாதே → செய்யாதை.
செய்யாது + ஈம் = செய்யாதீம்.
செய்யாது + ஈர் = செய்யாதீர் → செய்யாதிர்

பன்மையேவலிலும் உயர்வுப்பன்மை யேவலிலும் பல ஈறுகள் கலந்தும் வரும்.

எ–டு : ஏ + உம். செய்யாதேயும் (ஒத்தோரையேவும் உயர்வுப் பன்மை.)

| | |
|---|---|
| ஏ + உம் + கள். செய்யாதேயுங்கள் | பன்மையும், உயர்ந்தோரை |
| ஈர் + கள். செய்யாதீர்கள். | ஏவும் உயர்வுப் பன்மையும். |

*அருமையென்னும் பண்புப்பெயரும் அரிது என்னும் குறிப்பு வினைமுற்றும் இன்மையும் இயலாமையும் உணர்த்துவதனாலும், மாட்டேன், மாட்டாய், மாட்டான் என்னும் எதிர்மறை வினைகள் போன்றே, செய்யேன், செய்யாய், செய்யான் என்னும் எதிர்மறை வினைகளும் இயலாமையையும் விருப்பின்மையையும் உணர்த்துவதனாலும், பகு-பா என இருகுறில் ஒரு நெடிலாக மருவியதுபோல் அரு - ஆ எனத் திரிவதும் இயல்பேயாதலாலும், "எல்லாச் சொல்லும் பொருள்குறித் தனவே" யென்று (தொல்.சொல்.பெய.1) கூறுவதாலும், 'அரு' என்னுஞ் சொல்லினின்றே 'ஆ' என்னும் எதிர்மறையிடைநிலை தோன்றியுள்ளதாகத் தெரிகின்றது.*

**ஆ**[8] ā, இடை. (part.) ஒருவகைப் புணர்ச்சிச் சாரியை; combinational particle occurring in certain reduplication of words. போட்டா போட்டி, வேனா வேனல் (கடும் வேனில்) (உ.வ.).

**ஆ**[9] ā, இடை. (part.) பல்வேறு ஈறுகள்: 1. பலவின் பால் எதிர்மறை வினைமுற்றீறு; imper. 3rd per. pl.neg.verb-ending. "அரவுஞ் சூரும் இரைதேர் முதலையும் உருமுஞ் சார்ந்தவர்க் குறுகண் செய்யா" (சிலப். 13:7-8). 2. ஒரிறந்தகால வினையெச்ச (செய்யா என்னும் வாய்பாடு) ஈறு; past parti. ending. "புயன் முகந்து பெய்யாக் கொடுக்கும் பிறர்க்கு" (நன்னெறி, 4). 3. ஒரு வினையாகு பெயரீறு; parti. noun ending. உணா, கனா, நிலா. 4. ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்ச ஈறு; ending of mutilated neg. rel. parti. உண்ணாநோன்பு. 5. ஈறுகெட்ட எதிர்மறை வினையெச்ச ஈறு; ending of mutilated neg. vbl. parti. சொல்லாப்போனான். 6. பெயர்ச்சொல்லின் திரிபீறு; derivative noun ending. புறா, பலா.

**ம., க., தெ.** ஆ.

*உண்ணாத, சொல்லாத என்ற எச்சங்கள் ஈறுகெட்டு உண்ணா, சொல்லா என்று குறுகியிருப்பதால், அக்குறுக்கங்கள் 'ஈறு கெட்ட' என்னும் அடைபெற்றன. ஈறுகெடா நிலையிலுள்ள ஈற்றை இயற்கையீறு என்றும், ஈறுகெட்ட நிலையிலுள்ள ஈற்றைச் செயற்கையீறு என்றும் கொள்க.*

**ஆ**[10] ā, இடை. (conj.) ஆவது ..... ஆவது என்னும் தெரிப்புப் பொருளிற் பெயர் தொறுஞ் சேர்ந்து வரும் இடைச்சொல்; either ..... or .. "தேவரா ...... அசுரரா வந்து கேட்டிலர்." (திருவிளை. இந்திரன்பழி. 26)

*இப் பொருளில் வரும் 'ஆ' வினாவெழுத்தாயிருக்கலாம். 'தேவரோ அசுரரோ' என்பதும் இப் பொருள்படுதல் காண்க.*

**ஆ**[11] ā, பெ. (n.) பல்வேறு பொருட்பெயர்: 1. பெற்றம் (மாடு), எருமை, மரை (மான்வகை) ஆகிய வற்றின் பெண்; female of the ox, the buffalo and the sambar (Indian elk). "பெற்றமும் எருமையும் மரையும் ஆவே." (தொல். பொருள். மரபு. 61). 2. விலங்கின் பெண் பொது; generic name for the females of beasts. (சா. அக.) 3. காளை; bull. "ஆவார்கொடியாய்" (திருவிளை. நரிபரி. 19). 4. ஆதன் (ஆன்மா); soul. "ஆதிருக்கச் சிவம்" (கம்பரந். 39). 5. விடை (வைகாசி); second month of the Tamil calender year (May - June)

**ம., க.** ஆ; **தெ.** ஆவு; **கோத.** ஆவ்; **குரு** . ஆ.; **மா.** ஒயு

*[மா → மான் → ஆன், மா → ஆ. மான் → மாடு. குறிஞ்சிநில மாந்தன், பாலுண்வின் பொருட்டு முதன்முதலாக வீட்டிற் கட்டி வைத்துப் பழக்கிய விலங்கு மாடே. மா என்று கத்துவது மா. மா, மான் என்பன விலங்கின் பொதுப் பெயரானபின், கறவையையுங் காளையையுங் குறிக்க மாடு என்னும் சொல் தோன்றிற்று. மாட்டின் பெண்பாலைக் குறிக்க ஆன், ஆ என்னும் சொற்கள் தோன்றின. பெற்றமும் எருமையும் மரையும் நெருங்கின விலங்கினங்களாதலால், முதற்கண் அம்மூன்றன் பெண்பாற்கும் வரையறுக்கப்பட்டிருந்த ஆ என்னும் பெயர், பிற்காலத்தில் விலங்கின் பெண்பாற் பொதுப் பெயராயிற்று.*

*"ஆவார் கொடியாய்" என்றும், "ஆன்முகத்த னடற்கண நாயகன்" (கந்தபு.பானுகோ. 95) என்றும், ஆ, ஆன் என்பவை ஆண்பாற் பெயராகவும் ஆளப்பட்டதை, மரபுவழுவமைதி யென்றே கொள்ளல் வேண்டும்.*

*ஆ என்பது மாட்டின் ஆண்பாற் பெயராகவும் ஆளப்பட்டபின், விடை (இடப) ஓரைக்குரிய மாதமும் ஆ வெனப்பட்டது.*

*உயிர்கள் எல்லாம் பாசத்தினாற் கட்டப்படுவது பற்றிப் பசுவென்னும் வடநூல் வழக்கு நோக்கி, ஆதனும் (ஆன்மாவும்) ஆ வெனப்பட்டது. இனி ஆவினைத் தாயாகக் கருதும் பெற்றி நோக்கி அவ்வை → ஆவு→ ஆ→ ஆன் எனத் திரிந்திருக்கலாம். தெலுங்கில் 'ஆவு' என்பதே நிலைத்திருத்தல் நோக்கத்தக்கது.]*

**ஆ**[12] ā, பெ. (n.) நசை (இச்சை); desire, eagerness (சா.அக.).

*[அவா → ஆ. ஒ.நோ: அவாவு → ஆவு (உ.வ.) ஆவி சேர்த்துக் கட்டுதல் (நெ.வ.) என்னும் வழக்கு நோக்குக.]*

**ஆ**[13] ā, பெ. (n.) ஆச்சா; ebony, Diospyros ebenaster (சா. அக.); hard, heavy durable wood most highly prized when black, from various tropical trees of the genus Diospyros, as D.Ebenum of Southern India and Ceylon used for cabinet work, ornamental objects etc. (Random Dictionary.)

*[இது ஆச்சா என்பதன் குறுக்கம். இது ஆவொடு தொடர்புடையதாயிருக்கலாம்.]*

**ஆ**[14] ā, பெ. (n.) வகை; way, manner. "சிவமான வாபாடி" (திருவாச. 11:4).

*[ஆறு (வழி, வகை) → ஆ (கடைக்குறை)]*

**ஆ**[15] ā, பெ. (n.) ஆகுகை ; becoming. "இலயித்தவா றுளதா வேண்டும்." (சி.போ. 1:2).

*[ஆ (ஆகை) – முதனிலைத் தொழிற்பெயர்.]*

**ஆ**[16] ā, பெ. (n.) சோறு; food, rice. ஆ வாங்கிக் கொள் (குழந்தை மொழி.)

**ஆ**[17] ā, பெ. (n.) மாமரம்; mango. tree.

**Hind.** ām.

*[மா → ஆ.]*

**ஆ**[1]**–தல்** ā-, 6 செ.கு.வி. (v.i.) 1. உண்டாதல் ; to come into existence. அந்த அம்மையார் ஆகியிருக்கிறார். (நெல்லை. ). 2. நிகழ்தல்; to happen, occur. 3. இணக்கமாதல்; to be agreeable, congenial, on friendly terms. தென்கலையார்க்கும் வடகலையார்க்கும் ஆகாது. 4. ஒப்பாதல்; to be like, equal, to resemble. "எனக்காவா ராரொருவர்" (திவ். இயற். 1:89). 5. அமைதல்; to be. இதற்கிது பொருளாகும். 6. உறவு முறையாதல்; to be related to, as a blood or marital relation. இந்தத் திருமணத்தால் அவர் உனக்கு என்ன ஆவார்? 7. சமைதல்; to be cooked, as food- சோறு ஆகிறது. 8. வளர்தல்; to grow, as a child or crop. அவன் இப்போது ஆளாகிவிட்டான்; கரிசற் காட்டிற் கம்பு நன்றாய்ப் பயிராகும். 9. ஆக்கம் பெருகுதல்; to prosper, flourish. ஆகிற குடி அரைக் காசால் ஆகும். (பழ.) 10. ஒன்று இன்னொன்றாக மாறுதல்; to become changed into another. 'நீர் ஆவியாகும், ஆவி நீராகும், முக்காலும் காகம் முழுகிக் குளித்தாலும் கொக்காகுமா?' (பழ.) அளவிற்கு மிஞ்சினால் அமுதமும் நஞ்சாம் (பழ.). 11. ஒன்றிற்கு இன்னொன்றை மாற்றுதல்; to be exchanged. உழவர் தாம் விளைத்த நெல்லில் தம் உணவிற்கு வேண்டிய அளவு எடுத்துக் கொண்டபின் மிச்சமெல்லாம் காசாகும். 12. மதிப்புயர்தல்; to become more valuable. சென்ற இரண்டாம் உலகப் போரில் இரும்பெல்லாம் பொன்னாயிற்று. (உ.வ.). 13. செலவாதல்; to be spent. ஒரு வீடு கட்ட எவ்வளவாகும்? நான் இங்கு வந்து மும்மாதம் ஆகிறது (உ.வ.). 14. பயன் படுதல்; to be useful. பலாக்கட்டை வீணைக்காகும். அவன் ஒன்றிற்கும் ஆகான். (உ.வ.). 15. முடிதல்; to be done, finished, completed, exhausted. கருமம் ஆகிறவரை கழுதையையுங் காலைப் பிடிக்க வேண்டும் (பழ.).

**ம., க., தெ., பட.** ஆ; **குவி.** ஆயலி; **கூ.** ஆவ.

*[ஆகு → ஆ. 'ஆகு' பார்க்க.]*

**ஆ**[2]**–த்தல்** ā-, 4 செ.குன்றாவி. (v.t.) 1. கட்டுதல்; to bind. "ஆத்திருந்தாளை" (சீவக.1882). 2. அமைத்தல்; to cause, to bring about. "அடுஞ்சமர மாத்து" (பாரத வெண்.)

*[யா → ஆ. ஒ.நோ: யாக்கை → ஆக்கை.]*

**ஆஅ** ā a, இடை. (int.) வியப்பு, இரக்கம், துயரம் ஆகியவற்றின் குறிப்பு; exclamation expressive of surprise, pity and grief.

*[ஆ → ஆஅ]*

**ஆஅய்** āay, பெ. (n.) **ஆய்**[7] பார்க்க; see **āy**[7]. "கழல் தொடி ஆஅய் மழைதவழ் பொதியில்" (புறநா. 128.)

*[ஆய் – ஆஅய்]*

**ஆஅல்** āal, பெ. (n.) ஆரல் (கார்த்திகை விண்மீன்) (மலைபடு. 100); third star in the list of 27 stars.

*[ஆரல் → ஆஅல்]*

**ஆஆ** āa, இடை. (part.) **ஆவா** பார்க்க; see āvā

*[ஆ + ஆ (ஒலிக்குறிப்பு) an onomatopoeic expression.]*

**ஆஎனல்** āeṉal, இடை. (part.) **ஆவெனல்** பார்க்க; see āveṉal.

*[ஆ + எனல்]*

**ஆக்கக் கிளவி** ākka-k-kiḷavi, பெ. (n.) (இலக்.) ஒரு பொருளின் தன்மை அல்லது நிலைமை வேறுபட்டதை அல்லது படுவதைக் காரணங் காட்டியும் காட்டாதும் கூறும் ஆதல் வினைச்சொல்; (Gram.) word indicating change from one state or quality to another. பயிர் நல்லவாயின, பனிபெய்ததால் நிலம் குளிர்ந்ததாயிற்று.

"ஆக்கக் கிளவி காரண முதற்றே" (தொல். சொல். 21.)

"ஆக்கக் கிளவி காரண மின்றியும்
போக்கின் றென்ப வழக்கி னுள்ளே". (தொல். சொல். 22)

*[ஆனது அல்லது ஆவது ஆக்கம். கிளவி = சொல். கிளத்தல் = சொல்லுதல். ]*

**ஆக்கங் கூறு–தல்** ākkaṅ – kūṟu–, 5 செ. கு. வி. (v.i.) வாழ்த்துக்கூறுதல்; to bless, invoke, a blessing. "மன்னவற் காக்கங் கூறி" (திருவிளை. மாயப். 26 ).

*[ஆக்கம் + கூறு. ஆ → ஆகு → ஆக்கு → ஆக்கம் ]*

**ஆக்கங் கெடு–தல்** ākkaṅ – keḍu–, 17 செ. குன்றாவி. (v.t.) நற்பேறு இழத்தல்; to become impoverished, to lose prosperity. அவன் ஆக்கங் கெட்டவன் (நெல்லை, முகவை).

*[ஆக்கம் + கெடு]*

**ஆக்கஞ்செப்பல்** ākkañ-ceppal, பெ. (n.) (அகப். ) களவொழுக்கத்தில், இயற்கைப் புணர்ச்சி முதல் களவு வெளிப்படும் வரை தலைவன் தலைவி இருவர்க்கும் நிகழும் ஒன்பது நிலைகளுள் ஒன்று; one among the nine states or conditions of mind (Avattai) that mark the emotional behaviour of the Hero and the Heroine during pre-marital love; expressing to others poignancy of one's love.

"வேட்கை யொருதலை யுள்ளுதல் மெலிதல்
ஆக்கஞ் செப்பல் நாணுவரை யிறத்தல்
நோக்குவ வெல்லாம் அவையே போறல்
மறத்தல் மயக்கம் சாக்கா டென்றச்
சிறப்புடை மரபினவை களவென மொழிப"

*என்னும் தொல்காப்பிய நூற்பா (தொல். பொருள். கள. 9) அவ்வொன்பது நிலைகளையுங் கூறும்.*

*நம்பியகப் பொருள்,*

"காட்சி முதலாச் சாக்கா டீறாக்
காட்டிய பத்துங் கைவரும் எனினே
மெய்யுறு புணர்ச்சி யெய்துதற் குரித்தே" (36. )

என்று, காட்சியுஞ் சேர்த்து அந்நிலைகளைப் பத்தாகக் கூறும்.

'ஆக்கஞ் செப்பல்' என்னும் நிலையை, இளம்பூரணர், நச்சினார்க்கினியர், நாற்கவிராய நம்பி ஆகிய மூவரும் வெவ்வேறு வகையிற் கூறியுள்ளனர்.

'உறங்காமையும் உறுவ ஒதலும் முதலாயின கூறுதல்', என்பது **இளம்பூரணம்.**

'யாதானும் ஓர் இடையூறு கேட்டவழி அதனை ஆக்கமாக நெஞ்சிற்குக் கூறிக் கோடல்', என்பது **நச்சினார்க்கினியம்.**

'தன்னெஞ்சின்கண் வருத்த மிகுகின்ற படியைப் பிறர்க்குரைத்தல்', என்பது **நாற்கவிராய நம்பியம்.**

(இவற்றுள் நச்சர் உரை ஏற்கத்தக்கது.)

*[ஆக்கம் + செப்பல். ஆ → ஆகு → ஆக்கு → ஆக்கம் (தொ.பெ. ) செப்பு → செப்பல். (தொ.பெ. ). ]*

**ஆக்கண்** ākkaṇ, பெ. (n.) **அங்கண்** பார்க்க; see **angaṇ**

**ஆக்கணாங் கெளிறு** ākkaṇāṅ–keḷiṟu, பெ. (n.) ஒரு வகைக் கெளிற்று மீன்; brown estuary fish. **plotosus canins.**

*[ஒருகா. ஆக்கணை + ஆம் (சாரி. ) + கெளிறு. ]*

**ஆக்கதம்** ākkadam, பெ. (n. ) முதலை; crocodile, alligator (சா. அக. ).

*[ஆக்கு → ஆக்கணம் (வலிமை) → ஆக்கதம்.]*

**ஆக்கநிலை** ākkanilai, பெ. (n. ) சூழலாலும் பழக்கத்தாலும் நிலைப்படும் நிலை; state or condition brought into being by environment and custom.

*[ஆக்கம் + நிலை]*

**ஆக்கப்பாடு** ākka-p-pāḍu, uQ. (n.) நல்லாக்கம், திருப்பேறு; great advantage, divine grace. "அண்ணலவற் கருள்புரிந்த வாக்கப்பா டருள் செய்தார்" (பெரியபு. திருஞான. 77).

*[ஆக்கப்படு → ஆக்கப்பாடு (முத.தி.தொ. பெ.). இனி, ஆக்கம் + பாடு என்றுமாம். பாடு = பெருமை.].*

**ஆக்கப்புரை** ākkappurai, uQ. (n.) **ஆக்குப்புரை** பார்க்க; see ākkuppurai.

*[ஆக்கம் + புரை]*

**ஆக்கப் பெயர்** ākka-p-peyar, பெ. (n.) தொன்று தொட்டு மரபாக வழங்கிவரும் முறைமைக்கு மாறாக, ஒரு பொருட்கு ஒரு பெயரைப் புதிதாக ஆக்கிக் கொள்வது ஆக்கப்பெயர். அது இடுகுறியாக்கப் பெயர், காரணவாக்கப் பெயர் என இருவகைப்படும்.

(1) இடுகுறி போன்று மக்கட்கு இடப்பட்டு வரும் இயற் பெயர் அல்லாது, பொருட் பொருத்தமில்லாத ஒரு புதுச் சொல்லைப் பெயராக இடுவது இடுகுறியாக்கப் பெயர்; name or designation coined newly and arbitrarily by an author.. எ–டு: முட்டை (முருகன்). (2) பல பொருள்கட்குப் பொது வான ஒரு காரணப்பெயரை, அவற்றுள் ஒன்றிற்கு அல்லது சிலவற்றிற்கு மட்டும் வரையறுப்பது காரணவாக்கப் பெயர்; term which, though connoting many is restricted in application to only one or a few of them. எ–டு: நன்னூல் (பவணந்தி), தாமரைக் கண்ணன் (திருமால்), கரி (அடுப்புக் கரி, யானை).

"இடுகுறி காரண மரபோ டாக்கம்

..............................

ஏற்பவும் பொதுவு மாவன பெயரே" (நன். 275 ).

*[ஆக்கம் + பெயர். ஆகு → ஆக்கு → ஆக்கம். பெய் → பெயர். ஆகு → ஆ.]*

***எல்லாச் சொற்களும் காரணக் குறியினவே என்பதே தமிழ் நூலார் கொள்கை. "எல்லாச் சொல்லும் பொருள்குறித் தனவே" என்பது தொல்காப்பியம். (தொல். சொல். பெய. 1)***

பிறந்தபோது திண்ணமாயிருந்ததனால் திண்ணன் அல்லது திண்ணப்பன் என்றும், வெள்ளையாயிருந்ததனால் வெள்ளையன் என்றும், பிறவியல்பு பற்றி யிடப்படும் பெயர்கள் மட்டுமன்றிப் பிறபெயர்களும், பாட்டன் பெயர் என்றோ, முன்னோன் பெயர் என்றோ, தெய்வத்தை நினைப்பித்துப் பத்திச் சுவையூட்டும் தெய்வப்பெயர் என்றோ, நன்றியறிவு காட்டும் வகையில் குடும்பத்திற்கு நன்மை செய்தவர் பெயர் என்றோ, ஒரு குறிப்பிட்ட பேரறிஞன் அல்லது பெருமகன் போற் பிற்காலத்தில் விளங்க வேண்டுமென்றோ, இன்னோசைப் பெயர் என்றோ, ஏதேனும் ஒரு காரணம்பற்றியே இடப்படுவதால், மக்கட் சிறப்புப் பெயர்களும் காரணப் பெயர்களேயாம்.

நாட்டுப்புற மக்கள் சிலரின் வேடிக்கையான இயற் பெயர்களை நோக்கும் போது, முட்டையென்னும் பெயரும் ஒரு காரணப் பெயராயிருக்கலாமென்று கருத இடமுண்டா கின்றது.

வேத மொழியும் சமற்கிருதமுமான வடமொழி திரிபிற்றிரி பான பின்னை மொழியாதலின், அதன் சொற்கள் பலவற்றிற்கு வேர்ப்பொருளறிய வியலாமைபற்றி, வடமொழியிலக்கண நூலார் இடுகுறிப்பெயர், காரணப் பெயர் எனப் பெயர்களை இருவகை யாகக் கூறிவிட்டனர். பண்டை நாளிற் சொல்லாராய்ச்சியும் மொழியாராய்ச்சியுமின்மையால், பவணந்திமுனிவரும் அவரைப் பின்பற்றிக் கூறிவிட்டார். மரபானதும் புதிதாக இடப்படுவதும் ஆகப் பெயர்கள் இருதிறப்படுவதால், அப்பாகுபாட்டையும் சேர்த்து, இடுகுறி மரபுப்பெயர், இடுகுறியாக்கப்பெயர், காரண மரபுப்பெயர், காரணவாக்கப் பெயர் என நால்வகையாக வகுத்தார் நன்னூலார்.

இன்னும் இதன் விளக்கத்தை இடுகுறிப் பெயர் என்னுஞ் சொல்லின் கீழ்க் காண்க.

**ஆக்கப் பெருக்கம்** ākka-p-perukkam, பெ. (n.) வருமான மிகுதி; increase in income. மேலு முண்டான ஆக்கப் பெருக்கம். (S.I.I. v, 330).

*[ஆகு → ஆக்கு → ஆக்கம். பெரு → பெருகு → பெருக்கு → பெருக்கம்]*

**ஆக்கப்பொறு-த்தல்** ākka-p-poṟu-, 4. செ. குன்றாவி. (v.t.) 1. உணவு சமைக்கும்வரை காத்திருத்தல்; to wait till food is cooked. ஆக்கப் பொறுத்தது ஆறப் பொறுக்கக் கூடாதா? (உ.வ.). 2. வினைமுடியக் காத்திருத்தல்; waiting until the work is over.

*[ஆக்கு + அ + பொறு]*

**ஆக்கம்** ākkam, பெ. (n.) 1. ஆக்கமுணர்த்துஞ்சொல், ஆக்கக் கிளவி (தொல். சொல். கிளவி. 22); word indicating change from one state or quality to another. 2. படைப்பு; creation. "ஆக்க மவ்வவர் கன்ம மெலாங் கழித்திடல்" (சி.சி.1:37). 'ஆக்கப் பொறுத்தவன் ஆறப் பொறுப்பானா', 'ஆக்க மாட்டாத பெண்ணுக்கு அடுப்புச்சட்டி பத்தாம்', 'ஆக்கமாட்டாத அழுகல் நாரிக்குத் தேடமாட்டாத திருட்டுக் கணவன் வாய்த்தானாம்' (பழ.) 3. அமைத்துக் கொள்ளுகை; arrangement, preparation, as in cleansing rice; 'வழுக்களைந்து சொற்களை ஆக்கிக் கொண்டமையான், இவ்வோத்துக் கிளவியாக்க மாயிற்று' (தொல். சொல். கிளவி. 1 சேனா. உரை.) 4. வளர்ச்சி, பெருக்கம்; increase, development, "தம்மாலா மாக்க மிலரென்று" (நாலடி. 301). 5. ஊதியம் (இலாபம்); gain, profit. "ஆக்கங் கருதி முதலிழக்குஞ் செய்வினை" (குறள், 463). 6. ஈட்டம், தொகுப்பு; accumulation. "அருளொடு மன்பொடும் வாராப் பொருளாக்கம்" (குறள், 755). 7. செல்வம்; wealth, fortune, prosperity. "மனநல மன்னுயிர்க் காக்கம்" (குறள், 457). 8. பெருவாழ்வு; life of prosperity, flourishing state..; "அவளால் வந்த ஆக்கம் இவ்வாழ்க்கையெல்லாம்" (சிவஞானசித். 1:69). 9. பொன்; gold. (பிங்.) 10. கைகூடுகை; achievement, accomplishing. 'விரும்பிய பொருளின் ஆக்கத்து அழகுணர்த்தற்குச் செறியும் இருண்ட மாலையிடத்து நற்சொற் கேட்டது' (பு.வெ. 1: 4, உரை). 11. மங்களவியல் (உ.வ.); auspiciousness. 12. வாழ்த்து; benediction. "மன்னவற் காக்கங் கூறி" (திருவிளை. மாயப். 26). 13. கொடிப்படை. (திவா.); van of an army carrying the banner.

**ம.** ஆக்கம்; **க.** ஆகெ, ஆக்கு.

*[ஆகு → ஆக்கு → ஆக்கம் (தொழிற்பெயரும் தொழிலாகுபெயரும்)]*

**ஆக்கமகள்** ākka-magaḷ, பெ.(n) திருமகள்; goddess of wealth. "ஆக்கமகள் கொண்டாட" (கடம்பர் உலா, 192:3).

**ஆக்கர்** ākkar, பெ. (n.) படைக்கப்பட்ட தேவர்; installed deities. 'இவ்வருகிலாக்கரான இந்திராதிகள்' (ஈடு, 5:2:3).

*[ஆகு → ஆக்கு →ஆக்கர். 'அர்' ப.பா. ஈறு.]*

**ஆக்கல்** ākkal, தொ.பெ. (vbl. n.) 1. படைத்தல்; creating. ஆக்கல், காத்தல், அழித்தல் என இறைவன் தொழில் மூன்று. 2.சமைத்தல்; cooking. 'ஆக்க வேண்டா அரைக்க வேண்டா பெண்ணே, என் அருகிலிருந்தால் போதுமடி கண்ணே', 'ஆக்கிக் குழைப்பேன் அல்லது அரிசியாய் இறக்குவேன்' (பழ.).

*[ஆகு → ஆக்கு → ஆக்கல். 'அல்' தொ.பெ. ஈறு.]*

**ஆக்கவினைக்குறிப்பு** : ākkavinai-k-kuṟippu, பெ. (n.) ஆக்கத்தால் வரும் வினைக் குறிப்புச்சொல்; verb denoting change from one state or quality to another. "ஆக்கவினைக் குறிப்பு ஆக்கமின் றியலா" (நன்.347).

சாத்தன் நல்லன்; நல்லன் என்பது வினைக்குறிப்பு. 'சாத்தன் நல்லன் ஆயினான்'; ஆயினான் என்பது ஆக்கச் சொல்.

*[ஆக்கம்+வினை+குறிப்பு]*

**ஆக்கவும்மை** ākka-v-ummai, பெ. (n.) ஆக்கப் பொருளில் வரும் 'உம்' என்னும் இடைச்சொல்; particle 'um' indicating change from one state or quality to another.

*[ஆக்கம்+உம்மை]*

இவ்விடைச்சொல் இப்பொருளில் எங்கேனும் வந்ததாகத் தெரியவில்லை.

"எச்சம் சிறப்பே ஐயம் எதிர்மறை
முற்றே எண்ணே தெரிநிலை ஆக்கமென்
றப்பால் எட்டே உம்மைச் சொல்லே"

என்று தொல்காப்பியர் நூற்பா (தொல். சொல். இடை. 7) யாத்து விட்டதனால், பவணந்தியாரும் அவரைப் பின்பற்றி,

"எதிர்மறை சிறப்பையம் எச்சமுற் றளவை
தெரிநிலை ஆக்கமோ டும்மை யெட்டே"
என்று (நன்.இடை.6) இயற்றிவிட்டார்.

இளம்பூரணர், தம் உரையில், தொல்காப்பிய நூற்பா ஆக்கவும்மைக்கு எங்ஙனமும் எடுத்துக்காட்டுத் தரல் வேண்டுமென்பதையே கருதி, 'நெடியனும் வலியனும் என்பது ஆயினான் என்னும் ஆக்கத்துக்கண் வந்தது ஆக்கவும்மை' என்று வரைந்தார். அவருக்குப் பின்வந்த சேனாவரையர் ஆக்கவும்மைக்கு எடுத்துக்காட்டின்மை கண்டு ,

'ஆக்கவும்மை வந்தவழிக் கண்டுகொள்க. உரையாசிரியர் நெடியனும் வலியனுமாயினான் என்புழி உம்மை ஆக்கங் குறித்து நிற்றலின் ஆக்கவும்மையென்றார். "செப்பே வழீஇ யினும் வரைநிலை யின்றே' '(தொல். சொல்.14) என்னுமும்மை, வழுவை இலக்கணமாக்கிக் கோடல் குறித்து நின்றமையின், ஆக்கவும்மை யென்பாரு முளர்' என்று திறம்படவுரைத்தார்.

**நச்சினார்க்கினியர்,**

'நெடியனும் வலியனுமாயினான் என்பது ஆக்கம். "செப்பே வழீஇயினும் வரைநிலை யின்றே" என்பது இலக்கணமாக்கிக் கோடல் குறித்தமையின் ஆக்கமுமாம்' என்றும்,

**கல்லாடனார்,**

'இனி ஆக்கம் நெடியனும் வலியனுமாயினான் என்பது. இஃது எண்ணன்றோவெனின், ஒரு பொருடன்னையே சொல்லுதலின் அன்றாயிற்றுப் போலும்' என்றும் உரைத்தனர்.

**தெய்வச்சிலையாரோவெனின்,**

ஆக்கம் உம்மையடுத்த சொற்பொருண்மேல் ஆகும் நிலைமையைக் குறித்து வரும். வாழும் வாழ்வு , உண்ணுமுண் எனத் தொழிலினது ஆக்கங்குறித்து நின்றவாறு கண்டு கொள்க. இது பெயரெச்ச வினைச் சொல்லன்றோ எனின் ஆம். அதன்கண்ணும் இடைச்சொல் என்க. அதனானே யன்றே "உம்முந் தாகு மிடனுமா ருண்டே" என்னும் இலக்கணத்தால்; "நெல்லரியு மிருந்தொழுவர்" என்னும் பாட்டினுள், "செஞ் ஞாயிற்று வெயின்முனையிற் றெண்கடற் றிரைமிசைப் பாயும்" எனற்பாலது "பாயுந்து" என வந்தது. இவ்விலக்கணம் வினையியலுள் ஓதாமையால் பெயரெச்ச **உம்** இடைச்சொல் என்று கொள்ளப்படும். பாயும் புனல் என்பது பாய்புனல் எனத் தொக்குழி, வேற்றுமைப் பொருள்உருபு, பெயர் நிற்பத் தொக்கவாறு போல, வினைநிற்ப உருபு தொகுதலானும், செய்யும் என்பது வினையும் உருபுமாகிய இரு நிலைமைத்து என்று கொள்க. செய்யும் என்னும் முற்றுச் சொல்லின்கண் **உம்** எவ்வாறு வந்ததெனின், அது மற்றொரு பொருளைக்குறித்து நில்லாமையின் ஈண்டு இடமின்றென்க. முற்றுநிற்றலின் முற்றும்மை யெனினும் இழுக்காது. ஆக்கவும்மை என்பதற்கு நெடியனும் வலியனும் ஆயினான் என உதாரணங் காட்டுப வாலெனின், அஃது எண்ணும்மை என்க. "தனிவரின் எச்சவும்மையாம்" என வேறொரு வகையாக வுரைத்தார் .

**இனி, நன்னூலுரையாசிரியருள்,**

நெடியனு மாயினான் எ–து 'ஆக்கம்' என்றார் மயிலைநாதர். 'நெடியனும் ஆயினான், பாலும் ஆயிற்று என்புழி அவனே வலியனும் ஆயினான், அதுவே மருந்தும் ஆயிற்று

எனப் பொருள்படின் ஆக்கவும்மை' என்றார் விருத்தியென்னும் விரிவுரையாளர் .

'நெடியனும் வலியனு மாயினானவன், பாலும் மருந்து மதுவாயிற்று என்பன ஆக்கம்.

'இதனை நெடியனுமாயினான், பாலுமாயிற்று எனக்கூறி, அவனே வலியனுமாயினான், அதுவே மருந்துமாயிற்று எனப் பொருள்படின், ஆக்கவும்மை யென்பாருமுளர்' என்றார் இராமானுசக் கவிராயர்.

'பாலுமாயிற்று, இங்கே அதுவே மருந்துமாயிற்று என்னும் பொருளைத் தருதலால் ஆக்கம்' என்றார் ஆறுமுக நாவலர்.

'ஆகவே, பாலும் ஆயிற்று என்றால், இதில் அதுவே மருந்தும் ஆயிற்று என்னும் பொருளைத் தருமிடத்து ஆக்கம்' என்றார் சடகோப ராமானுசாச்சாரியாரும்.

இரு நூற்கும் உரை வரைந்த இவரெல்லாருள்ளும், உண்மையொட்டியுரைத்தவர் சேனாவரையர் ஒருவரே.

'கோவிற்பட்டி நகருமாயிற்று, இதில் கோவிற்பட்டி இப்பொழுது நகரமாயிற்று என்று ஆக்கப் பொருள் தருதலால் ஆக்கம்.' (இயற்றமிழ் இலக்கணம் . பக். 75) என்று பாவாணர் எடுத்துக் காட்டியுள்ளமை கொள்ளத்தக்கது.

**ஆக்களவு** ā-k-kaḷavu, பெ. (n.) ஆவைக் களவு செய்தல்; stealing of cows.

*[ஆ+களவு]*

**ஆக்கறுவாள்** ākkaṟuvāḷ, பெ. (n.) 1. கொடிக்காலில்




வெற்றிலைக் காம்பை நறுக்க உதவும் கத்தி; bill-hook for cutting the stem of the betel leaf. 2. தழைகளை வெட்ட உதவும் கையறுவாள்; bill - hook for hacking garden - knife, pruning hook (சா. அக.)

*[ஆக்கு+அறுவாள் த . அடகு > தெ. ஆக்கு..]*

மணையிற்பதிக்கப்பட்டுக்காய்கறியரியும்வாள்போன்றதே அரிவாள் என்றும், அது பதிக்கப்பட்ட மணையே அரிவாள்மணையென்றும் பெயர் பெறும். ஏனை யறுக்கும் அல்லது வெட்டும் வாள்களெல்லாம் அறுவாள் என்றே பெயர்பெறும். இப்பெயர் வேறுபாடு அரிதலுக்கும் அறுத்தலுக்கும் இடைப்பட்ட வினைவேறுபாட்டைப் பொறுத்தது. 'அறுவாள்' என்னும் சொல்லைப் பார்க்க.

அகரமுதலிகளில் அறுவாளை அரிவாள் என்று குறித்திருப்பது தவறாகும்.

**ம.** ஆக்கத்தி; **தெ.** கத்தி ஆகுராய்

**ஆக்கன்** ākkaṉ, பெ. (n.) செயற்கையானது (சம். அக.); that which is artificial.

*[ஆகு → ஆக்கு → ஆக்கன். 'அன்' ஒருமையீறு.]*

**ஆக்காட்டு-தல்** ā-k-kāṭṭu-, 5 செ.கு.வி. (v.i.) குழந்தை தன் தாய்க்கு ஆவென்று தன் வாயை விரிவாகத் திறந்து காட்டுதல் (கு.வ.); to open the mouth wide as in pronouncing the back vowel 'a', as a child in response to its mother's command. (Nurs.)

*[ஆ+காட்டு. காண் (த.வி.) → காட்டு (பி.வி).]*

**ஆக்காம்பாறை** ākkām- pāṟai, பெ. (n.) பாறைமீன் வகைகளுள் ஒன்று. (செங்கை. மீன.); a kind of fish.

*[ஆக்கம் – ஆக்காம் + பாறை]*

**ஆக்கிக்கொள்-தல்** ākki-k-koḷ-, 7 செ.குன்றாவி. (v.t.) முடித்துக்கொள்ளுதல்; to see a work (usu. auxiliary or incidental to the main work) done or accomplished "வினையால் வினையாக்கிக் கோடல்" (குறள். 678).

*[ஆக்கி+கொள்.]*

**ஆக்கிப்போடல்** ā-k-ki-p-pōḍal, பெ. (n.) மகப்பேற்றுக்காக மகளை அழைக்கும்போது தாய்வீட்டார் அளிக்கும் விருந்து; feast offered to a pregnant woman by her parents inviting her to their house for delivery.

*[ஆக்கி+போடல்]*

**ஆக்கியரிவாள்** ākki-y-arivāḷ, பெ. (n. ) கொடிக்காலில் வெற்றிலைக் காம்பை நறுக்க உதவும் சிறப்பு வகையான கத்தி (இ.வ.); special kind of knife for cutting the stem of the betel leaf (Loc.) .

ம. ஆக்கத்தி

*[ஒருகா.'ஆக்கறுவாள்' என்பதன் மறுவடிவாயிருக்கலாம். அங்ஙனமாயின், 'ஆக்கியறுவாள்' என்றே யிருத்தல் வேண்டும். இலையைக் குறிக்கும் ஆக்கு என்னும் தெலுங்குச்சொல் ஆக்கியென்று திரிந்திருக்கலாம்.'ஆக்கறுவாள்' என்னுஞ்சொல்லின்கீழ்ச்சிறப்புக் குறிப்பைப் பார்க்க.]*

**ஆக்கியோன்** ākkiyōṉ, பெ. (n.) 1. படைத்தோன், கடவுள்; God, as the maker, creator. 2. நூல்

செய்தவன், நூலாசிரியன்; author of a book. "ஆக்கியோன் பெயரே ............. பாயிரத் தியல்பே" (நன். பொதுப்பாயி. 48).

*[ஆகு → ஆக்கு → ஆக்கியான் → ஆக்கியோன் (வினையா. பெ.)]*

**ஆக்கு[1]–தல்** ākku-, 5 செ. குன்றாவி. (v.t.) 1. செய்தல்; to make, effect. "எரிப்பச்சுட் டெவ்வநோ யாக்கும்" (நாலடி. 124). 2. படைத்தல், தோற்றுவித்தல்; to cause to be, create. "அனைத்துலகு மாக்குவாய் காப்பா யழிப்பாய்" (திருவாச. 1:42). 3. அமைத்துக் கொள்ளுதல்; to arrange, make preparations. "நொய்யும் நுறுங்குங் களைந்து அரிசியமைத் தாரை அரிசியாக்கினா ரென்ப" (தொல். சொல். 1. சேனா. உரை). 4. சமைத்தல்; to cook. "அஞ்சும் மூன்றும் உண்டானால் அறியாப் பெண்ணுங் கறியாக்கும்". "ஆக்கி அரைத்துப் போட்டவள் கெட்டவள், வழிகூட்டி அனுப்பினவள் நல்லவள்". "ஆக்குகிறவள் சலித்தால் அடுப்புப் பாழ், குத்து கிறவள் சலித்தால் குந்தாணி பாழ்" (பழ.). "ஆக்கப் பொறுத்த நமக்கு" (இராமநா. அயோத். 13). 5. நிலைமையுயர்த்துதல்; to elevate, bring prosperity to. "ஒன்னார்த்தெறலு முவந்தாரை யாக்கலும்" (குறள், 264). 6. வளர்த்தல்; to rear, to bring up. பிள்ளையை ஆளாக்க வேண்டும். (உ.வ.) 7. பெருக்கிச் சொல்லுதல்; to exaggerate. ஒன்றை ஒன்பதாக்குவான், துரும்பைத் தூணாக்கலாமா? (உ.வ.). 8. பெருக்குதல்; to increase, multiply. தந்தை தந்த பத்தாயிரத்தைப் பத்திலக்கமாக்கினான். (உ.வ.). 9. மாற்றுதல்; to change, convert. "முல்லை யை மருதமாக்கி" (கம்பரா. ஆற். 17). 10. பெறுதல்; to receive. 11. உண்டாக்குதல்; to bring into being. "முயற்சி திருவினையாக்கும்". (குறள் 616.)

**ம.** ஆக்குக; **க.** ஆகிசு; **தெ.** காவின்சு.

*[ஆகு (த.வி.) → ஆக்கு (பி.வி.)]*

**ஆக்கு[2]** ākku பெ. (n.) நூறுபிடி நெல் நாற்று; one hundred sheaves of paddy - seedlings (சேரநா.)

*[ஆள் + கு – ஆள்க்கு → ஆக்கு (ஒராள் ஒரு நாளில் நடும் அளவு).]*

**ஆக்கு[3]** ākku, பெ. (n.) படைப்பு; creation. "ஆக்கு மழிவு மையனீ யென்பனான்" (தேவா. 914:7).

*[ஆகு → ஆக்கு (முத. தொ. பெ.).]*

**ஆக்கு[4]** ākku பெ. (n.) கிளிஞ்சில் வகையுள் ஒன்று. (நெ. மீ.); a kind of mussel or shell.

**ஆக்குத்தாய்** ākkuttāy, கு.வி.எ. (adv.) அன்முறை யாய் (அநீதியாய்); unjustly. ஆக்குத்தாய்ப்பிடித்துக் கொண்டார்கள். (வில்லி.).

*[ஒருகா. ஆக்குத்து + 'ஆய்' கு.வி. எ. ஈறு.]*

இருளர் என்னும் வில்லியர் கொடுந்தமிழ மரபின ரேயாதலின், 'ஆக்குத்து' என்னும் பெயர்ச்சொல் ஒரு தென் சொல்லின் திரிபாயேயிருத்தல் வேண்டும்.

**ஆக்குப்புரை** ākku-p-purai, பெ. (n.) மங்கல அமங்கலக் கொண்டாட்ட நாள்களில், அற்றைப் பொழுதிற்கு அமைத்துக் கொள்ளும் சமையற் கூடம் அல்லது மறைப்புப் பந்தலறை; covered place for cooking temporarily put up for special occasions both auspicious and inauspicious. 2. சமையற்கூடம், அட்டிலறை; kitchen.

*[ஆகு → ஆக்கு + புரை. புரை = துளை, அறை.]*

**ஆக்கும்** ākkum, இடை. (part.) 1. போலும்; presumably, probably, it is likely that. பெண் பார்க்க வந் தானாக்கும் (உ.வ.). 2. ஒருவனது திறமையை அல்லது முதன்மையை, அறிந்தவன் அறியாத வனுக்கு வியப்புற எடுத்துக் கூறுவதைக் குறிப்பிக்கும் இடைச்சொல்; particle emphasising the unknown might or importance of a person, relating in a tone of awe and wonder. அவனை யாரென்று நினைத்தாய்? தலைமை மந்திரியாரை ஆட்டி வைக்கும் அணுக்கச் செயலாளராக்கும். அவன் யார் தெரியுமா? ஆச்சாபுரக் காட்டில் ஐம்பத்திரு வேங்கையைக் கொன்றவனாக்கும். (உ. வ.).

*[ஆகு → ஆகும் → ஆக்கும்.]*

**ஆக்குருவி** ākkuruvi பெ. (n.) **ஆய்க்குருவி** பார்க்க; see **āy-k-kuruvi**

**ஆக்கெளுத்தி** ā-k-keḷutti, பெ. (n.) 1. **ஆக்கணாங் கெளிறு பார்க்க.**; see **ākkaṉāṉ Keḷiṟu** 2. கடற் கெளிற்று மீன்வகை; a marine fish, **plotosus arab..**


ஆக்கெளுத்தி மீன்

*[1. ஆக்கணாங் கெளுத்தி → ஆக்கெளுத்தி. 2. ஆ + கெளுத்தி. கெள் → கெளிறு → கெளிற்றி – கெளுத்தி. கெளிறு பார்க்க; see keliṟu]*

**ஆக்கை**[1] ākkai, பெ. (n.) 1. கூரை வேய்விற்கு உதவும் நார், கற்றாழை நார், நார்த்துணிக்கை; strips of fibre, used in thatching. "நரம்பாக்கை யார்த்து" (தேவா. 631:3). 2. உடம்பு; body. "ஆக்கை யுள்ளுறை யாவி" (சீவக. 1362).

ம. ஆக்க

*[யாத்தல் = கட்டுதல். யா → யாக்கை → ஆக்கை = 1. கட்டும் நார். 2. எழுவகைத் தாதுக்களாற் கட்டப்பட்ட உடம்பு. 'யாக்கை' பார்க்க.]*

**ஆக்கொத்துமம்** ā-k-kottumam, பெ. (n.) சரக் கொன்றை (மலை.); Indian laburnum.

*[ஒருகா. ஆரக்கொத்துமம். ஆரம் = மாலைபோல் தொங்கும் பூச்சரம். ஆரம் + கொத்து + மரம் = ஆரக் கொத்துமரம் → ஆரக்கொத்துமம் → ஆக்கொத்துமம். வ. ஆரக்வத (aragvadha). வடசொற்கு மூலமின்மை கவனிக்கத் தக்கது.]*

**ஆக்கொல்லி** ākkolli, பெ. (n.) தில்லைமரம் (மலை.); blinding tree.

ம. ஆக்கொல்லி

*[ஒருகா. ஆ + கொல்லி. கொல் → கொல்லி. 'இ' வினைமுதலீறு]*

**ஆக்கோது** ā-k-kōdu, பெ. (n.) கொன்றைமரம்; cassia tree (சா.அக.).

**ஆக** āga, வியங். மு. (opt.v.) வியங்கோள்வினை; v. in the optative mood. தமிழ் வாழ்வதாக, அவன் இங்கு வருவானாக. --- நி.கா.வி.எ. (inf.) 'ஆகு' என்னும் வினையின் நிகழ்கால எச்சம்; to become. இன்னும் சோறாகவில்லை, கம்பு பயிராக ஆறுமாதஞ் செல்லும் (உ. வ.) – வி.எ. (adv.) 1. அவ்வாறாக; in that fashion or manner. "ஆக ராகவனை யவ்வழிக் கண்டான்" (கம்பரா. இராவணன்றா. 19). 2. மொத்தமாய்; on the whole, amounting to. ஆகத்தொகை ஆயிரத்தைந்நூறு. (உ.வ.). 3. முழுதும்; wholly, completely. ஆகமோசம். (இ.வ.). இ. இடை. (conj.) 'அல்லது .... அல்லது' என்னும் வாய்பாட்டில் தெரிப்புப் பொருள் பற்றிவரும் இடைச்சொல்; either ..... or. 'தெய்வத் தானாக மக்களானாகத் தனக்கு வந்த துன்பங் களை' (குறள், 442, பரிமே. உரை). ---

இடை. (part.) 1. பொருட்டுப் பொருளில் 4ஆம் வேற்றுமையுருபுடன் வருந்துணைச்சொல்; for the sake of, for the purpose of. 2. பிறன்மொழிக் கூற்றை அல்லது அறிக்கைக் கூற்றைக் குறிக்கும் இடைச்சொல்; part. indicating indirect or reported speech. அவன் நாளை இங்கு வருவதாகச் சொன்னான். 3. அமையம் உணர்த்தும் இடைச்சொல்; part. indicating the context or circumstance in which an act takes place. "காரெதிர் கானம் பாடினேமாக" (புற நா. 144) – அசை நிலை (part.) ஓர் அசைச்சொல்; an expletive. 'அநாதி காலம் வாஸனை பண்ணிப் போந்தவற்றை இப்போதாக விடப்போமோ' (ஈடு, 1:2 : 2 உரை).

ம. ஆக

*[1. ஆகு → ஆக (ஆகு + அ). 'அ' வியங்கோள்வினை ஈறு . 2. ஆகு → ஆக (ஆகு + அ ). 'அ' முக்கால வினையெச்ச ஈறு. 'ஆக' என்னும் வினையெச்சமே பல்வேறு இடைச்சொல்லாகவும் பயன்படுத்தப்பட்டு வருகின்றது. இப்போதாக என்பது இப்போது மட்டும் என்று பொருள் படின் அசைச் சொல்லாகாது.]*

**ஆகக்கடைசி** āga-k-kḍaiši, பெ. (n.) இறுதியில், at-last; at length.

*[ஆக + கடைசி]*

**ஆகக்கூடி** āga-k-kūḍi, இ.இடை. (adv. conj.) 1. மொத்தத்தில்; on the whole, in the total, so that; ஆகக்கூடி, ஆயிரம் உருபாவிற்கு அடுத்துவிடும். 2. ஆகவே; that being the case, therefore. ஆகக்கூடி, நீ அங்குப் போயும் பயனில்லை.

*[ஆகு → ஆக. 'அ' முக்.வி.எ. ஈறு. கூடு → கூடி. 'இ' இ.கா.வி.எ.ஈறு. 'ஆகக்கூடி' என்பது கூட்டுச்சொல்.]*

**ஆகக்கொள்ள** āga-k-koḷḷa, இ. இடை (adv.conj.) ஆகையால்; because. நாளை அவன் வரு வானாகக் கொள்ள (W.).

*[ஆகு → ஆக. 'அ' முக்.வி.எ.ஈறு. கொள் → கொள்ள. 'அ' முக். வி.எ. ஈறு. 'ஆகக்கொள்ள' என்பது கூட்டுச்சொல்.]*

**ஆகச்செய்தே** āga-c-ceydē, இ.இடை. (adv.conj.) ஆகவே (ஈடு); that being the case.

*[ஆகு → ஆக. 'அ' முக்.வி.எ. ஈறு. செய் → செய்து (இ.கா.வி.எ.) + ஏ (தேற்றப் பொருளிடைச் சொல்). ஏகார இடைச் சொல் இங்குத் தன் பொருளை இழந்துள்ளது.]*

**ஆகச்சே**[1] āgaccē, இ.இடை. (adv.conj.) 'ஆகச் செய்தே' என்பதன் குறுக்கு வழக்குச் சொல்; corrupted form of 'āgaccydē'

*[ஆகச்செய்தே – ஆகச்சே (கொ. வ.)]*

**ஆகச்சே**[2] āgaccē, வி.எ. (adv.) 'ஆகையிலே' என்பதன் கொச்சை வடிவம்; while becoming, being prepared, being cooked. சோறு ஆகச்சே ஊர் அடங்கிவிட்டது. இக்கொச்சை வடிவம் கொள்ளத்தக்கதன்று.

*[ஆகையிலே → ஆகச்சிலே → ஆகச்சே. வரச்சே, போகச்சே என இவ்வடிவம் பிற வினைகளுடன் சேர்ந்து வழங்குதல் உண்டு.]*

**ஆகட்டு** āgaṭṭu, ஏ.வி. (imp.v.) 1. ஆகவிடு; (though) let it become, let it happen, let it be done. எப்படியிருந்தாலும் வேலை ஆகட்டு. 2. சரி அப்படி யாருக; all right, let it be, so be it.

**ம.** ஆகட்டெ

*[ஒட்டுதல் = இசைதல். ஒட்டு → அட்டு (துணைவினை). (ஆக + ஒட்டு) ஆகவொட்டு → ஆகட்டு (ஏவலொருமை)]*

**ஆகட்டும்** āgaṭṭum, ஏ.வி. (imp.v.) *1.* ஆகவிடும்; (you) let it become, let it happen, let it be done. 2. சரி, அப்படி யாருக; all right, let it be, so be it. (ஆகட்டும் போகட்டும் அவரைக்காய் காய்க் கட்டும், தம்பி பிறக்கட்டும் தம்பட்டங்காய் காய்க் கட்டும், அவனுக்குக் கலியாணம் ஆகட்டும், உன்னைக் கூப்பிடுகிறேனா பார்', 'ஆகட்டும் என்பவன்தான் அவதிப்பட வேண்டும்' (பழ.).

*[ஆக+ஒட்டும்→ ஆகவொட்டும் → ஆகட்டும். 'ஆகட்டு' என்பது நீ என்னும் முன்னிலையொருமை யெழுவாயின்பயனிலை;'ஆகட்டும்' என்பது நீம் அல்லது நீர் என்னும் முன்னிலைப் பன்மை யெழுவாயின் பயனிலை. 'உம்' ஏவற்பன்மையீறு.]*

ஆகட்டு என்னும் ஏவலின் ஒருமை யெண்ணும், ஆகட்டும் என்னும் ஏவலின் பன்மை யெண்ணும், இற்றை வழக்கில் மறைந்து போயின. அதனால், ஒருமையேவல் பெரும்பாலும் வழக்கற்ற தொடு, பன்மையேவலே ஒருமை யேவலாகவும் வழங்கி வருகின்றது.

அட்டு (ஒட்டு) என்னும் துணைவினையை 'let it be' என்னும் ஆங்கிலத் தொடரியத்திலுள்ள 'let' என்னும் ஏவல்வினையுடன் ஒப்பு நோக்குக.

**ஆகடியக்காரன்** āgaḍiya-k-kāraṉ பெ.(n.) எள்ளி நகையாடுபவன்; jester

*[ஆகடியம் + காரன்.]*

**ஆகடியம்** āgaḍiyam, பெ. (n.) 1. நகையாட்டு (பரி காசம்); mockery, ridicule, banter. ஆகடியம் பண்ணாதே. (உ.வ.) 2. பொல்லாங்கு; mischief, cruelty. "அஞ்சு பூதமுண்டாகடியக் காரரிவர்" (திருப்பு. 156).

**க.** ஆகட; **தெ.** ஆகடமு

*[அகடு = பொல்லாங்கு; wickedness. **தெ., க.** அகடு. அகடு → அகடியம் → ஆகடியம்.]*

**ஆகத்தையுருக்கி** āgattai-y-urukki, பெ. (n.) 1. எலும்பை யுருக்கி, எலும்பை நீராக மாற்ற வல்லதாகக் கருதப்படும் மருந்து; medicine supposed to change the bone into a liquid. (சா.அக.). 2. உடலை யுருக்கும் எலும்புருக்கி நோய்; disease, such as consumption, which emaciates the body.

*[ஆகம் = உடம்பு. 'ஆகத்தை' 2 ஆம் வேற்றுமை. 'அத்து' சாரியை; 'ஐ' 2 ஆம் வே. உ. உருக்கு → உருக்கி. 'இ' வினைமுதலீறு.]*

**ஆகதர்** āgadar, பெ. (n.) அருக சமயத்தோர்; Jains. "ஆகதர்க் கெளியே னலேன்" (தேவா. 258.2).

*[அருகர் → அருகதர் → ஆகதர்]*

**ஆகப்பாடு** āga-p-pāḍu, பெ. (n.) மொத்தம்; amount, sum total. உருபா (ரூபாய்) ஆகப்பாடென்ன? (நெல்லை.).

*[ஆகு → ஆக (முக்.வி.எ.). படு (துணைவினை) → பாடு (தொ.பெ.). படுதல் = தோன்றுதல், உண்டாதல், கூடுதல், மிகுதல், பெரிதாதல்.]*

**ஆகம்**[1] āgam, பெ. (n.) 1. உடல்; body. "ஆகம் வள்ளுகிராற் பிளந்தான்" (திவ். திருவாய். 9:3:7). 2. மார்பு; breast. "முலையாகம் பிரியாமை" (கலித்.2). 3. மனம்; mind, heart. "ஆகத்தெழு கனல் கண்வழியுக" (கம்பரா. கரன்வ. 97). 4. உள்மனம்; inner self. 5. ஒளி, ஒளிக்கற்றை; lustre, brilliance, splendour. (சேரநா.).

**ம.** ஆகம்

*[ஆகு → ஆகம் (ஆகுபெ.).]*

**ஆகம்**[2] āgam, பெ. (n.) 1. சுரை; bottle gourd (சா.அக.). 2. குப்பைமேனி; plant commonly growing on rubbish and used as an antidote to poisonous bites, **Acalyapha indica.**

**ம.** ஆகம்

*[சாகம் – ஆகம்]*

**ஆகம்**$^3$ āgam பெ. (n.) செவ்வை; correctness, fitness. அவன் ஆகமாய்ச் செய்வான் (நெ. வ.).

*[ஆக்கம் என்பதன் இடைக்குறை.]*

**ஆகரி**$^1$ āgari, பெ. (n.) 1. திப்பிலி (சங். அக.); long pepper, piper longum. 2. சிறு கட்டுக்கொடி (சித். அக.); a kind of medicinal creeper, **Smilax pseudo-china.** 3. கனிமப்பொருள்; mineral, metallic ore (சா.அக.).

*[ஆகரி = திப்பிலி. ஒ.நோ : ஆகசி.]*

**ஆகரி**$^2$ āgari, பெ. (n.) சிறப்பாக நள்ளிரவிற் பாடற் குரிய அவலப் பண்; special sorrowful melody-type, suitable for singing at midnight. 'மருதத்திற்குப் புறம் ஆகரி' (சிலப். 14:166, உரை). "யாமத் துரிமை யாகரி பாடலே" (தொன். விள. 173).

**ஆகரிநஞ்சு** āgari-nañju, பெ. (n.) கனிம நஞ்சு; mineral poison (சா.அக.).

**ஆகலாகல்** āgal-āgal, இடை. (part.) ஓசை வேறு பாட்டால் குறிப்பாக உடன்படாமைப் பொருளிலும், ஐயுறவுப் பொருளிலும் தனித்து வழங்காது இரட்டித்தே வரும் பிரிவிலசை நிலைகளுள் ஒன்று; expression invariably consisting of the pair of words either repudiating or doubting a statement.

"ஆக ஆகல் என்ப தென்னும்

ஆவயின் மூன்றும் பிரிவி லசைநிலை" (தொல். சொல். இடை. 32.).

'ஒருவன் யானின்னேன் என்றானும், நீயின்னை யென்றானும், அவனின்னன் என்றானும் கூறியவழிக் கேட்டான் ஆக ஆக, ஆகல் ஆகல் என்னும்; இவை உடன்படாமைக் கண்ணும் ஆதரமில்வழியும் வரும்' (தொல். சொல். 280, சேனா. உரை).

*[ஆகு → ஆகல் (தொ. பெ.). 'அல்' தொ.பெ. ஈறு. அசை நிலையாகும் போது 'ஆகல்' இடைச் சொல் லாம்.]*

'ஆகலாகல்' அடுக்குத்தொடர்.

ஆகல் ஆகல் என்பது வழக்காற்று வகையில் ஆம் ஆம், சரிசரி என்னும் உடன்பாட்டுச் சொல்லிணைகளை ஒக்கும்; ஆயின், ஒசை வேறுபாட்டால், உடன்படாமையையும் வெறுப் பையும் குறிப்பாக வுணர்த்தும்.

ஆகல் ஆகல் விரைந்தொலிப்பின் உடன்பாடாம். விட்டிசைத்து அழுத்தம் தந்து ஒலிப்பின் எதிர்மறையாம்.

**ஆகலியம்** āgaliyam, பெ. (n.) கோயில்களில் அமையும் மண்டப அமைப்புகளுள் ஒருவகை (மயமதம்); a kind of pavilion in a temple.

*[ஒருகா. அகலியம் – ஆகலியம்]*

**ஆகவம்** āgavam, பெ. (n.) போர்; battle, war. "ஆகவந் தன்னின் முந்த மனுகுலத் தரசன் பட்டான்" (பாரத. பதின்மூன். 97).

*[அகவுதல் = போருக்கழைத்தல். அகவு → ஆகவம் = அறைகூவிச் செய்யும் போர், போர். அகவு – ஆகவம் > வ. ஆஹவ.)]*

**ஆகவாக** āga-v-āga, இடை. (part.) ஆகலாகல் பார்க்க; see āgalāgal.

'ஆகலாகல்' என்பதற்குக் கூறிய விளக்கக் குறிப்புகளை இதற்குங் கொள்க.

*[ஆகு → ஆக (முக்.வி.எ.). 'ஆ' முக்.வி.எ.ஈறு. அசை நிலையாய் வரும்போது இவ்வினையெச்சம் இடைச் சொல்லாகும். 'ஆகவாக' அடுக்குத்தொடர்.]*

**குறிப்பு** :– இயல்பான ஒசையில் உடன்பாடு குறிக்குஞ் சொற்களெல்லாம், ஒசை வேறுபட்டே உடன்படாமை யுணர்த்தும்.

**ஆகவும்** āgavum, வியங்.வி. (v.in the opt. m.) ஆகுக; may it be. 'இத்தன்மம் முட்டில் ....... மன்றப் பெறுவதாகவும்'. (S.I.I. iii, 95)

*[ஆகு → ஆக (முக்.வி.எ.) → ஆகவும். 'உம்' ஒருவகை வியங்.வி. ஈறு.]*

'உம்' என்பது, மடல் போக்குவரத்தில், சிறப்பாக வணிகரிடை, ஒரு வியங்கோள் வினையீறாக வழங்குவது பெரும்பான்மை. எ–டு: நாளைக் காலை 10 மணிக்கு இங்கு வரவும். இக்கடிதம் கண்டவுடன் பட்டியலிற் கண்டபடி பத்தாயிரம் உருபா இதைக் கொண்டு வரும் ஆள்வயங் கொடுத்தனுப்பவும். இத்தகைய ஆட்சி முற்றும் உலகவழக்கே யன்றி, இலக்கணத்தொடு பொருந்துவதன்று. ஆதலால், இதை விட்டுவிட்டு வருக, அனுப்புக என்னும் 'செய்க' வாய்பாட்டு வியங்கோள் வினைகளை ஆள்வதே தக்கதாம்.

**ஆகவே** āgavē, இ.இடை. (conj.) ஆதலால்; wherefore, therefore, consequently. ஆகவே, நீங்களிருவீரும் நட்பமைதியாய்ப் (சமாதானமாய்ப்) போவதே நல்லது; ஆகவே, இதை உடனே நீக்காவிட்டாற் பெருந்துன்பமாக வந்துமுடியும். 2. முழுவதும், அனைத்தும்; entirely, completly altogether, wholly.

ம. ஆகவே

*[ஆகு → ஆக (முக்.வி.எ.) → ஆகவே. 'ஏ' தேற்றப் பொருளிடைச் சொல்; இங்குத் தன் பொருளை இழந்துள்ளது.]*

**ஆகளமாய்** āgaḷamāy, கு.வி.எ. (adv.) இடைவிடாது; without interruption. "அல்லும் எல்லும் அகலாது ஆகளமா யமர்ந்து நின்று" (பெரிய புராணசா. 20).

*[ஒருகா. களம் = இடம். அகளம் = இடமின்மை, இடையீடின்மை. அகளம் → ஆகளம்.]*

**ஆகளவாய்** āgaḷavāy, கு.வி.எ. (adv.) இருக்கும் அளவுக்கு (இராட்.); as much as is (R.).

*[ஆகு + அளவு + ஆய் (கு.வி.எ. ஈறு.)]*

**ஆகன்மாறு** āgaṉ-māṟu, இ.இடை. (adv.conj.) ஆகையால்; since, because, considering that. "பிறர்க்கென வாழ்திநீ யாகன் மாறே" (பதிற்றுப். 38:16).

"அன்னன் ஆகன் மாறே யிந்நிலம்
இலம்படு காலை யாயினும்
புலம்பல்போ யின்று பூத்தவென் கடும்பே" (புறநா. 380).

*[ஆகு → ஆகல் (தொ.பெ.). 'மாறு' ஏது அல்லது காரணப் பொருளில் வரும் இடைச்சொல்.]*

"அனையை யாகன் மாறே
தாயில் தூவாக் குழவி போல
ஓவாது கூஉநின் னுடற்றியோர் நாடே" (புறநா. 4)

என்பதன் உரையில், 'மாறென்பது ஏதுப்பொருள் படுவதோர் இடைச்சொல்' என்று பழையவுரையாளர் கூறியிருத்தல் காண்க.

**ஆகா**[1] āgā, இடை. (int.) 1. வியப்புக் குறிப்பு; exclamation expressive of wonder. ஆகா! என்ன அழகு இந்த மயில் நடம்! 2. கழிவிரக்கக் குறிப்பு; expressive of remorse or repentance for a wrong committed. ஆகா! என்ன மடத்தனம் செய்துவிட்டேன்! 3. உடன்பாட்டுக் குறிப்பு; expressive of assent. ஆகா! அப்படியே செய்வேன்.

*[ஆ + ஆ = ஆவா → ஆகா.]*

**ஆகா**[2] āgā, எ.ம.பெ.எ. (neg. rel. parti.) 1. ஆகுக என்பதன் எதிர்மறை வடிவம்; negative form of 'āguga' 2. நட்பல்லாத, பகையான; unfriendly, inimical. 3. மருத்துவ வுணவிற்கு மாறான; unsuitable for diet. ஆகாவுணவு. 4. உதவாத, பயனற்ற; unhelping, useless. 5. நில்லா; unstably 'பரியினுமாகாவாம் பாலல்ல' (குறள். 376.) 6. முடியாத; impossible, "உள்ளழிக் கலாகா அரண்" (குறள், 421.)

ம. ஆகா

*[ஆகு → ஆகாது → ஆகாத → ஆகா (ஈறுகெட்ட எ.ம.பெ.எ.)]*

**ஆகாக்கடுக்காய்** āgā-k-kaḍu-k-kāy, பெ. (n.) மருந்திற் சேர்க்க உதவாத கடுக்காய்கள். அவையாவன; இரட்டைக் காயுடையது, உடைந்தது, நீரில் வெந்தது, சுக்கான்கல் நிலத்திற் கிடந்தது, சேற்றில் விழுந்தது, நெருப்பிற் சுட்டது, முரடாயிருப்பது முதலியன; gall-nut considered unfit for use in medicines, i.e., rejected gall-nuts. They are double seeded galls, broken ones, boiled galls, those found on the limestone soil or fallen in the mire, the scorched and the hard ones, and so on. (சா. அக.).

*[ஆகு → ஆகாத → ஆகா + கடு + காய். கடு = கடுக்காய்]*

**ஆகாக்கலம்** āgā-k-kalam. பெ. (n.) குடிநீர்,எண்ணெய் முதலிய மருந்தினங்களைக் காய்ச்சுதற்கோ அவற்றை வைத்துப் புழங்குவதற்கோ பயன்படாத தொண்மாழையால் (நவ லோகத்தால்) செய்த கலம்; metallic vessels unfit to be used in the preparation of medicines such as lotions, ointments etc. or for keeping them in.

**ஆகாக்களங்கு** āgā-k-kaḷaṅgu, பெ. (n.) (மிருதாறு சிங்கி) 32 செய்நஞ்சுகளுள் (பாஷாணங்களுள்) ஒன்று; poison prepared from lead; Litharge-Plumbi oxidum, one of the 32 kinds of prepared arsenics. (சா.அக.).

*[ஆகாத → ஆகா + களங்கு.]*

**ஆகாத** āgāda, எ.ம.பெ. எ. (neg.rel. parti.) 1. கெட்ட; naughty, bad. கெட்ட பிள்ளை. "ஆகாத நாளையில் பிள்ளை பிறந்தால் அண்டை வீட்டுக்காரனை என்ன செய்யும்" (பழ.) 2. ஒன்றுக்கும் உதவாத; useless. "ஆகாத காரியத்துக்குப் போகாதே" (பழ.) 3. முடியாத, இயலாத; impossible, impracticable, unattainable. 4. ஏற்புடையதாகாத; unfit, unsuitable. 5. வலுவில்லாத; weak, delicate.

ம. ஆகாத.

*[ஆகு → ஆகரிது → ஆகாது → ஆகாத (எதிர்மறைப் பெயரெச்சம். 'ஆ' பெ. எ. ஈறு)]*

**ஆகாத கடுக்காய்** āgāda kaḍukkāy, பெ. (n.) **ஆகாக் கடுக்காய்** பார்க்க; āgā-k-kaḍukkāy.

**ஆகாதது** āgādadu, பெ. (n.) 1. முடியாதது; that which is impossible. 2. ஏற்புடைத்தாகாதது; that which is prohibited, unfit or improper.

**ஆகாதவன்** āgādavan, பெ. (n.) 1. பகைவன்; one who is not friendly, enemy. "ஆகாதவன் குடியை அடுத்துக் கெடுக்க வேண்டும்' (பழ.). 2. பயனற்றவன்; useless person. அவன் காற் காசுக்கும் ஆகாதவன் (உ.வ.). 3. தீயோன் (கிறித்.); wicked man (Chr.)

**பட.** ஆகாதம.

*[ஆகு – ஆகாத + அவன்.]*

**ஆகாதே** āgādē, எ.ம.வி. (neg.v.) 1. (அது) கூடாதே; it should not be indeed; it should not be done indeed. 2. (அது) கேடானதே; it is harmful or dangerous. indeed 3. (அது) பயனற்றதே; it is useless indeed 4. (அது) நிகழாதே; it would not happen indeed எ.ம.வி.எ. (neg. v. parti.) 1. நிகழாமலே; without happening indeed. அது ஆகாதே போய்விட்டது. 2. உதவாமலே; without being fruitful or helpful. அது ஆகாதே போய்விட்டது.

– இடை. (int.) அன்றோ? அல்லவா?; is it not so, shall it not be. "அவன் கழல்கண்டு களிப்பன வாகாதே" (திருவாச. 49:1).

*[ஆகு → ஆகரிது → ஆகாது + ஏ (தேற்றேகாரம்).]*

**ஆகாப்பழம்** āgā-p-palam, பெ. (n.) வேப்பம் பழம்; margosa fruit, as unfit for human consumption.

*[ஆகு + அரு – ஆகரு → ஆகா. பழு → பழம்.]*

**ஆகாப்பெற்றம்** (ஆகாப்பசு) āgā-p-perram, பெ. (n.) குடிப்பதற்குத் தகாத பாலையுடைய ஆ; cow yielding milk unfit for consumption.

ஆகாப் பெற்றத்தின் ஐவகைகள் :

1. அரணைநோய்ப் பெற்றம்; cow suffering from disease.
2. தாராநோய்ப் பெற்றம்; cow suffering from 'Tārā' disease.
3. வெண்புள்ளிப் பெற்றம்; white spotted or white patched cow.
4. மலந்தின்னிப் பெற்றம்; filth-eating cow.
5. இடுகாட் டெலும்புண்ணிப் பெற்றம்; cow taken to bones found in the grave yard (சா.அக.).

**ஆகாப்போன்** ā-gāppōn, பெ. (n.). ஆயன், ஆநிரை களைக் காப்பவன்; cowherd.

"ஆகாத் தோம்பி ஆப்பயன் அளிக்கும்
கோவலர் வாழ்க்கையோர் கொடும்பா டில்லை" (சிலப். அடைக். 120.)

*[ஆ + காப்போன்.]*

**ஆகாரம்** āgāram, பெ. (n.) ஆ என்னும் நெடில்; first long vowel of the Tamil alphabet.

*[ஆ + காரம்.]*

**ஆகாறு** āgāru, பெ. (n.) வரும்வழி, வருவாய்; means of income. "ஆகா றளவிட்டி தாயினும்" (குறள். 478.).

**ஆகிடந்து** āgidandu, இடை. (part.) (இலக்.) நிகழ்கால இடைநிலைகளுள் ஒன்று; (Gram.) sign of the present tense. உண்ணாகிடந்தான் = உண்கின்றான்.

'இனி, உரையிற் கோடலால் உண்ணாகிடந்தான், உண்ணாவிருந்தான் என ஆகிடந்து, ஆவிருந்து என்பனவும் ........நிகழ்காலங் காட்டுமெனவுங்கொள்க' (நன். 143, இராமா. உரை).

*[செய்யாக் (செய்து) கிடந்தான் என்னும் வினையெச்சத் தொடர்ச்சொல்லையே பிற்காலத்தார் ஒரு சொல்லாகக் கொண்டு, 'ஆ' என்னும் நிலைச் சொல்லீற்றையும் 'கிடந்து' என்னும் வருஞ்சொல் முதலையும் ஒன்றாயிணைத்து ஒரு நிகழ்கால விடைநிலையாகக் கூறிவிட்டனர் போலும்! 'ஆநின்று', 'ஆவிருந்து', பார்க்க; see āvirundu.]*

**ஆகிய** āgiya, இ.கா.பெ.எ. (p.rel.parti.) உண்டான, செய்யப்பட்ட; made of. எ-டு: மண்ணால் ஆகிய குடம். – இடை. (part.) இருபெயரொட்டுப் பண்புத்தொகை யுருபு; particle connecting two nouns in apposition. எ-டு : பாண்டியனாகிய வேந்தன், காவிரியாகிய ஆறு. 2. வியங்கோள் வினைமுற்று; optative fin. verb.

*[ஆகு (வி.மு.) 'இ' (இ.கா.வி.எ.உருபு) 'அ' (பெ.எ.உருபு). அ³ பார்க்க. see a³.]*

**ஆகிரி** āgiri பெ. (n.) ஆகரி பார்க்க; see āgari.

*[ஆவரி – ஆகரி → ஆகிரி → வ. ஆஹிரி. (பரத. இராக. 75) ஆகரி என்பதே திருந்திய அல்லது மூல வடிவமாயின், அது தமிழிசை நூலின் முன்மையையும். ஆரிய இசைநூலின் பின்மையையும் காட்டும். ஆவரி = கற்றுதல், புலம்புதல், பெரிதும் வருந்துதல். ஆகரி = நள்ளிரவுப் பண்.]*

**ஆகிரிநாட்டை** āgiri-naṭṭai, பெ. (n.) பண்வகை (பரத. ராக. 102); a melody-type.

*[ஆகிரி + நாட்டை.]*

**ஆகிவா (வரு)-தல்** āgivā(varu)-, 18 செ.கு.வி. (v.i.) நன்றாகக் கூடி வருதல். (நெல்லை.); have auspicious progress (Tn.); to come to fruition in the desired way.

**ஆகு** பார்க்க. see āgu

**ஆகு-தல்** āgu-, 7. செ.கு .வி. (v.i.) 1. உண்டாதல்; **to become, come to have.** உடம்பெல்லாம் புண்ணாகி விட்டது. 2. அமைதல்; to be. கம்பலை என்னுஞ் சொல்லிற்கு அழுகையரவம் என்பது பொருளாகும். 3. நிகழ்தல்; to happen, occur. உங்கள் மகனுக்குத் திருமணம் எப்போது ஆகும்? 'இன்றைக்கு ஆகிறதுநாளைக்கு ஆகட்டும்' (உ.வ.). 4. வளர்தல்; to grow. நெல் பயிராகிவிட்டது, பையன் ஆளாகி விட்டான். 5. ஆக்கமுறுதல்; to prosper, flourish.. 'ஆகிறதும் பெண்ணாலே அழிகிறதும் பெண்ணாலே.' 6. ஒன்று இன்னொன்றாதல்; transformation of one thing into another. இவ்விருபதாம் நுற்றாண்டிற் காடெல்லாம் நாடாகிவிட்டது. 7. மாறுதல் ; to become, get changed. கரும்பு காசாக வேண்டும். 8. சமைதல்; to be cooked. சோறு ஆகிறது. 9. ஒப்பாதல்; to be equal. 'உயரவுயரப் பறந்தாலும் ஊர்க்குருவி பருந்தாகுமா'? 'கடிவாளமும் சேணமும் இட்டாலும் கழுதை குதிரையாகுமா?' (பழ.). 10. இழிதல்; to diminish in value, depreciate. 'புலிக்குப் பிறந்தது பூனையாகுமா'? (பழ.). 11. உயர்தல்; to appreciate, rise in value. இரண்டாம் உலகப் போரில் இரும்பெல்லாம் பொன்னாகி விட்டது. (உ.வ.). 12. இணக்கமாதல்; to be intimate, close. அன்பில்லாவிடத்து அண்ணனுக்கும் தம்பிக்கும் ஆகுமா? 13. உதவுதல்; to be of use. அவன் ஒன்றுக்கும் ஆகாதவன். (உ. வ.). 14. அடுத்தல், தகுதல்; to befit someone, something. அமைச்சனா யிருந்து கொண்டு இப்படிச் செய்வது உனக்கு ஆகுமா? (உ.வ.) 15. முதிர்தல்; to ripen. காய் பழமாகி விட்டது. (உ.வ.). 16. செய்ய முடிதல்; to be possible. 'உலக முழுதுங் கட்டியாண்டாலும் ஊழிற்குத் தப்ப எவராலாகும்?' (உ.வ.). 17. வினை முடிதல்; (work) to be done or accomplished. இன்று காலை வழிபாடு ஆகிவிட்டது. 18. செய்ய விலக்குண்டிருத்தல்; to be excepted. 'தாயைப் பழித்தாலும் தண்ணீரைப் பழித்தலாகுமா'? 'தண்ணீரைப் பழித்தாலுந் தமிழைப் பழித்த லாகாது'. (பழ.). 19. செலவாதல்; to be expended, to cost. ஒரு வீடு கட்ட எவ்வளவு ஆகும்?

**ம., க.** ஆகு; **தெ.** ஆகு, ஆவு; **குட.** ஆக், ஆவு **து.** ஆகு; ஆபி **கோத.** ஆக்; **துட.** ஓங்; **கூ.** ஆவ; **குவி.** ஆய்யலி, ஆனை; **நா.** அண்டு; **கொலா.** அன்; **பிரா.** ஆன், அன்னிங்.

**ஒ.நோ:** L. augere, to increase. இதில் **auge** என்பதே வினைமுதனிலை; 're' என்பது நிகழ்கால வினையெச்ச (Infinitive) ஈறு..

**E. augment** v.t. and i, make or become greater, increase.

**ME. f. F. augmenter f. LL. augmentare,** increase f. **L. augmentum.**

**E. augmentation** n. enlargement, growth, increase.

**E. augmentative** n. having the property of increasing;

[Gram. of affix or derived word) increasing in force the idea of the original word (f. F. augmentalif or med. L. augmentativus.]

ஆ, ஆகு என்னும் இரு முதனிலை வடிவுகளுள் எது முந்தியது என்பது பற்றி, இலக்கண ஆசிரியர்க்கு ஆராய்ச்சி பிறந்து இதுவரை ஒரு முடிவிற்கும் வராதிருக்கின்றது. ஆ, ஆகு என்பன போன்றனவே போ, போகு என்பனவும்.

"நச்சினார்க்கினியர் நன்னூலார் முதலாயினார் இயற்கை முதனிலை ஆ, போ என்றே இருக்குமென்றார். திருவள்ளுவர், பரிமேலழகர் முதலாயினார் இயற்கை முதனிலை ஆகு, போகு என்றே யிருக்கு மென்றார்." என்பது சுவாமிநாத தேசிகரின் இலக்கணக் கொத்து உரைக் குறிப்பு (86, உரை).

போ என்பதன் ஈறுமிகையே போகு என்பது. புகு → போ → போகு → போது. இங்ஙனமே ஆ என்பதன் ஈறுமிகையாகவே ஆகு என்பதும் இருத்தல் வேண்டும். இது அவற்றின் புடைபெயர்ச்சியால் வலியுறுத்தப்படும்.

**ஆ, ஆகு என்னும் வினைமுதனிலைகளின் புடைபெயர்ச்சி**

| முதனிலை | முக்கால வினையெச்சம் | முக்காலப் பெயரெச்சம் | முக்கால வினைமுற்று |
|---|---|---|---|
| 1. ஆ | (ஆயி) - ஆய் | ஆயிய - ஆயின<br>ஆய - ஆன | ஆயியான் -<br>ஆயினான் |
| | (ஆவ) - ஆக | ஆகின்ற -<br>ஆகிற | ஆயான் -<br>ஆனான் |
| | ஆயின் | (ஆவும்) -<br>ஆம் | ஆகின்றான் -<br>ஆகிறான்,<br>ஆவான் |

| | | | |
|---|---|---|---|
| 2. ஆகு | ஆகி | ஆகிய | ஆகியான்–ஆகினான் |
| | ஆக | ஆகுகின்ற–ஆகுகிற | ஆகுகின்றான்–ஆகுகிறான் |
| | ஆகின் | ஆகும்–ஆம் | ஆகுவான் |

குறிப்பு:–

1. 'ஆவ' என்பதே 'ஆ' என்னும் முதனிலையினின்று திரிந்த இயற்கையான நி.கா.வி.எ. வடிவம். அதுபின் வ–க போலியால் 'ஆக' என்று திரிந்தது. ஒ.நோ: சா →சாவ →சாக. "சாவ என்னும் செயவென் எச்சத்து" (தொல். எழுத்து. உயிர். 210).
2. 'சாக' என்னும் நி.கா.வி.எ. போலி வடிவினின்றே 'சாகு' என்னும் ஏவலொருமை தோன்றியிருத்தல் போல், 'ஆக' என்னும் நி.கா.வி.எ. போலி வடிவினின்றே 'ஆகு' என்னும் ஏவலொருமையும் தோன்றியிருக்கலாம்.
3. 'ஆகு' என்னும் முதனிலையினின்று திரிந்த வினைமுற்று வடிவங்கள், சற்றுச் செயற்கையாகவும் செய்யுட்கே ஏற்றும் இருத்தலால், 'ஆ' என்னும் முதனிலையே இயற்கையானதா யிருத்தல் வேண்டும்.

*[அகைதல் = தளிர்த்தல், செழித்தல். ஆதல் என்னும் சொல்லிற்கு உண்டாதல், வளர்ச்சியடைதல் என்பனவே அடிப்படைப் பொருள்கள் அகு → அகை. ஒ.நோ: முகு→முகை. அகு என்னும் குறிவினைச் சொல் 'அ' என மருவுவது இயல்பே. ஒ.நோ; பகு–பா. ஆதலால், அகு → ஆ →ஆகு எனத் திரிந்திருத்தல் வேண்டும்.*

*அகு → அகை என்னும் திரிவை, நுகு →நுகும்பு, புகு→(புகில்)→பொகில்→போகில், முகு→முகம், முகிழ் என்னுந் திரிவுகளும் வலியுறுத்தும்.]*

**ஆகுபெயர்** āgu–peyar, பெ. (n.) (இலக்.) ஒரு பொருளின் பெயர் அதனொடு தொடர்புள்ள மற்றொன்றிற்கும் தொன்றுதொட்டு அல்லது நீண்ட காலமாகப் பெயராகி வருவது; (gram.rhet.) metonymy and synecdoche. A name or word, which by long usage is secondarily applied to denote something connected with the thing originally denoted by it.

**ஆகுபெயர் பல வகைப்படும். அவையாவன:–**

| எண் | பெயர் | எடுத்துக்காட்டு |
|---|---|---|
| 1. | பொருளாகுபெயர் அல்லது முதலாகு பெயர் | தாமரை முகம் |
| 2. | இடவாகு பெயர் | ஊர் அடங்கிற்று, தமிழ்நாடு வென்றது. |
| 3. | காலவாகு பெயர் | கோடை விளைந்தது. |
| 4. | சினையாகு பெயர் | தலைக்கு ஒரு பணம் கிடைத்தது. |
| 5. | பண்பாகு பெயர் அல்லது குணவாகு பெயர் | நீலம் சூட்டினாள். |
| 6. | தொழிலாகு பெயர் | சுண்டல் தின்றான். |
| 7. | அளவையாகு பெயர் : | |
| | எண்ணலளவையாகு பெயர் | **நாலும் இரண்டும்** சொல்லுக் குறுதி.. |
| | எடுத்தலளவையாகு பெயர் | ஒரு எடை நிறு. |
| | முகத்தலளவையாகு பெயர் | உண்பது நாழி. |
| | நீட்டலளவையாகு பெயர் | உடுப்பது நான்கு **முழம்** |
| 8. | சொல்லாகு பெயர் | அடியார்க்கு நல்லாருரை சிறந்தது. |
| 9. | இடவனாகு பெயர் | கழல் பணிந்தான் |
| 10. | கருவியாகு பெயர் | இதன் விலை மூன்று **வெள்ளி.** |
| 11. | கருமவாகு பெயர் | வெண்கல **வட்டில்** |
| 12. | வினைமுதலாகு பெயர் | **திருவள்ளுவரைத்** திரும்பத் திரும்பக் கற்க வேண்டும். |
| 13. | உவமையாகு பெயர் | மூத்தது **மோழை,** இளையது **காளை.** |
| 14. | பண்பியாகு பெயர் | சாம்பல் **வாழை,** கயற்கொடி. |

முதலாகு பெயர் என்பது சினையாகு பெயர்க்கும், இடவாகு பெயர் என்பது இடவனாகு பெயர்க்கும், பண்பாகு பெயர் என்பது பண்பியாகு பெயர்க்கும், கருவியாகு பெயர் என்பது கருமவாகு பெயர்க்கும் நேர் எதிராகும்.

இடவனாகு பெயரைத் தானியாகு பெயர் என்றும், கருமவாகுபெயரைக் காரியவாகுபெயர் என்றும், வினைமுதலாகு பெயரைக் கருத்தா வாகுபெயர் என்றும் வடசொல்லாற் குறிப்பர்.

பண்பியாகு பெயர் என்பது, ஒரு பண்பையுடைய பொருளின் பெயர் அப்பண்பிற்கு ஆகிவருவது.

சில ஆகுபெயர்கள், என்றும் அடையும் அடைகொளியுமாக இரு சொல்லாகவேயிருக்கும். அவை அடையடுத்த ஆகுபெயர்

எனப்படும். எ-டு: வெற்றிலை நட்டான், மருக்கொழுந்து சூடினாள். இவற்றைத் தொல்காப்பியர் இருபெயரொட் டாகுபெயர் என்பர்.

சில ஆகுபெயர்கள், ஒரு முறை மட்டுமன்றிப் பன்முறையும் தொடர்ந்து வெவ்வேறு பொருளுக்காகியிருக்கும். அவை, ஆகிவந்த முறைத் தொகையின்படி, இருமடியாகு பெயர், மும்மடியாகு பெயர், நான்மடியாகு பெயர் எனப் பெயர் பெறும்.

எ-டு: புதிதாய் வந்தவர்க்கு விரும்பியளிக்கப்படும் சிறப்புணவாகிய விருந்தின் பெயர், முதற்கண் விருந்தினர்க்கும் பின்னர்ப் புதுமைக்கும் ஆகி வந்தது இருமடியாகு பெயர். கார் என்னும் கருமைப்பெயர், முகிலுக்கும் மழைக்கும் மழைக்காலப் பயிருக்கும் ஆகிவரின் மும்மடி யாகுபெயர். தோகை என்பது, தொங்கும் பெரும்பயிர்த் தாளுக்கும், மயிற்றோகைக்கும் மயிலுக்கும் பெண்ணுக்கும் ஆகிவரின் நான்மடியாகு பெயர்.

தொல்காப்பியர், ஆகுபெயர்வகைகளைப் பற்றி வேற்றுமை மயங்கியலில்,

"முதலிற் கூறும் சினையறி கிளவியும்
சினையிற் கூறும் முதலறி கிளவியும்
பிறந்தவழிக் கூறலும் பண்புகொள் பெயரும்
இயன்றது மொழிதலும் இருபெய ரொட்டும்
வினைமுத லுரைக்குங் கிளவியொடு தொகைஇ
அனைமர பினவே ஆகுபெயர்க் கிளவி"
(தொல்.சொல். 110)

"அவைதாம்,
தத்தம் பொருள்வயின் தம்மொடு சிவணலும்
ஒப்பில் வழியான் பிறிதுபொருள் சுட்டலும்
அப்பண் பினவே நுவலுங் காலை"
(தொல். சொல். 111)

"வேற்றுமை மருங்கிற் போற்றல் வேண்டும்".
(தொல். சொல். 112)

"அளவும் நிறையும் அவற்றொடு கொள்வழி
உளவென மொழிப உணர்ந்திசி னோரே"
(தொல். சொல். 113)

"கிளந்த அல்ல வேறுபிற தோன்றினும்
கிளந்தவற் றியலான் உணர்ந்தனர் கொளலே."
(தொல். சொல். 114)

என்று கூறினார். அவற்றுள், தற்கிழமையாக வருவதைத் தம்மொடு சிவணல் என்றும், பிறிதின் கிழமையாக வருவதைப் பிறிது பொருள் சுட்டல் என்றும், பிரித்துக் கூறினார். அவற்றைச் சிவஞானமுனிவர், முறையே, விடாத வாகுபெயர், விட்ட வாகுபெயர் என்றார். தெங்கு தின்றான், குழிப்பாடி நேரிது என்பன அவற்றிற்கு எடுத்துக்காட்டாம். குழிப்பாடி என்பது அப்பெயர் கொண்டவூரில் நெய்யப்பட்ட ஆடை. விட்டவாகு பெயர் விடாதவாகு பெயர் என்னும் பாகுபாட்டைத் தழுவியே, பிற்கால மேலை யணிநூலார் metonymy, synecdoche என்று அணிப்பெயர் இட்டிருப்பது கவனிக்கத் தக்கது.

தொல்காப்பியர் கூறியவற்றையே,

"பொருள்முத லாறோ டளவைசொல் தானி
கருவி காரியங் கருத்த னாதியுள்
ஒன்றன் பெயரான் அதற்கியை பிறிதைத்
தொன்முறை யுரைப்பன வாகு பெயரே." (290)

என்று நன்னூலார் தொகுத்துஞ் சுருக்கியும் கூறினார்.

*[ஆ → ஆகு + பெயர் = ஆகுபெயர் (வினைத் தொகை).]*

**ஆகும்கலம்** āgum-kalam, பெ. (n.) 1. குடிநீர், மருந் தெண்ணெய், நெய் முதலியவற்றைக் காய்ச்சுவதற் காகப் பயன்படுத்தும் மட்பாண்டம்; earthen vessel used for preparing lotions, medicated oils, ghee etc. 2. காந்தக்கிண்ணி; bowl made of magnet. (சா.அக.).

*[ஆகு → ஆகும் (முக். பெ. எ.).]*

**ஆகுருவி** ākuruvi, பெ. (n.) **ஆய்குருவி** பார்க்க; see āikuruvi.

**ஆகுலி** āguli, பெ. (n.) 1. சிற்றரத்தை (தைலவ தைல. 119); bazaar drug called smaller or lesser galangal. 2. ஆவிரைப் பொது; senna shrub in general. (சா.அக.).

ம. ஆகுலி

**ஆகுளி** āguli, பெ. (n.) ஒருவகைச் சிறுபறை; a kind of small drum. "நுண்ணீ ராகுளி யிரட்ட" (மதுரைக். 606).

ம. ஆகுளி

ஆகுளி என்பது ஒருகால் குடுகுடுப்பையா யிருக்கலாம்.

**ஆகூழ்** āgūḻ, பெ. (n) ஆக்கத்திற்குக் காரணமான நல்வினைப் பயன் அல்லது தெய்வ ஏற்பாடு; destiny or providence that causes prosperity. "ஆகூழாற் றோன்று மசைவின்மை" (குறள், 371).

*[ஆகு+ஊழ்=ஆகூழ் (வி.தொ.).]*

**ஆகைச்சுட்டி** āgai-c-cutti, இ. இடை. (conj.) ஆகை யால் (ஈடு, 7:10:8); therefore.

ஆகு→ஆகை (தொ.பெ.). 'ஐ' தொ.பெ.ஈறு. இனி, ஆ + கை – ஆகை என்றுமாம். 'கை' தொ.பெ.ஈறு. சுட்டு → சுட்டி (இ.கா.வி.எ.). 'இ' இ.கா.வி.எ.ஈறு.

ஆகைச்சுட்டி என்னுந் தொடர்ச்சொல் ஆகையால் என்று பொருள் கொண்டு ஒருசொற்றன்மைப்பட்டு இடைச் சொல்லாயிற்று.

**ஆகையால்** āgaiyāl, இ. இடை. (conj.) ஆதலால்; therefore. இங்கே புகை யெழுகிறது; ஆகையால்

நெருப்பிருத்தல் வேண்டும். "ஆகையா லகிலமெல்லா மவனென்கை தெரிந்த தன்றே" (கந்தபு. மேரு. 26).

ம. ஆகயால்; க. ஆதுதரிந்த; பட. அதெந்த

*[ஆகை + ஆல். 'ஆல்' ஏதுப்பொருள்படும் 3ஆம் வேற்றுமையுருபு 'ஆகை' என்பதற்கு, முந்தின சொல்லின்கீழ் உரைத்த குறிப்பை இங்கும் கொள்க.]*

**ஆகையினால்** āgaiyiṉāl, இ.இடை. (conj.) **ஆகையால்** பார்க்க; see āgaiyāl

ம. ஆகயினால்

**ஆகோசனம்** ākōšaṉam, பெ. (n.) கோவுரசனம்; bezoar. "ஆகின்ற கற்பூர மாகோசனம்" (திருமந். 1368).

கோ = ஆ (பசு). உரசு + அனம் = உரசனம். உரசு + அனை = உரசனை. மாத்திரையும் மருந்துக்கட்டியும் உரசி நோயாளிக்குக் கொடுக்கப்படுவதனால் ஆவயிற்றி லிருந்து எடுக்கப்படும் மஞ்சள் மருந்துக்கட்டி கோவுரசனம் அல்லது கோவுரசனை எனப்பட்டது.

கோவுரசனம் → கோரோசனம். கோவுரசனை → கோரோசனை. கோரோசனம்→கோராசனம். இதில் கோ என்னும் சொற்பொருள் மறைந்துவிட்டதனால், மீண்டும் ஆ என்னும் அதே பொருட்சொல் முன்சேர்த்து ஆகோசனம் என்று சொல்லப் பட்டது. அரைஞாண் என்பதில் ஞாண் என்னும் சொற்பொருள் மறைந்தபின், கயிறு என்னும் அதன் மறுபெயர் சேர்த்து அரைஞாண் கயிறு என்று வழங்குவதை நோக்குக.

'கோ' தென்சொல்லே என்பதைக் கோ என்னும் சொல்லின் கீழ்க் காண்க.

ருச் (ruc) என்னும் வேரினின்று திரிந்து விளங்குவது (பிரகாசிப்பது) என்று பொருள்படும் ரோசன (rocana) என்னும் வடசொல்லை உரசனம் (உரசனை) என்னும் தென்சொல்லிற்கு மூலமாகக் காட்டுவது பொருந்தாது.

**ஆகோள்** ā-kōḷ, பெ. (n.) (இலக்.புறப்.) போரைக் கருதிய வேந்தன் ஏவிய வெட்சிமறவர் பகையரசனின் நாட்டிலுள்ள ஆநிரைகளைக் களவிற் கவர்தல்; (gram. puṟap.) theme of seizing the foe's cattle (herds of cows), as a prelude to or declaration of war.

"அகத்திணை மருங்கின் அரில்தப வுணர்ந்தோர்
புறத்திணை யிலக்கணம் திறப்படக் கிளப்பின்
வெட்சி தானே குறிஞ்சியது புறனே
உட்குவரத் தோன்றும் ஈரேழ் துறைத்தே"
(தொல். பொருள். 59)

"வேந்துவிடு முனைஞர் வேற்றுப்புலக் களவின்
ஆதந் தோம்பல் மேவற் றாகும்."
(தொல்.பொருள். 60)

"வென்றார்த்து விறன் மறவர்
கன்றோடும் ஆதழீஇ யன்று"
(புறப்.வெட்சி 8)

*[அகம் என்னும் காதலல்லாத புறப்பொருளாகிய அரசியற் போர்வினைபற்றிய ஏழு திணைகளுள் முதலதான ஆநிரை கவர்தலும் மீட்டலுமாகிய இருபகுதிப்பட்ட வெட்சியின் முற்பகுதியைச் சேர்ந்த 14 துறைகளுள் ஏழாவது ஆகோள் என்பது. ஆ = பசு. கோள் = கொள்கை, கவர்கை. 'ஆ' தென்சொல்; 'பசு' வடசொல். கொள் → கோள் (மு.தி.தொ. பெ.). இங்குக் கூறிய போர்ச் செய்தி பண்டைத் தமிழ்வேந்தர் வழக்கு.]*

**ஆங்க** āṅga, இடை. (part.) 1. அவ்வாறு, அதுபோல என்று பொருள்பட்டு வினைச்சொல்லோடு கூடி வரும் உவமவுருபு; sign of comparison generally used with verbs. "கயநா டியானையின் முகன மாந்தாங்கு" (தொல். பொருள். உவம. 11. உரை). 2. அவ்வாறு என்னும் பொருளை யிழந்து பெரும் பாலும் அசைநிலையாய் நிற்கும் உரையசைச் சொல்; sign of comparison which has lost much of its signification and is almost an expletive. 'ஆங்கக் குயிலுமயிலுங் காட்டி' (தொல். சொல். 272, உரை.).

"அன்ன ஆங்க மான இறப்ப
என்ன உறழத் தகைய நோக்கொடு
கண்ணிய வெட்டும் வினைப்பா லுவமம்"
(தொல். பொருள். 283)

"ஆங்க வுரையசை" (தொல். சொல். இடை. 29.)

*[ஆ (சேய்மைச் சுட்டு) → ஆங்கு + அ (ஈறு.) ஆங்க (உவமவுருபு).]*

**ஆங்கண்** āṅgaṇ, கு.வி.எ. (adv.) அவ்விடத்து; in that place. "கடுந்தேர் குழித்த ஞெள்ள லாங்கண்" (புறநா. 15).

*[ஆ (சே.சு) → ஆங்கு + அண் = ஆங்கண். 'அண்' ஓர் இடப்பொருளீறு. ஒ.நோ: அவண், இவண், உவண், எவண்.]*

இனி நச்சினார்க்கினியர் தம் தொல்காப்பிய வுரையில்,

"வல்லெழுத்து முதலிய வேற்றுமை யுருபிற்
கொல்வழி யொற்றிடை மிகுதல் வேண்டும்"
என்னும் புணரியல் நூற்பாவின் (12) கீழ்,

'தங்கண், நங்கண், நுங்கண், எங்கண் என மெல்லொற்று மிக்கது. இவற்றிற்கு நிலைமொழி மகரக்கேடு உருபியலிற் கூறுப. ஆங்கண் ஈங்கண் ஊங்கண் என்பன சுட்டெழுத்து நீண்டு நின்றன. இவற்றிற்கு ஒற்றுக்கேடு கூறுதற்கு ஒற்றின்று.' என்றும்,

"நும்மெ னிறுதி யியற்கை யாகும்" (தொல். எழுத்து. 188) என்னும் உருபியல் நூற்பாவின் கீழ், நும்மை, நும்மொடு, நுமக்கு, நும்மின், நுமது, நுங்கண் என வரும் என்றும் "நுங்க

ணென்பதற்கு, மேலைச்சூத்திரத்து 'மெய்' என்றதனான் மகரவொற்றுக் கெடுத்து, 'வல்லெழுத்து முதலிய' என்பதனான் மெல்லொற்றுக் கொடுக்க என்றும்,

"தாம்நா மென்னு மகர விறுதியும்
யாமெ னிறுதியு மதனோ ரன்ன
ஆஎ ஆகும் யாமெ னிறுதி
ஆவயின் யகரமெய் கெடுதல் வேண்டும்
ஏனை யிரண்டு நெடுமுதல் குறுகும்" (தொல். எழுத்து. 189).

என்னும் உருபியல் நூற்பாவின்கீழ்,

மெய்யென்றதனாற் பிறவயின் மெய்யுங் கெடுக்க. தங்கண் நங்கண் எங்கண் என ஏழனுருபின்கண் மகரங் கெடுத்து, 'வல்லெழுத்து முதலிய' (எழுத்.114) என்பதனான், மெல்லெழுத்துக் கொடுக்க என்றும், உரைத்தார். அவர் கருத்துப்படி,

தம் + கண்→ த + கண் → தங்கண், ஆ + கண் = ஆங்கண் என்று புணர்ந்திருக்க வேண்டும். அங்ஙனம் புணர்தல் இயற்கைக்கு மாறாயிருத்தலை நோக்குக.

ஆங்கு + அனம் = ஆங்கனம் → அங்கனம் → அங்ஙனம் → அங்ஙன் என்னும் தொடர் புணர்ச்சித் திரிபையும் நோக்குக.

இனி, இயற்கையாக நீண்டிருந்த சுட்டே பின்னர்க் குறுகிற் றென்பது இக்கால மொழியாராய்ச்சியாளர்க்கே புலனாம்.

**ஆங்கனம்** āṅgaṉam, கு.வி.எ. (adv.) அவ்வாறு, அவ்வகை, அதுபோல்; in that manner, like that, thus, so. "ஆங்கனம் ஆகிய ஆதிரை கையால்" (மணிமே. 16:128).

*[ஆ (சே.சு.) → ஆங்கு → ஆங்கனம். 'அனம்' ஓர் ஈறு.]*

ஆங்கு →ஆங்கனம் →அங்கனம் →அங்ஙனம் →அங்ஙன், ஈங்கு →ஈங்கனம் →இங்கனம் →இங்ஙனம் →இங்ஙன், யாங்கு →யாங்கனம் →யாங்ஙனம் → யாங்ஙன், எங்கு →எங்கனம் →எங்ஙனம் →எங்ஙன் என்று திரிந்திருப்பதால், திரிபு வடிவங்களினின்று ஙனம் அல்லது ஙன் என்னும் இறுதிப் பகுதிகளைச்செயற்கையாகப்பிரித்து, இயற்கை வடிவான தனிச் சொற்களாகக் காட்டுவது பொருந்தாது. அவ்வாறு, அவ்வகை, அப்படி என்னும் கூட்டுச் சொற்களை அந்த ஆறு, அந்தவகை, அந்தப்படி என்று சொற்பிரித்துச் சுட்டு விரித்துப் பொருள் கூறுவதுபோல், அங்ஙனம்என்பதை அந்தஙனம்என்றுபிரித்தும் சுட்டு விரித்தும் பொருள் கூற இயலாமை காண்க. ஆகவே,

"சுட்டியா எகர வினாவழி அவ்வை
ஒட்டி ஙவ்வும் முதலா கும்மே"

என்னும் நன்னூல் நூற்பாவை (எழுத். 106) இலக்கண மாகக் கொண்டு, ஆங்கனம் என்பதை ஆ + கனம் என்றோ, அங்ஙனம் என்பதை அ + ஙனம் என்றோ, அங்ஙன் என்பதை அ + ஙன் என்றோ பிரிப்பது தவறென அறிக.

**ஆங்காங்கு** āṅgāṅgu, கு.வி.எ. (adv.) அவ்வவ்விடத்தில்; there and there severally. என் வழிப்போக்கில் நண்பரை யெல்லாம் ஆங்காங்குக் கண்டு அளவளாவினேன். (உ.வ.).

*[ஆ (சே.சு.)→ ஆங்கு. ஆங்கு + ஆங்கு = ஆங்காங்கு (அடுக்குத் தொடர்).]*

**ஆங்காரம்** āṅgāram, பெ. (n.) அகங்காரம் பார்க்க; see agaṅgāram

**ஆங்காலம்** āṅgālam, பெ. (n.) வறுமையும் நோயும் நீங்கி எடுத்த வினையெல்லாம் கைகூடிச் செல்வம் பெருகும் நற்காலம்; போங்காலம் என்பதற்கு எதிர்; time when fortune favours and all things prove successful, time of prosperty, opp. to pōṅgālam.

"ஆங்காலம் ஆகும், போங்காலம் போகும்" (பழ.).
"ஆங்கால மாகு மவர்க்கு" (நல்வழி, 4).

*[ஆ (முதனிலை) → ஆவும் (ஆகும்) → ஆம் (மரூஉ)+ காலம். 'உம்' எ.கா.வி.ஈறு. காலம் பார்க்க;* see kālam.]

**ஆங்கு**[1] āṅgu, சு.வி.எ. (demons.adv.) 1. அவ்விடம்; there. "ஆங்குறு குமரப் புத்தேள்" (கந்தபு. அயனைச் சிறைநீ. 42). 2. அப்போது, அக்காலத்தில்; then, at that time or during that period. "ஆங்கெழுசமங் கடந்த எழுவுறழ் திணிதோள் எழுவர்" (சிறுபாண். 111-2). 3. அப்படி; so, in that manner. "ஆங்கினி தொழுகுமதி பெரும" (புறநா. 24)... இடை. (part.) 1. ஓர் உவமவுருபு; sign of comparison. "கொண்மூ மாகவிசும்பின் நடுவுநின் றாங்கு" (புறநா.35). 2. ஓர் ஏழாம் வேற்றுமை யுருபு; a loc. ending. "நின்னாங்கு வருவது போலும்" (மணிமே. 11:47). 3. ஓர் அசைநிலை; expletive in poetry. 'ஆங்கென்பது அசைநிலை' "ஊடலின் உண்டாங்கோர் துன்பம்" (குறள், 1307, பரிமே. உரை).

ம. ஆங்கு; **க., பட.** அல்லி.

*[ஆங்கண் → ஆங்கு.]*

**ஆங்கு**[2] **-தல்** āṅgu-, 7 செ.கு.வி. (v.i.) போதியதாதல்; to suffice, to be sufficient. குழந்தைக்குப் பால் ஆங்கவில்லை. (சென்னை வ.).

ம. ஆங்ஙித்தூங்ஙுக

*[ஒருகா. ஆன் →ஆன்கு →ஆங்கு. ஆனுதல் = போதியதாதல்.]*

**ஆங்ஙனம்** āṅṅaṉam, கு.வி.எ. (adv.) அவ்வாறு, அதுபோல்; in that manner, in the same way.

**ம.** அங்ஙனெ; **க.** அகங்கெ; **மா.** அந்தெகெ. **பிரா.** ஏங்கி; **தெ.** அட்டெ; **து.** அஞ்சனெ; **கோண்.** ஆகணெ; **பட.** அத்தெ; **துட.** அகிச; **குட.** அன்னனெ.

*[ஆங்கு → ஆங்கனம் → ஆங்ஙனம். **ஆங்கனம்** பார்க்க;* see āṅganam.]

"ஆங்கனம் விரிப்பின் அளவிறந் தனவே
பாங்குற வுணர்ந்தோர் பன்னுங் காலை".
(தொல்.செய்.50).

என்னும் நூற்பாவின் எதுகையை நோக்குக. 'ஆங்கனம் விரிப்பின்' என்பதே சரியான பாடம்.

**ஆச்சல்** āccal, தொ.பெ. (vbl.n.) பாய்தல்; sudden violent rush, spring, gust, impulse.

**ம.** ஆச்சுக

*[ஆய்தல்-குத்துதல், குத்துதற்போல் பாய்தல் ஒருகா. ஆய் → ஆய்ச்சல் → ஆச்சல். ஆய்ச்சல் பாய்ச்சல் என்பது ஒருமரபிணைச் சொல்.]*

**ஆச்சனை** āccaṉai, தொ.பெ (vbl.n.) தொகை முழுவதுஞ் செலவழிக்கை (தஞ்சை.); spending the whole amount. (Tj.)

*[ஆயிற்று → ஆச்சு. எனல் → எனை. 'ஆச்சு' → 'எனல்', பார்க்க;* see āccu, eṉal.]

"ஆச்சென்றா லைந்நூறு மாகாதா" என்று அதிமதுரப் பாவரையர் பாட்டில் வந்திருப்பினும், ஆச்சு என்பது கொச்சைச் சொல்லே.

**ஆச்சா** āccā, பெ. (n.) 1. சாலமரம்; sal, l.tr., shorea



robusta. 'ஆமணக்கு விதைத்தால் ஆச்சா முளைக்குமா?' (பழ.), 'ஆமணக்கு நட்டு ஆச்சா ஆக்கலாமா?' (சீவக. 2613, நச். உரை). (செ.அக). 2. ஒருமரம்; ebony tree, Ceylon ebony, diospyros ebenaster. 3. காட்டுடுகு மரம். இதன் இலையின் இருபக்கமும் மெதுவாயும், இலைகள் மாறி மாறியும் பூக்கள் சிறியவையாயும்-உள்ளே மஞ்சள் நிற முடனும், பட்டை ஆழம் பாய்ந்த வரிகள் கூடியும் இருக்கும். அடிமரத்திற் குத்த, ஒருவகை எண்ணெய்ப் பசை வெளிவரும். இது சாம்பிராணியைப் போலிருந்தாலும் அதற்கு ஈடாகாது. இதற்கு மடையன் சாம்பிராணி என்று பெயர்; forest tree, known as false frankincense–Hardwickia binata. The leaves alternate, very smooth on both sides and flowers small and yellowish within. From notches made in the heart of the trunk, an Oleo–resin called false frankincense is obtained. It is balsamic in its properties resembling copaiba balsam, for which it is an efficient substitute.

NOTE:– The other species are– Bauhinia racemosa and Diospyros melanoxylon. (சா. அக.).

**மறுவ.** சாலமரம்; **க.** ஆசு, ஆச, ஆர்செ

*[ஆ → ஆச்சா.]*

இம்மரம் ஒலகம் (நாதசுரம்) செய்யப்பயன்படும். சரிகமபதநி என்னும் ஏழு சுரங்களின் பழந்தமிழ் வடிவம் ஆ ஈ ஊ ஏ ஐ ஓ ஔ ஆதலின் முதற்சுரத்தின் பெயர் இம்மரத்திற்கு அமைந் திருக்கலாம்.

**ஆச்சாசிணி** āccāsini, பெ. (n.) **ஆச்சா** பார்க்க. see āccā (சா.அக.).

**ஆச்சாட்டுப்பயிர்** āccāṭṭu-p-payir, பெ. (n.) சிற்றீரமுள்ள நிலத்தில் விளைவிக்கும் பயிர் (வின்.); crop grown on land that is but slightly humid.

*[ஒருகா. அரைத்தீச்சற்காடு + பயிர் → அரைத்தீச்சற் காட்டுப் பயிர் → ஆச்சாட்டுப் பயிர். தீச்சல்=காய்தல், கருகுதல். 'ஆச்சாடு' மரூஉ.]*

**ஆச்சாட்டு விதைப்பு** āccāṭṭu-vidaippu, பெ. (n.) சிற்றீர முள்ள நிலத்து விதைப்பு (வின்.); sowing on land whose humidity is poor. **ஆச்சாட்டுப் பயிர்** பார்க்க; see āccāṭṭu-p-payir

*[விதை → விதைப்பு (தொ.பெ.) 'பு', ஈறு.]*

**ஆச்சாடு** āccādu, பெ. (n.) சிற்றீரம்; moisture.

**ஆச்சாள்** āccāḷ பெ. (n.) தாய்; mother. "எங்களுடை யாச்சாளுக் கூறுகா யாகாமல்" (தனிப்பா :42:83).

*[ஆத்தை → ஆத்தா → ஆத்தாள் → ஆச்சாள்.]*

விளிவடிவு எழுவா யானதும் பெண்பாலீறு கொண்டதும் தகரம்சகரமாகத் திரிந்ததும் ஆக, மும்மடி வழுவுள்ளது இச்சொல்.

**ஆச்சி** ācci, பெ. (n.) 1. தாய்; mother. (ஈடு, 4:3:பிர.). 2. பாட்டி (இ.வ.); grandmother (Loc.). 3. மூத்த

அக்கை (இ.வ); eldest sister (Loc.). 4. கண்ணிய முள்ள பெண்டிரைக் குறிக்குஞ் சொல்; term of respect used in addressing respectable women. 'ஆச்சி ஆச்சி மெத்தப் படித்துப் பேசாதே' (பழ.).

ம.ஆச்சி; **கொலா.** ஆசி; Sinh. ācchi (grandmother)

*[அத்தன் (தந்தை) →அச்சன் →அச்சி (தாய்) →ஆச்சி. இனி, ஐ = அப்பன். ஐ →ஆய் = அம்மை. ஆய் →ஆய்ச்சி →ஆச்சி என்றும் ஆம்.]*

**ஆச்சிபூச்சி** ācci–pūcci, பெ. (n.) சிறுவர் விளை யாட்டு வகை (வின்.); play among children.

'ஆச்சிபூச்சி' என்று ஒலித்தவாறு சிறுவர் விளையாடும் சடுகுடு விளையாட்டு.

**மறுவ.** சடுகுடு, கபடி, பலிஞ்சடுகுடு .

*[ஆச்சி + பூச்சி.]*

**ஆச்சியாடு** ācci–yādu, பெ. (n.) ஏழையிடையன் பிற ஆயர் மந்தைகளினின்று இரந்து பெறும் ஆடு; sheep acquired by a poor shepherd by begging from other shepherds owning flocks.

*[ஒருகா. ஆயர் ஈத்த அல்லது அளித்த ஆடு.]*

யாசகஆடு என்று மூலங்காட்டுவது பொருத்த மாய்த் தோன்றவில்லை.

**ஆச்சிலை** ā–c–cilai, பெ. (n.) கோமேதகம் என்னும் ஒளிக்கல் (சங். அக.); cinnamon stone.

**ம.** ஆயி; **க.** ஆயித்து, ஆய்த்து; **தெ.** ஆயிந்தி

*[ஆ + சிலை. 'ஆ' பார்க்க.சிலை = கல்]*

**ஆச்சு** āccu, 5 செ.கு.வி.முற்று (v.i. fin.) முடிந்தது; finished, done.

**ம.**ஆயி; **க.** ஆயித்து, ஆய்த்து; **தெ.** ஆயிந்து; **பட.** ஆத்து.

*[ஆ →ஆயியது →ஆயினது →ஆயிற்று →ஆச்சு.]*

தாயுமான அடிகளின் சுகவாரிப் பதிகம் 9ஆம் மண்டிலத்தில் (விருத்தத்தில்) வரும் "போதிப்பதாச்சு" என்னுந் தொடருக்குப்'போதிப்பதாயிற்று'என்றேஉரையாசிரியர்பொருள் கூறுவதால், அத்தொடரிலுள்ள 'ஆச்சு' என்னுஞ் சொல் உரையசை யென்று கொள்ள இடமில்லை.

'ஆச்சு' என்பது கொச்சைச் சொல்லேனும், முனிவர் பாடல்களிலும் புலவர் தனிப்பாடல்களிலும் வருவதால், வழுவமைதியாகவேகொள்ளப்படும். ஆயின் அதைப்பிறர் ஆளல் ஆகாது.

**ஆச்சுவரி** āccuvari, பெ. (n.) அரசு, அரசமரம் (மூ.அ.); pipal tree, Ficus religiosa.

**ஆசடை** āśadai, பெ. (n.) நீளவாட்டத்தில் அமைக்கும் வீட்டின் முகட்டு உத்தரம் (இ.வ.); beam placed lengthwise in a roof.

*[ஆசு + அடை.]*

**ஆசல்** āśal, பெ. (n.) மதிப்பு (இ.வ.); value (Loc.) (செ.அக.)

**ம.**ஆகுதி.

**ஆசலை** āśalai, பெ. (n.) ஆடாதோடை (இராசவைத்.); Malabar–nut. (செ.அக.) – small shrub, winter–cherry – Adhatoda vasica alias A. pubescens.

**க.** ஆசலு

**ஆசவக்கடமை** āśavak-k-adamai, பெ. (n.) கள்ளின்மீது விதிக்கப்பட்ட வரிவகை; tax collected on toddy.

*[ஆசவம் + கடமை.]*

**ஆசவம்** āśavam பெ. (n.) 1. கள்; toddy (பிங்.) 2. விரைவு; quickness.

**ஆசற்றார்** āśarrār பெ. (n.) குற்றமற்றார்; one who is free from fault.

*[ஆசு + அற்றார்.]*

**ஆசற** āśara, கு.வி.எ. (adv.) 1.குற்றமில்லாது; faultlessly. 2. குறையில்லாது, நிறைவாக, முழுதும்; entirely, fully. "சொல்லப்புகுந்த பொருளை ஆசறக்கூறாது" (தொல். பொருள். 664, உரை).

*[ஆசு = குற்றம், குறை. அறு →அற (நி.கா.வி.எ.) நீங்க.]*

**ஆசறு–தல்** āśaru–, 20 செ.கு.வி. (v.i.) 1. குற்றம் நீங்குதல்; to be free from blame, or blemish. "ஆசறு நல்லநல்ல அவை நல்ல" (தேவா. 221.1). 2. முடிதல்; to end, terminate, to be finished. "ஊழிசென் றாசறுங் காலத் தந்நிலையதாக" (கம்பரா. சரபங்.30).

*[ஆசு = குற்றம், குறை. அறுதல் = நீங்குதல்.]*

**ஆசறுதி** āśarudi, பெ. (n.) கடைசி; end, extremity, termination. 'கொற்ற மங்கலத்துக்கு எலலை யாசறுதியி னட்ட திருவாழிக்கல்' (S.i.i.i, 87).

*[ஆசறுதல் = முடிதல். ஆசறு →ஆசறுதி (தொ.பெ.) 'இ' தொ. பெ. ஈ.]*

**ஆசறுதிப் பல்** āśarudi–p–pal, பெ. (n.) கடைவாய்ப்பல்; wisdom tooth, the last in growing..

ஆசறுதி, பல் பார்க்க; see āśarudi, pal.

**ஆசனி**[1] āšani, பெ. (n.) பலா வகை; a kind of jack tree.

*[ஆசினி பார்க்க; see āšini]*

**ஆசனி**[2] āšani, பெ. (n.) பெருங்காயம்; asafoetida (சங். அக.).

**ஆசாட்டம்**[1] āšāttam, பெ. (n.) தெளிவற்ற தோற்றம்; indistinct appearance (W.).

*[ஆசு + ஆட்டம். ஆடு → ஆட்டம் (தொ.பெ.) 'அம்' தொ.பெ.ஈறு.]*

**ஆசாட்டம்**[2] āšāttam, பெ. (n.) அழுகை; crying (சா.அக.)

*[ஆசாடு → ஆசாட்டம் (தொ.பெ.) 'அம்' தொ. பெ.ஈறு.]*

**ஆசாடு-தல்** āšādu, 5 செ.கு.வி. (v.i) அழுதல்; to weep.

*[அசைதல் = வருந்துதல், அழுதல். அசை + ஆடு = ஆசாடு.]*

**ஆசாநங்கை** āšā-nangai, பெ. (n.) ஆதளை (காட்டா மணக்கு); adul oil-plant, Jatropha glandulifera (சா.அக.).

*[ஆதளை → ஆதாள் → ஆசாள் + நங்கை.]*

**ஆசாரக் கோவை** āšāra-k-kōvai, பெ. (n.) பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்று; 100 பாடல்களைக் கொண்டது; பெருவாயின் முள்ளியார் எழுதியது; classic work treating of religious, social and moral conduct in 100 stanzas by Peruvāyin-mulliyār, one of padinen-kil-k-kaṇakku.

**ஆசாரி** āšāri, பெ. (n.) பொற்றொழில், தச்சுத் தொழில் முதலியன செய்யும் கம்மாள இனத்தார்; title of respect applied to head masons and carpenters, an architect.

*[ஆசிரியன் → ஆசாரி]*

**ஆசான்** āšān, பெ. (n.) 1. ஆசிரியன்; teacher. "ஆசானுரைத்த தமைவரக் கொளினும்" (நன். பொதுப்பா. 44). 2. குரு, குரவன், சமயவாசிரியன்; religious preceptor, spiritual guide. 3. பூசாரி; priest. "அறக்களத் தந்தண ராசான் பெருங்கணி" (சிலப். 28:222). 4. மூத்தோன் (திவா.); senior, elderly man. 5. முருகன் (பிங்); Lord Murugan. 6. வியாழன் (பிங்.); Jupiter, considered to be the preceptor of gods. 7. அருகன் (சூடா.); Arhat. 8. (இசை) பாலை யாழ்த்திற வகை (பிங்.); (Mus.) ancient secondary melody-type of the Pālai class 9. (இசை) காந்தாரம், சிகண்டி, தசாக்கரி, சுத்த காந்தாரம் என்னும் நால்வகைப் பண்ணியல்; four kinds of secondary melody types, viz., kāndāram, šikandi, tasakkari, sutta kandaram. 'ஆசான்சாதி நால்வகையாவன; ஆசானுக்கு அகச்சாதி காந்தாரம், புறச்சாதி சிகண்டி, அருகுசாதி தசாக்கரி, பெருகுசாதி சுத்த காந்தாரமெனக் கொள்க'. (சிலப். 13:112, அடியார். உரை).

ம. ஆசான்.

*[ஆசிரியன் → ஆசான்.]*

**ஆசான்றிறம்** āšānriram, பெ. (n.) 1. (இசை) குரற்குரிய திறம்; (Mus.) a kind of musical note or variation of the first note of the Indian gamut. "குரற்கு ரியதிற மாசான் றிறமே". (பிங். 6:322). 2. பாலையாழ்த்திறம்; group of secondary melody type of the Pālai class.

*[ஆசான் + திறம்]*

**ஆசானங்கை** āšānangai, பெ. (n.) காட்டாமணக்கு (சித். அக.); common physic nut.

**ஆசி-த்தல்** āši-, 11 செ.குன்றாவி. (v.t.) விரும்புதல்; to desire, wish earnestly, long for. "ஆசித்தார் மனதிற் புகுமுத்தம்" (திருப்பு.. 403).

*[ஆசு = பற்று, விருப்பம். ஆசு → ஆசி → ஆசை.]*

வடமொழியில் ஆசா என்னும் பெயரேயன்றி, ஆசி என்னும் வினையில்லை. இரு மொழியிலும் சகரம் ஒலியொத்திருப்பது கவனிக்கத்தக்கது.

வடமொழியாளர் ஆசா என்னும் பெயர்ச்சொல்லிற்குக் காட்டும் மூலம் ஆசம்ஸ் என்பதே. இதில் 'ஆ' முன்னொட்டு; சம்ஸ் to hope for, expect, to wish, to attain, desire, to suspect, fear, RV.

இங்ஙனம் ஒரே சொல்லை இரண்டாகப் பகுத்துப் பொருந்தாப் புகலலாகப் பொருள் கூறுவது, ஆசை என்னுஞ் சொல் தென்சொல் என்பதை வலியுறுத்தும்.

**ஆசிக்கல்** āši-k-kal, பெ. (n.) 1. காந்தக்கல்; loadstone. 2. காகச்சிலை. (வின்.) இது உபரசச் சரக்குகளில் ஒன்று; black variety of loadstone; this is one of the 112 kinds of natural substances described in Tamil medicine (சா.அக.).

உபரசச் சரக்கு = துணைக் கனிமம் (secondarry mineral)

*[ஆசு = பற்று, கவர்ச்சி. ஆசு → ஆசி. ஆசிக்கல் = கவர்ச்சிக்கல்.]*

**ஆசிடு-தல்** āšidu-, 12 செ.கு.வி. (v.i.) 1. பொன் நகைகளிற் பற்றாசு வைத்தல்; to cement particles

of gold. 2. நேரிசை வெண்பா முதற்குறளின் இறுதிச் சீர்க்கும் தனிச்சொற்கும் இடையே விட்டிசைப்பின், ஓரசையேனும் ஈரசையேனும் சேர்த்துக் கொள்ளல் (காரிகை. செய். 2, உரை) ; to affix, for preventing hiatus one or two metrical syllables to the third foot of the second line in nērišai veṉbā. 3. செய்யுள் எதுகையில் ய், ர், ல், ழ் மெய்கள் நான்கி லொன்றை ஆசாக இடுதல் ; to insert ய், ர், ல் or ழ் in the rhyming foot in one or two lines of a stanza. "யரலழ வாசும்" (இலக். வி. 748).

*[ஆசு = பற்று, இடையொட்டு. ஆசு + இடு (து.வி.) = ஆசிடு.]*

**ஆசிடை** āšiḍai, பெ. (n.) 1. கூட்டம் ; crowd, assemblage. 2. ஆடை; cloth.

*[ஆசிடுதல் = இடையிடுதல், ஒட்டுதல், சேர்த்தல், கூட்டுதல். ஆசிடு → ஆசிடை = கூட்டம், இழைசேர்த்து நெய்யும் ஆடை.]*

**ஆசிடை நேரிசை வெண்பா** āšiḍai-nēr-išai-veṉ-bā, பெ. (n.) (யாப்.) **ஆசிடை வெண்பா** பார்க்க; see āšiḍai veṉbā

**ஆசிடையெதுகை** āšiḍai-y-edugai, பெ. (n.) **ஆசெதுகை** பார்க்க; see āšedugai

**ஆசிடை வெண்பா** āšiḍai-veṉ-bā, பெ. (n.) (யாப்.) முதற்குறளின் இறுதிச் சீர்க்கும் தனிச்சொற்கும் இடையில் விட்டிசை நீக்கக் காட்டப்படும் ஓரசை அல்லது ஈரசையொடு கூடிய நேரிசை வெண்பா ; (pros.) a veṉbā of 4 lines in general, an āšu (a syllable or two ) is affixed to the penultimate foot of the second line.

*[ஆசு + இடை + வெள் + பா.]*

"ஆர்த்த வறிவினரா யாண்டிளைஞ ராயினும்
காத்தோம்பித் தம்மை யடக்குப – மூத்தொறூஉம்
தீத்தொழிலே கன்றித் திரிதந் தெருவைபோற்
போத்தறார் புல்லறிவி னார்."

இது ஓராசிடையிட்ட நேரிசை வெண்பா.

"தாமரையின் றாதாடித் தண்டுவலைச் சேறளைந்து
தாமரையி னாற்றமே தானாறும் – தாமரைபோற்
கண்ணான் முகத்தான் கரதலத்தான் சேவடியென்
கண்ணார்வஞ் செய்த கருத்து."

இது ஈராசிடையிட்ட நேரிசை வெண்பா.

**ஆசிரியச் சீர்** āširiya-c-cīr, பெ. (n.) (யாப்.) அகவற் பாவிற்குரிய ஈரசைச்சீர்; (pros.) metrical foot with two syllables generally used in āširiyappā.

*[ஆசிரியம் + சீர்]*

ஆசிரியம் என்பது அகவல் என்பதன் மறுபெயர். "அகவ லென்ப தாசிரி யம்மே" (தொல். செய். 80)

**ஆசிரிய வியற்சீர், ஆசிரிய வுரிச்சீர்** என்பன பார்க்க.

**ஆசிரியச் சுரிதகம்** āširiya-c-curidagam, பெ. (n.) (யாப்.) சில கலிப்பா வகைகளின் இறுதியில் வரும் அகவல் வடிவான உறுப்பு; agaval form of verse which is the last member of some Kalivenbās.

[**ஆசிரியம், சுரிதகம்** *பார்க்க;* see āširiyam, šuridagam.]

**ஆசிரியத்தளை** āširiya-t-taḷai, பெ. (n.) (யாப்.) அகவற்பாவில், நிலைச்சீரின் இறுதியசையும் வருஞ்சீரின் முதலசையும் நேர்முன் நேரும் நிரைமுன் நிரையுமாக ஒத்துவரும் செய்யுளுறுப் பாகிய பிணைப்பு; (Pros.) metrical connection in agaval verse between two successive disyllabic feet, in which the last syllable of the preceding foot agrees with the first syllable of the succeeding one.

**ஆசிரியம், தளை** பார்க்க, see āširiyam, taḷai.

நேர்முன் நேர்வருவது நேரொன்றாசிரியத்தளை யென்றும், நிரைமுன் நிரை வருவது நிரை யொன்றாசிரியத்தளை யென்றும் பெயர் பெறும். தேமா, புளிமா, கூவிளம், கருவிளம் என்னும் சீர்வாய்பாடுபற்றி, நேர்முன்நேர் என்பதை மாமுன் நேர் என்றும், நிரைமுன் நிரை என்பதை விளமுன் நிரையென்றும் கூறுவது உரையாசிரியர் மரபு.

"உள்ளார் கொல்லோ தோழி முள்ளுடை
இலவ மேறிய கலவ மஞ்ஞை"

என்னும் ஐங்குறுநூற்றுத் தனிப்பாட லடிகளுள், இருவகை ஆசிரியத்தளையும் வந்துள்ளமை காண்க.

"சீரியை மருங்கி னோரசை யொப்பின்
ஆசிரியத் தளையென் றறியல் வேண்டும்." (தொல். பொருள். செய். 55)

"அகலிரு விசும்பிற் பாயிருள் பருகி" என்னும் பெரும்பாணாற் றுப்படை யடியுள் (1), இருதளையும் வந்துள்ளன.

**ஆசிரியத் தாழிசை** āširiya-t-tāḻ-išai, பெ. (n.) (யாப்.) அகவற்பாவிற்குத் தாழிசை என்னும் இனமாய், அளவொத்த மூவடிகொண்ட முப்பாவிசைக் (stanza) கோவை ஒரே பொருள்பற்றி வருவது; (Pros.) a set of three uniform stanzas of three lines each on the same subject, one of the three auxiliaries to the agaval verse. "தருக்கியல் தாழிசை மூன்றடி யொப்பன.... சீரகவல்" (காரிகை. 14).

1

"கன்று குணிலாக் கனியுகுத்த மாயவன்
இன்றுநம் ஆனுள் வருமே லவன்வாயிற்
கொன்றையந் தீங்குழல் கேளாமோ தோழி"

2

"பாம்பு கயிறாக் கடல்கடைந்த மாயவன்
ஈங்குநம் ஆனுள் வருமே லவன்வாயில்
ஆம்பலந் தீங்குழல் கேளாமோ தோழி"

3

"கொல்லையஞ் சாரற் குருந்தொசித்த மாயவன்
எல்லிநம் ஆனுள் வருமே லவன்வாயில்
முல்லையந் தீங்குழல் கேளாமோ தோழி" (சிலப். 17:19–21)

[**ஆசிரியம், தாழிசை** பார்க்க; see āśiriyam, tāḻiśai]

ஆசிரியத்தாழிசை ஒரோவிடத்து ஒரே தாழிசையாய் அருகியும் வரும். அது அத்துணைச் சிறப்பினதன்று..

**ஆசிரியத்துறை** āśiriya-t-tuṟai, பெ. (n.) (யாப்.) அகவற்பாவிற்குத் துறை யென்னும் இனமாய், ஈற்றயலடி சீர் குறைந்தும், ஈற்றயலடி சீர் குறைதலுடன் இடைமடக்கியும், இடையிடை அடி சுருங்கியும், இடையிடை அடிசுருங்குதலுடன் இடை மடக்கியும், நால்வகையாக வரும் நாலடிச் செய்யுள்; (pros.) quatrain having lines of different lengths with or without repetition in the middle, one of the three auxiliaries of the agaval verse. "நான்கடியாய் எருத்தடி நைந்துமிடை மடக்காயு மிடையிடையே சுருக்கடி யாயுந் துறையாம் குறைவில்தொல் சீரகவல்" (காரிகை. 14)

[**அகவற்றுறை** பார்க்க; see āgavaṟṟuṟai.]

நான்கடியாய் இடையிடை சுருங்குதலுடன் இடைமடக்காய் வந்தஆசிரியத்துறைக்கு,

**(எ–டு)** "இரங்கு குயின்முழவா இன்னிசையாழ் தேனா
அரங்கு மணிபொழிலா ஆடும்போலும் இளவேனில்
அரங்கு மணிபொழிலா ஆடுமாயின்
மரங்கொல் மணந்தகன்றார் நெஞ்சமென் செய்ததிள வேனில்"

**ஆசிரிய நிகண்டு** āśiriya-nigaṇḍu, பெ. (n.) 17ஆம் நூற்றாண்டில் தொண்டைநாட்டு ஊற்றங்காலி லிருந்த ஆண்டிப் புலவரால் ஆசிரிய மண்டில யாப்பில் தொகுக்கப்பட்ட உரிச்சொற்றொகுதி; thesaurus composed in āśiriya maṇḍilam (viruttam) by Āṇḍip Pulavar of Uṟṟaṅgāl in Toṇḍai Nāḍu in the 17th century.

*[ஆசிரியம் + நிகண்டு* < Skt.. nikantu.]

**ஆசிரியப்பா** āśiriya-p-pā, பெ. (n.) (யாப்.) நால்வகைப் பாக்களுள் ஒன்றான அகவற்பா; (pros.) one of the four chief kinds of verse-types.

*[ஆசிரியம் + பா. ஆசிரியமாகிய பா (இருபெய ரொட்டு).]*

**ஆசிரியப்பாவினம்** āśiriya-p-pā-v-iṉam, பெ. (n.) (யாப்.) ஆசிரியத்தாழிசை, ஆசிரியத்துறை, ஆசிரிய மண்டிலம் (விருத்தம்) என்னும் ஆசிரியப்பாவின் மூவினங்கள் அல்லது அவற்றுள் ஒன்று; (Pros.) the three auxiliaries of the agaval verse, viz. aśiriyat tāḻiśai, āśiriyat tuṟai, and āśiriya maṇḍilam (viruttam) or one of them.

**ஆசிரியம், பா, இனம்** பார்க்க see āśiriyam, pā, iṉam

**ஆசிரியம்** āśiriyam, பெ. (n.) 1. ஆசிரியத் தொழில்; teaching profession. 2. அகவற்பா; agaval verse-type. "அகவல் என்ப தாசிரி யம்மே." (தொல். பொருள். செய். 80)

*[ஆசிரியன் – ஆசிரியம். முதற்காலத்தில் ஆசிரியன் இயற்றிய அல்லது கற்பித்த இலக்கண நூல்களெல்லாம் (நூற்பா) அகவல் யாப்பில் இயற்றப்பட்டிருந்ததனால், அகவல் ஆசிரியம் எனப் பெயர் பெற்றது. ஆசிரியன் (கையாளும்) பா என்பது அதன் பொருள். **ஆசிரியன்** பார்க்க.* see āsiriyaṉ.]

'ஆசிரியர் அறிவித்தல் போலப் பொருள்களை அறிவித்து நிற்றலால் ஆசிரியப்பா எனப்பட்டது' என்பது யாழ்ப்பாணச் சுன்னாகம் குமாரசுவாமிப் புலவர் யாப்பருங்கலக் காரிகைப் புத்துரை.

மூவடிச் சிறுமையும் ஆயிரவடிப் பெருமையும் கொண்ட பொதுவகை அகவலினின்று வேறுபட்டு, ஓரடியும் அரையடியும் கொண்டு ஆசிரியப்பா அமைவதால், அது நூற்பா வகவல் என்று வேறுபடுத்திக் கூறப்பட்டது..

"நூற்பா வகவல் நுணங்க நாடின்
சூத்திரங் குறித்த யாப்பிற் றாகி
அடிவரை யின்றி விழுமிதி னடக்கும்" (திவா.).

**ஆசிரிய மண்டிலம்** āśiriya-maṇḍilam, பெ. (n.) (யாப்.) அளவொத்த பல்வேறு கழிநெடிலடி நான்கு கொண்ட ஆசிரிப்பா வினம்; (Pros.) quatrain with lines of equal length each containing not less than six feet. **ஆசிரியம், மண்டிலம்** பார்க்க; see āśiriyam, maṇḍilam.

மண்டிலம் = வட்டம், முழுமை, நிறைவு, ஒரியன்மை. மண்டலித்தல் = பாவின் அல்லது பாவினத்தின் பலவடியும் அளவொத்து வருதல். நிலைமண்டில வாசிரியப்பா, அடிமறி

மண்டில வாசிரியப்பா என்னும் பாப் பெயர்களை நோக்குக. மண்டலி → மண்டலம் → மண்டிலம்.

தாழிசை, துறை, மண்டிலம் என்னும் மூன்றும் தமிழுக்கே சிறப்பாக வுரிய பாவினங்களே. அவற்றின் பெயரும் தூய தென்சொல்லே. பிற்காலத்தில், தமிழ்ப் பகைவரான வடமொழி யாளர், விருத்தம் என்னும் ஒத்த பொருள் வடசொல்லைப் புகுத்தித் தென்சொல்லை வழக்கு வீழ்த்தினர். அவ் வடசொல்லும் தென்சொல் திரிபே.

வள் → வட்டு → வட்டம் > **வ.** வ்ருத்த. ஒ.நோ: நடி → நடம் → நட்டம் .

**அகவன்மண்டிலம்** பார்க்க; see āgavanmandilam.

**ஆசிரிய மாலை** 'āsiriya-mālai, பெ. (n.) ஓர் இசைத் தமிழ் நூல் (சிலப். 8:25, அரும்.); treatise on music.

*[ஆசிரியம் + மாலை]*

**ஆசிரிய வசனம்** āsiriya-vasanam, பெ. (n.) ஒரு நூலாசிரியன் அல்லது உரையாசிரியன், தன் கொள்கைக்கு அல்லது கூற்றிற்கு வலிமையாக, முன்னோர் அல்லது பிறர் நூலினின்று எடுத்துக் கூறும் மேற்கோள்; authoritative text quoted by an author from other's work or works. ''பாடங் கருத்தே ....ஆசிரிய வசனமென் றீரே ழுரையே''. (நன். 21).

*[ஆசிரியன் + வசனம்* Skt. vacana] **ஆசிரியவுரை** பார்க்க; see āsiriyavurai

**ஆசிரிய வியற்சீர்** āsiriya-v-iyarcīr, பெ. (n.) அகவற் பாவிற்குரிய ஈரசைச்சீர் நான்கு; the four disyllabic metrical feet generally used in agaval verse.

''இயலசை மயக்கம் இயற்சீர்'' (தொல். பொருள். செய். 12).

*[ஆசிரியம் + இயல் + சீர்.]*

ஆசிரிய வியற்சீர் நான்கு:

| அசையமைப்பு | சீர் வாய்பாடு |
|---|---|
| நேர்நேர் | தேமா |
| நிரைநேர் | புளிமா |
| நேர்நிரை | கூவிளம் |
| நிரைநிரை | கருவிளம் |

இவற்றை ஆசிரிய வுரிச்சீர் என்று கூறுவது தவறாகும்.

**ஆசிரிய விருத்தம்** āsiriya-viruttam, பெ. (n.) **ஆசிரிய மண்டிலம்** பார்க்க, see āsiriya mandilam.

**ஆசிரிய வுரிச்சீர்** āsiriya-v-uri-c-cīr, பெ. (n.) (யாப்.) பண்டைநாளிற் பெரும்பாலும் அகவற்பாவில் ஆளப்பட்ட உரியசை மயக்க ஈரசைச் சீர் நான்கு; (Pros.) four disyllabic feet formed by permutation of two 'uri' syllables and used generally in agaval verse in ancient times.

*[ஆசிரியம் + உரி + சீர்]*

ஆசிரிய வுரிச்சீர் நான்காவன:-

| அசையமைப்பு | | சீர் வாய்பாடு |
|---|---|---|
| நேர்பு நேர்பு | - | போகு காடு |
| நிரைபு நேர்பு | - | வழங்கு காடு |
| நேர்பு நிரைபு | - | போகு கடறு |
| நிரைபு நிரைபு | - | வழங்கு கடறு. |

''இயலசை மயக்கம் இயற்சீ ரேனை
யுரியசை மயக்கம் ஆசிரிய வுரிச்சீர்''. (தொல். பொருள். செய். 13)

தொல்காப்பியர் காலத்திலும் அதற்கு முன்பும், செய்யுளசைகள் நேர், நிரை, நேர்பு, நிரைபு என நால்வகைப்பட்டிருந்தன. அவற்றுள் முன்னவை யிரண்டும் இயலசை யென்றும், பின்னவை யிரண்டும் உரியசை யென்றும் பெயர் பெற்றிருந்தன. இக் காலத்தார் உரியசைப் பாகுபாட்டை நீக்கி, நேர்பசையை நேர்நேர் (தேமா) என்றும் நிரைபசையை நிரைநேர் (புளிமா) என்றும் பகுத்து ஈரசைச் சீராக்கிவிட்டனர். அதனால், உரிச்சீர் என்பது, இக் காலத்தில் வெண்பாவிற்குரிய காய்ச்சீரும் வஞ்சிப்பாவிற்குரிய கனிச்சீருமாகிய மூவசைச் சீர்க்கே உரியதாயிற்று. ஆகவே, ஆசிரியப்பாவிற்குச் சிறப்பாக (பெரும்பான்மையாக) வுரிய இயலசை மயக்க இயற்சீரை ஆசிரிய வுரிச்சீர் என்பது, இக் காலத்திற்கு எட்டுணையும் ஏலாதாம். எனவே,

''ஈரசை கூடிய சீரியற் சீர:.
தீரிரண் டாமவை யகவற் கிசைதலும்
மூவசை கூடிய சீருரிச் சீரது
நாலிரண் டாகி நடைபெறும் அவற்றுள்
நேரிறு நான்கும் வெள்ளை யல்லன
பாவினுள் வஞ்சியின் பாற்பட் டிடுதலும்
நாலசை யானும் ஓரசை யானும்
சீர்பெற நடப்பது பொதுச்சீர் ஆங்க(து)
எண்ணிரண் டிரண்டா யியறலு நெறியே''. (716)

என்று நூற்பா யாத்த பின்னும்,

'இரண்டு அசையான் வருஞ்சீர் இயற்சீரெனப் படும். அது நேர்நேராயும் நிரைநேராயும் நிரைநிரையாயும் நேர்நிரையாயும் தம்மிற்கூடி நான்காம். அங்ஙனம் ஆகிய நான்கு சீரும் ஆசிரியவுரிச்சீராதலும் ' என்றும்.

'ஈரசைச்சீர் எல்லாச் செய்யுளுள்ளும் பயின்று இனிது நடத்தலின் இயற்சீரென்றும், மூவசைச்சீர் எல்லாச் செய்யுளுள்ளும் வருமெனினும் வெண்பாவிற்கும் வஞ்சிப்பா விற்கும் உரிமை பூண்டு நிற்றலின் உரிச்சீரென்றும், ஏனைய பொதுவாய் நிற்றலின் பொதுச்சீரென்றும் ஆயின' என்றும்,

'வழக்கின்கண் ஆசிரியவுரிச்சீர்க்கு உதாரணம்: தேமா புளிமா கருவிளம் கூவிளம் என்றும், ..... செய்யுட்கண் ஆசிரியவுரிச்சீர்க்கு உதாரணம்:

"குன்றக் குறவன் காதன் மடமகள்
வரையர மகளிர் புரையுஞ் சாயலள்
ஐய எரும்பிய முலையள்
செய்ய வாயினள் மார்பினள் சுணங்கே"

என்றும், **இலக்கண விளக்கவுரையில்** உரைத்திருப்பது, மாறு கொளக்கூறல், மயங்கவைத்தல் என்னும் இருவகைக் குற்றத்திற் கிடமாதல் கண்டுகொள்க.

**ஆசிரிய வுரை** āširiya -v-urai, பெ. (n.) பதினான்கு வகை வுரைகளுள் ஒன்று; one among the fourteen divisions of a commentaries. (ஆசிரிய வுரையை ஆசிரிய வசனம் என்பார் நன்னூலார்.)

**ஆசிரியன்** āširiyan, பெ. (n.) 1. நூலாசிரியன்; author of literary work. 2. நுவலாசிரியன்; teacher. 3. உரையாசிரியன்; commentator, annotator. 4. தொகுப்பாசிரியன்; compiler. கலித்தொகையின் தொகுப்பாசிரியர் நல்லந்துவனார். 5. பதிப்பாசிரியன்; editor. 6. குரு, குரவன்; spiritual teacher, priest.

ஆசிரியர் சொன்னதை அப்படியே நம்ப வேண்டுமா?
ஆசிரியர் பேச்சு அரசனையும் வெல்லும் (பழ.).

*[ஆசு = குற்றம். இரிதல் = ஓடுதல், நீங்குதல், விலகுதல். ஆசு இரிதல் = குற்றம் நீங்குதல். ஆசு + இரியன் (ஆசிரியன்) = குற்றம் நீங்கியவன் அல்லது நீக்குபவன். ஆசிரியன் மாணவரினின்று நீக்கும் குற்றம் மொழிக் குற்றம் ஒழுக்கக் குற்றம் என இரு திறப்படும்.]*

வடமொழியாளர் ஆசிரியன் என்னும் தென்சொல்லை ஆசார்ய (acārya) என்னும் வடசொல்லினின்று திரிப்பர். அது சொல்லமைதி, காலமலைவு என்னும் இரண்டாற் கடியப்படும்.

ā (ஆ) a prefix to verbs, especially of motion, and their derivatives.

ā-car, (v.i., v.t.) come near to, approach, to lead hither (as a path); to address, apply; to proceed, manage, behave one's self; use, apply; examine (a witness); to have intercourse with; to act, undertake, do, exercise, practise, perform; to throw into the fire.

**ā-cāra**, n. conduct, manner of action, behaviour, good behaviour, good conduct; custom, practice, usage, traditional or immemorial usage (as the foundation of law); established rule of conduct, ordinance, institute, precept; rule or line; agreeing with what is taught by the teacher.

**Ācārya**, n. knowing or teaching the **ācāra** or rules, spiritual guide or teacher (especially one who invests the student with the sacred thread, and instructs him in the Vedas in the law of sacrifice and religious mysteries; a N. of Drona (the teacher of the Pāndavās)

இங்ஙனம், 'ஆ' என்னும் பொருளற்ற முன்னொட்டையும், செல்லுதல் அல்லது நடத்தல் என்னும் வினையைக் குறிக்கும் 'சர்' என்னும் முதனிலையையும் அடிப்படையாகக் கொண்டது ஆசார்ய (ācarya) என்னும் சமற்கிருதச் சொல்.

'சர்' என்னும் இயக்க வினைச்சொல் சரி என்னும் தென்சொல்லின் திரிபே. சர்எனல் = நீண்டுவிரைந்தொழுகுதல். சர் → சர → சரசரவெனல் = விரைந்து செல்லுதற் குறிப்பு. சர → சரி → சரிதல் = விரைந்து செல்லுதல்; செல்லுதல், நடத்தல். நடக்கை அல்லது நடத்தை என்னும் சொல் ஒழுக்கத்தைக் குறிப்பது போன்றே, சர (cara) அல்லது சார (cāra) என்னும் வடசொல்லும் ஒழுக்கத்தைக் குறிக்கின்றது.

ஆசார்ய (ācarya) என்னுஞ்சொல் பிராமணரையே சிறப்பாகக் குறித்தலும், ஆசிரியன் என்னும் சொல் குலச் சார்பின்றிக் கற்பிக்கும் அறிஞர்க்கெல்லாம் பொதுவாயிருத்தலும், ஊன்றிக் கவனிக்கத் தக்கதாகும்.

"வேற்றுமை தெரிந்த நாற்பா லுள்ளும்
கீழ்ப்பா லொருவன் கற்பின்
மேற்பா லொருவனு மவன்கட் படுமே" (புறநா. 183)

என்று ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியனும்,

"தோணி யியக்குவான் றொல்லை வருணத்துக்
காணிற் கடைப்பட்டா னென்றிகழார் – காணாய்
அவன்றுணையா வாறுபோ யற்றேநூல் கற்ற
மகன்றுணையா நல்ல கொளல்". (நாலடி. 136)

என்றுஒருபழம்புலவரும்,

" எக்குடிப் பிறப்பினும் யாவரே யாயினும்
அக்குடியிற் கற்றோரை மேல்வரு கென்பர்".

என்று அதிவீரராம பாண்டியனும் கூறியிருத்தல் காண்க.

ஆரியர் இந்தியாவிற்குட் புகுந்த காலம் கி.மு. 2000–1500. வேத காலம் கி.மு. 1550–1000. பாரதகாலம் தோரா. கி.மு. 1000. அதுவே துரோணாசாரியார் காலமும்.

தொல்காப்பியர் காலம் கி.மு. 7ஆம் அல்லது 6ஆம் நூற்றாண்டு. அவர் தம் இலக்கண நூலில் முன்னூலாசிரியரைப் பல்வேறு திறம்பற்றிய பெயராற் குறிப்பதுடன், ஆசிரியன் என்னும் சொல்லையும் ஆள்கிறார்.

"அளவும் நிறையும் எண்ணும் வருவழி
நெடுமுதல் குறுகலும் உகரம் வருதலும்
கடிநிலை யின்றே ஆசிரி யர்க்கே"
(தொல் . எழுத்து. புள்ளி. 94).

தொல்காப்பியம்,

"செந்தமி ழியற்கை சிவணிய நிலத்தொடு
முந்துநூல் கண்டு முறைப்பட எண்ணிப்
புலந்தொகுத்த"

சார்பிற் சார்பு நூலாதலின், அதன் முன்னூல்களெல்லாம் இடைக்கழக நூல்களாகவேயிருந்திருத்தல் வேண்டும். இடைக் கழகக் காலம் தோரா. கி.மு. 4000–2500.

"ஆசிரியம் வஞ்சி வெண்பாக் கலியென
நாலியற் **றென்ப** பாவகை விரியே"
(தொல். பொருள். செய். 104)

என்னும் நூற்பாவில் அகவலை ஆசிரியம் என்றும் முன்னூலாரை "என்ப" என்றுபலர்பாற் சொல்லாலும் குறித்திருத்தலால், ஆரியர் இந்திய வருகைக்கு முன்பே ஆசிரியன் என்னுஞ்சொல் குமரி நாட்டில் வழங்கி வந்தமையும் முன்னூலின் பன்மையும் புலனாகும். ஆதலால், ஆசிரியன் என்னும் தென்சொல்லிற்கும் ஆசார்ய (ācārya) என்னும் வடசொல்லிற்கும் எள்ளளவும் தொடர்பில்லையென அறிக.

இனி, தலைக்கழகக் காலத்திலும், அகவற்பாவும், அதற்கு ஆசிரியம் என்னும் பெயரும், அதனால் ஆசிரியன் என்னுஞ் சொல்லும், வழங்கியே யிருத்தல் வேண்டும்.

ஆசிரியரெல்லாம் புலவரேனும், புலவரெல்லாம் ஏதேனும் ஆசிரியத் தொழில் செய்தாலன்றி ஆசிரியராகார். ஆதலால், "என்மனார் புலவர்" என்னும் தொடரும் அது போன்ற பிறவும் தொல்காப்பியத்திற் பயின்று வரினும், ஆசிரியன் என்னும் சொல்லிற்குப் புலவர் என்னும் பொருள் இங்குக் கூறப்படவில்லை.

நுவலாசிரியரைப் போதகாசிரியரென்று வடசொற் கலந்த இருபிறப்பியாற் குறிப்பர் இக்காலத்தார். அது தவறாம்.

**ஆசினி** āsini, பெ. (n.) 1. ஈரப்பலா; bread-fruit tree, **Artocarpus incisa.** "ஆசினி கவினிய பலவினார் வுற்று" (புறநா. 158.22). 2. மரவயிரம் (சூடா.); hard and solid heart of a tree. 3. மரவுரி (சூடா.); sack tree, **Antiaris toxicaria** alias A. saccidora whose inner bark is used by hill tribes and hermits for clothing (சா.அக.). 4. காயம் (ஆகாயம்) (பிங்.); sky. 5. சிறப்பு (அக.நி.); uniqueness, speciality, excellence.

ம. ஆஞ்ஞிலி

*[ஒருகா. ஆசிலி (ஆசு + இலி) → ஆசினி = குற்றமற்றது, சிறப்பானது.]*

**ஆசீயம்** āsīyam, பெ. (n.) கருஞ்சீரகம் (மூ.அ.); black cumin (செ.அக.); black cumin or country fennel, Nigella sativa.

**ஆசு** āsu, பெ. (n.) 1. ஒட்டு, பற்று; adherence, joint, grasp. 2. பற்றாசு; soldering powder. 3. நேரிசை வெண்பாவின் இரண்டாம் அடி மூன்றாஞ் சீரின் இறுதியிற் சேர்க்கப்படும் ஓரசை அல்லது ஈரசை (யா. கா. செய். 3); one or two metrical syllables affixed to the third foot of the second line of **Nderisai Venba**. 4. செய்யுளின் எதுகையிடையில் வரும் ய், ர், ல், ழ் என்னும் ஒற்றுகள் (யா. கா. ஒழி.6); consonants y, r, l, ḻ intervening between the first and second syllables of a rhyming foot in one or two lines of a stanza. 5. பற்றுக்கோடு; support, prop. "ஆசா கெந்தை யாண்டுளன் கொல்லோ" (புறநா. 235). 6. வாட்பிடி; hilt of sword. "குற்றுடை வாள் ஆசுங் கண்டமும்" (S.I.I. ii, 185). 7. கவசம் (திவா.) armour, coat of mail. 8. கைக்கவசம் (அக.நி.); steel gloves. 9. நூலிழைக்குங் கருவிகளுள் ஒன்று (வின்.); small tube through which yarn is conducted from the spindle of a spinning wheel to a machine. 10. அச்சு (இ.வ.); mould (Loc.). 11. இலக்கு (வின்.); mark, butt. 12. அற்பம் (திவா.); trifle, anything small or mean. 13. நுட்பம்; minuteness, fineness, acuteness. "தேசிக மென்றிவை யாசி னுணர்ந்து" (சிலப். 3:47). 14. குற்றம்; fault. "அரியகற் றாசற்றார் கண்ணும்" (குறள். 503). 15. ஐயம்; doubt "அமலனை யாசற வுணர்ந்த வமலர்" (ஞானா. 66:17). 16. ஆணவமலம் (சிவப்பிர. உண்மை. 42); matter which is eternally encasing the soul and lasting till its final liberation, one of the three impurities of the soul. 17. துன்பம்; trouble, distress, affliction. "ஆசுக வயந்தீர் பெய்த வறிமதி" (ஞானா. 24:4). 18. ஒருவகைச் செயற்கை நஞ்சு (சீதாங்க பாடாணம்); a kind of native arsenic (சா.அக.). 19. அல்லிமொக்கு; lilly bud (சா.அக.). 20. முகம்; face (சா.அக.). 21. இடைக் கார்நெல்வகை (நாநார்த்த.); a kind of paddy.

*ஆசு (நெல்வகை)* — Skt. āsu.

ம. அசு; க. அசி, அச; தெ. அசி; குரு. ஆசா; பிரா. உழுகுன்.

*[அண்ணுதல் = பொருந்துதல், ஒட்டுதல், பற்றுதல். அண் → அடு → அசு → ஆசு. ட—ச, போலி. ஒ. நோ : ஒடி — ஒசி].*

L. vide — vise.

பற்று வைக்கும் பொடி நுண்ணிதாயிருப்பதால், பற்றுக் கருத்தினின்று நுட்பக் கருத்தும் அற்பக் கருத்தும் தோன்றின. ஒ.நோ: ஒட்டு = அற்பம். (சூடா.).

மரவேலையில் ஒட்டையைப் பற்று (மக்கு) வைத்து அடைத்திருப்பது ஒரு குற்றமாக இருத்தலால், பற்றுக் கருத்தினின்று குற்றக் கருத்துத் தோன்றிற்று. குற்றத்தால் துன்பம் நேரும். நஞ்சு துன்பந் தருவது.

மொக்கு இயல்பாகக் கூரிதாயிருப்பது. மொக்குப் போன்றது முகம். இனி மொக்கு இலை போன்ற முகவேலைப் பாடுகளில் மரத்தில் அல்லது கல்லில் ஒட்ட உள்நுழைத்துச் சேர்க்கப்படுதலின் பற்றும் பொருளில் வழங்கியதுமாம்.

**ஆசுக்காயம்** āsu-k-kāyam, பெ. (n.) பேய் வெங்காயம்; wild onion, **Urninea indica** or **Scilla indica** (சா. அக.).

*[ஆசு = குற்றம். காய் → காயம் = காரமுள்ளது.]*

**ஆசுணம்** āśuṇam, பெ. (n.) 1. அரசு (மூ.அ.); pipal, **Ficus religiosa.** 2. அசோகு (மூ. அ.); asoka tree, Saraca indica (சா. அக.).

*[ஒருகா. பாசுணம் — ஆசுணம். பாசுதல் — விரியத் தழைத்தல்.]*

**ஆசுமணை** āśu-maṇai, பெ. (n.) நெசவுக் கருவிகளுள் ஒன்று; board used in making thread into skeins.

*[ஆசு=நூலிழைக்கும் கருவி. மணை=பலகை.]*

**ஆசுரம்** āśuram, பெ.(n.) இஞ்சி (மூ.அ.); ginger.

*[ஒருகா. அசுரம் → ஆசுரம். **அசுரம்** பார்க்க.* see **aśuram.**]

**ஆசுவை–த்தல்** āśu–vai–. 4 செகுன்றாவி. (v.t) கட்டடம் கட்டத் தொடங்கும் பொழுது பெருங்கொத்தன் தலைக்கல் வைத்தல்.; to lay first brick by the senior mason for building.

**ஆசூரம்** āśūram, பெ. (n.) வெள்வெண்காயம் (மூ.அ.) garlic.

*[ஒருகா. ஆசுரம் → ஆசூரம் = மிகக் காரமானது.]*

அசுரம் அல்லது ஆஸுரி என்னும் சொற்களை மூலமாகக் காட்டுவது பொருந்தாது.

**ஆசெதுகை** āśedugai, பெ. (n.) ய், ர், ல், ழ் ஆகிய மெய்யெழுத்துகளுள் ஒன்று செய்யுளின் அடியெதுகையிடையே ஆசாக வருவது; poetic licence permitting interpolation of one of the consonants y, r, l and ḻ between the first and second syllables of the rhyming foot in one or two lines of a stanza.

இனி, ஆசாகெதுகை ய, ர, ல,ழ என்னும் ஒற்று நான்கும் ஆசாய் வரும் எனக் கொள்க.
என்னை:–

''யரலழ வென்னு மீரிரண் டொற்றும்
வரன்முறை பிறழாது வந்திடை யுயிர்ப்பின∴
தாசிடை யெதுகையென் றறைதல் வேண்டும்.''

**காக்கை பாடினியார்**

**கலித்துறை**

''காய்மாண்ட தெங்கின் பழம்வீழக் கமுகி னெற்றிப்
பூமாண்ட தீந்தேன் றொடைகீறி வருக்கை போழ்ந்து
தேமாங் கனிசிதறி வாழைப் பழங்கள் சிந்தும்
ஏமாங் கதமென் றிசையாற் றிசை போயதுண்டே''

(சீவக. 31)

இது யகர ஒற்றிடைவந்த ஆசெதுகை (யா.கா. ஒழி. 6. உரை.)

இது போன்றே ஏனையவும்.

*[ஆசு + எதுகை. ஆசு=பொற்கொல்லன் நகையிடை வைக்கும் பற்றொட்டுப்போல், செய்யுளின் அடியெது கையிடை அமையும் இடையினமெய். **எதுகை** பார்க்க.* see **edugai].**

**ஆசெறூண்** āśeṟūṇ, பெ. (n) ஆதீண்டுகுற்றி; rubbing post for cows. ''ஆய்த்தியர் நலக்காசெறூண னான்'' (சீவக. 419).

*[ஆ+செல்+தூண். = ஆசெறூண். செல்லுதல் = சென்றுராய்தல்.]*

**ஆசை** āśai, பெ. (n.) 1. வேண்டும் பொருண்மேற் செல்லும் விருப்பம்; wish directed towards securing a desired object 'ஆசையுட்பட்டு' (குறள், 266, உரை). 2. விருப்பம்; desire. 3. பொருளாசை; avarice, cupidity. 4. காம வேட்கை; carnality; 5. அன்பு; affection; ''அரும் பெறற் குமரர்மே லாசை'' (கூர்மபு. இந்திரத். 42). 6. நம்பாசை, பேற்றின்மேல் நம்பிக்கை; hope, expectation. 7. பொன்; gold (சூடா.). 8. பொன்னூமத்தை (பச்.மூ.); a kind of datura.

**ம. தெ.** ஆச; **க., து., பட.** ஆசெ; **கொலா.** ஆசெ, ஆசா; Mar., Pali., Nep., Sinh. āsa; **பர்.** ஆச்; **துட.** ஆசி; Pers. ārzu.

*[ஆசு=பற்று. ஆசு – ஆசை=மனப்பற்று, விருப்பம், வேட்கை, விரும்பப்படும் பொருள். ஆசை > Skt. āśā]*

**ஆசைக்கிழத்தி** āśai–k–kiḻatti, பெ. (n.) வைப்பாட்டி; concubine. ''நிருபனுக்கங் காசைக் கிழத்தியாம்'' (திருக்காளத். பு. 30:42)

*[ஆசு → ஆசை. கிழவன் (ஆ. பா. )– கிழத்தி (பெ.பா.) ஒ.நோ: காமக்கிழத்தி.]*

**ஆசைக்குரியான்** āśaikkuriyāṉ, பெ. (n.) மருகு என்னும் நறுமண இலைப்பூண்டு; aromatic leaf plant, Origanum marjoranum. (சா.அக.).

*[ஆசைக்கு + உரியான்.]*

**ஆசைகாட்டி மோசஞ் செய்தல்** āśai -kāṭṭi- mōsañcey, 1. செ. குன்றாவி. (v.t.) விருப்பமானதைச் சொல்லி வயப்படுத்திக் கெடுத்தல்; allure and destroy, to make false promise and ruin, to attract and play treachery. 'ஆசை காட்டி மோசஞ் செய்கிறதா?' (பழ.)

*[ஆசை + காட்டி + மோசம் + செய்.]*

**ஆசைகாட்டுதல்** āśai–kāṭṭu–, 5 செ.கு.வி. (v.i.) 1. தன் வயப்படுத்துதற்குக் கவர்ச்சியானதைச் சொல்லுதல் அல்லது செய்தல்; present a bait or attraction, to excite desire, to allure in order to subjugate or

captivate. 2. (காம.) காமவேட்கை யுண்டாக்குதல்; to excite a craving, said of a woman (சா. அக).

*[ஆசை + காட்டு.]*

**ஆசைநாயகன்** āsai-nāyagan, பெ. (n.) கள்ளக்கணவன் (சோரபுருஷன்) (உ.வ); paramour. (colloq..)

*[ஆசு → ஆசை. நாயகன் பார்க்க.* see nāyagan]

**ஆசைநாயகி** āsai-nāyagi, பெ.(n.) 1. காதல் மனைவி; lady-love. 2. காமக்கிழத்தி, கூத்தி; concubine.

*[ஆசு →ஆசை. நாயகன் (ஆ.பா.)- நாயகி(பெ.பா.]*

**ஆசைப்படு-தல்** āsai-p-padu-, 20 செ.கு.வி. (v.i.) ஆசை கொள்ளுதல்; to set one's heart upon- 18. செ.குன்றாவி. (v.t.) விரும்புதல்; to desire.

**க.** ஆசெவடு, ஆசெபடு; **து.** ஆசெபுனி; **பட.**ஆசெபடு.

*[ஆசு→ஆசை.படுதல்=உண்டாதல்,கொள்ளுதல்.]*

**ஆசைப்பாடு** āsai-p-pādu, பெ. (n.) விருப்பம், வேட்கை; longing or desire. "ஆசைப்பாட்டி லரனைப் புகழுதல்" (உபதேச. சிவபுண். 22).

*[ஆசு →ஆசை. படு (வி.முத.) →பாடு (தொ.பெ.)]*

**ஆசைப்பேச்சு** āsai-p-peccu, பெ. (n.) 1. முகமன்; flattery. 2. வயப்படுத்தும் பேச்சு; persuasive speech. 3. காமவேட்கைப் பேச்சு; libidinous talk.

**க.** ஆசெமாது, ஆசெவாது

*[ஆசு→ஆசை.பேசு(வி.முத.)→பேச்சு(தொ.பெ.)]*

**ஆசைபிடி-த்தல்** āsai-pidi-, 4. செ.கு.வி. (v.i) விருப்பம் மிகுதல், வேட்கை யுண்டாதல் (உ.வ.); to be possessed by desire, to be swayed by passion (colloq.).

*[ஆசு - ஆசை + பிடி]*

**ஆசைபூட்டு-தல்** āsai-pūttu-, 5 செ.குன்றாவி. (v.t.) ஆசையிற் சிக்கச் செய்தல்; to engross the affection of, captivate (W.).

**க.** ஆசெவடிசு

*[ஆசு → ஆசை. பூண் (த.வி.) → பூட்டு (பி.வி.)]*

**ஆசைமருந்து** āsai-marundu, பெ. (n.) பெண்ணைத் தன்வயப்படுத்தும் மருந்துக்கூட்டு(வசியமருந்து); love potion, philter (W.).

*[ஆசு→ ஆசை. மருந்து பார்க்க;* see marundu]

**ஆசைமொழி** āsai-moli, பெ. (n.) நம்பிக்கையுண்டாகச் சொல்லும் சொல்; persuasive or tempting speech, words of hope or encouragement.

*[ஆசு (பற்று) → ஆசை. ஆசை + மொழி.]*

**ஆசையறு-தல்** āsai-y-aru-, 18 செ.குன்றாவி. (v.t.) விருப்பம் முற்றாக நீங்குதல்; to extinguish desire or passion.

"ஆசை அறுமின்கள் ஆசை அறுமின்கள்
ஈசனோடா யினும் ஆசை அறுமின்கள்" (திருமந். 2570)

*[ஆசை + அறு . அறுதல் (த.வி.)]*

**ஆசையறு-த்தல்** āsai-y-aru-, 4 செ.குன்றாவி. (v.t.) விருப்பம் நீக்குதல்; to cause to extinguish desire or passion.

*[ஆசை + அறு . அறுத்தல் (பி.வி.)]*

**ஆசைவை-த்தல்** āsai-vai-, 4 செ.கு.வி (v.i.) ஒன்றன் மேல் அல்லது ஒருவரிடம் விருப்பம் கொள்ளுதல்: to desire, to long for, place affection on an object.

**க.**ஆசெ கொள்ளு; **பட.** ஆசெபீ

*[ஆசை + வை]*

**ஆஞ்சரிணம்** āñjarinam, பெ. (n.) காட்டுத் துளசி; wild basil, wild marjoram, Olimum ascendens alias O.cristatum (சா.அக.).

**ஆஞ்சாலி** āñjāli, பெ. (n.) **ஆஞ்சான்**[2] பார்க்க; see āñjān[2]

*[ஆஞ்சால் - ஆஞ்சாலி.]*

**ஆஞ்சான்**[1] āñjān, பெ. (n. ) 1. கப்பற்கயிறு; halyard or rope for hoisting a sail. 2. பொருள்களை உயரத்தூக்க உதவும் கயிறு; rope for lifting weights with a pulley or otherwise, hawser. 3. சிறிய தனிக்கொம்பு; the lone, slender stem of a tree.

*[ஒருகா. அணைந்தான் → அணஞ்சான் ஆஞ்சான்.]*

**ஆஞ்சான்**[2] āñjān, பெ. (n. ) தண்டனைக்குரிய கோதண்டம் (நாஞ். ); rope or swing formerly in use in village schools for punishing pupils (Nañ.).

*[ஆஞ்சல் → ஆஞ்சால் → ஆஞ்சான்]*

**ஆஞ்சான்** [3] āñjān, பெ. (n. ) இளமரத்தண்டு; the stalk of a young tree or plant (சா.அக.).

**ஆஞ்சான் கயிறு** āñjānkayiru, பெ. (n.) கப்பற் பாய்களை அல்லது கொடிகளை ஏற்றவும்

இறக்கவும் உதவுங் கயிறு (M. Navi. 86.); rope for lifting and lowering sails in ships.

**ஆஞ்சான்பற்றி** ãnjãṉparṟi, பெ. (n.) தோணியில் ஆஞ்சான் கயிறு கட்டப்படும் மரம்; a beam across the stern of a boat to which the halyard is tied.

**ஆஞ்சி**[1] ãnji, பெ. (n.) 1. அச்சம்; fear. "பேர்த்த மனைவியாஞ்சியானும்" (தொல். பொருள். 79) 2. அலைவு (பிங்.); motion, vibration. 3. சோம்பல் (சூடா.); idleness, laziness. 4. கூத்து; dancing. (செ.அக.). 5. அதிர்ச்சி (சா.அக.); shock. 6. விளையாடல்; playing. (க. தமி.அக.).

ம., க. அஞ்சு; தெ. அஞ்சிக; து., பட. அஞ்சிகெ; கோத. அன்ஞ்; துட. ஒச்; கூ. அச; குவி. அச்சாலி.

*[அல் → அஞ்சு → ஆஞ்சு → ஆஞ்சி.]*

**ஆஞ்சி**[2] ãnji, பெ. (n.) ஏலக்காய்ச் செடி (சூடா.); cardamom plant. cf. aindri.

*[அடஞ்சி – ஆஞ்சி, அடையாகக் காய்ப்பது.]*

**ஆஞ்சிக்காஞ்சி** ãnji-k-kãnji, பெ. (n.) 1. போர்க் களத்தில் இறந்த கணவனது வேல் வடுவைக் கண்டு மனைவி அஞ்சிய புறத்துறை (தொல். பொருள். 79; (purap.) theme expressing a lady's horror on seeing the wounds of her husband killed in battle. 2. போர்க்களத்திலிறந்த கணவனுடன் தீயில் மூழ்கும் மனைவியின் பெருமை கூறும் புறத்துறை (பு.வெ. 4, 22); theme describing the greatness of the warrior's wife who ends her earthly existence either by ascending the funeral pyre with her deceased lord or by killing herself with the same deadly arrow that has caused her lord his mortal wound.

*[அஞ்சு → ஆஞ்சு → ஆஞ்சி. ஆஞ்சி + காஞ்சி – ஆஞ்சிக்காஞ்சி. கணவனுக்குற்ற தீங்கு கண்டஞ்சி அத்துயரில் பங்கேற்கும் புறத்துறை.*

*காஞ்சி = நிலையாமை. இனி ஆஞ்சி = கட்டுண்ணல் எனக்கொண்டு நிலையாமை எண்ணத்தால் கட்டுண்ணல் என்றுமாம்]*

**ஆஞ்சித்தாழை** ãnji-t-tāḻai, பெ. (n.) மஞ்சள்நிறமுள்ள தாழைவகை (சித். அக.); a kind of yellow aloes.

**ஆஞ்சிரணம்** ãnjiraṇam பெ. (n.) காட்டுத்துளசி (சித்.அக.); wild basil. **ஆஞ்சரிணம்** பார்க்க; ãnjariṇam

**ஆஞ்சில்** ãnjil, பெ. (n.) 1. ஒருவகைப் பூடு; species of Azima. 2. சங்கஞ்செடி; a shrub – Monotia barleriodies alias M.tetracantha.

**ஆஞ்சிறிகம்** ãnjiṟigam, பெ. (n.); சங்கஞ்செடி (சித்.அக.); mistletoe–berry thorn. **ஆஞ்சில்** பார்க்க; see ãnjil.

**ஆஞ்சுதல்** ãnju–,5 செ.குன்றாவி. (v.t.),. இழுத்தல்; to pull, tighter. 2. இழுத்துக்கட்டுதல்; to tighten and tie with a rope.

**ஆஞ்செல்கை** ãnjelgai, பெ. (n.) 1. தெப்பம்; raft. (செ.அக.) 2. கப்பல்; ship.(க.தமி.அக.)

**ஆஞ்செலகை** ãnjelagai, பெ. (n.) **ஆஞ்செல்கை** பார்க்க; see ãnjelgai.

**ஆஞ்ஞான்** ãññãṉ, பெ. (n.) **ஆஞ்சான்**, பார்க்க see ãnjãṉ, .

**ஆஞ்ஞை** ãññai, பெ. (n.) 1. கட்டளை; order; command, direction. 2. (ஓகம்) ஆறாதாரங்களுள் ஒன்று; cakra in the body, described as two petalled lotus situated between the two eyebrows, one of āṟātaram.

ம. ஆச்ஞ; க. ஆச்ஞா; தெ. ஆச்ஞ; து. ஆச்ஞெ. Nep., Skt. agnã.

*[ஆணை → ஆஞை → ஆஞ்ஞை.]*

**ஆஞன்** ãnaṉ பெ.(n.) தந்தை; father.

**ஆஞா** ãnã, பெ. (n.) தந்தை (இ.வ.); father (Loc.). Mar., Nep. ājā (grand father)

*[ஐயா → அயா → அஞா → ஆஞா]*

**ஆஞான்** ãnãṉ, பெ. (n.) தந்தை (இ.வ.); father (Loc.).

மறுவ. ஆஞன்.

*[ஐயன் → அயன் → அஞன் → அஞான் → ஆஞான்.]*

**ஆஞி** ãni, பெ. (n.) தந்தை (இ.வ.); father (Loc.).

*[ஐயன் → அயன் → அஞன் → ஆஞான் → ஆஞி. ஆஞா – விளி. ஆஞி – விளி. இகரவீற்று விளிச்சொல் கொச்சைத்திரிபு.]*

**ஆட்கடியன்** āṭkaḍiyaṉ, பெ. (n.) 1. பாம்புவகை (குற்றா. தல. கண்டகசே. 32); a kind of snake (Tn.) 2. முதலை (இ.வ.); crocodile (Loc.).

*[ஆள் + கடியன். கடியன் = கடிக்கக் கூடியது, விழுங்கக்கூடியது.]*

**ஆட்காசு** atkasu, பெ. (n.) ஆள் வடிவம் பொறித்த பழங்காலக் காசு; ancient coin, on which is stamped the figure of a man.

**ம.** ஆளக்காசு,

*[ஆள் + காசு]*

**ஆட்காட்டி** atkatti, பெ. (n.) 1. சுட்டுவிரல்; fore finger as it points index finger. 2. ஆட்காட்டிப் பறவை; a bird known as atkatti-k-kuruvi. 3. வழிப்போக்கருக்கு வழிகாட்டும் அடையாளப் பலகை; sign post. 4. ஆளை அடையாளம் காட்டுபவன்: one who identifies the correct person. "ஆட்காட்டி தெரியாமல் திருடப் போகிறவன் கெட்டிக்காரனோ, அவன் அறியாமல் அவன் காலடி பிடித்துப் போகிறவன் கெட்டிக் காரனோ?" (பழ.)

*[ஆள் + காட்டி]*

**ஆட்காட்டிக்குருவி** atkatti-k-kuruvi, பெ. (n.) ஆள்காட்டிப் பறவை; red wattled lapwing Sandpiper, pewt. **Sacrigrammus indicus** alias Lobivanellas goerosis alias **Charadrius atrogularis.** It is so called from its screeching on the approach of a man at night. "ஆட்காட்டிப் பட்சி கடல் மேகம் போயொளிக்கும்" (பதார்த்த. 892).

**மறுவ.** ஆக்காட்டிக்குருவி, ஆட்காட்டிப்பட்சி. ஆள்காட்டுகின்றவள். **ம.** ஆள்காட்டி.

*[ஆள் + காட்டி – ஆட்காட்டி. இராக்காலத்தில் மாந்தர் வருகையைக் கூச்சலிட்டுக் காட்டிக் கொடுக்கும் இயல்புடைமையின் இப்பறவை ஆள்காட்டிக்குருவி எனப் பெயர் பெற்றது.]*




**ஆட்காட்டிப்பட்சி** atkatti-p-patci, பெ (n.) ஆட் காட்டிக் குருவி; bird. **ஆட்காட்டிக்குருவி** பார்க்க; see atkatti-k-kuruvi.

*[ஆள் + காட்டி + பட்சி.* Skt. paksi. *த. பட்சி.]*

**ஆட்கால்** atkal, பெ. (n.) சதுரங்கக் கட்டத்துள் காலாட்காயால் வெட்டக்கூடிய அறை; square where a piece is liable to be captured by a pawn. (chess).

*[ஆள் + கால். ஆள் = காலாட்காய். கால் = உற்றவிடம்.]*

**ஆட்கூலி** atkuli, பெ. (n.) ஒரு வேலையாளுக்குரிய கூலி; hire of a workman, wages of a labourer.

*[ஆள் + கூலி.]*

**ஆட்கொண்டான்** atkondan, பெ. (n.) வில்லிபுத்தூ ராழ்வாரைப் புரந்து பாரதம் பாடுவித்த திருவக்க பாகையில் வாழ்ந்த சிற்றரசன் (பாரத. பதினாறாம். 90); a chief who ruled in Vakka-pagai and under whose patronage Villiputhur-alvar composed the Tamil Bharatam, 14th c. வரபதி யாட்கொண்டான் பார்க்க; see **Varapadi** Atkondan.

*[ஆள் + கொண்டான்]*

**ஆட்கொல்லி**[1] atkolli, பெ. (n.) 1. கொலைஞன்; murderer, man-slayer. 2. பணம், பொன், செல்வம்; money, gold, wealth as slaying men. "ஆட்கொல்லி யென்பரிதை யாய்ந்திலையே" (அருட்பா, நெஞ்சறி. 412). 3. கொலைகாரி; woman who murders.

**ம.** ஆள்கொல்லி.

*[ஆள் + கொல்லி.]*

**ஆட்கொல்லி**[2] atkolli, பெ. (n.) தில்லைமரம் (சித். அக.); blinding tree (செ. அக.).

**ஆட்கொல்லி விதை** atkolli-vidai, பெ. (n.) தில்லை மரத்தின் விதை; seed of the tiger's milk spurge tree. (சா. அக.).

*[ஆள் + கொல்லி + விதை]*

**ஆட்கொள்(ளு)-தல்** atkol(lu)- 7 செ. குன்றாவி. (v.t.) 1. ஆளாக ஏற்றுக் கொள்ளுதல்; take into one's fold, admit into one's good graces, as God does a faithful devotee. "என்னையுமாட்கொண்டருளி" (திருவாச. 10.4). 2. உருக்கொள்ளுதல்; to get the form of a man (கதி.தமி. அக.).

*[ஆள் + கொள்ளுதல் – ஆட்கொள்ளுதல். ஆள் = வேலைக்காரன், அடிமை.]*

**ஆட்சி** atci, பெ. (n.) 1. ஆளுகை; rule, reign, "விண்ணு நின்னாட்சி யாக்கி" (கம்பரா. சூர்ப்ப. 55). 2. உரிமை (பிங்.); ownership, proprietorship, lordship. 3. ஆன்றோர் வழக்கு ; use, usage,

esp. classical usage. இந்தச்சொல் ஆட்சியில் இல்லை (உ.வ.). 4. நுகர்வு, அனுபவம்; possession, enjoyment. "ஆட்சியி லாவணத்தில்" (பெரியபு . தடுத்தாட். 56). 5. மக்கள் அணையலாகாதெனக் கட்டளையிடப் பட்ட இடம் (திருக்கோ. 282.உரை); sphere of one's authority wherein an outsider may not intrude. 6. (வான.) கோள்நிலைகளுளொன்று; (astrol). ruling house of a planet, one of five kiraga-nilai. 7. அதிகாரம்; dominion, power. 8. தலைமுறையாக வந்த உரிமை; inheritance, heritage. 9. கிழமை, நாள் (நாமதீப.); day of the week. 10. அரசு; government. ஆட்சிமாறிவிட்டது. (உ.வ.)

**க.** ஆளுவிகெ; ஆள்கெ, ஆடளித; **து.** ஆடளிதெ Sinh. āṇḍuwa.

*[ஆள் + சி – ஆட்சி.]*

**ஆட்சிக்கொடை** āṭci-k-koḍai, பெ. (n.) நாட்டாட்சி நல்குதல். உண்டி, பொன், ஊர்தி, விலங்கு, சின்னம், பெயர், நிலம், மகன், ஆட்சி என்னும் ஒன்பான் கொடைகளுள் ஒன்று; gift of reign of a country, one among the nine gifts namely food, gold, mode of conveyance, animal, insignia, name, land, son and the reign of the country.

**ஆட்சித்தானம்** āṭci-t-tāṉam, பெ. (n.) (வான.) கோள்களுக்குரிய சொந்த இடம் (சாதகா.19 உரை); (astrol.) position of a planet in its own house.

**ஆட்சிவீடு** பார்க்க; see āṭci vīḍu.

**ஆட்சிப்படு-தல்** āṭci-p-paḍu-, 20 செ.கு.வி. (v.i.) 1. நெடுநாளாய் ஒருவரின் ஆளுகையிலிருந்து உரிமையாதல்; to become one's own by long possession. 2. தற்கிழமையாதல் (கதி. அக.); to be one's possession.

*[ஆட்சி + படு]*

**ஆட்சிமொழி** āṭcimoḻi பெ. (n.) அரசு பயன்படுத்தும் மொழி; official language.

**ஆட்சியர்** āṭciyar பெ. (n.) ஆளும் அதிகாரி; government official.

**ஆட்சிராசி** āṭcirāśi, பெ. (n.) (வான.) கோளுக்கு (கிரகம்) உரிமையான வீடு (வின்); (astrol.) ruling house of a planet.

*[ஆட்சி + ராசி. Skt. rāśi, > த. ராசி.]*

**ஆட்சிவீடு** āṭcivīḍu, பெ. (n.) (வான.) கோள்களுக்கு உரிமையான் தங்குமிடம் (வின்); (astrol). position of a planet in its own house.

**ஆட்சுமை** āṭcumai, பெ. (n.) ஓராள் தூக்கும் சுமை; man's load, coolie load.

*[ஆள் + சுமை ஆட்சுமை. சுமப்பது சுமை.]*

**ஆட்செய்-தல்** āṭcey-, 1. செ. கு.வி. (v.t) 1. தொண்டு செய்தல்; to serve, to pay homage to. "ஆட்செய் தாழிப்பிரானைச் சேர்ந்தவன்" (திவ். திருவாய். 4,10,11). 2. ஆளைப்போன்ற வடிவம் சமைத்தல்; to make an image of man.

**ஆட்டக்கச்சேரி** āṭṭa-k-kaccēri, பெ. (n.) 1. சதிர்; nautch. 2. ஆட்டம் நடைபெறும் இடம்; place of performance.

*[ஆட்டம் + கச்சேரி = ஆட்டக்கச்சேரி]* **கச்சேரி** *பார்க்க;* see **kaccēri.**

**ஆட்டக்கதை** āṭṭa-k-kadai, பெ. (n.) 1. மலையாளத்தில் 'கதகளி' என்னும் பெயரில் நடைபெற்றுவரும் ஒரு பழைய ஆட்டவகை; a peculiar kind of classical dance-drama in Malayāḷam, known as Kathakaḷi. 2. தெருக்கூத்து அல்லது நாடகக்கதை; story of a drama or street drama.

**ம.** ஆட்டக்கத (கதகளி).

**ஆட்டக்கல்லிக்காய்** āṭṭa-k-kalli-k-kāy, பெ. (n.) ஈரி தழ்ச்சிப்பி (சேர. நா.); a kind of large oyster (Kera).

*[ஆட்டம் + கல்லி + காய்]*

**ஆட்டக்கவடன்** āṭṭa-k-kavaḍan, பெ. (n.) திறமையாக நடித்து ஏமாற்றுபவன்; one who cheats acting very cleverly. அவன் ஆட்டக்கவடன், அவனை நம்பாதே (உ.வ.).

**க.** ஆட்டகபட.

*[ஆட்டம் + கவடன் = ஆட்டக்கவடன். கவடு = கவைத்த அல்லது பிரிவுற்ற, இருவேறு இயல்பு. கவடன் = உள்ளொன்று வைத்துப் புறத்தொன்றுபேசு பவன். கவடன் –* **Skt. kapaṭa.** *]*

**ஆட்டக்களம்** āṭṭa-k-kaḷam, பெ. (n.) 1. நாட்டியம் அல்லது நாடகம் நடைபெறும் இடம்; stage for dance or drama. 2. விளையாடுமிடம்; play-ground. 3. மலையாளத்தில் நடைபெறும் ஒணத்தள்ளு என்னும் விளையாட்டு. fencing-matches or sham

combats held in connection with 'ōnam' festival in former days

**ம.** ஆட்டக்களம்.; **தெ.** ஆடபாக

**ஆட்டக்கன்னி** āṭṭa-k-kaṉṉi, பெ. (n.) ஆண்டுதோறும் கன்றீனும் ஆ (பசு) (சேர.நா); a cow delivering a calf every year (Kera.).

**ம.** ஆட்டக் கன்னி

*[ஆண்டு – ஆட்டை + கன்னி – ஆட்டைக்கன்னி. கன்னி = கன் றீனுவது. கன்னுவது கன்னி; 'இ' எழுவாய் குறித்தசறு]*

**ஆட்டக்காய்** āṭṭa-k-kāy, பெ. (n.) 1. சதுரக்கட்டம், தாயக்கட்டம் போன்ற விளையாட்டுகளில் பயன் படுத்தப்படும் காய்; piece used in games like chess. 2. ஆட்டக்காயைப் போல் பிறர் ஏவியபடி செயற் படும் கையாள்; one who is a fool in the hands of a manipulator, pawn.

**க.** ஆட்டகாயி.

*[ஆட்டம் + காய்]*

**ஆட்டக்காரன்** āṭṭ-k-kāraṉ, பெ.. (n.) 1. விளை யாட்டுக்காரன் ; player. 2. வேடிக்கை செய்பவன்; funny fellow. 3. தெருக் கூத்தில் நடிப்பவன்; actor in the street play.

**ம.** ஆட்டக்காரன் **க.** ஆட்டக, ஆட்டகார, ஆட்டங்குளி; **தெ.** ஆடகாடு; **து.** ஆடதாயெ; **கொலா.** ஆட்டகார்

*[ஆட்டம் + காரன் = ஆட்டக்காரன் ]*

**ஆட்டக்காரி** āṭṭa-k-kāri, பெ. (n.) 1. ஆட்டம் ஆடு பவள்; woman player. 2. நடிப்பவள்; actress.

**க.** ஆட்டகாரி; **தெ.** ஆட்டகார்த்தி.

*[ஆட்டம் + காரி]*

**ஆட்டக்கூட்டம்** āṭṭa-k-kūṭṭam, பெ. (n.) 1. நாட்டிய மாடுவோர் குழு ; band of dancers, dance party. 2. நாடகக் குழு; team of dramatists. 3. விளை யாட்டுக் குழு; team of players.

**க.** ஆட்டகூட்ட.

*[ஆட்டம் + கூட்டம்.]*

**ஆட்டக்கை** āṭṭa-k-kai, பெ. (n.) மலையாளத்துக் கதகளியாட்டத்தில் இடம் பெறும் ஒரு கை முத்திரை; a hand-pose in Kathakali play (in Kerala.)

**ம.** ஆட்டக்கை

*[ஆட்டம் + கை.]*

**ஆட்டக்கொட்டில்** āṭṭa-k-koṭṭil, பெ. (n.) 1. நாடக அரங்கம்; theatre 2. மலையாளத்தில் கதகளி யாட்டம் நடைபெறும் அரங்கம்; hall for the performance of Kathakali or dance.

*[ஆட்டம் + கொட்டில்.]*

**ஆட்டகம்** āṭṭagam, பெ. (n.) 1. நீராடுமிடம் (திரு மஞ்சனசாலை); bathroom. "ஆட்டகத்திலானைந் துகந்தார் போலும் " (தேவா.720,4)

**தெ.** ஆடடிக்கிய.

*[ஆடு + அகம் – ஆட்டகம். ஆடுதல் = நீராடுதல். அகம் = மனை, வீடு, வீட்டின் பகுதி.]*

**ஆட்டங்கட்டு[1]–தல்** āṭṭaṅkaṭṭu-5 செ.கு.வி. (v.i.) 1. நடித்து ஏமாற்றுதல்; to cheat by clever means. 2. நாடகத்தில் வேடம் புனைதல்; to enact a part in a drama. அவன் சிவனாக ஆட்டங்கட்டுகிறான். (உ.வ.).

**க.** ஆட்ட கட்டு

*[ஆட்டம் + கட்டு.]*

**ஆட்டங்காட்டு[2]–தல்** āṭṭaṅkāṭṭu-, 5 செ.கு.வி. (v.i.) 1. அலையச்செய்தல்; to make one wander here and there. என்னை ஏன் இப்படி ஆட்டங்காட்டு கிறாய்? (உ.வ.) 2. மிகவும் வருந்தச்செய்தல்; to annoy some one. அவனை அளவுக்கு மீறி ஆட்டங்காட்டி விட்டான் (உ.வ.) 3. ஏய்த்தல், ஏமாற்றுதல்; to cheat. எனக்குப் பணம் தராமல் ஆட்டங்காட்டாதே (உ.வ.) 4. காலம் நீட்டித்தல்; to delay. இன்று நாளையென்று ஆட்டங்காட்டு கிறான் (உ.வ.).

*[ஆட்டம் = அசைவு, வருத்தம், ஒத்திருத் தலைக் காட்டுதல் (ஏய்த்தல்). ஆட்டம் + காட்டுதல்; காட்டுதல் = விளையச்செய் தல், உண்டாக்கல். ஆட்டம்[1], ஆட்டம்[2] பார்க்க;* see āṭṭam[1], āṭṭam[2] )

**ஆட்டங் காணு–தல்** āṭṭaṅkāṇu-, 12 செ.கு.வி. (v.i) 1. அசைவுறுதல்; to be shaky. பல் ஆட்டங் கண்டு விட்டது. (உ.வ.) 2. தீங்கு நேர்தல், ஊறு நேர்தல்; to become harmful, decay. பதவி ஆட்டங் கண்டு விடும் (உ.வ) 3. விளையாட்டு அல்லது நாடகம் காணுதல்; to see a match or drama. 3ஆம் ஆட்டங் கண்டேன். (உ.வ.)

*[ஆட்டம் + காணுதல் = ஆட்டங்காணுதல். ஆட்டம் = அசைவு, நிலைகேடு. அசைந்து ஒடியாடும் விளையாட்டு, ஒசிந்தாடும் ஆடல் தழுவிய நாடகம்..]*

**ஆட்டங்காய்**[1] āṭṭaṅkāy, பெ. (n.) உருண்டைவடிவும் கசப்புமுள்ள காட்டு வெள்ளரிக்காய்; fruit of curcumas colocynth.

**ம.** ஆட்டங்காய்.

**ஆண்டங்காய்** பார்க்க; see āṇḍaṅkāy.

*[ஆட்டம் + காய்]*

**ஆட்டங்கால்** āṭṭaṅgāl, பெ. (n.) வெள்ளைப்பூண்டு; garlic–Allium sativum.

**ஆட்டங்குளி** āṭṭaṅguḷi, பெ. (n.) **ஆட்டங்கொளி** பார்க்க; see āṭṭaṅgoḷi.

*[ஆட்டம் + குளி]*

**ஆட்டங்கொள்–தல்** āṭṭaṅkiol, 7 செ. குன்றாவி. (v.t) 1. அசைவுறல்; move, shake. 2. நிலைத் தன்மை யிழத்தல்; to lose stability.

**க.** ஆட்டங்கொள்.

*[ஆட்டம் + கொள்]*

**ஆட்டங்கொளி** āṭṭaṅgoḷi, பெ. (n ) எப்பொழுதும் விளையாடிக் கொண்டிருக்கும் இயல்புள்ளவன்; boy or man of playful nature.

**க.** ஆட்டங்குளி, ஆட்டகுளி.

*[ஆட்டம் + கொளி]*

**ஆட்டங்கொளித்தனம்** āṭṭaṅgoḷi–t–taṉam, பெ. (n.) எப்பொழுதும் விளையாட்டிலேயே பொழுது போக்கும் இயல்பு ; playful nature.

**க.** ஆட்டகுளிதன

*[ஆட்டம் + கொளி + தனம்]*

**ஆட்டத்துவெளி** āṭṭattuveḷi, பெ. (n. ) குதிரைகளை ஓடவிடுகின்ற பரந்த வெளி, வையாளி விடுகிற வெளி (ஈடு. 7,3,5); race course, a plain where horses are galloped.

*[ஆட்டம் + அத்து + வெளி. ஆட்டம் = ஆடவிடுதல், ஓடவிடுதல். அத்து – சாரியை. வெளி = திறந்த இடம்.]*

**ஆட்டதாளம்** āṭṭatāḷam, பெ. (n.) தெருக்கூத்தில் அல்லது நாட்டியம் நாடகம் போன்றவற்றில் பயன்படுத்தப்படும் தாளம்; a species of rhythm

**க.** ஆட்டதாள; **தெ.** ஆட்வெலதி

*[ஆட்டம் + தாளம்]*

**ஆட்டப்பாட்டு** āṭṭa–p–pāṭṭu, பெ. (n.) ஆட்டத்திற்குரிய பாட்டு; poem composed for a dance or drama.

**ம.** ஆட்டப்பாட்டு.

*[ஆட்டம் + பாட்டு = ஆட்டப்பாட்டு.]*

**ஆட்டப்பெட்டி** āṭṭa–p–peṭṭi, பெ. (n.) தெருக்கூத்து நடத்துவோர் தம் பொருள்களை வைத்துக் கொள்ளும் பெட்டி ; big box for keeping the dress and other accessories of street drama (terukkūthu) actors.

**ம.** ஆட்டப்பெட்டி

*[ஆட்டம் + பெட்டி]*

**ஆட்டபாட்டம்** āṭṭapāṭṭam, பெ. (n.) 1. ஆடல் பாடல் (தமிழறி. 57). dancing and singing. 2. ஆர்ப்பாட்டம்; foppishness. அவன் ஆட்டபாட்டமெல்லாம் அடங்கி விட்டது. (உ.வ.). 3. பொழுது போக்கு; pastime.

**க.** ஆட்டபாட

*[ஆட்டம் + பாட்டு + அம்]*

**ஆட்டம்**[1] āṭṭam, பெ. (n.) 1. அசைவு; motion, vibration, rocking, swinging, rolling, pitching, as of a ship. 2. விளையாட்டு; play, sport, game. "தவப்பகடி யாட்டங் காண்" (ஒழிவி. யோக.4.). 3. விளையாட்டில் தொடங்குமுறை; one's turn in a game. 4. கூத்தாட்டு; dance. அங்கே ஆட்டமும் பாட்டமு மாயிருக்கிறது (உ.வ.). 5. அதிகாரம்; influence, power. ஊர் முழுவதும் அந்த அதிகாரியின் ஆட்டமாயிருக்கிறது (உ.வ.). 6. அங்குமிங்கும் திரிதல்; moving about, going here and there. "அஞ்சன மேனியை யாட்டங் காணேன்" (திவ். திருவாய்.10,3,3). 7. பேய் கொண்டாற்போல் குதித்தல் ; behaving like the one possessed. அங்கே போகவேண்டுமென்று என்ன ஆட்டம் ஆடினாள் (உ.வ.). 8. நடுக்கம்; shaking. முதியவருக்குத் தலையாட்டங் கண்டுவிட்டது. (உ.வ.) . 9. நடிப்பு; action. அந்த ஆட்டமெல்லாம் இங்கே செல்லாது (உ.வ.). 10. நாடகம்; drama.. ஆட்டம் பார்க்கப் போனார்கள். (உ.வ.). 11. தெருக்கூத்து ; street drama. அந்த ஊரில் இன்று இரவு ஆட்டம் நடக்கிறது. (உ.வ.) 12. நாட்டியம்; dance. அந்தப் பெண்ணின் ஆட்டம் நன்றாக இருந்தது. "ஆட்டமும் பாட்டும் அரை நாழிகை, அவளைச் சிங்காரிக்க ஆறு நாழிகை" (பழ).

13. விளையாட்டு போல் ஏமாற்றல்; cheating as if in a play of hide and seek. ஐந்து நாளாய்ப் பணம் தருகிறேன் என்று ஆட்டங்காட்டுகிறான். 14. போட்டி விளையாட்டு ; game. இரண்டு ஆட்டம் எடுத்து விட்டான் (உ.வ.). 15. அசைத்தல் ; causing to move. அவன் விரலாட்ட முடியாது, அவன் வாலாட்ட முடியாது (உ.வ.). 16. ஏமாற்றுதல், ஏய்த்தல்; fraud. "ஆர்க்குத் தெரியுமவளாட்ட மெலாம்" (தெய்வச். விறலிவிடு. 423). 17. முயற்சி; energy, vigour(w.). (கதி.தமி.அக.). 18. அலைவு (கதி.தமி.அக.); shaking, waving, trouble, distress. 19. கவறாட்டம், சூதாட்டம் ; gambling. 20. ஆற்றல், வலிமை; power. அவன் ஆட்டம் அடங்கி விட்டது. (உ.வ.). 21. அதிர்ச்சி; vibration, shock (சா.அக.). 22. தலையாட்டம் ; vacillation of the head through old age; rolling of the head through restlessness or other diseases. 23. திரைப்படக்காட்சி; film show

**ம.** ஆட்டம் ; **க.** ஆட, ஆடு ; **தெ.** ஆட ; **பட., கச.** ஆட; **கூ.** ஆட ; **கொலா.** ஆட் ; **நா.** ஆர் ; **குட.** ஆட் ; **துட.** ஒட் ; **கோத.** ஆழ்.

*[ஆடு → ஆட்டம். ஆடுதல் → அசைதல். ஆடு + அம் = ஆட்டம். அம் = சொல்லாக்க ஈறு.]*

**ஆட்டம்**[2] āṭṭam, இடை. (ind. ) 1. தன்மை; likeness (கதி.அக.). 2. போன்றிருத்தல், போல (ஓர் உவம உருபு ); shape, in imitation (w.). முகம் குரங்காட்டம் இருக்கிறது (உ.வ. ).

*[ அண் → அட்டு = நெருங்கியிருத்தல், ஒத்திருத்தல், ஒத்திருக்கும் தன்மை. அட்டு → ஆட்டு → ஆட்டம் = போன்றிருத்தல். ]*

**ஆட்டம்**[3] āṭṭam, இடை (part.) ஒரு சொல்லாக்க ஈறு; formative suff. of vbl .n. as in போராட்டம், மல்லாட்டம், மாறாட்டம், etc.

**தெ.** ஆட, அட, அடமு.

*[ஆடு + அம் = ஆட்டம். ஆடுதல் = செய்தல். ஆட்டம் = செயற்பாங்கு, செயல்தன்மை. போர் + ஆட்டம் போராட்டம், மல் + ஆட்டம் – மல்லாட்டம் என முதனிலைப் பொருள் குறித்த தொழிற் பெயரீறாகவும் பண்புப் பெயரீறாகவும் 'ஆட்டம்' வழங்கிவருகிறது.]*

**ஆட்டம் போடு–தல்** āṭṭam–pōḍu–, 16 செ. கு.வி. (v.i.) 1. கொட்டமடித்தல்; to display pleasure by way of shouting and behaving indecently. என்னமாய் ஆட்டம் போடுகிறார்கள். (உ.வ.) 2. கொடுஞ் செயல் புரிதல்; to display arrogance. 'ஆட்டம் போட்டு அடங்கி விட்டான். (உ.வ.). 3. தெருக்கூத்து நடத்துதல்; to conduct a street drama 'பழையனூரில் நாளைக்கு ஆட்டம் போடுகிறார்கள்' (உ.வ.). 4. சிறுவர்கள் விளையாடி ஆரவாரம் செய்தல்; children making a noise while playing. அப்பா! இந்தப் பிள்ளைகள் என்னமாய் ஆட்டம் போடுகிறார்கள் (உ.வ. )

**ஆட்டம்** [1]பார்க்க. see **āṭṭam**[1]

*[ஆட்டம் + போடு]*

**ஆட்டமடங்கு–தல்** āṭṭam aḍaṅgu–, 21. செ.கு.வி (v.i.) திமிர் அடங்குதல், செருக்கடங்குதல்; to get pride and arrogance become subdued. "ஆட்டமும் கூத்தும் அடங்கிற்று அத்தோடே" (பழ.).

**ஆட்டமடித்தல்**[1] āṭṭamaḍi–, 4. செ.கு. வி. (v.i. ) 1. கொட்டமடித்தல், ஆரவாரம் செய்தல்; to shout, make a noise, to show pomposity. 2. விளையாட்டில் வெல்லுதல்; to win a game.

**ஆட்டமடித்தல்**[2] āṭṭamaḍittal, பெ. (n. ) கிட்டிப்புள் விளையாட்டு (வின். ); out–door game played by boys, in which the 'puḷ.' or a stout little stick is hit off to a great distance by the kiṭṭi or longer stick.

*[ஆட்டம் + அடித்தல் – ஆட்டமடித்தல். அடித்து விளையாடும் ஆட்டம். அடித்தலாட்டம் = ஆட்டமடித்தல் என முன்பின்னாக மாறியமைந்த சொற் புணர்ப்பு.]*

**ஆட்டமாட்டு–தல்** āṭṭamaṭṭu-, 5. செ.கு.வி. (v.i.) 1. ஆடு மாறு செய்தல்; to make one dance. 2. சொன்னபடி செய்வித்தல்;. to make one act as directed..

**க.** ஆட்டமாடிசு.

**ஆட்டமாடு**[1]**–தல்** āṭṭam āḍu-, 5. செ.கு.வி. (v.i.) 1. விளையாட்டாகப் பேசுதல் ; to make fun. 2. விளையாடுதல் ; to play. 3. ஏமாற்றுதல்; to cheat.

*[ஆட்டம் = விளையாட்டு, விளையாட்டான செயல்கள். ஆட்டம் + ஆடுதல் – ஆட்டமாடுதல்.]*

**ஆட்டமாடு**[2]**–தல்** āṭṭam āḍu_, 5. செ.குன்றாவி . (v.t.) 1. ஒரு விளையாட்டை ஆடுதல்; to play a particular game. 2. ஒரு நாடகம் ஆடுதல்; to enact a drama.

**க.** ஆட்டவாடு ; **பட.** ஆட்ட ஆடு

**ஆட்டமாய்** āṭṭamāy, இடை (part.) போல; as, like. குதிரையாட்டமாய் ஓடினான் (உ.வ.).

*[ஆட்டம் + ஆய். ஆட்டம் = போல ; ஆய் கு.வி. எ. ஈறு. ஆட்டம்*[2] *பார்க்க ; see* **āṭṭam**[2]*.]*

**ஆட்டமுரி** āṭṭamuri, பெ. (n.) வெள்ளாட்டு மூத்திரம்; goat's urine.

*[ஆட்டு + அமுரி.]*

**ஆட்டமெடு-த்தல்** āṭṭamedu-, 4. செ. கு. வி. (v.i.) 1. நடுங்குதல்; to shiver. குளிரால் உடம்பெல்லாம் ஆட்டமெடுத்துவிட்டது. (உ. வ.). 2. விளையாட்டில் வெல்லுதல்; to win a game. இரண்டாட்டமும் அவர்களே எடுத்துவிட்டார்கள் (உ.வ.). 3. வழி தேடுதல், வழிவகை மேற்கொளல்; to take a step, adopt a measure. (செ.அக.).

*[ஆட்டம் + எடு = ஆட்டமெடு.]*

**ஆட்டல்** āṭṭal, பெ. (n.) 1. அசைத்தல்; moving. 2. அரைத்தல்; grinding. மாவாட்டல் முடிந்து விட்டது (உ.வ.). 3. கூத்தாட்டுதல்; making one dance. 4. நீராட்டுதல்; making one bath.

*[ஆடு(த.வி.)→ஆட்டு(பி.வி.).ஆட்டு+அல்=ஆட்டல். அல் (தொ.பெ.ஈறு).]*

**ஆட்டு-தல்** பார்க்க ; see āṭṭu_,

**ஆட்டலாங்கொடி** āṭṭalaṅ-godi, பெ..(n.) சோமலதைக் கொடி; soma plant (unidentified) (சா.அக.).

**மறுவ.** ஆட்டாங்கொடி

**ஆட்டலை-த்தல்** āṭṭalai-, 18 செ. குன்றாவி. (v.t.) பகைவரைப் பின் தொடர்ந்து சென்று பற்றி அலைத்தல், துன்புறுத்தல்; to pursue the enemy, catch and torment him.

**க.** ஆட்டலெ

*[அட்டு + அலைத்தல் - அட்டலைத்தல் → ஆட்டலைத்தல். **அட்டலைத்தல்** பார்க்க; see attalait-tal.]*

**ஆட்டவிளக்கு** āṭṭa-viḷakku, பெ.(n.) தெருக்கூத்தில் அல்லது இராக்கால விளையாட்டுகளில் முன்னால் வைக்கப்படும் விளக்கு ; big bronze or earthern lamp placed at the edge of the stage in street plays or nocturnal games.

**ம.** ஆட்ட விளக்கு

*[ஆட்டம் + விளக்கு]*

**ஆட்டவை-த்தல்** āṭṭavai-, 4 செ.கு.வி.(v.i.) பின்னா லிருந்து தூண்டிவிட்டுச் செயற்படுத்துதல்; to make one act according to the will of another who forces from behind. 2. படாதபாடு படுத்துவித்தல்; to make one undergo untoward sufferings. அவனை ஆட்டவைக் கிறேனா இல்லையா பார் (உ.வ).

ஆடு (த.வி.) → ஆட்டு (பி.வி.) ஆட்ட. (வி.எ.).

**ஆட்டனத்தி** āṭṭaṉ atti, பெ. (n.) சேர இளவரசன்; Chera prince.

**ஆட்டாங்கள்ளி** āṭṭāṅkaḷḷi, பெ. (n.) திருகுகள்ளிச்செடி (மலை.); twisted square spurge.– Eupherbia tootibs alias E. tiruculli. (சா. அக.).

*[ஆடு = அசைவு, வளைவு ஆட்டாங்கள்ளி = வளைந்து திருகிய கள்ளி.]*

**ஆட்டாங்கொடி** āṭṭāṅkodi, பெ. (n.) சோமலதைக் கொடி; soma plant. ஆட்டலாங்கொடி பார்க்க; see āṭṭalaṅkodi.

**ஆட்டாங்கொறுக்கு** āṭṭāṅkoṟukku, பெ. (n.) மலைத் துவரை (சித்.அக.); hilldhal–cytisuscajan (சா.அக.).

**ஆட்டாங்கோரை** āṭṭāṅkōrai, பெ. (n.) சிறுகோரைப்புல் a small variety of kōrai grass, a sedge - Cyperus (genus.) (சா.அக.).

**ஆட்டாண்டு** āṭṭāṇḍu, பெ (n.) ஒவ்வோராண்டு; every year. 'ஆட்டாண்டு தோறும் அளக்கக் கடவ நெல்லு' (S.I.I. ii,70).

*[ஆண்டு + ஆண்டு = ஆண்டாண்டு → ஆட்டாண்டு (வலித்தல்திரிபு). **ஆண்டாண்டு** பார்க்க; see āṇḍāṇḍu.]*

**ஆட்டாம்பிழுக்கை** āṭṭām-piḻukkai, பெ. (n.) ஆட்டின் சாணம்; sheep's ordure or dung.

*[ஆடு + ஆம் = ஆட்டாம் + பிழுக்கை. **ஆட்டாம் புழுக்கை** பார்க்க; see āṭṭām-puḻukkai.]*

**ஆட்டாம் புழுக்கை** āṭṭām- puḻukkai, பெ. (n.) ஆட்டின் சாணம்; sheep's ordure or dung.

*[ஆடு + ஆம் = ஆட்டாம் (ஆட்டினுடைய). புழுக்கை (துண்டுபட்ட சாணம்). புள் = பிளத்தல், துண்டுபடல். புள் → புளு → புழு. புழு + கை – புழுக்கை. 'கை' சி. பொ. மு.]*

**ஆட்டாயன்** āṭṭāyaṉ பெ. (n.) ஆடு மேய்ப்பவன்; shepherd.

**ஆட்டாலை** āṭṭālai, பெ. (n.) 1. எண்ணெய் ஆட்டும் ஆலை, செக்கு, oil press. 2. ஆடுகளுக்காகப் போடப்படும் கொட்டகை; sheep – fold. (குமரி.).

**ம.** ஆட்டால.

**ஆட்டாள்**[1] āṭṭāḷ, பெ. (n.) ஆடுமேய்ப்பவன்; ஆட்டிடையன்; man employed to attend to the sheep in the pasture, shepherd. ஆட்டாளுக்கு ஒரு மோட்டாள், அந்த மோட்டாளுக்கு ஒரு சீட்டாள் (உ.வ.).

ம. ஆட்டாள்

*[ஆடு + ஆள் - ஆட்டாள் . ஆட்டைக் காத்து மேய்த்து வரும் ஆள்.]*

**ஆட்டாள்**[2] āṭṭāḷ, பெ. (n.) ஆற்றலுள்ளவன், திறமையுள்ளவன்; an able man, expert.

ம. ஆட்டாளு.; க. ஆடாளு.

**ஆட்டாளி**[1] āṭṭāḷi, பெ. (n.) ஆட்டத்தில் வல்லவன்; one who is good at a play.

க. ஆட்டாளி.

**ஆட்டாளி**[2] aṭṭāḷi, பெ. (n.) ஆள்பவன், ஒரு பணியைச் செவ்வனே மேற்பார்ப்பவன், (நிருவாகி); person having ability to accomplish or to shoulder a responsibility. உங்கள் காரியங்களுக் கெல்லாம் நான் ஆட்டாளியா? (உ.வ.)

க. ஆடளிதகார; தெ. ஆடவண்ணு; து. ஆடளி தெதூநிநாயெ.

*[ஆடு (த.வி.) → ஆட்டு (பி.வி.). ஆட்டுதல் = செய்வித்தல், மேற்பார்த்தல். ஆட்டு + ஆள் + இ = ஆட்டாளி. ஒ. நோ. பாடு → பாட்டு + ஆள் + இ = பாட்டாளி. 'இ' தன்மை குறித்த உடைமை அல்லது உடையவன் ஈறு.]*

**ஆட்டி**[1] āṭṭi, பெ. (n.) 1. பெண் (திவா.); woman, lady. மணவாட்டி (உ.வ.) 2. மனைவி; wife. "ஆட்டியு மகவுந் தானு மதற்குடம் பட்டு" (சேதுபு. வேதா. 39). பெண்டாட்டி (உ.வ.). 3. தலைவி (பிங்.); lady, woman of rank. திருவாட்டி (உ.வ.).

க. ஆடங்க; தெ. ஆலு(மனைவி), ஆட்டடி, ஆட்டி(பெண்) து. ஆடெ.

**ஆட்டி**[2] āṭṭi, வினையா. பெ. (n.) 1. ஆட்டுபவன்; ஆடச்செய்பவன்; one who makes the cobra or the monkey dance, used only in compounds as பாம்பாட்டி, குரங்காட்டி (உ.வ.).

ம. ஆட்டி,

**ஆட்டி**[3] āṭṭi, இடை. (part.) பெண்பாலீறு; fem.suff.of nouns. முதாட்டி, அடியாட்டி (உ.வ.). கம்பாட்டி (வீரசோ. தத்தித 5).

**ஆட்டி**[4] āṭṭi, வி.எ. (adv.) அரைத்து; ground, past tense of ஆட்டு

*[ஆட்டு + இ + ஆட்டி. 'இ' இறந்தகாலங் காட்டும் வி.எ. ஈறு.]*

**ஆட்டிடைச்சி** āṭṭiḍaicci, பெ. (n.) ஆய்ச்சி; shephered woman

**ஆட்டிடையன்** āṭṭiḍayaṉ, பெ. (n.) ஆடுமேய்க்கும் இடையன்; shepherd.

*[ஆடு + இடையன் = ஆட்டிடையன்.]*

ம. ஆட்டிடயன்

**ஆட்டியவஞ்சம்** āṭṭiyavañjam, பெ. (n.) புளி; tamarind-Tamarindus indica. (சா.அக.).

*[ஒருகா. ஆண்டு → ஆட்டை → ஆட்டிய + வஞ்சம். வெஞ்சனம் → வஞ்சனம் (உண்பொருள்). ஆண்டுக் கொருமுறை கிடைக்கும் உண்பொருள்.]*

**ஆட்டியவாதம்** āṭṭiyavādam, பெ. (n.) ஒருவகை ஊதை (வாத) நோய் (கதி.அக.); a kind of disease.

*[ஆட்டியவூதை பார்க்க; see āṭṭiyavūdai.]*

**ஆட்டியவூதை** āṭṭiyavūdai, பெ. (n.) உடலுழைப்பில்லா மலே உயர்ந்த உணவு வகைகளை உண்டுறங்குவதனால் ஏற்படுவதும், உடம்பில் திமிர், கனம், வலி, இளைப்பு, வீக்கம், மலச்சிக்கல், கால் வலி முதலிய கணங்களையுண்டாக்குவது மாகிய ஓர் ஊதை (வாத) நோய் (சா. அக.); rheumatism generally due to the deranged (Vayu and kapham) gas and phlem arising from consuming rich food and lack of sufficient exercise.

*[ஆட்டு → ஆட்டிய (வருத்துகிற) + ஊதை.]*

**ஆட்டிறைச்சி** āṭṭiṟaicci, பெ. (n.) ஆட்டின் புலால்; mutton.

ம. ஆட்டிறைச்சி

*[ஆட்டு + இறைச்சி = ஆட்டிறைச்சி.]*

**ஆட்டினி** āṭṭiṉi, பெ. (n.) காட்டுப் பூவரசு (சித். அக.); false fern tree.

*[அத்து → அட்டு → அட்டினி → ஆட்டினி]*

**ஆட்டீற்று** āṭṭīṟṟu-, பெ. (n.) ஆண்டுதோறும் ஈனுகை (இ.வ.); calving every year (Loc.).

*[ஆண்டு → ஆட்டு. ஈன் → ஈற்று.]*

**ஆட்டு[1]-தல்** āṭṭu-, 5 செ.குன்றாவி (v.t.) 1. அசைத்தல்; to move, shake, wave, rock as a cradle,

to swing. 2. துரத்துதல்; to drive away, score off. "ஆட்டி விட்டா றலைக்கும்" (ஐந். ஐம். 34). 3. அலைத்தல்; to harass, afflict, vex. "ஒருவனாட்டும் புல்வாய் போல" (புறநா. 193). 4. வெல்லுதல்; to conquer. "இகலமராட்டி" (சிலப்.5,225). 5. ஆடச்செய்தல்; to cause to dance, as a girl, a cobra or a monkey. "நச்சர வாட்டிய நம்பன் போற்றி" (திருவாச. 3,106). 6. நீராடுதல், குளித்தல்; to bathe. "ஆன்பாறழைத்த வன்பா லாட்ட" (சேதுபு. கடவு.12). 7. அரைத்தல்; to grind in a mill, as sesamum or sugar cane. "கரும்பாட்டிக் கட்டி சிறு காலைக் கொண்டார்" (நாலடி. 35).

ம. ஆட்டு; **க., பட.** ஆடு, **தெ.** ஆடு. **து.** ஆடுனி;

*[ஆடு (த.வி.) → ஆட்டு (பி.வி.)]*

**ஆட்டு** [2] āṭṭu, பெ. (n.) 1. விளையாட்டு; sport, play. "அன்னவகை யாட்டயர்ந்து"(பரிபா. 10.97) 2. கூத்து; dancing; "உரையும் பாட்டு மாட்டும் விரைஇ (மதுரைக்.616) (செ.அக.).3. அலைப்பு; movement, shaking. 4. ஆடுந்தன்மை; posture of a (dancing) movement. 5. ஆட்டுந்தன்மை; way by which a posture is effected. 6. வல்லமை; power, strength. (கதி. அக.).

**க.** ஆட்டுதன; **தெ.** ஆட; **கொ.** ஆடா.

*[ஆடு (த.வி.) →ஆட்டு (பி.வி.). பிறவினைகளே தொழிற் பெயராகும். ஒ.நோ. கூடு →கூட்டு]*

**ஆட்டு** āṭṭu, இடை. (Part.) பெயரீறு; formative suffix- உண்டாட்டு.

**ஆட்டுக்கசப்பு** āṭṭu-k-kaśappu, பெ. (n.) ஆட்டின் பித்தம்; bile in the bile-duct of a sheep. (சா. அக.).

*[ஆடு+ கசப்பு – ஆட்டுக்கசப்பு. கசப்பு = கசப்புள்ள பித்தநீர்.]*

**ஆட்டுக்கசாலை** āṭṭu-k-kaśālai, பெ.. (n.) ஆட்டுக் கிடை (இ.வ.); sheep-fold.

*[ஆடு கசாலை→ ஆட்டுக்கசாலை.*

*கசாலை=தங்குமிடம். கச்சல் = சிறுமை, ஆலை=இடம். கச்சாலை →கசாலை = சிறிய இடம்.*

இதே சொல், *கச்சாலை →கச்சாரி →கச்சேரி =* எனவும் திரிந்தது.

**கசாலை** பார்க்க; see **kaśālai.** ]

**ஆட்டுக்கடா** āṭṭu - k-kaḍā, பெ. (n.) ஆணாடு; ram, he-goat.

**ம.** ஆட்டுகொற்றன். **க.** ஆடு; **தெ.** ஏட

*[ஆடு + கடா – ஆட்டுக்கடா.*

**கடா** பார்க்க; see **kaḍā.**]

**ஆட்டுக்கத்திக்கோலா** āṭṭu-k-katti-k-ōlā, பெ. (n. )மீன் வகையிலொன்று; belone strongulara.

*[ஆடு –ஆட்டு+கத்தி+கோலா.]*

**ஆட்டுக்கல்** [1] āṭṭu-k-kal, பெ. (n.) 1. அரைக்கும் கல்லுரல்; stone-mortar. "உரலுலக்கை யேந்திரஞ் சுளகாட்டுக்கல்" (பிரபோத. 11,34).

**ம.** ஆட்டுகல்லு.

*[ஆடு→ஆட்டு. ஆட்டு + கல் – ஆட்டுக்கல்.]*

**ஆட்டுக்கல்** [2] āṭṭu-k-kal, பெ. (n.) ஆட்டு ரோசனை; the bezoar of the sheep. (சா. அக.).

**ம.**ஆட்டிங்கல்லு.

*[ஆடு + கல் – ஆட்டுக்கல் = ஆட்டின் வயிற்றில் கல் போன்று திரண்டிருக்கும் நஞ்சுமுறிப்பான்.]*

**ஆட்டுக்கல்** [3] āṭṭu-k-kal, பெ. (n.) நஞ்சு வகைகளுள் ஒன்று (அமுதுபாடாண வகை); a kind of poison. (சா. அக.).

*[ஆட்டுக்கல் = கூட்டியரைத்த செய் நஞ்சு.]*

**ஆட்டுக்காதுக்கள்ளி** āṭṭu-k-kādu-k- kaḷḷi, பெ. (n.) **ஆட்டுச்செவிக்கள்ளி** பார்க்க; see **āṭṭu-c-cevi-k-kaḷḷi**

**ஆட்டுக்கால்** āṭṭu-k-kāl பெ. (n.) 1. அடப்பங்கொடி, ஆட்டுக்காலடம்பு ; a kind of creeper. 2. ஆட்டின் கால்; sheep's leg. 3. பூமருதம் (மலை.); flowering murdah - **Terminalia paniculata** (சா.அக.).

**ஆட்டுக்காலடம்பு** āṭṭu-k-kāl-aḍambu, பெ. (n.) அடப்பங்கொடி; goats - foot, convolvulus - Ipomaea biloba. A plant creeping but never twining.(சா. அக.)

**மறுவ.** முசற்றழை.

**ஆட்டுக்காற்கல்** āṭṭu-k-kāṟkal, பெ. (n.) கொக்கைக் கல்; coral stone (W.)

*[ஆடு + கால் – ஆட்டுக்கால். ஆட்டுக்கால் + கல் – ஆட்டுக்காற்கல் = ஆட்டுக்கால் வடிவிலமைந்த பவழக் கல்.]*

**ஆட்டுக்கிடாய்** āṭṭu-k-kiḍāy, பெ. (n.) **ஆட்டுக்கடா** பார்க்க; see āṭṭu-k- kaḍā.

**ம.** ஆட்டுகொற்றன், ஆட்டுமுட்டன்; **க.** ஆடு; **தெ.** ஏட

*[ஆடு + கிடாய் = ஆட்டுக்கிடாய். ]*

கிடாய் பார்க்க; see **kiday.**

**ஆட்டுக்கிடை** āttu-k-kidai, பெ. (n.) ஆடுகளைக் கிடத்துமிடம். ஆட்டுப்பட்டி; sheep fold, sheep-pen. "ஆட்டுக்கிடையிலே ஓநாய் புகுந்தது போல" (பழ.).

**ம.** ஆட்டின்கிட; **க.** ஆடுமனெ

*[ஆடு+கிடை.]*

**ஆட்டுக்கிடை படுக்கை** āttu-k-kidai-padukkai, பெ. (n.) ஈளை (சயநோய்) நோயைக் குணப்படுத்துவதற்காக ஆட்டுக்கிடை நடுவில் படுத்துறங்குதல்; consumptive patient is said to be cured by taking his bed in the midst of the sheep-fold. (சா. அக.)

*[ஆடு+கிடை+படுக்கை.]*

**ஆட்டுக்கிறை** āttu-k-kirai, பெ. (n.) ஆட்டு வரி; tax collected on sheep. (S.I.I. vi, 155).

**க.** ஆடுதேறெ; **ம.** ஆட்டுப்பாட்டம்

*[ஆடு + கு + இறை - ஆட்டுக்கு இறை → ஆட்டுக்கிறை. இறை = அரசனுக்கு இறுக்கப்படும் (செலுத்தப்படும்) வரி.]*

**ஆட்டுக்குட்டி** āttu-k-kutti, பெ. (n.) ஆட்டின் குட்டி; lamb, the young of the sheep.

**ம.** ஆட்டின் குட்டி.

*[ஆடு+குட்டி - ஆட்டுக்குட்டி.]*

**ஆட்டுக்குளம்பெண்ணெய்** āttu-k-kulamb enney, பெ. (n.) ஆட்டின் காற்குளம்பினின்றும் எடுக்கும் எண்ணெய்; oil prepared from the sheep hoof. (சா.அக.).

*[ஆடு + குளம்பு + எண்ணெய் = ஆட்டுக்குளம்பெண்ணெய்.]*

**ஆட்டுக்கொம்பவரை** āttu-k-komb-avarai, பெ. (n.) ஆட்டுக் கொம்பைப் போன்ற ஒருவகை அவரைக் காய்; a species of country bean resembling the horn of the sheep. (சா.அக.).

**ம.** ஆட்டுக்கொம்பன் அவரய்க்க

*[ஆடு+கொம்பு= ஆட்டுக்கொம்பு+ அவரை.]*

**ஆட்டுக்கொம்பு** āttu-k-kombu, பெ. (n.) ஆட்டின் தலையிலுள்ள கொம்பு. இது தமிழ் மருத்துவத்தில் புடமிடுவதற்குப் பயன்படும்; sheep's horn, used in Tamil medicine for purposes of calcination. (சா. அக).

*[ஆடு + கொம்பு - ஆட்டுக்கொம்பு.]*

**ஆட்டுக்கொம்புப்பாலை** āttu-k-kombu-p-pālai, பெ (n.) ஆட்டுக்கொம்பைப்போல் நுனியில் கூர்மையுள்ள இலைகளைக் கொண்ட ஒருவகைப் பாலை; wedge-leaved ape flower - mimusops hexandra. (சா.அக.).

*[ ஆடு +கொம்பு - ஆட்டுக்கொம்பு + பாலை. ]*

**ஆட்டுக்கொம்பு வாழை** āttu-k-kombu-vālai, பெ. (n). ஆட்டுக் கொம்பைப் போலிருக்கும் வாழை. இது நீலகிரி மாவட்டத்திலும் பிறவிடங்களிலும் பயிராகிறது; a species of banana (plantain) resembling sheep's horn, sheep's horn banana - Musa sapientum (Spaciosum). This is found grown in Nilgiri district and some other places. (சா.அக.).

*[ஆடு+கொம்பு -ஆட்டுக்கொம்பு + வாழை.]*

**ஆட்டுக்கொம்பொதி** āttu-k-kombodi, uQ. (n.) ஆட்டுக் கொம்பு போன்ற காயையுடைய் ஒதிய மரம்; long- leaved trumpet-tree with a pod like the ram's horn. (சா.அக.).

**மறுவ.** ஆற்றுக் கொம்பொதிய மரம், பெரும்பூம் பாதிரிமரம்.

*[ஆடு + கொம்பு - ஆட்டுக் கொம்பு + ஒதி. ஒதி = ஒதியமரம்.]*

இம்மரத்தைக் குறிக்கும் ஆத்துக்கொம்பொதிய மரம், ஆற்றுக் கொம்பொதிய மரம் ஆகியன தவறான வடிவங்கள்.

**ஆட்டுக்கொழுப்பு** āttu-k-koluppu, பெ. (n.) களிம்பு செய்வதற்காகப் பயன்படுத்தும் ஆட்டின் நிணம். நாட்டு மருத்துவர்கள் இக் கொழுப்புடன் சங்கம் பழம், சாதிக்காய், வால்மிளகு முதலியவற்றைச் சேர்த்து அரத்தங்கக்கல், ஈளை (சயம்) முதலிய நோய் களுக்கு மருந்தாகத் தருவர்; fat of the sheep used **in preparing ointments - Adeps ovis suet.** native physicians employ mutton-suet in the preparation of ointments and also administer it internally with the fruit Azima tetracantha, nutmeg and cubeb in hemoptysis and in certain stages of **pthysis** pulmonis (சா. அக.).

*[ஆடு + கொழுப்பு = ஆட்டுக்கொழுப்பு.]*

**ஆட்டுக்கோட்டுப்பாலை** āttu-k-kōttu-p-pālai, பெ.. (n.) **ஆட்டுக்கொம்புபாலை** பார்க்க; see āttu-k-kōmbupālai.

*[ஆடு + கோடு – ஆட்டுக்கோடு + பாலை = ஆட்டுக் கோட்டுப்பாலை. கோடு = கொம்பு.]*

**ஆட்டுக்கோன்** āṭṭu-k-kōṉ, பெ. (n.) சிவன்; Šivā, the Hindu God (கதி.அக.).

*[ஆட்டு = கூத்து. கோன் = தலைவன். ஆட்டுக்கோன் = ஆடல்வல்லான், தில்லைக்கூத்தன், சிவன்.]*

**ஆட்டுச்சக்கரணி** āṭṭu-c-cakkaraṇi, பெ. (n.) மலையரளி என்னும் நாய்த்தேக்கு மரம்; woolly - leaved fire brand teak (சா.அக.).

*[ஆடு + சக்கரணி = ஆட்டுச்சக்கரணி.]*

**ஆட்டுச்செவிக்கள்ளி** āṭṭu-c-cevi-k-kaḷḷi, பெ. (n.) ஆட்டின் காதைப் போன்ற இலைகளுள்ள ஒருவகைக் கள்ளி; species of spurge-wort, the leaves of which resemble the horn of a sheep - **Euphorbia** (genus) (சா.அக.).

*[ஆடு + செவி – ஆட்டுச்செவி = ஆட்டின்காது. ஆட்டுச்செவி + கள்ளி = ஆட்டுச்செவிக்கள்ளி.]*

**ஆட்டுச்செவிப்பதம்** āṭṭu-c-cevi-p-padam, பெ. (n.) 1. வழுக்கைப்பதம்; soft immature growth of anything compared to a goat's ear. 2. இளநீர்வழுக்கைப் பதம்; immature state like the soft kernel of a tender coconut.

*[ஆடு + செவி – ஆட்டுச்செவி. ஆட்டின்காது. ஆட்டுச்செவி + பதம் = ஆட்டுச்செவிப்பதம்.]*

**ஆட்டுத்துகள்** āṭṭu-t-tugaḷ, பெ. (n.) இரும்புத்தூள், அரப்பொடி; iron filings (S.D).

*[ஆட்டு = ஆட்டுதல், துளைத்தல், அராவுதல். ஆட்டு + துகள் – ஆட்டுத்துகள் = ஆட்டுதலால், துளைத்தலால் அல்லது அராவுதலால் உதிரும் இரும்புப் பொடி.]*

**ஆட்டுத்துழாய்** āṭṭu-t-tuḻāy, பெ. (n.) மலைத்துளசி (சித். அக.); mountain basil - Ocimum gratissimum.

**ஆட்டுத்தேவர்** āṭṭu-t-tēvar, பெ. (n.) ஆட்டு விக்கும் சிறுதெய்வம்; demi-god which causes suffering. "ஆட்டுத்தேவர் தம் விதியொழுகி" (தேவா.)

*[ஆடு + தேவர்.]*

**ஆட்டுத்தொட்டி** āṭṭu-t-toṭṭi, பெ. (n.) ஆட்டுக்கிடை; sheep fold, sheep-pen.

**க.** ஆடுமனெ

*[ஆடு + தொட்டி – ஆட்டுத்தொட்டி. தெ. தொட்டி. (தொழுவம்).]*

**ஆட்டுதப்பி** āṭṭudappi, பெ. (n.) ஆடு அசையிடும் இரை; cud of the sheep.

*[ஆடு + உதப்பி – ஆட்டுதப்பி. உதப்புதல் = அசையிடுதல். உதப்பி = உதப்பும் இரை. (வினையா. பெ.).]*

**ஆட்டுப்பட்டி** āṭṭu-p-paṭṭi, பெ. (n.) 1. ஆட்டுக்கிடை; sheep-fold. 2. ஆட்டுப்பட்டியுள்ள ஊர்; village where sheep fold is situated.

*[ஆடு + பட்டி – ஆட்டுப்பட்டி. பள் → படு → பட்டி படுக்குமிடம், தங்குமிடம்.]*

**ஆட்டுப் பிழுக்கை** āṭṭu-p-piḻukkai, பெ. (n.) ஆட்டின் கழிவுப் பொருள்; excreta or dung of the sheep. "பிழுக்கை வாரியும் பால் கொள்வர்" (சுந். தேவா.).

*[ஆடு + பிழுக்கை.]*

**ஆட்டுப்பூட்டு** āṭṭu-p-pūṭṭu, பெ. (n.) சிறுமியர் விளையாட்டு; girls' game. (த.நா. வி.).

*[ஆடு + பூட்டு.]*

**ஆட்டுமந்தை** āṭṭu-mandai, பெ. (n.) 1. ஆட்டின் கூட்டம்; flock of sheep or goats. 2. ஆடுகள் ஒன்று கூடுமிடம்; place where sheep or goats are gathered. 3. கண் மூடிப் பின்பற்றும் கூட்டத்தினர்; group of blind followers.

*[ஆடு + மந்தை – ஆட்டுமந்தை. மன்று → மந்து → மந்தை = ஒன்று கூடுமிடம்.]*

**ஆட்டுமயிர்** āṭṭu-mayir, பெ. (n.) கம்பளி நெய்ய உதவும் ஆட்டின் மயிர்; wool, fleece or hair of sheep and goats.

*[ஆடு + மயிர்.]*

**ஆட்டுமயிர்ச்சரக்கு** āṭṭu-mayir-c-carakku, பெ. (n.) கம்பளித்துணி (புதுவை); woollen cloth. (Pond.).

*[ஆடு + மயிர் – ஆட்டுமயிர் + சரக்கு = ஆட்டுமயிர்ச் சரக்கு. சரக்கு = பொருள்.]*

**ஆட்டுமறிக்கூலி** āṭṭu-maṟi-k-kūli, பெ. (n.) நிலத்தில் கிடைவைக்கத் தருங்கூலி; hire paid by a farmer to the owner of a flock of sheep or goats for their detention in his field for manure.

*[ஆடு + மறி + கூலி – ஆட்டுமறிக்கூலி. மறித்தல் = ஆடுகள்வேறிடஞ்செல்லாமல்ஓரிடத்தில் தடுத்துத் தங்க வைத்தல்.]*

**ஆட்டுரல்** āṭṭural, பெ. (n.) ஆட்டுக்கல்; stone mortar for grinding.

**ம.** ஆட்டுக்கல்லு.

*[ஆட்டு + உரல் – ஆட்டுரல் (வி.தொ.).]*

**ஆட்டுலா** āṭṭulā, பெ. (n.) ஆட்டுக்காலடம்பு (கொடி வகை) (சித். அக.); goat's foot creeper.

*[ஆடு + உலா – ஆட்டுலா.]*

**ஆட்டுவரி** āṭṭu–vari, பெ. (n.) ஆட்டிற்காக வாங்கப் படும் வரி; tax levied on sheep or goats.

**ம.** ஆட்டுப்பாட்டம்; **க.** ஆடுதேரெ.

*[ஆடு + வரி = ஆட்டுவரி.]*

**ஆட்டுவால் திருக்கை** āṭṭu–vāl–tirukkai, பெ. (n.) **ஆட்டு வாலன் திருக்கை** பார்க்க; see āṭṭu–vālaṉ–tirukkai.

*[ஆட்டுவால் + திருக்கை.]*

**ஆட்டுவாலன் திருக்கை** āṭṭu–vālaṉ–tirukkai, பெ. (n.) ஒருவகைத் திருக்கை; மீன் வகைகளுள் ஒன்று. இதன் வால் நீளமாயிருக்கும். சிறிய மீன் சிவப்பாகவும், பெரிய மீன் ஈய வண்ணமாகவும், வால் பகுதி கறுப்பாகவும், பொதுவாக அதிக வளர்ச்சியுள்ளதாகவுமிருக்கும். இது தன் வாலின் முள்ளினால் தாக்கும். இதனால் ஏற்படும் புண் கடுந் தீங்கு விளைவிக்கும். (சா.அக.); shark having the length of the tail 3 to 4 times that of the body; the upper surface of the young one is reddish - brown; the adult is lead coloured but black in the tail; grows to a large size. Wounds inflicted by the spike of its tail are dangerous (S.D.).

*[ஆடு + வாலன் + திருக்கை. ஆடு = ஆடுதல், அசைதல், அடிக்கடி அசைத்துக் கொண்டிருத்தல். தன் வாலை அடிக்கடி ஆட்டிக் கொண்டிருக்கும் இயல்பு பற்றி இத்திருக்கை மீன் 'ஆடுவாலன் திருக்கை' எனப் பெயர் பெற்றிருக்கலாம்.]*

**ஆட்டுவிப்போன்** āṭṭuvippōṉ, பெ. (n.) 1. நட்டுவன் (நாமதீப.); dance master. 2. பாடாய்படுத்துபவன்; tormenter.

*[ஆடு (த.வி.) → ஆட்டு (பி.வி.) → ஆட்டுவி (இருமடி. பி.வி.).]*

**ஆட்டூர்தி** āṭṭūrdi, பெ.(n.) தீக்கடவுள்; god of fire.

*[ஆடு + ஊர்தி.]*

**ஆட்டூரம்** āṭṭūram, பெ. (n.) மலைவேம்பு; large neem tree-Melia azadirachta (S.D.).

*[**ஆட்டூர வேம்பு** பார்க்க; see āṭṭūra–vēmbu.]*

**ஆட்டூர வேம்பு** āṭṭūra–vēmbu, பெ. (n.) மலை வேம்பு (சித். அக.); mountain neem.

*[ஆட்டூரம் + வேம்பு.]*

**ஆட்டை**[1] āṭṭai, பெ. (n.) விளையாட்டில் தொடங்கும் முறை (நெல்லை); turn in a game (Tn).

*[ஆடு + ஐ – ஆட்டை. ஆடு = ஆட்டம், விளையாட்டு.]*

**ஆட்டை**[2] āṭṭai, பெ. (n.) ஆண்டு; year.

**ம.** ஆட்ட

*[ஆண்டு → ஆண்டை → ஆட்டை]*

**ஆட்டைக்கருமம்** āṭṭai–k–karumam, பெ. (n.) முதலாண்டு முடிவில் செய்யப்படும் நீத்தார்கடன்; first annual ceremony, performed on the same day of the moon on which the person died (W.).

*[ஆண்டு → ஆண்டை → ஆட்டை + கருமம்.]*

**ஆட்டைக்காணிக்கை** āṭṭai–k–kāṇikkai, பெ. (n.) ஆண்டுக்கொருமுறை செலுத்தப்படும் ஒரு பழைய வரி; an ancient village cess collected every year (I.M.P. Tp. 234).

**ம.** ஆண்டக்காழ்ச்ச

*[ஆண்டு → ஆண்டை → ஆட்டை + காணிக்கை.]*

**ஆட்டைக்கோள்** āṭṭai–k–kōḷ, பெ. (n.) ஆண்டு தோறுஞ் செலுத்த வேண்டிய தொகை; yearly payment. "ஆட்டைக்கோளாகக் கொடுப்பான்" (T.A.S. ii, 44).

*[ஆண்டு → ஆட்டை = ஆண்டுக்கொருமுறை. கொள் → கோள் = பெறுவது.]*

**ஆட்டைச் சம்மாதம்** āṭṭai–c–cammādam, பெ. (n.) வரிவகை; village cess (I.M.P. Cg. 524).

*[ஆண்டு → ஆட்டை + சம்மாதம்.]*

**ஆட்டைச்சிராத்தம்** āṭṭai–c–cirāttam, பெ. (n.) **ஆட்டைக்கருமம்** பார்க்க; see āṭṭai–k–karumam.

*[ஆண்டு → ஆட்டை + Skt. சிரார்த்தம்.]*

**ஆட்டைத்திதி** āṭṭai–t–tidi, பெ. (n.) **ஆட்டைக் கருமம்** பார்க்க; see āṭṭai–k–karumam.

**ஆட்டைத்திருநாள்** āṭṭai–t–tirunāḷ, பெ. (n.) அரசனின் பிறந்தநாள், பிறந்தநாள் பெருமங்கலம்; birth anniversary of a king.

**ம.** ஆட்டத்திருநாள்

*[ஆண்டு → ஆட்டை + திருநாள் – ஆட்டைத் திருநாள்.]*

**ஆட்டைத்திவசம்** āttai-t-tivašam, பெ. (n.) **ஆட்டைக் கருமம்** பார்க்க; see āttai-k-karumam.

**ஆட்டைப்படி** atti-p-padi, பெ. (n.) ஓராண்டுக்கு ஒதுக்கியளிக்கப்பட்ட பொருள்; allotment for the year.

ம. ஆட்டப்படி

*[ஆண்டு → ஆட்டை + படி - ஆட்டைப்படி. படி = அளவு, அளந்து தரப்பட்ட பொருள்.]*

**ஆட்டைப்பாழ்** āttai-p-pāl, பெ. (n.) ஆண்டு முழுதும் கரம்பாகக் கிடந்த நிலம்; cultivable land left waste throughout the year (S.I.I. iv, 155).

க. ஆடவல

*[ஆண்டு → ஆட்டை + பாழ் = ஆட்டைப்பாழ்.]*

**ஆட்டைப்பூடு** āttai-p-pūdu, பெ. (n.) ஆண்டுக்கொரு முறை விளையும் பூண்டு; annual plant (S.D.).

*[ஆண்டு → ஆட்டை.பூண்டு → பூடு. ஆட்டை + பூடு = ஆட்டைப்பூடு.]*

**ஆட்டை வட்டம்** āttai-vattam, கு.வி.எ. (adv.) ஆண்டு தோறும்; every year, annually. "ஆட்டைவட்டம் அரைக்காற்காசு பொலிசை" (S.I.I.ii, 125).

*[ஆண்டு → ஆட்டை. வட்டம் = முழுமை, நிறைவு ஆட்டை வட்டம் = ஆண்டு நிறைவு, ஆண்டு முடிவு, ஒவ்வோர் ஆண்டு முடிவு]*

**ஆட்டை வட்டன்** āttai-vattan, பெ. (n.) **ஆட்டை வட்டம்** பார்க்க; see āttaivattam (S.I.I.ii,403).

**ஆட்டை வாரியம்** āttai-vāriyam, பெ. (n.) ஊராண்மைக்கும் அறமுறைக்கும் பொறுப்பேற்ற பழங்கால ஊரவைப்பிரிவு; ancient village administration and judicial division.

*[ஆண்டு → ஆட்டை + வாரியம்]*

**ஆட்டை வாரியர்** atti-vāriyar, பெ. (n.) சிற்றூர் ஆளுகையை ஆண்டு தோறும் மேற்பார்வை செய்யும் அவையினர்; annual committee for supervising the management of village affairs (S.I.I. iii, 271).

*[ஆண்டு → ஆட்டை. ஆட்டை + வாரியர்.]*

**ஆட்டோசை** āttošai, பெ. (n.) ஆட்டின் குரலைப் போன்ற தார விசையி னோசை (நாமதீப.); seventh note of the gamut, as resembling the bleating of sheep.

*[ஆடு + ஒசை - ஆட்டோசை = ஆட்டின் ஒசை.]*

**ஆட்படு[1]-தல்** ātpadu-, 20 செ. கு. வி. (v.i.) 1. அடிமையாதல்; to become a devoted servant, commonly to a deity. "ஆனாலவனுக்கிங் காட்படுவாராரேடி" (திருவாச. 12:12). 2. தலைப்படுதல்; to become involved voluntarily. நானே ஆட்பட்டேன் (உ.வ.).3. உயர்நிலையடைதல்; to raise from obscurity, become a man of some property and consequence. அவன் என்னால் ஆட்பட்டான் (யாழ்ப்.). 4. உடல் நலமடைதல்; to recuperate after sickness (J.).

*[ஆள் + படுதல் - ஆட்படுதல். 1. ஆள் = பிறர்க்குப் பணியாற்றும் ஆள். 2. ஆள் = தன் ஆளுந்தன்மை அல்லது செயல் திறனைத் தன்னலத்திற்கன்றிப் பிற நலத் திற்களிக்கும் ஆள். 3. ஆள் = பிறரால் மதிக்கப்படும் ஆள். 4. ஆள் = உடலளவில் ஆள். ஆட்படல் = ஆளாதல், முழு உடல் நலம் பெறல். ஆள் = ஆளும் தன்மை]*

**ஆட்படு[2]-த்தல்** ātpadu-, 18. செ. குன்றாவி. (v.t.) அடிமை கொள்ளுதல், அடிமையாக்குதல்; to accept as a devoted slave. "உன்னடியார்க் காட்படுத்தாய்" (திவ். திருப்பள்ளி. 10.).

க ஆள்தன கொள்

*[ஆள் + படுத்தல் = ஆட்படுத்தல்.]*

**ஆட்பலி** ātpali, பெ. (n.) மாந்தரைக் கொன்று படைக்கும் படையல், படையல் கொடுத்தல் (நரபலி); human sacrifice. "தலைக்காட்பலி திரிவர்" (திவ். இயற். நான் முகன். 52).

*[ஆள் + பலி - ஆட்பலி.]*

**ஆட்பழக்கம்** ātpalakkam, பெ. (n.) 1. பல்லோர் நட்பு; friendship with many. 2. மக்கள் நடமாட்டம்; being frequented by men. ஆட்பழக்கமில்லாத வழி (உ.வ.).

*[ஆள் + பழக்கம் - ஆட்பழக்கம்.]*

**ஆட்பார்-த்தல்** ātpār-, 4 செ.கு.வி. (v.i.) 1. ஆள் தேடுதல்; to be on the look out for victims as Yama. "ஆட்பார்த்துழலு மருளில் கூற்று" (நாலடி. 20.). 2. பணி செய்தற்கு ஆட்பார்த்தல்; to recruit person for work. 3. வேற்றாள் வாராமல் நோக்குதல்; to watch against detection as an accomplice.

*[ஆள் + பார் = ஆட்பார்.]*

**ஆட்பாலவன்** ātpālavan,பெ. (n.) 1. ஆட்கொள்ளப் பட்டவன்; devotee. "ஆட்பாலவர்க்கருளும் வண்ண

மும்'' (தேவா. 1178,4). 2. ஆட்பட்டவன்; one who is accepted as a devotee.

க. ஆள்தன

*[ஆள் + பால் + அவன் = ஆட்பாலவன்.]*

**ஆட்பிடியன்** āṭpiḍiyaṉ, பெ. (n.) 1. முதலை; crocodile, alligator. 2. ஆளைப்பிடிப்பவள், ஒழுக்கமற்றவள் (இராட்.); vamp.

ம. ஆள்ப்பிடியன்.

*[ஆள் + பிடியன் = ஆட்பிடியன்.]*

**ஆட்பிரமாணம்** āṭpiramāṇam, பெ. (n.) **ஆள்மட்டம்** பார்க்க; see āḷmaṭṭam.

Skt. pramāna → த. பிரமாணம்.

*[ஆள் + பிரமாணம் – ஆட்பிரமாணம்.]*

**ஆடக இறைவன்** āḍaga-iṟaivaṉ பெ. (n.) பொன்னம் பலத்து ஆடும் இறைவன்; Lord Śiva dancing in Chidambaram.

*[ஆடகம் + இறைவன்.]*

**ஆடகக் கருப்பன்** āḍaga-k-karuppaṉ, பெ. (n.) நான் முகன்; Brahma. "ஆடகக் கருப்பனை நிகர்வது" (சேதுபு. கந்த. 6.).

*[ஆடகம் + கருப்பன்.]*

**ஆடகக்கோயில்** āḍaga-k-kōyil, பெ. (n.) பொன்னா லான கோயில், பொன் வேய்ந்த கோயில்; temple with golden roof.

*[ஆடகம் + கோயில்.]*

**ஆடகச்சயிலம்** āḍaga-c-cayilam, பெ. (n.) **ஆடகமலை** பார்க்க; see āḍaga-malai

ஆடகம் = ஆடகப்பொன். Skt. saila > த. சயிலம் (மலை.)

*[ஆடகம் + சயிலம் = ஆடகச்சயிலம்.]*

மேருமலை பொன்னாலானது என்னும் தொன்ம (புராண) நம்பிக்கையின் அடிப்படையில் ஆடகச்சயிலம் எனப்பட்டது. மேருமலையைச் சார்ந்த காகமும் பொன்னாகும் என்பது பண்டு தொட்டு வழங்கி வரும் சொலவடை.

**ஆடகம்[1]** āḍagam பெ. (n.) 1. மாழை (உலோக)க் கட்டி (பிங்.); ore. 2. பொன்; gold. "ஆடக மாட நெருங்குங்கடல்" (தேவா. 538,1). 3. நால்வகைப் பொன்களுள் ஒன்றாகக் கருதப்படும் கிளிச்சிறை; கிளிச்சிறகு போன்ற வெளிர் பசுமை கலந்ததும் 500 மாற்றுள்ளதுமான உயர்ந்த வகைப் பொன் (சிலப். 14,211); one of the four kinds of superior concentrated gold with a greenish tint resembling the colour of the wings of parrot. It is said to be of a very high purity and standard of gold with 500 (mātru) (10 mātru = 24 carats) (S.D.). 4. செம்பு; copper. 5.துவரை; pigeon pea or red gram. 6. சிறுகாஞ் சொறி; hemp-leaved tragia (S.D.) 7. சிறு நாகப்பூ (தைலவ. தைல. 23); iron wood of Ceylon. 8. குதம்பைச் செடி; a plant. (சங். அக.).

ம. ஆடகம்.

*[ஆடகம் = பொலிவு மிக்கது, அழகம் → ஆழகம் → ஆடகம்.]*

**ஆடகம்[2]** āḍagam, பெ. (n.) கூத்தாடுமிடம்; theatre for performing dance.

*[ஆடு + அகம் = ஆடகம்.]*

**ஆடகம்[3]** āḍagam, பெ. (n.) 1. எட்டுச்சேர் அல்லது 64 பலம் எடை; weight equivalant to 8 seers or 64 palams. 2. நான்கு படி கொண்ட அளவு; big measure equivalent to 4 measures (ordinary) (S.D.). 3. நான்கு நாழி (நாமதீப.); measure of 4 nāḻis. 4. ஐந்து பிரத்தம் கொண்ட நிறை; a weight of five pirattam.

ம. ஆடகம்; க. ஆடக; தெ. ஆடகமு. Skt. āḍhaka.

*[ஆடகம் = பொன், பொன்னை நிறுக்கும் எடை, அளவு]*

**ஆடகமருத்தம்** āḍaga-maruttam, பெ. (n.) பொன்; gold.

*[ஆடகம் = பொன். ஒருகா. ஆடகம் + அருத்தம் = ஆடகமருத்தம். Skt. arta → த. அருத்தம்.]*

**ஆடகமலை** āḍaga-malai, பெ. (n.) மேருமலை (கல்லா. 72:1); mount mēru as golden.

*[ஆடகம் = ஆடகப் பொன். ஆடகம் + மலை.]*

**ஆடகமாடம்** āḍaga-māḍam, பெ. (n.) 1. பொன் மாளிகை; mansion of gold. 2. திருமால் கோட்டம்; shrine of Thirumāl. "ஆடக மாடத்தறிதுயி லமர்ந் தோன்" (சிலப். 26.62). 3. சேரநாட்டிலுள்ள இரவிபுரம்; Ravipuram in Kerala. 4. திருவனந்தபுரம்; Thiruvananthapuram

ம. ஆடகமாடம்.

*[ஆடகம் + மாடம் – ஆடகமாடம். ஆடகம் = பொன், ஆடகமாடம் = பொன்மாளிகை, பொன் வேய்ந்த கோயில், அக்கோயிலுள்ள ஊர்.]*

**ஆடகன்** āḍagaṉ, பெ. (n.) இரணியகசிபு (பாரத. வேத்திர. 15); Hiranya Kaśipu, a king.

*[ஆடகம் = பொன். ஆடகன் = பொன் நிற மானவன்.]*

**ஆடகாமாமூலம்** āḍagamā-mūlam, பெ. (n.) சிறிய முள்ளங்கி; wild country radish.

*[ஆடகம்+மாமூலம். ஆடகம்=ஆழ்கியது, சிறியது.]*

**ஆடகி** āḍagi, பெ. (n.) 1. துவரைச் செடி; red-gram plant. 2. காக்கைப் பொன் (நாநார்த்த.); mica.

**ம., க.** ஆடகி; Mar. ātaki (a shrub)

*[ஒருகா. ஆடகம் → ஆடகி. ஆடகம் = பொன். ஆடகி = பொன் போன்ற நிறமுள்ள துவரை, துவரை காய்க்கும் செடி.]*

**ஆடகூடம்** āḍakūdam, பெ. (n.) செம்பு மலை; a mythological mountain containing copper ore.

*[ஆடகம் = பொன், பொன் போன்ற நிறமுள்ள செம்பு. ஆடகம் + கூடம் = ஆட கூடம். கூடம் = மலை.]*

**ஆடகேசன்** āḍagēsaṉ, பெ. (n.) **ஆடகேசுரர்** பார்க்க; see āḍagēśurar,

**ஆடகேசுவரம்** āḍagēśuvaram, பெ. (n.) 1. ஆயிரத் தெட்டு சிவத்தலங்களுள் ஒன்று; one of the 1008 Siva shrines. 2. ஆடகேசனின் உலகம் (அருணா. பு. திருமலை. 46); the nether world, as the dominion of Hātakēśa.

*[ஆடக + ஈசுவரம் - ஆடகேசுவரம். ஈசுவரம் = ஈசன் கோயில்.]*

**ஆடகை** āḍagai, பெ. (n.) **ஆடகி**[1] பார்க்க; see āḍagi[1]

**ஆடங்கம்** āḍaṅgam, பெ. (n.) 1. காலக்கழிவு (தாமதம்); delay. "இன்னுமென்ன ஆடங்கமா" (சர்வசமய. 44). 2. துன்பம்; distress. "ஆடங்கஞ் சற்று மணுகாமல்" (பஞ்ச. திருமுக. 777).

*[ஆடு + அங்கம் - ஆடங்கம். த. ஆடங்கம்>* Skt. āḍaṅka. *]*

**ஆடசை** āḍaśai, பெ. (n.) துவரை; pigeon pea, redgram.

**ம.** ஆடகம்.

*[ஒருகா. ஆடகை → ஆடசை.]*

**ஆடகி** பார்க்க; see āḍagi.

**ஆடம்**[1] āḍam, பெ. (n.) ஆமணக்கு (மலை.); castor-plant. **ஆடமணக்கு** பார்க்க; see āḍamaṇakku.

*[ஆடமணக்கு - ஆடம்.]*

**ஆடம்**[2] āḍam, பெ. (n.) 1. ஒரு முகத்தலளவு (இ.வ.); liquid measure, esp. for oil, about 24 measures (Loc.) (செ.அக.) 2. இருபது (ஆமணக்குக்) கொத்துக் கொண்ட ஓரளவு (கதி. அக.); a measure which contains 20 bunches of castor seeds.

*[ஆடம்[1] → ஆடம்[2]]*

**ஆடம்பரம்**[1] āḍambaram, பெ. (n.) 1. பல்லிய முழக்கம்; din of musical instruments. 2. யானையின் பிளிற்றொலி; elephant's trumpeting. 3. பகட்டார வாரம்; pomp, show, ostentation. "ஆடம்பரங் கொண்டடிசி லுண்பான்" (திருமந். 1655). 4. ஒட்டோலக்கம்; pomp, parade (W.). 5. போர்ப்பறை; battle drum. 6. வேடிக்கை; fun.

**ம.** ஆடம்பர, ஆடம்பரி; **க.** ஆடம்பர; **தெ.** ஆடம்பரமு. Mar. āḍambara.

*[ஆடு + அம்பரம் - ஆடம்பரம். அம்பலம் - அம்பரம்]*

**ஆடம்பரம்**[2] āḍambaram, பெ. (n.) மருளேறிய நிலை; state of being possessed by a spirit.

*[ஆடு + அம்பரம் → ஆடம்பரம்.]*

**ஆடம்பரம்**[3] āḍambaram, பெ. (n.) 1. கண்மடல்; eyelid. 2. சீற்றம் (கோபம்); anger.

*[ஆடு + அம்பரம் → ஆடம்பரம்]*

**ஆடம்பரம்**[4] āḍambaram, பெ. (n.) 1. மகிழ்ச்சி; enjoyment. 2. பெருமை; pride. 3. இறுமாப்பு; arrogance. 4. இன்பம்; bliss.

**ம., க., து.** ஆடம்பர.

*[ஆடு + அம்பரம். அம்பரம் = விழாமுழக்கம், மகிழ்ச்சி]*

**ஆடமணக்கு** āḍamaṇakku, பெ. (n.) ஆமணக்கு (சித். அக.); castor plant.

*[அவிழ் - அவுடம் - ஆடம் + மணக்கு - ஆடமணக்கு. அவிழ் = வித்து, கொட்டை. மணி - மணக்கு]*

**ஆடமரம்** āḍamaram, பெ. (n.) நாட்டு வாதுமை மரம்; country almond tree. (சேரநா.)

**ம.** ஆடமரம்.

*[அவிழ் - அவிழம் - ஆவிடம் - ஆடம் + மரம். அவிழ் = கொட்டை]*

**ஆடரங்கம்** āḍaraṅgam, பெ. (n.) **ஆட்டக்கச்சேரி** பார்க்க; see āṭṭa-k-kaccēri.

*[ஆடு + அரங்கம்.]*

**ஆடரங்கு** āḍarangu, பெ. (n.) 1. நாடகம், நடனம், கூத்து முதலிய நிகழ்ச்சிகள் நடத்துதற்கேற்ற மன்றம்; auditorium. "அறையும் ஆடரங்கும்" (கம்பரா.) 2. பலர் கண்டு மகிழும் ஏந்துள்ள விளையாட்டிடம்; stadium.

*[ஆடு + அரங்கு.]*

**ஆடரவக்கொடியோன்** āḍarava-k-koḍiyōṉ, பெ. (n.) ஆடும் பாம்புக் கொடியுடைய மன்னன், துரியோதனன்; king Duryodhana.

**ம.** ஆடரவக்கொடி

*[ஆடு + அரவம் + கொடியோன்.]*

**ஆடரி** āḍari, பெ. (n.) முருகக் கடவுள் (கதி. அக.); Lord Muruga.

*[ஆடு (வெற்றி) + அரி (செல்வன்).]*

**ஆடருப்பான்கொட்டை** āḍaruppāṉkoṭṭai, பெ. (n.) ஏறழிஞ்சில்; sage leaved alangium (S.D).

**ஆடல்**[1] āḍal, பெ. (n.) 1. அசைதல்; moving, shaking, quivering. "ஆடற் பூங்கொடி ஊடி உரைத்தது" (திருக்கோ.393,கொளு.) 2. சொல்லுதல்; speaking, saying. "யார்க்கும் நன்னய மாடல் செயும்" (கந்தபு. உற்பத். தகரேறு. 24). 3. நீராடல் (பிங்.); bathing. 4. செய்தல் (பிங்.); doing, performing. 5. விளையாட்டு; game, sport. "கந்துக மம்மனை யாடலும்" (பாரத. சம்பவ. 27). 6. கூத்து; dance. "பாடலா ராடலார்" (தேவா. 225.2). 7. நட்புரை (கதி. அக.); friendly talk. 8. இழித்துரைத்தல், பழித்துரைத்தல்; talking ill of. "அச்சம் ஆடலும்" (நன்.31). 9. ஏய்த்தல், ஏமாற்றுதல்; cheating, defrauding

**ம.** ஆடல்; **க., பட.** ஆட; **தெ., து.** ஆட; **கொ.** ஆடு, ஆடா.

*[ஆடு → ஆடல். ஆடுதல் = அசைதல்.]*

**ஆடல்**[2] āḍal, பெ. (n.) 1. ஆளுகை; rule, reign. "பூமியை யாடற் கொத்த பண்பினன்" (சீவக. 1339). 2. புணர்தல் (சூடா.); coition.

**க.** ஆடளித; **து.** ஆடளிதெ.

*[ஆளல் → ஆடல்.]*

**ஆடல்**[3] āḍal, பெ. (n.) 1. கொல்லுதல் (கதி. அக.); killing. 2. துன்பம்; distress, trouble. "அத்தனை ஆடல் கொடுக்கைக்கு" (ஈடு. 9.9. பிர.). 3. போர் (திவா.) war, battle. 4. வெற்றி (பிங்.); victory. 5. வீரம் (கதி. அக.); chivalry, heroism.

**ம.** ஆடல்; **க.** ஆடுளிகதன.

*[அடு → அடல் → ஆடல். அடுதல் = கொல்லுதல், துன்பப்படுத்துதல் தாக்குதல். ஆடல் = அடும் திறன், வீரம், வெற்றி.]*

**ஆடல் கொடு-த்தல்** āḍal-koḍu-, 4. செ.கு.வி (v.i.) 1. இடங்கொடுத்தல்; to yield, to be lenient. "இவ்வாற்றாமைக் கெல்லாம் ஆடல் கொடுத்த ஆழ்வார்" (ஈடு. 8,5,11). 2. துன்பம் நுகர்தல் (ஈடு.9,9,பிர.); to experience hardship

**ம.** ஆடல்ப்பெடுக

*[ஆடல் + கொடு.]*

**ஆடல் பாடல்** āḍal-pāḍal, பெ. (n.) 1. ஆட்டமும் பாட்டும்; game and song. 2. நாட்டியமும் பாட்டும்; dance and song.

**க., து., பட.** ஆட பாட; **கூ.** ஆட பாடலு.

*[ஆடல்பாடல் = ஆடுதல் பாடுதல்.]*

**ஆடல் வேற்றுமை** āḍal-veṟṟumai, பெ. (n.) நின்றாடல் வீழ்ந்தாடல் என்று இருவகைப்பட்ட கூத்து வேற்றுமை; dancing as in standing position and in lying position.

*[ஆடல் + வேற்றுமை.]*

**ஆடலாடல்** āḍalāḍal, பெ. (n.) விளையாடல்; playing. "ஆடலாடல் உறுதியேல்" (பெரியாழ். 1.5.2.).

*[ஆடல் + ஆடல்.]*

**ஆடலார்** āḍalār, பெ. (n.) நாட்டியமகளிர்; female dancers.

*[ஆடல் + ஆர்.]*

**ஆடலிடம்** āḍaliḍam, பெ. (n.) 1. அரங்கம் (திவா.); stage, theatre. 2. விளையாட்டுக் களம்; play ground.

*[ஆடல் + இடம் - ஆடலிடம்.]*

**ஆடலை** āḍalai, பெ. (n.) 1. பூவாத மரம்; tree which does not yield flowers. 2. அரசமரம்; pipal or peepul tree. 3. பூவிளா; a plant. 4. அத்தி; fig tree (S.D.).

*[ஆண்டு = வித்தின் முளை, பூ. ஆண்டு - ஆடு + அல் + ஐ.]*

**ஆடவமுதுமை** āḍavamudumai, பெ. (n.) 48லிருந்து 60 அகவை வரையுள்ள ஆடவர் பருவம்; stage of male between 48 to 60 years of age.

*[ஆடவன் + முதுமை.]*

**ஆடவர்** āḍvar, பெ. (n.) 1. ஆண்மக்கள்; males in general. "ஈட்டம் இவறி இசை வேண்டா ஆடவர்" (குறள். 1003.) 2. இளையோர்; youngsters, youth. 3. இடைப் பருவத்து ஆண்மக்கள். (32 அகவை முதல் 48 வரை); males from 32 to 48 years of age. (or) middle aged male (S.D.).

*[ஆள் → ஆளவன் → ஆடவன் = ஆளுந் திறமை யுள்ளவன். 'ஆர்' ப.பா. ஈறு.]*

**ஆடவர்பருவம்** āḍavar-paruvam, பெ. (n.) குழந்தை, காளை, குமரன், ஆடவன், மூத்தோன், மூதாளன் என ஆண்களின் வளர்ச்சியில் கூறப்படும் பருவ நிலைகள் (வின்.); six stages in the growth of a male.

*[ஆள் → ஆடவர் + பருவம்.]*

**ஆடவர்வகுப்பு** āḍavar-vaguppu, பெ. (n.) இன்பசாரம் என்னும் நூலில் குறிப்பிட்டுள்ளவாறு சசன், இடபன், அச்சுவன் என மூன்று பிரிவாகக் கூறப்படும் ஆடவர்வகுப்பு (கல்லா. 7. மயிலேறும்.); adult human males who, according to the **Inbasaram**, a treatise on erotics, are divided into three classes. (செ. அக.) 2. கொக்கோக முறைப்படி சொல்லப் பட்ட நான்கு வகை ஆடவர் பகுப்பு; human male adult divided according to lust etc., into four classes as laid down in the erotic science of Kokkōga Muni. (S.D.).

*[ஆடவர் + வகுப்பு.]*

**ஆடவல்லான்** āḍavallāṉ, பெ. (n.) 1. கூத்தப் பெருமான்; Nataraja (S.I.I. ii. 125). 2. முதலாம் இராசராசன் காலந்தொட்டு மரக்கால், நிறைகல், தூலாக் கோல்களுக்கு வழங்கி வந்த பழைய பெயர்; standard weight, balance and measure in vogue during the days of the Chola king Rajaraja I, kept for safe custody with the Thanjavur temple authorities (S.I.I. ii. 400, 403, 408).

*[ஆடவல்லான் = கூத்தாடும் சிவன், சிவன் பெயரிலமைந்த அளவுக்கருவிகள்.]*

இராசராச சோழன் தஞ்சாவூரில் குன்ற மன்னதோர் கோயில் எடுப்பித்துத் தன் சிவப்பத்திமையை வெளிப்படுத்திப் புகழ் பெற்றதாலும், சிவன் பெயர் எங்கும் பரவ வேண்டும் என்னும் வேட்கையின் விளைவாகவும் அளவுக் கருவிகளுக்கும் ஆடவல்லான் என்று சிவனின் பெயரிடப்பட்டது.

**ஆடவல பெருமான்** āḍavala-perumāṉ, பெ. (n.) சிவபெருமான்; Śiva as an expert dancer. "ஆரூர் ஆடவல பெருமானைப் பணிவார்" (பெரிய புராணசா. 58).

*[ஆடல்+வல்ல+பெருமான் - ஆடவலபெருமான். வல்ல → வல (தொகுத்தல் திரிபு). பெருமான் = சிவன்]*

**ஆடவள்** āḍaval, பெ. (n.) பெண். ஆடவன் என்பதன் பெண்பால் (பிங்.); woman, female.

**க.** ஆடங்கி.; **தெ.** ஆடதி.

*[ஆளவள் → ஆடவள் = இல்லறப் பணிகளை ஆளுந் திறத்தவள்.]*

**ஆடவன்** āḍavaṉ, பெ. (n.) 1. ஆண்மகன்; man. "ஆடவர் பெண்மையையவாவுந் தோளினாய்" (கம்பரா. தாடகை. 94.). 2. இளைஞன்; youth. (திருக்கோ. 219). 3. ஆண்களுக்குரிய ஆறுபருங்களுள் 32 முதல் 48 அகவை வரையிலான நான்காம் பருவத்தினன்; man between 32 and 48 years of age.

*[ஆள் → ஆளவன் → ஆடவன் = தான் மேற்கொண்ட செயலைத் திறம்பட ஆளும் வன்மை வாய்ந்தவன்.]*

**ஆடவை**[1] āḍavai, பெ. (n.) 1. பருவப் பெண்; young woman. 2. இரட்டை ஓரை (மிதுனராசி); Gemini, a sign of the Zodiac. 3. ஆனிமாதத்தின் தமிழ்ப்பெயர்; Tamil name of the month of Āṉi.

**தெ.** ஆடதி.

*[ஆள் = ஆளப்படும் பெண். **தெ.** ஆலு (மனைவி) ஆளவை - ஆடவை.]*

**ஆடவை**[2] āḍavai, பெ. (n.) ஆடல் அவை, நடன அரங்கம்; dancing hall, stage.

**க.** ஆடும்பொல (திடல்).

*[ஆடு + அவை - ஆடவை.]*

**ஆடவைக்கருந்தலை** āḍavai-k-karundalai, பெ. (n.) கோடை அறுவடைக்கால இறுதியைக் காட்டும் ஆனி என்னும் ஆடவை மாத இறுதி; close of the month of Āṉi, which marks the end of the harvest season.

*[ஆடவை + கருந்தலை.]*

**ஆடவைத்தூக்கம்** āḍavai-t-tū-k-kam, பெ. (n.) ஆடவை (ஆனி) மாதத்தில் கடலில் காணப்படும் அமைதி. (யாழ்ப்); calm prevailing on the sea in the month of Āṉi.

*[ஆடவை + தூக்கம். தூக்கம் = செயற்பாடற்ற அமைதியானதோற்றம்.]*

**ஆடற்கூத்தியர்** āḍaṟkūttiyar, பெ. (n.) அகக் கூத்தாடுங் கணிகையர்; dancing girls who exhibit the erotic emotions of the human mind by means of

gestures while dancing. "காவற் கணிகைய ராடற் கூத்தியர்" (சிலப். 5.50).

*[ஆடல் + கூத்தியர் = ஆடற்கூத்தியர். கூத்தியர் = நடனமாடும் மகளிர்.]*

**ஆடற்கூறுபாடு** ādarkūrupādu uQ. (n.) கூத்தின் பாகுபாடு. இது தாண்டவம், நாட்டியம், நட்டுவம் (நிருத்தம்) என மூவகைப்படும் (கதி. அக.); sub-divisions in dancing.

*[ஆடல் + கூறுபாடு – ஆடற்கூறுபாடு. கூறு படுத்தல் = வகைப் படுத்துதல். கூறுபடு – கூறுபாடு (தொ. பெ.)]*

**ஆடற்பேதம்** ādarpēdam, பெ. (n.) கூத்தினது வேற்றுமை (கதி. அக.); varieties in dancing.

*[ஆடல்+பேதம். **ஆடல்வேற்றுமை** பார்க்க; see ādalvērrumai.]*

**ஆடற்றரு** ādarraru, பெ. (n.) நகைச்சுவைக் கூத்துப் பாட்டுவகை; dancing song, used in comedies.

*[ஆடல் + தரு – ஆடற்றரு. த. தரவு = தரு > Skt. taru.]*

**தரு** பார்க்க; see taru.

**ஆடனூல்** ādanūl, பெ. (n). நாட்டிய நூல்; natya sāstra, treatise on the principles of dancing. "ஆடனூல் வரம்புகண் டவராகி" (திருவிளை. கான்மாறி. 7.).

*[ஆடல் + நூல் – ஆடனூல் = ஆடலைப்பற்றிக் கூறும் நூல்.]*

**ஆடா** ādā, பெ. (n.) 1. நெருப்புக்கு ஓடாத, நெருப்பால் பெரிதும் தாக்குறாத; not volatile or that which does not fume or otherwise disappear on application of heat or fire (S.D.). 2. கால்களிற் கட்டியைப் போலுண் டாகும் குதிரை நோய் (அசுவ. 102); disease affecting horses, in the formation of tumours in the legs.

*[ஒருகா. அடு → அடா → ஆடா. அடுதல் = சுடுதல், வேதல். குதிரையின் காலில் உண்டாகுங் கட்டி. பிறகட்டிகளைப் போல் பழுத்து உடையாததாயும் இருக்கலாம்.]*

**ஆடாச்சரக்கு** ādā-c-carakku, பெ. (n.) சூடேற்று வதால் ஆவியாகிவிடாத மருந்துச் சரக்கு; drugs which do not pass off or disappear, as gas when heated (S.D.).

*[ஆடா பார்க்க see ādā ]*

**ஆடாசம்** ādāsam, பெ. (n.) ஒருவகை நஞ்சு (கெந்தி); a kind of arsenic (S.D.).

**ஆடாதிருக்கை** ādātirukkai, பெ. (n.) ஒருவகைத் திருக்கைமீன்; a kind of shark. **ஆடுவாலன் திருக்கை** பார்க்க; see āduvālan–tirukkai.

**ஆடாதோடை** ādātōdai, பெ. (n.) ஆடுதொடு மூலி என்னும் மருந்துச்செடி; medicinal shrub. **ஆடுதொடு மூலி** பார்க்க; see ādutodumūli

**ம.** ஆடலோட; **க.** ஆடுசோகெ, ஆடசோகெ; **தெ.** அட்டசரமு; **து.** ஆடலோடு, யேட்முட்டந்திதப்பூ; **Skt.** ātarusa; **Pkt.** attalusa; **H.** adusā; **Mar.** adulasa; **Guj.** araduso; **Sinl.** ādātōda.




*[ஆடு + தொடு → ஆடுதொடை → ஆடு தோடை → ஆடாதோடை. தொடு → தொடை (தொடுவது, தொடப்படுவது, தின்பது). ஒ.நோ: கொடு → கொடை (கொடுப்பது, கொடுக்கப்படுவது, கொடுக்கப்படும் பொருள்). ஆடுதொடை → ஆடாதோடை (பேச்சு வழக்கிலுள்ள திரிபு). ஆடாதோடை = ஆடு விரும்பித் தின்னும் தழைகளுள்ள செடி. இதற்கு ஆடுதொடுமூலி என்ற பெயருண்மை காண்க.]*

இதற்கு மருத்துவத்தாய் (வைத்திய மாதா) என்று வடமொழியாளர்கள் பெயரிட்டு வழங்குகின்றனர். ஆடுகள் விரும்பித்தின்னும் இச்செடி 8 முதல் 10 அடிவரை வளரும். இது குறுகலாயும், முனையிற் கூம்பியும், அடித்தண்டிற் கிளைகள் கிளைத்துமிருக்கும். இதன் பூக்கள் மஞ்சளும் நீலமும் கலந்த நிறத்தொடு வெண்புள்ளிகள் படர்ந்துமிருக்கும். இப்பூண்டின் ஒவ்வொரு பகுதியும் மருத்துவத்திற்குதவும். இது சிறிது கசப்பானது;நறுமணமுள்ளது. இதன் காய்கள், இழுப்பும், வலியும் அகற்றும் குணமுள்ளவை. இலைகள், பூக்கள், வேர், பட்டை ஆகியவற்றைப் பொடித்தும் கருக்கிட்டும் பயன்படுத்தப்படும். இலைகள் ஈளை, வலி, இழுப்பு போக்கும்,இருமல், காய்ச்சல், சளி, மார்ச்சளி, ஈளை முதலிய நுரையீரல் நோய்களைக் குணப்படுத்தும்.

இதன் இலையுடன் தூதுவளையையும் கண்டங் கத்தரியையும் சேர்த்துக்கருக்கிட்டுக் (கஷாயம்) கொடுத்தால் வயிற்றிலுள்ள பூச்சிகள் நீங்கும்.

இதனால் அனைத்து நோய் நுண்ணுயிரிகளும் சாகும். மற்றக் கடைச் சரக்குகளுடன் சேர்த்து இளகியமாக்கிக் (லேகியம்) கிளறி உண்ண, ஈளை, மூக்கில் குருதிவடிதல், பல்லில் குருதி வடிதல் ஆகியவை நிற்கும். ஈளை ஊதைக் காய்ச்சல் (கபவாதசுரம்), வயிற்றுப் போக்கு (அதிசாரபேதி), தண்கழிச்சல் (சீதபேதி) முதலியவற்றிலும் குருதி விழுவதைக் குணப்படுத்த இவ்விலைச்சாறு மிகவும் உதவும்.

இதன் இலைச்சாற்றுடன் தேனும் இஞ்சிச்சாறும் சேர்த்து மார்ச்சளி, இருமல், ஈளை ஆகியவற்றுக்கு மருந்தாகக் கொடுக்கப்படும். இதன் வேர் மூலத்தை கெண்டையேறுதல் முதலிய நரம்பு வலிகளுக்கும், மார்ச்சளிக்கும், குழந்தைகள் அள்ளுமாந் தத்திற்கும் கருக்கிட்டுக் கொடுக்கலாம்.

இதன் பூ கண்ணோய்க்கு மேலே வைத்துக் கட்டவுதவும், இதன் வேர்ஈளையை (கபம்) அறுக்கும். இதனுடன் மற்றக் கடைச் சரக்குகளைச் சேர்த்து நெய்மமாக (தைலம்) வடித்து, மார்பு நோய்களுக்கும், இருமலால் ஏற்படும் நெஞ்சுவலிக்கும் பூச்சு மருந்தாகப் பயன்படுத்தலாம்.

யூனானி மற்றும் ஆயுர்வேத மருத்துவர்களும் இதன் பொடி இளகியம், நெய் ஆகியவற்றை மருந்தாகப்பயன்படுத்துவர்.

Malabar wintercherry or Malabar nut shrub–Adhatoda vesica alias A. pubescens. In Sanskrit, it is termed 'Vaidya Matha' which means **physicians** mother i.e. physicians private remedy. It is a medicinal shrub 8 to 10 ft. in height with leaves narrow, and lanceolate; the stem is many branched, flowers with petals, whitish spotted, sulphur coloured at the throat and dark–purpled at the limb. It is so called from its being eaten only by goats. It is commonly found in gardens, hedges, fields, plains and other waste lands in Malabar and other places in S.India, Nepal, Bengal etc.All the parts of this plant are bitterish, slightly aromatic and especially the fruit is supposed to be antispasmodic.

The leaves, flowers, root and bark are all used medicinally, mostly in the form of powder, infusion of the root, and decoction of or extract, from the leaves.

The leaf is an expectorant, antispasmodic and antiperiodic. It is used in cough, asthma, ague, eatarrh, chronic bronchitis, phthysis and other pulmonary affections.

It is given in conjunction with the leaves of Solanum trilobatum (தூதுவளை) and Solanum jacquini (கண்டங்கத்திரி) by our native physicians internally in decoction as an anthelmintic for killing intestinal worms. It also kills other bacterial germs in water. An infusion of this plant is similarly found useful by Dr. Watt as an antiseptic to destroy germs in drinking water. By mixing the leaves with other bazaar drugs, an electuary is prepared and given for consumption, epistaxis, bleeding from the teeth etc.

The juice of the leaves is much valued in cases of pneumonia, diarrhoea and dysentery, especially in hemoptysis and in the bleeding in dysentery. The fresh juice of the leaves mixed with honey or ginger juice is an excellent cough mixture useful in bronchitis, asthma and consumption. The dried leaves are made in to cigarettes and smoked with much benefit in asthma.

A decoction of the whole plant is much used in cramps and intercostal convulsions in children.

The fresh flowers are bound over the eyes in opthalmia. The root is an expectorant and is used as a substitute for senega. The oil prepared from this plant along with other drugs forms an external application in affection of the chest and especially in phthysis.

Unani doctors use this as powder and as an electuary and Ayurvedic doctors prepare also Ghrita and Tailams out of this for curing diseases (S.D.).

**ஆடி**[1] āḍi, பெ. (n.) 1. கண்ணாடி; mirror. "பொன்னினாடியிற் பொருந்துபு நிற்போர்" (மணிமே. 19:90). 2. உவர்மண்ணோடு மணல் சேர்த்துருக்கிச் செய்யும் பளிங்கு; transparent quartz made of sand mixed with fuller's earth-crystal glass (S.D.). "விதிமா ணாடியின் வட்டங் குயின்று" (மணிமே. 8:47). "அடுத்தது காட்டும் பளிங்கு போல்)" (குறள். 206).

**ம., க.** ஆடி; Sinh. āḍassa.

*[ஆடு + இ –ஆடி. தன்னையடுத்தோர் அல்லது பொருளின் உருவநிழலாடுதலால் கண்ணாடியும் பளிங்கும் ஆடி என்று பெயர் பெற்றன.]*

**ஆடி**[2] āḍi, பெ. (n.) 1. காற்று (கதி. அக.); wind. 2. நாரை; crane.

*[ஆடு + இ – ஆடி. ஒருகா. காற்று மோதி ஆடச் செய்யும் இயல்பால் ஆடி எனப் பெயர் பெற்றிருக் கலாம்.]*

**ஆடி**[3] āḍi, பெ. (n.) நண்டு; crab. **ஏடி** பார்க்க; see **ēḍi.**

*[நண்டு → நெண்டு →ஞெடு →ஞெடி → ஏடி → ஆடி. 'ஞெண்டு' தெலுங்கில் 'எண்ட்ற' என்றும், துளுவில் 'ஏடி' என்றும், தமிழ் கன்னட மலையாள மொழிகளில் ஆடி என்றும், சமற்கிருதத்தில் 'ஆஷாட' என்றும் ,உருபு திரிந்தது.]*

**ஆடி**[4] āḍi, பெ. (n.) 1. நான்காம் மாதமாகிய கடகம்; the fourth Tamil month, (July + August.). 2. இருபத் தோராம் நாண்மீன் (நட்சத்திரம்), கடைக்குளம் (உத்திராடம்) (திவா.); 21st star in asterism. 3.

பகலில் 12 நாழிகைக்குமேல் இரண்டு நாழிகை கொண்ட முழுத்தம் (முகூர்த்தம்) (விதான. குணா.73); auspicious time of 48 minutes, from 4h-48m. to 5h-36m. after sunrise.

**ம., க.** ஆடி; **து.** ஆடி

[Skt. āṣaḍa < **த.** கடகம் (ஆடி).]

**கடகம்** பார்க்க; see **kaḍagam.**

**ஆடி**[5] āḍi, பெ. (n.) படியாணி; a kind of nail. (செ.அக)

**ஆடி**[6] āḍi, பெ. (n.) ஓரரக்கனின் பெயர்; name of a demon.

**ஆடி**[7] āḍi, பெ. (n.) கூத்தாடுபவன்; dancer. "மணிப்பை யரவினாடி" (பாரத. அருச்சுனன்றவ. 113).

**ம.,க.** ஆடி

**ஆடிக்கரு** āḍi-k-karu, பெ. (n.) கடக (ஆடி) மாதத்து நீருண்ட மேகம்; dark clouds of the month of Āḍi, indicating plentiful rain in the ensuing monsoon. 'ஆடிக் கருவழிந்தால் மழை குறைந்து போம்'. (வின்).

*[ஆடி + கரு.]*

**ஆடிக்கழைத்தல்** āḍikkaḻaittal, பெ. (n.) 1. கடக (ஆடி) மாதம் பிறந்ததும் மாப்பிள்ளையைப் பெண் வீட்டுக்கு அழைத்தல்; inviting newly wed man to a feast at the bride's house on the 1st of Āḍi . 2. புதிதாக மணஞ்செய்து கொடுத்த பெண்ணை கடக (ஆடி) மாதம் முழுவதும் தாய் வீட்டில் தங்கியிருப்பதற் காக அழைத்தல்; taking away or separating the bride from her husband, and putting her under the care of parents during the month of Āḍi of their first year of marriage. This separation is indispensable to prevent conception in that month and delivery in the coming April which is believed to bring ruin upon the family (W.).

*[ஆடிக்கு + அழைத்தல்.]*

**ஆடிக்காருவா** āḍi-k-kāruvā, பெ.. (n.) **1. கடகக் காருவா** பார்க்க; see kaḍaka-k-kāruvā. 2. கடக (ஆடி) மாதத்துக் காருவா (அமாவாசை) நாள்; ஒரு நன்னாள்; new moon of Āḍi, auspicious day.

*[ஆடி + காருவா]*

**ஆடிக்கால்** āḍi-k-kāl பெ. (n.) வெற்றிலைக்கொடி படர்வதற்கு முன்னேற்பாடாகக் கடக (ஆடி) மாதம் வயலில் நடும் அகத்தி (இ.வ.); West Indian pea-tree, planted in the month of Āḍi, in fields to serve as a support for betel creepers.

*[ஆடி + கால்.]*

**ஆடிக்காற்று** āḍi-k-kāṟṟu, பெ. (n.) கடக (ஆடி) மாதத்தில் கடுமையாக வீசும் தென்மேற்குப் பருவக் காற்று; high monsoon winds blowing from southwest, such as those characteristic of Āḍi. "ஆடிக்காற்றில் அம்மியே பறக்கும் போது இலவம் பஞ்சு எம்மாத்திரம்?" (பழ.).

*[ஆடி + காற்று]*

**ஆடிக்குறி** āḍi-k-kuṟi, பெ. (n.) கடக (ஆடி) மாதத்து வளர்பிறையின் ஐந்தாம் பிறை (பஞ்சமி), ஞாயிறு வரின் மழை குறைவு, திங்கள் வரின் பெரு வெள்ளம், செவ்வாய்வரின் சண்டை (போர்), அறிவன் (புதன்) வரின் பெருங்காற்று, வியாழன் வரின் நல்ல விளையுள், வெள்ளி வரின் பெரு மழை, காரி (சனி) வரின் விளை வில்லை யென்று மக்களிடை நிலவும் நம்பிக்கை (அபி. சிந்.); fifth day of the moon during the month of Āḍi (July - August) which according to the belief of common people, will bring low rain if it falls on Sunday, flood on Monday, war on Tuesday heavy wind on Wednesday, good harvest on Thursday, heavy rain on Friday and no harvest on Saturday.

*[ஆடி + குறி. குறி = அடையாளம்.]*

**ஆடிக் குறுவை** āḍi-k-kuṟuvai, பெ. (n.) நெல்வகை; a kind of short term paddy. (Pudu. Ins. 191).

*[ஆடி + குறுவை. குறுகியகாலத்தில் அறுவடை செய்யும் நெல்லுக்குக் குறுவை எனப்பெயர். அந் நெல் கடக மாதமாகிய ஆடிமாதத்தில் அறுவடை செய்தலால் ஆடிக்குறுவை எனப்பெயர் பெற்றது.]*

**ஆடிக்கோடை** āḍi-k-kōḍai, பெ. (n.) கடக (ஆடி) மாதத்தில் அறுவடையாகும். நெல். (இ.வ.); extra rice-crop, harvested during the month of Āḍi.

*[ஆடி + கோடை.]*

**ஆடிச்சி** āḍicci, பெ. (n.) கழைக்கூத்தாடிப் பெண் (புதுவை); woman who is an acrobat.

*[ஆடிச்சி = ஆடுபவள். சி - பெ. பா. ஈறு.]*

**ஆடிடம்** āḍiḍam, பெ. (n.) 1. விளையாடுமிடம்; play-ground. "மன்னி யாடிடஞ் சேர்வர்கொல்" (திருக்கோ. 37.). 2. கூத்தாடுமிடம்; dancing stage.

*[ஆடு + இடம்]*

**ஆடித்திகைந்தான்** āḍi-t-igaindāṉ, பெ. (n.) சிற்றா முட்டி; plant.

**ஆடித்திங்கள்** ādi-t-tiṅgaḷ, பெ. (n.) கடகத் திங்கள்; Tamil month Kaḍagam. (Ādi) "ஆடித் திங்கள் பேரிருள் பக்கத்து" (சிலப். 23. 133.).

*[ஆடி + திங்கள்.]*

**ஆடிப்பட்டம்** ādi-p-paṭṭam, பெ. (n.) கடக (ஆடி) மாதத்துப் பயிரிடும் பருவம்; cultivation season in the month of Ādi. "ஆடிப்பட்டம் தேடி விதை." (பழ).

க. ஆடிகத்தெ.

*[ஆடி + பட்டம்.]*

**ஆடிப்பண்டிகை** ādi-p-paṇḍigai, பெ. (n.) கடக (ஆடி) மாதப்பிறப்புக் கொண்டாட்டம்; first day of Ādi, a day of feasting, mutual visits, when the sun is supposed to enter on its southern course (W.).

*[ஆடி + பண்டிகை.]*

**ஆடிப்பால்** ādi-p-pāl, பெ. (n.) கடக (ஆடி) மாதப் பிறப்பன்று செய்யும் விருந்தில் இடம் பெறும் தேங்காய்ப்பாலுணவு (இ.வ.); dish made of the milk of the coconut kernal and it is also the piece-de-resistance on the occasion of the first, day of Ādi.

*[ஆடி + பால்.]*

**ஆடிப்பாவை** ādi-p-pāvai, பெ. (n.) ஆடியில் (கண்ணாடியில்) தோன்றும் உரு; image in a mirror. "ஆடிப்பாவை போல" (குறுந். 8.).

*[ஆடி + பாவை.]*

**ஆடிப்பூச்சு** ādi-p-pūccu, பெ. (n.) கானல்; mirage.

*[ஆடி + பூச்சு. பூச்சு = தோற்றம்.]*

**ஆடிப்பூரம்** ādi-p-pūram, பெ. (n.) கடக (ஆடி) மாதத்துக் கணை (பூர) நாண்மீனன்று நடைபெறும் அம்மன் திருவிழா; festival celebrated in honour of the goddess in temples on the Pūram day in Ādi.

*[ஆடி + பூரம்]*

**ஆடிப்பெருக்கு** ādi-p-perukku, பெ. (n.) கடக (ஆடி) மாதம் பதினெட்டாம் நாளன்று காவிரியில் வெள்ளம் பெருகுவதைக் கொண்டாடும் விழா; festival held on the 18th day of Ādi when the river Kaviri is supposed to be in spate.

*[ஆடி + பெருக்கு. பெருக்கு = வெள்ளப்பெருக்கு.]*

**ஆடிப்போ-தல்** ādi-p-pō-, 8 செ.கு.வி. (v.i.) கட்டுக் குலைந்து போதல், ஆட்டங்காணுதல்; to become shaky.

*[ஆடி + போ – ஆடிப்போ (கூட்டுவினை).]*

**ஆடியகூத்தன்** ādiya-kūttaṉ, பெ. (n.) தில்லை மரம் (சித்.அக.); blinding tree.

**ஆடியமாவாசை** ādi-y-amāvāšai, பெ. (n.) கடகக் காருவா பார்க்க; see kaḍaka-k-kāruvā.

*[ஆடி + அமாவாசை.]*

ஆடியமாவாசையைத் தமிழில் கடகக்காருவா என்பர்.

**ஆடியல்** ādiyal, பெ. (n.) அசையுந் தன்மை ; shaking "ஆடியல் பெருநாவாய்" (மதுரைக்.83).

*[ஆடு + இயல்.]*

**ஆடியற்பெயர்** ādiyaṟ-peyar, பெ. (n.) இளந்துணை மகார் தம் விளையாட்டு வகையான் தாமே அப்போதைக்குப் பட்டிபுத்திரர், கங்கை மாத்திரர் என்றாற் போலப் படைத்திட்டுக் கொண்ட பெயர்; assumed name as pseudonym chosen by players to suit the particular game. "கூடிவரு வழக்கின் ஆடியற் பெயரே" (தொல்.சொல்.165).

*[ஆடு + இயல் + பெயர்.]*

**ஆடியறவெட்டை** ādi-y-aṟavettai, பெ. (n.) கடக (ஆடி) மாதத்திலுண்டாகும் பொருள் முடை (இ.வ.); time of high prices or scarcity, usu. associated with the month of Ādi (Loc.).

*[ஆடி + அற + வெட்டை. அற = முற்றிலும்; வெட்டு → வெட்டை = இல்லாமற்போதல், பொருள் தட்டுப்பாடு. உழவர்களிடம் பொருள்முடையும் பணமுடையும் ஏற்படுங்காலம் என்னும் கருத்தில் ஆடியறவெட்டை என்னும் தொடராட்சி தோன்றியிருக்கலாம்.]*

**ஆடியோடுஞ்சரக்கு** ādiyōḍuñ-carakku, பெ. (n.) முதலில் நெருப்பிற் கருகிப் பின் நில்லாமல் மறைந்து பதங்கிக்கும் சரக்கு; mineral which first melts in a crucible and is then sublimated gradually as mercury, sulphur, etc., do.

*[ஆடி + ஓடும் + சரக்கு .*

**ஆடிவழி** ādi-vaḻi, பெ. (n.) புதிய மணமக்களை முதலாண்டின் கடக (ஆடி) மாதத்தில் பெண்வீட்டார் அழைத்து வந்து செய்யும் சீர் (தெ. ஆ.); presents made by the bride's parents to the couple at the feast given to them during Ādi.

*[ஆடி + (அழை) வழி).]*

**ஆடிவாலான்** ādi-vālaṉ, பெ. (n.) நெல்வகை; a kind of paddy (P.T.L.).

**ஆடிவில்லை** āḍi–villai, பெ. (n.) உருப் பெருக்கிக்காட்டுங் கண்ணாடி; lens.

*[ஆடி + வில்லை.]*

**ஆடிவெள்ளி** āḍi–veḷḷi, பெ. (n.) கடக (ஆடி) மாதம் மூன்றாம் வெள்ளியன்று வாழ்வரசியர் (சுமங்கலி கள்) நோற்கும் நோன்பு; religious ceremony observed by married women on the 3rd Friday of the month of Āḍi, with a view to praying the Amman goddess to bestow longevity and for the welfare of their husbands and families.

*[ஆடி + வெள்ளி.]*

**ஆடு¹–தல்** āḍu–, 5. செ.கு.வி.(v.i.) 1. அசைதல்; to move, to wave, to swing, to shake, to vibrate. ஆடு கழை. 2. கூத்தாடுதல் (பிங்.); to dance, to gesticulate, to play. "அம்பலத்தாடுவான்" (பெரியபு. கடவுள் வா). 3. விளையாடுதல்; to play. "அகன்மலையாடி" (மணிமே.10;55). 4. நீராடுதல்; to bathe, to play in water. "பூக்கமழ் பொய்கை யாடச் சென்றோன்" (மணிமே. 17:32). 5. பொருதல்; to fight.. "மற்றவனோ டாடி...........மாய்ந்ததனை" (கந்தபு. யுத்த. சிங்கமு.460). 6. அலைதல், திரிதல்; to go, to proceed, to wander about, to pass to and fro. "ஆடித் திரிந்து நான் கற்றதும் கேட்டதும்" (தாயு. சச்சிதா.5). 7. முயலுதல்; to practise, to persevere, to make continued exertion. "இளையயானே ஆடுமகன்" (பழமொ. 150). 8. பிறத்தல்; to be born. "மாசை மாக்கடன் மன்னவ னாடலின்" (சீவக.911). 9. உலாவுதல்; to wander. "இளமழை யாடும்" (கலித்.41). 10 சுற்றிவருதல்; to rotate. பம்பரம் ஆடுகிறது. 11. சண்டையில் திரிதல்; to move as if in a fight. "வருந்தி ஆடினாள் பாடினாள்" (தனிப்பா. தி.1.பக்.103). 12. அளவுக்கு மீறி அதிகாரஞ் செய்தல்; to exercise powers transgressing the limits. ஒரேயடியாய் ஆடாதே (உ. வ.). 13. மனந்தளர்தல், மனங்குழம்புதல்; to vacillate, to be confused. ஆடிய உள்ளம். 14. வலி தளர்தல்; to become weak. புல் ஆடிப் போயிற்று (உ.வ.). 15. ஒலித்தல்; to throb. வண்டாடும் பூம்பொழில். 16. துடித்தல்; to quiver. "வாட் கண்ணிடனாட" (பு.வெ. 12). 17. குலுங்குதல்; to shudder, to tremble. கையில் வளையாடுகிறது. 18. தடுமாறுதல் (புதுவை); to be disconcerted (Pond.). 19. பொறி (எந்திரம்) முதலிய வற்றில் அரைத்தல்; to be crushed in a mill. "ஆடுகைக்குப் பக்குவமான கரும்புபோல இனிதாயிருக்கிற மொழியையும்" (திவ்.பெரியாழ். 2.9.5,வியா.பக். 464). 20. விழுதல்; to fall. "இவளிடையை யாசைப் பட்டாயிற்று கோட்டிடை யாடிற்று" (திவ். பெரியதி. 1.2.3, அரும். பக். 65). 21. புணர்தல் (நாமதீப.); to cohabit. 22. செருக்குதல்; to be proud or conceited.–5,செ. குன்றாவி. (v.t.). 23. சொல்லுதல்; to tell. "அவர் சொல்லியவாறே யாடினார்" (திருவிளை. விறகு.61). 24. செய்தல்; to do, perform, to fight, "அமராடுதல்" (பிரபோத. 27,21). 25. நுகர்தல்; to enjoy. (சிலப்.பதிக.15). 26. பூசுதல்; to rub, to smear as with sandal paste. சந்தனம் ஆடிய மேனி. 27. அளைதல், துழாவுதல்; to mix, to stir. வண்டு தேனாடியது. ம.வி. (idio–u) 28. அசைந்தாடுதல், மென்மெல அசைதல்; to sway. தென்றலில் பூங்கொடி அசைந்தாடுகிறது. 29. ஆலையாடுதல், ஆலையிலிட்டு அரைத்தல்; to crush in a machine. இன்றுதான் கரும்பு ஆலையாடி முடிந்தது. 30. இணலாடுதல்–புணர்தல்; to copulate, as snake do. பாம்பு இணலாடுகிறது. 31. ஈயாடுதல்– ஈமொய்த்தல்; to swarm about. இனிப்புள்ள இடத்தில் ஈயாடும். 32. ஈயாடாமை–பொலிவின்மை; to show no emotion. அவன் முகத்தில் ஈயாடவில்லை. 33. உண்டாடுதல் – விருந்துண்டு மகிழ்தல்; to revel. உண்டாடும் செல்வரா நாம்? 34. உரையாடுதல் – கலந்து பேசுதல்; to converse. அவரொடு நாங்கள் உரையாடினோம். 35. உறவாடுதல் நட்புக் கொள்ளுதல்; to become friendly. பகையாளி குடியை உறவாடிக் கெடு. 36. ஊடாடுதல்– இடைப்புகுதல்; to intervene. ஐயம் ஊடாடாத நட்பு. 37. எண்ணெயாடுதல் – செக்கிலிட்டு அரைத்தல்; to press oil seeds. ஒரு மூட்டை எள்ளை எண்ணெயாடினர். 38. எடுத்தாடுதல் – சொல்லிக் காட்டுதல்; to mention and dwell on – as one's own good actions. பெரிய உதவி செய்துவிட்டவள்போல் அவள் என்னை எடுத்தாடி விட்டாள் (உ.வ.). 39. எதிராடுதல் – எதிர்த்துப் பேசுதல்; to oppose. என்னோடு எதிராட உனக்கென்ன துணிச்சல்? 40. ஒப்புக்கு ஆடுதல் – பற்றுள்ளவன் போல் நடித்தல்; to behave as if interested. அவன் ஒப்புக்கு ஆடுகிறான், நம்பாதே. 41. ஒளிந்தாடுதல் – நம்பிக்கையூட்டி ஏமாற்று தல்; to deceive by giving hope. இந்த ஒளிந்தாட்டமெல்லாம் என்னிடம் செல்லாது. 42. (அ). ஓடியாடுதல் – விரைந்து செயற்படல்; to act vigorously. அவரால் முன்னைப் போல ஓடியாட

முடியாது. (ஆ). ஓடியாடுதல் – அலைந்து வேலை செய்தல் ; to run hither and thither, work hard. இளமைக் காலத்தில் ஓடியாடிச் சம்பாதித்தார். 43. (அ). ஓரியாடுதல் – தன்னை எவரும் தொடமுடியாதபடி நீருள் மூழ்கியும் நீந்தியும் நெடுநேரம் விளை யாடுதல்; to play in water by diving and swimming so as to make it impossible for others to catch him. ஓரியாடுதலில் அவன் வல்லவன். (ஆ). ஓரியாடுதல் – துணைக்கு எவருமின்றித் தானே வருந்திப் பணியாற்றுதல் ; to work all alone without help. அவளொருத்தியே ஓரியாடுகிறாள்; யாராவது துணைக்குப் போகக் கூடாதா? 44. கடலாடுதல் – விழாவின் போது கடலில் நீராடுதல்; to bathe or swim in the sea. இந்திர விழாவின் போது மக்கள் கடலாடுவர். 45. கண்டவ னோடாடுதல் – கண்டவர்களோடு பழகுதல்; to move with worthless people. கண்டவனோடாடிச் செல்வமெல்லாம் தொலைத்துவிட்டான். 46. கண்ணாமூச்சியாடுதல் – ஒளித்து வைத்துப் பேசுதல்; play hide and seek. என் புத்தகம் எங்கே சொல், என்னோடு கண்ணாமூச்சியாட வேண்டாம். 47. (அ) கயிறாடுதல் – கயிற்றின் மேல் நடக்கும் கழைக்கூத்தாடுதல்; to perform on stretched rope. 'ஆரியர் கயிறாடு பறையின்" (குறுந்.7.). (ஆ)' கயிறாடுதல் – கயிற்றின் இரு முனைகளையும் இரு கைகளில் பிடித்தவாறு மேல் கீழாக வீசிச் சுழற்றிச் சிறுமியர் குதித்தாடும் விளையாட்டு; to play with skipping ropes. அவள் நன்றாகக் கயிறாடுகிறாள். 48. களித்தாடுதல் – பெருமகிழ்ச்சியடைதல்; to rejoice. பிறந்த நாளன்று மாமா பரிசுப் பொருள்களோடு வரக்கண்டு குழந்தைகள் களித்தாடினர். 49. கழையாடுதல் – கழைக் கூத்தாடுதல்; to dance on a pole. அவன் கழையாடலில் வல்லவன். 50. காலாடுதல் – செல்வமுடையராதல்; to become rich. "காலாடு – போழ்தில் கழிகிளைஞர் வானத்து மேலாடு மீனின் பலராவர்" (நாலடி.113) 51. (அ). காற்றாடுதல் – காற்று வீசுதல்; to blow. இன்று கொஞ்சமும் காற்றாடவில்லை. (ஆ) காற்றாடுதல் – உலர்தல்; to dry in the wind. ஈரத்துணியைக் காற்றாடப் போடு. 52. குடித்தாடுதல்; மது வருந்திச் செல்வம் அழித்தல்; to squander wealth through drinking. அவன் சொத்தெல்லாம் குடித்தாடி விட்டான். 53. குறையாடுதல் – விலை குறைக்கு மாறு கெஞ்சிக் கேட்டல்; to ask repeatedly to lower the price. நாளெல்லாம் குறையாடினாலும் விலை குறையாது. 54. கூத்தாடுதல் – மகிழ்ச்சி யிற்றிளைத்தல்; to revel in happiness. முதல் வகுப்பில் தேறியதற்காக ஒரேயடியாகக் கூத்தாடுகிறான். 55. கெஞ்சிக் கூத்தாடுதல் – விடாமல் குறையிரந்து கேட்டல்; to beg, to request repeatedly. நீ என்ன தான் கெஞ்சிக் கூத்தாடினாலும் அவன் தரப் போவதில்லை. 56. கையாடுதல் – பணம் மோசடி செய்தல்; to swindle money. அவன் ஒரு பெருந்தொகையைக் கையாடி விட்டான். 57. (அ) கொண்டாடுதல் – புகழ்தல்; to praise. கொடுப்பவனை எல்லாரும் கொண் டாடுகின்றனர். (ஆ). கொண்டாடுதல் – விழாச் செய்தல்; to celebrate a festival. நாங்கள் பிறந்த நாள் கொண்டாடினோம். 58. கோலாடுதல் – அடித்தல்; to beat with a stick. கோலாடினால் குரங்காடும். 59. சதையாடுதல் – அன்பு (பாச) உணர்வு வெளிப்படுதல்; to express feeling of affection, attachment. தன்னை மதிக்காத மகனென்றாலும் அவன் நோய்வாய்ப்பட்டதறிந்து தந்தை கதறுகிறார்; தானாடாவிட்டாலும் தன் சதையாடுகிறது. 60 (அ). சாமியாடுதல், மருளேறியாடுதல்; to speak and act as if possessed by a spirit. அவன் நேற்றுச் சாமியாடினான். (ஆ). சாமியாடுதல் – அலைக்கப் படுதல்; to undergo suffering frequently. எனக்கு ஒன்றுந் தெரியாதென்று ஏய்க்கப் பார்க்கிறான்; அவனைச் சாமியாட வைக்கிறேனா இல்லையா பார். 61. சீறாடுதல் – பிணங்கிக் கொள்ளுதல்; to get angry and quarrel. அவள் சீறாடிக் கொண்டு தாய்வீட்டுக்குப் போய்விட்டாள். 62. சும்மா ஆடுதல், காரணமின்றிப் பேசுதல் அல்லது செயற்படுதல்; to speak or act without reason. கண்டவன் பேச்செல்லாம் கேட்டு இப்படிச் சும்மா ஆடாதே. 63. சூறையாடுதல் – கொள்ளை யடித்தல்; to rob, to plunder. திருடர் புகுந்து அவன் கடையைச் சூறையாடி விட்டனர். 64. சொல்லாடுதல் – பேச்சுக் கொடுத்தல்; to converse. அவனோடு சொல் லாடிப்பார். 65. சோற்றுக்கு ஆடுதல் – சோற்றுக்காகச் சொன்ன படி செய்தல்; to do anything just to eke out a living. அவன் சோற்றுக்கு ஆடுகிறவன். 66. சோற்றுக்குத் திண்டாடுதல் – வறுமையில் வாடுதல்; to starve and suffer from poverty. அவன் சோற்றுக்குத் திண்டாடுகிறான். 67. தலை கால் தெரியாமல் ஆடுதல் – செருக்குடன் நடத்தல்; to

**behave with pride.** திடீரென்று பணக் காரனாகி விட்டதால் அவன் தலை கால் தெரியாமல் ஆடுகிறான். 68. **தலைமேல் வைத்துக் கொண்டாடுதல்**–அளவுக்கு மீறிப் போற்றுதல்; **to praise excessively.** தொடக்கத்தில் 'அவரே என் தலைவர்' என்று தலைமேல் வைத்துக் கொண்டாடினான். 69. **தலை மேல் தூக்கி வைத்துக் கொண்டு ஆடுதல்** – கட்டுக்கடங்காத பற்றால் அடிமையாதல்; **to shower love in excess and become a slave to it.** திருமணமான புதிதில் அவளைத் தலைமேல் தூக்கி வைத்துக் கொண்டு ஆடினான். 70. **தலையாடுதல்** –தலைநடுங்குதல்; **shake of head because of old age.** அந்த மூதாட்டிக்குத் தலையாடுகிறது. 71. **தலைவிரித்தாடுதல்** –மிக்குப் பரவி மேலோங்கி நிற்றல்; **to dominate by wide spreading.** எங்கும் வறுமை தலைவிரித்தாடுகிறது. 72. **திக்குமுக் காடுதல்** – திணறுதல்; **to be choked strangled.** என்ன செய்வதென்றறியாமல் திக்கு முக்காடினான். 73. **திண்டாடுதல்** – எய்தப்பெறாது வருந்துதல்; **to lament over not acquiring.** செலவுக்குக் காசு இல்லாமல் திண்டாடினான். 74. **திருமுழுக்காடுதல்** – தெய்வத் திருமேனியை முழுக்காட்டுதல்; **to ceremoniously immerse an idol in water.** இறைவன் திருமுழுக்காடுங் காட்சி அடியார்க்கு இன்பந்தரும். 75. **நகையாடுதல்** – எள்ளி நகைத்தல்; **to laugh derisively.** அவன் கோலத்தைக் கண்டு அனைவரும் நகையாடினர். 76. (அ). **நடமாடுதல்** – அங்குமிங்கும் நடத்தல்; **to walk about.** அவர் நோய்வாய்ப்பட்டதிலிருந்து சரியாக நடமாடுவதில்லை. (ஆ). **நடம் ஆடுதல்** – நடனம் ஆடுதல்; **to dance.** இறைவன் நடம் ஆடும் கோயில் தில்லையம்பலம். 77. (அ). **நாடகமாடுதல்** – நடித்தல்; **to act as in a play.** நன்றாக நாடகமாடுகிறாள் இவள். (ஆ). **நாடகமாடுதல்** – நடித்து ஏமாற்றுதல்; **to cheat by acting cleverly.** இப்படி நாடகமாடியே என் செல்வமெல்லாம் கரைத்து விட்டார்கள். 78. **நாவாடுதல்** – பேச்சுக்குப் பேச்சு எதிர்த்துப் பேசுதல்; **to retaliate.** இப்படி நாவாடினால் எந்த மாமியார் தான் பொறுத்துக் கொள்வாள்? 79. **நிழலாடுதல்** — குறிப்பாகத் தோன்றுதல்; **to appear like a shadow.** வெற்றி பெறுவேன் என்பதற்கான அறிகுறிகள் நிழலாடுகின்றன. 80. **நின்றாடுதல்** — நிலை பெயராமல் சுழலுதல்; **to rotate firmly fixed to a spot.** பம்பரம் நின்றாடுகிறது. 81. (அ). **நீராடுதல்** — நீர் நிலையிலிறங்கிக் குளித்தல்; **to bathe in stagnant or running water.** அவர் ஆற்றில் நீராடினார். (ஆ). **நீராடுதல்** — வாலாமை நீங்கக் குளித்தல்; **to bathe after menstruation or child birth.** மகவீன்ற அவள் இன்று நீராடினாள். (இ). **நீராடுதல்** — முழுக்க வியர்த்தல்; **to perspire, to sweat.** வெயிலில் இரைக்க இரைக்க ஓடி வந்ததால் அவர் உடம்பு நீராடிப் போயிற்று. 82. **நீறாடுதல்** — இடித்துப் பொடிபடச் செய்தல்; **to pulverise.** "இருநிலக் கரம்பைப் படுநீ றாடி" (பெரும்பாண்.93). 83 (அ). **நெளிந்தாடுதல்** — ஒசிந்தாடுதல்; **to dance twisting the waist.** பாம்பைப் போல் அழகாக நெளிந்தாடுகிறாள். 84 (அ). **பகடையாடுதல்** – சூதாடுதல்; **to gamble.** தருமன் பகடையாடி நாடிழந்தான். (ஆ) **பகடையாடுதல்** — எளிதில் பணம் திரட்டுதல்; **to earn by easy means.** இதென்ன பகடையாடிக் கிடைத்த சொத்தா? 85. (அ) **படமாடுதல்** – உருவப்படம் அல்லது உருவச்சிலை இருத்தல்; **presence of idol or photo.** "படமாடுங்கோயில் பரமற் கொன்றீயில்" (திருமந்.). (ஆ). **படம் ஆடுதல்** — திரையிடப்படுதல்; **to screen a film.** அந்தக்கொட்டகையில் என்ன படம் ஆடுகிறது? 86. **படமெடுத்தாடுதல்** — சீறிப் பேசுதல்; **to speak with fury.** அவன் ஏன் இப்படிப் படமெடுத்தாடுகிறான்? 87. **பணம் ஆடுதல்** – செல்வம் மிக்கிருத்தல்; **to have plenty of money.** அவனிடம் பணம் ஆடுகிறது. 88. **பணம் கட்டி ஆடுதல்** – பணத்தைப் பந்தயமாக வைத்து ஆடுதல்; **to lay money as bet.** சீட்டாடுவோர் பணம் கட்டி ஆடுவது தவறு. 89. **பணம் விளையாடுதல்** – பணம் செலவழித்து நினைத்ததை முடித்தல்; **to achieve things desired by bribing.** அவன் வென்றதன் காரணம் பணம் விளையாடியதுதான். 90. **பந்தாடுதல்** – செம்மையாக உதைத்தல்; **to give a severe kick.** அந்தத் திருடன் கிடைத்திருந்தால் எல்லோரும் அவனைப் பந்தாடிவிட்டிருப்பார்கள். 91. **பம்பரமாடுதல்** – ஓய்வின்றி அலைந்து வேலை செய்தல்; **to work hard without taking rest..** ஒரே நேரத்தில் அத்தனை வேலை கொடுத்தால் என்ன செய்வது? என்னால் பம்பரமாட முடியாது. 92. **பாய்ந்தாடுதல்** – அஞ்சத்தக்க விரைவுடன் விளையாடுதல்; **to play with such speed as to frighten the opponents.;** சடுகுடு விளையாட்டில் அவன் பாய்ந்தாடினால் எதிரணி தோற்பது உறுதி. 93. **புகுந்து விளையாடுதல்** – திறங்காட்டி ஆடுதல்; **to play**

with remarkable skill. அந்த வேலையை அவனிடம் கொடுங்கள்; புகுந்து விளையாடிவிடுவான். 94. பூத்தாடுதல்–அழகால் பொலிதல்; to shine with beauty. தாமரை பூத்தாடுகிறது. 95. பேயாடுதல் – தனக்குத் தானே வருந்துமாறு செய்தல்; to make one feel sorry for his own faults. எனக்கொன்றும் தெரியாதென்று நினைத்திருக்கிறான். நான் அனைத்தையும் வெளிப்படுத்தினால் அவன் பேயாடுகிறானா இல்லையா என்று பார். 96. பொடியாடுதல் – புழுதி படிதல்; to be covered with dust. "பொன்னுறு நறுமேனி பொடியாடிக் கிடப்பதோ" (சிலப்.19,40).97. (அ). போராடுதல் – தொடர்ந்து சண்டையிடுதல், இடைவிடாமல் முயலுதல்; to struggle continuously to work hard restlessly to achieve the objective. எத்தனை காலம்தான் போராடுவது? போராடாமல் நலம் விளையுமா? (ஆ). போராடுதல் – மல்லுக்கு நிற்றல். தொடர்ந்து வம்புச் சண்டைக்கு நிற்றல்; to argue unnecessarily. உன்னோடு போராட என்னால் முடியாது. 98. மஞ்சாடுதல் – வெண் மேகம் தவழ்தல்; white cloud seen above the hills or mountain. மலைமேல் மஞ்சாடுகிறது. 99. மல்லாடுதல் –விடாப்பிடிச் சண்டையிடுதல்; to quarrel wantonly. அவளோடு மல்லாட யாரால் முடியும்? 100. மாலாடுதல் – கயிற்றைப் பிடித்துத் தொங்கிய வாறு ஊசலாடுதல்; to swing by gripping the rope with one hand. வேடன் மலைத் தேனழிக்க மாலாடு கிறான். (ஆ). மாலாடுதல்–வட்டக் காட்சியில் விளையாட்டு வீரர் கயிற்றூசல் கம்புகளை மாறிப் பற்றிப் பாய்ந்தாடுதல்; to perform on aerial trapeze. கோமாளிகூட வட்டக் காட்சியில் வேடிக்கையாக மாலாடிக் கீழே விழுகிறான். 101. மன்றாடுதல் – கெஞ்சிக் கேட்டுக் கொள்ளுதல்; to make a humble request. தன்னை மன்னிக்குமாறு மன்றாடினான். 102. மாறாடுதல்– மாறான கருத்தைக் கூறுதல்; to speak opposing a doctrine. இந்தக் கொள்கைக்கு அவன் சார்பாக இருப்பான் என்று நினைத்தோம். ஆனால் அவனே மாறாடுகிறான். 103. மூச்சாடுதல்–உயிரிருத்தல்; to breathe gently to show presence of life. அவன் இறக்கவில்லை, இன்னும் மூச்சாடுகிறது. 104. வழக்காடுதல் – வழக்குத் தொடுத்தல்; to file a case. உன்மீது வழக்காடப் போகிறேன். 105. வளையாடுதல் – மங்கலமாதல்; to become auspicious. வளையாடுங்கையால் உண வுண்ண வேண்டும். 106. வளைந்தாடுதல்– இசைந்து செல்லுதல், ஒத்துப் போதல்; to consent, acquise. உன் விருப்பத்துக்கு என்னால் வளைந்தாட முடியாது. 107. வாயாடுதல்–தொடர்ந்து பேசித் தீர்த்தல்; to go on speaking to one's own satisfaction. என்னதானிருந்தாலும் இப்படி வாயாடக் கூடாது. 108. வாலாடுதல் – பலரிருப்பவும் வேண்டு மென்றே தான் முந்திச் செய்தல்; to carry out a work not wanted by. தலையாடுமுன்னே வாலாடுகிறது பார்த்தாயா? 109. வீம்புக்கு ஆடுதல் – தன் இயலாமையை வெளிக்காட்டிக் கொள்ளாமல் செயற்படுதல்; to do a work concealing one's inability. அந்தப் பயல் வீம்புக்கு ஆடுகிறான்; அந்த வேலை அவனால் முடியாது. 110. வேடங்கட்டியாடுதல் – திறமையாகப் பொய்த்து நடித்தல்; to act with talent. நீ என்னதான் வேடங்கட்டியாடினாலும் இங்கு ஒன்றும் நடக்காது. 111. வேண்டுமென்றே ஆடுதல் – வம்புக்கிழுத்தல்; to indulge in a quarrel wantonly. நான் சும்மாயிருந்தாலும் அவன் வேண்டுமென்றே ஆடுகிறான். 112. விலையாடுதல் – விலை பேசுதல் (நெல்லை.); to bargain. 113. களையாடுதல் – பிஞ்சு பிடித்தல்; forming of young fruit. பலாமரம் களையாடியிருக்கிறது (நெல்லை.). 114. நாடாடு தல்–பலவிடங்களில் திரிதல்; to wander. அவன் ஒரு நாடாடி (உ.வ.). 115. உடனாடுதல் – இணை பிரியாது தோழமை கொள்ளுதல்; to become close friend. அவன் இவனுக்கு உடனாடி (உ.வ.).

ம., க., தெ., பட. ஆடு; கோத., து. ஆடுனி; குட., கொலா. ஆட்; துட. ஒடு; நா. ஆர்.

*[ஆல் → ஆள் → ஆளு → ஆடு (ஒ.நோ: நீள் → நீளு → நீடு) ஆல் = சுற்றுதல், சுழலுதல். ஆல் → ஆள் = செயற்படல், செய்தல், அசைதல். ஆள் → ஆளு → ஆடு = செய், அசை, நடுங்கு, வினையாற்று, விளையாடு.]*

அள் = முதனிலைத் தொழிற்பெயர். ஆள் → ஆளு = மேற்பார் – ஆட்சி செய். ஆளு → ஆடு= செயற்படுத்து, வினைக்கொள் எனப் பிறவினையாயும், செய், இயங்கு எனத் தன் வினையாயும் வழங்கும். 'ஆளு' தன் வினையாயும் 'ஆடு' பிறவினையாயும் பண்டு வழங்கினும், 'ஆடு' பிறவினைப் பொருளிழந்து தன்வினைப் பொருளில் வழக்கூன்றியதாகல் வேண்டும். 'கொள்' தன்வினைப் பொருளிலும் 'கொடு' பிறவினைப் பொருளிலும் தத்தம் பொருளிழவாமல் இன்றும் வழங்குதலை ஒப்பு நோக்குக.

**ஆடு**[2] ādu, பெ. (n.) 1. கால்நடைகளுள் சிறியதும், அசைபோடுவதும், பிளவுபட்ட குளம்புடையதும் சிறிய கொம்புடையதும், வளர்ப்பு விலங்குகளுள் ஒன்றானதும், பாலூட்டி இனத்தைச் சார்ந்தது

மாகிய நாற்கால் விலங்கு; வெள்ளாடு, செம் மறியாடு முதலியன ஆட்டின் வகை; genus of which the sheep and goat are species. 2. மேழவோரை (மேடராசி); aries, a sign of the zodiac "திண்ணிலை மருப்பி னாடுதலை யாக" (நெடுநல். 106).

ம. ஆடு; க. ஆடு, ஆண்டு; தெ. ஆடு, யேட; து. எடு; குட. ஆடி; கை., இரு., எரு. ஆடு;பட., கோத., குரும். ஆடு; கோண். யேடி; துட. ஒடு; கூ. ஒட; குரு. எடா; மா. 'எட; பிரா. கேட்.

As. gaat; Dutch. geit; G. geiss; L. headus (kid). கோதம், in the oblique cases the "ஆட்-" but in the nominative "ஆழ்" = goat. "யாழ்/எழ்". துதம் has "ஒட்" - for "யாட்" or - "ஆட்" just as தமிழ் has often "ஓம்" for "ஆம்"

கன்னடம் : ஆடு. குடகு : ஆடி. துளு : எடு. தெலுங்கு : "ஏடிக"; "எட" = ram. கோண்டு (Gondu.); "எடீ" = she goat. Kui, like Tutam, has "ஒட்" = goat. Brahui has "heet", "கேட்".

Sanskrit obtains several loan words from this Dravidian source: "எட –, எடக–, எடீ" = a kind of sheep. B.E.Drav. E.D.No. 4229. But what is phenomenal and astounding is to find that Latin too has taken this as a loan-word not for the goat, but for its progeny, the young kid, according to Cassel. But A.Walde thinks that Cicero employs the word **"haedus"** for the full - grown goat (Cicero, acc. to Walde, page 632); and **"aedus"** occurs according to an early Latin inscription. The rustic pronunciation has **"ecdus"**, very near எட just mentioned. The Sabine dialect has "feedus", according to Varro, I. 1.5 & 97. Compare Ernout El. dial. Latin. 154-155. It is clear that Tam. "y" -, Brahui "h", Latin "h"-, Sabine "f"- and Sinh. h-are all in the nature of prothetic glides, inorganic initial sounds that developed later on and that ஆடு was the fundamental form of this root. We can cite, from Walde, several other Latin words from this ancient Dravidian source:-

(1) **haediinus**, as an adjective = from a buck, Cicero. **haediinus** as a noun = mutton.

(2) **haediolus** = a small buck or ram, Varro; Cicero.

(3) **haedilile** = a sheep stall, Varro; Cicero.

(4 **haeduius** = a small buck, Javenal; a small kid, Cassell's Dict.

(5) **haedulea f.** = a little kid, Horatius or Horace Cassell's Dict.

(6) **haedillus** m. a small buck, Plautus.

(7) **haedilla f.** a small she-goat, Itala.

(8) aedua (feminine) = a she - goat, according to the inscription cited by Heraeus in Spr. d. Petr 10:5. Rh. M. 72:47.1.

(9) **Haedillia**. according to Horace, just as "porcillia"

It is possible that where Latin employs "h" like Brahui and Sinhala, Germanic tongues employed "g". Walde postulates an I.E. (=Indo-European) "gh" prothetic glide, namely *ghaidos = goat, compare Gothic "gaits"; Old High German "geiz"; Old Norse "geit", Anglo - Saxon "gaat", whence English "goat" for a small goat, Latin has "haediinus" Gothic "gaitein"; O.H.G. "geizzin"; As "gaeten".

[ஆள் – வினைசெய், செயற்படு, மேற்பார். ஆள் – ஆளு – ஆடு. விரைந்து செயற்படுத்து, விரைந்து செயற்படு. (ஒ.நோ நீள்–நீளு –நீடு).

ஆடு – விளையாடு.

ஆடு – ஆட்டுக்குட்டி.

ஆடு வெட்டுதலை நாட்டுப்புறங்களில் குட்டி வெட்டுதல் என்பர். இளமறி 'ஆடு' என அழைக்கப்பட்டது. இப்பொருட்டே இலத்தீன் மொழியில் ஆட்டுக்குட்டி haedus எனப்படுதலை ஒப்புநோக்குக. ஆடுகள் தலையசைத்து மேயும் இயல்பை 'ஆடுதலைத்துரு' என நற்றிணை குறிப்பிடுகிறது.

ஆட்டினைக் குறிக்கும் மறி, குறி, துரு, ஆடு என்பன அனைத்தும் இளமையும் இளமையாடலும் சுட்டிய காரணப் பெயராயமைந்துள்ளன. முறி – இளந்தளிர். முறி → மறி. குறு = சிறுமை. குறி = சிறியது, இளையது.

ஆடு – துள்ளியும் மறித்துக் குதித்தும் ஆடும் விலங்கு. விலங்கின் குட்டிகளில் ஆட்டுக்குட்டிபோல் துள்ளிக் குதித்தும் மறித்துக் குதித்தும் விளையாடும் விலங்கு பிறிதின்மையின் ஆடுகளுக்கு மட்டும் ஆடு என்று பெயர் வழங்கலாயிற்று.] (நேர்த்திக் கடனுக்காகப் பலியிடப்படுவது அல்லது கொல்லப்படுவது என்னும் பொருளில் ஆட்டுக்கு இப் பெயரமைந்தது என்பது பொருத்தமன்று. மாடு, எருமை, கோழி போன்ற பிற உயிரிகளும் இங்ஙனம் அடப்படுதல் வெளிப்படை).

ஆடு – முதனிலைத் தொழிற் பெயர். ஆகுபெயராய் ஆட்டைக் குறித்தது. ஆட்டினங்களுக்குப் பொதுப் பெயரா யமைந்தது.

ஆடு – ஆட்டின் வடிவிலமைந்த மேழ(Mesha) ஓரை.

**ஆட்டின் வகைகள்:**

1. வெள்ளாடு – The ordinary goat – **capra hircus.**
2. செம்மறியாடு – an ordinary sheep browner in colour than the goat. It corressponds to **ovis arics.**

**ஆட்டின் வகைகள்:**



காட்டாடு



குறும்பாடு



கொடியாடு



செம்மறியாடு

3. குறும்பாடு (குறியாடு) – a short woolly sheep with crumpled horns.
4. பள்ளையாடு – an under sized goat.
5. மலையாடு (வருடை) – mountain goat – **Tetraceros quadricornis.**
6. கொடி யாடு – a species of long – legged goats
7. காட்டாடு – forest goat – **cervulus muntjac.**
8. ஏழகம் (மேழகம்) – செம்மறிக்கடா, துருவாடு. a ram of the common sheep.

ஆடு உணவுப் பொருளுக்காகவும், கம்பளிக்காவும் வளர்க்கப்படுவது. இதன் புலால், பால் ஆகியவை மருந்துக்குப் பயன்படும். வெள்ளாட்டின் பால் மருத்துவப் பயனுடையது.

A sheep or a goat species –vis, a family of caprinae. It is classified into different kinds and amongst them the goat is considered the best on account of its usefulness in medicines. It's meat, milk, urine, and faeces are all very useful as they have curative powers.

"....... வெள்ளாடு தன்வளி தீரா
தயல்வளி தீர்த்து விடல்" என்னும் அடிகளை ஒப்பிடுக;

**ஆடு** [3] ādu, பெ. (n.) 1. கொல்லுதல்; killing, "ஆடுகொள் வென்றி" (புறநா.67). 2. வெற்றி; victory, success. "ஆடுகொள் நேமியான்" (கலித்.105,70).

**ம.** ஆடுக (அடித்தல்).

*[அடு – ஆடு = கொல்லுதல், போர்க்களத்தில் கொல்லுதலால் பெற்ற வெற்றி]*

**ஆடு** [4] ādu, பெ. (n.) 1. வடித்திறக்குதல்; distillation. "அறாஅநிலைச்சாடி யாடுறு தேறல்" (பு.வெ.1,2). 2. சமத்தல்; cooking. "ஆடுநனி மறந்த கோடுயர் அடுப்பின்"(புறநா.164).

*[அள் →அடு →ஆடு. அடுதல் = சமைத்தல், கொல்லுதல். (கருவியால், நீரால், நெருப்பால் கொல்லுதல் அல்லது தன்மை மாற்றம் செய்தல்)].*

**ஆடு** [5] ādu, பெ.(n.) கூத்து, நடனம்; dance.

**ம.** ஆடுக; **க.** ஆடு.

*[ஆடு – ஆடுதல்]*

**ஆடு** [6] ādu பெ. (n.)கூர்மை (செ. அக.): sharpness.

*[அள் = செறிவு, கூர்மை. அள் →அடு → ஆடு.]*

**ஆடுகண்வலை** ādukaṉvalai, பெ. (n.) நீரோட்டத்தின் போக்கிற்கேற்ப கடலிலிறக்கப்படும் மீன்பிடி வலை; சுருங்கி விரிந்து மீனைத் தன்னகப்படுத்தும்; a kind of fishing net which when put into sea by bulging and contracting proceses according to water currents catches fish.

*[ஆடு +கண்+வலை.]*

**ஆடுகளம்** āḍukaḷam, பெ. (n.) வெறியாடுமிடம்; stage for dancing of a priest possessed by divine power (skanda) "ஆடுகளம் சிலம்பப்பாடி" (திரு. ஆற். 245).

*[ஆடு +களம்.]*

**ஆடுகால்** āḍukāl, பெ. (n.) துலா நிற்கும் மரம்; stand of a picottah (loc.).

**க.** ஆடுந்தொலே.

*[ஆடு + கால்.]*

**ஆடுகொடி** āḍukoḍi, பெ. (n.) படர்நிலை எய்திய வளர் கொடி; tendril.

*[ஆடு + கொடி]*

**ஆடுகொப்பு** āḍukoppu, பெ. (n) மகளிர் காதணிவகை (நெல்லை); a kind of gold ear-ring, worn by women (Tn.)

**ஆடுகொம்பு** āḍukombu, பெ . (n.) கட்டுக்கொம்பு (செ. அக.); movable horn fixed in the skin.

*[ஆடு + கொம்பு. ஆடுதல் = அசைதல்.]*

**ஆடுகோட்பாட்டுச் சேரலாதன்** āḍukōṭ–pāṭṭu–c–cēralāḍaṉ, பெ. (n.) ஒரு சேர அரசன்; Cēra king

*[ஆடு[4] = வெற்றி. "ஆடாடென்ப ஒரு சாரானரே" (புறம்.) கோட்படல் = கைக் கொள்ளப்படுதல். மேற்கொள்ளும் செயற்பாடுகள் அனைத்திலும் வெற்றிபெறும் இயல்பினன். ஆதலின் ஆடு கோட் பாட்டுச் சேரலாதன் எனப்பட்டான்].*

**ஆடுசதை** āḍušadai, பெ. (n) ஆடுதசை பார்க்க; see āḍutasai,

*[ஆடு+தசை. தடி →தசை →சதை.]*

**ஆடுண்ணாவாலம்** āḍuṇṇā vālam, பெ. (n.) ஆடு தீண்டாப்பாளை பார்க்க; see āḍutīṇḍā–p–pālai.

**ஆடுண்ணாவேளை** āḍuṇṇa vēlai, பெ. (n) ஆடு தீண்டாப்பாளை பார்க்க; see **āḍutīṇḍā–p–pālai.**

**ஆடுதசை** āḍutasai, பெ. (n.) கெண்டைக்கால் தசை; calf of the leg, as contractile.

*[ஆடு + தசை. தடி→ தசை.]*

**ஆடுதின்னாப்பாளை** ādutinnā-p-pālai, பெ. (n.). **ஆடு தீண்டாப்பாளை** பார்க்க see ādutīṇḍā-p-pāḷai.

**ஆடுதின்னாளை** ādutinnāḷai, பெ. (n.)**ஆடுதீண்டாப் பாளை** பார்க்க; see ādutīṇḍā-p-pāḷai. "வேளை முத்திரு சுக்குடன் ஆடு தின்னாளை வேலிப் பருத்தி மிளகு" (தேரை. 1000)

**ஆடுதீண்டாப்பாலை** ādutīṇḍā-p-pāḷai. பெ. (n.) **ஆடு தீண்டாப்பாளை** பார்க்க; see ādutīṇḍā-p-pāḷai.

**ஆடுதீண்டாப்பாளை** ādutīṇḍā-p-pāḷai. பெ. (n.) ஒரு மருந்துச் செடி, பொதுவாக வேலிகளில் முளைத்திருக்கும், ஆண்டு தோறும் பூக்கும், குண்டிக்காய் வடிவ முள்ளது. இலைமாறி மாறி யிருக்கும். ஓரங்கள் வளைந்திருக்கும். பூக்கள் தனித்தும், மங்கலான நீலநிறமுள்ளனவாகவு மிருக்கும். இச்செடி ஆண்டு முழுதும் காய்க்கு மியல்புடையது. இது கசப்பானது, நஞ்சைப் போக்கவல்லது, சோழநாடு, திருவாங்கூர், தென்னாட்டுச் செம்மண் நிலங்கள், யமுனை யாற்றங்கரை ஆகியவிடங்களில் இதனைக் காணலாம்.


ஆடு தீண்டாப் பாளை

இதன் இலைச் சாற்றைத் தண்ணீரில் கலந்து பாம்புக்கடிக்கும், வயிற்றுவலிக்கும், விளக்கெண்ணெயிற் கலந்து சிரங்குகளுக்கும், கொடுப்பதுண்டு. இதன் வேரின் தூள் குளிர்காய்ச்சலைப் போக்கும். இதன் இலையையரைத்துக் குழந்தைகளின் வயிற்றிற் பற்றுப் போட மலங்கழியும். இதன் இலைக்கருக்கு (கஷாயம்) பூச்சி புழுக்களைக் கொல்லும். மாதவிலக்குச் சிக்கலைப் போக்கும். மகவீனுதலை விரைவுறுத்தும்.

இதன் இலை மிகவும் கசப்பானதால் ஆடு தொடாது. அதனால் இதற்கு 'ஆடுதீண்டாப்பாளை' என்று பெயர் வந்தது. இலையையரைத்து அழிபுண்ணுக்குப் போடப் பூச்சிகள் கொல்லப்படும்; a medicinal plant; worm killer; ulcer plant, black-blood plant.

The plant is commonly found growing in hedges; roots perennial; leaves alternate and kidney-shaped; curled at the margin; flowers solitary; dark and purple; bearing fruit nearly all the year. This is found grown in abundance on the Coromandal, in Travancore, in the Deccan and on the banks of the Jumna. The plant is bitter and is used as antidotes to poisons.

It is very common on red soils. The juice of the leaves mixed with water is given for snake-bites as an antidote and also for colic mixed with castor - oil, it is prescribed for colic in horses and is also applied to itches. The powdered root is useful in ague. A paste of the leaves is applied as a poultice for children's costiveness.

The plant is an insecticide, anthelmintic, emmenogogue, febrifuge and parturifacient. It is so called from its leaves being so bitter that even goats do not touch them. The leaves are applied to foul and neglected ulcers to kill the worms in them. It is well known by its Hindustani name 'Kiramar' and from its anthelmintic properties (S.D.).

**மறுவ.** ஆடுதின்னாப்பாலை, ஆடுதின்னாலை, ஆடுதொடாமூலி.

**ம.** ஆடுதின்னாப்பால; **க.** ஆடுமுட்டத கிட; **து.** ஆடலோட், ஆடரோ செ; **Skt**. ādarūsa.

*[ஆடு+தீண்டா+பாளை. தீண்டா (ஈ.கெ.எ.பெ.எ.). ஆடுதின்னாத அளவுக்கு கசக்கும் இயல்புபற்றி ஆடுதீண் டாப்பாளை என்று பெயர் பெற்றது. ஆடுதொடா மூலி யென்றும் இதற்கு வேறு பெயர் வழங்குதல் காண்க.]*

**ஆடுதுடை** ādutuḍai, பெ. (n.) **ஆடுதொடை**பார்க்க; see ādutoḍai.

**ஆடுதுறை** āduturai பெ. (n.) 1. நீராடுதுறை; bathing ghat. "ஆடுதுறையில் அடுபுலியும்" (மூவருலா.) 2. தஞ்சை மாவட்டத்திலுள்ள ஓரூர்; இவ்வூர் பழங் காலத்தில் குரங்காடுதுறை எனப் பெயர் பெற்றி ருந்தது; town in Thanjavur District.

*[ஆடு + துறை.]*

**ஆடுதுறை மாசாத்தனார்** āduturaimāsāttanār, பெ. (n.) சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவள வனைப் பாடிய புலவர்; poet who wrote poems in praise of the Chola king Kuḷamurrattu-t-tuñjiya killi vaḷavan of Sangam age.

*[ஆடுதுறை + மாசாத்தன் + ஆர். ஆடுதுறை = அவர் வாழ்ந்த ஊர்ப்பெயர். மாசாத்தன் இயற்பெயர். 'ஆர்' உயர்வுப் பன்மை ஈறு.]*

**ஆடுதொடாமூலி** āḍutoḍāmūli, பெ. (n.) **ஆடுதீண்டாப் பாளை** பார்க்க; see āḍutīṇḍā-p-pāḷai

*[ஆடு + தொடா + மூலி. ஆடு தின்னாத அளவுக்குக் கசப்புடைய மூலிகைச் செடி.]*

**ஆடுதொடை** āḍutoḍai, பெ. (n.) 1. அசைகின்ற தொடைத்தசைப் பகுதி (செ.அக.); fleshy flabby part of the thigh, as contractile, lower portion of the thigh. தொடையின் முன் பகுதி.

**மறுவ.** தொங்குதொடை, தொங்குதசை.

*[ஆடு + தொடை.]*

**ஆடுநர்** āḍunar, பெ. (n.) கூத்தர்; actor, dancer. "ஆடுநர்க்கு ஈத்த பேரன்பினனே" (புறநா.221:2).

*[ஆடு + நர்]*

**ஆடுநீர்** āḍunīr, பெ. (n.) குளித்தற்குரிய நீர்; water for bathing.

**ம.** ஆடுநீர்.

*[ஆடு + நீர்]*

**ஆடுபசி** āḍu paśi, பெ. (n.) வருத்தும் பசி; afflictive hunger. "ஆடுபசி உழந்த நின் இரும்பேரொக்கல்" (பொருந். 61).

*[ஆடு + பசி.]*

**ஆடுபந்தர்** āḍupandar, பெ. (n.) நடைப்பந்தல் (கதி. அக.); pandal erected through out the entire route of a procession.

*[ஆடு + பந்தர்]*

**ஆடுபந்து** āḍupandu, பெ. (n.) ஆடுவதற்கான பந்து; ball for playing.

*[ஆடு + பந்து]*

**ஆடுபறை** āḍuparai, பெ. (n.) அசைகின்ற பறை; swinging drum.

*[ஆடு +பறை.]*

**ஆடுபுலி** āḍupuli, பெ. (n.) ஆடுபுலியாட்டம்; கட்டத்தில் ஆடு புலிகளாகக் காய்களை வைத்து ஆடும் விளையாட்டு; game played with pieces representing sheep and tiger.

*[ஆடு + புலி.]*

**ஆடுபெயர்ச்சி** āḍupeyarcci, பெ. (n). ஆட்டுக்கிடையில் ஆடுகளைப் பெயர்த்து வேறிடத்துச் சேர்த்தல்; replacing sheep from its fold to an other place.

**மறுவ.** பேர்வையடித்தல்.

**ஆடும்பாத்திரம்** āḍumpāttiram, பெ. (n.) நாட்டியப் பெண் (நாஞ்.); dancing woman (Nan.).

**ஆடுமகள்** āḍumagaḷ, பெ. (n.) விறலி, உள்ளக் குறிப்புப் புறத்து வெளிப்பட ஆடுபவள்; female dancer who exhibits the various emotions and sentiments in her dance.

*[ஆடு + மகள்]*

**ஆடுமகன்** āḍumagaṉ, பெ. (n.) கூத்தன்; male dancer. (பழ.186.4)

*[ஆடு + மகன்]*

**ஆடுமருந்து** āḍumarundu, பெ. (n.) தான்றி மரம்; tree **terminalia bellerica**

**ம.** ஆடுமருந்து

**ஆடுமலி உவகை** āḍu-mali-uvagai, ப. (n.) வெற்றி யுவகை; joy on account of victory. "ஆடுமலி யுவகையொடு வருவல் "(புறநா.165).

*[ஆடு + மலி + உவகை.]*

**ஆடுமாடு** āḍumāḍu, பெ. (n.) ஆடுமாடு முதலிய கால்நடைகள்; flock sand herds, sheep and cattle.

**ம.** ஆடுமாடு.

*[ஆடு + மாடு. ஆடுமாடு = தொகுதிப் பொருளில் வந்த உம்மைத் தொகை.]*

**ஆடுமாலை**[1] āḍu-mālai, பெ. (n.) களித்துக் குலவும் குமரிப்பெண் (யாழ்ப்); gay, lively and jovial girl. (J.).

*[ஆடு + மாலை. வாலை → மாலை. வாலை = இளங்குமரிப்பெண். ஆடு = ஆடல், இயல்பு, களிப்பூட்டும் ஆட்டவியல்பு.]*

**ஆடுமாலை**[2] āḍumālai, பெ. (n.) ஓரிடத்து நிலைத் திராதவன் (கதி. அக.); wanderer, vagabond.

*[ஆடு + மாலை. மாலை = தன்மை, இயல்பு. ஆடு - ஆடுதல், திரிதல்.]*

**ஆடுமுப்பு** āḍu-muppu, பெ. (n.) கட்டுப்பு (சா.அக.); concentrated salt.

*[ஆடும் + உப்பு. அடு → ஆடு (காய்ச்சுதல்). காய்ச்சிக் கட்டியாக்கிய உப்பு ]*

**ஆடுவழி** āḍu-vaḻi, பெ. (n.) விளையாடுமிடம்; play ground. "ஆடுவழி ஆடுவழி யகலேன் மன்னே" (அகநா.49.).

*[ஆடு + (உழி) வழி.]*

**ஆடுவாலன் திருக்கை** āḍu–vālaṉ–tirukkai. பெ. (n.) **ஆட்டுவாலன் திருக்கை** பார்க்க; see āṭṭu–vālaṉ–tirukkai.

*[ ஆடு + வாலன் + திருக்கை .]*

**ஆடுவாள் கண்டள்** āḍu–vāḷ–kaṇḍaḷ, பெ. (n.) **ஆடி திகைந்தான்** பார்க்க; see **āḍi–tigaindāṉ.**

**ஆடுறுகுழிசி** āḍuṟu–kuḻisi, பெ. (n.) சமைக்கப் பயன்படும் பானை; cooking pot. "ஆடுறுகுழிசி பாடின்று தூக்கி" (புறநா. 371.).

*[ஆடு + உறு + குழிசி.]*

**ஆடூஉ** āḍūu, பெ. (n.) ஆண்மகன்; man, human male. (தொல். சொல். 2.).

**க.**, **பட.**, ஆளு ; **ம.** ஆள்.

*[ ஆள்(ஆள்) → ஆளு → ஆடு → ஆடூஉ. ]*

தொல்பழங்காலத்தில் சொல்லினிமைக்காக மெய்யீற்றுச் சொற்களொடு உகரம் சேர்ப்பது பேச்சு வழக்கில் இயல் பாயிருந்தது. இடவழக்காயினும் பெருக வழங்கிய இடவழக் காதலின் இதனை ஒப்பமுடிந்த உலக வழக்காகத் தொல் காப்பியரும் ஏற்றார். உயிரீற்றில் முடியும் வினை முற்றுகளும் வினையெச்சங்களும் ஒப்புமையாக்கம் கருதிப் பெயரீற்றிலும், ஆட்சி பெறலாயின. வினையெச்ச வாய்பாடுகளில் 'செய்யூ' என்னும் வாய்பாடு தொல்காப்பியத்தில் குறிக்கப்பெறுகிறது. இதனையொத்து அவள் கண்டு என்னும் வினை முற்றைக் 'கண்டூஉ' எனவும், ஆள்(ஆண்) என்னும் பெயர்ச்சொல்லை ஆளு → ஆடு → ஆடூஉ எனவும் அளபெடையாய் நீட்டி யொலிப்பதும் இனிமை கருதிய இடவழக்காகும்.கிரேக்க மொழியில் மொழியி டையிலும் இத்தகு உயிர் நீட்டங்கள் உளவென்பர். தமிழில் உயிரளபெடையாட்சி மிக்கிருந்ததற்கு ஆடூஉ மகடூஉ போன்ற சொல்லாட்சிகள் தக்க சான்றா கின்றன. வினைமுற்று, உயிரீற்று அளபெடையாகத் தொன்முது காலத்திலிருந்திருக்கலாம் என்பதற்குச் சான்றாக கல்லாத தெலுங்கு மக்களின் பேச்சு வழக்கில் உகர ஈற்று ஏவல் வினைகள் அளபெடையாக ஒரொருகால் நீண் டொலிப்பது இன்றும் கேட்கமுடிகிறது.

**ஆடூஉக்குணம்** āḍūu–k–kuṇam, பெ. (n.) ஆண்களுக் குரியவனாகக் கூறப்படும், அறிவு, நிறை, ஓர்ப்பு, கடைப்பிடி யென்னும் நான்கு குணங்கள் (பிங்.); masculine qualities, four in number, viz. knowledge, integrity, careful consideration and firm determination.

*[ஆடூஉ = ஆண்மகன். குணம் = பண்பு, இயல்பு. மகளிர்க்குரிய நல்லியல்புகளாக, அச்சம், நாணம், மடம், பயிர்ப்பு என நான்கியல்பு கூறப்பட்டது. நாற்பண்பும் நிறையாவிடத்து நற்குடிமக்களாகார் என்பது கருத்து. இக்காலத்து ஆடூஉக்குணம் மகளிர்க்கும் பொருந்து மாகாலான் விதந்து கூறற் பாலதன்று. ]*

**ஆடூஉத்திணைப்பெயர்** āḍūu–u–ttiṇai–p–peyar, பெ. (n.) திணை நிலைப் பெயர்களுள் ஆண்மக்கள் பெயர்.; names of human male. "ஆயர் வேட்டுவர் ஆடூஉத் திணைப் பெயர்" (தொல். பொருள். 21.).

*[ ஆடூஉ + திணை + பெயர்.]*

**ஆடூஉமுன்னிலை** āḍūu–muṉṉilai, பெ. (n.) (இலக்.) ஆண் பாலரை முன்னிலைப் படுத்திக் கூறும் கூற்று; (Gram.) vocative, addressing males.

**ஆடூஉ** பார்க்க ; see āḍūu.

**ஆடூஉவறிசொல்** āḍūu–v–aṟisol, பெ. (n.) ஆண்பாற் கிளவி, ஆண்பால் என்று அறிதற்குக் காரணமான ஈற்றையுடைய சொல்; word ending, with the masc.term. "னஃகா னொற்றே யாடூஉ வறிசொல்" (தொல் சொல்.5).

*[ ஆடூஉ + அறி + சொல். ஆடூஉ = ஆண்மகன், ஆண்பால். ]*

**ஆடூர்ந்தோன்** āḍūrndōṉ,, பெ (n.) 1. முருகன்; Lord Muruga, a Tamil God. 2. அழற்கடவுள் ; the god of fire.

*[ஆடு + ஊர்ந்தோன். முருகனுக்கும் அழற் கடவுளுக்கும் ஆடு ஊர்தியாகக் கூறப்படும் தொன்மக் (புராண) கதையினடிப்படையில் இப்பெயர் அவ் விருவர்க்கும் அமைவதாயிற்று. ]*

**ஆடெழும்பு நேரம்** āḍeḻumbu–nēram, பெ. (n.) காலைப் பத்துநாழிகை (இ.வ.) ; about 10 A.M. as the time for leading flocks out to pasture (Loc.).

*[ஆடு + எழும்பு + நேரம். மேய்ச்சலுக்காக முற்பகலில் ஆடுகளைப் பட்டியிலிருந்து எழுப்பி ஓட்டிச் செல்லும் நேரம். ]*

**ஆடை**[1] āḍai, பெ. (n.) 1. உடை (நற் : 33.6); clothing, garment. 2. பால் காய்ச்சும் போது மேற்படரும் ஏடு; cream or film on the surface of any liquid, such as milk etc. thick concentration on the surface of liquids. "ஆடைதனை யொதுக்கிடும்" (அழகர் கலம்.87). 3. கண்படலம்; a spot or thin film on the eye. 4. பனங்கிழங்கின் உட்தோல்; inner skin of edible palmyra root. 5. பன்னாடை; fibrous clothlike web about the bottom of the leaf stalk of a palmyra or coconut tree. 6. பூவின் புற விதழ் ;petal

**ம.** ஆட.; **பட.** ஆடெ .

**க.** அரிவெ; Sinh. āna [cloths –line]

*[ ஆடு + ஐ – ஆடை. காற்றுக்கு ஆடும் இயல்புபற்றி ஆடையெனப் பெயர் பெற்றது. ஒ. நோ : ஓடு → ஓடை.*

ஆடைபோல் மேற்படிந்திருக்கும் பாலேடு, மெல்லிய தோல், ஆகியவை உவமை கருதி ஆடையெனப் பெற்றன. 'ஐ' உடைமை குறித்த பெயரீறு.]

**ஆடை**[2] ādai, பெ. (n.) நாவிற் படருமா; fur on the tongue persons suffering from fever, the coating seen on the tongue during various diseases. (சா. அக.).

*[ஆடை = ஆடைபோல் வெண்மையாக நாவின் மேற் படிந்துள்ள கழிவுமாப்பொருள்; வெண்மை. உவமை கருதிப் பெற்ற பெயர்.]*

**ஆடை**[3] ādai, பெ. (n.) நெய்ம்மீன் (சித்திரை நாண் மீன்) (சூடா.); 14th lunar asterism.

*[**ஆடை**[2] → **ஆடை**[3]. வெண்மை நிறம் நாண் மீனுக்காயிற்று.]*

**ஆடை**[4] ādai, பெ. (n.) மழைக்காலம்; rainy season. "ஆடையும் கோடையும் விளையும்" (பழ.)

*[அடை → ஆடை. ஒ.நோ. அடை = அடைமழை.]*

**ஆடை**[5] ādai, பெ. (n.) ஆட்டம், கூத்து; dance. "ஆடையிலே எனைமணந்த மணவாளா" (அருட்பா).

*[ஆட்டம் → ஆடை.]*

**ஆடைக்காதி** ādai-k-kādi, பெ. (n.) 1. கோங்கிலவு (சித்.அக.); false tragacanth. (செ.அக.). 2 மலைப் பருத்தி; a kind of silk-cotton tree, a species of gossypium - **Cochlospermum gossypium.** It is so called from its usefulness for clothing. (சா.அக.).

*[ஒருகா. ஆடை + காய்த்தி. காய்த்தி → காதி. காய்த்தி = ஆடைக் குதவும் பருத்திக்காய்களை யுடையது]*

**ஆடைக்குறி** ādai-k-kuri, பெ. (n.) சலவைத் தொழிலாளர் இடுந் துணிக்குறி; mark on a cloth in laundry.

*[ஆடை + குறி. குறி = அடையாளம்]*

**ஆடைச்சட்டி** ādai-c-catti பெ. (n.) புளிகரைத்திட உதவுஞ் சிறிய சட்டி. (தஞ்சை மீனவ.) small pot for mixing tamarind.

*[ஆடை + சட்டி.]*

**ஆடைத்தயிர்** ādai-t-tayir, பெ. (n.) மேலேடு எடுக்காத தயிர்; curd with cream.

*[ஆடை + தயிர். ஆடைபோல் மேற்படிந்திருக்கும் இயல்பு பற்றிப் பாலாடையும் தயிராடையும் ஆடை எனப் பெயர் பெற்றன.]*

**ஆடைநூல்** ādai-nūl, பெ. (n.) மறைந்து போன தமிழ்நூல்; an extinct Tamil treatise on textile.

*[ஆடை + நூல்.]*

**ஆடைபடர்தல்** ādai-padardal, பெ. (n.) ஏடுண்டாதல்; forming of a coat or film, as in milk or in fermented liquor. (சா. அக.).

*[ஆடை + படர்தல். ஆடை = ஆடைபோன்று மெல்லிய ஏடு.]*

**ஆடைமண்** ādaiman, பெ. (n.) உவர்மண்; fuller's earth.

*[ஆடை + மண். ஆடைகளை வெளுப்பதற்காகச் சலவைத் தொழிலாளர் பயன்படுத்தும் உவர்மண்.]*

**ஆடைமேல்** ādaimēl, பெ. (n.) கழுத்து (இ.வ.); neck(Loc).

*[ஆடைமேல் = ஆடைக்குமேலிருக்கும் கழுத்துப் பகுதி.]*

**ஆடையணிகலன்** ādai-y-anigalan, பெ. (n.) உயர்ந்த அழகிய ஆடை அணிவகைகள்; clothes and jewels.

*[ஆடை + அணிகலன்.]*

**ஆடையவலன்** ādai-y-avalan, பெ. (n.) பேராமுட்டி, ஒரு நறுமணச் செடி; fragrant sticky mallow. (சா.அக.)

*[ஆடை + அவலன் = ஆடையவலன். ஒருகா. ஆடைக்கு நறுமணமூட்டப் பயன்பட்ட நறுமணப் பொருள் தரும் செடி என்னும் காரணம் பற்றிய தாகலாம்.]*

**ஆடையாபரணம்** ādai-y-ābranam, பெ. (n.) **ஆடையணி கலன்** பார்க்க; see ādai-y-anigalan.

*[ஆடை + ஆபரணம்.]*

**ஆடையும் கோடையும்** ādaiyum-kōdaiyum, பெ. (n.) கார்ரும் கோடையும்; rainy and summer seasons. "ஆடையும் கோடையும் விளையும்" (உ.வ.).

*[ஆடை = மழைக்காலம். ஆடையும் + கோடையும்.]*

சென்னைப் பல்கலைக் கழக அகரமுதலியில் இதனைக் கோடை எனக் குறித்திருப்பது பொருத்தமாகத் தோன்றவில்லை. இசகு பிசகு என்னும் சொல்லும் இவ்வாறே redupl. of பிசகு எனக் குறிக்கப் பட்டுள்ளது. இத்தகு இணைமொழிகள் முன் மொழியின் எதுகை நோக்கிய இணை அல்லது மோனை நோக்கிய இணையாக அமைவல்லது பின்மொழியின் இணையாக அமைவதில்லை. 'சாடிக்கும் மூடிக்கும்', 'கன்று கயந்தலை', 'அரிசிதவசி', 'பாத்திரம் கீத்திரம்' என்பவற்றை ஒப்பு நோக்குக.

முன்மொழி பொருட்சிறப்புடையதாக அமைந்திருக்க, பின்மொழி பொருளுள்ளதாகவோ எதுகை மோனைக்காகச் செயற்கையாக இணைந்த வறுமொழியாகவோ சேர்ந்திருக்கும்.

இதன்படி 'ஆடைக்குங்கோடைக்கும்' என்னும்தொடரில் 'ஆடை' அடை மழைபெய்யும் காலத்தைக் குறித்த சொல்லாக வேண்டும்.

**ஆடையெடுத்த தயிர்** ādai-y-edutta-tayir, பெ. (n.) ஏடு நீக்கிய தயிர். இதனால் வயிற்றுப்போக்கும் மேகமும் குணமாகும்; curdled milk free from cream.

*[ஆடை + எடுத்த + தயிர்.]*

**ஆடையெடுத்த பால்** ādai-y-edutta-pāl, பெ. (n.) குழந்தைகள், நோயாளிகள், வலி குன்றியோர் முதலியவர்களுக்கு எளிதில் செரிக்கும் வண்ணம் கொடுக்கப்படும் ஏடு நீக்கிய பால்; creamless milk given to children, patients, invalids etc. for promoting easy digestion – Skimmed milk (சா. அக.).

*[ஆடை + எடுத்த + பால்.]*

**ஆடையொட்டி**[1] ādai-y-otti, பெ. (n.) 1. ஒட்டுப் புல், பசுமையும் மாநிறமும் கலந்த தெளிநிறமுள்ள பூக்களையுடைய பூண்டு. இது அகன்று படரும்; plant found generally on the plains, sand-binder; round-leaved pupalia. It is an extensively spreading procumbent plant of a light brownish, green colour; branches several feet long. It is so called from its bristles clinging with tenacity to the clothes of passengers. 2. பேய்ப்புல்; an amaranth. 3. ஒரு பூண்டு. இதன் பூ சிறிதாயும் மஞ்சளாயுமிருக்கும்; plant called paroquet burr; West Indian burweed. It produces small yellow flowers. (சா.அக).



ஆடையொட்டி – ஒட்டுப்புல்

ம. ஆடயொட்டி

*[ஆடை + ஒட்டி. ஆடையில் ஒட்டிக்கொள்ளும் இயல்பினது.]*

**ஆடையொட்டி**[2] ādai-y-otti, பெ. (n.) சீலைப்பேன்; lice in clothes.



ஆடையொட்டி – சீலைப்பேன்

மறுவ. வெள்ளைப்பேன்.

*[ஆடை + ஒட்டி. ஆடையில் ஒட்டிக்கொண்டு ஒருவரிடமிருந்து மற்றொருவருக்குப் பரவும் பேன்.]*

**ஆடையொட்டி நீர்** ādai-y-otti-nīr, பெ. (n.) விள்ளு (விந்து); semen, from its sticking to the clothes on discharge. (சா.அக.).

*[ஆடை + ஒட்டி + நீர். ஆடையிற்பட்டு நனைந்து ஒட்டிக் கொள்ளும் இயல்பினது.]*

**ஆடைவணிகன்** ādai-vaṇigaṉ பெ. (n.) ஆடை விற்பனை செய்பவன்; dealer in clothe

ம. ஆடைவாணியன் (ஆடைவிற்பவன்).

**ஆடை வீசுதல்** ādai-vīsudal, பெ.. (n.) மகிழ்ச்சியின் அறிகுறியாக ஆடையை மேலே வீசல்; to wave a garment or a cloth as a sign of joy. "ஆர்த்தா ரணியாடை வீசினர்" (அரிச்.பு. சூழ்வி.82).

*[ஆடை + வீசுதல். வீசுதல் = அசைத்தல். ஒ.நோ: கவரிவீசுதல்.]*

**ஆண்**[1] āṇ, பெ.. (n.) 1. ஆண்பாற்பொது; male. 2. வீரியம்; manliness, courage. "மான மதாணி யாணிற் றாங்கல்" (ஞானா.17,7). 3. தலைமை; superiority, excellence. (மாறன. 261, உதா. செய். 726, உரை). 4. போராளி; warrior. "ஆணணி புகுதலும்" (சிறுபாண். 211).

ம., க. ஆண்; குட. ஆணி; து. ஆணு; கூ. ஆனு.

*[ஆள் → ஆண். ஆளுந்திறம் வாய்ந்தவன், வினைத்திட்பம் கொண்டவன், ஆற்றல் மிக்கவன்.]*

**ஆண்**[2] āṉ, பெ. (n.) 1. ஆண் மரம்; tree having a hard core. "ஆண்மரக்கிளவி" (தொல்.எழுத்து.304). 2. இதளியம்; mercury.

*[ஆண் = திண்மை. வயிரம்பாய்ந்து திண்மையுற்ற மரமும் நீர்ம வடிவிலுள்ள திண்ணிய மாழை (உலோகம்)யும் 'ஆண்' பெயர் பெற்றன.]*

**ஆண்**[3] āṉ, பெ. (n.) 1. வன்மை; strenghth, 2 ஒளி; light. 3. வெண்மை; whitness.

*[ஆண்[1] → ஆண்[3].]*

**ஆண்**[4] āṉ, பெ. (n.) வலப்பக்கம்; right side.

*[வில்லில் நாணேற்றும் வலப்பக்கம் ஆண்மைக் குரியதாயிற்று.]*

**ஆண்**[5] āṉ, பெ. (n.) அழகு; beauty.

*[யாண் → ஆண்.]*

**ஆண் கட்டு** āṉ-kaṭṭu, பெ. (n.) விந்து கட்டுதல்; suspension of semen from being discharged. (சா.அக.).

*[ஆண் + கட்டு. கட்டு = கட்டுதல், கட்டுப் படுத்துதல். ஆண் = ஆணின் விந்து (முதலா.பெ.).]*

**ஆண்கடல்** āṉ-kaḍal, பெ. (n.) அலைமிகுதியா யெழுங் கடல் அல்லது கடற் பரப்பு; sea or an area on it where the wave is high. (முகவை. மீனவ.).

*[ஆண் + கடல்.]*

**ஆண்கடன்** āṉ-kaḍaṉ, பெ. (n.) ஆண்மக்கள் கடமை; man's duty, responsibility. "ஆற்றாதார்க் கீவதா மாண்கடன்" (நாலடி. 98).

*[ஆண் + கடன். கடன் = கடமை.]*

**ஆண்கடி** āṇkaḍi, பெ. (n.) தேங்காயின் கீழ்ப்பகுதி ஒடு; lower half of the coconut-shell. (துளுநா.)

**ம.** ஆண்முரி (மேற்பகுதி ஒடு பெண்முரி)

*[ஆண் + கடி. கடை → கடி = கீழ்ப்பகுதி.]*

**ஆண்கல்** āṉ-kal, பெ. (n.) சிற்பங்கள் முதலியன அமைப்பதற்கு ஏதுவான முதன்மையான கருங்கல் (கம். வழ.); superior variety of granite, used to carve statue etc.,

*[ஆண் + கல்.]*

**ஆண்குமஞ்சன்** āṉ-kumañjaṉ, பெ. (n.) குங்கிலியம்; resinous gum used as an incense. It is opposed to சாம்பிராணி which is termed the female frankincense. (சா.அக.).

*[ஆண் + குமஞ்சன். ஒருகா. குமஞ்சன் = நறுமணப் பொருள். நறுமணப் பொருள்களுள் சாம்பிராணி பெண்மை சார்ந்ததாகக் கூறப்படுதலின் குங்கிலியம் ஆண்மை சார்ந்ததாகலின் ஆண்குமஞ்சன் எனப் பெயர் பெற்றிருக்கலாம். குமஞ்சன் பார்க்க; see kumañjaṉ]*

**ஆண்குமஞ்சான்** āṉ-kumañjāṉ, பெ. (n.) **ஆண்குமஞ்சன்** பார்க்க; see āṉ-kumañjaṉ.

**ஆண்குறட்டை** āṉ-kuṟaṭṭai, பெ. (n.) ஒருவகைக் குறட்டை, பேய்ப்புடலை; a bitter male snake-groud. (சா. அக.).

*[ஆண் + குறட்டை (ஒருகா. குறட்டை = வளைந்த காய்) குறட்டை பார்க்க; see kuṟaṭṭai.]*

**ஆண்கூடல்** āṉ-kūḍal பெ. (n.) சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று; a knd of minor literature.

*[ஆண் + கூடல்.]*

**ஆண்கூத்து** āṉ-kūttu, பெ. (n.) நாடகத்தில் ஆணாக நடிப்பவன்; ஆண் நடிப்பு; male character in drama (W.).

*[ஆண் + கூத்து. கூத்து = நடிப்பு.]*

இக்காலத்து இவர் ஆண்பாத்திரம் ஏற்று நடித்தார் என்பதைப் பண்டையோர் ஆண்கூத்து ஏற்று நடித்தார் என வழங்கினர். பாத்திரம் என்னும் வடசொல் வழக்கூன்றிய பின் இத்தூய தென்சொல் வழக்கிழந்தது.

**ஆண்கை** āṉ-kai, பெ. (n.) அவிநயக்கை வகை (சிலப். பக். 92, கீழ்க்குறிப்பு); handpose in dancing.

*[ஆண்[3] + கை.]*

**ஆண்கொடுவேலி** āṉ-koḍuvēli, பெ. (n.) வெண் கொடுவேலி; white-flowered lead wort.

மறுவ : ஆண்கொடிவேலி.

*[ஆண்[3] = வெண்மை. ஆண் + கொடுவேலி]*

**ஆண் கோள்** āṉ-kōḷ, பெ. (n.) (கணி.) கணியத்தில் ஆண்கோளாகக் கருதப்படுவதும் செவ்வாய், வியாழன், ஞாயிறு என்னும் முக்கோள்களுள் ஒன்றானதுமாகிய கோள் (கிரகம்); in the Hindu system of astrology any one of the three planets, Mars, Jupiter, or the Sun. (W.).

*[ஆண்[1] + கோள்.]*

**ஆண்சந்ததி** āṉ-šandadi, பெ. (n.) **ஆண் பிறங்கடை** பார்க்க; see āṉ-piṟaṅkaḍai

*[ஆண் + சந்ததி. Skt. Santana > த. சந்ததி.]*

**ஆண்சரக்கு** āṇšarakku, பெ. (n.) 1. காரச்சரக்கு; substances containing alkali, Alkaloids. 2 கல்லுப்பு,

வெடியுப்பு. ஆகிய உப்புச்சரக்கு; alkaline bases, such as soda, rock salt, nitre, lime etc. It is opposed to பெண் சரக்குீ அல்லது புளிச்சரக்கு, acid substances. (சா. அக.).

*[ஆண்[1] + சரக்கு. காரச் சரக்குகள் ஆண்சரக்கு என்றும் புளிப்புச் சரக்குகள் பெண்சரக்கு என்றும் மருத்துவ நூலார் ஆளும் மரபு பற்றி இப்பெயர் ஏற்பட்டது.]*

**ஆண் சாவி** āṉšāvi, பெ. (n.) உட்டுளையில்லாத திறவுகோல்; key with a solid barrel. **ஆண்திறவுகோல்** பார்க்க; see āṉ–tiṟavu–kōl.

**ஆண்சிரட்டை** āṉ–širaṭṭai, பெ. (n.) தேங்காயின் அடிப் பாதியோடு; lower half of the coconut shell.

**ம.** ஆண்முரி; **து.** ஆண்கடி.

*[ஆண் + சிரட்டை.]*

**ஆண் செருப்படை** āṉ–seruppaḍai, பெ. (n.) சிறு செருப் படை; medicinal plant with small leaves.

*[ஆண் + செருப்படை]*

**ஆண்சோடணை** āṉ–šoḍaṇai, பெ. (n.) **ஆண் ஒப்பனை** பார்க்க; see āṉ–oppaṉai

*[சுவடி → சோடி → சோடணை. சுவடி = ஜோடி என்றும் ஜோடனை என்றும் வடமொழியில் திரிந்துள்ள திரிபுகள் 'சுவடி' என்னும் தமிழ் வேர்ச் சொல்லிலிருந்து பல்கிப் பன்மடித் திரி புற்றவை. **சுவடி, சோடி** பார்க்க; see **suvaḍi, sōḍi**.]*

**ஆண்டகம்** āṇḍagam, பெ. (n.) மணமல்லிகைச் செடி (மனோரஞ்சிதம்); flower, Heart's joy, Cupid's plant. (சா.அக.).

*[ஆண்டு → ஆண்டகம். ஆண்டு = முளை, அரும்பு.]*

**ஆண்டகை** āṉ–ḍagai, பெ. (n.) ஆண்தன்மை (சீவக. 289);manliness.2.பெருமையிற்சிறந்தோன் (பிங்.); man of great eminence. 3. அரசரிற் சிறந்தோன் (கதி.அக.); gem among kings. 4. வீரன் (கதி.அக.); hero, warrior.

*[ஆண் + தகை. தகை = தன்மை.]*

**ஆண்டகைமை** āṇḍagaimai, பெ. (n.) 1. ஆண்தன்மை; manliness. 2. வீரம்; heroism, inherent bravery, chivalry.

*[ஆண் + தகைமை . தகைமை = தன்மை.]*

**ஆண்டகையன்** āṇḍagaiyaṉ பெ. (n.) **ஆண்டகை** பார்க்க; see āṇḍagai. "ஆண்டு நிற்கும் ஆண்டகையனே" (புறநா. 292).

**ஆண்டபண்டம்** āṇḍapaṇḍam, பெ. (n.) வீட்டுத் தட்டுமுட்டுப் பொருள்கள்; house hold articles ஆண்டபண்டம் அறுபதும் (உ.வ.).

*[ஆண் = தலைமை, முதன்மை. ஆண் + பண்டம்.]*

**ஆண்டல்** āṇḍal, பெ. (n.) மூங்கில் முளை; bamboo shoot. (சேரநா.).

**ம.** ஆண்டல்

**மறுவ:** ஆண்டு

*[அண்டு → அண்டல் → ஆண்டல்.]*

**ஆண்டலை**[1] āṇḍalai, பெ. (n.) 1. சேவல், பெடை; gallinaceous fowl, cock or hen. "ஆண்டலை யுயர்த்தவன்" (கந்தபு.தெய்வ.7). 2. ஆண்மகன் தலைபோன்ற தலையுடைய ஒரு பறவை; fabulous bird of prey having its head resembling that of a man. 3. கோட்டான்; large hooting–owl. "ஊண்டலை துற்றிய வாண்டலைக் குரலும்" (மணிமே. 6,77).

*[ஆண் + தலை + ஆண்டலை. தலையிற் கொண் டையும் தாடி போன்ற கீழ்ச்செவுள் அல்லது கீழிற குடைமை பற்றிச் சேவலுக்கும் ஆண்டலைப் புள்ளுக்கும் இது பொதுப் பெயராயிற்று. சேவலைக்குறித்த சொல் பெடைக்கும் பெயரானது பொருட்புடை பெயர்ச்சி.]*

**ஆண்டலை**[2] āṇḍalai, பெ. (n.) படைத்தலைவன் (கதி.அக.); commandar, chief of the army.

*[ஆண் + தலை – ஆண்டலை. ஆண்டலை = தலைமையான ஆடவன், ஆடவர்க்குத் தலைவன்.]*

**ஆண்டலை**[3] āṇḍalai, பெ. (n.) 1. பூவாது காய்க்கும் மரம் (மூ.அ.); non–flowering trees like the fig tree. 2. அரசமரம்; peepul tree (ச.அக.).

*[ஒருகா. ஆண் + தலை = ஆண்டலை. ஆண்டலை = பூவாதமரம், மரங்களுள் தலைமையானதாகக் கருதப் படும் அரசமரம்.]*

ஈனாப்பனை ஆண்பனை என்று குறிப்பிடப்படுமாறு பூவா மரவகையும் மரங்களுக்குரிய பொதுத் தன்மையின் விலகிக் காணப்படுதலால் ஆண்டலையென்றும், ஆண்மை தலைமைப் பொருளும் தருதலான் தலைமையான மரம் எனப் பொருள் பயந்து உயர்வகை மரங்களுள் ஒன்றாகக் கருதப்படும் அரசமரத்தைக் குறிக்க 'ஆண்டலை' யென்றும் வழங்கி யிருக்கலாம்.

**ஆண்டலைக்கொடி** āṇḍalai–k–koḍi, பெ. (n.) 1. முருகக் கடவுளின் சேவற்கொடி (சூடா. 1,23); flag of the Lord Muruga, as having the figure of a cock. 2. பேய் முதலிய பலியை நுகரவொட்டாமல்

ஆண்மகன் தலையும் பறவையின் உடலுமாக எழுதப்பட்ட கொடி (திருமுருகு . 227, உரை); flag displaying the figure of the andalai bird in order to scare away evil spirits from the offerings on the altar.

*[ஆண் + தலை + கொடி = ஆண்டலைக்கொடி.]*

**ஆண்டலைக்கொடியோன்** āṇḍalai-k-kodiyōṉ, பெ. (n.) சேவற்கொடி யுயர்த்திய முருகக் கடவுள்; Tamil God, Muruga, whose flag displays the figure of a cock.

*[ஆண்டலை+கொடியோன். ஆண்டலை = சேவல். **ஆண்டலை**[1] பார்க்க; see* **āṇḍalai.**]

**ஆண்டலையடுப்பு** āṇḍalai-aḍuppu, பெ. (n.) ஆண்டலைப்புள் வடிவாகச் செய்து பறக்கவிடும் மதிற்பொறி (சிலப். 15, 211); a kind of instrument shaped like the āndalai bird and fixed upon the ramparts of a fortified city, which would dart forth at the approaching hostile army, missiles calculated to peck at and bite their brains.

*[ஆண்டலை + அடுப்பு. ஆண்டலை = ஆண்டலைப் பறவை.]*

**ஆண்டவரசு** āṇḍa-v-arasu, பெ. (n.) திருநாவுக்கரசர் (பெரியபு. திருநாவுக். 201); St. Tirunāvukkarasar

*[ஆண்ட + அரசு = ஆண்டவரசு. சிவபெருமானால் ஆட்கொள்ளப்பட்ட பெருமை கருதித் திருநாவுக்கரசரை 'ஆண்டவரசு' என அழைத்தல் மரபாயிற்று.]*

**ஆண்டவன்** āṇḍavaṉ, பெ. (n.) 1. கடவுள்; God as ruler of heaven and earth, Lord 2. உடையவன்; master. 3. ஆளுகை செய்பவன். (கதி. அக.); ruler. 4. அரசன் (கதி.அக.); king.

**ம.** ஆண்டவன்; **பட.** ஆண்டம.

*[ஆண்ட + அவன் = ஆண்டவன். ஆண்ட = உரிமையாக்கிக் கொண்ட, ஆட்சிபுரிந்த. ஆளுதல் = உரிமையாக்கி அல்லது உடைமையாக்கிக் கொண்டு பயன்படச் செய்தல் .]*

இறைவனால் ஆட்கொள்ளப்பட்டோர் அவன் ஆணை வழிநின்று தனக்கும் உலகிற்கும் பயன்படும் வழியில் கடைத்தேறும் வாய்ப்புப் பெறுதலின், அத்தகு வாய்ப்பினை உயிர்களுக்கு நல்கும் இறைவன் ஆண்டவன் எனப்பட்டான். இறைவனுக்கும் அரசனுக்கும் ஒத்த மதிப்புத் தரப்பட்டமையின் இறைவனுக்கு ஆளாய்த் தொழும்பு பூணுதலை அடியார் விரும்புமாறு போல அரசனுக்கு ஆளாய்த் தொழும்பு பூணும் குடிகளும் அரசனை இறைவனாகவே கருதி 'ஆண்டவன்' என்றனர்.

**ஆண்டழி-த்தல்** āṇḍali-, 4. செ. குன்றாவி. (v.t.) அசையும் அல்லது அசையாச் சொத்தைக் குறிப்பிட்ட குடும்பத்தார் முழுவதுமாய்த் துய்த்தல் (செங்கை. மீனவ. வழ.); enjoyment to full measure of movable or immovable property by a family.

*[ஆண்டு + அழி. ]*

**ஆண்டளப்பான்** āṇḍalappāṉ, பெ.(n.) ஆண்டிற்கொரு முறை கதிரவனைச் சுற்றிவரும் வியாழன் என்னும் கோள் (திவா.); planet Jupiter which takes one year to pass through one sign of the Zodiac.

*[ஆண்டு + அளப்பான் - ஆண்டளப்பான். ஞாயிற்றுக் குடும்பத்திலுள்ள கோள்களுள் ஒன்றான வியாழன் தன் வட்டப் பாதையில் கதிரவனை ஒரு முறை சுற்றி வருவதற்கு ஓராண்டு ஆதல் குறித்து 'ஆண்டளப்பான்' என்னும் பெயர் ஏற்பட்டது. ஆண்டளப்பான் = ஓராண்டில் தன் பாதையை அளந்து (கடந்து சென்று) முடிப்பான்.]*

**ஆண்டாண்டு** āṇḍāṇḍu, பெ. (n.) ஆங்காங்கு; here and there. "ஆண்டாண்டுறைதலும் அறிந்தவாறே" (திருமுருகு. 249).

*[ஆண்டு + ஆண்டு.]*

**ஆண்டார்** āṇḍār, பெ. (n.) உடையார் (அக.நி.); owner, master, lord. 2. தேவர் (அக.நி.); gods. 3. அடியார் ; devotees. "திருநாள் சேவிக்க வந்த ஆண்டார்களுக்கும்" (S.I.I. ii. 84).

**ம.** ஆண்டார். **க., தெ.** ஆண்டாரி.

*[ஆண்டார் → ஆண்டவர். ஆண்ட + அவர் = ஆண்டவர் → ஆண்டார் = ஆண்டவர், ஆட்கொண்டவர், தலைவர், தேவர், ஆட்கொள்ளப்பட்ட அடியார்.]*

ஆட்கொண்டவரைக் குறித்த ஆண்டார் எனுஞ்சொல் ஆட்கொள்ளப்பட்ட அடியாரையும் குறித்தது. செயப்படு பொருளை வினைமுதலாகக் கூறும் மரபு வழுவமைதி பற்றியதாகும்.

செயப்படு பொருளைச் செய்ததுபோலத் தொழிற்படக் கிளத்தலும் வழக்கினுளுரித்தே (தொல்.சொல் வினை. 49.)

இந்நூல் யான் செய்தது என்புழி செய்தது என்னும் முதல்வினை செய்யப்பட்டது எனச் செயப்பாட்டு வினைப் பொருள்படுதல் போலவும், புலி கொன்ற யானை என்புழி கொன்ற என்னும் பெயரெச்சம் கொல்லப்பட்ட எனச் செயப்படுபொருள் குறித்த பெயரெச்சப் பொருள் படுதல் போலவும் ஆண்டார் எனுஞ்சொல் ஆளப்பட்ட அடியாரைக் குறித்தது.

**ஆண்டாள்** āṇḍāḷ, பெ. (n.) சூடிக்கொடுத்தநாச்சியார். பெரியாழ்வாரின் திருமகளாரும், நாச்சியார் திருமொழி, திருப்பாவை ஆகிய பனுவல் களை இயற்றியவருமாகிய மாலிய (வைணவ) அடியார்: Vaiṣṇava saint, daughter of Periyāḷvār, and author of the Tiruppāvai and the Naacciyār - tirumoḷi.

*[ஆண்டாள் = ஆட்கொள்ளப்பட்டவள்.]*

**ஆண்டாள் மல்லிகை** āṇḍāḷ-malligai, பெ. (n.) மல்லிகை வகை (இ.வ.); a species of Jasmine (loc.). (செ.அக.) . . . . large double - flowered Arabian Jasmine (S.D).

*[ஆண் + தாள் + மல்லிகை = ஆண்டாள்மல்லிகை.]*

**ஆண்டான்** āṇḍāṉ, பெ. (n.) 1. ஆண்டவன் (கம்பரா. கடறாவு. 62); god. 2. தலைவன்; master, lord.

*[ஆண்டவன் → ஆண்டான்.]*

ம. ஆண்டான்.

**ஆண்டான்வெட்டு** āṇḍāṉ veṭṭu, பெ. (n.) பழைய நாணய வகை (பணவிடு. 142); ancient coin.

*[ஆண்டான் + வெட்டு. உருவம் அல்லது எழுத்துப் பொறிக்கப்பட்ட நாணயம் வெட்டு எனப்பட்டது.]*

**ஆண்டி**[1] āṇḍi, பெ. (n.) 1. பண்டாரம்; a class of Tamilian Šaivaite. 2. துறவுக்கோலம் பூண்ட சிவனிய (சைவ) அடியார்; Tamil Saiva mendicant. 3. இரப்போன்; begger. 4. தவஞ்செய்யும் துறவி; one who meditates after renunciation, ascetic, recluse.

ம., க. ஆண்டி.

*[ஆண்டி = இறைவனால் ஆண்டருளப்பட்ட அடியவன். ஆண்டு + இ = ஆண்டி. 'இ' வினைமுதலீறு.]*

**ஆண்டி**[2] āṇḍi, பெ. (n.) வரிக்கூத்துவகை (சிலப்.3,13, உரை); masquerade, dance.

ம ஆண்டி யாட்டம்.

*[ஆண்டி = ஆண்டிக்கோலம்.]*

**ஆண்டி**[3] āṇḍi பெ. (n.) முருகனுக்குரிய பெயர்களுள் ஒன்று ; a name of Muruga, Tamil God.

*[ஆண்டி = ஆண்டிக்கோலத்தில் இருப்பவன்]*

**ஆண்டிச்சி**[1] āṇḍicci, பெ. (n.) துறவுக்கோலம் பூண்ட சிவனிய (சைவ)ப் பெண் அடியார். ஆண்டி என்பதன் பெண்பால்; Tamil Šaiva woman mendicant, fem. of āṇḍi.

*[ஆண்டி + அத்தி = ஆண்டித்தி → ஆண்டிச்சி.]*

**ஆண்டிசமாதி** āṇḍi šamādi, பெ. (n.) துறவியாயிருந்து இறந்தவரின் பள்ளிப்படை (சமாதி) யிற் பூசை செய்வதற்கென்று முற்றூட்டாக விடப்பட்ட நிலம்; inam granted for worship at the tomb of an āṇḍi (R.,J.).

*[ஆண்டி + சமாதி.]*

**ஆண்டிப்பள்ளிப்படை** பார்க்க; see āṇḍi-p-paḷḷi-p-paḍai

**ஆண்டிப்பள்ளிப்படை** āṇḍi-p-paḷḷi-p-paḍai, பெ. (n.) பள்ளிப்படைப் பூசகர்க்கு விடப்பட்ட முற்றூட்டு நிலம்; land granted to the priest for performing poojas at the tomb of an ascetic.

*[ஆண்டி + பள்ளி + படை.]*

**ஆண்டிப்புலவர்** āṇḍi-p-pulavar, பெ. (n.) 17ஆம் நூற்றாண்டினரும் செஞ்சியையடுத்த ஊற்றங் கால் ஊரினரும் ஆசிரிய நிகண்டு இயற்றியவரும் நன்னூலின் ஒரு பகுதிக்கு உரை வரைந்த வருமாகிய தமிழ்ப் புலவர்; Tamil poet who lived in a village ūṟṟaṅgāl near Cenji in the 17th century and wrote the Āciriya Nigaṇḍu and commentary on a portion of the Tamil grammar Naṉṉūl.

*[ஆண்டி + புலவர்.]*

ஆண்டி முருகனுக்குரிய பெயர்களுள் ஒன்றாதலானும், இப்புலவருக்குப் பாவாடைப் புலவர் என்று வேறொரு பெயரிருத்தலானும், இவருடைய கோலத்தால் இவருக்கு இப்பெயர் ஏற்பட்டிருக்கலாம்.

**ஆண்டிமதிக்குலம்** āṇḍi-madi-k-kulam, பெ. (n.) வெள்ளிப்பாடாணம் (வெண்செந்தூரம்); an arsenic compound containing silver. (சா.அக.).

*[ஆண்டி + மதி + குலம். மதி = நிலவு, குலம் = இனம், வகை. வெள்ளி சேர்த்துச் செய்யப்பட்டதால் வெண்மைப் பொருள் விளங்க இப்பாடாணம் ஆண்டி மதிக்குலம் எனப் பெயர் பெற்றிருக்கலாம்.]*

**ஆண்டிறன்** āṇḍiṟaṉ, பெ. (n.) ஆண்டிறலோன் ஆண்டகை; respectable male.

*[ஆண் + திறம் - ஆண்டிறம் - ஆண்டிறன்.]*

ஒ.நோ. GK. anr, andros, male. **ஆண்டிறன்** பார்க்க; see aṇḍiraṉ

**ஆண்டு**[1] āṇḍu, பெ. (n.) பன்னிரண்டு மாதம் அல்லது 365 நாள் கொண்ட ஆண்டு என்னும் கால அளவு; year. "ஆண்டு" (சிலப்.1,24). 2. அகவை (வயது); age. ஓராண்டுக்குட்டி (உ.வ.). 3. கொல்லமாண்டு (நெல்லை); year of the Kollam era in Kerala.

ம. ஆண்டு; க., தெ., ஏடு; து. ஒட்; கோத. அட்; குட. அண்டி; கொலா. எட்; நா. யெட்; கோண். யேண்டு; பர். இயெட்;

க.. ராண்டு (சென்றவாண்டு); Cf. E.yon, yound, younder. A.S. geond, Ger.jener, that,root,ya

*[ஆண்டு = மூங்கில்முளை. ஆண்டிற்கொருமுறை மடங்கல் (ஆவணி) திங்களில் சரியாக 365 நாள் இடை வெளிக்கொருமுறை முளைக்கும் மூங்கில் முளைக்கு 'ஆண்டு' என்னும் பெயர் உண்மையால் அதுவே ஆண்டைக் குறித்த கால அளவைப் பெயராயிற்று..]*

வடமொழியில் 'வர்ஷ' என்றால் மழையென்று பொருள். ஒரு மழைக்காலத்திற்கும் மற்றொரு மழைக் காலத்திற்கும் உள்ள இடைக்காலம் ஏறத்தாழ ஓராண்டாதலின் 'வர்ஷம்' ஓராண்டுக்குரிய பெயராயிற்று. சம்வத்சர என்பது மாடு கன்றீனும் காலம் எனப்பொருள்பட்டு ஓராண்டைக் குறிக்கிறது. தமிழர் நாகரிகம் குறிஞ்சி நிலத்திலிருந்தே தொடங்கிவிட்டது என்பதற்கு மூங்கில் முளையைக் குறித்த 'ஆண்டு' காலப் பெயராக ஆளப்பட்டு வருவது சான்றாக அமைந்துள்ளது.

ஆண்டு$^{2}$ பார்க்க ; see āṇḍu$^{2}$

**ஆண்டு$^{2}$** āṇḍu, பெ. (n.) மூங்கில் முளை (சேரநா.); young sprout of bamboo (Ker.).

ம. ஆண்டு, ஆண்டன்.

*[அண்டு → ஆண்டு. ஆண்டு = அண்டையிற் கிளைத்து முளைக்கும் மூங்கில் முளை. ]*

மூங்கில் முளைக்கு மலையாள மொழியில் ஆண்டு, ஆண்டை, ஆண்டல், ஆண்டன் என்னும் பெயர்கள் உள்ளன. மூங்கிற்றூரில் அண்டையில் கிளைக்கும் மூங்கில் முளைகள், அண்டு, அண்டை, என்றே தொடக்கத்தில் பெயர்பெற்று நாளடைவில் அண்டு → ஆண்டு → ஆண்டை. அண்டு → ஆண்டு → ஆண்டல் → ஆண்டன் எனத் திரிபுற்றிருக்கலாம். மூங்கிலுக்குப் பக்கமுளை 'அண்டை' எனப் பெயர் பெற்றிருப்பது சாலப் பொருந்துவதே. இது பன்னிரு மாதங்களுக்கு ஒருமுறை முளைக்கும் இயல்புடைத்தாதலின் இதனடிப்படையாக ஆண்டு என்னும் காலப்பெயர் தோன்றவும் வழிவகுத்தது.

அண்டு அண்மைப் பொருளிலும் சேர்ப்புப் பொருளிலும் மேலையாரிய மொழிகளிலும் வழக்கூன்றியுள்ளது.

and: n, (emph.) a end along with, in addition to. OE. and ond, corr, to Ofris. and (a), ande, end (a) en, OS. ande.endi (Du.en), OHG. anti, enti, inti, unti (G. und), and Skt. atha (:*-ntha) there upon, if it survived, would, owing to lack of stress, coincide with and, (see AN$^{2}$) connexion with OE. and -(as in and swaru ANSWER), ON. and-, Goth. anda, anda-, and Skt. anti over against, Gr. anti against, L. ante before, and OE. ende END, etc. is no longer gen. accepted. (O.D.E.E.)

**ஆண்டு$^{3}$** āṇḍu, பெ. (n.) அவ்விடம்; that place, there. "ஆண்டு மஃதொப்பதில்" (குறள், 363).

*[ஆ → அண்டு → ஆண்டு. ஆ = சேய்மைச் சுட்டு. அண்டு = அண்டை, இடம், பக்கம். ஒ.நோ. அந்தண்டை போ, இந்தண்டை வா. ]* .

**ஆண்டு$^{4}$** āṇḍu, பெ. (n.) பழைமையான, காலத்தால் முற்பட்ட; ancient.

*[ஆ = நெடுஞ்சுட்டு, காலமுன்மை. ஆ → ஆண்டு. தமிழெழுத்துத் தோற்றம் என்னும் கட்டுரையில் பாவாணர் 'முன்மொழி' (1971 சனவரி) இதழில் ஆண்டு என்னும் சொல்லுக்குப் பழமை என்னும் பொருளும் உண்டு எனக் காட்டியுள்ளார். ]*

**ஆண்டுகள்ளடவு** āṇḍu-kaḷ-ḷ-aḍavu, பெ. (n.) ஆண்டு வருமானம்; annual income (T.A.S.iii.216).

*[ஆண்டுகள் + அடைவு = ஆண்டுகள்ளடவு அடைவு → அடவு (இடைத்திரிபு) ; அடைவு = சேர்வு, கருவூலத்தில் சேர்க்கப்படுவது, அரசுக்கு நிலவரியாக வரும் ஆண்டு வருவாய்.]*

**ஆண்டுத்தொகை** āṇḍu-t-togai பெ. (n.) ஆண்டிறுதியில் பெறத்தக்கதொகை; sum total receivable in the year end.

*[ஆண்டு + தொகை.]*

**ஆண்டு நிறைவு** āṇḍu-niṟaivu, பெ. (n.) 1. குழந்தைகளின் முதலாண்டு நிறைவு நாள்; first birth anniversary, as a day of special celebration. (விதான. மைந்தர்.12). 2. நிறுவனம், பணி ஆகியவற்றின் ஓராண்டு நிறைவு; successful completion of one year of an institution or special work undertaken.

*[ஆண்டு + நிறைவு - ஆண்டு நிறைவு = ஓராண்டுக்காலம் முடிவடைதல். ]*

**ஆண்டு நூறுபட்டை** āṇḍu-nūṟu-paṭṭai, பெ. (n.) நூறாண்டுகள் எய்தி முதிர்ந்த வேம்பு, பூவரசு, ஒதிகை முதலிய மரங்களின் பட்டை; bark of the trees like Margosa, portia, wodina etc., which are 100 years old.

*[ஆண்டு + நூறு + பட்டை. நூறாண்டு வளர்ந்து முதிர்ந்த மரத்தின் பட்டை.]*

**ஆண்டுப்பிறப்பு** āṇḍu-p-piṟappu, பெ. (n.) புத்தாண்டு; new year.

*[ஆண்டு + பிறப்பு]*

**ஆண்டு மாறி** āṇḍu-māṟi, பெ. (n.) திருந்தாதவனாயும் காலத்தாலும் இடத்தாலும் ஒத்துப் போகும் இயல்பறியாமலும் ஒரு சீராக வாழ்க்கை நடத்த அறியாமலும் இருப்பவனைத் திட்டு

வதற்குப் பயன்படுத்தும் வசைமொழி; term of abuse, implying that the person is past the period and place of progressing, incorrigible person. அவனொரு ஆண்டுமாறி (உ.வ.)

*[ஆள் → ஆண்டு + மாறி.]*

**ஆண்டுமானம்** āṇḍu-māṉam, பெ. (n.) ஆண்டுக் கணக்கின் பொருட்டு வழங்கும் கால அளவு; era.

*[ஆண்டு + மானம்.]*

**ஆண்டுமுஞ்சி** āṇḍu-muñji, பெ. (n.) ஒரு வசைமொழி; term of abuse.

*[ஒருகா. ஆண்டு + முடிஞ்சி → ஆண்டுமுஞ்சி.]*

வாழ்ந்து முடிந்தவன், என்று திட்டுவதன் நோக்கம், நன்கு வாழுங்காலத்து, உள்ளவற்றை அழியாமல் திறமையாகக் காக்குந் திறமின் மையைச் சுட்டிக் காட்டிப் பழித்தலாம். ஒ.நோ: கலியாணம் முடிந்துவிட்டது என்பதைக் கலியாணம் மூஞ்சி விட்டது என்பது கொச்சை வழக்கு.

**ஆண்டுமூய்-தல்** āṇḍu-mūy-, 2 செ.கு.வி (v.i.) மரபு குன்றல், வளர்ச்சியறுதல்; to stop developing, to decline. அந்தக் குடும்பம் ஆண்டு மூய்ந்து போயிற்று (உ.வ.).

*[ஒருகா. ஆண்டு + மாய் → ஆண்டுமாய் → ஆண்டு மோய் → ஆண்டுமூய். மாய்தல் = அழிதல்.]*

**ஆண்டுயர்த்தம்** āṇduyarttam, பெ. (n.) சம்பளம் பெறும் பணியரளருக்கு ஆண்டுக் கொருமுறை வழங்கப் படும் ஊதிய உயர்வு; increment.

*[ஆண்டு + உயர்த்தம்.]*

**ஆண்டு வரி** āṇḍu-vari பெ. (n.) ஓராண்டு வரி; annual tax.

**ம.** ஆண்டுவரி

*[ஆண்டு + வரி.]*

**ஆண்டுவா-தல்** (ஆண்டுவருதல்) āṇḍu-vā-, 18 செ.கு.வி. (v.i.) பயன்பாட்டிற்குப் போதியதாதல்; to be sufficient for use . நித்தம் ஒருபடி தயிர் வாங்கியும் ஆண்டுவரவில்லை (உ.வ.).

*[ஆண்டு + வா - ஆண்டுவா = ஆளுதற்கு அல்லது பயன்படுத்துதற்கு இயைந்து வருதல், போதியதாதல்.]*

**ஆண்டெழுத்துத்தேவை** āṇḍeluttu-t-tēvai, பெ. (n.) பழைய வரிவகை; an ancient tax (Pudu. Insc. 399).

*[ஆண்டு + எழுத்து + தேவை = ஆண்டெழுத்துத் தேவை. ஒருகா. ஆண்டுதோறும் எழுத்துப் பணிக்காகப் பெறும் வரியாகலாம்.]*

**ஆண்டை**[1] āṇḍai, பெ. (n.) முதலாளி, தலைவன், பண்ணையார்; master, lord, landlord, used by people with reference to their feudal chief or a superior. 'ஆண்டை கூலியைக் குறைத்தால், சாம்பான் வேலையைக் குறைப்பான்' (பழ.).

**ம.** ஆண்டு; **தெ.** ஆண்டி.

*[ஆள் → ஆண் → ஆண்ட + ஐ = ஆண்டை = தன்னை ஆளுகின்ற அல்லது ஆளாகக் கொண்ட தலைவன். ஐ = பெயர்ச் சொல்லீறு.]*

**ஆண்டை**[2] āṇḍai, பெ. (n.) அங்கு, அவ்விடம்; that place, there (நாலடி. 91).

*[ஆ = ஆண்டு → ஆண்டை. ஆ = அந்த (சேய்மைச்சுட்டு).]*

**ஆண்டை**[3] āṇḍai, பெ. (n.) மூங்கில் முளை; young sprout of bamboo.

**ம.** ஆண்டை, ஆண்டல், ஆண்டன்; **து.** அண்டெ (மூங்கில் வளை); **பட.** அண்டெ (ஊதுகுழல்).

*[அண்டு → அண்டை → ஆண்டை. அண்டு = பக்கம். மூங்கில் தூரின் அடிப்பக்கத்தில் கிளைத்தெழும் முளை அண்டையென்றழைக்கப்பட்டு முதனிலை நீண்டு 'ஆண்டை' யாயிற்று.]*

**ஆண்டை**[4] āṇḍai, பெ. (n.) 1. தேட்கொடுக்குச்செடி, Indian turnsole - Heliotropium indicum. 2. ஆதொண்டைக்கொடி; thorny creeping plant - capparis horrida, 3. அழிஞ்சில்; sage-leaved alangium - Alangium lamarckii. 4. ஆண்மரம்; tree having hard core.

*[ஒருகா. 'ஆண்டை' = வன்மை, திண்மை, முண்மை யுடைமையால் மரம் மற்றும் செடி கொடியினத் திற்குள் ஒரு சாரானவற்றுக்கு இப்பெயர் ஏற்பட்டி ருக்கலாம். ஆதொண்டை → ஆண்டை (மரூஉ).]*

**ஆண்டைச்சிகை** āṇḍai-c-cigai, பெ. (n.) ஆண்டு நிலுவைக் கணக்கு; account of arrears or balance for the year.

*[ஆண்டு + ஐ + சிகை. = ஆண்டைச்சிகை. ]*

'சிறங்கை →சிகை (கொ.வ.). கடந்த ஆண்டின் வரிக்குத் தவசம் அளக்கும்போது, அப்போதே தரப்படாத நிலுவைக்காக, வட்டம் (வட்டி) பிடிக்கும் நோக்கில், ஒரு சிறங்கை அள்ளிப் போடுதல் மரபு. இச்சொல் பொதுவாக ஆண்டு நிலுவைக் கணக்கைக் குறிப்பதாயிற்று.

**ஆண்டொழில்** āṇḍolil, பெ. (n.) பெருஞ்செயல், அருஞ்செயல், வீரச்செயல்; mighty deeds or heroic deeds.

*[ஆண் + தொழில் - ஆண்டொழில் = ஆண்மை விளங்கச் செய்யப்படும் செயற்கரிய செயல்.]*

**ஆண்டொழில் மைந்தன்** āṇdoḻil–maindaṉ, பெ. (n.) வில்லவன் – வல்வில் ஓரி; expert in archery. சொல்லுக்குக் கீரன்; வில்லுக்கு ஓரி. (பழ.).

*[ஆண் + தொழில் + மைந்தன் = ஆண்டொழில் மைந்தன். ஆண்தொழில் = ஆண்மை. மைந்து → மைந்தன். மைந்து = வலிமை. மைந்தன் = வலிமை மிக்கவன்.]*

**ஆண்டோன்**[1] āṇdōṉ, பெ. (n.) 1. உடையோன், முதலாளி (அக.நி.); proprietor. 2. தலைவன்; master. 3. தேவன் (அக.நி.); lord.

*[ஆள் → ஆண் → ஆண்டான் → ஆண்டோன். 'ட்' எழுத்துப் பேறு. ஆண்டோன் = ஆள்பவன், தலைவன்.]*

**ஆண்டோன்**[2] āṇdōṉ, பெ. (n.) மாந்தன் (நாமதீப.); man.

*[ஒரு கா. ஆள் → ஆண். ஆண் + ட் + (ஆன்) → ஓன் → ஆண்டோன். ஆண் → ஓன் ஆண்பாலீற்றுத் திரிபு. ஆள் = ஆளும் பணிக்குரிய மாந்தன், மாந்தர் கூட்டம்.]*

வேலைக்கு ஆள் வேண்டும் என்னும் உலக வழக்கில் ஆள் – மாந்தன் எனப் பொருள்படுதல் காண்க. ஆள் வேரினடியாக அண்டிரன் என்னும் தமிழ்க் குறுநில மன்னன் மரபும் ஆந்திர மரபும் பெயர் பெற்றுள்ளன. மேலையாரிய மொழிகளிலும் இவ் வேரினடியாகச் சொற்கள் கிளைத்துள்ளன.

GK. anthropos–man, he who has the face of a man, andro, before a vowel andr - combining form meaning man. cf. Andrew, Andrias, andron, dandy, 'a fop', and the second element in Alexander, Leander, Philander, cf. also the first element in anthropo - (E.C.E.D.E.L.).

மேலையாரிய மொழிகளில் பெயரின் முன்னொட்டாகவும் பின்னொட்டாகவும் வரும் andr என்னும்சொல் 'மாந்தன்' என்று பொருள்படுகிறது.

**ஆண்தண்டு**[1] āṉ–taṇḍu, பெ. (n.) வலக்காதின் தண்டு (வின்.); small gristly protuberance of the right ear, opp. to பெண்தண்டு. (சா. அக.).

*[ஆண் + தண்டு. தண்டு = சிறிது தடித்திருப்பது. ஆண் =வலப்பக்கம்.]*

சிவபெருமானின் இடப்பக்கம் உமையிருத்தலால் இடப்பக் கத்திற்குப் 'பெண்' அடைமொழியாகவும் வலப்பக்கத்திற்கு 'ஆண்' அடைமொழியாகவும் மருத்துவரால் பொதுவாக ஆளப்படும் குறியீடுகளாக அமைந்தன.

**ஆண்நாள்** āṉṉāḷ, பெ. (n.) தாழி (பரணி); ஆரல் (கார்த்திகை); உருள் (உரோகினி); கழை (புனர் பூசம்); கொடிறு (பூசம்); கைம்மீன் (அத்தம்); பனை (அனுடம்); முக்கோல் (திருவோணம்) முற்கொழுங்கால் (பூரட்டாதி); பிற்கொழுங்கால் (உத்திரட்டாதி) முதலிய விண்மீன்கள்; male stars are parani, kārtigai, urōgiṉi, puṉarpūsam, pusam, attam, aṉuḍam, tiruvōṇam, pūrattādi, uttirattādi.

*[ஆண் + நாள்.]*

**ஆண்பனை** āṉ–paṉai, பெ. (n.) காய்க்காத பனை; male palmyra bearing no fruit. "குரும்பை ஆண் பனை" (சம். தேவா. திருவோத்தூர்.)

*[ஆண் + பனை. ஈனாப்பனை ஆண்பனை எனப் பட்டது.]*

**ஆண்பாடு** āṉ–pāḍu, பெ. (n.) 1. ஆணின் குணம்; (சா.அக.); male characteristics. 2. ஆண்களின் முயற்சி; efforts of the male members of the family used along with the expression, பெண்பாடு. ஆண்பாடு பெண்பாடு பட்டு அச்செயல் முடிந்தது (உ.வ.).

*[ஆண் + பாடு. ஆண் = ஆண்மக்கள், பாடு = செயல், உழைப்பு. படு → பாடு (மு.தி.தொ.பெ.).]*

**ஆண்பாத்தி** āṉpātti, பெ. (n.) உப்புப் பாத்தி வகை; crystalizer in salt pans, dist. from பெண்பாத்தி.

*[ஆண் + பாத்தி.]*

**ஆண்பால்** āṉpāl, பெ. (n.) 1. ஆண்வகை, ஆணினம், (தொல். பொரு. 603); male sex. 2. (இலக்.) ஐம்பால்களுள் ஒன்று; (gram.) singular member of personal nouns and verbs in masculine gender. (நன். 325) 3. ஆண்தன்மை; masculine quality. (சா.அக.)

*[ஆண் + பால். பால் = வகை, பாகுபாடு, தன்மை.]*

**ஆண்பாலெழுத்து** āṉpāl–eḻuttu, பெ. (n.) 1. அ, இ, உ, எ, ஒ என்னும் ஐந்து குற்றெழுத்துகள் (இலக்.வி.773, உரை); five short Tamil vowels. (செ.அக.). 2. பன்னிரண்டு உயிரெழுத்துகளும் அவையின்றி உயிர்மெய்க்குற்றெழுத்துகளும் (கதி.அக.); twelve vowels and other short consonants of the Tamil language.

*[ஆண் + பால் + எழுத்து]*

**ஆண்பாற்கிளவி** āṉpāṟ–kiḷavi, பெ. (n.) தலைமகன் கூற்று; utterance of a hero.

*[ஆண் + பால் + கிளவி]*

**ஆண்பாற்பிள்ளைக்கவி** āṉpāṟpiḷḷai–k–kavi, பெ. (n.) **ஆண்பாற் பிள்ளைத் தமிழ்** பார்க்க; see āṉpāṟpiḷḷai–t–tamiḻ

*[ஆண்பால்+பிள்ளை+தமிழ்=பாட்டு]*

**ஆண்பாற்பிள்ளைத்தமிழ்** āṇpāṟpiḷḷai-t-tamiḻ, பெ (n.) தலைமகனைக் குழந்தையாகக் கருதி ஆண் குழந்தைப் பருவத்தைக் காப்பு, செங்கீரை, தால், சப்பாணி, முத்தம், வருகை (வாரானை), அம்புலி, சிறுபறை, சிற்றில், சிறுதேர் எனப் பத்துப் பருவங்களாகப் பிரித்து ஒரு பருவத்துக்குப் பத்துப் பாடல்களாக மொத்தம் நூறு பாடல்களில் வண்ணித்துப் பாடும் பனுவல்; poem celebrating the ten different stages of development in the infancy and childhood of a hero, viz., kāppu, seṅgīrai, tāl, sappāṇi, muttam, vāraṇai, ambuli, siṟuparai, siṟṟil, siṟutēr, opp. to Peṇpāṟ piḷḷai-t-tamiḻ.

*[ஆண்பால் + பிள்ளை + தமிழ். பிள்ளைப் பருவத்தைப் பாடுவதால் பிள்ளைத்தமிழ் எனப்பட்டது பிள்ளைத்தமிழ், சிற்றிலக்கியங்களுள் ஒன்று.]*

**ஆண்பாற் பிள்ளைப்பாட்டு** āṇpāṟpiḷḷai-p-pāṭṭu, பெ. (n.) ஆண்பாற்பிள்ளைத் தமிழ் பார்க்க; see āṇpāṟ piḷḷai-t-tamiḻ. "ஆண்பாற் பிள்ளைப்பாட்டே" (இலக். வி. 806).

*[ஆண்பால் + பிள்ளை +பாட்டு.]*

**ஆண்பிள்ளை** āṇpiḷḷai, பெ. (n.) ஆண் குழந்தை; male child. 2. ஆடவன்; man. நீ ஆண் பிள்ளையானால் இங்கே வா (உ.வ.); 3. வல்லவன்; man of capacity or ability. இதைச் செய்து முடிக்கக்கூடிய ஆண் பிள்ளையா அவன்? (உ.வ.). 4. வீரன்; warrior. 'ஆண் பிள்ளைகளான பீஷ்மத் துரோணாதிகளிறே' (ஈடு, 7,4,5). 5. கணவன்; husband.

ம. ஆண்பிள்ளை; து. ஆண்பாலெ

*[ஆண் + பிள்ளை. பிள்ளை = குழந்தை. ஆடவனையும் ஆண்மையையும் குறித்த போது ஆண் பிள்ளையென்பதிற் பிள்ளை பொருளிழந்த ஈறாகி வல்லவன், வீரன், கணவன் ஆகிய பொருள் தந்தது.]*

**ஆண்பிள்ளை அரிமா** āṇpiḷḷai-arimā, பெ. (n.) தறுகண் மறவன்; எதற்கும் அஞ்சாத வீரன்; man of supreme valour and prowess as a brave lion.

*[ஆண்பிள்ளை + அரிமா.]*

**ஆண்பிள்ளைச் சிங்கம்** āṇpiḷḷai-c-cingam, பெ. (n.) வீரன்; hero, a term of praise. "ஆனையைப் பிடித் திடுவான் ஆண்பிள்ளைச்சிங்கம்" (திரைப்பாட்டு).

*[ஆண்பிள்ளை + சிங்கம். Skt. simha. > சிங்கம் = அரிமா. ஆண்பிள்ளையாகிய அரிமா என உருவக வகையமைந்த சொல்லாட்சி. ஆண்பிள்ளை அரிமா பார்க்க; see āṇpiḷḷai-arimā.]*

**ஆண்பிறங்கடை** āṇpiṟaṅkaḍai, பெ. (n.) 1. ஆண் தலை முறை; male descendant, male lineage. 2. ஆண் குழந்தை; male issue, male child.

*[ஆண் + பிறங்கடை. பிறங்கு → பிறங்கடை. பிறங்குதல் = தோன்றுதல்.]*

**ஆண்புட்குற்றம்** āṇpuṭkuṟṟam, பெ. (n.) மாலை மங்கிய வேளையில் குழந்தைகளை வெளியிற் கொண்டு போவதாலுண்டாகும் ஓர் நோய்; a morbid diathesis in children supposedly caused by taking them out after dusk; when some inauspicious bird flys overhead.

*[ஆண்புள் + குற்றம்.]*

**ஆண்பூதியம்** āṇpūdiyam, பெ. (n.) ஆண் பிள்ளையிடம் ஏற்பட்ட ஒருவகை மெய்க்கூறு; male element of a sexual cell, a masculo-nucleus-Arsenoblast. (சா. அக).

*[ஆண் + பூதியம்.]*

**ஆண் பெண்** āṇpeṇ, பெ. (n.) கணவன் மனைவி, இணை துணையர் (கூடா.); husband and wife, married couple.

*[ஆண் + பெண்.]*

**ஆண்பெண் அலி கோள்கள்** āṇpeṇ-ali-kōḷgaḷ, பெ. (n.) கோள்களுள் செவ்வாய், வியாழன், ஞாயிறு என்பன ஆண் கோள்கள். அறிவனும் (புதன்) காரி (சனி)யும் அலிகோள்கள். வெள்ளி, திங்கள், கருங்கோள், (இராகு) செங்கோள், (கேது) என்பன பெண் கோள்கள். (அபி. சிந்.); male planets are Mars, Jupitor and Sun; hermaphrodite planets are Mercury and Saturn; female planets are Venus, Moon, Moon's ascending node and moon's decending node. (சா. அக).

*[ஆண் + பெண் + அலி + கோள்கள்.]*

**ஆண்பெண்ணலி நாள்கள்** āṇpeṇṇali-nāḷgaḷ, பெ. (n.) தாழி (பரணி), ஆரல் (கார்த்திகை), உருள் (உரோகிணி), கழை (புனர்பூசம்), கொடிறு (பூசம்), கைம்மீன் (அத்தம்), பனை (அனுடம்), முக்கோல் (திருவோணம்), முற்கொழுங்கால் (பூரட்டாதி), பிற்கொழுங்கால் (உத்திரட்டாதி) என்பன ஆண் நாள் மீன்கள். மாழ்கு (மிருகசீரிடம்), குன்று (சதயம்), குருகு (மூலம்) இவை அலி நாள் மீன்கள். இரலை (அசுவினி), யாழ் (திருவாதிரை), கவ்வை (ஆயிலியம்), கொடுநுகம் (மகம்), கணை (பூரம்),

மானேறு (உத்திரம்), நெய்ம்மீன் (சித்திரை), விளக்கு (சுவாதி), சுளகு (விசாகம்), தழல் (கேட்டை), முற்குளம் (பூராடம்), கடைக்குளம் (உத்திராடம்), பறவை (அவிட்டம்), தொழுபஃறி (இரேவதி) என்பன பெண் நாள் மீன்கள். (அபி.சிந்.); male stars are parani, kārttigai, urōgiṉi, puṉarpūšam, pūšam, attam, aṉuḍam, tiruvōṇam, pūrattādi, and uttirattādi; hermaphrodite stars are mirugašīriḍam, sadayam and mūlam; female stars are asupadi, tiruvādirai, āyilyam, magam, pūram, uttiram, sittirai, swādi, visāgam, kēttai, pūrāḍam, uttirāḍam, aviṭṭam and irēvadi.

*[ஆண் + பெண் + அலி + நாள்கள்.]*

**ஆண் வைத்தியம்** āṇ-paittiyam, பெ. (n.) ஆண்மகனின் மேல் பெண் கொண்ட ஒரு வேட்கை; insane sexual desire in a female over a male. It is opp. to peṇpaittiyam, the one in the male. (சா.அக.)

*[ஆண் + வைத்தியம். பித்தம் → பித்தியம் → வைத்தியம். பித்தம் = மயக்கம், வெறி.]*

**ஆண்மக்கட் பருவம்** āṇmakkaṭ-paruvam, பெ. (n.) இளையோனாகுங் காலம் (பன்னிருபா.226); stage in the life of a male, when he comes of age.

*[ஆண்மக்கள் + பருவம். ஆண்மகனாக வளர்ச்சி பெய்தும் பருவம். மீசையும் தாடியும் வளரும் பருவம்.]*

**ஆண்மகன்** āṇmagaṉ, பெ. (n.) 1. ஆண் குழந்தை; male child. 2. மாந்தன்; man. 3. சிறந்தோன்; efficient man. 4. கணவன் ; husband. 5. மகன்; son. 6. துணிவுமிக்கவன்; man of courage. "ஆண்மகன் கையிலயில்வாள்" (நாலடி.386)

*[ஆன் → ஆண் + மகன்.]*

**ஆண்மஞ்சள்** āṇmañjaḷ, பெ. (n.) கறிமஞ்சள்; turmeric used in curry.

*[ஆள் – ஆண் + மஞ்சள் (ஆளும் மஞ்சள்).]*

**ஆண்மதப்பு** āṇmadappū, பெ. (n.) மதனப்பூ; Indian cowslip creeper–pergularia winor. (சா.அக.).

**மறுவ:** ஆண்மதன காமப்பூ

*[ஒருகா. ஆண் + மதனம் + பூ. ஆண்மதனப்பூ → ஆண்மதப்பூ. மதனம் → மதம் (இடைக்குறை).]*

**ஆண்மரம்** āṇmaram, பெ. (n.) 1. வயிரம் பாய்ந்த மரம்; a class of trees in which the core is hard and suitable for timber. "உற்றவாண்மரம் உள் வயிரமுடை மரமாம்" (சா.அக.). 2. நஞ்சை முறிக்கும் ஆண்மையுடைய அழிஞ்சில் மரம்; tree in which every part is an antidote for poison, sage – leaved alangium. 3. சேராங்கொட்டை மரம்; marking nut tree – It is so called because it is an antidote against poison. 4. காயா மரம்; tree not bearing fruit, 5. கருங்காலி மரம்; sundra tree (சா.அக.).

**து.** ஆண்மர.

*[ஆண் + மரம். ஆண் = ஆண்மை, வன்மை, மரங்களின் நடுவில் வயிரம் பாய்ந்து திண்ணிதாதல், எதிர்க்கும் வலிமையுடையதாதல். காய் காய்க்காத மரங்களை, ஆண்பாற்படுத்துக் கூறும் மரபுபற்றிக் காயாமரம் ஆண்மரம் எனப்பட்டது. நஞ்சு முறிக்கும் ஆற்றல் கொண்ட மரங்களின் வன்மையைக் குறிக்குஞ் சொல்லாக "ஆண்" அடைமொழி ஆளப்பட்டுள்ளது.]*

**ஆண்மலடு** āṇmalaḍu, பெ. (n.) ஆண்மகனுக்கு ஏற்படும் மலட்டுத்தன்மை. want of fertility or fecundity in a man's semen.

*[ஆண் + மலடு. மலடு பார்க்க; see maladu.]*

**ஆண்மாதுளை** āṇ-māduḷai, பெ. (n.) பூமாதுளை; double-flowered pomegranate.

*[ஆண் + மாதுளை. மாதுளை பார்க்க; see māduḷai.]*

**ஆண்மாறி** āṇ-māṟi, பெ. (n.) 1. அடங்காக் குண முள்ளவள்; masculine woman, termagant. 2. அடக்க மில்லாதவள்; woman outrageous in conduct, immodest woman. 3. ஆண் குணமுடையவள்; manlike woman, Virago, Amazon.

*[ஆண் + மாறி. மாறி = மாறியவள்.]*

**ஆண்மூங்கில்** āṇ-mūṅgil, பெ. (n.) 1. கெட்டியான மூங்கில்; solid bamboo. 2. கல்மூங்கில்; a species of solid bamboo. It is opposed to peṇmuṅgil, the common hollow bamboo.

*[ஆண் + மூங்கில். ஆண் = வன்மை, வயிரம், திண்மை.]*

**ஆண்மெய்க்கூறு** āṇmey–k–kūṟu, பெ.(n.) 1. ஆண் பிள்ளைகளுக் குண்டான இயற்கை, வலிமை, அறிவு முதலியன; essential nature, strenght or virility, power, intellect, etc. of man. 2. ஆண் மகனிடம் அமையத்தக்க மெய்க்கூறு; male element of a sexual cell, a masculo – nuelous – Arsenoblast. (சா.அக.).

*[ஆண் + மெய் + கூறு.]*

**ஆண்மெய்க்கூறுநூல்** āṉmey-k-kūṟu-nūl, பெ. (n.) மாந்தன் உடற்கூறு பற்றியும், நோய் பற்றியும் ஆண்குறியின் மெய்ம்மைகளைப் பற்றியும் கூறும் நூல்; scientific study of masculine constitution and of the diseases of the male sex, especially the study of diseases of the male organ = Andrology. (சா. அக.).

*[ஆண் + மெய் + கூறு + நூல்.]*

**ஆண்மெய்ம்மை** āṉmeymmai, பெ. (n.) மாந்தன் உடற்கூற்றியல்; scientific study of masculine constitution.

*[ஆண் + மெய்ம்மை.]*

**ஆண்மை** āṉmai, பெ. (n.) 1. ஆளுந் தன்மை (தொல்.சொல்.51); controlling power. 2. ஆண் தன்மை (சிலப்.6,56); masculinity, virility. 3. வெற்றி (பிங்.); conquest, victory, success. 4. வலிமை (பிங்.); strength, power. 5. செருக்கு; pride, conceit. நானென்ற வாண்மை 6. உடைமை; possession used as a suffix. "புல்லறிவாண்மை" (குறள், 331). 7. வாய்மை (பிங்.); truth. 8. ஆண்பாலுணர்ச்சி வன்மை; having sexual power, a peculiar characteristic in males.

ம. ஆண்ம, ஆணத்தம்; க. ஆண்ம.

*[ஆள் → ஆண் → ஆண்மை (வே.சொ.க.7). ஆள் + மெய் - ஆண்மை = ஆளுந்தன்மை. மெய் = தன்மை, இயல்பு. மெய் → மை. மெய் பார்க்க; see mey.]*

**ஆண்மைக்குறைவு** āṉmai-k-kuṟaivu, பெ. (n.) வலிமைக் குறைவு; loss of manly power, want of virility, impotency.

*[ஆண்மை + குறைவு.]*

**ஆண்மைச் சினைப்பெயர்** āṉmai-c-ciṉai-p-peyar, பெ. (n.) ஆண்பாலையே விளக்கி நிற்கும் சினைப்பெயர்; masculine nouns denoting parts or members of the body or names derived from such nouns. 'முடவன்' (நன்.283, உரை).

*[ஆண்மை + சினை + பெயர். சினை = உறுப்பு.]*

**ஆண்மைச்சினை முதற்பெயர்** āṉmai-c-ciṉai-mudaṟ peyar, பெ. (n.) ஆண்பாலையே விளக்கி நிற்கும் சினை முதற்பெயர்; the noun, ciṉaimudaṟ peyar, which denotes masculine gender in particular. 'முடக்கொற்றன்' (நன். 283 உரை).

*[ஆண்மை+சினை+முதல்+பெயர். சினைமுதற் பெயர் பார்க்க; see ciṉai mudaṟ peyar.]*

**ஆண்மைதரு கிழங்கு** āṉmai-taru-kiḻaṅgu, பெ. (n.) 1. நிலப்பனங்கிழங்கு ; ground palm or hog palm. 2. நிலச் சருக்கரைக்கிழங்கு ; root of a plant. 3. அமுக்கிராகிழங்கு ; the root of a plant. 4. பொற் சீந்திற் கிழங்கு ; root of a plant. (சா.அக.).

மறுவ. நிலச் சருக்கரைக் கிழங்கு, பூமிச் சருக்கரைக் கிழங்கு.

*[ஆண்மை + தரு + கிழங்கு.]*

**ஆண்மைப்பொதுப்பெயர்** āṉmai-p-podu-p-peyar, பெ. (n.) உயர்திணை யாண்பாலையும் அஃறிணை யாண் பாலையும் ஏற்கும் பொதுப்பெயர்; masculine nouns, common to the rational and irrational classes. 'சாத்தன் இவன், சாத்தன் இவ்வெருது' (நன்.284, உரை).

*[ஆண்மை + பொது + பெயர்.]*

**ஆண்மை முதற் பெயர்** āṉmai-mudaṟ-peyar, பெ. (n.) ஆண்பாலையே விளக்கி நிற்கும் முதற்பெயர்; masculine noun denoting the stock or body. 'சாத்தன்' (நன்.283, உரை).

*[ஆண்மை + முதல் + பெயர்.*

முதற்பெயர் பார்க்க; see mudaṟ-peyar.]

**ஆண்மை முறைப்பெயர்** āṉmai-muṟai-p-peyar, பெ. (n.) ஆண்பாலை உணர்த்தும் முறைப்பெயர்; masculine noun denoting relationship. தந்தை (நன். 283, உரை.).

*[ஆண்மை + முறை + பெயர்.]*

**ஆண்மையன்** āṉmaiyaṉ, பெ. (n.) சிவன்; Lord Śiva. (திருவா. 6.8.8.).

**ஆண்மையிலி** āṉmaiyili பெ. (n.) பெண்தன்மை (நாமதீப.); feminity, womanishness.

*[ஆண்மை + இலி. இலி = இல்லாத தன்மை.]*

**ஆண்ராசி** āṉrāśi, பெ. (n.) **ஆணோரை** பார்க்க; see āṉōrai.

**ஆண் வசம்பு** āṉ-vaśambu, பெ. (n.) ஒருவகை வசம்பு; a variety of sweet flag - Acorus Calamus. (சா.அக.).

**ஆண்வழி** āṉ-vaḻi, பெ. (n.) 1. ஆண் தலைமுறை; male descendant, family descent in the male line, 2. ஆண்குழந்தை; male child. 3. ஆண் தலை முறையி (சந்ததி)லிருந்து உண்டான மரபு; male line, family descent in the male line.

ம. ஆண்வழி

*[ஆண் + வழி.]*

**ஆண்வெறுப்பு** āṇ-veṟuppu, பெ. (n.) பெண்களுக்கு ஆண்களைக் கண்டால் உண்டாகும் வெறுப்பு; morbid dislike of or insane aversion to the male sex in women, Apandria.

*[ஆண் + வெறுப்பு ]*

**ஆணகம்**[1] āṇagam, பெ. (n.) **ஆளகம்** பார்க்க; see āḷagam.

**ஆணகம்**[2] āṇagam, பெ. (n.) 1. கோளகநஞ்சு; mineral poison.

*[ஆணம்[2] → ஆணகம்.]*

**ஆணங்கம்** āṇaṅgam, பெ. (n.) ஆண்குறி; genital of a male as opposed to pennaṅgam, genital of a female.

*[ஆண் + அங்கம். அங்கம் = உறுப்பு* Skt. anga.]

**ஆணங்காய்** āṇaṅgāy, பெ. (n.) ஆண்பனையின் பாளை, ஆண்பனையின் காய்; branched spadix of the flowers of the male palmyra tree (சா.அக.).

*[ஆண் + அம் + காய். அம் = சாரியை.]*

**ஆணணி** āṇaṇi, பெ. (n.) மறவர் படைவகுப்பு; military parade. "ஆணணி புகுதலும் அழிபடை தாங்கலும்" (சிறுபாண். 211.).

*[ஆண் + அணி.]*

**ஆணத்தி**[1] āṇatti, பெ. (n.) ஆணை, கட்டளை; order, command (S.I.I.iii.93).

**ம.** ஆண; **க.** ஆணதி; **தெ.**ஆணதி; **பிராகி.**, **பாலி.** ஆணத்தி. Skt. ājnapti.

*[ஆணை + அத்தி = ஆணத்தி = ஆணை. அத்து = சாரியை. 'இ' உடைமை குறித்த ஈறு. த. ஆணத்தி > பிராகி. ஆணத்தி. **ஆணை** பார்க்க;* see āṇai..]

**ஆணத்தி**[2] āṇatti, பெ. (n.) கற்பூரம்; camphor.

**ஆணம்**[1] āṇam, பெ. (n.) 1. அன்பு; love, friendship, affection. "ஆணமில் பொருளெமக்கு" (கலித். 1.). 2. பற்றுக்கோடு; support. "தேவரை யாணமென் றடைந்து" (திவ். திருச்சந். 69). 3. கொள்கலம், ஏனம்; vessel.

**ம.** ஆணம்; **க.** ஆண.

*[ஒருகா. அணையம் → அணயம் → அணம் → ஆணம். அணையம் = தழுவுதல், அணைத்தல், நட்புக்கொள்ளல், பற்றுக் கோடாயிருத்தல், நிலைக் களமாதல், பொருள்களைக் கொள்ளும் கொள்கலமாதல்.]*

**ஆணம்**[2] āṇam, பெ. (n.) 1. சாறு; soup. 2. குழம்பு (பிங்.); broth or thick consistent fluid curry, ஆட்டாணம், கோழியாணம் (உ.வ.). 3. குழம்புத் தான்; vegetable relish in soup.

**ம.** ஆணம்; **க.** ஆண (வெல்லப்பாகு).

*[ஒருகா. அள் → அளம் → ஆளம் → ஆணம். அள் → அளம் = சேறு, சாறு, குழம்பு.]*

**ஆணம்**[3] āṇam, பெ. (n.) 1. சிறுமை; smallness, meanness. "ஆணமில் சிந்தை வீரன்" (கந்தபு. வீரவாகு. கந்.39). **க.** ஆணம், அணம். 2. செருக்கு, ஆணவம் (கதி.அக.); pride, arrogance, egotism.

*[ஒருகா. அணம் → ஆணம். அணம் = சிறுமை. ஆணவம் → ஆணம் (இடைக்குறை).]*

**ஆணம்**[4] āṇam, பெ. (n.) 1. காட்டுவேப்பிலை; wild neem 2. காட்டுக்கொழுஞ்சி; opal orange (சா.அக.).

*[ஒருகா. அண் → அணம் → ஆணம். அண் = உயர்வு. நாட்டு வேம்பு, நாட்டுக்கொழுஞ்சியினும் உயரமாக வளரும் இயல்பு பற்றிக் காட்டு வேம்பும் காட்டுக் கொழுஞ்சியும் இப்பெயர் பெற்றிருக்கலாம்.]*

**ஆணம்**[5] āṇam, பெ. (n.) வெடிப்பு, பிளப்பு; crack, cleft, breach.

**ம.** ஆணம்; **க.** ஆணெ.

*[ஒருகா. ஆழ் + அம் → ஆழம் → ஆணம். பெரும்பாலும் நிலத்திற்றோன்றும் வெடிப்பே ஆணம் எனப்படும்.]*

**ஆணர்**[1] āṇar, பெ. (n.) பாணர் (அக.நி); pāṇars.

*[ஒருகா. பாணர் → ஆணர்.]*

**ஆணர்**[2] āṇar, பெ. (n.) 1. நன்மை (கதி.அக.); goodness 2. வளமை (கதி.அக.); fertility, prosperity.

*[யாணர் → ஆணர்.]*

**ஆணர்**[3] āṇar, பெ. (n.) ஆண்மையுடையவர்; one who possesses manly characteristics.

*[ஆண் + ஆணர்.]*

**ஆணல்லாதவர்** āṇallādavar, பெ. (n.) இறைவழி பாட்டில் இல்லாதவர்; non-devotee. "ஆணலாத வரைக் கண்டால் அம்ம நான் அஞ்சுமாறே" (திரு வாச.35.40).

*[ஆண் + அல்லாதவர்.]*

**ஆணலி** āṇali, பெ. (n.) ஆண்தோற்றம் மிக்க அலி (தொல். பொருள். 605. உரை); hermaphrodite human being in whom masculine features predominate,

i.e. a male with only the genital organs, eunuch similar to those of the female.

*[ஆண் + அலி.]*

**ஆணலை** āṇalai, பெ. (n.) கடலில் உயரமாக எழும்பும் அலை; high wave in the sea.

*[ஆண் + அலை . ஆண் = வலிமை.]*

**ஆணவப்பிணிப்பு** āṇava-p-piṇippu, பெ. (n.) ஆணவக் கட்டு; matter which is eternally encasing the soul and lasting till its final liberation.

*[ஆணவம் + பிணிப்பு = ஆணவப் பிணிப்பு. பிணிப்பு= கட்டு.]*

**ஆணவம்**[1] āṇavam, பெ. (n.) 1. செருக்கு (தாயு. சின்.3); pride, arrogance, egotism. 2. ஆணவமலம், மும்மலத்தொன்று; one of the three malās (defilements).

**ம.** ஆணவம்; **க.** ஆணவ; **Skt.**āṇava

*[ஆண் + அ + (வ்) + அம் = ஆணவம். அள் → அண் → ஆண் . அள் = செறிவு, திண்மை, வலிமை. ஆண் + அ - ஆண = திண்மையுள்ள, செருக்குள்ள ஆண்தன்மை கொண்ட. அ - கிழமைப் பொருளில் வந்த ஆறன் உருபு. வ் - உடம்படுமெய். அம் -பண்புப்பெயரீறு.]*

**ஆணவம்**[2] āṇavam, பெ. (n.) **ஆணகம்**[2] பார்க்க. see āṇagam[2]

*[ஆணகம் → ஆணவம்.]*

**ஆணவமலம்** āṇavamalam, பெ. (n.) (சிவனியம்) மும்மலங்களுள் ஒன்று (சி.சி. 2, 80, மறைஞா); (Śaiva) matter which is eternally encasing the soul and lasting till its final liberation, one of mum-malam. (three defilements).

**ம.** ஆணவமலம்; **க.** ஆணவமல.

*[ஆணவம் + மலம்.]*

**ஆணவமறைப்பு** āṇava-maṟaippu, பெ. (n.) ஆணவ மலத்தால் ஆதனுக்கு (ஆன்மா) ஏற்படும் அறியாமை; ignorance in which souls are enveloped because of āṇavam. which is an obstacle to the spiritual progress.

*[ஆணவம் + மறைப்பு.]*

**ஆணவலரிசி** āṇavalariśi, பெ. (n.) வெல்லப்பாகிலிட்ட அவல் (கருநா.); flattened rice soaked in molasses.

**க.** ஆணவலக்கி.

*[ஆணம் + அவல் + அரிசி , ஆணம் = சாறு , பாகு.]*

**ஆணழகன்** āṇalagaṉ, பெ. (n. ) அழகு வாய்ந்தவன் (கோவலன்கதை , 19); handsome man, good looking man.

*[ஆண் + அழகன். ]*

**ஆணன்** āṇaṉ, பெ. (n.) ஆண்மையுடையவன்; one having the qualities that become a man, as courage, fortitude etc. "அரவாட்டிய வாணனே" (சிவதரு. சுவர்க்கநரக.222).

*[ஆண் + அன். அன் = ஆண்பாலீறு . ]*

**ஆணா** āṇā, பெ. (n.) 1. காட்டுவேப்பிலை மரம்; downy axil-flowered shrubby wanpee - Clausena Wildenovii (pubescens ) 2. காட்டுக் கொழுஞ்சி ; opal orange (சா. அக. ).

*[ஆணா = ஆண்மரம். ஆண் + ஆ = ஆணா . பெண்தன்மை பிணவு, பிணா என்றாற் போன்று ஆண்தன்மை ஆணா எனப்பட்டது. ]*

**ஆணாடு-தல்** āṇāḍu-, 5.செ.குன்றாவி. (v.i.) விருப்பப்படி நடத்தல்; to do as one pleases. "அசோதை யாணாட விட்டிட்டிருக்கும்" (திவ்.நாச்சி.3,9).

*[ஆண் + ஆடுதல். ஆணைப்போன்றே தன் விருப்பப்படி தலைமையேற்றுச் செயற்படுதல். ]*

**ஆணாறு** āṇāṟu, பெ. (n.) மேற்கு நோக்கியோடும் ஆறு; westward flowing rivers as opp. to Pennāru. "ஆணாறு பெண்ணாறுகள் ஒன்றின்றிக்கே" (ஈடு. 4,4, பிர).

*[ஆண் + ஆறு.]*

மேற்கு நோக்கிப் பாயும் ஆறுகளை ஆணாறுகள் என்றும் கிழக்கு நோக்கிப்பாயும் ஆறுகளைப் பெண்ணாறுகள் என்றும் அழைப்பது ஒரு மரபு வழக்கு.

**ஆணி**[1] āṇi, பெ. (n.) 1. இரும்பாணி; nail, small spike. "அடிப்பேன் கவியிரும்பாணி கொண்டே" (தனிப்பா.1, 170, 22). 2. அச்சாணி; linch-pin. "உழுவார் உலகத்தார்க் காணி" (குறள், 1032). 3. எழுத்தாணி; stylus for writing. "பித்திகைக் கொழுமுகை யாணி கைக் கொண்டு" (சிலப். 8,55). 4. மரவாணி; peg, plug, wooden spike. "உரலாணி" (தொல். எழுத்து. 99. உரை). 5. உரையாணி; pin of gold for testing the standard of other gold. "ஆணிப்பொன்" (திவ். பெரியாழ். 131.). 6. தைக்கும் ஊசி; sewing needle.

**ம., க., தெ., து., பட., குட.** ஆணி ; **கோத.**ஆண்ய் ; **துட.**ஒண்ய்; **Pali., Skt** . āni

*[ஆழ் → ஆழி → ஆணி . ஆழ்வது ஆணி. ]*

**ஆணி**[2] āṇi, பெ. (n.) 1. புண்ணாணி; core of an ulcer. 2. காயாணி; hard excrescence on the skin. 3. பாதத்தில் முள் தைத்து ஒடிவதாலும் அல்லது பருக்கைக்கற்களின்மேல்நடப்பதாலும் அரத்தைப் போலுண் டாகும் முடிச்சு; horny induration and thickening of the skin caused in the foot by walking on sharp stones, or by running a thorn which is left unremoved. 4. கருவிழியிலுண்டாகும் ஒருவகை நோய்; disease affecting the cornea of the eye. (சா.அக.).

**க., தெ.** ஆணி.

*[அள் → ஆள் → ஆண் + இ = ஆணி. அள் = செறிவு, திரட்சி. ஆணி = செறிந்து திரள்வது, கட்டியாவது. இ = உடைமை குறித்த ஈறு.]*

**ஆணி**[3] āṇi, பெ. (n.) 1. அடிப்படை; support, basis, foundation. 2. முதன்மை; original as in āṇivēr. "ஆணியா யுலகுக் கெல்லாம்" (கம்பரா.கடறாவு. 27). "உழுவார் உலகத்தார்க்கு ஆணி" (குறள்.). 3. ஆசை (திவ். பெரியாழ். 5, 2, 3); wish, desire. 4. மேன்மை, உயர்வு; greatness, superiority. 5. எல்லை (நாநார்த்த.); limit, boundary. 6. பேரழகு; exquisite beauty.

**ம.** ஆணி, ஆணிக்கல்லு.; **க., தெ.** ஆணி.

*[ஆழ் → ஆண் + இ = ஆணி. ஆணி = ஆழ்ந்துள்ள ஆணி. தேர், வண்டி முதலியவற்றின் உறுப்புகளை இறுக்கிப் பிடிக்க முதன்மையானதாகவும் அடிப் படையாகவும் இருத்தலால் மேன்மைப்பொருளும் ஆசை, அழகுப்பொருள்களும் நிழல் பொருள் களாயின.]*

**ஆணி**[4] āṇi, பெ. (n.) 1. வாள் அலகு; pointed edge of a sword. 2. ஆணிமுத்து; pearl superior. 3. படுக்கை; bed.

**க.** ஆணி.

*[ஆணி = முதன்மை. ஆணி கூர்மையுடைமையின் கூரிய வாளலகும், கூர்மை திட்டலான் ஒளியுடைமை பற்றி ஆணிமுத்தும், அழகுடைமையின் படுக்கையும் நிழல் பொருள்களாய் அவ்வவற்றைச் சுட்டின.]*

**ஆணி**[5] āṇi, பெ. (n.) 1. நடுகழி, அடிக்கும் முளை; wooden peg. 2. வலைகளின் முனைகளில் கட்டும் சிறு மூங்கிற்கழி; small bamboo stick tied at the end of a net.

**ம., க., தெ., து., குட.** ஆணி.

*[அள் → அண் + இ – அணி. → ஆணி. அள் – பொருத்தல், சேர்த்தல். ஆணி – பொருத்தி அல்லது சேர்த்தி அமைப்பது.]*

**ஆணி**[6] āṇi, இடை. (part.) ஒரு பெயரீறு; suffix in words, indicating intensive force. உச்சாணி, சிரிப்பாணி சின்னாணி (உ.வ.).

*[அணம் → ஆணம் → ஆணி. அணம் = சாரியை, பெயரீறு. ஆணி = பெயரீறு. அணவுதல் = தொடுதல், நெருங்குதல். உச்சாணி = உச்சியை அல்லது முகட்டின் கொடுநுனியை மிக நெருங்கிய கூர்முனை. உச்சாணிக் கிளை = கிளையின் கடைகோடி முனை.]*

**ஆணி**[7] āṇi பெ. (n.) நாட்பட முதிர்தல்; மிகுதல், காழ்கொள்ளுதல்; to become hard, strong, and mature.

**ஆணிக்கணு** āṇi-k-kaṇu பெ. (n.). மரத்தில் அமைகின்ற கணுக்கள் வகையுள் ஒன்று, உயிருள்ள கணு எனப்படும்; a kind of node.

**ஆணிக்கல்** āṇi-k-kal, பெ. (n.) 1. பொன்னுரைக்குங்கல்; touch-stone for ascertaining the fineness of gold. 2. பொன் நிறுக்குங்கல்; standard weight for gold. "கச்சிப்பேட்டு ஆணிக்கல்லால் நிறை இருபதின் கழஞ்சுபொன்" (S.S.I.i, 117).

*[ஆணி + கல் = ஆணிக்கல். = முதன்மையான கல்.]*

**ஆணிக்கால்** āṇi-k-kāl, பெ. (n.) பருக்கைக் கற்களின் மேல் நடத்தலால் அல்லது காலில் முள் தைத்து ஒடிதலால் பாதத்தில் ஆங்காங்குத் திரட்சி கண்டு வலிமிகும் கால்; foot having a hard horny excrescence caused by the pricking of thorns or by walking on pointed pebbles. (சா.அக.).

**ம., க.** ஆணிக்கால்.

*[ஆணி + கால் → ஆணிக்கால் = ஆணிபோல் வலிதாய்த் திரட்சி கண்டு வலியெடுக்கும் கால்.]*

**ஆணிக்குருத்து** āṇi-k-kuruttu, பெ. (n.) பனை, தெங்கு முதலியவற்றின் நடு அல்லது மூலக்குருத்து; heart or prime part of a palmyra shoot, central thick shoot of a palm.

*[ஆணி + குருத்து → ஆணிக்குருத்து = முதன்மையான குருத்து.]*

**ஆணிக்கை** āṇi-k-kai, பெ. (n.) உறுதி, உறுதிப்பாடு; certainty, firmness, "பங்கமில்லாமலே ஆணிக்கை யாக" (கனம் கிருட்டிணையர் கீர்த்.32).

*[ஆணி = மேன்மை, அடிப்படை. ஆணி + கை – ஆணிக்கை = உறுதி, உறுதிப்பாடு.]*

**ஆணிக்கொம்பு** āṇi–k–kombu, பெ. (n.). மரவாப்பு (செங்கை.வழ); wooden wedge.

*[ஆணி + கொம்பு.]*

**ஆணிக்கொள்ளு-தல்** āṇi-k-koḷḷu-, 13 செ.கு.வி. (v.i) 1. இருப்பிடத்தை நிலைப்படுத்திக் கொள்ளுதல்; to make one's positon firm, consolidation. இங்கே ஆணிக்கொண்டு பிறகு மற்ற காரியங்களை நீ பார்க்க வேண்டும். (உ.வ.) 2. இறக்கும்போது கண் நிலைக்குத்திட்டு நிற்றல், ஒரு சாவுக் குறிப்பு; eyes remaining fixed just before death. This is considered one of the indications of approaching death.

*[ஆணி + கொள்ளுதல் = ஆணிக்கொள்ளுதல். ஆணிபோல் அசையாமல் செங்குத்தாகக் கண்பார்வை நிற்றல்.]*

**ஆணிக்கோவை** āṇi-k-kōvai, பெ. (n.) 1. உரையாணிகள் கோத்த மாலை; (literally) a bunch of touch-nails, to be used on touch-stone for testing the fineness of other gold by comparison. 2. கவுபால சித்தர் செய்த நூல். இதில் பொன் ஒருமாற்று முதற்கொண்டு பத்து மாற்று வரையில், 27 தரமாகப் பிரித்து பொன்னின் மாற்றுகளை வரிசையாக அடியிற் காட்டியுள்ளபடி கண்டுபிடிப்பதற்கு உதவும் வகையில் விளக்கம் தரப்பட்டுள்ளது.; treatise compiled by siddhas to test the purity or fineness of gold in general. According to this book, the standard of fineness of gold known in Tamil as **mārṟu**, from 1 to 10, is further subdivided into fractions, for purposes of accuracy and correctness and arranged in order, according to the quality and degree of fineness into 27 grades as illustrated below.

Each grade is represented by a slender bar or rod of gold of the standard of fineness of that grade known as the touch-needle. Thus, there are 27 needles prescribed for 27 grades and they are used in conjunction with the touch-stone for purposes of testing the fineness of gold. These needles were impressed with marks for the sake of brevity, as mentioned below, opposite to each grade to indicate the various degrees of fineness.

<table>
<tr><th>பிரிவு எண்.<br>Grade No.</th><th>மாற்று ஆணி<br>Degrees of Touch-needle</th><th>அடையாளம்<br>Mark.</th></tr>
<tr><td>1.</td><td>1</td><td>.</td></tr>
<tr><td>2.</td><td>$1\frac{1}{2}$</td><td>.|</td></tr>
<tr><td>3.</td><td>2</td><td>..</td></tr>
<tr><td>4.</td><td>$2\frac{1}{2}$</td><td>..|</td></tr>
<tr><td>5.</td><td>3</td><td>...</td></tr>
<tr><td>6.</td><td>$3\frac{1}{2}$</td><td>...|</td></tr>
<tr><td>7.</td><td>4</td><td>\\</td></tr>
<tr><td>8.</td><td>$4\frac{1}{2}$</td><td>....|</td></tr>
<tr><td>9.</td><td>5</td><td>.....</td></tr>
<tr><td>10.</td><td>$5\frac{1}{2}$</td><td>.....|</td></tr>
<tr><td>11.</td><td>6</td><td>||||</td></tr>
<tr><td>12.</td><td>$6\frac{1}{4}$</td><td>^|</td></tr>
<tr><td>13.</td><td>$6\frac{1}{2}$</td><td>^|</td></tr>
<tr><td>14.</td><td>$6\frac{3}{4}$</td><td>^</td></tr>
<tr><td>15.</td><td>7</td><td>^|</td></tr>
<tr><td>16.</td><td>$7\frac{1}{4}$</td><td>|||</td></tr>
<tr><td>17.</td><td>$7\frac{1}{2}$</td><td>||</td></tr>
<tr><td>18.</td><td>$7\frac{3}{4}$</td><td>|</td></tr>
<tr><td>19.</td><td>8</td><td>\\</td></tr>
<tr><td>20.</td><td>$8\frac{1}{4}$</td><td>\</td></tr>
<tr><td>21.</td><td>$8\frac{1}{2}$</td><td>^</td></tr>
<tr><td>22.</td><td>$8\frac{3}{4}$</td><td>|||||</td></tr>
<tr><td>23.</td><td>9</td><td>||||</td></tr>
<tr><td>24.</td><td>$9\frac{1}{4}$</td><td>|||</td></tr>
<tr><td>25.</td><td>$9\frac{1}{2}$</td><td>||</td></tr>
<tr><td>26.</td><td>$9\frac{3}{4}$</td><td>|</td></tr>
<tr><td>27.</td><td>10</td><td>——</td></tr>
</table>

மேற்கண்ட மாற்று வகைகளின் கலப்புவகை.

1 மாற்று முதல் 6 மாற்று வரையில் — தூய செம்பு + வெள்ளி. 6 மாற்று முதல் $9\frac{3}{4}$ மாற்று வரையில் — பொன் + செம்பு + வெள்ளி.

| | | |
|---|---|---|
| 10 மாற்று | — | தூய பொன் |
| $10\frac{1}{2}$ மாற்று | — | உயர்ந்த பொன். |

பொதுவாகப் பொன்னின் மாற்று அறியும் மூன்று வகைகள்: 1. உள்வெட்டு. 2. மேல்வெட்டு. 3. உரசல்.

The following are the details of alloys of the several grades mentioned above:

1 to 6 **mārṟu** represent alloys of copper and silver.

6 to $9\frac{3}{4}$ **mārṟu** represent alloys of gold, copper and silver.

10 **mārṟu** represent only pure gold.

$10\frac{1}{2}$ **mārru**, no test prescribed for this rare gold.

The gold under test is generally examined in three ways viz. 1. deep cut. 2. superficial cut. 3. rubbing on touch–stone. The term **'mārru'** corresponds to the English term 'Carat' which is employed to denote the fineness of gold. (சா.அக.).

*[ஆணி + கோவை = ஆணிக்கோவை = உரையாணிகள் கோத்த மாலை. கோவை = கோத்திருப்பது. கோர்வை → கோவை.]*

**ஆணிச்சவ்வு** āṇi–c–cavvu, பெ. (n.) 1. வெள் விழியை யொட்டியுள்ள கருப்புச் சவ்வு; black membrane adjoining the white of the eye. 2. விழிப் படலம்; cornea of the eye.

*[ஆணி + சவ்வு. ஆணி = முதன்மை, அடிப்படை. **சவ்வு** பார்க்க*; see savvu.]

**ஆணிச்சிதல்** āṇi–c–cidal, பெ. (n.) 1. முகப்பருவின் முளை; root of the pimple. 2. சீழ்பிடித்த குழிப்புண்; core of the suppurating ulcer.

*[ஆணி + சிதல். ஆணி = அடிப்படை. சிதல் = சிதைப்புதல்.]*

**ஆணிச்செய்வகை** āṇi–c–ceyvagai, பெ. (n.) பொன் மாற்று அறிய உதவும் உரையாணி செய்யும் வகை; method of making the touch–nails to test the fineness of gold.

*[ஆணி + செய்வகை.]*

**ஆணிச்செருக்கம்** āṇi–c–cerukkam, பெ. (n.) ஒருவகை உப்பு நஞ்சு; poisonous compound of salt. (சா. அக.).

*[ஆணி + செருக்கம்.]*

**ஆணிடி** āṇiḍi பெ. (n.) உருமேறு; thunderbolt. (கந்தபு. நகரழி. 77. உரை).

*[ஆண் + இடி.]*

**ஆணித் தங்கம்;** āṇi–t–tangam, பெ. (n.) **ஆணிப் பொன்** பார்க்க; see āṇi–p–poṉ.

**ஆணித்தரம்** āṇi–t–taram, பெ. (n.) 1. முதற்றரம்; finest quality, standard. 2. உறுதி (வின்.); firmness. 'அவர் ஆணித்தரமாகக் கூறினார்'. 3. நல்லமுத்து, கெட்டி முத்து; solid pearl of a superior quality. (சா.அக.).

*[ஆணி + தரம். ஆணி = முதன்மை, உறுதி, வலிமை. தரம் = வகை.]*

**ஆணிதை–த்தல்** āṇitai–, 4. செ.கு.வி. (v.i.) 1. பொருந்த ஆணியடித்தல்; to nail, fasten with nails, as reapers. 2. காலில் ஆணி குத்திப்பாய்தல்; piercing of nail in the foot.

*[ஆணி + தைத்தல். தள் → தய் → தை → தைத்தல் = தள்ளுதல், தூக்குதல், உட்செல்லுதல்.]*

**ஆணிநஞ்சு** āṇi–nañju, பெ. (n.) கோளகப் பாடாணம்; a kind of arsenic.

*[ஆணி + நஞ்சு. ஆணி = முதன்மை.]*

**ஆணிநோய்** āṇi–nōy, பெ. (n.) பருக்கைக்கற்களின் மேல் நடப்பதாலும் பாதத்தில் முள் தைத்து ஒடிவதாலும், தசை தடித்துக் கட்டியாகி வலிமை மிகுவிக்கும் ஒரு நோய்; painful disease in the foot caused by the hard thorny excrescence arising from walking on pointed pebbles or by running a thorn in one's foot – corn.

*[ஆணி + நோய்.]*

**ஆணிப்படலம்** āṇi–p–paḍalam, பெ. (n.) ஒருவகைக் கண்ணோய்; eye–disease, a disease of the cornea attended with the growth of horny tissue. (சா.அக.).

*[ஆணி + படலம். ஆணி = முட்போன்ற தசை வளர்ச்சி. படலம் = படர்வது.]*

**ஆணிப்பரங்கி** āṇi-p-parangi, பெ. (n. ) மாணிக்கம்; one of the nine gems.

*[ஆணி = முதன்மை. பரங்கி = பரல் போன்றது.]*

**ஆணிப்பரிகாரம்** āṇi–p–parigāram, பெ. (n.) 1. சதையின் மேல் எழும்பிய காய்ப்பு நீங்குவதற்குச் செய்யும் மருத்துவம்; treatment for curing the corn. 2. கருவிழியில் ஆணி பாய்ந்ததைக் குணப் படுத்துவதற்குச் செய்யும் கண் மருத்துவம்; operation performed on the cornea to remove the growth of a thorny tissue. (சா.அக.)

*[ஆணி + பரிகாரம். பரிதல் = ஓடுதல்., நீங்குதல். காரம் = செய்வினை. பரிகாரம் = நீங்கச்செய்யும் வினை. ஆணிப்பரிகாரம் = ஆணி நீங்கச் செய்யும் மருத்துவம்.]*

**ஆணிப்பாரை** āṇi–p–pārai, பெ. (n.) பதிக்கப்பட்ட ஆணி முதலியவற்றைப் பிடுங்குவதற்குக் கடப்பாரையைப் போன்று இரும்பாலான சிறிய கருவி; a kind of iron clamp which is used to pluck nails etc. (தஞ்சை வழ).

*[ஆணி + பாரை.]*

**ஆணிப்பிடிச்சி** āṇi–p–piḍicci, பெ. (n.) சீனக்காரம்; alum, which is a whitish transparent astringent salt.

*[ஆணி + பிடிச்சி.]*

ஒருகா. பிடிப்புள்ளதாக அல்லது ஒட்டும் இயல்புள்ள தாக விருப்பதனால் அதன் முதன்மைப் பண்பு பற்றி இப்பெயர் ஏற்பட்டிருக்கலாம்.

**ஆணிப்பிடுங்கி** āṇi-p-piḍuṅgi, பெ. (n.) ஒருபக்கம் அடிப்பதற்கு ஏதுவாகத் தட்டையாகவும், மறுபக்கம் ஆணி முதலியன பிடுங்க ஏதுவாகப் பிளவு பட்டும் இருக்கும் சுத்தியல் வகை; small hammer used to pull out nails by its one side while the otherside is used for driving nails.

*[ஆணி + பிடுங்கி.]*

**ஆணிப்புண்** āṇi-p–puṇ, பெ. (n.) உள்ளே ஆணிபாய்ந்த சிலந்திப்புண்; ulcer with a core or decayed tissue inside due to the impure, vitiated, debilitated condition of the blood, especially in diabetic carbuncle. (சா. அக.).

*[ஆணி + புண். ஆணி = ஆணிபோன்ற காப்பு]*

**ஆணிப்பூ** āṇi-p-pū, பெ. (n. ) 1. கண் காசம்; cataract of the eye. 2. கண்ணில் விழும் பால் நிறமான வெள்ளை மாசு; milk-white opacity in the cornea of the eye - **Leucoma.**

*[ஆணி + பூ = ஆணிப்பூ. பூப்போன்ற வெண்மாசு படியும் கண்நோய். ஆணி = வலிதாகப் பற்றி நிலை கொண்ட நோய்.]*

**ஆணிப்பூடு** āṇi-p-pūḍu, பெ. (n.) **ஆணிப்பூ** பார்க்க; **see āṇi-p-pū.**

**ஆணிப்பொன்** āṇi-p-poṉ, பெ. (n.) மாற்றுயர்ந்த பொன்; refined superior gold. "ஆணிப்பொன்னாற் செய்த . . . . . தொட்டில்" (திவ். பெரியாழ். 1,3,1).

**ம.** ஆணிப்பொன்னு; **க.** ஆணிப்பொன்

*[ஆணி + பொன் - ஆணிப்பொன் = உயர்ந்த பொன். ஆணி = மேன்மை, உயர்வு]*

**ஆணிபாய்–தல்** āṇi-pāy-, 12 செ.கு.வி. (v.i.) 1. முள்ளைப் பதனால் ஏற்படும் ஆணி என்னும் காய்ப்பு; formation of a conic mass extending down into the skin and producing pain and irritation. 2. **ஆணிதை–த்தல்** பார்க்க; see āṇitai-.

*[ஆணி + பாய்.]*

**ஆணிமலர்** āṇi–malar, பெ. (n.) ஆணியின் தலை (இ.வ.); head of a nail.

*[ஆணி + மலர். மலர் = மலர்போல் விரிந்த தலைப்பகுதி.]*

**ஆணிமலர்த்திருப்பி** āṇimalar–tiruppi, பெ. (n.) 1. திருப் புளி; screw-driver. 2. பிடித்தராவி; screw-wrench.

*[ஆணிமலர் + திருப்பி. ஆணிமலர் = ஆணியின் தலைப்பகுதி. திருப்பி = திருப்ப உதவுவது.]*

**ஆணிமுத்து** āṇi–muttu, பெ. (n.) குற்றமற்ற உயர்ந்த கட்டாணி முத்து, வயிரமுத்து; solid, superior pearl of the finest quality.

**க.** ஆணிமுத்து.

*[ஆணி + முத்து. ஆணி = வன்மை, வயிரம்.]*

**ஆணிமுளை** āṇimuḷai பெ. (n.) கட்டி, புண் முதலியவற்றின் நடுவிலுள்ள முளை; the core of an abscess or of any sore.

*[ஆணி + முளை. ஆணி = கட்டியான.]*

**ஆணி மூலம்** āṇi–mūlam, பெ. (n.) எருவாயின் (ஆசனம்) உட்புறம் ஆணியைப்போல் கட்டியாக விருக்கும் ஒரு வகை மூலநோய்; hard vesicular tumour appearing inside the rectum - Internal piles.

*[ஆணி + மூலம். ஆணி = கட்டியான.]*

**ஆணியச்சு** āṇi-y-accu, பெ. (n.) ஆணிகளை உருவாக்கும் அச்சு; nail plate, lathe (C.E.M.).

*[ஆணி + அச்சு.]*

**ஆணியம்** āṇiyam, பெ. (n.) **ஆநியம்** பார்க்க; see **āniyam**

**ஆணியிடு–தல்** āṇi-yi-ḍu–, 20 செ.கு.வி. (v.i.) கண் நிலைக்குத்துதல்; eyes becoming fixed in the central portion as a sign of approaching death.

*[ஆணி + இடு. ஆணியிடல் = செங்குத்தாகச் செருகல்.]*

**ஆணியிருமல்** āṇi-y-irumal, பெ. (n.) நாட்பட்ட இருமல் நோய்; hard cough with a metallic sound.

*[ஆணி + இருமல். ஆணி = நன்கு வேரூன்றிய, நோய் முதிர்ந்த.]*

**ஆணிரோகம்** āṇi–rōgam, பெ. (n.) **ஆணிநோய்** பார்க்க; see āṇi–nōy.

*[ஆணி + ரோகம். Skt. rōga.]*

**ஆணிவேர்** [1] āṇivēr, பெ. (n.) 1. மரம் பூண்டு ஆகியவை முளைக்கும்போதே நீண்டு நிலத்தினுள் நேரே ஊடுருவிச் செல்லும் முகாமையான மூலவேர் அல்லது நடுவேர்; central root of a tree or a plant which begins to penetrate right down into the earth from its growth, tap-root. 2. உச்சிவேர்; main or the central root. (சா. அக.).

*[ஆணி + வேர். ஆணி = ஆழ்ந்து பாய்ந்த, தலைமையான.]*

**ஆணி வேர்**[2] āṇi-vēr, பெ. (n.) 1. சொல்லின் மூலம்; root of a word, etymology. 2. அடிப்படை; basic, foundation. குடும்பத்திற்கவனே ஆணிவேர் (உ.வ.).

*[ஆணி + வேர்.]*

**ஆணு**[1] āṇu, பெ. (n. ) இதள் (இரசம்); quick silver, mercury.

*[ஆணம் → ஆணு. ஆணம் = நீர்மம்.]*

**ஆணு**[2] āṇu, பெ. (n.) 1. அன்பு, நேயம்; attachment, affection. "ஆணுப் பைங்கிளி யாண்டுப் பறந்ததே" (சீவக. 1002). 2. இனிமை (சூடா.); sweetness, agreeableness. 3. நன்மை (சூடா.); benefit.

*[ஆண்ம் → ஆணு . **ஆணம்**[1] பார்க்க; see* āṇam[1].]

**ஆணெழுத்து** āṉeḻuttu, பெ. (n.) உயிர்க்குறிலும் உயிர்மெய்க்குறிலும் ஆகிய எழுத்துகள்; short vowels and short vowel consonants.

*[ஆண் + எழுத்து. முதன்மையான எழுத்து.* **ஆண்பாலெழுத்து** *பார்க்க;* see āṉpāleḻuttu.]

**ஆணை**[1] āṇai, பெ. (n.) 1. அதிகாரம்; power, authority. "அரும்பதி செல்வநல்கி யாணையும் வைப்பன்" (சி.சி. 2,31). 2. கட்டளை; mandate, order, edict. "அமரர்கோ னாணையில் அருந்துவோர் பெறாது" (மணிமே. 14,76). 3. ஏவல் (கதி. அக.); command. 4. ஆன்றோர் மரபு; rules, usages established by the learned of old. "தொல்லாணை நல்லாசிரியர்" (மதுரைக். 761). 5. மெய் (பிங்.); truth. 6. முறைமன்றத்தில் ஏற்கும் உறுதிமொழி (திவா.); oath, as in a court of justice. 7. உறுதியேற்குங்கால் விருப்பத்திற்குரிய ஒருவர் அல்லது ஒன்றன்மேல் அடித்துக்கூறுதல்; profane swearing, the word being affixed to the person or thing sworn by as. அப்பனாணை, கண்ணனாணை (உ.வ.). "அவள் கண்ணிலும் காண்டிவ வில்லினும் ஆணை" (பாஞ்.). 8. நெடுமொழி (சீவக.641); vow. 9. உறுதி மொழிகூறித் தடுக்கை (பிங்.); checking by oath, obstructing by imprecation. 10. இலச்சினை (பிங்.); sign or insignia of authority. 11. முத்திரை; stamp, seal (W.). 12. அடையாளம்; symbol, emblem. 13. வெற்றி (சூடா.); conquest, victory.

**ம.** ஆண; **க.** ஆணெ; **தெ.** ஆன; **து.** ஆணெ; **பிராகி.** ஆணா; **வ.** ஆக்ஞா; **பா.** ஆணா; **குச்.** ஆண்; **சிந்., மரா.** ஆனா; **இந்.** ஆண்; **சிங்.** ஆண.

*[ஆள் → ஆண் → ஆணை. ஆணை = பிறரை அடக்கியாளும் அதிகாரம். அதிகாரத்தால் பிறப்பித்த கட்டளை, உறுதியான கட்டளை, உறுதி, உண்மை, உண்மையாகவும் உறுதியாகவும் செய்யப்படும் செயல், வெற்றி, அதிகாரம், உறுதி முதலியவற்றைத் தெரிவிக்கும் அடையாளம், இலச்சினை. ஒ.நோ: கள் → கண் → கணை. பள் → பண் → பணை. மள் → மண் → மணை.]*

வடமொழியில் கட்டளைப் பொருளில் வரும் 'ஆக்ஞா' தமிழ்ச் சொல்லான 'ஆணை' என்பதனோடு எவ்வகைத் தொடர்பும் இல்லாதது. வடமொழியாளர் 'ஆக்ஞா' என்னும் சொல்லை ஆ + க்ஞா எனப் பிரிப்பர். 'ஆ' பொருளில்லாத முன்னொட்டு. 'க்ஞா' — அறிதல் என்று மட்டும் பொருள் தரும் வேர்ச்சொல். இதுவும் தமிழ் 'காண்' வேரின் திரிபே என்பார் பாவாணர்.

திராவிட மொழிகளில் மட்டுமன்று; வடஇந்திய மொழிகளனைத்திலும் தமிழ்ச் சொல்லான 'ஆணை' இடம்பெற்றிருப்பதும், மலையாள இலக்கண நூலான இலீலாதிலகத்தில் 15—ஆம் நூற்பா விளக்கவுரையில் 'ஆணை' சமற்கிருத 'ஆக்ஞா' என்னும் சொல்லிலிருந்து பிறந்தது அன்று என்றும், வடநாட்டுப் பிராகிருதச் சொல்லான 'ஆணா' என்பதே மூலச்சொல் என்றும் குறிப்பிடப்பட்டிருக்கிறது. பிராகிருதச்சொற்கள் பெரும்பான்மை தமிழிலிருந்து பெற்றகடன் சொற்களாதலின், தமிழ் 'ஆணை' பிராகிருதத்தில் 'ஆணா' என்றும், பிராகிருதவழி வடமொழிக்குச் சென்று 'ஆக்ஞா' என்றும் திரிந்திருத்தலே உண்மையாதல் காண்க.

வடமொழி தவிர்ந்த இந்தைரோப்பிய மொழிகளில் இச்சொல்லாட்சி புகாமை ஒன்றே இது மேலையாரியச் சொல்லன்று என்பதையும், வடபுல மொழிகளனைத்திலும் தமிழிலிருந்து பெற்ற கடன் சொல்லே வழங்குகிறது என்பதையும் தெரியக்காட்டும்.

இது, 'ஆள்' (செய்) என இடும் கட்டளை, உறுதியாகச் செய்தே ஆகவேண்டிய கட்டளைகளைக் குறித்துப்பின் ஆணை வடிவுற்றது. 'கள்' திரட்சிப் பொருள் குறித்த சொல், முனை வடித்துத் திரட்டிக் (கண்திரட்டல்) கூராக்கப்பட்ட அம்பைக் குறிக்குங்கால் அதற்கேற்ற ஈறேற்கும் நெறியை யொட்டி 'ஐ' உடைமையீறு பெற்று நிலைமொழி ளகரமெய் ணகர மெய்யாகி ஆள் + ஐ = ஆணை சொல்வடிவுற்றது.

இந்தைரோப்பிய மொழிகளில் ஆணையைக் குறிக்கும் order என்னும் சொல், ஒட்டு, சேர் எனப் பொருள்படும் 'ar' என்னும் ஏவலிலிருந்து தோன்றிப் பின், வரிசை, ஒழுங்கு எனப் பொருளால் வளர்ந்து, ஒழுங்குபடுத்தும் ஆணைப் பொருள் தந்து ar—order என வளர்ந்திருத்தலைக் காணின் ஆள் → ஆணை சொல் வளர்ச்சியையும் விளங்கிக் கொள்ளலாம்.

**ஆணை**[2] āṇai, பெ. (n.) (சிவனி.) சிவபெருமானின் அருளாற்றல்; sakti (or) power of Śiva. "ஆணை யினீக்கமின்றி நிற்குமன்றே" (சி.போ.2.).

*[ஆள் → ஆண் → ஆணை = ஆளுந்திறம், ஆளுந் திறத்திற்குதவும் அறிவாற்றல், நுண்மாண் நுழைபுல வன்மை.]*

**ஆணைச்சக்கரம்** āṇai–c–cakkaram, பெ. (n.) 1. அரசாட்சி; reign, royal power. 2. செங்கோல்; sceptre

*[ஆணை+சக்கரம்.சக்கரம்=உருள்வது, நடப்பது, இயங்குவது.]*

**ஆணைசெல்(லு) –தல்** āṇai–cel–, 13 செ.கு.வி. (v.i.) அரசோச்சுதல், அதிகாரம் செயற்படல்; power or authority or command being implemented or put to practice.

*[ஆணை + செல்.]*

**ஆணை செலுத்து–தல்** āṇai–celuttu–, 2. பி.வி. (casu.v.) அதிகாரம் செயற்படச் செய்தல், அரசு செலுத்துதல்; sway the sceptre, command, exercise the functions of government or authority.

*[ஆணை + செலுத்து.]*

**ஆணைப்பெயர்** āṇai–p–peyar, பெ. (n.) வலியோர் அஞ்சப்பேணியுலகம் பேசும் பெயர் (பன்னிருபா. 149); name given to a hero, calculated to instil respect in the minds of the valiant.

*[ஆணை + பெயர். ஆணை = கட்டளை. எவரும் கட்டளையை அஞ்சியேற்றற்குரிய பதவிப்பெயர் அல்லது இயற்பெயர்.]*

**ஆணைபிறப்பி–த்தல்** āṇai– piṟappi–, பி.வி. (caus.v.) ஆணை முதலியன வெளியிடுதல்; proclaim authority, give orders.

*[ஆணை+பிறப்பி.]*

**ஆணையம்** āṇaiyam, பெ (n.) சில செயல்களை நிறைவேற்றவும் மேற்பார்வையிடவும் அதிகாரம் அளிக்கப்பட்டுள்ள குழு; body of persons having authority to perform or supervise certain duties, commission.

*[ஆணை → ஆணையம்.]*

**ஆணையர்** āṇaiyar, பெ. (n.) குழுவால் அமர்த்தப் பெற்றவர்; அரசு ஆணையங்களால் அதிகாரம் அளிக்கப்பட்டவர்; one appointed by commission; member of a commission, esp. of government boards etc., commissioner.

*[ஆணை → ஆணையர்.]*

**ஆணையோலை** āṇai–y–ōlai, பெ. (n.) கட்டளைத் திருமுகம்; royal, edict proclamation, summons "இன்று ஓராணையோலை ... வாராநின்றது" (திருக்கோ. 327. உரை.).

*[ஆணை + ஓலை. ஆணை = கட்டளை. ஓலை = திருமுகம், மடல்.]*

**ஆணைவிடு–தல்** āṇai–viḍu–, 20. செ.கு.வி. (v.i.) சூளுறவை நீக்குதல்; to release from the spell of an oath.

*[ஆணை + விடு.]*

**ஆணைவெளியிடு–தல்** āṇai–veḷiyiḍu–, 18.செ. குன்றாவி. (v.t.) ஆணை பிறப்பித்தல்; proclaim an order.

*[ஆணை + வெளியிடு.]*

**ஆணொப்பனை** āṇoppaṉai, பெ. (n.) ஆண் கூத்துக்குச் செய்யும் ஒப்பனை; make up for male actor.

*[ஆண் + ஒப்பனை.]*

**ஆணொழிமிகுசொல்** āṇoḻi–migu–šol, பெ. (n.) (இலக்.) இருதிணையிலும் பெயர் அல்லது தொழிலினாற் பெண்பாலாகப் பால் பிரியுஞ் சொல் (தொல். சொல்.50, இளம்); (Gram.) word that indicates feminine gender by the nature of its function in a sentence.கோப்பெருந்தேவி கருவுயிர்த்த கட்டிலின் கீழ் மக்கள் நால்வர் இருந்தனர் – மக்கள் என்னும் சொல் பெண்களை மட்டும் குறித்தது.

*[ஆண் + ஒழி +மிகு + சொல்.]*

**ஆணோறை மயக்கம்** āṇōṟai–mayakkam, பெ. (n.)



ஆணோறை மயக்கம் – கற்பூரவல்லி

நறுமணமுள்ள மூலிகை, கற்பூரவல்லி; thick leaved lavendar. (சா.அக.).

*[ஆண் + (உறை) ஒறை + மயக்கம். ஆண் = தலைமை, மிகுதி. உறை = கார்ப்பு, மணம். மயக்கம் = செறிவு]*

**ஆத்தம்** āttam, பெ. (n.) 1. விழைவு, நட்பு; friendship, intimacy. "ஆத்தமானார்" (திருவா.4,46). 2. ஆசிரியருக்குச் செய்யும் உதவித் தொண்டு; rendering service to teacher. 3. அன்பு; devotion, affection

"ஆத்தமுறு தொண்டரை யழைத்திவை விளம்பும்" (இரட்சணிய. பக்.47).

ம. ஆத்த.

*[அல் + து – அத்து = நெருக்கம் , அன்பு , நட்பு , விழைவு. அத்து + அம் → அத்தம் → ஆத்தம் . த. ஆத்தம் > Skt. āpta.]*

**ஆத்தமொழி** āttamoḻi, பெ. (n. ) 1. நட்பாளர் மொழி; word or advice of a friend. 2. திருமுறை (வேதம்)ப் பனுவல்கள் முதலியன; scriptures, as containing counsel and exhortations, sayings.

*[ஆத்தம் + மொழி . ஆத்தம் = அன்பு, பற்று. **ஆத்தம்** பார்க்க; see āttam.]*

**ஆத்தன்** āttaṉ, பெ. (n.) 1. ந ண்பன் (திவ். திருவாய். 10,1,6); friend, companion, associate. 2. முதல்வன், பெரியோன்; great or eminent person. 3. கடவுள்; divine being. 4. அருகன் (சூடா.); Arhat. 5. நம்பிக்கைக்குரியவன்; trusworthy person, one whose words are reliable and authoritative. 6. தந்தை; father.

*[அல் + து – அத்து = நெருக்கம், அன்பு, விழைவு, நட்பு மதிக்கத்தக்க பெருங்குணம், பெருமை. அத்து + அன் → அத்தன் → ஆத்தன். அல் + து = அத்து. ஒ. நோ: மெல் + து = மெத்து, மெத்தை. ]*

**ஆத்தா**[1] āttā, பெ. (n.) **ஆத்தாள்** பார்க்க; see āttāḷ.

ம. ஆத்த.

*[ஆத்தாள் → ஆத்தா (கொ.வ.).]*

**ஆத்தா**[2] āttā, பெ. (n.) 1. அணி நுணாமரம் (கதி.அக.); a kind of tree. 2. சீத்தாமரம்; custard apple tree. 3. இராமசீத்தா; bullock's heart. 4. சீத்தாப்பழம்;sweet top of the West Indies; nector fruit, sugar apple. (தஞ்.வ) (சா. அக.).

ம. ஆத்த.

*[ஆத்தம் → ஆத்தா (நெருங்கக் காய்ப்பது).]*

**ஆத்தாடி** āttāḍi, இடை. (inter.) 1. ஒரு வியப்பிடைச் சொல்; expressive of wonder. 2. இளைப்பாறற் குறிப்பு; term expressive of restfulness after toilsome work.

*[ஆத்தாள் + அடி = ஆத்தாடி. ஆத்தாள் = தாய். அடி = விளி.]*

வியப்பு, அச்சம், நோய், வருத்தம் ஆகிய உணர்வுகளை வெளிப்படுத்துங்கால் பிள்ளைகள் தமக்கு அண்மையளாயும் அன்பினளாயும் விளங்கும் தாயை அல்லது தந்தையை விளிப்பது இயல்பாகலான் அம்மாடி, அம்மாடா, ஆத்தாடி, அப்பாடா, அப்பாடி என்பன உணர்வு வெளிப்பாட்டு இடைச் சொற்களாயின.

**ஆத்தார மூத்தான்** āttāra-mūttāṉ, பெ. (n.) பூனைக்காலி; cow–hage, cat bean (செ.அக.).

*[ஆற்று + ஓரம் + பூத்தான் = ஆற்றோரம் பூத்தான் → ஆத்தோரம் பூத்தான் → ஆத்தார மூத்தான். **ஆற்றுப் பூத்தான்** பார்க்க; see āṟṟu—p—pūttāṉ.]*

**ஆத்தாள்**[1] āttāḷ, பெ. (n.) 1. தாய்; mother. "அப்பன் இரந்துண்ணி யாத்தாள் மலை நீலி" (தனிப்பா. 35,66). 2. தாய் போல் காக்கும் பெண் தெய்வங்கள்; mother of the world, an epithet for Parvathy and other goddesses. மாரியாத்தாள், காளியாத்தாள் (உ.வ.).

*[அல் + து → அத்து – நெருக்கம், அன்பு, பற்று, பரிவு. அத்து + ஆள் = அத்தாள் → ஆத்தாள்.]*

**ஆத்தாள்**[2] āttāḷ, பெ. (n.) 1. மனைவி (இ.வ.); wife. 2. இல்லத்தலைவி; house - wife.

ம. ஆத்தோள் (நம்பூதிரியின் மனைவி).

*[அகம் + அத்து + ஆள் – அகத்தாள் → ஆத்தாள். அகம் = வீடு.]*

**ஆத்தாள்**[3] āttāḷ, பெ. (n.) ஒரு பெண்பாற் பெயரீறு ; a suff. to proper names denoting fem. gender. கண்ணாத்தாள், மங்காத்தாள் (உ.வ.).

*[ஆத்தாள் = தாய். **ஆத்தாள்**[1] பார்க்க;* see **āttāḷ.**

**ஆத்தாள் மூத்தாள்** āttāḷ–mūttāḷ, பெ. (n.) **ஆத்தார மூத்தான்** பார்க்க; see āttāra–mūttāṉ.

**ஆத்தான்** āttāṉ, பெ. (n.) **ஆத்தன்** பார்க்க; see āttaṉ.

**ஆத்தானம்** āttāṉam, பெ. (n.) 1. அரசவை, அரசிருக்கை, நெடுங்கூடம், பேரவை; hall of audience, royal presence, royal assembly. 2. கோபுரவாயில் (பிங்.); gate of a tower, as the place of audience.

*[அகம் +அத்து + அணி + மண்டபம் = அகத்தணி மண்டபம் → அத்தாணி மண்டபம் → அத்தாணி.>* pkt. āttāṇi > Skt. āstāna. *அகத்தணி மண்டபம் பார்க்க.* see **agattaṇi–maṇḍabam.]**

அத்தாணி மண்டபம் பிராகிருதத்தில் அத்தாணி எனவும் வடமொழியில் ஆஸ்தானம் எனவும் மருவிய பின்னர் வட சொல்லே தமிழில் ஆத்தானம் எனத் திரிந்துள்ளது.

வடமொழியில் உள்ள ās tāna என்னும் சொல்லுக்கு இடம் (stana) என்பதே வேராகக் காட்டப்படுகிறது. 'ஆ' என்பது பொருளில்லாத முன்னொட்டு. வெறும் இடம் என்று

பொருள்படும் சொல் அரண்மனைப் பேரவைக்கூடத்தைக் குறித்திருக்கவியலாது. அகம்படியர், அகம்பெண்டுகள், அகக்கோளாளர் எனத் தமிழில் மரபு வழி வழங்கி வரும் கூட்டுச்சொற்களின் அமைப்பே அகத்தணி (அத்தாணி) என்ற பழஞ்சொல் வழக்கிலிருந்ததைக் காட்டும்.

பிராகிருதச் சொல் வடிவங்கள் தமிழ் மூலச் சொல்லை மிக ஒத்திருப்பதும் வடமொழியில் தமிழ்ச்சொல் வடிவங்கள் மிகவும் திரிபடைந்து வேறுபட்டுக் காணப்படுவதும், பிராகிருத வாயிலாகவே வடமொழியில் புகுந்த தமிழ்ச் சொல்வடிவங்களை மீட்டமைக்க வேண்டும் என்னும் நெறிமுறையை வலியுறுத்து கின்றன.

**ஆத்தி** [1] ātti, இடை. (int.) அச்சம் அல்லது வியப்புக் குறிப்பு இடைச்சொல்; exclamation expressive of fright or surprise. அடி ஆத்தி அங்கே போகாதே (உ.வ.).

*[ஆத்தாள் → ஆத்தா → ஆத்தி. ஆத்தாள் = தாய்.]*

**ஆத்தி** [2] ātti, இடை. (part.) பெண்பாற் பெயரீறு; fem.suff. தட்டாத்தி, வண்ணாத்தி (வீரசோ. தத்தித. 5).

*[அத்தி → ஆத்தி.]*

**ஆத்தி** [3] ātti, பெ. (n.) 1. அடைகை; obtaining. 2. தொடர்பு;




connection. 3. ஊதியம்; gain.

*[ஆர்த்தி → ஆத்தி. ஆர்தல் = பொருந்துதல், அடைதல், தொடர்புறல், தன்னைச்சாரும் முதலீட்டுக்கு மேலான மிகுபொருள் (ஊதியம்). இது ஆம்தி என்னும் வட சொல்லினின்று திரிந்ததன்று.]*

**ஆத்தி** [4] ātti, பெ. (n.) 1. மரவகை; common mountain ebony. 2. சோழரின் அடையாள மலர்; royal floral insignia of the Cholas. 3. திருவாத்தி; holy mountain ebony. "சம்பம்கிழாத்தி" (சைவச.பொது.29).

ம., க., தெ. அத்தி; குட. அத்தி; து. அர்தி.

**ஆத்தியின் வகைகள்:**

1. திருவாத்தி அல்லது சிறுவாத்தி – holy mountain ebony.
2. நிலத்திருவாத்தி – purple mountain ebony.
3. பெருவாத்தி – large mountain ebony.
4. வட்டாத்தி – holy mountain ebony.
5. காட்டாத்தி – wild bauhinia.
6. செவ்வாத்தி – crimson climbing mountain ebony.
7. கடலாத்தி – bipinnate, fragrant trumpet tree.
8. சிற்றாத்தி – minute – flowered climbing mountain ebony.
9. பூவாத்தி – flowering murdah.
10. வெள்ளைப்பூவாத்தி – white variegated mountain ebony.
11. மலையாத்தி – Malabar mountain ebony.
12. புளியாத்தி – sour mountain ebony – same as No.11.

Besides Nos 7 and 9 mentioned above, there are also plants, such as நல்ல பூவாத்தி, பசலாத்தி, விளாத்தி etc., though ending in the same term, but belonging to different botanical groups.

*[ஆர் → ஆர்த்தி → ஆத்தி. ஆர்தல் = செறிதல், நெருங்கல், நிறைதல். செறிந்த கிளையுடைமை அல்லது நெருங்கிப் பூத்தலுடைமை பற்றி இப்பெயர் பெற்றிருக்கலாம்.]*

அரிக்காமரம், அரிநார், ஆர்ச்சி எனப் பலவாறு அழைக்கப்படும் ஆத்தி மரம், பொதுவாக எங்கும் வளரும் சிறிய மரம்; அடர்ந்து கிளைகள் கவிழ்ந்திருக்கும்; மூன்று நரம்புள்ள இதன் இலைகள் சிறிது வட்டமாயிருக்கும். காய்கள் நீண்டு 6 முதல் 12 விதைகளைக் கொண்டிருக்கும். வெண்மை கலந்த இதன் பூக்கள் சிறியவை. பட்டை சிறிது தடித்திருக்கும்; சிறிது கசப்புச் சுவையுடையது. இதன் பிசின் மருந்திற்குதவும். விதை, முந்திரிப் பருப்பைப் போல் சுவையாயிருக்கும்; இலை சுருட்டுப் பிடிக்க உதவும்; பட்டையும் இலையும் வெட்டுப்புண்ணை ஆற்றப் பயன்படும் மருந்து; common mountain ebony. It is known by several names such as, Autty, shining tree. Vana Raja, wild sesban etc.

A small tree; one of the commonest species found grown every where; unarmed and bushy; branches drooping; leaves little roundish and three nerved; legumes long containing from 6 to 12 seeds; growth in gardens and also in forests. Flowers, small, white and scattered; bark is thick and of a reddish brown colour; gum is used medicinally; ripe sees taste like cashew nuts and

are eaten by the people; leaves sometimes used for making cigars.

**ஆத்திகேடு** ātti-kēḍu, பெ. (n.) சத்துக்கேடு (கதி.அக.); loss of energy.

*[ஒருகா. அத்து → ஆத்து → ஆத்தி. அத்து = நெருக்கம், வலிமை, ஆற்றல். கேடு = கெடுதல். கெடு → கேடு.]*

**ஆத்தி சீரடம்** ātti-šīraḍam, பெ. (n.) பூநீறு; an efflorescent salt collected on the soil of fuller's earth (சா.அக.).

*[ஒருகா. அளத்து + சிறு + அளம் = ஆத்து சிரளம் → ஆத்திசிரடம். அளம் = உவர்மண், உப்பு.]*

**ஆத்திசூடி** ātti-šūḍi, பெ. (n.) 1. ஆத்திமாலை சூடிய கடவுள், சிவன்; Šiva, since wearing the garland of ātti flowers. 2. ஔவையார் இயற்றியதும் 'ஆத்திசூடி' என்று தெய்வவாழ்த்துடன் தொடங்குவதும், அகரவரிசையில் அமைந்ததுமாகிய அறநெறி புகட்டும் சிறுநூல்; little book of aphorisms written by Avvaiyār, commencing with words beginning with letters in their order in the Tamil alphabet, so called from the opening word ஆத்திசூடி, the invocation of Šiva with which the work begins.

*[ஆத்தி + சூடி → ஆத்திசூடி = ஆத்தி மாலை சூடிய கடவுள், ஆத்திசூடியாகிய சிவனை வழுத்திப்பாடும் முதலடியையுடைய நூல். ஆத்திசூடி – அன்மொழித் தொகை.]*

**ஆத்திசூடி வெண்பா** āttišūḍi-veṇbā, பெ. (n.) ஆத்திசூடி நூலிலுள்ள அறநெறியை ஈற்றடி தோறும் கொண்டு வெண்பா யாப்பில் இராமபாரதி என்பவரால் பாடப்பட்ட நூல்; poem in the veṇbā meter written by Irāmabhārati, in which each stanza ends with an aphorism of the Ātti-šūḍi.

*[ஆத்திசூடி + வெண்பா.]*

**ஆத்திட்டி** āttiṭṭi, பெ. (n.) நீர்முள்ளி; a species of Hygrophila (சா.அக.).

*[அளத்து + இட்டி. அளத்திட்டி → ஆத்திட்டி. இல் → இள் → இட்டி (முள், கூர்மை.]*

**ஆத்திமைக்காலி** āttimai-k-kāli, பெ. (n.) வெண்கருங் காலி; egg-fruited ebony (சா.அக.).

*[ஆத்தி + மை + காலி = ஆத்திமைக்காலி. மைக்காலி = கருங்காலி. மை = கருமை.]*

**ஆத்தியன்** āttiyaṉ, பெ. (n.) சிவன் (கதி.அக.); Lord Šiva.

*[ஆத்தியன் = ஆத்திமாலை சூடிய சிவன்.]*

**ஆத்திரக்காரன்** āttira-k-kāraṉ, பெ. (n.) விரைவு காட்டுபவன் (அவசரக்காரன்); over-anxious person, one who is impatient. "ஆத்திரக்காரனுக்குப் புத்தி மட்டு" (பழ.).

*[ஆத்திரம் + காரன் = ஆத்திரக்காரன்.]*

**ஆத்திரம்** பார்க்க; see **āttiram.**

**ஆத்திரம்**[1] āttiram பெ. (n.) இஞ்சி; undried ginger **Skt.** ārdraka.

*[அத்திரதம் → ஆத்திரதம் → ஆத்திரம். அத்திரம் = இஞ்சி. இரதம் = சாறு. அத்து = சேர்தல். அத்திரம் = சாறுள்ளது, இஞ்சி.]*

**ஆத்திரதம்** பார்க்க; see **āttiradam.**

**ஆத்திரம்**[2] āttiram, பெ. (n.) 1. பரபரப்பு; impatience, eagerness, haste. "ஆத்திரம் வந்தவர் போலலையா மல்" (தாயு.பாயப். 59). 2. சீற்றம் (கோபம்); quick of temper. உனக்கு ஏனிப்படி ஆத்திரம் வருகிறது (உ.வ.). "ஆத்திரப் பட்டவனுக்கு அப்போது இன்பம்" (பழ.).

**ம.** ஆத்திரம்; **க., பட.** ஆத்தர; **தெ.** ஆத்ரமு; **Skt.** ātura **து.** ஆதுர; **கொ**;ஆதுர்; Nep. aturi. Mar.ātura

*[அலைத்திரம் → அலத்திரம்–ஆத்திரம். அலைதல் = பரபரப்புற்றுச் செயற்படுதல், விரைவு காட்டுதல், எரிச்சலுறுதல், சீற்றங் கொள்ளுதல். அலைத்திரம் பார்க்க;* see alai-t-tiram.]

வடமொழியில் ஆத்திரம் என்னும் சொல்லை ஆ – துர எனப் பிரித்து வேர்மூலம் காட்டுவர். 'ஆ' பொருளில்லாத முன்னொட்டு. துர – வருத்தம், நோய். திரவிடமொழிகளில் இச்சொல் துன்பம், நோய் என்னும் பொருள்களில் ஆளப்படாமல் விரைவு, பரபரப்பு, சீற்றம் என்னும் பொருள்களில் ஆளப்படுதலானும், தமிழ் வேர்ப்பொருளே இச் சொற் பொருளை மொண்டு நிற்றலானும் தமிழிலிருந்து இச் சொல் வடமொழியில் கடன் கொள்ளப் பட்டிருக்கிறது என அறியலாம்.

**ஆத்திரமூலம்** āttira-mūlam, பெ. (n.) அரத்தத்தினாலும் பித்தத்தினாலும் பிறந்து, எப்பொழுதும் அரத்தக் கசிவை யுண்டாக்கிவரும் ஒருவகை மூலநோய்; a kind of bleeding piles due to the deranged blood and bile in the system.

*[அரத்த + மூலம் = அரத்தமூலம் → ஆத்திரமூலம் (கொ.வ).]*

**ஆத்திரையன் பேராசிரியன்** āttiraiyaṉ-pērāširiyaṉ, பெ. (n.) தொல்காப்பியப் பொதுப்பாயிரஞ் செய்த

ஆசிரியர் (தொல்.பொருள்.653, உரை); author of the preface to the Tolkāppiyam.

*[ஆ+ திறை- ஆத்திறை(ஆனிரைகளுக்கான வரி). ஆத்திறை → ஆத்திரை (திரிபு). ஆத்திரையன் + பேராசிரியன். இவர் வரித்தண்டலராய் இருந்த வராக லாம்.]*

**ஆத்திறைப்பாட்டம்** āttirai-p-pāttam, பெ. (n.) கால் நடை வரி; tax on cattle – (I.M.P.cg. 135).

*[ஆ + திறை + பாட்டம் - ஆத்திறைப்பாட்டம். ஆ = ஆனிரை, கால்நடைகள். திறை = வரி. படு → பாடு → பாட்டம். பாட்டம் = வரி கட்டவேண்டிய காலம். திறைப் பாட்டம் = குறிப்பிட்ட காலத்திற்குரிய வரி. பாட்டத் திறை என்பது திறைப்பாட்டம் என இலக்கணப் போலியாயிற்று.]*

**ஆத்தின்னி** āttinni, பெ. (n.) ஆவினைத் தின்பவன்; beef-eater. "புலையாத் தின்னி போந்ததுவே" (திருக்கோ. 386).

*[ஆ + தின்னி - ஆத்தின்னி. தின்னி = தின்பவன்.]*

**ஆத்தினி** āttini, பெ. (n.) வெருகன் கிழங்கு; plant Arum Macrorhison (சா.அக.).

*[ஆத்திக்கனி → ஆத்தினி. **ஆத்திக்கனி** பார்க்க; see **ātti—k—kani.**]*

**ஆத்துக்காரர்** āttu-k-kārar, பெ. (n.) 1. வீட்டுக் குரியவா; owner of the house. 2. கணவன் (பிராம.); husband (Brahm.).

*[அகம் + அ த்து + காரர் = அகத்துக்காரர் → ஆத்துக்காரர். அகம் = வீடு. அகத்துக்காரர் = வீட்டுக்குச் சொந்தக்காரர், வீட்டின் தலைவர்.]*

**ஆத்துக்காரி** āttu-k-kāri, பெ. (n.) 1. வீட்டுக் குரியவள் (பிராம.); woman who owns the house (Brahm.). 2. மனைவி (பிராம.); wife (Brahm.).

*[அகம் + அத்து + காரி = அகத்துக்காரி → ஆத்துக்காரி. அகம் = வீடு. அகத்துக்காரி = வீட்டுக்குச் சொந்தக்காரி, வீட்டின் தலைவி, இல்லாள்.]*

**ஆத்துக் கொம் பொதியமரம்** āttu-k-komb-odiya-maram, பெ. (n.) **ஆட்டுக்கொம்பொதி** பார்க்க; see āttu-k-kombodi

**ஆத்துச்சங்கிலை** āttu-c-cangilai, பெ. (n.) **ஆற்றுச் சங்கிலை** பார்க்க; see **arru—c—cangilai.**

**ஆத்துப்பாசி** āttu-p-pāsi, பெ. (n.) **ஆற்றுப்பாசி** பார்க்க; see **ārru—p—pāsi.**

**ஆத்துமுள்ளங்கி** āttu mullangi பெ. (n.) **ஆற்றுமுள்ளங்கி** see **ārru-mullangi.**

**ஆத்துமுள்ளி** āttu-mulli, ,பெ. (n.) **ஆற்றுமுள்ளி** பார்க்க; see **ārru-mulli.**

**ஆத்துவாஞ்சி** āttu-vāñji, பெ. (n.) **ஆற்றுவஞ்சி** பார்க்க; see **ārru-vanji.**

**ஆத்தூர் சம்பா** āttūrsamba, பெ. (n.) ஒரு நெல் வகை; a kind of paddy (A.).

*[ஆற்றூர்=ஆத்தூர் + சம்பா=ஆத்தூர் சம்பா = ஆத்தூரில் விளையும் சம்பா நெல்வகை. சம்பு = நெல். சம்பு → சம்பா.]*

**ஆத்தை**[1] āttai, பெ. (n.) ஆத்தாள், தாய்; mother. 'ஆத்தை படுகிற பாட்டுக்குள்ளே மகன் மோருக்கு அழுகிறான்' (பழ.).

ம. ஆத்தோள்.

*[ஆத்தாள் → ஆத்தை (விளி).]*

**ஆத்தை**[2] āttai, இடை. (int.) வியப்பு, அச்சம், இரக்கம் ஆகிய உணர்வுகளை வெளிப்படுத்தும் இடைச் சொல்; exclamation expressive of surprise, fright or pity.

*[ஆத்தாள் → ஆத்தை. ஆத்தாள் = தாய்.]*

**ஆதகு** ādagu, பெ. (n.) கூந்தற்பனை; Indian sago-palm. It is so called from its numerous long and thin spadices. (சா. அக.).

*[ஆதம் + கூந்தல் - ஆதகூந்தல். ஆதகூ → ஆதகு. ஆதம் = கூந்தற்பனை.]*

**ஆதகேரகம்** ādakeragam, பெ. (n.) மாட்டுக்குளம்படி என்னும் கொடி; creeper, the leaves of which resemble the impressions of the hoof of cattle. (சா.அக.).

*[ஆ + த + கேரகம். ஆ = மாடு. கேரகம் = குளம்படி. → ஆத = ஆவினுடைய (திரவிடத்திரிபு). குளகம் → கிடகம் → கேடகம் → கேரகம் (திரவிடத் திரிபு).]*

**ஆதண்** ādan, பெ. (n.) 1. நோய்; disease. 2. வருத்தம்; affliction, suffering. (சா.அக.).

*[ஆதன்[5] → ஆதண் (கொ.வ.).]*

**ஆதம்**[1] ādam, பெ. (n.) உயிர்; life (சா.அக.).

*[ஆதன் → ஆதம்.]*

**ஆதம்**[2] ādam, பெ. (n.) 1.கூந்தற்பனை; a kind of palm tree, 2.சந்தனமரம்; sandal wood tree. (சா.அக.).

*[அதவு (நெருங்கு) → அதவம் → ஆதம் (கூந்தற் பனை) மணமிகுதியால் சந்தனத்தைக் குறித்தது.]*

**ஆதம்**[3] ādam, பெ. (n.) அன்பு; regard, solicitude "ஆதமெய்திறின் றஞ்சலித் தேத்தியே" (கந்தபு. திருக்கல்யா.11).

*[ஆர்த்தம் → ஆர்தம் → ஆதம்.]*

**ஆதம்** [4] ādam, பெ. (n.) காப்பு, பேணுதல் (ஆதரவு); prop,stay, protection. "ஆதமிலி நாயேனை யல்லலறுத் தாட்கொண்டு" (திருவாச.31,5).

*[ஒருகா. ஆர் + தரம் = ஆர்தரம் → ஆதரம் → ஆதம். தரல் → தரன் → தரம்.]*

**ஆதர்** ādar, பெ. (n.) 1. குருடர்; the blind. 2. அறிவில்லாதவர்; the ignorant. 3. ஊமணி; fleshy protuberance hanging down the neck of goat.

*[அதள் = தோல், மேற்றொலி. அதள் → அதல் → அதர் → ஆதர் = உள்ளீடில்லாமல் மேற்றோல் மூடிய பொய்த்தோற்றம்.]*

**ஆதரணை** ādaraṇai, பெ. (n.) 1. காத்தல், புரத்தல், உதவுதல்; support, shelter, help. "கை தூக்கி ஆதரணை செய்யும்" (கந்தபு. சீர். 31, 18).

*[ஆர் + தரணை = ஆர்தரணை → ஆதரணை.]*

**ஆதரம்** ādaram, பெ. (n.) அன்பு, ஆசை (திவ். திருமாலை, 16); regard, love, affection, kindness, respect. "தேங்கிய காதர ஆதரம் செப்பி" (தஞ்.வா.கோ.) 2. ஆசை (சூடா.); desire. 3. மதித்துப் பேணுதல்; honour, hospitality. "ஆதரங்கள் பெருக்கினார்" (கோயிற்பு. இரணிய.95).

**Skt.** ādara.

*[ஆர் + தரம் = ஆர்தரம் → ஆதரம். ஆர்தல் = மனம் நிறைதல், அன்பு. தரம் = நிலைமை.]*

வடமொழியிலுள்ள ஆதர என்னுஞ் சொல்லை ஆ +தர எனப் பிரித்து வேர் காட்டுவர். 'ஆ' பொருளில்லாத முன்னொட்டு தர →த்ரு = உடைத்தல், பிளத்தல். வடமொழி வேர்மூலம் அன்பு,ஆசை போன்ற பண்புப் பெயர்களுக்குப் பொருந்தாமையும் தமிழ்ச்சொல்லே வடமொழியில் கடன் கொள்ளப்பட்டிருத்தலையும் சொல்லினமைப்பு விளக்கிக் காட்டுகிறது.

**ஆதரவு** ādaravu, பெ. (n.) 1. அன்பு (கந்தபு. மார்க்கண்.21); love, affection, kindness. 'ஆதரவற்ற சொல்லும் ஆணிகடவாத மரமும் பலன் செய்யா (பழ.). 2. உதவி; support, patronage. 3. தேற்றுதல்; comfort, consolation.

ம., தெ. ஆதரவு; க. ஆதர.

*[ஆர் + தரவு → ஆர்தரவு → ஆதரவு. ஆர் = நிறைவு, அன்பு.]*

**ஆதரவுச்சீட்டு** ādaravu-c-cīṭṭu, பெ. (n.) பற்றுச்சீட்டு; voucher.

*[ஆதரவு + சீட்டு.]*

**ஆதரி-த்தல்** ādari-, 11. செ. குன்றாவி. (v.t.) 1. பாதுகாத்தல்; to support, protect, patronize (W.). 2. அன்புடன் பேணுதல், பரிந்தோம்புதல்; to treat with regard or kindness, to extend hospitality, to show honour to. 3. ஆசைபொழிதல்; to favour. "அடியேனாதரித் தழைத்தால்" (திருவாச. 29,4).

ம. ஆதரிக்குக; க. ஆதரிசு; தெ. ஆதரின்சு. ஆதலி-த்தல் பார்க்க; see ādali.

*[ஆதலித்தல் →ஆதரித்தல். ஆதலித்தல் = ஆகச் செய்தல், நன்மைபெறச் செய்தல், காத்தல். ஒ. நோ. மூதலித்தல் → மூதரித்தல். ஊதலித்தல் → ஊதரித்தல் ஊதாரித்தனமாகச் செலவு செய்தல். ஊதல் = பறக்கச் செய்தல்.]*

ஆகல் → ஆதல். ஆகலித்தல் → ஆதலித்தல். ஒருவனை ஆகச்செய்தல் (ஆகலித்தல்) என்பது வளரச்செய்தல், வளரத்தக்க சூழலமைத்துக் கொடுத்தல், பாதுகாத்தல் எனப் பொருள்படும்.

**ஆதல்**[1] ādal, பெ. (n.) 1. ஆகுதல்; becoming; happening. "நயனுடையான் நல்கூர்ந்தான் ஆதல்" (குறள். 219). 2. நூல் (அக.நி.); book, treatise. 3. மேம்பாடு; prosperity. "அருளற்றார் மற்று ஆதல் அரிது" (குறள்.248). 4. நன்மை; goodness. "ஆதல் நின்னகத் தடக்கி" (புறநா. 91.).

*[ஆகுதல் → ஆதல். ஆதல் = செய்யப்பட்ட நூல்.]*

**ஆதல்** [2] ādal, பெ. (n.) ஆசை (அக.நி.); desire.

*[ஆர்தல் → ஆதல்.]*

**ஆதல்** [3] ādal, பெ. (n.) 1. காட்சி, தோற்றம்; vision (R.), sight.

*[ஆல் + தல் → ஆதல் = பார்த்தல். க. ஆல் = பார். த. ஆல் = பொருந்துதல், உள்ளத்தைப் பார்வையாற் பொருத்தும் காட்சி.]*

**ஆதல்**[4] ādal, பெ. (n.) நுணுக்கம்; minuteness (R.).

*[ஆய்தல் → ஆதல் = நுணுக்கம். ஆய்தல் = நுணுக்கம்.]*

**ஆதல்** [5] ādal, பெ. (n.) கூத்து (அக.நி.); dance.

*[ஆடல் → ஆதல், ட → த திரிபு. ஒ.நோ: கடவு → கதவு.]*

**ஆதல்**[6] ādal, பெ (n.) தெரிதல்; selecting.

*[ஆய்தல் → ஆதல். ஆய்தல் = தெரிந்தெடுத்தல், ஆராய்தல்.]*

**ஆதல்** [7] ādal, இடை. (conj.) ஆவது எனப்பொருள் படும் இடைச்சொல்; conjunction which means 'or'. "பொருந்துமோர் துலாத்தினாத லரைத்துலாம் பொன்னினாதல் ... தகடு செய்தே" (கூர்மபு. தான. 65.).

*[ஆகுதல் = ஆதல். ஆதல் என்னுந் தொழிற்பெயர் கூட்டுச் சொற்களின் பின்னீறாய போது இடைச்சொல்லாயிற்று.]*

**ஆதலால்** ādalāl, வி.எ. (adv.) அப்படியிருத்தலால் (திவ்.பெரியதி. 5,8,8.); therefore, because of that. "ஆதலால் இராமனுக்கு அரசை நல்கி" (கம்ப. அயோத்.மந்.33.).

ம. ஆதலால்.

*[ஆகுதல் → ஆதல் + ஆல் → ஆதலால் = ஆதலின் பொருட்டு, ஆகின்ற செயலால் அல்லது காரணத்தால்.]*

**ஆதலி—த்தல்** ādali, 11 . செ.குன்றாவி. (v.t.) 1. ஆகச்செய்தல்; உதவுதல்; to favour, to help for betterment. 2. துன்பத்தில் உதவுதல்; to support, in distress 3. காப்பாற்றல்; to protect.

*[ஆதலித்தல் → (பிறவினை). ஒ.நோ. ஆதலை (யாழ்ப்.) = உதவி. ஆதல் + ஈ = ஆதலீ → ஆதலி (ஆகச் செய்) 'ஈ' — அருள்செய் எனப்பொருள்படும். துணைவினை.]*

**ஆதலி** ādali, பெ. (n.) அத்தி (சா.அக.); fig tree.

*[அதவு → ஆதவு → ஆதனி → ஆதலி.]*

**ஆதலினால்** ādalināl, வி.எ. (adv.) **ஆதலால்** பார்க்க; see ādalāl.

*[ஆதல் + இன் + ஆல் = ஆதலினால். இன் — சாரியை.]*

**ஆதலை** ādalai, பெ. (n.) உதவி (கதி.அக.); help, assistance.

*[ஆதல் + ஐ – ஆதலை = உதவி. ஆதல் = உதவுதல். ஐ – செயப்படுபொருள் பெயராக்க ஈறு.]*

**ஆதவாழ்பூடு** ādavālpūḍu, பெ. (n.) வாலைப்பூ நீர்; solvent liquid obtained by distillation from fuller's earth (சா.அக.).

*[ஒருகா. ஆதவாழ்பூடு என்னும் பெயர் கரைப் பானாகிய ஒரு நீர்மத்திற்குக் (திரவம்) குழூஉக்குறியாக இடப்பட்டிருக்கலாம்.]*

**ஆதளம்பால்** ādaḷampāl, பெ. (n.) காட்டாமணக்குப் பால்; milky juice of physic nut plant (சா.அக.).

*[ஆதளை + அம் + பால்.]*

**ஆதளை** [1] ādaḷai, பெ. (n.) 1 ஆமணக்கு; castor plant 2. எலியாமணக்கு; adul oilplant. 3.ஏரிக்கரைக் காட்டாமணக்கு; adul oil plant. 4.காட்டாமணக்கு; common physic nut. 5. சீமையாமணக்கு; bronze leaved physic nut.

ம. ஆதள, ஆதல; க. ஆடலு; தெ. ஆடாலு.

*[அத்... → அதளை → ஆதளை]*

**ஆதளை** [2] ādaḷai, பெ. (n.) மாதுளை; pomegranate tree (சா.அக.).

*[மாதுளை → மாதளை → ஆதளை.]*

**ஆதன்** [1] ādaṉ, பெ. (n.) 1. உயிர் (சா. அக.); life. 2. உள்ளகம், ஆதன், ஆன்மா (திவா); soul.

*[ஆதன் = தலைவன். உடம்பினுள் தலைமை யேற்ற உயிரும் ஆதனும் ஆதன் எனப்பட்டன.]*

**ஆதன்** [2] ādaṉ பெ. (n.) 1. அறிவில்லாதவன்; ignorant, person. "முன்பொருள் செய்யாதாராதரே" (சிறுபஞ். 20). 2. குருடன். (திவா.); blindman.

*[அதல் = ஆட்டின் கழுத்திலுள்ள பயனற்ற ஊமணி. உதள் → அதள் → அதல். அதல் → அதன் → ஆதன் = பயனற்றவன், செயலற்ற கண்ணுள்ளவன்.]*

**ஆதன்** [3] ādaṉ, பெ. (n.) அருகன் (சூடா.); Arhat.

*[ஆதன் = தலைவன். தமிழ்நாட்டு அருக சமயத்தவர் தம் தேவனை ஆதன் என்றனர்.]*

**ஆதன்** [4] ādaṉ பெ. (n.) 1. ஆசிரியன் (கதி.அக.); teacher, pedagogue, preacher. 2. மேலோன் noble person. 3. தலைவன், முதலாளி; chief, master.

ம. ஆதன்; குட. ஆதன் (முதலாளி)

*[அத்தன் → ஆத்தன் → ஆதன். அத்தன் = தந்தை, பெரியோன். ஆதன் = தலைவன். தலைமைமிக்க ஆசிரியன், சான்றோன்.]*

ஒரு சொல், ஆசிரியன், தலைவன் எனப் பொருள்படும் சிறப்புப் பெயராகவோ, தந்தை, அண்ணன் எனப் பொருள்படும் முறைப் பெயராகவோ வழக்கூன்றியபின் அது இயற்பெய ராகாது. ஆதலின் ஆதன் என்னும் சிறப்புப் பெயரின் தோற்ற வளர்ச்சியும், ஆதன் என்னும் இயற்பெயரின் தோற்ற வளர்ச்சியும் வெவ்வேறானவை.

**ஆதன்** [5] ādaṉ, பெ. (n.) 1. மனம்; mind . 2. கவலை, வருத்தம்; sorrow. 3. பெருந்துன்பம் (அக.நி); agony.

தெ. ஆத (மனம், வருத்தம்); க. ஆதி (நினைவு, நினைவோட்டம்) ம. ஆதி (கவலை); வ. ஆதி (வருத்தம், கலக்கம், நோய்); பிராகி. ஆகி; இந். யாத்; உருது. யாத்; மரா. யாத் பாலி. ஆடிநவ; Sinh. adnawa.

*[ஆ → ஆது → ஆதன் ஊ → ஓ → ஆ = முன் செலல், முன்னுறல், நினைத்தல், வருந்தல், நினைக்கும் உள்ளம். ஒ.நோ. முன் → மன் → மனம் . முன்னுதல் = நினைத்தல்.]*

ஆதன் என்னும் சொல் முன் செலற் கருத்துடைய ஆகாரச் சுட்டடிப் பிறத்தலான் உள்ளத்தின் கண்ணோடும் எண்ணமும் கவலையும் குறிக்கும் போது உள்ளம், உள்ளத்தின் கண்ணுள்ளதாகக் கருதப்படும் ஆதன் (ஆத்மா), உயிர் ஆகியவற்றையும், எண்ணம், கவலை, வருத்தம் ஆகிய வற்றையும் குறிக்கும்.

ஆதன் என்னுஞ் சொல்லே இந்தி, உருது போன்ற மொழிகளில் 'யாத்' (மனம், நினைவு, வருத்தம்) எனத் திரிந்து வழங்கி வருகிறது.

**ஆதன்** [6] ādan, பெ. (n.) பழங்கால மக்களின் இயற் பெயர் வகை (தொல். எழுத்.348); proper name in general use in ancient times.

*[ஆதன்=முன்னவன்,மேலானவன்,உயர்ந்தவன், சிறப்பு மிக்கவன்; பெற்றோர் குழந்தைகட்கிடும் இயற்பெயர்.]*

ஆதனழிசி, ஆதனுங்கன், ஆதன் ஓரி எனச் சிற்றரசர் பெயர்களிலும் சேரலாதன், செல்வக்கடுங்கோ வாழியாதன் எனச் சேரவேந்தர் பெயர்களிலும் ஆதன் என்பது முன்னடையாகவோ பின்னடையாகவோ ஆளப்பெற்று தொன்றுதொட்டு வழங்கிவருதலானும், ஆதன், பூதன் என்பன இயற்பெயர்களென உரையாசிரியர்கள் எடுத்துக் காட்டுதலாலும், இது அறப்பழங்காலத் தமிழ் இயற்பெயர்களுள் ஒன்று எனத் தெரிகிறது. மேலையாரிய மொழிகளிலும் இதனையொத்த ஆதன் என்னும் இயற்பெயருள்ளமை அறியலாம்.

ஆதன் என்னும் இயற்பெயருக்கு ஆ → ஆகு என்பதே முதனிலையாக அமைந்துள்ளது.

ஆகு. L. augere – to increase. இதில் auge என்பதே வினைமுதனிலை. 're' என்பது நிகழ்கால வினையெச்ச (infinitive) ஈறு.

E. augment v.t. and i. make or become greater; increase.

M.E. f. F. **augmenter.** L. L **augmentare,** increase. E. augmentation (n) enlargement, growth, increase.

E. augmentative, n. Having the property of increasing. Gram. of affix or derived word, increasing in force the idea of the original word f.F. augmentatif or L. augmentativus.

ஆ, ஆகு என்னும் இரு முதனிலை வடிவங்களுள் எது முந்தியது என்பது பற்றி, இற்றை நாள்வரை இலக்கண ஆசிரியர்கள் ஒரு முடிவிற்கு வந்திலர். ஆ, ஆகு என்பன போன்றவற்றையே போ, போகு என்றனர்.

"நச்சினார்க்கினியர் நன்னூலார் முதலாயினார் இயற்கை முதனிலை ஆ, போ என்றே இருக்குமென்றார். திருவள்ளுவர், பரிமேலழகர் முதலாயினோர் முதனிலை ஆகு, போகு என்றேயிருக்குமென்றார்" என்பது சுவாமிநாத தேசிகரின் இலக்கணக் கொத்துரைக் குறிப்பு (86, உரை).

போ என்பதன் ஈறு மிகையே போகு என்பது, (புகு → போ → போகு → போது) இங்ஙனமே ஆ என்பதன் ஈறு மிகையாகிய ஆகு என்பதும் இருத்தல் வேண்டும் என்றார் பாவாணர்.

அகைதல் = தளிர்த்தல், செழித்தல். அகு → அகை.

முகு → முகை. அகு → ஆ என மருவுவது இயல்பே.

ஒ.நோ: பகு → பா, மிகு → மீ, அகு → ஆ → ஆகு.

ஆதன், பூதன் இயற்பெயர்களிரண்டும் தோன்றுதல், வளர்தல், செழித்தல் என்னும் பொருளுடைய வேர்ச் சொற்களினின்றே வளர்ந்திருக்கின்றன. பூ = பூத்தல், தோன்றுதல், வளர்தல், செழித்தல், மலர்தல்.

ஆ → ஆது → ஆதல் = தோன்றுதல், வளர்தல், செழித்தல், பூ → பூதன். ஆ → ஆதன், மக்களுட் சிறந்தோனைத் தோன்றல் என்றழைப்பதைப் போன்றே ஆதன், பூதன் என்பனவும் சிறப்புக் கருதிய இயற்பெயர்களாயின.

தோன்றுதல், வளர்தல் கருத்து வேர்ச்சொற்கள் முன்வரற் கருத்துடைய உ → உல் என்னும் சுட்டடி மூல வேரிலிருந்து திரிபுற்று வளர்ந்திருப்பதைப் பாவாணர் சுட்டிக் காட்டுகிறார். உ (உல்) → ஊ ≒ முன்வரற் கருத்துவேர். ஊ → ஒ → ஆ – முன்வரற் கருத்துத் திரிபு வேர். இதனாற்றான் ஆகார நெடிலுக்கும் அதன் குறுக்கமான அகரத்திற்கும் முன்மை, முதன்மைப் பொருள்களுண்டாயின. 'ஆ' உயிர் நெடிலுக்கு முன்மை, முதன்மைப் பொருள் தமிழில் பண்டே இருந்தமைக்குச் சான்றான சொல்லாட்சிகள் திரவிட மொழிகளில் காக்கப்பட்டுள்ளன.

தெலுங்கில் ஆதிகொனு = முற்படு, எதிர்கொள் எனப் பொருள் படுகிறது.

வடபகுதி, தென்பகுதி என்பவற்றை வடதலை, தென்தலை எனக் கூறுகிறோம். இதைப் போன்றே முன்பக்கம், முன்பகுதி என்பவற்றை "ஆதலை" என்னுஞ் செந்தமிழ்ச் சொல் சுட்டுகிறது. குமரிக்கண்ட காலத்தில் இச்சொல் பெருவழக்குப் பெற்றதாகல் வேண்டும். இஃது இன்றும் மறையாமல் குடியேற்றப் பாதுகாப்புச் சொல்லாகக் (colonial preservation) கன்னட மொழியில் வழங்கிவருகிறது. கன்னடப் புலவன் பம்பன் இயற்றிய பம்ப இராமாயணத்தில் "ராஜசிஹ்ன பாலித்வஜ சங்குலமும் படகமும் ஆதலெயொள் பரெ வஜ்ரபாகு பயணம் பந்தம்" (பம்பரா. 2–12), என்று கூறப்பட்டுள்ளது. வச்சிரவாகு பயணம் சென்றபோது போர்ச் சின்னங்கள் ஆதலையில் (முன்பக்கம், முன்னால்) சென்றன என்று இப்பாடல் குறிப்பிடுகிறது. வடமொழி, பாலி, பிராகிருதம் ஆகிய வடபுலமொழிகளில் 'ஆ' முன்னொட்டு முன்செலற் கருத்திலேயே ஆளப்பட்டுள்ளது.

**Skt., pkt., pali.** ā – to, towards.

**ā— kula** mixed up. ā – **rava** make noise.

**ā—lingana** embrace.

ஆ – முன்மையும் முதன்மையும் சுட்டிய சொல் லாதலின், ஆ → ஆது → ஆதன் (முன்னவன், தலைவன்) தலைமைப் பொருள் தரும் செந்தமிழ்ச் சொல் என்று தெளிவாகிறது. இதனை அறியாதார் இதனை 'அர்ஹத' என்னும் வடசொல்லின் சிதைவாக்கிக் கூறுவர்.

ஆதன் என்னும் இயற்பெயரும், அப்பெயரடியாகத் தோன்றிய ஆதனூர், ஆதமங்கலம் என்னும் இடப்பெயர் களும் தமிழ்நாட்டில் மிகுதியாக இன்றும் காணப்படுதல் போன்றே ஏனைத் திரவிட மொழிகளிலும் காணப்படுகின்றன.

**இயற்பெயர்:** ம. ஆதன்; க. ஆத, ஆதப்ப, ஆதய்ய;

**து.** ஆதப்ப; **தெ.** ஆதிகான், ஆதிகாடு.

**இடப்பெயர்: ம.** ஆதனூர்; **க.** ஆதனூரு, ஆதிபுர,

ஆதவனி (ஆதனவினி). (ஆதனவினி → ஆதன் அவினியின் பெயராலமைந்த ஊர்);

**தெ.** ஆதோனி.

ஆதன் ஆண்பால் இயற்பெயராய் வழங்கி வந்தது போன்றே, ஆதி பெண்பால் இயற்பெயராய் வழங்கி வந்துள்ளது. சோழன் கரிகாற் பெருவளத்தானின் மகள் ஆதிமந்தி. ஆதி = மூத்தவள், முன்னவள்.

காலத்தால் முன்மை, சேய்மை சுட்டிய 'ஆ' நெடுஞ் சுட்டடியிலிருந்து ஆதன் இயற்பெயர் தோன்றியதென்பர் சிலர். ஆதன் போன்று ஈதன் என அண்மைச் சுட்டடியாகப் பெயர்ச்சொல் தோன்றாமை அறிக. முன்னுறல், வளர்தல் செழித்தல் கருத்துடைய 'ஆ' (அகு – ஆ) வேரிலிருந்து 'ஆதன்' பிறந்ததாகக் கொள்வதே ஏற்புடைத்து.

எனவே, இது பண்புகொள் பெயர்.
பாலறிவந்த உயர்திணைப் பெயர்களைக் குறிப்பிடுங்கால்,
"நிலப்பெயர் குடிப்பெயர் குழுவின் பெயரே
வினைப்பெயர், உடைப்பெயர் பண்புகொள் பெயரே
பல்லோர்க் குறித்த முறைநிலைப் பெயரே
பல்லோர்க் குறித்த சினைநிலைப் பெயரே
பல்லோர்க் குறித்த திணைநிலைப் பெயரே
கூடிவரு வழக்கின் ஆடியற் பெயரே
இன்றிவ ரென்னும் எண்ணியற் பெயரொடு
அன்றி யனைத்தும் அவற்றியல் பினவே"

(தொல்.சொல்.165)

பண்புகொள் பெயரெனவும் முறைநிலைப் பெயரெனவும் தொல்காப்பியர் சுட்டுவன, ஆதன் என்னும் இயற்பெயருக்கும் ஆதன் → ஆத (விளி) என்னும் முறைப்பெயருக்கும் பொருந்திவருதலைக் காணலாம்.

**இயற்பெயர்** – ஆதன் (முன்னவன், முதன்மையானவன்)
– பண்புகொள் பெயர்.

**முறைப்பெயர்** – ஆதன் (அத்தன் → ஆத்தன் → ஆதன்)
தந்தை போல்வான், தலைவன். – **முறை**
– **நிலைப்** பெயர்.

இம் முறைப்பெயர் நாளடைவில் சிறப்புப்பெயராக ஆளப்பட்டு வருகிறது.

**ஆதன்** [7] ādaṉ, பெ. (n.) மாந்தன்; man.

**H.** ādmi, **U.** ādmi; āsāmid; **Heb.** Ādam; **Cir.** Ādam; **Jap.** hito.

*[ஒருகா. ஆள் → ஆளன் → ஆடன் → ஆதன்.]*

இந்தி உருது மொழிகளில் ஆத்மி, ஆசாமி எனவும், எபிரேயம், சிர்கேசியன் மொழிகளில் ஆதம் எனவும், சப்பானியத்தில் இதோ எனவும் மாந்தனைக் குறிக்கும் சொற்கள், ஆதன் என்னும் தமிழ்ச் சொல்லையொத்து வழங்கிவருதல் கவனித்தற்பாற்று. மன், மந்து எனும் சொற்கள், மாந்தனுக்கும் வேந்தனுக்கும் பொதுவாய் பண்டுதொட்டே வழங்கிவருதல் போன்று இச் சொல்லாட்சியும் மாந்தனையும் தலைவனையும் குறிக்கும்.

மாந்தனைக் குறித்த பழந்தமிழ்ச் சொல்லான ஆதன் கன்னடத்தில் ஆத (āta–), ஆதனு ātanu (அவன்) என ஆண்பாற் சுட்டுச் சொல்லாகவும் தமிழில் தான், தன் எனத் தற்சுட்டாகவும் குறைந்து உருமாறி விட்டது.

**ஆதன்** [8] ādaṉ, பெ. (n.) 1. உடம்பு; body. 2. தான்; self.

**ம.** தை (இளங்கன்று, தென்னங்கன்று போன்ற மரநாற்று).

**க., தெ.** ஆத்ம (உடம்பு, தான்) ***சீன.*** தாய் (கரு, வளரும் பரு, ஈனுதல்).

**Skt.** தனு (உடம்பு) **pali., pkt.** தனு (உடம்பு).

**Skt.** ātman (self); **Sinh.** ātmaya; **pali.** attan (self, body); **pkt.** atta (self, soul, body).

*[ஆ → ஆது → ஆதன். ஆ =முன்னுறல், வளர்தல். ஆதன் வளர்ந்த உடம்பு. ஆதன் → ஆது → ஆதை → ஆதய் → தாய் → தய் → தை. ஒ.நோ: ம. தை. ஆதன் → தான்.* Skt. *தனு (உடம்பு). ஆதன் உடம்பைக் குறிக்குங்கால் தற்சுட்டாகி தான்* (self) *எனவும் பொருள்தரும். ஆதன்* Skt. > *ஆத்மன் த. ஆத்மா, ஆன்மா.]*

ஆத்மன் (ஆத்மா) என்னும் சமற்கிருதச் சொல்லின் மூலம் தெளிவாகத் தெரியவில்லையென்று மானியர் வில்லியம்சு திட்டமாகத் தெரிவிக்கிறார்.

Skt. ātman (fr. rt. an. to breathe or **at,** to go; or according to some, fr. rt. **ah** and connected with **aham,** I; or according to them, a contraction of **avatman** fr. rt. av. vā; but the existence of the old Vedic form **tman** makes all these etymologies doubtful); the breath, soul, the principle of life and sensation, the individual soul, the self, the abstract individual. (ātmanam sa hanti – she strikes herself) the person or whole body, mind, intellect, effort, pains, sun, fire, wind, air.

**Goth.** ahma, **OG.** atum, **Them,.** atuma, **As.** aedhm (knowledge), adhma (knowing (Gr...atma is used at the end of some compounds of atman.

(S.E.Dict. Monier Williams).

தமிழ், ஆரியம் வருமுன் சிந்து வெளி வரை பேசப்பட்ட செம்மொழியாதலால், வடஇந்திய மொழிகளின் மூலத்தாய் மொழியாகிய பிராகிருதத்தில் ஆதன் என்னும் சொல் ஆத்த, ஆத என்று மிகத் தெளிவாகவும், பாலி மொழியில் அத்தன் என்றும் சமற்கிருதத்தில் ஆத்மன், ஆத்மா என்றும் வழங்கிவருகிறது. கீழை மேலையாரியமொழிகளான கோதிக்கம், பழஞ்செருமானியம், கிரேக்கம், இலத்தீனம் போன்றவற்றிலும், கீழை மொழிகளான சப்பான் சீன மொழிகளிலும் இதன்

வேர்மூலம் பரவியுள்ளதால் இதனைத் தொன்முது தமிழின் முன்முது அடிப்படையாகக் கொள்ளலாம். சமற்கிருதத்தில் உயிரைச் சுட்டிய பின் உயிர்த்தல் (மூச்சுவிடல்) பொருளும், மனத்தைக் குறித்தபின், அறிவுடைமை, கவலை, துன்பம், துன்பந்தரும் வெயில், சூரியன், தீ, காற்று போன்ற வழிநிலைப் பொருள்களும் தோன்றியிருத்தல் வேண்டும். இவை வெறும் பொருட்புடைபாடேயன்றி மூல வேர்ப்பொருளின எனக் கொள்ளவியலா.

பிராகிருத பாலி மொழிகளில் ஆதன் என்னும் வலி யிரட்டித்து ஆத்த, (āta), **அத்தன்**, என வழங்குவதும், சமற்கிருதத்தில் ஆத்மன் என வழங்குவதும் இச்சொல்லின் முதனிலை ஆகார (ஆ → ஆகு → ஆது ) நெடிலே என்பதை உறுதிப்படுத்தப் போதிய சான்றாகும். பகுத்தல் — பாத்தல் (பிரித்தல்) ஆயவாறு, அகுத்தல் – ஆத்தல் (அகு = தோன்றல் , வளர்தல் ) ஆயிற்றென்க.

கன்னட இலக்கியங்களில் ஆத்த சங்கர (உண்டாகிய போர்), ஆத்தோதய (உண்டாகியபிறப்பு), ஆத்தபல (உண்டாகிய வலிமை) என்னுஞ் சொல்லாட்சிகள் (ஆத்த) ஆகிய, தோன்றிய, வளர்ந்த என்னும் பொருள்களில் ஆளப் பெற்றிருப்பதைக் காணலாம். நெடுமுதல் ஒரெழுத்தொருமொழியான வினைகள் ஆ → ஆத்து (ஆகு) எனத் தகரவல்லொற்றிரட்டித்தல் குடகு மொழியிலும் உள்ளது. வா = வந்தான் என்னும் தமிழ் இறந்தகால வினைமுற்று குடகு மொழியில் பா (bā ) → பாத்து ( bāttu ) என வழங்கி வருகிறது. இவற்றைக் கூர்ந்து நோக்குங்கால் வட இந்திய மொழிகளில் ஆத்மன், ஆன்மா, ஆத்மி, யாத், தனு எனப் பல்வகை வடிவ மாறுதல்களையும், பொருள் வேறுபாடுகளையும், ஆதன் என்னும் மூலச்சொல் பெற்றுள்ளதை அறியலாம்.

**ஆதன் அவினி** ādaṉ-aviṉi, பெ. (n.) கடைக் கழகக் காலப் பெருமகன்; ஐங்குறுநூறு 1–10ல் பாடப் பட்டவன்; sangam noble.

*[ ஆதன் + அவினி. அவல் = தாழ்நிலம். அவல் → அவனி → அவினி = தாழ் நிலப்பகுதியின் தலைவன். ஒ.நோ. குட்டன். ]*

**ஆதன்அழிசி** ādaṉaḻisi, பெ. (n.) கடைக்கழகக் காலப் புரவலன்; புறம் 71 —ல் பாடப்பட்டவன் ; sangam noble.

*[ஆதன் + அழிசி. அழி = கழிமுகம். அழிசி = காயல் அல்லது ஆறுகடலொடு கலக்கும் கழிமுகப் பகுதியின் தலைவன் .]*

**ஆதன்மை** ādaṉmai, பெ. (n. ) பேதமை ; folly. "ஈவத:தாதன்மை" (நீலகேசி.214).

*[ ஆது → ஆதன் → ஆதன்மை ]*

**ஆதன்மையால்** ādaṉmaiyāl, வி.எ. (adv.) ஆகையால்; therefore. "ஆதன்மையா லதுவே நம துய்விடம்" (திவ்.பெரியதி.2,4,9).

*[ஆ + தன்மையால் – ஆத்தன்மையால் → ஆதன்மையால். அ → ஆ , சுட்டு நெடு முதலாயிற்று.]*

**ஆதனம்** ādaṉam, பெ. (n.) நீளுதல்; (in anatomy) diastole. (சா.அக.).

*[ஒருகா. அதர் = வழி, நீண்ட பாதை, அதர் → அதரம் → அதனம் → ஆதனம்.]*

**ஆதனுங்கன்** ādaṉuṅgaṉ, பெ.(n.) கடைக் கழகக்கால அரசர்களில் ஒருவன்; புறம் 175,389–ல் பாடப் பட்டவன்; sangam noble.

*[ஆதன் + உங்கன் உ → உல் → உங்கு → உங்கன் = உயர்ந்தவன், சிறந்தவன்.]*

**ஆதனெழினி** ādaṉeḻiṉi, பெ. (n.) கடைக்கழகக் காலத்தில் வாழ்ந்தோன்; அகம் 216–ல் பாடப் பட்டோன்; sangam noble.

*[ஆதன் + எழினி. எழில் → எழினி.]*

**ஆதனோரி** ādaṉōri, பெ. (n.) கடைக் கழகச் சிற்றர சர்களுள் ஒருவன்; sangam noble.

*[ஆதன் + ஓரி . ஊ → ஓ → (உயர்வு , தலைமை) → ஓரி]*

**ஆதாபாதை** ādābādai, பெ. (n.) விரைவுக்கோலம், மிகுந்த விரைவு கருதி அரைகுறையாகச் செய்யும் பணி; occasion of urgency, hasty work. இப்படி ஆதாபாதையாய் வேலை செய்யக்கூடாது (உ.வ.).

*[அதைபதை → ஆதாபாதை. அதைபதை → விரைவு கருதிய எதுகை மரபிணைச் சொல். அதை பதை பார்க்க; see adai padai.]*

**ஆதாபாதையாக** ādābādai–y–āga, வி.எ. (adv.) விரைவுக்கோலத்தில்; in a state of urgency, hurriedly. எல்லாம் ஆதாபாதையாகச் செய்து முடித்து விட்டான். (உ.வ.).

*[அதைபதையாக → ஆதாபாதையாக. அதை பதை பார்க்க; see adaipadai.]*

**ஆதாயஞ்செலவு** ādāyañ–celavu, பெ. (n.) வரவுசெலவு; income and expenditure.

*[ஆதாயம் + செலவு* **ஆதாயம்**[1] *பார்க்க; see* **ādāyam.]**

**ஆதாயப்பங்கு** ādāya–p–pāṅgu, பெ. (n.) ஊதிய (இலாப)ப் பங்கு (புதுவை); dividend (Pond.). share in profit or income.

*[ஆதாயம் + பங்கு.]*

**ஆதாயம்** [1] ādāyam, பெ. (n.) 1. ஊதியம், கிட்டுபடி (இலாபம்); profit, gain., income "வணிகருக் காதாய மீது நினைவு" (குமரே. சத. 9). 2. நன்மை (கதி. அக.); benefit. "ஆதாயம் பெருகினால் ஆணவம் பெருகும்". 3. வரவு; income. "ஆதாயமில்லாமல் செட்டி ஆற்றோடே போவானா?" (பழ.).

**க., து., பட**. ஆதாய; **ம**. ஆதாயம்.

*[ஒருகா. ஆகு + ஆயம் → (ஆது + ஆயம்) → ஆதாயம். ஆயம் = கூடுதல், தொகை. ஆதாயம் (ஆகு +*

*ஆயம்) தமக்காகிய கூடுதல் தொகை, ஊதியம் (இலாபம்) ஆகு →ஆது. ஒ. நோ: போகு →போது.]*

**ஆதாயம்** [2]ādāyam, பெ. (n.) (கணி.) எழுவோரைக்குப் (இலக்கினத்திற்கு) பதினோராமிடம் (சங்.அக.); (Astr) eleventh house from the ascendant. (சா.அக.).

**ஆதாயவரி** ādāyavari, பெ. (n.) வருமானவரி; income tax.

**க.** ஆதாயகர; **ம.** ஆதாயனிகுதி.

*[ஆதாயம் + வரி.]*

**ஆதாரக்கம்பி** ādāra-k-kambi, பெ. (n.) சுவரின்மேற் போடும் சரப்பலகை (சென்னை); wall plate (Madr.).

*[ ஆதாரம் + கம்பி.]*

கம்பி = நீண்ட வடிவிலுள்ளது. கொம்பு →கம்பு →கம்பி. கம்பி = இரும்பாலான கம்பி மட்டுமின்றி மரத்தாலான நீண்ட கம்பும் கம்பி என இட வழக்காக வட தமிழகத்தில் சிற்சில விடங்களில் வழங்கும். கழைகளை அல்லது குறுமரத்தடிகளை இணைத்துக் கிணற்றின் நடுவில் அல்லது மேல் நின்று பூச்சு வேலை செய்வோர் அமைத்துக் கொள்ளும் இருக்கை ஆதாரக் கம்பி எனப் பட்டது. நாளடைவில் சிறு மரப்பலகைகளைக் கட்டி இணைத்த இணைப்பும் ஆதாரக்கம்பி எனப்பெயர் பெறுவ தாயிற்று.

**ஆதாரக்கல்** ādāra-k-kal, பெ. (n.) கற்படிமத்தைத் தாங்கும் அடிக்கல்; pedestal of stone on which a stone idol is fixed (W.).

*[ஆதாரம் + கல்.]*

**ஆதாரக்கோவை** ādāra-k-kōvai, பெ. (n.) கொல்லன் கோவைக் கொடி; இதன் அடிப்பகுதி வழ வழப் பாயிருக்கும்; கணுக்களில் வளையுந் தன்மை யுண்டு; இலைகள் சற்றே சதைப் பற்றுள்ளவை களாயும், காம்புகள் நீளமானவைகளாயும், மூன்று பகுப்பினவாயும், இருபக்கமும் சொரசொரப்பும் அரும்புகள் வாய்ந்தவை களாயுமிருக்கும். பூக்கள் மஞ்சளாயும், விதைகள் கொஞ்சமாயும், வெண்மை யாயும் தட்டையாயுமிருக்கும்; climbing shrub with yellow flowers, so called from its root living in air; snake caper

It is a climbing shrub; leaves somewhat fleshy and three-lobed, long petioles with short bristly hairs; slightly toothed; flowers yellow; few seeded; seeds white and compressed.

**மறுவ.** ஆகாயக்கருடன், கொல்லன்கோவை.

ஒருகா. ஆதாரம் + இல் + கோவை - ஆதாரமில்கோவை ஆதாரக்கோவை = வேரின் தூர்கள் மேலே தெரியும் படி உள்ள கொடி. இதற்கு ஆகாயக்கருடன் எனப் பெயரிருப்பதும் இது பற்றியே.

**ஆதாரசத்தி** ādāraśatti, பெ. (n.) சிவனின் தேவி, சிவசத்தி (சதாசிவ.31); Śiva - Śakti.

*[ஆதாரம் + சக்தி →ஆதாரசக்தி.* Skt. Śakti > *த. சத்தி.]*

**ஆதாரசிலை** ādār-śilai, பெ. (n.) **ஆதாரக்கல்** பார்க்க; see ādāra-k-kal.

*[ஆதாரம் + சிலை.* Skt. śila > *த. சிலை = கல்.]*

**ஆதாரணை** ādāraṇai, பெ. (n.) தெய்வ வழிபாட்டின் போது உண்டாகும் தெய்வமருள் (தெய்வ ஆவேசம்) (நெல்லை); possession by deity during worship.

*[ஆர் + தரல் - ஆர்தரணை →ஆதாரணை.]*

**ஆதாரதண்டம்** ādāra-taṇḍam, பெ. (n.) முதுகெலும்பு; back bone, vertebral column.

*[ஆதாரம் + தண்டம். தண்டு = தண்டம் → தண்டு போன்றிருக்கும் முதுகெலும்பு.]*

**ஆதாரநரம்பு** ādāra-narambu, பெ. (n.) முதுகெலும்பி லுள்ள நரம்பு; spinal cord. 2. மூலாதாரத்தின் நரம்புகள்; nerves of the scaral region (சா.அக.).

*[ஆதாரம் + நரம்பு.]*

**ஆதாரநாடி** ādāra-nāḍi, பெ. (n.) 1. முதன்மையான நாடி; great arterial trunk which rises from the left ventricle of the heart Aorta. 2. மூலாதார நாடி; sacral artery distributed over the structures around sacrum and Cocoyx.

*[ஆதாரம் + நாடி.]*

**ஆதாரநிலை** ādāra-nilai, பெ. (n.) பற்றுக்கோடு (பிங்.); support, prop.

*[ஆதாரம் + நிலை.]*

**ஆதாரபீடம்** ādāra-pīḍam, பெ. (n.) ஆதாரக்கல் (வெட்.); pedestal of stone (Inx.).

*[ஆதாரம் + பீடம்.* **Skt.** pīta. > *த. பீடம்.]*

**ஆதாரவிருக்கை** பார்க்க;

**ஆதார பேதம்** ādāra pēdam, பெ. (n.) **ஆதார வேற்றுமை** பார்க்க; see **ādāra vērrumai.**

*[ஆதாரம் + பேதம்.* **Skt.** bēda > *த. பேதம். பேதம் = வேற்றுமை.]*

**ஆதாரம்** [1] ādāram, பெ. (n.) 1. பற்றுக்கோடு (சேதுபு. கந்த. 86); support, stay, prop. 2. மூலம் ; source. 3. அடிப்படை, அடிப்படைக் காரணம் ; ground, basis. நீர் சொல்லும் பொருளுக்கு ஆதாரம் என்ன? (உ.வ.). 4. அடிப்படைச் சான்று, மூல ஆவணம், பற்றுச்சீட்டு; document, voucher, title deed by which a right to property is established and maintained.

**க., து. ஆதார; தெ. ஆதாரமு.**

Skt. ādhara; Nep. ādhār; Sinh. ādhāraya; Mar., Pali. ādhāra.

*[ஆ + தாரம். ஆ = முதன்மை, அடிப்படை. தாரம் = அரும்பண்டம், பொருள்.]*

**ஆதாரம்**[2] ādāram, பெ. (n.) 1. உதவி ; support. 2.மழை; rain (W.) 3. ஏரி (நாநார்த்த.); tank. 4. பகுதி, பிரிவு; section, chapter. 5. உயிருக்கு ஆதாரமாகிய உடல் ; body forming as it were a support to life. 6. பாத்தி; pan. 7. வாய்க்கால்; canal.

ம. ஆதாரம்.; கொ. ஆதார். Skt. ādhāra; Sinh. ādhāra

*[ஆகு + தரம் = ஆதாரம். தரு → தரம் = வருவழி, மூலம். ஆகு = இயல்கின்ற, முடிகின்ற.]*

ஒன்றற்குச் செயற்பாட்டு மூலமாயிருப்பதும், மழை போன்று தானே மூலமாயிருப்பதும், ஆதாரம் எனப்பட்டது. அடிப்படைத் தலைப்புகள் ஒரு நூலினுட்பிரிவாக இருத்தலும், உலகவாழ்வுக்குப் பேணிக் காக்கப்படும் உடம்பு மூலமா யிருப்பதும், இப்பெயர் பெறக் காரணங்களாயின.

ஆகு + பயன் = ஆபயன் என முதனிலையீறுகெட்டுப் புணர்ந்தாற்போல் ஆகு + தரம் வினைமுதனிலையீறு கெட்டுப் புணர்ந்து வருமொழி முதனீண்டது. ஒ.நோ: ஆகு + வகை = ஆவகை.

**ஆதாரம்**[3] ādāram, பெ. (n.) 1. நிலை; situation. 2. ஆறாதாரம்; (In Indian psychology) six psychic centres in the human body, considered the six pillars of life. 3. ஆதாரம்; basis or base. 4. மூலாதாரம்; psychic centre situated between the anus and the genitals.

து. ஆதார; கொ. ஆதி ; Mar. ādhār.

*[ஆ + தாரம் = ஆதரம் → ஆதாரம். தரம் = வகை, நிலை. ஆ = முதன்மை, அடிப்படை. ஆதாரம் = அடிப்படையான நிலை.]*

**ஆதாரலக்கணை** ādāra lakkaṉai, பெ. (n.) இடவாகு பெயர் (சி.சி. பாயி. குருவகை. ஞானப்.); metonymy, whereby the name of the support is figuratively used for the thing supported.

*[ஆதாரம் + இலக்கணை – ஆதாரவிலக்கணை → ஆதாரலக்கணை. (கொ.வ.)]*

**ஆதாளி** ādāḷi, பெ. (n.) 1. பேரொலி; noise, bustle, roar. "வானோர் பேரியாதாளி யுற நடிக்கும் சிற்பொது" (குற்றா. தல. திருக்குற்றா. 24.). 2. கலக்கம், குழப்பம்; agitation, perturbation, stir (W.) 3. இடம்பப் பேச்சு; boasting, bragging, bravado. "ஆதாளி வாயனை" (திருப்பு. 557). 4. தாமிரத்தை நீறாக்கும் ஒரு மூலிகை; unknown herb said to possess the virtue of calcinating copper. (சா. அக.).

ம. ஆதாளி

*[அதளி → ஆதளி → ஆதாளி.]*

**ஆதாளிக்காரன்** ādāli-k-kāraṉ, பெ. (n.) இடம்பப் பேச்சுக்காரன்; braggart, boaster, vaunter.

*[ஆதாளி + காரன்]*

**ஆதாளித்தல்** ādāḷittal, தொ.பெ. (Vbl.n. ) 1. பேரொலி செய்தல்; making noise. 2. குழப்பம் விளைத்தல்; agitating perturbing. 3. வீம்பு பேசுதல்; boasting. 4. களைப்படைதல், becoming red.

ம. ஆதாளிக்குக

*[அதளித்தல் → ஆதளித்தல் → ஆதாளித்தல். ஆதளி= குழப்பம்.]*

**ஆதாளிமன்னன்** ādāḷi–maṉṉaṉ, பெ. (n.) கரடி; bear.

*[அதளி → ஆதளி → ஆதாளி=குழப்பம். கூச்சலும் குழப்பமும் உண்டாக்கும் இயல்பு பற்றிக் கரடிக்கு ஆதாளி மன்னன் எனப் பெயரிடப்பட்டிருக்கலாம்.]*

**ஆதாளை** ādāḷai, பெ. (n.) ஆமணக்கு; castor-plant. ஆதளை பார்க்க; see ādaḷai,

*[ஆதளை → ஆதாளை.]*

**ஆதானும்** ādāṉum, சு. பெ. (pron.) எதுவாயினும், யாதாயினும்; whatever, whichever. "ஆதானும் செய்ய" (திவ். இயற். பெரியதிருவ. 25.).

*[யாதானும் → ஆதானும்.]*

**ஆதி**[1] ādi, பெ. (n.) 1. தொடக்கம்; beginning, commencement. (திருவாச. 7,1). 2. தொடக்க முள்ளது; that which has a beginning. "வினை ஆதியோ அனாதியோ" (சி.போ. 2,2,3 சிற்.). 3. காரணம்; source, cause. (குறள். 543). 4. பழைமை (பிங்.); antiquity. 5. முதன்மை, தலைமை; first supreme head. எப்பொருட்கும் இறை (பிங்.); independant sovereign, supreme ruler; emperor. 7. கடவுள் (பிங்.); the supreme being, the first, applied esp. to God. 8. கதிரவன்; sun. "ஆதி வெயின் மணிப்பீடம் போன்றான்." (பாரத. கிருட். 164).

ம. ஆதி.

*[அகு → அகுதி → ஆதி. அகு → அகை = முன்வரல், முதலாதல்.]*

பாவாணர், அகராதிக்கு அகரமுதலி எனப் பெயரிட்டார். ஆதி வடதமிழ்ச் சொல்லாதலின் தூய தென்சொல்லான முதலி என்பதை எடுத்தாண்டார். தொல்காப்பியத்தில் முதல் எனப் பொருள்படும் 26 இடங்களில், 25 இடங்களில் முதல் என்னும் சொல்லையும், ஒரே இடத்தில் ஆதி என்னும் சொல்லையும், தொல்காப்பியர் ஆண்டிருக்கிறார். பழந்தமிழ்ச் சான்றோர் அனைவரும் முதலிய, முதல என்னும் பொருளில் ஆதி என்னுஞ் சொல்லைப் பெரிதும் ஆளவில்லை. தமிழிலக்கியங்களில் பெருமளவுக்கு ஆட்சி பெறாததால் அதனைத் தூய தென் சொல்லாகப் பாவாணர் ஏற்றுக் கொள்ளவில்லை.

ஆதி என்னுஞ்சொல் தலைமை, முதன்மை என்று பொருள்படும் வடநாட்டுச் சொல். அதன் வேர் முன்வருதல் கருதிய அகு → ஆ என்னும் வினைமுதலே. இந்தியில் ஆகே என்பது முன்னால் என்று பொருள்படும். மராட்டிய மொழியில் ஆகுதலி என்பது தலைவாழையிலையைக் குறிக்கும். பழங்கன்னடத்தில் ஆதலை என்பது முன்வரிசை என்று பொருள்படும். தெலுங்கில் ஆதிகொனு = முற்படு எனப் பொருள்படும். ஆ என்னும் (சேய்மை) சுட்டுச் சொல்லுக்கும் முன்வரல், மேம்படல், ஆகுதல் எனப் பொருள்படும் அகு → ஆ என்னும் வினைச் சொல்லுக்கும், எவ்வகைத் தொடர்பு மில்லை.

ஆ சேய்மைச் சுட்டெனின் ஆ → ஆது எனத்திரியுமேயன்றி ஆதி எனத் திரியாது. தெலுங்கில் அது → அதி எனத் திரியினும் தமிழ் மரபுக்கு ஏற்றதன்று. முன்மை சுட்டிய முன்னொட்டாகவும் 'ஆ' தமிழில் ஆளப்படவில்லை. ஆ என்னும் முன்மை சுட்டிய சுட்டுச் சொல்லடியாக ஆதி தோன்றி, முந்தைய எனப் பொருள்பட்டதெனின், அண்மை சுட்டிய ஈ என்னும் சுட்டுச் சொல்லடியாக ஈதி என்னும் சொல் தோன்றி பிந்திய எனப் பொருள்பட்டிருத்தல் வேண்டுமன்றோ?

இது போன்றே, தந்தையைக் குறிக்கும் அத்தன் என்னும் சொல் ஆதன் எனத் திரிந்து தலைவனையும் குறிக்கும். சேர மன்னர்களின் பெயர்களில் ஆதனழிசி, ஆதன் ஓரி எனவும் சேரலாதன், வாழியாதன் எனவும் இயற்பெயர்களாகவும், சிறப்புப் பெயர்களாகவும் இச்சொல் வழங்கி வந்திருக்கிறது. குடகு மொழியில் ஆத என்னுஞ்சொல் தலைவன் எனப் பொருள்படுகிறது. தலைவன் எனப் பொருள்படும் ஆதன் என்னுஞ்சொல் ஆதி எனத் திரிந்து தலைவி எனப் பொருள்படும். கரிகாற்சோழனின் மகள் பெயரிலுள்ள (ஆதிமந்தி) முதற்பெயர் ஆதி = தலைவி எனப் பொருள்படும். மந்தி = இளவரசி, ஆதிமந்தி = தலைமையான இளவரசி அல்லது மூத்த இளவரசி. ஆதி என்னும் பெண்பாற்சொல் பெயரெச்சமாகவோ இயற்பெயரல்லாத கூட்டுச் சொல்லின் முன்பின் உறுப்பு களாகவோ வழங்கியதற்கான சான்றில்லை. ஆதி பகவன் என்னும் சொற்றொடரில், ஆதி 'தலைவி' எனப் பொருள் படுவதாயின், அச்சொற்றொடர் அம்மையப்பனாகிய சிவபெருமானையே குறிக்கும். ஆதலின், தலைமை சுட்டிய ஆதி என்னும் பெண்பாற்சொல் பொதுச்சொல்லாயிற்று என்பதை ஏற்கவியலாது. வருதி, போதி என்றாற் போல், ஆதி என்பது ஏவல்வினையாகப் பொருள்படுமேயன்றி வேறு வகையாகத் தமிழில் பொருள்படுமாறில்லை.

இனி, மிகுதி → மீதி, பகுதி → பாதி எனத் திரிந்தது போன்று, அகுதி — ஆதி எனத் திரிந்ததாகக் கொள்ள இடமுண்டு. அகுதி என்னும் சொல் முன்வந்தது முதன்மையானது எனப் பொருள்படும். அகு → அகுதி = முன்னாலிருப்பது, மேலே இருப்பது, முதலாவது. அகுது, அகுதை என இயற்பெயர் கொண்டவர்களும் பழந்தமிழகத்தில் வாழ்ந்திருக் கின்றனர். இந்த அகுதி பெண்பாற் சுட்டியதன்று, முதன்மை மட்டும் சுட்டியது. அகு என்னும் வினைச்சொல் அகலெ (அடுத்து முதலாக வருவது) என இந்தியில் திரிந்து, இனியடுத்த முதன்மையது எனப் பொருள்படுதலை ஒப்பிட்டு நோக்குக. எனவே, அகுதி → ஆதி எனத் திரிந்து, முதன்மை சுட்டிய சொல்லாக வடநாட்டு மொழிகளில் வழங்கி, பிறகு வடமொழியிலும் பெருக ஆட்சி பெற்றிருக்கிறது என அறியலாம். மிகு என்னும் வினையும் மிகுதி என்னும் பெயரும் தமிழில் பண்டுதொட்டு ஆட்சி பெற்றிருப்பதுபோல், அகு என்னும் வினையும், அகுதி என்னும் பெயரும் தமிழ்ச்சொற்களாயினும் தமிழில் பெருகிய ஆட்சி பெறவில்லை. ஆதலின் அதன் திரிபான ஆதி என்னும் சொல்லைத் தமிழில் தோன்றி வளர்ந்த தனித்தமிழ்ச் சொல்லாகக் கொள்ளவியலாது. மிகுதி என்பதை நோக்க மீதி என்பது திரிபு வடிவமே; செந்தமிழ் வடிவமன்று. ஆதி என்பது வடநாட்டில் தோன்றி வளர்ந்து பெற்ற வடிவத்தைத் தமிழ்நாட்டிலேயே தோன்றி வளர்ந்து பெற்றிருப்பினும் அதனைத் திரிபு வடிவம் என்பதல்லது செந்தமிழ் வடிவம் எனக் கொள்ளலாகாது.

இனி, சூராதி சூரன், தேவாதி தேவன் என்னும் தொடர்களில் ஆதி என்னும் சொல், (அதி = மிகுதி) சூரன் + அதி + சூரன் = சூராதி சூரன் எனத் திரிந்த திரிபாதலின் அது வினாவன்று. ஆதி என்பது தமிழ்ச் சொல்லேயென வற்புறுத்திய தமிழன்பர்கள் பலரும் முன்மை சுட்டிய 'ஆ' என்னும் இடைச் சொல்லையே சான்று காட்டினர். வினையடியாகத் தோன்றிய பெயர்ச்சொல் வடிவத்தை அவர்கள் வரையறுக்க வில்லை. அவர்கள் கூற்றின் வண்ணம், போகு → போது எனத் திரிவது போல் ஆகு → ஆது எனத் திரிந்ததாயின், ஆது என்னும் வினையின் முக்காலப் புடைபெயர்ச்சி தமிழில் யாண்டும் காணப்படவில்லை. ஆயின், ஆதி என்னுஞ்சொல் மிகப் பழைய காலத்தையும், மிக முந்தைய நிலையையும் குறித்த பெயர்ச்சொல்லாகப் பெருக ஆளப்பட்டுள்ளது. இப் பெயர்ச் சொல் வடிவமே முந்தைய எனப் பொருள்படும் பெயரெச்சப் பொருளையும், இச் சொல்லுக்குத் தந்தது. ஆதலின் பெயர்ச்சொல் பொருளே இதன் முழுமையான பொருள். ஆதி, செந்தமிழ்ச் சொல்லாயின் தலைமையையும் முதன்மையையும் ஆகிய பொருள்களைச் சுட்ட வேண்டு மேயன்றி, காலத்தால் முற்பட்ட பழமையைச் சுட்டுவது காலத்தின் கோலத்தால் ஏற்பட்ட வழிநிலைப் பொருளேயன்றி முதற்பொருள் ஆகாது. பழையது என்னும் சொல் பழமையைக் குறிக்குமேயன்றி தலைமையையும், முதன்மையையும் குறிக்காது. தொன்மை என்னும்சொல்லும் இவ்வாறே. முதன்மை என்று பொருள்படும் சொல் மட்டும் காலத்தால் முற்பட்ட நிலைமையையும் அகவையால் மூத்த தலைமையையும் குறிக்கும். முன்னவன் என்னும் சொல்லை ஒப்பு நோக்குக. எனவே, ஆதி என்பது முதன்மை சுட்டிய பிறகே பழமையைச் சுட்டியிருக்கிறது என்பது போதரும்.

தமிழில் முதன்மை சுட்டிய பொருளே ஆட்சியில் பெருகி வழங்கியிருக்கிறது. பழமை சுட்டிய பொருள் வடநாட்டு மொழிகளில் இச்சொல்லுக்கு ஏற்றப்பட்டிருக்கிறது. ஆதலின், முன்மை சுட்டிய பிறகு முதன்மையையும் தலைமையையும் சுட்டிய ஆதி என்னும் தனிச்சொல் வடநாட்டிற்குச் சென்று வடநாட்டில் பழமைப் பொருளில் திரிந்ததால் அதனை (பிராகிருத

முதலிய வடதமிழ்) வடநாட்டுச் சொல்லென்று பாவாணர் வரையறுத்தார்.

தமிழிலுள்ள பெயரெச்சங்கள் அனைத்தும் அகர வீறு கொண்டவை. முதல, எளிய, வலிய, நல்ல என்பவற்றை ஒப்பு நோக்குக. 'ஆதி' தமிழிலக்கணக் கட்டுக்கோப்புக்குள் தோன்றி வளர்ந்த சொல்லாயின், ஆதிய என்றாற்போல் அகரவீற்றுப் பெயரச்சமாயிருத்தல் வேண்டும். இகரவீற்றுப் பெயரெச்சம் தமிழில் யாண்டும் ஆளப்படவில்லை. இகரவீற்றுப் பெயர்கள் பெயரச்சம் போல் முன்னுறுப்பாகிக் கூட்டுச் சொல்லாகுமிடத்து கோடி + கரை = கோடிக்கரை. மீதி + பணம் = மீதிப்பணம் என்றாற்போல் வல்லெழுத்து மிகுதல் வேண்டும். ஆதி பகவன் என்னும் கூட்டுச் சொல்லில் வல்லெழுத்து மிகுதல் வேண்டும். ஆதிபகவன் என்னும் கூட்டுச் சொல்லில் வல்லெழுத்து மிகாமை அறிக. இஃதொன்றே அதனை வடபுலச்சொல்லெனக் காட்டவல்லது.

வடமொழியில் **ādi** - beginning, commencement, first எனப் பொருள்படுகிறது.. இந்திராதி தேவர் என்றவிடத்து இந்திரன் முதலாகிய தேவர் எனப் பொருள்படும். தமிழிலும் ஆகிய என்னும் சொல் முதலிய என்னும் பொருளில் ஆளப்படுகிறது. வளர்தல், மேம்படல், ஆகுதல் எனப் பொருள்படும் அகு →ஆகு வினை வடிவே ஆதி என்னும் வடசொல்லின் மூலம் என்பதும் பெயர் வடிவம் வடபுல மொழி வழித்தென்பதும் இதனாலும் போதரும்.

வடமொழி தவிர்ந்த மேலையாரிய மொழிகளில் ஆதி என்னும் சொல்லாட்சி காணப்படவில்லை. வடதமிழ்ச் சொல் மூலமே வடமொழியில் ஆதி என வடிவு கொண்டுள்ளது. இது முன்னால் அல்லது முதலிலிருப்பதைக் குறித்த அஃறிணை யொருமைச் சொல்லாக வழக் கூன்றியதால், காரி = கருத்த காளையைக் குறித்ததுபோல், ஆதி = மேலிருக்கும் பொருள்; முன்னால் அல்லது முதலிலிருக்கும் பொருளை அல்லது உயிரியைச் சுட்டியதாதல் வேண்டும்.

காரி, குறிப்பிட்ட கரிய காளையை அல்லது கரிய வேறு பொருளைச் சுட்டும்போது மட்டும் அவ்வடிவு கொள்ளும், காரிப்புள், காரிக்கிழார் என்பவற்றை ஒப்புநோக்குக. கன்னங் கரேலென்றிருக்கும் தன்மையை முழுமையாக விளக்க, காரி பெயர்வடிவுபெற்றது. இனி, பல்வகை நிறவேறு பாடுகளிலிருந்து கரிய நிறத்துப் பொருளைப் பிரித்துக் கூறவேண்டிய விடத்துக் கருஞ்சீரகம், கருமணி, கரியவிழி எனப் பண்பீறும், குறிப்புப் பெயரெச்ச வீறும் கொள்ளும். அங்ஙனம் பொதுப்பொருளில் ஆதி என்னும் சொல் கரிய என்றாற் போல், தமிழில் ஆதிய எனக் குறிப்புப் பெயரெச்சமாகாததால் அது வடபுலச் சொல்லே எனத் தெளிக.

ஆதி என்னுஞ்சொல் முதல், முதலிய, முதலில் என்னும் பொருளில் கல்லாத மக்களின் பேச்சு வழக்கில் இன்றுகாறும் இடம்பெறவில்லை. மண்ணுக்குரிய சொல்லாயின் மக்களிடை யன்றோ வழங்கியிருக்க வேண்டும்.

சொல், வடிவத்தால் முற்றும் தமிழாயும் பொருளாட்சியில் தமிழகத்தில் தோன்றிய பொருளல்லாமல், ஏனைய திரவிட நாடுகளிலோ அல்லது வேற்று மொழிச்சூழல்களிலோ வளர்ந்து பொருள் கொண்ட சொல்லைத் தமிழ்ச் சொல்லாக ஏற்றுக் கொள்வதில்லை. சொல்லும் பொருளும் ஒத்திருந்து தமிழில் வழங்குமாறு பிற திரவிட மொழிகளில் வளர்ந்திருந்தால் அவற்றையும் தமிழ்ச் சொல் என்று ஏற்றுக்கொள்கிறோம். இல், மனை, வீடு ஆகியவை தமிழிலும் திரவிட மொழிகளிலும் ஒத்து வழங்குகின்றன. இல் என்பதைத் தெலுங்குச்சொல் என்றும், மனை என்பதைக் கன்னடச்சொல் என்றும் நாம் சொல்வ தில்லை. ஆயின், உறை என்பது தங்கியிருக்கின்ற வீட்டைக் குறித்த சொல்லாயினும் தமிழில் வீடு என்னும் பொருளில் பேச்சு வழக்கிலும் எழுத்து வழக்கிலும் பரவலாக இடம் பெறவில்லை. உறை என்பது இல், மனை போன்ற சொற்களைப் போன்றே மனைவியையும் குறிக்கலாம். பிராகுவி மொழியில் உறை என்பது வீட்டையும், பாசுகு மொழியில் உறை என்பது மனைவியையும் குறிக்கும் சொல்லென ஒப்பமுடிந் தாலும், , தமிழ் உலக வழக்கிலும் இலக்கிய வழக்கிலும் உறை என்னும் சொல் மனைவி என்னும் பொருளில் பாசுகு மொழிக்குச் சென்ற தமிழ்ச்சொல் என்று சொல்வதல்லது செந்தமிழ் நாட்டுச் சொல்லென்று எவரும் கூறார்.

ஆதி என்பது வேரளவில் தமிழுக்குத் தன் சொல் லாயினும், தென்சொல்லன்று என்பதைப் பாவாணர் உறுதிப் படுத்தினார்.

**ஆதி** [2] ādi, பெ. (n.) ஆதிதாளம் (இசை); particular variety of time measure (Mus).

*[ஆ → ஆது → ஆதி (முன்னையது, முந்தியது) முதலாவதாக எண்ணிடப்பட்ட தாளவகை.]*

**ஆதி**[3] ādi, பெ. (n.) குதிரையின் நேரோட்டம்;running of a horse in a straight course. "அடிபடு மண்டிலத் தாதி போகிய" (மதுரைக். 390).

*[ஆ → ஆது → ஆதி. ஆதுதல் = முன்வரல். முற்படல், விரைதல், ஆது என்றே முதனிலைத் தொழிற் பெயராக நிற்றற்பாலது. ஈற்றுகரம் இகரமாகத் திரிந்தது. ஒ. நோ. ஆதர்பாதையாக ஓடுகிறான் (கொங்.வ.).]*

**ஆதி** [4] ādi, பெ. (n.) மனவருத்தம், கவலை, mental. pain, agony. ஆதிவியாதி (ஞானவா. தேவ. பூ. 49.).

*[அதை → ஆதை → ஆதி. அதைத்தல் = பதைத்தல், வருந்துதல், வேதல். ஒ. நோ. ஆதை → ஆதங்கம். (வருத்தம்).]*

**ஆதி**[5] ādi, பெ. எ. (adj.) 1. முதலிய (முதலியன); and others beginning from. "இருக்காதி மறை மொழிந்தோன்" (பாரத. சிறப்பு. 23.).

*[ஆகு → ஆகிய → ஆதிய → ஆதி.]*

**ஆதி** [6] ādi, பெ. (n.) வெள்ளிமீன்; Venus. 2. நாரை, crane. (நாநார்த்த).

*[ஆதி [4] = வெண்மை.]*

**ஆதிக்கம்** ādikkam, பெ. (n.) தலைமை ; power, superiority. "ஆதிக்க நல்கினவராரிந்த மாயைக்கு" (தாயு. மௌன. 3.). 2. உரிமை; right to possession. (W.).

*[ஆதி → ஆதிக்கம் > Skt. ādhikya.]*

**ஆதிக்கல்** ādi-k-kal, பெ. (n.) இரும்பு ; ancient stone i.e. iron. (சா.அக.).

*[ஒருகா. ஆழ்தி + கல் – ஆழ்திக்கல் → ஆதிக்கல். ஆழ்திக்கல் = ஆழத்திலுள்ள கல், இரும்பு. இனி பழங்காலக் கல் என்றுமாம். ஒ. நோ. ஆதிக்கொடி = நஞ்சுக்கொடி, முன்பே இருந்த கொடி, முன்னுள்ள கொடி.]*

**ஆதிக்குரு** ādi-k-kuru, பெ. (n.) பூவழலை (மூ .அ.); fuller's earth.

*[ஆதி + குரு.]*

**ஆதிக்கொடி** ādi-k-kodi, பெ. (n.) நஞ்சுக்கொடி, தாயையும் குழந்தையையும் தொடர்புறுத்தும் கொப்பூழ்க்கொடி ; the after birth which is developed during pregnancy. It connects the mother and the foetus by means of the umbilical cord. (சா. அக.).

*[ஆதி + கொடி.]*

**ஆதிகம்** ādigam, பெ. (n.) சிறுகுறிஞ்சா; creeper Indian Ipecacuanha. (சா. அக.).

**ஆதிகாரணம்** ādi-kāranam, பெ. (n.) முதற்காரணம்; primary cause. (நன் . 58.உரை .).

ம. ஆதிகாரணம் ; க. ஆதிகாரண

*[ஆதி + காரணம்.]*

**ஆதிகாலம்** ādi-kālam, பெ. (n.) பண்டைக்காலம்; remote past. "எனை யாதி காலர் தனிலளித்த" (கந்தபு . அயனச்சிறைபுரி.7.).

**ஆதித்தன்**[1] ādittan, பெ. (n.) 1. கதிரவன்; sun. 2. சோழ மன்னர்களின் இயற்பெயர்களுள் ஒன்று; proper name of the Chola kings. 3.சோழர்களின் குடிப்பெயர்; a clan name of the Chola dynasty. **ஞாயிற்றன்** பார்க்க ; see ñāyirran.

*[ஞாயிறு (கதிரவன்) → ஞாயிற்றன் → ஆயிற்றன் → ஆயித்தன் → ஆதித்தன். ஞாயிற்றுச்சோழன், புகழ் ஞாயிற்றுச் சோழன் மகன், போன்ற சொல்லாட்சிகள் சோழர்க்கு ஞாயிற்றன் என்பது இயற்பெயராகவும் குடிப்பெயராகவும் விளங்கியதைத் தெற்றெனக் காட்டும். ஞாயிற்றன் என்னும் சொல்லை ஒலிக்க முடியாத வடபுலத்தார் ஞாயிற்றன் → ஆயித்தன் → ஆதித்தன் எனத்திரித்துக் கொண்டனர். இன்றும் ஞாயிற்றுக்கிழமை என்னும் சொல் கன்னடத்தில் 'ஆயித்து வார' என்றும் தெலுங்கில் 'ஆதித்த வாரமு' என்றும் திரிந்துள்ளதைக் காணலாம்.]*

**ஆதித்தன்**[2] ādittan, பெ. (n.) உவர்மண்; fuller's earth.

*[ஆதி = வெண்மை.]*

**ஆதித்தர்** ādittar, பெ. (n.) **ஞாயிற்றர்** பார்க்க; see ñāyirrar

**ஆதிதாளம்** ādi-tālam, பெ. (n.). தாளவகை (பாரத. தாள.3.); variety of time measure consisting of eight aksara kalas, a sub-variety of tiripudai tālam also one of the upa tālam.

ம. ஆதிதாளம்.

*[ஆதி + தாளம்.]*

**ஆதி திராவிடன்** ādi-dirāvidan, பெ. (n.) பழந்தமிழன் பார்க்க; see palantamilan.

**ஆதிபகவன்** ādi-bagavan, பெ. (n) முதற்பொருள், முழுமுதற் கடவுள்; God, the first cause. "ஆதிபகவன் முதற்றே உலகு" (குறள். 1.).

*[ஆதி + பகவன், ஆதி = மூலம், முதல்; பகவன் = கடவுள்.]*

அனைத்துச் சமயக் கோட்பாடுகளையும் அறிந்திருந்த வள்ளுவப் பெருந்தகை, தமிழ்க்கடவுளாகிய சிவனையும் முருகனையும் குறிப்பிடாமல், ஆதிபகவனைக் குறிப்பிட்டதன் நோக்கம் பொதுமை நெஞ்சம் வேட்ட புதுமை எனலாம். பிராகிருத மொழியில் பகலவனை பக்கர் (Bhakkar) என வழங்குவர். தொடக்கத்தில் கதிரவனைக் குறித்த பகவன் என்னும் பெயர், நாளடைவில் கடவுளைக் குறிக்கும் பொதுச் சொல்லாயிற்று. (பகலவன் →பகவன்). கடவுளைக் குறிக்கும் தமிழ்ச் சொற்கள் பலவிருப்பினும் ஆதிபகவன் என்னும் பிராகிருத சொல்வடிவத்தைத் திருவள்ளுவர் உவந்ததன் நோக்கம், புறச்சமயங்களின் பெருக்கால், இச் சொல்லாட்சி பெருக வழக்கூன்றியது என்பது மட்டுமன்றி, தனித்த தெய்வப் பெயர் எதுவும் காட்டாமல் உலகமக்கள் அனைவர்க்கும் பொதுவாகப் புலனாகும் 'மூலமுதற் கடவுள்' என்னும் பொருளை இச்சொல்லாட்சி உள்ளடக்கியிருப்பதே எனலாம்.

**ஆதிமந்தி** ādimandi, பெ. (n.) கரிகாற்சோழனின் மகள், ஆட்டனத்தியின் மனைவி; daughter of the Chola King Karikāla, and wife of the Chola Prince Attanatti.

*[மந்து = அரசன். மந்தி= அரசி. ஆதி+மந்தி. ஆதி[1] பார்க்க; see ādi[1]. ஆதிமந்தி = மூத்த இளவரசி. ஒ.நோ: மன் → மந்து, முன் →முந்து.]*

**ஆதிமுதல்** ādi-mudal, வி.எ. (adv.) தொடக்க முதலாக; from the beginning. ஆதிமுதல் எல்லாவற்றையும் சொன்னான் (உ.வ.).

*[ஆதி + முதல்.]*

**ஆதிமூலம்** ādi-mūlam, பெ. (n.) 1. முதற்காரணம்; primitive cause. 2. கடவுள்; supreme being God, that which is the primeval cause.

க. ஆதிமூல

*[ஆதி +மூலம்.]*

**ஆதியங்கடவுள்** ādiyaṅ-kaḍavuḷ, பெ. (n.). 1. முதற் கடவுள்; God who has existed from the first. 2. அருகன்; arhat.

*[ஆதி + அம் + கடவுள்.]*

**ஆதியந்தணன்** ādi-y-andaṇaṉ, பெ. (n.) நான்முகன்; god of Creation.

*[ஆதி + அந்தணன்.]*

**ஆதியாழ்** ādi-yāḻ, பெ. (n.) ஆயிரம் நரம்புள்ள யாழ் (பிங்.); original lute with 1000 strings.

*[ஆதி + யாழ்.]*

**ஆதியுலா** ādi-y-ulā, பெ. (n.) சேரமான் பெருமாள் இயற்றிய முதல் உலா நூல், திருக்கயிலாய ஞான உலா (திருவாரூ. அவை.); poem by Cēramāṉ - Perumal reputed to be the first ulā in Tamil language.

*[ஆதி + உலா.]*

**ஆதியெழுத்து** ādi-y-eḻuttu, பெ. (n.) முதலெழுத்துகள்; primary letters. (பேரகத். 8. உரை).

*[ஆதி + எழுத்து. ஆதி = முதல்.]*

**ஆதிரம்** ādiram, பெ. (n.) நெய் (பிங்.); clarified buttter, ghee.

*[ஒருகா. ஆ + திரம். ஆ = ஆன் (பசு). திரம் = திரண்ட வெண்ணெய், நெய்.]*

**ஆதிரன்** ādiraṉ, பெ. (n.) பெரியோன் (அக.நி); great person.

*[ஒருகா. ஆதன் → ஆதரன் → ஆதிரன்.]*

**ஆதிரை**[1] ādirai, பெ. (n.) திருவாதிரை; sixth naksatra.

*[ஆதிரை > Skt. ārdra.]*

**ஆதிரை**[2] ādirai, பெ. (n.) சாதுவன் மனைவி; wife of Śaduvaṉ. "ஆதிரை நல்லாள் ஆங்கது கேட்டு" (மணிமே. 16.22.).

*[ஆதிரன் (ஆ.பா.) → ஆதிரை (பெ.பா.).]*

**ஆதிரைப்பிள்ளையார் நோன்பு** ādirai-p-piḷḷaiyār-nōṉbu, பெ. (n.) பழைய வரிவகை; ancient tax (Pudu. insc. 399).

*[ஆதிரை+ பிள்ளையார் + நோன்பு.]*

**ஆதிரை முதல்வன்** ādirai-mudalvaṉ, பெ. (n.) சிவன் (பரிபா. 8,6); Śiva, presiding deity of the sixth nakṣatra.

*[ஆதிரை + முதல்வன்.]*

**ஆதிரையான்** ādiraiyāṉ, பெ. (n.) சிவன், ஆதிரை முதல்வன்; Śiva, the God supreme. "ஆதிரையான் ஆதிரையான் என்றென்ற யருமால்" (முத்தொள். காப்பு.).

*[ஆதிரை + ஆன்.]*

**ஆதிவாசி** ādi-vāsi, பெ. (n.) பழங்குடியினர், முதன் முதல் தோன்றி வாழ்ந்தவர்; aborigines, original inhabitants of a country.

ம., க. ஆதிவாசி.

*[ஆதி + வாசி.]*

**ஆதிவாயிலார்** ādivāyilār, பெ. (n.) பரதசேனா பதீயம் என்னும் நாடகத் தமிழ் நூலாசிரியர் (சிலப். உரைப்பாயி.); author of the Barata-Sēṉāpadīyam, a treatise on drama.

*[ஆதிவாயில் + ஆர். ஊரின் பெயரால் பெயர்பெற்ற புலவர்.]*

**ஆது-தல்,** ādu-, 12 செ.குன்றாவி (v.t) ஆதல்;to come into existence, happen, occur, become, flourish. "ஆஅதுமென்னுமவர்" (குறள்.653) (நாலடி. 181-3, 359-1).

*[உல் → உ= முன்வரல், தோன்றுதல், வளர்தல், பெரிதாகல். உல் → உ → ஊ → ஒ → ஆ. ஆ = முன்வரல், தோன்றுதல், வளர்தல், பெரிதாகல், செழித்தல். ஆ → ஆது. ஒ.நோ. போ → போது.]*

ஊது, போது, காது, மோது என்றாற்போல் 'ஆது' ஏவலொருமை வினை முற்றாம். ககரம் தகரமாகத் திரிந்து ஆகு → ஆது ஆயிற்றெனின், அது சாலாது. ககரம் வகரத்தின் திரிபாவதன்றித் தகரத்தின் திரிபாகாது. உண்கு, காண்கு என 'கு' ஏவலொருமையீறானது போன்றே போது, மோது, அருந்து, திருந்து என 'து' ஏவலொருமையீறாயிற்று.

**ஆது**[1] ādu, பெ. (n.) தெப்பம் (வின்.); raft.

*[ஆ = முன்செலற்கருத்துக் குறிப்புச் சொல். ஊ → ஒ → ஆ. ஆது = துடுப்புகளால் உந்தப்பட்டு மெல்லச் செல்லும் தெப்பம்.]*

**ஆது**[2] ādu, இடை. (int.) பாகர் யானையைத் தட்டிக் கொடுக்கும்பொழுது கூறும் ஒரு குறிப்புச் சொல் (சீவக.1834); expression which a mahout uses while patting and quietening an elephant.

*[ஆ → முன்செலற்கருத்துக் குறிப்புச் சொல். ஊ → ஒ → ஆ → ஆது.]*

**ஆது**[3] ādu, இடை. (part.) ஆறாம் வேற்றுமைஉருபு; gen. ending followed by an impers. sing. எனாது. தனாது (நன்.330, உரை).

*[அது (ஆறனுருபு) → ஆது. முதனீட்டம் செய்யுட்டிரிபு.]*

**ஆதுலம்** ādulam, பெ. (n.) கள் (சித்.அக.); toddy. ஆதுவம் பார்க்க; see āduvam.

**ஆதுவம்** āduvam, பெ. (n.) 1. கள்; toddy. 2. பனங்கள்; palmyra toddy.

*[ஒருகா. ஆ = முன்வரற்கருத்துக் குறிப்புச் சொல். ஆ → ஆது = முன்வரல், சுரத்தல், கள்ளூறுதல். ஆதுவம் = பாளையிலிருந்து சுரந்த கள்.]*

**ஆதொண்டை** [1] ādoṇḍai, பெ. (n.) காற்றொட்டிக் கொடி எனப்படும் முட்செடி; thorny creeper.



ஆதொண்டை – காற்றொட்டிக் கொடி

**மறுவ.** ஆதண்டன், ஆதொண்டன், காற்றொட்டி.

*[அல் + தொண்டை → ஆதொண்டை = தொட முடியாதது (கட்டுவதற்கும் பயன்படாதது) தொள் → தொண்டு (தொடு) → தொண்டை.]*

**ஆதொண்டைக்கோவேந்தன்** ādoṇḍai-k-kōvēndaṉ, பெ. (n.) தொண்டை மண்டலத்தை யாண்ட முதலரசன்; name of a ruler of Kanchi reputed to be the first of the Toṇḍaimāṉ line.

*[ஆதொண்டை + கோவேந்தன்.]*

சோழன் கரிகாலனுக்கு நாகக்கன்னி வயிற்றுப் பிறந்த மகன் (பறவைகள் தீண்டாமலிருக்க) ஆதொண்டைக் கொடியால் சுற்றப்பட்டு, கடல்வழி கரை சேர அனுப்பப்பட்டான் எனவும், அவனே தொண்டை மண்டலத்தின் முதன்மன்னனாய் முடிசூடி ஆதொண்டைக் கோவேந்தன் ஆயினன் எனவும் கூறுவர்.

**ஆதொண்டைச்சக்கரவர்த்தி** ādoṇḍai-c-cakkaravartti, பெ. (n.) **ஆதொண்டைக்கோவேந்தன்** பார்க்க; see ādoṇḍai-k-kōvēndaṉ.

**ஆந்தம்** āndam, பெ. (n.) பழமரங்களைத் திருடர் திருடாமல் இருக்கப் பயன்படுத்தும் ஆணி; spike to perserve fruit-trees from thieves. 2. பெரிய இரும்பாணி; large iron nail (சேரநா.).

*[அந்து → அந்தம் → ஆந்தம்.]*

**ஆந்தரங்கம்** āndaraṅgam, பெ. (n.) 1. மந்தணம் (இரகசியம்); secret. "வேதவாய்மை யாந்தரங்கம் வெளிசெய்வான்" (சேதுபு. கடவு.2). 2. நெருங்கிய நட்பு; intimate friendship. "ஆந்தரங்கமாஞ் சுற்ற நீ" (கந்தபு. கந்தவி. 55).

*[அகம் + தரம் – அகந்தரம் → ஆந்தரம். ஆந்தரம் → ஆந்தரங்கம்.]*

**ஆந்தரம்** பார்க்க; see āndaram

**ஆந்தரம்** āndaram, பெ. (n.) 1. உள்ளேயிருப்பது; that which is internal. 'இவன் ஆந்தரமான அந்தகாரத்தைப் போக்கிக் கொண்டாயிற்று இருப்பது (ஈடு, முதல், ஸ்ரீ யக்பதி, பக். 72). 2. மந்தணம் (இரகசியம்); secret. "ஆந்தரஞ்சொல்லி அரிய மகன்றனக்கு" (ஆதியூரவதானி, 25).

**H.** andar. **Skt.** antara. **ம.** ஆத்த

*[அகம் + தரம் = அகந்தரம் → ஆந்தரம். அகம் =மனம்; தரம் → தரவு, தருதல். மனத்தகத்தே தந்த செய்தி (இரகசியம்)].*

வடமொழியில் உள்ளே, இடையில் என்று பொருள்படும் அண்தர (antara) என்னும் சொல்லுக்கு வேர்மூலம் கூறப்படவில்லை. எல்லை, முடிவு எனப் பொருள்படும் அண்த (anta) என்னும் சொல்லிலிருந்து ஆன்தர (antara) பிறந்திருக்க முடியாது. அண் + தரம் – அந்தரம் (வானம்) என்னும் தமிழ்ச் சொல் வடமொழியில் புகுந்தது போல், அகம் + தரம் – ஆந்தரம் (உள்ளேயிருப்பது, உட்பகுதி) என்னும் தமிழ்ச் சொல்லும் வடமொழியிலும் வட நாட்டு மொழிகளிலும் பெரிதும் வழங்குவதாயிற்று.

**ஆந்தராளிகன்** āndarāḷigaṉ, பெ. (n.) நடுவர் (ஈடு. 10,9,4); mediator, umpire.

*[ஆந்தரம் + ஆளி + கன் = ஆந்தராளிகன். ஆள் → ஆளு → ஆளுவன் → ஆளுகன் → ஆளிகன். ஆந்தராளிகன் = மந்தணமான செய்தியை வெளியில் எவருக்கும் தெரியாமல் ஒளித்து வைத்திருப்பவன்.]*

**ஆந்திரம்** [1] āndiram, பெ. (n.) 1. குடல்; bowels, entrails. 2. சாவு; death. 3. உட்புறத்தைப் பற்றியது; that which refers to the inside as opposed to outside. (சா.அக.).

*[அகம் + தரம் – அகந்தரம் → ஆந்தரம் → ஆந்திரம் = உள்ளேயிருப்பது, வயிற்றுள்ளிருக்கும் குடல்.]*

**ஆந்திரம்** [2] āndiram, பெ. (n.) 1. தெலுங்கு நாடு; Telugu country. 2. தெலுங்கு மொழி; Telugu language.

**Skt.** āndhra

*[அண்டிரன் → ஆந்திரன் → ஆந்திரம்.]*

**ஆந்திரன்** āndiraṉ, பெ. (n.) தெலுங்கன். (சி.சி.2,61 சிவாக்); Telugu people, Andhra, native of Andhra.

*[அண்டிரன் → அந்திரன் → ஆந்திரன்.]*

ஆண்டகைமை வாய்ந்த ஒருசார் சேரர்குடி முன்னோர் அண்டிரன் என்பானின் குடிவழியினர். ஆண் + திறல் = ஆண்டிறல் → ஆண்டிரன் எனவும் மருவியிருக்கலாம். சேரக்கிளை மொழிகளுக்கும் ஆந்திரரின் தெலுங்கு மொழிக்குமுள்ள அடிப்படைச் சொல்லொப்புமைகளும், மாந்தவியலடிப் படையான பழக்க வழக்க பண்பாட்டுத் தொடர்புகளும் இயற்பெயர் தொடர்புகளும், ஆந்திரர் சேரக்கிளை மரபினரே என்பதை வலியுறுத்தும். பொறையன்

என்னும் சேரருக்குரிய பெயர், ஆந்திரநாட்டு அரசர் பெயராகவும், வசந்த பொறி (பொறையன் தேவி) அரசியர் பெயராகவும், இருத்தலை ஆந்திரநாட்டுக் கல்வெட்டுகள் வலியுறுத்துகின்றன. ஆந்திரர் என்பது குடிவழி பெற்ற பெயர். உயர் வகுப்பு ஆரியனுக்கும் தாழ்வகுப்புத் திரவிடப் பெண்ணுக்கும் பிறந்த கலப்பினத்தார் ஆந்திரர் எனப் பெயர் பெற்றதாக வடநூலார் கூறும் கூற்று மெய்யன்று. ஆந்திரக் குடிமக்கள் அனைவரும் வடிவாலும், பண்பாடு, பழக்க வழக்கங்களாலும், மொழியாலும் திரவிடராய் பண்டு தொட்டு நிலைத்திருத்தல், அவர் தூய தமிழ்க் குடி வழியினர் என்பதை நாட்டுதற்குப் போதிய சான்றாம்.

**ஆந்து** āndu, பெ. (n.) பிணையம்; bail. (கருநா.)

*[ஆல் → ஆன் → ஆந்து. ஆனுதல் = சேர்த்தல், பிணைத்தல்.]*

**ஆந்துகல்** āndu-kal, பெ. (n.) 1. தலைச்சுமையை இறக்கி வைக்க நட்டிருக்கும் கல்; platform erected on the road side to rest burdens. 2. திரிகைக்கல் (இயந்திரம்); handmill (கருநா.).

*[அந்து → ஆந்து. (நன்கு பொருந்துதல், உறுதல்) ஆந்து + கல்.]*

**ஆந்தை**[1] āndai, பெ. (n.) 1. ஓர் இயற்பெயர் (தொல். எழுத். 345 உரை); ancient name. "ஆந்தை யடியுறை எனினே" (புறநா.67-12). "**மன்னெயி லாந்தையும்**" (புறநா.71-1). 2. எயிலியூர்க்குத் தலைவன்; ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியனுக்கு நண்பன்; chief of Eyiliyūr, and friend of Pūda-P-Pāndiya,

*[ஆதன் + அந்தை - ஆதந்தை → ஆந்தை. அத்தன் → அத்தை → அந்தை.]*

ஆதன் என்னும் இயற்பெயர் முன்னர் தந்தை முறைப்பெயர் வரின், நிலைமொழியீற்றெழுத் திரண்டும் வருமொழி முதலுங்கெட, ஆதன் + தந்தை (ஆத் + அந்தை) ஆந்தை எனப் புணரும் எனத் தொல்காப்பியர் நெறியிட்டிருக்கிறார்.

இயற்பெயர் முன்னர்த் தந்தை முறைவரின்
முதற்கண் மெய்கெட அகரம் நிலையும்
மெய்யொழித் தன்கெடும் அவ்வியற் பெயரே
.....(தொல்.எழுத். 348)

ஆதனும் பூதனும் கூறிய இயல்பொடு
பெயரொற்றகரந் துவரக் கெடுமே
..... (தொல்.எழுத். 349)

தொல்காப்பியர் காலத்தில், ஆதன் பூதன் என இயற்பெயர் கொண்டோர் பலராக விருந்தமையின், பல்கால் மக்கள் நாவில் இடம்பெறும் கூட்டுச் சொற்கள் குறுகி, மரூஉச் சொல்லாகும் உலகியல் பற்றி, ஆந்தை பூந்தை என்னும் மரூஉச்சொற்கள் தோன்றியிருக்கலாம்.

தந்தை முறைப்பெயர், ஆதனுக்குப் பின்னடைமொழியாய் தந்தைபோல்வானாகிய ஆதன் என வழங்கியதா அல்லது ஆதனின் தந்தையையே குறித்ததா என்று வினாவெழுகின்றது. ஆதன் தந்தைக்கு ஏற்கனவே குமரன் என ஓரியற் பெயரிருக்குங்கால், ஆதன் தந்தை குமரன் என இயற்பெயர் சேர்ந்தே வருதல் முறை. அது ஆந்தைக்குமரன் என வழங்கியிருத்தல் வேண்டும். அல்லாக்கால் இன்னாரின் மகன் எனத் தந்தையால் மகன் அறியப்படும் முறையே உலகியல்பாயிருக்க, இன்னாரின் தந்தையென மகனால் தந்தையறியப்படும் ஒரு வழக்கம் தமிழரிடையிருந்தது எனக் கொள்ள நேரும். பண்டைத் தமிழிலக்கியப்பரப்பில், மகனொடு சார்த்தித் தந்தையை யறியும் சொல்லாட்சிகளைக் காணக் கூடவில்லை. "சேரலன் மருக, சோழன் மருக" எனப் பிறங் கடையரை முன்னோரொடு சார்த்தி யுரைப்பதும், "மாசாத்துவன் மகனை யாகி ... நின்பாற் கொலைக்களப்பட்ட கோவலன்" எனத் தந்தையொடு மகனைச் சார்த்தியுரைப்பதும் அடிப்படை வழக்கு.

"இயற்பெயர் முன்னர் தந்தை முறைவரின்" எனத் தொல்காப்பியர் முறைப்பெயரைச் சுட்டினும், 'தந்தை' முறைப்பெயர் என்பதைச் சுட்டியதல்லது, ஆதனுக்குத் தந்தை முறையினன் எனக் கொள்ள இடந்தரவில்லை.

எந்தை வருக என்றவிடத்து, எந்தை அவன் தந்தையையே சுட்டியதன்று; என் தந்தை போன்றீர் எனுங் கருத்தே தருவது. அவ்வாறே ஆந்தை என்னும் மரூஉச் சொல்லும், ஆதனாகிய மதிக்கத் தகுந்த பெரியோன் என்றே பொருள்படும். சாத்தந்தை, கொற்றந்தை என்பனவும் இத் திறத்தினவேயாம். கண்ணையன், முருகையன் என ஐயன் ஈற்றனவும், கண்ணப்பன், முருகப்பன் என அப்பன் ஈற்றனவும், கண்ணம்மை, நல்லம்மை என அம்மை ஈற்றனவும், நல்லண்ணன், பெரியண்ணன் என அண்ணன் ஈற்றனவுமாய இயற்பெயர்களில், ஈற்று முறைப்பெயர்கள் முறைப்பெயர்ப் பொருளைச் சுட்டாது மதிப்புரவு குறித்த ஈறாகவே வழங்கி வருதலை நோக்குக.

அன்பை வெளிப்படுத்தவும் விளியினிமையும் கருதி இயற் பெயர்களுக்கு முறைப்பெயர்கள் பின்னடைகளாகச் சேர்க்கப் படுகின்றன. முருகன் என்னும் இளைஞனை அன்பொழுக அழைக்கும் முதியவர் 'முருகு தம்பி இங்கே வா' எனத் தம்பி முறைப்பெயரை இயற்பெயரொடு சார்த்தி விளித்தலை யாவரும் அறிவர்.

பண்டைத் தமிழகத்திலும் இத்தகு நிலையிருந்திருத் தலியல்பே. ஆதலின் ஆதனையே மதிப்புரவு கருதி ஆதன்றந்தை → ஆதந்தை → ஆந்தை யென அழைத்தனர் எனக் கொள்வதே ஏற்புடைத்து. இலக்கியங்களிலும் ஆந்தை இயற்பெயராக ஆளப்படுவதல்லது ஆதனின் தந்தையைச் சுட்டிய 'பெயராக ஆளப்படவில்லை யென்பது இக் கருத்துக்கு அரணாகும்.

கொற்றன் + தந்தை → கொற்றனந்தை → கொற்றந்தை எனத் திரிவதுந்தமிழ் மரபாதலின், கல்வெட்டில் 'கொற்றனந்தை' என்னும் சொல்லாட்சி வழங்குதலை நோக்கின், கொற்றன் + அந்தை என்பதே கூட்டுச் சொல்லென்றும், ஆந்தை, பூந்தை என்பவற்றை ஆதன் + அந்தை, பூதன் + அந்தை என்றே

புணர்த்த வேண்டும் என்றும் கொள்ளலாம். இது அத்தன் → அத்தை → அந்தை எனத்திரிந்த திரிபாகும். அஞ்சியத்தன் → அஞ்சியத்தை (அஞ்சியத்தைமகள் நாகையார்). திருச்சி மாவட்டத்தில் பழங்குடிமக்கள் மதிப்புரவுச் சொல்லாக விளிக்கும் போதும் பேசும்போதும் அந்தையை ஆள்கின்றார். "என்னந்தெ, வா அந்தெ" (இ.வ.).

ஆந்தையை அறிவுடைய பறவையாக (bird of wisdom) மேலைநாட்டினர் கருதினர். பழந்தமிழகத்திலும் (ஆந்தையின் கூவல், வருவது காட்டுங் குறியெனப் பெரிதும் நம்பி) ஆந்தையை அறிவுடைப் பறவையென்றும், கூகையை (ஊமன், உம், உம் எனச் சொன்னதையே சொல்லிக்கொண்டிருக்கும் பறவை) முட்டாள் பறவை யென்றும் கருதினர். ஆந்தை குடிப் பெயராகவும், சில வகுப்பாரிடை நிலவுகிறது. கடைக்கழகப் புலவர்களுள் ஓதலாந்தையார், சிறைக்குடியாந்தையார், கொட்டியூர் நல்லாந்தையார், பிசிராந்தையார், மன்னெயி லாந்தையார் என்னும் பெயர்களில் ஈற்றிலுள்ள 'ஆந்தை' அறிவுடைய பறவை (ஆந்தை)யின் பெயரே என்று திரு. பி.எல்.சாமி கருதுகின்றார். ஆந்தையை 'முதுபுள்' (அகநா.260)– அறிவுடைய பறவை என்று கடைக்கழகக் காலத்தில் நம்பியது உண்மையெனினும், அது குடிப்பெயராகவல்லது இயற்பெயராகவழங்கவில்லை. கடைக் கழகக் காலத்தில் 'ஆண்டலை' என்னும் சொல் ஆந்தையைக் குறிக்கவழங்கியதாகவும், ஐந்திணை எழுபதில்தான் முதன்முதல் 'ஆந்தை' பறவைப்பெயராக (ஆண்டலை → ஆந்தை என மருவி) வழங்கியது என்றும் கூறும் அவர், கடைக்கழகப் புலவர் பெயர்களில் வரும் ஆந்தையைப் பறவைப் பெயராகக் கருதவில்லை.

சேலம், கோவை மாவட்டங்களில் வாழும் வேளாளருள் ஆந்தை க்குடியைச் சார்ந்தவர்கள் இன்றும் உள்ளனர். ஆயின், அவர்களுள் ஒருவர்கூடத் தம் குடிப்பெயரை இயற்பெயராகக் கொள்வதில்லை.

**ஆந்தை**[2] āndai, பெ. (n.) 1. பாழடைந்த சுவரிடுக்கு, மரப்பொந்து முதலிய மறைவிடங்களில் பக லெல்லாம் ஒளிந்திருந்து, இராக் காலத்தில் வெளிப்பட்டுக் கூச்சலிடுமோர் பறவை. இதன் கண்ணுக்கு மந்திர ஆற்றலுண்டு எனவும், இதன் பித்தம் மருத்துவத்திற்குப் பயன்படும் எனவும் நம்பப்படுகிறது; prognastic bird; spotted owlet –**Athene brama** alias **Noctula Indica.** It is regarded with much aversion, found generally in the crevices of the walls of dilapitated ancient buildings, in the hollow stems of trees and other forlorn places during day time. It hunts by night with a loud screech. Its eye has psychic properties and as such, is used in magic and its bile has medicinal virtues. Its call is a double note. The forest species is **Athene radiata** and the Malabar species is **Athens malabarca.** "மன்ற முதுமரத்து ஆந்தை குரலியம்ப" (ஐந்.எழு.). 2.பறவை வகை; முகம் உருண்டு தட்டையாகவும், கண்கள் திரண்டும், தலைபருத்தும், இறகுகள் தடித்தும், நகங்கள் வளைந்து கூராகவும் உள்ள இரவில் இரைதேடி, பகலில் மரப்பொந்து பாழிடங்களில் வதியும் இருட்புள் வகைகளுள் ஒன்று; owl, any member of the nocturnal predacious birds with large broad heads, flat faces, large eyes surrounded by disks of feathers, short hooked beaks, silent flight, and howling or hooting cry. (கந்தபு.திருநகரப்.95). 'ஆந்தை சிறிது, கீச்சுப் பெரிது' , 'ஆந்தை பஞ்சையாயிருந்தாலும் சகுனத்தில் பஞ்சையில்லை' (பழ.).

**இனச்சொற்கள்:**

**ஆந்தை::** **ம.** ஆந்த; **க.** ஆந்தெ, ஆடேலு, ஆந்தெக; **தெ.** ஆந்தெக, ஆடெலு. **Skt.** āti.

**ஊமன் : தெ.** மூங்கா; **ம.** கூமன்; மூங்ஙா, மூகன்; **பர்.** உமகுளி; **கோண்.** உமகுஞ்சி; **மரா.** **குமட்**; **கோத**, கும்ன்.

**கூகை**: **க.** கூகெ, கூபெ; **து.** கூகெ. கூங்கு கும்மெ; **குட.** குமி; **தெ.** கூபெ.; **பட.** கும்ம; **துத.** கிக்சு; **மா.** கபொ; **கொலா.** குப; **மரா.** குபட்; **Skt.** ghuka, **M.P.** (dial). கூகூ

**குடிஞை : தெ.** குட்ல, கூப; **கோண்.** குஞ்சி; **மரா.** ghudge

**பகண்டை : தெ.** பகடி கண்டெ; **வங்.** பென்ச்ச.

**நத்து :** **ம.** நத்து; **துளு, நத்திங்கெ. Skt.** naktaka.

**பிங்கலை : மரா.** பிங்கலா.

**குரால் : தெ.** கொரடு; **கோண்.** குர்வலா; **பெங்.** குர்வ; **மண்.** குர்வ; **இந்.** குரையா.

**ஊளி** : **Skt.** Ullu, Uluka; **Pkt.** ulua; ali. uluko; **Mar.** Ulluk; **H., U.** ullu; **Nep.** ullu; **E.** owl; **M.E.** oule, owle; **OE.** Ule; **Dt.** uil;

**OHG.** uwila; **MHG.** iuwel, iule; **G.** eule; **O.G.** uwile; **On.** ugla; **Dan.** ugle; **Swed.** uggla; **Icel.** ugla; **Gr.** ololuzein; **Fr.** hulotte L.ulula, (L.ululare–to screech, cry out.).

**முந்து.** ஆண்டலை.

*[ஆண் + தலை = ஆண்டலை. ஓர் ஆணின் தலையைப் போன்று தட்டையான முகத்தோற்றம் தருதலால் ஆண்டலையென்றும் பெயரமைந்தது. ஆண்டலை → ஆந்தலை → ஆந்தை (மரூஉச் சொல்). ஒ.நோ: நின்றுவா → நிண்டுவா → நிந்துவா (கொச்சை). மண்டை → மொண்டை → மொந்தை. ஆண்டலை பார்க்க;* see āṇḍalai.]

ஆந்தையினத்தில் ஒன்றாகிய குரால் மக்கள் குடியிருப்புகளிலும் தங்குவதாலும், அடிக்கடிப் பார்வையிற் படுவதாலும், உலகமொழிகளில் தப்பாது இடம் பெற்றிருக்கலாம். அடிக்கடிப் பயன்படுத்தும் சொல் குறிற்கீழ் ஒற்றாகக் குறுகும் மரூஉ முடிபிற்கேற்ப ஊளி → உல் → உல்லு என மேலையாரிய மொழிகளில் திரிந்திருக்கலாம்.

கூகை, குரால், குடிஞை, ஊமன், ஆண்டலை என்னும் ஐந்தும் ஆந்தையினப் பறவைகள். பகண்டை, நத்து, பிங்கலை என்பனவும் இவ்வினத்தைச் சேர்ந்தவையே. ஆந்தையென்ற பெயர், ஐந்திணையெழுபது என்ற நூலில் தான் முதலில் ஆளப்பட்டுள்ளது. எனவே இதனை ஆண்டலையின் மரூஉச் சொல்லாகக் கொள்ளல் ஏற்புடைத்து. அறிஞர் பி.எல். சாமி இதே கருத்தினர்.

உலகில் ஆந்தையினத்தில் 130 வகைகள் உள்ளன. அவற்றுள் வடிவில் சிறியவை மரப்பொந்துகளிலும் மிகப் பெரியவை தரையிலும் தங்குகின்றன. இவை எலிகளை அழிப்பதால் மக்களுக்கு நண்பனாகக் கருதப்படுகின்றன.

ஆந்தை கூவினால் நன்மையுமுண்டு, தீமையுமுண்டு எனக் கருதுவர். **ஆந்தைக்காதல்** பார்க்க; see āndai-k-kādal.

கன்னடத்திலும் தெலுங்கிலும் உள்ள ஆந்தெக, ஆடெலு, என்னும் வடிவங்கள் ஆண்டலை → ஆந்தெக → ஆந்தை சொற்றிரிபின் இடைநிலைப் படிக்கல்லாக அமைந்திருப்பதும் இக் கருத்துக்கு அரணாகும்.

ஆந்தை ஆண்டலையின் திரிபாயினும் இவ்வினப் பறவைகளுக்குப் பொதுப் பெயராக ஆளப்பட்டு வருகிறது.

கி.மு. 3000–க்கும் முற்பட்டதாகக் கருதப்படும் பண்டை எகுபது மொழியின் உருவெழுத்துகளில், 'ம்' என்னும் மெய்யெழுத்து ஆந்தையின் வடிவத்தில் எழுதப்பட்டுள்ளது. பண்டை எகுபது மொழியில் உயிரெழுத்துகளின்மையால், 'ம்' என்னும் மெய்யெழுத்தை உயிரொலிகூட்டி 'உம்' என ஒலிப்பர். ஊமன் என்னும் தமிழ்ப்பெயரே கி.மு. 3000–க்கும் முற்பட்ட காலத்தில் எகுபதில் வழங்கியதாகக் கருத இது இடந்தருகிறது. அசாம் மாநில வடகிழக்குப் பகுதிகளில் வாழும் அங்காமி நாகருள் கணவன் பெயரை மனைவியோ, மனைவியின் பெயரைக் கணவனோ சொல்லும் பழக்கமில்லை. 'உம், உம்' என சொன்னதையே திருப்பிச் சொல்லும் ஊமைக்கோட்டானைப் போல், தமக்குரியர் பெயரைப் பலர்க்கும் சொல்வது இழிவு எனக் கூறுகின்றனர். தமிழ்நாட்டிலும் இவ்வழக்கம் இருப்பதைக் காணலாம்.

சமற்கிருதம் உள்ளிட்ட மேலையாரிய மொழிகளில் ஊளி → உல்லு எனத் திரிந்திருக்கவும், சமற்கிருதத்திலுள்ள உலூக,உல்லு (ஆந்தெ) எனுஞ் சொற்கள் val என்னும் வேரடியாகத் தோன்றியதாகக் கூறுவது பொருத்த மற்றது. அவர்கள் காட்டும் Skt. uluka > val. val = to move round in a cricle, to move to and fro, to go, to increase என்னும் இப்பொருள்களில் எதுவும் அதன் பெயர் பொருத்தத்திற்குப் பொருந்தாமையைக் காணலாம்.

உலக முழுவதும் மக்கள் பரவுவதற்கு முன்பே, மூலத்தாய் மொழியின் சொற்களஞ்சியத்தைக் கொண்டுபோய் இன்றளவும் உலகில் தொன்முது நாகரிக மொழியினர் காத்து வருகின்றனர் என்பதற்கும், ஊமன், ஊளி என்பவை கி.மு. 5000 ஆண்டுகளுக்குமுற்பட்ட சொல்லாட்சிகளாகலாம்என்பதற்கும், 'ஆந்தை' என்னும் சொல் கி.பி. முதல் நூற்றாண்டளவில் 'ஆண்டலை'யிலிருந்து மருவித் தோன்றிய சொல் என்பதற்கும் மேற்கண்ட சொல்லாட்சிகள் துணையாகின்றன.

இன்றும் நடுவண் பைதிரக் (மத்தியப் பிரதேச) கிளை மொழிகளில், கூகை 'கூகூ' என்றே வழங்கிவருவதாலும், குரால் (கபில நிறமுடைய ஆந்தை) என்னும் சொல், இந்தி பேசப்படும் பகுதிகளில் 'குரையா' என்று இன்றும் வழங்கிவருவதாலும், இத்தகு அடிப்படைச் சொல்லொப்புமைகளையே பற்றுக் கோடாகக் கொண்டு வடபுலம் முழுவதும் தமிழே பேசப்பட்டது என்று திட்டமாக வரையறுக்க இயலும்.

**ஆந்தை**[3] āndai, பெ. (n.) 1. புறாமுட்டிப் பூடு; serrate, irregular rhomboid leaved parrofueet Burr – **Triumfetta hourboidea.** 2. பேராமுட்டி; fragrant sticky mal-low–parvonla odorata. (சா.அக.).

*[ஆந்தை 1,2, (மூ. தெரிந்தில.).]*

**ஆந்தைக்கண்** āndai–k–kaṇ,பெ. (n.) 1. ஆந்தைக் கண் போன்ற பெரிய கண்; big eyes like those of an owl. 2. ஆந்தைப் பார்வை போன்ற வெறும் பார்வை; blank stare like that of an owl.

*[ஆந்தை + கண்.]*

**ஆந்தைக்கண்ணன்** āndai–k–kaṇṇaṉ,பெ. (n.) ஆந்தைக் கண்ணைப் போன்ற கண்களை யுடையவன்; owl–eye man. 'ஆந்தை விழிக்கிறது போல விழிக்கிறான்' (பழ.).

*[ஆந்தை + கண்ணன்.]*

**ஆந்தைக்காதல்** āndai–k–kādal, பெ. (n.) 1. ஆந்தை நூல்; science dealing about the screeching of the owl from which prediction is drawn. 2. ஆந்தை கூவும் இரட்டையொலி; screeching of owls with a double note in it.

*[ஆந்தை + காதல்.]*

பொருத்தமறியும் ஐம்புட்களான வல்லூறு, ஆந்தை, காகம், கோழி, மயில் என்பவற்றுள் ஆந்தையும் ஒன்று. ஐம்புட்களையும் முறையே அ, இ, உ, எ, ஒ என்னும் ஐந்தெழுத்துகள் குறிக்கும். ஆந்தை தன் துணைப் பறவையைக் கூப்பிடும் காதல் ஒலி, ஆந்தைக்காதல் (desire–affection for its mate which it calls) என வின்சுலோ குறிப்பிடுகிறார். 'ஆந்தைக் காதலைப் பொய்க்காது' (பழ.). ஆந்தை கூவுதலைக் கணக்கிட்டு நன்மை தீமைகளைக் கூறுவது பழங்கால வழக்கம்.

"ஒருரை உரைக்குமாகில் உற்றதோர் சாவு சொல்லும்
ஈருரை யுரைக்குமாகி லெண்ணிய கரும நன்றாம்
மூவுரை யுரைக்குமாகில் மோகமாய் மங்கைசேர்வாள்
நாலுரை யுரைக்குமாகில் நாழியிற் கலகஞ் சொல்லும்
ஐயுரை யுரைக்குமாகி லங்கொரு பயணஞ்சொல்லும்
ஆறுரை யுரைக்குமாகி லடுத்தவர் வரவு சொல்லும்
ஏழுரை யியம்புமாகி லிறந்த பண்டங்கள் போதும்
எட்டுரையுரைக்குமாகில் திட்டெனச் சாவு சொல்லும்

ஒன்பதும் பத்துமாகி லுத்தம மிகவு நன்றே".
(அபி. சிந்.).

**ஆந்தோளம்** āndoḷam, பெ. (n.) அலுக்கு (கமகம்) பத்தனுள் ஒன்று (பிரபு. இராக, 24); a kind of tune.

**ஆந்தோளி** āndoḷi, பெ. (n.) பல்லக்கு; a kind of palanquin. "ஆந்தோளியில் மாதுமை ஏக." (திருவானைக். திருவிழா. 21.).

*[ஆந்து + தோள் + இ.]*

**ஆந்தோளிகம்** āndoḷigam, பெ. (n.) **ஆந்தோளி** பார்க்க; see āndoḷi.

**ஆநாகு** ānāgu, பெ. (n.) ஆவின்கன்று; calf of a cow.

*[ஆன் + நாகு – ஆநாகு.]*

**ஆநாயம்** ānāyam, பெ. (n.) 1. வலை; net. 2. வளிக்கண்ணறை; air-cells.

*[ஆ + (நாளம் →) நாயம்.]*

**ஆநாயன்** ānāyaṉ, பெ. (n.) இடையன்; cowherd. பெண் – ஆநாயத்தி.

**ம.** ஆநாயன்.

*[ஆ + நாயன்.]*

**ஆநாவு** ānāvu, பெ. (n.) **ஆநாகு** பார்க்க; see ānāgu.

**ம.** ஆ நாவு.

*[ஆன் + நாகு – ஆநாகு → ஆநாவு]*

**ஆநியம்**[1] āniyam, பெ. (n.) 1. நாள்; day. "பயங்கெழு வெள்ளி ஆநியம் நிற்ப," (பதிற்.). 2. நாட்படி; daily allowance. படியிரட்டி ஆநியம் பெறுவதாகவும் (T.A.S.i.6.).

*[ஆகு → ஆ + நாள் ஆநாள் → ஆநாளம் → ஆநயம் → ஆநியம். ஆநாள் → ஆகுநாள் = நல்லநாள், நல்லநேரம், தக்க பொழுது. கல்வெட்டில் **ஆநியம்** என்னும் சொல் **ஆணியம்** எனத் தவறாகப் பொறிக்கப்பட்டுள்ளது.]*

**ஆநிரை** ānirai, பெ. (n.) மாட்டுமந்தை; herd of cows.

*[ஆ + நிரை, நிலை → நிரை.]*

**ஆநிரைகாத்தோன்** ānirai-kāttōṉ, பெ. (n.) மாட்டு மந்தைகளைக் காத்த கண்ணன்; Lord Kannan (Krisna) the protecter of cows.

*[ஆ + நிரை + காத்தோன். காத்தவன் → காத்தோன்.]*

**ஆநிலை** ānilai, பெ. (n.) மாட்டுக் கொட்டில்; cow-house, a byre.

*[ஆ + நிலை. நில் → நிலை. நிலை – நிற்குமிடம், தங்குமிடம்.]*

**ஆநின்று** āninṟu, இடை. (part.) நிகழ்கால இடைநிலை; present tense affirmative particle. "செய்யாநின்றான்" (நன்.143). **ஆவிருந்து** பார்க்க; see āvirundu.

**ஆநீர்** ānīr, பெ. (n.) ஆவின் சிறுநீர்; cow's urine. "ஆநீர் கண்கழுஉக் காணப்பட்டான்" (இரகு, யாக.98).

*[ஆ + நீர்.]*

**ஆப்படி-த்தல்** āppaḍi-, 4. செ.கு.வி. (v.i.) மரம் முதலியவற்றைப் பிளக்க ஆப்பினை அடித்தல்; to drive wedge to split wood etc.

*[ஆப்பு + அடி.]*

**ஆப்பம்** āppam, பெ. (n.) புளித்த மாவினாற் செய்த சிற்றுண்டிவகை; thin cake of riceflour. 'ஆப்பம் சுடுகிற அம்மாளுக்கு அறுவர் வேண்டுமாம் உதவி செய்ய (பழ.).

**ம.** ஆபம்; **க** ஆப்ப; **து.** ஆப்பெ.

*[அப்பம் → ஆப்பம் (கொ.வ.).]*

**ஆப்பி** āppi, பெ. (n.) மாட்டுச்சாணம்; cow dung. "மெழுகு மாப்பிகண் கலுழ்நீ ரானே" (புறநா.249).

**து.** ஆம்பி; **கச., துட.** ஆப்பி.

*[ஆ + பீ – ஆப்பீ → ஆப்பி.]*

**ஆப்பிடு-தல்** āppiḍu-, 20 செ.கு.வி. (v.i.) அகப்படுதல்; to be entangled, to be caught. "மண்ணைச் சுமந்தே யாப்பிட்டுக் கொண்டடிபட்ட" (தனிப்பா. ii.1,2).

*[அகப்படுதல் → ஆப்படுதல் → ஆப்பிடுதல் (கொ.வ.).]*

**ஆகப்படுதல்** பார்க்க; see āga-p-paḍu-,

**ஆப்பிநீர்** āppinīr, பெ. (n.) 1. ஆவின் (பசு) சிறுநீரும் சாணமும்; cow-dung and cow's urine. 2. சாணிப்பால்; cow-dung-water, solution of cow-dung.

*[ஆப்பி + நீர்.]*

**ஆப்பு**[1] āppu, பெ. (n.) 1. மரப்பிளப்பிற் செலுத்தும் மரத்துண்டு, முளை; wedge used in splitting wood, peg. "ஆப்பதில் லாததே ரிவையெலா மொன் றாகும்" (அறப். சத. 57). "ஆப்பைப் பிடுங்கின குரங்கு போல" (பழ). 2. தாழ்ப்பாள் (சேரநா.); bolt.

**ம.** ஆப்பு, **க., தெ.** ஆபு; (நிறுத்துதல்) **கோத.** ஆம்; **து.** ஆங்கெ. **கூ.** அங்க (தடுத்தல்) **கச.** ஆப்த். **குவி.** ஆங்கலி (தடு) **பட.** ஆப்ப. **முந்து** அகைப்பு.

*[அகைப்பு → அகப்பு → ஆப்பு. அகைத்தல் = முடுக்குதல், செலுத்துதல்.]*

**ஆப்பு**[2] āppu, பெ. (n.) 1. கட்டு, பிணைப்பு; bandage, tie. "அருவினைகளாப்பு ... அவிழ்ந்தொழியும்"

(திவ். இயற். 1,75). 2. உடம்பு; body. (திவ். இயற். 4, 93).

*[யாப்பு → ஆப்பு]*

**ஆப்பு** [3] āppu, பெ. (n.) 1. நொய் (இ.வ.); broken rice, grit (Loc.). 2. உணவு (செவிலி); food (Nurs.). (செ.அக.).

*[ஒருகா. அப்பம் → அப்பு → ஆப்பு. அப்பு = நீர். நீரோடு கலந்து அரைத்த மாவு, நொய், சமைத்த அப்பம், உணவு.]*

**ஆப்பு** [4] āppu, பெ. (n.) எட்டிமரம் (மூ.அ.); strychnine tree.

*[ஒருகா. எலும்பு மூட்டுப் போன்று பொருத்துகள் மிகுந்த மரம்.*

*ஆப்பு [5] பார்க்க; see āppu [5].]*

**ஆப்பு**[5] āppu, பெ. (n.) 1. பொருத்து, எலும்புமூட்டு, இடுப்பு (இ.வ.); joint of bone, hip. (Loc.) ஆப்பெலும்பு பார்க்க; see āppu–elumbu. 2. வெண்மை; whiteness.

*[ஆப்பைப் போன்று பொருந்தும் இயல்பால் எலும்பு மூட்டுகளையும், நிறவொப்புமையால் வெண் மையும் குறித்ததாகலாம்.]*

**ஆப்பு** [6] āppu, பெ. (n.) நீர், அலை; water, wave.

*[அம் → அப்பு → ஆப்பு. ஆப்பு = நீர், அலை. நுரை முகந்து வரும் கடலோர அலை, வெள்ளாப்பு என வழங்குதலைக் காண்க. வெள்ளாப்பு வருகிறது (மீ.வ.).]*

**ஆப்பு** [7] āppu, பெ. (n.) இடை. (part.) ஒருசொல்லாக்க ஈறு; formative suffix. பொல்லாப்பு, வெயில் சுள்ளாப்பாக அடிக்கிறது (உ.வ.).

*[அப்பு → ஆப்பு.]*

**ஆப்புத்தள்ளி** āppu–t–taḷḷi, பெ. (n.) அச்சுக்கூடக் கருவிகளுள் ஒன்று (புதுவை); shooting stick (Pond.).

*[ஆப்பு + தள்ளி.]*

**ஆப்புராகி** āppu–rāgi, பெ. (n.) வெண்குன்றிமணி; Indian liquorice plant (சா.அக.).

**மறுவ.** ஆமகோகிலம்.

*[ஆப்பு + ராகி. ஆப்பு = வெண்மை.]*

*ராகி = சிவந்தது*

**ராகி** பார்க்க; see **rāgi.**

**ஆப்புளாகி** āppuḷ–āgi, பெ. (n.) வெண்கீரைத் தண்டு; garden green. (சா.அக.).

*[ஒருகா. அப்புள் + ஆகி – அப்புள்ளாகி → ஆப்புளாகி. அப்பு = நீர். அப்புளாகி = நீர்வளத்தால் வளர்வது.]*

**ஆப்பெலும்பு** āppelumbu, பெ. (n.) 1. ஆப்புப் போன்ற எலும்பு; very irregular cuneiform or wedge shaped bone at the base of the skull. 2. மணிக்கட்டில் எட்டு எலும்புகளிலொன்று; one of the wrist bones – or cuneiform carpal bone – Carpus. 3. பாதத்திலிருக்கும் ஆப்புப் போன்ற மூன்று எலும்புகள்; the three cuneiform bones in the feet – Tarsus.

*[ஆப்பு + எலும்பு.]*

**ஆப்பெழுத்து** āppeluttu, பெ. (n.) மொசபதேமிய ஆப்பு வடிவ எழுத்து முறை; wedge shaped writing system of the Mesopotamian people.

*[ஆப்பு + எழுத்து.]*

**ஆப்பென்பு** āppenbu, பெ. (n.) **ஆப்பெலும்பு** பார்க்க; see āppelumbu.

*[ஆப்பு + என்பு. எலும்பு → என்பு.]*

**ஆப்பை** āppai, பெ. (n.) அகப்பை (இ.வ.); ladle (Loc.). 'கைக்குறி யாப்பை வாங்குவது' (ஈடு. 1, 4, 6). **அகப்பை** பார்க்க; see agappai.

**ம.** ஆப்ப; **க.** ஆப்பெ.

*[அகப்பை → ஆப்பை.]*

**ஆப்பைக்குறி** āppai–k–kuṟi, பெ. (n.) **அகப்பைக்குறி** பார்க்க; see agappai–k–kuṟi.

*[அகப்பை → ஆப்பை + குறி.]*

**ஆபம்** āpam, பெ. (n.) நீர்; water.

**க.** ஆப்ப.

*[அப்பு → ஆப்பு → ஆப்பம் → ஆபம்.]*

**ஆம்**[1] ām, 7. செ.கு.வி. (v.i.) **ஆகும்** பார்க்க; see āgum, ஆகும் என்பதன் இடைக்குறை; contraction of 'ஆகும்' – கு.வி.எ. (adv.) இசைவு காட்டும் சொல்; yes, so, a part. expressing assent, recollection. 'ஆம்' அதுதான் எங்கள் வழக்கம் (உ.வ.) 'ஆம் என்ற குற்றம் அடிவயிறு கனத்தது'. (பழ.).

**Heb.** amen. verily, so be it, used by Christians usu. at the close of prayer or hymn.

**Hind.** ha, hai.

*[ஆகும் → ஆம்.]*

**ஆம்** [2] ām, இடை (part.) 1. கேள்விப்பட்டதைக் குறிக் குஞ் சொல்; part. used to denote a quotation. It is said, they say, on dit. ஓர் அரக்கன் இருந்தானாம் (உ.வ.). 2. இகழ்ச்சிக்குறிப்பு; part. expressing contempt or sarcasm. "ஈத்தவை கொள்வானாம்" (கலித். 84,18). 3. அனுமதி குறிக்குஞ் சொல்; expressing permission. அவன் போகலாம் (உ.வ.). **ம., க.** ஆம். 4. தகுதி குறிக்குஞ் சொல்; part.

expressing fitness. அவரைப் பெரியவராக வணங்கலாம் (உ.வ.). 5. ஊகத்தைக் குறிக்குஞ் சொல்; part. expressing contingency. இன்றைக்கு மழை பெய்யலாம் (உ.வ.). 6. 'ஆவது' எனப் பொருள்படும் எண்ணுப்பெயர் சொல்லீறு; ordinal affix. இரண்டாம் தெரு (உ.வ.). 7. 'ஆகிய' எனப் பொருள்படும் சொல்லீறு; appositional part. used as a noun ending in compound words. சிவனாம் பழம்பொருள் (உ.வ.). 8. சாரியை; connecting increment between the parts of the compound word. 'மண்ணாங்கட்டி' (நன். 244, உரை). 9. அசை நிலை; expletive. "பணியுமா மென்றும் பெருமை" (குறள், 978). 10. தன்மைப் பன்மை வினை முற்றீறு; 1st pers. pl. verb ending. "வந்தாம்" (செய். வ.). (Lit.u.) 11. உளப்பாட்டுத் தன்மைப் பன்மை வினை முற்றீறு; 1st pers. pl. the person or persons spoken to. "யாமும் நீயும் செல்வாம்" (செய்.வ.). (Lit.u.). 12. ஓர் உவமவுருபு; part. of comparison. "அல்லாங் குழலாள்" (செய்.வ.) (Lit.u.). 13. பயனிலையாய் வரும் வினை முற்று வினையாலணையும் பெயராகி எழுவா யாக நிற்க, அதனை முடிக்குஞ் சொல்லாய், 'யான் பிறர் சொல்லக் கேட்டேன்' எனப் பொருள் விளக்கும் ஒரு சொல். 'பார்த்தாயாம், கேட்டேனாம்'. (உ.வ.); ending of subjective predication.

*[ஆகும் → ஆம்.]*

**ஆம்** [3] ām, பெ. (n.) 1. நீர்; water. "ஆமிழி யணிமலை அலர்வேங்கைத் தகைபோல" (கலித்.48). 2. ஈரம்; dampness, moisture, humidity. (கதி.அக.) (அக.நி.). 3. வெந்நீர்; hot water (இராச.வைத்).

*[அம் → ஆம். அம் = நீர். அம்முதல் = கலத்தல், மண்ணொடும் பிறவற்றொடும் கலந்து கரைப் பானாகவும் கலப்பதாகவும் அமையும் நீர்.]*

**ஆம்** [4] ām, பெ. (n.) அழகு; beauty. "ஆம்பாற்குடவர் மகவோ" (சீவக. 492).

*[அம் → ஆம். அம்= நீர், நீர்மை. நீர்மையால் தோன்றும் பொலிவு, அழகு.]*

**ஆம்** [5] ām, பெ. (n.) வீடு (பிராம.) ; house (Brahm.) **அகம்** பார்க்க; see agam.

*[அகம் → ஆம் (கொ.வ.).]*

**ஆம்** [6] ām, பெ. (n.) மாமரம் (பொதி.நி.); mango tree. Skt. ama.

*[ஒருகா. ஆவிமா → ஆமா → ஆம். ஆவிமா = மஞ்சள் மாங்காய் மரம், மஞ்சள்மா.]*

**ஆம்** [7] ām, பெ. (n.) கடுகு; mustard (சா.அக.).

*[ஒருகா. அவியாம் → ஆயாம் → ஆம். ஆம் = ஈரமற்றது, காய்ந்தது. அவித்து = ஆவித்தது, வெப்பமுற்றது.]*

**ஆம்** [8] ām, பெ. (n.) 1. சிறுகீரை; a kind of greens. 2. வெள்ளரி; cucumber (இராச.வைத்).

*[அம் → ஆம். அம் = நீர். நீர் கொண்ட காயும் கீரையும் பொதுவகையான் இப் பெயர் பெற்றிருக் கலாம். சித்த மருத்துவர் பொதுக்குறிப்புப் பெயர்களை ஆள்வது வழக்கம்.]*

**ஆம்** [9] ām, பெ. (n.) ஒரு மந்திரவெழுத்து; mystic letter (சா.அக.). "ஆமெனவே அகண்டவெளி யிருளாய்த் தோன்றி அணுவணுவாய் அப்பாலுக் கப்பாலாகி" (திருவள்ளு. நாதாந்தசாரம், 1000).

*[ஒருகா. ஓம் → ஆம்.]*

**ஆம்** [10] ām, பெ. (n.) தக்கது; fitness, being compatible "ஏறாமன்றி லேற்றவு மாமன் றென்னாதான்" (பாரத. நான்கா. 41).

*[ஆகும் → ஆம்.]*

**ஆம்ஆம்** āmām, இடை. (part.) ஆமாம் என்று எழுதப்படுவதும் இசைவு குறிப்பதும் ஆகிய, 'ஆம்' என்னும் இடைச்சொல்லின் அடுக்கு; part. of assent, yes;. It is often doubled and written as 'ஆமாம்'. **ஆமாம்** பார்க்க; see āmām.

*[ஆகும்→ஆம். ஆம்ஆம் அடுக்குத்தொடர், ஆம்ஆம் ஆமாம். உலகவழக்கில் 'ஆமா' என்று மக்கள் பேசுவது 'ஆமாம்' என்பதன் கடைக்குறை.]*

**ஆம்படி** [1] āmbaḍi, பெ. எ. (adj.) ஆகும் வகையில், ஆகும் முறையில்; in the manner which is agreeable to, or sufficient for (w.).

ம. ஆம்படி.

*[ஆகும்படி → ஆம்படி. படி = முறை, வகை.]*

**ஆம்படி** [2] āmbaḍi, பெ. (n.) மெய்க்காப்பு; escort (சேரநா.)

ம. ஆம்பம்

*[அகம்படி → ஆம்படி.]*

**ஆம்படையாள்** āmbaḍai-yāḷ, பெ. (n.) மனைவி, அகமுடையாள் (பிராம.); wife (Brahm.) **அகமுடையாள்** பார்க்க; see agamuḍaiyāḷ.

*[அகம் + உடையாள் - அகமுடையாள் → அகம்புடையாள் → ஆம்புடையாள் → ஆம்படையாள் (கொ.வ.). அகம் = வீடு, வீட்டுக்காரன், வீட்டுக்காரி என்னும் வழக்குகளை ஒப்பு நோக்குக.]*

**ஆம்படையான்** āmbaḍai-y-āṉ, பெ. (n.) கணவன், அகமுடையான் (கொ.வ.); husband.

*[அகம் + உடையான் - அகமுடையான் → அகம் புடையான் → ஆம்புடையான் → ஆம்படையான்.]*

**ஆம்பர்** āmbar, பெ. (n.) 1. அம்பர் மரத்தினின்று எடுக்கும் மஞ்சட் குங்கிலியம்; yellow resin from a tree, amber. 2. ஆம்பல்; water lily (சா.அக.).

*[1. அம்பர் → ஆம்பர். **அம்பர்** பார்க்க; see **amber**.]*

**ஆம்பல்** [1] āmbal, பெ. (n.) 1. அல்லி, குமுதம்; water-lily, "ஆம்பலம் போதுளவோ" (திருக்கோ.11). 2. நிலவு (அக.நி.); moon. 3. துன்பம் (சூடா.); distress, worry, affliction, adversity.

**ம., து.** ஆம்பல் (அல்லி); **க.** ஆபல் (அல்லி).

*[அம்பல் → ஆம்பல். அம்புதல் = கூம்புதல், குவிதல். பகலிற் கூம்பி இரவில் அலர்வதால், பகற்காலத் தோற்றத்தையொட்டி ஆம்பல் எனப்பட்டது. ஆம்பல் மலர்வதற்குக் காரணமான நிலாவும் ஆம்பல் எனப் பட்டது. நிலா காதலர்க்குப் பிரிவுக்காலத் துன்பம் மிகுவித்தலின், துன்பம் என்னும் பொருள் தந்தது.]*

**ஆம்பல்**[2] āmbal, பெ. (n.) 1. மூங்கில் (பிங்.); bamboo. "சுருதிச்சயக் கோடையாம்பன் முத்தே" (மறைசை.92). 2. யானை; elephant. "ஆம்பன் முகவரக்கன்" (கல்லா. கணபதிகாப்பு.). "புதைகொண்மா மதத்த வாம்பலாநநப் புனிதப் பொற்றேன்" (இரகு. காப்பு.). 3. இசைக்குழல்; musical pipe. "ஆம்பலந் தீங்குழல் தெள்விளி பயிற்ற" (குறிஞ்சிப். 222). 4. ஊதுகொம்பு (திவா.); blow-horn. "வீணை குழலாம்பல்" (கந்தபு. இரண்டா. 34.).5. ஒரு பண்; melody-type, tune played on a pipe. "ஆம்பற் குழலாற் பயிரெம் படப்பைக் காஞ்சிக் கீழ்ச் செய்தேங் குறி" (கலித்.108.63) (த.சொ.அக.).

*[அம்பு → அம்பல் → ஆம்பல். அம்பு= நீர். அம்புதல் = தளிர்த்தல், செழித்தல், வளர்தல். அம்பல் – ஆம்பல், செழித்து வளர்ந்த மூங்கில், மூங்கிலை விரும்பித் தின்னும் யானை, மூங்கிலிலிருந்து செய்யப்பட்ட புல்லாங்குழல், இசைக்கருவி, ஊதுகொம்பு.]*

**ஆம்பல்** [3] āmbal, பெ. (n.) 1. அடைவு (திவா.)ஒழுங்கு; arrangement, order. 2. பலகோடி கொண்ட ஒரு பேரெண் (தொல். எழுத். 393); very high number. "அடையடுப் பறியா வருவி யாம்பல்" (பதிற்று. 63:19).

**ம.** ஆம்பல்

*[அம் → அம்மு → அம்பு → ஆம்பு → ஆம்பல். அம் = செறிவு, அடைவு, மிகுதி, பேரெண்.]*

**ஆம்பல்** [4] āmbal, பெ. (n.) 1. கள் (பிங்.); toddy. 2. புளியாரை; yellow wood – sorrel. 3. நெல்லி; Indian goose–berry. (சா.அக.) (செ.அக.).

*[அம்→அம்பு →அம்பல் →ஆம்பல். அம் = நீர். நீர்வடிவாய கள், நீர் செறிந்த புளியாரை, நெல்லி.]*

**ஆம்பல்**[5] āmbal பெ. (n.) பேரொலி (பொதி.நி.); great noise.

*[ஒருகா. அம்பல் → ஆம்பல். அம்பல் = ஓசை.]*

**ஆம்பல்அகமடிவை** āmbal-aga-maḍivai பெ. (n.) குவளையும் ஆம்பலும் பைந்தழையும் விரவித் தொடுக்கப்படும் தழையுடையில், ஆம்பற்பூவை இடையிட்டு ஏனையவற்றைச் சூழத்தொடுத்த தழையுடை; leaf - garment made of the leaves of different species of lily with the lily flower set within. "அலர்ந்த ஆம்பல் அகமடி வையர்" (பதிற். 27–3).

*[ஆம்பல் + அகம் + மடிவை.]*

**ஆம்பல்சக்களத்தி** āmbalšakkaḷatti, பெ. (n.) ஆம்பலைப் போன்ற ஒருவகைப் பூடு; plant resembling– **Nymphae lotus** (சா.அக.).

*[ஆம்பல் + சக்களத்தி. சக்களத்தி = போட்டியாக வளரும் பயிர் அல்லது செடி.]*

**சக்களத்தி** பார்க்க; see **šakkaḷatti.**

**ஆம்பல் வள்ளி** āmbal-vaḷḷi பெ. (n.) ஆம்பற்றண்டால் செய்த வளையல்; bangles made of the stalk of lily plant. "ஆம்பல் வள்ளித் தொடிக்கை மகளிர்" (புறநா. 63 – 12).

*[ஆம்பல் + வள்ளி.]*

**ஆம்பலங்குழல்** āmbal-aṅkuḷal, பெ. (n.) 1. ஆம்பல் என்னும் பண்ணையுடைய இனிய புல்லாங்குழல்; flute playing ambal melody. 2. வெண்கலத்தால் ஆம்பற்பூவடிவாக அணைசு பண்ணி நுனியில் வைக்கப்பட்ட புல்லாங்குழல்; flute made in the shape of ambal flower. "பெருங்களத்து இயவர் இம்மென் றூதும் ஆம்பலங் குழல்" (நற். 113 – 11).

*[ஆம்பல் + அம் + குழல்.]*

**ஆம்பலரி** āmbalari, பெ. (n.) முதலை; crocodile. 2. கதிரவன், (த.சொ.அக.); sun.

*[ஆம்பல் + அரி. ஆம்பல் = அல்லி, குமுதம், யானை. அரி = பகைவன். நீரில் வாழும் உயிரினங்களில் அரியும் வன்மை மிக்க உயிரினமாதலால் முதலையையும், நிலவைக்கண்டு மலர்ந்து கதிரவனைக் கண்டு கூம்பும் இயல்பால், கதிரவனுக்குப் பகையான அல்லியையும் ஆம்பலரி சுட்டுவதாயிற்று.]*

**ஆம்பலா** āmbalā பெ. (n.) 1. புளியாரை (மு.அ.); yellow wood-sorrel. 2. தாமரை; lotus (சா. அக.).

*[ஒருகா. அம் → அம்பு. அம்புள் + ஆ = அம்புளா → ஆம்புளா → ஆம்பலா. ஆம்புளா = நீருள் உண்டாகியது, தாமரை.]*

**ஆம்பலாம்** āmbalām, பெ. (n.) புளியமரம்; tamarind tree, (சா.அக.).

*[ஒருகா. அம் + புளி - அம்புளி. அம்புளி + ஆம் - ஆம்புளாம் → ஆம்பலாம். அம் = அழகிய, இனிய, சுவை சேர்ந்த.]*

**ஆம்பலி** āmbali, பெ.(n.) வெண் பச்சைக்கடலை; greenish white Bengal gram. (சா.அக.).

*[ஒருகா. அம் = நீர்; தெளிந்த நிறம், வெண்மை. அம் → ஆம். ஆம் + பலி. பலி = உண்பொருள்.]*

**ஆம்பற்கிழங்கு** āmbar-kilaṅgu, பெ. (n.) அல்லிக் கிழங்கு; root of the plant,

*[ஆம்பல் + கிழங்கு. ஆம்பல் = அல்லி.]*

**ஆம்பற்குழல்** āmbar-kulay, பெ. (n.) **ஆம்பலங்குழல்** பார்க்க; see āmbalaṅkulal.

**ம.** ஆம்பலக்குழல்

*[ஆம்பல் + குழல். ஆம்பல் = மூங்கில், ஆம்பல்பண், இசைக்குழல்.]*

**ஆம்பற்குழாய்** āmbar-kulāy, பெ. (n.) மூங்கிற்குழாய்; bamboo pipe. (சா. அக.).

*[ஆம்பல் + குழாய். ஆம்பல் = மூங்கில்.]*

**ஆம்பற்குற்றி** āmbar- kurri, பெ. (n.) பூட்டினுள் திறவு கோல் பற்றிச் சுழலுதற்கேற்ற நடு ஆணி (சேரநா.); peg on which the key revolves inside a lock (ker.).

**ம.** ஆம்பக்குற்றி

*[ஆம்பல் + குற்றி.]*

**ஆம்பாரை** āmbārai, பெ. (n.) **ஆம்பலா** பார்க்க; see āmbalā

*[ஒருகா. ஆம்பலா → ஆம்பரா → ஆம்பாரா → ஆம்பாரை.]*

**ஆம்பால்** āmbāl, பெ.(n.) ஆகும்தன்மை, முடியுங்காலம் (த.சொ. அக.); best possible manner, state of possibility, ripening period of time. "நோற்றிடு பகுதியா லாம்பா லொன்றில்லை" (கந்தபு. தவங்கா. 11).

**ம.** ஆம்படி

*[ஆகும் → ஆம் + பால். பால் = தன்மை, இயல்பு, இடம்.]*

**ஆம்பாறு-தல்** āmbāru-, 5.செ.கு.வி. (v.i.) செழிப்புக் குறைதல் (இ.வ.) (செ.அக.); to be deficient in growth and freshness. (Loc.).

*[ஒருகா. அம் = நீர். அம் → ஆம் + பாறுதல். பாறுதல் விரிதல், உடைதல், கெடுதல், குன்றுதல். ஆம்பாறுதல் = நீர் குறைதலால் செழிப்புக் குன்றுதல்.]*

**ஆம்பான்** āmban, பெ. (n.) கணவன் (இ.வ.); husband. (Loc.). (செ.அக.).

*[அகமுடையான் → ஆமுடையான் → ஆம்பான். (கொ. வ.).]*

**ஆம்பி**[1] āmbi, பெ. (n.) 1. காளான்; mushroom, fungus. "ஆடுநனிமறந்த கோடுய ரடுப்பி னாம்பி பூப்ப" (புறநா. 164). 2. குடைக்காளான், நாய்க்குடை; common mushroom resembling an umbrella. 3. நீரிறைக்கும் இறைகூடை, பன்றிப்பத்தர்; irrigation bucket. "ஆம்பியுங் கிழாரும் வீங்கிசை யேற்றமும்" (சிலப். 10:110). "ஏற்றத்தோடு வழங்கும கலாம்பியினிசை" (மதுரைக். 91).

U. ambi (காளான்). **க.** ஆளம்பி, ஆளம்பெ., ஆணவெ **து.** லாம்பு, நாம்பு; **பிரா.** alamba.

*[அம்பு = வளைவு, வட்டம். அம்பு → அம்பி → ஆம்பி, நீரிறைக்கவுதவும் இறைகூடை. ஆம் + ப் + இ - ஆம்பி. பகரமெய் சொல்லாக்கச் சாரியை. இகரவிறுதி உடைமை குறித்த ஒருமையீறு.]*

**ஆம்பி**[2] āmbi, பெ. (n.) ஒலி (சூடா.); sound.

*[ஒருகா. ஆம்பி = நீரிறைக்கும் இறைகூடை, நீரிறைக்கும் போது எழும் ஓசை.]*

**ஆம்பியம்** āmbiyam, பெ. (n.) இதளியம் (பாதரசம்) (மூ. அ.); quicksilver.

*[ஒருகா. அம் → ஆம் → ஆம்பியம் → நீர்த்தன்மை கொண்ட மாழை (உலோகம்) என்னும் பொருள் கொண்டதாகலாம்.]*

**ஆம்பிரம்**[1] āmbiram, பெ. (n.) 1. தேமா (திவா.); mango. 2. புளிமா (திவா.); Indian hog-plum. (செ. அக.). 3. புளிப்பு; sourness.

*[அம்புளி → அம்பிளி → அம்பிளம் → அம்பிரம். அம்புளி = இனிப்பும் புளிப்பும் சேர்ந்த புளியம்பழம். புளிப்புச் சுவையுடைய மாங்காய், மாமரம். அம்புளி → அம்புளம் →* **Skt.** *āmra.]*

**ஆம்பிரம்**[2] āmbiram, பெ. (n.) காளான்; mushroom. (சா.அக.).

*[ஆம்பி → ஆம்பிரம்.]*

**ஆம்பில்வடை** āmbil-vaḍai, பெ. (n.) **ஆமை வடை** பார்க்க; see āmai-vaḍai.

**ஆம்பிலம்** āmbilam, பெ. (n.) 1. புளிப்பு (பிங்.); sourness, acidity. 2. புளியமரம் (திவா.); tamarind tree. 3. கள் (மூ.அ.); toddy. 4. சூரைச்செடி; shrub - **Zizyphus napeca alias z. glabrata,** (சா.அக.). 5. உப்பிலி (மஞ்சிக. நி.); species of stinking swallow wort. (செ.அக.).

*[அம்புளி → அம்புளம் → ஆம்பிலம்.]*

ஆந்தை வகை:



கொம்பு ஆந்தை



கோட்டான்



ஊமன்



குடிஞை

**ஆம்பிலாவாரை** āmbilāvārai, பெ. (n.) புளியாரை; yellow wood – sorrel. (சா. அக.). **ஆம்பலா** பார்க்க; see āmbalā.

**ஆம்பிலி** āmbili, பெ. (n.) புளி; tamarind.

*[அம்புளி → அம்பிளி → ஆம்பிளி → ஆம்பிலி. அம்புளி → Skt. āmla.]*

**அம்புளி** பார்க்க; see āmbuḷi

அம்புளி முதலில் புளியம் பழத்தையும், புளிப்புச் சுவையுடைய கூழையும் (அம்பலி, அம்பிலி) புளிமாங்காயையும், மாமரத்தையும், புளிச்சுவையுடைய பிற செடிகொடிகளையும் குறித்து வழங்க லாயிற்று.

**ஆம்பு[1]–தல்** āmbu, 5. செ.குன்றா.வி. (v.i.) புல், இலை, தழை முதலியன ஈரமிகுதியால் புழுங்கிப் போதல்; (மது.வ.); decaying of shoots, leaves, grass etc; due to excessive dampness.

*[உம் → ஊம் → ஆம் → ஆம்பு.]*

**ஆம்பு[2]** āmbu, பெ. (n.) காஞ்சொறி (மலை.); climbing nettle, **tragia involucrata.** (சா. அக.).

*[ஒருகா. அம்பு → ஆம்பு → ஆம்புலி. அம்பு = கொடி. **ஆம்புலி** பார்க்க; see āmbuli.]*

**ஆம்புடை** ām-puḍai, பெ. (n.) வழிவகை (உபாயம்) (செ.அக.); means, expedient. "ஆம்புடை தெரிந்து வேந்தற் கறிவெனு மமைச்சன் சொன்னான்" (சீவக. 232).

*[ஆகும் → ஆம் + புடை. புடை = பக்கம், வழி.]*

**ஆம்புத்தி** āmbutti, பெ. (n.) திறமை (சாமர்த்தியம்); cleverness (W.).

*[ஆம் + புத்தி. புந்தி → புத்தி → Skt. buddi. புந்தி = அறிவு.]*

**ஆம்புயம்** āmbuyam, பெ. (n.) இதளியம் (பாதரசம்); mercury,.

*[அம்புயம் → ஆம்புயம்.]*

**ஆம்பியம்** பார்க்க; see āmbiyam.

**ஆம்புலம்[1]** āmbulam, பெ. (n.) சூரைச்செடி; oblique-leaved jujube.

*[ஆம்பிலம் → ஆம்புலம்.]*

**ஆம்பிலம்** பார்க்க; see āmbilam.

**ஆம்புலி** āmbuli, பெ. (n.) **ஆம்பு[2]** பார்க்க; see **āmbu[2].**

*[ஆம்முலி → ஆம்புலி.]*

**ஆம்பூர்** āmbūr, பெ. (n.) வெட்டெழுத்துச் சான்றுகளில் ஆண்மையூர் என்று கூறப்பட்டுள்ள ஊர்; place name mentioned 'Āṇmaiyūr' in epigraphy.

*[ஆண்மை + ஊர் – ஆண்மையூர் → ஆம்பூர்.]*

**ஆமக்கட்டி** āma–k–katti, பெ. (n.) சுரக்கட்டி (த.சொ.அக.); swelling caused by fever.

*[ஒருகா. ஆமை + கட்டி – ஆமக்கட்டி. புடைத்தெழும் கட்டி ஆமை முதுகு போன்றிருத்தலின், புடைப்புகளைக் குறிக்க ஆமை யென்னும் முன்னடை சேர்க்கப்பட்டது போலும். ஆமைக்கட்டி = புடைத்தெழும் கட்டி அல்லது வீக்கம்.]*

**ஆமைக்கட்டி** பார்க்க; see āmai-k-kaṭṭi.

**ஆமக்கணம்** āma-k-kaṇam, பெ. (n.) **ஆமைக்கணம்** பார்க்க; see āmai–k–kaṇam.

*[ஆமைக்கணம் → ஆமக்கணம்.]*

**ஆமக்கழிச்சல்** āma-k-kaliccal, பெ. (n.) **ஆமைக்கழிச்சல்** பார்க்க; see āmai–k–kaliccal.

*[ஆமைக்கழிச்சல் → ஆமக்கழிச்சல்.]*

**ஆமக்கள்** āmakkaḷ, பெ. (n.) கணவன் (இ.வ., இழி.வ.); husband (Loc. vul.).

*[ஆண்மகன் → ஆண்மக்கள் → ஆமக்கள் (இழி.வ.)]*

**ஆண்மகன்** பார்க்க; see āṇmagaṉ.

**ஆமக்கன்** āmakkaṉ, பெ. (n.) கணவன் (இ.வ., இழி.வ.); husband (Loc.vul.).

*[ஆண்மகன் → ஆண்மக்கன் → ஆமக்கன் (இழி.வ.).]*

**ஆண்மகன்** பார்க்க; see āṇmagaṉ.

**ஆமக்குருதிப்போக்கு** āma–k–kurudi–p–pō–k–ku, பெ. (n.) ஆமமும் (சீதம்) குருதியும் கலந்த வயிற்றுப் போக்கு; flux in which the stool consists chiefly of blood and mucus accompained with the griping of the bowels – dysentery. (சா.அக.).

*[ஆமம் + குருதி + போக்கு.]*

**ஆமகோளம்** āma-kōḷam, பெ. (n.) **ஆமரகோளம்** பார்க்க; see āmarakōḷam.

**ஆமகோளா** āmakōlā, பெ. (n.) **ஆமரகோளம்** பார்க்க; see āmarakōḷam.

*[ஆமரகோளம் → ஆமகோளம் → ஆமகோளா.]*

**ஆமச்சாறு** āma–c–cāṟu, பெ. (n.) செரியாத உணவுச்சாறு. பதப்படாத அன்னச்சாறு; imperfect chyle, unassimilated chyle.

*[ஆமம் + சாறு.]*

**ஆமடிக நவ்வல்** āmaḍiga–navval, பெ. (n.) வெண்ணாவல்; white species of Jamboo tree said to be very rare (சா.அக.).

*[ஆமம் + திகழ் + நவ்வல் (நாவல் மரம்).]*

**ஆமண்டகம்** āmaṇḍagam, பெ. (n.) **ஆமணக்கு** பார்க்க; see āmanakku.

**ஆமண்டம்** āmaṇḍam, பெ. (n.) 1. **ஆமணக்கு** பார்க்க; see āmaṇakkū. 2. ஒப்பனைசெய்தல் (த.சொ.அக.); decoration, beautification.

*[ஆம் → ஆமண்டம். அம் – ஆம் = அழகு.]*

**ஆமணக்கநெய்** āmaṇakka – ney, பெ. (n.) ஆமணக்கு வித்தினின்றும் காய்ச்சி அல்லது காய்ச்சாமல் எடுக்கும் நெய். இது சுவையற்றது; வயிற்றுக் கழிச்சலுக்குக் கொடுக்கப்படும்; குடலைத் துப்புர வாக்குவதும் விள்ளுவைத்தூய்மைப் படுத்துவதும் கருப்பையில் கோளாறுகளைச் சீராக்கவல்லது மாகும்; oil extracted either by way of boiling or by cold drawn process from the castor seeds. It is tasteless, irritating and appetising. It acts as a cleansing agent of the internal channel of the body and is wholesome to the skin. It purifies the semen and removes the vaginal and uterine disorders. (சா.அக.).

*[ஆமணக்கு + நெய் = ஆமணக்குநெய் → ஆமணக்கநெய்.]*

**ஆமணக்க முத்து** āmaṇakka – muttu, பெ. (n.) ஆமணக்குவித்து; castor seed (சா.அக.). "ஆமணக்கு முத்து ஆணிமுத்தாமா?" (பழ.).

*[ஆமணக்கு + முத்து = ஆமணக்குமுத்து → ஆமணக்கமுத்து.]*

**ஆமணக்கிலை** āmaṇa-k-kilai, பெ. (n.) ஆமணக்குச் செடியின் இலை, இதனை நெருப்பில் வாட்டிக் கட்டப் பெண்களுக்குப் பால் சுரக்கும்; green leaves of the castor–oil plant. An application of the heated leaves aids in the secretion of milk in women (சா.அக.).

*[ஆமணக்கு + இலை = ஆமணக்கிலை.]*

**ஆமணக்கு** āmaṇakku, பெ. (n.) 8 அடி முதல் 10 அடி




உயரம் வளர்வதும், கந்தருவன் கைபோன்றதும், ஏழு பிரிவுபட்டதுமான இலைகளைக் கொண்டதும், சிற்றாமணக்கு – பேராமணக்கு என இரு பெரும் பிரிவுகளைக் கொண்டதும் ஆகிய ஓர் எண்ணெய் வித்துச் செடி; castor seed plant. It is 8 to 10 ft. high; the leaves are deeply divided into seven sections at the margin and they are said to resemble a Ghandharva's hand. The seeds are oval, shining and black, dotted with spots. The plant is cultivated in all parts and is divided into two varieties namely – the small and the large, as distinguished from the size of the seeds. The different kinds, though end in the same termination in Tamil, apparently belong to different botonical groups and they are as follows: –

**இனவகை:**

1. சிற்றாமணக்கு – castor oil plant, (small).
2. பேராமணக்கு – castor oil plant (large).
3. சீமையாமணக்கு – palm tree, called also Rosalind tree; wild castor plant.
4. காட்டாமணக்கு – forest castor oil plant,
5. புல்லாமணக்கு – pullamanak, almost resembling சிற்றாமணக்கு.
6. வெள்ளையாமணக்கு – white castor oil plant.
7. உரலாமணக்கு – another kind.
8. கடலாமணக்கு – (sea + castor oil plant) sea–castor, same as காட்டாமணக்கு.
9. சூரிய காந்தாமணக்கு – another variety.
10. கல்லாமணக்கு – same as புல்லாமணக்கு.
11. கொடியாமணக்கு – creeping aumanak
12. பறங்கியாமணக்கு – foreign aumanak, same as papew. It is so called from its leaf.
13. எலியாமணக்கு – (rat + aumanak). adul oil plant,
14. ஏரிக்கரைக் காட்டாமணக்கு – (tank bund + **Jatropha curcas** ) adul oil plant same as எலியாமணக்கு .
15. செவ்வாமணக்கு – red castor plant.
16. மலையாமணக்கு – mountain castor plant.

Note : The regular aumanakku plant is known by several names, such as castor oil plant, lamp oil plant, pearl seed plant, palma christi (of the early Christians); palm tree (of Rosalind in Shakespeare), Johanah's gourd Ghandharva's hand, Kroton of the Greeks; Kiki of the Greeks and so on.

'ஆமணக்கு நட்டு ஆச்சா வாக்கலாகாது' (சீவக. 2613, உரை.)

**மறுவ:** அறுபதாங்கொட்டை, முத்துக்கொட்டை, கொட்டை முத்து, ஆதளம், ஆ மண்டம், ஆமண்டகம்..

**ம.** ஆவணக்கு; **க.** அவிழ், அவுடல, ஆமண்ட; **தெ.** ஆமுதமு, ஆமிதமு, ஆமண்ட; **குட.** ஆணகெமர; **து.** அலும்புட; **கோத.** அமண்ட்; **துட.** ஒமல்க்; **பட.** அவுண்டெ. **கொலா.** ஆமெத; **பிரா.** ஆமண்டம்; **பாலி.** எர்ண்ட, எலண்

**Skt.** āmanda, **Yēranda**–Vrikshala, **Hind.** Arand, erand, rēnd; **Duk.** Yarandi Kajchār. **Arab.** Shajratul–Khirvaa. **Pers.** Drakhte–bedanjir.

*[அவிழ்→ அவிழம்→ அவிணம்→ ஆவிணம்→ ஆவணம் → ஆமணம்→ ஆமணக்கு. அவிழ் = முளையவிழும் வித்து, எண்ணெய் வித்தாக மட்டும் பயன்படும் முதற்காரணம் கருதி 'அவிழ்' அடியாக இச்சொல் தோன்றியது.]*

**ஆமணக்குக்கொட்டை** āmaṇakku-k-koṭṭai, பெ. (n.) கொட்டைமுத்து, ஆமணக்கு வித்து; castor seed.

*[ஆமணக்கு + கொட்டை.]*

**ஆமணக்கு வித்து** பார்க்க; see āmanakku–vittu.

**ஆமணக்குநெய்** āma–ṇakku-ney, பெ. (n.) 1. ஆமணக்கு வித்தினின்றும் வடிக்கும் எண்ணெய்; இது சிற்றா மணக் கெண்ணெய் பேராமணக் கெண்ணெய் என இருவகைப்படும். இது விளக்கெரிக்கப் பயன்படுவதால் விளக்கெண்ணெய் என்றும் வழங்கும். சிற்றாமணக் கெண்ணெய் குழந்தைகளுக்கும் பெரியோர்களுக்கும் வயிற்றுக் கழிச்சலுக்காகக் கொடுக்கப்படும். பச்சையெண்ணெய்யை ஊற்றின எண்ணெய் என்பர்.

ஆமணக்கு எண்ணெய் சிறிது கசப்பும் வெகுட்டலுமுடையதாயிருந்தாலும், நீர்ச்சுருக்கு, மருந்துவேகம், மலச்சிக்கல் (முகவாதம்) (பக்கவாதம்), குன்மம், பாண்டு, (கீல்வாயு) உதிரச்சிக்கல் முதலியற்றைக் குணப்படுத்தும். குழந்தை வளர்ப்புக்கு மிகவும் இன்றியமையாதது. குருதிப்புண் (ரணம்) எரிபுண்களுக்கும் பயன்படுத்தினால் சீழ்பிடிக்காது; oil extracted from castor oil seeds and can be prepared in two ways i.e. cold drawn or boiled. The small–seed oil is more useful in medicine and the large – seed oil is generally useful to provide lamp–oil. It is a well known laxative used for children as well as for adults. It has a very disagreeable nauseous taste and odour.

It is used with advantage in cases of odysuria, viruslency of medicines, constipation, facial paralysis, hemiplagia, dyspepsia, dropsy, rheumatism, amenorrhea etc. It is considered a good nursing agent even like a mother in guarding the health of a child. It is a safe purgative to be taken by pregnant women and, by those after delivery. It is applied externally to wounds and blisters to prevent suppuration as a substitute for tincture of iodine (சா. அக.) 2. சிற்றாமணக்கு வித்தினின்றும் வடிக்கும் நெய் (தா. சொ. அக.); oil extracted from small seed of the castor plant. "ஆமணக்கு நெய்யா னல முண்டாம்" (பதார்த்த. 153).

**ம.** ஆவணக்கெண்ணெய். **குட.** அணகெண்ணெ

**மறுவ.** ஆமணக்கு நெய், விளக்கெண்ணெய், முத்துக்கொட்டை எண்ணெய், கையெண்ணெய்.

*[ஆமணக்கு + நெய்.]*

**ஆமணத்தி** āmaṇatti, பெ. (n.) மாட்டின் உடலிலிருந்து எடுக்கும் நறுமணப் பொருள் (கோரோசனை) (மூ.அ.); concretion found in the intestines of the cow, yellow orpiment extracted from the bile of cattle. (சா.அக.).

**மறுவ.** ஆமேற் புல்லூரி, கோரோசனை

*[ஆ + மணத்தி. மணம் = நறுமணம். ஆ = ஆன் (பசு).]*

**ஆமணத்திரம்** āmaṇattiram, பெ. (n.) **ஆமணத்தி** பார்க்க; see āmaṇatti.

*[ஆமணத்தி → ஆமணத்திரம்.]*

**ஆமதி** āmadi, பெ. (n.) நண்டு (நாமதீப.); crab.

*[ஒருகா. அம் = நீர். அம் →அது → அம்மது → ஆம்மது. ஆமது → ஆமதி = நீரில் வாழ்வது.]*

**ஆமந்திரிகை** āmandirigai, பெ. (n.) இடைக்கை யென்னும் இசைக்கருவி; kind of drum. "முழவொடு, கூடிநின்றிசைத்த தாமந்திரிகை" (சிலப். அரங். 1. 143).

**ம.** ஆமந்தரிக

**மறுவ** இடக்கை, ஆவஞ்சி

*[ஆமுகம் = தொடக்கம். ஆமுகம் + தருகை – ஆமந்திரிகை. எல்லா இசைக்கருவிகளுக்கும் ஒரு முகமாக இசைக்கத் தொடக்கம் தந்து அடக்கியாளுமியல்பு பற்றி இப்பெயர் பெற்றது.]*

கருவிகள் பல ஒருங்கியைந்து ஆங்கிலத்தில் orchestra என்றும் தமிழில் ஆமந்திரிகை என்றும் வழங்கும்.

"குழல்வழி நின்ற தியாழே யாழ்வழித்
தண்ணுமை நின்றது தகவே தண்ணுமைப்
பின்வழி நின்றது முழவே முழவொடு
கூடிநின் றிசைத்த தாமந்திரிகை"
(சிலப். அரங்கேற் 3.139–143)

அரும்பதவுரையாசிரியர் ஆமந்திரிகையாவது இடக்கை எனக் குறிப்பிட்டிருத்தலால் ஆமந்திரிகை இக்கருவியின் சிறப்புப்பெயராகும். **ஆவஞ்சி, ஆமுகம்** பார்க்க; see **āvanji, āmugam.**

**ஆமம்** [1] āmam, பெ. (n.) 1. பச்சையானது; that which is raw. 2. பழுக்காதது, காயாக இருப்பது; that which is immatured or unripened. 3. பாகஞ் செய்யப்

படாதது, வேகாதது; that which is uncooked or raw. 4. குடலிலுள்ள குளிர்ச்சி வழும்பு (சீதம்); mucus of the intestines. 5. குடல்வழும்பு (சீதம்) பற்றிய நோய், வயிற்றுக்கடுப்பு; disease connected with the mucous in the intestines – dysentery. 6. வழும்புக் (சீதம்) கட்டு அல்லது வழும்பு; unassimilated chyle. "விள்ளாத வாமம் விழுவிக்கும்" (பாலவா. 744). 7. மல வறட்சி; dry state of faecal matter in the intestines – costiveness.

ஆமம் → **Skt.** āma.

*[அம் = நீர். அம் → ஆம் → ஆமம் = நீருள்ளது, ஈரமுள்ளது, பச்சையானது, வேகாதது, ஈரம் புலராத வழும்பு (சீதம்).]*

**ஆமம்** [2] āmam, பெ. (n.) 1. செரியாமை (அசீரணம்); indigestion, 'ஆமத்திற் சோறு பாதகம், (ஈடு 1,4,8). 2. நோய்; illness, disease.

*[அம்முதல் = அரைபடல், செரித்தல். அம்மாமை → ஆமை → ஆமம். அம்மாமை = செரியாமை.]*

**ஆமை** [2] பார்க்க; see **āmai.** [2]

**ஆமம்** [3] āmam, பெ. (n.) 1. தண்ணீர்விட்டான்கிழங்கு; water root – **Asparagus raccmosus.** 2. காளான் (பச்.மூ.); mushroom, fungus. 3. கடலை; Bengal gram. 4. துவரை; dhol. 5. பதர் களைந்தெடுத்த தவசம் (த.சொ.அக.); cereals or foodgrains cleansed of im-purities.

*[அம் = நீர். அம் → ஆம் → ஆமம் = நீருள்ளது, பச்சையானது, பச்சையான காய்கறி, கிழங்கு, பருப்பு வகைகள், தவசம் ஆகியவற்றுக்குப் பொதுப்பெயர்.]*

**ஆமம்** [4] āmam, பெ. (n.) புளிப்பு; sourness. **ஆம்பிலம்** பார்க்க; see āmbilam.

*[அம்புளி → ஆம்பிலி → ஆம்பிலம் → ஆம்பம் → ஆமம்.]*

**ஆமம்** [5] āmam, பெ. (n.) வெண்மை; whiteness.

*[அம் = நீர். அம் → ஆம். ஆமம் = நீரைப்போல் தெளிந்தது, வெளிறியது, வெண்மையானது.]*

**ஆமம்** [6] āmam, பெ. (n.) 1. திரட்சி, கட்டி, அமலை; collection, crowd, blend. 2. முழுமை; entirety, wholeness. completeness. 2. கைவிலங்கு (சேர.நா.); fetters.

**ம.** ஆமம் (கைவிலங்கு).

*[அம்முதல் = சேர்தல், திரளுதல், செறிதல். அம் → ஆம் → ஆமம். ஆமம் = ஒன்றோடொன்று செறியச் செய்த விலங்கு.]*

**ஆமம்** [7] āmam, பெ. (n.) 1. கொடிது, தீது; that which is bad. 2. முடைநாற்றம்; odour of raw flesh, stench.

*[ஆமம் = பச்சையானது, வேகாதது, ஆகாதது, புலால், முடைநாற்றம் வீசுவது.]*

**ஆமம்** [8] āmam, பெ. (n.) மட்பாண்டம் சுடும் சூளை (ஆந்.வ.); kiln of the potters.

**தெ.** ஆமமு, ஆமு, ஆவமு.

*[ஆவி → ஆவியம் → ஆவமம் → ஆமம்.]*

**ஆவி** பார்க்க; see āvi.

**ஆமயம்** [1] āmayam, பெ. (n.) மாட்டுச்சாணம்; cow dung. "அத்தலை நிலத்தை நீரா லாமயம் பூசி" (கந்தபு. வில்வல. வதை. 12).

*[ஆ + **Skt.** maya > த. ஆமயம். ஆ = ஆன் (பசு). **ஆச்சாணம்** பார்க்க; see ā-c-cāṉam]*

**ஆமயம்** [2] āmayam, பெ. (n.) நோய்; disease. "ஆமயந்தீர்த் தடியேனை யாளாக் கொண்டார்" (தேவா. 1231,1).

*[அம்மாமை → ஆமை → ஆமயம்.]*

**ஆமை** [2] பார்க்க; see āmai [2].

**ஆமயன்** āmayaṉ, பெ. (n.) நோயாளி; patient, sickly person. (சா.அக.).

**ம.** ஆமயாவி

*[ஆமயம் → ஆமயன். ஆமயம் = நோய்.]*

**ஆமயம்** [2] பார்க்க; see āmayam[2]

**ஆமரம்** āmaram, பெ. (n.) 1. எட்டி மரம்; tree – **nux – vomica** (சா.அக.). 2. நெல்லிமரம்; Indian goose berry.

*[ஒருகா. ஆமம் + மரம் – ஆமமரம் – ஆமரம் = கோடையிலும் ஈரத்தை உள்ளடக்கி வைத்திருக்கும் மரம். அம் → ஆம் = நீர், ஈரம். நெல்லியும் இத்திறத்ததே.]*

**ஆமருப்பு** āmaruppu, பெ. (n.) 1. கால்நடைகளின் கொம்பு; cattle's horn. 2. மாட்டுக்கொம்பு; cow's horn.

*[ஆ + மருப்பு. ஆ = மாடு. மருப்பு = கொம்பு. மா = விலங்கு. மா → ஆ = கால்நடை.]*

**ஆமல்** āmal, பெ. (n.) 1. மூங்கில் (மலை.); spiny bamboo. 2. நச்சுமூங்கில் (மலை.); poison lily (சா.அக.).

*[ஆம்பல் → ஆமல்.]*

**ஆம்பல்** [2] பார்க்க; see āmbal [2].

**ஆமலகம்** āmalagam, பெ. (n.) 1. நெல்லிக்கனி; country goose berry. "கையிலாமலகக் கனியொக்கு மே" (தேவா. 465,2). "மாமுனிக் குணவாய்நின்ற மதுரவா மலகந் தன்னை" (பாரத. பழம்பொ. 3). 2. நெல்லிமரம்; country gooseberry tree. 3. பளிங்கு; crystal.

**ம.** ஆமலகம்; **க.** ஆமலக; **Skt.** āmalaka, āmalakan, āmalaki.

ஆம் + ஆலகம் – ஆமாலகம் → ஆமலகம்.

*[அம் → ஆம் → ஆமம் → ஆமலகம். அம் = நீர். ஆமலகம் = நீர் செறிந்த நெல்லிக்கனி, நாவறட்சியைப் போக்கும் நீருள்ள கனி. ஆமலகம் = நீர்போல் தெளிந்த வடிவும் ஒளி ஊடுருவும் தன்மையும் கொண்ட பளிங்கு.]*

வடமொழியில் ஆமலகம் என்னும் சொல்லுக்கு வேர்மூலம் தெளிவில்லை. தமிழில் தெளிவாக வேர்மூலம் உள்ளதோடு மட்டுமன்றி, இவ் வேரினின்று பிறந்த நூற்றுக்கணக்கான கூட்டுச் சொற்களையும் தனிச் சொற்களையும் தமிழிலும் ஏனைத் திரவிட மொழிகளிலும் நாட்டுமருத்துவத்திற்குதவும் மூலிகைப் பெயர்களிலும் காணமுடிவதால், ஆமலகம் தமிழ்ச் சொல் என்பது தெரிதரு தேற்றம்.

**ஆமலம்** āmalam, பெ. (n.) தூய்மை; tidiness. "இறையாமலங் கையான்" (த.சொ.அக.).

*[ஆம் → ஆமல → ஆமலம் = நீராற் பெறும் தூய்மை.]*

**ஆமலிகை** āmaligai பெ. (n.) புளிப்பு; sourness.

*[ஆமலம் → ஆமலி → ஆமலிகை.]*

**ஆமலையரிசி** āmalai-y-arisi, பெ.(n.) ஆமளையரிசி (சா.அக.) a kind of grain.

*[ஒருகா. ஆமல் → ஆமலை+அரிசி. ஆமல்=மூங்கில். ஆமலையரிசி = மூங்கிலரிசி.]*

ஆமலையரிசிக்கு ஆமளையரிசி என்று திருத்தம் காட்டிய சாம்ப சிவம்பிள்ளையவர்கள் ஆமளையரிசி என்னும் சொல் லுக்குத் தன் அகரமுதலியில் விளக்கம் தரவில்லை. ஆதலின் ஆமளையரிசிமுன்னதன்பாட வேறுபாடாயிருக்கலாம். ஆமலையரிசி மூங்கிலரிசி வகைகளுள் ஏதேனும் ஒன்றைச் சுட்டியதாகவும் இருக்கலாம்.

**ஆமவடை** āma-vaḍai, பெ.(n.) 1. கடலைப்பருப்புடன் உசிலை(மசாலை) சேர்த்து உரலிலிட்டு ஆட்டி எண்ணெய் அல்லது நெய்யிற்சுட்டுக் குழம்பிற் கொதிக்க வைத்துப் பக்குவப்படுத்திய வடை; cake prepared out of Bengal gram mixed with other spices and fried in oil or ghee partially and then mixed in the sauce and boiled. (சா.அக.) 2. தயிர்வடை; cake prepared out of Bengal gram mixed with other spices and fried in oil and then soaked in butter milk or curd.

**ம.** ஆமவட, **க.** ஆமவடெ, ஆம்பொடெ; **தெ.** ஆமவட, ஆவட; **து.** ஆமவடெ, ஆம்பொடெ

*[ஆமம்+வடை → ஆமவடை = புளிப்புச் சுவை கலந்த வடை. அம்புளி → அம்பிலி → ஆம்பிலம் → ஆமிலம் → ஆமலம் → ஆமம் = புளிப்பு.]*

**ஆமம்**[4] பார்க்க; see āmam[4]

**ஆமவர்க்கம்** āma-varkkam, பெ. (n.) காய்கறிகளின் மீது வாங்கப்பட்ட வரிவகை; tax on unripe fruits (Insc.).

*[ஆமம் +* **Skt.** *Varga → த. வர்க்கம். ஆமம் = பச்சையான காய்கறிகள்.* **Skt.** *varga = வகை.]*

**ஆமளம்** āmaḷam, பெ. (n.) சிவபோற்றி (தோத்திர) வகை; hymn in praise to Śiva. "ஆமளஞ் சொலி யன்பு செய்யினல்லால்" (தேவா. 233,4).

*[ஓம் → ஆம் → ஆமளம் = சிவனை வழிபடுங்கால் கூறப்படும் மந்திரம், வழிபாட்டுச் செய்யுள். ஆம் + அளம். ஆமளம் →* **Skt.** *Yāmala. அளம் = பெயரீறு. ஒ.நோ. அப்பளம்.]*

வடமொழியாளர் இருக்கு வேத காலத்திற்கு முந்தைய காலத்தில், சிவ வழி பாடறியாத வராதலின், குமரிக் கண்ட நாகரிகந் தொட்டு சிவ வழிபாடு தமிழர் மரபுரிமையாயிருத் தலின், ஆமளம் என்னும் போற்றி வழிபாடு தமிழருடையதே என்பதில் ஐயமில்லை. வடமொழியில் 'யா' என்னும் முதனிலை செல்லல், போதல் என்னும் பொருளினது. அதுவும் 'இய' என்னும் தமிழ்வேரின் திரிபு.

**ஆமளவு** āmaḷavu, பெ. (n.) கூடியவரை, இயன்ற அளவு; to the extent possible.

**ம.** ஆமளவு, ஆமள.

*[ஆகும் + அளவு = ஆகுமளவு → ஆமளவு]*

**ஆமா**[1] āmā, பெ. (n.) 1. காட்டுமாடு அல்லது எருது, இது நாவாற்றடவின் சாவு நேரும் எனக் கருதப் படுவது; wild ox or cow whose lick is supposed to cause death. (சா.அக.). "கானத்திலுள்ள கலை மானினங் காட்சி யாமா" (பாரத. சம்பவ. 47). 2. காட்டெருமை; wild buffalo, bison.

*[ஆ + மான் - ஆமான் → ஆமா = ஆவினைப் போன்றிருக்கும் காட்டுவிலங்கு. ஆ = மாடு. மா = விலங்கு.* **ஆமான்** *பார்க்க. see āmāṉ.]*

**ஆமா**[2] āmā, பால் கொடுக்கும் செவிலித்தாய்; nurse engaged to suckle an infant, wet nurse.

*[ஆய் + அம்மா - ஆயம்மா → ஆமா.]*

**ஆமா**[3] āmā, பெ. (n.) 1.நெல்லிக்காய்; fruit of Indian goose berry. 2. கடுக்காய்ப்பூ; chebulic myrobalan galls. (சா. அக.).

*[1.ஆமலகம் → ஆமா. 2. ஆமரகோளம் → ஆமகோளா → ஆமா.]*

**ஆமா**[4] āmā, செ.கு.வி. (v.i.) **ஆமாம்** பார்க்க; see āmām.

**பிராகி.** ஆமா

*[ஆம் + ஆம் = ஆமாம் → ஆமா (கொ.வ.).]*

**ஆமாகோளம்** āmākoḷam, பெ. (n.) **ஆமரகோளம்** பார்க்க; see āmarakoḷam.

**ஆமாகோளா** āmākoḷa, பெ. (n.) **ஆமரகோளம்** பார்க்க; see āmara-koḷam.

**ஆமாங்கு** āmāngu, பெ. (n.) 1. ஆகவேண்டிய முறை; that which has to happen or become. 2. தீங்கு (விபரீதம்); calamity, evil. (த.சொ.அக.).

*[1. ஆகும் + ஆங்கு - ஆகுமாங்கு → ஆமாங்கு. 2. அழி + பாங்கு - அழிபாங்கு → அழிமாங்கு → ஆமாங்கு.]*

**ஆமாத்தியன்** āmāttiyaṉ, பெ. (n.) 1. அமைச்சன் (திவா.); minister. 2. அறிவுரை கூறுபவன்; coun-

sellor, advisor. 3. தானைத்தலைவன்; chief of the army. 4. மருத்துவன்; doctor, physician.

*[அமைத்தன் → ஆமைத்தன் → ஆமாத்தியன்.]*

அமைத்தன் = ஒன்றைச் செவ்வனே செய்வதில் திறம்படப் பணியாற்றுபவன். அமைத்தல் = ஒழுங்குறச்செய்தல். அமைத்தன் → **Skt.** āmātya. அமைத்தன் → அமைச்சன்.

வடமொழியாளர் உடனிருப்பவன் என்னும் வேர்மூலம் காட்டல் பொருந்தாது. உடனிருப்போர் அனைவரும் அமைச்சர் போன்ற பெருந்திறனாளர் அல்லர் என்பது வெளிப்படை.

**அமைச்சன்** பார்க்க; see āmaiccaṉ.

**ஆமாப்போடு-தல்** āmā-p-pōḍu-, 20 செ.கு.வி. (v.i.) எதற்கும் ஒத்துக் கூறுதல் (இ.வ.); say ditto (Loc.).

*[ஆம் + ஆம் – ஆமாம் + போடு – ஆமாப்போடு.]*

**ஆமாம்** āmām, இடை. (int.) ஓர் இசைவுக்குறிச்சொல்; quite so, yes, indeed.

*[ஆம் + ஆம் – ஆமாம்.]*

**ஆமாயம்** āmāyam, பெ. (n.) **ஆமயம்** பார்க்க; see āmayam.

*[ஆமயம் → ஆமாயம்.]*

**ஆமாலை சோமாலை** āmālai–śōmālai, பெ,. (n.) மிக்க அயர்ச்சி; excessive fatigue (Loc.). கடுங்காய்ச்சலால் குழந்தைக்கு ஆமாலை சோமாலையாகி விட்டது (இ.வ.).

*[ஒருகா.ஆமம்→ ஆமாலே.ஆமம் =நோய், நோயால் விளையும் துன்பம். ஆமாலை சோமாலை என்பது எதுகை மரபிணைச்சொல்.]*

**ஆமாறு** āmāṟu, பெ. (n.) வழிவகை, ஆகும் வழி; plan, device, scheme. "ஆமாறறியும் பிரானே" (திவ். பெரியாழ். 2,7,8).

*[ஆகும் → ஆம் + ஆறு → ஆமாறு. ஆறு = வழி, முறை.]*

**ஆமான்** āmāṉ, பெ. (n.) காட்டுமாடு; wild cow or ox.

"அந்தழைக் காடெலாந் திளைப்ப வாமானினம்" (சீவக. 1902).

"ஆமானினந்திரியுந்தடஞ்சாரல்" (தணிகை. களவு. 333).

**ஆமா** பார்க்க; see āmā.

*[ஆ + மான்.]*



ஆமான் - காட்டு மாடு

**ஆமான் புகல்வி** āmāṉ–pugalvi, பெ. (n.) ஆமான் ஏறு (குறிஞ்சி.253); male of **bos gaveus.** (செ.அக.).

"புழற் கோட்டாமான் புகல்வியும் களிறும்" (குறிஞ்சிப். 253).

*[ஆமான் + புகல்வி.]*

**ஆமானவன்** āmāṉavaṉ, பெ. (n.) சிறந்தவன்; மேலோன் (வின்.); worthy or competent person (W.).

*[ஒருகா. ஆகு → ஆ + மானவன். மானவன் = மாந்தன்.]*

**ஆமிசம்** āmiśam, பெ. (n.) 1. உணவு; food. "எனக்காமிடமாய் வருவாய்கொல்" (கம்பரா. கடறாவு. 67.). 2. ஊன், புலால்; meat, flesh. "ஆகலின் யானினியிதனுக்காமிடம்" (கம்பரா.கவந்தன்,24). 3. கைக்கூலி; bribes. 4. நுகர்தற்குரிய பொருள்; object of enjoyment. 5. நுகர்ச்சி; enjoyment. 6. விருப்பம்; desire.

**Skt.** āmisa.

*[ஒருகா. அம்முதல் = அரைத்தல், தின்னுதல், மெல்லுதல், தின்னுதல், நுகர்தல், நுகர்தற்குரிய பொருள், நுகர்ச்சி. விருப்பம். அம்மு → அம்முதம் → ஆமுதம் → ஆமிதம் → ஆமிசம்.]*

**ஆமிநாயம்** āmināyam, பெ. (n.) 1. ஆகமம் (சை.பி. 30); agamas, scriptures believed to be revealed by God and peculiar to Śaivism. 2.பரம்பரையான வழக்கம்; hereditary customs. 3. மரபுவழி வரும் நல்லுரை (உபதேசம்); spiritual instruction given down the age traditionally. 4. மறை, வேதம்; the Sacred Book. (த.சொ.அக.).

*[அம்மு → ஆமு → ஆமி. அம்முதல் = உண்ணல், உட்கொளல், செவிக்கொளல். ஆமி = செவிக்கொளத்தக்க அறவுரை, அறநூல். நயன் → நயம் → நாயம் = நன்னெறி, நீதி. ஆமி + நாயம்.]*

**ஆமிரகலை** āmira-kalai, பெ. (n.) கடல்நுரை; seafroth. (சா.அக.).

*[ஒருகா. ஆமிரம் + கலை. ஆமிரம் = வெண்மை. வெண்கலையுடைய நிலாப்போல் நிறங்கொண்டமை பற்றி கடல் நுரை இப் பெயர் பெற்றிருக்கலாம்.]*

**ஆமிரம்** 3 பார்க்க; see āmiram3.

**ஆமிரகா** āmirakā, பெ. (n.) வெண்முள்ளி; prickly nail-dye, as opposd to செம்முள்ளி, red nail -dye.

*[ஒருகா. ஆமிரம் + கா. ஆமிரம் = வெண்மை. கா = சோலை, செடிகளின் தொகுதி.]*

**ஆமிரம்** 3 பார்க்க; see āmiram3.

**ஆமிரதம்** āmiradam, பெ. (n.) நாரத்தை; bitter orange.

*[அம் → ஆம் + இரதம். அம் = நீர். இரதம் → இரசம் = சாறு. ஆமிரதம் = நீர்ச்சாறு கொண்ட பழம்.]*

**ஆமிரம்**[1] āmiram, பெ. (n.) மாமரம்; mango tree, "ஆடல்வேலெறிதலோடுமாமிரவடிவாய்" (கந்தபு. சூரபன்.488.). 2. புளியமரம்; tamarind tree, 3. புளிப்பு; sourness (சா.அக.).

**ஆமிரம்**[2] āmiram, பெ. (n.) வெண்மை; whiteness.

*[அம் → ஆம் → ஆமிலம் → ஆமிரம். அம் = நீர். ஆமிலம் = நீர் வடிவானது, நீர்போல்தெளிந்திருப்பது, வெளுத்திருப்பது, வெண்மை.]*

**ஆமிரம்**[3] āmiram, பெ. (n.) 1. பலம், ஓர் எடையளவு; measure of weight. " வெவ்வேறிரண்டரை யாமிரஞ் சேர்த்து" (தைலவ. தைல.3); (த.சொ.அக.).

ஒரு பலம் = 320 குன்றிமணி.

*[ஒருகா. ஆமிலம் → ஆமிரம் = புளிப்பு, புளியமரம், புளியங்கொட்டை, புளியங்கொட்டைகளை எடையள வாகக் கொண்ட ஒரு நிறுத்தலளவு]*

**ஆமிலம்** āmilam, பெ. (n.) 1. புளிப்பு (பிங்.); acidity, sourness. 2. புளியமரம் (சூடா.); tamarind tree. 3. புளி (தைலவ. தைல. 38); tamarind fruit.

*[அம்புளி → ஆம்புளி → ஆமிலி → ஆமிலம்.]*

**ஆமுகம்** āmugam, பெ. (n.) தொடக்கம்; beginning (த.சொ.அக.).

*[ஆகு + முகம் – ஆகுமுகம் → ஆமுகம்.]*

**ஆமுகர்** āmugar, பெ. (n.) நந்திதேவர்; the god Nandideva.

*[ஆ(காளை)+முகர். முகம் → முகர் = முகத்தை யுடையவர்.]*

**ஆமுடையாள்** āmuḍai-y-āḷ, பெ. (n.) **அகமுடையாள்** பார்க்க; see āgamuḍai-y-āḷ.

*[அகமுடையாள் → ஆமுடையாள் (கொ.வ.).]*

**ஆமுடையான்** āmuḍai-y-āṉ, பெ. (n.) **அகமுடையான்** பார்க்க; see āgamuḍai-y-āṉ. "ஆமுடையானைக் கொன்ற அறநீலி. (பழ.)".

*[அகமுடையான் → ஆமுடையான்.]*

**ஆமுத்து** āmuttu, பெ. (n.) ஆவின் பல்லிற் பிறப்பதாகக் கூறப்படும் முத்து; pearl like substance said to be derived from the teeth of a cow.

*[ஆ + முத்து.]*

**ஆமூர்** āmūr, பெ. (n.) நல்லியக்கோடனின் ஊர் (கதி. அக.); town in which the chieftain Nalliyakkōḍaṉ lived. 2. அப்பர் பிறந்த ஊர்; Appar's birth place.

*[ஒருகா. ஆ + ஊர் → ஆவூர் → ஆமூர். இது முக் காவல் நாட்டிஉள்ளதென்றும், சோணாட்டிஉள்ள தென்றும் கூறுவர்.]*

**ஆமூர்க்கவுதமன் சாதேவனார்** āmūr-k-kavudamaṉ-sādēvaṉār, பெ. (n.) ஆமூர் வானவனைச் சிறப் பித்துப் பாடிய கடைக்கழகப் புலவர் (அக நா. 159); Tamil poet who praised the chieftain Āmūr Vāṉavaṉ in the Sangam age.

*[ஆமூரில் வாழ்ந்த இவர், வடமொழிப் பெயர் பூண்டிருத்தலால் அந்தணராயிருக்கலாம். Skt. Gaudama + Sahādēva.]*

**ஆமூர்மல்லன்** āmūr-mallaṉ, பெ. (n.) கடைக்கழகக் காலத்திருந்த ஒரு பெருமகன்; Sangam noble.

"இன்கடுங் கள்ளி னாமூ ராங்கண் மைந்துடை மல்லன் மதவலி முருக்கி" (புறம். 80 - 1, 2.)

**ஆமூர்முதலி** āmūr-mudali, பெ. (n.) **களப்பாளன்** பார்க்க; see Kaḷappāḷaṉ.

**ஆமேற்புல்லூரி** āmēṟ-pullūri, பெ. (n.) 1. **ஆமணத்தி** பார்க்க; see āmaṇatti. 2. கடுக்காய்ப்பூ; flower of gall, which is an excrescence found on the leaf.

*[ஆ + மேல் + புல்லூரி. ஆ = மாடு. ஆவின் வயிற்றிற்றோன்றும் கோரோசனையும், ஆவயிற்றிற் கசிந் துருவாகும் கோரோசனை போல் கசிந்துரு வாகும் கடுக்காய்ப்பூவும், புல்லிக் (பொருந்தி) கசியும் இயல்பு பற்றி ஆமேற்புல்லூரி எனப்பட்டன.*

**ஆமை**[1] āmai, பெ. (n.) நீரிலும் தரையிலும் வாழ்வதும், மேலும் கீழும் ஓடுகளுள்ளதும், நான்கு கால் களையும் தலையையும் ஓட்டுக்குள் இழுத்துக் கொள்ள வல்லதும், முட்டையிட்டுக் குஞ்சு பொரிப்பதும் ஆகிய ஊர்ந்து செல்லும் உயிரி; tortoise, any land or freshwater chelonian, reptile encased in two scaly or leathery shields forming a shell from which the head and legs protrude, turtle, any member of chelonia or testidinata. "ஆமை உலகம் கிணறு தான் (பழ.)".

**ஆமையின் வகைகள் :**

நிலத்தாமை (கரையாமை), நீராமை, கரட்டாமை, காட்டாமை, தத்தைச்சுண்டன் ஆமை (ம.), வெள்ளாமை, பச்சையாமை, கடலாமை. கருப்பாமை (பறையாமை).

ம. ஆம; க., குட. ஆமெ; **தெ**. தாமேலு, தாம்பேலு, தாபேலு; **து**. ஏமெ; **கோத**. ஏம்; **கோண்**. கெமுல்; **கூ**. சேம்பி; **துட**. ஆமி.

*[அம் → ஆம் + ஐ – ஆமை. அம் (ஆம்) = நீர். ஆமை = நீரில் வாழ்வது.]*

**ஆமை**[2] āmai, பெ. (n.) 1. செரியாமையால் ஏற்படும் நோய்; disease arising from indigestion. 2. நோய்; disease. (சா. அக.).

*[அம்மாமை → ஆமாமை → ஆமை. அம்மாமை = செரியாமை. ஆமை → Skt. āma]*

*அம்மாமை பார்க்க;* see ammāmai.

**ஆமை [3]** āmai, பெ. (n.) அரச இலச்சினைகளுள் ஒன்று (த. சொ. அக.); one of the symbols of a king.

பல்வேறு விலங்குகளும் பறவைகளும் அரச இலச்சினைகளாக இருந்தாற்போல் ஆமையும், ஓரரசனுக்கு கொடியின்கண் அல்லது திருச்சின்னத்தில் இலச்சினையாக இருந்திருக்கலாம்.

**ஆமை [4]** āmai, பெ. (n.) ஒருவகை மணம் (த. சொ. அக.). a kind of fragrance.

*[ஒருகா. நோய் காரணமாக எழும் ஒருவகை மணத்தைக் குறித்ததாகலாம். ஆமை = நோய் ஆமை [2] பார்க்க; see āmai [2].]*

**ஆமை [5]** āmai, பெ. (n.) பச்சையானது, பழுக்காதது, வேகாதது; that which is raw, unripened, uncooked, unboiled.

*[அம் → ஆம் → ஆமை.]*

**ஆமைக்கட்டி** āmai-k-katti, பெ. (n.) காய்ச்சலுக்கு ஏற்ற மருத்துவம் செய்யாததாலும், அடிக்கடி காய்ச்சலேற்படுவதாலும், மண்ணீரல் சுரந்து கட்டியைப் போலத் தோற்றுவிக்கும் ஒருவகை வீக்கம்; இதனைக் 'காய்ச்சற்கட்டி' என்றும் கூறுவர். இது, நாட்பட, வலிதோன்றாமல் பருத்துக் கனத்து இடப்பக்கம் மந்தமான வலியை யுண்டக்கும். இது குழந்தைகளுக்குச் சில நேரங்களில் வயிற்றின் பாதியளவு பருத்து, சூணவயிறு ஏற்படக் காரணமாகும்; the enlargement of the spleen which is the result of repeated attacks of acute congestion – chronic congestion ; It is also known as 'Ague cake '. It comes on so gradually and painlessly, that if it is long left unattended to, until at length the enlarged organ excites fullness, weight and dull pain in the leftside.

Some times it is so protuberant that it fills up half the cavity of the abdomen developing in children a condition known as pot-belly (சா. அக.).

*[ஆமை + கட்டி. ஆமை [2] பார்க்க see amai [2].]*

**ஆமைக்கல்** āmai-k-kal, பெ. (n.) தரையிற் பதிக்கும் அறுகோணமுடைய கல்; hexagonal tile or stone for flooring.

*[ஆமை + கல்.]*

**ஆமைச்சுரம்** āmai-c-curam, பெ. (n.) சிறுபிள்ளைகளுக்கு ஆமைக்கட்டியினால் வரும் ஒருவகைக் காய்ச்சல்; fever common in children due to the enlargement of the spleen – recurrent fever; relapsing fever.

*[ஆமை + சுரம்.]*

**ஆமைச்சூலை** āmai-c-cūlai, பெ. (n.) செரியாமையால் தொப்பூழைத் துளைத்து நடுநரம்பு புண்போல் வலித்துப் புளித்த ஏப்பம், நாவறட்சி, உடம்பு வெளுப்பு முதலிய குணங்களோடு கூடிய ஒருவகைச் சூலைநோய்; a disease arising from intestinal indigestion. It is marked by gripping pain in the naval region, sour belch, dryness of the tongue, bodily pain and bloodlessness – Sabbural colic.

*[ஆமை + சூலை.]*

**ஆமைச்சொறி** āmai-c-cori, பெ. (n.) ஆமை உருவுடைய வெண்ணிறமான தோருயிரி; tortoise shaped white coloured animal living in the water.

*[ஆமை + சொறி.]*

**ஆமைத்தாலி** āmai-t-tāli, பெ. (n.) ஆமை வடிவில் செய்யப்பட்ட தாலி; gold tali, in turtle-shape. "ஆமைத்தாலி பூண்ட" (பெரியாழ், 1, 7, 2).

ம. ஆமத்தாலி

*[ஆமை + தாலி.]*

**ஆமைதவழி** āmai-tavali, பெ. (n.) ஆமை நடமாட்டத்தால் ஆகாதென்று விலக்கிய நிலம்; land given up in consequence of a tortoise having crawled over it. "உடும்போடி ஆமைதவழி புற்றும்" (S.I.I.iii, 35).

*[ஆமை + தவழி. தவழி = தவழ்ந்து சென்றதால் குற்றம்பட்ட நிலம். தவழ் + இ - தவழி. இகரம் உடைமை குறித்த ஈறு.]*

**ஆமைநங்கூரம்** āmai-nangūram, பெ. (n.) ஆழமில்லாக் கடற்பரப்பில் கப்பலை நிறுத்துவதற்குரிய நங்கூரம்; a kind of anchor which is used in less deep sea.

*[ஆமை + நங்கூரம்.]*

**ஆமைநண்டு** āmainandu, பெ. (n.) ஆமையைப்


ஆமை நண்டு

போன்றதும், சிவந்த முட்களும் மஞ்சள் நிறமும் கொண்டதும், அலைமோதும் கடற்கரையோரத்தில் வாழ்வதுமாகிய ஒருவகைக் கடல் நண்டு; a sea-crab

ஆமை வகைகள்:



நிலத்தாமை



கடலாமை



நன்னீர் ஆமை



நீராமை



விண்மீன் ஆமை

resembling a turtle found on the sea-shore frequented by waves. It is yellow in colour with red spikes. (சா.அக.).

ம. ஆமநண்டு.

*[ஆமை + நண்டு.]*

**ஆமைநெய்** āmai–ney, பெ. (n.) ஆமைக் கொழுப் பினின்றும் காய்ச்சியெடுக்கும் நெய்; oil extracted from the fat of turtles - turtle fat. "ஊனாமைநெய் மூலமோட்டும்" (பதார்த்த. 151).

*[ஆமை + நெய்.]*

**ஆமைப்பலகை** āmai-p-palagai, பெ, (n.) ஆமை வடிவிற் செய்யப்பட்ட மணை; low wooden seat, shaped like a tortoise.

ம. ஆமப்பலக

*[ஆமை + பலகை.]*

**ஆமைப்பூட்டு** āmai-p-pūṭṭu, பெ. (n.) ஆமை வடிவில் செய்யப்பட்ட பூட்டு; padlock, in the shape of a turtle (W.). (தஞ்சை. வழ.).

ம. ஆமத்தாழு, ஆமப்பூட்டு

*[ஆமை + பூட்டு.]*

**ஆமைமடி** āmai–maḍi, பெ. (n.) 1. பால்சுரப்புக் குறைந்த பெரியமடி; big udder yielding less milk. 2. பால் நிரம்பச் சுரக்கும் சிறுமடி (வி.); compact udder yielding much milk (W.).

*[ஆமை + மடி. ஆமையென்னும் அடைமொழி பால் சுரப்பின் மிகுதி காட்டும் பருமைப்பொது.]*

**ஆமைமுதுகோடு** āmai–mudugōḍu, பெ. (n.) **ஆமையோடு** பார்க்க; see āmai-y-ōḍu.

*[ஆமை + முதுகு + ஓடு.]*

**ஆமையடி** āmai-y-aḍi, பெ. (n.) ஆமையின் பாதத்தைப் போல் தோன்றும் ஒருவகைப் புண்; ulcer resembling the foot of a turtle. (சா.அக.).

*[ஆமை + அடி. அடி = பாதம். ஆமையடி = ஆமையின் அடிபோன்ற புண்.]*

**ஆமையடிச்சிலந்திவாளை** āmai-y-aḍi-c-cilandi–vāḷai, பெ. (n.) ஒருவகைச் சிலந்தி நோய்; syphilitic resembling the impression left by a turtle foot.

*[ஆமை + அடி + சிலந்தி + வாளை.]*

**ஆமையாழ்** āmai-yāḻ, பெ. (n.) செவ்வழி யாழ்த்திறம்; a kind of lute. (W.).

*[ஆமை + யாழ்.]*

**ஆமையோட்டுப்பொடி** āmai-y-ōṭṭu-p-poḍi, பெ. (n.) ஆமையோட்டினின்றும் செய்த நுண்பொடி; white calcined powder prepared out of turtle - shell.

*[ஆமை + ஓடு + பொடி.]*

**ஆமையோடு** āmai-y-ōḍu, பெ. (n.) ஆமையின் முதுகோடு; shell of a tortoise called caret.

*[ஆமை + ஓடு.]*

**ஆமைவேளா** āmai–vēḷa, பெ. (n.) ஆமையைப் போன்ற உருவமுடைய வேளாமீன் (தஞ்சை.மீ.வ.). tortoise shaped sea fish.

*[ஆமை + வேளா.]*

**ஆய்[1]-தல்** āy-,2 செ.கு.வி. (v.i.) 1. நுணுகுதல்; to deminish, to be reduced. "ஒய்தலாய்தல் ... உள்ளதன் நுணுக்கம்" (தொல்.சொல்.330). 2. அழகமைதல்; to be or become beautiful. "ஆய்ந்த மோட்டின வான்" (சீவக. 2395).

க. ஆய்

*[ஐ → அய் → ஆய். ஐ = அழகு, நுண்மை.]*

**ஆய்[2]-தல்** āy-,2. செ.கு.வி. (v.i) 1. முன்னாற்சாய்தல், முன்செலல்; to lean forward, to go forward. 2. வருந்துதல்; to suffer pain. "மடவாய் ஆய சிறிதவள் செல்லாள்" (திணைமாலை. 17). 3. அசைதல்; to shake. "ஆய்மறியே" (திருக்கோ. 125 உரை). 4. படர்தல், பரவுதல், உருகுதல், கலத்தல்; to spread, melt, mix. 5. வருதல்; to come, arrive,

ம., க., தெ. ஆய்; து. ஆயுனி; பாலி. ஆய் (ஊதியம், இலாபம்)

*[ஊ → ஒ → ஆ (முன்செலற்கருத்து) ஆ → ஆய்.]*

**ஆய்[3]-தல்** āy-, 2 செ.குன்றாவி. (v.i.) 1. ஆராய்தல்; தேடுதல்; to search, examine, investigate. "ஆய்ந் தாய்ந்து கொள்ளாதான்" (குறள். 792). 2. சிந்தித்தல் (பிங்.); to consider. 3. தெரிந்தெடுத்தல்; to select, seek out. கீரையை ஆய்ந்தாள். (உ.வ.). 4. கொண்டாடுதல்; to celebrate, to extol. "ஆயும் ஆடுதிறலாற்கு" (பு.வெ.16). 5. பிரித்தெடுத்தல், திரட்டுதல், சேர்த்தல்; to separate, sift, collect. 6. கொய்தல்; to pluck, gather. 7. காம்புகளைதல்; to nip off. 8. குத்துதல்; to stab. "அரக்கன்றனைச் சூலத்திலாய்ந்தது" (தேவா. ).

க. ஆய், ஆயி; து. ஆயு, ஆயுனி; குட. ஆய்; பிரா. ஆச்; கோண். ஆச்ன; கூ. அஸ்க்; குவி. ஆசலி; குருக். ஆதா; மா. ஆதே; Pers. ac.

*[ஆ → ஆய். ஆ = முன்னூக்கல், அசைத்தல், பிரித்தல், ஆராய்தல்.]*

**ஆய்[4]** āy, பெ. (n.) 1. அழகு; beauty. "ஆய்பொறி யுழுவை" (கலித். 46.4). 2. மென்மை; softness, tenderness. "ஆய்கரும்பின் கொடிக் கூரை" (புறநா. 22.15). 3. நுண்மை; fineness, minutness. "ஆய் தொடி யரிவையர்" (புறநா. 117.10) 4. சிறுமை;

smallness; "ஆய்நுதன் மடந்தை" (புறநா. 249:10). 5. துன்பம் (அக.நி.); suffering, pain.

**ம., க., தெ.** ஆய்.

*[ஐ → அய் → ஆய். ஐ = நுண்மை, அழகு, மென்மை, சிறுமை. 5. அசை (வருத்தம்) → அயை → அயா → ஆய் (வருத்தம்).]*

**ஆய்** [5] āy, பெ. (n.) 1. தாய் ; mother. "அம்முலை நல்கிய வாயென உவந்தனன்"(ஞானா.35,10). 2. பெண்கள் பெயருடன் இணைத்துச் சொல்லும் மதிப்புரவுச்சொல்; honorary feminine suffix. 3. பாட்டியின் தாய்; mother of grandma.

**ம., க.** ஆய்; **தெ.** ஆய (பெண்பாற்பெயரீறு); **துட.** தோய்; **கோத.** ஆய (பெண், மனைவி); **குட.** தாயி (பாட்டி); **து.** தாயி; ஆயல், ஆயி; **நா.** அய்ம (பெண்); **கூ.** அஇய், ஐஆ. ஐஆலீ. **குரு.** அயோ; **மா.** அய்ய; **பிரா.** அய், அயி; **கோண்.** யாய்; **கொண்.** ஆய்; **குவி.** ஈய; **குவி.** ஆா (தாய், மகள், உடன்பிறந்தவள்); **கொலா.** ஆய; **ஒல்.** அய்; **கொங்.** ஆய்; **இந்.** ஆயா; **வங்., ஒரி., குச்., மரா.** ஆயீ, ஆய; **சிந்.** ஆய்; **உரு. பார. அர.** தாய். **E.** ayah; **port.** aia. **ஆத்.** ஒயி (பெண்.)

*[ஐயன் (ஆ.பா.) → ஐயை (பெ.பா). ஐயை → அய்யை → ஆய். பெண்பால் உயர்வுப் பெயரான ஐயை → ஆய் எனத் திரிந்தபின் தாய், தமக்கை, பெண், மகள், பாட்டி ஆகிய பெண்பாற் பெயர்களாயின.]*

**ஆய்**[6] āy, பெ. (n) 1. இடைக்குலம்; cowherd caste. "மாறுபட மலைந்தாய்ப்படை நெக்கது" (சீவக. 426). 2. கூட்டமாக வாழும் ஆடுகள்; sheep.

**ம., க., தெ.** ஆய்

*[ஆ = முன்செலல், சேர்தல், கூடுதல். ஆ → ஆய் = கூட்டம் கூடிவாழ்வோர். ஒ.நோ: ஆய் → ஆயம் (கூட்டம்).]*

**ஆய்** [7] āy, பெ. (n.) 1. முன்மை; front. 2. முதன்மை; first, foremost.

**க.** ஆ; **தெ.** ஆய்.

*[ஊ → ஆ → ஆய். தெ. ஆயில்லு = முதன்மையானவீடு, நடுவீடு. க. ஆதலை = முதற்பக்கம், முன்பக்கம். இச் சொல்லாட்சிகள் பழங்காலத்தில் 'ஆ' என்னுஞ் சொல் 'ஆய்' என வழங்கி வந்ததற்குச் சான்றாம்.]*

**ஆய்**[8] āy பெ. (n.) ஒரு வள்ளல் (நற்.167); name of a philanthropic chief. "ஆர்வ நன்மொழி யாயும்" (சிறுபாண். 99). 2. குடிப்பெயர் (புறநா. 127); name of a clan or family.

*[ஆ = முதனிலை, முதன்மை. ஆ → ஆய் - முதன்மையானவன், உயர்ந்தவன், சிறப்புடையவன். ஆய்க்குடி = சிறப்புடையகுடி. ஆய்[7] பார்க்க. see āy.]*

**ஆய்**[9] āy, இடை. (ind.) 1. ஓர் வினையெச்ச ஈறு; adv. suff. நன்றாய்ப் பேசினார் (உ.வ.). 2 முன்னிலை ஒருமை வினைமுற்று ஈறு; pronominal term. suffixed to verb second pers. sing. வந்தாய். 3. ஏவலொருமை வினைமுற்று ஈறு; Imperative term. suffixed to verb second pers. sing. "ஏகாய் இவ்வயின் நிற்றலும் ஏதம்" (கம்பரா.). 4. அருவருப்பைக் குறிக்கும் குறிப்புச் சொல்; interjection denoting dislike. ஆய்! போ. (உ.வ.). 5. வியப்பிடைச் சொல்; interjection denoting surprise, wonder.

**ம., க., தெ.** ஆய்.

*[1. ஆகி → ஆய். 2. 3. ஐ → ஆய். 4,5 ஆய் → ஆய். ஆய் – ஒலிக்குறிப்புச் சொல்.]*

**ஆய்**[10] āy, பெ. (n.) 1. பெரிது; big. ஆய்ந்த வலை. (முக. மீனவ. வழ.). 2. வலிமை, ஆற்றல்; strength, power. 3. முயற்சி; effort. ஆயமில்லாத ஆண் பிள்ளை (இ.வ. தரும.).

**ம.** ஆய (வலிமை); **க.** ஆயதிகெடு (வலிமை குன்று) **குச்.** ஆய் (துணிவு, வலிமை)

*[ஆ → ஆய். ஆ = முன்செலற்கருத்து வேர்ச்சொல். முன் செலற்கருத்திலிருந்து ஊக்கக்கருத்தும், ஊக்கக் கருத்திலிருந்து வலிமைக் கருத்தும் தோன்றும். ஒ.நோ : ஊங்கு → ஊக்கு → ஊக்கம். ஊ = முன் செலற் கருத்து வேர்.]*

'ஆய்' வலிமை குறித்த வேர்ச்சொல்லாதலின் உடலில் வலுவுள்ள வரை வாழும் வாழ்நாட்காலம் ஆயுள் எனப்பட்டது. ஆய் + உள். ஆய் (வலிமை) உள்ளனவும் (வாழ்நாள்) என்று இச்சொற் கூட்டு தெளிவாகப் பொருள்படுதல் காண்க.

**ஆய்**[11] āy, பெ. (n.) 1. அளவு, முறை; measure, order. 2. ஒழுங்கு; கட்டளை; orderliness, command.

**க.** ஆய்.

*[ஆள் → அய் → ஆய். ஆள் = நெருங்குதல், பொருந்துதல், அளவாதல், முறையாதல், ஒழுங்கு படுத்தும் ஆணை.]*

**ஆய்**[12] āy , பெ. (n.) 1. உள், மருமம் (இரகசியம்); in, inside, secret. 2. கருத்து, எண்ணம்; idea, thought.

**ம., க., தெ.** ஆய்.

*[ஒருகா. அகு → அகழ் → அகள் → அகய் → ஆய். அகழ் = உள், உட்பகுதி, உட்கருத்து.]*

**ஆய்** [13] āy, பெ. (n.) 1. ஏந்து (வசதி); comfort. 2. பொருத்தம்; relevance. 3. இலக்கு, குறிக்கோள்; aim, goal.

**க., தெ.** ஆய்.

*[ஆ = முன்செலற் கருத்துவேர். ஆ → ஆய் = முன்னுள்ளது, (குறிக்கோள்) முன்னேற்பாடானது. ஏந்து (வசதி) பொருத்தம்.]*

**ஆய்**[14] āy, பெ. (n.) 1. வெண்மை; whiteness. 2. வெண்மையாய் இருப்பது; that which is white.

*[ஆ = மாடு. ஆய் = மாட்டின் நிறம், வெண்மை, வெண்மையாயிருக்கும் பொருள் அல்லது உயிரி.]*

ஒ. நோ. பா = விரிதல். பாய் = விரிக்கக்கூடியதாய் இருப்பது, இ = உடைமை குறித்த ஈறு, இ → ய் எனத் திரிந்து பெயரீறு ஆயிற்று.

யகரமெய்யீற்றுப் பெயர்ச்சொற்கள் பண்டைக்காலத்தில் இகரவீற்றனவாக இருந்தன என்பதற்கு நாய் – நாஇ என ஆளப்பட்டுள்ளமையே தக்க சான்றாகும்.

**ஆய்**[15] āy, பெ. (n.) 1. அழுக்கு; dirt. 2. பவ்வீ (இடக்கரடக்கு); excreta. ஆய்பிள்ளை, ஆய் குழந்தை. (குழந்தைமொழி).

*[மாய் → ஆய். மாய் = மாசு, அழுக்கு.]*

**ஆய்அண்டிரன்** āy–andiran, பெ. (n.) 1. கடையெழு வள்ளல்களுள் ஒருவன்; one of the last seven philanthropic chiefs of sangam age. "ஆஅயண்டிர னடுபோ ரண்ணல்" (புறநா. 129.5).

*[ஆய் + அண்டிரன். **ஆய்**[7] பார்க்க see āy[7]; ஆண் + திறம் → ஆண்டிறம் → ஆண்டிறன் + அண்டிரன் – அண்டிரன் = ஆண்டிறலோன், ஆண்டகை. ஒ.நோ. தெ. அண்டி (ஐயா) ஏமண்டி = என்னவய்யா. அட்லு செப்பகண்டி = அவ்வாறு சொல்லாதிர்கள். த. ஆண்டை → தெ. அண்டி.]*

**ஆய்எயினன்** āy–eyinan, பெ. (n.) கடைக்கழகக்காலப் புரவலன் (அக நா. 148.); a sangam noble.

*[ஆய்[7] + எயினன்.]*

**ஆய்க்குடி** āy–k–kudi, பெ. (n.) இடைச்சேரி, ஆயர் களின் குடியிருப்பு, ஆயர்பாடி; hamlet of the cowherd caste.

*[ஆய் + குடி. ஆய் = ஆயர்.]*

**ஆய்க்குருவி** āy–k–kuruvi, பெ. (n.) மெதுவாய்ப் பறக்கும் குறுங்குருவி (நெல்லை.); tiny bird flying slowly.

*[ஆய் + குருவி.]*

**ஆய்க்குழல்** āy–k–kulal, பெ. (n.) **ஆயக்குழல்** பார்க்க; see āya–k–kulal.

*[ஆயர் + குழல் – ஆயக்குழல் → ஆய்க்குழல்.]*

**ஆய்குடி** āy–kudi, பெ. (n.) பொதியமலைச்சாரலிலுள்ள ஆய்வள்ளலின் ஊர்; native town of the philanthropic Tamil chieftain Āy, on the slope of the hill Podiyamalai

**ஆய்ச்சல்**[1] āyccal, பெ. (n.) விரைவு, விரைவுணர்ச்சி, வேகம் (செ.அக.); impulse, heat. "வந்த ஆய்ச் சலிலே" (யாழ்ப்.).

*[ஒருகா. பாய்ச்சல் → ஆய்ச்சல்.]*

**ஆய்ச்சல்**[2] āyccal, பெ. (n.) பாட்டம், முறை; turn, bout. ஆய்ச்சல் ஆய்ச்சலாய் மழை பெய்கிறது (வின்.).

*[ஒருகா. அச்சல் → ஆய்ச்சல்.]*

**ஆய்ச்சல்**[3] āyccal, பெ. (n.) பறிப்பு, அசைவு (கதி. அக.); plucking, shaking.

*[ஆய் → ஆய்ச்சல்.] **ஆய்**[3] பார்க்க; see āy[3].*

**ஆய்ச்சாலிகம்** āyccāligam, பெ. (n.) வெண்மிளகாய்; white chilly — (சா.அக.).

*[ஆ = மாடு, ஆய் = மாட்டின் நிறம், வெண்மை. ஆய் + சாலிகம்.]*

**ஆய்ச்சி**[1] āycci, பெ. (n.) 1. தாய்; mother. (ஈடு. 6. 1:4). 2. பாட்டி; grandmother. 3. மகளிரை மதிப்புர வாக அழைக்கும் விளி (இ.வ.); hon. expr. for woman (Loc.).

ம. ஆச்சி.

*[ஆய் → ஆய்ச்சி.]*

**ஆய்ச்சி**[2] āycci, பெ. (n.) இடைக்குல மடந்தை; woman of cowherd caste.

ம. ஆச்சி, ஆச்சியார்.

*[ஆய் → ஆய்த்தி → ஆய்ச்சி.]*

**ஆய்த்தி** பார்க்க; see āytti.

**ஆய்ச்சூரி** āy–c–cūri, பெ. (n.) வெண்கடுகு; white mustard. (சா.அக.).

*[ஆய். சூரி. ஆய் = வெண்மை.]*

**ஆய்ச்சூரிகம்** āyccūrigam, பெ. (n.) **ஆய்ச்சூரி** பார்க்க; see āyccūri.

*[ஆய்ச்சூரி → ஆய்ச்சூரிகம்.]*

**ஆய்ச்சேவகம்** āy–c–cēvagam, பெ. (n.) வெள்ளெருக்கு; white flowered giant swallow – wort. (சா.அக.).

*[ஆய் + சேவகம். ஆய் = வெண்மை.]*

**ஆய்ஞன்** āynan, பெ. (n.) ஆராய்பவன்; investigator. (தொல். எழுத். 29 உரை).

*[ஆய்நன் → ஆய்ஞன்.]*

**ஆய்த்தி** āytti, பெ. (n.) ஆயன் என்பதன் பெண்பால், இடைக்குலப் பெண்; woman of cowherd caste, fem. of āyan.

*[ஆய் → ஆய்த்தி.]*

**ஆய்த்தியர்** āyttiyar, பெ. (n.) இடைச்சியர்; women of cowherd caste. "மாமருண் டன்ன மழைக்கண்சிற் றாய்த்தியர்" (கலித். 108.46).

*[ஆ → ஆய் → ஆய்த்தி + அர்.]*

**ஆய்தக்குறுக்கம்** āyda-k-kuṟukkam, பெ. (n.) (இலக்.) தனக்குரிய மாத்திரை யளவில் குறைந்தொலிக்கும் ஆய்தவெழுத்து; (gram) letter ஃ 'K' shortened in delivery when it is substituted for ல் 'l' or ள் "ḷ" before த் 't' in combination, as in கல் +தீது – கஃறீது, முள் + தீது – முஃடீது and one of ten sārbeḻuthu, q.v. மாத்திரை குறுகிய ஆய்தம் (நன், 97, உரை.).

*[ஆய்தம் + குறுக்கம்.]*

**ஆய்தசாலை** āydaśālai, பெ. (n.) படைக்கலக் கொட்டில்; armoury, arsenal. "ஆயுதசாலையி லவுணர் கோன் மகன்" (கந்தபு. முதனா. 20).

**ம.** ஆயுதசால, **க.** ஆயுதசாலெ

*[ஆய்தம் + சாலை.]*

**ஆய்தத்தொடர்க் குற்றியலுகரம்** āyda-t-toḍar-k-kuṟṟiya-lugaram, பெ. (n.) ஆய்தம் மொழிக்கு ஈற்றயலாக நிற்க, ஈற்றில் வரும் வல்லெழுத்துகள் ஆறனுள் ஒன்றன் மேலூர்ந்து தன் மாத்திரையிற் குறைந் தொலிக்கும் உகரம்; shortened 'u' which stands as a vowel with the final six hard consonants being preceded by the letter, 'aḵ' known as āydam.

எஃகு, கஃசு.

*[ஆய்தம் + தொடர் + குற்றியலுகரம்.]*

**ஆய்தத்தொடர்க் குற்றுகரம்** āyda-t-todar-k-kuṟṟugaram, பெ. (n.) **ஆய்தத்தொடர்க்குற்றியலுகரம்** பார்க்க; see āyda-t-todar-k-kuṟṟiyalugaram.

*[ஆய்தம் + தொடர் + குற்றுகரம். குறு + உகரம் – குற்றுகரம்.]*

**ஆய்தநஞ்சு** āudananju, பெ. (n.) ஆய்தம் பட்டதனால் உடம்பில் ஏற்பட்ட நஞ்சு; poison set in the system by operation (சா.அக.).

*[ஆய்தம் + நஞ்சு.]*

**ஆய்தநோட்டம்** āydanōṭṭam, பெ. (n.) ஆய்தத்தைப் பயன்படுத்திப் புண்புரையை நோட்டமிடுதல் (பரி சோதித்தல்); examination of a wound cavity by a probe. (சா.அக.).

*[ஆய்தம் + நோட்டம்.]*

**ஆய்தப் பயன்படுத்தம்** āyda-p-payanpaḍu-t-tam, பெ. (n.) கத்தி முதலிய கருவிகளை அறுவை மருத்துவம் செய்யும் போது உடம்பின் பகுதியில் செலுத்துதல்; use of surgical instruments in treatment. (சா. அக).

*[ஆய்தம் + பயன்படுத்தல்.]*

**ஆய்தப்பயிற்சி** āyda-p-payiṟci, பெ. (n.) படைத்துறைப் பயிற்சி; military exercise. 2. சிலம்பம் முதலியவற்றிற் பயிற்சி; practice in the art of fencing etc. 3. படைக்கலம் பயில்கை; military exercise, training in the use of arms. (சா.அக.)

**ம.** ஆயுதசிக்ச.

*[ஆய்தம் + பயிற்சி.]*

**ஆய்தப்புள்ளி** āyda-p-puḷḷi, பெ. (n.) ஃ என்னும் ஆய்தவெழுத்து; letter ஃ 'aḵ'. "குறியதன் முன்னர் ஆய்தப்புள்ளி" (நன். 90).

*[ஆய்தம் + புள்ளி. புள்ளி = மெய்யெழுத்து. முப் புள்ளிகளாலாய எழுத்து.]*

**ஆய்தபண்டுவம்** āydapaṇḍuvam, பெ. (n.) கத்தி முதலிய கருவிகளினால் அறுத்துக் குணப்படுத்துதல்; surgical operation to which the human body is subjected, for curing disease; surgical treatment. (சா.அக).

*[ஆய்தம் + பண்டுவம்.]*

**ஆய்தபாணி** āydapāṇi, பெ. (n.) கையில் ஆய்தம் ஏந்திய வன்; man who has weapon in his hand. (சா.அக.).

*[ஆய்தம் + பாணி.]*

**ஆய்தபிள்ளைப்பேறு** āyda-piḷḷai-p-peṟu, பெ. (n.) பிள்ளைப் பேற்றின்போது ஆய்தத்தை உட்செலுத் திக் குழந்தையை வெளிப்படுத்துதல்; child birth facilitated by the use of instruments such as forceps etc. (சா.அக).

*[ஆய்தம் + பிள்ளை + பேறு.]*

**ஆய்தபூசை** āydapūśai, பெ. (n.) படைக்கலப் பூசை. கன்னி (புரட்டாசி)த் திங்கள் வளர்பிறை முதனாள் முதற்கொண்டு அலைமகள் கலைமகள் மலைமகள் ஆகிய முத்தேவியரையும் மும்மூன்று நாளாக ஒன்பது நாள்வரை படைக்கலங்களும் பொத்த கங்களும் படைத்துச் செய்யும் பூசை. இக்காலத்துத் தொன்மி (நவமி) நாளில் மட்டும் செய்யப் படுகிறது; worship of weapons, tools, books etc. on the ninth day of navarathri.

*[ஆய்தம் + பூசை.]*

**ஆய்தம்**[1] āydam, பெ. (n.) சார்பெழுத்துகளுள் ஒன்றானதும், நுணுகி ஒலிப்பதும் மெய்யெழுத்து எனக் கொள்ளப்படினும், மெய்க்கும் உயிர்க்கும் இடைப்பட்ட தன்மை யுடைமையால் தனிநிலை யென்று பெயர்பெற்றதுமான ஃ என்னும் ஆய்த வெழுத்து; the letter ஃ so called from the indistinctness of its sound, or form the peculiarity and minuteness of its form. It is chiefly a consonant but sometimes occurs as a vowel, yet it cannot be confounded with another letter (W).

*[ஆய் → ஆய்தம். ஆய்தல் = நுணுகுதல். மொழி முதலாகாமையின் உயிரெழுத்தாகக் கொள்ளப்படாத தும், உயிரேற இடந்தந்து உயிர் மெய்யெழுத்தாகக்*

*கொள்ளப்படாததுமாகிய ஆய்த வெழுத்து ஒசை யினிமை கருதி நுணுகி (அஃகி) ஒலித்தலின் ஆய்தம் எனப்பட்டது.]*

**ஆய்தம்**[2] āydam, பெ. (n.) 1. மயிரையும் இருபிளப்பாகச் செய்யத் தகுந்தவாறு மிகு கூர்மையுடையதாகவும், பிடி சரிவர அமைந்ததாகவும் உள்ள அறுவை மருத்துவக் கருவி, நுண்ணிய சிறு கத்தி; sharp surgical instrument, knife well-shaped, well-ground and fitted with a convenient handle. It should be so sharp as to be capable of cutting or splitting a hair. 2. படைக்கலம்; weapon, arms. "ஆயுத மனேகவித மானவை யெனப்பலவு மழகுற வியற்றியும்" (பாரதவாரணா.57). 3. துணைக்கருவி; tool, implement, instrument.

**ம.** ஆயுதம்; **க.** ஆயுத; **தெ.** ஆயுதமு. Skt. āyudha.

*[ஆ → ஆய் – ஆய்தம்.]*

ஆய்தல் = நுணுகுதல், சிறுத்தல், கூர்மையாதல். ஆய்தம் = நுணுகக் கூராக்கப்பட்ட கத்தி அல்லது படைக்கலம். வடமொழியிலுள்ள ஆயுதம் என்னும் சொல் (a-yudh) போருக்கு உதவும் படைக்கலம் என்னும் பொருளில் ஆளப்படுகிறது. எனினும் அது கூர்மையின் வழிப் பிறந்த தமிழ் 'ஆய்தம்' பெற்ற திரிவடிவே (ஆய்தம் → ஆயுதம்) ஆகும். போரிடத் துணைபுரியும் குதிரை, யானை முதலிய உயிரிகளும் தேர், மெய்ம்மறை (கவசம்) போன்ற அஃறிணைப் பொருள்களும் ஆயுதம் (a-yudh) என வழங்கப் பெறாமையின், போருக்குத் துணைக் கருவி எனப் பொருள்படும் வடமொழி ஆயுதம் வடமொழிக்கு மூலச் சொல்லன்று என்பதும் தெளிவாகிறது. அதுவுமின்றி அத்திரம் (கைவிடுபடை), சத்திரம் (கைவிடாப்படை) என்னும் இரு வகைக்கும் ஆயுதம் பொதுப் பெயராக இருத்தலும் காண்க.

**ஆய்தமிழுக்குமலை** āydamilukkumalai, பெ. (n.) இரும்பு மலை; mountain containing the iron ore. (சா.அக).

*[ஆய்தம் + இழுக்கும் + மலை.]*

**ஆய்தல்** āydal, தொ. பெ. (vbl.n.) 1. ஆராய்தல்; examination. "பல்லோராய்ந்த நூல் வெள்ளங் கடந்தனன்" (பாரத. குருகுல. 87). 2. காய் முதலியவைகளைப் பிரித்தெடுத்தல்; plucking, collecting. 3. தெரிந் தெடுத்தல்; selection. "அணங்கு கொ லாய் மயில் கொல்லோ" (குறள். 1081). 4. சிறிதாதல்; reduction. "ஒய்த லாய்தல்" (தொல்.சொல். 330). 5. வருந்துதல்; suffering (திணைமாலை. 17). 6. அசைதல்; movement. "ஆய்மறியே" (திருக்கோ. 125 உரை). 7. சோதனை செய்தல்; check, search. 8. கொண்டாடுதல்; celebration. "ஆயுமடுதிற லார்க்கு" (பு.வெ. 4, 16). 9. கொய்தல்; cutting. 10. காம்பு களைதல்; removing stem. 11. குத்துதல்; piercing "அரக்கன்றனைச் சூலத்திலாய்ந்தது" (தேவா.).

**ம.** ஆயுக; **க.** ஆய்கெ; **து.** ஆயுளி.

*[ஆய் + தல்.]*

**ஆய்தூவி** āy-tūvi, பெ. (n.) சூட்டுமயிர்; crest, plume. "ஆய்தூவியனமென" (கலித்.56–14). 2. அழகிய சிறகு; handsome feather.

*[ஆய் + மயிர்.]*

**ஆய்ந்த கீரை** āynda-kīrai, பெ. (n.) காம்புகளைந்த கீரை; leaves from which the stems or the pedicles are nipped off.

*[ஆய் → ஆய்ந்த + கீரை.]*

**ஆய்ந்த வலை** āyndavalai பெ. (n.) மீன்பிடிக்கும் பெருங்கண் வலை; a kind of fishing net with loose holes. (முகவை. மீனவ.)

*[ஆய் = பெரியது. ஆய் → ஆய்ந்த + வலை.]*

**ஆய்ந்துயர் காந்தி** āynduyar kāndi, பெ. (n.) கற்காவி; (Stone – ochre) red ochre which contains much oxide of iron. (சா.அக.).

*[ஆய்ந்து + உயர் + காந்தி.]*

**ஆய்ந்துயர்காவி** āynduyar-kāvi, பெ. (n.) **ஆய்ந்துயர் காந்தி** பார்க்க; see āynduyar-kāndi.

**ஆய்ந்தோர்** āyndōr, பெ. (n.) 1. அறிஞர் (திவா.); wise men, those who have studied deeply. 2. புலவர் (த.சொ.அக.); poets, scholars.

*[ஆய் – ஆய்ந்தோர்.]*

**ஆய்நலம்** āy-nalam, பெ. (n.) 1. அழகிய நலம் (ஐங்குறு.); loveliness. 2. மெலிந்த அழகு (ஐங்குறு.); grace, elegance.

*[ஆய் + நலம்.]*

**ஆய்நுதல்** āy-nudal, பெ. (n.) அழகுறைந்த நெற்றி (ஐங்குறு.); lovely forehead.

*[ஆய் + நுதல்.]*

**ஆய்ப்பாடி** āy-p-pāḍi, பெ. (n.) ஆயர்பாடி, இடையரூர்; hamlet inhabited by cowherds. "சீர்மல்கும் ஆய்ப் பாடிச் செல்வச் சிறுமீர்காள்" (திருப்பா. 1).

**ம.** ஆயம்பாடி. ஆய்ப்பாடி

*[ஆய + பாடி.]*

**ஆய்ப்பு** āyppu, பெ. (n.) 1. அசைப்பு (கதி. அக.); movement. 2. வீச்சு (கதி.அக.); blowing, throwing. 3. அடி சுருங்குதல்; being reduced in circumstances, power, energies. "தேய்ப்புண்டவனும் சில சில் கணை யாலாய்ப் புண்டவனும்" (கம்பரா. அதிகா. 10). 4. வருத்தம்; sorrow.

*[ஆய் ஆய்ப்பு]*

**ஆய்பு** āybu, வி.எ. (adv.) (இலக்) செய்பென்னும் வாய்பாட்டான் வந்த வாய் பென்னும் இறந்தகால வினையெச்சம் (கதி. அக.); adv. having searched.

*[ஆய் → ஆய்பு.]*

**ஆய்மகள்** āy-magaḷ பெ. (n.) இடைக்குலப்பெண்; cowherdess.

*[ஆய் + மகள்.]*

**ஆய்மகன்** āy-magaṉ, பெ. (n.) இடையன்; cowherd.

*[ஆய் + மகன்]*

**ஆய்மதி** āymadi, பெ. (n.) 1. நுண்ணறிவு (கதி. அக).; intelligence. 2. ஒளியற்ற நிலவு (த.சொ. அக.); dull moon "ஆய்மதி மொய்கொள் பூமி முளைப்பது போலவே" (சிந்தா. 345).

*[ஆய் + மதி]*

**ஆய்மயில்** āymayil, பெ. (n.) 1. அழகிய மயில்; beautiful peacock. "அணங்கு கொல் ஆய்மயில் கொல்லோ". (குறள். 1081). 2. விசை குறைந்த மயில் (த.சொ. அக.). "அஃகிய மதுகை தன்னா லாய்மயி லூரு மாங்கண்" (சிந்தா. நாமக. 270).

*[ஆய் + மயில்.]*

**ஆய்மலர்** āy-malar, பெ. (n.) 1. தாமரை மலர்; lotus flower. 2. தெரிந்தெடுத்த மலர்; chosen or choicest flower (கதி. அக.). 3. காம்பு களைந்த மலர்; flower from which the pedicle is nipped off. (சா.அக.).

*[ஆய் + மலர்.]*

**ஆய்மை** āymai, பெ. (n.) 1. ஆராயுந்தன்மை; spirit of investigation. "ஆய்மையின் மந்திரத்தறிஞானம்" (கம்பரா. சடாயுகா. 5). 2. நுண்ணிய பொருள்; subtle meaning. (திருவாலவா. நகர. 11).

**ஆய்வா**[1] **(வரு)-தல்** āyvā-, 18 செ.கு.வி. (v.i.) 1. கூடி வருதல், மேம்பட்டு வருதல் (இ.வ.); to bring good luck (Loc.) ஆய்வந்த வீடு (தருமபுரி).

*[ஆகி + வா - ஆகிவா → ஆய்வா (கொ. வ.)*
***ஆகிவா-தல்** பார்க்க; see āgivā-,. ]*

**ஆய்வா**[2] **(வரு)-தல்** āyvā-, 15. செ. குன்றாவி. (v.t.) ஆராய்தல்; to investigate, scrutinise, do research in. "தண்டமிழாய்வந்திலார்" (பரிபா. 9. 25).

*[ஆய் + வா.]*

**ஆய்விடு-தல்** āy-viḍu-, 18. செ.குன்றாவி. (v.t.) ஆராய்தல்; to investigate, scrutinise. "தாங்கித்தேடி யாய்விட்டுப் பிரமனழ" (திருவிளை. விருத்த. 29).

*[ஆய் + விடு. ]*

**ஆய்வு** āyvu, பெ. (n.) 1. ஆராய்கை; critical study, investigation, research, "ஆய்வரும் பெருவலி யரக்கர் நாமமே" (கம்பரா. ஆரணி. அகத்தி. 5). 2. அகலம் (திவா.); width, breadth. 3. நுணுக்கம்; minuteness, diminution, reduction. 4. வருத்தம்; distress, suffering. 5. அழகு; beauty.

*[ஆய் → ஆய்வு ]*

**ஆய்வுளி** āyvuḷi, பெ. (n.) மின்கடத்தியில் மின்னோட்ட முள்ளதா வென்பதையறியவுதவும் சிறு கருவி; tester.

*[ஆய் + ஒளி. ]*

**ஆய்வை** āyvai, பெ. (n.) துயிலிடம் (பிங்.); sleeping place.

*[ஆய் → ஆய்வை .]*

**ஆயக்கட்டு** āya-k-kaṭṭu, பெ. (n.) 1. குளப்புரவு (C.G.); entire extent of land irrigated by a tank. 2. சிற்றூரின் மொத்த நில அளவுக்கணக்கு (C.G.); measurement of land determining the boundaries of a village, old settlement register. 3. பொய்மொழி (வின்.); deceitful fabrication, false statement (W.).

*[ஒருகா. ஆகிய கட்டு → ஆயக்கட்டு, கட்டு = பரப்பு. ஆகிய = மொத்தமான. ஆயக்கட்டு = மொத்தப் பரப்பளவு 3. ஆயக்கட்டு = முழுமையான கட்டுக்கதை, பொய்.]*

**ஆயக்கட்டு மானியம்** āya-k-kaṭṭu māṉiyam, பெ. (n.) அரசினர் வழங்கிய உரிமைப் பட்டயத்தின் வண்ணம் பணமாகப் பெறும் மேரை; money allowance claimed under Government sanads (R.T.).

*[ஆயக்கட்டு + மானியம்.]*

**ஆயக்கம்** āyakkam, பெ. (n.) மொத்த வெண் (இவ); total number (Loc.).

*[ஆய் → ஆயக்கம்.]*

**ஆயக்கர்** āyakkar, பெ. (n.) சிற்றூர்ப் பொதுப் பணியாளருள் மேரை பெறும் தகுதியுடையவர்கள்; class of village servants who for their services to the village community, are entitled to a portion of the crop (R.T.).

*[ஆயம் → ஆயக்கர். ஆயம்=விளைச்சல்,வருவாய்.]*

**ஆயக்கல்** āyakkal, பெ. (n.) காரக்கல், ஆய்க்கல்; a kind of caustic mineral stone (W).

*[ஆய் + கல் - ஆய்க்கல் → ஆயக்கல்]*

**ஆயக்காரன்** āyakkāraṉ, பெ. (n.) வரிவாங்குபவன்; tax-collector. 2. (கிறித்.) விடுதியின் உரிமையாளர்; publican (செ. அக.).

*[ஆயம் + காரன்]*

**ஆயக்காரி** āyakkāri, பெ. (n.) விலைமகள், பொது மகள்; whore. "கொள்ளுமாயக் காரிகள்" (திருப்பு. 571).

*[ஆயம் = வருவாய். ஆயம் → ஆயக்காரி]*

**ஆயக்கால்** āyakkāl, பெ. (n.) 1. பல்லாக்கு, ஊர்வலத் திருமேனிக்குரிய சப்பரம் போன்றவற்றைச் சுமந்து செல்வோர் சிறிது நேரம் முட்டுக் கொடுத்து நிறுத்த உதவும், அணிகம் (வாகனம்) தாங்கும் கவைத்த முட்டுக்கால், குத்துக்கால்; forked stick on which a palanquin or the vehicle of an idol may rest when carried in procession through the streets. 2. முட்டுக் கொடுக்க உதவும் கட்டை, முட்டுக்கால்; prop to a wall or roof.

*[ஆய் = வலிமை. ஆய் → ஆய + கால் ஆயக்கால்.]*

**ஆயக்குழல்** āya-k-kuḻal, பெ. (n.) புல்லாங்குழல் (புதுவை); flute of the cowherds (Pond.).

**ம.** ஆயக்குழல்

*[ஆயர் + குழல் – ஆயர்குழல் → ஆயக்குழல்.]*

**ஆயக்கோல்** āya-k-kōl, பெ. (n.) **ஆயக்கால்** பார்க்க; see **āya-k-kāl.**

*[ஆயக்கால் → ஆயக்கோல்.]*

**ஆயச்சாவடி** āya-c-cāvaḍi, பெ. (n.) சுங்கத்துறை (வின்.); customs office (W.).

*[ஆயம் + சாவடி. ஆயம் = வரி.]*

**ஆயசம்** āyaśam, பெ. (n.) 1. இரும்பு; iron, ferrus. 2. இரும்புக்கருவி; iron weapon. 3. இரும்புச்சட்டை; iron clothing. (த.சொ. அக.).

**ம.** ஆயச

*[ஒருகா. ஆயம் → ஆயசம்.]*

**ஆயத்தப்படு-தல்** āyatta-p-paḍu-, 20 செ.கு.வி. (v.i.) அணியமாதல், (தயாராதல்) (கதி. அக.); to get ready.

*[ஆயத்தம் + படு.]*

**ஆயத்தம்**[1] āyattam, பெ. (n.) 1. கூர்மை; sharpness. 2. சீற்றம்; anger. 3. தள்ளுகை; rejection.

*[ஆய்[7] → ஆயத்தம்.]*

**த.** ஆயத்தம் > Skt. ayasta.

**ஆயத்தம்**[2] āyattam, பெ. (n.) 1. முன்னேற்பாடு; preparedness. 2. அணியம் (தயார்); readiness. "மோக்குமுன் வாலுகமெழற் காயத்த மென்னின்" (தைலவ.பாயிர.43). 3. போருக்கு அணியமாயிருத்தல்; warlike preparation, equipment. (கம்பரா.கும்பக. 77). 4. முயற்சி (த.சொ.அக.); effort, preseverance.

**தெ.** ஆயத்தமு; **து.**, ம.ஆயத்த.

*[ஆய் 7 → ஆயத்தம்.]*

**ஆயத்தம்**[3] āyattam, பெ. (n.) (இசை.) இசைக் கிளையில் ஒன்று (பெரியபு. ஆனாய. 26.உரை); (Mus.) musical mode.

*[ஒருகா. ஆயம் = நுண்மை, மென்மை. ஆயம் → ஆயத்தம் = நுண்ணிய இசை வகை.]*

**ஆயத்தலம்**[1] āyattalam, பெ. (n.) ஆயத்துறை; customs department. 2. சுங்கச்சாவடி (வின்.); customs office (W.).

*[ஆயம் + தலம். ஆயம் – வருவாய், வரி, வரி தண்டும் துறை. Skt. sthala. > த. தலம்.]*

**ஆயத்தலம்**[2] āyattalam, பெ. (n.) உடம்பில் மருமப் பகுதி; vital part of body.

**தெ.** ஆயமு

*[ஆயம் + தலம். ஆயம் = மென்மை. Skt. sthala > த. தலம்.]*

**ஆயத்தன்** āyattaṉ, பெ. (n.) 1. அடிப்பட்டவன்; experienced person. 2. கூர்மையுள்ளவன்; intelligent man. 3. தள்ளப்பட்டவன் (சப்த. கற்ப); one who is neglected or rejected.

*[ஆயத்தம் → ஆயத்தன்.]*

**ஆயத்தார்** āyattār, பெ. (n.) தோழியர் கூட்டம்; female companions, female attendants of a lady. "ஓங்கிய வாயத்தாரு மேறினா ருடனத் திண்டேர்" (திருவிளை. திருமணப்.8).

*[ஆயம் → ஆயத்தார்.]*

**ஆயத்தி** āyatti, பெ. (n.) 1. நாள்; day. 2. எல்லை; boundary. 3. அன்பு; affection. 4. வலி; strenght. 5. தன் வயப்படுத்தும் திறன்; power of fascinating. (செ. அக.). 6. நன்னடை; good conduct. 7. நீளம்; length. (த.சொ.அக.).

**க.** ஆயதி

*[ஆயம் → ஆயத்தி.]*

**ஆயத்துய்த்தல்** āyatt(u)-uyttal, தொ. பெ. (vbl.n.) தலை வியைப் பாங்கி முதலிய மகளிர் கூட்டத்தில் விடுதல்; leaving the heroine to the company of lady attendants.

*[ஆயம் + அத்து + உய்த்தல். ஆயம் = தோழியர்கூட்டம். 'அத்து' சாரியை. உய்த்தல் = செலுத்துதல், செல்ல விடுதல்.]*

**ஆயத்துறை** āya-t-turai, பெ. (n.) தீர்வைத்துறை (சுங்கச்சாவடி); custom house, place where tolls are collected. "ஆயத்துறையிற் பிறந்தந்தணர் பால் குடித்து" (தனிப்பா. ii.16,34).

*[ஆயம் + துறை.]*

**ஆயதம்** āyadam, பெ. (n.) 1. அகலங் குறைந்து நீளம் கூடியிருக்கும் வடிவம்; oblong rectangle. 2. நீளம் (சூ.நி.); length. 3. அளவிற் பெருமை; big in magnitude.

*[ஆ → ஆய்[7] → ஆயத்தம் → ஆயதம்.]*

**ஆயதி** āyadi, பெ. (n.) 1. பொருந்துகை; connection, fitting. 2. வருங்காலம்; future. 3. நீளம்; length. 4. பெருமை,மேம்பாடு;dignity.(செ. அக.).5. அடைதல்; reaching. 6. சந்திப்பு; junction, meeting. 7. மனவடக்கம்; politeness. (தா.சொ. அக.). 8. மனைவி; wife.

*[ஆயத்தி → ஆயதி.]*

**ஆயத்துக்குள்ளே மாயம்** āyattu-k-kullē-māyam, பெ. (n.) சிறுவாணிகத்தில் கிடைத்த சிறு ஊதியம் (கதி. அக.); small gain in a small trade.

*[ஆயம் + அத்து + கு + உள்ளே + மாயம்.]*

ஆயம் = வருவாய்.

**ஆயந்தி** āyandi, பெ. (n.) தமையன் மனைவி (இ.வ.); elder brother's wife (Loc.).

*[ஒருகா. ஐயன் + தேவி → ஐயந்தேவி → ஆயந்தேவி → ஆயந்தி.]*

**ஆயந்தீர்-த்தல்** āyan-tīr-, 4 செ.கு.வி. (v.t.) வரி செலுத்துதல்; to pay toll or duty (R.).

*[ஆயம் + தீர்.]*

**ஆயப்பாலை[1]** āya-p-pālai, பெ. (n.) (இசை). நால் வகைப் பாலையுள் ஒன்று; one of the four modes of the ancient Tamil music. அது 'ஆயஞ் சதுரந் திரிகோணம் வட்டமெனப் — பாய நான்கும் பாலையாகும் என்பதனாற் பெறப்படும்' (சிலப். 17, ஆய்ச்சியர். எடுத்துக்காட்டு – உரை, பக். 4052).

*[ஆயம் + பாலை (ஆயம் = செல்வகம்).]*

**ஆயப்பாலை[2]** āya-p-pālai, பெ. (n.) கொடிப்பாலை; green wax-flower. (சா.அக.).

*[ஆயம் + பாலை.]*

**ஆயப்பொருத்தம்** āya-p-poruttam, பெ. (n.) மனைப் பொருத்தங்களுள் ஒரமைப்பு; one of the points of suitability in designing a house according to traditional practice.

*[ஆயம் + பொருத்தம்.]*

மனையின் நீள அகலங்களைப் பெருக்கி வந்த குழியை எட்டால் வகுக்க மீதி எண் ஆயமாகும். எட்டால் வகுக்க மீதி இல்லை எனில் மிகுதி எட்டு என்று கொண்டு பலன்காண வேண்டும். கருட ஆயம், புறா ஆயம், சிங்க ஆயம், சுவான ஆயம், சுப ஆயம், காக்கை ஆயம், யானை ஆயம், கழுதை ஆயம் என எட்டாகும். இவற்றில் 1,3,5 நன்றாம். (மனைநூல்.) ஆயம் பார்க்க. see āyam.

**ஆயம்[1]** āyam, பெ. (n.) 1. நீளம் ; length. (அக.நி.). 2. மக்கள் தொகுதி, கூட்டம்; crowd of people. "ஆயமெல்லாமது சொல்லிப் போக" (நீலகேசி, 2); "வெற்பராயமோடி" (பெரியபு. கண்ண.77). 3. தோழி, தோழியர் கூட்டம்; female attendants of a lady. "சூழுடை யாயத்தை நீக்கும் விதி" (திருக்கோ.7). 4. மாட்டுமந்தை; herd of cows. (சிலப்.17.உரைப்பாட்டுமடை.5).

**ம.** ஆய; **க.** ஆய்; **து.** ஆயு; **குட.** ஆய்; **பர்.** ஆர்ச்; **கோண்.** ஆகாணா; **கூ.** ஆச்சு; **குவி.** ஆத; **மா.** ஆதெ; **குருக்.** ஆத; **மா.** ஆதெ.

*[ஆ → ஆயம். ஆ = முன்செலற் கருத்துவேர், முன்செலல், கூடுதல், திரளுதல் பொருளில், இச்சொல் புடைபெயரும்.]*

**ஆயம்[2]** āyam, பெ. (n.) 1. 34 விரல் (அங்குலம்) ஆழமுள்ள குழி (சர்வா. சிற். பக். 21); pit 34" deep, standard of measurement. 2. மந்தணம் (இரகசியம்); secret. "உன்னாலல்லது அவ்வாயம் வெளிப் பட்டிருக்குமோ" (குருபரம். 126). 3. உடம்பின் மருமமான பகுதி; most delicate part of the body. பறவையை ஆயம் பார்த்து அடித்தான் (உ.வ.).

**ம.** ஆயம்; **க. து.** ஆய; **தெ.** ஆயமு.

*[ஒருகா. ஆழம் → ஆயம்.]*

**ஆயம்** 3 āyam, பெ. (n.) 1. பொன்; gold. (திவ். பெருமாள்,6,4,வியா.);2.தேட்டம்,தேடியசெல்வம்; money earned. (த.சொ.அக.).

**க.** ஆய.

*[ஆயம் = கூடுதல், திரளுதல், திரட்டிய செல்வம், பொன்.]*

**ஆயம்** 4 āyam, பெ. (n.) 1. வருவாய்; income, revenue. "பொருளாயம் போஒய்ப் புறமே படும்" (குறள். 933). 2. ஊதியம் (த.சொ.அக.) (இலாபம்); gain, profit. 3. வரவு; income, receipt.

**ம.** ஆயம்; **க.** ஆய; **தெ.** ஆயமு. Skt. āya; **மரா.** ஆய.

*[ஆய் → ஆயம். ஆய்தல் = சேர்த்தல், திரட்டல், வரிவாங்குதல், தண்டுதல். ஆயம் = தண்டிய பணம்.]*

**ஆயம்** 5 āyam, பெ. (n.) வருத்தம்; distress, suffering, affliction. "ஆயமின்றிப்போ யண்டமாள் வதற்கு" (தேவா. 648,7).

*[ஆய் → ஆயம். ஆய்தல் = நுணுகுதல், சிறுத்தல், குறைபடல், துன்புறல்.]*

**ஆயம்** 6 āyam, பெ. (n.) 1. குடியிறை (பிங்.). சுங்கம்; tax, toll. "இந்நேரமென்றிலை யுடற் சுமைய தாகவு மெடுத்தாலிறக்க வென்றே யெங்கெங்கு மொரு தீர்வை யாய முண்டாயினும்" '(தாயு. சுகவாரி.5). 2. கடத்தக்கூலி; transport charge. 3. தாய ஆட்டக்காய்; தாய எண் அல்லது பணையம்; chessman, dice, wager. 'உருளாயம் ஓவாது கூறிற் பொருளாயம் போஒய்ப் புறமே படும்" (குறள். 933) ஆயத்திற்கஞ்சி ஆற்றில் நீந்தினது போல் (பழ.).

*[தாயம் – ஆயம். வ. ஆய. (இ.வ.).]*

**ஆயம்** 7 āyam, பெ. (n.) தாய்; mother.

**ம.** ஆயம்; **மரா.** ஆய.

*[ஒருகா. ஐயை → ஆய் → ஆயம். ஐயன் (ஆ.பா.) →-ஐயை (பெ.பா.) ஐயன் = தந்தை. (கொங். வ.).]*

**ஆயம்** 8 āyam. பெ. (n.) 1. சூதுகருவி; dice. 2. சூதாட்டம், கவறு; gambling. "அடையாவா மாயங் கொளின்" (குறள். 939). 3. கவற்றிற்றாயம்; cast of dice in a game. (கலித். 136, 5).

**ம.** ஆயம்.

*[ஆயம் = கூட்டம், தொகுதி, கூடியிருந்து ஆடும் ஆட்டம்.]*

**ஆயம்** 9 āyam, பெ. (n.) அகலத்தினும் மிகவும் அதிகமான நீளம்; oblong.

**க.** ஆய.

*[ஆ → முன்செலற்கருத்து வேர், ஆ → ஆயம் (நீளுதல்).]*

**ஆயம்** 10 āyam, பெ. (n.)1. மல்லரி (பம்பை மேளம்) (கதி.அக.); a kind of drum. 2. மேகம்; cloud.

*[ஆய்தல் = நுணுகுதல், நுணுகி ஒலித்தல். ஆயம் = இன்னியம், மேகம்.]*

**ஆயம்** 11 āyam, பெ. (n.) 1. வழக்கமாக ஆண்டுதோறும் மாதந்தோறும் நாடோறும் அரசனுக்குரியவாக வரும் பொன், ஆநிரை, நெல், குதிரை முதலிய வரவு (சுக்கிரநீ.); routine income of a king, in the form of cattle, gold, horses, paddy etc. (அபி.சிந்.). 2. சிற்றூர் பணியாளர்க்குத் தரப்படும் தவசம்; food grains given to the village servants after harvest.

**ம.** ஆயம்; **க., து.** ஆய; **தெ.** ஆயமு;

*[ஆய் + அம்.]*

**ஆயம்** 12 āyam, பெ. (n.) வழக்கம் (கதி.அக.); custom, habit. 2. முறை; order. 3. ஒழுங்கு; regularity. 4. விளத்தம் (விவரம்); details, particulars.

**க.** ஆய; **தெ.** ஆயமு.

*[ஐ = அழகு, ஐ → ஆய் → ஆயம் = அழகு, ஒழுங்கு, முறை, வழக்கம்.]*

**ஆயம்** 13 āyam, பெ. (n.) உதயத்துக்குப் பதினோரா மிடமாகிய ஓரை, ஊதியம் பெருகுதற்கடை யாளமாகிய இடம்; 11th asterism of the Zodiac.

**ம.** ஆயம்

*[ஆய் + அம்.]*

உதயந் தனமுடனே பிறப் பொண்டோ ழமைமகவு
சிதையும் பகை பெண்டிர் தேய்வுறுஞ்சாவு செழும்
புண்ணிய
மிதமொன் றியகன்ம மாயம் வியமெனு மாறிரண்டும்
விதமொன்றிய வோரைப் பேரெனச் சான்றோர் விதித்தனரே

(விதான.மரபி. 4).

**ஆயம்** 14 āyam, பெ. (n.) வில்லின் நாண்; bow–string.

*[ஆயம் = நீட்சி, நீளமான நாண்.]*

**ஆயம்** 15 āyam, பெ. (n.) 1. பயன்; benefit. 2. பேறு; boon. "முனியாயமாய தமிழ்" (மருதூரந். 79). 3. அமர்த்தம்; appointment.

**க.** ஆய

*[ஆகு → ஆகம் → ஆவம் → ஆயம்.]*

**ஆயம்** 16 āyam, பெ. (n.) 1. கடமை (இ.வ.); duty, obligation (Loc.). அவனாயத்தை அவன் கழித்து விட்டான் (உ.வ.). 2. முயற்சி; preservance. 3. வலிமை, திறமை, ஆற்றல்; power, talent, strength.

**க.** ஆய

*[ஆ → ஆய் = வலிமை, வலிமையொடு செய்யும் தொழில் திறன்.]*

**ஆயம்** [17] āyam, பெ. (n.) வெண்மை; white.

*[ஆ – ஆயம்.]*

**ஆயம்** [18] āyam, பெ. (n.) வகுக்கப்பட்ட எண்ணின் மீதி; remainder after dividing a number.

*[அழியம் = ஆயம். அழியம் = எஞ்சியது.]*

**ஆயமலர்** āyamalar,பெ. (n.) தாமரை; lotus. (சா.அக.).

*[ஆய் = வெண்மை. ஆயமலர் = வெண்டாமரை.]*

**ஆயமானம்** āyamāṉam, பெ. (n.) 1. உயிர்நிலை; vital part. 2. மந்தணம் (இரகசியம்); secret.

*[ஆயம் →ஆயமானம்.]*

**ஆயமேரை** āyamērai, பெ. (n.) சிற்றூர்ப் பணியாளர்க்குத் தரும் தவசம்; portion of the crop assigned to the village servants, at harvest time (R.T).

*[ஆயம் + மேரை.]*

**ஆயர்** āyar, பெ. (n.) இடையர்; people of cow herd caste. "ஆயர் வேட்டுவ ராடூஉ த்திணைப்பெயர்" (தொல். பொருள். அகத். 23).

**ம.** ஆயர்.

*[ஆயம் → ஆயர்.]*

**ஆயர்குலம்** āyar–kulam, பெ. (n.) இடையர்குலம்; cowherd caste.

**ஆயர்பாடி** āyar–pāḍi, பெ. (n.) இடையரூர்; village of the cowherds. "ஆநிரை புரக்கு மாயர்பாடியி லொளித்து வைகும்" (கூர்மபு. கண்ணனவ. 17).

**ம.** ஆயன்பாடி.

*[ஆயர் + பாடி.]*

**ஆயர்பிரான்** āyar–piraṉ, பெ. (n.) கண்ணன்; Lord Krisna.

*[ஆயர் + (பெருமான்) பிரான்.]*

**ஆயல்** [1] āyal,பெ. (n.) 1. ஆராய்தல்;reaserch,examination, scrutiny. "ஆயோதனத்துக்குறுநீர்மைகளாயற்றார்" (பாரத. வெளிப்பா. 30). 2. நுண்மை; minuteness. 3. தெரிதல்; knowing, learning. 4. தெளிதல்; clea-ring, comprehension. 5. ஊழ்கத்திலிருத்தல் (தியானித்தல்); being in meditation.

*[ஆய் → ஆயல்.]*

**ஆயல்** [2] āyal, பெ. (n.) 1. பறித்தல்; plucking, cutting, collecting. 2. களைந்துவிடுதல்;removal, taking away, 3. தெரிந்தெடுத்தல்; selection.

*[ஆய் → ஆயல்.]*

**ஆயலோட்டல்** āya–lōṭṭal, தொ.பெ. (vbl.n.) பயிர் விளைந்த நிலத்தில் மகளிர் பறவைகளை வெருட்டுதல்; scaring away birds from the crops, by women shouting.

*[ஒருகா. 'ஆயோ' என ஒலியெழுப்பிப் பறவைகளை விரட்டுதலால் வந்த வினையாகலாம். ஆயோ + ஓட்டல் – ஆயலோட்டல்.]*

**ஆயவன்** [1] āyavaṉ, பெ. (n.) 1. அவன்; he, that man. "நெற்றி நாட்டத்தாலாயவன் சுடருதவியோர்" மதலையாயமாவானே யினான்' (கந்தபு. துணைவர். 2.). 2. அத்தகையவன்; such a one; 'ஆயவனோர் பகல்' (கம்பரா. திருவவ. 1).

**ம.** ஆயவன்; **தெ.** ஆயன.

*[ஆ (சேய்மைச்சுட்டு) + அவன் – ஆயவன்.]*

**ஆயவன்** [2] āyavaṉ, பெ. (n.) வலுவுள்ளவன்; strong man.

**ம.** ஆயவன்

*[ஆய + அவன் – ஆயவன்.]*

**ஆயவியயம்** āya–viyayam, பெ. (n.) **ஆயச்செலவு** பார்க்க; see āya–c–celavu.

*[ஆயம் + Skt. viyayam.]*

**ஆயன்** āyaṉ, பெ. (n.) இடையன்; cow keeper of the cowherd caste, herdsman. 2. கண்ணன்; name of Krishna, as a herdsman – ninth incarnation of Visnu.

*[ஆ →ஆயன்.'அன்' ஆண்பாலீறு. ஆ=மாடு(பசு).]*

**ஆயா** [1] āya, பெ. (n.) காஞ்சிமரம். இலைகளடர்ந்து பெரிதாக வளரும் இம்மரத்தின் இலைகளை வதக்கிக் கட்டிக்கு வைத்துக் கட்டுவர். இதன் வித்தினின்று எண்ணெய் எடுக்கப்படும்; Holoptelea integigrifolia alias Elums integrifolia. It is a large tree with dense dark green foliage. Crushed leaves are applied to boils and an oil is extracted from the seeds.

*[ஆய் → ஆயா.]*

**ஆயா** [2] āyaபெ. (n.) பாட்டி; grand mother. 2. செவிலி (கொ. வ.); nurse, lady's chamber maid (Colloq.).

**ம.** ஆய; **க.** ஆயி (அம்மா); **கொலா.** அய், ஆய்; **பிரா.** ஆய் (அம்மா) Port. aia.

**Hind.** āya (waiting woman maid) **Beng.** ayi, ayi; **sind,** āyi, **Mar.** āgi

*[ஆயாள் →ஆயா. ஆயா என்பது விளிவடிவம் இது இன்று உலகவழக்கில் வழுவமைதி பெற்று எழுவாயாக வழங்கிவருகிறது என்பதும் ஏலாது. ஆயாள் என்னும் எழுவாய் கொச்சைவழக்கில் ஈறு குறைந்து நிற்றலின் 'ஆயா' எழுவாயேயாம்.]*

**ஆயாள்** பார்க்க; see āyāl.

**ஆயாசம்**[1] āyāšam, பெ. (n.) 1. களைப்பு; fatigue, weariness. எனக்கு ஆயாசமாயிருக்கிறது (உ.வ.). 2. மனவருத்தம் (கொ.வ.); mental worry. நான் சொன்னது உனக்கு ஆயாசமாயிருக்கிறதா? 3. துயரம்; distress. அந்தச் செயல் ஆயாசம் மிக அதிகம் (உ.வ.) 4. இளைப்பு; emaciation.

**Skt.** a–yasa. **ம.** ஆயாசம்.

*[அயா → ஆயா → ஆயாசம். அயா = களைப்பு, வருத்தம், துன்பம். **அயாயம்** பார்க்க; see ayāyam.]*

**ஆயாசம்**[2] āyāšam, பெ. (n.) முயற்சி (த.சொ.அக.); effort, exertion, earnestness.

*[அயா → ஆயா → ஆயாசம். **அயாயம்** பார்க்க. see ayāyam வருத்தத்தைக் குறிக்கும் 'அயா' விளின்று வருத்திச் செய்யும் உழைப்பாகிய முயற்சியும் 'ஆயாசம்' எனப் பட்டது.]*

**ஆயாதி** āyādi, பெ. (n.) மரவேலை அல்லது கட்டட வேலையில் அளவமைத்துத் திட்டமிடுதல்; planning the work in carpentry or building construction.

*[ஆயம் + ஆதி.]*

**ஆயாநெல்** āyānel, பெ. (n.) தூற்றாத நெல்; unsifted paddy. (W.).

*[ஆயாத + நெல்.]*

**ஆயாள்** āyāḷ, பெ. (n.) 1. தாய்; mother. 2. பாட்டி; grand mother. 3. முதியவள், மூதாட்டி; old woman. 4. செவிலித்தாய்; foster mother, nurse.

**Sind.** āyal

*[ஆய் → ஆயாள். ஐயை → ஆய் → ஆயாள். ஐயன் = தந்தை (கொங். வ.) ஐயை = தாய்.]*

**ஆயான்** āyān, பெ. (n.) 1. ஆகியிருப்பவன்; one who has become. 2. தமையன் (தஞ்.); elder brother (Tj.). 3. மூத்தவன்; elderly person. 4. தந்தை (இ.வ.); father (Loc.). 5. கார் காத்த வேளாள வகுப்பினன் (நெல்லை); member of the Kār Kātta Veḷḷāḷa Community (Tn.).

*[1. ஆகியவன் → ஆகியான் → ஆயான். 2, 3, 4. ஆ → ஆய் → ஆயான். ஆ = முன்செலற் கருத்துவேர். முன்னவன், பெரியோன், மூத்தவன்.]*

**ஆயி**[1] āyi, பெ. (n.) 1. தாய்; mother. 2. ஒரு மறத் தெய்வம் (சத்தி, காளி.); goddess. "கவுரி குண்டலி யாயி பண்ணவி தனருளினாலே" (தாயி. சித்தர் கண.4). 3. மாரியம்மன் தெய்வம்; Goddess Mariyamman. 'ஆயிமகமாயி' (உ.வ.). 4. மகளிரைக் குறிக்கும் மதிப்புரவுச் சொல்லீறு; a term of respect, affixed to a woman's name. சின்னாயி, பொன்னாயி (உ.வ.).

**ம. க.** ஆயி.

*[ஆய் → ஆயி. 'இ' பெ. பா. ஈறு.]*

**ஆயி**[2] āyi, பெ. (n.) **ஆயா**[1] பார்க்க; see āya[1]

**ஆயிட்டு** āyiṭṭu, இடை, (conj.) ஆகையால்; therefore. "அத்துவித மென்ற சொல்லே அந்நிய நாத்தியை யுணர்த்து மாயிட்டு" (சி.போ. 2, 1 வார்த்திக.). 'ஆயிட்டு இவளை வேண்டா என்றன்றோ கொடு புக்கதென்கிறாள்' (ஈடு. 6, 5, 3).

*[ஆயிடலால் → ஆயிட்டு. **ஆயிடலால்** பார்க்க; see āyiḍalāl.]*

**ஆயிடல்** āyiḍal, பெ. (n.) 1. தோன்றுதல், ஆகுதல் (த.சொ.அக.); becoming, happening, growth.

*[ஆய் + இடு + அல்.]*

**ஆயிடலால்** āyiḍalāl, இடை. (conj.) ஆகையால்; therefore. "இனி மழைபெய்து குளம் நிறைந்த தென் புழிப் போல ஆயிடலாலென்பது ஆயிட்டெனத் திரிந்த தென்றலு மொன்று' (த.சொ.அக.).

*[ஆய் + இடு + அல் + ஆல்.]*

**ஆயிடை** āyiḍai, பெ. (n.) அவ்விடம்; that place. "இனியாயிடை வந்திடும் அரசர் செய்கையும்" (கந்தபு. தெய்வ. 1C2) (சூ.வ.357). – கு.வி.எ. (adv..) 1. அக்காலத்து; at that time. (சீவக.219). 2. அவ்வளவில்; during that time. "ஆயிடை ஆரஞர் உற்றனகண்" (குறள் – 1179).

**ம.** ஆயிட; **பட.** ஆயொடெ.

*[ஆ + இடை. ஆ – சேய்மைச்சுட்டு. இடை → இடம், காலம்.]*

**ஆயிரக்கதிரன்** āyira–k–kadiran, பெ. (n.) கதிரவன், சூரியன்; sun.

*[ஆயிரம் + கதிரவன்.]*

**ஆயிரக்காலி** āyira–k–kāli, பெ. (n.) 1. மரவட்டை (வின்.); millepede, **Myriopoda** (W.). 2. துடைப்பம்; brcom. 3. செவ்வட்டை; a red variety of Myriapod. (சா.அக).




**ம.** ஆயிரக்காலன்

*[ஆயிரம் + காலி.]*

**ஆயிரக்கான்மண்டபம்** āyira–k–kān–mandabam, பெ. (n.) ஆயிரந் தூண்களுள்ள கோயில்மண்டபம்; hall of 1000 pillars, a distnctive feature in large South Indian temples.

ம. ஆயிரக்கால் மண்டபம்.

*[ஆயிரம் + கால் + மண்டபம்.]*

**ஆயிரக்கிரணன்** āyira-k-kiranan, பெ. (n.) **ஆயிரக்கதிரன்** பார்க்க; see āyira-k-kadiran.

*[ஆயிரம் +* **Skt.** Krana.*]*

**ஆயிரக்குண்டலி** āyira-k-kundali, பெ. (n.) செவ்வட்டை; woodlouse. (சா.அக.).

*[ஆயிரம் + குண்டலி.]*

**ஆயிரங்கச்சி** āyiran–kacci, பெ. (n.) அடுக்கிளநீர்; a variety of cocount. (சா.அக.).

*[ஆயிரம் + (காய்ச்சி) கச்சி .]*

**ஆயிரங்கண்ணன்** āriran–kannan, பெ. (n.) தொன்மக் (புராண) கதையின் வண்ணம் ஆயிரம் கண்ணு டையவனாகக் கருதப்பட்ட இந்திரன்; Indra, represented as having 1000 eyes.

ம. ஆயிரக்கண்ணன்.

*[ஆயிரம் + கண்ணன்.]*

**ஆயிரங்கண்ணி** āyiran–kanni, பெ. (n.) பலாப்பழம்; jack fruit. (சா.அக.).

*[ஆயிரம் + கண்ணி. கள் → கண் → கண்ணி. கள் = முள்திரட்சி.]*

**ஆயிரங்கண்ணுப்பானை** āyiran–kannu-p-pānai, பெ. (n.) திருமணத்தின் போது அரசாணிக்காலருகில் வைக்கப்படும் வண்ணப்பானை (நெல்லை); painted pot, used by certain castes, in marriages (Tn.).

*[ஆயிரம் + கண்(ணு) = பானை.]*

**ஆயிரங்கண்ணோன்** āyiran–kannōn, பெ. (n.) **ஆயிரங் கண்ணன்** பார்க்க; see āyiran–kannan.

*[ஆயிரம் + கண்ணோன். கண்ணான் → கண் ணோன்.]*

**ஆயிரங்கதிரவன்** āriran–kadiravan, பெ. (n.) பகலவன், சூரியன்; sun.

*[ஆயிரம் + கதிரவன்.]*

**ஆயிரங்கதிரோன்** āyiran–kadirōn, பெ. (n.) கதிரவன்; sun. "மதியொடு திகழ் மீனாயிரங் கதிரோன்வரக் கரந்தவா றதுபோல்" (கந்தபு. மூன்றா. 109).

*[ஆயிரம் + கதிரோன். கதிரவன் → கதிரோன்.]*

**ஆயிரங்கதிரவன்** பார்க்க; see **ayiankadiravan.**

**ஆயிரங்காய்ச்சி**[1] āyiran–kāycci, uQ. (n.) 1. மிகுதியாகக் காய்க்கும் தென்னை, பலா, மா போன்ற மரவகை (செ.அக.); very productive tree esp. coconut, jack or mango. 2. மிக அதிகமாகக் காய்க்கின்ற ஒரு குறிப்பிட்ட தென்னை வகை; a cocount tree. "வயிற்றுவலியுந் தொலையும் ஆயிரங்காய்ச் சிக்கறி" (பதார்த்த. 70).

*[ஆயிரம் + காய்ச்சி. காய்ச்சி = காய்க்கின்ற மரம்.]*

**ஆயிரங்காய்ச்சி**[2] āyyiran-kāycci, uQ.. (n.) துடைப்பம் (செ. அக.). broom.

*[ஒருகா. ஆயிரங்காற்சடை → ஆயிரங்காய்ச்சி.]*

**ஆயிரங்கால் தூண்டில்** āyirangāl–tūndil, uQ. (n.) பல முள் பிணைத்த தூண்டில் அல்லது தூண்டிற்கயிறு; fishing tackle which has many hooks. (நெல்லை. மீன.).

*[ஆயிரம் + கால் + தூண்டில் .]*

**ஆயிரங்கால் தூண்டில் வள்ளம்** āyirangāl–tundil–vallam uQ. (n.) ஆயிரங்கால் தூண்டில் மரக்கலம்; boat fastened with many hooked fishing tackle.

*[ஆயிரம் + கால் + தூண்டில் + வள்ளம்.]*

**ஆயிரங்காற்சடை** āyirangār–cadai, பெ. (n.) துடைப்பம்; (இ.வ.) broom (Loc.).

**ஆயிரங்கிரணன்** āyiran–kiranan, பெ. (n.) **ஆயிரங் கதிரவன்** பார்க்க; see āyirankadiran

*[ஆயிரம் +* **Skt.** Krana.*]*

**ஆயிரஞ்சோதி** āyiran–jōdi, பெ. (n.) கதிரவன்; சூரியன்; sun.

*[ஆயிரம் +* **Skt.** joti.*]*

**ஆயிரத்தளி** āyira–t–tali, பெ. (n.) கங்கை கொண்ட சோழபுரம், திருச்சி மாவட்டத்திலுள்ள பழைய ஊர். Gangai konda chola puram. ancient town in the Tiruchi District "ஆயிரந்தளி கூடின விடம் ஆயிரத்தளி" (வீரசோ. தொகைப். 3).

*[ஆயிரம் + தளி( தளி = சிவலிங்கம்).]*

**ஆயிரத்தாண்டு சிட்டம்** yirattāndu–cittam, பெ. (n-) ஆயிரமாண்டுகளான இரும்புச்சிட்டம்; thousand years old hydrated oxide of iron.

*[ஆயிரம் + அத்து + ஆண்டு + சிட்டம்.]*

**ஆயிரநாமன்** āyira–nāman, பெ. (n.) **ஆயிரப்பெயரன்** பார்க்க; see āyira–p–peyaran "ஆயிர நாமத் தண்ண லனையவன்வன்மை காணா" (கந்தபு. நகரழி.11).

*[ஆயிரம் + Skt. nama + அன் (ஆ.பா.ஈறு.]*

**ஆயிரப்பணாமுடி** āyira-p-panā-mudi, பெ. (n.) துத்த நாகமலை; mountain containing zinc ore.

*[ஒருகா. ஆயிரம் + பணா (பணம்) +முடி. பணம் → படம், படமெடுக்கும் பாம்பு, நாகம் என்னும் பாம்புப் பெயரிலுள்ள மாழை (உலோகம்).]*

**ஆயிரப் பெயரன்** āyira-p-peyaran, பெ. (n.) சிவன்; திருமால்; Šiva, Vishnu.

*[ஆயிரம் + பெயரன்.]*

**ஆயிரம்** āyiram, பெ. (n.) 1. பத்து நூறுகளைக் கொண்ட து (1000) என்னும் எண்; the number 1000. "ஆயிரம் வருவழி உகரங் கெடுமே" (தொல். எழுத். 391). 2. இவ்வளவு என்று கணக்கிடப்படாத எண்ணிக் கை; numerous. 3. பல; many.

**ம.** ஆயிரம்; **க., பட.** சாவிர; **தெ.** வெய்யி, வேயி. **து.** சார. சாவிர; **கோத.** சாவ்ரம்; **துட.** சொபொ்; **குட.** ஆய்ரெ, ஆயிர.

**Skt.** Sahasra, Sahasram; H.pers. hazar.

*[அயிர் → அயிரம் → ஆயிரம். அயிர் = நுண்மணல்.]*

வடமொழியில் ஆயிரத்தைக் குறிக்கும் Sahasra என்னுஞ் சொல்லுக்கு 'Sahas' –(strength, power, victory, light)– என்பவை மூலமாகலாம் என்று மானியர் வில்லியம்சு கூறுகிறார். சொல்லின் பொருளுக்கும் காட்டும் மூலத்திற்கும் எவ்விதத் தொடா்பும் காணப்படவில்லை. தமிழில் 'ஆயிரம்' என்னும்எண்ணுப்பெயருக்கு,எண்ணிக்கைமிகுதியையுணர்த்த நுண்மணலைக் குறிக்கும் "அயிா்" என்னுஞ் சொல் மூலமாக அமைந்திருப்பது மிகவும் பொருத்தமாகவுள்ளது. பத்தின் பத்தாகிய நூறு (100) என்னும் எண்ணுப்பெயர் பொடியாதல், தூளாதல்என்று பொருள்தரும் "நூறு" (நூறுதல் = தூளாக்குதல், அரைத்துப் பொடியாக்குதல்) என்னும் வினைமுதலிலிருந்து பொருட்பாடு பெற்றிருத்தலை ஒப்பு நோக்குக. இன்றும் தெலுங்கில் நூறுதல் அரைத்தல் எனப் பொருள்படுகிறது. வெள்ளமும் ஊழிப் பெருக்கும் பேரெண்களுக்குப் பெயரா யிருத்தலைக் காணலாம்.

**ஆயிரம்பரிக்கோற் சேவக சோழன்** āyiram pari-k-korc – šērvaga cholan, பெ. (n.) சுந்தரேச பாத சேகர பாண்டியனுடன் போரிட்டு மடுவிலிறந்த சோழன்; a Cola king who died in a deep lake after having fought with the Pandiya King, Sundarēša-padašēgara Pandiyan. (அபி. சிந்.).

*[ஆயிரம் + பரி + கோல் + சேவகர் + சோழன். பரிக்கோற்சேவகர் பார்க்க;* **see parik-korsevakar.]**

**ஆயிரம்பெயரோன்** āyiram-peyarōn, பெ. (n.) திருமால் (பிங்.); Visnu, as having 1000 names.

*[ஆயிரம் + பெயர் + (ஆன்) ஓன்.]*

**ஆயிரமுகத்தோன்** āyiramugattōn, பெ. (n.) வீரபத்திரன் (பிங்.); Virabhadra, represented as having 1000 faces.

*[ஆயிரம் + முகம் + அத்து + (ஆன்) ஒன்]*

**ஆயிரவருடமண்டூரம்** āyira-varuda-mandūram, பெ. (n.) ஆயிரம் ஆண்டுகளான இரும்புச்சிட்டம்; thousand years old hydrated oxide of iron (சா.அக.).

*[ஆயிரம் + வருடம் + மண்டூரம்.* **Skt.** Varsa. **த.** *வருடம்.]*

**ஆயிரத்தாண்டு சிட்டம்** பார்க்க; See **āyirathāndu-cittam.**

**ஆயிரவாகு** āyiravāgu, பெ (n.) முருகனின் படைத் தலைவர்களுள் ஒருவன்; one of the commanders in the army of God Muruga. (அணி. சிந்.).

*[ஆயிரம் + வாகு.]*

**ஆயிரவாண்டு வேம்பு** āyiravāndu-vēmbu, பெ. (n.) 1000 ஆண்டுகள் சென்ற வேப்பமரம்; margosa tree of 1000 years old. (சா.அக.)

*[ஆயிரம் + ஆண்டு + வேம்பு.]*

இதன் பட்டை இனிக்கும் என்று கூறப்படுகிறது..

**ஆயிரவாரத்தாழியன்** āyiravāra-t-(u)āliyan, பெ. (n.) உயர்வும் சிறப்பும் உணர்த்தும் ஆயிரம் ஆரக் கதிர்களைக் கொண்ட சக்கரம் போன்ற பாதவரை (ரேகை) களை யுடைய புத்தபெருமான்; Buddha, in the sole of whose foot there was a disc with 1000 lines, a sign of extraordinary greatness in a man. "ஆயிர வாரத் தாழியன்" (மணிமே. 5,104).

*[ஆயிரம் + ஆரம் + அத்து (சாரியை) + ஆழி + அன்.]* **Skt.** Sahasrāra chakra rēka.

**ஆயிரவேலி** āyiravēli, பெ. (n.) 1. தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் அதியமான் என் னும் சிற்றரசனைப் பொருது வென்ற இடம்; battle field where Talaiyālankānattu-c-ceru-venra Nedunceliyan defeated the chieftain Adiyamān. ஆயிரவேலி அயிரூர் 2. பாரதப் போரில் 14-ஆம் நாள் அருச்சுனனால் இறந்தவன்; name of a warrior killed by Arjuna on the 14th day of Bhāratha war. (அபி.சிந்.).

*[ஆயிரம் +வேலி.]*

**ஆயில்**[1] āyil, பெ.. (n.) **கவ்வை நாண் மீன் பார்க்க; see Kavvai-nān-mīn.** "நிறைகொள் கவ்வைபணி யாயில்" (உள். உடை.16) (த.சொ.அக.).

*[ஆய்[4] → ஆயில்.]*

**ஆயில்**[2] āyil, பெ. (n.) 1. மதகளி வேம்பு; Chittagong ood, 1.tr., Chickrassia tabularis. "கருங்காலி யாயில் மருதும்" (சைவச. பொது.27). 2. செவ்வகில்; red cedar or Indian mahogany. 3. காஞ்சி; jungle cork–tree (சா.அக). 4. அசோகு (நாமதீப.); Asōka tree. 5. ஆயிற்பட்டை; bark of the ayii tree. (தைல.104).

**ம** ஆயல், ஆயில்

*[ஒருகா. ஆ → ஆய் → ஆயில். ஆ = முன்னூக்கல், நீட்சி, உயரம். ஆயில் = உயரமான மரவகை.]*

**ஆயில்** [3] āyil பெ (n.) இரும்பு ; iron.

ம. அயிர்; க அதிரு; து. அதீர்

*[ஆய் [10] → ஆயில்.]*

**ஆயிலி** āyili, பெ. (n.) தாயிலி; motherless.

*[ஆய் + இலி : ஆய் → தாய். இல்லி → இலி = இல்லாதவன், இல்லாதவள்.]*

**ஆயிலியம்** [1] āyiliyam, பெ.. (n.) நாகமரம்; common black plum.

*[ஆயில் → ஆயிலியம்.]*

**ஆயிலியம்** [2] āyiliyam, பெ. (n.) இருபத்தேழு நாண் மீன்களுள் ஒன்பதாம் நாண்மீன்; ninth naksatra கவ்வை ; "மாசிலாயிலி யத்திற் காமமுண்டாம்" (கூர்மபு.19-வது சிராத்தமு. 5).

ம. ஆயில்யம்; பிரா. ஆசிலிய; skt. āstesa

*[ஆயில் + இயம்.]*

**ஆயிலியமரம்** āyiliyamaram, பெ. (n.) நாகமரம் ; common black plum, jambolin (சா.அக.).

**ஆயிலியன்** āyiliyan, பெ. (n.) கவ்வை (ஆயிலிய) நாண்மீனன்று பிறந்தவன்; one who was born on āyiliyam nakshatra.

*[ஆயிலியம் → ஆயிலியன்.]*

பிறந்த நாண்மீனும் ஒரையும் கருத்திற்கொண்டு குழந்தைக்குப் பெயரிடுதல் பழந்தமிழர் வழக்கம். ஆவூர் மூலங்கிழார், ஆதிரையான், நல்வெள்ளியார், வெள்ளிவீதியார் என்னும் பெயர்களை நோக்குக.

**ஆயிழை** [1] āyilai, பெ. (n.) 1. தெரிந்தெடுத்த அணிகலன்; selected or the choicest ornament. 2. ஆராய்ந்த அணிகலன்களையுடைய பெண்; woman, lady, damsel, literally one adorned with choice ornaments. "அம்பல மடைந்தன ளாயிழை" (மணிமே. பதி. 67).

ம. ஆயிழ

*[ஆய் + இழை.]*

**ஆயிழை** [2] āyilai, பெ. (n.) 1. அரிவாள் நுனி; sharp edge of a sickle. 2. கன்னி ஒரை (ராசி); virgo of the zodiac. "அலவன்றடி விடை யாயிழை விற்றுலை " (விதாந. பஞ்சா. 14).

*[ஆய் + இழை. ஆய் = நுண்மை, கூர்மை, இழை = இழைத்துக் கூராக்கப்பட்ட அரிவாள் நுனி. அரிவாளைப்போன்று வளைந்த அல்லது ஒளிசிந்தும் கூர்மை தொடர்பாக இச்சொல் கன்னி ஒரையைக் குறித்திருக்கலாம்.]*

**ஆயிளை** āyiḷai, பெ. (n.) கொடுவாள் தலை (கதி. அக.).; sharp edge or tip of cutting knife.

*[ஒருகா. ஆயிழை → ஆயிளை. அரிவாள் அல்லது கொடுவாளின் உச்சி அலகு நுனியைக் குறித்த சொல் அதன் கூரிய தலைப் பகுதியைக் குறித்திருக்கலாம்.]*

**ஆயிளைப்புற்று** āyiḷai-p-purru, பெ. (n.) அகன்ற கண்ணையுடையதாய் வடவடக்கை போன்று கறையான் மொய்த்திருக்கும் ஒருவகைப் புற்று; a kind of ant-hill which has big holes (மனைநூல்).

*[ஆய் + இளை + புற்று.]*

**ஆயின்** [1] āyin, இடை. (conj.) 1. ஆனால்; but, if "விளக்கு மிருள்படுவ தாயின்" (பழமொ. கல்வி. 3). 2. ஆதலால்; therefore (பதிற்றுப்.).

ம. ஆயில்; பட. ஆலெ

*[ஆகு + இன் → ஆகின் → ஆயின்.]*

**ஆயின்** [2] āyin, வி. எ. (adv.) ஆராய்ந்தால்; if examined, looked into, made research. (கதி.அக.).

*[ஆய் + இன்.]*

**ஆயின்மேனி** āyinmēni, பெ. (n.) 1. மரகதக்கல்லில் ஒருவகை (வின்.); a kind of emerald. 2. பச்சைநீலக்கல்; a sort of green sapphire, altogether different from occidental emerald. (சா. அக.).

*[ஐ = அழகு, ஒளி. ஐ → ஐன் → அயின் → ஆயின் + மேனி. அழகானது என்பதை ஐனானது, அயினானது என்பது இன்றும் கொங்கு நாட்டுப் பேச்சு வழக்கு.]*

**ஆயினி** āyini, பெ. (n.) 1. ஈரப்பலா; bread fruit tree.


ஆயினி – ஈரப்பலா

2. காட்டுப்பலா; jungle jack.

ம. ஆயினி.

*[ஆய் = (ஈரம்) → ஆய் + ஆயினி.]*

**ஆயினிமேற் புல்லுருவி** āyinimēṟ-pulluruvi, பெ. (n.) ஈரப்பலாவின் மேல் முளைத்திருக்கும் புல்லுருவி; parasite plant found grown on bread-fruit tree. (சா.அக.).

*[ஆயினி + மேல் + புல் + உருவி.]*

**ஆயினிமேனி** āyini-mēni, பெ. (n.) **ஆயின்மேனி** பார்க்க; see āyin-mēni.

*[ஆயின் → ஆயினி + மேனி.]*

**ஆயு** āyu, பெ. (n.) 1. வாழ்நாள், ஆயுள்; lifetime, natural span of life. "ஆயுவழியு மதிக மிலிங்கமெனின்" (சைவச. பொது. 109). 2. சமண நூலின்படி, வினைப்பயனுக்கேற்ப (கர்மானுசாரத்தின்படி) வரையறுக்கப்பட்ட, எண்வகைக் குற்றங்களுள் ஒன்று; (Jain.) duration of period considered as a flow, as determined by karma (சா.அக.). 3. ஆயுமான் என்னும் நித்திய ஓகம் (யோகம்); yoga known as ayuman. (குமாரசுவா. திநாதி 4). 4. சந்திர மரபில் புரூரவா என்னும் அரசன் மகனாகிய ஓரரசன்; king, son of Pururava of the moon dynasty. "ஆயுவென் றொரு செம்மலை யம்மக னளித்தான்" (பாரத. குரு.13).

க. ஆயு

*[ஆய் → ஆயுள் → ஆயு (கடைக்குறை). ஆய் = வலிமை, ஆற்றல், உயிர், வாழ்நாள்.]*

வடமொழியில் 'ay' (to go) என்னும் வேரினின்றும் வாழ்நாளைக் குறிக்கும் ā'yus' என்னும் சொல் தோன்றிய தாகக் கூறப்பட்டுள்ளது. மேலையாரிய மொழிகளில் இச்சொல் மிகுதியாகப் பயிலப்படாமையானும், இந்திய மொழிகள் பல வற்றுள்ளும் பயிலப்படுதலானும், வடநாட்டின்கண் வாழ்ந்த வடதமிழர் வழக்கில் பெருகி வளர்ந்த சொல்லாகத் தெரிதலானும், 'ஆய்' என்னும் தமிழ் வேரினின்றே திரிந்த வடபுலத்தமிழ்ச் சொல்லாகவே கொள்ளத்தகும்.

**ஆயுட்கோள்** āyuṭkōl, பெ. (n.) பிறப்பாளனின் (சாதகனின்) வாணாளை வரையறுப்பவனாகக் கருதப்படும் காரி (சனி)க் கடவுள் (நாம்தீப.); saturn said to determine the length of a man's life.

*[ஆயுள் + கோள். கோள் = கோளம் (கிரகம்).]*

**ஆயுட்பொருத்தம்** āyut-poruttam, பெ. (n.) மணப்பொருத் தங்களுள் ஒன்று. அது, பெண்ணின் நாண்மீன் முதல் ஆணின் நண்மீன் வரை எண்ணின தொகையையும், ஆணின் நாண்மீன் முதல் பெண்ணின் நாண்மீன் வரை எண்ணின தொகையையும், தனித்த ௭ ஏழிற் பெருக்கி இருபத்தேழுக் கீந்த எச்சம். பெண்ணின் நாளிலீ தொகை குறையின் ஆயுட்பொருத்தம் பொருந்தும் எனக் கொள்வர். astrological match – making with reference to life's duration of the bride and the bridegroom as assessed from their horoscopes.

*[ஆயுள் + பொருத்தம்.]*

**ஆயுதசாலை** āyuda-šālai, பெ. (n.) **ஆய்தசாலை** பார்க்க. see āyda-sālai.

*[ஆயுதம் + சாலை.]*

**ஆயுதசிகிச்சை** āyuda-šigiccai, பெ. (n.) **ஆய்த பண்டுவம்** பார்க்க; see ayda-panduvam.

**ஆயுத நஞ்சு** āyuda-nañju, பெ. (n.) **ஆய்தநஞ்சு** பார்க்க see āyda-ñanju.

*[ஆயுதம் + நஞ்சு.]*

**ஆயுத நோட்டம்** āyuda-noṭṭam, பெ. (n.) (சா. அக.) **ஆய்த நோட்டம்** பார்க்க, see āyda-noṭṭam.

*[ஆய்தம் → ஆ ,தம் + நோட்டம்.]*

**ஆயுதப் பயன்படுத்தம்** āyuda-p-payan-paḍuttam, (சா.அக.) **ஆய்தப்பயன்படுத்தம்** பார்க்க; see āyda-p-payan-paḍu-t-tam.

*[ஆயுதம் + பயன் + படுத்தம்.]*

**ஆயுத பயிற்சி** āyuda-payirci, பெ. (n.) **ஆய்தப் பயிற்சி** பார்க்க; see āyda-p-payirci.

ம ஆயுதசிக்ழ

**ஆயுத பரிட்சை** āyuda-parirtcal, பெ. (n.) **ஆய்த நோட்டம்** பார்க்க; See āyda noṭṭam.

**ஆயுத பாணி** āyuda-pāṇi, பெ. (n.) **ஆய்தபாணி பார்க்க**, see āyda-pāṇi

**ஆயுத பூசை** āyuda-pūšai, பெ. (n.) **ஆய்தபூசை பார்க்க**; see āydapūšai

**ஆயுதம்**[1] āyudam, பெ. (n.) **ஆய்தம்**[2] பார்க்க; see āydam[2]

**ஆயுதம்**[2] āyudam, பெ. (n.) வேலமரம்; tree of the acacia genus – Acacia arabica. (சா.அக.).

*[ஆய் = வலிமை. ஆய் → ஆயுதம்.]*

**ஆயுதம்**[3] āyudam, பெ. (n.) கூத்துப் பயிலிடம் (த.சொ.அக.); learning centre for dance and drama.

*[ஆய்தம் → ஆயுதம். ஆய்தல் = நுணுகுதற் பொருளோடு அழகுப் பொருளும் தருதலின் கூத்துக்கு ஆயிற்று.]*

**ஆயுள்**[1] āyuḷ, பெ. (n.) வாழ்நாள்; life time, duration of life, term of life.

**ம.** ஆயுர்தாயம்; **க.** ஆயு, ஆயுரவதி; **தெ.** ஆயுவு,; **து** ஆயுர்தாம்

*[ஆய் + உள். ஆய் = வலிமை. உள் = ஒரு இடப்பெயரீறு. ஆயுள் = வலிமையோடு வாழும் கால எல்லை. ஒ.நோ. பையுள்.]*

வடமொழியாளர் āyu, āyus, என்னும் வாணாளைக் குறிக்கும் சொல் ay – (to go) என்னும் சொல்லி லிருந்து பிறந்ததாகக் கூறுவர். மேலையாரிய மொழிகளில் இச்சொற்குத் தம்வேர்வழி இனச்சொற்களின்மையானும், நதிய மொழிகளில் மட்டும் காணப்படுதலானும் பை → பையுள் என்றாற்போன்று, ஆய் → ஆயுள் என்னும் தமிழ்ச் சொல்லினின்றே வடமொழி āyus திரிந்ததாகல் வேண்டும்.

**ஆயுள்**[2] āyuḷ, வி. எ. (adv.) அப்பொழுது; then, at that time. "சொன்ன வாயுளே" (சீவக.415).

**ஆயுள்**[3] āyuḷ, பெ. (n.) நோய் தீர்ப்போன்; one who cures diseases. (கதி.அக.).

*[ஆயுள்வேதன் → ஆயுள் (ஈற்றுச்சொற்குறை).]*

**ஆயுள்**[4] āyuḷ, பெ. (n.) ஆ (பசு) வாகிய உயிரிருந்து வாழும் உடம்பு; referring to the body, the abode of the soul.(சா.அக.).

*[ஆ (பசுவாகிய உயிர்) + உள். உள் = உள்ளிருந்து வாழ்வதற்கு இடமாகியது. உடம்பு.]*

**ஆயுள் ஒழுங்கு** (ஆயுள்கிரமம்) āyuḷ–oḻuṅgu, பெ. (n.) ஊதை (வாத) பித்த சில்மத்தைக் கருதி வாழ் நாளைப் பிரித்த முறைமை; order in which the age is classified according to the three humours (Doshas) in the system.

*[ஆயுள் + ஒழுங்கு* **Skt.** *krama – த. கிரமம்.]*

ஊதை பித்த சில்மம் மூன்றும், உடம்பில் வாணாள் முழுதும் நிற்கும் முறைமையை மருத்துவ நூலார் பின்கண்டவாறு வகைப்படுத்துவர்.

தானவனும் அமைத்தபடி வயதுநூறு
சகலருக்கும் இளமையிலே சிலேத்துமமாகும்
ஆனநடு வயது பித்தம் அப்பால் வாதம்
ஆறஞ்சி மூவாண்டு மாதம் நான்கு
ஈனமற மூவருமே மூன்று பங்காய்
இப்படியே நடந்துகொள்வர் முறையோன் முன்னாள்
ஏனமுற அமைத்த வண்ணம் ஆண்டு மாதம்
இயைவான நாள்கள் தப்பி மறிப்பதாமே

(வைத்திய.சதகம்.).

**ஆயுள் கிண்ணி** āyuḷ–kiṉṉi, பெ. (n.) 16 பலம் நிறையுள்ள செம்புக் கிண்ணியில் ஆவின் (பசுவின்) நெய்விட்டு அதனுள் தோன்றும் மாந்தனுடைய நிழலைக் கொண்டு ஆயுளைக் கணக்கிட்டு வரையறுக்கும் ஒரு ஏனம்; basin specially made of 16 palams of copper and used for determining the age of a particular person by examining his reflection in the cow's ghee contained in that vessal. (சா.அக.).

*[ஆயுள் + கிண்ணி.]*

**ஆயுள்நூல்** āyuḷ–nūl, பெ. (n.) 1. உயிரிருந்து வாழும் உடம்பு என்னும் பொருள் கொண்டு அவ்வுடம்பைக் காப்பாற்றி உயிரை நிலைபெறச் செய்யும் மருந்துகளைக் கூறுகின்ற நூல்; that branch of science dealing with medicines as are useful for the preservation of life. 2. வாழ்நாளைப்பற்றிக் கூறும் நூல்; treatise on age, the duration of life and death of human beings. (சா.அக.). ஆயுள்மறை பார்க்க; see ayul–maṟai.

*[ஆயுள் + நூல்.]*

**ஆயுள் பெருக்கம்** āyuḷ–perukkam, பெ. (n.) வாணாள் நீடித்தல்; ஆயுள் நீட்டிப்பு; prolongation of life, longevity.

*[ஆயுள் + பெருக்கம்.]*

**ஆயுள் மறை** āyuḷ–maṟai, பெ. (n.) மருத்துவநூல் ; book on medicine. "ஆயுமறை வானவர் மகாரும்" (பாரத வெளிப்பாட்டுச். 3) (சா.அக.).

*[ஆயுள் + மறை.]*

**ஆயுள் வேதம்** āyuḷ–vēdam, பெ. (n.) 1. வடநாட்டில் வளர்ந்ததும், ஆயுர்வேதம் எனப் பெயர் பெற்றதுமான இந்திய மருத்துவமுறை; Indian medicine system developed in North India and known as Āyurvēda. "வைத்தவாயுள் வேதந் தனுர்வேதம்" (நல்.பாரத. அரசநீதி. 216). 2. நான்முகன் வழியாகப் பலர்க்கும் கற்பிக்கப் பட்டதாகத் தொன்ம (புராண)க் கதை வழங்கும் வடமொழி இந்திய மருத்துவ நூல்; inspired Sanskrit medical work. The authorship of the Āyurvēda is ascribed to Brahma who is said to have imparted this knowledge to Daksha, one of the progenitors of mankind. It consists of several parts, such as, physiology, pathology, Materia Medica, Pharmacy etc. From the writings of Charaka and Susruta and their commentators, it is learnt that the Āyurvēda originally consisted of 100 sections, each a 1000 stanzas making up a lakh's (1,00,000) of verses arranged into 8 books viz –

1. **சல்லியம்** – art of extracting extraneous substances forced into the human frame.
2. **சாலாக்கியம்** – art of curing external organic affections, such as, diseases of the ears, eyes, etc.
3. **காயா மருத்துவம் (சிகிச்சை)**– art of application of healing to body in general.
4. **பூதமருத்துவம் (வைத்தியம்)** – art of restoration of faculties from a deranged state, due to demonaical possession.
5. **கௌமார பிரித்தியம்** – care of infants and treatment of puerperal disorders in mothers and nurses.
6. **அகதம்** – art of administering antidotes to poisons.
7. **இதளியம் (இரசாயனம்)** – chemistry or alchemy.
8. **மாந்த இனப் பெருக்கம் (வாஜீகரணம்)** – increase of the human race.

All the recent medical works on Ayurveda are based on the works of Charaka and Susruta. Susruta re–arranged

d local diseases (சா.அக.). "ஆயுள் வேத
டையாரும் இவை கால்களாக நடக்கும் என்பது
ற்றிப் பாதம் என்றும்" (குறள்.950.பரிமே.உரை.).

ம. ஆயுர்வேதம்; க. ஆயுர்வேத; தெ. ஆயுர்வேதமு. Skt. /urvēda.

*[ஆயுள் + வேதம். வேதம் =நூல்.]* ***ஆயுள் நூல்*** *பார்க்க;* see āyuḷ-nūl.

இந்திய நாடு முழுதும் பரவிய பண்டைக்கால மூலிகைப் பச்சிலை மருத்துவம் ஒன்றே யெனினும் வடபுலத்தில் இம்மருத்துவ முறை ஆயுள்வேதம் அல்லது ஆயுர்வேதம் என்று பெயர் பெறுவதாயிற்று. வேதம் என்னும் சொல் இங்கு நூல் என்றே பொருள் தரும். இஃதறியாதார் இதனை ஆரிய நான்மறையோடு சார்த்தி, இருக்கு அதருவண மறைகளில் இம்முறை முதன்முதல் கூறப்பட்டது என்று ஒரு சாராரும், அஃதன்று, ஆயுள்வேதமே ஐந்தாம் வேதமாகக் கொள்ளத்தக்கது என்றும், பலபடப் பன்னியும் பின்னியும் உன்னித்துரைப் பாராயினர், இது குறித்து வடமொழி அகரமுதலி பின்வருமாறு கூறுகிறது.:

"the more modern Atharvavēda – (Samhitā), on the other hand, is, like the Rig vēda, a real collection of original hymns mixed up with incantations, borrowing little from the Rig, having no direct relation to mere ritual or sacrifices. But supposed by mere recitation to produce long life, to cure disease (generally in connection with the use of some plant or drug gifted with magical properties) to obtain success in love or gambling, to effect the ruin of enemies etc. (M.S.E.D.).

ஆயுள்வேதம் ஆரிய நான்மறைகளொடு சிறிதும் தொடர்பற்றது. கந்தருவ வேதம் தனுர்வேதம் ஆயுர்வேதம் ஆகியவை துணைநூல்கள் (உபவேதம்) என்றே பல்லோராலும் ஒப்புக் கொள்ளப்பட்டுள்ளன. மருத்துவக் கலைக்குத் தெய்வத்தன்மை சேர்ப்பதற்காக வடமொழி வேதங்களொடு சார்த்தியுரைக்க வேண்டுவதில்லை.

ஆயுள் என்ற சொல்லே மருத்துவனைக் குறித்து வழங்கி வந்துள்ளது. ஆயுள்வேதம் என்பது மருத்துவனின் கையேடு அல்லது அடிப்படை நூல் என்னும் பொருளில் உருப்பெற்று நாளடைவில் மருத்துவநூல் என வழக்குப் பெற்றுள்ளது. வாழ்நாளை மிகுவிக்கின்ற நூல் என்பது அச்சொற்குச் சுமத்தப்பட்ட பொருள். ஆயுள்நூல் = உள்ளபடி உடலின் உட்பகுதிகளை ஆயும் நூல். ஆயுள்வேதம் வாழ்நாளை மிகுவிக்கும் மருந்துகளைப் பற்றிக் கூறுவதாயின், அது தமிழர்களின் காயகற்ப மூலிகை மருத்துவமாகிய சித்த மருத்துவமன்றி வடநாட்டு மருத்துவமாகாது. ஆயுள்வேத மருத்துவத்தில் அனைத்து நோய்களுக்கும் மருந்து ஆயப்படுதலின் வாழ்நாளை நீட்டித்தற்கேயுரிய தனி மருத்துவ முறையன்று. வாழ்நாளை நீட்டிப்பதாயின் நூறாண்டுகளுக்கு மேலும் வாழ்தற்கேற்ற முறைகளை மட்டும் கூறி ஆற்றுப்படுத்தும் நூலாதல் வேண்டும். அல்லாக்கால் அதற்கு அப்பெயர் பொருந்தாது.

ஆயுள்வேத மருத்துவத்தின் முன்னோராகக் கூறப்படும் சாரகரும் சுசுருகரு ம் கி.பி.முதலிரு நூற்றாண்டினர். அவர்கள் காலத்தில் இம் மருத்துவம் வடமொழியில் எழுதப்பட்டதேயொழிய அவர்களால் கண்டுபிடிக்கப் பட்டதன்று.

இந்தியா முழுவதும் பரவிய தமிழ்ச் சித்தமருத்துவமே வடபுலத்தில் ஆயுள்வேதம் என்று பெயர்பெற்றது. ஆயுள் வேதத்தின் தாயாகிய தமிழ் மருத்துவம் பல்லாயிர ஆண்டுகளுக்கு முன்பு இம்மண்ணில் தோன்றி வளர்ந்த பெருமையுடையது. ஆயுள்வேத மருத்துவ முறையிலுள்ள சொல்லாட்சிகளும் மூலிகைப் பெயர்களும் தமிழ் வேர்ச் சொற்களிலிருந்து தோன்றி யனவாயிருப்பது இக்கருத்துக்கு அரண்செய்வதாகும்.

**ஆயுள்வேதர்** āyuḷ-vēdar, பெ. (n.) மருத்துவ நூலோர்; those who are skilled in āyurvēda system of medicine. "ஆயுள் வேதரும் காலக்கணி தரும்" (சிலப்.544).

ம. ஆயுர் வேதிகன்; க ஆயுர்வேதி.

*[ஆயுள் + வேதர்.]*

**ஆயெறும்பு** āy-erumbu, பெ. (n.) ஒருவகை எறும்பு (நெல்லை.); a kind of ant (Tn.).

*[ஆய் + எறும்பு]*

**ஆயோ** āyō, இடை (int.) குறிஞ்சி நில மகளிர், பறவைகளை விரட்டும்போது எழுப்பும் ஒசை (திவ். இயற். திருவிருத். 10); exclamatory expression intended to frighten away birds from nibbling of the ripe corn and used by the women folk of the hilly tracks who usually guard millet fields.

*[ஆ + ஒ – ஆவோ → ஆயோ. ஆகார ஒகாரங்கள் ஒலிக் குறிப்பு.]*

**ஆர்[1]–தல்** ār–, 2. செ.கு.வி. (v.i.) 1. நிறைதல்; to become full. "ஆரப்பருக" (திவ்.திருவாய். 10,10,5). 2. பரவுதல்; to spread over. "போதாரி வண்டெலாம்" (திணைமாலை. 95, உரை). 3. மனநிறைவாதல்; to be satisfied. "ஆராவமுதாம்" (திவ். திருவாய். 2, 5, 5). 4. பொருந்துதல்; to combine with, belong to. "சீரார் செழும்பந்து" (திவ்.இயற்.சிறியதி. 11, கண்ணி). 5. தங்குதல் (திவா.); to abide by, stay. – 2. செ.குன்றாவி (v.t) 6. உண்ணுதல்; to eat, to drink. "அமலைக் கொழுஞ்சோ றார்ந்த பாணர்க்கு" (புறநா. 34, 14). 7. நுகர்தல்; to experience. "ஆர் வுற்றார் நெஞ்சமழிய" (கலித். 42, 13). 8. ஒத்தல்; to resemble. "மணியார் கண்டத் தெம்பெருமான்" (பெரியபு. திருநா. 314). 9. அணிதல் (பிங்.); to wear, put on. 10. பெறுதல்; to get, obtain. "ஆர்கினற தின்றோ ரலரே" (கந்தபு. தேவரையே.11).

ம. ஆர்; க. ஆர், ஆரு; தெ. ஆரு; து. ஆருனி ; கூ. சார்.

*[ஆல் → ஆர். ஆலுதல் = நிறைதல், ஆர்தல் = நிறைதல். நிறைதல் பொருளிலிருந்து தங்கற் பொருளும், வயிறு நிறைதலாகிய உண்ணுதற் பொருளும், நுகர்தற்பொருளும் தோன்றும்.]*

**ஆர்**[2]–தல் ār–, 2. செ.கு.வி. (v.i.) 1. ஒலித்தல்; to shout, roar, bellow. "அலைகடற்றிரையி னார்த்தார்த் தோங்கி" (திருவாச.3,151).2.போர்புரிதல் (திவா.); to fight, make war. –, 4. செ.குன்றாவி (v.t.) 3. தட்டுதல்; to pat oneself. "மார்பார்த்தல்" (இன்னா.19). 4. உடைத்தல்; to break into two. 5. அலர்தூற்றல்; to slander, vilify. "முனியவந் தார்ப்பது போலும்" (கலித்.33,14).6.நெருக்குதல், கட்டுதல்; to bind, tie, gird. "பாம்பொன்றார்த்து" (தேவா.16,11). 7. பூணுதல் (திவா.); to put on, wear.

ம. ஆர்க்குக; க. ஆர், ஆர்ச்சு; தெ. ஆர்ச்சு; து. ஆர்குனி, ஆர்புனி; கோத. ஆர்; குட. ஆர்; கூ. ஆர்; பிரா. ஆர்.

*[ஆல் → ஆர். ஆலுதல் = ஒலித்தல், ஆர்த்தல் = ஒலித்தல்; ஓசைமிகப் பொருதல், தட்டுதல். ஊர் முழுதும் பேச்சொலி மிக அலர் தூற்றல். ஆலுதல் = சேர்த்தல், பொருத்தல், இணைத்தல். ஆல் → ஆர். ஆர்த்தல் = கட்டுதல், பூணுதல். அல் → ஆல் → ஆர். பொருந்துதல், மோதுதல், தாக்குதல், போர்புரிதல்.]*

**ஆர்** [3] ār, இடை. (part) 1. பலர்பாற்படர்க்கை ஈறு; epicene pluralising pronominal suff. to verbs as in– வந்தார். 2. மதிப்புரவு குறித்த பன்மை ஈறு; 3rd pers. honorific pl. suff., as in– தகப்பனார். 3. எதிர்மறை யிடைநிலையின்றி வினைமுதலொடு நேரே யிணைந்து எதிர்மறைப் பொருளுணர்த்தும் பலர் பாலீறு; suff. to verbs. "கல்லார்நெஞ்சில் நில்லான் ஈசன்" (உ.வ.). 4. அஃறிணையொருமை உயர்வுப்பன்மையீறு; honorific suff of non–human singularnouns. "உடம்பார் அழியின் உயிரார் அழிவர்" (திருமந்.) நரியார் வந்தார்.

ம. ஆர், அர், ஒர்; க. ஆரு, அரு, ஆரெ, ரி, ரு; தெ. ஆரு, அரு; து. எர். கோண். ஒர்; பிராகு. ஏரெ, உரெ.

E. er. suff. used to form nouns denoting an agent, as in, hatter, ruler, teacher, –ME. ere, er. fr. OE.–ere, rel. to OS. eri, ON. ari, Dan., Du. –er, OHG. –ari, ari, –eri, MHG. –ere, G. –er. Goth. –areis, fr. OTeut. –ārjo–z, which derives fr. L. –arius (K.C.E.D.E.L.). E. or suff. denoting an agent or an instrument –– (1) ME. –or, –our, fr. OE. –eor, (F–eur) fr. L. –ōrem, acc. of –or, a suff. added to the pp. stem of verbs (cp.e.g. actor, author); (2) ME. –or, -our, fr. -eor, eur (F.eur) fr. L. -atorem, acc. of -ator (cp.e.g. donor, see –tor, -ator. Cp. the agential suff. -er. According to the general rule, -or is added to words of Latin -er to those of English origin – (K.C.E.D.E.L.).

*[ஆர்தல் = பொருந்தல், சேர்தல், நிறைதல். நிறைவுப்பொருள். பெருமைப் பொருளில் ஆளப்பட்டு உயர்வுப்பன்மை பொருள் தரும். எ–டு: கண்ணனார்.]*

**ஆர்**[4] ār, இடை. (int.) அசைநிலையாக வரும் ஓர் இடைச்சொல்; expletive particle. "பெயரினாகிய தொகையுமாருளவே" "எல்லாவுயிரொடுஞ் செல்லுமார் முதலே"

*[ஒருகா. அரோ→ ஆரோ →ஆர்] அரோ பார்க்க; see arō.]*

**ஆர்** [5] ār, பெ. (n.) 1. நிறைவு (பிங்.); fullness, completeness. "கொழுதிய லார்செய் குழன்மடவீர்" (வாணன்.7). 2.நிலம்; earth. "திருவாரணங்கு' மணமகன்" (மறைசை.1.). 3. கூர்மை; sharpness, pointedness. "ஆரெயிறழுந்தினர்" (சிலப்.5,124). 4. அழகு (ஆ.நி); beauty. 5. மலரின் பொருத்து வாய்; calyx. "பூ....ஆர் கழல்பு " (குறுந்.329).

ம. ஆர், ஆர; க. ஆர்; து. அருனி; கூ. சார்.

*[ஆர்தல் = பொருந்தல், நிறைதல், தங்குதல், நிறைதல், பொருளிலிருந்து அழகுப்பொருளும், தங்குதல் பொருளிலிருந்து 'நிலம்' பொருளும், பொருந்துதற் பொருளிலிருந்து கூர்மைப்பொருளும் தோன்றும். ஒ.நோ: கூர் = பொருந்தல், கூர்மை.]*

**ஆர்**[6] ār, இடை. (interrog.pron.) யார்; who. "நானாரென் னுள்ளமார்" (திருவாச. 10,2).

ம. ஆர்; க. ஆர், ஆரு; தெ. எவரு, ஏரு; துட. ஆர்; குட. ஆரி; து. ஏரு; கொலா. ஏர்; பிரா. ஏர். பட. தார

*[யாவர் → யார் → ஆர்.]*

**ஆர்** [7] ār, பெ. (n.) 1. ஆத்திமரம்; common mountain ebony. "ஆரும் வெதிரும்" (தொல்.எழுத். 363). 2. திருவாத்தி மரம்; holy mountain ebony. "தேங்கடி யாரர வார்சடையர்" (கம்பரந்.8).

ம. ஆர்; க. ஆரெ; து. ஆரெ.

*[ஆர்த்தி → ஆத்தி. ஆர் = சேர்தல், பொருந்தல், நெருங்கல். ஒருகா. நெருங்கக் காய்க்கும் இயல்பு பற்றி இப்பெயர் பெற்றிருக்கலாம்.]*

**ஆர்** [8] ār, பெ. (n.) 1. ஆரக்கால்; spoke of a wheel. "ஆர்கெழு குறடுசூட் டாழிபோன்று" (சீவக.828). 2. அச்சுமரம்; axle. "வீணா தண்டென் னாரின்" (ஞானா. 7,15). 3.தேரினகத்திற் செறிகதிர் (பிங்.); அச்சுருவாணி; central bolt of a car. "ஆரழிந்தன உருவழிந்தன அச்சழிந்தன" (பாரத.முதற்.45). 4.

உருளையில் அச்சடையும் துளை; axle fixing hole in the wheel.

*[ஆர் = சேர், பொருத்து . சேர்த்துப் பொருத்தும் பொருளில் ஆரக்கால், அச்சுமரம், தேரினகத்திற் செறிகதிர் ஆகியவை சொல் வடிவம் பெற்றன.]*

**ஆர்[9]** ār, பெ. (n.) 1. செவ்வாய் (விதான. பதி. 13, உரை); planet Mars. 2. சுடரொளி (சோதி); brightness, flame. 3. வெல்லப்பாகு, சீனிப்பாகு (த.சொ.அக.); boiled jaggery or sugar.

*[உர் → உல் → அல் → அர் = எரி நிறம். ஒருகா. சிவப்புப் பொருளில் செவ்வாய்க் கோளையும், சுடரொளியையும், சிவந்த வெல்லப்பாகினையும் சுட்டியிருக்கலாம்.]*

**ஆர்[10]** ār, பெ. (n.) சரக்கொன்றை (மூ.அ.); Indian laburnum. **Skt.** āragvadha.

*[ஒருகா. உல்→ அல்→ அர் → ஆர் = எரிதற்கருத்தில் தோன்றும் செந்நிறப் பொருளில் சரக்கொன்றையைக் குறித்திருக்கலாம்.]*

**ஆர்[11]** ār, பெ.எ. (adj.) அருமையான, அரிய; rare. பெ. (n.) அருமை; rareness, fineness. "அரும்பெறற் பாவாய் ஆருயிர் மருந்தே" (சிலப். மனையற.75).

*[ஆர் = நிறைதல், மிகுதல், மேலாதல், மேன்மை, கிட்டுதற்கருமை.]*

**ஆர்[12]** ār, பெ. (n.) 1. அண்மை (அக.நி.); nearness, proximity.

ம. ஆர்.

*[ஆர் = பொருந்தல், நெருங்கல், அண்மை.]*

**ஆர்[13]** ār பெ . (n.) 1. சந்தனம்; sandal wood. 2. முத்து; pearl. 3. பச்சைக்கல்; emerald. 4. உலகம்; world.

*[ஆர்[11] → ஆர்[13].]*

**ஆர்க்கங்கோடன்** ārkkaṅ-kōḍaṉ, பெ. (n.) **கொல்லங் கோணக் கொடி (மு.அ.)** climbing shrub.

**ஆர்க்கண்ணியன்** ār-k-kaṇṇiyaṉ, பெ. (n.) சோழன், Chola king.

*[ஆர் + கண்ணி + அன் . ஆர் = ஆத்தி . கண்ணி = மாலை.]*

**ஆர்க்கப்பொடி செய்—தல்** ārkka-p-poḍisey, 1. செ. கு.வி. (v.i.) ஒன்றோடொன்று கலக்கும்படி அரைத்தல்; to powder a medicine so that the ingredients are well mixed. (சா.அக.).

**ஆர்க்கம்[1]** ārkkam, பெ. (n.) ஊதியம் (இலாபம்) (யாழ்ப்.); profit (J.), benefit.

*[ஆர் → ஆர்க்கம். ஆர்தல் = நுகர்தல், பயன் பெறுதல், பயனாக விளைந்த ஊதியம்.]*

**ஆர்க்கம்[2]** ārkkam, பெ. (n.) 1. அரத்தம்; blood. 2. நீர்க் கடம்பு; water cadamba. (சா.அக.).

*[அரத்தம் → அரகம் → ஆர்க்கம்.]*

**ஆர்க்கம்[3]** ārkkam, பெ. (n.) 1. அகில்; eagle wood. 2. சந்தனம்; sandal (சா.அக.).

**ஆர்க்கம்[4]** ārkkam, பெ. (n.) பித்தளை; brass. (சா.அக.).

*[ஆரகுடம் → ஆர்க்குடம் → ஆர்க்கம்.]*

**ஆர்க்கரம்** ārkkaram, பெ. (n.) கப்பட்டி மரம்; tree with a milky juice (unidentified), (சா.அக.).

**ஆர்க்காடு** ārkkāḍu, பெ. (n.) 1. ஆர்மரங்களடங்கிய காடு; forest of Indian leburnum trees. 2. தமிழகத்தில் சில மாவட்டங்களில் பயிலும் ஊர்ப்பெயர்; name of town or village located in some of the districts of Tamilnadu.

*[ஆர் + காடு = ஆர்க்காடு. ஆர் = ஆத்திமரம். ஆத்தி மரங்கள் நிறைந்த ஊர் ஆர்க்காடு எனப்பட்டது.]*

**ஆர்க்காடுகிழார் மகனார் வெள்ளைக் கண்ணத்தனார்** ārk -kāḍu -kiḻār -magaṉār -veḷḷai -k- kaṇṇattaṉār, பெ. (n.) கடைக்கழகப்புலவர் (அகம்.64); Sangam poet.

**ஆர்க்கி** ārkki, பெ. (n.) **ஆர்கதி** பார்க்க; see ārkadi.

**ஆர்க்கிநார்** ārkkinār, பெ. (n.) ஆர்க்கிமரப்பட்டை யிலிருந்து உரிக்கப்படும் நார். fibre from bark of the arkki tree. கூரைவேயும்போது கட்டுப்போடப் பயன்படும் ஆர்க்கி நார். (செங்.வழ).

*[ஆர் → ஆர்க்கி.]*

**ஆர்க்கியம்** ārkkiyam, பெ. (n.) காட்டுத்தேன்; honey obtained from the forest.

*[ஆர் → ஆர்க்கியம்.]*

**ஆர்க்கு[1]** ārkku, பெ. (n.) 1. ஒருவகை மீன்; a kind of fish. 2. ஒருவகைக் கிளிஞ்சல்; a species of shellfish of the cockle kind. (சா.அக.).

*[ஆர் → ஆர்க்கு.]*

**ஆர்க்கு[2]** ārkku , பெ. (n.) இலைக்காம்பு; stem of a leaf. (சாஅக.).

*[ஒருகா. ஈர்க்கு → ஆர்க்கு.]*

**ஆர்க்கு[3]** ārkku, பெ. (n.) 1. எருக்கு; sun-plant, (சா.அக.). "மேன்மதிலார்க்கிலைத்த மாலகிமத்த முதிர்சம்ப மாதுலங்கத் திரதமும்" (தைலவ.தைல.6). 2. எருக்கின் பட்டை; bark of sun-plant.

*[ஒருகா. எருக்கு → ஏர்க்கு → ஆர்க்கு.]*

**ஆர்க்கை** ārkkai, பெ. (n.) 1. கட்டு; bandage. 2. வாரணம்; shred of a palm-leaf. 3. துரும்பு; straw, splinter, sliver.

*[ஆர் → ஆர்க்கை, ஆர்த்தல் = கட்டுதல், பிணைத்தல்.]*

**ஆர்கதம்** ārgadam, பெ. (n.) **ஆருகதம்** பார்க்க; see āru-gadam.

**ஆர்கதன்** ārgadan, பெ. (n.) **ஆருகதன்** பார்க்க; see āru-gadan.

**ஆர்கதி** ārgadi, பெ. (n.) திப்பிலி; long pepper.

*[ஆரகந்தி – ஆர்கதி.]*

**ஆரகந்தி** பார்க்க; see āragandi.

**ஆர்கலி** [1] ārgali, பெ. (n.) 1. பெருமுழக்கம், பேரோசை; loud noise, roaring, bustle. "ஆர்கலியுலகத்து மக்கட்கெல்லாம்" (முதுமொழி.). 2. கடல்; sea. "ஆர்கலியுலகின்" (வேதாரணியபு. மேன்.32). 3. மழைவெள்ளம்; flood. "பொய்யா வானம் புதுப் பெயல் பொழிந்தென வார்கலி முனைஇய கொடுங்கோற் கோவலர்" (நெடுநல். 3).

*[ஆர் + கலி. ஆர் = நிறைவு, மிகுதி. கலி = கலித்தல், ஒலித்தல், முழக்கமிடுதல்.]*

**ஆர்கலி** [2] ārgali, பெ. (n.) திப்பிலி; long pepper.

*[ஆரகந்தி → ஆர்கதி → ஆர்கலி.]*

**ஆரகந்தி** பார்க்க; see āra-gandi.

**ஆர்கலிவாரணம்** ārgali-vāraṇam, பெ. (n.) ஐராவத யானை; elephant known as Iravadam, the vehicle of Indran.

*[ஆர்கலி = கடல். வாரணம் = யானை. தொன்மக் கதையின்படி ஐராவத யானை கடலிற் தோன்றிய தாகக் கருதப்பட்டது.]*

**ஆர்கோதம்** ārgōdam, பெ. (n.) சரக்கொன்றை; Indian laburnum. **Skt. āragvadha**.

**ஆர்ச்சவம்** ārccavam, பெ. (n.) 1. உண்மை; truth. 2. நேர்மை; honesty. 3. பகைவனையும், நண்பனையும் சமமாக எண்ணும் மனப்பாங்கு; mental balance, treating friend and foe alike. "செயிரில் சேய் மித்திர களத்திராதி யிடத்துந் தெவ்விடத்து மயர்விற் றன் னான்மாவிடத்துமமையச் சம பாவனை வைத்தல் வயிரமறு மார்ச்சவ மென்றே வகுப்பர்" (சூத.ஞான. 13:9).

*[ஆர் → ஆர்த்தம் → ஆர்த்தவம் → ஆர்ச்சவம். ஆர்தல் = பொருந்தல், சரியாயிருத்தல். ஆர்த்தம் = பொருத்தம், உண்மை, நேர்மை. பொருந்த நோக்கும் மனப்பாங்கு.]*

**ஆர்ச்சனம்** [1] ārccanam, பெ. (n.) 1. வருமானம்; (சம்பாதித்தல்) acquision, earning, savings. "சிவார்ச் சன மார்ச்சனமாகில்" (கோயிற்பு. வியாக். 4). 2. பாதுகாத்தல்; protection. 3. விருந்தோம்பல்; hospitality. **Skt. ārjana.**

*[ஆர் → ஆர்த்து → ஆர்த்தனம் → ஆர்ச்சனம். ஆர் = பொருந்து, சேர். ஆர்ச்சனம் = சேரும் வருமானம், சேர இருந்து காக்கும் பாதுகாவல், அன்பால் நெருங்கும் விருந்தோம்பல்.]*

**ஆர்ச்சனம்** [2] ārccanam, பெ. (n.) அருச்சித்தல், வழிபாடு, போற்றுதல், வணங்கி அருமைபாடுதல்; adoration, worship. "வருவது மார்ச்சனமே மருவியற மார்ச்சனமே" (விருத்தாசலபு. பாயி. 11).

**Skt.** arcana.

*[ஆர் → ஆர்த்து → ஆர்த்தனம் → ஆர்ச்சனம் = அன்பால் நெருங்கி வழிபடும் போற்றிப் பாடல்.]*

**ஆர்ச்சி-த்தல்** ārcci-, 4.செ. குன்றாவி (v.t.) ஈட்டுதல் (சம்பாதித்தல்); to earn, acquire. "பன்னருந் தனமார்ச்சித்து" (நல். பாரத. தரும சாத்திர. 13).

*[ஆர் → ஆர்த்து → ஆர்த்தித்தல் → ஆர்ச்சித்தல்.]*

**ஆர்ச்சிதம்** ārccidam, பெ. (n.) 1. திரட்டுதல், ஈட்டுதல், கையகப் படுத்தல், வருமானம், தேட்டம் (சம்பாத்தியம்) ; acquisition, earnings. 2. பாதுகாத்தல்; protection. 3. விருந்தோம்பல்; paying host.

**Skt.** ārjita

*[ஆர்த்தல் = பொருத்தல், சேர்த்தல், திரட்டல், ஈட்டுதல் (உண்பித்தல்). ஆர்த்திதம் → ஆர்ச்சிதம்.]*

**ஆர்சா** ārsā, பெ. (n.) **ஆர்த்தம்** [2] பார்க்க; see ārttam [2]

**ஆர்த்தம்** [1] ārttam, பெ. (n.) நிறைவு, நிறைதல்; becoming full, completion.

**ஆர்த்தம்** [2] ārttam, பெ. (n.) கட்டுதல்; binding, tying.

*[ஆர் → ஆர்த்தம். இச்சொல் ஆர்த்தம் → ஆர்த்தா → ஆர்சா எனத்திரிந்து முகவை மாவட்டத்தில் கட்டடச்சாரத்தில் மரக்கொம்புகளைச் சேர்த்துக் கட்டும் கயிற்று முடிச்சு வகையைக் குறிக்கிறது.]*

**ஆர்த்தம்** [3] ārttam, பெ. (n.) 1. கலக்கம்; unhappiness. 2. துன்பம்; distress, affliction. "ஆர்த்தமென்றெனை யாளுகந் தானை" (தேவா.157.4.).

**Skt.** ārta

*[ஆர் → ஆர்த்தம், ஆர்த்தல் = கட்டுதல், பிணித்தல், நோயுறச் செய்தல், ஒ.நோ. பிணி → பிணித்தல்.]*

**ஆர்த்தர்** [1] ārttar, பெ. (n.) 1. எளியவர்; poor people. 2. நோயுற்றார்; afflicted. "தில்லைப் பல்பூம்பொழிற் செப்பும் வஞ்சினமு மார்த்த ரங்கஞ் செய்யுமால்" (திருக்கோவை.187). 3. பெரியோர்; greatmen.

*[ஆர் → ஆர்த்தம் → ஆர்த்தர். **ஆர்த்தம்** [3] பார்க்க; see ārttam [3].]*

**ஆர்த்தர்** [2] ārttar, பெ. (n.) பெரியோர்; greatmen, wisemen. 2. முனிவர்; sages.

*[ஆர் → ஆர்த்தல் → ஆர்த்தர். ஆர்த்தல் = நிறைத்தல், நிறை பண்புடைய சான்றோர். **ஆர்த்தம்** [1] பார்க்க. see ārttam [1].]*

**ஆர்ந்தல்** ārttal, தொ.பெ.(vbl.n.) 1. அணிதல்; wearing, decorating. 2. ஊட்டல்; making one to eat. 3. ஒளித்தல்; hiding. 4. ஒளி வீசி மின்னுதல்; lightning. 5. பொருதல்; fighting. 6. பொருத்தல்; fixing. (கதி.அக.).

*[ஆர் → ஆர்த்தல். ஆர்தல் = பொருந்தல், பொருத்துதல், ஒளித்தல், மோதுதல், மேகம் மோதி அதிர்ந்து விளக்கும் மின்னல், தாக்குதல், பொருதல்.]*

**ஆர்த்தார்கோன்** ārttār kōṉ, பெ. (n.) ஆத்திமாலை யணிந்த சோழன் (திவா.); Cola king, who wore the characteristic ātti garland.

*[ஆர் + தார் + கோன். ஆர் = ஆத்திப்பூ. தார் = மாலை. கோன் = அரசன்.]*

**ஆர்த்தி**[1] ārtti, பெ. (n.) மனத்துன்பம், வேதனை; affliction, anguish, mental agony. "தீவினை யார்த்தி நீங்குதி" (கந்தபு.. கந்தவி.100). 2. அழிவு; destruction. 3. துன்பம்; suffering. "ஆர்த்தி யாவுநீ யகல" (கந்தபு. இந்திராணிமறு.18). 4. ஐந்து சத்திகளுள் ஒன்று; (phil.) one among five satti. "ஈசானி பூரணி, ஆர்த்தி, வாமை, மூர்த்தி என்னும் பஞ்ச சத்தி புறவுருவுடைத்தாய்" (சி.சி.1: 56. ஞானப்). 5. நட்டுவக்காலி ; big species of black scorpion–lobster mouthed legged, scorpion (சா.அக.).

*[ஆர் → ஆர்த்தி. ஆர்த்தல் = நெருங்கல், தாக்கல், துன்பம் விளத்தல், அழித்தல், அழிவுத் தெய்வம்.]*

**ஆர்த்தி**[2] ārtti, பெ. (n.) 1. பட்டறிவு (அனுபவம்); experience. 2. ஆர்வம்; eagerness, enthusiasm. 3. விருப்பம்; desire. 4. வில்லின் நுனி, விற்குதை; end of a bow.

*[ஆர் → ஆர்த்தி → ஆர்தல் = நுகர்தல், விரும்புதல், பொருந்துதல் பொருந்தும் வில்லின் நுனி.]*

**ஆர்த்திகை** ārttigai பெ. (n.) துன்பம், pain, suffering. "ஆர்த்திகையுறாதவுள்ளத் தரிமுதல மரர் யாரும்" (கந்தபு.திருவவ. 114).

*[ஆர்த்தி +கை.]*

**ஆர்த்து–தல்** ārttu–, 5. செ.குன்றாவி (v.t.); 1. கொடுத்தல்; to give. "பெற்றவை பிறர்பிறர்க் கார்த்தி" (பொருந.174). 2.நிறைத்தல்; to fill up, to make full. 3. நிறைவேற்றுதல்; to fulfil, to execute, complete, finish, bring to an end.– பி.வி. (v.caus.). 1. ஊட்டுதல்; to feed. "கறவை கன்றார்த்தி" (மணிமே.12,9). 2. நிறைவித்தல்; to fill, complete. "வருநிதி பிறர்க் கார்த்து மாசாத்து வானென்பான்" (சிலப். 1, 33). 3. நுகர்வித்தல்; to cause, to experience. "நசையுநர்க் கார்த்து மிசைபேராள" (திருமுரு.270).

*[ஆர் → ஆர்த்து.]*

**ஆர்த்துபம்** ārttubam, பெ. (n.) 1. அரத்தைச்செடி; galangal. 2. பேரரத்தை; greater galangal.

*[ஒருகா. அரத்தை → அரத்துவம் → ஆர்த்துபம்.]*

**ஆர்ப்பதம்** ārppaam, பெ. (n.) 1. ஈரம்; wetness . 2. தழைவு; fertility. பச்சையாயிருத்தல், பசுமை; that which is green and fresh.

*[ஆர் + பதம்.]*

**ஆர்ப்பரவம்** ārpp(u)aravam, பெ. (n.) 1.ஆரவாரம், பேரோசை, இரைச்சல்; roar, shouting. "வார்கலை களார்ப்பரவஞ் செய்ய" (திருவாச.7,1). 2. போர் (அக.நி.); war. 3. அஞ்சத்தக்க ஓசை; frightening sound. "ஆர்ப்பரவத் தெங்கிருந்தாரும் வெருவ" (சேதுபு.தேவிபுர.24).

*[ஆர்ப்பு+ அரவம்.]*

**ஆர்ப்பரித்தல்** ārppari–, 4. செ.கு.வி. (v.i.) 1. ஆரவாரித்தல்; to shout, roar, resound. "மறைகளார்ப் பரிப்பும்" (மச்சபு. திரிபுரநிருமாணவ.14). 2. தொடங்குதல்; to begin. (கதி.அக.).

*[ஆர்ப்பு + அரி.]*

**ஆர்ப்பரிப்பு** ārpparippu, பெ. (n.) ஆரவாரிப்பு; roar, loudness, shout. "போற்று நான்முகமு மறைக ளார்ப்பரிப்பும்" (மச்சபு. திரிபுர நிருமாண.14).

*[ஆர்ப்பு+ அரிப்பு]*

**ஆர்ப்பாட்டம்** ārpp(u)–āṭṭam, பெ. (n.) 1. ஆடம்பரம், வெற்றாரவாரம், இடம்பம்; great show, boisterous behaviour, useless display, foppishness 2. ஆரவாரம், கூச்சல், இரைச்சல்; uproar, loud cry.

**தெ.** ஆர்பாடமு. **Skt.** ārabhata.

*[ஆர்ப்பு+ ஆட்டம்.]*

ஆர்ப்பாட்டம் என்னும் செந்தமிழ்ச் சொல்வடிவம் 'ஆர்ப்பாடம்' எனச் சென்னை அகரமுதலியிற் குறிக்கப் பட்டிருப்பது தவறு . இது தமிழிலும் திரவிட மொழிகளிலும் இன்றும் உலக வழக்குச் சொல்.

**ஆர்ப்பு**[1] ārppu, பெ. (n.) 1. பேரொலி; loud – tumultuous noise. " ஆர்ப்புக் கொண்டு கைவிசைத்தெறி மணிக்கல் வந்தணைய" (கந்தபு.நாட்டு.45). 2. போர் (பிங்.); battle. 3. சிரிப்பு (பிங்.); laughter. 4. மகிழ்ச்சி; joy, exultation. "புந்தி யார்ப்புறக் கண்டனன்... திருக்கோயில்" (குற்றா. தல. மந்தமா, 110).

**தெ.** ஆர்பு.

*[ஆர் → ஆர்ப்பு. ஆர்த்தல் = மிக்கொலித்தல்.]*

**ஆர்ப்பு**[2] ārppu, பெ. (n.) (இசை.) மாத்திரை கடந்த ஒத்தொலி (சுருதி ), ஓங்கவிசைத்தல்; excessive pitch of a lute string. "இன்னிசை வழியதன்றி

யிசைத்தல் செம் பகையதாகும்,சொன்ன மாத்தி ரையி னோங்க விசைத்திடுஞ் சுருதி யார்ப்பே" (பஞ்சபாரதீயம், சிலப். வேனிற். 29).

*[ஆர் → ஆர்ப்பு. ஆர்த்தல் = பிக்கொலித்தல்.]*

ஒங்கவிசைத்தலாகிய 'ஆர்ப்பு' யாழின் நால்வகைக் குற்றங்களுள் ஒன்றாகும். இது மரக்குற்றத்தால் உண்டாவது என்று திருவிளையாடற்புராண உரைகாரர் குறிப்பிட்டிருக்கிறார்.

**ஆர்ப்பு** [3] ārppu, பெ. (n.) 1. கட்டு, பிணைப்பு; band, fastening, ligature. "ஆர்ப்பரிய காயந்தன்னை" (சி.சி.4,94).

*[ஆர் → ஆர்ப்பு. ஆர்த்தல்=சேர்த்தல், கட்டுதல்.]*

**ஆர்ப்பு** [4] ārppu, பெ. (n.) 1. நுண்ணியது; minute thing. 2. முள்ளின் கூர்மையான பகுதி; sharp point of a thorn. 3. தைத்த முள்ளின் ஒடிந்த கூர் (யாழ்ப்.); piece of thorn broken off in one's flesh (J.).

*[ஆர் → ஆர்ப்பு.]*

**ஆர்ப்பு** [5] ārppu, பெ. (n.) மேற்பூச்சு,குற்றம்(திவ்.அக); defect.

**ஆர்பதம்** [1] ārpadam, பெ. (n.) உணவு; food. "நெல்லின் அம்பண வளவை விரிந்துறை போகிய வார்பத நல்குமென்ப " (பதிற்றுப்.66,9).

*[ஆர் +பதம். ஆர்தல் = உண்ணுதல். பதம் = உணவு.]*

**ஆர் பதம்** [2] ārpadam, பெ. (n.) நிழல் (அக.நி.); shade

*[ஆர் + பதம்.]*

**ஆர் பதம்** [3] ārpadam, பெ. (n.) வண்டு (பிங்.); small beetle.

*[ஒருகா. அறுபதம் → ஆர்பதம்.]*

**ஆர் பதன்** ārpadaṉ பெ. (n.) உணவு; food. "தேரிற் றந்தவர்க் கார்பதனல்கும் " (பதிற்றுப்.55).

*[ஆர்பதம் → ஆர்பதன் (ஈற்றுப் போலி).]*

**ஆர் மதி** [1] ārmadi, பெ. (n.) கடக ஒரை (ராசி); cancer in the Zodiac, house of the moon.

*[ஆர் + மதி. ஆர்தல் =பொருந்தியிருத்தல், தங்குதல். மதி = நிலவு.]*

**ஆர்மை** ārmai, பெ. (n.) 1. கூர்மை; sharpness. 2. மதில்; fort.

*[ஆர் → ஆர்மை. ஆர்தல் = சேர்தல், சேரக் கூடுதல், கூர்மை, சேரக்கூடும் (வளைந்து ஒன்று கூடும்) மதில்.]*

**ஆர்வக்கோழிக்காரகம்** ārva-k-kōḻi-k-kāragam, பெ. (n.) **ஆர்வக்கோளிக்காரகம்** பார்க்க; see ārva-kōḷi-k-kāragam.

**ஆர்வக்கோளிக்காரகம்** ārva-k-kōḷi-k-kāragam, பெ. (n.) கேளாது விருப்பாய்க் கொடுக்கப்பட்ட பொருளை விரும்பி ஏற்றற் பொருளில் நான்காம் வேற்றுமையில் வரும் பெயர்(வீரசோ.உபகாரக.3); (dative case) accepting willingly some thing given unasked.

*[ஆர்வம் + கோளி + காரகம். கொள் → கோள். இது கோளிக்காரகம் மூன்றனுள் ஒன்று. இச்சொல் திராவிட மொழிகளில் கோசுகர எனத் திரிந்தது.]*

**ஆர்வம்** [1] ārvam, பெ. (n.) 1. அன்பு; love, affection. "ஆர்வ நெஞ்சமொடு" (தொல். பொ. 40). 2. விருப்பம்; desire. 3. ஆசை; liking. "வண்டார்வஞ் செய்து மதுவுண்டு" (நைடத. அன்ன. தூ. 65). 4. புணர்ச்சியைக் குறித்துண்டாகும் ஆசை; sexual desire. 5. பெறக்கருதிய பொருண்மேற்றோன்றின பற்றுள்ளம் (மதுரைக்.489); hankering. 6. பத்திமை (பக்தி); devotion. "அடியார்தமார்வத்தாற் கூறிய" (திவ். இயற். 1, 35). 7. கடைப்படு கொடை ஏழனுள் ஒன்று; one of the seven kinds of donation. "ஆர்வமாவது அன்பு முதலியவற்றானளித்தல்" (த.சொ.அக.).

*[ஆர் → ஆர்வம்.]*

**ஆர்வம்** [2] ārvam, பெ. (n.) ஒலி (த.சொ.அக.); sound. "ஆர்வத் தோடி வயல்புகும்" (கந்தபு. ஆற்று. 35).

*[ஆர் → ஆர்வம். ஆர்தல் = ஒலித்தல்.]*

**ஆர்வம்** [3] ārvam, பெ. (n.) சீலை (த.சொ.அக.); saree.

*[ஆர் → ஆர்வம். ஆர்த்தல் = கட்டுதல், உடுத்தல்.]*

**ஆர்வம்** [4] ārvam, பெ. (n.) நிரயம் (நரகம்) ஏழனுள் ஒன்று (பிங்.); hell, one of the seven.

*[ஆர் → ஆர்வம். ஆர்தல் = கட்டுதல், கட்டுப் பாட்டுக்குள்ளாக்கல்.]*

**ஆர்வமொழி** ārva-moḻi, பெ. (n.) **ஆர்வமொழியணி** பார்க்க; see **ārva-moḻi-y-aṇi.**

**ஆர்வமொழியணி** ārvamoḻi-y-aṇi, பெ. (n.) (அணி.) உள்ளத்து நிகழும் ஆசையை மிகுதியாக வெளிப் படுத்தும் சொற்களாற் சொல்லும் ஒரு செய்யுள் அணிவகை; (Rhet.) impassioned language chosen to express one's intense love, figure of speech "ஆர்வமொழி மிகுப்ப தார்வ மொழியே" (தண்டி. 67).

*[ஆர்வம் + மொழி + அணி. மொழிதல் = சொல்லுதல்.]*

**ஆர்வலர்** ārvalar, பெ. (n.) அன்பர், ஈடுபாட்டாளர், lovers, fans, devotees.

*[ஆர்வு → ஆர்வல் + அர்.]*

**ஆர்வலன்** ārvalaṉ, பெ. (n.) 1. அன்புடையவன்; kind affectiionate person, lover. "ஆர்வலர் புன்கணீர்

பூசல் தரும்" (குறள். 71). 2. கணவன் (பிங்.); husband. 3. பரிசிலன்; one who seeks a present from a prince or patron. "இனிய செய்திநின் னார்வலர் முகத்தே" (புநா.12). 4. நண்பன்; friend.

*[ஆர் → ஆர்வம் → ஆர்வலன். ஆர்வல் பார்க்க; see ārval.]*

**ஆர்வலித்தல்** ārvali–, 4. செ.கு.வி. (v.i.) 1. அன்பு கூர்தல்; to love, to be extremely kind, affectionate. "சிந்தை யாரவார்வலித்து" (தேவா. 997, 5). 2. மிகவிரும்புதல்; regard with strong affection, to desire passionately.

*[ஆர் → ஆர்வல் + இ = ஆர்வலி.]*

**ஆர்வு**[1] ārvu, பெ. (n.) 1. நிறைவு; fullness, abundance. 2. உண்ணுகை, பருகுதல்; eating and drinking. 3. ஊட்டுகை; feeding. 4. ஆசை; desire. "ஆசினி கவினிய பலவி னார்வுற்று" (புறநா. 158,22), "ஆர்வுற்றார் நெஞ்சமழிய விடுவானோ" (கலி.42).

*[ஆர் → ஆர்வு.]*

**ஆர்வு**[2] ārvu, பெ. (n.) ஆராய்தல்; investigation, research, critical study.

*[ஆர் → ஆர்வு]*

**ஆர்வை** ārvai, பெ. (n.) கோரைப்பாய்; mat made of rushes (W.).

*[ஒருகா. ஆர் → ஆர்வை = ஆர அல்லது நெருங்கப் பின்னிய கோரைப்பாய்.]*

**ஆர** āra, வி.எ. (adv.) 1. நுகர; to enjoy, benefit. "நாடார நன்கிழிதரும்" (மதுரைக். 82). 2. மிக, நிறைய; fully, abundantly. "ஆரப்பருக" (திவ். திருவாய். 10, 10, 5). "வாயார வுண்ட பேர் வாழ்த்துவதும் நொந்தபேர் வைவதுவும்" (தாயு. சச்சி. 8). –, இடை. (part.) ஓர் உவமச்சொல்; term of comparison (தொல். பொருள். 286, உரை).

*[ஆர் → ஆர. ஆர்தல் = நிறைதல், நிறைவின் அடிப்படையாகத் தோன்றும் அனைத்து வகை ஒற்றுமை, ஒற்றுமைபற்றி வந்த உவமைச்சொல்.]*

**ஆரஅமர** āra-amara, வி.எ. (adv.) பொறுமையாக (கொங்.வ) having patience

*[ஆர் → ஆர + அமர]*

**ஆரக்கம்** ārakkam, பெ. (n.) 1. அகிற்கட்டை; eagle wood. 2. செஞ்சந்தனம்; red sanders–wood. 3. பித்தளை; brass.

*[ஆர் → ஆரக்கம் (சிவந்தது).]*

**ஆரக்கம்பி** āra-k-kambi, பெ. (n.) மிதிவண்டிச் சக்கரத்திலுள்ள கம்பி; cycle spokes.

*[ஆரம் + கம்பி.]*

**ஆரக்கழுத்தி** āra–k–kaḻutti, பெ. (n.) கழுத்தில்தீய கோடுள்ள (ரேகை) பெண்; woman who has inauspicious lines on her neck. "ஆரக் கழுத்தி அரண்மனைக் காகாது" (பழ.).

*[ஆரம் + கழுத்தி. ஆரம் = ஆரம் போன்றுள்ள கோடுகள்.]*

**ஆரக்கால்** āra–k–kāl, பெ. (n.) சக்கரத்தின் ஆரம்; spoke of a wheel.

ம. ஆரக்கால்

*[ஆரம் + கால்.]*

**ஆரக்குவதம்** ārakku-vadam, பெ. (n.) சரக்கொன்றை (பிங்.); Indian laburnum.

**Skt.** āragvada.

*[ஒருகா. அரக்கு + வதம். அரக்குவதம் → ஆரக்குவதம். அரக்கு = சிவப்பு.]*

**மறுவ.** ஆரகுவதம், ஆரகோதம், ஆரகோரம்.

**ஆரகட்டம்** āra-kaṭṭam, பெ. (n.) ஆழமான கிணறு; deep well.

*[ஒருகா. ஆழகட்டம் → ஆரகட்டம். கட்டம் = கட்டுமானம் அமைந்த கிணறு.]*

**ஆரகம்**[1] āragam, பெ. (n.) 1. அரத்தம், குருதி ; blood. 2. சந்தனம்; sandal wood.

*[ஒருகா. அரக்கம் → ஆரகம் (சிவப்பு நிறமுள்ளது).]*

**ஆரகம்**[2] āragam, பெ. (n.) 1. பிரிக்கும் எண்; dividing number. 2. கீழ்வாயெண்ணில் (பின்னத்தில்) கீழே எழுதப்படும் எண்; denominator of a fraction, divisor (pond.). **Skt.** hāraka.

*[ஆர் → ஆரகம். ஆர் = மோது, தாக்கு, உடைத்துவிடு, பிரி, பகு, பகுக்கும் எண்.]*

**ஆரகன்** āragaṉ, பெ. (n.) 1. அழிப்பவன்; destroyer. "ஆரகனதிகனென்னாது" (சிவதரு. சிவஞான யோ.31). 2. கள்ளன்; thief. 3. கொள்ளைக்காரன்; robber. 4. சூதாடுபவன்; gambler. 5. அணாப்புவோன்; deceitful person, cheat.

ம ஆராச்சார்.

**Skt.** hāraka.

*[ஒருகா. அரக்கன் → ஆரகன்.]*

**ஆரகுடம்** āra-kuḍam, பெ. (n.) பித்தளை (செ.அக.); brass (S.I.I.V, 213).

*[ஆர்[10] → ஆர + குடம். ஆர்[10] = சிவப்பு.]*

**ஆரகூடம்** āra–kūḍam, பெ. (n.) **ஆரகுடம்** பார்க்க; see āra–kuḍam.

*[ஆரகுடம் → ஆரகூடம் (பிங்.).]*

**ஆரங்கம் பாக்கு** āraṅgam-pākku, பெ. (n.) துண்டு துண்டாக வெட்டி வேகவைத்த பாக்கு; areca-nut sliced and boiled, impoves with seasoning (சா.அக.).

*[ஒருகா. ஆர் + அங்கம் + பாக்கு. ஆர் = மோது, தாக்கு, உடை, பிள.]*

**ஆரஞ்சாகி** ārañ-cāgi, பெ. (n.) வெண்பசலை; white species of portulaca or Indian spinach.

*[ஆரம் + சாகி. Skt. sāka சாகம். சாகி = இலை, தழை. ஆரம் + முத்து, முத்து ப் போன்ற வெண்மை.]*

**ஆரஞ்சாந்து சோழன்** ārañ-cārttu-cōlaṉ, பெ. (n.) திருவானைக்காவிலுள்ள சிவஇலிங்கத்திற்கு முத்தாரம் சார்த்திய சோழன் (அபி.சிந்.); Cola king who placed a garland of pearls on the Sivalinga at Thiruvānaikkā shrine. "ஆரம் கொண்ட எம் மானைக்காவுடை ஆதியே" (சுந். தேவா.).

*[ஆரம் + (சார்த்து) சாத்து + சோழன்.]*

**ஆரணங்கு** āraṇaṅgu, பெ. (n.) அரிய தெய்வப் பெண்; celestial woman, heavenly damsel. "ஆரணங்குடனே காழி யடைந்ததே" (கந்தபு. வீரவாகுசய. 20). 2. அரிய தெய்வம்; deity of high order. "ஆரணங் குயர்ந்தோ ரல்லோர் புள்விலங்கு" (அகப்பொ. அகத். 19). 3. ஆறுதற்கரிய வருத்தம்; unmitigable sorrow. "நல்லவர்க் காரணங்காகிய மார்பில்" (புறநா.14).

*[ஆர் + அணங்கு. ஆர் = அரிய. அணங்கு = தெய்வப்பெண், தெய்வம், வருத்தம்.]*

**ஆரணத்தான்** āraṇattāṉ, பெ. (n.) நான்முகன்; Brahma, the source of the vedas. "ஆரணத்தான் அருள்பார்" (தஞ்சைவா.265).

*[அரண் → அரணம் → ஆரணம் + ஆத்து + ஆன் = ஆரணத்தான்.]*

**ஆரணம்** āraṇam, பெ. (n.) 1. ஒரு நூலின் முதற் செய்யுளைத் தொடங்குதற் கேற்ற முப்பத்திரண்டு மங்கலச் சொற்களுள் ஒன்று; one of the 32 auspicious words used as a beginning in a poetical work. 3. மறை நூல் (வேதம்); vēda, by synecdoche. " ஆரணத் துறையுளாய்" (கம்பரா.தாடகை.2). 2. வேதத்தின் ஒரு பகுதி ; scared mystic part of the vēdas, portion of the Vēda. "ஆரணங்காண் என்பர் அந்தணர்" (திருக்கோ–தனியன்). 4. பழந்தமிழ் மருத்துவ நூல். (சா.அக.); ancient medical work of Indian medicine.

**ம.** ஆரணம்.

*[அரண் → அரணம் → ஆரணம்.]*

பாதுகாப்பு என்று பொருள்படும் அரணம் என்னுஞ் சொல்லே, போற்றிக் காக்கத் தக்கதும் தம்மைக் காக்க வல்லதுமான மறை (வேத) நூல்களுக்கும், அதன் பகுதி களுக்கும், பெயராயமைந்தது. பாதுகாப்பும் மங்கலமுமாகக் கருதப்பட்ட, சீர், எழுத்து, பொன், பூ, திரு, மணி, யானை, தேர், பரி, கடல், மலை, புகழ், மதி, நீர், ஆரணம், சொல், புயல், நிலம், கங்கை, உலகம், பரிதி, அமிழ்தம் என்னும் 32 மங்கலச் சொற்களுள் ஒன்றாக 'அரணம்' இடம் பெற்றிருப்பது ஒப்பு நோக்கத்தக்கது.

**ஆரணமுனிவர்** āraṇa-muṉivar, பெ. (n.) ஒரு முனிவரின் பெயர் (அபி.சிந்.); name of a sage.

*[ஆரணம் + முனிவர்.]*

**ஆரணவாணர்** āraṇa-vāṇar, பெ. (n.) 1. அந்தணர் முனிவர்; saints. "ஆரணவாணர்க் கென்றுங் கேளான மௌற்கல்லியன்" (பாரத. திரௌ. 73). 2. பார்ப்பார்; Brāhmins.

*[ஆரணம் + வாணர். வாழ்நர் → வாணர்.]*

**ஆரணவுருவார்** āraṇa-v-uruvār, பெ. (n.) 1. சிவன்; Šiva. "ஆரண வுருவார் தில்லையம்பல மெய்தப் பெற்றோர்" (கோயிற்பு. இரணிய.74). 2. திருமால்; Visnu.

*[ஆரணம் + உருவார். உருவார் = வடிவினர்.]*

**ஆரணன்**[1] āraṇaṉ, பெ. (n.) 1. மருத்துவ நூலில் வல்லவன்; one who is well versed in Indian medicine. 2. மறை (வேத) நூல்களில் வல்லவன்; one who is well versed in sacred books.

*[ஆரணம் + அன்.]*

**ஆரணன்**[2] āraṇaṉ, பெ. (n.) 1. சிவன்; Šiva. "ஆண்டவ னாரணன் கம்பனென் றேத்த" (கம்பரந்.30). 2. திருமால்; Viṣṇu. "ஆரணனே யரனே" (பாரத. கிருட்டிண. 209). 3. நான்முகன்; Brahma. "ஆரணன் றனது மைந்தர்க் கரும்பெறன் ஞான போதம்" (கந்தபு. மேரு.18). 4. பார்ப்பான்; Brāhmin.

**ம.** ஆரணன்

*[ஆரணம் → ஆரணன்.]*

**ஆரணி**[1] āraṇi, பெ. (n.) 1. வடஆர்க்காடு மாவட்டத் திலுள்ள ஓர் ஊர்; name of a town in North Ārcot district. name of a village. 2. ஓர் ஆறு; name of a river.

*[ஆறு + அணி. ஆறணி → ஆரணி.]*

**ஆரணி**[2] āraṇi, பெ. (n.) 1. மாந்தருடம்பில் ஆறாதாரங் களுள் நான்காவதாகிய நெஞ்சத் தாமரையில் உள்ள அநாகதத்துக்குரிய பன்னிரண் டிதழ்களுள் ஓரிதழில்நிற்கும்அதிதேவதை (சி.சி.அ:21.மறை); celestial goddess seated in one of the 12 petals of the lotus of heart. (த.சொ.அக.). 2. காளி; goddess Kāḷi 3. உமையவள், பார்வதி; goddess Pārvadi. "ஆரணி சடைக்கடவுளாரணி யெனப்புகழ்" (தாயு. மலை வளர். 5).

**ம.** ஆரணி.

*[ஆரணம் → ஆரணி. ஆரணம் = பாதுகாப்பு, பாதுகாப்பளிக்கும் தெய்வம்.]*

**ஆரணி**[3] āraṉi, பெ. (n.) சுழல் காற்று (த.சொ.அக.); whirl wind.

*[ஆர்தல் = சுற்றுதல், சுழலுதல். ஆர் → ஆரணி.]*

**ஆரணிய அறுநாள்** āraṉiya-aṟuṉāḷ, பெ. (n.) மகப் பேற்றுக்காகப் பெண்டிர் கடக (ஆடி)த் திங்கள் வளர்பிறை ஆறாம் நாளில் உமையவளை வேண்டி நோற்கும் நோன்பு; fast observed by women for the sake of offspring, on the sixth day following new moon in the month of Āḍi.

*[ஆரணி → ஆரணிய (கு.பெ.எ.) ஆரணி = உமையவள்.]*

**ஆரணிய ஓரை** āraṉiya-ōrai, பெ. (n.) மடங்கல் ஓரை (சிம்மராசி); leo of the zodiac.

**ஆரணியம்**[1] āraṉiyam, பெ. (n.) 1. காடு; jungle, forest. "ஐந்துபெரும் பார்த்திவரோ டாரணியம் புகுந்த பிரான்" (பாரத. பதினெட். 243). 2. காட்டிலுள்ள கோட்டை (துருக்கம்); fortress in a forest.

*[அரண் → அரணம் → அரணியம் → ஆரணியம், அரணியம் → Skt. āraṇya. அரண் = காவற்காடு. அரணம் = காடு, பாதுகாவலான காட்டுப்பகுதி.]*

வடமொழியாளர், "ரு (r) = செல், ரு → அரண = தொலைவான, அயலான; அரண → அரண்ய = தொலைவான அல்லது அயலான இடம், காடு, அடவி, பாலை" எனப் பொருள் கூறி மூலங் காட்டுவர். செல்லுமிடமும் தொலைவான இடமும் காடாகவே இருத்தல் இயலாமையின் அவர் காட்டும் வேர்மூலம் பொருந்தாது.

காவற்காட்டுக்கு 'அரண்' என்றே பண்டைத் தமிழில் வழக்கு நிலை பெற்றிருத்தலானும், அரண் (பாதுகாப்பு) நாடி காடு புகுந்தார்க்கு அதுவே அரணமாதலினாலும், "காவல் வேல் காவற் காடிவை யரணே" என்றும், "காடும் எயிலும் கவசமும் அரணம்" என்றும் பிங்கல நிகண்டு கூறுதலானும், 'அரண்' என்பதே ஆரணியத்திற்கு மூலம் என்பது வெளிப்படை.

**ஆரணியம்**[2] āraṉiyam, பெ. (n.) மடங்கல், அரிமா; lion

*[அரண் → அரணம் → அரணியம் → ஆரணியம் = காடு, காட்டரசனாகிய அரிமா.]*

**ஆரணியராசி** āraṉiya-rāśi, பெ. (n.) **ஆரணிய ஓரை**பார்க்க; see āraṉiya-ōrai.

**ஆரத்தம்** ārattam, பெ. (n.) ஆத்தி; fig tree. (சா. அக.).

*[ஆர் → ஆர்த்தம் → ஆரத்தம்.]*

**ஆரத்தி** āratti, பெ. (n.) 1. மணமக்கள், மாண்புமிகு பெரியோர், அரசர், சமயத்தலைவர் ஆகியோர் உலா வருங்கால் அல்லது மங்கல நிகழ்ச்சிகளின்போது கண்ணேறு (திருஷ்டி) கழிப்பதற்காக மஞ்சளும், சுண்ணாம்பும் கலந்து சிவந்த ஆலநீர் கரைத்தும், சில நேரங்களில் சோற்றுருண்டை வைக்கப் பட்டதுமான தட்டில் விளக்கேற்றி வலமுறையாக வோ இடமுறையாகவோ சுழற்றி நெற்றியில் பொட்டிடும் சடங்கு; waving of light, or water mixed with lime and turmeric or saffron coloured rice-balls, before important personages such as newly wed couple, a ruler, or a spiritual head, in processions or on other auspicious occasions. 2. தெய்வத் திருமேனியின் முன் காட்டும் பதினாறு வகை வழிபாட்டுச் செயல்முறைகளுள் ஒன்றான திருவிளக்கு அல்லது கற்பூரவிளக்கு (தீபாராதனை) வழிபாடு; one of sixteen acts of worship, consisting in the waving of a light or camphor in circular motion before an idol. 3. ஆரத்திப்பாட்டு; song sung during āratti ceremony.

**ம.** ஆரத்தி; **இந்.** ஆரதீ; **க.** ஆரதி; **து.** ஆரதி.

**ஆலத்தி** பார்க்க; see ālatti

*[ஆல் → ஆலத்தி → ஆரத்தி. ஆலுதல் = சுற்றுதல், சுழற்றுதல்.]*

**ஆரத்திக்கருப்பூரம்** āratti-k-karuppūram, பெ. (n.) பொது வகைக் கருப்பூரம்; ordinary camphor.

*[ஆலத்தி → ஆரத்தி + கருப்பூரம்.]*

**ஆரத்தியம்** ārattiyam, பெ. (n.) ஒழிவு (த.சொ.அக.); interval, rest, leisure.

*[ஒருகா. அறுத்தியம் → ஆரத்தியம். அறுத்தி = இடைவெளி, ஒழிவு.]*

**ஆரதக்கறி** ārada-k-kaṟi, பெ. (n.) 1. மரக்கறி (யாழ்ப்.); vegetable curry (J.). 2. மீனில்லாத காய்கறி யுணவு; curries of vegetables only without fish, and c. (W.).

*[அருகன் → அருகம் → அருகதம் → ஆருகதம் → ஆரதம் + கறி.]*

**ஆரதம்** āradam, பெ (n.) 1. புலால் தவிர்ந்த தூய உணவு (யாழ்ப்.); pure vegetarian meal without meat (J.). 2. மரக்கறி உணவுக் கோட்பாடு, தூய சிவனியம் (சுத்த சைவம்); vegetarianism, habit of taking food purely cooked, according to Hindu notions, without flesh, eggs, etc. **Skt.** ārhata.

*[அருகன் → அருகதம் → ஆருகதம் → ஆரதம். ஆரதம் = சமணசமய நெறிப்படி புலால் உண்ணாத இயல்பு.]*

**ஆரதி** āradi, பெ. (n.) **ஆரத்தி** பார்க்க; see āratti.

*[ஆலத்தி → ஆரத்தி → ஆரதி.]*

**ஆரதிகர்ப்பூரம்** āradi-karppūram, பெ. (n.) **ஆரத்திக் கருப்பூரம்** பார்க்க; see āratti-k-karuppūram.

*[ஆரத்திக்கருப்பூரம் → ஆரதிகர்ப்பூரம்.]*

**ஆரந்தாங்கு பாண்டியன்** ārantāṅgu-pāṇḍiyaṉ, பெ. (n.) உக்கிரகுமார பாண்டியன்; Ukkira Kumāraṉ, a Pāṇḍya King.

*[ஆரம் = முத்துமாலை. ஆரம் + தாங்கு + பாண்டியன்.]*

**ஆரநாலகம்** āra-nālagam, பெ. (n.) **ஆரநாளகம்** பார்க்க; see **āra-nāḷagam.**

**ஆரநாளகம்** āra-naḷagam. பெ. (n.) இனிப்புள்ள பழம், அரிசி, சருக்கரை முதலியவற்றினின்று எடுக்கப் பட்டு, எதனின்றெடுக்கப்பட்டதோ அப்பெயரிட்டே அழைக்கப்படுவதுமான பருகம், காடி; vinegar, It is an impure acetic acid made by the acetous fermentation of sweet fruits, rice, sugar, etc. and is specifically named after the substance from which it is derived.

எ-டு: அரிசிக்காடி, திராட்சைக் காடி (சா. அக.).

ம. ஆரநாளம்; க. ஆரநாளாம்பு (அரிசிக்கஞ்சி)

*[ஆர + நாளி → நாளகம். நாளி= கள், புளிப்பேறிய நீர்மம். ஆர = நிறைய, அதிகமாக.]*

வடமொழியாளர் āranāla என்பதற்கு மணமற்றது என்று பொருள் கூறுவது பொருத்தமில்லை. நாளி என்பது தமிழில் கள்ளைக் குறித்த சொல். நிறைவாக மூங்கிற் குழாயிலிட்டு அரிசிக் கள்ளைப் புளிக்கச் செய்யும் பண்டைத் தமிழர் மரபும், வடமொழியில் 'ஆரநால' என்னுஞ்சொல் சிறப்பாக அரிசி யினின்றும் எடுத்த கள்ளையே குறித்தலானும் ஆரநாளி - ஆரநாளம் - ஆரநாளகம் என்பவை முற்றுந் தமிழ்ச் சொற்களே என்பது தேற்றம்.

**ஆரநாளி** āra-nāḷi, பெ. (n.) 1. கள்; toddy. 2. புளித்த காடி; vinegar.

*[ஆர + நாளி. ஆர = மிக. நாளி = கள், புளித்த காடி, நீர்.]*

**ஆரபடி** āra-paḍi, பெ. (n.) 1. பொருள் பொருளாக வீரன் தலைவனாக வரும் நாடக வகை; a kind of drama depicting acquisition of wealth and adoring the achievements of great heroes. (சிலப். 3,13, உரை). 2. துணிவு; courage.

**Skt.** ārabhati.

*[ஒருகா. ஆர்ப்பாட்டம் → ஆர்ப்பாட்டி → ஆரபடி.]*

**ஆரம்**[1] āram, பெ. (n.) 1. சந்தனமரம்; sandal-wood tree. "வன்னிகொன்றை வழைசண்பகமாரம்" (பெரியபு. தடுத்தாட். 94). 2. நறுமணப்பொருள்களுள் ஒன்று; sandal-wood, one of six tupa-varkkam. 3. சந்தனக் குழம்பு; sandal paste. "அரைத்த வாரமும்" (பாரத. நிரைமீட்சி. 29). 4. கடம்பு (மூ.அ.); common cadamba. 5. கோடக சாலைச்செடி (மூ.அ.); a very small plant. 6. தோட்டம் (பிங்.); garden. 7. காட்டாத்தி (திவா.); common mountain ebony. "ஆரங் கண்ணிச் சோழன்" (சிலப். பதிக. 12).

*[ஆர்தல் = பொருந்துதல், நிறைதல், பரவுதல், மணம் வீசுதல். ஆர் → ஆரம் = மணம் வீசும் பொருள், சந்தனம்; சோழர் மார்பில் பொருத்தும் அணியாக ஆத்தி சூடுதலின் ஆத்தியும் ஆரம் ஆயிற்று. ஆர்தல் = சார்தல், அணிதல்.]*

**ஆரம்**[2] āram, பெ. (n.) 1. மணிவடம் (பிங்.); necklace of pearls or gems. 2. பூமாலை (சூடா.); garland of flowers. 3 மாதரணிவடம்; necklace. 4. பதக்கம் (திவா.); pendant. a breast-plate, as an ornament. 5. அணிகலன் (பிங்.); ornament. "அம்பையாரஞ் செறியாகர்" (மரு. தி. 16.). 6. புறா, கிளி போன்றவற்றின் கழுத்திலுள்ள வரி; natural ring round the neck of doves, lines on the necks of parrots and other birds. "ஆரமோககிளி" (திருப்பு. 748). 7. ஆடு மாடுகளின் கழுத்தில் தொங்கும் தசை; membrane hanging from the neck of cattle and goats. 8. மாலை; garland. "செம்பொனாரமதாயிற்றம்மா" (கந்தபு. 93). 9. படப்பொறி; spots on the neck of the cobra, de-capella.

ம. ஆரம்

*[ஆல் → ஆலம் (சுற்று வட்டம்) → ஆரம்.]*

**ஆரம்**[3] āram, பெ. (n.) 1. ஒரு செய்நஞ்சு (அஞ்சன பாஷாணம்) (மூ.அ.); a kind of native arsenic. 2. களிம்பு, காளிதம்; oxide of iron, verdigis. 3. கீச்சுக் கிட்டம், இரும்புக் கிட்டம்; scoria of iron, iron-dross (W.).

*[ஆர் → ஆர்த்தல் = பொருத்தல், சேர்த்தல், திரட்டல், ஆர்- ஆரம்.]*

**ஆரம்**[4] āram, பெ. (n.) பித்தளை; brass.

*[ஆர் = சேர்த்தல் → கலத்தல், ஆரம் = கலப்பு மாழை.]*

**ஆரம்**[5] āram, பெ. (n.) 1. ஒரு அம்பு (பாணம்); a kind of arrow. 2. கோணம்; angle. 3. நுனி; tip, sharp edge. 4. வகுக்கும் எண்; denominator of a fraction. 5. பிரிக்கும் எண்; divisor in arithmetic. 6. போர்; battle.

*[ஆர் → ஆரம்.]*

**ஆரம்**[6] āram, பெ. (n.) 1. முத்து; pearl. "ஆரமணிந்து விம்மும் பாரக்கு சங்கள்" (பாரத. சுக்பவ. 55). 2. கண்ணீர்; tear drop. "விழிகளாரஞ்சொரிய" (பாரத. கீசகன்வ. 17). 3. முத்தினாற் செய்த கச்சு; stays for women's breasts, made of pearls. "ஆரந்தாங்கிய வலர்முலையாகத்து" (நெடுநல். 136). 4. முத்து மாலை; garland of pearls. "கழுஉ விளங்காரங் கவைஇய மார்பே" (புறநா. 19).

*[ஆல் = ஆலக்கட்டி, நீர்த்திரள், நீர்த்துளி, ஆல் → ஆர் → ஆரம் = நீர்த்துளி போன்ற முத்து, கண்ணீர், முத்துமாலை.]*

**ஆரம்**[7] āram, பெ. (n.). வெண்மை; whiteness.

*[ஆரம்=முத்து, முத்தினைப்போன்றவெண்மை.]*

**ஆரம்**[8] āram, பெ. (n.) 1. செவ்வாய்க்கோள்; mars. 2. காரிக்கோள்; saturn.

*[ஆர் = சேர்தல், சேர்த்தல். ஆர் → ஆரம் = குறிப்பிட்ட நிலையில் சேரும் கோள்.]*

**ஆரம்பம்**[1] ārambam, பெ. (n.) 1. முயற்சி; effort, exertion. 2. தொடக்கம்; commencement, beginning. 3. முகவுரை; preface. 4. விரைவு; speed. 5. செருக்கு; pride, arrogance "ஆரம்பக்குண்டர்" (தேவா.372,8). 6. பதட்டம்; haste.

*[ஆர்தல் = நிறைதல், மேலுறல், எழும்புதல், மிகுதல், விரைதல். ஆர் → ஆரம்பம்.]*

**ஆரம்பம்**[2] ārambam, பெ. (n.) உழவுத்தொழில் (தரும.); agricultural performances (Loc.).

பட. ஆரம்பு

*[ஏர் → ஏரம்பம் → ஆரம்பம்.]*

**ஆரம்பம்**[3] ārambam, பெ. (n.) 1. பேரொலி; loud roar, shout. 2. கொலை; murder.

*[ஆர்தல் = ஒலித்தல். தாக்குதல். ஆர் → ஆரம்பம்.]*

**ஆரம்பவாதம்** āramba-vādam, பெ. (n.) முதற் காரணம் இல்லாமலே காரியம் தோன்றும் என்னும் கொள்கை (சி.போ.பா.); doctrine of creation which postulates that the world is made out of nothingness (effect without cause).

*[ஆரம்பம் + வாதம். வாள் = பேசு. வாள் → வாளம் → வாதம்.]*

**ஆரம்பி**[1]**-த்தல்** ārambi-, 4. செ.குன்றாவி. (v.t.) தொடங்குதல்; to begin, enter upon, undertake. "புறத்தொழி லிலாரம்பித்து" (ஞானவா.புண்ணி. 33).

ம. ஆரம்பிக்குக; க. ஆரம்பிசு.

*[ஆர் → ஆரம்பு (வடதமிழ்ச்சொல்) → ஆரம்பி → ஆரம்பித்தல். ஆர் = பொருத்து, தொடங்கு.]*

**ஆரம்விழுந்தகிளி** āram-vilunda-kili. பெ. (n.) கழுத்தில் வரையுள்ள கிளி; parrot with a natural ring around its neck.

*[ஆரம் = வளைவு.]*

**ஆரமரோட்டல்** āramar-ōttal, பெ. (n.) வெட்சித் திணையில் ஒரு துறை; classification in **Vetci-t-tiṇai.** (தொல். பொருள். 60).

*[ஆர் + அமர் + ஓட்டல்.]*

ஆரமரோட்டலாவது, குறுநில மன்னருங் காட்டகத்து வாழும் மறவரும் போர்த்தொழில் வேந்தரைப் பொருது புறங் காண்டல்.

**ஆரமாயிகம்** āra-māyigam, பெ. (n.) வெண் புளிச்சை; a species of puliccai, acid-leaved marool. (சா.அக.).

*[ஆரம் = வெண்மை. ஆரம் + ஆயிகம்.]*

**ஆரரி** ārari, பெ. (n.) கதவு; door.

*[ஆர் + அரி.]*

**ஆரல்**[1] āral, பெ. (n.) ஆரால்மீன்; brownish or greenish. sand-eel, "நுண்ணாரல் பருவரால்" (புறநா. 18.).




ம. ஆரல்; து. ஆரொள்மீன்.

*[ஆர் → ஆரல்.]*

**ஆரல்**[2] āral, பெ. (n.) 1. நெருப்பு; fire, 2. கார்த்திகை நாண்மீன்; third naksatra. "அரவுக் கண்ணணியுற ழாரன்மீன் றகை யொப்ப" (கலித். 64,4.). 3. செவ்வாய் (திவா.); planet Mars. "ஆதித்தனோ டம்புலியாரல்" (அரிச். இந்திர. 27.). 4. அழற் பித்தம்; gastrobilious fever. 5. பித்தம்; bile.

*[ஆர் → ஆரல். உல் → அல் → அர். ஆர். (உரிதல் கருத்துவேர்.) ஆர்*[9] *பார்க்க; see* **ār**[9]*.]*

**ஆரல்**[3] āral, பெ. (n.) 1. மதில்; wall. "ஆர லோங்கிய வயோத்திமா நகரி" (அரிச். 9. விவாக. 283 ). 2. சுவரின் மேல் அமைக்கப்படும் மறைப்பு; coping of a wall. ஒட்டாரல் (உ.வ.).

*[ஆல் → ஆர்(வளைதல்) → ஆரல் = சுற்றுமதில்.]*

**ஆரல்**[4] āral, பெ. (n.) 1. ஆரைக்கீரை; plant containing edible leaves. 2. காக்கணங் கொடி; hair creeper, 3. ஒரு பூண்டு; plant.

*[ஆர் → ஆரல். ஆர் = உறுதல், நிறைதல், செழித்தல், தழைத்தல்.]*

**ஆரல்**[5] āral, பெ. (n.) களிம்பு; verdigris.

**ஆரல்**[6] āral, பெ. (n.) நல்ல தண்ணீர்; fresh water. (சா.அக.).

*[அறல் → ஆறல் → ஆரல்.]*

**ஆரல்**[7] āral, பெ. (n.) பூசல்; conflict.

*[ஆர் – ஆரல்.]*

**ஆரலம்** āralam, பெ. (n.) பகை; enmity.

*[ஆரலர் = பகைவர். ஆரலம் = பகை, பகைமை.]*

**ஆரவடம்** āra-vadam, பெ. (n.) முத்துவடம்; string of pearls. (தண்டி. 47, உரை).

*[ஆரம் + வடம்.]*

**ஆரவம்** āravam, பெ. (n.) ஒலி; sound. "ஆரவ மிகுந்த பல்புள் ளகழி சூழ் புரிசை" (பாரத. திரௌ.17).

ம. ஆரவம்; க. ஆரவ

*[அரவம் → ஆரவம்.]*

**ஆரவரியம்** āravariyam, பெ. (n.) அரசமரம்; peepul tree.

**ஆரவலர்** āravalar, பெ. (n.) காட்டாத்திப்பூ (தைலவ. தைல. 98); flower of a tree.

**ஆரவாரம்**[1] āravāram, பெ. (n.) 1. பேரொலி; loud noise, shouting, roaring, bustle. "ஆரவாரஞ் செய் தணுகி னானரோ" (கந்தபு. காவிரிநீ.). 2. ஆடம்பரம்; show, pomposity (W).

ம. ஆரவாரம்; க. ஆரவார; தெ. ஆரிவேரமு; து. அரபாயி

*[ஆர்தல் = ஒலித்தல். ஆர் → ஆரம். ஆரம் + ஆரம் = ஆரவாரம். வகரம் உடம்படு மெய்.]*

**ஆரவாரம்**[2] āravāram, பெ. (n.) துயரம் (பிங்); grief, distress.

ம. ஆரழல் (மிகுதுயரம்)

*[ஆர் = கட்டுதல், பிணித்தல், நோயால் தாக்குதல். ஆர் + ஆரம் – ஆரஆரம் → ஆரவாரம்.]*

**ஆரவாரி-த்தல்** āravāri-, 4. செ.கு.வி. (v.i.) மிக் கொலித்தல்; to roar, shout. (திவ். பெரியாழ். 1, 7,1).

**ஆரவாரிப்பு** āravārippu, பெ. (n.) ஆர்ப்பு; loud noise, bustle.

*[ஆர்த்தல் = ஒலித்தல். ஆர + ஆரிப்பு]*

**ஆரற்சுவர்** ārarcuvar, பெ. (n.) மேலே மறைப்புடைய சுவர்; wall with coping.

*[ஆரல் + சுவர்.]*

**ஆரன்மீன்** āranmīn, பெ. (n.) **ஆரால்மீன்** பார்க்க; see **āral-mīn.**

**ஆரா** ārā, பெ. (n.) பாம்பைப்போன்ற தோற்றமுடைய மீன்; fish resembling snake.

*[ஆராங்கு → ஆரா.]*

**ஆராங்கு** ārāngu, பெ. (n.) 1. நெல்போல் உள்ள ஒருவகைக் களை; a kind of weed. 2. அயிலைபோல் உள்ள ஒருவகை மீன்; a kind of marine fish.

ம. ஆராங்கு.

*[ஆர் → ஆங்கு. ஆங்கு = போல. ஆர் = பொருத்தம்.]*

**ஆராட்சி**[1] ārātci, பெ. (n.) பழைய வரிவகை; an ancient tax. (S.I.I.V. 96.).

*[ஒருகா. ஆராய்ச்சி → ஆராட்சி. (கொ. வ.).]*

**ஆராட்சி**[2] ārātci, பெ. (n.) ஆள் நடமாடுமிடம் (தஞ்சை); place where people frequent.

*[ஆள் + ஆட்சி – ஆளாட்சி → ஆராட்சி. (கொ.வ.).]*

**ஆராட்டுதல்** ārāttudal, தொ.பெ (vbl.n.) தாலாட்டு தல்; dandling a child.

*[ஆலாட்டுதல் → ஆராட்டுதல். ஆலாட்டுதல் பார்க்க;* see **ālāttudal.]**

**ஆராத்தொட்டி** ārā-t-totti, பெ. (n.) மினிக்கி மரம்; tree.

**ஆராப்பத்தியம்** ārā-p-pattiyam, பெ.. (n.) 1. கடும் பத்தியம்; very rigid diet. 2. அற்பம்; very trifling thing (W.).

*[அரும்பத்தியம் → ஆராப்பத்தியம்.]*

**ஆராமை** ārāmai, பெ. (n.) 1. நிரம்பாமை; incomplete, unfilled. "ஆராவியற்கை அவா நீப்பின்" (குறள் 370). 2. பேரன்பு; great affection, love. "என்ற மிழினுக் கின்னல் பகராதுலக மாராமை மேலிட்டி ருத்தலால்" (தாயு. சித்தர்க. 8).

*[ஆர் + ஆ (எ.ம.இ.நி.) + மை (ப.பெ.ஈறு) ஆர்தல் = நிறைதல். ஆராமை = நிறையாமை, நிறையாது மேன் மேல் மீதூரும் அன்பு.]*

**ஆராமைசோராமை** ārāmai-sōrāmai, பெ. (n.) தள்ளாமை (இ.வ.); exhaustion, weariness.

*[ஆராமை + சோராமை. எதுகை மரபிணைச் சொல்.]*

**ஆராய்-தல்** ārāy-, 1. செ.குன்றாவி. (v.t.) 1. ஆய்ந்து பார்த்தல், நோட்டமிடுதல் (சோதித்தல்); to investigate, scrutinize, examine, explore. 2. கலந்தாய்தல், உசாவுதல் (ஆலோசித்தல்); to consider, deliberate upon. 3. தேடுதல்; to seek, search for. 4. ஒத்தொலி (சுருதி) சேர்த்தல்; to set the pitch of a musical instrument. "நரம்பின் ... ஓசை செவியுற வாராய்த லாராய்தல்" (கூர்மபு. கண்ணன்மண. 148).

ம. ஆராச்ச; க. ஆரய்; து. ஆரய்சு; தெ. ஆரயு, ராசு

*[ஆர + ஆய்.]*

**ஆராய்ச்சி**[1] ārāycci, பெ. (n.) 1. ஆய்வு, திறனாய்வு; research, critical study. 2. நோட்டம், கூர்ந்தாய்வு (சோதனை); overseeing, investigation, examination. scrutiny.

ம. ஆராய்ச்சி; க ஆரய்கெ; து. ஆரிகெ, ஆரைகெ; தெ. ஆரயிக.

*[ஆராய் → ஆராய்ச்சி.]*

**ஆராய்ச்சி**[2] ārāycci, பெ. (n.) தலையாரி (யாழ்ப்.); sheriff, bailiff, one who has the command over the inferior officers in a court or office, a superintendent (J.).

*[ஆராய் → ஆராய்ச்சி. தனக்கிட்ட பணியை ஆய்ந்து செவ்வனே செய்பவன்.]*

**ஆராய்ச்சிமணி** ārāycci-maṇi, பெ. (n.) முறை வேண்டு வோர் அசைக்கும்படி அரண்மனை வாயிலிற் கட்டப்படும் மணி; bell which is used at the palace gate of a king so that any subject may seek justice.; "ஆரு மனதில் விசாரத்தா லாராய்ச்சி மணியைத் தொடாமலே" (இராமநா. பாலகா.4).

**ஆராய்ச்சியார்** ārāycciyār, பெ. (n.) 1. கணக்குத் தணிக்கையாளர் (பரிசோதகர்); auditors (M.E.R. 1926–7 p.85). 2. கொலைத் தண்டனையை நிறைவேற்றுபவர் (நாஞ்.); executioners (Nāñj.). 3. சொத்து வழக்கு முறை மன்றத்து அதிகாரி (யாழ்ப்.); Nazir of a civil court (J.).

*[ஆராய் → ஆராய்ச்சி + ஆர். (உ.ப.ஈறு.).]*

**ஆராய்தல்** ārāydal, பெ. (n.) 1. ஒத்தொலி (சுருதி) கூட்டுதல்; tuning a musical instrument. (சிலப். 7, 1. அரும்). 2. பண்ணல் முதலிய கலைத்தொழில் எட்டனுள் ஒன்று; one of the eight ways deciding of the tune. (கூர்மபு. அட்டமூ. 1, உரை).

**ம.** ஆராயுக; **க.** ஆரய்.

*[ஆர + ஆய்தல் (பொருந்திவர ஆய்தல்).]*

யாழ் நரம்பினுள் நின்றொலிக்கும் ஓசையை யாராய்தல், ஆளத்தி நாளத்தி (ஆரோகண அவரோகண) வகையால் இசையைத் தெரிதல் என ஆராய்தல் இரு வகைத்து என்பர்.

**ஆராய்வு** ārāyvu, பெ. (n.) 1. நுண்ணறிவு; intelligence. 2. உசாவுதல் (விசாரணை); enquiry, spirit of enquiry.

*[ஆர + ஆய்வு.]*

**ஆரார்** ārār, பெ. (n.) பகைவர்; enemies. "ஆரார் திரிபுரங்கள் நீறாநோக்கு மனலாடி" (தேவா. 296,1).

*[ஆர் + ஆ (எ.ம.இ.நி.) + ஆர். ஆர்தல் = நெருங்குதல். ஆரார் – பலர்பாலீற்றின் முன்னுயிர் கெட்டுப் புணர்ந்தது.]*

**ஆரால்** ārāl, பெ. (n.) 1. ஆரால்மீன் (செ.அக.); brownish or greenish sand – eel. 2. சேற்றாரால் மீன்; rich brown thorny–backed– eel.

ஆரால் மீன் மங்கல் (கபில) நிறம் அல்லது பச்சை நிறமுள்ள தாயும் வயிற்றுப் பகுதி மஞ்சளாயுமிருக்கும். சற்றொப்ப 15 விரல (அங்குல) நீளமுள்ள இம்மீன் மண்ணிற் புதையும், பாம்பு மீன் என்றும் அழைக்கப்படும். தண்ணீரில் மேற்கிளம்பாமல் அடிப் பகுதியில் காணப்படும். காற்றுப்பை தலையினின்று வால் வரை யிலுமிருக்கும்; a brown or green sand – eel, It is yellowish along its abdomen. It is also called life giving fish, snake fish or lampery. It conceals itself in mud. It is found through out the deltas of large rivers. It is sometimes 15 inches length. It seeks the bottom if placed in water. It has the air – vessel, from the head to the tail. The different species are: –

1. சேற்றாரால் – rich brown thorny – backed eel.
2. சிற்றாரால் – sand–eel, pencalus. This is a common species and much smaller.
3. பேயாரால் – snake–eel, Marmoratus.
4. கல்லாரால் – stone lamprey,. It is so called from its adhering to stones and rocks.
5. கிழங்காரால் – stout–eel, It is a variety common at Madras. (சா.அக.).

*[ஆழல் → ஆரல் → ஆரால் = நீரின் ஆழத்தில் வாழும் மீன்.]*

**ஆராலிகன்** ārāligan, பெ. (n.) பாகஞ்செய்வோன், சமையற்காரன்; cook.

*[ஆர → ஆளுவோன் → ஆராளுவன் → ஆராளுகன் → ஆராளிகன் → ஆராலிகன்.]*

சமையற்காரனைக் குனிந்து நின்று தொழில் செய்வோன் என்று வடமொழியாளர் கருதுவர். 'ஆராலிக' என்னும் வட சொல்லை இதற்கு மூலமாகக் காட்டுவது பொருந்தாது.

**ஆராவம்** ārāvam, பெ. (n.) அரவம், பேரொலி; shouting, loud noise. "ஆராவ முடனிட்ட கவசம்" (பாரத. ஐந்தாம்.11).

**ம.** ஆர்வம், ஆரவம்.

*[அரவம் → ஆரவம் → ஆராவம்.]*

**ஆராவமுது** ārā–v–amudu, பெ. (n.) உண்ணுந்தோறும் இன்னும் உண்ண வேண்டும் என்னும் வேட்கை மிகுவிக்கும் அமுது; divine meal which kindles unquenchable desire to eat more of it. "ஆராவமுதே அளவிலாப் பெம்மானே" (திருவாச.1,67).

*[ஆரா + அமுது.]*

**ஆராவுணர்வு** ārā–v–uṇarvu, பெ. (n.) சிற்றறிவு; shallow knowledge. "ஆராவுணர்வா லறிவுற்றயரா" (கோயிற்பு.வியாக்.27).

*[ஆரா + உணர்வு ஆரா = நிறையாத.]*

**ஆரி**[1] āri, பெ. (n.) 1. அழகு ; beauty. (சா.அக.). 2. மேன்மை; excellence, eminence. "ஆரியாக வஞ்சஞ்சாந்தந் தளித்தபின்" (சீவக.129). 3. அருமை; rarity, difficulty. "ஆரிப்படுகர்" (மலை படு.61).

*[அரு → ஆர் → ஆரி ]*

**ஆரி**[2] āri, பெ. (n.) ஆர் எனப்படும் ஆத்தி மாலையை அணிந்த சோழன் (சூடா.); Cola king, as having the bauhinia for the royal flower.

*[ஆர் → ஆரி. ஆர். ஆத்திமாலை. இ – ஒருமை குறித்த ஈறு.]*

**ஆரி**[3] āri, பெ. (n.) கதவு (சூடா.); door.

*[ஒருகா. ஆரரி → ஆரி. ஆர்த்தல் = சார்த்துதல். அரி = அரிகால். 'அரிகாலொடு பொருந்தச் சார்த்தும் கதவு]*

**ஆரி**[4] āri, பெ. (n.) 1. கொற்றவை; Kali, goddess. 2. உமையவள் ; Pārvathi, the consort of Śiva.

*[ஆர் + இ. (பெ.பா.ஈறு). ஆரி = நிறைந்த, வீரம், ஆற்றல், பண்பு கொண்டவள்.]*

**ஆரி**[5] āri, பெ. (n.) தோல்வி (த.சொ.அக.); defeat.

*[ஆள் + இரி. ஆளிரி → ஆரி = படைஞர் இரிந்து (அஞ்சி) ஒடுதலால் ஏற்பட்ட தோல்வி.]*

**ஆரி**[6] āri, பெ. (n.) வழுக்குநிலம்; slippery ground.

*[அரு → ஆர் → ஆரி (நடத்தற்கரிய நிலம்).]*

**ஆரி-த்தல்** āri-,[4] செ.கு.வி. (v.i.) 1. ஒலித்தல்; to sound. கொக்கரித்து ஆரவாரித்துப் போருக் கெழுந்தனர் (உ.வ.).

*[அரி → ஆரி. அரித்தல் = ஒலித்தல். ஆரிரத்தல் பார்க்க; see ārirattal.]*

சென்னைப் பல்கலைக்கழக அகரமுதலியில், சிலப்பதிகார மேற்கோள் வரியில் 'ஆரிக்கும்' என்னும் சொல்லுக்கு, ஒலிக்கும் எனப் பொருள் காட்டியிருப்பது தவறு. அவ்வரி ஆரிரக்கும் என்றிருப்பதே சரியானது.

**ஆரிட்டம்** āriṭṭam, பெ. (n.) காக்கை; crow. (சா. அக).

*[ஒருகா, ஆவி → ஆரி → ஆரிடு → ஆரிட்டம். ஆரிடுதல் = ஒலித்தல், கரைதல், இரைச்சலிடுதல்.]*

**ஆரிடம்** [1] āriḍam, பெ. (n.) 1. முனிவர்கள் பாடிய நூல்கள்; knowledge and wisdom communicated by sages in books, books compiled by sages. "ஆரிடமாகிய கரணம்" (தொல். பொ. 146 உரை.). "ஆரிடத்துத் தானறிந்த மாத்திரையின்" (ஆசாரக். 1). 2. கல்வி; learning. 3. மறைநூல் (வேதம்), (த.சொ.அக.); Vēda. 3. பூசை (த.சொ.அக); worship. 4. ஆகமம்; moral, code, religious and judicial knowledge (W.).

*[ஆரிதர் → ஆரிடர் → ஆரிடம்.]*

**ஆரிடம்** [2] āriḍam, பெ. (n.) வழுக்கு நிலம் (சூடா.); slippery ground.

*[அரு → ஆர் + இடம் = ஆரிடம் = அரிய நிலம், நடத்தற்கரிய வழி.]*

ஆரிடம் ஆரி எனவும் வழங்கும் . ஆரி[6] பார்க்க; see āri[6].

**ஆரிடம்**[3] āriḍam, பெ. (n.) 1. ஆவையும் ஆனேற்றையும் ஒப்பனை செய்து அவற்றிடை மணமக்களை நிறுத்தி நீர்வார்த்துக் கொடுக்கும் திருமணம், ஆரியர் வகுத்த எண்வகை மணமுறைகளுள் ஒன்று (தொல். பொ. 92, உரை); one of the eight forms of marriage as enunciated by the Āryans; marriage in which the bride and the bridegroom are placed between a cow and a bull well decorated and the union sanctifield by pouring water.

*[ஆரு → ஆர் → ஆரிடம் = ஆரிய நூல், மறைநூல், மறை நூலில் சொல்லப்பட்ட திருமணமுறை.]*

வடமொழியில் ஆ + ரிஷி = முனிவர் தொடர்புடையது என மூலங் காட்டி, முனிவர் வழி வகுத்தாளப் பட்ட மணமுறை என இதற்குப்பொருள் கூறப்படுகிறது. ஆர்வுஎன்னும் வடசொல் தமிழில் ஆரிடம் எனத்திரிந்ததாகவும் கூறுகின்றனர். 'ரிஷி' என்னும் சொல் 'ஆர்ச்', ரிச்' (புகழ்தல, பரவுதல், பாராட்டல்) என்னும் மூலங்களிலிருந்து தோன்றியதென மற்றொரு சாராரும் கூறுகின்றனர். தமிழில் 'அருக்குதல்' என்னுஞ் சொல் புகழ்தல், பாராட்டல் எனும் பொருள் தந்து நிற்றலானும் தவவலிமையான் செயற்கரிய செய்ய வல்லவரும், அரிய பண்பாட்டுச் செல்வம் நிறைந்த அருளாளராகவும், புகழ்ந்து போற்றத்தக்க அந்தணாளராகவும், விளங்கிய தமிழ் முனிவரே அருமையர் → ஆரியர் → ஆரிதர் → ஆரிடர் எனப் பல வகையானும், இத்தேய முழுவதினும் அழைக்கப் பெற்றிருத்த லானும், இன்னும் கொங்கு வேளாளர்க்கு மங்கல நிகழ்ச்சிகளில் போற்றிப்பாடும் பூசகன் அருமைக்காரன் என அழைக்கப் படுதலானும், பாராட்டத்தக்க பெருமையுடைய பெண்ணுக்கு அருக்காணி எனப் பெயரிடுதல் தமிழரிடை இயல்பாக இருத்தலானும், வடமொழிக்கண் வழங்கும் ஆரியர், ஆரிடர், ரிஷி (இருடி) போன்றவற்றுக்குத் தமிழ்ச் சொற்களே மூலமென்க.

**ஆரிடம்**[4] āriḍam, பெ. (n.) ஆவும் ஆனேறும் பரிசமாகப் பெற்றுக் கொண்டு கன்னியைத் தீ முன்னர்க் கொடுக்கும் ஆரியத் திருமணமுறை (நம்பியகப், 117, உரை); Āryan practice in which the father gives his daughter in marriage before the sacred fire, after receiving a cow and a bull or two pairs as a present. (செ.அக.).

*[ஆ → ஆரி (ஆநிரை) – ஆரிடம்.]*

பெண்ணுக்குப் பரிசமாக மாப்பிள்ளை தரும் ஆவும் ஆனிரையும் தமிழ (திரவிட) நாகரிகம் தழுவியது. பெண்ணின் பெற்றோர் மாப்பிள்ளைக்குத் தருவது ஆரியர்களின் வழக்கம். ஆரியர் வகுத்த எண் வகை மணங்களுள் தமிழர் நாகரிகக் கூறும் ஒருசார் இடம் பெற்றிருந்தது என்பதற்கு இது சான்றாகிறது.

**ஆரிடர்**[1] āriḍar, பெ. (n.) 1. முனிவர்; sages. "ஆரிடர் நிலைமை தன்னை" (கந்தபு.மேருப். 17). 2. சமணர்; Jains.

*[அரு → ஆர் → ஆரி → ஆரிதர் → ஆரிடர்.]*

அசுரர், இயக்கர், சித்தர் முதலியவர்களால் நிறுவப்பட்டது ஆரிடலிங்கம் (த.சொ.அக.) எனக் குறிக்கப்படுதலால், தமிழ முனிவர்கள் பண்டைக் காலத்தில் ஆரியர் → ஆரிதர் → ஆரிடர் என அழைக்கப் பெற்றமை தெளிவாம். ஐயனாரிதனார் (ஐயன் + ஆரிதன் + ஆர்) என்னும்புலவர்பெயரும் இதற்குச் சான்றாம்.

**ஆரிடர்**[2] āriḍar, பெ. (n.) பெருந் துன்பம்; distress, misery affliction.

*[ஆர் + இடர். ஆர் = மிகுந்த. இடர் = துன்பம்.]*

**ஆரிடை** āriḍai, பெ. (n.) செல்லுதற்கரிய பாதை, அரியவழி; difficult route or rugged path. "புலம்பு கொள் ஆரிடை" (கலித். 4.).

*[ஆர் + இடை. இடை = வழி.]*

**ஆரித்திரம்** ārittiram, பெ. (n.) 1. மஞ்சள் நிறமுள்ளது; that which is yellow. 2. கடப்பமரம்; Cadamba tree, (சா.அக.).

*[ஆர் = தீ, எரிநிறம், சிவப்பு, மஞ்சள். ஆர் → ஆரி → ஆரித்திரம்.]*

**ஆரிதம்**[1] āridam, பெ. (n.) வெள்ளலரி; Indian oleander, (alba). (சா.அக.).

*[ஆர் = வெண்மை, ஆர் → ஆரி → ஆரிதம்.]*

**ஆரிதம்**[2] āridam, பெ. (n.) பதினெண்வகை அற நூல்களுள் ஒன்று; one of the eighteen codes of law.

*[அரு → ஆர் → ஆரியம் → ஆரிதம். ஆரியம் = அரியநூல்.]*

**ஆரிதம்**[3] āridam, பெ. (n.) துறவு, துறவுநிலை; ascetic, asceticism.

*[அரு → ஆர் → ஆரி. ஆரிதம் (உயர்ந்த இயல்பு).]*

**ஆரிப்படுகர்** āri-p-paḍugar, பெ. (n.) இழிந் தேறும் வழி, அரிதின் முயன்று ஏறியும் இறங்கியும் செல்லும் கடிய (மலை) வழி; difficult (mountain) path with ascents and descents. "அலங்கு கழையாலும் ஆரிப்படுகர்ச் சிலம்பு" (மலைபடு. 161).

*[அரு → ஆர் → ஆரி + படுகர். ஆரி = அரிய. படுகர் = பள்ளத்தாக்குகள் அமைந்த மலைத்தொடர்.]*

**ஆரிய** āriya, கு.பெ. எ. (adj.) சிறிய; small. "ஆரிய விடைதன் மாண்டவழகினைக் காட்ட" (திருவிளை. மாயப். 21).

*[அரு → ஆர் → ஆரி → ஆரிய. ஆரிய = அரிதாதல், சிறிதாதல்.]*

**ஆரிய அண்ணல்** ārya-aṇṇal, பெ. (n.) கடைக்கழகக் காலப் பெருமகன்; noble man of the sangam age. "ஆரிய அண்ணலை வீட்டி" (பதிற்று. 5.).

*[ஆரியன் + அண்ணல்.]*

**ஆரியக்கூத்து** āriya-k-kūttu, பெ. (n.) 1. கழைக்கூத்து; curious kind of dancing with poles on ropes, acrobatic feats. "ஆரியக் கூத்தாடினாலும் காரியத்தில் கண்ணாயிரு" (பழ.).

ம. ஆரியக்கூத்து.

*[ஆரு → ஆர் → ஆரிய + கூத்து. ஆரிய = அரிய. அரிய கூத்தே ஆரியக் கூத்தாயிற்று.]*

நிலத்தின் மேலன்றிக் கழைமேலேறி யாடும் அரிய கூத்தாதலின், இது ஆரியக் கூத்தாயிற்று. வடபுலத்தாரியர்க்கும் இக்கூத்துக்கும் எவ்வகைத் தொடர்புமில்லை. ஆரியர் என அழைக்கப்பட்ட பழங்குடிகள் ஆடி வந்த கழைக்கூத்து (acrobatic feats of an aboriginal tribe called Āriyan) எனச் சென்னை யகரமுதலி குறிப்பது ஏற்கத்தக்கதன்று. அரிய (கடிய) மலைப் பள்ளத்தாக்குப் பாதை 'ஆரிப்படுகர்' என மலைபடுகடாத்தில் சுட்டப்படுதல் காண்க.

**ஆரியகம்** āriyagam, பெ. (n.) சிறுகுறிஞ்சா; small Indian inecacaunha.

மறுவ, ஆலிகம்.

*[அரு → ஆர் → ஆரி → ஆரியகம். ஆரி = சிறிய.]*

**ஆரியகாசம்** āriya kāšam, பெ. (n.) 1. வெள்ளலரி; Indian oleander. 2. வெள்ளல்லி; white Indian water -lily.

*[ஆர் = வெண்மை, ஆர் → ஆரி → ஆரிய + காசம்.]*

**ஆரியகுச்சரி** āriya-kuccari, பெ. (n.) (இசை.) மருத யாழ்த்திற வகை (பிங்.); (Mus.) secondary melody-type of the agricultural tracts.

*[அரிய → ஆரிய + குச்சரி.]*

**ஆரியச்சி** āriyacci, பெ. (n.) **ஆரியத்தி** பார்க்க; see **ariyatti.**

*[ஆரியன் (ஆ.பா.) → ஆரியத்தி → ஆரியச்சி (பெ.பா.).]*

**ஆரியத்தி** āriyatti, பெ. (n.) ஆரியப்பெண்; woman of Ārya race.

*[ஆரியன் → ஆரியத்தி.]*

**ஆரியத்திரிவு** āriya-t-tirivu, பெ. (n.) (இலக்.) தமிழில் திரிந்து வழங்கும் வடசொல் (தற்பவம்); (gram.) loan-words from Sanskrit occurring in Tamil with altered forms, (உரி. நி.).

*[ஆரியம் + திரிவு. ஆரியம் = வடமொழி.]*

**ஆரியநாடு** āriya-ṇāḍu, பெ. (n.) 1. தண்ட காரணி யத்தை உள்ளடக்கிய ஒரு நாடு; a region including Daṇḍākāraṇya. (பதிற்றுப். 6. பதி. உரை). 2. இமயத்துக்கும் விந்தமலைக்கும் இடையில் ஆரியர்கள் வாழ்ந்திருந்த நாட்டுப் பகுதி; tract of country in India lying between the Himalayas and the Vindhya mountains, the so called sacred land of the Āryas.

*[ஆரியர் + நாடு.]*

**ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன்** āriya-p-padai-kadanda-Neduñceliyan, பெ. (n.) கடைக்கழகக் காலத்தில் ஆரியப்படைகளை வென்றவனும், நன்னெறி பிறழாதவனும், கோவலனை ஆராயாது கொல்வித் ததால் தன்னுயிர் நீத்து அரசு கட்டிலிற் றுஞ்சிய பாண்டியன் எனப் பெயர் பெற்றவனும், சிலப் பதிகாரக் காப்பியக் கதை நிகழ்ந்த போது வாழ்ந் தவனுமான புகழ்பெற்ற பாண்டிய மன்னன்; legendary Pāṇḍiyan King (of Sangam age) who conquered Āryan army and well known for his justice and good administration, but fell dead from the throne hearing that he had committed a blunder in sentencing to death, Kōvalan, hero of the Tamil epic Silappadigāram.

*[ஆரியர் + படை + கடந்த + நெடுஞ்செழியன். ஆரியர் = வடவர். படை கடத்தல் = வென்று நிற்றல்.]*

**ஆரியப்பப்புலவர்** āriyappa-p-pulavar, பெ. (n.) திருக் குடந்தையில் (கும்பகோணம்) பிறந்தவரும், பாக வதத்தை 4970 விருத்தப் பாக்களால் பாடியவரும் ஆன தமிழ்ப்புலவர்; Tamil poet born in Tirukkudandai (Kumbakonam,) said to have composed 4970 poems of Bāgavadam, in **viruttappā** metre. (அபி. சிந்.).

*[ஆரியன் + அப்பன் + புலவர்.]*

**ஆரியப்பாவை** āriya-p-pāvai, பெ. (n.) பாவைக்கூத்து வகை; a kind of puppet show (W.).

*[அரு → ஆர் → ஆரிய (அரிய) + பாவை. பாவை = மரப்பதுமை அல்லது தோற்பதுமைகளைக் கூத்தாட வைக்கும் கலை.]*

ஆரியப்பாவை என்னும் பாவைக்கூத்தும் ஆரியக்கூத்து என்றாற் போல், அரிய பாவைக்கூத்து என்றே பொருள் படுதலானும், பாவைக்கூத்து இன்றும் பொம்மலாட்டம் எனப் பொதுமக்களிடை நின்று நிலவுதலானும், வடவாரியப் பண் பாட்டுக் கூறுகள் எதுவும் எள்ளளவும் காணப்படாமையானும் ஆரிய என்னும் சொல் அருமை குறித்ததே.

**ஆரியப்பூமாலை** āriya-p-pū-mālai, பெ. (n.) 1. காத்தவ ராயன் மனைவியின் பெயர்; gay, young, unruly wife of Kāttavarāyan. 2. அடங்காப்பிடாரி. காத்தவராயன் மனைவி போன்ற இயல்புள்ளவள்; audacious, insubordinate woman, any woman like the wife of Kāttavarāyan.

*[ஒருகா. ஆரிய = அரிய, சிறந்த. ஆரிய + பூமாலை.]*

**ஆரியப்பேடி** āriya-p-pēdi, பெ. (n.) ஆரியக் கூத்தரிற் பேடி (மணிமே.); a hermaphrodite among rope-dancers.

*[அரு → ஆர் → ஆரிய + பேடி.]*

**ஆரியப்படலம்** āriya-p-padalam, பெ. (n.) முதனூலாற் பெயர் பெற்ற ஒரு பழைய நூல்; an ancient treatise named after its original work (நன். 48, மயிலை).

*[ஆரிய + படலம்.]*

**ஆரியம்**[1] āriyam, பெ. (n.) 1. அழகு; beauty. 2. நல்லது; good thing. 3. நற்குலமுடையது (த.சொ.அக.); animate or inanimate thing of blameless origin. 4. வழிபடப்படுவது; that which is venerated and worshipped.

*[ஆர் → ஆரியம். ஆர்தல் = நிறைதல். ஆரியம் = சால்வு, நிறைவுடையது, நல்லது, போற்றத்தக்கது.]*

**ஆரியம்**[2] āriyam, பெ. (n.) 1. செல்வம்; wealth, treasure. 2. தேட்டம், தேடிய பொருள்; earning.

*[ஆர் → ஆரியம். ஆரியம் = நிறைவுடைய செல்வம், தேடி நிறைவு பெற்ற செல்வம்.]*

**ஆரியம்**[3] āriyam, பெ. (n.) பொன்; gold. (சா.அக.).

*[ஆர் → ஆரியம். ஆரியம் = நிறைதல், அழகாதல், அழகுள்ள பொன்.]*

**ஆரியம்**[4] āriyam, பெ. (n.) மேன்மை, சிறப்பு, உயர்வு; excellence, elegance, that which is superior. "ஆரிய விடைதன் மாண்டவழகினைக் காட்ட" (திருவிளை. மாயப்,21).

*[அரு → ஆர் → ஆரியம். ஆரியம் = அருமையுடையது, சிறப்புடையது, உயர்வுடையது.]*

**ஆரியம்**[5] āriyam, பெ. (n.) கேழ்வரகு (தரும.); cereal, ragi, cleusive coracana (G.Sa.D.i,217). (செ.அக.).

*[ஆரு → ஆரி → ஆரியம். ஆரியம் = அருகிச் சிறுத்தது, வடிவில் சிறுத்த தவசம் கேழ்வரகு.]*

வடிவில் சிறுத்த தவசங்களுள் 'அரிசி' என்னுஞ் சொல்லுக்கும், வித்தினைக் குறிக்கும் அரிசி, அரி என்னுஞ் சொற்களுக்கும் 'அரு' என்பதே வேராதல் காண்க. இனி, அர். → ஆர். → ஆரியம் = சிவப்புக் கேழ்வரகைக் குறித்த தெனின், அதனைக் கேப்பை என்றும், சிவப்பு ஆரியம் என்றும், மக்கள் பிரித்தே வழங்குதலானும், ஏனைத் திரவிடமொழிகளிலும் 'ஆரியம்', சிவப்புக்கேழ்வரகைத் தனித்துக் காட்டும் வழக்கு இருந்ததற்கான அடையாளம் தெளிவாக உறுதிப்படாமை யானும், முன்னையதே ஏற்புடையதாகத் தெரிகிறது.

**ஆரியம்**[6] āriyam, பெ. (n.) 1. இமயத்திற்கும் விந்தத் திற்கும் இடைப்பட்ட நாடு; country from eastern to the western sea and bounded on the north and south by the Himalaya and Vindhya mountains respectively. "ஆரியவாசிவாணிகர் போலவே" (திருவாத.குதிரை. 2). 2. ஆரிய நாட்டில் குடியேறிய வடவாரிய வேத

நெறியாளாரின் தாய்மொழியாகிய வடமொழி; Sanskrit language of the Āryans. "ஆரியநூன் முழுதுணர்ந்தீர்" (சேதுபு.பிரமகத்தி.3).

**Skt.** Ārya, arya.

*[அரு → அரி → அரியம் → ஆரியம்.]*

*[ஆரியம் = அருமை, பெருமை, சிறப்பு. அப் பண்புகளின் இருப்பிடமாகிய நாடு அல்லது மொழி.]*

அரியநாயகம், அரியமுத்து , அரியநாதன் என்று இன்றும் தமிழ் மக்கள் பெயரிட்டுக் கொள்வதைக் காணலாம். அரியநாடு என்பதே ஆரியநாடு என வடநாட்டிலும், அருவாநாடு எனத் தமிழகத்தின் வடவெல்லையிலும் வழக்கூன்றியது : வடமொழியில் ஆரியம் என்னும் சொல்லும் அரிய (arya –ārya) என்னும் மூலத்தினின்றே திரிந்துள்ளது. கடற்கோளும் வற்கடமும் (மழை பெய்யாமையால் தோன்றும் வறுமைநிலை, பஞ்சம்) தோன்ற இடமின்றிக் கங்கை போன்ற வற்றாத ஆறுகளோடும் வளமான நாடு, அருவா நாடு, அரிய நாடு என்று பண்டைக் காலத்துச் சிந்துவெளித் தமிழராலும் தென்னகத் தமிழர்களாலும் சுட்டிச் சிறப்பிக்கப்பட்டு நின்று நிலைத்த பெயர்கொண்டு, வேதநெறி யொழுகும் பார்ப்பனர் வந்து பெருமளவில் குடியேற்றங்களை அமைத்த பின்னும் அதே அரிய நாடு அல்லது ஆரியநாடு (ஆரியாவர்த்தம்) என்றே அழைக்கப்பட்டது. அப்பொழுது தென்னகம் அவர்களால் பரதகேசம் கடலால் (பரவை) சூழப்பட்ட தீவக்குறை (தீபகற்பம்) என்று அழைக்கப்பட்டது. எனவே, வட மொழியான சமற்கிருதமும், அம்மொழி அல்லது அதன் முந்து மொழியான வேத மொழியும் பேசிய பார்ப்பனர் இனமும் தாம் குடியேறிய நிலப் பெயரால் 'ஆரியம்' எனக் குறியீடு பெற்றன.

**ஆரியம்** [7] āriyam, பெ. (n.) 1. ஒருசிலரால் இந்தைரோப்பிய மொழிக்குடும்பங்களனைத்தையும் குறிப்பிடவும், ஏனையோரால் இந்திய ஈரானிய மொழிக் குடும்பங்களை மட்டும் குறிப்பிடவும் பயன்படும் சொல்லாட்சி; applied by some to family of languages (also called Indo-European, or Indo-Germanic) that includes Sanskrit, Iranian, Greek, Latin, Celtic, Germanic, Slavonic, with their modern representatives, by others only to the Indo–Iranian portion of these (C.O.D.).

**Skt.** ārya, arya

**E.**Aryan, **L.** Arianus of Aria **GK.** Areia (eastern persia)

*[அரு → அரியம் → ஆரியம்.]*

இந்தைரோப்பிய மொழிகளை நாம் ஆரியம் எனப் பெயரிட்டழைப்பினும் மேனாட்டார் அதனை ஏற்காது இந்தைரோப்பிய மொழிகள் என்று தாம் குறிப்பிட்ட பெயராலேயே அழைக்கின்றனர். வடமொழியாகிய சமற்கிருதத்துக்கும் அதனொடு நெருங்கிய தொடர்புடைய ஈரானிய மொழிகளுக்கு மட்டும் ஆரியம் என்னும் குறியீடு பொருந்துவதாக அவர்கள் நினைக்கின்றனர். Aryan > Skt. **ārya** noble (in earlier use a national name comprising worshippers of the gods of the Brahmans; earlier **Arian** is f. L. **A rianus** or Aria (F.GK.**Areia** eastern persia (C.O.D.). எனத் தெளிவாகக் கூறப்படுதலால் தாம் குடியேறிய வடஇந்திய நிலப் பெயராலேயே ஆரியர் எனப் பெயர்பெற்றனர் என்பதும், அவர்கள் மொழியும் ஆரியம் எனப்பட்டது என்பதும் வெள்ளிடைமலை. அதற்கு அரிய, அரியன், ஆரியன் → ஆரியம் என்னும் சொற்கள் உலகின் பல்வேறு மொழிகளில் பொருள் தந்து நிற்கும் சூழலையுணரப் பின்வரும் சான்றுகள் உதவும்.

**Malay**. arwah – soul. **Pali,** aria, noble, distinguished; noble man, one who has attained higher knowledge.aru – old wound, sore. arukaya – heap of sores. aruna – dawn, reddish colour , redness.

**Chinese**. rang – fertile soil, rich soil. roo – rich, plentiful. ren – human being, man, person. rēn – edge of a knife, sword. rui – sharp, acute, recognise, know, identify rē – sun.

**E.** Ariyan – pertaining to Arius or to his doctrines one who adheres to the doctrines of Arius, who held Christ to be a created, being inferior to God the Father in nature and dignity, though the first and noblest of all, created beings and also that the Holy spirit is not God; but created by the Holy spirit is not God; but created by the power of the son. Arius who was a priest of Alexandria, promulgated his doctrines in the early part of the fourth century. They are authoritatively condemned by the Council of Nice in 325 (Imperial Dictionary)

**E.** Aria – a song, an air, tune. **It.** aria, from **L.** aer, the air. **Russ.** Arian – respectable person. **GK.** Aryos – lazy, idle **Sinh.** Ariya – one of the highest orders of the Buddhist ascetic. Arya – term of high respect or veneration; name of Buddha, but particulary applied to the priests of Buddha.

**Persn.** arwah – soul. arghawani – red. arbāb – lords, masters, possessors. arab – being skilled arish – clever.

**Guj.** ārgva – straight forwardness, flattery, pressure with flattering words.

**Pkt.** ariha – deserve, be deserving of worship, worthy, fit. arihanta – one worthy of final liberation, a Tirthankara.

**ஆரியம்** [8] āriyam, பெ. (n.) ஆரியமொழிக் குடும்பத்தினரின் வழிவழிவந்த இயல்பு; hereditary qualities of the people of Aryn family of language. இவை இவை ஆரியம் எனக் காண்பது எளிது (உ.வ.).

*[ஆரியர் → ஆரியம்.]*

**ஆரியமம்** āriyamam, பெ. (n.) பகலில் வரும் பதினான்காம் முழுத்தம் (முகூர்த்தம்) (த.சொ.அக.);

*[அரியமம் → ஆரியமம்.]*

**ஆரியமாது** āriya - mādu, பெ. (n.) நன்னாரி; Indian sarasa parilla. (சா.அக.).

*[அரிய → ஆரிய + மாது.]*

**ஆரியமொழி** āriya-moḻi, பெ. (n.) வடமொழி, சமற்கிருதம்; Sanskrit.

*[ஆரியம் + மொழி.]*

**ஆரியர்** [1] āriyar, பெ. (n.) 1. அறிஞர்; learned people. the elite. "ஆரியரு மாரியரை யல்லாரைக் குலப் பழுது மறைவரேயோ" (சிவதரு.சிறப்.6). 2. ஆசிரியர்; teacher. 3. செயலாளர்கள்; secretaries. "முறைமுறை வணங்கி நின்ற வாரியர் முகத்தை நோக்கி" (திருவாத.மண்சுமந்த.17). 4. குரவர், குருமார்; preceptors, spiritual teachers. 5. புலவர்; poets . 6. மருத்துவர்; ஆயுள்வேதியர்; physicians.

*[அரு → ஆர் → ஆரியர்= மேலோர், சிறந்தோர்.]*

ஆரியன் [1] பார்க்க; see āriyan[1].

**ஆரியர்**[2] āriyar, பெ. (n.) 1. வடநாட்டிலிருந்து பரத கண்டத்தில் வந்து சரசுவதி ஆற்றுப்படுகையில் வாழ்ந்தவர்கள் (அபி.சிந்.); those who came from the north and finally settled on the banks of the river Sarasvathi. 2.வடக்கிலிருந்து வந்து இராமேசுவரத்திற் குடியேறிய பார்ப்பனப் பிரிவினர்; sect of Brahmins from the North, living at Rameswaram (I.M.P.Rd.108).

*[அரு → அரி → ஆரி → ஆரியர்.]*

**ஆரியர்**[3] āriyar, பெ. (n.) பழனிப் பகுதியில் வாழும் வேளாளப்பிரிவினர்; a sect of Vēlālars in and around the Palani hills. (அ. அக).

*[அரு → அரி → ஆரி → ஆரியர்.]*

**ஆரியவரசன்யாழ்பிரமதத்தன்** āriyavarasan-yāḻ-piramatattan, பெ. (n.) பத்துப்பாட்டுளொன்றாகிய குறிஞ்சிப் பாட்டைத் தமிழின் சிறப்பை அறிவுறுத்துதற்குக் கபிலர் பாடியதை உணர்ந்து தமிழ் பயின்று சங்கத்தாரோடு பாடும் திறமையடைந்து குறுந்தொகை 184 ஆம் பாடல் இயற்றிய புலவர்; a poet of Sangam age who was facinated towards Tamil by Kabilar's Kurinji pāttu and he authored 184th song of 'Kuruntogai'.

*[ஆரிய+அரசன் + யாழ் + பிரமதத்தன்.]*

**ஆரியவராடி** āriya - varādi, பெ. (n.) ஒரு பண்வகை, மூவகை வராடி வகைகளுள் ஒன்று; a variety of varadi, a melody type, a class of musical mode.

*[ஆரி + வராடி. வராளி → வராடி.]*

**ஆரியவேளர்கொல்லி** āriya-vēlar-kolli, பெ. (n.) செவ்வழி யாழ்த் திற வகையுளொன்று (பிங்.); (Mus.) a secondary melody–type of the pasture tract, a class of musical mode or tunes, sub–division of Kolli (W).

*[ஆரியவேளர் + கொல்லி. கொல்லி = கொல்லிப்பண் வகை.]*

**ஆரியவேளாகொல்லி** āriya-vēlā- kolli, பெ. (n.) **ஆரிய வேளர் கொல்லி** பார்க்க; see āriyavēlar - kolli,

**ஆரிய வேளாளர்** āriya-vēlālar, பெ. (n.) **ஆரியர்**[3] பார்க்க; see āriyar[3].

*[ஒருகா. அரையர் →ஆரியர் + வேளாளர். இருங்கோவேள் மரபினர் ஆண்ட பகுதி சிற்றரையம் பேரரையம் எனப்பட்டமை காண்க.]*

**ஆரியன்** [1] āriyan, பெ. (n.) 1. அறிவுடையவன்; learned man. 2.குரவன், குரு; priest. "பாசமாம் பற்றறுத்துப் பாரிக்கும் ஆரியனே" (திருவாச.1,64). 3. புலவன்; poet. 4.மேலோன்; superior. 5.பெரியோன்; worthy respectable man. "ஆரியனாமாசான்வந்து"(சி.சி.8,28). 6. கழைக்கூத்தாடி; juggler. 7.மருத்துவன்; physician. 8.ஆசிரியன்; teacher. "ஆரியனாயினும் அப்பொழு தொழிக"(இலக்.கொத்.8). 9. ஐயனார் (சூடா.); god Aiyanār. 10. தலைவன்; chief, leader. 11. சிவன்; Śiva. "ஆரியன் குலாலனாய் நின்று" (சி.சி.க.18.). 12. நண்பன்; friend. 13. புத்தன்; Buddha. 14. கதிரவன்; sun. 15. வியாழன்; Jupitor.

**ம., க., தெ., து.** ஆர்ய

*[அரு → அரி → அரியன் →ஆரியன் .]*

**Guji., Nep., arya. Pali.** ariya (noble) the other pali forms are ariya and ayya (vedic arya) of uncertain Etymology. The early Buddhists had no such ideas as we cover with the words. Buddhist and Indian Ariya do not exactly mean either. But it often comes very near to what they would have considered the best in each (Pali Dictionary). எனப் பாலி அகரமுதலியில் கூறப்பட்ட செய்தி, ஆரியன் என்னும் சொல் அரியன் என்னும் தமிழ் வேரிலிருந்தே பிறந்தது என்பதற்குச் சான்றாதல் காண்க. ஆரியன் என்னும் சொற்கு 'உழவன்' என்று பொருள் கொண்டு ar என்னும் இலத்தீன் சொல்லை மூலமாகக் காட்டினார் மாக்சுமுல்லர். உழவுத் தொழிலில் முதன்முதற் சிறந்தவர் தமிழராதலானும், ar என்னும் இலத்தீன் சொல்லும் ear என்னும் ஆங்கில சாக்சனியச் சொல்லும், 'ஏர்'

என்னும் தமிழ்ச் சொல்லின் திரிபாதலானும், வேத ஆரியர் ஆடுமாடுமேய்க்கும் முல்லை நாகரிக நிலையிலிருந்தமையானும், "ஆரியர் மிலேச்சர்" என்று திவாகரம் கூறுதலானும் உயர்நாகரிகத்திற்கு அடிப்படையான உழவுத்தொழிலுக்கு அநாகரிகர் (மிலேச்சர்) என்னும் பெயர் பொருந்தாமையானும், கி.பி. 2–ஆம் நூற் றாண்டில் இயற்றப்பட்ட மனுதரும சாத்திரத்திலும், "சிலர் பயிரிடுதலை நல்ல தொழிலென்று நினைக்கிறார்கள். அந்தப் பிழைப்புப் பெரியோர்களால் நிந்திக்கப்பட்டது. ஏனெனில், இரும்பை முகத்திலேயுடைய கலப்பையும்மண்வெட்டியும்பூமியையும்பூமியிலுண்டான பலப்பல ஜெந்துக்களையும் வெட்டு கிறதல்லவா?" (இராமா நுஜாசாரியர் மொழிபெயர்ப்பு.) — என்று கூறியிருத்தலானும், ஏரைக் குறிக்குஞ் சொல் இந்திய ஆரியத்திலின்மையானும், ஆரியன் என்னும் பெயர் முதன் முதல் வேத ஆரியனுக்கே இந்தியாவில் ஏற்பட்டதாகத் தெரிதலானும், அவர் கூற்றுப் பொருந்தாது.

வடநாட்டார் ஆரியன் என்னும் பெயரைத் தமக்கு இட்டுக் கொண்டனர். மானியர் வில்லியம் சமற்கிருத — ஆங்கில அகரமுதலியில் ஆரிய (ஆர்ய) என்னுஞ் சொற்கு "a respectable or honourable or faithful man" என்று பொருள் கூறி, 'அர்ய' என்பது மூலமாகக் காட்டப்பட்டுள்ளது. 'அர்ய' என்னுஞ் சொற்கு "kind, favourable, R.V; attached to, true, devoted, dear, R.V. excellent, (L)" என்று பொருளும் ஆட்சி நூலுங் குறிக்கப் பட்டுள்ளன. 'அர்ய' என்பதற்கு 'ரு' என்பதை வேராகக் காட்டுவது எத்துணையும் பொருந்தாது.

அருமை என்னும் தமிழ்ச் சொற்கு எளிதாய்க் கிடையாமை, பெருமை, மேன்மை என்பவற்றொடு பேரன்பிற்குரிமை (endearment) என்பதும் பொருளாயிருத்தல் கவனிக்கத்தக்கது. இச்சொல்லின் முதனிலையான 'அரு' என்பது 'ஆரி' என்றுந் திரியும்.

ஆரி = 1. அருமை. "ஆரிப்படுகர்" (மலை படு. 161).

2. மேன்மை. "ஆரியாகவஞ் சாந்தந் தளித்த பின்" (*சீவக*.129). 3. அழகு (சூடா.).

'ஆரி' என்னுஞ் சொல் 'அன்' ஈறு பெற்று ஆரியன் (மேலோன், உயர்ந்தோன்) என்றாவது, மிக எளிதும் இயல்புமாகும். இச்சொல் ஆரியமொழியில் 'ஆர்ய' என்ற வடிவே ஏற்கும்.

ஆயினும் சிந்து வெளியிலிருந்த ஆரியனுக்குத் தென்னாட்டுத் தமிழ்ச் சொல்லால் எங்ஙனம் பெயர் அமைந் திருக்குமென்று பலர் ஐயுறலாம். ஆரியர் வருகைக்கு முன்பும் வட இந்தியாவில் திரவிடரே பெரும்பாலராய்ப் பரவியிருந்தனர் என்பதையும், வேதப் பெயரும் வேதப் பிரிவின் பெயரும் தென் சொற்றிரிபே என்பதையும், இந்தியாவிற்கு வருமுன்னரே வேத ஆரியரின் முன்னோர் மொழியில் தமிழ்ச் சொற்கள் கலந்திருந்தன என்பதையும், வேதகாலத்திலேயே ஆரியர்க்குத் தமிழரொடு தொடர்பு ஏற்பட்டு விட்டது என்பதையும் உணர்வார்க்கு, இதில் எள்ளளவும் ஐயத்திற்கிடமில்லை யென்க.

இராமன் சிறந்த அரசனாகவும் திருமாலின் அல்லது இறைவனின் தோற்றரவாகவும் கருதப்பெற்றதனாலேயே அவனை ஆரியன் என்று குறித்தனர் புலவர். அவன் ஆரிய இனத்தினன் என்னுங் கருத்தினாலன்று. "அஞ்சிலே யொன்றாறாக ஆரியற் காகவேகி" — தனியன். "ஆரியன் உரைப்பதானான் அனைவரும் அதனைக் கேட்டார்" (கம்பரா. விபிடண. 106.).

இராமன் கதிரவக்குல அரசனாதலின் சோழர்குடிக் கிளையாளனே. ஒரு மொழிக்கு, அதைப் பேசும் மக்களால், அல்லது அது வழங்கும் இடத்தினால், அல்லது அது எழுதப் பெற்ற நூலினால், அல்லது அதன் எழுத்து வடிவினால், அல்லது அதன் ஒலிச்சிறப்பியல்பால் பெயர் ஏற்படும். இவற்றுள் முதல் வகையால் ஆரியன் மொழி ஆரியும் எனப் பெற்றது. (வ.மொ.வ. 22–25).

**ஆரியன்**[2] āriyaṉ, பெ. (n.) 1. ஆரிய வகுப்பினன்; one who is an Āryaṉ by race. "ஆரியன் கண்டாய் தமிழன் கண்டாய்" (தேவா. 844,5). 2. ஆரிய நாட்டில் வாழ்பவன்; inhabitant of Āryavarta. "வடவாரியர் படைகடந்து" (சிலப்.23, கட்டுரை).

**ஆரியன்**[3] āriyaṉ, பெ. (n.) 1. இழிந்தவன் (பிங்.); barbarian, foreigner.

*[ஒருகா. அல் + ஆரியன் = அல்லாரியன் → அலாரியன் → அனாரியன் → ஆரியன்.]*

**ஆரியன்**[4] āriyaṉ, பெ. (n.) **அதிவிடயம்** பார்க்க; see **adi-viḍayam.**

**ஆரியாங்கனை** āriyāṅgaṉai, பெ. (n.) சமணரிடை இல்லறத்தில் கணவனோடு வாழும்போதே துறவு பூண்ட தவப்பெண்; Jaina woman who renounces and enters the order of ascetics even as she is housewife. "கணவனிற் றுறவின் மன்னும் ஆரியாங் கனைகள்" (திருவிளை. சமணரை, 17.).

*[ஆரிதம் = துறவு. ஆரிதம் → ஆரியம் + அங்கனை.]*

**ஆரியாவர்த்தம்** āriyā–varttam, பெ. (n.) **ஆரியநாடு** பார்க்க; see **āriyā–nāḍu.**

*[ஆரியம் + வர்த்தம்.]*

**ஆரியை**[1] āriyai, பெ. (n.) 1. கொற்றவை; Durga. 2. உமையவள்; Pārvadi. "ஆரியை தவஞ்செய் பதி யாதியன" (கந்தபு. அடிமுடி. 15). 3. காளி; Kāḷi.

*[அரு → ஆரி → ஆரி → ஆரியை.]*

**ஆரியை**[2] āriyai, பெ. (n.) 1. ஆரியன் என்பதன் பெண்பால்; feminine of Āriyaṉ. 2. பதுமையின் தோழி (பெருங்.); lady attendent of Padumai.

*[ஆரியன் → ஆரியை.]*

**ஆரிர—த்தல்** ārira–, 3. செ.குன்றாவி (v.t.) சோழனின் ஆத்தி மாலையைத் தருமாறு வேண்டிக் கொள்ளுதல். ஆர் இரத்தல்; to beg the attti garland from the Chōla king.

*[ஆர் + இரத்தல். ஆர் = ஆத்தி.]*

"பாவைமார் ஆரிக்கும் பாடலே பாடல்" (சிலப்.). என உ.வே.சா. பதிப்பில் காணப்படுவது தவறாகும்.

**ஆரிராரோ** ārirārō, இடை. (conj.) தாலாட்டில் வரும் அசைச் சொல்; an expletive in a lullaby.

*[ஆரி+ஆரி+அரோ.=ஆரிராரோ–ஆரிராரோ= தாலாட்டு ஒலிக்குறிப்பு.]*

**ஆரிழை** āriḻai, பெ. (n.) ஆராய்ந்த அணிகலன் களை யுடைய பெண்; woman adorned with ornaments (சேரநா.).

ம. ஆரிழ.

ஆயிழை பார்க்க; see **āyiḻai**

*[ஆயிழை → ஆரிழை.]*

**ஆரின்கண்ணியன்** āriṉ-kaṇṇiyaṉ, பெ. (n.) சோழன் (பிங்.); Chōla King, so styled because he wore the royal bauhimia flower.

*[ஆர் + இன் + கண்ணி + அன்.]*

**ஆரின்மாலையன்** āriṉ-mālaiyaṉ, பெ. (n.) **ஆரின்கண்ணியன்** பார்க்க; see **āriṉ-kaṇṇiyaṉ**

*[ஆர் + இன் + மாலையன்.]*

**ஆரினி** āriṉi, பெ. (n.) சுடுகாடு; cremation ground. (சா.அக.).

*[ஆர் → ஆரி = தீ, எரி. ஆர் → ஆரினி.]*

**ஆரீதம்** ārīdam, பெ. (n.) கரிக்குருவி; blackbird. 'கறியிலை தீரும் இருளில் ஆரீதம் புக்கு' (இரகு. திக். 119). 2. பச்சைப்புறா; green pigeon.

*[ஆரி → ஆரீடம் → ஆரீதம்]*

**ஆரீரம்** ārīram, பெ. (n.) சிற்றீரம் (சா.அக.). a little wet

*[அரு + ஈரம் = ஆரீரம். அரு = சிறு.]*

**ஆரு**[1] āru, பெ. (n.) 1. நண்டு; crab. 2. பன்றி; pig, domestic hog. 3. குடம்; pot.

*[அள் → ஆள் → ஆர் → ஆரு = செறிதல்.].*

**ஆரு**[2] āru, பெ. (n.) ஒருமரம் (இ.வ.); tree. (த.சொ.அக.).

*[ஆர் → ஆரு.]*

**ஆரு**[3] āru, பெ. (n.) யார் என்பதன் மரூஉ; corrupt form of yar (who) ஆரு வந்தாங்க? (கொ.வ.).

*[யார் → யாரு → ஆரு.]*

**ஆருகதம்**[1] ārugadam, பெ. (n.) நாவல்மரம்; common black plum, Jamboline. (சா. அக)

*[ஆரு[2] → ஆருகதம்.]*

**ஆருகதம்**[2] ārugadam, பெ. (n.) மூவகை இறை மறுப்பு மதங்களுள் ஒன்றான அருகசமயம்; religion of the Jains.

**அருகன்** பார்க்க; see arugaṉ

*[அருகன் → அருகதம் → ஆருகதம்.]*

**ஆருகதன்** ārugadaṉ, பெ. (n.) சமணன்; Jain. (குறள். 256, உரை). Skt. ārhata.

*[அருகன் → அருகதம் → அருகதன் → ஆருகதன்.]*

**ஆருங்காணாசலநதி** āruṅ-kāṇāśalanadi, பெ. (n.) கருப்பத்திலுண்டாகும் பனிக்குடத்து நீர்; liquid in which the foetus floats, amniotic fluid **Liguor amni.** (சா.அக.).

*[யாரும் → ஆரும் + காணாத + சலம் + நதி.]*

**ஆருணிநாடு** āruṇi-nāḍu, பெ. (n.) பஞ்சாபு, அரியானா மாநிலத்தின் பழைய பெயர்; old name Punjab and Hariyāṉā.

*[அரு → அருணி → ஆருணி. ஆருணி → அரிய, சிறந்த, உயர்ந்த ஆரிய நாடு எனினும் ஆருணி நாடெனினும் ஒக்கும்.]*

**ஆருணி யரசன்** āruṇi–y–araśaṉ–, பெ. (n.) உதயணனால் கொல்லப்பட்டவனும் பாஞ்சால தேசத்தரசனுமாகிய பாஞ்சாலராயன் (பெருங்.); King of pañcāla country, now known as Punjab and Hariyāṉā. (A".ஓ.)

*[ஆருணி + அரசன்.]*

**ஆருணி** நாடு பார்க்க; see **āruṇi- nāḍu.**

**ஆருத்திரை** āruttirai, பெ. (n.) **திருவாதிரை** பார்க்க; see Tiruvādirai.

**ஆருந்தின்னாமூலி** āruntiṉṉā-műli, பெ. (n.) பித்தம்; bile.

*[யாரும் → ஆரும் + தின்னா + மூலி.]*

**ஆருயிர்** āruyir, பெ. (n.) 1. அருமையான உயிர்; precious life. 2. அன்புக்குரியவர்; beloved, darling.

ம. ஆருயிர்

*[அருமை + உயிர்.]*

**ஆருயிர் மருந்து** āruyir - marundu, பெ. (n.) 1. சோறு, உணவு; food, so called because it sustains life. "ஆங்கதிற் பெய்த வாருயிர் மருந்து" (மணிமே. 11,48). 2. உயிர்பிழைப்பிக்கும் மருந்து; any medicine that restores life. 3. காயகற்பம்; a medicine taken by siddhas for prolonging life. (சா.அக.).

*[அருமை + உயிர் + மருந்து.]*

**ஆருவம்** āruvam, பெ. (n.) 1. நீர்; water. 2. சாறு; juice from the leaves of a plant.

*[வார் → ஆர் → ஆருவம்.]*

*ஒ.நோ. வார் → வாரணம், நீர், நீர் நிறைந்த கடல்.*

**ஆருழலைப்படுதல்** ār-uḻalai-p-paḍu-, 20 செ.கு.வி. (v.i.) 1. நீர் வேட்கையால் வருந்துதல்; be tormented with thirst. 2. கதிரவனின் வெப்பத்தால் தாக்கப் படுதல்; be affected by sun-stroke, be scorched by heat.

*[ஆர் + உழலை + படு.]*

**ஆரூடம்** arūḍam, பெ. (n.) 1. உதயம், உதித்தல்; rising. 2. ஏறுதல்; arisen or ascended. 3. குறி கேட்போரு டைய ஓரை நிலை (ராசிநிலை-உச்சம்) கொண்டு கூறும் கணியம் (சோதிடம்); hoary astrology, the point with reference to the Zodiac, where a person stands to consult the astrologer or the sign designated by that mentioned at the time - one of the three parts in divination made by the astrologers. (W.). 4. முன்னறிவித்தல்; foretelling.

**மறுவ.** குறி, விரிச்சி, குறிப்பு.

*[ஏர் + இடம் = ஏரிடம் - ஆரிடம் → ஆருடம் → ஆரூடம்.]*

**Skt.** ārudha.

வடமொழியில் ஆரூடம் கூட்டுச்சொல்லாகவன்றித் தனிச் சொல்லாக வாராமையின் இது தமிழ்ச் சொல்லே.

**ஆரூடம் பார்-த்தல்** ārūḍam-pār-, 4 செ.கு.வி. (v.i.) கணி கூறுதல்; foretell the future.

**ஆரூடன்** ārūḍaṉ, பெ. (n.) 1. ஏறினவன்; rider, one who has mounted or climbed up. "இடபாரூடன்" (செய்.வ.). 2. மெய்யுணர்வில் தேர்ந்தவன்; one who is liberated from the trammels of wordly existence even during life. " உலகநிலை தோன்றாமல் தன்றிகழ் ஞானத்தா லுண்மை முத்தனா மவனே யாரூடன்" (வேதா. சூ.15) - (சா.அக.). உயிருடைமையாளன் (சீவன் முத்தன்), அதாவது உலக வாழ்க்கையிலும், உலகப்புலனங் (விஷயம்) களிலும், மாயையிலும், கட்டுப்படாமல் உலகத்தார்க்கு நன்மையே புரிந்து கொண்டு ஆதனாற்றலை (ஆன்மசக்தி) யடைந்த மேலோன். இத்தகைய மெய்யுணர்வு (ஞான) முதிர்ச்சியை யடைந்தவர்கள் உலகப் பற்றுப் பரிவு களினின்று விடுபட்டு, சமயம் வாய்த்தபோது இப்பூதவுடம்பினின்று பிரிந்து முத்திநிலையை யடைவார்கள்; a wiseman who is most indifferent to all concerns of life and hidden in the mood of the thought of ātman. He is always actuated by a cosmic sense to do good to others and so his action is stimulated by the one and only desire of service to others. Persons of this class are types of liberated souls who move freely without any sense of restraint in the career of their lives and when occasion arises, they enter the deep and forsake the flesh and the acquired personality (S.D.).

*[ஒருகா. ஆறு + ஊர்ந்தோன் = ஆறூர்ந்தோன் → ஆரூதன் → ஆரூடன்.]*

ஊர்தியில் இவர்ந்து செல்பவன் என்னும் தெளிவான பொருளில் தோன்றிய இம்மூலச்சொல் வடமொழியில் ஆரூடன் எனத் திரிந்திருப்பதால், கூட்டுச்சொற்களிலன்றி தனிச் சொல்லாகப் பயன்படுத்தப்படுவதில்லை. இஃதொன்றே இது தமிழின் திரிபு என்பதைக் காட்ட வல்லது. ஆரூடன் என்பதனோடு இதற்குத் தொடர்பில்லை.

Skt. ārudha

**ஆரூர்** ārūr, பெ. (n.) திருவாரூர் (தேவா.690,1); Thiruvārur in Thanjavur district.

*[ஒருகா. ஆர் + ஊர். ஆர் → ஆத்தி. ஆரூர் = சோழனுக்குரிய அடையாளப்பூவான ஆத்தி மலிந்த (ஆத்திமரம் நிறைந்த) ஊர்.]*

**ஆரூர்க்கால்** ārūr-k-kāl, பெ. (n.) ஒருவகைக் கருப்பூரம்; a kind of camphor. (சிலப்.14-12, உரை).

**ஆரூர் மன்னன்** ārūr-maṉṉaṉ, பெ. (n.) வன்மீகநாதன் (தமி.மொழி.அக.); Vanmīganādaṉ.

**ஆரூரன்** ārūraṉ, பெ. (n.) நம்பியாரூரன் என்னும் சுந்தரமூர்த்தி நாயனார் (தேவா.); Saiva saint Sundaramurtti-nayanar, so called because he was a resident of Ārur.

*[ஆரூர் + அன்.]*

**ஆரெயிலுழிஞை** ār-eyil-uḻiñai, பெ. (n.) வாள்வீரர் தம்மைப் பணியாதாருடைய உயர்ந்த புரிசை(மதில்)

யின் தன்மையைச் சொல்லும் புறத்துறை (பு.வெ.மா.); theme of minor literature grouped under a purattinai, describing sword-men's statement regarding the inaccessibility of enemy's fort-wall.

*[ஆர் + எயில் + உழிஞை.]*

**ஆரேவதம்** ārēvadam, பெ. (n.) சரக்கொன்றை; Indian laburnum "சம்புமா கமுகு தாழை நற்புன் காரேவதம்" (தைலவதைல. 135,60–61).

*[ஆரே + Skt.vada → த.வதம். = நம்பிக்கை. நோய் நீங்கும் என்னும் நம்பிக்கை விளைத்தலால் வந்த பெயர் (த.சொ.அக்.)].*

**ஆரை**[1] ārai, பெ. (n.) 1. நீராரைக்கீரை; aquatic cryptogamus plant, used for greens. "ஆரையடா சொன்னாயது" (ஔவை தனிப்பா). "ஆரையாம் பள்ளத்து ஊடே வாழினும்" (வெற்றிவேற்கை). 2.புற்பாய்; (பிங்.). mat made of grass or rushes. 3. புளியாரை; sour greens. 4. வல்லாரை; Indian penny wort. "வல்லாரை உணர்ந்தனம் மற்றும் கையாந்த கரையும் நாடுவமே" (ஒருதுறைக் கோவை). 5. செவ்வாரை; four leaved plant of a red colour, found on hills. (w.). 6. வறளாரை; plant on dry soils used for fodder. 7. புல்லாரை அல்லது நெடுநாரை; fragrant cherry nutmeg. 8. வெள்ளாரை; lance-leaved mercury. 9.கடலாரை; a wild species of the Marsilea genus found on the sea-shore. 10. கல்லாரை அல்லது காட்டாரை; rare plant on the slopes of mountains, capable of consolidating mercury.

*[ஆர் → ஆரை. ஆர் =பொருந்து, நெருங்கு ஏற்றதாயிரு.]*

**ஆரை**[2] ārai, பெ. (n.) ஆத்திமரம்; common mountain ebony.

**க., து.** ஆரெ.

*[ஆர் →ஆரை.]*

**ஆரை**[3] ārai, பெ. (n.) 1. வட்டம்; roundness. 2.கோட்டை மதில்; fort wall, surrounding wall.

*[ஆல் → ஆர் → ஆரை.]*

**ஆரை**[4] ārai, பெ. (n.) அச்சுமரம்; axis. "ஆரைச் சாகாட்டாழ்ச்சி" (புறநா. 60).

*[ஆர் → ஆரை.]*

**ஆரை**[5] ārai, பெ. (n.) 1. நாடியெலும்பு; shorter and smaller of the two bones of the fore-arms, radius. 2. ஆரையெலும்பு பார்க்க; see ārai-y-elumbu.

*[ஆர் → ஆரை.]*

**ஆரை**[6] ārai, பெ. (n.) தோல்வெட்டும் உளி (நாநார்த்த.); leather cutting chisel. (செ.அக.).

**ஆரைக்கல்பாறை** ārai-k-kal - pārai, பெ. (n). நாமக்கல் என்னும் ஊரின் பழைய பெயர்; old name of town Namakkal.

*[ஆரை [3] = வட்டம், கோட்டை மதில். ஆரை + கல் + பாறை.]*

**ஆரைக்காலி** ārai-k-kāli, பெ. (n. தாழைக்கோரை, கோரைப்புல்; (சங்.அக) a kind of grass, sedge.

*[ஆரீ → ஆரை + காலி.]*

**ஆரைக்கிளவி** ārai-k-kiḷavi, பெ. (n.) உயர்வுப் பன்மை யீறு; an honorific suffix. "இயற்பெயர்முன்னர் ஆரைக் கிளவி பலர்க்குரி எழுத்தின் வினையொடு முடிமே" (தொல். சொல். இடை–22) (எ.டு) மருதனார், தொல்காப்பியனார்.

*[ஆர் + ஐ + கிளவி – ஆர் என்னும் இடைச் சொல் ஆரைக்கிளவி எனப்பட்டது.]*

**ஆரைக்கீரை** ārai-k-kīrai, பெ. (n.) நீராரை; vegetable green.

*[ஆரை + கீரை.]*

இது குளம், குட்டை, வாய்க்கால் நீரோடைகளின் ஓரங்களில் தண்ணீரிலமிழ்ந்து முளைத்துக் கிடக்கும். இலை நான்கு பிரிவினையுடையது. வட்டமாயும் சிறிதாயுமிருக்கும். கறி சமைத்துண்டால் சற்று இனிப்பாயிருக்கும். இரவில் மூடிக் கொள்ளும் இதன் இலைகளுக்கு நீண்ட காம்புண்டு. பித்தநோய், அதிமூத்திரம் (அரத்தமேகம்) (இரத்தப் பிரமேகம் ) முதலியவற்றைக் குணப்படுத்தும். இதனால் சூதவெண்ணெய் இறுகும், நீற்றும் (பற்பமாக்கும்). புண்ணில் நீரைக் கொல்லும். தண்ணீரைச் சுருக்கி நீர்க்கோளைப் (சலரோகம்) போக்கும். (சா.அக.).

**ஆரைக்குலகம்** ārai-k-kulagam, பெ. (n.) **ஆரைக்குளகம்** பார்க்க; see ārai-k-kuḷagam.

**ஆரைக்குளகம்** ārai-k-kuḷagam, பெ. (n.) வெள்ளவரை; white beans.

*[ஆரை + குளகம். ஆரை = வெள்ளை, குளகம் = இலை, கீரை.]*

**ஆரைச்சேவிதம்** ārai-c-cēvidam, பெ. (n.) வெள்ளை யெள்; white sesamum.

*[ஆரை + சேவிதம்.]*

**ஆரைத் துடுப்பு மீன்** ārai-t-tuḍuppu-mīṉ, பெ. (n.) ஒரு வகைக் கடல் மீன்; kind of sea fish.




*[ஆரை + துடுப்பு + மீன்.]*

**ஆரைப்பற்றி** ārai-p-paṟṟi, பெ. (n.) உடும்பு (கதி.அக.); double tongued lizard, guana.

*[ஆரை + பற்றி.]*

**ஆரையிலை** ārai-y-ilai, பெ. (n.) **ஆரைக்கீரை** பார்க்க; see ārai-k-kīrai.

**ஆரையெலும்பு** ārai-y-elumbu, பெ. (n.) முன்னங்கை யெலும்பு இரண்டினுள் பெருவிரல் பக்கமாயுள்ளது. முன்கைச் சிற்றெலும்பு; bone on the outer or the thumb side of the fore arm, the shorter and smaller of the bones of the fore-arm.

*[ஆரை + எலும்பு.]*

**ஆரோசை** ārōšai, பெ. (n.) (இசை.) ஏற்றிப்பாடும் இசை; அமரோசைக்கு எதிரானது. (Mus.) high pitch, opp. to **amarōšai.** 'ஆரோசை யமரோசைகளினமைத் தார்'' (பெரியபு. ஆனாய.24).

*[ஏர்+ஓசை → ஏரோசை → ஆரோசை. ஆரோசை → skt. arohana. ]*

ஆரோசையை ஆரோகணம் என்றும், அமரோசையை அவரோகணம் என்றும், வடமொழியாளர் திரித்துக் கொண்டனர்.

**ஆல்**[1] āl, 14 செ.கு.வி. (v.i.). ஒலித்தல் ; to sound. 'இருங்குயிலாலுமரோ''. 2. அகலுதல்; to spread, to widen. ஆல்வட்டு, ஆல்வட்டம் (அகன்றதட்டு) (இ.வ.). 3. சுற்றுதல்; to wave round, to rotate. ஆலாத்தி எடுக்க வேண்டும் (உ.வ.). 4. அசைதல், முன்னும் பின்னும் ஊக்குதல்; to move, to rock as a cradle. ஆலாட்டு (ஆராட்டு).

*[அல் → ஆல். அல் = அசைதல், ஒலித்தல். ஆல் = ஒலித்தல், சுற்றுதல், பரவுதல்.]*

**ஆல்**[2] āl, பெ. (n.) 1. நீர்; water. ''ஆலின் மேலால மர்ந்தான்'' (திவ். திருவாய். 9,10,1,ஈடு). 2. வெள்ளம்; flood. (மாற.962, பக்.466). 3. குளிர்ந்த நீர்; cold water.

**ம.** ஆல்; **க.** ஆலிநீர் (குளிர்ந்த நீர்)

*[அல் → ஆல், அல் = அசைதல், ஒலித்தல். ஆல் = ஒலித்தல், ஒலிக்கும் நீர்ப்பெருக்கு.]*

**ஆல்**[3] āl, பெ. (n.) 1. ஆலமரம் (திவ். இயற். 1,59); that species of banyan tree which casts roots from its branches. ''ஆல்போல் தழைத்து அறுகு போல் வேரோடி மூங்கிற் போல் சுற்றம் முசியாமல் வாழ்ந்திருப்பீர்'' (சொல.); May you flourish as a banyan tree, put forth roots and spread as the creeping stems of the arugu grass, and prosper, being encircled by kinsmen as thickly crowed. 2. குறுவால மரம்; a species of tree, Subs errate bamboos (W). Rhombold leaved fig, Ficus gibbosa (tuberculata).

**ம., கோத.** ஆல்; **க.** ஆல், ஆல; **குட., கோண்.** ஆலி; **து.** ஆல; **பர்.** ஏல்

*[அகல் → ஆல். அகற்சட்டியும் ஆலமரமும் அகன்றிருக்கும் இயல்பான் பெயர்பெற்றன.]*

**ஆல்**[4] āl, பெ.(n.) ஆரல்; கார்த்திகை நாண்மீன்; the third naksatra. ''அகலிரு விசும்பினால் போல'' (மலைபடு. 100).

*[ஆரல் → ஆல்.]*

**ஆல்**[5] āl, பெ. (n.) 1. பொன்னாங்கண்ணி; an edible plant. 2. கரிசலாங்கண்ணி; medicinal plant, 3. அழிஞ்சில்; alingl tree, (சா.அக.).

**ஆல்**[6] āl, பெ. (n.) நஞ்சு; poison. ''ஆற்படு களத்தினான்'' (இரகு. மாலை. 41). Skt. ala

*[ஆலம் → ஆல். ஆலம் என்பது 'அம்' கெட்டு நின்றது.]*

**ஆல்**[7] āl, பெ. (n.) பத்து வகைத் துவர்களுள் ஒன்று; being astringent in taste and quality, astringence, as one of the ten.

**ஆல்**[8] āl, பெ. (n.) இடை. (part.) அல்லவென்னும் பொருளில் வரும் இடைச் சொல் (அக.நி.); word meaning no.

*[அல் → ஆல்.]*

**ஆல்**[9] āl, வி.எ. (adv.) ஆமெனல் (சூடா.); a form of affirmation, for yes. This definition though given in Saduragarādi and Nigaṇḍu, is not proved by examples (W.).

**ஆல்**[10] āl, இடை. (Part) வியப்பு, இரக்கம், தேற்றம் இவற்றைக் குறிக்கும் இடைச்சொல்; particle expressive of surprise, pity or certainty.

*[அல் → ஆல். ஆல் = ஒலித்தல், ஓசை தொடர்பாக வியப்பு இரக்கம் முதலிய உணார்ச்சிகளைக் காட்டும் இடைச்சொல்லாகியிருக்கலாம்.]*

**ஆல்**[11] āl, இடை. (part.) மூன்றாம் வேற்றுமையுருபு; chief form of the third case, or instrumental ablative implying cause. agency, instrumentality, by means of, with, by way of, in consequence of (W.) வாளால் வெட்டினான் (உ.வ.).

**ம., பிரா., கோண்.** ஆல்

*[அல் → ஆல். அசைதல், சுற்றுதல், நீளுதல் பொருளில்வரும் ஆல் என்னும் வினையடியின் சார்பாக அவ்வவ் வினைகளுக்குரிய துணைக் கருவிகளைச்சுட்டி, தொழிலுக்குத்துணையாகும் இயல்பான், துணைக் கருவிகளைச் சுட்டிய பொதுப் பெயரே இடைச் சொல்லாகியிருக்கலாம்.*

*ஒ.நோ: உழை - ஒடு - உடன் என்பவை பக்கத்துணைப் பொருளில் முதலில் ஆளப்பட்டுப் பிறகு இடைச் சொல்லானமை தேற்றம்.]*

**ஆல்**[12] āl, இடை. (part.) 1. ஓர் அசைநிலை; poet. expletive affixed to nouns and finite verbs. and also used with அற்று, அன்று, ஆம். "யாதானு நாடாமால் ஊராமால்" (குறள்.397). 2. வினையெச்ச ஈறு; a form of the subjunctive, joined to the gerund or in poetry, to the infinite verb, expressing if. பட. அலெ; **கன்**, அடெ, அரெ, ஒடெ. வந்தால், கேட்டால், இருந்தால் (உ.வ.). 3. வியங்கோள் வினைமுற்று ஈறு ; an optative termination expressing may, let. "இரீஇய தொராஅல்" (தொல்.சொல்.443). 4. எதிர்மறை வியங்கோளீறு ; a negative form of the optative. ஒரால் (செய்.வ.). 5. ஒரு தொழிற் பெயரீறு; verbal noun ending. "அழால்" (அழுகை) (புறநா.46). "உழாலிற் பொலி வண்டிவர் பூந்தொடை"(தணிகை.வள்.59). 6. அற்று, அன்று, ஆம் இவற்றுடன் பயிலும் ஓர் அசைநிலை; an expletive affixed to aru, anru, am. "வாழ்வார்க்கு வானம் பயந்தற்றால் (குறள் 192.).

*[அல் → ஆல் துணைக்கருவிப் பொருளில் வரும் சொற்கள் நாளடைவில் அசை நிலைகளாகும்; வினை முடியாப் பொருளில் வினையெச்ச ஈறுகளாகும் தொழிற் பெயர்களில் 'அல்' என்னும் தொழிற்பெயரீறே 'ஆல்' என நெடுமுதலாகும். 'அல்' என்னும் எதிர்மறை இடை நிலையே எதிர்மறை வியங்கோளீறாகும்.]*

**ஆல்கெழு கடவுள்** āl-kelu-kaḍavuḷ பெ. (n.) சிவன் (திருமுருகு. 256); Lord Śiva.

**ஆல்கொடிச்சி** āl-koḍicci, பெ. (n.) அரிதாரம்; yellow orpiment.

*[ஆலக்கொடிச்சி → ஆல்கொடிச்சி.]*

**ஆல் வரு -தல்** ālvaru-, 18.செ.கு.வி. (v.i.) சுற்றி வருதல்; to go round,

*[ஆலுதல், சுற்றுதல். ஆல் + வரு]*

**ஆல்வாட்டு-தல்** ālvāṭṭu-, 5 செ.கு.வி. (v.i). **ஆலவாட்டு-தல்** பார்க்க; see āla-vāṭṭu-,

*[ஆலவாட்டு → ஆல்வாட்டு.]*

**ஆல்வாட்டு** ālv āṭṭu, பெ. (n.) **ஆலவாட்டு** பார்க்க; see ālavāṭṭu.

*[ஆலவாட்டு → ஆல்வாட்டு.]*

**ஆல்வு** ālvu, பெ. (n.) அகன்றிருப்பது; that which is wide. "ஆல்வாய்ப் போகிற நதி"

*[அகல் → ஆல் → ஆல்வு]*

**ஆலக்கட்டி** āla-k-kaṭṭi, பெ. (n.) துரிசு (மூ.அ); copper acetate; commonly referring to copper sulphate. (சா.அக.).

*[ஆலம் + கட்டி.]*

**ஆலக்கரண்டி** āla-k-karaṇḍi, பெ. (n.) வாயகன்ற கரண்டி; broad spoon in which a small quantity of medicated oil, electuary etc, are prepared, ladle.

*[அகலக்கரண்டி → ஆலக்கரண்டி.]*

**ஆலக்கொடி** āla-k-koḍi, பெ. (n.) **ஆலக்கொடிச்சி** பார்க்க; see āla-k-koḍicci.

**ஆலக்கொடிச்சி** āla-k-koḍicci, பெ. (n.) அரிதாரம்; yellow orpiment or sulpheret of arsenic in its natural state. (சா.அக.).

**மறுவ.** ஆலக்கொடி, ஆலக்கொடிஞ்சி, ஆலக்கச்சி, ஆல்கச்சி.

*[ஒருகா. ஆலம்+கொடிச்சி. ஆலம்= நஞ்சு.]*

**ஆலக்கொடிஞ்சி** āla-k-koḍiñji, பெ. (n.) **ஆலக்கொடிச்சி** பார்க்க; see **āla-k-koḍicci.**

*[ஆலக்கொடிச்சி → ஆலக்கொடிஞ்சி.]*

**ஆலக்கோயில்** āla-k-kōyil, பெ. (n.) கோயில் அமைப்புகளுள் ஒன்று; an exclusive design of temple construction as found in Thirukkachur-in Chengai-Anna district.

*[ஆலை - ஆலம் + கோயில்]*

**ஆரைக்கீரை வகைகள்:**



நீராரை



புளியாரை



வல்லாரை



ஆனை நெருஞ்சி

**ஆலகண்டன்** āla-kaṇḍaṉ, பெ. (n.) 1. **சிவன்;** Śiva. 2. வாசுகி என்னும் பாம்பு; the snake, Vāsugi.

**ம.** ஆல்கண்டம்

*[ஆலம் + கண்டன்.]*

**ஆலகண்டனி** ālakaṇḍaṉi, பெ. (n.) இளமை காத்து வாழ்நாள் நீட்டிக்கச் சித்தர் பயன்படுத்திய இது வரை அறியப்படாத ஒரு மருந்துச் சரக்கு, நீலஞ் சோதி; an unknown drug said to be used by Siddhas to prolong life and to maintain youthfulness. (சா.அக.).

*[ஒருகா. ஆலகண்டன் → ஆலகண்டனி. ஆலமுண்ட சிவனைப் போல் சாவை வெல்வதற்குரிய மருந்து என்னும் பொருளதாகலாம். ஈற்று இகரம் உடைமை குறித்த ஈறு.]*

**ஆலகம்** ālagam, பெ. (n.) 1. நெல்லி; Indian goose berry, emblic myrobalan. 2. அல்லி; lily plant. 3. சோம்பு; anisee–seed, pimpinella anisum.

*[ஒருகா. ஆல் → ஆலகம். ஆல்[1] = நீர். ஆலகம் = நீர்க் கோப்புள்ளது.]*

**ஆலகமாதிதம்** ālagamādidam, பெ. (n.) வெற்றிலை வள்ளிக் கிழங்கு; betel–yam. (சா.அக.).

*[ஒருகா. ஆல் → ஆலகம் = நீர். ஆலகம் + மாதிதம். நீர்ப்புள்ள அல்லது சாறுள்ள வள்ளிக் கிழங்கு என்னும் பொருளதாகலாம்.]*

**ஆலகாலம்** ālakālam, பெ. (n.) 1. கொடிய நஞ்சு; deadly poison, animal poison. "ஆலகாலமு மஞ்சனக் குன்றமும்" (இரகு. இலவண.6). 2. பாம்பின் நஞ்சு; poison ejected by snakes. . 3. நிலவாகை; Tinnevelly senna. 4. நச்சுச் செடி (வசநாபி); aconite. (சா.அக.).

*[ஒருகா. ஆலம்[2] + ஆலம் → ஆலவாலம் → ஆலகாலம் > skt. ālahāla. அலம் → ஆலம். அலம் = வளைந்த தேட்கொடுக்கு, தேட் கொடுக்கிலுள்ள நஞ்சு.*

*ஒ.நோ: அலம் → அலவன் = வளைந்த முன்கைக் கொடுக்குள்ளது.]*

வடமொழியில் 'ஆலம்' என்னும் சொல்லுக்கு உடம்பினின்றும் வெளி வந்தது என்று பொருள் கூறுகின்றனர். வெளிவந்த தனைத்தும் நஞ்சாகாமையின் அது பொருந்தாது. நஞ்சு முறிக்கும் இயல்பால் நிலவாகையும், வசநாபியும் இப்பெயர் பெற்றிருக்கலாம்.

**ஆலகாலம்போக்கி** ālakālam-pōkki, பெ. (n.) நிலவாகை பார்க்க; see nila-vāgai.

*[நஞ்சு முறிக்கும் ஆற்றலுடைமை பற்றி நிலவாகை இப்பெயர் பெற்றிருக்கலாம்.]*

**ஆலகாலவிடநிறம்** ālakāla–viḍa–niṟam, பெ. (n.) கருப்புச் சித்திர மூலம்; blue- flowered lead wort.

*[ஆலகாலம் + விடம் + நிறம்.]*

**கருங்கொடி வேலி** பார்க்க; see **karuṅgoḍi–vēli.**

**ஆலகாலவிடம்** ālakāla-viḍam, பெ. (n.) 1. சாகாவுப்பு; a prepared salt intended for immortalising the body. (Although it may be considered to be a figment of imagination, yet the subject is very commonly dealt with in Siddha's science. The process is stated to have been held secret. 2. சவ்வீரம்; corrosive sublimate. (சா.அக.).

*[ஆலகாலம் + Skt. visa > த. விடம்.]*

**ஆலகாலன்** ālakālaṉ, பெ.(n.) சிவ பூதகணத் தலைவருள் ஒருவன் (அபி. சிந்.): one of the chief attendents of Śiva.

*[ஆலகாலன் = சிவன், சிவனடியான்.]*

**ஆலகாலி** ālakāli, பெ. (n.) காளி; Kāḷi. "அந்தரி யாமளை மயலை யால காலி" (அரிச்சந்.பாயிர. 7).

*[ஆலகாலன் (சிவன்) மனைவி ஆலகாலி.]*

**ஆலங்கட்டி**[1] ālaṅ-gaṭṭi, பெ. (n.) 1. மழைக்கல்; hail–stone. ஆலங்கட்டிகளைப் பொறுக்குகிறார்கள் (உ.வ.). 2. கல்மழை; frozen drops of rain. நேற்று ஆலங்கட்டி பெய்தது (இ.வ.).

**க., து.** ஆலிகல்; **ம.** ஆலிப்பழம்; **குட.** ஆலிகய்; **பட.** ஆனிகல்லு.

*[ஆலம் + கட்டி.]*

**ஆலங்கட்டி**[2] ālaṅ-gaṭṭi, பெ. (n.) **ஆலக்கட்டி** பார்க்க; see **āla–k–kaṭṭi.**

*[ஆலக்கட்டி → ஆலங்கட்டி.]*

**ஆலங்கண்டனி** ālaṉ-kaṇḍaṉi, பெ. (n.) **ஆலகண்டனி** பார்க்க; see āla-kaṇḍaṉi.

**ஆலங்காட்டாண்டி** ālaṅgāṭṭ(u)–āṇḍi, பெ. (n.) வரிக் கூத்துவகை (சில.3,13, உரை); a masquerade dance.

*[ஆலங்காடு + ஆண்டி → ஆலங்காட்டாண்டி.]*

**ஆலங்காடு** ālaṅgāḍu, பெ. (n.) திருவாலங்காடு (தேவா.); an ancient Śiva shrine in the North Arcot District. "ஆலங்காட்டு லாம்அத்தனே" (தேவா. 1:45:1).

*[ஆலம் + காடு. ஆலம் = ஆலமரம்.]*

**ஆலங்காய்க்கிரந்தி** ālangāy-k-kirandi, பெ. (n.) **ஆலங்காய்ப்புண்** பார்க்க; see **ālangāy-p-puṇ.**

**ஆலங்காய்ப்புண்** ālangāy-p-puṇ, பெ. (n.) மேகநோய் தொடர்பாக உடம்பு முழுவதிலும் கழற்சிக் காயைப் போல் புண்களுண்டாகி ஒவ்வொன்றாக வெடித்துக் குருதி வெளிப்பட்டுத் துன்பத்தை யுண்டாக்கும் நோய்; a skin affection, as in tertiary syphilis, marked by tumors of the shapes of bonduc nuts all over the body with an unbearable pain. (சா. அக.)

**மறுவ.** ஆலக்கொடி, ஆலக்கொடிஞ்சி, ஆலக்கச்சி, ஆல்கச்சி.

*[ஒருகா. ஆலம்+கொடிச்சி. ஆலம்=நஞ்சு.]*

**ஆலங்கானம்** ālangāṉam, பெ. (n.) 1. தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் போர் புரிந்த போர்க்களம், இப்பொழுது தலையாலங் காடென்று வழங்கப்படுகிறது (புறநா.); name of a battle field of the Pāndya king Nedunjeliyaṉ, now known as Tala-y-ālangādu. 2. விந்திய மலை யடுத்த நருமதை யாற்றங்கரையிலுள்ள ஓர்இடம் (பெருங்.); place on the bank of the river Narmada, near Vindya hills. 3. விபுலகிரியின் பக்கத்திலுள்ள ஓர் இடம் (பெருங்.); a place near Vipulagiri..

*[ஆலம் + கானம். ஆலம் = ஆலமரம்.]*

**ஆலங்குடி** ālangudi, பெ. (n.) சோழ நாட்டிலுள்ள ஒரூர்; native place of the ancient Tamil poet Ālangudi Vaṅgaṉār, in Thanjāvūr Dist:

*[ ஆல்+அம்+குடி. ]*

**ஆலங்குடி வங்கனார்** ālangudi-vaṅgaṉār, பெ. (n.) கடைக்கழகப் புலவர்; a Tamil poet of the Sangam age.

*[ஆலங்குடியில் பிறந்த வங்கன் என்னும் இயற்பெயரினர். ஆலங்குடி + வங்கன் + ஆர். (உ.ப.ஈறு.) இவர் பாடினவாக நற்றிணையில் 230, 330, 400, குறுந். 45, அக. 106, புறம் 310 ம் கிடைக்கின்றன.]*

**ஆலச்சுவர்** āla-c-cuvar, பெ. (n.). 1. ஆள்மட்டச் சுற்றுச் சுவர்; compound wall (C.E.M.). 2. சார்புச் சுவர்; retaining wall of the foot of a slope (C.E.M.).

*[1. ஆரை → ஆர + சுவர் = ஆரச்சுவர் → ஆலச்சுவர். 2. அகலம் + சுவர் = அகலச்சுவர் → ஆலச்சுவர்.]*

**ஆலசுந்தரர்** āla-sundarar, பெ. (n.) ஆலால சுந்தரர்; one of the names of Śiva. "ஆலசுந்தரர் பித்தவெனுஞ் சொற்பழி யாளர்" (வெங்கைக். 238).

*[ஆலம் + Skt. Sundra > த. சுந்தரன் → சுந்தரர் (அர்-உ.ப.ஈறு).]*

**ஆலடி**[1] āladi, பெ. (n.) 1. ஆலமரம்; banian tree. 2. புன்கு; poonga-oil tree, 3. மாவிலங்கு; lingam tree. (சா.அக.).

*[அகல் → ஆல் + அடி = ஆலடி. மரம் அகன்று விரிந்திருப்பதால் அடிநிழல் தரவல்லது என்னும் பொருளதாகலாம்.]*

**ஆலடி**[2] āladi, பெ. (n.) ஊர்ப்பெயர்; place name.

*[ஆல் + அடி.]*

மரங்களின் அடியில் சில குடியிருப்புகள் தோன்றிப் பின் ஊரானது.

**ஆலத்தி** ālatti, பெ. (n.) 1. வழிபாட்டின்போது மங் கலப் பொருளாக வலமுறை சுற்றிக் காட்டப் படும் கருப்பூரத் திருவிளக்கு; ceremony of waving lighted camphor. 2. கண்ணேறு (திருஷ்டி) கழிப்பதற்காக முன்னால் நின்று இடமுறை யாகச் சுற்றப்படும் மஞ்சள்நீர் மங்கலத்தட்டு. அல்லது மஞ்சள் நீரிடை விளக்கிட்ட மங்கலத் தட்டு; ritual of waving turmeric water-plate to avert the blight of the eyes of unlucky persons on marriage or other special occasions, also in front of the idol, after the procession, before it is taken into the temple (W.).

*[ஆல் + ஆற்று = ஆலாற்று → ஆலாத்து → ஆலாத்தி → ஆலத்தி. இனி ஆலாத்தி → ஆராத்தி → ஆரத்தி என்றுமாம். ஆலாற்றுதல் = சுற்றச் செய்தல்.]*

ஆலத்தியெடுத்தல் என்னும் சொல்லாட்சி பொதுவாகச் சுற்றுதல் என்று பொருள்தரினும் வலஞ்சுற்றுதலையே மங்கல நிகழ்ச்சிகளில் குறிப்பதாகும். வலம் வருதல், வலஞ்சுற்றுக் கொடிகள், வலம்புரிச்சங்கு, வலக்கால் எடுத்து வைத்தல் என்னும் தொடராட்சிகள், நன்மை வெற்றி ஆகிய பொருள் களைக் குறித்தன. இடஞ்சுற்றுதல் தீமையின் அறிகுறியாகக் கருதப்பட்டது. இயந்திரங்களில் பொருத்தப்பட்டுள்ள திருகு மரைகள் வலம் சுற்றும் போது மரையேறுவனவாகவும், இடஞ்சுற்றும் போது கழல்வனவாகவும் அமைந்துள்ளமை காணலாம்.

உலகம் தன்னைத்தானே வலமாகச் சுழன்று கொள்கிறதென்பதும் அனைத்துக் கோள்களும் கதிரவனை வலமாகச் சுற்றுக்கின்றன என்பதும் மக்களின் மரபு வழிப்பட்ட நம்பிக்கை, நக்கீரனாரும் "வலனேர்பு திரிதரு" எனப்பாடுகிறார். கோயிலை அல்லது கருவறையை வலம் வருதல் இத்தகைய நம்பிக்கையால் வளர்ந்த வழக்கம்.

ஒன்றை வலம் வருதல் என்பது வலம் வரவேண்டிய பொருளை நோக்கித் தம் வலது தோள் இருக்குமாறு முன்னோக்கி வட்டப்பாதையில் இயங்குதலாகும்.

**ஆலத்திகாட்டு—தல்** ālatti - kāṭṭu–, 5 செ.கு.வி. (v.i.) ஆலத்தி சுற்றுதல்; wave the plate of turmeric water or lighted camphor. "பல்லாண்டங்கிசைக்கு கிற்பது மாலத்தி காட்டு கிற்பதும் வேந்தர்க்கே கடனதாயிற்று" (இரகு. குறை. 6).

*[ஆலத்தி + காட்டு.]*

**ஆலத்தியெடு—த்தல்** ālatti–y–eḍu–, 4 செ.கு.வி (v.i.) **ஆலத்திகாட்டு—தல்** பார்க்க; see ālatti - kāṭṭu.

*[ஆலத்தி + எடு.]*

**ஆலத்திவழி—த்தல்** ālatti–vaḻi–, 4 செ.கு.வி. (v.i.) ஆலத்தியெடுத்தல் (இ.வ.); wave light etc., before an idol or important personage. "வெறும்புறத்திலே ஆலத்தி வழிக்க வேண்டுங் கையிலேயிறே திருவாழிதரித்தது" (ஈடு, 1,8,9).

*[ஆலத்தி + வழி.]*

**ஆலத்தூர்கிழார்** ālattūr–kiḻār, பெ. (n.) கடைக்கழகப் புலவர்; a Tamil poet of the Sangam age. இவர் பாடியவை குறுந்தொகை. 112,350, புறம் 34,39, 69,225,324 ஆகிய பாடல்கள்.

**ஆலப்பழுப்பு** āla–p–paḻuppu, பெ. (n.) **ஆலம்பழுப்பு** பார்க்க; see **ālam–paḻuppu.**

*[ஆலம்பழுப்பு →ஆலப்பழுப்பு.]*

**ஆலம்**[1] ālam, பெ. (n.) 1. நீர்; water. "ஆலஞ்சேர் கழனி யழகார் வேணுபுரம்" (தேவா. 71,7). 2. கடல் (பிங்.); sea, ocean. 3. மழை (அக.நி.); rain. 4. பூவின் நீர்த் துளி; drops of water deposited on the petals of flowers.

**ம.** ஆலம்

*[ஆல்[1] →ஆலம்.]*

**ஆலம்**[2] ālam, பெ. (n.) 1. அகலம் (இ.வ.); breadth, width. (Loc.). **கச.**ஆடா. 2. ஆலமரம்; banyan tree. "சிறியதோர்வித்தின் ஆலம்" (கந்தபு. சூரனமைச். 125). 3. ஆலம்விதை; banyan seed. 4. மலர் (பிங்.); blossom, blown flower. 5. வானம்; sky. "ஆலத்தி னுடுக்கள் காட்டியருந்ததி காட்டுவார்போல்" (கைவல். தத்துவ.25). 6. புன்கு (பச்.மூ.); Indian beech. 7. மாவிலங்கம் (பச்.மூ.); lingam tree.

**ம.** ஆலம்; **க.** ஆல

*[அகல் → ஆல் → ஆலம். ஆலம் = அகன்றிருப்பது.]*

**ஆலம்**[3] ālam, பெ. (n.)1. கலப்பை (பிங்.); plough. 2. கலப்பைப் படை (ஆலாயும்) (கந்தபு. தாரக. 157); weapon shaped like a plough.

*[அலம் → ஆலம். அலம் = வளைந்தது, வளைந்த வடிவுள்ள கலப்பை.]*

**ஆலம்**[4] ālam, பெ. (n.) 1. கருமை; blackness. "ஆலக்கோலத் தினஞ்சு" (தேவா. 111,3). 2. நஞ்சு (திவா.); poison. "ஆலந்தான் உகந்து அமுது செய்தானை". (சுந்த.தேவா.) 3. நச்சுயிரி களினின்று வெளிவரும் நஞ்சு; any discharge of poisonous matter from venomous animals or creatures such as snakes. 4. தாளகம்; yellow arsenic, orpiment. 5. பாம்பு; snake. (ஆனந்தலகரி-24).

**ம.** ஆலம்.

*[1. காளம் → ஆளம் → ஆலம் (கருமை). 2, 3, அலம் → ஆலம். அலம் = தேளின் கொடுக்கு.]*

**ஆலம்**[5] ālam, பெ. (n.) 1. ஈயம் (பச். மூ.); lead. 2. துரிசு (சங்.அக.); blue vitriol.

*[ஆல் → ஆலம்.]*

**ஆலம்**[6] ālam, பெ. (n.) ஞாலம், உலகம்; world, universe. (செ.அக.).

**ம.** ஆலம்.

*[ஞாலம் → ஆலம்.* **Arab.** ālam.]

**ஆலம்**[7] ālam, பெ. (n.) 1. அம்புக் கூடு; quiver. 2. மழு; battle–axe. "ஆலங்கணை யங்குலிசாயுத மாதியாக" (கந்தபு. தாரக. 157).

*[அலம் → ஆலம். அலம் = வளைவு அல்லது வட்டம்.]*

**ஆலம்**[8] ālam, பெ. (n.) மஞ்சளும் சுண்ணாம்பும் கலந்த நீர்; ஆலத்தி நீர்; turmeric–lime water being waved before idol or at important function.

*[ஆல் → ஆலம். ஆல் = நீர்.]*

**ஆலம்பம்**[1] ālambam, பெ. (n.) 1. தூக்கம்; sleep. 2. நச்சுத் தன்மையுள்ள இலைகளைக் கொண்ட ஒரு வகைப் பூடு; a species of plant with poisonous leaves. (சா.அக.).

**ஆலம்பம்**[2] ālambam, பெ. (n.) 1. பற்றுக்கோடு; support. 2. வரி; tax 3. புகலிடம்: asylum. (கதி.அக.).

*[ஆல் → ஆலம்பம்.]*

**ஆலம்பழுப்பு** ālam-paluppu, பெ. (n.) பழுத்த ஆலம் இலை; yellow ripe leaves of the banyan tree.

*[ஆலம் + பழுப்பு. ஆலம் = ஆலமரம்.]*

**ஆலம்பால்** ālam-pāl, பெ. (n.) 1. ஆலமரத்தின் பால்; milky fluid extracted from the stem of the banyan tree. 2. தூய நீர்; pure water. 3. மழைநீர்; rain water. 4. ஆலங்கட்டியின் நீர்; water from the melting hail–stones. 5. பனிக்குடத்து நீர்; the amniotic fluid discharged from the uterus.

*[ஆலம் + பால். ஆலம் = ஆலமரம், குளிர்ச்சி, குளிர்ந்த நீர்.]*

**ஆலம்பி** ālambi, பெ. (n.) ஆலக்கொடி பார்க்க; see **āla-k-kodi.**

**ஆலம்பேரிச்சாத்தனார்** ālamberi-c-cāttanār, பெ. (n.) கடைக்கழகப் புலவருள் ஒருவர்; a Tamil poet of the Sangam age.

*[ஆலம்பேரி + சாத்தனார். இவர் பாடியவை. நற். 152, 255, அகம் 47, 81, 143, 175.]*

**ஆலம்பொழில்** ālam-polil, பெ. (n.) ஆல மரங்கள் செறிந்து விளங்கும் ஓர்ஊரின் பெயர்; a place name.. "ஆலம் பொழில் அமர்ந்த பெருமான்".

*[ஆலம் + பொழில்.]*

**ஆலம் விழுது** ālam-viludu, பெ. (n.) ஆலமரத்தில் தொங்கும் விழுது; root hanging down from the branches of the banyan tree.

*[ஆல் → ஆலம் + விழுது.]*

**ஆலமர்கடவுள்** ālamar-kadavul, பெ. (n.) சிவன் (திவா.); Śiva, as Daksināmūrti, seated under a Kallāl tree. "எங்கள் ஆலமர் கடவுளன்றி யமரரில் யாவரம்மா" (கந்தபு. தசீசி. 20).

*[ஆல் + அமர் + கடவுள்.]*

**ஆலமர் செல்வன்** ālamar-šelvan, பெ.(n.) ஆலமர்கடவுள் பார்க்க; see ālamar-kadavul.

**ஆலமரம்** ālamaram, பெ. (n.) அகன்று பரவும் இயல்புடைய பெரிய மரம். இதன் விழுது நிலத்தில் ஊன்றிப் பருத்துத் தூண்களைப் போல் மரத்தின் சுற்றிலும் காணப்படும். வித்து மருந்துக்குப் பயன் படும். பாலும் பட்டையும் துவர்ப்பானவையா யிருத்தலால் பல்வலிக்கும் பல்துலக்கவும் பயன் படும். வெடித்த காலுக்குப் பாலடிப்பர். தொழு நோய்க்கும் நீரிழிவுக்கும் ஊதை (வாத) நோய்க்கும் இதன் பட்டை மருந்தில் சேர்க்கப்படும். கட்டிகளுக்கு இலையை வதக்கிக் கட்டுவர். இதன் பிசினில் எண்ணெய் கலந்து காதுப் புண்களுக்குப் பயன்படுத்துவர்; banyan tree It is an immense tree with branches spreading far and wide. It is common everywhere and it is remarkable for the singular property of letting a gummy kind of rootlet fall from its branches. These grow gradually down to the ground and from natural supports to the larger branches of the parent tree, forming a vast assemblage of pillar-like stems covering a considerable distance all around the original trunk. In old specimens it will be found that this is grown by the side of the peepul tree, when they will be regarded with great reverence by the people. It is the Hindu emblem of immortality.

The seed of the fruit is medicinally cooling and a tonic. The white glutinous juice from the stems is applied in tooth ache and also to the soles of the feet when cracked and inflamed. The bark given in infusion is a tonic used in diabetes. A bath using the bark of the root and the stem, is efficacious in leprosy and in mitigating pains in the limbs. Heated leaves from good poultices to abscesses, rootlets from the branches are used as tooth-brushes. The gum of this tree mixed with oil is used for lesion in the ear and for deafness.

The following are the different varieties:-

1. கல்லால் –stone banyan (title from the hardness of the wood),
2. குறுவால் – short banyan.
3. இச்சியால் (இத்தியால்) –chinese banyan.
4. சிற்றால் –small banyan.
5. கொடியால் – creeping banyan.
6. சீமையால் — foreign banyan (title from being introduced, from the Eastern peninsula) Indian caout chouc.
7. கருணியால் — another variety..
8. கோளியால் — large leaved yellow fig.
9. பேரால் — large or common banyan.
10. காட்டால் — wild banyan.
11. நீரால் — narrow leaved fig. (சா.அக.).

**ம.** ஆலமரம்; **க.** ஆலமர; **தெ.** ஆலமானு; **துட.** ஆல்மேம்.

*[அகல் → ஆல் + மரம் = ஆல்மரம் → ஆலமரம்.]*

**ஆலமுண்டோன்** āla-muṇḍōṉ, பெ. (n.) நஞ்சுண்ட சிவபெருமான்; Šiva, as having swallowed the deadly poison.

*[ஆலம் + உண்டோன்.]*

**ஆலயம்** ālayam, பெ. (n.) கோயில்; temple.

*[ஆலையம் → ஆலயம்.]*

**ஆலல்**[1] ālal, பெ. (n.) 1. ஒலி (சூடா.); sound, cry. 2. மயிலின் குரல் (பிங்.); screech of the peafowl. 3. ஆடல்; dancing. "அணிக்குல மஞ்ஞைக ளகவி யாலுவ" (சேதுபு. கந்த. 3, 4.). 4. ஆரவாரித்தல்; shouting, roaring, bustle. "மகிழ் சிறந்தாலும் பீலி மஞ்ஞையி னிகலி" (பெரும்பா. 330).

*[ஆல் + அல். ஆல் = அசைதல், ஒலித்தல்.]*

**ஆலல்**[2] ālal, தொ.பெ. (vbl.n.) 1. சேருதல், பொருந்தல்; joining, fixing. "தேராலும் எழுபரியோன்" (சூத. சிவமா. 7,10).

*[ஆல் + அல். ஆல் = அசை, பொருந்து.]*

**ஆலலம்** ālalam, பெ. (n.) திருமணத்தின் போது மணமகன் மணமகளுக்குத் தரும் கூறைப் புடவை; a garment (saree) given by the bridegroom to the bride, at the time of marriage (W.).

*[ஆலல் + அம்.]*

**ஆலவட்டம்** āla-vaṭṭam, பெ. (n.) 1. பெருவிசிறி, கால்செய் வட்டம்; circular fan made of cloths, fragrant roots or palm leaves, carried in procession before idols and great personages. "படுவேய் வெள்வளையமுந் தண்பட் டாலவட்டமும்" (பாரத. காண்ட. 14). 2. விசிறி; small fan. "வீசாலவட்ட மரிவைய ரேந்தி யாற்ற" (சீவக. 839).

ம. ஆலவட்டம் Skt. ālāvarta

*[அகலம் → ஆலம் + வட்டம் – ஆலவட்டம்.]*

**ஆலவருமுத்து** āla-varu-muttu, பெ. (n.) உயர்வகை முத்து; superior class of pearls.

**ஆலவன்** ālavaṉ, பெ. (n.) 1. திருமால்; (கந்தபு. சூரனமைச். 43),; Viṣṇu, as lying on a floating banyan leaf at the submersion of the universe by flood. 2. நிலவு; moon, as one who came out of the sea.

*[1. ஆல் + அவன் = ஆல இலையில் இருக்கும் திருமால். 2. ஆல் = நீர், குளிர்ச்சி, ஆலவன் = குளிர்ந்த பாற்கடலில் தோன்றிய நிலவு.]*

**ஆலவாட்டு–தல்** āla-vāṭṭu-, 5. செ.குன்றாவி- (v.t.) சிறிது காயச் செய்தல், காயப் போடுதல்; to dry a little in the sun as boiled grain, dry to sufficient degree.

*[அகல → ஆல + வாட்டு. வாட்டுதல் = காயச்செய்தல். ஆல = அகலமாக, பரவலாக, மேம்போக்காக, பதமாக, குறைவாக, சிறிது நேரம் வரை.]*

**ஆலவாட்டு** āla-vāṭṭu, பெ. (n.) வெயிலிற் பதமாகக் காயவைத்தல்; drying of a thing in the sun. (w.). ஆலவாட்டுப் பதத்திலே எடுத்து நிழலில் வை. (உவ.).

*[அகல→ ஆல +வாட்டு = ஆலவாட்டு.]*

**ஆலவாட்டு–தல்** பார்க்க; see **āla-vāṭṭu-,**

உலகவழக்கில் ஆல வாட்டுதல்→ஆல் வாட்டுதல் எனக் கொச்சையாக வழங்கி வருகிறது.

**ஆலவாட்டுப்பதம்** ālavāṭṭu-p-padam, பெ. (n.) பதமாகக் காயவைத்தல்; being suitably dried.

*[ஆல+வாட்டு+பதம்.]*

**ஆலவாய்** ālavāy, பெ. (n.) 1. பாம்பு; serpent, as having poison in its mouth. "மேருக்கோட்டி லலவாய் நெடுநாண் பூட்டி" (திருவிளை. சோழனை. 13). 2. மதுரை (தேவா.); Madurai the capital city of Pāṇḍya, encircled by a coiled serpent which brought its mouth and tail together to indicate the boundaries of the city. (செ.அக.).

*[ஆலம்+வாய் .]*

**ஆலவாலநண்டு** ālavāla-naṇḍu, பெ. (n.) வயல்நண்டு; crab found in the fields.

*[ஆலவாலம் + நண்டு.]*

**ஆலவாலம்** āla-vālam, பெ. (n.) 1. மரத்தடியில் பாத்தி; a trench for water, round the foot of a tree (.w.). ம. ஆலவாலம். 2. சிறுபாத்தி; garden beds, or plats made with ridges round them so as to retain water (w.)." ஆலவாலத் தவிர்மதியாற் புனல் கால வாய்ந்த கதிர்மணி முல்லையின்" (நைடத. அன்ன. தூது.40).3. வயல்; corn field. 4. விளைநிலம் (சூடா. ); cultivable field.

Skt. ālavāla.

*[ஆலம்+வாலம். ஆலம்=நீர். வாலம் =நீண்டது, வளைந்தது.]*

**ஆலவிடம்** āla-viḍam, பெ.(n.) ஆலகால நஞ்சு; ālahāla poison.

*[ஆலம்+ விடம். Skt. visa > த. விடம்.]*

**ஆலவிடமுண்டான்வீடு** ālaviḍam-uṇḍāṉ-vīḍu, பெ. (n.) கயிலைமலை; mount Kailas, the abode of Šiva.

*[ஆலவிடம்+உண்டான்+வீடு.]*

**ஆலவிருக்கை** ālavirukkai, பெ.(n.) 1. ஆலமரம்; banyan tree. 2. ஆதொண்டை; a thorny caper. (சா. அக.).

*[ஒருகா. ஆலவிருட்சம் → ஆலவிருக்கை.*

*Skt. vruksa > த. விருட்சம்=மரம்.]*

**ஆலவூணி** āla-vūṇi, பெ. (n.) உமையவள்; Pārvathi, consort of Šiva. "குணவதி யாலவூணி யபிராமி" (திருப்பு. 393).

*[ஒருகா. ஆலம்+ஊண்+இ – ஆலவூணி=ஆலத்தை (நஞ்சு)உண்டவன். சிவபெருமானின் உடம்பில் பாதியாக இருக்கும் இமையவள். சிவன் உண்ட நஞ்சைத் தானும் உண்டவளாதலால் பெற்ற பெயர்.]*

**ஆலன்** ālaṉ, பெ (n.) 1.சிவன்; Šiva. "ஆலனிவ்வழி போந்த வதிசயம்" (தேவா 2. கூடலையா. 9.). 2. சாலிவாகனன், சாதவாகனன்; Sālivāhaṉa alias Sāthavāhana. 3.ஏர்ப்படையன், பலராமன்; Balarāma, having plough as his weapon.

*[ஆலம் +அன் – ஆலன் = நஞ்சுண்டவன், சிவன்.*

*2. சாலி வாகன மன்னன், ஆலன் என்னும் சிவன் பெயரை, இயற்பெயராகக் கொண்டிருந்திருக்கலாம். 3. அலம் → ஆலம். அலம் = கலப்பை, ஏர்.]*

**ஆலனந்தலன்** ālaṉandalaṉ, பெ. (n.) ஆலிலையில் துயின்ற திருமால்; Visnu, as having slept on a floating banyan leaf, during great deluge.

*[ஆல் + அனந்தலன்.]*

**ஆலா** ālā, பெ. (n.) 1. ஒரு பெரிய கடற்பறவை. இதன் தலை, கழுத்து, அடிவயிறு முதலியன தூய வெள்ளையாயும் சிறகுகள் வாலிற்குமேல் நீண்டு மிருக்கும். கடற்பாம்பு இதற்கிரையாகும்; large water-bird found in sea-coasts, white-bellied and greybacked sea eagle. It lives on sea-snakes. 2. ஒரு நீர்ப்பறவை; (பட்டினத்தடி. திருவொற்றி. 8). water-bird found near marshy soils and living on insects. (சாக. அக.).

*[ஒருகா. ஆல் – ஆலா= மீன் பிடிப்பதற்காகச் சுற்றிப் பறக்கும் பறவை.]*




**ஆலாகதம்** ālāgadam, பெ. (n.) வெண்மாதுளை; white species of pomegranate.

*[ஒருகா. ஆல் + ஆகம் – ஆலாகம் → ஆலாகதம். ஆல் = நீர், வெண்மை. ஆகம் = உடம்பு. ஆலாகதம் = வெண்மையான தோலுடையது அல்லது தோற்றமுடையது. யாக்கை → ஆக்கை → ஆக்கதம் → ஆகதம் =(உடம்பு).]*

**ஆலாகலம்** ālāgalam, பெ. (n.) 1. ஆலகாலம் பார்க்க; see **ālagālam**. "கடியதோ ராலாகலவெள்ளம் போலக் கக்கினான்" (திருவிளை. நாக.17).

*[ஆலகாலம் → ஆலாகலம்.]*

**Skt** . hālahāla

**ஆலாங்கட்டி** ālāṅgaṭṭi, பெ. (n.) **ஆலங்கட்டி** பார்க்க; see ālaṅgaṭṭi. "மெய்மயக்கமும் போக்கும் கக்குமாலாங்கட்டிகாண்" (பதார்த்தகுண.12).

**ஆலாட்டம்** ālāṭṭam, பெ. (n.) அழைத்தல், ஒலித்தல்; calling, shouting (சேரநா.).

க. ஆலாட.

**ஆலாட்டுதல்** ālāṭṭu-, 5. செ.குன்றாவி. (v.t.) தவசங்களை நிழலிற் காய வைத்தல் (நெல்லை.); to dry grains in the shade. (Tn.).

*[ஆலவாட்டு → ஆலாட்டு.]*

**ஆலாத்தி** ālātti, பெ. (n.) ஆலத்தியெடுத்தல்; camphor light, or turmeric -lime water in a plate, waved before an idol or any important personage. "ஆலாத்தி சுழற்றலென்கோ" (சௌந்தரி,103).

*[ஆல் + ஆற்று – ஆலாற்று + இ – ஆலாற்றி → ஆலாத்தி= சுற்றச் செய்தல், சுற்றிக் கழிக்கின்ற வினை. **ஆலத்தி** பார்க்க; see ālatti.]*

**ஆலாத்து** ālāttu, பெ. (n.) 1. அம்மாறு, கப்பலின் பெருங்கயிறு; cable, large rope. 2. ஒரு பறவை; bird. 3. கப்பல்; ship. 4. வெளவாற்கொடி முடியும் கயிறு (த.சொ.அக.); a rape.

*[ஆல் → ஆலாத்து. ஆல் = பறத்தல், நீளுதல், செல்லுதல். ஆலாத்து = அவ்வியல்புகளுடைய பெருங் கயிறு, பறவை, கப்பல்.]*

**ஆலாப்பற -த்தல்** ālā-p-para-, 3. செ.கு.வி. (v.i) 1. ஆலாப் பறவையைப் போலச் சற்றேனும் ஒழிவும் களைப்புமின்றித் திரிதல்; used figuratively to men who wander about restlessly as ālā bird. 2. ஆலிலை காற்றில் பறத்தல்போல, உணவின்றித் துயருற்றுத் திண்டாடுதல்; to be in utter distress, to wander about like a dry banyan leaf to and fro by the wind. (சா.அக.).

**ம.** ஆலாபறக்குக.

*[ஆல் → ஆலா + பற. ஆல் = சுற்று, திரி, பற.]*

**ஆலாலசுந்தரர்** ālāla-sundarar, பெ. ( n.) சிவன்; Lord Śiva, enshrined at Madurai Temple. (கதி.அக.).

**ஆலாலம்** ālālam, பெ. (n.) 1. நஞ்சு, கடலிற் பிறந்த நஞ்சு; poison, poison produced at the time of the churning of the ocean. "ஆலால முண்டான் அவன் சதுர்தா னென்னேடீ" (திருவாச.11.8). 2. வெளவால்; bat in common. 3. துரிஞ்சில் என்னும் வெளவால்; small house-bat.

**ம.** ஆலாலம். **Skt.** hālāhalam.

*[ஆல் + ஆலம் = ஆலாலம். (தன்மை பற்றி வந்த அடுக்குச் சொல்.) 1. ஆல் = நீர், நீர் நிலை, நீர் நிலையின் நிறமான கருநீலம், கருநீல நிறமுள்ள நஞ்சு. கடலில் தோன்றிய நஞ்சு. 2, 3. ஆல் = பறக்கும் இயல்புள்ள பறவை.]*

**ஆலாலர்** ālālar, பெ. (n.) ஆலாலசுந்தரர், Lord Śiva. "ஆலாலர் தோற்றரவு" (சி.சி.1,61 சிவஞா.).

*[ஆலாலம் → ஆலாலன் → ஆலாலர்.]*

**ஆலி[1]-த்தல்** āli-, 4 செ.கு.வி. (v.i.) 1. ஒலித்தல்; to make a noise, roar. "வெங்கூற் றாலிப்ப" (பு.வெ.4,4). 2. நீர்தூவுதல்; to spray water. "ஆலித்தே வாளி கண் மீண்டே யுறுகாலை" (கந்தபு.சூர.401). 3. களித்தல்; to rejoice. "ஆலிக்கு மந்தணர் வாழ் கின்ற" (திருப்பல்.9:8.) 4. செருக்குறுதல்; to be proud. "பகலவ னோடிகல் செயக்கருதி யிருடிரண் டாலித் தெழுந்தன" (அரிச்.விவாககா.11) (த.சொ. அக.).

**ம.** ஆலிக்குக; **க.** ஆலிடு; **தெ.** ஆலின்சு.

*[ஆல் → ஆலி.]*

**ஆலி[2]** āli, பெ. (n.) 1. மழைத்துளி (சூடா.); rain-drops. 2. ஆலங்கட்டி; hail. "ஆலிபோல்...முத்திற்கும்" (சீவக.2786). 3. தலைப்பெயல் மழை (பிங்.); opening shower of the rainy season. 4. அமுதம்; nector. (த.சொ.அக.).

**க.** ஆலி, ஆணி, ஆரி; **பட.** ஆனிகல்லு; **கோத.** அரகசு; **தெ., குரு., மால்., குட.** ஆலி; **து.** ஆலிகல்லு; **குவி.** ஆஜி. **பா.** ஏதிர், ஏயிர்.

*[ஒருகா: ஆலித்துப் (ஒலித்து) பெய்யும் மழை நீரும், ஆலங்கட்டி மழையும் ஆலி எனப் பெயர் பெற்றிருக் கலாம். மழைநீர் அமுதம் எனப்படுவது மரபு "தான் அமிழ்தமென் றுணரற்பாற்று" -குறள்.]*

**ஆலி[3]** āli, பெ. (n.) 1.காற்று (அக.நி.); wind. 2. பூதம்; a goblin, ghost.

*[அகல் → ஆல் → ஆலி =பரவி வீசும் காற்று, பெருத்துப் பருத்துக் காணப்படும் பூதம்.]*

**ஆலி[4]** āli, பெ. (n.) வரம்பு; low mud ridge put up to separate the fields.

**skt.** āli

*[ஆல் = நீளுதல். ஆல் → ஆலி = நீண்ட வரம்பு.]*

**ஆலி[5]** āli, பெ. (n.) 1.தோழி; maid attendent. 2. தொடர்ச்சி; continuity. 3.கூட்டம்; group, crowd. (த.சொ.அக.).

**Skt.** āli

*[ஆல் = சுற்றுதல், சூழுதல், கூடுதல், தொடர்தல். ஆல் → ஆலி = தலைவியைச் சூழ்ந்திருக்கும் தோழி மார், பின்தொடரும் தோழியர் கூட்டத்தில் ஒருத்தி, கூட்டம்.]*

**ஆலி[6]** āli, பெ. (n.) 1. கள்; toddy. "தேனுமாலியுந் தீமிசைச் சிந்தியே" (கந்தபு. அசுரயாக. 71).

*[அல் → ஆல் = குளிர்ந்த நீர். ஆல் → ஆலி = குளிரப் புளித்த கள்.]*

**ஆலி[7]** āli, பெ. (n.) 1.தேள்; scorpion. 2. தேனீ; bee. 3. கலப்பை; plough.

**Skt.** āli

*[அல் → ஆல் → ஆலி = வளைந்த கொடுக்குள்ள தேள், தேனீ, வளைவான கலப்பை. ஒ.நோ: அல் = அலவன்; வளைந்த காலுள்ள நண்டு.]*

**ஆலி[8]** āli, பெ. (n.) 1. கண்மணி; pupil of the eye. 2. கண்; eye itself. 3.கண் எரிச்சல்; inflammation of the eye. (கருநா.)

**க.** ஆலி

*[ஆலல் = சுழலல். ஆலி = உருண்டது, திரண்டது. உருண்டவடிவ நீர்த்திவலை, உருண்ட வடிவுள்ள கண்]*

**ஆலிகன்** āligan, பெ. (n.) 1. உழவன்; tiller. 2. கலப்பை போன்ற ஆய்தம் கொண்டு போர் செய்பவன்; one who fights with a weapon like plough. (த. சொ. அக.).

*[அல் → அல → அலவன் → ஆலவன் → ஆலிவன் → ஆலிகன்.]*

**ஆலிகாசம்** āligāsam, பெ. (n.) பச்சைக்கடலை; raw bengal gram. (சா. அக.).

*[ஒருகா. ஆல் + காசம். ஆலி = ஈரமுள்ள, பச்சையான காய். காய்ச்சம் → காசம். (முற்றியது, திரண்டகாய்).]*

**ஆலிகை** āligai, பெ. (n.) அகலியை (கம்பரா. நட்புக். 6); Akalyā.

*[அகலிகை → ஆலிகை. Skt. Akalyā]*

த. அகலியை > அகலிகை.

**ஆலிஞ்சரம்** āliñjaram, பெ. (n.) நீர்ச்சாடி ; water-jug, water-pot.

*[ஆலி = நீர். ஆலி → ஆலிஞ்சரம்.]*

**ஆலிடம்** āliḍam, பெ. (n.) தெருச்சிறகு (திவா.); street row.

*[ஒருகா. அகல் + இடம் – அகலிடம் → ஆலிடம்.]*

**ஆலிந்தகி** ālindagi, பெ. (n.) அணில்; squirrel.

*[ஒருகா: ஆலி → ஆலிந்தகி = தேட்கொடுக்குப்போல் வளைந்த வாலுள்ளது.]*

**ஆலிநாடன்** āli-nāḍaṉ, பெ. (n.) திருமங்கையாழ்வார் (திவ். பெரியதி. 3,4,10); Thirumangai-y-ālvār, who was the chief of the region about Tiruvāli in the Chōla Kingdom.

*[ஆலிநாடு → ஆலிநாடன். **ஆலிநாடு** பார்க்க, see āli-nādu.]*

**ஆலிநாடு** āli-nāḍu, பெ. (n.) சீர்காழிக்கு அண்மையிலுள்ள ஊர்; town near Seerkāḻi in Tanjore District

*[ஆலி + நாடு. திருமங்கையாழ்வாரால் ஆளப்பட்டபகுதி.]*

**ஆலிநீர்** āli-nīr, பெ. (n.) 1. குளிர்ந்த நீர் ; cold water. 2. மஞ்சின் நீர் (மழை); rain. 3. கண்ணீர் ; tears.

க. ஆலிநீர்

*[ஆலி = ஆலங்கட்டி, குளிர்ந்த நீர். ஆலி + நீர்.]*

**ஆலிப்பு** ālippu, பெ. (n.) ஆரவாரம்; great noise, uproar. "ஆலிப்பாலடுத் தந்நூல்களும் விரித்தே" (தாயு. ஆகார. 9).

ம. ஆலிப்பு; க. ஆல், ஆலு, ஆர்

*[ஆல் → ஆலி → ஆலிப்பு.]*

**ஆலியகம்** āliyagam, பெ. (n.) சிறுகுறிஞ்சா (மூ.அ.); edible and medicinal creeper.

*[ஒருகா. ஆரி → ஆரியகம் → ஆலியகம். அரு → அரி → ஆரி = அருகியது, குறுகியது, சிறியது.]*

**ஆலியப்பறை** āliya-p-paṟai, பெ. (n.) தாழ்த்தப்பட்டோருள் ஒரு வகுப்பார் (வின்.); a class of Scheduled Caste.

*[ஆல் = ஆல நாடு.]*

**ஆலியார்** āliyār, பெ. (n.) கடைக்கழகப் புலவருள் ஒருவர்; one of a poets of Sangam age.

*[ஒருகா. ஆலி என்னும் ஊரினராகலாம். இவர் பாடியது புறம் 298.]*

**ஆலிலைத்துயின்றோன்** ālilai-t-tuyiṉṟōṉ, பெ. (n.) 1. ஒருவகை செய்நஞ்சு, காய்ச்சற் பாடாணம்; a kind of prepared arsenic. 2. கண்ணன்; Viṣnu.

*[ஆல் + இலை + துயின்றோன். 1. மருத்துவர் இட்ட குழூஉக் குறிப் பெயராகலாம். 2. ஆலிலையில் துயின்றவனாகக் கருதப்படும் கண்ணன்.]*

**ஆலிலைபோலொட்டல்** ālilai-pōl-oṭṭal, பெ. (n.) வயிற்றுக் கழிச்சலுக்குப் பிறகு வயிறு ஆலிலை போல் ஒட்டிக் காணப்படுதல்; (figuratively) stomach appearing quite flat and incurved after a prolonged diarrhoea. (சா. அக.).

*[ஆல் + இலை + போல் + ஒட்டல்.]*

**ஆலின்மேற் பள்ளி கொண்டோன்** āliṉ – mēṟ – paḷḷi – koṇḍōṉ, பெ. (n.) 1. **ஆலிலைத் துயின்றோன்** பார்க்க; see ālilai-t-tuyiṉṟōṉ. 2. கண்ணன்; Viṣnu.

*[ஆல் + இன் + மேல் + பள்ளி + கொண்டோன்]*

**ஆலின்மேற் புல்லுருவி** āliṉ – mēṟ – pulluruvi, பெ. (n.) 108 கற்ப மூலிகைகளுள் ஒன்றானதும், நச்சுப்பாக நோயைத் தீர்க்க வல்லதும், தன் வயப்படுத்த உதவுவ தாகக் கருதப்படுவதுமான ஆலமரத்துப் புல்லுருவி; the mistletoe of the banyan tree . It is classified as one of the 108 drugs intended for rejuvenation (சா.அக.).

*[ஆல் + இன் + மேல் + புல்லுருவி.]*

**ஆலின்மை** āliṉmai, பெ. (n.) இடம்புரிக்காய்; plant with screw-like capsules. (சா.அக.).

*[ஆல் = சுற்றுதல், வலமாகச் சுற்றுதல். ஆல் + இன்மை = வலமின்றி இடமாகச் சுற்றுதல்]*

**ஆலீடம்** ālīḍam, பெ. (n.) நால்வகை விற்போர் நிலைகளுள் ஒன்று, இடக்கால் முந்துறுத்து வலக்கால் மண்டலிக்கும் வில்போர் நிலை (பிங்.); position of an archer in which the left leg is put forward and the right knee is bent, one of the four vilpōr – nilai. "வலக்கான் மண்டலித் திடக்கான் முந்துறு மதன் பெய ராலீட நிலையதாகும்" (திவா.).

*[ஆல் + இடு – ஆலிடு → ஆலீடு → ஆலீடம். ஆலிடு = வளைந்திடுதல், கால் மண்டலித்திடுதல்.]*

**ஆலு[1]–தல்** ālu–,5செ.கு.வி. (v.i.) 1. ஒலித்தல்; raise a noise, cry aloud. "அன்னச் சேவல் மாறெழுந் தாலும்" (புறநா. 128,4). 2. களித்தல்; to rejoice. (திவ். திருமாலை, 14. வியா.). 3. ஆடுதல்; dance. "கரை நின்றாலு மொருமயில் தனக்கு" (மணிமே. 4,11).

**ம.** ஆலுக

*[ஆல் → ஆலு.]*

**ஆலு[2]–தல்** ālu–, 5 செ.கு.வி. (v.i.) 1. நிறைதல் (த.சொ.அக.); to become full. 2. தங்குதல்;abide. (கலித். 36,2,உரை).

*[ஆல் → ஆலு = சூழ்தல், நிறைதல், தங்குதல்.]*

**ஆலு[3]** ālu, பெ. (n.) நீர்க்குடம் (வின்.); pitcher, a small water jar (W.).

**ம., க.,** ஆலு.

*[ஆல் → ஆலு. ஆல் = நீர்.]*

**ஆலு[4]** ālu, பெ. (n.) ஆந்தை (சா. அக.); owl.

**ம.** ஆலு

*[ஆல் → ஆலு = ஒலி எழுப்பிக் கொண்டிருக்கும் பறவை, ஆந்தை.]*

**ஆலு[5]** ālu, பெ. (n.) 1. கருங்காலி மரம்; ebony tree. 2.பல்; tooth. 3.கிழங்கு; yam.

**ம.** ஆலு

*[ஒருகா. ஆல் → ஆலு = வளைவுடையது. வளைந்த மரம், வளைந்த கோரைப்புல், வளைந்த கிழங்கு.]*

**ஆலுகம்** ālugam, பெ. (n.) 1. அறுசுவைகளுள் புளிப்புத் தவிர்ந்த ஏனை, இனிப்பு, உவர்ப்பு, கார்ப்பு, கைப்பு, துவர்ப்பு எனும் ஐஞ்சுவைகளின் கலப்பு; a mixure of five of the six tastes excepting sour viz. sweet, saltish, pungent, bitter and astringent. 2. உண்ணத்தக்க ஒரு கிழங்கு; an esculent root.

*[ஒருகா. 1. ஆல் → ஆலு → ஆலுகம். ஆலுதல் = சூழ்தல், நிறைதல், கலத்தல். 2. ஆலு[2] பார்க்க; see ālu[2]]*

**ஆலேசிதம்** āleśidam, பெ. (n.) இறங்கழிஞ்சில்; sage–leaved ālaṅgium. It is so called from the notion that when the fruits fall, they scatter far and wide. (சா.அக.)

*[ஒருகா. ஆல் → ஆலே → ஆலேசிதம். ஆலுதல் = சுற்றுதல், சிதறுதல். முற்றிய காய்கள் சிதறும் இயல்புடைய இறங்கழிஞ்சில்.]*

**ஆலை[1]** ālai, பெ. (n.) 1.கரும்பாலை; sugar – cane press. "ஆலை நீள் கரும் பன்னவன் றாலோ" (திவ். பெருமாள். 7,1). 2. கரும்பு; sugar–cane. "ஆலை யஞ்சிலைவேள்" (கந்தபு. காமத்க.90). 3. கருப் பஞ்சாறு; juice of sugar–cane.

**க.** ஆலெ. **ம.**ஆல; **குட.** ஆலெ

*[ஆல் → ஆலை. ஆல் = சுற்று, சுழற்று. ஆலை = கரும்பாட்டுதற்காகச் சுற்றும்பொறி. அதன்வாய்ப்பட்ட கரும்பு, அதன் சாறு.]*

**ஆலை[2]** ālai, பெ. (n.) கள் (பிங்.); toddy, spirituous liquor, fermented liquor.

**Skt.** hālā

*[ஆல் → ஆலை. ஆல் = குளிர்ந்த நீர், குளிர்ந்து புளித்த கள்.]*

**ஆலை[3]** ālai,பெ, (n.) 1. சாலை; hall, apartment. "ஆலைசேர்வேள்வி" (தேவா. 844,7). 2. யானைக் கூடம்; elephant stable. "களிறு சேர்ந்தல்கிய வழுங்கலாலை" (புறநா. 220,3).

**ம.**ஆல **க.** ஆலான, ஆளான .

*[ஆலை = ஆடு மாடுகள் அடைத்து வைக்கும் தொழுவம், யானையைக் கட்டுந் தறி.]*

**ஆலை[4]** ālai, பெ. (n.) ஆலமரம்; banyan tree.

**க.** ஆலெ

*[அகல் → ஆல் → ஆலை.]*

**ஆலை[5]** ālai, பெ. (n.) தொல்லை, துன்பம்; affliction, distress.

*[ஆல் → ஆலை = சுற்றுதல், சுழலுதல், மனச் சுழற்சி, கவலை, துன்பம், தொல்லை.]*

**ஆலை**[6] ālai, பெ. (n.) நீரரரை (இ.வ.); aquatic crotogamus plant (Loc.).

*[ஆல் – ஆலை. ஆல் = நீர்.]*

**ஆலை**[7] ālai, பெ. (n.) ஒருவகைக் கிட்டித் தண்டனை (வின்.); a kind of torture.

*[அலை → ஆலை.அலை = துன்புறுத்து.]*

**ஆலை**[8] ālai, பெ. (n.) 1. கொல்லைப்புறம்; farm house. 2.செங்கற் சூளை; kiln. (சேரநா.).

**ம.** ஆல

*[ அகல் – ஆல் – ஆலை.]*

**ஆலை**[9] ālai, பெ. (n.) மதில்; compound, rampart. திருச்சுற்றாலை மண்டபம் (உ.வ.); pavilion.

*[ஆலுதல் = சுற்றுதல். ஆல் → ஆலை.]*

**ஆலைக்கரும்பு** ālai-k-karumbu, பெ. (n.) வெண் கரும்பு; white variety of sugar-cane.

*[ஆலை + கரும்பு. ஆலை = நீர், நீர் போல் தெளிந்த வெண்மை.]*

**ஆலைக்குழி** ālai-k-kuḻi, பெ. (n.) கரும்பாலையில் சாறு தங்கும் அடிக்கலம்; receptance for the juice in a sugar-cane press.

*[ஆலை + குழி.]*

**ஆலைத்தொட்டி** ālai-t-toṭṭi, பெ. (n.) கருப்பஞ்சாறு காய்ச்சும் சால்; cauldron for boiling sugar-cane juice.

*[ஆலை + தொட்டி.]*

**ஆலைநிம்பம்** ālai - nimbam, பெ. (n.) சருக்கரை வேம்பு; margosa tree characterised by its sweetness after a lapse of 100 years. This is one of the 108 drugs intended for rejuvenation according to Tamil medical science (சா. அக.).

*[ஆலை+ நிம்பம். ஆலை= கரும்பின் சாறு போன்ற இனிப்பு. நிம்பம் = வேம்பு]*

**ஆலைபாய்-தல்** ālaipāy-, 2 செ.கு.வி. (v.i.) 1. ஆலை யாட்டுதல்; to work a sugar-cane mill. "ஆலை பாயோதை" (சேதுபு.நாட்டு.93). 2. அலைவுறுதல்; to move, toss as a ship. 3. மனஞ்சுழலுதல்; to be undecided, vacillating. "நெஞ்சம் ஆலைபாய்ந் துள்ள மழிகின்றேன்" (திருவருட். விண்ணப்பக் கலி. 406).

*[ஆலை = கரும்பாலை. ஆலைபாய்தல் = கரும்பாலைபோல் மனம் ஓய்வின்றிச் சுழலுதல்.]*

**ஆலைமாலை** ālai-mālai, பெ. (n.) 1. அலைச்சல், வருத்தம்; distress, vexation. 2. மயக்கம்; bewilderment (W.).

*[1. அலை → ஆலை. மலை → மாலை. 2. ஆலை மாலை = சுற்றுவது போன்ற மயக்கம். எதுகை மரபிணைச் சொல்.]*

**ஆலையடி-த்தல்** ālai-y-aḍi-, செ.கு.வி. (v.i.) **ஆலை யாட்டு-தல்** பார்க்க; see **ālai-y-āṭṭu-**.

**ஆலையம்**[1] ālaiyam, பெ. (n.) 1. திருச்சுற்றுகளைக் (சுற்றுமதில், சுற்றாலை) கொண்ட பெருங்கோயில்; temple having prakars. (கதி.அக.).

**ம.** ஆலயம் (கோயில்)

*[ஆல்[1] → ஆலை = சுற்றிவருதல், சுற்று மதில், மதிலகத்துக்கோயில். ஆலை → ஆலையம். ஆலை = கோயிலின் சுற்றுமதில்.]*

**ஆலையம்**[2] ālaiyam, பெ. (n.) 1. நெடுங்கூடம்; hall. 2 வீடு; house. 3. நெடிய வீடு; long house. 4. தங்குமிடம்; resting place. 5. நகரம் ; city. 6. யானை கட்டுமிடம்; stable for elephant. 7. யானைக் கூட்டம்; herd of elephants. (கதி. அக.).

*[ஆல்[3] → ஆலை → ஆலையம். ஆல் = நீள், நெடுகச்செல். நீண்ட கூடமும், நெடிய வீடும் ஆலையம் எனப்படும். யானை கட்டும் நெடுந்தறியும், அங்குத் திரளாகக் கட்டப்பட்டிருக்கும் யானைக் கூட்டமும் இடவாகுபெயரால் சுட்டப்பட்டன.]*

**ஆலையம்**[3] ālaiyam, பெ. (n.) மூச்சிழுத்தல், பூரகம்; scientific inhaling or drawing of breath. (சா.அக.).

**ஆலையாட்டு-தல்** ālai-y-āṭṭu-, 15. செ.கு.வி. (v.i.) கரும்பாலைச் சுழற்றுதல், இயக்குதல்; to work a sugar-cane press.

**க.** ஆலெயாடு

*[ஆலை + ஆட்டு.]*

**ஆலையோட்டு–தல்** ālai-y-ōṭṭu-, 15 செ.கு.வி. (v.i.) **ஆலையாட்டு–தல்** பார்க்க; see ālai-y-āṭṭu-.

*[ஆலை + ஓட்டு.]*

**ஆலோடி** ālōḍi, பெ. (n.) **ஆளோடி** பார்க்க; see **āḷōḍi.**

**ஆலோலம்** ālōlam, பெ. (n.) 1. நீரொலி (அக.நி.); sound of gushing water. 2. புள்ளோச்சும் ஒலிக்குறிப்பு; repeated notes or expression employed to drive away birds from corp. "பூவைகாள் செங்கட் புறவங்காளாலோலம்" (கந்தபு.வள்ளி.54). 3. அசைதல், அலைதல் (த.சொ.அக.); move, wander. 4. நடுங்கல், தடுமாற்றம்; trembling, agitation (W.).

**ம.** ஆலோல

*[ஆல + ஓலம். 1. ஆல் = நீர். 3,4. அல் → ஆல் = அசைதல், நடுங்குதல்.]*

**ஆலோன்** ālōṉ, பெ. (n.) நிலவு (சந்திரன்); moon. "கிளைக்கடல் வளைவு மாலோன் கிளருடு வளைவும்" (இரகு.குறை.9).

*[ஆல்[1] → ஆலோன். ஆல்=குளிர்ந்த நீர், ஆலோன் = குளிர்ந்த நீர் போன்ற தன்மையுடைய நிலவு.]*

**ஆவ** āva, இடை. (int.) 1. இரக்கக்குறிப்பு; term expressive of pity. "நாயினேனை யாவ வென்றருளுநீ" (திருவாச. 5.74.) 2. அடைக்கலக் குறிப்பு; term expressive of surrender. "நஞ்சமஞ்சி யாவ வெந்தாயென் றவிதாவிடு நம்மவர்" (திருவாச.5,4).

*[ஒருகா. ஆ + ஆ – ஆவா → ஆவ. 'ஆ' – துன்பம், நோவு ஆகியவற்றையுணர்த்தும் குறிப்பு இடைச்சொல்.]*

**ஆவஞ்சி** āvañji, பெ. (n.) (இசை.) இடக்கை என்னும் ஒருவகைத் தோற்கருவி; (சிலப். 3,47) (Mus.) percussion instrument known as idakkai, a drum made of cow hide.

**மறுவ:** இடக்கை, ஆமந்திரிகை.

*[ஆ + வஞ்சி. ஆவின் (பசு) வஞ்சித் தோலைப் போர்த்தலால் இந்த இசைக்கருவி ஆவஞ்சி எனப் பெயர்பெற்றது. வஞ்சி = வயிறு. பருவமெய்தி கன்றீனுமுன் இறந்த இளம் ஆவின் வயிற்றுத்தோல் இதற்குரியதாயிற்று.]*

**ஆவட்டங்கொட்டு–தல்** āvaṭṭaṅ-koṭṭu-, 15. செ.கு.வி. (v.i.) இல்லையென்று சொல்லித் திரிதல் (யாழ். அக.); to go around denying something.

*[ஆவட்டம் + கொட்டு. ஆவட்டம் = பெரிய வட்டம். ஒன்றுமில்லையென்னும் குறிப்பு.]*

**ஆவட்டேசுவரம்** āvaṭṭēsuvaram, பெ. (n.) ஆயிரத்தெட்டு சிவன் கோயில்களுள் ஒன்று; one of the 1008 Śiva temples.

*[ஆயிரத்தெட்டு → ஆவட்டு + ஈசுவரம்.]*

**ஆவட்டை** āvaṭṭai, பெ. (n.) ஒரு பூண்டு; a plant. (த.சொ.அக.).

*[ஆவட்டம் → ஆவட்டை.]*

**ஆவட்டை சோவட்டை** āvaṭṭai-sōvaṭṭai, பெ. (n.) சோர்வு, தளர்ச்சி; weariness, exhaustion. அவன் ஆவட்டை சோவட்டையிட்டு வந்து விழுந்தான் (உ.வ.). 'ஆவட்டை சோவட்டை' எதுகை குறித்து வந்த மரபிணைமொழி.

*[ஆவட்டை = ஒன்றுமில்லை.]*

**ஆவடி** āvaḍi, பெ. (n.) 1. மாட்டுமந்தை, மாடுகள் தங்குமிடம் (செ. அக.); pen for cattle. 2. தங்குமிடம்; residence, a rest house. 3. வழிப்போக்கர் தங்கும் பொதுவிடம்; a choultry, a place of shelter, lodging for travellers. 4. சிற்றூர்ப் பொதுமனை, சாவடி; place where the chief of a village holds his conclaves. 5. பொருள்கள் வைப்பிடம்; depot. ஆளேற்றுகிற ஆவடி (இ.வ.) 6. சென்னைக்கு அருகே உள்ள ஊர்; name of a suburb of Madras city

*[ஆ + அடி – ஆவடி. ஆ = ஆனிரை, மாட்டுமந்தை. அடி = நிலையம், தங்குமிடம்.]*

**ஆவடுதுறை** āvaḍu-tuṟai, பெ. (n.) தஞ்சை மாவட்டத்திலுள்ள திருவாவடுதுறை, சிவன் கோயில் கொண்ட ஊர் ; a Śiva shrine in Thañjāvūr district. "அதுவோவுன தின்னரு ளாவடு துறை யானே" (தேவா.திருஞான.1.)

*[ஒருகா. ஆ + ஆடு + துறை. திருமூலர் திருமந்திரம் இயற்றிய ஊர்.]*

**ஆவணக்களம்** āvaṇa-k-kaḷam, பெ. (n.) ஆவணப் பதிவு அலுவலகம்; registration office. "ஆவணக் களத்தே அறக்கொண்டு விற்று" (S.I.I.iii.108).

*[ஆவணம் + களம்.]*

**ஆவணக்களரி** āvaṇa-k-kaḷari, பெ. (n.) **ஆவணக் களம்** பார்க்க; see āvaṇa-k-kaḷam. "ஆவணக் களரியே காட்டிக் காப்பிட்டு" (சோழவ.68).

*[ஆவணம் + களரி.]*

**ஆவணம்**[1] āvaṇam, பெ. (n.) 1. பந்தல்; booth, temporary shed. 2. கடைத்தெரு (பிங்.); bazaar, market.

"குறுகியாவணஞ் சித்திரகூட நாற்சந்தி" (திருவிளை.என்வியம்.7). 3. தெரு (திவா); street. 4. கழை (புனர்பூச) நாண்மீன் (திவா); seventh naksatra, as resembling bazaar. "பாலையாவணம் புரை கொண் மூங்கில் புனர்பூசம்" (உள்ள முடை. கவி.16). 5. கடை (கதி.அக.); shop.

ம. ஆவணம். Skt. āpana.

*[காவணம் → ஆவணம். காவணம் = சோலை, சோலைபோன்ற பந்தல், கொட்டகை, கடை, கடைத் தெரு, ஆலமரத்தடியிலும் தோப்பிலும் சந்தை கூடுவதும் அங்காடி வைப்பதும் பண்டை வழக்கம். தெருபோன்ற தோற்றமுடைய புனர் பூச நாண் மீன் ஆவணம் எனப்பட்டது.]*

**ஆவணம்**[2] āvaṇam, பெ. (n.) 1. உரிமை ஒலை; legal document, bond, deed. "ஒராவணத்தால்..... எனை யாளுங் கொண்ட நம்பிரானார்" (தேவா. 977.5). 2. உரிமை (பிங்.); right to property, ownership. 3. அடிமைத்தனம்; slavery, bondage, service. இராவணன் திண்டோளிருபது நெறிதரலூன்றி ஆவணங் கொண்ட.... வண்ணல்" (தேவா. 869,8). 4. அடையாளம்; identification mark, sign.

*[ஆ (கு) + வண்ணம் = ஆவண்ணம் → ஆவணம். ஆ(கு) தல் = உதவுதல், ஊழியஞ்செய்தல், வண்ணம் = எழுத்து. ஆவணம் = ஊழிய ஒப்பந்தம், அடிமையோலை, ஊழியம், அடிமைத்தனம், அடிமைத்தனம் குறித்த அடையாளம்.]*

**ஆவணம்**[3] āvaṇam, பெ. (n.) 1. தேர் மொட்டுப் பொருந்திய பீடம்(த.சொ.அக.); inner part of a car, in which idol is placed. 2. பூந்தட்டு (அக.நி.); flower tray. 3. கோழி (சேரநா.); fowl (Ker.).

*[ஒருகா. காவணம் → ஆவணம். காவணம் = சோலை. பூஞ்சோலை போல் பொலிவுற அமைத்த பீடம் அல்லது தட்டுப்பகுதி. கொண்டையும் வாலும் பொலிந்து தோன்றும் சேவலும், கோழியும் சேர நாட்டுப் புள்ளுவர் (மருத்துவர்) வழக்கில் ஆவணம் எனப்பட்டன.]*

**ஆவணமாக்கள்** āvaṇa-mākkaḷ, பெ. (n.) உரிமை அல்லது கடமைச்சூள் வாங்குவோர்; those who administer oath of office etc. "பொறிகண்டழிக்கும் ஆவண மாக்களின்" (அகம்.77).

*[ஆவணம் + மாக்கள்.]*

**ஆவணவீதி** āvaṇa-vīdi, பெ. (n.) கடைத்தெரு; bazaar. "ஆவண வீதிப் பூவணம்" (திருவிசை.கரு.7,1).

*[ஆவணம் + வீதி.]*

**ஆவணவோலை** āvaṇa-v-ōlai, பெ. (n.) உரிமை யாவணம்; title-deed. "அண்ணலோர் விருத்தன் போல்வந் தாவண வோலை காட்டி" (கந்தபு. வழிநடை.12).

*[ஆவணம் + ஒலை.]*

**ஆவத்தனம்** āvattaṉam, பெ. (n.) எதிர்காலத் தேவையுணர்ந்து பாதுகாத்து வைக்கப்படும் உடைமைகள்; property etc. reserved for future needs. "ஆவத்தனமென்று ..... சேவித்திருக்கும்." (திவ். பெரியாழ்.4,2,6).Skt. ā-vad-dhana.

*[ஒருகா. ஆவத்து + தனம் - ஆவத்தனம். ஆவத்து = துன்பம், கேடு. தனம் = செல்வம்.]*

**ஆவத்து** āvattu, பெ. (n.) துன்பம், கேடு; distress, critical time, affliction, sorrow. (கம்பரா. சூர்ப்ப.86).

Skt. ā-pad. Pkt. āvat.

*[அவி - அவியத்து - ஆவத்து. அவிதல் = கெடுதல், கேடுறல், துன்பமுறல். இச்சொல் ஆபத்து எனவும் வழங்கும்.]*

**ஆவது**[1] āvadu, பெ. (n.) ஆகவேண்டியது, செய்ய வேண்டிய செயல்; thing to be done. "ஆவதாகிய பரிசெலாம்" (கந்தபு.திக்குவி.3).

ம. ஆவது.

*[ஆகுவது - ஆவது.]*

**ஆவது**[2] āvadu, இடை (part.) 1. பின்வருஞ் செய்தியைச் சுட்டிக் குறிக்கும் சொல்; affix indicatting that explanation follows, that is to say. கொல்லையாவது (S.I.I.i. 103.). 2. எண்ணொடு வரும் சொல்; affix of ordinal numbers. இரண்டாவது பாடம், மூன்றாவது வீடு (உ.வ.). 3. ஆகினும்; even if so. அதை விற்றாவது கொடுத்துவிடு (உ.வ.). 4. குறிப்பிட்டதல்லாத, பொதுப்படையான; anything you like, not in particular. ஏதாவது கொடு (உ.வ.) 5. அசைமொழி; an explective. அதாவது (உ.வ.). - இடை. (conj.) விகற்பப் பொருள்தரும் ஓர் இடைச்சொல்; either.......or. அப்படியாவது இப்படியாவது செய் (உ.வ.)

ம. ஆவது.

*[ஆகுவது - ஆவது. ஆகின்ற அது எனப் பொருள் தந்த வினையாலணையும் பெயரே சொல்லிற்றில் இடைச் சொல்லாயிற்று. ஒன்றைப் பிரித்துக் கூறும் பொருளில் துணைச் சொல்லாகி நாளடைவில் துணைச் சொல் தன் பொருளிழந்து இடைச் சொல்லாயிற்று;*

*இடைச்சொல் தன் பொருளிழந்து பிறபொருள் பயந்து நிற்பதும் எப்பொருளும் குறியாதபோது பொருளிலா வறுமொழியாய் அசை நிலையாவதும் உண்டு.]*

**ஆவநாழி** āvanāḻi, பெ. (n.) அம்பறாத்தூணி; quiver. (தேவா.531,8). "ஆவநாழி தானொன்று மருள வடைந்தே" (வேதாரணியபு.)

**ம.** ஆவநாழி; Pkt. cāva (வில்)

*[ஆவம் + (நாளி) நாழி.]*

**ஆவநாழிகை** āvanāḻigai, பெ. (n.) அம்புக்கூடு, அம்பறாத் தூணி; quiver. "சேடாலு நாழிகையிற் படைதிரண்டு" (சீவக.176).

*[ஆவம் + (நாளி) நாழிகை]*

**ஆவம்** [1] āvam, பெ. (n.) 1. வில்லின் நாண் (பிங்.); bow string. . 2. அம்பறாத்தூணி; quiver. "புற்றாகுமாவ முறைவாளிப் புயங்க முண்ண" (நைடத. அன்னத்தைத்தூ. 71).

*[ஒருகா. அவ்வு – ஆவு – ஆவம் → Skt. capa.]*

**ஆவம்** [2] āvam, பெ. (n.) 1. குங்கும மரம்; fragrant tree – (சா.அக.). **ஆவகம்** பார்க்க; see āvagam. . குங்குமம் (சங்.அக.); saffron. 3. கபிலப்பொடி; kamela (சா.அக.). 4. சிவப்பு நிறம்; redishness.

*[ஆவம் – குங்குமம் போன்ற சிவப்பு நிறம்.]*

**ஆவயின்** āvayiṉ, பெ. (n.) அவ்விடம்; there. "ஆவயின் மகிழ்ந்தவை யளித்து" (சீகாழி. சூரியன். 12.) –வி.எ. (adv.) அவ்விடத்தில்; in that place. (தொல்.சொல். 432).

*[அ + வயின். அ → ஆ (சுட்டு நீண்டது). வயின் = இடம்.]*

**ஆவர்** āvar, வினா பெ. (inter, pron.) யாவர், யார்; who. "ஆவரிவை செய்தறிவார்" (திவ். பெரியதி. 3.3.7).

**க.** ஆரு.

*[யாவர் → ஆவர்]*

**ஆவர்த்தகம்** āvarttagam, பெ. (n.) 1. சுழலுதல்; rotating, revolving. 2. சுழற்காற்று (த.சொ.அக.); whirlwind. 3. குதிரை மயிர்ச்சுருள் (த.சொ.அக.); mane. 4. தலைமயிர்ச்சுருள்; a curl of hair. 5. மனக்கலக்கம்; agitation of mind. 6. ஒரு பூண்டு; a plant (unidentified). (சா.அக.). 7. ஒரு நச்சுப் பூச்சி; a kind of venomous insect.

*[ஒருகா. ஆ + வருதல் → ஆவருதல் → ஆவருத்தனம் → ஆவர்த்தனம் → ஆவர்த்தகம். ஆவரல் = முன்வரல், மேலெழுந்துவரல், சுற்றிவரல். மறித்துவரல்; மீண்டும் மீண்டும் வரல். ஆவருத்தகம் – வடதமிழ்ச் சொல்]*

**ஆவரகம்** [1] āvaragam, பெ. (n) உட்தோல்; the thin cellular layer which lines the internal cavities and canals of the body, such as the mouth, the nose, etc. (சா.அக).

*[ஆவரு → ஆவரகம் = சுற்றியிருப்பது, மூடியிருப்பது.]*

**ஆவரணச்சுவர்** āvaraṇa-c-cuvar, பெ. (n.) உள்ளகம் மறைக்கும் கோவில் திருமதில்; temple wall which surround the interior.

*[ஆவரணம் + சுவர் – ஆவரணச்சுவர்]*

**ஆவரணசத்தி** āvaraṇa satti, பெ. (n.) முதற்பொருளின் (மூலப்பிரகிருதியின்) இருண்மை (தமோ குணம்) யிலுண்டான இரு ஆற்றல்களிலொன்றானதும், அறிவத்தை (ஞானத்தை) மறைப்பதுமாகிய மாயையின் வல்லமை, வீடுபேற்றிற்குரிய வழியின்னதென்று தெளிந்த மாந்தரின் அறிவையும் மறைத்து உலகியலில் மூழ்கச் செய்யும் இயல்புடையது; power of illusion, that which veils the real nature of things. It is this power which makes men so utterly blind that they cannot get out of worldly attachment in spite of straight path available to them for spiritual progress.

*[ஆவரணம் – Skt. sakti > த.சத்தி.]*

இறைவன், உயிர், கட்டு (பதி, பசு, பாசம்) மூன்றையும் ஒன்றற்கொன்று வேறுபாடு தெரியாவண்ணம் அறிவைத் திரிபுறுத்தி மறைக்கும் வல்லமை ஆவரண சத்தி (எஞ்சாயல் சுற்றி வளைத்தல்) எனப்பட்டது.

**ஆவரணதேவதை** āvaraṇa tēvadai, பெ. (n.) பரிவார தேவதை (த.நி.போ.247) (த.சொ.அக.); minor deity.

*[ஆவரணம் + தேவதை]*

*[தேய் → தெய் → தெய்வம் → தெய்வதம் → தேவதை.]*

**ஆவரணதோடம்** āvaraṇatōḍam, பெ. (n.) ஒரு குற்றத்தால்மறைக்கப்படும் மற்றொரு குற்றம்; morbid affliction which is being covered up by another or similar affliction. (சா.அக.)

*[ஆவரணம் + Skt. Dōsa. > த. தோடம்.]*

**ஆவரணம்** [1] āvaraṇam, பெ. (n.) 1. மறைப்பு; shelter, screen, covering. "ஆவரணந் தானே பாழ்" (கைவல்ய. தத்துவவி.53) 2. ஆணவ மலம்; one of the three evil passions. 3. சட்டை (சூடா.); shirt, coat,

garment. 4. ஆடை (பிங்.); cloth. 5. கோட்டை (சூடா.); fort, fortification. 6. புறவேலி; fence. 7. கோயில் திருச்சுற்று (பிரகாரம்); arcade. 8. அணிகலன் (நாநார்த்த); ornament. 9. மேற்புடவை (ஆ. அக.); upper portion of the saree.

ம. ஆவரணம். ஆவரணம் > Skt. ā–varana.

*[ஆல் + வரு – ஆவரு + அணம் – ஆவரணம் = சுற்றி வருதல். ஆலுதல் = சுற்றுதல். **ஆல்வருதல்** பார்க்க; see **ālvaru–**.]*

**ஆவரணம்**[2] āvaranam, பெ. (n.) 1. மூடுதல்; closing. "இலிங்கசிரசு ஆவரண மில்லாமல் சூனிய மாயிருந்தால்" (சி.வி.கிரி. 1 உவை). 2. தடுத்தல், தடை (சூடா.); obstruction, hindrance. 3. கேடகம், கேடயம்; a shield, a buckler. 4. ஈட்டி; lance.

*[ஆல் + வரு – ஆவரு + அணம் – ஆவரணம் = சுற்றி வருதல், மூடுதல், தடுத்தல்.]*

*நெடிற்கீழ்லகரமெய் கெடுதல்கூட்டுச்சொற்களில் ஒரோ வழிக் காணப்படும். ஒ.நோ. கால் +படி – காபடி; கால் + மானம் = காமானம் (இ.வ.)*

*ஆவரணம்* > Skt. ā–varana.

வடமொழியில் ஆவரணம் என்னும் சொல்லுக்கு ā–varana, ā–vrit என்பவை முன்வடிவங்களாகக் காட்டப் படினும் 'ஆ' முன்னடையாகவும் வட்டம் என்பதன் திரிபான 'vrit' பின்னடையாகவும் சேர்ந்த கூட்டுச் சொல்லாகவல்லது தனிவேர் முதல் வினையாகக் காட்டப் படாமையின், ஆல்வருதல் (சுற்றி வருதல்) என்னும் வினைவடிவே, வடமொழிச் சொல்லுக்கு மூலமாதல் தெளிவாகும். கூட்டு வினைச் சொற்களில் முன்னடையாக வருவன பொருளில்லாது வாரா. இதன் விளக்கத்தைச் சொற்பிறப்பியல் நெறிமுறைகளில் காண்க. ஆல்வரணம் பார்க்க; see ālvaranam.

**ஆவரி–த்தல்** āvari–, 14. செ. குன்றாவி. (v.t.) மறைத்தல் (சி.சி. 4.19. சிவாக்); to conceal. (செ. அக.).

*[ஆல் + வரு – ஆல்வரு → ஆவருதல் = சுற்றி வருதல், ஆவரி–த்தல் = மறைத்தல்]*

**ஆவரி** āvari, பெ. (n.) அம்பு (அக. நி.); arrow.

*[ஆ+ வரல் = ஆவரல் = முன்வரல், வெளிப்படுதல். ஆ + வரு – ஆவரு → ஆவரி = விரைந்து வெளியேறும் அம்பு. ஒ.நோ. ஆகாட்டு = வாய்திறந்து (வெளிப்பட) காட்டு.]*

ஆவர்த்தனம், ஆவரணம், ஆவிர் பாவம் (வெளிப்படல்) போன்ற பல சொற்களையும் வடசொல் வடிவங்களாகக் காட்டுவோர் அம்பைக் குறிக்கும் '**ஆவரி**' என்பதை வட சொல்லாகக் காட்டாமை அறிக.

**ஆவரிக்கை** āvari-k-kai, பெ. (n.) மறைத்தல்; concealing. "இந்தக் கலாதி தத்துவங்கள் விபுவாயிருக்கிற ஆன்மாவை இலிங்க சரீர மாவரிக்கையால்" (சி.சி.2.55: சிவாக்.).

*[ஆவரி – ஆவரிக்கை.]*

**ஆவரு–தல்** āvaru–, 18 செ.கு.வி. (v.i.) 1. சுற்றி வருதல்; to go round. 2. உடுத்திக் கொள்ளுதல்; to dress. 3. அணிதல்; to wear.

*[ஆல் + வரு – ஆல்வரு – ஆவரு]*

**ஆவரை** āvarai, பெ. (n.) 1. ஆவாரை, ஆவிரைச் செடி (தைலவ. தைல. 135); tanner's senna. 2. நிலவாகை; Tinnevelly senna.

ம. ஆவர.

*[ஆவிரை – ஆவரை]*

**ஆவிரை** பார்க்க; see āvirai.

**ஆவல்**[1] āval, பெ. (n.) 1. பேராசை; craving, great desire, eagerness, earnestness. "ஆவற்பேரன்பினா லறைகின்றேன்" (கம்பரா. சூர்ப்ப. 127). 2. விருப்பம்; desire. "ஆவலாலெமக் காமலர் மரங்களாக்கல்" (வாதவூர. திருப்பெரு. 69).

ம. ஆவல்.

*[அவாவல் – ஆவல்]*

**ஆவல்**[2] āval, பெ. (n.) வளைவு (அக. நி.); bend.

*[ஒருகா → ஆல் → ஆலு → ஆவு → ஆவல். ஆலு = சுற்றுதல், வளைதல்.]*

**ஆவல்**[3] āval, வி.மு. (f.v.) ஆவேன் எனப் பொருள்படும் ஒரு தன்மையொருமை வினைமுற்று; first pers. sing. finite verb – future tense. "கயிலைக்கிணை யாவலென்றே சிந்தித்தது கொல்" (கந்தபு. அகத்தி.6).

*[ஆகு + அல் – ஆகுவல் → ஆவல். 'அல்' உடன்பாட்டுத் தன்மையொருமை வினைமுற்றீறு.]*

**ஆவல்லி** āvalli, பெ. (n.) சீந்திற்கொடி (மூ. அக.); gulancha, the moon creeper. (சா.அக.).


ஆவல்லி – சீந்திற்கொடி

*[ஒருகா. ஆவு + வல்லி – ஆவல்லி. ஆவுதல் = வளைதல். வல்லி = கொடி.]*

**ஆவல்லிவாழை** āvalli vāḻai, பெ. (n.) வெண்கதலி (இரசதாளி) வாழை; a species of plantain with good colour and taste, chumpa banana.

*[ஒருகா. அரு + அல்லி → அருவல்லி → ஆவல்லி + வாழை. அரு = அருமை, சிறப்பு. அல்லி = அல்லிபோன்ற அழகு. 'அல்லி', அழகு குறித்த அடைமொழி.]*

**ஆவலக போளம்** āvalaga pōḷam, பெ. (n.) சிவப்புக் குங்கிலியம் (சா. அக.): red dammer.

*[ஆவலகம் + போளம். ஆவலகம் = சிவப்பு குறித்த அடைமொழி.]*

**ஆவலங்கொட்டு-தல்** āvalaṅ koṭṭu-, 15 செ.கு.வி. (v.i.) ஆர்த்து வாய் கொட்டுதல், வாயாலார்த்து ஆடுதல்; to shout with the mouth, patting it at the same time with the hand, as a sign of triumph, of defiance. "மேவலன் றனதுசென்னி மெல்லிதழதுக்கி விண்மே லாவலங் கொட்டிச்செல்ல" (கந்தபு. சிங்கமு. 438).

*[ஆவலித்தல் = வாய்திறத்தல், ஒலியெழுப்புதல். ஆவலி + கொட்டுதல் – ஆவலங்கொட்டுதல்.]*

**ஆவலப்பேச்சு** āvala-p-peccu, பெ. (n.) வலிவற்ற பேச்சு, வெறும் பேச்சு, வெற்றுப் புலம்பல்; vain talk.

*[அவலப்பேச்சு → ஆவலப்பேச்சு.]*

**ஆவலம்** [1] āvalam, பெ. (n.) ஆவலிக்கும் ஒலி, வாயால் எழுப்பும் ஓசை; noise made with the mouth.

*[ஆவலி → ஆவலம்.]*

**ஆவலம்** [2] āvalam, பெ. (n.) கொல்லை, சிறுதோட்டம்; garden.

*[ஒருகா. ஆவலி → ஆவலம் = சுற்றிலும் வேலியிடப் பட்ட பகுதி.]*

**ஆவலம்** [3] āvalam, பெ. (n.) 1. நூல் சுற்றும் படை மரம் என்னும் நெசவுக் கருவி (இ.வ.); rod round which yarn is wound (Loc.). 2. கூறை, புடவை (அக. நி.); saree.

*[ஆவலி → ஆவலம் = நூல் சுற்றும் கருவி, சுற்றி உடுக்கப்படும் புடவை.]*

**ஆவலர்** āvalar, பெ. (n.) 1. உற்றார், உறவினர்; relatives. 2. கணவர்; husband. 3.காதலர் (பிங்.); lover. (த.சொ.அக.).

*[ஆவல் → ஆவலர். ஆவல் = ஆசை, அன்பு.]*

**ஆவலாதி** āvalādi, பெ. (n.) 1. அடங்காத ஆசை; great desire. 2. அங்கலாப்பு; lamenting out of jealousy. 3. குறை கூறுதல் (அக. நி); complaint, grievance. 4. தூற்றுதல், அவதூறு; slander, defamatory statement (R). 5. பயனற்ற பேச்சு; useless talk.

**ம.** ஆவலாதி.

*[ஆவல் + அதி – ஆவலதி → ஆவலாதி. அதி = மிகுதி. ஆவலாதி = ஆவல் மிகுதி, அடங்காத ஆசை மிகுதியான் தான் எண்ணியது ஈடேறப் பிறரைத் தாழ்த்தி யுரைத்தல், உணர்ச்சி கொப்புளிக்கும் வீண்பேச்சு.]*

*மன்னன் + அதி + மன்னன் – மன்னாதிமன்னன் என்றும், சூரன் + அதி + சூரன் – சூராதிசூரன் என்றும் வரும் தொடராட்சிகளை ஒப்பிட்டு நோக்குக.*

**ஆவலாதிக்காரன்** āvalādikkāraṉ, பெ. (n.) போக்கிரி, கொடியவன்; rogue, scandalous fellow (R.)

*[ஆவலாதி + காரன்]*

**ஆவலி** [1] **-த்தல்** āvali-,4 செ. கு.வி. (v.i.) 1. அழுதல், புலம்பல்; to weep, cry, lament. "ஆவலித் தூற்றுறு கண்ணினன்" (கம்பரா. பள்ளி. 57). 2. ஆசைப் படுதல்; to desire.

*[அவலி – ஆவலி.]*

**ஆவலி** [2] **-த்தல்** āvali-,4 செ.கு.வி. (v.i) 1. கொட்டாவி விடுதல்; to yawn. 2.வாய் திறத்தல்; to open the mouth. "அங்குள்ள பரிசனங்கள் ஆவலித் திரங்கிசூழ" (திருவிளை. வன்னியும். 12). **து.** ஆவல். 3. பட்டினிகிடத்தல்; to be starving. 4. பசியாயிருத்தல்; to be hungry.

*[ஆ + வலித்தல் + ஆவலித்தல் = வாய்திறத்தல், பசியால் வாய் விடுதல்.]*

**ஆவலி** [3] āvali, பெ. (n.) 1. வரிசை, ஒழுங்கு; row, range, series. "மஞ்சுளரோமாவலி" (கம்பரா.76). 2. கீற்று, இரேகை; scratch,line. 3. கூட்டம், ஆள்திரள்; crowd, (சேரநா.)

**ம.** ஆவலி

*[ஆவளி – ஆவலி.]*

**ஆவளி** [2] பார்க்க; see **āvaḷi** [2]

**ஆவலிப்பு** āvalippu, பெ. (n.) 1. பேராசை; keen desire, nostalgia. "ஆவலிப் புடைமை கண்டாய் அரங்கமா நகருளானே" (திவ். திருமாலை. 1) 2. செருக்கு; pride, arrogance. 3. வளைவு; curve, bend, turn.

**ம.** ஆவலிக (சிறிது வளைந்த)

*[ஆவல் → ஆவலிப்பு = பேராசை, ஆசையான் தோன்றும்செருக்கு, மனக்கோட்டம், பிறழ்வு, வள்ளவு.]*

**ஆவளி [1]–த்தல்** āvali–, 4 செ.குன்றாவி (v.t.) ஒழுங்கு படுத்துதல்; to regulate, order (R.).

*[ஆகு + வழி – ஆகுவழி → ஆவழி → ஆவளி. ஆவளித்தல் = ஆகுநெறியில் (செவ்விய முறையில்) செலுத்துதல், ஒழுங்கு படுத்துதல், வரிசைப் படுத்துதல். பழி – பழித்தல் என வினையாவது போல வழி – வழித்தல் என வினையாகும்.]*

வடமொழியில் ஆவளி என்னும் சொல்லின்மையும், ஆவளி என்னுஞ் சொல்லே வடமொழியில் ஆவலி எனத் திரிந்திருத்தலும் அதுவும் வினைச் சொல்லாக ஆளப்படாமையும், ஆ + வல் எனப் பிரித்துப் பொருள் புணர்த்தி வட நூலார் இடர்ப்படுதலும் ஆவளித்தல் தமிழ்ச் சொல்லே என்பதைக் காட்டும்.

**ஆவளி [2]** āvaḷi, பெ. (n.) 1. வரிசை; row, range, series. 2. ஒழுங்கு; order. 3. கொடிவழி, வழிவழி வரும் மரபு, தலைமுறை; continuous line, lineage, dynasty. 4. கைவரை, இரேகை (நாநார்த்த.); marks, as on the body or palm of hand.

*[ஆகுவழி → ஆவழி → ஆவளி.]*

**ஆவளித்தல்** பார்க்க; see **āvali–**.

**ஆவளி [3]** āvaḷi, பெ. (n.) வளி என்னும் சிறு கால அளவு (சமண); small division of time. (Jaina.)

*[ஒருகா. ஆவளி – ஒழுங்குறுத்திய கால அளவு.]*

**ஆவளி[4]** āvali, பெ. (n.) உறுதியின்மை; doubtfulness, uncertainty, undecisiveness. ஆவளிப்பேச்சு. (R.).

*[அவை – அவல் – அவலி – ஆவலி – ஆவளி. அவைத்தல் = குற்றுதல், இடித்தல், குறைபடுத்தல், உறுதியிழத்தல்.]*

**ஆவளிச்சேவகம்** āvali-c-cēvagam, பெ. (n.) நிலையற்ற வேலை, உறுதிப் பாடற்ற பணி; short duration service, temporary work (R).

*[ஆவளி + Skt. sēvaka > த. சேவகம்.]*

**ஆவற்காலம்** āvaṟkālam, பெ. (n.) 1. பெருந்துன்பம் நேரும் காலம்; time of distress. 2. வாழ்நாளின் இறுதிக்காலம்; last days. "சிவநாமந்தன்னை யாவற்காலத்திலிவன் செவியிற் புகவேபெற்றால்" (சிவரக. சிவநாம.45).

*[அவல் → ஆவல் + காலம். அவலுதல் = கெடுதல்.]*

**ஆவறி** āvaṟi, பெ. (n.) அவா, ஆசை; desire. (த.சொ.அக.).

*[அவா – ஆவல் – ஆவறி.]*

**ஆவறியாவறியெனல்** āvaṟi-y-āvaṟi-y-eṉal, பெ. (n.) பேராசை குறித்த அடுக்குத்தொடர்; onom. expr. signifying greed, eagerness, avidity. ஆவறி யாவறியென்று ஓடுகிறான் (வின்.)

*[ஆவறி + ஆவறி. ஆவறி = பேராசை குறித்த ஒலிக்குறிப்பு.]*

**ஆவா** āvā, இடை (int.) 1. இரக்கக்குறிப்பு; an exclamation of pity. "ஆவாவெனக் கொடுங் கூற்றென வொருசார் வரும்" (கந்தபு. சூரபன்.416). 2. வியப்புக்களிப்புக் குறிப்பு; an exclamation of surprise or joy. "ஆவா குறவர்தவ மாரளக்க வல்லாரே" (கந்தபு.வள்ளி. 45). 3. வியப்புக் குறிப்பு: an exclamation of wonder "ஆவா இருவர் அறியா அணிதில்லை அம்பலத்து" (திருக்கோ.).

ம. ஆங்கா; Skt. āhā

*[ஆ + ஆ = ஆவா. – ஒலிக்குறிப்பு இரட்டைக் கிளவி.]*

**ஆவாகனம்** āvāgaṉam, பெ. (n.) 1. ஒரு பொருளில் அல்லது படிமத்தில் எழுந்தருளும்படி மந்திரம் ஓதி தெய்வத்தை யழைத்தல்; invocation to deity by mantras to be present in an object. (சைவச. பொது. 525) 2. தீக் கடவுளுக்குக் கருப்பலி செலுத்துதல்; to offer obeisanceto fire god. (கதி.அக.).

*[ஆவருதல் = முன்வரல், எழுந்தருளல். ஆவருத்துதல் – ஆவாகித்தல் – ஆவாகனம்.]*

**ஆவாகி–த்தல்** பார்க்க; see **āvagi–**,

**ஆவாகான முத்திரை** āvāgāṉa muttirai, பெ. (n.) வழி பாட்டுக் கைமுத்திரை வகைகளுள் ஒன்று (கதி.அக.); hand pose in worship. (செந். 10.425).

*[ஆவாகனம் + முத்திரை]*

**ஆவாகி–த்தல்** āvāgi–, செ.குன்றாவி. (v.t) எழுந்தருளுமாறு மந்திரத்தால் தெய்வத்தை அழைத்தல்; to invoke a deity by mantras to be present in an object. "சிவன் றன்னை யாவாகித்து" (திருமந். 1825). (த.சொ.அக.).

*[ஆ + வருவித்தல் – ஆவாவித்தல் – ஆவாகித்தல். ஆவருவித்தல் = முன்னால் வந்திருக்கச் செய்தல். 'ஆ' முற்படுத்தக் குறிப்புச் சொல். ஆவருவி – ஆவாவி – ஆவாகி > Skt. ā–vāhana.]*

**ஆவாகை** āvāgai, பெ. (n.) நிலவாகை (மூ.அ.); Tinnevelly senna.

*[அரு + வாகை – அருவாகை → ஆவாகை.]*

*பிஞ்சு காயாகும் வளர் நிலைகள் கட் புலனாகா வகையில்விரைந்து நடைபெறுதலின்பெற்றபெயராம் என்பர்.*

**ஆவாசம்** āvāsam, பெ. (n.) 1. நகரம் (பிங்.); town. 2. மருதநிலத்து ஊர் (சூடா.); agricultural town. 3. புகலிடம், வீடு; shelter, asylum, house.

*[ஆ + வாசம். ஆ = முன்னிற்பது, முதன்மை யானது.]*

**ஆவாட்டு** āvāṭṭu, பெ. (n.) **ஆலவாட்டு** பார்க்க; see ālavāṭṭu.

*[ஆலவாட்டு – ஆவாட்டு.]*

**ஆவாப்பம்** āvāppam, பெ. (n.) 1. கூடுதலாகச் சேர்மானப் பொருள்களைச் சேர்த்தல்; throwing additional ingredients into any mixture in the course of its preparation. 2. விதைப் பாத்தி; seed bed. 3. நீர் நிற்கும்படி மரத்தைச் சுற்றிலும் கிண்டிவிடும் பாத்தி; trench for water around a tree. (செ.அக.). 4. வளையல்; bangle. (த.சொ.அக.).

*[ஒருகா. ஆல் + ஆர்ப்பு + அம்– ஆலார்ப்பம். ஆ + ஆர்ப்பம் → ஆவார்ப்பம் → ஆவாப்பம். ஆஓதல் = பொருந்தல், சேர்த்தல், ஆர்த்தல் = கட்டுதல், சேர்த்தல். ஆவார்ப்பம் = சேரச்சேரக் கட்டுதல், பொருத்தல். ஆவாப்பம் → Skt. āvāpa.]*

ஆலாபனை என்னும் சொல்லை இதனுடன் ஒப்பிட்டு நோக்குக.

**ஆவாபம்** āvābam, பெ. (n.) ஆவாப்பம் பார்க்க; see āvāppam.

**ஆவாய்கத்து–தல்** āvāy kattu–, 15 செ.கு.வி. (v.i.) இல்லையென்று சொல்லித் திரிதல் (யாழ்.அக.); to go about denying.

*[ஒருகா. ஆவாய் = திறந்தவாய், இல்லையென்னும் குறிப்பு. கத்துதல் = வெளிப்படுத்தல்.]*

**ஆவாயம்** āvāyam, பெ. (n.) 1. பேறுகாலத் துன்பம், மகப் பேற்று வேதனை; pangs of child-birth, labour pain. 2. கடுமையான பிள்ளைப்பேறு, அல்லற் படுத்தும் பிள்ளைப்பேறு; painful child birth.

*[அரு + பாயம் – அருபாயம் → ஆபாயம் → ஆவாயம். பயத்தல் = பிள்ளை பெறுதல். பயம் – பாயம். குடகு மொழியில் இன்றும் பிள்ளைப்பேற்றை (பிரசவத்தை) "பாயம்" என்பதை, ஒப்பிட்டு நோக்குக.]*

**ஆவாரகம்** āvāragam, பெ. (n.) மறைப்பு; that which covers, screen, veil. "சர்வான்மாக்களுக்கும் ஆவாரக மல்ல" (சி.சி.2.80 சிவாக்.).

*[ஆவரகம் – ஆவாரகம்.]*

**ஆவாரங்கரி** āvāraṅkari, பெ. (n.) ஆவாரைவிறகை யெரித்து அதனின்றும் எடுத்தகரி; charcoal obtained by burning the **āvārai** fuel. (சா.அக.).

*[ஆவாரை + கரி.]*

**ஆவாரம்** āvāram, பெ. (n. )1. **ஆவாரகம்** பார்க்க; see āvāragam. 2. ஆவாரைச் செடி; tanner's senna.

**ஆவாரம்பூச்சம்பா** āvāram pū–c–cambā, பெ. (n.) ஐந்து மாதத்தில் விளையும் சம்பா நெல்; a kind of red paddy reaped in five months (சா.அக.).

*[ஆவாரை – ஆவாரம் + பூ + சம்பா. செம் – செம்பை – செம்பா = செந்நிற நெல்.]*

**ஆவாரமூலி** āvāramūli, பெ. (n.) ஒரு கொடி வகை; creeper (சா.அக.).

*[ஒருகா. ஆவாரை + மூலி.]*

**ஆவாரை** āvārai, பெ. (n.) 1. ஆவிரைச்செடி (பதார்த்த. 240); tanner's senna. "ஆவாரை மூலியது" (பதார்த்த. 254). 2. நிலவாகை; Tinnevelly senna. 3. ஆவாரை வேர் ; tanner's root

**க.** ஆவரி; **ம.** ஆவீரம்.

*[ஆவிரை → ஆவரை → ஆவாரை.]*

**ஆவாரை ஐந்து** āvārai–aindu. பெ. (n.) ஆவாரச் செடியின் இலை, பூ, வித்து, பட்டை, வேர் என்னும் ஐந்து மருந்துச் சரக்கு; the five medicinal products of tanner's senna viz, leaf, flower, seed, bark, root.




**ஆவாரைநெய்** āvārai ney, பெ. (n.) ஆவாரை வித்தினின்றும் எடுக்கும் நெய்; oil extracted from the seeds of the plant āvārai.

*[ஆவாரை + நெய்]*

**ஆவாரைப் பஞ்சகம்** āvārai–p–pañjagam, பெ. (n.) **ஆவாரை ஐந்து** பார்க்க; see āvārai aindu. "ஆவாரைப் பஞ்சகங் கொளத்தி சுரந் தாகமும் போம்" (பதார்த்த.392).

*[ஆவாரை + பஞ்சகம்]*

**ஆவாலம்** āvālam பெ. (n.) **ஆலவாலம்** பார்க்க; see ālāvālam

*[ஆலவாலம் → ஆவாலம்.]*

**ஆவாவிரை** āvāvirai, பெ. (n.) ஆவாரைச் செடி; tanner's senna.

*[ஒருகா. ஆகு + விரை – ஆகுவிரை – ஆவுவிரை – ஆவாவிரை – ஆவிரை – மருந்துச் சரக்காக ஆகும் விரை அல்லது வித்துச் செடி.]*

**ஆவி¹–த்தல்** āvi–,4 செ.கு.வி. (v.i) 1. வாய்விடுதல், வாய்திறத்தல்; to open the mouth so as to express some thing loudly. 2. பெருமூச்சு விடுதல்; to sigh, as expressing grief. "இரும்பசியது கூர வரவமா விக்கும்" (திவ். பெரியதி.1,2,8). 3.கொட்டாவி விடுதல் (பிங்.) to gape, to yawn.

**க.** ஆகலிசு (வாய்திற); **ம.** ஆவிக்குக; **தெ.** ஆவுலின்சு (வாய்திற); **து.** ஆவளு; **கோத.** ஆவச், ஆய்வ; **து.**ட ஒபள்யு, ஒய்யு; **குட.** ஆவளிச்; **பர்.** ஆமு, ஆவு; **கட.** ஆமு; **குரு.** ஔவி, ஆனா; **மா.** ஆலொலெ; **பிரா.** ஆவானிங்.

*[ஆவித்தல் = வெப்பமூட்டுதல் என்னுஞ் சொல், இருவகை வேரினின்று கிளைத்த சொல். இஃது இட வழக்குக் கேற்பப் பொருள் திரிபுற்றது.]*

ஆ – வாய்திறத்தல் ஒலிக்குறிப்புச் சொல். ஆகாட்டு = வாய்திற. ஆ என்னு – ஆன்னு (கொச்சை) வாய்திற. ஆவித்தல் = வாய்திறத்தலால் வெளிவரும் வெப்ப ஆவி, வெது வெதுப் பூட்டுகை, வெப்பமூட்டுகை. ஆவித்தல் = வாய்விடுதல் (சீவக. 3124), பெருமுச்சு விடுதல். "இரும்பசியது கூர வரவமாவிக்கும்" (திவ். பெரியதி. 1,2,8) "உயிர்த்தன ளாவியே" (கம்பரா. உலா. 30).

**ஆவி²–த்தல்** āvi– 4. செ.குன்றாவி. (v.t.) 1. வெளி விடுதல்; to let out, to smoke. "தூப பாத்திரம் ஆவித்த புகையைச் சுழற்றி" (சீவக.2426, உரை) 2.வேக வைத்தல்; to boil, stream.. 3. வெப்பமூட்டுதல்; to heat.

*[ஆ → ஆவு = முன்செல், மேலெழும்பு. ஆவு → ஆவி = மேலெழும்பி வரும் நீராவி அல்லது புகை. மேலெழும்பி வரும் கருத்து வெளியிடும் பொருளும் பெறும். மேலெழும்பி வரும் ஆவி வெப்பமூட்டும் இயல்பால் வேக வைத்தல், வெப்பமூட்டுதல் பொருள் தரும்.]*

**ஆவி³ –த்தல்** āvi–, 4 செ. குன்றாவி (v.t.) அழிதல், கெடுதல்; to decay, to perish.

**OF.** avarice; **Sp.** averta; **Pg., It.** avaira; **Du.** avarij; G.hauarie; **Arab**. awanja – damaged goods. **F.**arwar–damage. **E.** ave rage – apportionment of loss of ship cargo, freight, through unavoidable accident.

*[அவி–த்தல் → ஆவி–த்தல். ஆவித்தல் – அழிதல் பொருளில் மேலையாரிய மொழிகளில் வேரூன்றி யுள்ளது.]*

**ஆவி⁴–த்தல்** āvi–⁴ செ. குன்றாவி. (v.t.) ஆரத் தழுவுதல்; to embrace. "ஆவிஆவிஆவிஆவி அன்பருள்ள முற்றதே" (சிவவாக்.).

**ஆவி⁵** āvi, பெ. (n.) 1. மூச்சு, உயிர்ப்பு (திவா.); breath. 2. பெருமூச்சு, நெட்டுயிர்ப்பு; sigh. "உயிர்த் தனளாவியே" (கம்பரா. உலா. 30). 3. கொட்டாவி; yawn. (சீவக.1572). 4.நீராவி; steam, vapour. (பெரும்பாண். 469, உரை). 5. புகை; smoke. "நாவியங் காரகி லாவியுந் தோய்குழல்" (தஞ்சை வா.20). 6. புகையிலை; tobacco. "கடுபுளி பாறயிர்கைப் பாவி கண்டு" (தைலவ.பாயிர.58). 7. நறுமணம்; fragrance, odour. "கள்ளாவி நாறுங் கமழ் கோதையின்" (சீவக. 20). 8. பிட்டு (பிங்.); a kind of cake dressed in steam.

**ம., க.** ஆவி; **தெ.**ஆவி, ஆவிரி; **பர்.** ஆகுப். **குட.** ஆய்வ; **துட.** ஒய்ய.

ஆவு–முன்செல், மேலேறு. ஆவி–நீராவி, புகை. ஆவித்தல் – ஆவி வெளிவரச் செய்தல், புகை வெளிவரச் செய்தல், புகை மேலெழும்பச் செய்தல், வேகவைத்தல். (ஒ..நோ; ஆவு – வாவு (தாவு). ஆவுதல் – வாவுதல், வாவல் – வௌவால்). ஆவு என்னும் வேரினடியாக உலகமொழிகளில் இச் சொல் மேகம், பறவை என்னும் பொருள்களில் புடைபெயர்ந்துள்ளது. Skt. avi–bird. Lvavis – bird. (vf. a.iation, avion - aeroplane)

**ஆவி⁶** āvi, பெ. (n.) 1. உயிர்; life. "பதுமகோமளை யெனுந் திருமங்கையாவி நீங்கினள்" (கந்தபு. இரணிய புல.2). 2. இறந்தோர் உயிர்கள்; spirits of the dead. 3. ஆதன் (ஆன்மா); soul. "ஆவியு முடலு முடைமையெல்லாமும்" (திருவாச.33.7). 4. மனம்; mind. "என்னாவிமலர்மேன்மிதித்து" (சீவக.1588). 5. தூய ஆவி (கிறித்.); Holy spirit. 6. வலிமை; strength, power. "ஆவியில் மனிதர்தம்மை" (கம்பரா. நிந்தனை. 69). 7. உயிரெழுத்து; vowel. "ஆவியுமொற்றும்" (நன். 101).

*[ஆவு → ஆவி. முன்செலல், மேலேறுதல், என்னும் பொருளில் ஆவியென்னும் சொல் மேலெழும்பி கண்ணுக்குத் தெரியாமல் போய்விடும் உயிரையும், உயிரின் வேறு பிரித்தறியாத ஆதனை (ஆன்மா)யும், குறித்தது. உயிரைச் செயற்படுத்தும் மனமும், உயிர் துலக்கத்தின் அடையாளமாகிய உடல் வலிமையும் ஆவியென்றே பெயர் பெற்றன. உயிர் போன்றே மொழியினியக்கத்திற்கு உயிரான எழுத்தும் ஆவி எனப்பட்டது.]*

**ஆவி** [7] āvi, பெ. (n.) 1. வேளிர் தலைவருள் ஒருவன், வேள் ஆவி; name of an ancient chief of the vēl tribe. "நெடு வேளாவி" (அக.1,61).

*[ஆவு = ஆவி, முன்செலல், மேலேறுதல் என்னும் அடிப்படைப் பொருள்தரும் ஆவு என்னும் வேரினடியாகப் பிறந்த ஆவியென்னும் சொல் முற்படல், மேம்படல், முதன்மையுற்று விளங்குதல் என்னும் பொருளில் (முதன்மையும் தலைமையும் பெற்றவன் என்னும் பொருளில்) மன்னன் ஆவியையும் அவன் குடியையும் குறித்தது.*

*பேகனை வையாவிக்கோ பெரும் பேகன் என்றும், பதுமன் தேவியின் தந்தை வேளாவிக்கோமான் என்றும், வேளாவியின் மலை (பொதினி) ஆவிமலை, ஆவிநன்குடி எனவும் வழங்கப் பெற்றுள்ளதைக் காணலாம். ஆவி மரபினர்க்கு ஆவிநன்குடி என்பது மலையும் வையா(வி)புரி தலைநகரமுமாம்.]*

**ஆவி** [8] āvi, பெ. (n.) 1. வெப்பம் (கதி.அக.); heat. 2. மட்பாண்டங்களைச் சுடும் சூளை; kiln.

**ம.,பட.** ஆவி.; **க.** ஆவெ, ஆவி, ஆவிகெ; **து.** ஆவெ; **தெ.** ஆவி. **க.** ஆவிகண்ணு – செங்கண், சூட்டுக்கண். **குட.** ஆவலிச்; **கோத.** ஆவச்; **துத.** ஒபுஸ்ய; **பர்.** ஆள, ஆள்குட்; **கட.** ஆய்; **ஒல்.** ஆம்; **குரு.** ஒலஆனா; **மா.**ஆவொலெ; **பிரா.** ஆவானிங்; **மரா.** ஆவா; **இந்.** ஆவா; **சீன.** ஆவொ – கொதிக்கவை, வேகவை, கஞ்சிகாய்ச்சு. **மலே.** அவ(ன்) மேகம்.**பாலி.** ஆவொப்ப – மட்பாண்ட சூளை, அடுப்பு. ஆவொட்ட – குழி, பள்ளம்.

*[ஆவு – ஆவி.]*

வாய் திறத்தலாகிய ஆவித்தல் என்னும் வினையினின்று தோன்றிய புகைப்பொருள் தரும் ஆவி என்னும் பெயர்ச்சொல் மடிந்து மீண்டும் வினைச் சொல்லாகி வெப்பமூட்டும் பொருள் தந்து மீண்டும் பெயராயிற்று..

**ஆவி** [9] āvi, பெ. (n.) நீர்நிலை, குளம்; tank ."ஆவியம் புன லறா தமரும் (கந்தபு. சயந்தன் புல.8.).

**Skt.** Vapi – large, oblong pond, an oblong reservoir of water, pool or lake (M.S.E.D.).

**ம.** ஆவி; **க.** ஆவெய குண்ட்டெ – ஆவிக்குளம்.

**த.** ஆவித்திறை – குயவனின் சூளைக்கு வாங்கப்பட்ட வரி.

*[ஆவு → ஆவி. ஆவி = சூளை, சூளையிருந்த பள்ளத்தில் தேங்கிய நீர் நிலை.]*

ஆவித்தல் – வேகவைத்தல், எரித்தல், அழித்தல் பொருள்களிலும் எரித்தல், ஒளிர்தல் பொருள்களிலும் இடந்தோறும் காலந்தோறும் வேறுபட்டு வழங்கிவந்திருக்கிறது. ஒளிவிடற் பொருளில் வடவனலை (aurora borealis) ஆவியனல் என்னுஞ் சொல்லாட்சி பண்டு குறித்திருக்கிறது. அதன் விளைவாக ஆவி – auro என மருவி மேலையாரிய மொழிகளில் இன்றும் வழங்கி வருகிறது.

aurora – luminous atmospheric (prob. electrical) phenomenon radiating from earth's northern (borealis) or southern (–australis) magnetic pole; dawn; colour of sky at sunrise: (L. = dawn, goddess of dawn) (COD)

ஆவித்தல் – அழித்தல் பொருளில் மேலையாரிய மொழிகளில் வேரூன்றியுள்ளது.

**OF.** avarice. **Sp.** averta. **Pg., It.** avaira. **Du.** avarij. **G.** hauarie. **Arab.** awanja – damaged goods. **F.** awar – damage. **E.** average – apportionment of loss of ship cargo, freight, through unavoidable accident.

**ஆவி எழும்புதல்** āvi – elumbudal, பெ. (n.) நீராவி அல்லது புகை மேலெழுதல்; rising of steam or smoke.

*[ஆவி + எழும்பு]*

**ஆவிக்கண்** āvikkaṉ, பெ. (n.)சூட்டினால் சிவந்த கண்; eyes becoming red because of heat.

**க.** ஆவிகண்ணு.

*[ஆவி + கண்]*

**ஆவிக் கப்பல்** āvi–k–kappal, பெ. (n.) நீராவிக் கப்பல் (சேரநா.); steam ship (Ker.).

*[ஆவி + கப்பல்]*

**ஆவிக் கலம்** āvikkalam, பெ. (n.) வெள்ளாவிப் பானை (சேரநா.); washerman's boiler (Ker.).

*[ஆவி + கலம்.]*

**ஆவிக்காட்டு–தல்** āvi–k–āṭṭu–, 12 செ. குன்றாவி. (v.t.) தெய்வப் படையல் செய்தல் (நிவேதனம் செய்தல்) (திவ். பெரி. 3.3.8. வியா. பக். 580.); to make offering of food to a deity.

*[ஆவி + காட்டுதல்]*

**ஆவிக்குளம்** āvikkuḷam, பெ.(n.) மட்பாண்டச் சூளையிலிருந்த பள்ளம்; large pit dug out by potters converted in to a village tank.

**க.** ஆவெய குண்ட்டெ

*[ஆவி + குளம். ஆவித்தல் – வாய்திறத்தல், கொட்டாவி விடுதல், வெப்பமூட்டுதல், வேகவைத்தல், மட்பாண்டத்தொழிலாளர் பெருமளவில் மட்பாண்டங் களைச் செய்வதால், குழித்த நிலம் பெரும் பள்ளமாக மாறி அதுவே பக்கப் படிக்கட்டுகள் கட்டப்பட்டு நிலைத்த நீர் நிலையாக மாற்றப்படும் வழக்கம் இந்தியாவின் பலவிடங்களிலும் பின்பற்றப்பட்டு*

*வந்திருக்க வேண்டும். ஆதலால், மட்பாண்டச் சூளையிலிருந்த பெருங்குழிகள் நீர்நிலைகளான போது ஆவிக்குளம் என்றும் பெற்றன.]*

மட்பாண்டச் சூளைக்கு 'ஆவி' என்பது பரவலான பெருவழக்குச் சொல். ஆவி என்னுஞ் சொல்லே நாளடைவில் வகர முன்மெய் சேர்க்கப்பட்டு வாவி என்றும் வடமொழியில் வாபி (Vapi) என்றும் வழங்கத் தலைப்பட்டது. ஒ.நோ: ஆவு (முன்செலல்) → வாவி (தாவு). ஆவல் → வாவல் (வௌவால்). வடமொழியில் வாபி என்னும் சொல்லுக்கு வேரில்லை. ஆவி என்னும் சொல்லும் வடமொழியில் இல்லை. வாவியை வடமொழி தமிழிலிருந்து கடன் பெற்றிருக்கிறது. வடமொழி யிலுள்ள வாபி (Vāpi) நீள்சதுர வடிவமுள்ள குளத்தையே குறிக்கிறது.

தில்லையிலிருந்து சென்னைக்கு வந்துள்ள இளம் பொறியாளர் திரு. சோமசுந்தரம் தில்லை கிழக்குக் கோபுர யாகசாலையடுத்த திருக்குளத்தை உள்ளூர்மக்கள் ஆவிக்குளம் என்று வழங்குவதாகவும், பழங்காலத்தில் அக்குளமிருந்த இடத்தில் மட்பாண்டத் தொழிலாளர் சூளை வைத்திருந்ததாக நிலவும் செவிவழிச் செய்தியையும் கூறினார். இந்திய மொழிகள் பலவற்றிலும், குறிப்பாக வடபுலமொழிகளில் மட்பாண்டத் தொழிலாளர்களின் சூளை 'ஆவி' என்றே குறிக்கப் படுகிறது. வேகும் தொழிலை முழுவதும் ஏற்காமல் வெப்பமுறுதல் மட்டும் ஏற்கும் சலவைத் தொழிலாளரின் அழுக்குத் துணி வேக வைக்கும் அடுப்பு 'வெள்ளாவி' (வெள் – வெறுமை, இன்மை) எனப்படுதலை ஒப்பு நோக்குக. (கருங்களமர் – வயலில் உழைக்கும் வேளாளர். வெண்களமர் – உழுவித்துண்ணும் வேளாளர். வெண்மை – செயற்பாடின்மை).

**ஆவிக்கொழுக்கட்டை** āvi-k-kolukkattai, பெ. (n.) நீராவியினால் வேகவைத்த இனிப்பு; puff–like pastry dressed in steam.

*[ஆவி + கொழுக்கட்டை]*

**ஆவிக்கோ** āvikkō, பெ. (n.) கடைக்கழக கால வள்ளல்களில் ஒருவன்; philanthropical chief in Sangam age. **பேகன்** பார்க்க; see pēgan.

**ஆவிகாட்டல்** āvaikattal, பெ. (n.) வேது பிடித்தல்; to have steam bath, to expose to vapour.

*[ஆவி + காட்டல்]*

**ஆவிகிளம்பல்** āvikiḷambal, பெ. (n.) காய்ச்சலால் உடம்பில் அதிக சூடுண்டாகி ஆவி கிளம்பல்; vapour arising from the body as a result of excessive temperature due to fever.

*[ஆவி + கிளம்பல்.]*

**ஆவிகை** āvigai, பெ. (n.) பற்றுக்கோடு (த.சொ.அக.); hold, support. "ஆகாயம் போவார்க்கு மாவிகை யோ" (ஒழிவி.கிரியை.5.).

*[ஆவி + கை.]*

**ஆவிச்சேர்-த்தல்** āvi-c-cēr–, 9 செ.குன்றாவி. (v.t.) கட்டியணைத்தல்; to embrace. ஆவிச்சேர்த்து முத்த மிட்டான். (இ.வா.).

*[ஆவி + சேர்த்தல்.]*

**ஆவிசீவாளம்** āvi-cīvāḷam, பெ. (n.) உடல் பொருள் ஆவி; one's goods, body and soul. "ஆவிச்சீவாள மெல்லாம் வாங்கி விடுகிறான்" (இராட்.).

*[ஆவி + சீவாளம். ஆவி (உயிர்) முதலாகச் சீவித்தற்கு (வாழ்தற்கு) வேண்டியவை.]*

**ஆவிடை** āvidai, பெ. (n) **ஆவுடையாள்** பார்க்க; see **āvudatyāḷ.**

*[ஆவுடை – ஆவிடை]*

**ஆவிடையார்** āvidaiyār, பெ. (n.) **ஆவுடையாள்** பார்க்க; see **āvudaiyāl.**

**ஆவித்திறை** āvi-t-tirai, பெ. (n.) குயவனின் சூளைக்கு இடப்பட்ட வரி; tax collected on kiln.

*[ஆவி + திறை.]*

**ஆவிதம்** āvidam பெ. (n.) 1. துறப்பணம், துளைக்கும் ஊசி (த.சொ.அக.); piercing needle, drilling bit. 2. திருகூசி; screw.

*[ஒருகா. ஆழி – ஆளி – ஆவி – ஆவிதம்]*

**ஆவிநன்குடி** āvinankudi, பெ. (n.) 1. வேள் ஆவியின் மலை; hill of Vēḷ Āvi. "ஆவிநன்குடி அசைதலு முரியன்" (திருமுருகா. 176). 2. பழநி என்னும் ஊர்.; Palani, a town.

*[ஆவி + நன் + குடி]*

**ஆவிநீர்** āvinīr, பெ. (n.) நீராவியைக் குளிரவைத்து உண்டாக்கும் நீர்; distilled water, or water obtained by condensing steam.

*[ஆவி + நீர்]*

**ஆவிப்பதங்கம்** āvi-p-padaṅgam, பெ. (n.) 1. வைப்புச் சரக்கு (த.சொ.அக.); a prepared medicine.. 2 பதங்க முறையாற் செய்யுமோர் வகை மருந்து; medicine prepared by the process of sublimation.

*[ஆவி + பதங்கம்]*

**ஆவிப்பு** āvippu, பெ. (n.) கொட்டாவி; yawning.

*[ஆவி → ஆவிப்பு]*

**ஆவிபறிதல்** āviparidal, பெ. (n.) 1. உயிர் நீங்கல்; dying. 2. நீராவி எழும்புதல்; rising of steam.

*[ஆவி + பறிதல்]*

**ஆவிபிடி-த்தல்** āvipiḍittal, 4. செ.கு.வி. (v.i.) 1. வேது பிடித்தல்; to have a vapour bath. 2. ஆவிகாட்டுதல்; steam bath generally taken in cases of cold, fever, etc. (சா.அக.).

*[ஆவி + பிடி]*

**ஆவிபிரிதல்** āvipiridal, பெ. (n.) சாதல்; dying.

*[ஆவி + பிரி.]*

**ஆவிபோக்கல்** āvipōkkal, பெ. (n.) 1. உயிர்நீக்குதல்; taking away life, killing. 2. பேசிப்பேசிக் களைத்தல், மிகுதியாகப் பேசுதல்; wasting of energy by excessive talk.

*[ஆவி + போக்கல்]*

**ஆவிபோதல்** āvipōdal, பெ. (n.) உயிர் நீங்கல்; dying.

*[ஆவி + போதல்]*

**ஆவியம்** āvyam, பெ. (n.) 1. உயிர்; life. 2. உடல்வலிமை; strength. 3. உடம்பு; body. (சா.அக.).

*[ஆவி + அம்]*

**ஆவியர்** āviyar, பெ. (n.) 1. வேளாவியின் மரபினர்; descendants of Vēlāvi or Pegan. "அதுமனெம்பரிசில் ஆவியர் கோவே" (புறநா.147). 2. வேளாளர் (அக.நி.); Velalar. 3. வேடர் (அக.நி.); hunters.

*[ஆவி + அர்]*

**ஆவியர்குலம்** āviyar kulam, பெ. (n.) வையாவிக்கோ பெரும்பேகன் (வள்ளல்களில் ஒருவன்) தோன்றிய குடி; name of class to which Vaiyavi-k-ko-Perum Pegan belongs.

*[ஆவி → ஆவியர் + குலம்]*

**ஆவியர்கோ** āviyarkō, பெ. (n.) வள்ளல் பேகன்; Pēgan, a philanthrophic king. "ஆவியர்கோ" (புறநா.147).

*[ஆவி + அர் + கோ]*

**ஆவியர்கோமான்** āviyarkōmān, பெ. (n.) **ஆவியர்கோ** பார்க்க; see āviyarkō.

*[ஆவி + அர் + கோமான்]*

**ஆவியர்பெருமகன்** āviyar perumagan, பெ. (n.) பேகன் (சிறு.பா.86) Pēgan **ஆவியர்கோ** பார்க்க; see aviyarko.

*[ஆவி + அர் + பெருமகன்]*

**ஆவியாடு** āviyāḍu, பெ. (n.) பள்ளாடு, குறியாடு (சேரநா.); a kind of goat (Ker.).

*[ஆவி + ஆடு.]*

**ஆவியாதல்** āviyādal, பெ. (n.) ஆவியாய்ப் போதல்; evaporating.

*[ஆவி + ஆதல்]*

**ஆவியிறக்கம்** āvi-y-iṟakkam, பெ. (n.) வடித்தல்; distillation.

*[ஆவி + இறக்கம்]*

**ஆவியேகல்** āviyēgal, பெ. (n.) **ஆவியாதல்** பார்க்க; see āviyādal.

*[ஆவி + ஏகல்.]*

**ஆவியேற்றம்** āviyēṟṟam, பெ. (n.) பெருமூச்சு, மூச்சை அடக்கிவைக்கும் ஓகநிலை; condition in which the respiration is held up and retained. (சா.அக.)

*[ஆவி+ஏற்றம்.]*

**ஆவிரங்காய்** āvirangāy, பெ. (n.) ஆவாரைக்காய்; fruit of tanner's cassia (W.).

*[ஆவாரை – ஆவிரை + காய்]*

**ஆவிரதம்** āviradam, பெ. (n.) சுழற்சி (நாபதீப); whirl.

*[ஒருகா : அலையுறு → ஆவுறு → ஆவிர் → ஆவிரதம்]*

**ஆவிரம்** āviram, பெ. (n.) 1. நிரயங்களுள் (நரகம்) ஒன்று (நாமதீப.); one of several hells. 2. இடையர்சேரி; village of herdsmen.

*[ஆவீரம் – ஆவிரம்.]*

**ஆவிருந்து** āvirundu, இடை. (Part.) ஒரு நிகழ்கால இடைநிலை; present tense marker. "உண்ணா விருந்து" (நன். 145, இராமானுச. உரை). "கரும மாராயா விருந்து" (S.I.I. iii. 137).

ஆ. + இருந்து – ஆவிருந்து. செய்யா என்னும் இறந்தகால வினையெச்ச வாய்பாட்டின் ஈற்றெழுத்தும் வினையெச்சத் தொடரின் வருமொழியும் (செய்யா விருந்தான்) சேர்ந்த வடிவம்.

நன்னூல் இயற்றிய பவணந்தியார் சமணநெறி சார்ந்து வட புல மொழிகளில் தேர்ச்சி பெற்றவராகையால் செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சத்தின் ஈற்றெழுத்து ஆகாரத்தை வருமொழியுடன் புணர்த்து நிகழ்கால இடைநிலையென்று காட்டி விட்டார். காட்டிய மேற்கோள் 'உண்ணா விருந்து' என்பதும், 'ஆவிருந்து' என்னும் இலக்கண வகைமையும் உண்மையில் நிகழ்காலம் காட்டுவனவல்ல. ஆயிரு, (ஆயிருக்கின்றான்), உண்ணாயிருக்கின்றான் என எடுத்துக்காட்டு தந்திருப்பின் பொருத்தமாயிருந்திருக்கும்.

நன்னூலார்க்கு முந்தைய இலக்கண ஆசிரியர்கள் தமிழிலுள்ள தொடர் நிகழ்காலம், தொடர் இறந்தகாலம் ஆகியவற்றை முற்றாக எடுத்துக் காட்டவில்லை. தொடர் இறந்த

காலத்தை இறந்தகாலம் என்றும் தொடர் நிகழ்காலத்தை நிகழ்காலம் என்றும் குறித்துச் சென்றுள்ளனர்.

உண்டான் – இறந்தகாலம்.

உண்ணாநின்றான் – (உண்டுகொண்டிருந்தான்), தொடர் இறந்தகாலம்.

உண்ணா நிற்கின்றான் – (உண்டு கொண்டிருக் கின்றான்) தொடர் நிகழ்காலம்.

உண்ணா நிற்பான் – (உண்டு கொண்டிருப்பான்) தொடர் எதிர்காலம்.

செய்து, செய்பு, செய்யா, செய்யூ, செய்தென என்னும் ஐந்து வாய்பாடுகளும் இறந்தகாலம் காட்டுவன. 'செய்து' இடைநிலையாலும் ஏனையவை இறுதி நிலையாலும் இறந்த காலம் காட்டும் (ஆறுமுக நாவலர் உரை.)

செய்து செய்பு செய்யாச் செய்யூ
செய்தென செய–செயின் செய்யிய செய்யியர்
வான்பான் பாக்கின வினையெச் சம்பிற
ஐந்துமொன் றாறுமுக் காலமு முறைதரும் (நன். 343)

நன்னூலார் இவற்றை முக்காலம் காட்டுவனவாகப் பிரித்தாலும் தொல்காப்பியர் பொதுப்பட வினையெஞ்சுகிளவி (வினை யெச்சம்) என்றே கூறியிருக்கிறார். தொல்காப்பியர் 'செய்யா' என்னும் வாய்பாட்டு வினையெச்சத்தைக் குறிப்பிட வில்லை.

''செய்து செய்யூச் செய்பு செய்தெனச்
செய்யியர் செய்யிய செயின்செயச் செயற்கென
அவ்வகை ஒன்பதும் வினையெஞ்சு கிளவி''
(தொல். சொல். 228. சேனா. உரை).

இத்தகைய வினையெச்சங்கள் வேறுபட்ட பல இலக் கணத்தையுடையன என்றும் தொல்காப்பியர் குறிப் பிட்டிருக்கிறார்.

''வினையெஞ்சு கிளவியும் வேறுபல் குறிய''
(தொல். சொல். 457)

ஒரு சீரான செய்யுள் வழக்கும், இடத்திற்கு இடம் மாறும் உலக வழக்காகிய செந்தமிழ் வழக்கு, கொடுந்தமிழ் வழக்கு, திசை வழக்கு ஆகியனவும் நாடி ஆய்ந்த தொல்காப்பியர் அனைத்துத் திரிபுகளுக்கும் பொதுவான நூற்பா யாத்திருக்கிறார். மேற்கூறிய பலவாய்பாடுகள் உரையாசிரியர்கள் காலத்திலேயே தமிழில் காணப்படவில்லை. அவை பழங்கால வழக்குகள் என ஒதுக்கப் பட்டன.

திரவிட மொழிகள் பலவற்றையும், சிந்துவெளி தமிழர் பேசிய சொல்லாட்சிகள் வடபுலமொழிகளில் விரவிக் கிடத்தலையும் ஒப்பிட்டு நோக்கின் மேற்கண்ட வாய்பாடுகள் இன்றும் நின்று நிலவுதலைக் காணமுடிகிறது.

செய்யூ என்னும் வாய்பாடு தெலுங்கு மொழியில் தொடர் கால (continuous) வினையெச்சமாய் உள்ளது.

அடுகுதா உண்டாடு – வினவிக் கொண்டிருக்கிறான் (தொடர் நிகழ்காலம் – present continuous)

அடுகுதா உண்டெனு – வினவிக் கொண்டிருந்தான் (தொடர் இறந்தகாலம் –past continuous)

அடுகுதா உண்டுடு – வினவிக் கொண்டிருப்பான் (தொடர் எதிர்காலம் – future continuous)

செய்யா என்னும் தொடர்கால வினையெச்சம் வடதமிழ்நாட்டுப் பேச்சுவழக்கு, கன்னடம், இந்தியுள்ளிட்ட வடபுல மொழிகளில் உள்ளன.

**தமிழ்** : போ(த்)தா இருந்தான் (தொ.இ.கா.) (வடதமிழ்நாட்டுப்
போ(த்)தா இருக்கின்றான் (தொ.நி.கா.) பேச்சு வழக்கு)
போ(த்)தா இருப்பான் (தொ.எ.கா.)

**கன்னடம்** :கேளுத்தா இத்தெனு – கேட்டுக் கொண்டிருந்தான்
கேளுத்தா இருத்தானெ – கேட்டுக் கொண்டிருக்கிறான்
கேளுத்தா இருவனு – கேட்டுக் கொண்டிருப்பான்

**இந்தி** : பட்தா ஐ – படித்துக் கொண்டிருக்கிறான்

இது தொடர் நிகழ்காலமாயினும் வெறும் நிகழ்காலமாக வழக்கூன்றி விட்டது.

ஆதலால், செய்யா என்னும் வாய்பாடு தொடர்காலங் குறித்த (continuous tense) வினையெச்சமே என்பதும், அதன் ஈற்றெழுத்தை (ஆ) தனியாகப் பிரித்து வருமொழி வினை யெச்சத்துடன் சேர்த்து இறந்தகால எச்சமாக வுரைப்பது மரபுக்கு ஒவ்வாது என்பதும் தெளிவாகும்.

உண்ணாவிருந்தான் (உண்டு கொண்டிருந்தான்) என்பதற்கு 'செய்யா இரு' எனவும், வாராநின்றான் (வந்து கொண்டிருந்தான்) என்பதற்கு 'செய்யாநில்' எனவும் தொடர்காலப் பொது கூட்டுவினை வாய்பாடாக்கி யுரைப்பது பொருத்தமாயிருக்கும். இதனை எளிதில் தொடர் முக்காலத்திற்கு செய்யா நிற்கின்றான், செய்யா நின்றான். செய்யாநிற்பான் என புடைபெயர்த்துக் கொள்ளலாம். 'ஆநின்று' என்பதை மட்டும் வாய்பாடாக்கியுரைப்பின் ஊ நின்று (செய்யூ வாய்பாடு), பு நின்று (செய்பு வாய்பாடு) து நின்று (செய்து வாய்பாடு) எனப் பிற வாய்பாடுகளுக்கும் கூறவேண்டிய இடர்ப்பாடு நேரும், மொழியமைப்பில் ஏற்கனவே அமைந்து கிடக்கும் தொடர் முக்காலத்தை இலக்கண ஆசிரியர்கள் குறிப்பாகக் கூறியிருப்பினும் அவற்றைத் தெளிவாக வரையறுத்துக் கொள்வது இன்றியமையாதது.

**ஆவிரை** āvirai, பெ. (n.) 1. ஆவாரைச் செடி; tanner's cassia, 2. ஒரு மரம்; a kind of tree. ''வானளாவின வார்கனி யாவிரை'' (காஞ்சிப்.சுரகர். 12).

**ஆவாரைச் செடி, இச் செடி இளங்கிளைகளையுடையது**, எங்கும் விளையும் இச்செடி மொசுமொசுப்பாகவும், இலை

வரிசைகள் 8 முதல் 12 இணைகள் உள்ளதாகவும், ஒவ்வொரு இணையின் நடுவிலும் கோளங்கள் உள்ளதாகவுமிருக்கும். மேற்பக்கம் வழவழப்பாகவும், அடிப்பக்கம் சொரசொரப்பாகவும் கிளைகளின் நுனியில் பூங்கொத்துகள் உள்ளனவாயும் காய்கள் தட்டையாகவும், பூங்கொத்தில் 3 முதல் 5 மஞ்சட்பூக்கள் உள்ளதாகவும் இருக்கும்.

இதன் பட்டைக் கருக்கு (கசாயம்) மிகவும் துவர்ப்பாதலின் வாய் கொப்பளித்தால் புண் ஆறும். இதன் பூவை நீரிழிவுக்குக் கருக்கிட்டு (கசாயம்) பருகுவர். இலைகளை இடித்து உச்சி முதல் பாதம் வரையில் உடம்பில் ஊறும்படித் துவாலையிட்டால் சூலை, ஊதை (வாதம்) புண் முதலியவை குணமாகும். மூத்திர எரிச்சல் நீக்க யூனானி மருத்துவர் பூவிலிருந்து மருந்து செய்வர். இதன் பொடி (சூரணம்) மருந்தாகப் பயன்படும். இதன் வேர் எஃகுக் காய்ச்சிப் பதப்படுத்த பயன்படும்; eared cassia, Tanner's cassia

It is a shrub with tender branches; petioles and peduncles pubescent; leaf lets 8 to 12 pairs with a gland between each pair; upper side glabrous, under slightly pubescent; legumes compressed and flowers 3 to 5 together, and of bright yellow colour.

The plant is commonly found largely in plains and sterile tracts. The bark which is highly astringent in effect is used for gargles, enemas etc; the seeds are used for application in sore-eyes (புளிச்சைக் கண்). Flowers are used in decoction for diuresis and diabetes.

Crushed leaves are applied for cure in arthritis and rheumatism. Unani doctors prepare syrup from flowers and prescribe it for stranguary and burning heat in the system. The powder of this flower is useful in urinary disorders and it strengthen the seminal fluid. The root is used for tempering steel. (சா. அக.)

**ம.** ஆவர; **க.** ஆவரிக்கெ; **கோத.** ஆவரம்.

**ஆவாவிரை** பார்க்க; See avavirai.

*[ஆவாவிரை – அவிரை]*

**ஆவிவண்டி** āvivandi, பெ. (n.) நீராவி வண்டி, தொடர் வண்டி இயந்திரம் (சேரநா.); steam engine (Ker.), steam train.

**ஆவிவாங்குதல்** āvivāngudal, பெ. (n.) 1. உள்ளே மூச்சு இழுத்தல்; inhaling. 2. மூச்சு வாங்குதல்; breathing hard. 3. கொல்லுதல்; killing. 4. கும்பித்தல்; retaining breath, suppressing breath. 5. வருத்துதல்; giving trouble, annoying.

*[ஆவி + வாங்கு ]*

**ஆவிவிடல்** āvividal, பெ. (n.) 1. மூச்சு விடுதல்; exhaling. 2. உயிர் துறத்தல்; dieing.

**ஆவி வீசு-தல்** āvi vīsu-, 5 செ. குன்றாவி. (v.t) 1. மணம் பரவுதல்; to spread fragrance. 2. முடைநாற்றம் பரவுதல்; to spread as odors, to become diffused as an unpleasant smell (W.)

*[ஆவி + வீசு]*

**ஆவின் குளம்படி** āvin kulambadi, பெ. (n.) 1. மாட்டுக் குளம்படி; impression left by the hoof of the cow. 2. ஒரு பச்சிலை; a kind of plant, the leaves of which resemble the hoofs of cow.

*[ஆ + இன் + குளம்பு + அடி]*

**ஆவின் பொகுட்டி** āvin pogutti, பெ. (n.) இருப்பவல் என்னும் செடி; Indian everlasting plant. The root is prescribed in decoction for cachexia, scrofula and syphilis. (சா.அக.).

*[ஆ + இன் + பொகுட்டி]*

**ஆவின்னுருவி** āvinnuruvi, பெ. (n.) ஆவின்மேற் புல்லுருவி; honey suckle mistletoe.

*[ஆ + இன் + உருவி.]*

**ஆவினன்குடி** āvinankudi, பெ. (n.) முருகன் கோயில், பழனி; Muruga's shrine. Palani "ஆவினன்குடி வரும் அமலற் போற்றுவாம்" (கந்த 4. கடவுள் வா.14).

**ஆவிநன்குடி** பார்க்க; see āvinankudi,

**ஆவீரம்** āvīram, பெ. (n.) இடையரூர்; village of sheperds.

*[ஆவீரர் – ஆவீரம்.]*

**ஆவீரன்** āvīran, பெ. (n.) இடையன்; sheperd.

*[ஆ + வீரன்]*

**ஆவு[1]-தல்** āvu-, 5 செ. குன்றாவி (v.t.) விரும்பு; to desire.

**ம.** ஆவேற்றம் (பேராசை)

*[அவாவு – ஆவு]*

**ஆவு[2]** āvu, பெ. (n.) காற்று; wind.

ஆ – ஆவு.

**ஆவு[3]** āvu, பெ. (n.) 1. குன்றி (மூ.அ.); crab's eye. 2. ஆச்சா மரம்; ebony tree.

*[ஆவு = சிவப்பு]*

**ஆவுடையார்** āvudaiyār, பெ. (n.) **ஆவுடையாள்** பார்க்க; see āvudaiyāl.

*[ஆவுடையாள் – ஆவுடையார்.]*

**ஆவுடையார் கோயில்** āvudaiyār kōyil, பெ. (n.) தஞ்சை மாவட்டத்திலுள்ள திருப்பெருந்துறைக் கோயில்; Siva shrine in Thanjavur District.

*[ஆள் + உடையார் ஆவுடையார் = அடியார் தம்மை ஆட்கொண்ட இறைவன்.]*

**ஆவுடையாள்** āvuḍaiyāḷ, பெ. (n.) வல்லமை (வல்லபை – சக்தி) யாகிய இறைவி உமையவளைக் குறிக்கும் இலங்க (இலிங்க) அடிவட்டம், பீடம்; pedestal representing divine energy on which the Linga is placed. "ஆவுடையாளுஞ் சிவலிங்கமும் ஒன்றை விட்டொன்று நீங்காமல்" (சி.சி.1,69, நிரம்ப.).

ம. ஆவுடையாள்.

*[ஆள் + உடையாள் – ஆளுடையாள் (ஆ(ள்) + உடையாள்) – ஆவுடையாள் – உயிர்களை ஆட்கொள்ளும் அருளுடைய தேவி உமையவள். இனி, ஆயு – ஆவு = வலிமை, வல்லமை (சக்தி), ஆற்றலுள்ளவள் என்றுமாம்.]*

(வல்லமை இருப்பதன் காரணமாக) உயிர்களை ஆட்கொண்டருளும் திறம்பெற்றிருத்தலான் வல்லமையும், வல்லமையைத் திறம்பட ஆளும் வல்லமையும் பெற்றவள் என்றே இச்சொல் பொருள் தருகிறது.

முதலும், முடிவும் இல்லா இறைவன் படைத்தல் காத்தல் அழித்தல் மறைத்தல் அருளல் என்னும் ஐந்தொழில் புரிய அடிப்படையான ஒளிப்பிழம்பான இலங்க (இலிங்க) வடிவுக்கு நின்று நிலைத்த நிலைக்களமாகவும், அருளுக்கும் அமைதிக்கும் பற்றுக் கோடாகவும், வல்லமையின் பிறப்பிட மாகவும் உலகத் தோற்றத்திற்கும் ஒடுக்கத்திற்கும் இருப்பிடமாகவும் முதலும் முடிவும் வரையறுக்கும் சிறப்பிடமாகவும், காலமும் இடமும் கணக்கிடவொண்ணாப் பெருவெளியில் கோள அமைப்பைக் காட்டும் வட்ட வடிவமாயும் கற்பின் திண்மை எனப் பாவலர் உரைக்குமாறு போல வல்லமையின் திண்மைக்கு வடிவு கொடுத்தாற் போன்று அடிப்பீடமாயும் ஆவுடையாள் வடிவம் அமைக்கப் பட்டுள்ளது.

ஆற்றலே ஆற்றலாய் முகிழ்த்து பல்வேறு வடிவு கொண்டு உருமாறி அழிந்து மீண்டும் ஆற்றலுள் அடங்குதலான், ஆண்மை பெண்மையென்னும் வேறுபாட்டுக்கு அறவே இடமின்மையின் அம்மையப்பன் என்று இறைவனை முழுமுதற் பொருளாக்கி வழிபடுவது சிவனியக் (சைவ) கோட்பாடாகலின், ஆவுடையாளைப் பெண்மைக்கும் இலங்கத்தை (இலிங்கம்) ஆண்மைக்கும் குறியாக்கியுரைப்பது வெற்றுரையும் சிவனியக் கோட்பாட்டைப்பழித்துரைக்கும் சமயப்பகைவர்கரவுரையுமாகும். இலங்க வடிவு ஒளியின் தோற்றமாய் ஆற்றலினின்று முகிழ்க்கும் ஆற்றலையே குறித்ததென்க. ஆற்றலுக்கு அடிபணிவதே சிவ வழிபாடாம்.

**ஆவுதல்** āvudal, தொ.பெ. (vbl.n.) விரும்புதல்; desiring. "செந்நெலங்கழனிச் செய்வேட் டாவிய மறை யோன்" (உபதேசகா. சிவத்துரோ.120).

*[அவாவுதல் → ஆவுதல்.]*

**ஆவுதி** āvudi, பெ. (n.) **ஆகுதி** பார்க்க; see **āgudi**. "ஆவுதி மண்ணி யவிர் துகின் முடித்து" (மதுரைக்.494).

*[ஒருகா. அவி → ஆவி → ஆவுதி]*

**ஆவுரிஞ்சி** āvuriñji, பெ. (n.) **ஆவுரிஞ்சுதறி** பார்க்க; see **āvuriñjutaṟi**.

**ஆவுரிஞ்சுதறி** āvuriñju – taṟi பெ. (n.) ஆ (பசு) முதலிய கால்நடைகள் உராய்ந்து கொள்வதற்காக நடப் பட்ட மரக்கட்டை, ஆதீண்டு குற்றி (திவா.); rubbing post for cows. "அறுசமயத்தோர்க் குணவோடா வுரிஞ்சுதறி" (திருநெல். அறம் வள.33).

*[ஆ + உரிஞ்சு + தறி.]*

**ஆவுறுபித்தம்** āvuṟu pittam, பெ. (n.) உடல் வெதும்பிக் கொக்கரித்துக் கூவிக் கூத்தாடும் குணமுள்ள நோய்; a nervous disease marked by a peculiar cry like that of a cock's crow and a dancing mania, chorea. (சா.அக.)

*[ஒருகா. ஆ + உறு + பித்தம். ஆவுறல் – வாய் திறந்து கொக்கரித்தல். பித்தம் = பித்த முதலியவற்றான் விளையும் நோய்.]*

**ஆவூர்க் காவிதிகள் சாதேவனார்** āvūr–k–kāvidigaḷ sādēvaṉār; பெ. (n.) கடைக்கழகப் புலவர்; Sangam poet.

*[ஆவூர் + காவிதிகள் + சாதேவன் + ஆர்.]*

**ஆவூர்கிழார்** āvūrkiḻār பெ. (n.) கடைக்கழகப்புலவர்; sangam poet.

*[ஆவூர் + கிழார்]*

**ஆவூர்கிழார் மகனார் கண்ணனார்** āvūrkiḻār magaṉār kaṇṇaṉār, பெ. (n.) கடைக்கழகப்புலவர்; sangam poet.

*[ஆவூர் + கிழார் + மகன் + ஆர் + கண்ணன் + ஆர் 'ஆர்' உயர்வுப்பன்மையீறு]*

**ஆவூர் மூலங்கிழார்** āvūrmūlaṅkiḻār, பெ. (n.) கடைக் கழகப் புலவர்; Sangam poet.

*[ஆவூர் + மூலம் + கிழார். மூலம் = நாண்மீன்]*

**ஆவெருது** āverudu, பெ. (n.) காளை; bull

*[ஆ + எருது – ஆவெருது.]*

**ஆவெனல்** āveṉal, இடை. (part.) 1. வாய்திறத்தற் குறிப்பு; onom. expr. signifying opening the mouth. "காசினிக்கும்வெண்ணெய்க்கும்செம்பவளமா வென்றான்"(அட்டப். திருவேங்கடமா. 16). 2. அழுகைக் குறிப்பு; onom. expr. signifying crying. "ஆவென்றலற"(தேவா.70,8).3.இரக்கக்குறிப்பு; onom. expr.signifying pity.

*[ஆ + எனல். ஆ = வாய்திறத்தல் குறிப்பு வாய்திறத்தலே அழுகையும் இரக்கமும் குறித்தது.]*

**ஆவேரி** āvēri, பெ. (n.) ஒருவகைக்கடல்மீன்; a kind of sea-fish. (சேரநா.)

**ஆவேறு** āvēṟu, பெ. (n.) காளை; bull, ox., "ஆவேறு யர்த்தோன்" ( உபதேசகா. திருமால்.16).

*[ஆ + ஏறு.]*

**ஆவோ** āvō, இடை. (int.) வியப்பு, இரக்கம், வருத்தம் உணர்த்தும் குறிப்புச் சொல்; term expressive of wonder, pity, distress.

**ம.** ஆவோ.

*[ஆ + ஓ – ஆவோ. ஆ, ஓ இரண்டும் வியப்புகுறித்த இடைச் சொற்கள்.]*

**ஆழ்[1]–தல்** āḻ, 1. செ. குன்றாவி .(v.t) அகழ்தல்; to dig. "ஆழ்ந்து காணா ருயர்ந்தெய்த கில்லார்" (தேவா. 1153.9). –2 செ.கு.வி. (v.i.) 1. மூழ்குதல்; to sink, plunge, dive. "ஆழ்கலத் தன்ன கலி" (நாலடி.12). 2. அழுந்துதல்; to be absorbed, immersed, overwhelmed. "அல்லலுற் றழுங்கி நெஞ்சிற் கட்டியங் காரனாழ்ந்தான்" (சீவக. 438). 3. தாழ்தல்; to get lowered. "இன்னலங் கடலுளாழ்ந் திறக்குமே கொலாம்" (நைடத. அன்–கண்.68). 4. ஆழமாதல்; to deep on. ஆழ்கடல். 5. பதிதல்; to enter, pierce. "ஆளிக ளன்னவை..... நிறத் தினாழ்பவே" (கம்பரா. நகர. 64). 6. விழுதல்; to fall down. "கைம்முதல் துணிந்து களிறாழ" (சீவக. 282). 7. சோம்புதல் (திவா.); to be idle, lazy. 8. வருந்துதல் (பதினொ. காரைக். திருவிரட்டை.6); to suffer. 9. மனம் ஒன்றி ஈடுபடல்; to show interest; get involved.

**ம., க.** ஆழ்; **தெ.** ஆடு

*[உல் (துளைத்தல்) – உள் – உளு – உழு – உகு – உகுள் – அகள் – அகழ் – ஆழ்.]*

**ஆழ்[2]–த்தல்** āḻ–7. செ.குன்றாவி.(v.t.) 1. அமிழ்த்துதல்; to sink, immerse, plunge. "துன்பத்து ளாழ்த்தல் முறையோ" (தாயுமா. 61.11). 2. தாழ்த்தல், குறைத்தல்; to lower, minimise. "அடலேறனைய செருக்காழ்த்தி" (நன்னெறி.7) 3. கட்டல்;to bind. **ஆழ்** [1] பார்க்க; see āḻ[1].

*[அழ் [1] – ஆழ் [2]]*

**ஆழ்கடல் மீன்கள்** āḻkaḍal mīṉgaḷ, பெ. (n.) கடலின்




ஆழமான பகுதிகளில் வாழும் மீன்கள்; sea-fishes which dwell in deep sea.

*[ஆழ் + கடல் + மீன்கள்]*

**ஆழ்கடற்றுயின்றோன்** āḻkaḍaṟṟuyiṉṟōṉ பெ. (n.) கடல் மேல் துயிலுங் கோலத்தமர்ந்த திருமால்; Viṣṇu, sleeping on the deep ocean.

*[ஆழ் + கடல் + துயின்றோன்.]*

**ஆழ்த்து–தல்** āḻttu–, 12 செ.குன்றாவி .(v.t) அமிழ்த்துதல்; to sink, immerse, plunge, caus. of ஆழ் [1].

*[ஆழ் – ஆழ்த்து]*

**ஆழ்வள்ளிக்கிழங்கு** āḻvaḷḷikkiḻaṅgu, பெ. (n.) **மரவள்ளி** பார்க்க; see maravaḷḷi:.




*[ஆழ் +வள்ளி + கிழங்கு.]*

**ஆழ்வார்** [1] āḻvār, பெ. (n.) 1. தெய்வப் பண்புகளிலும் வழிபாட்டிலும் ஆழ்ந்து ஈடுபடுகின்ற இறையடியார்; one who is deep in meditation on the attributes of the

Supreme Being. (திவ். இயற். நான்மு. 14). 2. ஆழ்வார்கள், திருமால் அடியார் Vaisnava canonised saints whose hymns in praise of Visnu are regarded as sacred scriptures. 3. சமண பௌத்த துறவிகளுக்குரிய அடைமொழி; title of Jain and Buddhist, saints.

ம., க. ஆழ்வார்; தெ. ஆள்வாரு.

*[ஆழ் – ஆழ்வார். 'ஆர்' உ.ப. ஈறு.]*

இறைவன் நினைவிலேயே ஆழ்ந்த திருமாலடியார்களை 'ஆழ்வார்கள்' என்பது மரபு. தம் இயற்பெயரோடு ஆழ்வார் என்னும் சிறப்புப் பெயரையும் அடைமொழியாகப் பெற்ற பொய்கை யாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசை யாழ்வார், நம்மாழ்வார், குலசேகர ஆழ்வார், பெரியாழ்வார், தொண்டரடிப் பொடியாழ்வார், திருப்பாணாழ்வார், திருமங்கை யாழ்வார் என்னும் பதின்மரும் ஆண்டாளும் மதுரகவியும் ஆக பன்னிரு வரும் ஆழ்வார் எனச் சிறப்பித்தற்குரியர். சமண பௌத்த துறவிகளும் அவிரோதியாழ்வார், மைத்திரியாழ்வார் என ஆழ்வார் அடைமொழியொடு அறியப்பட்டனர். சமய வேறுபாடின்றித் தவநிலையும் தொண்டும் கருதி இச்சொல் மதிப்புரவு அடைமொழியாயிற்று.

**ஆழ்வார்** [2] ālvār, பெ. (n.) 1. உடையவர், ஆட்கொண்ட எம்பெருமான், கடவுள்; Lord. 2. திருமால்; Visnu. "ஆழ்வார் திருவரங்க தேவர்" (S.I.I. iii. 150)

*[ஆள்வார் – ஆழ்வார். அடியாரை ஆளும் (ஆட்கொளளும்) இறைவன். இனி, ஆழ்வாராகிய அடியார் உள்ளத்திலாழ்ந்துள்ள திருமால் என்றுமாம்.]*

**ஆழ்வார்கன்மி** ālvār kanmi, பெ. (n.) திருமால் கோயில் பூசகன் (S.I.I. iii. 150); priest of a Visnu temple.

*[ஆழ்வார் + (கருமி) – கன்மி. ஆள்வார் – ஆழ்வார் = திருமால்.]*

**ஆழ்வார் திருநகரி** ālvārtirunagari, பெ. (n.) நெல்லை மாவட்டத்தில் ஊள்ள ஊர்; place name. நம்மாழ்வார் பிறந்த ஊர்.

*[ஆழ்வார் + திருநகர் + இ.]*

**ஆழ்வார் திருநாள்** ālvār tirunāl, பெ. (n.) திருமால் கோவிலில் விழா தொடங்குவதற்கு முன்பு முளைப்பாலிகை தெளிக்கும் (அங்குரார்ப்பணம்) திருவிழா (திவ். திருப்பல். 3. வியா); ceremony of seedling in a vessel prior to the commencement of festival in a Visnu temples.

*[ஆழ்வார் + திருநாள் = விழா.]*

**ஆழ்வான்** ālvān, பெ. (n.) சூரியன்; sun. "ஆழ்வான் சேய்காரி" (சினேந். தாது காண். 102).

*[ஒருகா. ஆழ் – ஆழ்வான் = மேலைக்கடலில் மறையும் சூரியன்.]*

**ஆழ்வி** ālvi, பெ. (n.) 1. தலைவன்; lord. "திருவான் பட்டியாண்டார்க்கு நம் ஆழ்விக்கு" (S.I.I. v. 84). 2. தலைவி; lady.

*[ஆழ் – ஆழ்வி.]*

**ஆழ்வு** ālvu, பெ. (n.) ஆழம்; depth. "ஆழ்வினிற் பதிந்த தாயினும்" (இரகு. திக்கு. 26).

*[ஆழ் – ஆழ்வு]*

**ஆழங்கால்** ālangāl, பெ. (n.) 1. அதிக ஆழமில்லாத நீர்நிலை; shallow water. "மேல வாழங்கா லெனக்கு முதல் நீசே" (குருகூர்ப் பள்ளு.பக்.7). 2. பலகை தாங்குவதற்காகச் சுவரிற் பதிக்கும் கட்டை (இ.வ.); wooden prop inserted in a wall to support a shelf (Loc.). 3. பல்கால் பழகி பட்டறிவும் ஈடுபாடும் மிகுதல்; getting involved after long experience.

*[1. ஆழம் + கால். காலளவு, அதாவது கால் நிலைகொள்ளும் ஆழமுள்ள நீர் நிலை. 2. ஆழம் + கால் – ஆழங்கால். கால் = மரக்கட்டை 3. கால் – அடிப்பகுதி ஆழமாக வேர்பதிதல், பிடித்தம் மிகுதல், உரன் உறுதல், பட்டறிவு மிகுதல்.]*

**ஆழங்காற்படு–தல்** ālangār-padu–, 2 செ.கு.வி. (v.i.) அழுந்துதல்; to be immersed in, become absorbed in, get involved. "பகவத் விஷயத்தில் ஆழங் காற்பட்டு" (ஈடு.4.3.6).

*[ஆழம் – கால் – படு.]*

**ஆழநீளம்பார்–த்தல்** ālanīlam pār–, 9 செ.குன்றாவி. (v.t.) தனியொருவனின் இயல்புகளை அல்லது ஆற்றலை நுட்பமாகவும், தந்திரமாகவும் ஆய்ந்தறிதல்; to test one's ability or character minutely and cunningly. 'எப்படிப்பட்டவரையும் அவன் ஆழநீளம் பார்த்து விடுவான்' (உ.வ.).

*[ஆழம் + நீளம் + பார்.]*

**ஆழம்** ālam, பெ. (n.) 1. ஆழ்ந்திருத்தல்; depth. 'இந்தக் கேணி அதிக ஆழம்' (உ.வ.). 2. நிலத்தில் மேற்பரப்பினின்று கீழே போகும் அளவு, மேலிருந்து கீழே தாழும் அளவு; measurement from top down. "உள்ளுற வாயிர வாயிர யோசனை யுறுநீளங் கொள்வதோ ராழமும்" (கந்தபு. அசுரயாக.42). 3. ஆழ்ந்த கருத்து; depth of thought. "ஆழமன்னோ

உடைத்திவ் வையர் வார்த்தை'' (திருக்கோ. 61.). 4. நீராழம்; depth of water. 'ஆற்றில் ஆழம் பார்த்து இறங்கு' (உ.வ.). 5. உளவு, மந்தணம், (இரகசியம்); secret. 6. மனத்தின் ஆழம்; depth of mind. அவனை யாரும் ஆழம் கண்டறிய முடியாது (உ.வ.). 7. அறிதற்கு அருமை; difficulty of understanding, in-comprehensible. 'அது ஆழமான செய்தி, உனக்குப் புரியாது' (உ.வ.). 8. தாழ்வு ; bottom. 'வாளி ஆழத்தில் இருக்கிறது, எடுக்க முடியாது' (உ.வ.). 9. நீர்நிலை; pool, tank. 10. பெருமிதம் (கம்பீரம்); pride, dignity. 11. மறைந்துள்ள ஆற்றல்; potentiality.

**ம.** ஆழம்; **க.** அழ, ஆழி. **தெ.**லோது; **து., குட., பட.,** ஆள்; **கோத.** ஆளம்.

*[ஆழ் → ஆழம்.]*

**ஆழம்பார்-த்தல்** ālampār-, 14. செ.கு.வி. (v.i.) நீர் நிலையின் ஆழத்தை அளந்தறிதல்; take soundings, measure depth._ 4 செ.குன்றாவி. (v.t.) ஒருவனறிவு ஆற்றல் பண்பு முதலியவற்றை ஆய்ந்தறிதல்; to sound, examine, test, as one's learning, one's depth of mind.

*[ஆழம்+பார்-]*

**ஆழமுடைத்தாதல்** ālamuḍai-t-ādal, பெ. (n.) நூலுக்குரிய பத்து அழகுகளுள் ஒன்று ; profundity of thought, terse but suggestive in meaning, one of ten essential qualities of a good book. ''ஆழமுடைத்தாதல், அஃது, அரிதுணர் பொருளதாதல்'' (நன். பொதுப். 13).

*[ஆழம் + உடைத்து (உடையது) + ஆதல்.]*

**ஆழமோழை** ālamōlai பெ. (n.) உள்ளே சுழித்துக் கொண்டு போகிற சுழியையுடைய கீழாறு (திவ். பெரியாழ். 3,7,4.) depth of a river with whirling water.

*[ஆழம் + (மூழை) மோழை.]*

**ஆழல்** [1] ālal பெ. (n.) 1. ஆழுதல், முழுகுதல்; submerging, sinking. 2. ஆழமுடைத்தாதல்; state of being deep. 3. ஈடுபடல்; being involved.

*[ஆழி – ஆழல்.]*

**ஆழல்** [2] ālal, பெ. (n.) கறையான்; white ant. (பிங். 2538).

*[ஒருகா. ஆழ் – ஆழல் = மண்ணில் முழுகி வாழ்வது, மண்ணில் ஆழ்ந்து செல்வது.]*

**ஆழா-த்தல்** āla-, 11. செ. குன்றாவி. (v.t.) 1. முகத்தல், முகந்து அளத்தல்; to measure. 2. ஆழ்ந்து சிந்தை செலுத்துதல், கருத்தூன்றி ஈடுபடுதல்; to be im-mersed, absorbed, ''அருளின் பெருநசையா லாழ்ந்து (திவ். திருவாய். 2,1,8).

*[ஆழ + ஆக்கு – ஆழஆக்கு – ஆழஆ – ஆழா = ஆழுமாறு செய்.]*

**ஆழாக்கு** ālākku, பெ. (n.) உழக்கு, அரைக்காற்படி; 1/8 of a measure, dry or liquid measure known otherwise as uḻakku.

**ம.** ஆழக்கு; **க.** ஆழாக்கு

*[அரையுழக்கு – ஆழாக்கு]*

**ஆழாங்கு** ālaṅgu பெ. (n.) **ஆழங்கால்** பார்க்க; see ālaṅgāl

**ஆழாரம்** ālāram, பெ. (n.) பண்டைத் தமிழகத்தில் இறந்தவர்களைப் புதைப்பதற்காகக் கற்களால் கட்டப்பட்ட 8 அடி முதல் 10 அடி வரை விட்டமுள்ள வட்டமான புதை குழி; circular stone pit of ancient Tamils, 8 to 10 ft. in diameter containing cinerary urns and bones, Indian cromlech (M.M.).

*[ஒருகா. ஆழ் + ஆரம். ஆழ்த்தல் = புதைத்தல். ஆரம் = வட்டம், வட்டமான புதைகுழி.]*

பெருங்கல் (Megalithic) காலம் என்னும் தொன்முதுகால நாகரிகத்தில் இறந்தவர்களைத் தாழியிலிட்டோ, தனித்தோ புதைத்த குழியின் மேல் மண்குவை அல்லது கற்குவை இட்டு அதனைச் சுற்றிலும் வட்டமாகக் கற்களை வரிசைப் படுத்தி வைப்பது வழக்கம். இதற்குக் கல்வட்டம் அல்லது கற்கிடை (cairn circle) என்று இக்காலத் தொல்பொருள் ஆய்வாளர் பெயரிட்டுள்ளனர். பண்டைத் தமிழர் அக்காலத்திலேயே இதனை 'ஆழாரம்' என வழங்கியிருக்கின்றனர்.

கல்லறை, கல்திட்டை, கற்பதுக்கை, கற்குடை, கற்கிடை குடவரைக் கல்லறை என்னும் பலவகை புதைகுழியமைப்பு முறைகளும், புதைகுழிகளில் பிணத்துடன் அல்லது எலும்புடன் கருப்பு சிவப்பு நிறமுள்ள மட்பாண்டங்களும், 53 வகை எழுத்து வேறுபாடுள்ள குறியீடுகளை எழுதியுள்ள முறையும் தென்னகம், சிந்துவெளி, பாரசீகம், மொசபதோமியா, எகுபது ஆகிய நாடுகளில் ஒன்று போலவே இருப்பது குமரிக்கண்ட தமிழர் நாகரிகம் குவலயம் முழுதும் பரவியதற்குச் சான்று பகர்கிறது.

**ஆழாரை** ālārai, பெ. (n.) **ஆழாரம்** பார்க்க; see ālāram.

*[ஆழ் + ஆரை – ஆழாரை.]*

**ஆழி** [1] āḻi, பெ. (n.) 1. மோதிரம்; ring. ''ஆழிவாய் விரலில்'' (சீவக.833). 2. சக்கரம் (பிங்.); wheel, carriage wheel. 3. மட்பாண்டம் செய்ய உதவும் சக்கரம்; potter's wheel. ''மட்கலத்தாழியென்ன'' (கம்பரா.வாலிவ.37). 4. கணவனைப் பிரிந்த மனைவி இழைக்குங் கூடற் சுழி; curved line of

loops drawn on sand by a woman to divine whether her husband will return in safety, the sum of which if even, indicating the safe return and if odd, failure to return. "ஆழியாற் காணாமோயாம்" (ஐந்திணை. ஐம். 43). 5. யானைக்கைந் நுதி (சா. அக.); tip of elephant's trunk. 6. சக்கரப் படை; discus weapon. "ஆழியெழச் சங்கும் வில்லுமெழ" (திவ். திரு வாய்.7,4,1). 6. அரசனின் ஆணைச்சக்கரம் என்னும் அரசு ஆளுமை; royal power, as symbolised by the discus weapon. "ஆழிவேந்தன்" (கம்பரா. தைல.70). 7. கட்டளை; rule, command. "ஆழி நிற்குதி நிற்குதி யல்லையேற் பழிவரும்" (உப தேசகா. சிவவிரத.16). 8. வட்டம் (பிங்.); circle. 9. தேர் உருளை; wheel of the chariot. "ஆழித்தேர் வலவன்" (சேதுபு.தேவிபுர.50). 10. பூமாலை (கருவி.); garland (kar.).

**ம., க.** ஆழி; **தெ.** ஆணி (வட்டம்.)

*[ஆல் - ஆள் - ஆழி.]*

ஆனந்தவிகடன் அகராதியில் 'ஆழி' என்னும் சொல்லுக்குக் குயவன் என்று பொருள் கூறப்பட்டிருப்பது பொருத்தமாவதாகத் தோன்றவில்லை. ஆழி – குயவன்,திகிரி, என 'குயவன்' சொல்லை அடுத்து இடப்பட்ட காற்புள்ளி அச்சுப் பிழையாக இருக்கலாம்.

**ஆழி**[3] āḻi, பெ. (n.) கடல் (பிங்.); sea, as the deep. "ஆழிநீத்த மதொத்தது மதிற்புறத் தகழி" (கந்தபு. திருநகர.9). 2. கடற்கரை; seashore. "பெருங்கடற் காழியனையன்" (புறநா.338). 3. குளம்; tank.

**க., ம.** ஆழி

*[ஆழ் - ஆழி.]*

**ஆழி**[4] āḻi, பெ. (n.) தீக்குழி (சேரநா.); fire pit.

**ம.** ஆழி

*[ஒருகா. ஆழி=வட்டம்,வட்ட வடிவமான தீக்குழி.]*

**ஆழி**[5] āḻi, பெ. (n.) 1. ஏமாற்று (கருநா.); fraud, deceit. 2. விடாப்பிடித்தனம்; naughtiness. 3. உளவு, (இரகசியம்); secret.

**க.** ஆழி.

*[ஆழ் → அழி = ஆழ்ந்த அல்லது மறைவான உள்நோக்கம், ஏமாற்று, உளவு, விடாப்பிடித்தனம்.]*

**ஆழி**[6] āḻi, பெ. (n.) குன்றி (பச்.மூ.); crab's eye, red bead.

*[ஆழி[4] → ஆழி[6]]*

**ஆழிக்கொடி** āḻi-k-koḍi, பெ. (n.) பவளம் (யாழ்.அக.); coral.




*[ஆழி + கொடி - ஆழிக்கொடி = கடலில் கொடிபோல் படரும் பவளம்.]*

**ஆழிச்சுழி** āḻi-c-cuḻi, பெ. (n.) காலிலும் கையிலும் அரிதாகக் காணப்படும் சக்கர வடிவுடைய சுழி; wheel shaped lines in the palm of hands or legs.

**ஆழிசங்கம்** āḻi saṅgam, பெ. (n.) (ஓகம்), ஆதனுக்கு (ஆன்மா) ஏற்பட்ட ஐந்நிலைகளுள் ஒன்றானதும், தன்னைச் சுற்றிலும் நடக்கும் நிகழ்ச்சிகளை அறியமுடியாமையுமாகிய சுழுத்தி நிலை; (Yoga) one of the five states of the soul, i.e., deep sleep in yoga with total insensibility to surroundings. (சா.அக.)

*[ஒருகா. ஆழிசங்கம் = அலைகடலில் அசைவற்று உள்ளுறங்கும் சங்கு போன்ற மனநிலையைக் குறித்ததாகலாம்.]*

**ஆழித்தீ** āḻi-t-tī, பெ. (n.) வடவையனல்; submarine fire, aurora borealis

*[ஆழி + தீ]*

**ஆழித்தேர்** āḻi-t-tēr, பெ. (n.) 1. வட்டக்காலாற் சிறந்த தேர்; car made strong by choice wheels. (புறப். வெண்.). 2. சக்கரப்படை வடிவிலமைந்த திரு வாரூர்த்தேர்; temple car at Tiruvārūr, as shaped like a discus. "ஆழித்தேர்வித்தகனை" (தேவா.699.7).

*[ஆழி + தேர்.]*

**ஆழிதிருத்து-தல்** āḻitiruttu-, 15 செ.கு.வி. (v.i) கூட லிழைத்தல்; to draw on sand a circle of loops for divination about the safe return of one's husband "ஆழிதிருத்திச் சுழிக்கணக் கோதி" (திருக்கோ. 186).

*[ஆழி + திருத்து]*

**ஆழிதொட்டான்** āḻitoṭṭāṉ, பெ. (n.) ஏனாதிமோதிரம் அணிந்த படைத்தலைவன்; general of an army, as one wearing the ring on his finger ēṉātimōdiram (சீவக. 2167).

*[ஆழி = மோதிரம். தொடுதல் = அணிதல்.]*

**ஆழிநுரை** āḻi nurai, பெ. (n.) கடல் நுரை; sea-froth.

*[ஆழி + நுரை.]*

**ஆழிமால்வரை** āḻimālvarai, பெ. (n.) (தொன்ம) சக்கரவாள மலைத்தொடர்; (myth.) range of mountains believed to be encircling the orb of the earth. "ஆழிமால் வரைக் கப்புறம் புகினும்" (புறத். ஆசிரிய மாலை).

*[ஆழி + மால் + வரை. மால் = பெரிய. வரை = மலைத் தொடர்]*

கடலுக்கு அப்பால் உலகத்தைச் சுற்றிலும் நெடிய மலைத் தொடர்களிருப்பதாகக் கருதி சக்கரவாளகிரி என வடமொழியாளர் புனைந்த தொன்மக் (புராண) கதையைப் பற்றுக் கோடாகக்கொண்டது இச்சொல். பழந்தமிழர் உலகம் உருண்டை என அறிந்திருந்ததாலும் ஞாலமுதல் சுற்றுக் கடலோடிகளாக (the first circum navigators of the World) விளங்கியதாலும் அவர்க் கிது உடன்பாடன்று.

**ஆழிமுரசோன்** āḻimuraśōṉ, பெ. (n.) காமன், மன்மதன் (சூடா.) (cupid) Kāmā, for his drum is the sea.

*[ஆழிமுரசோன் = கடலையே தன் முரசாகக் கொண்டவன், காமன்]*

**ஆழிமூலம்** āḻi mūlam, பெ. (n.) ஒருவகை மூலநோய், இது, நீண்ட வள்ளிக் கிழங்கைப் போல் நிமிர்ந்து, சீழும் குருதியும் ஒழுகி ஒரே முனையாகக் காணப்படும்; (யூ.கி. 800); form of piles in which the enlarged veins in the mucous lining of the rectum push the membrane to such an extent as to assume the shape of a long root. It is accompanied by a purulent discharge. (சா.அக.).

*[ஒருகா. ஆழிமூலம் = ஆழ்ந்து அல்லது நன்கு முற்றிப்போன மூலநோய்.]*

**ஆழிமுழையாய்** āḻi mūḻai-y-āy, கு.வி.எ. (adv.) மிக விரைவாக, அதிக வேகமாய்; with great speed. "தடை யற்றால் ஆழிமுழையாய்ச் செல்லத் தட்டில் லையிறே" (திவ்.திருநெடுந். 19 வியா).

*[ஆழிமுழை – எதுகை குறித்த மரபிணை மொழி. ஆழி – சக்கரம், சக்கரச் சுழற்சி போன்ற வேகம்.]*

**ஆழிய கடல் விழுது** āḻiya kaḍal viḻudu, பெ. (n.) கடலின் பேராழத்தை அறிய உதவுங் கயிறு; deep-sea lead-line (M.Navi.71).

*[ஆழி + அ (உடைமைகுறித்த ஆறன் உருபு) + கடல் + விழுது (விழுதுபோல் கடலில் இறங்கும் கயிறு.).]*

**ஆழியளித்தோன்** āḻi-y-aḷittōṉ, பெ. (n.) சிவன்; Siva.

*[ஆழி + (அளித்தவன்) → அளித்தோன். சிவபெருமான் கண்ணனுக்கு ஆழிப்படை (சக்கர ஆய்தம்) கொடுத்தான் என்னும் தொன்மக் கதை தழுவிய செய்தி.*

**ஆழியன்** āḻiyaṉ. பெ. (n.) வருணன்; Varuna, the sea-god.

*[ஆழி → ஆழியன் = கடல் தெய்வமாகிய வருணன் எனப்படும் வாரணன்.]*

**ஆழியான்** āḻiyāṉ, பெ. (n.) 1. திருமால்; Viṣnu, as wielding the discus. "ஆழியானென்று மாழமோழை யிற் பாய்ச்சி" (திவ். பெரியாழ். 3,7,4). 2. அரசன்; king, emperor. 3. வருணன்; Varuna, the sea-god. 4. ஏமாற்றுபவன்; cheat.

**ம.** ஆழியான்.

*[ஆழி – ஆன் (ஆ.பா.ஈறு). சக்கரப்படையுடைமையால் திருமாலையும் ஆட்சிச் சக்கரமுடையவன் என்பதால் அரசனையும், கடல் தெய்வமாக வழிபடப்படுவதால் வருணனையும், வளைவு, சுழிப்பு, சூழ்ச்சி எனவும் 'ஆழி' பொருள்தருதலால் சூழ்ச்சி செய்யும் ஏமாற்றுக்காரனையும் இச்சொல் குறித்தது.]*

**ஆழியிழை-த்தல்** āḻi-y-iḻai-, 4.செ.கு.வி. (v.i.) கூடலிழைத்தல்; to draw on sand a circle of loops for divination about the safe return of one's husband. (சீவக. 1037)."வெண்முத்த வார்மணல்மே லன்றாங் கணியிழை யாளாழியிழைத்தாளே" (சீவக. குணமா. 187).

**மறுவ** ஆழிதிருத்துதல், கூடலிழைத்தல்,

*[ஆழி + இழை. ஆழி = வட்டம். இழைத்தல் = செய்தல். கண்ணால் பார்க்காமல் விரலினால் நிலத்தில் சுழிக்கும் சுழி வட்டமாகப் பொருந்துமாயின் தலைவனோடுகூடுதல்இயலும்என்று அறிதற்கான பழங்காலப் பெண்டிரின் நம்பிக்கை.]*

**ஆழிரேகை** āḻi rēgai, பெ. (n.) **ஆழிச்சுழி** பார்க்க; see āḻi-c-cuḻi.

**ஆழிவலியான்மணி** āḻi valiyāṉ maṇi, பெ. (n.) மிளகு (தைலவ. தைல. 135); common pepper. "சோடசத் தொன்றாக் காழிவலியான் மணி பிளவு" (தைலவ. தைல. 135).

*[ஒருகா. ஆழி + வலியான் + மணி. உருண்டதும் நோய் தடுத்து நலஞ்சேர்க்கும் வலிவுடையதும் ஆகிய சிறிய மணி போன்ற வடிவினது.]*

**ஆழிவித்து** āḻivittu, பெ. (n.) முத்து (வின்.); pearl, as the seed of the sea.

*[ஆழி + கடல். ஆழி + வித்து]*

**ஆழிவிரல்** āḻi-viral, பெ. (n.) மோதிர விரல்; ring finger.

*[ஆழி + விரல்.]*

**ஆழு-தல்** āḻu- 2 செ.கு.வி. (v.i.) 1. அழுந்தல்; to be immersed, absorbed. 2. தாழ்தல்; to be lowered. "சொல்லரும்பிறவியுட்டுன்பத் தாழுவார்" (கந்தபு. காசிபனு. 21). 3. முழுகுதல்; to sink, dive.

*[ஆழ் → ஆழு.]*

**ஆழும்பாழுமாய்** āḻum-pāḻum-āy, கு.வி.எ. (adv.) 1. வீணாக; in vain, uselessly. 2. சீர்கேடாய்; in a ruined condition, wastefully.

*[ஆழும் பாழும் + ஆய். எதுகை குறித்த மரபிணைச் சொல். ஆழ்தல் = முழுகுதல், பாழ்படுதல்.]*

**ஆள்[1]-தல்** āḷ, 10. செ.குன்றாவி (v.t.) 1. கைக் கொள்ளுதல்; to hold, maintain, "நாணாள்பவர்" (குறள். 1017). 2. கையாளுதல்; to handle or make use of, எடுத்தாளாத பொருள் உதவாது (உ.வ.). 3. வழங்குதல்; to use a word in a particular sense and so give currency to it, to apply; சான்றோரால் ஆளப் பட்ட சொல் (உ.வ.) 4. ஆட்கொள்ளுதல்; to take charge of, cherish, give shelter to, "ஆள்கின்றா னாழியான்" (திவ். திருவாய், 10, 4:3). 5. அடக்கி யாளுதல்; to control, manage as a household. 6. அரசு செய்தல்; to rule, reign over, govern. 'வைய மெல்லாம் அரசாகி முன்னாண்டவரே" (திவ். பெரியதி. 6, 2:5).

**ம., க.** ஆள்; **தெ.** ஏலு; **கோத.** ஆண்; **துட.** ஒள்;

**து.** ஆருனி; **குட.** ஆள்.

*[ஆலுதல் = ஒலித்தல், ஆடுதல், வினையாற்றல். ஆல் → ஆள் = வினையாற்றுதல், செயற்படுதல், சுற்றுதல், சுழற்றுதல், அடக்கியாளுதல்.]*

**ஆள்[2]** āḷ, பெ. (n.) 1. திறனாளன்; stalwart, capable man, manly person. "ஆளல்லான் செல்வக் குடியுட் பிறத்தலும்" (திரிக.7). 2. ஆண்மகன்; man. "நல்லா ளிலாத குடி" (குறள். 1030). 3. கணவன்; husband. "ஆளில்லாத மங்கைக்கழகு" (வாக்குண். 3). 4. வீரன்; warrior, "பிள்ளை கடுப்பப் பிணம்பிறங்க ஆளெறிந்து" (பு.வெ.2,7). 5. காலாள்; artillery man soldier, swordsman. "ஆள் வெள்ளம் போகவும் போகான்" (பு.வெ.7,13). 6. ஊழியன்; servant; slave; labourer. "ஏதிலார்க் காளாய்" (நாலடி. 122). 7. ஆட்செய்கை; serving as a slave."ஆளரிக்கு மரி தாய்" (திருக்கோ. 225). 8. தொண்டன்; devotee. "நின்னாளானார்க் குண்ணார்ந்த வாரமுதே" (திருவாச.38,2). 9. வளர்ந்த ஆள்; person, adult, sturdy fellow. அந்தப் பையனும் பெண்ணும் இப்போது ஆளாய் விட்டார்கள் (உ.வ.). 10. ஆள் மட்டம்; man's height as a standard measure. அந்தக் கேணி எத்தனை ஆளாழம்? (உ.வ.). 11. பொறுப்பாளி; person responsible for something, an agent. அதற்கு நான் ஆளல்ல (உ.வ.). 12. மாந்தன்; man, person, individual. அந்த வீட்டில் ஆளே இல்லை (உ.வ.).

**ம., க.** ஆள்; **து.** ஆளு; **கோத.** ஆள்;

**துட.** ஒள்; **குட.** ஆளி; **குரு.** ஆல்; **குரு.** ஆலீ (பெண்.).

**L.** Aner; **Aust.** Atua.; **Skt.** alf (maid);

**Heb.** Adam; **GK.** Andros.

*[ஆல் → ஆள் = வினையாற்றுபவன், செயல் திறவோன்.]*

முதலில் வினைப்படுதலைக் குறித்த ஆள் என்னும் முதனிலைத் தொழிற்பெயர் வினையாற்றுதலில் வல்ல திறவோனையும், ஒரு குறிப்பிட்ட வினையின்கண், அவ் வினை வல்ல தொழிலாளர் பலரையும், நாளடைவில் ஒவ்வொருவரும் ஏதேனும் ஒரு வினையிலாயினும் தேர்ச்சி யுடைமை கருதி மாந்தரனைவரையும் குறித்த உயர்திணை இருபாற் பொதுச் சொல்லாய் வழக்கூன்றியது.

ஆள், முதலில் செய்தற்பொருள் வினைச் சொல்லாகவே குமரிநாட்டுத் தமிழில் வழங்கியதாகல் வேண்டும் என்பதற்குச் சான்றான இதே வினை மகரமெய் முன்னெழுத்துப் பேறு பெற்று (ஆள் → மாள்) மாள் → மாடு (செய்) எனக் கன்னடத்திலும், ஆள் → மாள் → மள் (செய்) எனத் துளுவமொழியிலும் வழங்கி வருகிறது. பெயர்ச் சொல்லானபோது இருபாற்பொதுவின் நீங்கிப் பெண்பாற் பெயராகத் தெலுங்கிலும் வடமொழியிலும் குருக்கத்திலும் நிலைபெறினும் ஏனை உலகமொழிகளில் ஆண்பாற் பெயராகவே ஆட்சி பெற்றுள்ளது.

மேலையாரிய மொழிகளில் Alan, Alaric, Allison, Albert என இயற்பெயர் முதனிலையாகவும், Adam என ளகரவீறு டகரவீறாகத் திரிந்த திரிபாகவும், இந்தி உருது போன்றவற்றில் ஆத்மி (மாந்தன்) எனத் தகரமெய்யீறு பெற்றும் வழங்கி வருகின்றது.

சேர மரபினர் ஆதன் (தலைவன்) எனப் பெற்ற மரபுப் பெயரும், ஆளன் → ஆடன் → ஆதன் என்னும் பழநிலைத் திரிபின்பாற்பட்டதாதலின் எபிரேய மொழிகளில் ஆடவனைக் குறித்த Adam என்னும் சொல் குமரித் தமிழின் பரவல் ஆகலாம்.

**ஆள்[3]** āḷ, பெ. (n.) 1. பெண்; female. 2. மனைவி; wife;

**தெ.** ஆள்; **குரு.** ஆலீ.

*[ஆள் = ஆளப்படுபவள்]*

**ஆள்**[4] āḷ, இடை (part.) 1. பெண்பாற் பெயரீறு; noun ending of the third pers. fem. sing. as in இல்லாள். 2. பெண்பால் வினைமுற்றீறு; verb ending of the third pers. fem. sing. as in வந்தாள்.

**க.** ஆளு

ஆள் = இருபாற் பொதுமையின் நீங்கிப் பெண்பாற் குறித்த பெயர், 'ஆள்' என்னும் பெண்பாற் பெயர்ச் சொல்லாகி, நாளடைவில் பெண்பாற் குறித்த வினையீறும் பெயரீறும் ஆயிற்று.

**ஆள்**[5] āl, பெ. (n.) இருபாற் பொதுப்பெயர்; common noun for masculine and feminine.

**ஆள்காட்டி** āl-kāṭṭi, பெ. (n.) மாந்தரைக் கண்டவுடன் கூச்சலிடுங் குருவி, ஆற்றோரங்களில் காணப் படும். மல்லாந்து படுத்துக் காலையுயர்த்திக் கொண்டு தூங்கும் இயல்புள்ளது; (man + pointer), red wattled lapwing, sand piper.. It is so called from its screeching at the approach of man by night and is very numerous on sandy banks and shores of rivers. It is said to sleep on its back with its legs turned upwards the sky as if to protect itself from the falling sky. (சா.அக.).

**ம.** ஆள்காட்டி.

**மறுவ.** ஆட்காட்டி, ஆக்காட்டி.

*[ஆள் + காட்டி = ஆளைக்காட்டிக் கொடுக்கும் இயல்புள்ள பறவை.]*

**ஆள்காட்டி வேலை** āḷ-kāṭṭi-vēlai, பெ. (n.) ஏமாற்று வேலை (மதி.கள.11, 72); betrayal, double-crossing, duplicity.

**ஆள்கை** āḷgai, பெ. (n.) ஆளுதல்; governing, rule. "பயங்காய்ந் தென்னை யாள்கைக்கு" (மரு.தி.22). (த.சொ. அக.).

**க.** ஆள்கெ, ஆளிகெ, ஆவிகெ.

*[ஆள் → ஆள்கை]*

**ஆள்சுணங்கி** āḷ-suṉaṅgi, பெ. (n.) தொட்டாற்சுருங்கி; touch-me-not plant.

**மறுவ.** தொட்டால் வாடி, தொட்டாற்சுருங்கி, தொட்டால் சிணுங்கி, ஆள், ஆள்வணங்கி

*[ஆள் + சுணங்கி. சுணங்குதல் = வாடுதல், சுருங்குதல். ஆள் சுணங்கி என்னும் சொல் 'ஆள்' எனக் குறுகியும் வழங்கும்.]*

**ஆள்சொக்கு-தல்** āḷ-šokku-, 15 செ.கு.வி. (v.i.) 1. தூங்குதல்; to sleep. 2. மயக்கம் அடைதல்; to become unconscious, be ensnared.

*[ஆள் + சொக்கு.]*

**ஆள்தள்ளுதல்** āḷ-taḷḷu -, 5 செ.குன்றாவி. (v.i.) குறிப்பிட்ட தோரிடஞ்சென்று செய்தி சொல்லி வருமாறு வேண்டியவரை அவ்விடத்திற்கு அனுப் புதல்; to send a messanger. (முகவை. மீன்)

*[ஆள் + தள்ளு .]*

**ஆள்திட்டம்** āḷ-tiṭṭam, பெ. (n.) 1. ஓர் ஆளுக்குரிய அளவு; quantity that is required or fixed for an adult. 2. ஒருவரை இன்னாரென்று தெரிந்து கொள்ள உதவும் உறுப்பு அடையாளம்; features for recognising a person.

*[ஆள் + திட்டம். திட்டம் = அளவு, அறிகுறி.]*

**ஆள்தூண்டிவிரல்** āḷ-tūṇḍi-viral, பெ. (n.) சுட்டுவிரல்; fore-finger.

*[ஆள் + தூண்டி + விரல். தூண்டுதல் = சுட்டிக் காட்டுதல்.]*

ஓர் ஆளையோ ஒரு பொருளையோ சுட்டிக் காட்டுவதற்கு உதவுவதால் இதற்கு இப்பெயர் அமைந்தது.

**ஆள்நெல்லு** āḷ-nellu, பெ. (n.) வரிவகை (s.i.i.vi.155); tax.

*[ஆள் + நெல்.]*

**ஆள்பிடியன்** āḷ-piḍiyaṉ, பெ. (n.) ஆட்பிடியன் பார்க்க; see āṭpiḍiyaṉ

**ம.** ஆள்ப்பிடியன்

**ஆள்மட்டச்சுவர்** āḷ-maṭṭa-c-cuvar, பெ. (n.) 1. ஆளுயரமுள்ள மதிற்சுவர் (இ.வ.); compound wall of a man's height (Loc.). 2. கைப்பிடிச் சுவர் (இ.வ.); parapet.

*[ஆள் + மட்டம் + சுவர். மட்டம் = அளவு, உயரம்.]*

**ஆள்மட்டம்** āḷ-maṭṭam, பெ. (n.) ஒரு மாந்தனின் உயர அளவு; man's height, as a measure for reckoning the depth of water or height of walls, trees, etc. கிணற்றின் ஆழம் மூன்று ஆள்மட்டம் இருக்கும் (உ.வ.).

**க.** ஆளுமட்ட

*[ஆள் + மட்டம்.]*

**ஆள்மறித்தான்புல்** āḷ-maṟittāṉ-pul, பெ. (n.) இராவணன் மீசைப்புல்; a kind of grass resembling Ravana's whiskers, found on the sea–shore. (சா.அக.).

*[ஆள் + மறித்தான் + புல். ஆள்மறித்தல் = திடுக்கிடச் செய்தல், அச்சுறுத்தல், வடிவமைப்பில் பெரிதாயிருத்தல்.]*

**ஆள்மாகாணம்** āḷmāgāṇam, பெ. (n.) மக்களின் திரள் கூட்டம், இனத்தார் அல்லது நட்பினர் கும்பு (கும்பல்); dependants, persons at one's command. அவனுக்கு ஆள்மாகாணம் அதிகம் (இ.வ.). 2. அலுவலகத்திலுள்ளவர் கூட்டம்; personnel of an office or establishment. 3. கூலியாட்கள் வேலை செய்யுமிடம்; group of workers, labourers (ஆ.அக.)

**ம.** ஆள்மாகாணம்

*[ஆள் + மாகாணம். மாகாணம் = பெரிது, அதிகம். மா + கணம் = மாக்கணம் → மாக்காணம் → மாகாணம்.]*

**ஆள்மாறாட்டம்** āḷmāṟāṭṭam, பெ. (n.) ஒருவன் தன்னை வேற்றாளாகக் காட்டி ஏமாற்றுதல்; personation.

**ம.** ஆள்மாறாட்டம்.

*[ஆள் + மாறாட்டம்.]*

**ஆள்மிரட்டி** āḷmiraṭṭi, பெ. (n.) மந்திரித்து மை செய்வோர் பயன்படுத்தும்ஒரு மூலிகை; plant used in magic for preparing collyrium. (சா.அக.).

*[ஆள் + மிரட்டி. மிரட்டு + இ – மிரட்டி = அச்சுறுத்துவது, அடக்குவது, தன்வயப்படுத்துவது.]*

**ஆள்வணங்கி** āḷvaṇaṅgi, பெ. (n.) 1. அரச மரம்; peepul tree. 2. தொட்டாற்சுருங்கி; touch–me–not– plant. 3. கல்லத்தி; stone–fig. 4. மலைச்சருக்கரைவள்ளி; mountain sweet potato, (சா.அக.) 5. மாமரம்; mango.6. ஆத்தி; common mountain ebony. (செ.அக.). 7. கல்லத்தி (த.சொ.அக.); stone fig. 8. வேப்பமரம். neem tree. (கதி.அக.).

*[ஆள் + வணங்கி.]*

**ஆள்வரி** āḷvari, பெ. (n.) தலைவரி; pool–tax (Ins.).

**ஆள்வள்ளிக்கிழங்கு** āḷvaḷḷi-k-kiḻaṅgu, பெ. (n.) மரவள்ளிக் கிழங்கு; root of cassava plant, wild yam,

இது தென்னிந்தியாவில் பொதுவாக எங்கும் பயிராக்கப்படும். திருவனந்தபுரத்தில் மிகுதியாய்க் கிடைக்கும். இதிலுள்ள நச்சுத் தன்மையை நீக்கிய மாவுக்கு 'டாபியோகா' என்று பெயர். குழந்தைகள், நோயாளர், வலிவற்றோர் ஆகியோர்க்கு இம் மாவினைக் கஞ்சிகாய்ச்சித் தருவர். கொப்புளம், சிலந்திமுதலிய புண்களுக்கு இதன் வேர்ப்பட்டை மேற்பூச்சு மருந்தாகப் பயன்படும்.

தென்னமெரிக்காவிலுள்ள செவ்விந்தியர் இக் கிழங்கிலுள்ள நச்சுநீரை (hydrocyanic acid) வடித்தெடுத்து அம்பின் நுனியில் தடவுதற்குரிய கொடிய நஞ்சை (maudian poison) உண்டாக்குகின்றனர் (சா.அக.).

*[ஆழ்வள்ளி → ஆள்வள்ளி + கிழங்கு.]*

**ஆள்வாடைத்தட்டி** āḷlvādai–t–taṭṭi, பெ. (n.) நோக்கு நோக்கி; a plant (unidentified) (சா.அக.).

*[ஒருகா. ஆள்வாடையை உணர்ந்து கொள்வது அல்லது ஆள்வாடை படுவதால் வாடிப்போவதாக இருக்கலாம்.]*

**ஆள்வார்** āḷvār, பெ. (n.) கடவுள்; deity as supreme ruler. 'திருத்தீக்காலி ஆள்வார் கூத்தப்பெருமான் அடிகளுக்கு' (s.I.I. iii, 103).

*[ஆள் → ஆள்வார் = எல்லா உயிர்களையும் ஆளும் கடவுள்.]*

**ஆள்வாரம்**[1] āḷlvāram, பெ. (n.) பண்ணையில் பணியாற்றிய குடும்ப உறுப்பினர்களின் எண்ணிக்கைக்கு ஏற்ப அக்குடும்பத் தலைவனால் பண்ணையாளுக்குத் தரும் வாரம் அல்லது பங்கு (இ.வ.); system of crop–sharing in which the tenant's portion is determined by the number of labourers employed from his family (Loc.).

**க.** ஆளிவாறு (ஒருவகை வரி)

*[ஆள் + வாரம்.]*

**ஆள்வாரம்**[2] āḷlvāram, பெ. (n.) தட்டை முதலியன அடுக்கிய படப்பில் பொதியமையும் பகுதியின் இருபக்கத்திலும் உள்ள இடம் (முகவை.); path between two stacks of hey

*[ஆள் + வாரம்.]*

**ஆள்வாரி** āḷlvāri, பெ. (n.) ஆளோடி; paved passage on the inner side of the parapet of a tank. "தீர்த்தக்கரை மதிலும் மண்டபமும் மன்னுபுடை சுற்று மாள் வாரியுடன்" (பூவண.உலா. 101).

**க.** ஆள்வேரி, ஆளுவேரி (கோட்டைச்சுவர்)

*[ஆள் + வாரி (வா → வரு) – வாரி.]*

**ஆள்வாரிதி** āḷvāridi, பெ. (n.) அரசமரம்; peepul tree.

*[ஆள்வார் = ஆள்வாரிதி. ஆள்வார் – ஆளுகின்ற அரசர். அரசமரம் என்பதற்குக் குறிப்பான் வேறு பெயராக நாட்டு மருத்துவரும் சித்தரும் கையாண்ட குழூஉக்கு றிச்சொல்.]*

செடி கொடி மரம் முதலியவற்றுக்கும் இன்றியமையாத மூலிகைகளுக்கும் இத்தகு வேறு பெயர்கள் பல வழங்குவதைக் காணலாம்.

**ஆள்வாரிநிலம்** āḷvārinilam, பெ. (n.) கோட்டையுள் மதிற்புறமாக ஆள் சுற்றிவருவதற்குரியவழி (பிங்.); paved passage along the walls within a fortification.

*[ஆள்வாரி + நிலம். ஆள்வாரி = ஆள் வருவதற் குரிய வழி. ஒ.நோ: வாரிப்புறம் போக்கு = மக்கள் வருவதற்குரிய அல்லது போக்கு வரத்துக்குரிய புறம்போக்கு நிலம்.]*

**ஆள்வாரில்லாமாடு** āḷvārillāmāḍu, பெ. (n.) 1. கோயில் மாடு (வின்.); cow or bull belonging to a temple. 2. கட்டின்றி மேய்ந்து திரியும் பட்டி மாடு; straying cattle.

*[ஆள்வார் + இல்லா + மாடு. ஆள்வார் = மேய்ப்பவர்.]*

**ஆள்வாரிலி மாடு** āḷvārili māḍu, பெ. (n.) பட்டிமாடு; straying cattle. "ஆள்வாரிலி மாடாவேனோ" (திருவாச. 21.7).

*[ஆள்வார் + இலி. + மாடு. இல்லி → இலி = இல்லாத.]*

**ஆள்வாரில்லா மாடு** பார்க்க; See āḷvārillā māḍu.

**ஆள்விட்டுப்போ—தல்** āḷviṭṭu-p-pō--, 8 செ.கு.வி. (v.i.) உடம்பு இளைத்தல்; become weak and lean. போன மாதம் பார்த்ததைவிட இப்பொழுது மிகவும் ஆள்விட்டுப் போய்விட்டான் (உ.வ.).

*[ஆள் + விட்டு + போ.]*

**ஆள்விடு—தல்** āḷviḍu--, 20 செ.கு.வி. (v.i.) ஆள் வாயிலாகச் செய்தி அனுப்புதல்; (ஈடும். 1 .அவ.) to send a person, as a messenger.

*[ஆள் + விடு.]*

**ஆள்விழுங்கி** āḷviluṅgi, பெ. (n.) நீண்ட அங்கி. (கதி.அக.); long gown.

*[ஆள் + விழுங்கி.]*

**ஆள்வினை** aḷviṉai பெ. (n.) 1. முயற்சி; manly effort, enterprise. (குறள். 618). 2. ஊக்கம்; enthusiasm. 3. துணிவு; courage. 4. பணிவிடை; serving to the needs. "சுந்தர விடங்கன்தன்னை ஆள்வினை யன்பும் தானும் வைகலும் அடைந்து தாழ்ந்து" (திருவிளை: அங்கம். 3.).

*[ஆள் + வினை. ஆள் = ஆள்திறன். வினை = செயல். ஆள்வினை = ஆள் திறன் ஆகிய செயல், முயற்சி, ஊக்கம்.]*

**ஆள்வினையுடைமை** āḷviṉai-y-uḍaimai, பெ. (n.) இடைவிடாத மெய்ம் முயற்சி யுடையவனாதல்; tireless effort. (குறள். அதி. 62).

*[ஆள் + வினை + உடைமை.]*

**ஆள்வினை வேள்வி** āḷviṉai vēḷvi, பெ. (n.) விருந்து புறந்தருதல் (பதிற்றுப். 21, 13, உரை); hospitality to guests held to be as meritorious as a sacrifice.

*[ஆள்வினை + வேள்வி.]*

**ஆள்வு** āḷvu, பெ. (n.) ஆளுதல்; ruling. "அவனினி திருந்திவ் வேழுலகாள்விடம்" (கம்பரா. நகர. 5).

**க.** ஆள்தன, ஆளு விகெ.

*[ஆள் → ஆள்வு]*

**ஆளகம்** āḷagam, பெ. (n.) 1. சுரைக்காய் (மலை.); calabash,bottle gourd. 2. சுரைக்கொடி; bottle gourd creeper. (சா.அக.).

**தெ.** ஆனுகமு, ஆனுகு

*[ஆல் + அகம் - ஆலகம் → ஆளகம். ஆல் = நீர் ஆளகம் = நீர்ச்சுரப்புள்ளது. ஒநோ. சுரை = சுரப்புள்ளது, நீர்ப்பொருள் சுரந்து பருத்தது.]*

**ஆளடிமை** āḷaḍimai, பெ. (n.) அடிமை, நிலைத்த பணியாளன்; slave, permanent servant. "ஆதியிற் செய்ததவ முண்டில்லை யென்பதற் காளடிமையே சாட்சியாம்" (அறப். சத. 52).

**ம.** ஆளடியான்.

*[ஆள் + அடிமை.]*

**ஆளடியான்** āḷaḍiyāṉ, பெ. (n.) ஆளடிமை பார்க்க; see aladimai.

*[ஆள் + அடியான்]*

**ஆளத்தி** āḷatti, பெ. (n.) (இசை.) பண்ணிசைக்கும் போது மூலாதாரம் தொடங்கி வருமெழுத்தின் ஓசை; improvised introduction to a melody. (சிலப். 3, 26, உரை) (கூத்த.).

**க.** ஆளத்தி (பாடுதல்)

*[ஆளல் → ஆளத்தி = ஒரு பண்ணை ஆண்டு பாடுவது. ஆளல் = பாடிப்பாடிப் பழகிப் பண்படுத்திக் கொள்ளுதல், ஆளத்தி = பாடிப்பழகி இனிமை மிகுவிக்கப்பட்ட ஓசையழகு.]*

இது அச்சு, பாரணை என்று இருவகைப்படும். அச்சுக்கு எழுவாய் குற்றெழுத்து, பாரணைக்கு எழுவாய் நெட்டெழுத்து,. அச்சு தாளத்துடன் நிகழும். பாரணை கூத்துடன் நிகழும். ஆளத்தி செய்யுமிடத்துத் தென்னா என்றும், தெனா என்றும் இரண்டசையும் கூட்டித் தென்னாதெனா என்று பாடப்படும்.

இவைதாம் காட்டாளத்தி, நிறவாளத்தி, பண்ணாளத்தி என மூன்று வகைப்படும். இவற்றுள் காட்டாளத்தி அச்சுடன் நிகழும். நிறவாளத்தி நிறம் குலையாமல் பாரணையுடன் நிகழும். பண்ணாளத்தி பண்ணையே கருதி வைக்கப்படும். பின்னும் மற்றொரு வகைக் குற்றெழுத்தாலும் நெட்டெழுத்தாலும் ஆளத்தி செய்யப்படும். மற்றும் மெய்யெழுத்துப் பதினெட்டினுள்ளும் மவ்வும் நவ்வுத் தவ்வும் என மூன்று எழுத்துகளும் இனமுமல்லா மற்றை எழுத்துகள் ஆளத்திக்கு வரப்பெறா. இவற்றுள் மவ்வினம் தூய்மை (சுத்தம்)க்கு உரித்து. நவ்வினம் சாளத்திற்கு உரித்து. தவ்வினம் தமிழிற்கு உரித்து. இங்ஙனம் மூலாதாரம் தொடங்கி எழுத்தின் ஓசை (நாதம்) ஆளத்தியாய்ப் பின்னிசை என்றும் பண் என்றும் பெயராம். பல இயற்பாக்களுடன் நிறத்தை இசைத்தலால் இசை என்று பெயராம்.

பெருந்தானம் எட்டனுள் செய்வு (கிரியை)கள் எட்டாலும் பண்ணப்படுதலால் பண்ணென்றும் பெயராயிற்று. பெருந்தானம் எட்டாவன; நெஞ்சு, மிடறு, நா, மூக்கு, அண்ணாக்கு, உதடு, பல், தலை, என்பவை. செய்வுகள் (கிரியை) எட்டாவன; எடுத்தல், படுத்தல், நலிதல், கம்பிதம், குடிலம், ஒலி, உருட்டு, தாக்கு என்பவைகளாம்.

"மகரத்தி னொற்றுச் சுருதி விரவும்
பகருங் குறினெடில் பாரித்து – நிகரிலாத்
தென்னா தெனாவென்று பாடுவரே வாளத்தி
மன்னாவிச் சொல்லின் வகை"

முதல் பாடுமிடத்து மகரத்தின் ஒற்றாலே ஓசை (நாதம்)யைப் பலுக்கும் (உச்சரிக்கும்) மரபு பகரில் பாரித்து முற்கூறிய ஓசை (நாதம்) யினைத் தொழில் செய்யுமிடத்துக் குற்றெழுத்தாலும் நெட்டெழுத்தாலும் செய்யப்படும் (சிலப்.) (அபி.சிந்.)

**ஆளம்** āḷam, பெ. (n.) ஆளத்தி (ஆலாபனம்); elaboration of a tune. "வண்டினங்கள் ஆளம் வைக்கும் அரங்கமே" (திவ். பெரியாழ் .4,8,6).

*[ஆல் → ஆலம் → ஆளம்.]*

**ஆளமஞ்சி** āḷamañji, பெ. (n.) கூலியின்றிச் செய்யும் கட்டாய வேலை (S.I.I.i.103); forced labour, gratuitous supply of labourers.

*[அமைந்த ஆள் → அமஞ்சியாள் → ஆளமஞ்சி. கால்வாய்–வாய்க்கால் என்றாற் போன்ற இலக் கணப் போலி. அமைந்த ஆள் = இன்ன பணி இலவயமாகச் செய்தாக வேண்டு மென்னும் கட்டாயத்திற்குட் பட்டவன். அமைதல் = கட்டுப்படல்.]*

**ஆளரவம்** āḷaravam, பெ. (n.) மாந்தரின் நடமாட்டத்தால் உண்டாகும் ஓசை; noise of people moving about. "ஆளரவம் சற்றேயடங்கியபின்" (பத்ம. தென்றல் விடு.122).

*[ஆள் + அரவம்.]*

**ஆளரி** āḷari, பெ. (n.) 1. ஆண் அரிமா (சிங்கம்) (பிங்.); lion, 2. நரவரி (நரசிம்மம்) யாகத் தோன்றிய திருமால்; Visnu in his incarnation of man–lion. (திருக்கோ.225 உரை).

*[ஆள் + அரி. அரி = அரிமா, சிங்கம்.]*

**ஆளல்**[1] āḷal, பெ. (n.) 1. ஆளுதல்; ruling.

*[ஆள் + அல் (தொ.பெ.ஈறு).]*

**ஆளல்**[2] āḷal, பெ. (n.) மீன்வகை; a kind of fish. "கோளையாள லொஞ்சான் பஞ்சான்" (குருகூர்ப் பள்ளு. பக். 7).

*[ஒருகா. ஆரால் → ஆரல் → ஆளல்.]*

**ஆளல்**[3] āḷal, பெ. (n.) கறையான்; white–ant.

*[ஆழல் → ஆளல்.]*

**ஆழல்** பார்க்க; see āḻal.

**ஆளவந்தார்** āḷavandār, பெ. (n.) 1. ஒரு மாலியக் குரவர் (வைணவ ஆசாரியர்); Vaiṣṇava Ācārya in Srirangam who was the immediate predecessor of Rāmānuja. (அட்டப். சீரங்கநாய. ஊசல். 18). 2. தமிழ் ஞானவாசிட்ட ஆசிரியர்; a Brahmin poet, author of the Tamil Ñāṉavāsiṭṭam.

*[உயிர்களை ஆளவந்த அருளாளனாகிய இறைவன் என்று பொருள்படும் கடவுட்பெயர், அத்தகு அருளாளராகிய அடியார் இட்டுக் கொள்ளும் இயற்பெயராயிற்று.]*

ஆளவந்தார் கலியாண்டு 4017, தாது ஆண்டு கடக (ஆடி) மாதம் அறிவன் (புதன்) கிழமை வீரநாராயணபுரத்தில் ஈசுர முனிக்கும் அரங்கநாயகியம்மைக்கும் மகனாகப் பிறந்தார். மகாபாசிய பட்டரின் மாணாக்கர். ஆக்கியாழ்வான் என்னும் அரண்மனைப் புலவனுக்குக் கப்பம் கட்டவேண்டுமென்று மகாபாசிய பட்டருக்குத் திருமுகம் வந்தது கண்டு சினந்து அரசன் அனுப்பிய தண்டிகையிற் சென்று, அரசமாதேவியாகிய திருவரங்கத்தம்மையால் என்னை யாளவந்தவர் எனப் புகழப் பட்டவர். ஆக்கியாழ்வானை வென்றதால் அரசனால் பாதி அரசைப் பெற்றவர். மணக்கால்நம்பிக்குப்பின் வந்த திருமாலிய ஆசானாக விளங்கியவர் (குரு பரம்பரை).

ஞானவாசிட்டத்தைத் தமிழிற் செய்யுளாகச் செய்த ஆளவந்தார் பாண்டிநாட்டு விரையூரிற் பிறந்த தமிழ்ப்புலவர் (அபி.சிந்.).

**ஆளவந்தாராண்டான்** āḷavandārāṇḍāṉ, பெ. (n.) எழுபத்து நான்கு அரியணை யதிகருள் (சிம்மாசனாதிபதி) ஒருவர் (குரு பரம்பரை); one of the seventy four great men in the Vaiṣṇava religion.

*[ஆளவந்தார் + ஆண்டான்.]*

**ஆளவந்தாராழ்வார்** āḷavandārāḻvār, பெ. (n.) திருவரங்கப் பெருமாளரையரின் வேறு பெயர்; name of Tiruvaranga-p-perumāḷaraiyar.

*[ஆளவந்தார் + ஆழ்வார்.]*

**ஆளறி–தல்** āḷaṟi–2. செ.கு.வி. (v.i.) ஆள் அடையாளம் அறிதல்; to idntify.

*[ஆள் + அறி.]*

**ஆளறி சான்று** āḷaṟicāṉṟu, பெ. (n.) ஆள் இன்னார் என்று காட்டும் சான்று; identification certificate

*[ஆள் + அறி + சான்று.]*

**ஆளறிதல்** āḷaṟidal, தொ.பெ. (vbl.n.) ஆளை அடையாளம் காட்டுதல்; identification.

*[ஆள் + அறிதல்.]*

**ஆளறிஞர்** āḷaṟiñar, பெ. (n.) இவர் இன்னார் என்று அடையாளம் காட்டுபவர்; identifier.

*[ஆள் + அறிஞர்]*

**ஆளறுதி** āḷaṟudi, பெ. (n.) தனிமை; solitude. "இக்காம நோய்க்குத் துணையாவதோர் ஆளறுதியிலே" (கலித்.144. உரை).

*[ஆள் + அறுதி. அறுதி = அற்ற நிலை. ஆளறுதி = துணையாகும் ஆள் எவரும் இல்லாத நிலை, தனிமை.]*

**ஆளன்**[1] āḷaṉ, பெ. (n.) 1. அடிமை; slave. "ஆளராய்த் தொழுவாரு மமரர்கள்" (திவ். திருவாய். 9.3,10). 2. சிற்றூரில் பரம்புரையாய்ப் பாகவுரிமை உள்ளவன்; proprietor of a hereditary share in a village (R.T.). 3. ஆளுபவன், அரசன்; ruler, king. 4. தலைவன், முதலாளி; chief, boss.

*[ஆள் → ஆளன்.]*

**ஆளன்**[2] – āḷaṉ இடை. (part.) ஓர் ஆண்பாற் பெயரீறு; a mas. n. suff. கண்ணாளன், மணாளன் (உ.வ.).

ம. ஆளன்; க. ஆள்ம, ஆண்ம

*[ஆள் → ஆளன்.]*

**ஆளா(கு)–தல்** āḷā(gu)–, 9. செ.கு.வி. (v.i.) 1. அடிமையாதல், அடியவனாதல்; to become a servant or devotee. (திவ். பெரியதி. 11.7.9). 2. பெருமையடைதல்; become eminent, distinguished. ஊரில் அவர்தான் ஆளாயுள்ளவர்(உ.வ.). 3. மகளிர் பருவமடைதல் attain puberty, used only with reference to girls. அந்தப் பெண் ஆளாகிவிட்டாள் (உ.வ.). 4. கட்டமைந்த உடலினனாதல்; attain well built body. பையன் நல்ல ஆளாய்விட்டான் (உ.வ.).

*[ஆள் + ஆகு + தல் – ஆளாகுதல் → ஆளாதல்.]*

**ஆளாங்கு** āḷāṅgu, பெ. (n.) **ஆழங்கால்** பார்க்க; see āḻangāl.

*[ஆழங்கால் → ஆழாங்கு → ஆளாங்கு]*

**ஆளாபம்** āḷābam, பெ. (n.) ஆளத்தி, (ஆலாபனம்); improvised introduction of a melody. (சீவக. 1959 உரை). **ஆளத்தி** பார்க்க; See āḷatti.

**ஆளாமை** āḷāmai, பெ. (n.) **ஆளானம்** பார்க்க; see āḷāṉam

கதிரைவேற்பிள்ளை அகராதியில் ஆளாமை என்பதற்கு, கட்டுத்தறி, கலப்பை எனப் பொருள் வரைந்திருப்பது தவறு. இது ஆளானம் என்னும் சொல்லைப் பிறழக்கொண்டு பதிப்பித்ததால் நேர்ந்த பிழை.

**ஆளாழம்** āḷāḻam, பெ. (n.) ஓர்ஆள் அளவுள்ள ஆழம்; depth equal to the height of a full–sized man. அந்தக் கிணறு எத்தனை ஆளாழம் (உ.வ.).

*[ஆள்+ஆழம்.]*

**ஆளானம்** āḷāṉam, பெ. (n.) 1. தூண் (பிங்.); pillar, column. 2 யானை கட்டுந்தறி; stake, post to which an elephant is tied. "இருகோட்டுக் குன்றங்கன்றி யானை மதிற் பிணிப்புண்டு" (இரகு. குறை. 55). 3. கட்டுத்தறி; tying post. 4. கலப்பை; plough.

ம. ஆளானம்

*[ஆல் → ஆலானம் → ஆளானம். ஆலுதல் சுற்றுதல், சுற்றிக் கட்டுதல், பிரித்தல், இறுகக்கட்டுதல், கட்ட உதவும் கட்டுத்தறி, கயிற்றால் நுகத்தொடு பொருத்திக் கட்டக் கூடிய கலப்பை.]*

**ஆளி**[1] āḷi, பெ. (n.) ஆள்வோன்; one who rules or controls. "அரங்கமாளி என்னாளி" (திவ். பெரிய 7.3.4)

*[ஆள் + இ.]*

**ஆளி**[2] āḷi, இடை. (part) வில்லாளி, உழைப்பாளி, முதலாளி, தொழிலாளி, கொலையாளி (இ.வ.). sing. ending of rational nouns–denoting master or possessor of etc.

ம. ஆளி; க. ஆளு.

*[ஆள் → ஆளி.]*

**ஆளி**[3] āḷi, பெ. (n.) யானையாளி; fabulous animal with a proboscis like an elephant. "ஆளி நன்மானணங் குடைக் குருளை "(பொருந. 139). 2. அரிமா; lion." "ஆளிக்கொடி யேந்திய தங்கை" (தணி கைப்பு. நாட்டுப். 60). 3. அரிமா ஓரை (சிம்மராசி); Leo, fifth sign of the Zodiac. 4. யானை; elephant. 5. தேள்; scorpion. (சேரநா.). 6. உயிர்ப்பு, வாழ்வு, வலிமை (துளு); breath, life, strength.

ம. ஆளி.

*[ஒருகா. அள்ளி → ஆளி = செறிந்த வலிமையுடைய விலங்கு.]*

**ஆளி**[4] āḷi (n.) 1. தோழி (நாநார்த்); female companion. 2. மனைவி (ஆந்); wife.

**ம., க., தெ.** ஆளி;ஆ; **குரு., கோண்.** ஆலி.

*[ஆல் →ஆள் = ஆளப்படுபவள், துணை கொள்ளப் படுபவள் த. ஆளி > Skt. āli.]*

**ஆளி**[5] āḷi, பெ. (n.) 1. தூயகருத்து; honest thought. 2. ஒழுங்கு, வரிசை; row. 3. பாலம்; bridge. 4. வரம்பு; limit. 5. செய்கரை; bank of a river or the bound of a lake.

**ம.** ஆளி.

*[அளி → ஆளி.]*

**ஆளி**[6] āḷi, பெ. (n.) 1. சீனதேசத்துச் செடி வகை; linseed plant, 2. ஒருவகைக் கீரை; cress, 3. ஆளி விதை; seed of common flase plant.


ஆளி - சீனதேசத்துச் செடி

**ஆளி**[7] āḷi, பெ. (n.) வைத்தூற்றி; funnel.

*[நாளி → ஆளி. நாளி = உட்டுளையுடையது.]*

**ஆளி**[8] āḷi, பெ. (n.) 1. கிளிஞ்சில் போன்ற சிப்பி; oyster, ostrea edulis. 2. உடம்பு கருப்பாயும் தலை கபில நிறமாயுமிருக்கும் ஒருவகைக் கழுகு; tawny eagle, It has a black body and a brown head and it subsists on or by robbing other birds of prey. (சா.அக.).

*[ஆல் → ஆலி → ஆளி.]*

**ஆளி**[9] āḷi, பெ. (n.) 1. வழுக்கல் (நாமதப.); slipperiness. 2. பயனின்மை; uselessness.

*[ஆழ் → ஆழி → ஆளி.]*

**ஆளி**[10] āḷi, பெ. (n) சிறுமூட்டை; bundle.

*[அள்ளி → ஆளி]*

**ஆளி**[11] āḷi, பெ. (n.) வண்டு; bee.

**ம.** ஆளி

*[ஆளி[9] → ஆளி[10]]*

**ஆளி**[12] āḷi, பெ. (n.) உருப்படிவம் (மாதிரி), முன் வரைவு; sample, model, pattern, (ஆந்.).

*[அளவு → ஆளி.]*

**ஆளிட்டான் காசு** āḷiṭṭaṉ kāsu, பெ. (n.) பழைய நாணயம்; ancient coin. (பணவிடு.115).

*[ஆளிட்டான் + காசு.]*

**ஆளிடு-தல்** āḷiḍu–, 18 செ.குன்றாவி (v.t.) மாற்றாக வேறொருவரை அமர்த்துதல்; to depute as a substitute. "யோக்கியராயிருப்பாரை ஆளிட்டு" (s.I.I.ii. 254).

*[ஆள் + இடு.]*

**ஆளிந்தம்** āḷindam, பெ. (n.) திண்ணை; raised platform in front of the house. (த.சொ.அக.)

**ம.** ஆளிந்தம்

*[ஆளி[5] → ஆளிந்தம்.]*

**ஆளிமுகன்** āḷimugaṉ, பெ. (n.) சூரபதுமனுக்கு உள்ளடங்கி இலங்கையின் சிறு பகுதிக்குத் தலைவனான சிற்றரசன் (அபி.சிந்.); small chieftain of Sri Lanka under the rule of Sūrapaduma.

*[ஆளி போன்ற முகமுடையவன் என்றும் ஆயிரம் யாளி முகம் உடையவன் பிகுவலியன் என்றும் தொல் கதை வழங்குகிறது.]*

**ஆளியூர்தி** āḷi–y–ūrdi, பெ. (n.) அரிமாவின் மீதமர்ந்த காளி; Durga, riding on lion

*[ஆளி + ஊர்தி.]*

**ஆளிவித்து** āḷivittu, பெ. (n.) ஆளிவிதை பார்க்க; see **āḷividai.**

*[ஆளி + வித்து]*

**ஆளிவிதை** āḷividai, பெ. (n.) சிறு சணல் வித்து (பதார்த்த.780). இது தொடக்கத்தில் சீன நாட்டிலிருந்து கொண்டுவரப்பட்டது. கடுகுடன் சேர்த்துக்குளிர்காலத்தில் பயிரிடப்படும். வெளிறிய மஞ்சள் நிறமுள்ள இதனை அகத்தி வித்துக்குப் பகரமாகப் பயன்படுத்துவர். எல்லா மருத்துவர்களும் பயன்படுத்தும் இவ்வித்தினை அவிசி விதை யென்றும், ஆழிவிரையென்றும் கூறுவர். கட்டிகளின்மேல் களிபோல் கிண்டி வைத்துக் கட்டுவர். இருமல், குருதிகக்குதல், குளிர்வயிற்றுப் போக்கு (சீதபேதி), நீர்ச்சுருக்கு, அதிசாரம், வெள்ளை முதலிய நோய்களுக்கு மருந்துகளுடன் கலந்து சூரணமாகத் தரப்படும். இதன் எண்ணெய்க்குப் புண்ணாற்றும் குண முண்டு; seed of common flax

plant. Formerly it was imported from China. It is cultivated with mustard plant in cold weather.

The powdered seeds are used in the treatment of cough, dysentery, strangury, diarrhoea and other visceral obstructions. The oil extracted from the seeds is aperient and is used in the preparation of a liniment for burns (சா.அக.).

*[ஆளி + விதை. வித்து – விதை]*

**ஆளிவிரை** ālivirai, பெ. (n.) **ஆளிவிதை** பார்க்க; see ālividai.

*[ஆளி [5] +விதை → விரை. த-ர போலி. ஒ.நோ.]*

**ஆளு -தல்** ālu-, 10 செ. குன்றாவி (v.t.) ஆள்[1]-தல் பார்க்க; see āl[1]-.

ஆளுகை ālugai, பெ. (n) ஆள்கை பார்க்க see ālgai

**ஆளுங்கணத்தார்** āluṅ-k-aṇattar, பெ. (n.) ஊர்ச்சபை அதிகாரிகள் (IMP. TP. 725); executive members of the village assembly.

*[ஆளும் + கணம் + அத்து + ஆர்.]*

**ஆளுங்கணம்** āluṅ-kaṇam, பெ. (n.) ஊராட்சி புரியும் சபை (T.A.S.iv.24); governing body, as of a village.

*[ஆளும் + கணம்.]*

**ஆளுஞ்சரக்கு** āluñ-carakku, பெ. (n.) 1. நெருப்பிற்கு நில்லாமல் புகைந்தோ ஆவியாகியோ எழும்பிப் போகும் சரக்கு; mineral substance which evaporates on being exposed to fire as fictitious cinnabar. 2. மருந்துச்சரக்கு; drugs. (சா.அக.)

*[ஆளும் + சரக்கு.]*

**ஆளுடையதேவர்** āluḍaiyatēvar, பெ. (n.) திருஞான சம்பந்தர்.; (IMP.Tp.31); name of Saint Tiruñāṉasambandar.

*[ஆளுடைய + தேவர். ]*

**ஆளுடைய நம்பி** āluḍaiyanambi, பெ. (n.) சுந்தரமூர்த்தி நாயனார்; Saint Sundarar. "ஆளுடைய நம்பி ஸ்ரீபுராணம் கேட்டருளா நிற்க" (S.I.I.v.494).

*[ஆளுடைய + நம்பி.ஆளுடைய = ஆட்கொள்ளப் பட்ட.]*

**ஆளுடைய பிள்ளையார்** āluḍaiya piḷḷaiyār, பெ. (n.) திருஞானசம்பந்தர்; Tiruñāṉa Sambandar, as a ruling son of Śiva. ஆளுடைய பிள்ளையார் திருவந்தாதி.

*[ஆளுடைய + பிள்ளையார்.]*

**ஆளுடையவரசு** āluḍaya-v-arasu, பெ. (n.) திருநாவுக் கரசுநாயனார்; Saint Tirunāvukkarasu.

*[ஆளுடைய + அரசு.]*

**ஆளுடையான்** āluḍayāṉ பெ. (n.) 1. அடிமை கொண்டவன்; one who has accepted a person as servant. (திவ்.திருவாய்.5,1,10). "எம்மை யாளுடை யன் அன்பர் இதயதாம அரைக ளெல்லாம்" (திருவாத.மந்.).2.தலைவன், கடவுள்; Lord, Supreme being. "ஆளுடையார்திருவனேக தங்கா பதமுடைய மகா தேவர்க்கு" (S.I.I.ii.392.)

*[ஆள் + உடையான்.]*

**ஆளுயரம்** āluyaram, பெ. (n.) ஓராள் உயரமுள்ள அளவு; man'sheight, asameasure. இந்தமரம் இரண்டாளுயரம் இருக்கும்.

*[ஆள் + உயரம்.]*

**ஆளெழுத்துச்சேலை** āḷ-eluttu-c-cēlai, பெ. (n.) சித்திர மெழுதிய சேலை வகை; a kind of saree with pictures worked out in it. "ஆளெழுத்துச் சேலையிலே யாறேழு" (விறலிவிடு.672).

*[ஆள் + எழுத்து + சேலை. சேலையில் உருவங்களின் முத்திரை குத்தாமல் கைப்பட ஓவியங் களாக வரைதலால் இப்பெயர் பெற்றது.]*

**ஆளெனல்** āḷeṉal, பெ. (n.) நாயின் கதறற் குறிப்பு; onom. expr. signifying a dog's howling. (சீவக.936. உரை).

*[வாள் எனல் → ஆள் எனல்.]*

**ஆளேறுந்துலா** āḷēḏṟuntulā, பெ. (n.) பலர் குறுக்கு மரத்தில் ஏறி முன்னும் பின்னும் உலவ, கூந்தற் பனைவடிவிற் குடைந்த சாலில் ஒருவர் நீரிறைக் கும் பெரிய ஏற்றம் (வே.க.251). large well sweep pivoted on a fulcrum worked by one person with several persons walking up and down the long crossbar attached to it.

*[ஆள் + ஏறும் + துலா.]*

**ஆளை** āḷai, பெ. (n) அறுகு (மூ.அ.); Bermuda grass (த.சொ.அக.)

*[அள் → ஆள் → ஆளை. அள் = செறிவு]*

**ஆளைக் கொடு-த்தல்** āḷai-k-koḍu, 4. செ.குன்றாவி. (v.t.) ஆள்விடு-தல் பார்க்க; see āḷviḍu.

**ஆளைப்பற்றி** āḷai-p-paṟṟi, பெ. (n.) உடும்பு; guana.

*[ஆளை + பற்றி.]*

**ஆளையடிச்சான்** āḷai-y-adiccāṉ, பெ. (n.) புளியமரம்; tamarind tree.

*[ஆளை + அடித்தான் → அடிச்சான்.]*

**ஆளொட்டி** āḷoṭṭi, பெ. (n.) 1. காவற்கூடு (வின்); sentry-box, retiring place. 2. மறைவு; shed for hiding.

ம. ஆளொட்டி

*[ஆள் + ஒட்டி.]*

**ஆளொதுங்கி** āḷ-oduṅgi, பெ. (n.) **ஆளோட்டி** பார்க்க; see āḷōṭṭi.

*[ஆள் + ஒதுங்கி.]*

**ஆளோட்டி** āḷōṭṭi, பெ. (n.) வேலை வாங்குபவன்; overseer, taskmaster, superintendent.

*[ஆள் + ஒட்டி.]*

**ஆளோடி** āḷōdi, பெ. (n.) 1. நீர் நிலையின் மதில் உட்புறமாக மக்கள் நடமாட்டத்திற்காக விடப்பட்ட வழி; paved passage along the inner side of the parapet. 2. வாயிற் பெருநிலைக்கதவின் உட்சிறு கதவு, திட்டிவாசல். small door within the compass of a large one.

*[ஆள் + ஒடி.]*

**ஆளோலை** āḷ-ōlai, பெ. (n.) அடிமையாவணம்; bond of a slave. "எழுதுமாளோலை வாங்கி" (பெரியபு. தடுத்தாட். 45).

*[ஆள் + ஓலை.]*

**ஆற்பதம்** āṟpadam, பெ. (n.) 1. சாரம்; essence. 2. பற்றுக்கோடு; hold. "எறும்புக்கு மாற்பதமில்லை கண்டாய்" (தமிழ்நா. 191).

*[ஆல் + பதம் – ஆற்பதம் → Skt. aspada. ஆறுதல் – பொருந்துதல்.]*

**ஆற்பலம்** āṟpalam, பெ. (n.) ஆறுபலம் (கொ.வ.); six palams in weight (colloq.). "பட்டிடா வெருமைத் தயிராற்பலம்" (தேவா. 100).

*[ஆறுபலம் → ஆற்பலம். இக்கொச்சை வடிவைக் கற்போர் ஆளார். எனினும் செய்யுள் திரிபாக வந்த விலக்கெனக் கொண்டு கடைகணித்தல் வேண்டும்.]*

**ஆற்ற** āṟṟa, வி.எ. (adv.) 1. மிக; greatly. 2. முழுவதும்; entirely. "ஆற்ற அனந்தல் உடையாய் அருங்கலமே" (திருப்பாவை)

**ஆற்றங்கரை** āṟṟaṅ-karai, பெ. (n.) ஆற்றோரம்; bank of a river. "ஆற்றங்கரையின் மரமும் அரசறிய" (நல்வழி. 12)

*[ஆறு + கரை – ஆற்றங்கரை.]*

**ஆற்றங்கரைத்தேவை** āṟṟaṉ-karai-t-tēvai, பெ. (n.) ஒரு வகை வரி; a kind of tax (pudu. Ins. 399).

*[ஆற்றங்கரை + தேவை.]*

**ஆற்றடம்பு** āṟṟadambu, பெ. (n.) ஆற்றடப்பங் கொடி; a kind of bind-weed.

*[ஆறு → ஆற்று + அடம்பு.]*

**ஆற்றமாட்டாமை** āṟṟmāṭṭāmai, பெ. (n.) 1. முடியாமை; inability to cope with work. 2. வலிமையில்லாமை; lack of strength. 3. ஆண்மையின்மை; absence of manliness. 4. தாங்கமுடியாமை, பொறுத்துக் கொள்ள இயலாமை; inability to bear. (சா.அக)

*[ஆற்றுதல் = செய்தல். மாட்டாமை = இயலாமை.]*

**ஆற்றரசு** āṟṟarasu, பெ. (n.) **ஆற்றுப் பூவரசு** பார்க்க; see āṟṟu-p-pūvarasu

**ஆற்றல்**[1] āṟṟal, பெ. (n.) 1. வலிமை (திவா.); power, strength, prowess, ability. 2. முயற்சி (திவா.); endeavour, effort. 3. மிகுதி (பிங்.); abundance, copiousness. 4. கடைப்பிடி, உறுதி; determination. "ஆற்றலு மவள்வயி னான" (தொல். பொ. 129). 5. ஆண்மை (பிங்.); manliness, courage. 6. வெற்றி (பிங்.); victory. 7. வாய்மை (பிங்.); truth. 8. இன்னசொல் இன்ன பொருளுணர்த்தும் என்னும் அமைவு (நியதி) (தருக்கசங்); power inherent in a word to express a particular sense, connotative power of a word. 9. அறிவம், காட்சி, ஞானம் (பிங்.); wisdom, knowledge. 10. பொறுமை, பொறை; endurance, fortitude. "ஆற்று வாராற்றல் பசியாற்றல்" (குறள். 225) 11. ஒழிவு, ஓய்வு (இ.வ.) leisure (Loc.). எந்தக் காரியத்தையும் ஆற்றலிலே செய்ய வேண்டும் (நெல்லை). 12. பெருமை; magnanimity, greatness. "ஆற்றுவா ராற்றல் இகழாமை" (குறள். 191). 13. நீங்குதல்; leaving. "அன்னைமூப்பழிதர ஆர்கொ லாற்றுவார்" (நைடத. அன்.கண். 68). 14. வல்ல ராந்தன்மை; capability, being able and efficient. "ஆற்றுவாராற்றல் பணிதல்" (குறள். 985). 15. தணித்தல்; cooling.

*[ஆல் → ஆலு → ஆறு → ஆற்று → ஆற்றல். ஆல் = அசை, சுற்று, செயற்படு. ஆற்றல் = செயற்படுதற்கேற்ற வலிமை, திறன்.]*

**ஆற்றல்**[2] āṟṟal, பெ. (n.) 1. கூட்டல் (பிங்.); adding. "ஆற்றிய மெய்ச்செல்வத்தால்" (பாரத. சிறப். 21). 2. தாங்குதல்; supporting. 3. நிலைபெறுதல்; getting established, everlasting. "ஆற்றலேயுடைய தாகி" (சி.சி.க.22). 4. ஒத்திருத்தல், உவமையாயிருத்தல்;

resembling, being equal "வையகமும் வானகமும் ஆற்றலரிது" (குறள். 101).

*[ஆல் → ஆலு → ஆறு → ஆற்று → ஆற்றல். ஆலு= செய், சுழற்று. செய் – நடுங்கச் செய். ஒ.நோ: நீள் = நீடு →நீட்டு. நூல் → நீல் → நீறு → நீற்று.]*

**ஆற்றல்** [3] ārral, பெ. (n.) பித்தளை; brass. (சா.அக.).

*[ஒருகா. ஆலு → ஆறு → ஆற்று → ஆற்றல். ஆலுதல் = கட்டுதல், சேர்த்தல். ஆற்றல் = கூட்டிச் செய்யப்பட்ட மாழை (உலோகம்).]*

தகரம் துத்தநாகம் போன்ற தாழ்ந்த மாழைகளுடன் செம்பு சேர்த்துச் செய்யப்பட்ட கலவையே பித்தளை என்றழைக்கப் படுவதால் இஃது 'ஆற்றல்' எனப் பெயர் பெற்றிருக்கலாம். செம்பும், தகரமும் 2:1 என்னும் சேர்மானத்தில் சேர்க்கப்படும்.

**ஆற்றலங்கல்** ārralaṅgal, பெ. (n.) காட்டுப் பூவரசு; false fern tree. (சா.அக.).

*[ஆறு = ஆற்று. ஆறு (ஆற்று) + அலங்கல்.]*

**ஆற்றலரி** ārralari, பெ. (n.) 1. ஆற்றுச் சவுக்கு அல்லது கோடைச் சவுக்கு; common tarmarisk. 2. சுடலைப் பூச் செடி; a kind of flower plant with tubular stipules 3. முதலைப் பூண்டு; alligator's nose. 4. சேங்கொட்டை மரம்; marking nut tree,

*[ஆறு (ஆற்று) + அலரி.]*

சேங்கொட்டை என்னும் பொருள் சில அகராதிகளில் செங்கொட்டை என்று கூறப்பட்டிருப்பது அகரமுதலி தொகுப்பாளர் பிழையாகவோ, அச்சிட்டோர் பிழையாகவோ இருத்தல் வேண்டும்.

**ஆற்றறு** [1] **–த்தல்** ārraṟu–, 4 செ.குன்றாவி (v.t) இடையிற் கைவிடுதல்; to forsake on the way, desert in the middle. "அமரகத் தாற்றறுக்கும் கல்லாமா" (குறள், 814).

*[ஆறு – (ஆற்று) + அறு. ஆறு = வழி. அறுதல் = துறத்தல், விட்டு நீங்குதல். ஆற்றறுத்தல் = நடுவழியில் விட்டுப் போய்விடுதல்.]*

**ஆற்றறு** [2] **–த்தல்** ārraṟu–, 4 செ.குன்றாவி (v.t.) வலியறுத்தல்; to undermine or sap one's strength of mind. "அற்றத்திட்டாற்றறுத்தான் மார்பு" (கலித். 144. 66).

*[ஆற்றல் + அறு = ஆற்றலறு → ஆற்றறு. இனி, ஆற்று + அறு எனினுமாம். ஆற்று = ஆற்றும் வலிமை.]*

**ஆற்றறுகு** ārraṟugu, பெ. (n.) ஆற்றங்கரையோரம் வளரும் அறுகம்புல் வகைகளுள் ஒன்று; a kind of grass growning near the river side. (சா.அக.).

*[ஆறு (ஆற்று) + அறுகு.]*

**ஆற்றாக்கேடு** ārrā-k-kēḍu, பெ. (n.) கொடிய வறுமை; extreme poverty (W.).

*[ஆற்றாத + கேடு, 'த்' ஈறுகெட்டது.]*

**ஆற்றாச்சண்டி** ārrā-c-caṇḍi, பெ. (n.) வறுமையின் கொடுமையால் விடாது பிச்சை கேட்பவன்; importunate beggar (W.).

*[ஆற்றாத → ஆற்றா (ஈ.கெ.எ.ம.பெ.எ.) + சண்டி.]*

**ஆற்றாத்தனம்** ārrā-t-tanam, பெ. (n.) செய்யமாட்டாமை; irritability, insatiableness (W.).

*[ஆற்றாத + தனம்.]*

**ஆற்றாமை** ārrāmai, பெ. (n.) 1. பொறுக்க முடியாத நிலைமை; inability to bear, excitability as excessive hunger, thirst, pain etc. (திவ். திருவாய். 2.1.7). 2. உடம்பின் தளர்ச்சி; infirmity. 3. முடியாமை, செய்யமாட்டாமை; want of capacity, lack of ability to perform. "அஃதாற்றா தெழுவாரை எல்லாம் பொறுத்து" (குறள். 1032). 4. துன்பம், துயரம்; sorrow, distress, concern. 5. மனநிறைவின்மை; voracity, voraciousness, insatiableness.

*[ஆற்று + ஆ (எ.இ.நி.) + மை. (ப. பெ. ஈறு).]*

**ஆற்றாலின் சத்து** ārrālin śattu, பெ. (n.) கற்சத்து (சிலாசத்து), கல்மதம், வேனிற்காலத்தில் பாறையின் கொதிப்பினால் கல்லிலிருந்து ஒழுகும் மதம்; gelatinous substance secreted from the sides of the rocks when they become heated by the rays of the sun, bituman. (சா.அக.).

*[ஒருகா. அறை + ஆல் + அறையால் – ஆற்றால் – இன் + சத்து. அறை = பாறை.]*

**ஆற்றார்** ārrār, பெ.. (n.) 1. வறியவர், ஏழையர்; the poor, the affilicted (P.). 2. பகைவர்; those who envy one, foes, opponents, rivals. 3. வலியரல்லாதார்; those who are unable (to do some thing) or incapable of. "ஆற்றாருமாற்றி யடுப" (குறள்.493). 4. தோற்றவர்கள்; the defeated. 5. வருந்தியவர், துன்புற்றோர்; afflicted people.

*[ஆற்று + ஆ (எ.ம.இ.நி.) + ஆர் (ப.பா. ஈறு).]*

**ஆற்றான்** ārrān, பெ. (n.) 1. வலிமை யில்லாதவன்; one who is without strength and ability. "ஆற்றானை யாற்றென் றலைப்பானும்" (திரிகடு. 45). 2. ஏழை; poor man.

*[ஆற்று + ஆ (எ.ம.இ.நி.) + ஆன் (ஆ.பா.ஈறு).]*

**ஆற்றி** ā̲r̲r̲i, பெ. (n.) 1. ஆறுதல் (த.சொ.அக.); solace. 2. புண்ணை ஆற்றும் மருந்து; medicine capable of healing wounds, healing drug. (சா.அக.). 3. விசிறி; fan.

*[ஆற்று + இ(வி.மு.ஈ.).]*

**ஆற்றிக்கொடு–த்தல்** ār̲r̲i-k-kodu, 4 செ. குன்றாவி. (v.t.) 1. சூட்டைத்தணித்துக் கொடுத்தல்; to give after cooling 2. துணையாக உதவுதல்; help or provide relief (W.).

*[ஆற்றி + கொடு. (து.வி.).]*

**ஆற்றிடு–தல்** ār̲r̲idu–, 18 செ.குன்றாவி (v.t.) செய்தல்; to perform. "அந்நாள மலன் பணியாற்றிடலும்" (கந்தபு. காமத.26).

*[ஆற்று + இடு (து.வி.).]*

**ஆற்றிடைக்குறை** ār̲r̲idaikkurai, பெ. (n.) ஆற்றிடைத் திட்டு; island formed by river or rivers.

*[ஆறு + இடை+குறை.]*

**ஆற்றிடைப்படு–தல்** ārrdai–p–padu–, 20 செ.கு.வி. (v.i.) 1. வழியிலிருத்தல்; to be in the way. 2. வழியெதிர்படல்; to meet in the way (W.).

*[ஆறு + இடை + படு.]*

**ஆற்றித்தேற்று–தல்** ār̲r̲i–t–ter̲r̲u, 12 செ.குன்றாவி. (v.t.) 1. மன அமைதிப் படுத்துதல்; to soothe, console, comfort. (செ.அக.). 2. நோயினின்றும் குணப் படுத்திய பிறகு, உடம்பை மெதுவாக வலிவடை யும்படிச் செய்தல்; to cure diseases and cause one to recover the normal state of health and strength. 3. புண்களை ஆற்றிய பின் உடம்பில் வலிமைசேர மருந்து கொடுத்துத் தேறப் பண்ணுதல்; to heal wounds and administer medicines to pick up strength. (சா.அக.).

*[ஆற்றி + தேற்று .]*

**ஆற்றிப் போற்றிக்கொள்ளல்** ār̲r̲i–p–por̲r̲i–k–kollal, பெ. (n.) 1. உவந்து மிக்க மதிப்புரவுடன் விருந்தேற்றல்; treating guests with civility, cherish. 2. துன்புற்றோ ரைக் காத்தல், புறந்தருதல்; helping one in distress, rendering aid, as to a sick person. (W). 3. மன ஆறுதல் அளித்தல்; consoling.

*[ஆற்றி +போற்றி + கொள்ளல்.]*

**ஆற்றிலந்தை** ār̲r̲ilandai, பெ. (n.); ஒருவகை இலந்தை; a kind zizyphus. (சா.அக.).

*[ஆறு → (ஆற்று ) + இலந்தை.]*

**ஆற்றிலுப்பை** ār̲r̲iluppai, பெ. (n.) 1. ஒரு செடி; glabrous Mohwah of the Malabar coast. (சா.அக.). 2. மரவகை; tree (L.). – (செ.அக.)

*[ஆறு (ஆற்று ) + இலுப்பை.]*

**ஆற்றிறால்** ār̲r̲iral, பெ. (n.) நன்னீரில் வாழும் இறால் மீன்; river prawn, species of palaemon.




*[ஆறு (ஆற்று ) + இறால்.]*

**ஆற்றின் வித்து** ār̲r̲in–vittu, பெ. (n.) கருப்பூரக்கற்சத்து (சிலாசத்து); foliated crystallised gypsum.

*[ஒருகா. அறை + இன் – அறையின் → ஆற்றின் + வித்து. அறை = பாறை , கல்.]*

**ஆற்றினகடு** ār̲r̲inagadu, பெ. (n.) ஆற்றில் வெள்ளம் ஓடும் பகுதி; flood - prone channel in the river's course. (அபி. சிந்.).

*[ஆறு + அகடு.]*

**ஆற்று¹–தல்** ār̲r̲u–, 15. செ.கு.வி. (v.i.) 1. வலிவுறுதல்; to become strong, powerful. "ஆற்றாருமாற்றியடுப" (குறள். 493). 2. செய்யக் கூடியதாதல்; to be possible. "ஆற்றுந்துணையும் பொறுக்க" (நாலடி. 75). 3. போதியதாதல்; to be sufficient. "தட்டு முட்டுவிற்று மாற்றாது" (பணவிடு.225). 4. தப்பித் தல், உய்தல் (பிங்.); to escape, obtain deliverance, survive.

*[ஆல் → ஆற்று.]*

**ஆற்று²–தல்** ār̲r̲u–, 12. செ.குன்றாவி. (v.t) 1. தேடு தல்; to seek, acquire. "ஆற்றிய மக்களென்று மருந்தவ மிலார்க ளாகில்" (சீவக.2986). 2. செய்தல்; to do, perform. "மகன் தந்தைக் காற்றுமுதவி" (குறள். 70). 3. உதவுதல்; to give, as alms, to help, assist. "ஒருவீரொருவீர்க் காற்றுதிர்"

(புறநா.58). 4. நடத்துதல்; to lead, guide, conduct. "அறத்தாற்றின் இல்வாழ்க்கை யாற்றின்" (குறள்.46). 5. பொறுத் தல்; to bear, as on the head or shoulders. "ஆற்று வாராற்றல் பசியாற்றல்" (குறள்.225). 6. சுமத்தல்; to sustain, carry. "புடவி வைத்தாற்றிய பஃறலைப் பாந்தள்" (கல்லா. முருக.துதி.). 7. கூட்டுதல்; to accumulate, as wealth. 8. உவமை யாக்குதல்; to make equal to, compare with. "வையகமும் வானகமும் ஆற்றல் அரிது" (குறள்.101). 9. சுதை மா வாற்குழம்பாகப் பூசுதல்; to apply powder, etc.

**ம.** ஆற்று; **க.**ஆறு; **தெ.** ஆந்து. ஆத்து; **குட.** ஆத்.

*[ஆல் → ஆற்று.]*

**ஆற்று[3]-தல்** ā<u>rr</u>u-, 12 செ.குன்றாவி (v.t.) 1. பசி முதலியன தணித்தல்; to assuage, appease, alleviate, mitigate. "அரும்பசி களைய வாற்றுவது காணான்" (மணிமே.11,86). 2. நீக்குதல்; to remove. "மைய லாற்றிய குணத்து மாதவர்" (அரிச்.பு.விவாக.42) 3. துயரம் முதலியன தணித்தல்; to comfort, console, soothe. அவன் துக்கம் ஆற்றினான் (உ.வ.). 4. வெப்பம் தணித்தல்; to cool. வெந்நீரை ஆற்றிக்கொடு (உ.வ.). 5. காலந்தாழ்த்துதல், ஆறப்போடுதல்; to delay, postpone. 6. ஈரமுலர்த்துதல்; to dry, as the hair. குஞ்சியை ஆற்றின பின்பு" (சீவக.2422, உரை). 7. நூலின் முறுக்கு நெகிழாமலும் மடங்காமலும் இருக்க முறுக்கை வழித்துவிடுதல்; to smooth out a twisted thread in order to keep it from untwisting or knotting. நூலை முறுக்காற்றிவிடு (உ.வ.).

*[அகற்று → ஆற்று.]*

**ஆற்று** ā<u>rr</u>u, பெ. (n.) தலைவாயில், தலைக்கடை (த.சொ.அக.); threshold, entrance of a house, court yard.

*[ஒருகா. ஆறு → ஆற்று. ஆறு = வழி.]*

**ஆற்றுக்கட்டிக்கோலா** ā<u>rr</u>u-k-kaṭṭi-k-kōlā, பெ. (n.) கொக்குமீன்; yellowish green garpiko, (சா.அக.).

*[ஆற்றுக்கட்டி கோலா.]*

**ஆற்றுக்கால்** ā<u>rr</u>u-k-kāl, பெ. (n.) ஆற்றிலிருந்து பாசனத்திற்காக வெட்டிய கால்வாய்; channel for conducting water from a river for irrigation.

*[ஆறு (ஆற்று) + கால்.]*

**ஆற்றுக்காலாட்டியர்** ā<u>rr</u>u-k-kālāṭṭiyar, பெ. (n.) வயலில் பணியாற்றும் மருதநிலப் பெண்டிர்; women of the agricultural tracts. "ஆற்றுக் காலாட்டியர் முகத்துக் கழிந்த கமலங்களை" (நல்.பாரத.நாட். 8).

*[ஆற்றுக்கால் + ஆட்டி (பெ.பா.ஈறு) + ஆர் (ப.பா. ஈறு). ஆற்றுக்கால் = வாய்க்கால். நீர் நிறைந்த வயல்.]*

**ஆற்றுக்காலாதாரம்** ā<u>rr</u>u-k-kālādāram, பெ.(n.) ஆற்றி லிருந்து வரும் அடிப்படையான நீர்ப்பாசனம், ஆற்றங்காற் பாய்ச்சல்; irrigation by a spring-channel.

*[ஆற்றுக்கால் + ஆதாரம்.]*

**ஆற்றுக்காலேரி** ā<u>rr</u>u-k-kāleri, பெ. (n.) ஆற்றிலிருந்து பிரியும் கால்வாய் நீரால் நிரம்பும் ஏரி; tank fed by a water-course from a river (W.G.).

*[ஆற்றுக்கால் + ஏரி.]*

**ஆற்றுக்காற் பாசனம்** ā<u>rr</u>u-k-kā<u>r</u>-pāsanam, பெ. (n.) **ஆற்றுக்காற் பாய்ச்சல்** பார்க்க; see ā<u>rr</u>u-k-kā<u>r</u>-pāyccal.

*[ஆறு + (ஆற்று) + கால் + பாசனம்]*

**ஆற்றுக்காற் பாய்ச்சல்** ā<u>rr</u>u-k-kā<u>r</u>-pāyccal, பெ. (n.) ஆற்று வாய்க்கால் வழிபெறும் நீர்ப்பாசனம்; irrigation by a spring-channel.

*[ஆறு (ஆற்று) + கால் + பாய்ச்சல்.]*

**ஆற்றுக்கிளிஞ்சில்** ā<u>rr</u>u-k-kiliñjil, பெ. (n.) **ஆற்றுச் சிப்பி** பார்க்க; see ā<u>rr</u>u-c-cippi.

*[ஆறு (ஆற்று) + கிளிஞ்சில்.]*

**ஆற்றுக்குருவி** ā<u>rr</u>u-k-kuruvi, பெ. (n.) ஒரு நீர்ப்பறவை; tern.


ஆற்றுக்குருவி – நீர்ப்பறவை

*[ஆறு (ஆற்று) + குருவி.]*

**ஆற்றுக்குலை** ā<u>rr</u>u-k-kulai, பெ. (n.) 1. ஆற்றின் கரை; river bank (S.I.I.iv.167.) 2.வரிவகை; petty cess (S.I.I.v.241).

*[ஆறு → (ஆற்று) + குலை.]*

**ஆற்றுக்குள்ளழகிய மணல்** ā<u>r</u><u>r</u>u-k-kuḷ-aḻagiya-maṉal, பெ. (n.) கருமணல்; fine black sand found in the inner layers of river-beds. (சா.அக.).

*[ஆறு (ஆற்று) + கு (4.வே.உ.) + உள் + அழகிய + மணல்.]*

**ஆற்றுக்குறிச்சி** ā<u>r</u><u>r</u>u-k-ku<u>r</u>icci, பெ. (n.) திருச்சி மாவட்டத்தில் உள்ள ஊர்ப் பெயர்; place name in Tiruchirappalli district.

*[ஆறு → (ஆற்று) + குறிச்சி.]*

**ஆற்றுக்கெண்டை** ā<u>r</u><u>r</u>u-k-keṇḍai, பெ. (n.) ஆற்றில் வாழும் 6 அங்குல நீளமுள்ள சிறு கெண்டை மீன்; river carp or Nilgiri trout.

*[ஆறு + கெண்டை.]*

இதற்கு நீலகிரிக் கெண்டை என்றும் பெயர் உண்டு. சாம்பல் நிறமும் வெள்ளியைப் போன்ற பளபளப்பும் கொண்டது. முதுகில் 15 முட்கள் செங்குத்து வரிசையிலிருக்கும். முதுகின் பக்கமும், கீழ்ப்பாகமும், எருவாயிலும் (ஆசனவாயிலும்) சிறிது கருத்திருக்கும். ஆண் மீனுக்கும் சிறு மீன்களுக்கும் வழவழப் பான சிதல்கள் இருக்கும். நீலகிரியிலும் மலையாளத்திலும் இது மிகுதியாய் காணப்படும்;


ஆற்றுக் கெண்டை

**ஆற்றுக்கொடி** ā<u>r</u><u>r</u>u-k-koḍi, பெ. (n.) பேய்த் தும்மட்டி; bitter-apple. (சா.அக.) – (செ.அக.) பேய்க் கொம்மட்டி (சங்.அக.); colocynth.

*[ஆறு (ஆற்று) + கொடி.]*

**ஆற்றுத்தும்மட்டி** பார்க்க; See ā<u>r</u><u>r</u>u-t-tummaṭṭi.

**ஆற்றுக்கொம்பொதி மரம்** ā<u>r</u><u>r</u>u-k-kombodi-maram, பெ. (n.) பெரும் பூம்பாதிரி மரம்; long-leaved trumpet tree. (சா.அக.).

**ஆற்றுச்சங்கிலை** ā<u>r</u><u>r</u>u-c-caṅgilai, பெ. (n.) மலை வட்டை மரம்; mountain tamana oil tree. (சா.அக.).

*[ஆறு (ஆற்று) → சங்கு → இலை.]*

**ஆற்றுச்சஞ்சலை** ā<u>r</u><u>r</u>u-c-cañcalai பெ. (n.) **ஆற்றுச் சங்கிலை** பார்க்க; see ā<u>r</u><u>r</u>u-c-caṅgilai.

*[ஆறு + (சங்கிலை.) → சஞ்சலை.]*

**ஆற்றுச்சவுக்கு** ā<u>r</u><u>r</u>u-c-cavukku, பெ. (n.) கோடைச் சவுக்கு, ஆற்றலரி; common tarnarisk. (L.). 2. வயிற்றுப் போக்கு மருந்துச்செடி; garden tarnarisk, it is useful in diarrhoea, dysentery etc. (சா.அக.).

*[ஆறு (ஆற்று) + சவுக்கு.]*

**ஆற்றுச்சிப்பி** ā<u>r</u><u>r</u>u-c-cippi, பெ. (n.) ஆற்றுக்கிளிஞ்சில்; bivalue or mussel found in beds of rivers.

*[ஆறு (ஆற்று) + சிப்பி.]*

**ஆற்றுச்செருப்படி** ā<u>r</u><u>r</u>u-c-ceruppaḍi, பெ. (n.) **ஆற்றுச் செருப்படை** பார்க்க; see ā<u>r</u><u>r</u>u-c-ceruppaḍai.

*[ஆற்று + (செருப்படை) → செருப்படி.]*

**ஆற்றுச்செருப்படை** ā<u>r</u><u>r</u>u-c-ceruppaḍai, பெ. (n.) ஆற்றுப் பகுதி நிலத்தில் வளரும் ஒரு பூண்டுச் செடி; low spreading small water-plant found grown in river-beds. (சா.அக.).

*[ஆறு (ஆற்று + செருப்படை).]*

**செருப்படை** பார்க்க; see **seru-p-paḍai.**

**ஆற்றுணா** ā<u>r</u><u>r</u>uṇā, பெ. (n.) நெடுவழிப்போக்கர் வழி யிடை உண்பதற்காக எடுத்துச் செல்லும் கட்டுச் சோறு , பொதி சோறு; food bundled and tied up in a cloth and taken while travelling along a river's course. "ஆற்றுணாக் கொள்ள" (சீவக. 1550) (சா.அக.).

*[ஆறு + உணா.]*

**ஆற்றுத்தும்மட்டி** ā<u>r</u><u>r</u>u-t-tummaṭṭi, பெ. (n.) பேய்க் கொம்மட்டிப் பூடு. ஆற்றுப்படுகைகளில் ஆண்டிற் கொருமுறை விளையும். மழைக்காலத்தில் கீழ்க் கரை மணற்பாங்குகளில் பூக்கும். இதன் செடிப் பகுதிகளனைத்தும் (சமூலம்) கசப்பானது. இதன் தூள் கண்ணிலும் மூக்கிலும் படின் நெடியேறும்.


ஆற்றுத்தும்மட்டி

ஈரற்குலைநோய், மலக்கட்டு, குடல் நோய், பாண்டு முதலிய கழிச்சலால் (பேதியால்) குணப்படுத்தும் நோய்களுக்கு இதன் காயை மற்றச் சரக்குகளுடன் சேர்த்துக் கொடுப்பதுண்டு. விதையை வறுத்து உட்பருப்பைத் தின்பர். விதையின் எண்ணெய், பாம்புக்கடி, தேள்கடி, குடல்நோய், காக்கை வலிப்பு முதலிய வற்றுக்கும், முடிவளர்ச்சிக்கும், நரை மாறிக் கருப்பாவதற்கும் பயன்படுத்துவர்; bitter apple. It is so called from its usual growth on the river banks. All parts of the plant are very bitter and the dust when dry, is very irritating to the eyes and nostrils.

The fruit, particularly in combination with other drugs is very useful in constipation, hepatic and visceral congestions, dropsical affections and other diseases requiring purgatives. The kernal of the seed is eaten after a slight roasting; the oil from the seed is used for snake-bites scorpion stings, bowel complaints, epilepsy etc., and also for blackening grey hairs. (சா. அக.).

**மறுவ.** பேய்த்தும்மட்டி, பேய்க்கொம்மட்டி, பேய்க்கும்மட்டி, ஆற்றுக் கொடி.

*[ஆறு (ஆற்று) + தும்மட்டி.]*

**ஆற்றுத்தும்மட்டிக்காய்ச்சத்து** ārruttummaṭṭi-k-kāy-c-cattu, பெ. (n.) ஆற்றுத்தும்மட்டிக் காயினின்று வடிக்கும் சத்து; compound extract of colocynth (in allopathy). (சா.அக.).

*[ஆறு (ஆற்று) + தும்மட்டி + காய் + சத்து.]*

**ஆற்றுத்துவரை** ārru-t-tuvarai, பெ. (n.) ஒருவகைச் செடி; wild tea (சா. அக.).

*[ஆறு + துவரை.]*

**ஆற்றுத்தூம்பறுகு** ārrū-t-tumbarugu, பெ. (n.) உப்பறு கம்புல்; a kind of Barbuda grass found in brackish soils.

*[ஆறு (ஆற்று) + தும்பு + அறுகு.]*

**ஆற்றுதல்** ārrudal, தொ. பெ. (vbl.n.) 1. புண்ணைக் குணப்படுத்தல்; healing up wounds. 2.குளிரப் பண்ணுதல்; cooling. 3. பசியைத் தணித்தல்; appeasing hunger. 5. ஈட்டுதல்; earning. 6. பொறுத்துக் கொள்ளுதல்; bearing, enduring. "விதுரனும் வெஞ் சொலாற்றான் வில்லினை யிறுத்து நின்றான்" (பாரத. எட்டாம். போர்.14). 7. நடத்துதல்; conducting, leading. "ஆற்றுதல் என்பதொன்றலந்தவர்க் குதவுதல்" (கலித். 133). 8. சுமத்தல்; carrying. "புவிமுற்றும் ஆற்றிய பணிக்கிறை" (கந்தபு. அசுரேந்.42). 9. செய்தல்; doing. "ஆதலின் மைந்தர் காளறத்தை யாற்றுதிர்" (கந்தபு. காசிபனுப. 24.). 10. அணிதல்; wearing, adorning. "ஆற்று தொல் கருப்பத்துடன்" (கந்தபு. துண்ணவ. 16). 11. நீக்கல்; discarding, removing. "மையலாற்றிய குணத்து மாதவர்" (அரிச்ச. விவாக. 12). 12. பிரித்தல்; dividing. "சேற்றுவார் கதிர்சேரக் கொணர்ந்து வைத்தாற்றுவார்" (அரிச்சந். நாட்டு. 46). 13. உய்தல்; escaping, living. (பிங்.). 14. உதவுதல்; helping. "ஒருவீரொருவீர்க் காற்றுதிர்" (புறநா.58). 15. போதியதாதல்; sufficing. "தட்டுமுட்டு விற்று மாற்றாது" (பணவிடு. 225). 16. வலியராதல்; becoming strong. 17. கூட்டுதல் (பிங்.); accumulating. 18. ஈரமுலர்த்துதல்; drying, as the hair. "குஞ்சியை யாற்றின பின்பு " (சீவக. 2422 உரை). 19. நூலை முறுக்காற்றுதல்; smothing out a twisted thread.

*[ஆறு → ஆற்று → ஆற்றுதல்.]*

**ஆற்றுநண்டு** ārru-nandu, பெ. (n.) ஆற்றில் வாழும் நண்டு; crab living in rivers.

*[ஆறு + நண்டு.]*

**ஆற்றுநத்தை** ārru nattai, பெ. (n.) ஆற்றில் கிடக்கும் ஒருவகை நத்தை; snail found in large rivers. edible snail.

*[ஆறு + நத்தை.]*

**ஆற்றுநர்** ārrunar, பெ. (n.) வழிப்படுத்துவோர்; guide.

*[ஆற்று + ஆற்றுநர்.]*

**ஆற்றுநீர்ப்பொருள் கோள்** ārru-nīr-p-porulgōl, பெ. (n.) செய்யுளின் பொருளறிதற்குரிய பொருள்கோள் எட்டனுள் ஒன்று. செய்யுளில் சொல்லமைந்த முறைப்படி நிரலே பொருள் கொள்ளுமாறு ஆற்றொ ழுக்காக அமைந்த செய்யுளமைப்பு; mode of constructing poems, (one of eight porulkōl.) in such a form as to assist comprehension of meaning by refering and juxtaposing with corresponding series from beginning to end.

*[ஆறு (ஆற்று) + நீர் + பொருள் கோள். பொருள்கோள் = பொருள் கொள்ளும் முறை.]*

அடிதொறும் அற்றற்று ஒழுகும் ஆற்றுநீரைப் போல் கோர்வையாகப் பொருளுணர்தற்கேற்ற செய்யுளமைப்பு ஆற்று நீர்ப் பொருள்கோள் எனப்பட்டது.

"மற்றைய நோக்கா தடிதொறும் வான்பொருள்
அற்றற் றொழுகுமஃ தாற்றுப் புனலே" (நன்.)

"சொல்லருஞ் சூற்பசும் பாம்பின் தோற்றம்போல்
மெல்லவே கருவிருந் தீன்று மேலலார்
செல்வமே போற்றலை நிறுவித் தேர்ந்தநூல்
கல்விசேர் மாந்தரின் இறைஞ்சிக் காய்த்தவே"

(சீவக. நாம. 24.)

இச்செய்யுளில் நெல் எனப் பொருள்படும் "சொல்" என்னும் எழுவாயை முதலெடுத்து அதன் தொழில்களாகிய வினையெச்சங்கள் ஒன்றையொன்று கொள்ளும்படி முறையாக வைத்து அவற்றை முடித்த "காய்த்த" என்னும் பயனிலையை இறுதியில் வைத்தமையால் இப்பொருள்கோள் ஆற்று நீரொழுக் கிற்குச் சமமாயிற்று (நன். பொது. 61. உரை).

**ஆற்று நெட்டி** ār̠r̠u- neṭṭi, பெ. (n.) வறட்சுண்டி, நீர்ச் சுண்டி (மூ. அ்.); sensitive plant, water mimosa. (சா. அக.).

*[ஆறு + நெட்டி.]*

**ஆற்றுப்பசலி** ār̠r̠u-p-paśali, பெ. (n) ஒருவகைப் பசலைச் செடி; a kind of spinach.

*[ஆறு (ஆற்று) + பசலி. பசலி = பச்சைநிற முடையது.]*

**ஆற்றுப்பச்சை** ār̠r̠u-p-paccai, பெ. (n.) 1. நாகப்பச்சைக் கல், மருத்துவத் துணைச் சரக்குகளில் ஒன்று; inferior variety of green – stone forming one of the 120 kinds of natural substances described in the Tamil medical science. 2. பச்சைக்கல்; green-stone, emerald, one of 9 gems.

*[ஆறு + பச்சை]*

**ஆற்றுப்பஞ்சு** ār̠r̠u-p-panju, பெ. (n.) **கடற்கொஞ்சி** பார்க்க; see **kaḍarkonji.**

**ஆற்றுப்படுகை** ār̠r̠u-p-paḍugai, பெ. (n.) ஆற்றுப் பாய்ச்சலுள்ள அல்லது பாய்ச்சலுக்கேற்ற ஆற்றை யடுத்த சமநிலம்; river bed, land adjoining a river and rich with its alluvial deposit.

*[ஆறு (ஆற்று) + படுகை.]*

**ஆற்றுப்படுத்து-தல்** ār̠r̠u-p-paḍuttu-, 12. செ. குன்றாவி (v.t.) 1. வழிச் செலுத்துதல்; to direct in the right way, esp. to direct a professional, as a bard or dancer to a liberal patron. "விறலியை யாற்றுப் படுத்தன்று" (பு.வெ. 9,31). 2. போக்குதல்; to get rid of, remove. "துணையணைப் பள்ளித் துயிலாற்றுப் படுத்தாங்கு" (சிலப். 27, 209). 3. நன்னெறி யினுட் படுத்துதல்; to lead in a right path. "ஆற்றுப் படுத்தபின்" (கலித். 5) 4. வழிப் படுத்துதல்; to set right in a desired way. "நெஞ்சாற்றுப்படுத்த நிறைதபு புலம்பொடு" (முல்லைப். 81).

*[ஆறு (ஆற்று) + படுத்து (பி.வி.) + தல்.]*

சென்னைப் பல்கலைக்கழக அகரமுதலியில் 'ஆற்றுப் படுத்து-தல்' என இருக்க வேண்டிய பிறவினை வாய்பாட்டுக் கூட்டுவினையை ஆற்றுப்படு-த்தல் எனத் தந்திருப்பது தவறு. ஆற்றுப்பட்டான், –படுகின்றான் போன்று கூட்டுவினையாக்கிப் பண்டையிலக் கியங்களில் பயிலப்படாமை அறிக.

**ஆற்றுப்படை** ār̠r̠u-p-paḍai, பெ. (n.) பரிசில் பெற்ற ஒருவன், அது பெறக் கருதிய மற்றொருவனைத் தனக்குப் பரிசளித்த தலைவனிடத்துச் செலுத்து வதாக அகவற்பாவில் பாடப்படும் சிற்றிலக்கியம்; form of panegyric poem generally in agaval metre in which the poet who has been rewarded with gifts directs another poet to the chief from whom the latter may also receive similar reward. (பன்னிருபா. 318, 319).

*[ஆறு (ஆற்று) + படை. படு → படை.]*

'ஆற்றுப்படு' என்னும் தன்வினை வாய்ப்பாட்டுக் கூட்டுவினை 'ஆற்றுப்படுத்து' என்னும் பிறவினை வாய் பாட்டுக் கூட்டுவினையாகவே பண்டையிலக்கியங்களில், (திருமுருகு. 244), (அக. 22, 71, 365) (குறுந். 241) (பரி. 4:2, 3:10) (முல்லை. 22:11, 71:9, 365:2,81) (கலி. 5,85) (சிறு.39) ஆகியவற்றில் ஆளப்பட்டுள்ளது. ஆற்றுப்படுகின்றான், ஆற்றுப்பட்டான் எனத் தன்வினை வாய்பாட்டால் ஆளப்பட்ட தற்கான இலக்கியச் சான்றுகள் கிடைத்தில. ஆற்றுப்படைக்கு ஆற்றுப்படுத்துதல் என்பதே உரையாசிரியர்கள் கொண்ட பொருளாயின், அஃது ஆற்றுப்படுத்தமென்றே ஆளப் பட்டிருத்தல் வேண்டும். கொடை – கொடுத்தல் எனப் பொருள் படுவதல்லது, கொடுப்பித்தல் எனப் பொருள்தருமாறில்லை. ஆற்றுப்படை என்பதும் இரவலர் சென்ற ஆற்றின்கண் படுவது (செல்வது) என்றல்லது படுத்துவது (செலுத்துவது) எனப் பொருள் படாது. பரிசில் பெற்ற ஒருவன் பெறநிற்கும் ஒருவனுக்கு வழிகாட்டுவது ஆற்றுப்படைகளில் கதையமைப் பாயினும் குறிப்பிட்ட வள்ளல் அல்லது தலைவன் வாழும் ஊருக்குச் செல்லும் வழியை, பிற வழிப்போக்கரோ, அல்லது வழியிடை ஊர்களில் வதியும் மக்களோ காட்டுவது இயல்பான நிகழ்ச்சி.

ஆதலான் பரிசு பெறுதற்குரிய ஆற்றின்கண் படுவதே ஆற்றுப்படை எனக் கொள்வதே சாலப் பொருத்தம்.

"பரிசு பெற்று வருவார், கூத்தர், பாணர், பொருநர், விறலியர் என்னும் நால்வருட் பரிசிற்குப் போவார் ஒருவரை ஆற்றிடைக் கண்டு, தலைவன் சீர்த்தி (கீர்த்தி) முதலியவைகளைச் சொல்லி வழிப்படுத்துவதாதலின், இது கூத்தராற்றுப்படை, பாணராற்றுப் படை, பொருநராற்றுப்படை, விறலியராற்றுப்படைஎனநான்குவகைப்படும்" (இலக். விளக். பாட்டி. 113) எனக் கூறப் பட்டிருப்பினும், கூத்தராற்றுப்படுவது, பாணராற்றுப்படுவது எனப் பொருள் கொளலே நேரிது.

"பெற்ற பெருவளம் பெறாஅர்க் கறிவுறீஇச்
சென்று பயனெதிர ச் சொன்ன பக்கமும்"

எனத் தொல்காப்பியர் கூறியது ஆற்றுப்படுத்துதல் என்னும் பிறவினை வாய்பாட்டதே யெனினும், தானே வழி வினவியறிந்து வள்ளலைக் காணும் ஆற்றுப் படையிலக்கியம் தொல்காப்பியத்திற்கு முந்தியதாகவும், பிறர் ஆற்றுப்படுத்தும் பாங்குற்ற பின்னைய இலக்கியம் அதே பெயரில் ஆட்சி பெற்றதாகவும் கொள்ள வேண்டியுள்ளது.

"செயப்படு பொருளைச் செய்தது போலத்
தொழிற்படக் கிளத்தலும் வழக்கினு ளுரித்தே"

என்று கூறிய தொல்காப்பியர் பிறவினைப் பொருளைத் தன்வினை போலத் தொழிற்படக் கிளத்தலுண்டு என யாண்டும் கூறிற்றிலர்.

தமக்கேற்ற ஆற்றின்கண் படுதலைக் கூறும் நூல் ஆற்றுப்படை என்னும் பெயர் பெற்றது. நாளடைவில் ஆற்றுப்படையின் பாங்கு வளர்ச்சியுறத் தலைப்பின் பொருள் திரிபுற்றது என அறியலாம்.

**ஆற்றுப்பாசனம்** ārru–p–pāsanam, பெ. (n.) **ஆற்றுப் பாய்ச்சல்** பார்க்க; see ārru–p–pāyccal.

*[ஆற்றுப்பாய்ச்சல் → ஆற்றுப்பாசனம். பாய்ச்சல் → பாசல் → பாசலம் → பாசனம்.]*

**ஆற்றுப்பாசி** ārru–p–pāsi, பெ. (n.) ஒரு நீர்ப்பூண்டு; river–weed, Najas Indica alias caulinia Indica.

*[ஆறு (ஆற்று) + பாசி.]*

**ஆற்றுப்பாட்டம்** ārru–p–pāttam, பெ. (n.) பழங்கால வரி வகை; ancient tax (S.I.I.v. 365).

*[ஆறு (ஆற்று) + பாட்டம்.]*

**ஆற்றுப்பாய்ச்சல்** ārru–p–pāyccal, பெ. (n.) ஆற்றுக்கால்வாய்ப் பாசனம்; river irrigation.

*[ஆறு (ஆற்று)+ பாய்ச்சல்.]*

**ஆற்றுப்பாய்ச்சி** ārru–p–pāycci, பெ. (n.) ஆறுகளில் கப்பல் செலுத்துபவன்; river navigator. "ஆற்றுப் பாய்ச்சி கடற்பாய்ச்சி" (Insc.)

*[ஆறு (ஆற்று) + பாய்ச்சி. பாய் → பாய்ச்சி = செலுத்துபவன்.]*

**ஆற்றுப்பாலை** ārru–p–pālai, பெ.(n.) 1. இலைகள் மாறிமாறியிருப்பதும், பூக்கள் அடர்த்தியாயில் லாததும், நீர்நிலைக் கரைகளில் காணப் படுவதுமாகிய சிறிய மரம். இதன் பட்டையைக் காய்ச்சலுக்குக் கருக்கிட்டுத் (கசாயம்) தருவர்; Indian willow, river panlay, It is a small tree; leaves alternate few flowered; peduncle 3 to 6 leaved. It is always found on river banks and near water. Leaves lopped and given to cattle, as fodder. Bark is a febrifuge. 2. கவிழ்ந்து நீண்ட கிளைகளும், 50 அடி உயரமும், 12 அடி பருமனும், 3 விரலம் முதல் 6 விரலம் (அங்குலம்) நீண்ட இலைகள் கொண்டதும், கிளைப்பகுதிகள் கூடை முடையப் பயன் படுவதுமான பெரிய மரம்; weeping–willow. Salix babylonica. Tree 50 ft. height, trunk 12 ft; in girth, flowering and leaping together; leaves 3 to 6 inches. Branches and twigs largely used for making baskets; long, slender, drooping branches. (சா.அக.).

*[ஆறு (ஆற்று) + பாலை.]*

**ஆற்றுப்பிதலம்** ārru-p-pidalam, பெ. (n.) நிலத்தி னின்று ஆற்றைப் பிரிக்கும் எல்லை; line which separates land and river. (த.சொ.அக.).

*[ஆறு (ஆற்று) + பிதலம். பின்தலம் → பிதலம் (பின்னம்).]*

**ஆற்றுப்பூவரசு** ārru-p-pūvarasu, பெ. (n.) வெளிர் பச்சை நிறமுடையதும், சிறிய பூக்களுடையதும், கடற்கரை மணற்பாங்கில் காணப்படுவதுமாகிய செடிப் பூவரசு என்னும் பெரிய மரம்; large tree with small whitish-green flowers found in sandy places near the sea-shore. (சா.அக.).

*[ஆறு (ஆற்று) + பூவரசு.]*

**ஆற்றுப் பொடி** ārru-p-podi, பெ. (n.) ஆற்றிலுள்ள சிறுமீன்கள்; river minnow.

*[ஆறு + பொடி.]*


ஆற்றுப்பொடி – மீன் வகை

**ஆற்றுப்பொருவா** ārru-p-poruvā பெ. (n..) ஆற்று மீன் வகை; kind of river fish.

*[ஆறு + பொருவா.]*

**ஆற்றுபவர்** ārrubavar, பெ. (n.) ஆற்றலுடையவராய்ப் பிறர் மேற் செல்வார்; invader with superior might. "ஆற்றுபவர்க்கு மரண்" (குறள். 741). (த.சொ. அக.).

*[ஆற்று → ஆற்றுபவர்]*

**ஆற்றுமடை** ā<u>rr</u>u–maḍai, பெ. (n.) வாய்க்காலின் முகம்; sluice of a canal.

*[ஆறு + மடை.]*

**ஆற்றுமரி** ā<u>rr</u>umari, பெ. (n.) 1. நீருமரி; bastard cyprus. 2. பேய்க்கொம்மட்டி, ஆற்றுக்கொம்மட்டி; colocynth.

*[ஆறு + உமரி.]*

**ஆற்றுமருது** ā<u>rr</u>u–marudu, பெ. (n.) நீர்மருது; narrow leaved white winged myrobalan. (சா.அக.).

**ம.** ஆற்றுமருது

*[ஆறு + மருது.]*

**ஆற்றுமல்லிகை** ā<u>rr</u>u–malligai, பெ. (n.) 1. ஒருவகை நீர்ப்பூண்டு; water–plant with white flowers, river jasmine. 2. ஒரு மல்லிகை; a species of Arabian Jasmine.

*[ஆறு + மல்லிகை.]*

**ஆற்றுமீன்** ā<u>rr</u>u– mīn, பெ. (n.) ஆற்றில் வாழும் மீன்; நன்னீர்மீன்; river fish, as opposed to sea–fish, trout. It is a common name for various species of fish living in fresh water.

*[ஆறு + மீன்.]*

**ஆற்றுமுள்ளி** ā<u>rr</u>u–muḷḷi, பெ. (n.) 1. கழுதை முள்ளி; holly leaved bear's breech. 2. கண்டங்கத்திரி; blue–flowered prickly night shade. (சா.அக.).

*[ஆறு + முள்ளி.]*

**ஆற்றுமேலழகி** ā<u>rr</u>u mēlaḻagi, பெ. (n.) 1. ஒருவகைப் பூடு; common weed. 2. சேம்பு; a garden plant with esculent leaves. (சா.அக.).

*[ஆறு + மேல் + அழகி.]*

**ஆற்றுல்லம்** ā<u>rr</u>ullam, பெ. (n.) உல்லமீன்; sable fish, a variety of hilsa fish.

*[ஆறு + உல்லம்.]*

**ஆற்றுவஞ்சி** ā<u>rr</u>u– vañji, பெ. (n.) பூக்கின்ற ஒரு வகைப் பூடு; flowering Asoea, 2. ஒருவகை நீளிலைப் பூடு; elliptic leaved cadamba. (சா.அக.).

**ம.** ஆற்றுவஞ்சி

*[ஆறு + வஞ்சி.]*

**ஆற்றுவரி** ā<u>rr</u>u–vari, பெ. (n.) ஆற்றைப் பொருளாகக் கொண்டு பாடப்பெறும் காமங் கண்ணிய இசைப் பாட்டு; a kind of ancient exotic song on a river. (சிலப். 6, 35 உரை.).

*[ஆறு + வரி. வரி = காமங் கண்ணிய இசைப்பாட்டு. ஆற்றின் மேல் வைத்துப் பாடப்படுதலின் ஆற்று வரியாயிற்று.]*

**ஆற்றுவாய்முகம்** ā<u>rr</u>u–vāy–mugam, பெ. (n.) ஆறு, கடலொடு கலக்குமிடம்; estuary, mouth of a river. "ஆற்றுவாய் முகத்திற் றேக்கி யுமிழ்வதே யொக்கும்" (கம்பரா. இராவணன். கள. 25).

**ம.** ஆற்றுவா.

*[ஆறு + வாய் + முகம்.]*

**ஆற்றுவார்** ā<u>rr</u>u–vār, பெ. (n.) எடுத்த பணியை முடிக்க வல்லவர்; capable persons who can accomplish the work undertaken or entrusted. "ஆற்றுவா ராற்ற லிகழாமை" (குறள்.891).

*[ஆற்று → ஆற்றுவார்.]*

**ஆற்றுவாளை** ā<u>rr</u>u–vāḷai, பெ. (n.) நன்னீரில் வாழும் வாளை மீன்; fresh–water fish.

**ம.** ஆற்றுவாளை




*[ஆறு + வாளை.]*

**ஆற்றுவி–த்தல்** ā<u>rr</u>uvi–, 4 செ.குன்றாவி. (v.t.caus.) 1. வலியைப் பொறுக்கும் படி மன உறுதி செய்வித்தல்; enabling to bear or endure pains. 2. த்ணியச் செய்தல்; to alleviate, heal. 3. செய்வித்தல்: cause to do.

*[ஆற்று (த.வி.) → ஆற்றுவி (பி.வி.).]*

**ஆற்றுவித்தம்** ā<u>rr</u>u–vittam, பெ. (n.) ஆறுபாய்முகம். river bed. (த.சொ.அக.).

*[ஆறு + வித்தம். வித்தம் = துளைக்கப்பட்டது.]*

**ஆற்றுவைப்பு** ā<u>rr</u>u–vaippu, பெ. (n.) ஆற்றின் ஒதுக்கத்தால் சாகுபடிக்குத் தகுதியான நிலம்; lands that have become cultivable owing to the natural change of the course of a river providing alluvial soil.

**ம.** ஆற்றுவெப்பு.

*[ஆறு + வைப்பு]*

**ஆற்றுள்ளம்** a͞rru-ḻlam, பெ. (n.) **ஆற்றுல்லம்** பார்க்க. (சா.அக.); see a͞rrullam.

**ஆற்றுளுவை** a͞rruḻuvai, பெ. (n.) **நன்னீருளுவை** பார்க்க; see nanni͞ru-ḻuvai. (சா.அக.).

**ஆற்றொழுக்கு** a͞rroḻukku, பெ. (n.) 1. ஆற்றின் நீரோட்டம்; course of a river, flow of a river or stream. 2. இடையறாது ஓடுகின்ற ஆற்று நீரோட்டம் போல் தொடர்ந்து நிற்கும் நூற்பாக்களின் நூல் வகை, நூற்பா நிலைகளுள் ஒன்று; most natural order of words which clearly brings out the meaning, one of the four su͞ttira nilai.

*[ஆறு + ஒழுக்கு.]*

**ஆற்றொழுக்கு நிலை** a͞rroḻukku-nilai, பெ. (n.) நூற்பாக்களின் நால்வகை நிலைகளுள் ஒன்று; one of the four su͞ttira nilai.

*[ஆறு + ஒழுக்கு + நிலை.]*

**ஆற்றொழுக்கு** பார்க்க; see a͞rroḻukku.

**ஆறக்கட்டு–தல்** a͞ra-k-kaṭṭu-, 15 செ.குவி. (v.i.) 1. மேற்கொண்டு தீங்குசெய்து நலியாதவண்ணம் மந்திரம் முதலியவற்றால் பேய்க்கோளைத் தடுத்தல் (இ.வ.), (செ.அக.); prevent, by charm or spell, an evil spirit possessing a person from doing further mischief to the victim (Loc.) 2. புண், புரைபுண் (இரணம்), கட்டி முதலியவற்றை ஆற்றுவதற்காகத் தக்க மருந்து களையிட்டுக் கட்டுக் கட்டுதல்; application of a bandage for healing a wound, sore, abscess etc. (சா.அக.).

*[ஆற (பெ.எ.) + கட்டு. ஆற = தீர, நலமுற.]*

**ஆறடிவிருத்தம்** a͞raḍi-viruttam, பெ. (n.) கலிவிருத்தம், தரவு, கொச்சகம்; a kind of prosodical construction, stanza with six metrical lines.

*[ஆறு + அடி + விருத்தம்.]*

**ஆறத்தணிய** a͞ra-t-taṇiya, வி.எ. (adv.) அமைதியாய் (உ.வ.); calmly, leisurely.

*[ஆற + தணிய.]*

**ஆறதீகம்** a͞rati͞gam, பெ. (n.) தீப்பற்றாக் குணமுடைய கல்நார் (மு.அ.); mountain flax, magnesium fossil found in Mysore. Its texture is delicately fibrous. It is also called asbestos which has the quality of resisting fire.

*[ஒருகா. ஆறு + திகம் = ஆறுதிகம் → ஆறதிகம். தி → திகம் = தீயின் இயல்பு ஆறதிகம் = தீயின் இயல்பை ஆறச் செய்யும் கல்நார்.]*

**ஆறந்தம்** a͞randam, பெ.(n.) முடிவிலே உறுதி செய்யப்படும் தெளிவுரைகள் ஆறு; six metaphysicl dispositions to be decided at the end. "ஆறந்தமாவன: நாதாந்தம், சித்தாந்தம், போதாந்தம், யோகாந்தம், காலாந்தம், வேதாந்தம் என்பன" (த.நி.போ.137).

*[ஆறு + அந்தம் = ஆறந்தம்.]*

**ஆறப்போடு–தல்** a͞ra-p-po͞ḍu-, 19 செ.குன்றாவி. (v.t) காலந்தாழ்த்துதல் (உ.வ.); allow a work to lose its importance by postponing it (com.).

*[ஆற (பெ.எ.) + போடு. போக + அடு = போகடு → போடு.]*

**ஆறல்** a͞ral, பெ. (n.) 1. ஆறுதல்; healing, as does a wound. 2. குளிர்தல்; cooling, growing cold.

*[ஆறுதல் → ஆறல்.]*

**ஆறல் பீறல்** a͞ral - pi͞ral, பெ. (n.) பயனற்றது; that which is useless. 'தன்னோடொக்க ஆறல்பீறலாயிருப்ப தொரு தேவதையைப் பற்றி (ஈடு, 7,4,8).

*[அறுதல் → அறல் → ஆறல். பீறுதல் = நெடுகக் கிழிதல். ஆறல்பீறல் (எதுகை குறித்து வந்த மரபிணைமொழி) = நைந்து கிழிந்த துகில் போல் பயனற்றது.]*

**ஆறலை–த்தல்** a͞ralai-,2 செ. குன்றாவி. (v.t.) வழிப்பறித்தல்; to rob on the highway. "வன்கண்ண ராட்டி விட்டாறலைக்கு மத்தம்" (ஐந். ஐம்.34).

*[ஆறு + அலை. அலை = துன்புறு, துன்புறுத்து. ஆறு = வழி, நெடுஞ்சாலை.]*

**ஆறலை** a͞ralai, பெ. (n.) வழிப்பறி, வழியினிடக் கொள்ளை; highway robbery. "ஆறலை கள்வரூர் கலக்கி" (கந்தபு.ஆற்றுப்.14).

*[ஆறு + அலை.]*

**ஆறலைப்பார்** a͞ralai-p-pa͞r, பெ. (n.) வழிப்பறி செய்யும் கள்வர்; highway robbers.

*[ஆறு + அலைப்பார்.]*

**ஆறலைப்பு** a͞ralaippu, பெ. (n.) **ஆறலை** பார்க்க; see a͞ralai.

*[ஆறு + அலைப்பு.]*

**ஆறவமர** a͞ra-v-amara, வி.எ. (adv.) அமைதியாய் (உ.வ.); calmly and patiently.

*[ஆற + அமர = ஆறவமர.]*

**ஆறவிடு–தல்** a͞ra-viḍu-,18 செ.குன்றாவி. (v.t.) **ஆறப்போடு–தல்** பார்க்க; see a͞ra-p-po͞du-.

*[ஆற + விடு.]*

**ஆறறிவுயிர்** ā̱ṟaṟi-v-uyir, பெ. (n.) ஐம்பொறியுணர்வோடு சிந்தித்தறியும் மனவுணர்வுடைய மக்கள்; human beings, as possessing six faculties viz. the five senses and the mind. "மக்கட் டாமே யாறறி வுயிரே" (தொல். பொருள். 588).

*[ஆறு + அறிவு + உயிர்]*

**ஆறன்மட்டம்** āṟaṉ-maṭṭam, பெ. (n.) (இசை) தாள வகை; (Mus.) a variety of time measure. (சிலப்.3.16. அரும்.).

*[ஆறு + அன் + மட்டம். அன் சாரியை.]*

**ஆறாக்காரியம்** āṟākāriyam, பெ. (n.) தேற்றம் (த.சொ.அக.); resolve.

*[ஆறாத → ஆறா (ஈ.கெ.எ.ம.பெ.எ.) + காரியம்.]*

**ஆறாக்குழிப்புண்** āṟā-k-kuḻi-p-puṇ, பெ.(n.) தீராத ஆழமான புண்; incurable deep sore such as carbuncle.

*[ஆறாத → ஆறா + குழி + புண்.]*

**ஆறாங்காய்ச்சலுப்பு** āṟāṅ-kāyccal-uppu, பெ. (n.) ஆறு முறைகாய்ச்சி யெடுத்த வெடியுப்பு; nitre boiled and filtered 6 times. (சா.அக.).

*[ஆறாம் + காய்ச்சல் + உப்பு]*

**ஆறாங்கூட்ட வெள்ளி** āṟāṅ-kūṭṭa-veḷḷi, பெ. (n.) விண்மீன் தொகுதி, மீனவர் இரவுப் பொழுதைக் கணித்து, மீன்பிடிக்கச் செல்லவுதவும் விண்மீன் (முகவை. மீ.வ); cluster of stars, one that helps fishermen to surmise the time of the night and go for fishing.

*[ஆறாம் + கூட்டம் + வெள்ளி.]*

**ஆறாட்டம்** āṟāṭṭam, பெ. (n.) அதிக நோயால் படும் பெருந்துன்பம்; agony from extreme sickness. 2. நோயாளிகளின் பினத்தல் (பினாத்துதல்), பிரட்டல் முதலிய துன்பங்கள்; delirium, raving, restlessness etc., of the patient due to severe illness. (சா.அக.).

**தெ.** ஆறாட்டமு.

*[ஆறாத → ஆறா + ஆட்டம் = ஆறாட்டம்.]*

**ஆறாட்டம் மாறாட்டம்** āṟāṭṭam-māṟāṭṭam, பெ. (n.) **ஆறாட்டம்** பார்க்க; see āṟāṭṭam. முதியவர் சாகக்கிடக்கிறார், அவர் நிலை ஆறாட்டம் மாறாட்டமாய் இருக்கிறது (உ.வ.)

*[ஆறாட்டம் மாறாட்டம் = எதுகை குறித்துவந்த இணைமொழி.]*

**ஆறாட்டு** āṟāṭṭu, பெ. (n.) விழா முடிவில் தெய்வத் திருமேனியை ஆற்றில் அல்லது குளத்தில் முழுக்காட்டி அடியார்களும் நீராடும் நிகழ்ச்சி (தீர்த்தவாரி உற்சவம்); bath of an idol followed by the bath of the worshippers in a river or a tank at the close of a festival. (குற்றா.தல.வடவருவி.37).

**ம.** ஆறாட்டு

*[ஆறு + ஆட்டு. ஆட்டு = நீராட்டுதல்.]*

**ஆறாடி** āṟāḍi, பெ. (n.) 1. தெருத்தோறும் அலைந்து திரிபவன்; ஊர் சுற்றி, நாடோடி; vagabond. 2. நிலைகெட்டவன்; worthless fellow (W).

*[ஆறு + ஆடி. ஆறு = வழி. ஆடி = அலைந்து திரிபவன்.]*

**ஆறாடு-தல்** āṟāḍu-, 5. செ.கு.வி. (v.i.) 1. விழா முடிவில் ஆற்றில் அல்லது ஓடும் நீரில் நீராடுதல்; to bathe at the close of a festival, said of a temple idol and its worshippers. "ஏழுநாள் திருவிழாச் செய்து பங்குனிவியாகம் ஆறாடுவதாகவும்" (T.A.S.I.Vg. 1,6) 2. ஆற்றில் நீராடுதல்; to bathe in a river.

**ம.** ஆறாடு.

*[ஆறு + ஆடு.]*

**ஆறாத்தவம்** āṟā-t-tavam, பெ. (n.) இடைவிடாமல் செய்யும் தவம்; constant practice of Yoga, prolonged penance.

*[அறாத → அறா → ஆறா + தவம்.]*

**ஆறாத்தூறு** āṟā-t-tūṟu, பெ. (n.) அவதூறு (இ.வ,); slander, calumny (Loc.).

*[ஆறா + தூறு. ஆறாத்தூறு = அடங்காப் பழிச்சொல்.]*

**ஆறாதார நூற்பா** āṟādāra-nūṟpa, பெ. (n.) ஏற்ற சித்தர் இயற்றிய மருத்துவநூல்; treatise on medicines by one Yetrasiddha. (சா.அக.).

*[ஆறாதாரம் + நூற்பா]*

**ஆறாதாரம்** āṟādāram, பெ. (n.) உடம்பிற்கு அடிப் படையாகவுள்ள ஆறுவகை மெய்ம்மை (தத்துவம்) கள். அவை யாவன: மாந்தவுடம் பிலுள்ளமைந்த பாலகம் (மூலாதாரம்), அகட்டகம் (சுவாதிட்டானம்),. மூச்சகம் (மணிபூரகம்), நெஞ் சகம் (அனாகதம்), சுழியகம் (விசுத்தி), உச்சகம் (ஆக்கினை) முதலியவைகள் தாமரைக்கு ஒப் பாகச் சொல்லப்பட்டன. ஒகத்தினால் இம்மெய்ம்

மைகள் வலுவடைந்து தத்தங் காரியங்களைக் காட்ட முயலும் போதுஒகியர் (துறவிகள்) பல சித்துகள் கைவரப் பெறுவர். அவற்றால் நரை, திரை, மூப்பு, பிணி, சாக்காடு முதலியவைகளைக் கடந்து ஆதன்பேறு (ஆன்மலாபம்) பெறுவர். அவைசுழிமுனையினாலொன்றோ டொன்று தொடர்புற்றவை; The 6 nerve plexuses in the human ody as explained below. They are called in plain language lotuses with in which dynamic forces of life and energy are said to be stored.

As vitality is flowing through and centred in each of the lotuses, their latent forces are awakened in yoga practice and the man attains super-natural powers. He conquers death, infirmity etc., to which all mortals are liable and attains self-realisation. These different centres as mentioned below, are connected with one another by sulimunai, the nerve which is active in the yoga's alone.

1. பாலகம் (Muladaram) – lowest region in the pelvic region. It is the seat of semi intellectual sentiments - Sacral plexus.
2. அகட்டகம் (Swadistanam) – corresponding to hypo - gastric centre wherein selfish sentiments are originated.
3. மூச்சகம் (Manipuragam) – corresponding to the epigastric centre is the seat of selfish propensities.
4. நெஞ்சகம் (Anagadam) – corresponding to the cardiac centre, is the seat of domestic feeling.
5. சுழியகம் (Visutti) – corresponding to carotid plexus, the seat of perceptiveness
6. உச்சகம் (Agginai) – corresponding to medulla oblongata, the seat of higher mental functions and spirituality. (சா. அக.).

*[ஆறு + ஆதாரம் . ஆதல் → ஆதலை = உதவி . ஆறாதலை எனின் முற்றும் தமிழாம். ஒ.நோ. ஆதலம் → ஆதரம் → ஆதரவு ஆதலை → ஆதலம் → ஆதரம் → ஆதாரம் = உதவி, தாங்குதல், அடிப்படை, மூலம், மூலவிசை.]*

**ஆறாதூறு** aratūru, பெ. (n.) **ஆறாத்தூறு** பார்க்க; see ārā-t-tūru.

**ஆறாப்பசி** ārā-p-pasi, பெ. (n.) 1. மிகுபசி; voracious hunger. 2. அடங்காப் பசி, தீராப்பசி; insatiable hunger. (சா.அக.).

*[ஆறாத → ஆறா + பசி.]*

**ஆறாப்புண்** ārā-p-puṇ, பெ. (n.) சூலை நோயினால் ஏற்படும் ஒருவகை அழிபுண்; incurable ulcer arising from arthritic condition of the body, chronic ulcer or sore.

*[ஆறாத → ஆறா + புண்.]*

**ஆறாமலெரித்தல்** arāmalerittal, பெ. (n.) இடைவிடாமல் எரித்தல்; to burn continuously as is done sometimes in preparing medicines without leaving an opportunity to cool down during the process.

*[ஆறாமல் + எரித்தல்]*

**ஆறாமீன்** arāmīn, பெ. (n.) கார்த்திகை நாண்மீன்; pleiades, as containing six stars.

*[ஆறு + ஆம் + மீன் - ஆறாம்மீன் = ஆறு ஆகிய மீன்கள், ஆறு நாண்மீன்கள்.]*

**ஆறாமீனறவோட்டு** arāmīnara vōttu, பெ. (n.) கார்த்திகை நாண்மீனிடை கதிரவனின் செலவுக் குரியதும், கடலான் வரும் ஏதங்களைக் கடற்பயணம் செய்வோர் எதிர்பார்த்து அஞ்சக் காரணமானது மான காலம்; passage of the sun through the segment of the Zodiac occupied by pleiades, when rough weather is to be anticipated.

*[ஆறு + ஆம்+ மீன் + அற+ ஒட்டு. அற = முழுமையாக. ஒட்டு = ஒட்டம், செல்லுதல், போதல்.]*

ஒட்டு =அழிதல், கேடு, தோல்வி என்பதே இங்கும் பொருந்தும்..

அறுமீனாகிய ஆறாமீனிடைக் கதிரவனின் செலவு முழுமையான தீங்கின் அறிகுறியாகக் கருதப்பட்டதால் அறவோட்டு எனப் பெயர்பெற்ற தாகலாம்.

**ஆறாயிரப்படி** ārāyira-p-padi, பெ. (n.) திருவாய்மொழி விரிவுரைகளுள் முதலாவது; first commentary on the Tiruvaymoli by Tiru-k-kurugai-p-pirān pillān, containing 6000 granthas. (உபதேசரத்.41 வியாக்.).

*[ஆறாயிரம் + படி.]*

**ஆறாரச்சக்கரம்** ārāra-c-cakkaram, பெ. (n.) ஆறு ஆரங்களைக் கொண்ட சக்கர வடிவிலுள்ள கட்டங்களில் எழுதப்படுவதும் நான்கடிகளைக் கொண்டதும் ஆரத்திற்கு ஆரம் படித்துச் செல்லும் போது சில எழுத்துகள் மீண்டும் மீண்டும் வருவதுமாகிய மிறைப்பா வகைகளுள் ஒன்று (மாறன. 282. உரை); stanza of four lines so composed that it can be written in the form of a wheel with six spokes, a variety of cakkara-pantam.

*[ஆறு + ஆரம் + சக்கரம்.]*

**ஆறாறு** āṟāṟu, பெ. (n.) 1. ஆறுமேனி; six each. 2. ஆறும் ஆறும் பெருக்கிய தொகை; six times six, thirty six.

*[ஆறு + ஆறு]*

**ஆறானரம்பு** āṟāṉarambu, பெ. (n.) காது கேட்க உதவும் நரம்பு, (கடாட்ச நரம்பு); auditory nerve (சா.அக.).

*[ஆறான் + நரம்பு]*

**ஆறிதழ்** āṟidaḻ, பெ. (n.) வெள்ளைப்பூண்டு; garlic consisting of 6 bulbs, Allium sativum. (சா.அக.).

*[ஆறு + இதழ்.]*

**ஆறிய கற்பு** āṟiya kaṟpu, பெ. (n.) அறக்கற்பு; மறக் கற்புக்கு எதிரானது; chastity guarded with patience under affronts, dist.fr.sīṟyakaṟpu. "ஆறிய கற்பிற் றேறிய நல்லிசை" (பதிற்றுப்.90,49; சிலப்பதி,42, உரை)..

*[ஆறிய + கற்பு ஆறிய = அடங்கிய.]*

**ஆறிருகரத்தோன்** āṟirukarattōṉ, பெ. (n.) முருகக் கடவுள்; Muruga, who has twelve arms.

*[ஆறு + இரு + கரத்தோன். ஆறிரு = இரண்டு ஆறு, பன்னிரண்டு. கரு → த. கரம் > skt. kara.]*

**ஆறிலொன்று** āṟiloṉṟu, பெ. (n.) அரசனுக்குரிய ஆறில் ஒன்றாகிய பங்கு, நில வருவாயில் வரிக்காகப் பெறும் பாகம்; one sixth of a crop, as the proportion due to the crown. "ஆறில் ஒன்றன்றோ புரவலர் கொள்ளும் பொருள்" (முத்தொள்ளாயிரம். 73.)

*[ஆறு + இல் + ஒன்று.]*

"தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென் றாங்கு ஐம்புலத்தா றோம்பல் தலை" (குறள். 43.) என்னும் குறளில் இல்வாழ்வான் தன் வருவாயை ஐவகைப்படுத்திச் செலவு செய்யும் முறை கூறப்பட்டது. ஆறாவது பங்கு, அரசர்க்கு வரியாக அளிக்கப்பட்டது. இதனால்தான் இல்வாழ் வான் தன் வருவாயை ஆறாகப் பங்கிட்டு ஒரு பங்கை அரசர்க்குச் செலுத்த வேண்டுமென்ற மரபே வழக்கூன்றியது.

**ஆறு—தல்** āṟu, 10 செ.கு.வி. (v.i.) 1. நீங்குதல்; to be relieved. "ஆறாவிட ரென்வயிறுக் கிணையால்" (கந்தபு. அக்கி. 235). 2. ஓய்தல் (கதி.அக.); to be tired, to cease. அவன் ஆறி அடங்கிவிட்டான் (உ.வ.). 3. அடங்குதல், குறைதல்; to be suppressed, to be reduced. "ஐம்புலனும் ஆறியவர்களும்" (கம்பரா. தேரேறு. 25). 4. புண் காய்தல்; to heal as a wound. "தீயினாற் சுட்ட புண் ணுள்ளாறும்" (குறள். 129). 5. அமைதியாதல்; to be preserved with patience, as chastity. "ஆறிய கற்பு" (சிலப்பதி. 42 உரை). 6. வெப்பம் குறைதல், சூடு தணிதல்; to abate, cool, grow cold. ஆறின கஞ்சி பழங்கஞ்சி (பழ.). 7. குறைவாதல், தணிதல்; to be appeased, alleviated, mitigated. உண்டதும் பசியாறியது (உ.வ.). 8. இளைப்பாறல் (கதி.அக.); to take rest. இப்பொழுது தான் வந்தீர்கள்; ஆற அமர இருந்து போங்கள் (உ.வ.).

**ம, க. தெ. ஆறு; து.** ஆருணி; **நா.** ஆர்;

**பர்.** ஏர்; **கோன்.** ஆரானா (தண்ணீர்); **குவி.** ஆச.

**Chinese** – rong (dissolve, throw away).

*[அறு → ஆறு. அறுதல் = நீங்குதல், விலகுதல், ஓய்தல், உட்படல், அடங்கல், குறைதல்.]*

அறு என்னும் அடிவினை rive – to break, asunder என ஆங்கிலத்தில் வழங்கப்படுகிறது. rive → river அறுத்தல், அடித்துத் தள்ளிக் கொண்டு போதல், நீங்குதல், விலகுதல் என்பதே அடிப்பொருளாயினும் அதனின்றும் கிளைத்த வழிநிலைப் பொருளால் ஓய்தல், உட்படல், அடங்குதல், குறைதல் என்றும் வினைப்பொருள் வளர்ந்து வெப்பம் தணிதல், குறைதல், குளிர்தல் பொருள்களைத் தருகிறது. நீர்படியும் மலைச் சாரலில் விளையும் குளிர்ச்சி தரும் மருந்துச்செடி வடமொழியில் 'ஆருக்' எனப் படுகிறது.

āruk – a medicinal plant of cooling properties growing on the Himalaya mountains (M.W.S.E.D.).

**ஆறு** [1]āṟu, பெ. (n.) 1. மழை வெள்ள நீரோடைகள் பல சேர்ந்து பெருக்கெடுத்தோடும் நீரோட்டம், யாறு; river, brook. காவிரியாறு, வைகையாறு, பஃறுளியாறு (உ.வ.) 2. வழி, பாதை; way, road. "ஆறுசெல்வம்பலர்". 3. தலைக்கடை, தலைவாயில் (அக.நி.); front, entrance of a house. 4. வழிவகை; means, device. "ஆற்றின் வருந்தாவருத்தம்" (குறள். 468). 5. அறம்; morality, virtue, path of righteousness. "ஆறன் மையின் முதியாரையு மெறியானயி லுழவன்" (சீவக. 2261). 6. சமயம்; religion. "சைவ நல்லாறோங்க" (பெரியபு. சண்டேசு. 57). 7. பக்கம்; side. "நாலாறு மாறாய்" (நாலடி. 383). 8. பயன்; result. "அறத்தா றிதுவென வேண்டா" (குறள். 37). 9. இயல்பு; nature. "செயுநீர செய்யா தமைகலா வாறு" (குறள். 219). 10. வகை, வீதம்; mode, manner, method. "கற்பழியா வாற்றால்" (நல்வழி. 10). போமாறு கூறினான் (உ.வ.). 11. ஒழுக்கம் (கதி.அக.); discipline.

**மறுவ :** யாறு, அருவி, உந்தி, ஒலியல், ஒணம், குடிஞை, சிந்து, கடினி, தரங்கிணி, திரை, தீர்த்திகை, துறை, துணி, புனல்,

யாறு, வருபுனல், வேணி, துறையாறு, பீராறு, வழாறு, வாரி, புதுப்புனல் வரவு, தலையல், நீந்துபுனல், நீத்து (ஆ.அக.). புழல், பொழியல், தோடு, பொருநை .

**ம., க.,** ஆறு; **து.** ஆரு; **தெ.** ஏறு; **கோண்** . ஏர் (தண்ணீர்); **குவி.** ஏசு (தண்ணீர் ). கோத. ஒய்ண (வழி). **துட.** ஓர் (வழி – புதர்க்கான நுழைவாயில்)

Tamil. āṟu, yāṟu, (water) āral (water) aral (water) arai ān aquatic plant.

Eng. ore – (see–weed) (ore–weed) Basque – eri–on (to flow) aṟa, aranc valley)ur, (water). Assyrian – ara–du (to flow) Somali – hari (water) Sumerian – er (tear) ur, (water) Coptic – yar (water) Hebrew – yor (river)

In England, of the rivers, Yare, Yarrow etc. The rivers in Iberia – Ar–ga, Ar–anda, Ar–agon Ar–an, Ara, –xes, Nubian – aru, are (rain) Names of streams in the Alps – Are, Ar, Ac, Arve, Aravo, Aronna.

In Switzerland (names of streams) Aar, Arve. In the British Isles – Are, Arre, Arro, Aire, Aray, Ayr.

In Sardinia – the rivers Arrai, Arralai, Arriaxiu – Dravidian Origins and the West (Dr.N.Lahovary)

(An ancient element) in river names is ar – appearing in Aar, Arno – meaning river. In Great Britain – Ayr, Oare, Ore. –George R.Stewart. "Names on the globe" Page 182–183. **L.** arere, **GK.** arassien, **Chinese,** rang– to give way. **F.** eau (water) pronounced 'a'

**Malay.** ayer (water)

***[அறு → ஆறு. ஆறு மண்ணை அறுத்துச் செல்வதால் பெற்ற பெயர். மண்ணை அறுத்துச் சென்ற பகுதி காட்டுவழிப் போக்கர்க்குப் பாதையாய் அமைதலின் பாதைப் பொருள் ஏற்றது. நிலமுழுதும் சோலை யாயிருந்த முது பண்டைக் காலத்தில் ஆறுகளே வழிகளாயிருந்தன. கல்லும் முள்ளுமற்ற நல்வழி யாதலின் நன்னெறிப் பொருளும் பெறலாயிற்று.]***

மண்ணை அறுத்துச் செல்லுதலாலே 'ஆறு' பெயர் பெற்றது என்பதை river என்னும் ஆங்கிலச் சொல்லாலும் தெளியலாம். rive – rend, cleave strike asunder, rive – river வடமொழியிலும் aruj – to break up, loosen, tear out எனப் பொருள் படும். அறு → ஆறு எனவும், அரி → அரிவி → அருவி எனவும் திரிந்து வழங்கும். நெடுக அறுத்தோடும் செயலால் பல ஓடைகள் சேர்ந்த வெள்ளப் பெருக்கு ஆறு எனவும், ஒரு குறிப்பிட்ட பாறையை அல்லது குறுகிய இடத்தை அரித்துச் செல்லும் சிற்றோடை அருவி எனவும் வழக்குப் பெற்றதென்க. நீரோட்டம் அல்லது வெள்ளப் பெருக்கின் இயல்புக்கேற்ப அவை பெற்ற பெயர் விளக்கத்தை ஆற்றின் மறு வடிவங்களாகத் தரப்பட்ட சொற்களின் கீழ்க் காண்க. கோட்டாறு, பொறையாறு என்னும் இடப்பெயர்கள் 'ஆறு' ஈறு பெற்றுள்ளன.

ஐரோப்பிய நாடுகளிலும் உலகின் பல்வேறு நாடுகளிலும் ஆற்றுப் பெயர்களும் இடப் பெயர்களும் 'ஆறு' என்னும் தமிழ்ச் சொல்லை வேராகக் கொண்டிருத்தலைக் காணலாம். அதுவே யன்றி வழி, வகை, இயல்பு, தன்மை என்னும் பெயர்களில் இடைச்சொல் புடை பெயர்ந்த போது பெயரீறுகளாகவும் மாறியுள்ளன. dinner, danger, supper போன்ற சொல்லீறாக ஆறு – ஆர் வழங்குதலைக் காணலாம்.

**ஆறு**[2] āṟu, பெ. (n.) 1. ஆறு என்னும் எண்ணுப் பெயர், ஐந்தின் மேல் ஒன்று ; number six. "ஆறறி வதுவே அவற்றொடு மனனே" (தொல். மரபி. 27.) 2. நளி (விருச்சிகம்) எனப்படும் ஆரல் ஒரை; constellation pleiades.

**ம., க., தெ., கட., படை., குறும்., எரு.** ஆறு; **குட.** ஆறி; **கோத.** ஆறெ; **துத.** ஓர்; **து.** ஆசி; **கொலா.** ஆர்; **கைக்.** ஆர்; **கோண்.** சாருங்; **நாய்.** சக; **கூ.** சோ; **குவி, சச்சி; பிராகு.** சாச்; **மித்துன் நாக.** ஆரொக்; **Turk.** alti; **Sum.** a–sh; **Hung.** hat; **Gk.** exi; **Mag.** hat; **Mong.** ot; **Malay.** anam.

***[ஆறு – ஆறு விண்மீன்களின் கூட்டத்தைக் குறித்த சொல், ஆறு என்னும் எண்ணுப் பெயரைக் குறிப்ப தாயிற்று.]***

ஆறுமீனாகியநளி (கார்த்திகை) நாண்மீன் கூட்டம், கிளை பிரிந்து கடலில் கலக்க வரும் ஆற்றின் வடிவாகப் பண்டைக் காலத்தில் கருதப்பட்டது. பின்னர் அது முன்கால்களை அகற்றிக் கொண்டியை உயர்த்தி நிற்கும் தேளின் வடிவாகக் கருதப்பட்டு நளி (விருச்சிகம்) எனப்பெயர் சூட்டப்பட்டது. ஆற்றின் வடிவாகக் கருதப்பட்டபோது ஆறு → ஆறல் → ஆரல் என்னும் பெயர் பெற்றது. கலித்தொகையிலும் ஆரல் என்னும் பெயரே பயின்றுள்ளது. "அரவுக்கண்ணணியுற ழாரன்மீன்றகை யொப்ப" (கலித். 64–4). ஆறு மீன்களும் ஆறு கார்த்திகைப் பெண்டிராகக் கருதப்பட்ட காலத்தில் கார்த்திகை மீன் என்றும் அறியப்பட்டது. ஆறு →ஆறல் → ஆரல் என்னும் பெயர்கள் காலத்தால் மிக மிகத் தொன்மை வாய்ந்தன. கார்த்திகை நளி (விருச்சிகம்) என்பன மிகமிகப் பிந்தியன.

பண்டைக் காலத்தில் கடல் வழி வாணிகரும் நிலவழி வாணிகரும் காடுகளில் கால் நடை மேய்ப்போரும் இரவில் திசையறிதற்கு விண்மீன் கூட்டங்களையே பெரிதும் நம்பியிருந்ததால் பன்னிரண்டு விண்மீன் கூட்டங்களாகிய ஓரைகளுக்கு இட்ட பெயர்களே மாதப்பெயர்களாக மாறிவிட்டன. ஆரல் அல்லது நளி என்றறியப்பட்ட மாதப்பெயர் கார்த்திகை எனப்பின்னாளில் பெயர் மாற்றம் பெற்றது.

ஆறுபோன்றவடிவம்நோக்கிக்கல்லாதமக்களால் இடப் பட்ட ஆறு என்னும் பெயர் கணியர்களின் பார்வையில் ஆறு விண்மீன்களின் எண்ணிக்கை கருதி 'அல்' ஈறு பெற்று ஆறல் → ஆரல் எனத்திரிவதாயிற்று. பழங்கால மக்கள் ஐந்துக்கு மேல் எண்ணத் தெரியாதிருந்த காலத்தில் 6,7,8 போன்ற எண்களை ஐந்து ஒன்று, ஐந்து இரண்டு, ஐந்து மூன்று என்றே வழங்கினர். கணியர்களின் புதிய சொல்லாட்சி ஆறல் என்ற சொல்லைப்

பெற்றுத் தந்தது. எனினும் கல்லாத மக்கள் ஆரல் மீனுக்குரிய ஆறு என்பதையே ஆறு என்னும் எண்ணுக்குப் பெயராக்கிக் கொண்டனர். ஐந்துக்கு மேல் எண்ணும் வழக்கமும் உருப்பெற்றது.

சிறுவர் விளையாட்டுகளில், இன்றும், 'அல்' ஈறு சேர்த்து எண்ணுப்பெயர்களை வழங்கும் முது பண்டைக் கால வழக்கம் நீடுநிலைத்திருத்தலைக் காணலாம். நாட்டுப் புறங்களில் கோலி என்னும் உருண்டை விளையாடும் சிறுவர் ஒக்கடை, இருவல், முவ்வல், நவ்வல், அஞ்சல், ஆறல் (அறுவல்), எழுவல் (ஏழன்) எட்டன், தொம்மன் என எண்ணுப் பெயர்களைப் பழைய மரபின் வண்ணம் கூறுகின்றனர். ஆதலின், ஆறு → ஆறல் என்னும் எண்ணுப்பெயர் தோற்றத்தின் மூலத்தைத் தமிழ் மொழி தொன்று தொட்டே காத்து வந்திருக்கிறது என்பதைத் தெளியலாம்.

இனி, ஆறு என்னும் எண்ணுப் பெயர் திரவிடமல்லாத இந்திய மொழிகளிலும் ஏனைய மொழிக் குடும்பங்களிலும் ஊடாடியுள்ளது. முன்னெழுத்தொடு ககரம் சேர்த்துக் கொள்ளல் தகரம் சேர்த்துக்கொள்ளல் சகரம் சேர்த்துக்கொள்ளல் என்னும் மூவகை அடிநிலைத் திரிபுகளுற்று வடஇந்திய. நட்டாசிய, செமித்திய, ஐரோப்பிய மொழிக் குடும்பங்களிலும், முன்னெழுத்து நீங்கி **று, ரு** என்று ஈற்று வடிவிலும் ஈற்றெழுத்து **து** அல்லது **லு** வடிவிலும் ஆக மூவகை முடிநிலைத் திரிபுகளுற்று கிழக்காசிய மொழிகளிலும் வழங்கிவருதலைக் காணலாம். தரைவழி வணிகர் வாயிலாகக் கிழக்காசிய மொழிகளிலும் கடல் வழி வணிகர் வாயிலாக ஏனைமொழிக் குடும்பங்களிலும் இச்சொல் இடத் துழிப்பரவல் (geographical distribution.) பெற்றிருக்கலாம்.

ஐந்துக்கு மேல் வரிசையாக எண்ணும் வழக்கம் தொன்முது நாகரிக நாடுகளில் மட்டும் முதலில் காணப்பட்டிருத்தலானும், உலக நாகரிகத் தொல்லிடங்களில் திராவிட நாகரிகமே மூன்றில் இருபகுதியினதாகவும் காலத்தால் முந்தையதாகவும் அறியப் பட்டிருத்தலானும் எண்ணுப் பெயர்களின் பரவல் உலகத்தில் மிகப்பெரும்பான்மையான மொழிகளில் ஒரே சீராக உள்ளது.

**முதல்வகை அடிநிலைத் திரிபுற்ற** (சகரம் சேர்ந்த) **மொழிகள்** (வட இந்திய, நட்டாசிய, செமித்திய ஐரோப்பிய மொழிகள்.)

**Hin.** che, cha; **Sin.** Chah; **Uru.** che; **Guj.** chha; **Mar.** Chah; **Beng.** Chay; **Ori.** chhaa; **Punj.** chhe; **Kash.** shah; **Raj.** shah.

**L.** sex; G. sechs; **Ita.** sei; **F.** six; **Port.** seis; **Dut.** zes; **Sp.** seis; **Lith.** sheshi; **OE.** siex; **E.** six; **Goth.** saiks; **Pol.** szesc; **Russ.** shest; **O.Egy.** s-zsw; **Rum.** sase; **Sw.** sex; **Dan., Nor.** seks; Czec. sest; **Skt.** shash; **Yid.** seks.

**Heb.** schischar; **Iraq.** sitta; **Ar.** siteh; **Cer.** shu; **Akka.** skesh; **Bas.** sei. **Viet.** sau; **Ann.** sau. **Af. swa.** snta; **Berber.** sez.

மேற்கண்ட எண்ணுப் பெயர் பரவலின் வண்ணம் இந்தியாவின் வடபுல மொழிகளில் வல்லித்த சகர (C) முன்னெழுத்துச் சேர்ப்பும் நட்டாசிய, செமித்திய, ஆப்பிரிக்க மொழிகளில் வெறும் உரசொலியாக மாறிய முன்னெழுத்துச் சேர்ப்பும் பெற்றிருத்தலால் cha ஒலிப்பு முந்தையது என்பதையும் sa ஒலிப்பு பிந்தையது என்பதையும் அறிய முடிகிறது.

சிந்துவெளி நாகரிக் காலத்து வணிகர்களின் வாயிலாக நட்டாசிய ஐரோப்பிய செமித்திய ஆப்பிரிக்க மொழிகளுக்கு இச்சொல் அறிமுகமாயிருக்கலாம்.

**இரண்டாம் வகை அடிநிலைத் திரிபுற்றவை** (தகரமெய் சேர்ப்பு.)

**Nep.** tāruk; **Sik.** torak; **Tib.** druk; **Bur. (Myanma).** tāru; **Sant.** turūyi; **Kols.** tūriya.

நேப்பாள, சிக்கிம், திபேத்திய, பருமிய மொழிகளில் ஆறு என்னும் எண்ணுப்பெயரோடு தகரமெய் முன்னெழுத்தாகச் சேர்ந்துள்ளது. சந்தாள கோலர் மொழிகளும் இதனைக் காத்து வந்துள்ளன. காலத்தால்மிகஒதுங்கிவாழ்ந்த இப்பழங்குடிகளின் மொழிகளில் சேர்ந்துள்ள தகர மெய்யெழுத்து சகர மெய் யெழுத்தினும் காலத்தால் முந்தையது. நிலவழி வணிகர்களால் வளர்ந்த இச்சொல்லாட்சியின் தகரமெய் சகரமெய்யெழுத்தாகத் திரிந்த காலம் பிந்தையது.

**மூன்றாம் வகை அடிநிலைத்திரிபுற்றவை.** (ககரமெய் சேர்ப்பு)

**Siam.** karung; **Fin.** kūsi; **Beng.** krok; **Bur.** kyok.

வல்லித்த சகரம் (Cha) ககரமாகத் திரியும் என்னும் ஒலியனியல் நெறியின் வண்ணம் வங்காள, பருமிய, சயாம் கிளை மொழிகளிலும் தொலையுறவு துரானியக் குடும்ப மொழியான பின்னிசிலும் சகரம் ககரமாகத் திரிந்துள்ளது. இத்திரிபு சகர முன்னெழுத்துக் காலத்தினும் பிந்தையது. அதாவது சகர முன்னெழுத்தைக் கொண்டிருந்த ஒருசார் கிளை மொழியினரே அதன் ஒலிப்பைக் ககர முன்னெழுத்தாகத் திரித்துக் கொண்டனர் என்பதாம்.

**முதல்வகை முடிநிலைத் திரிபு** (முன்னுயிர் 'ஆ' நீங்கி 'று' மட்டும் திரிந்து வழங்குதல்).

**Jap.** rōku; **Nep.** ruk, ru, rukka, rē

நேப்பாள சப்பான் மொழிகளில் காணப்படும் முடிநிலைத் திரிபுகலல்லாதமக்களிடை பெருகியகொச்சைவழக்கு. சொல்லின் முன்னசை பின்னசைகளை முன்பின்னாக மாற்றிக் கொள்ளும் இலக்கணப்போலி மரபு கிழக்காசிய மொழிகளில் காணப்படுதலால் இச்சொல்லும் அதன் வயப்பட்டு ஆறு → றா → றோ என இலக்கணப் போலியாகச் சொல்லாக்க ஈறு பெற்று புதிய வடிவுற்றது. ஆறு என்னும் எண்ணுப்பெயர் தகர அல்லது சகரமுன்னெழுத்துப்பெறாமல் உள்ளவாறே இலக்கணப்போலித் திரிபுற்றுப் பரவியதற்கு இவை சான்றாகும்.

**இரண்டாம் வகை முடிநிலைத் திரிபு** (முன்னுயிர் 'ஆ' நீங்கி று → து எனத்திரிந்து வழங்குதல்)

**Bhut.** tu; **Tib.** thu; Nep. tuk.

குறிப்பாகத் திபேத்திய மொழியிலும் அதன் கிளை மொழிகளிலும் றகர ரகர ஒலிப்பு அருகியவை. இராமன் என்னும் பெயரை அவர்கள் லாமா என்றே ஒலிப்பர். ரகரம் தகரமெய்யாகவோ லகரமெய்யாகவோ மாறிவிடும். ஆதலால் ஆறு என்னும் எண்ணுப் பெயர் முடிநிலைத் திரிபுற்ற போது று → து எழுத்தாக மாறிட்டது. நேப்பாள பூட்டான் மொழிகளும் வணிகரின் ஊடாட்டத்தால் இச்சொல்லாட்சியைத்தத்தம் கிளை மொழிகளில் காத்துவரலாயின.

**மூன்றாம் வகை முடிநிலைத்திரிபு** (முன்னுயிர் 'ஆ' நீங்கி று → லு எனத்திரிந்து வழங்குதல்)

**Chinese (Nank.)** luh; **(Peking).** lin; **(canton).** luk, liu; **(sang).** loh; **Amo.** lak.

*சீன* மொழிக் குடும்பத்தில் றகர ரகர ஒலிப்புகள் அரியவை. ரகரங்கள் லகரங்களாகவே ஒலிக்கப்படும். ஆதலால் ஆறு என்னும் எண்ணுப் பெயர் இலக்கணப்போலியாகி ஆறு → றா → ரா எனத் திரிந்த போது தானாகவே லூ, லா, லி, லியூ எனத்திரிபுற்றது. தகர சகர முன்னெழுத்துச் சோர்ப்புகள் நிகழாத பழங்காலத்திலேயே ஆறு என்னும் திருந்திய எண்ணுப் பெயராகவே கிழக்காசிய நாடுகளுக்கு வணிகர் வாயிலாகப் பரவிய வகைமையைச் *சீன*மொழியில் காக்கப்பட்டுள்ள ஆறுக்குரிய எண்ணுப் பெயர்கள் நிலை நாட்டுகின்றன.

வணிகர்களின் வாயிலாக ஆறு என்னும் எண்ணுப்பெயரை எட்டாத தொலைவான இடங்களில் வாழும் பழங்குடிமக்கள் குறிப்பிட நேர்ந்த போது ஐந்தும் ஒன்றும் எனக் கூட்டலாகவே பேசத் தொடங்கினர். இதனைக் கூட்டுச்சொல் எண்ணுப்பெயர் எனலாம்.

**கூட்டுச்சொல் எண்ணுப்பெயர்** (5+1)

**Burmese.** khy-ok; **Siam.** h-ok; **Loss.** h-ok. **Red Indians** (Aztec). **shek-wa-sie** (5 and 1) **Nehuati.** chik-w-asin (5 and 1) **Thai.** hok (5 and 1)

மியான்மா எனப்படும் பருமிய நாட்டுக்கிளைமொழிகளில் ஐந்தைக் குறிக்கும் 'கை' யென்னும் சொல்லுடன் ஒன்றைக் குறிக்கும் 'ஒக்' சேர்ந்து 'கையொக்' என்றாகி ஐந்தும் ஒன்றும் எனக் கூட்டுச்சொல் எண்ணுப்பெயராக நீடுநிலைத்து வழக்கூன்றியிருப்பது மொழி வளர்ச்சிப் படிநிலைகளை உய்த்துணர உதவுகிறது. ஐந்தும் ஒன்றும் என்று ஆறினைக் குறிப்பிடுவது முந்து பழந்தமிழ் மரபே என்பதையும் இது காட்டுகிறது. 'கை' என்றும் ஐந்தைக் குறித்த சொல்லின் முன்னெழுத்து க → ச எனத்திரிந்த நிலையை அமெரிக்கச் செவ்விந்திய மொழியும் நெகுவாதி மொழியும் எடுத்தியம்பு கின்றன.

கலியாண்டுக்கணக்கு கி.மு. 3101 முதல் தொடங்கி யிருந்தலான் தமிழ் எண்ணுப்பெயர்கள் கி.மு. 4000 ஆண்டளவில் வளர்ந்திருக்கலாம் என்றும் ஐந்துக்கு மேல் எண்ணத்தெரியாத காலம் கி.மு. 5000 ஆண்டுக்கு முற்பட்டதாகலாம் என்றும் கருதலாம். சிந்துவெளி நாகரிகக் காலத்து எண்ணுக் குறியீடுகளில் ஆறுக்குரிய குறியீடு ஐந்தும் ஒன்றும் எனக்கூட்டு எண் அடையாளமாகவே உள்ளது. ஆறு என்னும் எண்ணுப்பெயர் தோன்றுவதற்கு முன்பே வரை படக்குறியீடாக அது நிலவியது எனலாம்.

ஆறு என்னும் எண்ணுப்பெயர் துருக்கி அங்கேரியம் உள்ளிட்ட சித்திய துரானிய மொழிகளிலும் சுமேரியத்திலும் சீனம் திபேத்தியம் உள்ளிட்ட கிழக்காசிய மொழிகளிலும் இயல்பாகவும் அடிநிலை அல்லது முடிநிலைத்திரிபுற்றும் பரவியுள்ளது. வட இந்திய நட்டாசிய, ஐரோப்பிய செமித்திய மொழிகள் சகர முன்னெழுத்தைச் சேர்த்துக் கொண்டிருக்கின்றன. அடிநிலை முடிநிலைத்திரிபுகள் உலகில் எல்லா மொழிகளிலும் காணப்படும் சொற்சிதைவுப் பொது நெறிமுறைகளுக்கு உட்பட்டவை. உயிர் முதற் சொல்லாயின் ஏதேனும் ஒருமெய்யெழுத்தை முன்னெழுத் தாகச் சேர்த்துக் கொள்வது ஒவ்வொரு மொழிக் குடும்பத்திலும் புதிதாகக் கிளைத்து வளர்கின்ற புதுமொழியின் சொல்லாக்க வழிமுறைகளுள் ஒன்றாகும். முன்னெழுத்தைச் சேர்த்துக் கொள்ளாத சித்திய துரானிய சுமேரிய *சீன* திபேத்திய மொழிகள் காலத்தால் முற்பட்டனவென்பதும் முன்னெழுத்துச் சேர்த்துக் கொண்ட வடஇந்திய, நட்டாசிய, ஐரோப்பிய, செமித்திய மொழிகள் காலத்தால் பிற்பட்டனவென்பதும் அறியத்தக்கன. நட்டாசிய ஐரோப்பிய செமித்திய மொழிகளில் பெரும் பாலும் ஒவ்வொரு சொல்லின் முதலசையும் வல்லெழுத்து அல்லது வல்லெழுத்து மெய்ம்மயக்க எடுப்பொலி விரவி வருதலைத் தலைமைப் பண்பாகக் கொண்டவையாதலின் உயிர்முதற் சொற்கள் பிறமொழிகளிலிருந்து கடன் கொள்ளப்படும் போது உயிரெழுத் துடன் சகரம் போன்ற மெய்யெழுத்தைச் சேர்த்துக் கொள்வதால் அவர்தம் தாய்மொழிச் சொல்லைப் போன்று பலுக்குவதற்கு எளிதாகின்றது. உயிர்முதற் சொற்களில் மெய்யெழுத்து சேர்வதற்கு ஞாலமுதன்மொழி வளர்நிலைப் படிகளில் பல்வேறு காரணங்களிருப்பினும் ஒரு குடும்ப மொழியிலிருந்து கடன் கொள்ளப்படும் உயிர்முதற் சொற்களுக்குக் கடன் கொள்ளப் படும் மொழிக் குடும்பங்களின் ஒலிப்புப்பாங்கு நெறி முறைகளே சொற்றிரிபுத் தன்மைகளை வரையறுக்கின்றன என்பதற்கு இது இங்குச் சுட்டிக் காட்டப்பட்டது.

**ஆறு**[3] āṟu, பெ. (n.) நாரிசுக்கிலம் என்னும் மகளிர் வெள்ளை; semen like discharge from the female genital. (சா.அக.).

*[அறு → ஆறு. அறுதல் = நீங்குதல், வெளிப்படல்.]*

**ஆறுகட்டி** āṟu kaṭi, பெ. (n.) 1. ஆறு பற்களுக்குமேல் முளையாத மாடு (இ.வ.); breed of neat cattle that have not more than six teeth. 2. சிவனியர் (சைவர்) காதிலணியும் அக்கமணி (உருத்திராக்கம்) வீடம்; pendant of six rudrāksa beads, worn round the ear by Saivas.

*[ஆறு + கட்டி.]*

பொதுவாக ஆனிரைகளுக்குக் கீழ்த்தாடையில் 20 பற்களும் மேல் தாடையில் 12 பற்களும் இருக்கும்.

**ஆறுகழிச்சல்** āṟu kaḻiccal, பெ. (n.) ஆறுவகைப்பட்ட செரியாக்கழிச்சல் நோய்; loose diarrohoea or dysentery arising from six different causes and they are:–

1. ஊதைக்கழிச்சல் (வாதக்கிராணி) – type of diarrohoea arising from vitiated wind, flatulent diarrohoea
2. பித்தக்கழிச்சல் (பித்தக்கிராணி) – dysentery caused by vitiated bile due to gastric disorders, Gastrogenic diarrohoea.

3. கோழைக்கழிச்சல் (சிலேட்டுமக்கிராணி) – diarrohoea caused by vitiated phlegm, muscous diarrohoea alias dysentric diarrohoea.

4. மூலக்கழிச்சல் (மூலக்கிராணி) – bleeding piles due to excess of heat caused at the plexus veins around the lower rectum.

5. மேகக்கழிச்சல் (மேகக்கிராணி) – dysentery caused from venereal complaints.

6. சூட்டுக்கழிச்சல் (சூட்டுக்கிராணி) – chronic dysentery due to excess of heat in the body either constitutional, or due to climatic changes, such as sprue, etc.

*[ஆறு + கழிச்சல்.* **Skt.** grahani, > *த. கிரகணி கிராணி = கழிச்சல். செரியாமையால் ஏற்படும் கழிச்சல், (அதிசாரம்)]*

**ஆறுகை** ārugai, பெ. (n.) மன ஆறுதல்; solace. "மனமாறுகைக் கெம்மைவந்தானு நாதன்" (மரு தூரந்.12).

*[ஆறு → ஆறுகை.]*

**ஆறுசூடி** ārusūḍi, பெ. (n.) கங்கையாற்றைத் தலையில் கொண்ட சிவபெருமான்; Šiva whose head adorns the Ganges. (நல். பாரத. மருத்து.94.).

*[ஆறு + சூடி. சூடு + இ. சூடி = சூடியவன், அணிந்தவன். ஆறு = கங்கையாறு.]*

**ஆறுசூலை** āru šūlai, பெ. (n.) ஆறுவகைச் சூலை நோய்கள், குத்தல் நோய்கள்; diseases attended with acute pain said to arise from the following six different causes:–

1. ஊதை (வாத) ச் சூலை என்னும் வயிற்றுவலி (குத்தல் நோய்) – acute pain due to disorders of the gas in the system, as in arthritis or gout. வளி (வாயு) சூலை – wind colic.

2. பித்த சூலை என்னும் வயிற்றுவலி (குத்தல் நோய்) – acute pain in the stomach through gastric disorders, as in Bilious colic or Gastric colic.

3. சில்லச் (சிலேட்டும) சூலை என்னும் வயிற்றுவலி (குத்தல் நேய்) – sharp pain arising from phlegmatic causes.

4. மேக சூலை என்னும் வயிற்றுவலி (குத்தல் நோய்) – excessive pain due to venereal or syphilitic causes such as, in gonorrhoeal or dyphilitic arthritis, gout, etc. பிரமேகசூலை –renal colic, nephritic colic.

5. கருப்ப சூலை என்னும் வயிற்றுவலி (குத்தல் நோய்)–severe abdominal pain from some uterine disease or menstrual disorder, as in uterine colic, mentrual colic, etc.

6. கண் (நேத்திர) சூலை (குத்தல் நோய்)– acute or lancinating pain in the iris of the eye, Iritis. It is due to syphilis, gonorrhoea, etc. (சா.அக.).

*[ஆறு + சூலை. சூலை = குத்தல், குடைச்சல் முதலிய பொறுக்கொணா வலிமிகுக்கும் நோய்.]*

**ஆறுதல்** ārudal, பெ. (n.) 1. மனஅமைதிபெறுதல்; consolation, solace. 2. தணிதல், நீங்கல்; to be allayed. "ஆறா விடரென்வயி னாக்கினையால்" (கந்தபு. அஞ்சி. 235). 3. வெப்பம் குறைதல்; to grow cold. "ஆறிய பசுந்தண் காவினசை வொரீஇ" (பாரத. நிலைமீட்.109). 4. குணப்படுதல்; to be cured. 5. புண் காய்தல்; to heal, as a wound or sore does. 6. ஓய்தல், ஆறியிருத்தல், ஆர அமர்தல், கட்டுப்பாடின்றி ஓய்வெடுத்தல், நெகிழ்வாக அல்லது தளர்ந்திருத்தல்; to relax. 7. அடங்குதல்; to be subdued. "ஐம்புலனுமாறி னார்களும்" (கம்பரா. தேரரேறு.25).

*[ஆறு → ஆறுதல்.]*

**ஆறுதிங்கட்காடி** āru-tingat-kāḍi, பெ. (n.) **ஆறு மாதக் காடி** பார்க்க; see ārumāda-k-kāḍi.

*[ஆறு + திங்கள் + காடி.]*

**ஆறுநோன்பு** āru nōnbu, பெ. (n.) பெரு நாளைத் தொடர்ந்து ஆறுநாள் நோன்பு மேற்கொள்ளும் முகமதியர் பண்டிகை ஒழுகலாறு; Muhammadan fast following perunal, and continuing for six days.

*[ஆறு + நோன்பு.]*

**ஆறுபரியான்** āru-pariyān, பெ. (n.) ஏறு அரவு (இராகு); ascending node. 2. இறங்கரவு (கேது); descending node. (நாம தீப.).

*[ஆறு + பரியான். கதிரவன் ஏழுபரியான் எனப் படுதலின் இவை ஆற்றல் குறைவு சுட்டின.]*

**ஆறுபருவம்** āru-paruvam, பெ. (n.) ஓராண்டின் ஆறு பகுதிகளான கார், கூதிர், முன்பனி, பின்பனி, இள வேனில், முதுவேனில் என்னும் பெரும்பொழுதுகள்; seasons or six divisions of a year, as there are four in England i.e. spring, summer, autumn and winter corresponding to March to May, June to August, September to November and December to February.

*[ஆறு + பருவம்.]*

ஆவணி, புரட்டாசி – கார்; ஐப்பசி, கார்த்திகை –கூதிர்; மார்கழி, தை – முன்பனி; மாசி, பங்குனி – பின்பனி; சித்திரை,வைகாசி – இளவேனில்; ஆனி, ஆடி – முதுவேனில் இவை வடமொழியில் முறையே வர்ஷ, சரத், ஏமந்த, சிசிர, வசந்த, கிரீட்டிம ருதுக்கள் எனப் பெயர் பெற்றன.

**ஆறுபுள்ளிவண்டு** a̱rupuḻḻi–vaṇḍu, பெ. (n.) **அறுபுள்ளி வண்டு** பார்க்க; see a̱rupuḻḻi–vaṇḍu

**மறுவ.** அறுபுள்ளிவண்டு.

*[ஆறு + புள்ளி + வண்டு.]*

**ஆறுபொழுது** a̱ru–poḻudu, பெ. (n.) ஒருநாளை, மாலை, யாமம், வைகறை, காலை, நண்பகல், எற்பாடு என ஆறுவகையாகப் பகுத்த சிறுபொழுதுகள்; six divisions of a day.

*[ஆறு + பொழுது. பொழுது = காலம், நேரம்.]*

**ஆறுமணிப்பூ** a̱ru–maṇi–p–pū, பெ. (n.) மாலையில் மலரும் மலைப்பூ வகை (இ.வ.); evening primrose, for it blossoms at about 6 p.m. (Loc.).

*[ஆறு + மணி + பூ.]*

**ஆறுமலடு** a̱ru–malaḍu, பெ. (n.) ஊதை (வாத), பித்தம், கோழை (சிலேட்டுமம்), பூச்சி(கிருமி), மாதவிடாய், (சூதகம்) தசை (மாமிசம்) ஆகிய இவ்வாறு வகைக் காரணங்களால் பெண்களுக்கு ஏற்படும் மலட்டுத் தன்மை; sterility caused in women in six different ways namely 1–3. through deranged condition of the humours in the system, 4. action of bacteria, 5. menstrual disorders, and 6. corpulency.

*[ஆறு + மலடு. ஆறு = ஆறுவகை.]*

**மலடு** பார்க்க; See **maladu.**

**ஆறுமாதக்கடன்காரன்** a̱ru–māda–k–kaḍaṉkāraṉ, பெ. (n.) சிற்றூர்களில் திரிந்து பண்டங்களைக் கடனாக விற்று ஆறுமாதங் கழித்து வந்து பணம் பெற்றுச் செல்லும் சிறு வணிகர்கள், குறிப்பாக முகமதிய சிறுவணிகர் (இ.வ.); tallyman, pedlar, esp. among Muhammadans who travel about from village to village selling household articles for credit, and calling again for collection after six months. (சா.அக.)

*[ஆறு + மாதம் + கடன்காரன்.]*

**ஆறுமாதக்காடி** a̱rumādakkāḍi, பெ. (n.) சமைத்த கருங்குறுவை அரிசிச் சோற்றைப் பானையிலிட்டு வேடுகட்டிச் சூரியப் புடத்தில் புளிக்கவைத்து ஆறு மாதங் கழித்து வடிகட்டியெடுத்த காடி. இக்காடி மஞ்சட்காமாலை, பாண்டு முதலிய நோய்களுக்கு மருந்தாகும். இதற்குப் 'பழச்சாறு' என்றும் பெயர்; matured vinegar obtained from water in which the boiled rice of black paddy has been washed and preserved in a pot kept with its mouth covered with a piece of cloth and exposed to the sun for six months for purposes of fermentation. It is used medicinally for jaundice, incipient dropsy, etc. (சா.அக.).

*[ஆறு + மாதம் + காடி.]*

**ஆறுமாதத்தண்டு** a̱ru–māda–t–taṇḍu, பெ. (n.) ஆறு மாதங்கழித்துப் பூக்கும் கீரைத் தண்டு; common spinach which flowers after six months. (சா.அக.).

*[ஆறு + மாதம் + தண்டு. தண்டு = தண்டுக்கீரை வகை. ஆறு மாதத்திற்குப் பிறகு பூத்து முதிர்ந்து விடும். அதற்குள்ளாகப் பயன் கொள்ள வேண்டும் என்பது கருத்து.]*

**ஆறுமாத்தாணி** a̱ru–māttāṇi, பெ. (n.) **ஆறுமாற்றாணி** பார்க்க; see a̱ru–māṟṟu(u)–āṇi.

*[ஆறுமாற்றாணி → ஆறுமாத்தாணி.]*

**ஆறுமாற்றாணி** a̱ru–māṟṟ–āṇi, பெ. (n.) காசுக் கடையில் மாற்றறிவதற்காக வைத்திருக்கும் ஆறு மாற்றுப் பொன்னினாற் செய்த கம்பி, உரையாணி; touch–needle made of six māṟṟu gold used by shroffs for ascertaining quality (சா.அக.).

*[ஆறு + மாற்று + ஆணி.]*

**ஆணிக்கோவை** பார்க்க; see āṇi–k–kōvai.

**ஆறுமுகக்குரு** a̱ru–muga–k–kuru, பெ. (n.) கொங் கணர்வாத நூலில் சொல்லப்பட்ட ஊதை (வா தம்)க்கு உதவும் ஒரு குருமருந்து; quintessence prepared as per process laid down in the treatise on alchemy by Konganava. (சா.அக.)

*[ஒருகா. ஆறு + முகம் + குரு.]*

**ஆறுமுகநாவலர்** a̱rumugaṉāvalar, பெ. (n.) யாழ்ப் பாணத்து நல்லூரிற் பிறந்தவரும் அளப்பரிய புலமைக் கடலாகச் திகழ்ந்தவரும் தமிழும் சிவனியமும் (சைவமும்) தழைக்கப் பெரிதும் உழைத்தவருமாகிய தமிழ்ப் பேராசான்; born in Yālpāṇam, A̱rumuga Nāvalar was a versatile and dedicated Tamil scholar. He expended his efforts for the weal of Tamil and Saivism.

*[ஆறுமுகம் + நாவலர்.]*

ஆறுமுக நாவலரின் தந்தை கந்தப்பிள்ளை. சேதிராய முதலியாரும் சரவண முத்துப் புலவரும் இவருக்குத் தமிழ்

கற்பித்த ஆசிரியர்கள். சிவனியத்தைப் பழிப்பவர்களைப் பொறாதவர். தம் செல்வத்தைத் தமிழ்க்கல்வி வளர்ச்சிக்கே செலவிட்டவர். அராலி சித்தி விநாயகர் விருத்தம், நல்லை கைலாசப் பிள்ளையார் மங்களவிருத்தம், இலக்கணச் சுருக்கம், பெரியபுராண உரைநடை, பால பாடங்கள் ஆகியவற்றை இயற்றியவர். சாலி வாகன சகம் 1745 சித்தி பானுவிற் பிறந்தவர். இராமலிங்க வள்ளலாரின் அருட்பாவை ஏற்க மறுத்து 'மருட்பா' என்றவர்.

**ஆறுமுகம்** āṟumugam, பெ. (n.) 1. ஆறுமுகன், முருகன்: Lord Arumugan. 2. இயற்பெயர்; proper noun. 3. ஆறுமுகப்பட்டகம்; hexhedron

*[ஆறு + முகம்.]*

**ஆறுமுகவன்** āṟu–mugavaṉ, பெ. (n.) **ஆறுமுகன்** பார்க்க; see āṟumugaṉ.

*[ஆறுமுகம்+ஆன் – ஆறுமுகமன் → ஆறுமுகவன்.]*

**ஆறுமுகன்** āṟumugaṉ, பெ. (n.) முருகக் கடவுள் (சூடா); Muruga, having six faces. "ஆறுமுகனைப் பயந்த நதி "(பாரத. வாரணா. 85)

ம. ஆறுமுகன் ; க. ஆறுமுக.

*[த. முகம் > skt. mukha. ஆறு + முகன்.]*

**ஆறுமுகனேரி** āṟumugaṉēri, பெ. (n.) நெல்லை மாவட்டத்தில் திருச்செந்தூர் முருகன் பெயரால் அமைந்த ஊர்; place name.

*[ஆறுமுகன் + ஏரி.]*

**ஆறுவகைப் படையல்** āṟu vagai–p–paḍaiyal, பெ. (n.) கடவுளுக்குப் படைக்கும் ஆறுவகை உணவுகள். அவை; மஞ்சள் சோறு (அரித்திரான்னம்), சருக்கரைச் சோறு (பரமான்னம்), தேங்காய்ச் சோறு (முற்கான்னம்), நெய்ச்சோறு (கிரு தான்னம்), தயிர்ச்சோறு (தத்தியன்னம்), உளுத்தஞ் சோறு (குளான்னம்) என்பன. (த.போ. 302); six kinds of rice–offerings to the gods. (த.சொ.அக.).

*[ஆறு + வகை + படையல்.]*

**ஆறுவிரல்** āṟu–viral, பெ. (n.) அரிதாக ஒருவர் கை அல்லது காலில் ஐந்து விரல்களை யொட்டி நிற்கும் ஆறாவது விரல்; sixth or other supernumerary fingers or toes rarely seen in human beings.

*[ஆறு + விரல்]*

**ஆறெழுத்து** āṟeluttu, பெ. (n.) 1. ஓம், ந, ம, சி, வ, ய என்னும் மந்திர எழுத்துகள்; six mystic letters viz. Om, Na, Ma, Śi, Va, Ya; (சா.அக.) 2. ந, ம, கு, மா, ரா, ய என்னும் ஆறெழுத்து மந்திரம் (சடாட்சரம்) (திருமுருகு. 186); sacred formula attributed to Muruga (Skanda), and consisting of six syllables.

*[ஆறு + எழுத்து.]*

**ஆறெறிபறை** āṟeṟiparai, பெ. (n.) வழிபறிக்குங்கால் கொட்டும்பறை (சிலப்.வேட்டுவ.); drum beaten by robbers while waylaying.

*[ஆறு + எறி + பறை. ஆறு = வழி, பாதை.]*

**ஆறோட்டம்** āṟōṭṭam, பெ. (n.) மட்டைப்பந்து (கிரிக் கெட்டு) விளையாட்டில் எதிராளி எறிந்த பந்தை அரங்கில் எல்லைக் கோட்டைத் தாண்டி விழுமாறு அடிக்கை; sixer in cricket.

*[ஆறு + ஓட்டம்.]*

**ஆன்**[1] āṉ, 11 செ.கு.வி. (v.i.) பொருந்துதல்; to stick to, fit in. நன்றாக ஆனிக் கொண்டு நிற்கிறது (கொங்.வ.); செ.குன்றாவி. (v.t.) 1. பொருந்துதல்; to connect, join. 2. பிடித்தல்; hold. 3. தடுத்தல்; to obstruct. 4. தடுத்து நிறுத்துதல், தடை செய்தல்; to prevent. 5. எதிர்த்தல்; to oppose.

க. ஆன், ஆனு; தெ. ஆனு; கோன். ஆன்சானா. பெங். ஆன்ச்; குட. ஆன்கோ–மீன் பிடிக்கும் வட்டக் கூடை

*[ஆல் → ஆன்.]*

பொருத்துதல், பிடித்தல் பொருளில் வழங்கிய ஆல் என்னும் வேர்ச்சொல் தமிழிலக்கியங்களில் ஆர்–தல், ஆர்–த்தல் என வழக்கூன்றியது போல் ஏனைத் திராவிட மொழிகளில் ஆல் – ஆன் என ஈறு திரிந்து பெருக வழங்கும் வினையாக வழக்கூன்றியது. தடுத்தல் பொருளில் விரைவு குறித்த ஏவல் வினையாக ஆல் – ஆன் – அவ் எனத் திரிந்து தமிழக நாட்டுப்புறங்களில் வழங்கி வருகிறது. விரைந்து ஓடும் கால்நடைகளை உழவர் ஆவ் – அவ் அவ்எனத் தடுத்துநிறுத்தும் ஒலிக்குறிப்புச் சொல்லாகப் பயன் படுத்துவதை இன்றும் காணலாம். இது தெலுங்கில் ஆவ் → ஆவு → ஆகு என வினையாகவும் ஆவ் – ஆவு – ஆபு என செ. குன்றா வினையாகவும் திரிந்து வழங்கி வருகிறது.

தெ. ஆகு = நில். ஆகண்டி = நில்லுங்கள்.

**ஆன்**[2] āṉ, பெ. (n.) 1. எருமை, பெற்றம், மரை இவற்றின் பெண். (திவா.); female of the buffalo, ox or deer. 2. பெற்றத்திற்கும் காளைக்கும் பொதுப் பெயர்; neat, cow or bull. 3. பெற்றம்(பசு); cow. 4. எருது; ox. "ஆன்முகத்தனடற்கணநாயகன்" (கந்தபு. பானுகோ.95).

ம. ஆன்; தெ. ஆவு ; துட. ஆன் (யானை)

OE.oxa. OS, OHG ohso,ON.uxi, oxi, Goth. ausha, f. Gmc. ohsan, cogn. W. Skt. ukshan.

*[மா →மான் →ஆன். மா = விலங்கு, மாடு. னகர மெய் ஒருமை குறித்த ஈறாயிற்று.]*

மா எனக் கத்தும் இயல்பு பற்றி எருமை, மாடு, மான், மரை ஆகியவை மா எனப்பட்டன. இச்சொல் நாளடைவில் விலங்குகளின் பொதுப்பெயராயிற்று.

**ஆன்**[3] ān, கு.வி.எ.(adv.) அவ்விடம் (தொல். பொருள். அகத்.24.இளம்.) there, in that place. "ஆன் வழிக் கொள்ளும் வேதன வன்றனைப் பற்றி வல்லே யீன்வருகென்ன" (தணிகைப்.வீராட.89)

*[ஆ-சேய்மைச் சுட்டெழுத்து. ன் – சொல்லாக்க ஈறு. இனி ,அல் என்பதே அது எனப் பொருள் படும் சேய்மைச் சுட்டாதலின் அது நெடுமுதலாகிப் பின் ஆல் –ஆன் எனத் திரிந்ததென்க]*

**ஆன்**[4] ān, இடை.(part.) 1.மூன்றனுருபு; instr. ending. "மண்ணானியன்ற குடம்" (தொல். சொல்.75, உரை).2. ஆண்பாற் பெயரின் ஈறு; 3rd pers. masc. sing. marker. ஊரான், நாட்டாண் (உ.வ).3.ஆன் பாற் வினைமுற்றின் ஈறு; 3rd pers. masc. verbal ending.வந்தான்,சென்றான்(உ.வ).4.ஒருசாரியை; euphonic increment, used with a modification of பத்து 'ten', as in இருபான் (நன். 244). 5.ஒன்றன் பாலீறு; neut. sing. ending. கறையான், அகழான். 6. ஆயின்; but.(செ.அக.) "தங்கண்ணரானுந் தகவில கண்டக்கால்" (பழமொ. அரசி.10).

*[மூன்றனுருபுஆல்→ஆன்.ஆண்பாலீறு அன்→ஆன். ஒன்றன்ட ாலீறு அன் → ஆன். சாரியை அன் →ஆன்]*

**ஆன்கன்று** ānkanru, பெ. (n.) ஆவின் (பசுவின்) கன்று; calf. cow–calf

*[மா →மான் → ஆன் + கன்று]*

**ஆன்காவலன்** ānkāvalan, பெ. (n-.) 1. ஆனிரைகளைக் காப்பவன்; protector of the cow. 2. வணிகப்பிரிவினன் (வைசியன்) (சூடா); vaisya.

*[மா → மான் → ஆன் + காவலன்.]*

**ஆன்பொருந்தம்** ānporundam, பெ. (n.) கருவூரைச் சார்ந்த ஆறு ஆன் பொருநை; river Ānporunai, near Karūr,

*[ஆன் + பொருநை. பொருநை → பொருந்தம் – திரிபு வஞ்சி மாநகரத்தருகிலுள்ள ஆறும், ஆன் பொருநை, ஆனி, வானி, ஆன்பொருந்தம் தண் பொருநை, எனப்படும் (அபி. சிந்.).]*

**ஆன் பொருநை** ānporunai, பெ. (n.) 1. கருருக்கு அருகில் காவிரியுடன் கலக்கும் சிற்றாறு; river Ānporunai near Karur. 2.வஞ்சி மாநகரத்திற்கருகில் ஓடும் ஆறு –(ஆனி, வானி, ஆன் பொருந்தம், தண் பொருநை எனப் பிற பெயர்களாலும் சுட்டப் படுவது.); river near vañji

*[ஒருகா. ஆல் → ஆன் → ஆனுதல் = நிறைந்து விரிந்து செல்லுதல். பொருநை = கரைபொருது செல்வது. ஆன் பொருநை → ஆன் பொருந்தம் = வெள்ளம் நிறைந்து விரிந்து கரைபொருது செல்லும் ஆறு. இனி, கான் பொருநை → ஆன் பொருநை என்றுமாம்.]*

ஆன் பொருநை என்னும் பெயர் தமிழகத்துப் பல ஆறுகளுக்கும் பெயராக இருத்தலின் ஆற்றைக் குறிக்கும் பொதுப் பெயராகவே இதனைக் கொளத்தகும்.

**ஆன்மா** ānmā, பெ. (n.) ஆனாகிய மா, (பசு.); soul. ஒ.நோ. அரிமா, கரிமா. முதன் முதலாய் மாந்தனால் வளர்க்கப்பட்ட விலங்கு ஆன்மா.

*[ஆ → ஆன் + மா – ஆன்மா (ஒ.மொ.253)]*

முதற்காலத்தில், இருதிணையுயிர்களும் ஒன்றாகவே கருதப்பட்டன, என்பது, மாக்கள் என்னும் பன்மைப் பெயர் இருதிணைக்கும், கணவன் அலவன் என்னும் ஆண் பாற் பெயர்கள் அஃறிணைக்கும் வழங்குவதாலும், தொல்காப் பியத்திற் கூறும் விரவுப் பெயராலும் பிறவற்றாலும் அறியப்படும்.

'ஆன்மா' என்னும் பெயர் பிற்காலத்தில் இருதிணையு யிர்களையும் குறித்தற்குரிய பொதுச்சொல்லாகக் கொள்ளப் பட்டது. 'மா' என்னும் பெயர் (பசு) (மாடு) உயிர் என்று இருபொருள் தருவது போன்று ஆன்மா என்னும் பெயரும் தரும்.

ஆன்மாவைப் பசு என்று மொழிபெயர்த்துச் சிவனைப் பசுபதியென்றனர் வடநூலார். ஆரியர் இந்தியாவிற்கு வரு முன்னமே ஆன்மா என்னுஞ் சொல் தமிழர்க்கிருந்தது.

L. animos, soul. ஆன்மா என்னும் வடிவமே பண்டைத் தமிழ் நூல்களில் வழங்கப்பட்டிருப்பதாலும், அது animos என்னும் இலத்தீன் வடிவத்தை ஒத்திருப்பதாலும் அச்சொல் ஆரிய மொழியிற் பிற்காலத்து வந்ததென்று மாக்சுமுல்லர் கூறுவதாலும் ஆன்மா, பசு என்னும் சொற்கள் ஒரு பொருள வாய் இருத்தலாலும், ஆரியர் வருமுன்பே சைவம் இந்தியாவில் இருந்ததினாலும் பிறவற்றினாலும் "ஆன்மா" என்பது தமிழ்ச் சொல்லேயென்பது துணியப்படும். (ஒ.மொ. 253).

**ஆன்மெழுகு** ānmeḻugu, பெ. (n.) ஆனிரைகளின் சாணம்; cowdung (தைலவ.தைல.)

*[ஆன் + மெழுகு. தரை மெழுகப் பயன்படும் சாணம் மெழுகு எனப்பட்டது.]*

**ஆன்வல்லவர்** ā̲nvallavar, பெ. (n.) ஆனிரைகளை மேய்க்கும் முல்லை நில மக்கள்; inhabitants of forest pasture tracts, cowherds. (சூடா.).

*[ஆன் + வல்லவர். வல்லவர் = செய்தொழில் திறன் பெற்றோர்.]*

**ஆன் வல்லோர்** ā̲n vallōr, பெ. (n.) **ஆன் வல்லவர்** பார்க்க; see ā̲nvallavar.

*[ஆன் + (வல்லவர்) → வல்லோர்.]*

**ஆன்ற**[1] ā̲nra, பெ.எ. (adj.) 1. பண்புகளால் நிறைந்த, ஒள்ளிய, மாண்புற்ற; excellent, grand, splendid. "ஆன்ற தவச் செந்நெறி" (பெரியபு.திருநாவு.41). 2. அடங்கிய; having grown calm, owing to deep learning. "ஆன்ற பெரியா ரகத்து" (குறள்.694).

ம. ஆன்ற.

*[ஆல் → ஆன்ற. ஆலுதல் = நிறைதல். ஆன்ற = நற்பண்புகளால் நிறைந்திருத்தல், நிறைந்து நிலை கொள்ளுதல், அடங்கியிருத்தல்.]*

**ஆன்ற**[2] ā̲nra, பெ.எ. (adj.) 1. அகன்ற; wide. "தூய தென்புனலா யான்ற தொல்கடல்" (கந்தபு.மூன்றா, 167). 2. இல்லாமற்போன, மறைந்துபோன; having ceased to exist. "அருவியான்ற வணியின் மாமலை" (மதுரைக்.306)

*[அகல் → அகன்ற → ஆன்ற. முதனீண்டு இடைக் குறைந்த திரிபு. அகலுதல் = நீங்குதல், பரவுதல், விட்டுப் போதல், இல்லாமற் போதல்.]*

**ஆன்றல்**[1] ā̲nral, பெ. (n.) 1. அகலம் (திவா.); extension, width, breadth. 2. நீங்குதல், vanishing.

*[அகல் → அகல்தல் → அகன்றல் → ஆன்றல்]*

**ஆன்றல்**[2] ā̲nral, பெ. (n.) 1. மாட்சிமை (தி.வா.); greatness, dignity 2. மிகுதி (திவா.); abundance, copiousness.

*[ஆலுதல் = நிறைதல், மிகுதல். ஆல்தல் = ஆன்றல்.]*

**ஆன்றவர்** ā̲nravar, பெ. (n.) 1. அறிஞர், அறிவிற் சிறந்தோர்; erudite scholars, nobel men wise persons. "ஆன்றவர் அடக்கம் கற்றுத்துறை போய சான்றோர்;" (கலித். 32) (மணி. 2,34). 2. தேவர் (பரிபா. 19,3); gods, heavenly beings.

**ஆன்றார்** ā̲nrār, பெ.(n.) **ஆன்றவர்** பார்க்க (குறள். 413); see a̲n ravar.

*[ஆன்றவர் → ஆன்றார்]*

**ஆன்று** ā̲nru, வி.எ. (vbl. ppl.) 1. நிறைந்து; filled, having been full. "பாடான்றவிந்த பனிக்கடல்" (மதுரைக். 629). 2. விரிந்து; stretched out, extended. "ஓசனை யளவை யான்று" (கந்தபு. நகரழி.1). 3. நீங்கி; be removed. "ஒலி யான்று" (கலித். 121).

*[அகன்று → ஆன்று.]*

**ஆன்றோர்** ā̲nrōr, பெ. (n.) **ஆன்றவர்** பார்க்க; see **anravar.**

*[ஆன்றவர் → ஆன்றோர்.]*

**ஆன்றோள்** ā̲nrōḷ, பெ. (n.) நற்பண்புகளால் நிறைந்த பெருமகள், மாண்புடையவள்; lady of exalted character. "ஆன்றோள் கணவ" (பதிற்றுப். 55).

*[ஆலுதல் = நிறைதல். ஆல் → ஆன்றோள்.]*

**ஆன** ā̲na, சு.பெ.எ. (dem.adj.) அந்த; that. "ஆன காலை யரிய னாடொணா" (கந்தபு. தெய்வ. 213).

*[அ → ஆ → ஆன. அங்கண் → அங்ஙனே → ஆன என்றுமாம்.]*

**ஆனகதுந்துபி** ā̲nagatundubi, பெ. (n.) 1. போர்ப்பறை; war–drum. 2. கண்ணனின் தந்தைக்குரிய பெயர்களுள் ஒன்று; ஆனக துந்துபி முழங்க அவருடைய பிறந்தநாள் கொண்டாடப்பட்ட மையால் பெற்ற சிறப்புப் பெயர் (பாரத.திரௌ.58); Vasudeva, Krishna's father, whose birth was celebrated amongst celestials by the beating of drums. **ஆனகம்** பார்க்க; see ā̲nagam.

*[ஆனகம் + துந்துபி.]*

**ஆனகம்** ā̲nagam, பெ. (n.) 1. ஒருகண் பெருமுரசு, போர் முரசு; drum with one side, "ஆனகம் பல முழங்க" (பாரத. சூது.56.) 2. துந்துபி, படகம் (பிங்.); kettle drum. 3. மேக முழக்கம்; din of the clouds.

*[ஆல் → ஆன் → ஆனகம். ஆலுதல் = ஒலித்தல்.]*

**ஆனஞ்சு** ā̲nañju, பெ. (n.) **ஆனைந்து** பார்க்க; see **ā̲naindu.** "இகவா னஞ்சு மாடி" (கம்பரந். 25)

*[ஆன் + ஐந்து – ஆனைந்து → ஆனஞ்சு.]*

**ஆனத்துமீன்** ā̲nattumī̲n, பெ. (n.) 1. குழம்பு செய்வதற்குரிய மீன்; fish meant for cooking. 2. தூண்டிலில் பிடிபட்ட பெரிய மீன்; large fish caught in the net. (முகவை. மீனவ.)

*[ஆணம் + அத்து + மீன் . = ஆணத்து மீன் → ஆனத்து மீன் (கொ.வ.)]*

**ஆணம்** பார்க்க; see **ānam**

**ஆனதும்பி** ānatumbi, பெ. (n.) கடல் மீன் வகை; pinkish marine fish, Dactyleperus erientalis.

**ஆனந்தக்கண்ணீர்** ānanta-k-kaṉṉīr, பெ. (n.) மகிழ்ச்சிப் பெருக்கின் அடையாளமாய் வெளிப் படும் கண்ணீர்; tears of joy. (செ.அக..)"உலப்பிலா வானந்தக் கண்ணீர் தருவரால்" (திருவாச.17,2).

*[ஆனந்தம் + கண்ணீர் = மகிழ்ச்சிப் பெருக்கால் கடைக்கண் விளிம்பில் சிலிர்க்கும் கண்ணீர்த்துளி ஆனந்தக் கண்ணீர் என்பர். ஆனந்தம்-வடதமிழ்ச் சொல்.]*

**ஆனந்தம்** பார்க்க see **ānandam**

**ஆனந்தக்கரப்பான்** ānanda-k-karappāṉ,பெ. (n.) தின வெடுப்பதும் சொறிந்த பின் எரிச்சல் தருவது மாகிய ஒருவகைக் கரப்பான் நோய்; eruption which causes an agreeable sensations when it is scratched but a burning sensation soon after. (செ.அக.)

*[ஆனந்தம் + கரப்பான். ஆனந்தநோயால் விளையும் கரப்பானாக இருக்கலாம்.]*

**ஆனந்தக்களிப்பு** ānanda-k-kaḷippu, பெ. (n.) 1. கழி பேருவகை, பெருமகிழ்ச்சி; ecstatic joy. (திருவாச.8, திருவம்மானைக் கருத்து). 2. மகிழ்ச்சிப் பெருக் கால் பாடும் இசைப்பாடல்; poem expressive of ecstatic delight. (தாயு.) (செ.அக.) 3. சிவஞான முனிவர் இயற்றிய நூல் (திருவேகம்பர் ஆனந்தக் களிப்பு); literary work by Sivagnana munivar.

*[ஆனந்தம் + களிப்பு (ஒருபொருட் பன்மொழி) களிப்பு மிகுவிக்கும் தாளத்தொடும் பொருந்திய பாடல் வகையாதலின் ஆனந்தக் களிப்பு எனப்பட்டது.]*

**ஆனந்தகரம்** ānandakaram, பெ.(n). மகிழ்ச்சி தரக்கூடியது; that which delights or exhilarates. "பாடுவது ஆனந்த கரம்". (பிராம.வ.) (செ.அக.).

*[ஆனந்தம் +கரம். கருத்தல் = செய்தல். கருத்தல் என்னும் செந்தமிழ்ச்சொல் வடபுலத்தில் மட்டும் வினைச்சொற் பொருளில் ஆளப்பெற்று தென்னகத்தில் நாளடைவில் வினைச்சொல்லாக ஆளப்பெறாமையின் வடதமிழ்ச் சொல்லாயிற்று. வடபுலத்தி லிருந்து தென் பால் குடியேறிய மக்கள் இச்சொல் லாட்சிகளைத் தொடர்ந்து ஆள நேர்ந்தது. மகிழ்ச் சிகரம்என்னும்சொல்லாட்சியை ஒப்புநோக்குக. மகிழச் செய்வது மகிழ்த்தி → மகிழ்ச்சி எனத் திரிந்திருத் தலான் மகிழ்ச்சிகரம் என்னும் சொற்கூட்டு முற்றிலும் வேண்டாதது. இதுபோன்றே ஆனந்தகரமும் தமிழுக்கு வேண்டாத சொற்கூட்டு என்க.]*

**ஆனந்தகானம்** ānandakāṉam,பெ.(n.) வீடு பேற ளிக்கும் என நம்பப்படும் காசி மாநகர்; Benares, as the place for attaining celestial bliss. (செ.அக.). "ஆனந்த கானந் தொடுத்திங்குளவான சைவத் தானம் பலவும்" (திருவிளை.கல்லானை.8).

*[ஆனந்தம் + கானம். கானம் = சோலை, ஊர்.]*

**ஆனந்தகுறுவை** ānandakuṟuvai, பெ. (n.) ஒருவகை நெல்; a kind of paddy. (செ.அக.).

**ஆனந்தத்தாண்டவம்** ānanda-t-tāṇdavam, பெ. (n.) தில்லைக்கூத்தனின் நாட்டிய வகைகளுள் ஒன்று; (கோயிற். பதஞ்..1, உரை); ecstatic dance of Śiva, as exhibited in the shrine at Chidambaram.

*( [ஆனந்தம் + தாண்டவம்.]*

**ஆனந்த தீர்த்தர்** ānanda tīrttar, பெ. (n.) வேதாந்தக் கொண்முடிபுகளில் துவைதம் என்னும் இருமைக் கோட் பாட்டினை வகுத்தருளிய மாத்து வாச் சாரியார்; Mādhvāchāryā, exponent of the Dvaita school of Vēdantic Philosophy. (செ.அக.).

*[ஆனந்தம் + தீர்த்தர்.]*

**ஆனந்தப்பையுள்** ānanda-p-paiyuḷ, பெ. (n.) 1. கணவன் இறந்ததால் மனைவி மெலிந்து வருந்து வதைக் கூறும் புறத்துறை (பு.வெ. 10,13); theme expressing emaciation and lament of a wife on her husband's bereavement. 2. பிரிவால் வருந்தும் தலைவன் தலைவியர் துயரமிகு தியைப் பாட்டுடைத் தலைவனின் நாட்டுடனும் ஊருடனும் சாத்திச் சொல்வதாகிய நூற்குற்றம். (யாப். வி. 96, பக். 523); fault in poetical composition, in which a patron's city or country is associated with the place where the lover became separated from his mistress. (செ.அக.). (யாப். வி. 96, பக்.523)

*[ஆனந்தம் + பையுள். (ஒரு பொருட்பன்மொழி) பையுள் = துயரம். ஆனந்தம் = கேடு, அழிவு, துன்பம்.*

***ஆனந்தம்** $^2$ பார்க்க; see ānandam$^2$.]*

ஆனந்தக்களிப்பு என்றாற்போல் ஆனந்தப் பையுள் ஒரு பொருட்பன்மொழியாய் ஒருபொருளின்மேல் இருசொல்லடுக்கி வந்தது. நந்துதல் என்னும் சொல் செழித்தல் கெடுதல் என்னும் முரண்படு பொருள் தருவது போன்றே ஆனந்தம் என்பதும் முரண்படு பொருள் தந்தது. ஆல் + நந்தம் – செழிப்புடன் நிறைந்தது, கேடு அல்லது அழிவுடன் சார்ந்தது. (தீமை நிறைந்தது) என முரண்பொருள் தந்து நின்றது.

**ஆனந்தபயிரவி** ānanda payiravi, பெ. (n.) பண்வகைகளுள் ஒன்று; specific musical mode.

*[ஆனந்தம் + பயிரவி*

*பயிர்தல் = அழைத்தல், விளித்தல், வேண்டுகோள் விடுத்தல் இப்பொருள்களில் பாடப்படும் பண்வகை.]*

**ஆனந்த பைரவம்** ānanda pairavam, பெ. (n.) மருத்துவச் சூரணம், சிந்தூர வகை ; medicated mineral powder. (செ.அக.) ஆனந்த பைரவம் வருதிரிதோசம் போகும். (பதார்த்த.1209).

*[ஆனந்தம் + பைரவம்.]*

**ஆனந்த பைரவி** ānanda pairavi, பெ. (n.) பண் வகைகளுள் ஒன்று; specific musical mode. (செ.அக.).

*[ஆனந்தம்+பைரவி,* ***ஆனந்த பயிரவி*** *பார்க்க; see ānnanda payiravi.]*

**ஆனந்தம்**[1] ānadam, பெ. (n.) 1. பெருமகிழ்ச்சி, பேரின்பம்; felicity, rapturous joy, bliss. "ஆனந்தம்மே யாறா வருளியும்" (திருவாச.2, 106); 2. மிகுதி, பெருக்கம்; excess, abundance.

**ம.** ஆனந்தம்; **தெ., க.** ஆனந்த; **பாலி.** ஆனந்த

*[ஆல்+நந்து+அம்=ஆனந்தம்,அம்சொல்லாக்க ஈறு. ஆலுதல் = நிறைதல், பொருந்துதல், பெருகுதல், நல் → நன்று → நந்து=பெருகுதல், செழித்தல். நன்று பெரிதாகும். (தொல்.) நந்துதல் = செழித்தல். மகிழ்தல். "தீங்கனி மரம் நந்த" (கலித்.).]*

நந்து, நந்தி, நந்தன், நந்தனார் என்னும் பெயர்களை ஒப்பு நோக்குக. ஆல் + நந்து – ஆநந்து. இடையில் லகர மெய்த் தொக்கது. நந்துதல் என்னும் செந்தமிழ்ச் சொல் வழக்கு வட தமிழில் பல்கி தென் தமிழில் சில்கியதால் வடசொல் போன்ற பொய்த் தோற்றம் தருகிறது. ஆதலின், ஆனந்தம் செவ்விய தமிழ் வழக்கே என்க.

ஆல் என்பதனடியாகப் பிறந்த ஆருர் (பெரிய ஊர். ஆர் + ஊர்) ஆரோசை (ஏற்றிப்பாடும் இசை, அமரோசை என்பதன் எதிர்ச்சொல்) ஆகிய சொல்லாட்சிகளை ஆல் + நந்தம் என்னும் வழக்குடன் ஒப்புநோக்குக.

இனி வடமொழியாளர் ā+nanda எனச் சொற் கூட்டுவது பொருந்தமன்று. வடமொழியில் 'ஆ' என்னும் முன்னொட்டு எல்லைப் பொருளிலும் வெற்றசையாகவும், எதிர்மறைகுறித்தும்நிற்பதன்றிப்பெருக்கப்பொருளிலும்நிறைதற் பொருளிலும் வருதலின்றாம். **ஆ** பார்க்க; see **ā**; **நந்துதல்** பார்க்க; see **nandu.**

**ஆனந்தம்**[2] ānandam, பெ. (n.) 1. சாவு, அழிவு (தொல். பொருள்.79, உரை);death, decay,. (தொல்.பொருள். 79, உரை). 2. பாடல்களில் காணப்படும் அறுவகைக் குற்றம், யாப்பு வழு; six kinds of fault or blemishes in poetry. (இலக். வி. 887).

*[ஆல் + நந்து + அம். அம்– சொல்லாக்க ஈறு. ஆலுதல் = நிறைதல், சேர்தல், நது → நந்து (கெடுதல்) நதுத்தல் = அழிதல். நதுத்தல் = நைதல். பிரமாதம் என்னும் வடசொல் சிறப்பு, அருமை என்றும், தீங்கு, கேடு என்றும், எதிர்மறைப் பொருளிலும் ஆளப் படுதலை இதனுடன் ஒப்புநோக்குக.]*

பாடலில் நேரும் குற்றங்களை எழுத்தானந்தம், சொல்லானந்தம், பொருளானந்தம், யாப்பானந்தம், தூக்கானந்தம், தொடையானந்தம் என அறுவகைப்படுத்துவர்.

ஆல் + நந்து + ஆம் –ஆனந்தம் என்னும் சொற் புணர்வில் ஆல் முன்னொட்டாக நின்றது. இப்பொருள் அஃறிணை (அல் + திணை) என்பனவற்றில் இல், அல் முன்னொட்டாக நின்று எதிர்மறைப் பொருள் உணர்த்தியவாறு 'அல்' (அல் → ஆல்) முன்னொட்டு லகர மெய் கெட்டு ஆ–ரோக்ய (நோயில்லாத, ரோகமில்லாத) ஆரோக்கியம் என எதிர்மறைப் பொருள் தருவது வடமொழி வழக்கு. ஆலுதல் = தடுத்தல், நிறுத்துதல், இல்லாமற் செய்தல் பொருளில் தமிழில் வழங்க வில்லை. இம்முன்னொட்டு வடமொழியில் வழங்கும் தமிழ்ச் சொல்லாகும்.

**ஆனந்தம்**[3] ānandam, பெ. (n.) **அரத்தை** பார்க்க; see **arattai** (மூ.அ.).

**ஆனந்தமயம்** ānanda mayam, பெ. (n.) 1. இன்பம் நிறைந்தது; that which is full of bliss, replete with happiness. "ஆனந்தமயமான வாதியை" (தாயு. திருவருள்வி.3) 2. ஐங்கோசத்துள் (பஞ்சகோசம்) ஒன்று (ஆனந்தமய கோசம்); inner most sheath of the soul. (சி.சி.பர.மாயாடு). "போற்று மானந்த மயமல்லாது" (த.நி.போ.பக்.284, பா. 264).

*[ஆனந்தம் + மயம். மய்யம் → மயம்]*

**ஆனந்தமூலி** ānanada mūli, பெ. (n.) கஞ்சாங்குல்லை, மயக்கமூட்டும் கஞ்சா என்னும் பயிர்; hemp, for it produces joy by intoxication. (சங்.அக.).


ஆனந்த மூலி – கஞ்சாங்குல்லை

*[ஆனந்தம்+மூலி.மூலி → மூலிகை. மகிழ்ச்சி வெறி கொள்ளச் செய்வதால் ஆனந்தமூலி எனப்பட்டது.]*

**ஆனந்தவயிரவம்** ānandavayiravam, பெ. (n.) மருத்து வப் பொடி (சூரணம்) சிந்தூ ரவகை; medicated mineral powder, **plumbi orcidumrubram** (செ. அக.).

*[ஆனந்தம் + வயிரவம். ஆனந்தம் = மிகுதி, வயிரவம் = ஆற்றல் மிக்கது]*

**ஆனந்தவருவி** ānandavaruvi, பெ. (n.) ஆனந்தக் கண்ணீர்ப் பெருக்கு. (செ.அக.); tears of joy.

*[ஆனந்தம் + அருவி.]*

**ஆனந்தவல்லி** ānandavalli, பெ. (n.) கோழித்தலைக் கந்தகம் (மூ.அ.); prepared arsenic..

*[ஆனந்தம் + வல்லி.]*

**ஆனந்த வுவமை** ānandavu vamai, பெ. (n.) மிக இழிந்த பொருளுடன் ஒப்பிடுவதனாலாகிய உவமைக் குற்றம் (புறநா. 60. உரை).; fault of comparing great things with petty ones.

*[ஆனந்தம்+உவமை. ஆனந்தம்=கெடுதி, குற்றம்.* ***ஆனந்தம்***[2] *பார்க்க;* see ānandam[2]]

**ஆனந்தன்** ānandan, பெ. (n.) பேரின்பத்தின் உறைவிட மான சிவபெருமான்; Śiva, Himself being the Supreme; Bliss. "அத்தன் ஆனந்தன்" (திருவாச. 17.5). 2. அருகன்; Arhat. (சூடா.).

*[ஆல் + நந்து + அன்.-ஆனந்தன்.* ***ஆனந்தம்***[1] *பார்க்க;* See **ānandam**[1].*]*

**ஆனந்தி-த்தல்** ānandi-, 4 செ.குன்றாவி. (v.t.) மகிழ்தல்; to feel joyful, to be glad (வின்).

*[ஆல் + நந்து → ஆனந்து, ஆனந்தி.]*

**ஆனந்தை**[1] ānandai, பெ. (n.) 1. பேரின்பத்தின் வடிவான உமாதேவி; Goddess Parvati as Supreme Bliss. 2. குறிஞ்சி யாழ்த் திறத்தின் ஒன்று; secondary melody - type of Kurinji' class. (பிங்.). 3. கொட்டைக் கரந்தை; Indian globe-thistle. "அதிற் பெய்நெய் யானந்தை யிரதம்" (தைலவ. தைல.39).

*[ஆல் + நந்தம் - ஆனந்தம் → ஆனந்தை.]*

**ஆனந்தம்**[1] பார்க்க; See ānandam[1]

**ஆனம்**[1] ānam, இடை. (part.) எழுத்துச் சாரியை; term used to designate some letters of the Tamil alphabet for facility of pronunciation. (தொல். சொல். 296 உரை).

*[அனம் → ஆனம்.]*

**ஆனம்**[2] ānam, பெ. (n.) கள், மதுவகை; toddy, any intoxicating liquor. (W.).

*[ஆல் + அம் - ஆலம் → ஆனம். ஆல் = நீர், நீராளமாக இருப்பது. ஒருகா. பானம் → ஆனம்.]*

**ஆனம்**[3] ānam, பெ. (n.) 1. தெப்பம்; float, raft. 2. மரக்கலம் (திவா.); ship, vessel, boat.

*[யா - பரத்தல், செல்லுதல். யானம் → ஆனம். இயவு = பாதை, செல்லுதல். இயவு → யா, இது ஏ, ஏகு எனவும் திரியும்.]*

**ஆனம்**[4] ānam பெ. (n.) பருமை, பெரியது; loftiness, that which is big.

*[அகல் → ஆல் → ஆலம் → ஆனம்.]*

**ஆனமானத்திரி** ānamāna-t-tiri, பெ. (n.) 1. சிறுவர் விளையாட்டுவகை; a kind of children's play. 2. முறுக்கப்பட்ட சிறு துணியினாலாய திரி; tightly twined cloth wick.

*[ஆனமானம் = பெரியது. ஆனமானத்திரி = துணியை முறுக்கிப் பருமனான கயிறுபோல் செய்து விளையாடும் விளையாட்டு.]*

**ஆனமானமாய்** ānamānamāy, பெ. எ. (adj.) சிறப்பாக, பெருமளவுக்கு, நன்றாக; properly, in a proper manner. காரியத்தை ஆனமானமாய்ச் செய்ய வில்லை (இ.வ.) (செ.அக.).

*[ஆன + மானம் + ஆய்.* ***ஆனம்***[4] *→ ஆன = பெருமளவுக்கு; மானமாய்=பெருமைப்படும் வகையில்.]*

**ஆனமானவன்** ānamānavan, பெ. (n.) சிறந்தவன்; worthy, respectable person (W.).

*[ஆனமானம் + அன்.]*

**ஆனமை** ānamai, பெ. (n.) ஆனதன்மை; condition or state of having become. "ஆனமையான் மேலான" (சி.சி.8.23.). (த.சொ.அக.).

*[ஆகு → ஆகிய → ஆகியமை → ஆகினமை → ஆயினமை → ஆனமை = தொகுத்தல் திரிபு.]*

**ஆனவன்** ānavan, பெ. (n.) 1. எழுவாய் வேற்றுமை ஆண்பாற் சொல்லுருபு; expletive ending of a masc. sing. noun. "தந்தையானவன் முனனரெய்தி" (கந்தபு. மார். 8). 2. நண்பன்; friend. உனக்கு ஆனவன் ஆகாதவன் கிடையாதா? (உ.வ.).

ம. ஆனவன்.

*[ஆகியவன் → ஆயினவன் → ஆனவன்.]*

**ஆனவாசி** ānavāsi, வி.எ. (adv.) ஆனதினால்; since, for that reason. அவன் புத்திமானானவாசி உன் சூதைக் கண்டுகொண்டான் (இ.வ.).

*[ஆகிய → ஆயின → ஆன. வாய்ப்பு → வாய்ச்சி → வாசி (கொ.வ.).]*

**ஆனவாள்** ānavāl, பெ. (n.) தக்கார்; manager (of a temple) (S.I.I. iv, 88..).

ம. ஆனவாள்; தெ. ஆனவாளு.

*[ஆ → ஆனம் = பெரியது , பெருமை. ஆனம் + ஆள்.]*

**ஆனன்** ānan, பெ. (n.) ஆனேற்றை ஊர்தியாகக் கொண்ட சிவபெருமான்; Śiva, the rider on the bull. (தேவா. 1029, 2).

*[ஆன் + அன். ஆன் = ஆனேறு, காளை.]*

**ஆனா**[1] ānā, பெ. எ. (adj.) 1. நீங்காத; unceasing. ஆனாத்துயரம்.

*[அகலாத → ஆலாத → ஆனாத → ஆனா.]*

**ஆனா**[2] ānā, பெ. எ. (adj.) 1. அடங்காத; boundless; "நம்பற்பாலானாப் பேரன்புமிக" (பெரியபு. தடுத் தாட். 115). 2. கெடாத; imperishable. "ஆனா அமுதே" (கந்தரனு. 25).

ம. ஆனா.

*[ஆலுதல் = பொருந்துதல், நிற்றல், அடங்குதல், தடுத்தல், கெடுத்தல், ஆல் + ஆ - ஆலா → ஆனா.]*

**ஆனாமை**[1] ānāmai, பெ. (n.) 1. நீங்காமை; not ceasing. "ஆனாமை யாயகில் நிகிலபேதம் அனைத் தினுள்ளும் தானாகி" (தாயு. பன்மாலை.5). 2. கெடாமை; not decaying or perishing, perpetual.

*[அகலாமை → ஆலாமை → ஆனாமை.]*

**ஆனாமை**[2] ānāmai பெ. (n.) கடைக்குளம் (உத்திராடம்); 21st naksatra (W)

**ஆனாய நாயனார்** ānāya nāyanār, பெ. (n.) அறுபத்து மூன்று நாயன்மார்களுள் ஒருவர்; canonised Saiva Saint. (பெரியபு.)

*[ஆன் + ஆயன் - ஆனாயன் + நாயன் + ஆர்.]*

**ஆனாயன்** ānāyan, பெ. (n.) மாடு மேய்க்கும் இடையன்; ஆயன்; man of the cow-herd caste. "ஆனாயனா னானை" (திவ். பெரியதி. 5,6,3).

ம. ஆனாயன்

*[ஆன் + ஆயன்.]*

**ஆனால்** ānāl, இடை. (conj.) 1. முதலில் சொன்ன பொருளுக்கு மாற்றாக வேறொரு பொருள் பின்வரும் என்பதனைக் காட்டும் இடைச்சொல், ஆயின்; but. 2. ஆகையால்; because. "அருளலா தணுவுமசைந்திடாதானால்" (அருட்பா. அருட் பெருஞ். ஆடி 976).

*[ஆகின் → ஆயின் → ஆயினால் → ஆனால்.]*

**ஆனாலும்** ānālum, இடை. (conj.) ஆயினும் (தாயு. சுக வாரி. 5.); however, although, notwithstanding the fact that.

*[ஆகின் → ஆயின் → ஆயினாலும் → ஆனாலும்.]*

**ஆனி**[1] āni, பெ. (n.) கரூர்க்கு அருகிலுள்ள ஆன் பொருநை என்னும் ஆறு. (பிங்.); river near Karur.

*[ஆன்பொருநை → ஆனி (மரூஉ மொழி).]*

**ஆனி**[2] āni, பெ. (n.) 1. தமிழ் ஆண்டுமாதத்தின்படி மூன்றாம் மாதமாகக் கருதப்படும் ஆடவை மாதம்; third month of the Tamil calendar (June-July). 2. மூல நாண்மீன் (திவா.); 19th naksatra.

ம. ஆனி

*[ஆனி = விளைச்சல் ஓராண்டில் முடிந்த ஒரு சுற்றினைக் குறிக்கும் சொல். ஆலுதல் = சுற்றுதல். ஆல் - ஆனி (ஒரு சுற்று) ஆடவை பார்க்க ; See ādavai.]*

**ஆனி**[3] āni, பெ. (n.) தீங்கு, கேடு; harm, injury; destruction, ruin. (செ.அக.). "நின் பிள்ளை மேனிக் கானி வந்திலது" (கம்பரா. இரணிய. 84).

Skt. hāni.

*[அல் - ஆல் - ஆலி - ஆனி]*

**ஆடவைக்கருந்தலை** பார்க்க; see ādavai-k-karun-dalai.

**ஆனிக்காலாவதி** āni-k-kālāvadi, பெ. (n ). ஆடவை (ஆனி) மாதத்தோடு முடிவடையும் கோடைப் பருவ அறுவடைக் காலம்; harvest season which extends to the end of **Ani.**

*[ஆனி + காலம் +அவதி. ]*

**ஆனித்தூக்கம்** āni-t-tūkkam, பெ. (n.) ஆடவை (ஆனி) மாதத்தில் கடலில் காணப்படும் அமைதி (யாழ்ப்.); calm prevailing on the sea in the month of **Ani.**

*[ஆனி + தூக்கம். தூக்கம் = செயற்பாடற்ற அமைதியான தோற்றம்.]*

**ஆனியம்** [1] āṉiyam, பெ. (n.) விடியலிலிருந்து மறுநாள் விடியல் வரை கணக்கிடப்படும் ஒரு நாள் (பிங்.); solar day from sunrise to sunrise. 2. அந்திப் பொழுதிலிருந்து மறுநாள் அந்திப்பொழுது வரை கணக்கிடப்படும் ஒரு நாள்; lunar day (செ.அக.). "பயன் கெழு வெள்ளி ஆனியநிற்ப" (பதிற்றுப்: 69, 14).

ஆலுதல் = சுற்றுதல். ஒ.நோ. ஆலவட்டம்.

*[ஆலு → ஆலி → ஆனி. (ஒரு நாளின் சுற்று).]*

**ஆனியம்** [2] āṉiyam, பெ. (n.) பருவம் (சூடா.); season. (செ.அக.).

*[ஆல் → ஆலு → ஆலி → ஆனி → ஆனியம் – ஓராண்டில் சுழன்று வரும் பருவம்.]*

**ஆனியம்** [3] āṉiyam, பெ. (n.) ஆநியம் பார்க்க; see āniyam.

**ம.** ஆனியம்.

*[ஆனி = நாள். ஆனியம் = நாட்படி]*

**ஆனிரை** āṉirai, பெ. (n.) ஆக்களின் மந்தை; herd of cows. "ஆனிரை மேய்க்கநீ போதி" (திவ். பெரியாழ். 2,7,1.).

*[ஆன்+நிரை=ஆனிரை. நிரை=கூட்டம்,மந்தை.]*

**ஆனிலை** āṉilai, பெ. (n.). 1. ஆக்களைக்கட்டிவைக்கும் அல்லது அடைத்து வைக்கும் கொட்டில்; cow-shed, cow stall. "ஆனிலை .... உமிழ் வோடிரு புலனுஞ் சோரார்" (ஆசாரக்.33). 2. கருவூரிலுள்ள சிவன் கோயிலின் பெயர்; name of the Siva shrine at Karur. (தேவா. 929. 6.).

*[ஆனிலை = ஆக்களின் தொழுவமாக இருந்த இடத்தில் எழுந்த கோயிலும் அப்பெயர் பெற்றிருக் கலாம்.]*

**ஆனிலையுலகம்** āṉilai-y-ulagam, பெ. (n.) **ஆனுலகு** பார்க்க; see **āṉulagu**. "மேல தானிலை யுலகத் தானும்" (புறநா.6).

*[ஆனிலை + உலகம்.]*

**ஆனீர்** āṉīr, பெ. (n.) ஆவின் சிறுநீர், உச்சில் (கோமூத்திரம்); urine of the cow. "ஆனீர் கண்கழூ உக் காணப்பட்டான்." (இரகு.யாக. 98).

*[ஆ + நீர் = ஆநீர் → ஆனீர்.]*

**ஆனும்** [1] āṉum, வி.எ. (adv.) ஆயினும்; also, at least, yet. "ஐந்தை யனைத்தானு மாற்றிய காலத்து." (நாலடி. 329).

*[ஆயினும் – ஆனும்]*

**ஆனும்** [2] āṉum பெ. (n.) இடை. (conj.) ஆவது; either.... or. "எட்டானும் பத்தானும் இல்லாதார்க்கு" (சீவக. 1549).

*[ஆகு → ஆகினும் → ஆயினும் → ஆனும்.]*

**ஆனுலகு** āṉulagu, பெ. (n.) கண்ணன் வாழ்வதாகக் கருதப்படுவதும் கோலோகம் என்று குறிக்கப் படுவதுமாகிய மேலுலகப் பகுதி; part of heaven, called **Gologam** identified with Krishna's Heaven. (செ. அக.).

*[ஆன் + உலகு.]*

**ஆனேறு** āṉēṟu, பெ. (n.) காளை, எருது; bull, male of the cow. "ஆனே றூர்ந்தோன் " (சிலப் .30,141)

*[ஆன் + ஏறு. ஏறு = ஆணினம். ஆனேறு = ஆவினத்துள் ஆணினமாகிய காளை.]*

**ஆனை** [1] āṉai, பெ. (n.) யானை; elephant. "ஆனையாய்க் கீடமாய்" (திருவாச. 8,14).

**ம.** ஆன; **க.,து.** ஆனெ; **தெ.** ஏனுக. **ஏனை** பார்க்க; see ēnai.

*[ஏனை → யானை → ஆனை.]*

**ஆனை** [2] āṉai, பெ. எ. (adj.) பெரியது என்னும் பொருளில் ஆளப்படும் பெயரெச்சம்; noun used as adj. in the sense of big, large, tall, great, etc.

*[யானை – ஆனை.]*

**ஆனைக்கண்** āṉai-k-kaṇ, பெ. (n.) அறப்பழுத்த அல்லது அளிந்து போன பழத்தின் மேல் காணப் படும் முட்டைக் கரும்புள்ளி; round, black-spots ape-aring on fruits when they are over-ripe or spoiled. (W.) –பலாப்பழம், ஆனைக்கண் பட்டது.

*[ஆனை + கண். **யானைக்கண்** பார்க்க.]*

**ஆனைக்கண்ணி** āṉai-k-kaṇṇi, பெ. (n.) அத்திமரத் தினிளந்தளிர்; tender leaves of Atti. (சா.அக)

*[ஆனை + கண்ணி.]*

**ஆனைக்கரடு** āṉai-k-karaḍu, பெ. (n.) யானையறுகு படர்ந்த கரட்டு நிலம். (இ.வ.); hard soil occupied by large Bermuda grass.

*[யானை →ஆனை. யானை அறுகம்புல் சுருக்கமாக ஆனை என வழங்கும். ஆனை + கரடு → **யானைக்கரடு, யானையறுகு** பார்க்க.]*

**ஆனைக்கள்ளி முளையான்** ānai-k-kaḷḷi muḷaiyān, பெ. (n.). இலைகளில்லாத செதும்புப் பூண்டு வகை; leafless fleshy plant.

*[யானை → ஆனை + கள்ளி + முளையான். **ஆனை**² பார்க்க; See **ānai**² கள்ளிபோல் இலைகளற்றது. பூண்டுபோல் முளைத்த அளவில் படர்வது. **யானைக்கள்ளி முளையான்** பார்க்க;]*

**ஆனைக்கற்றலை** ānai-k-kaṟṟalai, பெ. (n.) சாம்பல்நிறக் கடல் மீன் வகை; greyish marine fish. Umbrina macroptera. (செ.அக.)


ஆனைக்கற்றலை – மீன்

*[யானை ஆனை + கற்றலை. **ஆனை**² பார்க்க; see **ānni**²]*

**ஆனைக்கற்றாழை** ānai-k-kaṟṟāḻai, பெ. (n.) அமெரிக்க நாட்டு வகை சார்ந்த நீண்ட கற்றாழை; American aloe (m.sh.) Agave Americana. (செ.அக.).


ஆனைக் கற்றாழை

*[யானை → ஆனை + கற்றாழை. **ஆனை**² பார்க்க. see **ānai**²]*

**ஆனைக்கா** ānai-k-kā, பெ. (n.) திருவரங்கத்தின் அண்மையில் உள்ள சிவன் கோயில்; Šiva shrine on the island of Thiruvarangam (Srirangam). திருவானைக்காவல் (தேவா. 1185.2).

*[யானை → ஆனை + கா. **திருவானைக்கா** பார்க்க; see **Tiruvānaikkā**.]*

**ஆனைக்காசு** ānai-k-kāšu, பெ. (n.) யானை இலச்சினை பொறித்த பழங்காலச் செப்புக்காசு; small ancient copper coin bearing the impression of an elephant. (W.).

*[யானை → ஆனை + காசு. **ஆனை**² பார்க்க. see ānai²]*

**ஆனைக்காயம்** ānai-k-kāyam, பெ. (n.) **ஆனைப் பெருங்காயம்** பார்க்க; see ānai-p-perungāyam (W.).

*[யானை → ஆனை + பெருங்காயம் – ஆனைப் பெருங்காயம் – ஆனைக்காயம்.]*

**ஆனைக்காரன்** ānai-k-kāran, பெ. (n.) யானைப்பாகன்; elephant keeper, mahout.

**ம.** ஆனக்காரன்.

*[யானை → ஆனை + காரன் – ஆனைக்காரன்.]*

**ஆனைக்காரை** ānai-k-kārai, பெ. (n.) ஒதி யமரம்; goom pain (L). **ஒதி** பார்க்க; see Odi.

*[யானை → ஆனை + காரை.]*

**ஆனைக்கால்** ānai–k–kāl, பெ. (n.) 1. யானைக்கால் நோய்; elephantiasis, Cohin leg. 2. வீடுகளின் இறப்பிலும் (இறவாணம்) சுவரிலும் நெட்டு வாக்கில் பதிக்கப்பட்ட மழைநீர் வடிகால் பெருந்தூம்பு; large tube fixed on the walls on roofs for rain water to drain.

**ம.** ஆனக்கால்; **க.** ஆனெகாலு; **தெ.** ஏனுக காலு ;

**து.** ஆனெகார்.

*[யானை → ஆனை + கால். 1. யானையின் கால் போன்று கால்வீங்கும் நோய். 2. **ஆனை**² பார்க்க: see **ānai**² யானைக்கால் பார்க்க; see **yānai—k—kāl**.]*

**ஆனைக்குப்பு** ānai–k–kuppu, பெ. (n.) சதுரங்க விளையாட்டு; chess, as having elephants for rooks. "ஆனைக்குப் பாடுவாரைப் போலே" (ஈடு. 10, 3, 9)

*[யானை → ஆனை + குப்பு. ஒருகா. குப்பி → குப்பு. சதுரங்க விளையாட்டில் யானையைக் குறிக்கும் காய்களின் பெயர் விளையாட்டின் பெயராயிற்று.]*

**ஆனைக்குரு** ānai-k-kuru, பெ. (n.) மரவகை; species of cinnamon

ம. ஆனக்குரு

*[யானை → ஆனை + குரு. ஆனை² பார்க்க; see ānai²]*

**ஆனைக்குருகு** ānai-k-kurugu, பெ. (n.) அன்றில் (நாமதீப.); anril bird.

*[ஆனை + குருகு.]*

**ஆனைக்குருந்தோட்டி** ānai-k-kuruntōtti பெ. (n.) மயிர் மாணிக்க மரம்; twiner with beautiful flowers, country mallow.

*[ஆனை + குரு + தோட்டி.]*

**ஆனைக்குழி** ānai-k-kuli, பெ. (n.) யானையைப் பிடிக்க அது வரும் இடங்களில் தோண்டி வைக்கும் குழி; 'elephant-pit', a pit for entrapping and capturing wild elephants.

ம. ஆனைக்குழி.

*[ஆனை + குழி.]*

**ஆனைக்குன்றிமணி** ānai-k-kunrimani பெ. (n.) மஞ்சாடி; red-wood.



*[யானை → ஆனை + குன்றிமணி = ஆனை² பார்க்க; see ānai²]*

**ஆனைக்கூடம்** ānai-k-kūdam, பெ. (n.) யானை கட்டும் இடம் ; யானைத் தொழுவம் ; elephant stable. 2. யானைத் தொழுவங்களின் மீது இடப்படும் வரி வகை; tax on elephant stable. (SII.ii 115).

ம. ஆனைக்கூடம்.

*[யானை → ஆனை + கூடம்.]*

**ஆனைக்கெளுத்தி** ānai-k-kelutti, பெ. (n.) துதிக்கையால் வளைத்துப் பிடிப்பது போன்று தான் விழுங்க நினைக்கும் இரையைத் தன் உடலால் வளைத்துப் பற்றிக் கொள்வதாகக் கருதப்படும் மீன் வகை (இ.வ.); fish which, it is believed, twins round its prey as an elephant's trunk round a tree, species of macrones. (செ.அக.).

*[யானை → ஆனை + கெளுத்தி.]*

**ஆனைக்கொம்பன்** ānai-k-komban, பெ. (n.) 1. வெள்ளிய நீண்ட நென்மணிக் கதிர்களைக் கொண்டதும் கன்னித் (புரட்டாசி) திங்களில் விதைத்து ஆறு திங்களில் அறுவடை செய்யப் படுவதுமாகிய நெல் வகை; species of paddy sown generally in Purattāci and reaped in six months, and having long, thin, white grains. (G.Tn.D.153). 2. வாழை வகை; a species of plantain.

ம. ஆனைக்கொம்பன்.

*[யானை → ஆனை + கொம்பன். ஆனை² பார்க்க; see anai².]*

**ஆனைக்கொம்பு** ānai-k-kombu, பெ. (n.) யானையின் கொம்பு பார்க்க; elephant tusk.

**ஆனைக்கோடன்சுரை** ānai-k-kōdan curai, பெ. (n.) யானையின் துதிக்கை போன்று நீண்டு காணப் படும் பேய்ச் சுரைக்காய்; bitter snake-gourd. bearing fruit resembling an elephants tusk (l.cl.).

*[யானை → ஆனை + கோடன் + சுரை. கோடன் = வளைந்த துதிக்கை.]*

**ஆனைக்கோரை** ānai-k-kōrai, பெ. (n.) பெருங் கோரைப் புல் வகை; elephant grass.

*[யானை → ஆனை + கோரை. ஆனை² பார்க்க; See ānai².]*

**ஆனைச்சப்பரம்** ānai-c-capparam, பெ. (n.) ஆனை மேல் தவிசு; howdah with canopy.

*[ஆனை + சப்பரம்]*

**ஆனைச்சாத்தன்** ānai-c-cāttan, பெ. (n.) கரிக்குருவி; king crow. "கீசுகீசென் றெங்கும் ஆனைச்சாத்தன் கலந்து" (திவ்.திருப்பா.7).



*[யானை – ஆனை + சாத்தன். சாத்தன் = வணிகன். ஆனை² பார்க்க; see āṉai².]*

*[ஆனைச்சாத்தன் = பெரிய வணிகன். கரிக்குருவி வலம் போனால் பெருஞ்செல்வராகலாம் என்னும் பழங்கால நம்பிக்கையால் கரிக்குருவியை ஆனைச் சாத்தன் என்றனர்.]*

**ஆனைச்சிரங்கு** āṉai–c–ciraṅgu, பெ. (n.) பெரிதாகக் கொப்பளிக்கும் சிரங்கு வகை; vascular eruption.

*[யானை – ஆனை + சிரங்கு. ஆனை² பார்க்க; see āṉai².]*

**ஆனைச்சிலந்தி** āṉai–c–cilandi, பெ. (n.) ஒருவகை நோய்; a kind of scabies.

ம. ஆனைச்சிலந்தி (ஒருவகை அம்மை நோய்)

*[ஆனை + சிலந்தி]*

**ஆனைச்சீரகம்** āṉai–c–cīragam, பெ. (n.) பெருஞ்சீரகம்; anise.

*[யானை – ஆனை + சீரகம். ஆனை² பார்க்க; see āṉai².]*

**ஆனைச்சுண்டை** āṉai–c–cuṇḍai, பெ. (n.) 1. மலைச் சுண்டைக்காய்; Indian currant tomato. 2. ஒரு வகை சுண்டைக்காய் (L); hairy night shade.

ம. ஆனச்சுண்ட

*[யானை → ஆனை + சுண்டை. ஆனை² பார்க்க; see āṉai².]*

**ஆனைச்செவியடி** āṉai–c–ceviyaḍi, பெ. (n.) 1. ஆனைச் செவி போன்ற பெரிய காது; elephant's ear, elephants lobes. 2. ஒரு பூண்டு; plant. (சா.அக.).

*[ஆனை + செவி + அடி.]*

**ஆனைச்சேவகன்** āṉai–c–cēvagaṉ, பெ. (n.) யானை வீரன்; elephant trooper. யானைப் படைத்தலைவன்; commander of an elephant corps. (Insc.)

*[ஆனை + சேவகன்.]*

**ஆனைசேனை** āṉai cēṉai, பெ. (n.) மிகுதி (வின்); great quantity.

*[ஆனை + சேனை.]*

**ஆனைச்சொறி** āṉai–c–coṟi, பெ. (n.) பெருஞ்சொறி, சிரங்கு; virulent type of scabies. **ஆனை**² பார்க்க; see āṉai².

*[ஆனை + சொறி]*

**ஆனைத்தடிச்சல்** āṉai–t–taḍiccal, பெ. (n.) 1. மெல்லிலை படர்கொடி வகை (ட); smooth leaved fish bone climbers. 2. புளி நறவை (மு.அக.); bristly trifoliate vine. 3. புளி அரணைப்பூண்டு; a kind of plant. (சா.அக.).

*[ஆனை + தடிச்சல். ஆனை² பார்க்க; see āṉai².]*

**ஆனைத்தடிப்பு** āṉai–t–taḍippu, பெ. (n.) ஒரு பூண்டு வகை; plant (W.).

*[ஆனை + தடிப்பு. ஆனை² பார்க்க; see āṉai².]*

**ஆனைத்தாள்** āṉai–t–tāḷ, பெ. (n.) மதகு; sluice, "அகவாயிலுள்ளதுக் கெல்லாம் ஆனைத் தாளிறே திருக்கண்கள்" (ஈடு,6,1,7).

*[யானை → ஆனை + தாள். யானைக்கால் போன்றவடிகால் மதகு யானைத்தாள் எனப்பட்டது.]*

**ஆனைத்திசை** āṉai–t–tišai, பெ. (n.) திசை; பெருந் திசையாகக் கருதப்படும் வடதிசை (சங்.அக); north, as the great quarter (astrol.)

*[யானை → ஆனை + திசை. ஆனை² பார்க்க; see āṉai².]*

**ஆனைத்திப்பிலி** āṉai–t–tippili, பெ. (n.) கொடிவகை; elephant–pepper climber.

*[யானை → ஆனை + திப்பிலி. ஆனை² பார்க்க; see āṉai²]*

**ஆனைத்தீ** āṉai–t–tī, பெ. (n.) எவ்வளவு உண்டாலும் அடங்காப் பசியைத் தூண்டும் யானைத்தீ என்னும் நோய்; disease in which no amount of food appeases the hungar which is abnormal. (மணிமே. பதி. 66).

[யானை → ஆனை + தீ. **ஆனை** ² பார்க்க; see **āṉai** 2.]

**ஆனைத் தும்பிக்கை** āṉai–t–tumbikkai, பெ. (n.) 1. யானையின் துதிக்கை; elephant's trunk, proboscis. 2. **ஆனைத்தூம்பு** பார்க்க; see āṉai–t–tūmbu.

*[யானை → ஆனை + தும்பிக்கை. தூம்பு + கை → தூம்பிக்கை → தும்பிக்கை. தூம்பு = துளையுள்ள நீண்ட குழல்.]*

**ஆனைத்தும்பை** āṉai–t–tumbai, பெ. (n.) பெருந் தும்பை; large species of white deadnettle.

*[யானை → ஆனை + தும்பை. ஆனை² பார்க்க; see āṉai²]*

**ஆனைத்தூம்பு** āṉai–t–tūmbu, பெ. (n.) யானையின் தலை வடிவிலமைந்த நீர் விழுங் குழாய்; gargoyle shaped like the head and trunk of an elephant. (செ.அக.).

*[யானை → ஆனை + தூம்பு]*

**ஆனைத்தெல்லு** āṉai-t-tellu, பெ. (n.) படர் கொடி வகை; climber. Entada Scandens.

*[யானை → ஆனை + தெல்லு. ஆனை [2] பார்க்க; See āṉai [2].]*

**ஆனைத்தொழில்** āṉai-t-tolil, பெ. (n.) செயற்கரிய பெருஞ்செயல்; Herculian labour, mighty task. இவன் "பெரிய ஆனைத் தொழிலைச் செய்யா நிற்க" (ஈடு, 7, 4, 3).

*[யானை → ஆனை + தொழில். ஆனை [2] பார்க்க see āṉai [2].]*

**ஆனைத்தோட்டி** āṉai-tōtti, பெ. (n.) யானைத் துறட்டி (அங்குசம்); elephant-goad.

*[யானை → ஆனை + தோட்டி. துறட்டி - தோட்டி.]*

**ஆனைந்து** āṉaindu, பெ. (n.) ஆவிடமிருந்து பெற்ற ஐம்பொருள்கள் (பஞ்சகவ்வியம்); five products of the cow. "ஆனைந்து மாடினான்" (தேவா. 720,4).

*[ஆன் + ஐந்து. அவை பால், தயிர், நெய், ஆனீர், சாணம் என்பன.]*

**ஆனைநார்** āṉai nār, பெ. (n.) மரவகை (L.); elephanty rope tree. Sterculia villosa (l.tr.).

*[யானை → ஆனை + நார். ஆனை [2] பார்க்க; see āṉai [2] பெருநார் வகையைத் தரும் மரமாயிருக்கலாம்.]*

**ஆனை நெருஞ்சி** āṉai neruñji, பெ. (n.) பெருநெருஞ்சில்; small plant, Pedalium murex (S.sh.) (மூ.அக.).

ம. ஆனயிருத்தி.

*[யானை → ஆனை + நெருஞ்சில் → நெருஞ்சி. யானை நெருஞ்சில் பார்க்க; see yāṉai nerunjil.]*

**ஆனைநேர்வாளம்** āṉainērvālam, பெ. (n.) கழிச்சலுக் காகப் பயன்படுத்தும் ஓர் வகை நேர்வாளச் செடி; a kind of Indian croton plant used as a purgative.

*[ஆனை + நேர்வாளம்.]*

**ஆனை நொச்சி** āṉainocci, பெ. (n.) கருநொச்சி; black notchy, willow leaved justicia. (சா.அக.).

*[ஆனை + நொச்சி.]*

**ஆனைப்படுவன்** āṉai-p-paduvaṉ, பெ. (n.) அக்கி நோய் வகை; a kind of scabies. (W).

*[ஆனை + படுவன். ஆனை [2] பார்க்க; see āṉai [2].]*

**ஆனைப்பலா** āṉai-p-palā, பெ. (n.) மலைக் கொஞ்சில்; wild durian (சா.அக.).




*[ஆனை + பலா.]*

**ஆனைப்பனை** āṉaippaṉai, பெ. (n.) கூந்தற்பனை; elephant's palm. (சா.அக.).

*[ஆனை + பனை.]*

**ஆனைப்பார்வை** āṉai-p-pārvai, பெ. (n.) யானை தன் பகைவனைத் தேடும் கீழ் நோக்கிய கூரிய பார்வை; downward glance, as of an elephant when bent on mischief.

*[ஆனை + பார்வை.]*

**ஆனைப்பிச்சான்** āṉai-p-piccāṉ, பெ. (n.) ஒருபூண்டு; plant (W.).

*[ஆனை + பிச்சான்.]*

**ஆனைப்பிடுக்கு** āṉai-p-pidukku, பெ. (n.) ஒரு வகை அண்ட நோய்; a kind of chronic disease. (சா.அக.).

*[ஆனை + பிடுக்கு.]*

**ஆனைப்பிடுக்கு மரம்** āṉai-p-pidukku maram, பெ. (n.) ஒருவகை மரம். இதன்காய் பெரியது; a kind of tree. (சா.அக.).

*[ஆனை + பிடுக்கு + மரம்.]*

**ஆனைப்பிரண்டை** āṉaippirandai, பெ. (n.) ஒருவகைப் பெரும் பிரண்டை; a species of pirandai. (சா.அக.).

*[ஆனை + பிரண்டை.]*

**ஆனைப்புல்** ā̲nai-p-pul பெ. (n.) 1. **ஆனைக்கோரை** பார்க்க; see ā̲nai-k-kōrai. 2. சம்பங் கோரை; a kind of grass.


ஆனைப்புல்

ம. ஆனப்புல்

*[ஆனை + புல்.]*

**ஆனைப்புளி** ā̲nai-p-puḷi பெ. (n.) பப்பரப்புளி; baobah,


ஆனைப்புளி

*[ஆனை + புளி. ஆனை [2] பார்க்க; see ā̲nai [2].]*

**ஆனைப்புளியாரை** ā̲nai-p-puḷiyārai, பெ. (n.) பெரும் புளியாரை; sorrel plant.

*[ஆனை + புளியாரை.]*

**ஆனைப்பெருங்காயம்** ā̲nai-p-perungāyam, பெ. (n.) யானைகளுக்கான பெருங்காயக் கலவை மருந்து; medicinal preparation of asafoetida for elephants. (செ.அக.).

*[ஆனை + பெருங்காயம்.]*

**ஆனைப்பேன்** ā̲nai-p-pē̲n, பெ. (n.) கத்தரிச் செடியிலுண்டாகும் பூச்சிவகை; plant louse, found on the brinjal plant. (W.).

*[ஆனை + பேன். ஆனை [2] பார்க்க; see ā̲nai [2].]*

**ஆனைமஞ்சள்** ā̲nai manjal, பெ. (n.) ஒரு பூண்டு வகை; plant (W.).

*[ஆனை + மஞ்சள். ஆனை [2] பார்க்க; see ā̲nai [2].]*

**ஆனைமடு** ā̲naimaḍu, பெ. (n.) ஆழமான நீர் நிலை; 2. ஊர்ப்பெயர்; place name.

*[ஆனை + மடு.]*

**ஆனைமடை** ā̲naimaḍai, பெ. (n.) செய்நஞ்சு (கௌரி பாடாணம்); a kind of arsenic.

*[ஆனை + மடை.]*

**ஆனைமயிர்க்காப்பு** ā̲naimayir-k-kāppu, பெ. (n.) யானையின் வால் மயிரால் செய்தணியும் காப்பு; bracelets made of the hair of an elephant's tail. (W.)

*[ஆனை + மயிர்+ காப்பு.]*

**ஆனைமல்லி** ā̲naimalli, பெ. (n.) **ஆனைமல்லிகை** பார்க்க; see ā̲naimalligai.

*[ஆனை + மல்லி.]*

**ஆனைமல்லிகை** ā̲naimalligai, பெ. (n.) பெருமல்லிகை; a big veriety of Jasmine. (சா.அக.).

*[ஆனை + மல்லிகை.]*

**ஆனைமலை** ā̲nai malai, பெ. (n.) 1. மதுரைக்கு வடக்கில் யானை போன்று தோற்றமளிக்கும் ஒரு வறண்ட நீள்குன்று; a long, bare, elephant shapped rock near Madurai. (தேவா. 858.1). 2. கோவை மாவட்டத்தின் தென்புறத்திலுள்ள தொடர் குன்றுகள்; Anai malais, a range of mountains in Coimbatore district.

ம. ஆனமல

*[ஆனை + மலை.]*

**ஆனைமீக்குவம்** ā̲nai mikkuvam, பெ. (n.) கருமருது வகை; leathery winged myrobalan.

*[யானை → ஆனை + மீக்குவம்.]*

**ஆனைமீன்** ā̲nai mī̲n, பெ. (n.) பெருமீன் வகை (சூடா.); huge fish.

*[ஆனை + மீன். ஆனை [2] பார்க்க; see ā̲nai [2].]*

**ஆனைமுகன்** ā̲nai mugan, பெ. (n.) 1. பிள்ளையார், Ganesa as the elephant – faced god. "யானை முகன் ஆதியரை யர்ச்சிக்க" (சைவச. பொது. 500). 2. யானைமுக அரக்கன்; Gaja – mukha Asura.

ம. ஆனமுகன்

*[யானை → ஆனை + முகன்]*

**ஆனைமுள்** ānaimul, பெ. (n.) ஒருமுட்செடி; plant, Acacia latronum.

ம. ஆனமுள்ளு. (பெரிய முள்ளுள்ள ஒரு காட்டுக் கொடி)

**ஆனையச்சு** ānai-y-accu, பெ. (n.) யானை இலச்சினை பொறித்த பொற்காசு; gold coin bearing the figure of an elephant (I.M.P. Tp. 117).

ம. ஆனயச்சு

*[ஆனை + அச்சு. அச்சு = அச்சடிக்கப் பட்ட காசு.]*

**ஆனையடி** ānai-y-adi, பெ. (n.) நெடுகவும் கிடையாகவும் சதுரங்க ஆட்டத்தில் யானைக்காய் செல்லும் நிலை; vertical and horizontal movements, the movements of the elephant or rook in the game of chess.

ம. ஆனச்சுவடி, ஆனையடி.

*[ஆனை + அடி. அடி = பாதம், கால்.]*

**ஆனையடிக்கிழங்கு** ānaiyadi-k-kilangu, பெ. (n.) கருணைக்கிழங்கு; elephant foot yam.

*[ஆனை + அடி + கிழங்கு]*

**ஆனையடிச்சிலந்தி** ānaiyadi-c-cilandi, பெ. (n.) பெருஞ்சிலந்தி; malignant growth of a cancer of black or deeply pigmanted colour.

*[ஆனை + அடி + சிலந்தி]*

**ஆனையடிச் செங்கல்** ānaiyadi-c-cengal, பெ. (n.) வட்டமான செங்கல்; a kind of circular bricks used for pillar; தூண் கட்ட ஆனையடிச் செங்கல் வேண்டும். (உ.வ.).

*[ஆனை + அடி + செங்கல்]*

**ஆனையடிப்பச்சிலை** ānaiyadi-p-paccilai, பெ. (n.) ஆனையடிப்பூண்டு பார்க்க; see ānaiyadi-p-pūndu,

**ஆனையடியப்பளம்** ānai-y-adi-y-appalam, பெ. (n.) விருந்துகளில் இடப்படும் பெரிய அப்பளம் (இ.வ.); large meal wafer of the size of an elephant's foot (Loc.).

*[ஆனை + அடி + அப்பளம்.]*

**ஆனையர்க்குளா** ānai-y-arkkula, பெ. (n.) கடல் மீன் வகை; marine fish (Loc.).

*[ஆனை + அறக்குளா – அர்க்குளா. அறக்குளா, மீன்களுள் சற்றுப் பெரிய வகை மீனாய் இருக்கலாம். யானை அறக்குளா பார்க்க; see yāni arakkula]*

**ஆனையரசாணை** ānai arašānai, பெ. (n.) மண மேடையில் அரசாணைப் பானைகளுக்கருகில் வைக்கப்படும் யானை குதிரை யாளி போன்ற களிமண் பொம்மைகள் (இ.வு.); clay images of elephant, horse, yali etc., to decorate marriage platform. (Loc.).

*[ஆனை + அரசாணை.]*

**ஆனையறுகு** ānai-y-arugu, பெ. (n.) அறுகம்புல்லின் வகை; a species of grass.

*[ஆனை + அறுகு. ஆனை² பார்க்க; see ānai²]*

**ஆனையறையும்புள்** ānai-y-araiyum pul, பெ. (n.) யானையைக் கொன்று தின்பதாகக் கருதப்படும் ஒரு பெரும் பறவை; fabulous bird, said to be able to devour an elephant. (W.).

மறுவ. ஆனையிறாஞ்சிப்புள்.

*[ஆனை + அறையும் + புள்.]*

**ஆனையாடு-தல்** ānai-y-ādu-, 5. செ.கு.வி. (v.i.) குழந்தைகள் உடம்பை முன்னும் பின்னுமாக அல்லது பக்கவாட்டில் அசைத்தாடும் விளையாட்டு; to move the body from front to back, from side to side like the elephant, a movement game for the babies.

*[ஆனை + ஆடுதல். யானை பக்கவாட்டில் அசைவது போன்ற குழந்தை விளையாட்டு.]*

**ஆனையாள்** ānai-y-āl, பெ. (n.) யானை வீரன்; elephant trooper (S.I.I. ii, 221).

*[ஆனை + ஆள் யானையாள் பார்க்க; see yānaiyāl.]*

**ஆனையிறாஞ்சிப்புள்** ānai-yirānji-p-pul, பெ. (n.) ஆனையறையும் புள் பார்க்க; see ānai-y-araiyum pul.

**ஆனையுன் குருகு** ānai-y-un kurugu, பெ. (n.) ஆனையறையும் புள் பார்க்க; see ānai-y-rayum pul. (W.).

**ஆனையுரித்தோன்** ānai-y-urittōn, பெ. (n.) யானைத் தோலுடுத்த சிவன் (தொன்ம.); Šiva, who slayed an elephant and wore its skin (திவா.).

*[யானை → ஆனை + உரித்தோன்.]*

**ஆனையேற்றம்** ānnai-y-ērrm, பெ. (n.) யானையேற்றம் பார்க்க; see yānai-y-ērram.

*[யானை – ஆனை + ஏற்றம்]*

**ஆனைவணக்கி** ānaivanakki, பெ. (n.) ஆனைவணங்கி பார்க்க; see ānaivanangi (சா.அக.).

*[ஆனை + வணக்கி.]*

**ஆனை வணங்கி** āṉai vaṇaṅgi, பெ. (n.) 1. தேட் கொடுக்கி (மூ.அக.); Indian turnsole.

ம. ஆனவணங்கி.

*[ஆனை + வணங்கி.]*

சாம்பசிவம் பிள்ளை இதனை ஆனைவணக்கி எனக் குறிப்பிடுவார்.

**ஆனை வாயன் கற்றலை** āṉai vāyaṉ kaṟṟālai, பெ. (n.) 1. சாம்பல் நிறக் கற்றலை மீன்; a greish marine fish. 2. வெண்ணிறப் பொருவாக் கற்றலை மீன்; a silvery marine fish.

*[ஆனை + வாயன் + கற்றலை.]*

ஒருகா: வாய் பெரிதாக இருத்தலின் பெற்ற பெயராகலாம்.

**ஆனைவாலிகை** āṉaivāligai, பெ. (n.) தாமரை இலை; lotus leaf.

*[ஆனை + வாலிகை]*

**ஆனை வாழை** āṉai vāḻai, பெ. (n.) 1. நீண்ட குலை தள்ளும் நான்கடி உயரக் குட்டை வாழை வகை; stunted plantain not more than four feet hight, and having its bunch of fruits hanging down like an elephant's trunk. 2. ஏரிகளின் முதன் மடையில் விளைவிக்கும் நெல்வகை; a species of paddy cultivated in the bed of a tank.

*[ஆனை + வாழை. **ஆனை** ² பார்க்க; see **āṉai** ².]*

**ஆனைவீரர்** āṉaivīrar, பெ. (n.) அரசனுக்குரிய எண்வகைத் துணைவருள் ஒருவர்; one among eight counsellors of a king.

*[ஆனை + வீரர்.]*

**ஆனை வேக்கட்டான்** āṉai vēkkaṭṭāṉ, பெ. (n.) ஒரு நெல் வகை; a kind of paddy.

*[ஆனை + வேக்கட்டான்.]*

**ஆனை வேணி** āṉaivēṇi, பெ. (n.) பொற்கொன்றை அல்லது சரக்கொன்றை மரம்; connay. (சா.அக.).

*[ஆனை + வேணி.]*

**ஆனோன்** āṉōṉ, பெ. (n.) ஆனவன்; one who became, one who happended to be. "பெற்றிடுங் குரவரா னோர்" (கந்தபு. மேருப். 45).

*[ஆனவன் → ஆனோன்.]*



இ[1] *i*, பெ. (n.) ***பன்னிரு உயிரெழுத்துகளுள் மூன்றாம் உயிரெழுத்து;*** third letter and vowel of the Tamil alphabet, the close high front unrounded short vowel in Tamil. இற்றை மொழியியலார் இதைப் பிறப்பிடம் நோக்கி முன் அண்ணக் குவியா உயிர்க்குறில் என்பர்.

ம., க., தெ., து., இ.

இ[2] *i*, இடை. (part.) ***அண்மைச்சுட்டு;*** proximate demonstrative.

*i)* ***அகச்சுட்டு;*** demonstrative base forming an integral part of a word denoting or pointing out a proximate person, place, or thing.

(எ-டு) இவன், இங்கு, இது, இந்த.

*ii)* ***புறச்சுட்டு;*** demonstrative prefix.

"இப்பால் உருட்டுவோன் எனவே" (சிலப்.1:6-68).

(1) ***கண்டறிசுட்டு;*** demonstrative prefix to a noun, expressing proximity of a person, place or thing actually pointed out by the hand.

(எ-டு) இப்பையன், இப்பக்கம், இம்மரம்.

(2) ***பண்டறிசுட்டு;*** demonstrative prefix to a noun, its antecedent.

(எ-டு) நீர்மேற் குமிழி கண்டீரே! இத்தகைத்தே இவ்வுடம்பு.
ம., க., தெ., து., கோத., துட., குட., கொலா., நா., பர்., கூ., குரு., மால். இ; பிரா. தா.

(3) ***உலகறி சுட்டு;*** demonstrative prefix expressing world-wide eminence.

" இப்படியன் இந்நிறத்தன் இவ்வண் ணத்தன் இவனிறைவன் என்றெழுதிக் காட்டொ ணாதே" (அப்பர். 6-97-10).

(4) ***உய்த்துணர் சுட்டு;*** demonstrative prefix expressing the power to recollect.

(எ-டு) "அ அவனும் இ இவனும் கூடியக்கால்".

இ[3] *i*, இடை. (part.) ***பல்வகையீறுகள்;*** multifarious formations and suffixes.

*i)* ***பெயரீறுகள்;*** noun endings.

(1) ***பெண்பாலீறு;*** feminine suff.

(எ-டு) மறத்தி, குயத்தி, தமிழத்தி, தோழி.
ம., க., தெ., து. இ.

(2) ***பண்புப்பெயரீறு;*** abstract noun suff.

(எ-டு) நன்றி, பெற்றி.

(3) ***தொழிற்பெயரீறு;*** verbal noun suff.

(எ-டு) வெற்றி, தோல்வி.

(4) ***எதிர்மறைக் குறிப்பு வினையாலணையும் பெயரீறு;*** neg. implicit verb based noun suff.

(எ-டு) நாணிலி, கண்ணிலி, தாயிலி, தந்தையிலி. "தாயுமிலி தந்தையிலி தான்தனியன் காணேடி" (திருவா. திருச்சா. 3).

*ii)* ***வினையீறுகள்;*** verb endings.

(1) ***ஏவல் ஒருமை வினைமுற்றீறு;*** imperative sing. verb ending.

(எ-டு) மலி, பொலி, அறி, குவி.

(2) ***வியங்கோள் வினையீறு;*** optative verb ending.

(எ-டு) நில்லி, செல்லி, உண்ணி.

(3) ***இறந்தகால வினையெச்ச ஈறு;*** past adverb. ending.

(எ-டு) ஆடி, ஓடி, எழுதி, எண்ணி.

(4) ***எதிர்மறைக் குறிப்பு வினையெச்ச ஈறு;*** neg. appellative verb ending.

(எ-டு) அன்றி, இன்றி.

இ[4] *i*, இடை. (part.) ***சாரியை;*** enunciative and connective particle.

*i)* ***மெய்யெழுத்து ஒலித்துணைச் சாரியை;*** enunciative particle employed in Tamil grammar to designate certain consonants.

(எ-டு) க்-இக்; ச்-இச்; இக்கன்னா, இச்சன்னா எனலுமாம்.

ஆங்கிலம் கிரேக்கம் இலத்தீனம் செருமானியம் உருசியம் போன்ற ஆரிய மொழிகளில் B, C, D, G, P, T ஆகிய மெய்யெழுத்துகளுக்கு இகரம் ஒலித்துணைச் சாரியையாகி ப், ச், ட், ச், ப், ட் என்னும் மெய்யெழுத்துகளைப் பலுகக உதவுதல் காண்க. ஏனை ஆங்கில மெய்யெழுத்துகளுக்கு இகரம் எகர மாகி மெய்ம்முன் ஒலித்துணையாகும். (ஒ.நோ. L, M) மெய்யெழுத்தை எம்மொழியினரும் உயிரெழுத்தின் துணையின்றிப் பலுக்கவியலாது என்னும் மூலத்தாய் மொழியியல்பு பற்றி இஃது இவண் குறிக்கப்பட்டது. மூலத்தாய் மொழியியல் புகளை ஞாலச்சேய் மொழிகள் காத்துவந்துள எனற்கு இஃதொரு சான்றாம்.

*ii)* ***புணர்ச்சிச் சாரியை;*** connective particle.

***ஏவலொருமை வினையையும் செயவென்னும் வாய்பாட்டு வினையெச்ச ஈற்றையும் இன்னோசை பட இணைக்கும் புணர்ச்சிச் சாரியை;*** euphonic augment used in combination of verbal root and participle ending

காணிய வருவோள் - காண்+இ + (ய்)+அ = காணிய.

தானாக் ஒலியாத மெய்யெழுத்தைச் சார்ந்து தன்னோடியைத் தொலிப்பது மெய்யெழுத்துச் சாரியை.

காண வருவோள் என இகரச் சாரியை யின்றிப் புணர்வதே இயல்பாயினும் இன்னோசையும் சந்த இயைபும் பற்றிக் காணிய வருவோள் எனப் புணர்ந்தது.

இ[5] *i*, இடை. (part.) ***குறிப்பொலி.***

(1) ***சிரிப்புணர்ச்சியைக் குறிக்கும் குறிப்பொலி;*** expression of joy. தாழ்வுணர்ச்சியையும் குறிக்கும்; may also indicate inferiority.

(எ-டு) இ என்று இளிக்காதே (உ.வ.).

(2) ***இசைவைக் குறிக்கும் குறிப்பொலி;*** expression of approval.

(எ-டு) இ என்று கேள் (கொங்.வ.). சிரித்த முகத்துடன் மகிழ்ந்து கேள் என்னும் இசைவுக் கருத்தினது.

இ[6] *i*, இடை. (part.) (1) ***வியப்பிடைச்சொல்;*** expression of exclamation.

(எ-டு) 'இ' இதென்ன (இ.வ.).

(2) ***வெறுப்பிடைச் சொல்;*** an expression of contempt.

(எ-டு) 'இ' தொடாதே (இ.வ.).

இ[7] *i*, இடை. (part.) ***பொருளின்றி இருவகை வழக்கிலும் இசை நிரப்ப வரும் ஓர் அசைச்சொல்;*** expletive used in dialectical and literary usage as enunciative particle.

(எ-டு) ஈதொன்று கேளி.

*[கேள்+இ = கேளி.]*

கேள் என்னும் ஏவலொருமைப் பொருள் வெளிப்படை. வியங்கோள் ஈறு போன்ற தோற்றம் தரினும் இகரம் ஒலித் துணையான அசைச்சொல்லே. வெறுப்பும் கண்டிப்பும் குரலில் வெளிப்படின் அசைச்சொல்லாம். கனிவும் மதிப்புரவும் வெளிப்படின் வியங்கோள் ஈறாம்.

இ[8] *i*, இடை. (part.) ***காரணப் பெயரீறு;*** causative verbal noun suff.

(எ-டு) வெட்டி, கொல்லி.

இ[9] *i*, இடை. (part.) ***அடிவினைத் திரிபீறு;*** verb base alternate ending.

(எ-டு) ஒன்றித்தல், இல்லித்தல்.

இ[10] *i*, இடை. (part.) ***மொழியிடைக் குற்றியலிகரம்;*** shortened 'i' in word combination.

(எ-டு) நாகியாது, "எனப்படுவ தியாதெனின்" (குறள்.291).

*[நாகு + யாது, எனப்படுவது + யாதெனின்.]*

இ[11] *i*, இடை. (part.) 1. ***வடமொழிச்சொல் தமிழில் வழங்கும்போது வரும் மெய்ம் மயக்க ஒலித்துணை;*** enunciative particle used for Sanskrit loan words in Tamil to avoid unusual geminations.

(எ-டு) வச்சிரம் < Skt. vajra.
வாக்கியம் < Skt. vākya.

2. ***மொழிமுதலாகாத ர, ல முதலிய எழுத்துகளில் படும் ஒலித்துணை;*** an enunciative particle used before loan words with the non-initial letters such as r, and l.

(எ-டு) ராமன் → இராமன்
லங்கா → இலங்கை.

இ[12] *i*, இடை. (part.) ***குறிலில் இறும் வண்ணப் பாட்டுச் சீர்களின் வண்ணக் குறிப்பு வாய்பாட்டீறு;*** ending of rhythmic formulas of metrical feet ending in short vowel.

(எ-டு) நன்னி நன்னி நனன நன்னி.
திந்தி திந்தி தினன திந்தி.
தங்கட்டி தங்கட்டி தங்கட்டி தங்கட்டி.

இ[13] *i*, இடை. (part.) ***சொல்லாக்க ஈறு;*** formative particle.

(எ-டு) அர் → அரி.

இ[14] *i*, பெ. (n.) 1. *பறவை ஐந்தனுள் ஆந்தையைக் குறிக்கும் எழுத்து* (பிங்.); letter representing owl in five birds (pañca patci) (Astrol.). 2. ***நூறு என்னும் எண்ணின்குறி;*** a symbol of the number hundred 3. ***காமனின் பெயர்களுள் ஒன்று;*** a name of the god of love.

*[நூறு நிறைவைக் குறித்து அழகைக் குறித்தபோது காமனையும், வருவது கூவியுரைக்கும் அழகிய ஒட்பத்தால் ஆந்தையையும் குறித்திருக்கலாம். மயில், கிளி, கழுகு, ஆந்தை, காகம் என்பன ஐம்புட்கள்.]*

இ[15] *i*, இடை. (part.) 1. ***மொழியிடை உகரத்தின் திரிபான இகரம்;*** derivative form of a 'u' ending word.

(எ-டு) புல் → பில்.

2. ***ஈகார ஐகார அளபெடைகளின் அடையாளக் குறி;*** a sign to designate extra long vowels ī and ai.

(எ-டு) ஈ இதொன்று, ஐஇ வண்ணம்.

3. ***பிறவினை இறந்தகால இடைநிலை எழுத்துப் பேறு;*** an augment in causative past verb time marker.

(எ-டு) உண்பித்தான், காண்பித்தான், கொடுப்பித்தான்.

4. ***ஒன்றன்பால் உரிமையீறு;*** neut. sing. possessive ending.

(எ-டு) கள்ளி, சுள்ளி.

5. ***செயப்படுபொருள் தொழிற்பெயரீறு;*** verbal noun ending.

(எ-டு) கூலி.

இ[16] *i*, இடை. (part.) ***அரையென்னும் எண்ணின் குறி;*** symbol for the fraction 1/2, which symbol is now usually written as ரு in Tamil arithmetics.

*[ஒருகா. குற்றியலிகரம். அரை மாத்திரை பெறும் ஒப்புமை நோக்கி 'இ' உயிர்க்குறில் வரிவடிவம் அரை என்னும் எண்ணின் குறியாக ஆளப்பட்டிருக்கலாம்.]*

இக்காலத்தில் இது ரு எனத் தமிழ்க் கணக்கு நூலில் ஆளப்படுகிறது.

**இஃகலாட்டம்** *ikkalāttam*, பெ. (n.) 1. ***இழுபறிப்போர்;*** **tug of war.** 2. ***பகைமை;*** **enmity.**

க. எசலாட்ட; தெ. இக்கலாட்டமு.

*[இல் + கு = இஃகு → இஃகல் + ஆட்டம்.]*

**இஃகு**[1]**-தல்** *ikku-*, 21 செ.கு.வி. (v.i.) ***இழுத்தல்;*** pull, draw.

க., து. இக்கு.

*[இல் + கு = இஃகு.]*

**இஃகு**[2] *ikku*, பெ. (n.) ***எஃகு;*** steel.

*[இல் + கு = இஃகு (அழுந்தப்பற்றுதல், இறுகுதல்) நன்கு இறுகிய மாழை.]*

**இஃது** *ikdu* சு.பெ. (pron.) ***இது, உயிர் முதல் சொற்களின் முன்னும் செய்யுளில் யகரமுதற் சொற்களின் முன்னும் வழங்கும் சுட்டுச் சொல்;*** this, used before words with vowel initials and occasionally before words with 'y' initials in poetry. இஃதாவது, இஃதாம்பல், இஃதியாதென்றான் (தொல். எழுத். 423 உரை).

*[இல் + து = இஃது. லகர மெய்யீற்றுத்திரிபு ஆய்தம்.]*

இ + து = இஃது எனப் புணர்க்கப்படாமை காண்க. அ இ உ என்னும் சுட்டெழுத்துகளின் முந்து வடிவம் ஆ ஈ ஊ என நெடுஞ்சுட்டுகளாயினும், சுட்டுச்சொல் வடிவம் அல், இல், உல் என்பனவே. அவற்றைத் திரவிடமொழிகளுள் கன்னடம் மட்டும் தக்க வைத்துக்கொண்டிருக்கிறது. தமிழிலும் மெல் → மெது, பல் → பது என்றாற்போல், இல் → இது எனத் திரியுமாயினும் அசையழுத்தத்தால் லகரமெய் ஆய்தமாயிற்று.

**இஃதொத்தன்** *ikdottan*, பெ. (n.) ***இவனொருத்தன்;*** this man, "ஏஎ இஃதொத்தன் நாணிலன்" (கலித்.62).

*[இஃது + ஒருத்தன். ஒருத்தன் → ஒத்தன் (இடைக்குறை).]*

**இஃதொத்தி** *ikdotti*, பெ. (n.) இவளொருத்தி; this woman: "அஞ்சா அழாஅ அரற்றா இஃதொத்தி என் செய்தாள் கொல்லென்பீர்" (கலித்.143).

*[இஃது + ஒருத்தி. ஒருத்தி → ஒத்தி (இடைக்குறை).]*

**இக்கட்டு**[1] *ikkattu*, பெ. (n.) 1. ***இடுக்கண்;*** trouble, difficulty. இக் கட்டாம் வருவதெல்லாம் (தண்டலை.88); 2. ***நெருக்கடி;*** strained circumstances. 3. ***இட நெருக்கம்;*** narrowness. 4. ***தடை;*** hindrance, obstacle. 5. ***ஏழ்மை;*** poverty. 6. ***துன்பம்;*** affliction.

ம., க., தெ., து. இக்கட்டு.

*[இடுக்கண் - இடுக்கட்டு - இக்கட்டு.]*

**இக்கட்டு**[2] *ikkattu*, பெ. (n.) ***உருண்டை, வெல்லக் கட்டி;*** jaggery; the coarse juice of sugar cane boiled and then allowed to cool. When it is hardened it is made into balls with the hand.

*[இக்கு = கரும்பு. இக்கு + கட்டி = இக்குக்கட்டி → இக்கட்டி → இக்கட்டு.]*

**இக்கணம்** *i-k-kaṇam*, பெ. (n.) ***இப்போது, இந்த நிமயம்.*** (பாரத. மணிமான்.74); this moment, now.

ம. இக்கணம் த. கணம் > Skt. kṣana.

*[இ + கணம். இ = அண்மைச்சுட்டு, கணம் = கணிக்கப்படும் பொழுது.]*

**இக்கரி** *ikkari* பெ. (n.) ***புகைக்கரி, ஒட்டடை;*** soot, grime (சேரநா.).

ம. இக்கரி.

*[இல்கரி - இக்கரி.]*

**இல்கரி** பார்க்க; see ilkari.

**இக்கரை**[1] *ikkarai*, பெ. (n.) ***கடல் அல்லது ஆற்றின் ஒரு கரை;*** this side of the shore or bank (of a river, lagoon, etc.) "இக்கரையேறி" (திவ்.பெரியாழ். 5,3,7).

"அக்கரை மாட்டுக்கு இக்கரை பச்சை" (பழ.).

ம. இக்கர; க. இக்கரெ.

*[இ + கரை.]*

**இக்கரை**[2] *ikkarai*, பெ. (n.) ***இந்துப்பு.*** (ஆ.அக.); rock-salt, sodium chloride.

*[இளக்கு → இளக்கரை → இக்கரை. இளக்க இயல்பு அல்லது கரையும் இயல்புநோக்கி இளக்கரை என்னும் முந்துவடிவம் இக்கரை எனத் திரிந்திருக்கலாம்.]*

**இக்கவம்** *ikkavam*, பெ. (n.) ***கரும்பு பார்க்க*** (மூ.அ.); see karumbu.

*[இக்கு → இக்கவம்.]*

**இக்கன்** *ikkan*, பெ. (n.) ***காமன்*** (மன்மதன்); cupid. (ஆ.அக.).

*[இக்கு = கரும்பு, இக்கன் = கரும்பு விற்கொண்ட காமன். இக்கு → இக்கன்.]*

**இக்கா** *ikkā*, பெ. (n.) 1. ***கொட்டாவி;*** yawn. 2. ***விக்கல்;*** hiccup.

*[எக்கு → இக்கு → இக்கா. இக்குதல் = விக்குதல் எனவும் திரியும்.]*

**இக்காசில்லம்** *ikkāšillam*, பெ. (n.) ***ஒருவகைக் கோழை நோய்;*** a kind of disease.

*[இக்கா + சில்லம்.]*

**இக்காபித்தம்** *ikkāpittam*, பெ. (n.) ***பித்தநோய் வகையுளொன்று;*** a kind of disease. (ஆ.அக.).

*[எக்கு → இக்கு → இக்கா + பித்தம்.]*

**இக்காலம்** *ikkālam*, பெ. (n.) 1. ***இந்தக் காலம்;*** the present time. 2. ***இப்பொழுது, இப்பொழுதைய நேரத்தில்;*** at this time, in this period.

ம. இக்காலம்.

*[இ + காலம் = இக்காலம்.]*

**இக்கிடைஞ்சல்** *ikkiḍaiñjal,* பெ. (n.) 1. ***இடையூறு;*** obstacle, trouble. 2. ***இடுக்கண்;*** affliction.

*[இடுக்கு → இக்கு + இடைஞ்சல்.]*

**இக்கியந்திரம்** *ikkiyandiram* பெ. (n.) ***கரும்பாட்டும் ஆலை*** (ஆ.அக.); crushing mill for sugar cane.

*[இக்கு + இயந்திரம்.]*

**இக்கிரி** *ikkiri,* பெ. (n.) ***முட்செடி வகை*** (வின்.); a thorny shrub.

*[ஒருகா. இணுக்கு → இக்கு + இலி = இக்கிலி → இக்கிரி. இணுக்கு அல்லது பற்றி ஒடிக்க இயலாத அளவுக்கு முள் ளடர்ந்த செடி.]*

**இக்கு**[1] *ikku,* இடை. (part.) ***தவறாகக்கொள்ளப்பட்ட ஒரு சாரியை.*** (தொல்.எழுத்.126); false euphonic augment, affixed usu. to names of months to denote the loc., as in ஆடிக்குக் கொண்டான் hence a misnomer.

*['அக்கு' சாரியை பார்க்க. அதன் விளக்கமே இதற்கும் ஒக்கும். இகரவீற்றுச் சொற்களுடன் குகர உருபு சேர்தலான் இடையில் பெற்ற ககர எழுத்துப்பேற்றுடன் இது ஒரு தனிச்சாரியை போல் பொய்த் தோற்றம் அளிக்கிறது.]*

**இக்கு**[2] *ikku,* பெ. (n.) 1. ***இடை;*** waist, middle. இக்கு முடிச்சு. (பே.வ.). 2. ***சீலையை இறுக்கிக் கட்டும் முடிச்சு;*** tucking in of a woman's cloth "இக்கு வைக்கு மாடை வீழ". (திருப்பு.375). 3. ***ஏதம்*** (சம்.அக.); danger, trouble. 4. ***தடை;*** obstruction. (ஆ.அக.).

ம., க., தெ. இக்கு.

*[இடுக்கு - இக்கு.]*

**இக்கு**[3] *ikku,* பெ. (n.) ***முள்;*** thorn.

*[இல் - (குத்துதல்) +கு - இக்கு.]*

**இக்கு**[4] *ikku,* பெ. (n.) 1. ***கரும்பு;*** sugar-cane. "இக்கொடு தென்னங்காயும்" (கந்தபு.காவிரி.25). 2. ***மூங்கில்;*** bamboo. 3. ***கள்.*** (திவா.); fermented liquor, toddy. 4. ***கூட்டில் வைத்த தேன்.*** (மாறன். 111, உதா.212); honey in the hive. 5. ***வெண்கரும்பு;*** white sugar cane.

இந். ஈக்(கரும்பு).

*[இள் → இளக்கு → இக்கு. எளிதில் ஒடிக்கும் வகையில் இளக்க மானது, நீராளமானது.]*

**இக்குக்கொட்டு-தல்** *ikku-k-koṭṭu-,* 15 செ.கு.வி. (v.i.) ***ஒலிக்குறிப்பினா லொன்றை அறிவித்தல்.*** (தெ.ஆ.வ.); beckon or draw attention by a cluck.

*[இக், இக் என்பன ஒலிக்குறிப்பு இடைச்சொற்கள். இக்கு + கொட்டுதல் = இக்குக்கொட்டுதல். கொட்டுதல் = ஒலித்தல். ஒ.நோ. லொச்சுக்கொட்டுதல்.]*

**இக்குகந்தை** *ikku-kandai,* பெ. (n.) 1. ***நீர்முள்ளி;*** water thorn. 2. ***நெருஞ்சி;*** cowthorn. 3. ***நாணல்;*** wild sugar-cane. 4. ***வெள்ளிறில்;*** velliril. (சா.அக.).

*[இள் → இளக்கு → இக்கு + கந்தை; கரந்தை - கந்தை. கரந்தை - தூவிபோல் பரந்த வேர்முளைகளைக் கொண்ட பூண்டு வகை.]*

**இக்குமுடிச்சு** *ikku-muḍiccu,* பெ. (n.) ***சீலையை இறுக்கிக் கட்டும் முடிச்சு.*** (இ.வ.); knot used for securely tucking in a cloth at the waist, especially in garments worn by women.

*[இடுக்கு + முடிச்சு = இடுக்குமுடிச்சு → இக்குமுடிச்சு; இடுக்குதல் = செறிவாகச் செருகுதல்.]*

**இக்குவாகு**[1] *ikkuvāgu* பெ. (n.) ***அயோத்தியை ஆண்ட ஞாயிற்றுக்குல முதலரசன்.*** (கலிங்.இராச. 11); first king of the solar dynasty who ruled in Ayōdhyā.

இக்குவாகு > Skt. ikṣvāku.

*[இறுக்கு + வாகு = இக்குவாகு. இறுக்கு = வலிமை. வாகு = தோள். பக்கத்திலுள்ளது பாக்கம் எனப்பட்டது போல வாக்கில் (மருங்கில்) அமைந்த தோள் வாகு எனப்பட்டது. இது வடமொழியில் பாகு எனத் திரிந்தது.]*

**இக்குவாகு**[2] *ikkuvāgu* பெ. (n.) 1. ***குருந்துருக்கம் பிசின்.*** (நாநார்த்த); konkany resin. 2. ***பேய்ச்சுரை;*** (ஆ.அக.); wild melon, *cucamis trigonus.*

*[இளக்கு → இக்கு + ஆகு = இக்குவாகு.]*

**இக்குவிகாரம்** *ikku vigāram,* பெ. (n.) ***இக்குவிளை பார்க்க;*** see *ikkuviḷai.*

**இக்குவில்லி** *ikkuvilli* பெ. (n.) ***இக்குவில்லோன் பார்க்க;*** see *ikkuvillōṉ.*

*[இக்கு + வில்லி. இக்கு = கரும்பு.]*

**இக்குவில்லோன்** *ikkuvillōṉ* பெ. (n.) ***காமன்;*** cupid. (ஆ.அக.).

*[இக்கு + வில்லோன் = கரும்பு வில்லைக்கொண்ட காமன்.]*

**இக்குவிளை** *ikkuviḷai* பெ. (n.) ***சருக்கரை;*** sugar.

*[இக்கு + விளை.]*

**இக்குறி** *ikkuṟi,* பெ. (n.) 1. ***இச்செலவு;*** this journey. 2. ***இம்முறை;*** this time. இக்குறிகேட்போன். 3. ***இவ்வடையாளம்;*** this mark or sign. (ஆ.அக.).

ம. இக்குரி.

*[இ + குறி.]*

**இக்கூறு** *ikkūṟu,* பெ. (n.) ***இக்குறி பார்க்க;*** see *ikkuṟi.*

*[இ + கூறு.]*

**இக்கெனல்** *ikkeṉal,* பெ. (n.) ***விரைவுக்குறிப்பு;*** onom.expr. of quickness. "இக்கென வினைய தீயோ னிறப்ப" (கந்தபு.வரவுகேள்வி.2).

*[இக், இச், இம் என்பன ஒலிக்குறிப்புச் சொற்கள். ஒலிக்குறிப்பு இங்கு விரைவு குறித்தது. ஒ.நோ. 'இம்மென்னும் முன்னே (காளமே.).]*

**இக்கோ** *ikkō*, இடை. (int.) *வியப்பு, இரக்கம், துயரம் முதலியவற்றை உணர்த்தும் குறிப்பு* (ஆ.அக.); exclamation of wonder, pity, grief, etc.

*[அக்கோ → இக்கோ. அக்கோ = வியப்பிடைச்சொல்.]*

**இக[1]-த்தல்,** *iga-*, 18 செ.குன்றாவி. (v.t.) 1. *தாண்டுதல்.* (திவா.); to leap over, jump over. 2. *கடத்தல். வரம்பிகந்தோடி* (கம்பரா.நாட்.9); to over flow, go beyond. 3. *வரம்புகடத்தல்;* to transgress, violate, deviate from a rule or justice. "நெறியிகந்து... நீரலசெய்யும்" (காசிகா. சிவகன்மாவாயு.28). 4. *போதல்;* to depart, go away. 5. *நீங்குதல்;* to leave. "முனிவிகந் துயர்ந்த" (நன்.சிறப்புப்பா.) 6. *நடத்தல்;* to walk. 7. *புறப்படுதல்;* to start. 8. *விட்டுவிடுதல்;* to abandon. 9. *பிரிதல். "இகந்துறைவ ரேதிலர்"* (குறள்.1130); to leave behind, go away from. 10. *பொறுத்தல்.* (பிங்.); to bear, endure.

ம. இகய்க்குக; மரா. இக் (செல்லுதல்).

*[இய → இக. இய = செல், நட. இகத்தல் = செல்ல நேர்வதால் பிரிதல், நீங்குதல், தாண்டுதல் பொருள் சுட்டியது.]*

**இக[2]-த்தல்;** *iga-*, 18 செ.கு.வி. (v.i.) 1. *புடைத்தல்;* to beat. 2. *காழ்த்தல்;* to become hard, mature. 3. *நெருங்குதல்;* to be close together, crowd. 4. *பழித்தல்;* to abuse. 5. *மீறுதல்;* to transgresse.

*[இகத்தல் = நீங்குதல், விரிதல், பகுத்தல், பரவுதல், பரவுதலால் ஒன்றனை நெருங்குதல், மோதுதல், மீறுதல் பொருள்களில் புடைபெயர்ந்துள்ளது.]*

**இக[3]** *-iga*, இடை. (part.) *முன்னிலையசைச் சொல்* (தொல்.சொல்.276); poet. expletive of the 2nd pers. of verbs.

*[இய = வியங்கோள் ஈறு. இய → இக முன்னிலையசைமொழிகளாயின.]*

**இகசுக்கு** *igacukku*, பெ. (n.) *நீர்முள்ளி* (மலை.); white long-flowered nail dye. (செ.அக.).

*[இளக்கு → இக்கு. இக + சுக்கு.]*

**இகசேபம்** *igasēbam* பெ. (n.) *எழுமுள்;* axil-spined mulberry - (சா.அக.).

*[ஒருகா. இக்கு + சேபம்.]*

**இகடி** *igaḍi* பெ. (n.) *கத்தூரி மஞ்சள்;* round zedoary (சா.அக.).

*[இக்கு → இக்குளி → இகுளி → இகுடி → இகடி.]*

**இகணை** *igaṇai*, பெ. (n.) *ஒரு மரம்;* a kind of tree. "இலையணி யிகணையும்" (பெருங். இலாவாண.9,8).

ம. இகண.

*[இக்கு→ இக்குணி→ இகுணி→ இகணை.]*

**இகத்தாளம்** *igattāḷam*, பெ. (n.) *ஏளனம்.* (தெ.ஆ.வ.); mockery.

*[இகத்தம் - இகத்தானம் - இகத்தாளம் = ஒருவனைப் பிரித்து வைத்துப் பேசுதல், எள்ளுதல்.]*

**இகது** *igadu*, பெ. (n.) *கரும்பு;* sugar-cane (சா.அக.).

*[ஒருகா. இக்கு → இகுது → இகது.]*

**இகந்துபடுதல்** *igandu paḍudal* தொ.பெ. (vbl.n) 1. *தவறுதல்;* erring. 2. *முற்கூறிய விதியைக் கடத்தல்;* transgressing. 3. *பிறழுதல்;* slip.

*[இக→ இகந்து (வி.எ.) + படுதல்.]*

**இகந்துழி** *iganduḻi*, பெ. (n.) *தொலைவான இடம்* (பழ.175); far-off place.

*[இக → இகந்து (வி.எ.) + உழி.]*

**இகப்பு** *igappu*, பெ. (n) *பழித்தல்;* insult.

*[இக → இகப்பு.]*

**இகபரம்** *igaparam*, பெ. (n.) *இம்மை, மறுமை;* this birth and the supposed next. "இகபரமு மெண்டிசையும்" (தேவா.48,3). 2. *இவ்வுலகம் மற்றும் மேலுலகம்;* this world and the supposed next, earth and heaven.

*[இகம் + பரம்.]*

**இகபோகம்** *igabōgam*, பெ. (n.) *இவ்வுலகவின்பம்;* earthly enjoyment, mundane pleasures.

த. போகம் < *Skt.* bhōga.

*[இகம் + போகம். இகம் பார்க்க; புகு - புகவு - புகா (உணவு). புகவு - புஜ் - போகம் = நுகர்வது. புக்குதல் → முக்குதல் = உண்ணுதல்.]*

**இகம்[1]** *igam*, பெ. (n.) *இவ்வுலகம்;* life in this world. "இகமொடு பரமும்" (கந்தபு.திருவிளை. 105); this world. (செ.அக.).

க. இக; த. இகம்; > *Skt.* iha.

*[இ = அண்மைச்சுட்டு. இல் → இழ் → இகு - இகம் = இவ்வுலக வாழ்வு, இவ்வுலகம், இப்பிறப்பு. இகு = கீழ். இகம் = கீழிருப்பது. மேலுலகம் என்பதின் எதிர்.]*

**இகம்[2]** *igam*, பெ. (n.) 1. *சந்தனம்;* sandal - wood 2. *இண்டங்கொடி;* a thorny creeper (சா.அக.).

**இகமலர்** *iga-malar*, பெ. (n.) *விரிமலர்.* (பிங்.); full-blown flower.

*[இகத்தல் = நீங்குதல், விரிதல். இக + மலர் = விரிமலர்.]*

**இகரக்குறுக்கம்** *igara-k-kuṟukkam*, பெ. (n.) *குற்றிய லிகரம்;* the shortened vowel, i. (த.சொ.அக.).

*[இகரம் + குறுக்கம்.]*

**இகரம்** *igaram*, பெ. (n.) *'இ' என்னும் எழுத்து;* the letter 'i'.

ம. இகாரம்.

*[இ + கரம். கரம் - எழுத்துச்சாரியை.]*

**இகல்**[1] **(லு)-தல்** *igal-,* 3 & 5 செ.குன்றாவி.(v.t.) ***மாறு படுதல்;*** to disagree, hate, be inimical. ''இன்ன காலையி னெல்லைமைந்த னிகன்று'' (சேதுபு. சேதுவந்த.12). 2. ***போட்டி போடுதல்;*** to vie, compete. ''கோதை சுண்ண மாலை யோடிகலித் தோற்றாள்'' (சீவக.904); 3. ***ஒத் தல்;*** to be similar ''குலிகமொ டிகலிய வங்கை'' (நன்.268, மயிலை).

ம. இகற்றுக.

*[இகு → இக → இகல். நீங்குதலால் தோன்றும் மாறுபாடு, எதிர்ப்பு, பகைமை.]*

**இகல்**[2] *igal,* பெ. (n.) 1. ***பகை*** (திருமுரு.132); enmity, hatred, hostility. 2. ***போர்;*** battle, war. ''இகன்மிக நவின்று'' (பரிபா.6,28. ம.இகல்). 3. ***வலிமை;*** puissance, strength, intrepidity. ''இலைப்பொலிதா ரிகல் வேந்தன்'' (பு.வெ.4,14, கொளு). 4. ***சிக்கு;*** intricacy, obscurity, involvedness. ''ஞான பாதப் பொருளி னிகலறுத்து'' (சி.போ.பா.மங்கல.1); 5. ***அளவு; இகலிரி கடங்கண் டால்*** (ஞானா.50,5); limit, bound. 6. ***புலவி;*** amatorial strifes between husband and wife. ''இகலினி கந்தாளை'' (பரிபா.9,36).

ம. இகல்; க. இக்கு; தெ. இங்கட; து. இங்கட, இச; குட. இச.

*[இகு → இக → இகல், இகல் = பகை. வலிமையும் வரம்பும் துணைப்பொருள்கள்.]*

**இகல்**[3] *igal,* பெ. (n.) ***பெருங்காப்பிய உறுப்புகளு ளொன்று,*** (ஆ.அக.); a part of an epic.

*[இகு → இக → இகல்.]*

**இகல்வு** *igalvu,* பெ. (n.) 1. ***எதிரிடை;*** contrariety. 2. ***இகலுதல்;*** opposing. (ஆ.அக.).

*[இகல் → இகல்வு.]*

**இகலடு கற்பு** *igaladu-karpu,* பெ. (n.) ***போர் வெல்லும் பயிற்சி;*** special training for warfare. ''...ஆஅய் எயினன் இகலடு கற்பின் மிஞலியொடு தாக்கி'' (அகம். 196).

*[இகல் + அடு + கற்பு. கற்பு = கல்வி.]*

**இகலன்** *igalan,* பெ. (n.) 1. ***படைவீரன்*** (பிங்.); warrior. 2. ***நரி;*** jackal, ''இகலன்வாய்த் துற்றிய தோற்றம்'' (களவழி.28). 3. ***முதுநரி*** (பிங்.); old jackal. 4. ***பகைவன்;*** enemy (ஆ.அக.).

*[இகல் → இகலன்.]*

**இகலாட்டம்** *igalāttam,* பெ. (n.) 1. ***எதிராடல், வாய்ப்போர்;*** controversy, disputation, altercation. ''எந் நேரமும் இகலாட்டமாயிருக்கிறவன்''. (W.). 2. ***போட்டி;*** (W.); competition, rivalry. 3. ***போராட்டம்*** (ஆ.அக.); struggle. 4. ***இழுபறிப்போர்;*** *tug of war.*

*[இகல் + ஆட்டம் - இகலாட்டம். இகல் + ஆடுதல் = இகல் செய்தல். இஃகலாட்டம் பார்க்க; see ikkalāttam.]*

**இகலாட்டி** *igalātti,* பெ. (n.) ***மாறுபாடுடையவள்;*** woman enemy. ''இகலாட்டி நின்னை எவன் பிழைத்தேன் எல்லாயான்'' (கலித்.108). (சங்.இலக்.சொற்.).

*[இகல் + ஆட்டி.]*

†**இகலாட்டு** *igalāttu,* பெ. (n.) ***திடலாட்டம்;*** sports.

*[இகல் + ஆட்டு.]*

**இகலி** *igali,* பெ. (n.) ***பெருமருந்து*** (மலை.) பார்க்க; Indian birthwort. (செ.அக.). 2. ***சில்லம்*** (சிலேட்டுமம்); one of the three humours in the human system i.e. phlegm.

*[இகல் → இகலி.]*

**இகலியார்** *igaliyār,* பெ. (n.) ***பகைவர்;*** enemies. ''இகலியார்புர மெய்தவன்'' (தேவா. 75,1).

*[இகல் → இகலியார்.]*

**இகலை** *igalai,* பெ. (n.) ***வெள்ளை;*** white. (சா.அக.).

*[இளக்கு → இக்கு = நீர்ப்பொருள், நீர்மம், கள். நீராளமான பொருள். ஓரளவுக்கு வெளிதாகத் தோன்றுதலின் வெண்மைப் பொருள் பெற்றிருக்கலாம்.]*

**இகலோகம்** *iga-lōgam,* பெ. (n.) ***இவ்வுலகம்*** *பார்க்க;* see ivvulagam. *Skt.* ihalōka.

*[இவ் → இவ → இக + உலகம் = இகவுலகம் → இகலோகம். வ → க, திரிபு. உலகம் → லோகம் என வடமொழியில் திரிந்தது.]*

**இகலோன்** *igalōn,* பெ. (n.) ***பகைவன்***(திவா.); enemy.

ம. இகலோன்.

*[இகல் = பகைமை. இகல் + அன் = இகலன் → இகலான் → இகலோன்.]*

**இகழ்**[1]**-தல்** *igal-,* 4. செ.கு.வி. (v.i.) ***கவனிப்பின்மை;*** to be careless, negligent. ''பிரியாரென விகழ்ந்தேன்'' (திருக்கோ.340).

**இகழ்**[2]**-தல்** *igal-,* 4. செ.குன்றாவி. (v.t.) 1. ***அவமதித் தல்;*** to slight, despise, opp. to புகழ். ''இளையர் இனமுறையர் என்றிகழார்'' (குறள்.698). 2. ***மறத்தல்;*** to forget ''செய்யா திகழ்ந்தார்க் கெழுமையு மில்'' (குறள்.538).

ம. இகழுக.

*[இக → இகழ் = தாழ்தல், தாழ்த்தல், எள்ளுதல். இல் → இள் → இழ் → இகு. இளப்பம் என்பதும் நீங்குதல், விலகுதல், விலக்குதல்வினை பொருட்புடை பெயர்ந்து தாழ்வுபடுத்து தல், எள்ளுதல் பொருளாதல் காண்க.]*

**இகழ்**[3] *igal,* பெ. (n.) ***இகழ்ச்சி;*** contempt, reproach. ''இகழறு சீற்றத் துப்பின்'' (காஞ்சிப்பு.கச்சி.21).

*[இக → இகழ். இகழ்*[1]*-தல் பார்க்க; see igal-*[1]*.]*

**இகழ்ச்சி** *igalcci,* பெ. (n.) 1. ***தாழ்வு;*** undervaluing. 2. ***இகழ்வு;*** detraction. 3. ***இழிவு;*** dishonour. 4. ***உவர்ப்பு;*** insult. 5. ***ஒவ்வாமை;*** aversion. 6. ***இகழ்தல்;*** despise. 7. ***நகை;*** scorn. 8. ***நிந்தை;*** contempt. 9. ***தாழ்ச்சி;*** disparagement. 10. ***ஈனம்;*** baseness. 11. ***ஓரணி;*** a figure of speech. 12. ***பழி;*** scorn. 13. ***குறைவு,*** deficiency. 14. ***மறதி;*** forgetfulness. 15. ***குற்றம்;*** fault. 16. ***விழிப்பின்மை;*** remissness, negligence. ''இகழ்ச்சி

யிற் கெட்டாரை" (குறள்.539). 17. ***வெறுப்பு;*** dislike, aversion. "நன்றுதீ திகழ்ச்சி வேட்கை நட்பிகல்" (திரு விளை.உக்கிரபா.5).

*[இகு → இகழ் → இகழ்ச்சி.]*

**இகழ்ச்சிக்குறிப்பு** *igalcci-k-kurippu,* பெ. (n.) ***இகழ்ச்சியைக் காட்டவருஞ் சொற்கள்;*** words denoting dishonour or despising.

*[இகழ்ச்சி + குறிப்பு.]*

இல,. எல, எவன், எற்று, என், என்னே, ஏயே, சீச்சீ, சை, ஏஏ, என்பனவுமாம்.

**இகழ்ச்சியணி** *igalcci-yani,* பெ. (n.) ***ஒன்றன் குணங் குற்றங்கள் மற்றொன்றுக்கு உண்டாகாதிருப்பதைக் கூறும் அணி.*** (அணியி.70.); figure of speech in which the excellence or defect of one thing does not affect another with which it is connected. e-g., the grandeur of the ocean does not attach to a cup of sea-water, nor does the fault of the lotus which closes at the sight of the moon attach to the moon.

*[இகழ்ச்சி + அணி.]*

**இகழ்ச்சியில் புகழ்ச்சி** *igalcciyil pugalcci,* பெ. (n.) ***அணிவகையுளொன்று. அது இகழ்ச்சியின்றிப் புகழ்தல்;*** figure of speech (ஆ.அக.).

*[இகழ்ச்சி + இல் + புகழ்ச்சி. இல் (எ.ம.).]*

**இகழ்ச்சியுட் புகழ்ச்சி** *igalcciyu-t-pugalcci,* பெ. (n.) ***இகழ்ச்சியும் புகழ்ச்சியும் கலந்து கூறும் அணிவகையுளொன்று;*** figure of speech (ஆ.அக.).

*[இகழ்ச்சி + உள் + புகழ்ச்சி.]*

**இகழ்ச்சி விலக்கு** *igalcci vilakku,* பெ. (n.) ***ஏதுவை யிகழ்ந்து விலக்கும் அணிவகையுளொன்று;*** figure of speech. (ஆ.அக.).

*[இகழ்ச்சி + விலக்கு.]*

**இகழ்ந்துரை** *igalndurai* பெ. (n.) ***இகழ்ச்சிச் சொல்*** (குறள்.182, உரை); expression of contempt, slander. (செ.அக.).

*[இகழ் → இகழ்ந்து (வி.எ.) + உரை.]*

**இகழ்பதம்** *igalpadam,* பெ. (n.) ***நெகிழ்ந்திருக்கும் செவ்வி;*** delicate condition."அருங்கடிக் காவல் இகழ்பதம் நோக்கி" (அகநா.162).

*[இகழ் + பதம்.]*

**இகழ்மலர்** *igal-malar,* பெ. (n.) ***பொலிவிழந்த மலர்;*** faded flower. "இகழ்மலர்க் கண்ணளாத் துறப்பயான்" (கலித்.135).

*[இகழ் + மலர்.]*

**இகழ்வார்** *igalvār,* பெ. (n.) 1. ***அவமதிப்பவர்;*** scorners, slanderers, vilifiers."இகழ்வார்ப் பொறுத்த றலை" (குறள்.151); (செ.அக.).

*[இகழ் → இகழ்வார் (வினையா.பெ.).]*

**இகழ்வு** *igalvu,* பெ. (n.) ***நிந்தை*** (திவ்.திருவாய்.3,4,1.); contempt, scorn, insult. (செ.அக.).

*[இகழ் → இகழ்வு.]*

**இகழற்பாடு** *igalarpādu,* பெ. (n.) ***இகழப்படுகை*** (குறள்.192,உரை); dishonour, disgrace, contemptibility, scorn. (செ.அக.).

*[இகழ் → இகழல் + பாடு.]*

**இகழாவிகழ்ச்சி** *igalāvigalcci,* பெ. (n.) ***புகழ்வது போலப் பழித்துக் கூறும் அணி*** (W.); irony; a figure of speech in which censure is conveyed by ironical praise. (செ.அக.).

*[இகழாத → இகழா + இகழ்ச்சி.]*

**இகழி** *igali,* பெ. (n.) 1. ***கொன்றை;*** a flower tree, 2. ***கடுக்காய்;*** Indian gallnut. (சா.அக.).

*[இகழ் → இகழி.]*

**இகழுநர்** *igalunar,* பெ. (n.) 1. ***பகைவர்;*** enemies. "இகழுந ரிசையொடு மாய" (புறநா.21. 12); (செ.அக.). 2. ***இகழ்கின்றவர்.*** (ஆ.அக.); vilifiers.

*[இகழ் → இகழுநர் (வினையா.பெ.).]*

**இகள்(ளு)-தல்** *igal,* 2 செ.கு.வி. (v.i.). 1. ***மாறுபடுதல்;*** to be in disparity or disagreement with one. 2. ***எதிராடல்;*** wrangle.

*[இகல் → இகள்.]*

**இகளி**[1] *igali,* பெ. (n.) 1. ***இடி;*** thunder. 2. ***இருள்;*** darkness.

*[இகு → இருளி → இகளி. இகுதல் = தாழ்தல், பொத்தென்று வீழ்தல், இடிந்து பொழிதல், மேகம் திரண்டு இடிதலால் கவிழும் இருள்.]*

**இகளி**[2] *igali,* பெ. (n.) ***வெற்றிலை;*** betel leaf. (சா.அக.).

*[இருல் → இருள் → இகள் → இகளி.]*

**இகளை** *igalai* பெ. (n.) ***வெண்ணெய்*** (மூ.அ.); butter.

*[இக → இகளை. இகத்தல் = பிரிந்து வருதல். கடையும்பொழுது தயிர்த் திரளிலிருந்து இகந்து வருதலால் வெண்ணெய் இகளை எனப்பட்டது.]*

**இகன்மகள்** *igan magal,* பெ. (n.) ***கொற்றவை;*** Durga "இகன்மக ளையைகளிறு" (தக்க யாகப்.170); (செ.அக.).

*[இகல் - இகன் + மகள். இகல் = மாறுபாடு, பகைமை. பகைவரை அழிப்பவள் இகன்மகள்.]*

**இகன்றவர்** *iganravar,* பெ. (n.). ***பகைவர்;*** enemies. "இகன்றவர்ச் செற்று" (பாரத.வாரணா.113); (செ.அக.).

*[இகல் = பகைமை, இகல் → இகன்றவர்.]*

**இகனி**[1] *igani,* பெ. (n.) ***வெற்றிலை*** (மலை.); betel. (செ.அக.).

*[இரு → இருல் → இருனி → இகனி (கொ.வ.) இருல் = குழை, மெல்லிலை.]*

**இகனி**[2] *igaṉi* பெ. (n.) ***வெண்ணெய்;*** butter. (சா.அக.).

*[இகளை → இகணை → இகனி.]*

**இகா** *igā,* இடை. (part.) ***முன்னிலையசை*** (கலித்.105, உரை); poet, expletive of the 2nd pers. of verb. (செ.அக.).

*[இ + கா - இகா. இகரம் ஏவல் கருதியும் வியங்கோள் கருதியும் இசை நிரப்பவும் வரும் முன்னிலையசை. உண்கா, செல்கா என்றாற் போல் கெழுதகைப் பொதுச் சொல்லாக வரும் 'கா' அசைமொழி, பால் வேறுபாடு கருதாது முன்னிலையசையாக வருவது. இரண்டும் ஒருங்கிணைந்து பெருங்கிழமையுணர்த் தும் கெழுதகைப் பொதுச் சொல் (word of endearment) ஆயிற்று.]*

தாழ்த்தப்பட்ட மக்கள் வழக்கில், 'செல்வி இங்கே வாகா (வா), நீ போகா கா (போடா பேய்) என 'கா' என்னும் முன்னிலையசை பெருக வழங்குகின்றது. வட கொங்கு வேளாளர் பேச்சிலும் இதன் பெரு வழக்கைக் காண லாம். கை என்னும் சிறுமை குறித்த சொல் பெண்மை விளியாகி கன்னடத்தில் 'கே' (gē) விளிச்சொல்லான வாறு 'கா' ஆண்மை அல்லது இருபால் விளிச்சொல்லாகப் பண்டு தொட்டே வழங்கி வருகின்றது.

**இகு**[1]**-தல்** *igu-* 21 செ.கு.வி. (v.) 1. ***கரைந்து விழுதல்;*** to be eroded "கான்யாற் றிருகரை" (குறுந்.264); 2. ***தாழ்ந்து விழுதல்.*** to shower, to descend, as torrent. "மாரியி னிகுதரு... கடுங்கணை" (மலைபடு.226); (செ.அக.). 3. ***இறுதல்*** (ஆ.அக.); to end.

*[இல் - துளைத்தற் கருத்து வேர்ச்சொல். இல்→ இள் → இழ் → இமு → இகு = கரைந்துவிழுதல், இடிதல், ஒடிதல், இறுதல்.]*

**இகு**[2]**-தல்,** igu- து.வி. (Aux.v.) துணைவினை; auxiliary verb. கண்டிகும். சென்றிகும்.

*[இகு[1] - இகு[2]]*

**இகு**[3]**-த்தல்** *igu-,* 18 செ. குன்றாவி. (v.t.) 1. ***கொல்லுதல்*** (சூடா.); to kill, destroy. 2. ***வீழ்த்துதல்*** (திவா.); to throw down, to fell, as a tree. 3. ***தாழ்த்துதல்;*** to hand down loosely, as hair, lower. "கணங்கொ டோகையிற் கதுப்பிகுத் தசைஇ" (மலைபடு.44); 4. ***சொரிதல்;*** to pour forth, to shed, as tears. "இகுத்த கண்ணீர்" (புறநா.143, 13). 5. ***ஓடச்செய்தல்*** (சூடா.); to put to rout, as an army. 6. ***அறைதல்;*** to beat, as a drum. "முரசுகடிப் பிகுப்பவும்" (புறநா.158,1); 7. ***இசைக் கருவிகளை இசைத்தல்;*** to play, as on an instrument. "நும்மருப் பிகுத்து" (மலைபடு.391); 8. ***அழைத்தல்*** (பிங்.) to call, invite. 9. ***கொடுத்தல்*** (திவா.); to give, bestow, 10. ***விரித்தல்;*** spread out, to dishevel, as hair. "கணங்கொள் பேய்மகள் கதுப்பிகுத் தாட" (சிலப்.26,210). 11. ***மறித்தல்*** (நாநார்த்த.); to stop, prevent, to hinder. 12. ***எறிதல்*** (நாநார்த்த); to throw. 13. ***துன்புறுத்தல்*** (நாநார்த்த); to cause pain or affliction. 14. ***துடைத்தல்*** (அக.நி.); to wipe, to clean. (செ.அக.). 15. ***புடைத்தல்*** (ஆ.அக.); to winnow.

*[இல் → இள் → இழ் → இமு → இகு = துளைத்தல், குத்துதல், தாக்குதல், தடுத்தல்.]*

**இகு**[4]**-த்தல்** *igu-,* 21 செ.கு.வி. (v.i.). 1. ***ஒலித்தல்;*** to produce a sound, as from a drum "மழை யெதிர்படுகண் முழவுகண் ணிகுப்ப" (மலைபடு.532); (செ.அக.). 2. ***தாண்டுதல்*** (நாநார்த்த); to leap, jump. 3. ***பரத்தல், பரவுதல்;*** to spread.

*[உல் → இல் → இள் → இகு.]*

**இகு**[5] *igu,* பெ. (n.) ***வீழ்ச்சி;*** rapid descent. "நீரிகு வன்ன நிமிர்பரி நெடுந்தேர்" (ஐங்குறு.465); (செ.அக.).

*[இழி → இகி → இகு.]*

**இகுசி** *igusi,* பெ. (n.) ***மூங்கில்;*** bamboo (சா.அக.).

*[இகு[1] → இகுசு → இகுசி = ஒடியும் தன்மையுடையது.]*

**இகுசு** *igucu,* பெ. (n.) ***மூங்கில்*** (மலை.); spiny bamboo. (செ.அக.).

*[இகு → இகுசு.]*

**இகுடி** *iguḍi,* பெ. (n.) ***காற்றொட்டி*** (மலை.) பார்க்க; thorny caper. (செ.அக.).

மறுவ ஆதண்டன், ஆதொண்டர், காத்தொட்டி.

*[இகு → இகுள்[1] → இகுளி → இகுடி.]*

**இகுத்தல்** *iguttal,* பெ. (n.) 1. ***குழைத்தல்;*** macerating. 2. ***கொல்லல்;*** killing, destroying life. 3. ***துடைத்தல்;*** wiping away. 4. ***தாழ்த்தல்;*** lowering. (சா.அக.).

*[இகு[1] → இகுத்தல்.]*

**இகுத்துவி-த்தல்** *iguttuvi-* 4 செ.கு.வி. (v.i.) ***மடைய டைத்தல்;*** to close, as by sluice. "ஏரி கட்டி இகுத்துவித் தோமானோம்" (S.I.I.iii,9); (செ.அக.).

*[இகுத்தல் → இகுத்துவிடு → இகுத்துவி = தாழ அடைத்துச் சேமித்தல்.]*

**இகுதரல்** *igudaral,* பெ. (n.) ***தாழ்ந்துவிடுதல்;*** get lowered, falling down.

*[இகு + தரல் = இகுதலாகிய செயற்பாடு தருதல் அல்லது எய்தப்படுதல்.]*

**இகுந்தகம்** *igundagam,* பெ. (n.) ***ஐங்கணுக் கள்ளி;*** a kind of euphorbin genus, with five points (சா.அக.).

*[இகு[3] → இகுந்து → இகுந்தகம். இகு = திரட்சி.]*

**இகுப்பம்** *iguppam,* பெ. (n.) 1. ***திரட்சி;*** boulder like the formation of a mountain side. "இருங்க லிகுப்பத் திறுவரை சேராது" (மலைபடு.367). 2. ***தாழ்வு*** (பெருங்.இலாவண.20,34); low spirit.

*[இகு → இகுப்பம். தாழ்தலால் திரண்டு நிற்றல்.]*

**இகுப்பு** *iguppu,* பெ. (n.) ***வாசிப்பு;*** reading.

*[இகு → இகுப்பு = உட்பொருள் காணுதல்.]*

**இகுபறல்** *igubaṟal,* பெ. (n.) ***அறுதியையுடையநீர்;*** tear. "என் கண்போல் இகுபறல் வாரும் பருவத்தும் வாரார்" (கலித்.33).

*[இகுபு + அறல் = இகுபறல்.]

**இகும்**[1] *igum,* 18 செ.குன்றா.வி. (v.t.) ***செய்யுளில் ஆளப்படும் தன்மைப்பன்மை வினைமுற்று;*** pl.first person finite verb. "கண்டிகும் அல்லமோ கொன்க நின்கேளே". (ஐங்குறு. 121).

*[இகு → இகும் (தன்.ப.வி.மு.).]*

இகு = தாழ்த்தல், இருத்தல் பொருள்படும் வினையடிச் சொல். கண்டிகும் கேட்டிகும் என்பவை கண்டிருக்கிறோம், கேட்டிருக்கிறோம் எனப் பொருள்படும் பண்டைத் தமிழ் வினைமுற்றுகள் ஒ.நோ. உண்கு → உண்கும்.

**இகும்**[2] *igum,* இடை. (part.) ***முன்னிலையசை;*** poet. expletive of 2nd pers. of verbs. "மெல்லம் புலம்ப கண்டிகும்" (தொல்.சொல்.276. உரை). (செ.அக.).

*[இகும் = இக்காலத்திய "முடியும்" என்னும் வினைமுற்றுப் போன்று முடித்தோம் எனப் பொருள் காட்டும் பழைய வினைமுற்று. இதுவே நாளடைவில் முன்னிலை அசைமொழி யாயிற்று. இகுதல் = தாழ்ந்துவிழுதல், எல்லாம் முடிதல், செயற்பாட்டு முடிவு சானுதல். கண்டு + இகும் = கண்டிகும், கண்டுமுடித்தாயிற்று.]*

**இகுர்-தல்** *igur-,* 21 செ.கு.வி. (v.i.) 1. ***முளைத்தல்;*** to sprout, germinate. 2. ***மொட்டு அரும்புதல்;*** to bud.

க., து. இகுர்.

*[உகல் → இகல் → இகுர்.]*

**இகுரி** *iguri,* பெ. (n.) 1. ***மரக்கலம்;*** boat, ship. 2. ***வழக்கு;*** custom, usage. (செ.அக.).

*[ஒருகா. இகுளி → இகுரி. இகுளி = உட்குடைவுள்ள மரக்கலம்.]*

**இகுல்** *igul,* பெ. (n.) 1. ***முளை;*** sprout. 2. ***அரும்பு;*** bud. 3. ***குழை, மெல்லிலை, தளிர்;*** tender shoot.

*[உகல் → இகுல்.]*

**இகுவான்** *iguvāṉ,* பெ. (n.) ***தமையன்;*** elder brother. (ஆ.அக.).

*[ஒருகா. மிகுவான் → இகுவான்.]*

**இகுவை** *iguvai,* பெ. (n.) ***வழி*** (உரி.நி.); path. (செ.அக.).

*[இயவு = வழி. இயவை → இயுவை → இகுவை.]*

**இகுள்**[1] *iguḷ,* பெ. (n.) ***தோழி;*** women's confidante. "எனக்கிகுளா யென்னைப் பெற்றவளாய்" (திவ்.திருவாய்.6,3,9). (செ.அக.).

*[இகு → இகுள் = தாழ்தல், குள்ளமாதல், வடிவத்தில் சிறுத்திருத்தல், இளையவன், இளையவள்.]*

இகுளை பார்க்க; see *iguḷai.*

**இகுள்**[2] *iguḷ,* பெ. (n.) 1. ***இடி;*** thunderbolt. "இகுடனித்தனி கான்றன" (இரகு.ஆற்று.4). (செ.அக.). 2. ***ஆரல் மீன்;*** greenish or sand-eel - Rhynchobdetta aculeata. (சா.அக.).

*[இகு[1] → இகுள். இகுளி பார்க்க; see iguḷi.]*

**இகுளி** *iguḷi,* பெ. (n.) 1. ***இடி*** (பிங்.); thunderbolt. 2. ***கொன்றை*** (மலை.); cassia. (செ.அக.). 3. ***உட்குழிவுள்ள மரக்கலம்;*** pontoon.

*[இகு → இகுள் → இகுளி.]*

**இகுளை** *iguḷai,* பெ. (n.) 1. ***தோழி*** (தொல்.சொல்.400, உரை); woman's confidante. 2. ***சுற்றம்*** (பிங்.); kindred; relative. 3. ***நட்பு*** (சூடா.); friendship (செ.அக.). 4. ***கார்த்திகை நாள்.*** (ஆ.அக.).

*[இகு → இகுள் → இகுளை. இகுதல் - தாழ்தல், குள்ளமாதல், சிறிதாதல் இகுளை - தன்னினும் இளைய தோழி.]*

**இகுளைத்தோழி** *iguḷai-t-tōḻi,* பெ. (n.) ***இகுளையாகிய தோழி;*** female attendent younger by age. "இகுளைத்தோழியிஃது என்னெனப் படுமோ" (நற். 332).

*[இகு → இகுள் → இகுளை + தோழி. இகுளை → தாழ்வு, சிறுமை, தன்னினும் அகவையிற் குறைந்த தோழி.]*

தென்னார்க்காடு மாவட்டத்தில் இச்சொல் இவளே எனத் திரிந்து வழங்குகிறது. என்ன இவளே, வா இவளே, போ இவளே, சொல்லு இவளே என்பன போன்ற சொல்லாட்சிகளைக் கல்லா மக்களின் அன்றாட வழக்கில் இன்றும் காணலாம்.

இகுளை → இகுளே → இவுளே → இவளே. (கொ.வ.).

**இகேசுவரம்** *igēsuvaram,* பெ. (n.) ***சிவத்தலங்களாயிரத்தெட்டனுளொன்று;*** one of the Siva shrines.

*[உகே → இகே + ஈசுவரம்.]*

**இகை-தல்** *igai,* 18 செ.குன்றாவி. (v.t.) 1. ***கொடு;*** to give. 2. ***நட;*** to proceed. (ஆ.அக.).

*[ஈ → ஈகு → ஈகை → இகை. ஈகை பார்க்க; ஈன் → ஈ என வெளிப்படற் கருத்திலிருந்து வெளியிற் செல்லும் நடத்தற் பொருளும் பிறத்தல் காண்க.]*

**இங்கண்** *iṅgaṇ,* பி.எ. (adv.) ***இவ்விடம்;*** this place. "இங்கண் மாஞாலத்து" (திவ்.திருவாய்.9,2,8); (செ.அக.).

*[இ + கண். கண் = இடம், இடப்பரப்பு.]*

**இங்கம்**[1] *iṅgam,* பெ. (n.) 1. ***குறிப்பு*** (நாநார்த்த.); implied idea. 2. ***புலக்குறும்பு*** (நாநார்த்த); mannerism. 3. ***இயங்கு பொருள்*** (நாநார்த்த); movable things. 4. ***அறிவு*** (சேதுபு.) knowledge, intelligence. (செ.அக.). 5. ***நோக்கம்;*** aim, goal.

*[இல் → இங்கு → இங்கம் = உட்புதைந்திருப்பது.]*

**இங்கம்**[2] *iṅgam,* பெ. (n.) ***ஊர்ந்து திரியும் உயிரி;*** a species of reptiles.

*[இல் (துளைத்தற் கருத்து வேர்) → இள் → இய் → இயவு = செலவு, நடப்பு. இய் - இய்ங்கம் - இங்கம்.]*

**இங்கம்**[3] *iṅgam,* பெ. (n.) ***பெருங்காயம்;*** asafoetida.

*[இஞ்சு → இங்கு → இங்கம்.]*

**இங்கரி** *iṅgari* பெ. (n.) ***மான்மணத்தி*** (கத்தூரி) (ஆ.அக.); musk.

*[இங்குதல் = பதிதல். இங்கு → இங்குனி → இங்குரி → இங்கரி.]*

**இங்கா** *iṅgā,* பெ. (n.) ***பால்;*** milk, in child language.

ம., க., தெ. இங்கா.

*[இங்கு - இங்கா (மு.தா.15). இங்கு - குழந்தைகளின் ஒலிக் குறிப்புச்சொல். ஒலிக்குறிப்பே (குழந்தை அழலே) பாலைக் குறிக்கும் சொல்லாயிற்று. இஃதோர் குழவி மொழி.]*

**இங்காலம்** *iṅgālam,* பெ. (n.) ***கரி*** (விவ. ரசா. 10); carbon. (செ.அக.).

தெ. இங்காலமு.

*[இங்குதல் - உட்சுவறுதல் - உள்ளுறிஞ்சப்படுதல் - உட்சாரம் வெந்து கரியாதல்.]*

**இங்காலாமிலம்** *iṅgālāmilam,* பெ. (n.) ***கரிவளி*** (விவ. ரசா. 6); carbonic acid. (செ.அக.).

*[இங்காலம் + அமிலம்.]*

**இங்கிக்கடமான்** *iṅgikkaḍamāṉ,* பெ. (n.) ***எட்டு மெல்லிய கைகளையுடைய வோர் கடல்மீன். இது உடம்பிலிருக்குமோர் கருப்பு மையை வெளியிற்***



இங்கிக்கடமான்

***கக்கித் தண்ணீரைக் கலக்கி அதன்மறைவில் தப்பி யோடும் ஆற்றல் வாய்ந்தது;*** two gilled cephatopodus malluse with eight arms covered with suckers having the body enclosed in a sac, from which it secretes a black ink like fluid (sepia) so as to darken the water and conceal itself - cuttle fish.

*[இங்கு → இங்கி + இங்கிக் கடமான்.*
*இங்குள் = உட்சுவறுதல், ஒளிதல்.*
*இங்கிக்கடமான் = ஒளிந்தோடும் மான் போன்ற மீன்.]*

**இங்கிசை** *iṅgiśai,* பெ. (n.) 1. ***கொலை;*** murder. 2. ***துன்புறுத்தல்;*** teasing, troubling (ஆ.அக.).

*[இங்குதல் → இங்குவித்தல் → இங்கித்தல் → இங்கித்தெ -இங்கிச்சை → இங்கிசை. இச்சொல்லே வடமொழியில் இம்சை எனத் திரிந்தது என்க. இங்குதல் பார்க்க.]*

**இங்கிட்டு** *iṅgiṭṭu,* பெ. (n.) ***இங்கு*** (சம்.அக.); here. (செ.அக.).

ம. இங்டு.

*[ஈங்கண் + இடை - ஈங்கணிடை → ஈங்கணிட்டு → இங்கணிட்டு - இங்கிட்டு.]*

**இங்கித்தை** *iṅgittai,* பெ. (n.) ***இவ்விடத்தில்;*** in this place. "இங்கித்தை வாழ்வும்" (திருமஞ்.2117); (செ.அக.).

*[ஈங்கண் + இடத்து - ஈங்கணிடத்து → இங்கணிடத்து → இங்கித்து - இங்கித்தை.]*

**இங்கிதக்களிப்பு** *iṅgida-k-kaḷippu,* பெ. (n.) ***காமக் குறிப்போடு கூடிய களிப்பு.*** (சீவக.145); pleasure of indulging in amorous thoughts. (செ.அக.).

*[இங்கிதம் + களிப்பு. இங்கிதம் = புணர்ச்சி. இங்கிதம்[3] பார்க்க.]*

**இங்கிதக்காரன்** *iṅgida-k-kāraṉ,* பெ. (n.) 1. ***பிறன் குறிப்பறிந்து அதற்கிசைய நடப்பவன்;*** one who understands another's ways and so accommodates himself to his views and moods (செ.அக.). 2. ***இன்சொற் சொல்வோன்*** (ஆ.அக.); one who uses kind words.

*[இங்கிதம் = விருப்பம், அன்பு. இங்கிதம் + காரன் = இங்கிதக் காரன்.]*

**இங்கிதகவி** *iṅgida-kavi* பெ. (n.) 1. ***பாட்டுடைத் தலைவன் கருத்தை விளக்கும் பாடல்*** (வின்.); poem in which the poet brings out the inner thoughts of his patron. 2. ***இனிமை தரும் பாடல்கள் பாடுவோன்*** (வின்.); poet who expresses his thoughts in a very felicitous diction. (செ.அக.).

*[இங்கிதம் + கவி = இங்கிதகவி. Skt. Kavi > த. கவி.]*

**இங்கிதம்[1]** *iṅgidam,* பெ. (n.) 1. ***கருத்து*** (திவா.); purpose, object. 2. ***எண்ணம்;*** thought (ஆ.அக.). 3. ***குறிப்பு*** (சீவக.765); hint, sign; indication of feeling by gesture. "இங்கித நிலைமைநோக்கி". 4. ***அடையாளம்;*** (ஆ.அக.); mark.

த. இங்கிதம் > Skt. ingita க., தெ. இங்குவா.

*[இல் - துளைத்தற் கருத்துவேர். இல் → இல்கு → இக்கு → இங்கு - இங்குதல் = அழுந்துதல், மனத்தில் பதிதல். மனத்தில் பதிந்த கருத்து, கருத்தினால் உருவான எண்ணம், எண்ணத்தின் வெளிப்பாடான குறிப்பு, குறிப்பினைக் குறித்த அடையாளம்.]*

**இங்கிதம்[2]** *iṅgidam,* பெ. (n.) 1. ***விருப்பம்;*** desire. 2. ***விரும்பத்தக்க இயல்புகள், நாகரிக நற்பண்புகள்;*** agreeable conduct, cultural finesse. 3. ***இனிமை*** (வின்.); sweetness, agreeableness. 4. ***சூழலுக்கேற்பப் பழகு முறை*** (சமயோசித நடை); harmonizing with the situation. (செ.அக.). 'அவன் இங்கிதம் தெரிந்தவன்' (உ.வ.).

*[இங்குதல் = மனத்தில் அழுந்துதல், மனத்தில் பதிந்த நல்லியல்புகள், நயந்து மனக்கொள்ளத்தக்க பண்புகள்.]*

**இங்கிதம்[3]** *iṅgidam,* பெ. (n.) 1. ***புணர்ச்சி;*** sexual intercourse. 2. ***போகை;*** going. (செ.அக.).

*[இங்குதல் = அழுந்துதல், அழுத்தத்தால் இடம்பெயர்தல்,*

போதல். தெலுங்கு மொழியில் புணர்தல் பொருளில், இங்கு - தெங்கு எனத் திரிந்து வினையாய் வழங்குதல் காண்க.]

**இங்கித மாலை** *ingida mālai,* பெ. (n.) *இராமலிங்க அடிகளார் அருளிச் செய்த திருவருட்பாவினுள் ஒரு பகுதி* (ஆ.அக.); minor literary work by Ramalinga adigalar.

*[இங்கிதம் + மாலை.]*

**இங்கிரி** *ingiri,* பெ. (n.) 1. *மான்மணத்தி* (கத்தூரி) (வின்.); musk. 2. *செடிவகை.* (L.); monkey-flower, a genus of plants; mimulus. (செ.அக.).

மறுவ. இங்கரி.

*[இங்குதல் - பதிதல், இங்குளி - இங்குரி - இங்கிரி.]*

**இங்கிலை** *ingilai,* பெ. (n.) *பெருங்காய மரத்திலை;* leaf of the asafoetida tree.

*[இங்கு[3] + இலை.]*

**இங்கிற்றி** *ingiṟṟi,* பெ. (n.) *இங்குற்றி* பார்க்க; see *inguṟṟi.* "எல்லாந் துறந்துவிட்ட திங்கிற்றி' (பஞ்ச.திரு முக.580). (செ.அக.).

*[இங்குற்றி → இங்கிற்றி.]*

**இங்கு[1]** *ingu,* வி.எ. (adv.) *இவ்விடம்* (திவ்.திருவாய். 8,3,1); hither, here, in this place. (செ.அக.).

ம. இங்ஙு; க., பட. இல்லி, ஈசெ; தெ. இக்கட, இசடு, இசொடு, இச்சட, இச்சடு, இட, ஈகட, ஈட, இன்து; கோத. ஈக்; துட. ஈங்க்; குட. இல்லி; து. இன்சி; கொலா. இன்னில்; நா. இன்னில்; பர். இனி; கு. கும்ப; கோண். இக்கா; குர். இசல், இதா; மால். இனெ; பிரா. தாங்க்.

*[இ - அண்மைச் சுட்டு. இ + கண் - இக்கண் - இங்கண் -இங்கு.]*

**இங்கு[2] -தல்** *ingu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. *அழுந்துதல்;* to plant, go deep, sink. *"வேனிறத்திங்க"* (களவழி.41). 2. *தங்குதல்;* to abide, stay. "இங்கு சுவை யின்னமிர்த மேந்த" (சீவக.2025) 3. *குத்துதல்;* to stab. 4. *துன்புறுத்தல்;* to tease. 5. *எரிதல்;* to burn. 6. *கரிதாதல்;* to become black. (செ.அக.).

க. இங்கு.

*[இல் - துளைத்தற் கருத்து வேர்ச்சொல். இல் + கு - இஃகு. இக்கு - இங்கு = அழுந்துதல், தங்குதல், இஃகு = அழுந்தப் பற்றுதல், பற்றியிழுத்தல். ஒ. நோ: இஃகலாட்டம் - (இழு பறி) இஃகலாட்டம் - எசலாட்டம் எனவும் திரியும்.]*

**இங்கு[3]** *ingu,* பெ. (n.) *பெருங்காயம்;* asafoetida. "தசும்புறை யிங்காங் கசும்பறத் துடைத்து" (ஞானா.41, 14) (செ.அக.).

க., தெ. இங்குவ; Skt. hiṅgu.

*[இங்குதல் - சுவறுதல், சுண்டுதல். நீர்ப்புத்தன்மை இழந்து கட்டியாதல்.]*

**இங்குசக்கண்டன்** *ingucakkaṇḍaṉ,* பெ. (n.) 1. *நீர்முள்ளி* (வின்.); white long-flowered nail-dye. 2. *நெருஞ்சி* (மூ.அ.); small prostrate herb. (செ.அக.). 3. *பெருங்கரும்பு* (ஆ.அக.); a kind of thick and tall sugarcane.

*[ஒருகா. இங்கு - இங்குவ - இங்குய - இங்குச + கண்டன். இங்குதல் = நெருங்குதல். நெருங்கி அடர்ந்து வளரும் நிலைத்திணை வகை.]*

**இங்குசி** *inguši,* பெ. (n.) *இங்குசக்கண்டன்* பார்க்க; see *ingušakkaṇḍaṉ.* (சா.அக.).

**இங்குணம்** *inguṇam,* பெ. (n.) *பூதிமரம்;* இது காரீயத்தைச் செந்தூரம் பண்ண உதவும்; tree capable of reducing lead into a red oxide. (சா.அக.).

*[இங்கு - இங்குணம்.]*

**இங்குத்தி** *ingutti,* பெ. (n.) *இங்குற்றி* பார்க்க; see *inguṟṟi;* (செ.அக.).

*[ஒருகா. இங்கு + (உறு + இ) - உற்றி - இங்குற்றி - இங்குத்தி. இங்கு எழுந்தருளியிருக்கும் தாங்கள் என்னும் மதிப்புரவுச் சொல். அவ்விடம், இவ்விடம் என்பனவும் இப்பொருட்டே.]*

**இங்குத்தை** *inguttai,* பெ. (n.) *இவ்விடம்;* here. "இங்குத்தை நின்றுந் துரப்பன்" (திவ். நாச். 5, 10) (செ.அக.).

*[இங்கு - இங்குத்து - இங்குத்தை. இங்குத்து, இங்கிட்டு என்பன கொச்சை வழக்கு.]*

**இங்குப்த்திரி** *ingupattiri,* பெ. (n.) *இங்கிலை* பார்க்க; see *ingilai* (சா.அக.).

**இங்குமங்கும்** *ingumangum,* வி. எ. (adv.) *அங்கிங்கு, அனைத்திடத்திலும்;* here and there, every where.

*[இங்கும் + அங்கும்.]*

**இங்குயில்** *inguyil,* பெ. (n.) *பெருங்காயம்* (சா.அக.); asafoetida.

*[இங்கு - இங்குயில்.]*

**இங்குலிகம்** *inguligam,* பெ. (n.) *சாதிலிங்கம்;* vermilion; red mercuric sulphide. "அகழு மிங்குலிக மஞ்சன வரைச் சொரிவன" (சீவக. 1898). (செ.அக.). 2. *சிவப்பு* (நாநார்த்த.); redness. (செ.அக.).

தெ. இங்குலிகம். *Skt.* hingula.

*[இல் → இங்கு → இங்குள் - இங்குளிகம் → இங்குலிகம்.]*

**இங்குளி** *inguli,* பெ. (n.) *பெருங்காயம்;* asafoetida. "இங்குளி வாங்குங் கலம்போல" (சி. பொ. 10,2,3). (செ.அக.).

க., தெ. இங்குவ.

*[இங்கு → இங்குள் → இங்குளி.]*

**இங்குற்றி** *inguṟṟi,* பெ. (n.) *திருமடத்தம்பிரான்மார் போலும் உயர்ந்தோரை நோக்கி வழங்கும் முன்னிலை உயர்வுச்சொல்;* term of highest respect, used in addressing religious dignitaries like heads of mutts meaning their worthiness or their holiness.

*அங்குற்றி* பார்க்க; see *anguṟṟi.*

[ஈங்கு + உற்றீர் - இங்குற்றீர் - இங்குற்றி. இங்கு எழுந்தருளி யிருக்கும் தாங்கள் என உயர்வுப்பன்மைப் பொருள் தந்தது. முன்னிலையாரை முன்னிலைப்படுத்திப் பேசுவது மதிப்புக் குறைவு என்று கருதி இடஞ்சுட்டிப் பேசுவது பழைய மரபு ஆங்கிலத்தில் His Exellency என்பதை ஒப்பிடுக.]

**இங்கே** *iṅgē*, வி. எ. (adv.) 1. ***இங்கு*** (திவ். திருவாய். 8.10.3.); here. (செ.அக.). 2. ***இவ்விடத்தில்;*** on this side of the place.

ம. இங்கே.

*[இங்கண் → இங்கு + ஏ.]*

**இங்கை**[1] *iṅgai*, பெ. (n.) ***இண்டங்கொடி*** (சா.அக.); plant.

*[இண்டு - இஞ்சு - இங்கு - இங்கை.]*

**இங்கை**[2] *iṅgai* வி. எ. (adv.) ***இங்கு, இவ்வாறு;*** here, thus.

*[ஈங்கு - இங்கு - இங்கை. (மு. தா. 324).]*

**இங்ஙன்** *iṅṅaṉ*, வி. எ. (adv.) ***இவ்வாறு;*** thus. ''இங்ஙனி யற்றிய மகத்தின்'' (கந்தபு. யாகசங். 127).

*[ஈங்கன் - இங்ஙன்.]*

**இங்ஙனம்** *i-ṅ-ṅ-aṉam*, வி. எ. (adv.) 1. ***இங்கு;*** here, in this place. ''இங்ஙனம் வருதலென்னா'' (தணிகைப்பு. வீராட். 102). 2. ***இவ்வாறு;*** thus, in this manner. ''இன்னதுன் கருத்தே லிங்ஙனமாக'' (தணிகைப்பு. சீபரி. 141).

ம. இங்ஙனெ, இங்ஙினெ.

*[ஈங்கண் - இங்ஙன் - இங்ஙனம். (மு. தா. 324).]*

**இச்சகம்** *iccagam*, பெ. (n.) 1. ***முகமன்;*** flattery, sycophancy. ''வரத்திலே கண்ணும் வாக்கி லிச்சகமும்'' (பிரபோத. 11,16). 2. ***பெறக்கருதிய தொகை*** (சங். அக.); money desired or result sought. (செ.அக.).

*[இசை → இச்சு → இச்சகம்.]*

**இச்சத்துப் பெருக்கம்** *iccattu-p-perukkam*, பெ. (n.) ***ஆசை வெள்ளம்;*** profuse love, excessive desire (பரி. 7,37).

*[இச்சை + அத்து + பெருக்கம்.]*

**இச்சம்** *iccam*, பெ. (n.) ***இச்சை;*** wish. ''புணர்த்திய விச்சத்துப் பெருக்கத்திற் றுனைந்து'' (பரிபா. 7, 37). (செ.அக.).

*[இசை - இச்சை - இச்சம்.]*

**இச்சலாத்தி** *iccalātti*, பெ. (n.) ***துன்பம்*** (இ.வ.); annoyance, trouble.(செ.அக.).

*[அச்சலத்தி → இச்சலத்தி → இச்சலாத்தி.]*

**இச்சாவான்** *iccāvāṉ*, பெ. (n.) ***இச்சையுடையோன்*** (ஆ.அக.); one who is desirous; devoted person.

*[இச்சை + அவன் - இச்சையவன் - இச்சாவான் (கொ.வ.).]*

**இச்சி-த்தல்** *icci-*, 4 செ.குன்றாவி. (v.t.) ***விரும்புதல்;*** to desire, wish, crave for, covet. ''இச்சித்த இன்பம் நுகராமல் இளைத்த மெய்யாள்'' (பாரத. திரௌபதி. 75). (செ.அக.).

*[இள் → இழை → இயை → இசை (விருப்பம்)*
*இள் - இள் + து - இத்து → இச்சு → இச்சி → இச்சித்தல்.]*

**இச்சி** *icci*, பெ. (n.) 1. ***கல்லிச்சி*** (L.); oval - leaved fig. 2. ***மர வகை.*** (L); jointed ovate - leaved fig, l.tr., Ficus tsiela. (செ.அக.).

*[இத்தி - இச்சி.]*

**இச்சிச் செனல்** *icciccenal*, இடை. (part.) ***புள் முதலியவற்றை வெருட்டும் ஒலிக்குறிப்பு;*** onom. expr. for scaring away birds, etc., ''காக்கை தனை யெய்யக் கோலில்லாமல் இச்சிச்சிச்சென்றானே'' (பெருந்தொ. 1424) (செ.அக). 2. ***சலிப்பைக்காட்டும் ஒலிக்குறிப்பு*** (இச்சுக்கொட்டுதல்); onom. expr. indicating low spirits.

*[இச்சு - ஓர் ஒலிக்குறிப்புச் சொல். இச்சு + இச்சு + எனல்.]*

**இச்சியால்** *icciyāl*, பெ. (n.) ***இத்தி*** (மூ.அ.); jointed ovate - leaved fig. (செ.அக.).

*[இத்தி - இச்சி + ஆல்.]*

**இச்சியை** *icciyai*, பெ. (n.) 1. ***கொடை;*** gift, offering. 2. ***வேள்வி;*** sacrifice. 3. ***பூசனை;*** worship. (செ.அக.).

*[இள் + து - இத்து - இச்சு = விருப்பம்.*
*இச்சு - இச்சியை = விரும்பிக் கொடுப்பது.]*

**இச்சில்** *iccil*, பெ. (n.) ***இச்சியால்*** (மச்சபு. அத்திரி. 4) பார்க்க; see *icciyāl* (செ.அக.).

*[இத்தி → இத்தில் → இச்சில்.]*

**இச்சுக்கொட்டு-தல்** *iccu-k-kottu-*, 12 செ.கு.வி. (v.i.) 1. ***புள் ஒலித்தல்;*** to utter sounds, as birds. 2. ***ஒலிக்குறிப்பினால் மறுமொழி கூறுதல்;*** to reply or draw attention by 'cu'. (செ.அக.).

*[இச்சு + கொட்டுதல். இச்சு - ஒலிக்குறிப்பு. இது லொச்சு கொட்டுதல் எனத் திரிந்தது (கொ.வ.).]*

**இச்சை**[1] *iccai*, பெ. (n.) 1. ***விருப்பம்*** (திருவாச. 41, 9); wish, desire, inclination. 2. ***பத்தியோடு புரியுந் தொண்டு;*** devoted service. ''ஆட்கொண்டாய்க் கென் னினியான்செயு மிச்சைகளே'' (தேவா. 672,6). 3. ***வினா*** (சங்.அக.); (Math.) question, problem, (செ.அக.). 4. ***இடித்தல்;*** pounding. 5. ***உறுதிச்சொல்;*** assurance. 6. ***பாலுணர்வில் நாட்டம்;*** sexual desire. (ஆ.அக.).

*[இல் - இள் - இட்டம். இள் - இத்து - இச்சு - இச்சை. ஒ. நோ: நள் - நத்து - நச்சு - நசை. இள் - இத்து - இச்சு - இசை (புகழ், விருப்பம்). வடதமிழில் வழக்கூன்றித் தென்தமிழில் பண்டே வழக்கழிந்ததால் வடமொழிச்சொல் போல் தோற்றம் தருகின்றது. அலை - அசை ஆனாற்போல*

*இலை - இசையாகாமையின் இச்சை - இசை எனத் திரிந்ததே ஒப்பத்தக்கது என்க.]*

த. இச்சை > *Skt.* icchā

**இச்சை**[2] *iccai*, பெ. (n.) 1. ***அறியாமை;*** ignorance, spiritual ignorance. 2. ***பொய்கூறுகை;*** lying, uttering falsehood. (செ.அக.).

*[இல் - இன்மை. இல் - இய் - இச்சை = உள்ளீடின்மை, அறியாமை, பொய்மை. ஒ.நோ. பொய் - பொய்ச்சை -பொச்சை - பொச்சி (உட்டுளையுள்ள மலவாய்), பொச்சி கொங்குநாட்டு வழக்கு.]*

**இச்சையடக்கம்** *iccai-y-aḍakkam*, பெ. (n.) ***ஆசையை அடக்கிக் கொள்ளுகை*** (விவிலி.கலா.6,23.); control of desires, self-restraint. (செ.அக).

*[இச்சை + அடக்கம்.]*

**இசக்கி** *isakki*, பெ. (n.) ***இசக்கியம்மன்*** பார்க்க; see *isakkiyammaṉ*

ம. இசக்கு; *Skt.* yakṣi.

*[இயக்கி - இசக்கி .]*

**இசக்கியம்மன்** *isakki-y-ammaṉ*, பெ. (n.) ***கொற்றவையின் பெயர்களுள் ஒன்று;*** name of a form of Durgā, worshipped in South India. (செ.அக.).

*[இயக்கி - இசக்கி + அம்மன்.]*

**இசக்குப்பிசக்கு** *isakku-p-pisakku*, பெ. (n.) ***இசகு பிசகு*** (தெ.ஆ.) பார்க்க; see *isagu-pisagu*.

*[இசகுபிசகு - இசக்குப்பிசக்கு.]*

**இசகல்** *isagal*, பெ. (n.) ***நரம்பு இழுத்துக்கொள்ளல்;*** dislocation of muscles or joints.

*[இழுகு - இசகு - இசகல் (சு.வி.31).]*

**இசகுதப்பு** *isagu-tappu*, பெ. (n.) ***எசகு பிசகு*** பார்க்க; see *esagu-pisagu*.

மறுவ. எக்கு தப்பு, இசகுபிசகு.

*[இசகு + தப்பு.]*

**இசகுபிசகு** *isagu-pisagu*, பெ. (n.) 1. ***முறைகேடு;*** (தெ.ஆ.); irregularity, inconsistancy, ***இசகுபிசகாக நடக்கின்றான்.*** (தெ.ஆ.). 2. ***குழப்பம்*** confusion. 3. ***பிறழ்வு;*** dislocation. (செ.அக.).

*[இழுக்கு - இழுகு - இசுகு - இசகு ஒ.நோ. பிழை - பிழகு - பிசகு. இசகு + பிசகு - இசகுபிசகு = இழுக்கும் பிழையும் ஆகிய குறைபாடுகள். எசகு பிசகு என்பது கொச்சை வழக்கு. எசகு - எக்கு எனவும் எக்குதப்பு (எசகுதப்பு) எனவும் கொங்கு நாட்டில் வழங்குகிறது.]*

**இசங்கு**[1] **-தல்** *isaṅgu-*, 5 செ.குன்றாவி. (v.t.) ***போதல்;*** to go on, to lead to, as a way. "ஸ்ரீபிருந்தா வனத்துக்கு வழி இசங்கும்படி" (ஈடு.5,10,2); (செ.அக.).

*[இயங்கு - இசங்கு - இசங்குதல்.]*

**இசங்கு**[2] *isaṅgu*, பெ. (n.) ***சங்கஞ்செடி*** (பிங்.); mistletoe-berry thorn. (செ.அக.).

ம. இசங்கு

**இசடு** *isaḍu*, பெ. (n.) ***அசறு, பொருக்கு;*** scab, flake.

*[அசறு - அசடு - இசடு.]*

**இசதாரு** *isadāru*, பெ. (n.) ***கடப்ப மரம்;*** common Indian oak (சா.அக.).

*[இய - இச + தாரு. இய - கடவுள், முருகன். இசதாரு -முருகனுக்குரிய மரம்.]*

**இசப்பு-தல்** *isappu-*, 5 செ. குன்றாவி. (v.t.) ***ஏமாற்றுதல்;*** to deceive. (இ.வ.).

*[இயப்பு - இசப்பு. இயப்பு - இயைந்தாற்போல் காட்டி ஏமாற்றுதல்.]*

**இசலாட்டம்** *isalāṭṭam*, பெ. (n.) ***இகலாட்டம்*** (வின்.); strife. (செ.அக.).

*[இகலாட்டம் - இசலாட்டம்.]*

**இசலி** *isali*, பெ. (n.) 1. ***பிணங்குபவள்;*** quarrelsome woman. "குசலிக ளிசலிகள் முழுமோசம்" (திருப்பு.243) (செ.அக.). 2. ***சூளுரை*** (ஆ.அக.); challenge, vow.

*[இகலி - இயலி - இசலி.]*

**இசலிப்புழுக்கு-தல்** *isali-p-puḻukku-*, 14 செ.கு.வி. (v.i.) ***கலகப்படுதல்***(இ.வ.); to get entangled in a quarrel; start a quarrel (செ.அக.).

*[இகலி - இசலி + புழுக்குதல்.*
*புழுக்குதல் = மனம் புழுங்கி பகை பாராட்டுதல்.]*

**இசவேல்** *isavēl*, பெ. (n.) ***உடைவேல்;*** tree having large thorns; arrow thorn tree. (சா.அக.).

*[இல் - இளி - இசி + வேல். இசி - குத்துதல், முள்.]*

**இசி**[1] **-த்தல்** *isi-*, 4 செ.கு.வி. (v.i.) 1. ***நரம்பிழுத்தல்*** (கொ.வ.); to contract, as the muscles in spasms. 2. ***நோவுண்டாதல்*** (கொ.வ.); to ache, as the muscles from over exertion.

*[இழு - இசு - இசி. (கொ.வ.).]*

**இசி**[2] **-த்தல்** *isi-* 4. செ.குன்றாவி. (v.t.) 1. ***இழுத்தல்;*** to pull, draw, drag. "முட்களிற் கட்டியிசித்திட" (திருப்பு. 310). 2. ***முறித்தல்*** (திவா.); to break off. 3. ***உரித்தல்*** (வின்.); to strip off, as bark. (செ.அக.). 4. ***ஒடித்தல்*** (ஆ.அக.); to snap. 5. ***இணுங்கல்,*** நகத்தால் களைந் தெடுத்தல்; to nip.

*[இழு - இசு - இசி.]*

**இசி**[3] **-த்தல்** *isi-*, 4 செ.கு.வி. (v.i.) ***சிரித்தல்*** (சது.); to laugh. (செ.அக.).

H. hangsna.

*[இளி - இசி.]*

**இசி**[4] *isi*, பெ. (n.) 1. ***உரிக்கை*** (வின்.); stripping, as bark, leaves, or fibre. 2. ***ஒடிக்கை*** (வின்.); breaking off, as a branch. 3. ***நகத்தால் களைந்தெடுத்தல்*** (ஆ.அக.); nipping.

*[இழு - இசு - இசி.]*

**இசிகடுகு** *iśikaḍugu.* பெ. (n.) ***செங்கடுகு;*** brown mustard. (சா.அக.).

*[எல் - எலில் - எழில் (செந்நிறம்). எழில்கடுகு - எழிகடுகு - எசிகடுகு - இசிகடுகு. இந்தி உள்ளிட்ட வடபுல மொழிகளில் எழில் - லால் எனத் திரிந்து செந்நிறம் குறித்தல் காண்க.]*

**இசிகப்படை** *iśiga-p-paḍai,* பெ. (n.) ***ஒருவகை யம்பு;*** a kind of arrow. "இசிகப்படை யெய்தான்" (கம்பரா. நிகும்.130) (செ.அக.).

*[இல் - இள் (பிளவு) - இளி - இசி - இசிகம் + படை.]*

**இசித்தல்** *iśittal,* பெ. (n.) 1. ***இணுங்குதல்;*** pulling off, as bark, leaves, fibre etc. 2. ***சிரித்தல்;*** laughing. 3. ***நரம்பிழுத்தல்;*** straining of the muscles 4. ***நோவுண் டாதல்;*** aching. (சா.அக.).

*[இழுத்தல் - இசித்தல்.]*

**இசிப்பு**[1] *iśippu,* பெ. (n.) 1. ***இழுக்கை*** (வின்); pull, strain. 2. ***நரம்பு வலிப்பு*** (வின்.); spasm, convulsion, contraction of the muscles. (செ.அக). 3. ***வயிற்றுவலி;*** stomach pain.

*[இழுப்பு - இசிப்பு.]*

**இசிப்பு**[2] *iśippu,* பெ. (n.) ***சிரிப்பு*** (வின்.); laughter.

*[இளி - இளிப்பு - இசிப்பு.]*

**இசியிழை** *iśiyiḻai,* பெ. (n.) ***நெகிழத்தக்க நார்;*** elastic fibre. (சா.அக.).

*[இழி - இசி - இழை.]*

**இசிவு** *iśivu,* பெ. (n.) 1. ***நரம்பிழுப்பு*** (கொ.வ.); spasm, convulsions. 2. ***மகப்பேற்றுத்துன்பம்*** (கொ.வ.); labour pains. (செ.அக.). 3. ***வயிற்றுவலி*** (ஆ.அக.); stomach pain. 4. ***உரிவு;*** peeling. 5. ***இழுப்பு;*** a sudden attack of fits (சா.அக.).

*[இழுப்பு → இசிப்பு → இசிவு.]*

**இசின்** *iśin,* இடை. (part.) 1. ***இறந்தகால இடை நிலை*** (நன்.145, விருத்.); tense part. of verbs, showing the past, as in என்றிசினோர். 2. ***அசைநிலை;*** a poetic expletive. "காதலன்மா நீ மற்றிசினே". (தொல்.சொல். 298, உரை). (செ.அக.).

*[ஈ - ஈய் - ஈயின் - ஈசின் இசின். (ஈ - ஈதற்பொருள்) தோற்றத்தால், 'வரின்', 'உணின்' என்றாற் போன்று செயின் என்னும் வாய்பாட்டு வினையெச்சமாகக் காணப்படினும், ஈயினன், ஈயினள், ஈயினர் என்பவற்றின் பொது வினைமுற்று மரூஉ வடிவமே என்க. இவை இடைநிலையுமாகும். (தொல். சொல். 1. உரை பாவாணர் அடிக்குறிப்பு) போங்காணும், இருங்காணும் முதலிய கூட்டு வினைகளில் துணை வினையாக வருபவை காலப்போக்கில் வெறும் அசைநிலைகளாதலும் உண்டு. அஃதொப்ப இசின் என்னும் துணைவினை இறந்த காலப் பொருளிலும் அசைநிலைப் பொருளிலும் வழக்கூன்றி யது. தொல்காப்பியரும் நன்னூலாரும் இதனை வெறும் 'சின்' என்னும் இடைச் சொல்லாகக் கருதினர். 'சின்' பார்க்க. see 'sin']*

**இசீகம்** *iśīgam,* பெ. (n.) 1. ***ஒருவகைக் கரும்பு;*** a kind of sugar-cane. 2. ***மூசையிலிட்டு உருக்கும் மாழைகள் உருகினவாவென்று சோதிக்கும் இரும்புக் காம்பு;*** a small stick or iron rod used for trying whether the gold or other metal in a crucible is melted or not, iron rod used in fusion of metals.

*[இளகம் - இளிகம் - இசிகம் - இசீகம் (கொ.வ.).]*

**இசும்பு** *iśumbu,* பெ. (n.) 1. ***வழுக்கு;*** precipice. "இசும்பினிற் சிந்தைக்கு மேறற்கரிது" (திருக்கோ. 149). 2. ***ஏற்ற விறக்கங்கள் மிகுந்த கடுவழி.*** (திருக்கோ. 149, உரை); rugged and broken pathway that is full of ascents and descents. (செ.அக.). 3. ***நீர்க்கசிவு;*** percolation of water. 4. ***எட்கசிவு;*** sesamum seeds ground into a pulp. (செ.அக.).

*[இழி - இழிம்பு - இசிம்பு - இசும்பு.]*

**இசை**[1] **-தல்** *iśai* - 4 செ.கு.வி. (v.i.) 1. ***பொருந்துதல்;*** to fit in, as one plank with another in joining. 2. ***ஒத்துச்சேர் தல்;*** to harmonise; to conform, as time-measure and melody. தாளம் அராகத்திற்கு இசைந்துள்ளது. 3. ***உடன் படுதல்;*** to consent, acquiesce, agree. "விண்பெறினு மிசையார் கொலைபொய்" (திருநூற்.83). 4. ***கிடைத் தல்;*** to acquire or get possession of. "ஈண்டு கனக மிசையப் பெறா அது" (திருவாச.2,39). 5. ***இயலுதல்;*** to be possible; to be with in one's power. "இசையா வொரு பொருளில்லென்றல்" (நாலடி.111) (செ.அக.).

ம. இசயுக.

*[இயை - இசை.]*

**இசை**[2]**-த்தல்** *iśai-,* 3 செ.குன்றாவி. (v.t.) 1. ***உண்டு பண்ணுதல்;*** to bring about. "இறுதியை யிசைத்த கந்தனை" (விநாயகபு.75,578). 2. ***கட்டுதல்*** (திவா.); to bind, tie, fasten. 3. ***ஒத்தல்;*** resemble. "கூற்றிசைக்கு மென" (பாரத.இராச.52). 4. ***மிகக் கொடுத்தல்*** (பிங்.); to give lavishly. (செ.அக.).

*[இயை - இசை.]*

**இசை**[3] *iśai,* பெ. (n.) 1. ***இசைவு*** (வின்.); union, agreement, harmony. 2. ***பொன்*** (அக.நி.); gold. 3. ***ஊதியம்;*** gain, profit. "இசைபெறுவா னெண்ணி யிழந் தாள் முதலும்" (சிவப்பிர. வெங்கையுலா.328). (செ.அக.).

*[இயை - இசை.]*

**இசை**[4] *iśai,* பெ. (n.) ***வண்மை*** (அக.நி.); bounty, liberality.(செ.அக.).

*[இசை - புகழ், புகழ்தரத்தக்க கொடைத்தன்மை.]*

**இசை**[5] *iśai,* பெ. (n.) ***திசை*** (அக.நி.) cardinal points, direction. (செ.அக.).

*[திசை - இசை.]*

**இசை**[6] *iśai,* பெ. (n.) ***பண்;*** music.

*[இயைத்தல் - பொருத்துதல், அடித்தல், முழக்குதல், ஒலித்தல். இயை - இசை. இசைத்தல் - ஒலித்தல், பேசுதல், புகழ்தல், பாடுதல்.]*

இசை(3) மந்தரம், மத்திமம், தாரம். இசை(7) குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம். இவற்றுள் மிடற்றால் குரல், நாவால் துத்தம், அண்ணத்தாற் கைக்கிளை, தலையால் உழை, நெற்றியால் இளி, நெஞ்சால் விளரி, மூக்கால் தாரம். (இவற்றிற்கு ஓசையுவமை) முறையே மயில், இடபம், ஆடு, கொக்கு, குயில், குதிரை, யானை. (சுவையுவமை) பால், தேன், கிழான், நெய், ஏலம், வாழை, மாதுளங்கனி. (மணவுவமை). மௌவல், முல்லை, கடம்பு, வஞ்சி, நெய்தல், பொன்னா விரை, புன்னை. (எழுத்துகள்) ஆஅ, ஈஇ, ஊஉ, ஏஎ, ஐஇ, ஓஒ, ஔஉ, (மாத்திரைகள்) குரல் 4, துத்தம் 4, கைக்கிளை 2, உழை 3, இளி 4, விளரி 3, தாரம் 2, இவற்றுள் ஏழுபாலை பிறக்கும். பாலையைக் காண்க. (அபி.சிந்)

**இசை**[7] *iśai,* பெ. (n.) 1. ***ஓசை;*** sound, noise. "விண்ணதி ரிமிழிசை கடுப்ப" (மலைபடு.2). 2. ***சொல்;*** word from its being a combination of the sounds of letters which, together, convey a meaning. "இசைதிரிந் திசைப்பினும்" (தொல். பொருள்.195). 3. ***புகழ்;*** praise, fame, renown, opp.to வசை. "ஈட்ட மிவறி யிசை வேண்டா வாடவர்." (குறள்,1003). 4. ***இசைப்பாட்டு;*** song, music. "வாய்த்தில விசையென வாயுலர்ந்தனள்" (திருவாலவா. 57,25). 5. ***நரம்பிற் பிறக்கும் ஓசை;*** instrumental music. "இன்னிசை வீணையி லிசைந்தோன் காண்க." (திரு வாச.3,35). 6. ***இனிமை;*** sweetness, agreeableness. 7. ***ஏற்ற இறக்கம்;*** modulation of the voice in recitation, pitch of three degrees, high, low and middle, ஏந்திசை, தூங்கிசை, ஒழுகிசை. 8. ***சீர்*** (யாப்.வி.22); (pros.) foot. 9. ***சுரம்*** (பெருங்.வத்தவ.5,6); the gamut containing the seven notes, viz., குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம். (செ.அக.).

ம. இச; க., கூ. எச. *skt.* yasas.

*[இயை - இசை.]*

**இசை**[8]**-த்தல்** *iśai-,* 4. செ.கு.வி. (v.i.) 1. ***ஒலித்தல்*** (தொல்.பொருள்.195); to sound. 2. ***யாழ் முதலியன ஒலித்தல்;*** to sound as a musical instrument "பறையெ ழுந் திசைப்ப" (கலித்.104,29) 3 செ.குன்றாவி. (v.t.) 1. ***சொல்லுதல்;*** to disclose, express "மார்பனிற்றென விசைத்த லோடும்." (சீவக.203). 2. ***அறிவித்தல்;*** to indicate, signify. "காலை யிசைக்கும் பொழுதொடு புலம்புகொள்" (பதிற்றுப்.81,5). 3. ***பாடுதல்;*** to sing. "கோகிலப் பறவைக ளிசைத்தல்"(கந்தபு.நாட்டு.44). 4. ***இசைக்கருவி இசைத்தல்;*** to play, as on a flute. "யாழிசைக்குப்புக்கு" (தொல்.சொல்.310,உரை).

*[இயை - இசை. இயை - பொருத்து, அடி, முழக்கு, ஒலியெ ழுப்பு, இசைத்தல், ஒலித்தல், பேசுதல், பாடுதல், பண்ணுக் கேற்ற இசைக்கருவிகளில் ஓசை எழுப்புதல்.]*

**இசைக்கரணம்** *iśai-k-karaṇam,* பெ. (n.) ***இசைக் கருவியிற் காட்டுந் தொழில்*** (சிலப்.7.,கட்.15); different methods of handling the string of musical instruments so as to produce various tones. (செ.அக.).

*[இசை + கரணம். கருத்தல் = செய்தல். கரணம் = செய்கை. அவை பண்ணல், பரிவட்டணை, ஆராய்தல், தைவரல், செலவு, விளையாட்டு, குறும்போக்கு முதலியன.]*

**இசைக் கருவி** *iśai-k-karuvi,* பெ. (n.) ***இசையை உண்டாக்கும் கருவி;*** musical instrument. (செ.அக.).

*[இசை + கருவி. அவை தோற் கருவி, துளைக்கருவி, நரம்புக் கருவி, மிடற்றுக்கருவி, கஞ்சக்கருவி என்பன.]*

**இசைக்கழல்** *iśai-k-kaḻal,* பெ. (n.) ***வீரக் கழல்;*** ornament.

*[இசை + கழல். இசை - புகழ். கழல் - வீரக்கழல். தேர் நூறு, குதிரை ஆயிரம், யானை நூறு, காலாள் பதினாயிரம், போரில் மடியவென்ற வெற்றிபெற்ற வேந்தர் இடக்காலிலணியும் வீரவெண்டயம்.]*

**இசைக்காரன்** *iśai-k-kāraṉ,* பெ. (n.) ***பாடுவோன்*** (சிலப்.3,64,உரை); one who sings. (செ.அக.).

*[இசை + காரன்.]*

**இசைக்கிளை** *iśai-k-kiḷai,* பெ. (n.) ***ஆயத்தம், எடுப்பு*** முடுக்கு (உற்கிரகம்), அலைவு (சஞ்சாரம்), இடாயம் என்ற ஐவகை இசை (பெரியபு. ஆனாய.26.உரை); (Mus.) modes, of five kinds, viz., āyattam, eḍuppu, uṟkiragam, cañcāram, iḍāyam.

*[இசை + கிளை.]*

**இசைக்குதல்** *iśaikkudal,* பெ. (n.) ***சொல்லுதல்*** (ஆ.அக.); uttering, speaking.

*[இசை - இசைக்குதல்.]*

**இசைக்குரற்குருவி** *iśai-k-kuraṟ-kuruvi,* பெ. (n.) ***குயில்;*** koel, the Indian cuckoo. (செ.அக.).

*[இசை + குரல் + குருவி.]*

**இசைக்குழல்** *iśai-k-kuḻal,* பெ. (n.) ***குழற்கருவி*** (பிங்.); flute, pipe made of bamboo or of some metal tube. (செ.அக.).

*[இசை + குழல்.]*

**இசை கடன்** *iśai kaḍaṉ,* பெ. (n.) ***நேர்த்திக் கடன்;*** vow made to a deity. "கோயிலுக்குப்போய் இசைகடன் முடித்து" (எங்களூர்.41). (செ.அக.).

*[இசை + கடன்.]*

**இசைகாரர்** *iśai-kārar,* பெ. (n.) 1. ***பாடுவோர்;*** singers. "இசைகாரர் பத்தர்பரவு மாயிரத்தின்" (திவ்.திருவாய். 1,5,11). 2. ***பாணர்*** (திவா.); lute-players, the itinerant bards of ancient times. (செ.அக.).

*[இசை + காரர் - இசைக்காரர் - இசைகாரர் (கொ.வ.).]*

**இசைகுடிமானம்** *iśai-kuḍimāṉam,* பெ. (n.) ***திரும ணத்தில் எழுதப்படும் சான்று ஆவணம்.*** (C. and T., Vol.v.P.267); written document executed by the

bridegroom's father and attested by witnesses in marriages among Nāṭṭukōṭṭai Cheṭṭiyārs.

*[இசை + குடிமானம். இசைவு - இசை. குடிமானம் - குடித்தனம், இல்லறம். இல்லறம் ஏற்கும் மணமக்களுக்கான ஒப்பந்தம்.]*

**இசைகேடு**[1] *isai kēḍu* பெ. (n.) 1. ***புகழின்மை;*** loss of fame; disrepute. 2. ***இசைத் தவறு*** (ஸ்வரத்தவறு); (Mus.) false note, disaccord in music. 3. ***சீர்கெட்ட நிலை;*** reduced circumstances, disreputable condition. (செ.அக.).

*[இசை - புகழ். இசை + கேடு.]*

**இசைகேடு**[2] *isai-kēḍu* பெ. (n.) 1. ***மதிகேடு;*** awkward predicament. 'இசைகேடாகக் காரியம் நடந்துவிட்டது.' 2. ***தவறான நிலை;*** wrong position. 'இசைகேடாகப் படுத்துக் கொண்டேன், சுளுக்கேறிவிட்டது.' 3. ***ஒழுங்கின்மை;*** disorder, irregularity. 4. ***பொருத்தமின்மை;*** disagreement, incompatibility. 5. ***கெடுதி*** (Pudu. Insc.609); damage, irregularity (செ.அக.).

*[இசை + கேடு. கெடு - கேடு.]*

**இசைகொள்ளல்** *isaikollal,* பெ. (n.) ***புகழ்பெறல்*** (ஆ.அக.); gain reputation, become famous.

*[இசைவு + கொள்ளல்.]*

**இசைகோள்** *isai-kōl* பெ. (n.) ***தாளம்*** (ஆ.அக.); rhythm.

*[இசை + கோள். இசைக்குக் கொள்ளப்படுவது. கொள் - கோள்.]*

**இசைச்சிதடி** *isai-c-cidaḍi,* பெ. (n.) ***ஓசையையுடைய சிள்வீடு*** (பதிற்று.58;13); beetle which makes shrill sound.

*[இசை + சிதடி.]*

**இசைச்சுவை** *isai-c-cuvai,* பெ. (n.) 1. ***பாடுவதற்காகக் குரலிசையைப் பக்குவப்படுத்தும் தின்பண்டங்கள் எனக் கருதப்படுபவை:*** தேன், பால், நெய், ஏலம், வாழைப்பழம், மாதுளங்கனி முதலியன; eatables serving to modulate the sound of the voice for singing, such as honey, milk, ghee, cardamom, plantain, pomegranate etc. (popular belief). 2. ***இசையின்பம்;*** enjoyment of music, appreciation of music.

*[இசை + சுவை.]*

**இசைஞானியார்** *isai ñaniyār,* பெ. (n.) ***சடையனாரின் மனைவி, சுந்தரமூர்த்தி நாயனாரைப் பெற்றவர்.*** (பெரியபுராணம்.); wife of Caḍaiyaṉār and mother of the great Śaiva śaint Śundaramoorthi.

*[இசை + ஞானி + ஆர்.]*

**இசைத்தமிழ்** *isai-t-tamiḻ,* பெ. (n.) ***முத்தமிழுள் ஒன்று*** (பிங்.); Tamil poetry composed to suit the several melody - types and time-measures; that division of Tamil literature which consists of verses set to music as dist. fr. poetry or drama; one of Mu-t-tamil.

*[இசை + தமிழ். முத்தமிழ்ப் பாகுபாட்டுள் இசைத் தமிழ் பண்ணமைக்கப்பட்ட பாடல். இலக்கியத்தைக் குறித்தது.]*

**இசைந்தவேளை** *isainda vēlai,* பெ. (n.) ***ஏற்புடைய நேரம்*** (ஆ.அக.); appropriate time, suitable occassion.

*[இயைந்த → இசைந்த + வேளை.]*

**இசைநாள்** *isai-nāḷ,* பெ. (n.) 1. ***முற்கொழுங்கால்*** (பூரட்டாதி.) (சங்.அக.); (சோதிட.); the 25th naksatra (star). 2. ***பிற்கொழுங்கால்*** (உத்தரட்டாதி.) (சங்.அக.); (சோதிட.); the 26th naksatra. (star). (செ.அக.).

*[இசை[1] + நாள்.]*

**இசைநிறை** *isai-niṟai,* இடை. (part.) ***செய்யுளில் இசை நிறைத்தற்கு வருஞ்சொல்*** (நன்.395); (Poet.) expletive used to fill a gap in the metre. (செ.அக.).

*[இசை + நிறை. இசையை நிறைப்பது.]*

**இசைநிறைசொல்** *isai niṟaicol,* பெ. (n.) ***இசைநிறை பொருளைத் தரும்சொல்,*** (ஆ.அக.); word appearing as a poet. expletive.

*[இசை + நிறை + சொல்.]*

**இசைநிறையசைச்சொல்** *isai-niṟai-y-aśai-c-col,* பெ. (n.) ***இசையை நிறைத்தற்பொருட்டு வருமசைச் சொல்.*** (ஆ.அக.); word used as poet. expletive.

*[இசை + நிறை + அசை + சொல்.]*

**இசைநிறையேகாரம்** *isai-niṟai-ēgāram,* பெ. (n.) ***ஈற்றசையேகாரம்*** (ஆ.அக.); vowel 'ஏ' appearing at the end of a verse as poet. expletive.

*[இசை + நிறை + ஏகாரம்.]*

**இசைநுணுக்கம்** *isai-nuṇukkam,* பெ. (n.) ***ஓர் இசை நூல்*** (இறை.1,உரை); work on music ascribed to Siganṭi a member of the Middle Tamil Sangam. (செ.அக.).

*[இசை + நுணுக்கம்.]*

இது சாரகுமாரன் இசை அறிதற்பொருட்டுச் சிகண்டியாரால் செய்யப்பட்ட இசைநூல்: அகத்தியர் காலத்திருந்தது; இடைச் சங்க மருவியதென்றுங் கூறுவர். (அபி.சிந்.).

**இசைநூபுரம்** *isai-nūpuram,* பெ. (n.) ***வீரனணியுங் கழல்*** (சங்.அக.); single anklet worn on his right ankle by the mighty warrior who, among other deeds of valour, has also slain an elephant.

*[இசை = புகழ். இசை + நூபுரம்.]*

**இசைநூல்** *isai-nūl,* பெ. (n.) ***இசையைப்பற்றிக் கூறும் நூல்*** (சிலப். 3,60, அரும்.); treatise on music. (செ.அக.).

*[இசை + நூல்.]*

**இசைப்பா** *isai-p-pā,* பெ. (n.) ***இசையோடு சேர்ந்த பாக்களிலொருவகை*** (சிலப்.6,35,உரை); one of two classes of musical composition, the other class being known as இசையளவுபா (செ.அக.).

*[இசை + பா.]*

**இசைப்பாட்டு** *isai-p-pāttu,* பெ. (n.) ***இலக்கியப் பாட்டு*** (சிலப்:பதி.60, உரை); song, musical composition. (செ.அக.).

*[இசை + பாட்டு.]*

**இசைப்பாடு** *isai-p-pāḍu,* பெ. (n.) ***புகழ் மிகுதி*** (பிங்.); rise of fame. (செ.அக.).

*[இசை + பாடு.]*

**இசைப்பாணர்** *isai-p-pāṇar.* பெ. (n.) ***பாணருள் ஒரு வகையார்*** (தொல்.பொருள்.91, உரை); division of the ancient Pāṇar caste, famous for their singing, minstrels. (செ.அக.).

*[இசை + பாணர்.]*

**இசைப்பு**[1] *isaippu,* பெ. (n.) 1. ***சொல்*** (திவா.); word. 2. ***யாழ் முதலியன இசைத்தல்*** (தொல்.சொல்.310); playing on a musical instrument.

*[இசை → இசைப்பு.]*

**இசைப்பு**[2] *isaippu,* பெ. (n.) ***இசைவு*** (பிங்.); combination, suitability. (செ.அக.).

*[இயை + இயைப்பு + இசைப்பு.]*

**இசைப்பு**[3] *isaippu,* பெ. (n.) 1. ***பொருத்துகை;*** joining so as to fit in. 2. ***பொருத்து;*** joint. (செ.அக.).

*[இசை + இசைப்பு.]*

**இசைப்புள்** *isai-p-puḷ,* பெ. (n.) 1. ***அன்றிற் பறவை;*** a species of bird. 2. ***குயில்;*** koel. (ஆ.அக.).

*[இசை + புள்.]*

**இசைப்பெருந்தானம்** *isai-p-peruntāṇam,* பெ. (n.) ***இசை பிறக்குமிடம். அவை: நெஞ்சு, மிடறு, நாக்கு, மூக்கு, அண்ணாக்கு, இதழ், பல், தலை.*** (ஆ.அக.); organic points where musical sound originates.

*[இசை + பெரும் + தானம்.]*

**இசைப்பொறி** *isai-p-poṟi,* பெ. (n.) ***செவி;*** ear, the sense of hearing. "வேறிசைப்பொறி விழியலா துற்றி லான்." (சேதுபு.காசிபத்.30). (செ.அக.).

*[இசை - ஒலி, ஓசை. இசை + பொறி.]*

**இசைபேதம்** *isai-pēdam,* பெ. (n.) ***இசைகேடு*** பார்க்க; see *isaikeḍu.* (செ.அக.).

*[இசை + பேதம்.]*

**இசைமகள்** *isai-magaḷ,* பெ. (n.) ***கலைமகள்*** (பிங்.); Sarasvati, being the goddess of articulate sounds. (செ.அக.).

*[இசை + மகள்.]*

**இசைமடந்தை** *isai-maḍandai* பெ. (n.) ***இசைமகள்*** (சூடா.) பார்க்க; see isaimagaḷ (செ.அக.).

*[இசை + மடந்தை.]*

**இசைமணி** *isaimaṇi,* பெ. (n.) ***பதினாயிரம் பேரை வென்ற வேந்தர் வலக்காலிலணியும் பொன்னாற் செய்த வீர கண்டை*** (சங்.அக.); tinkling gold anklet worn on his right ankle by a king who has slain 10,000 men, in battle. (செ.அக.).

*[இசை = புகழ். இசை + மணி.]*



இசைமணி

**இசைமரபு** *isai marabu,* பெ. (n.) ***ஓர் இசைநூல்*** (சீவக.658,உரை); an ancient work on music. (செ.அக.).

*[இசை + மரபு.]*

**இசைமறை** *isai maṟai,* பெ. (n.) ***சாமவேதம்*** (திவ்.திரு வாய்.8,9,9); Sāmavēda, as the vēda of musical chants. (செ.அக.).

*[இசை = பண். இசை + மறை.]*

**இசைமாத்திரை** *isai māttirai.* பெ. (n.) ***இசைக்குரிய மாத்திரைகள்;*** musical measure of time.

*[இசை + மாத்திரை.]*

அவை குரலிற்கு நான்கும், துத்தத்திற்கு நான்கும், கைக்கி ளைக்கு மூன்றும், உழைக்கு இரண்டும், இளிக்கு நான்கும், விளரிக்கு ஒன்றும், தாரத்திற்கு இரண்டுமாம். (ஆ.அக.)

**இசைமுட்டி** *isaimutti,* பெ. (n.) ***செருந்தி*** (மலை.); panicled golden-blossomed pear-tree. (செ.அக.).

*[இசை + முட்டி.]*

**இசைமை** *isaimai,* பெ. (n.) 1. ***புகழ்;*** honour, esteem, the desire for abstention, at all costs, from blameworthy actions. "கல்வி தறுக ணிசைமைகொடை" (தொல்.பொ ருள்.257). 2. ***ஒலி*** (பரிபா.13,14); sound. (செ.அக.).

*[இசை → இசைமை.]*

**இசையளவுகண்டான்** *isai-y-aḷavukaṇḍāṉ,* பெ. (n.) ***பாண்டியன் அரி இருக்கை.*** (I.M.P.M.200); name of the throne of the Pāṇḍya kings. (செ.அக.).

*[இசை + அளவு + கண்டான்.]*

**இசையளவுபா** *isai-yaḷavu-pā,* பெ. (n.) ***இசையோடு சேர்ந்த பாக்களு ளொருவகை*** (சிலப்.6,35,உரை.); one of two classes of musical compositions the other class being known as (இசைப்பா) Isaippā.

*[இசை + அளவு + பா.]*

**இசையறிபறவை** *isai-y-ari-paṟavai,* பெ. (n.) ***அசுணம்*** (கேகயம்) (பிங்.); reputed bird that can discern notes of music. (செ.அக.).

*[இசை + அறி + பறவை.]*

**இசையறு-த்தல்** *isai-y-aṟu-,* 4 செ.கு.வி. (v.i.) ***ஓசை வேறுபடப் பிரித்தல்;*** to distinguish by intonation. இசையறுத்து உச்சரித்துக் காண்க. (நன்.91, சங்கர.) (செ.அக.).

*[இசை + அறு.]*

**இசையாசிரியன்** *isai-y-āsiriyaṉ* பெ. (n.) ***இசைப்புலவன்*** (சீவக.672, உரை); teacher of music, expert musician. (செ.அக.).

*[இசை + ஆசிரியன்.]*

**இசையாயிரம்** *isai-y-āyiram,* பெ. (n.) ***செயங்கொண்டார் செட்டிமார்கள் மேல் ஆயிரம் பாடல்களாற் பாடிய நூல்*** (தமிழ்.நா.பக்.42); panegyric, not now extant, consisting 1000 verses sung in praise of the chetti community by Jeyankoṇḍār. (செ.அக.).

*[இசை + ஆயிரம்.]*

**இசையானந்தம்** *isai-y-āṉandam* பெ. (n.) ***அவலமுற்றிருந்தோர்க்குரிய இசைகள் தலைவன் பாட்டிற்கு இசையாகி வரப்புணர்க்கும் நூற்குற்றம்*** (யாப்.வி.பக். 524); fault of poetic composition in which the melody types of the dirge or the elegy appropriate to the emotion of sorrow are introduced into an eulogistic poem in praise of a hero.

*[இசை + ஆனந்தம்.]*

**இசையியம்** *isai-y-iyam,* பெ. (n.) ***ஒலிக்குமுழவு.*** (அகநா.25.); musical drum.

**இசையிலக்கணம்** *isai-y-ilakkaṇam,* பெ. (n.) ***இசைக்குரிய இலக்கணம். அவை: ஆடல், பாடல், ஆதியிசை, முத்தமிழ், பண், பாணி, தூக்கு, முடம், தேசிகம் என்பன.*** (ஆ.அக.); elements of musical grammar.

*[இசை + இலக்கணம்.]*

**இசையின்செல்வி** *isaiyiṉ celvi,* பெ. (n.) ***புகழ்மகள்;*** the goddess of fame. "இசையின்செல்வி எண்டிசை வளர்ப்ப" (S.I.I.iv.284) (செ.அக.).

*[இசை + இன் + செல்வி.]*

**இசையுரிச்சொல்** *isai-y-uri-c-col,* பெ. (n.) ***ஓசையாலறியப்படும் குணச்சொல்*** (ஆ.அக.); word in musical usuage.

*[இசை + உரி + சொல்.]*

**இசையுள்ளான்** *isai-y-uḷḷāṉ,* பெ. (n.) ***சிறந்தவன், புகழ்மிக்கோன்;*** gentleman, one who is famous. (ஆ.அக.).

*[இசை + (உள்ளவன்) + உள்ளான்.]*

**இசையெச்சம்** *isai-y-eccam,* பெ. (n.) ***சொற்றொடரில் சொற்கள் எஞ்சிய பொருளுணர்த்தி வருவது*** (தொல்.சொல்.440.சேனா.); omission from a sentence, of words needed to complete the sense; ellipsis for the sake of brevity or elegance.

*[இசை + எச்சம்.]*

"அளித்தஞ்ச லென்றவர் நீப்பிற் றெளித்தசொற் றேறியார்க் குண்டோ தவறு" (குறள்.1154) நீத்தார்க்கே தவறு என எஞ்சிய இசைப்பொரு ளுணர்த்தலான் இசை யெச்சமாயிற்று. (தொல்.சொல்.440.சேனா).

**இசையெஞ்சணி** *isai-y-eñjaṇi* பெ. (n.) ***இசையெச்சம்*** (ஆ.அக.); figure of speech.

*[இசை + எஞ்சு + அணி.]*

**இசையெடு-த்தல்** *isai-y-eḍu,* 4 செ.கு.வி. (v.i.) 1. ***பாடுதல்;*** to sing a tune, sing the praise of. "என்னையா ளுடைய நாயகிக் கிசையெடுப்பவள்." (கம்பரா.அகலிகை.6). 2. ***அராகம் தொடங்குதல்;*** start a song. 3. ***இசை பாடுதல்;*** to execute a musical concert. (ஆ.அக.).

*[இசை + எடு.]*

**இசையெழுத்து** *isai-y-eḻuttu,* பெ. (n.) ***இசைக்குரிய எழுத்துகள். அவை;*** ஆ, ஈ, ஊ, ஏ, ஓ, ஐ, ஔ; letters signifying pitch duration of a musical sound.

*[இசை + எழுத்து. பண்டைக்காலத்தில் ஆ, ஈ, ஊ, ஏ, ஓ, ஐ, ஔ என்னும் ஏழு எழுத்துகளே ச, ரி, க, ம, ப, த, நிக்குப் பகரமாக இருந்தன.]*

**இசையோசை** *isai-y-ōsai* பெ. (n.) ***இசைக்குரிய ஓசைகள். அவை: வண்டு, கிளி, குதிரை, யானை, குயில், பெற்றம், ஆடு என்பன*** (ஆ.அக.); the sound of music.

*[இசை + ஓசை. குதிரைக்கு மாற்றாகக் குருகு இருத்தல் வேண்டும்.]*

**இசையோர்** *isaiyōr,* பெ. (n.) ***கந்தருவர்;*** Gandharvas. "இசையோர் தேய வியக்கம்." (பெருங்.மகத.14,267). (செ.அக.).

*[இசை + (ஆர்) ஓர்.]*

**இசையோலை** *isai-y-ōlai,* பெ. (n.) ***ஒப்பந்த ஓலை*** (I.M.P.N.A727); deed of consent or acceptance. (செ.அக.).

*[இசை = இசைவு. இசை + ஓலை.]*

இசைக் கருவிகள்:



தோற்கருவி



நரம்புக்கருவி



கஞ்சக்கருவி



துளைக்கருவி

**இசையோன்** *isaiyōn,* பெ. (n.) ***இசைக்காரன்*** (சிலப்.3, 64); one who sings to the accompaniment of instrumental music. (செ.அக.).

*[இசை + (ஆன்) ஓன்.]*

**இசைவந்தோன்** *isai vandōn,* பெ. (n.) ***புகழ் பெற்ற வன்;*** well known person, gentleman.

க. எசவந்த.

*[இசை + வந்தோன்.]*

**இசைவல்லோர்** *isaivallōr,* பெ. (n.) 1. ***கந்தருவர்;*** Gandaruva. 2. ***இசைப்பாடகர்;*** musician. 3. ***இசைப்புல வர்*** (ஆ.அக.); teacher of music.

*[இசை + வல்லோர்.]*

**இசைவலான்** *isai valān,* பெ. (n.) ***இசை பாடுவதில் மிக்கான்*** (ஆ.அக.); musician, maestro, musicologist.

*[இசை + (வல்லான்) - வலான்.]*

**இசைவளை** *isai-valai.* பெ. (n.) ***குதிரை நூறு போர்க்களத்திற் பொருதுவென்ற மறவர் காற்பெரு விரலில் அணியும் வளை*** (ஆ.அக.); anklet worn by a hero who had defeated a cavelry consisting of more than 100 horses.

**இசைவாணர்** *isai vāṇar,* பெ. (n.) 1. ***பாடகர்;*** career musicians. "தெள்ளுதமிழ் வாண ரிசை வாணர் சூழ" (திருவாலவா.57,22). (செ.அக.). 2. ***இசைவல்லோர்*** (ஆ.அக.); expert musicians.

*[இசை + வாணர். வாழ்நர் - வாணர்.]*

**இசைவிரும்பி** *isai virumbi,* பெ. (n.) ***அசுணம்*** (ஆ.அக.); music loving bird.

*[இசை + விரும்பி.]*

**இசைவிளங்கு கவிகை** *isai vilangu kavigai,* பெ. (n.) ***புகழ் விளங்கிய இடக்கவிந்த கை;*** famous hand which tilts to give presents. ".....வுமணர் கீழ்மரத் தியாத்த சேமவச் சன்ன இசைவிளங்கு கவிகை நெடி யோய்" (புறம்.102). (சங்.இலக்.சொற்.).

*[இசை + விளங்கு + கவி + கை.]*

**இசைவு** *isaivu,* பெ. (n.) 1. ***பொருந்துகை;*** suitability, fitting in one with another. "இன்னவைபிறவு மிசைவில வெல்லாம்" (பெருங்.மகத.15,9). 2. ***தகுதி;*** fitness. 3. ***உடன்பாடு;*** agreement, consent, approval. "மறை யோரி சைவினால்.........அளிப்பாராகி" (பெரியபு. சண் டேசுர.24). 4. ***ஏற்றது;*** appropriateness. கைக்கிசைவான குறுந்தடி. (செ.அக.). 5. ***இணக்கம்;*** agreement (ஆ.அக.). 6. ***பொருத்து*** (ஆ.அக.); joining so as to fit in, coordination.

*[இசை → இசைவு.]*

**இசைவுக்குலைவு** *isaivu-k-kulaivu,* பெ. (n.) ***இசைவு கேடு*** (தஞ்சை.); mal-adjustment (செ.அக.).

*[இசைவு + குலைவு.]*

**இசைவுகேடு** *isaivu kēḍu* பெ. (n.) 1. ***பொருத்த மின்மை*** (வின்.); difference, conflict, disagreement. 2. ***செயல் தவறு;*** failure, as of a project or undertaking. 'இசைவு கேடாய்ப்போன காரியம்.' (கொ.வ.) (செ.அக.).

*[இசைவு + கேடு.]*

**இசைவுதீட்டு** *isaivu-tīṭṭu,* பெ. (n.) ***உடன்படிக்கை ஆவணம்*** (S.I.I.v.371.); deed of agreement. (செ.அக.).

*[இசைவு + தீட்டு.]*

**இசைவுபிசகு** *isaivu-pisagu,* பெ. (n.) 1. ***இணக்க மின்மை;*** incongruity. 2. ***இசகு பிசகு*** (ஆ.அக.); error, irregularity.

*[இசைவு + பிசகு.]*

**இசைவுபிறழ்வு** *isaivu-piralvu,* பெ. (n.) 1. ***ஒழுங் கின்மை;*** disorder. 2. ***இசைவு கேடு;*** disagreement. (செ.அக.).

*[இசைவு + பிறழ்வு.]*

‡**இஞ்சக்கம்** *iñjakkam,* பெ. (n.) ***கையூட்டு*** (தஞ்சை.); bribe, wrongful gratification. (செ.அக.).

*[ஒருகா. இஞ்சுதல் - உறிஞ்சுதல், பறித்தல். அக்கம் - காசு. இஞ்சு + அக்கம். தவறான வழியில் பெறப்படும் பணம்.]*

**இஞ்சம்** *iñjam,* பெ. (n.) ***வெண்காந்தள்*** (மலை.); white malabar glory lily.

*[எல் - இல் - இஞ்சு - இஞ்சம்.]*

**இஞ்சி**[1] *iñji,* பெ. (n.) 1. ***கரிப்புள்ள இஞ்சிப்பூண்டு;*** ginger plant. M.sh. Zingiber officinale, "இஞ்சிவீ விராய பைந்தார் பூட்டி" (பதிற்றுப்.42,10). "மஞ்சளும் இஞ்சி யும் மயங்கரில் வலயத்து" (சிலப்.10.74). 2. ***இஞ்சிக் கிழங்கு;*** ginger-tuber. "இஞ்சி தின்ற குரங்கு போல பஞ்சரித்தல் (தொந்தரவு செய்தல்)."



இஞ்சி

மறுவ. செய்யாப்பாவை, இஞ்சிவேர், இஞ்சிப்பாவை, இஞ் சிக்கிழங்கு.

ம. இஞ்சி; குட. இஞ்சி; கோத. இஞ்சி; பிரா, பாலி. சிங்கி; பர். சிங்கிவேர.

*Skt.* Srngavera; *M.E.* gingivere; *O.fr.* gengibre, *L.L.* gingiber; *G.K.* Zingiberis; *E.* ginger; *Malay.* injivēr.

*[இஞ்சு - இஞ்சி.]*

'ஈ' அண்மையைச் சுட்டுமாறு உதட்டைப் பின்னுக்கு இழுத்தொலிக்கும் உயிரொலி. ஈ - ஈல் - ஈர் - ஈர்த்தல் = இழுத்தல். ஈர்தல் - இழுத்தறுத்தல், பல்லாற் கடித் திழுத்து உரித்தல், இழுத்தல் = அறுத்தல்.

ஈல் - இல் - இள் - இழு. ஒ.நோ: கொள்கொம்பு - கொழு கொம்பு. கொள்நன் - கொழுநன். இழுத்தல் = பின்னிழுத்தல், உள்ளிழுத்தல், உறிஞ்சுதல், இள் -(இய்) - (இய்ஞ்சு) - இஞ்சு.

இஞ்சுதல் = நீரை உள்ளிழுத்தல், நிலத்தில் நீர் சுவறுதல். இஞ்சு - இஞ்சி = நீரை உள்ளிழுத்துத் திரண்டிருக்கும் கிழங்கு வகை; அஃதுள்ள பூண்டு. இஞ்சி காய்ந்து நீர் வற்றினாற் சுக்கு. சுக்கு = நீர் வறண்டிருப்பது. சுள்ளுதல் (சுள்ளெனல் = காய்தல்) நீர்வற்றுதல். சுள் - சுள்கு - சுட்கு - சுக்கு. ஒ.நோ: வெள் - வெள்கு - வெட்கு - வெக்கம். கொள் - கொட்கு - கொக்கு = வளைந்த கழுத்துள்ள பறவை.

இஞ்சி பித்தத்தைப் போக்கும் எனப்படுவதால் மருந்துக ளிலும் கறிவகைகளிலும் பெரும்பாலும் கூட்டுச்சரக்கா கச் சேர்க்கப்படுகிறது.

**இஞ்சி**[2] *iñji*, பெ. (n.) ***கொத்தான்*** (மூ.அ.); parasitic leafless plant. (செ.அக.).

*[இஞ்சுதல் = சுவறுதல். இஞ்சு → இஞ்சி.]*

**இஞ்சி**[3] *iñji*, பெ. (n.) ***செம்புருக்கி வார்த்துத் திண்மை யாகச் செய்யப்பட்ட மதில்;*** ramparts of a fort. "கொடுங்க ணிஞ்சி" (பதிற்றுப்.16.1.) (செ.அக.).

*[உல் - ஒல். ஒல்லுதல் = பொருந்துதல். உல் - உர் - உறு. உறுதல் = பொருந்துதல், செறிதல், வலியுறுதல். உறு - உறுதி = திண்மை, வலிமை. உர் - உரம் = வலிமை, உறு - உற. உறத்தல் = செறிதல், இறுகுதல். "விறப்பும் உறப்பும் வெறுப்பும் செறிவே" (தொல்.சொல்.345). உறந்த இஞ்சி = இறுகிய மதில். உல் உள் - அள் = செறிவு (திவா.), வன்மை.(சூடா.) அள்ளல் = நெருக்கம். அள்ளாகுதல் = செறிதல். அள்ளிருள் = செறிந்த இருட்டு. அள்ளுதல் = செறிதல் (சீவக.614) உள் - இள் - (இய்) - (இய்ஞ்சு) - இஞ்சு (ஒ.நோ: குள் -(குய்) - (குய்ஞ்சு) - குஞ்சு. புள் - பிள் - பிய் - (பிய்ஞ்சு) -பிஞ்சு. கொள் - கொய். பொள் - பொய். இஞ்சுதல் = செறிதல், இறுகுதல், திணிதல். இஞ்சு - இஞ்சி = திணிந்த மதில் வகை.]*

பெரும்பாலும் செம்பு புனைந்தியற்றியதாகவும் சிறுபான்மை அரைத்த சாந்திட்டமைத்ததாகவும் பகைவரால் எளிதில் தாக்க முடியாதவாறு திண்ணிதாகக் கட்டப்பட்ட மதில். ஏனை வகை மதில்களிலும் மிக இறுகியிருத்தல் பற்றி இஞ்சி எனப்பட்டது.

**இஞ்சிக்கருக்கு** *iñji-k-karukku*, பெ. (n.) ***இஞ்சிச் சாற்றைக் கொதிக்க வைத்த குடிநீர்;*** boiled juice of ginger.

*[இஞ்சி + கருக்கு.]*

**இஞ்சிக்கிழங்கு** *iñji-k-kilaṅgu*, பெ. (n.) ***இஞ்சிவேர்;*** the tuber of the ginger plant. (சா.அக.).

*[இஞ்சி + கிழங்கு.]*

**இஞ்சிச்சத்து** *iñji-c-cattu*, பெ. (n.) ***இஞ்சிக்கிழங்கின் சாரம். இதைச் சாராயத்திலூறவைத்துப் பிறகு அத னின்று சாறு எடுப்பதுண்டு;*** essence of ginger. This is generally made by steeping it in alchohol. (சா.அக.).

**இஞ்சிச் சாறு** *iñji-c-cāṟu* பெ. (n.) ***இஞ்சியிலிருந்து எடுக்கும் சாறு;*** ginger juice.

*[இஞ்சி + சாறு.]*

**இஞ்சிச்சுண்ணம்** *iñji-c-cuṇṇam*, பெ. (n.) ***இஞ்சிச் சாற்றினடியில் நிற்கும் சுண்ணாம்பு;*** the white chalk - like deposit found of the juice of ginger. (சா.அக.).

*[இஞ்சி + சுண்ணம்.]*

**இஞ்சித்தித்திப்பு** *iñji-t-tittippu*, பெ. (n.) ***இஞ்சி விறைப்பு*** பார்க்க; see *iñji virai-p-pu.*

*[இஞ்சி + தித்திப்பு.]*

**இஞ்சித் தீஞ்சாறு** *iñji-tīñ-cāṟu*, பெ. (n.) ***இஞ்சிச் சாறும் சருக்கரையுங் கலந்து காய்ச்சி வடித்த ஒருவ கைப் பாகு;*** syrup of ginger. (சா.அக.).

*[இஞ்சி + தீம் + சாறு.]*

**இஞ்சித்துவையல்** *iñji-t-tuvaiyal*, பெ. (n.) ***இஞ்சி யைப் பிற கறிப்பொருள்களோடு சேர்த்தரைத்த ஒரு வகை சுண்டாங்கி;*** ginger made into a paste by treating it with other condiments for use as a side dish for food. (சா.அக.).

ம. இஞ்சிப்பச்சடி. (இஞ்சி, தயிர் போன்றவற்றால் செய்யப்ப டும் பச்சடி.)

*[இஞ்சி + துவையல்.]*

**இஞ்சித்தேறு** *iñji-t-tēṟu*, பெ. (n.) ***இஞ்சித்துண்டு*** (யாழ்ப்.); small piece of green ginger. (செ.அக.).

*[இஞ்சி + தேறு. தெறிதல் - கடித்தல், நறுக்குதல், தெறு - தேறு. (நறுக்கிய துண்டு).]*

**இஞ்சி நீர்** *iñji nīr*, பெ. (n.) ***இஞ்சிச் சாறு;*** juice of green ginger. (சா.அக.).

*[இஞ்சி + நீர்.]*

**இஞ்சிப்பாகு** *iñji-p-pāgu*, பெ. (n.) ***இஞ்சிக்கூழ்வகை*** (வின்.); a kind of ginger electuary. (செ.அக.).

*[இஞ்சி + பாகு.]*

**இஞ்சிப்பாவை** *iñji-p-pāvai*, பெ. (n.) ***இஞ்சிக்கிழங்கு*** (மலைபடு.125, உரை); ginger in the shape of a doll. (செ.அக.).

**இஞ்சிப்புளிப்பு** *iñji-p-pulippu* பெ. (n.) ***காடியிலூற வைத்த இஞ்சி;*** green ginger preserved in vinegar (சா.அக.).

*[இஞ்சி + புளிப்பு.]*

**இஞ்சி மாங்காய்** *iñji-māṅgāy*, பெ. (n.) ***இஞ்சி வகை.*** (Madr.); mango ginger. (செ.அக.).

ம. இஞ்சி மாங்காய்.

*[இஞ்சி + மாங்காய்.]*

**இஞ்சிமுறைப்பா** *iñji muṟaippā*, பெ. (n.) ***இஞ்சி விறைப்பு*** பார்க்க; see *iñji viṟaippu.*

*[இஞ்சி + விறைப்பு - இஞ்சிவிறைப்பு → இஞ்சிவிறைப்பா → இஞ்சிமுறைப்பா. யவன (யூனானி) மருத்துவர்கள் இஞ்சி விறைப்பினை இஞ்சி முறைப்பா என வழங்குவது கடுங் கொச்சை வழக்காகும்.]*

**இஞ்சியடைக்காய்** *iñji-yaḍaikkāy*, பெ. (n.) ***இஞ் சியை உப்பிலிட்ட ஊறுகாய்;*** ginger pickled in salt.

*[இஞ்சி + அடை + காய்.]*

**இஞ்சியூறுகாய்** *iñji-y-ūṟukāy*, பெ. (n.) ***இஞ்சியுடன் மசாலையுங் கூட்டி எண்ணெய்யிலிட்ட ஊறுகாய்;*** ginger pickled in gingelly oil. (சா.அக.).

*[இஞ்சி + ஊறுகாய்.]*

**இஞ்சிவடிப்பு** *iñji-vaḍippu*, பெ. (n.) ***இஞ்சிவிறைப்பு*** பார்க்க; see *iñji-viṟaippu.*

**இஞ்சி விறைப்பு** *iñji viṟaippu*, பெ. (n.) 1. ***இஞ்சியை அறுத்துத் தேனிலிட்டுப் பாகம் செய்த ஒரு பாகு;*** ginger crushed and preserved in honey. 2. ***இஞ்சியை வெல்லத்திலிட்டுச் சமைத்த ஒருவகைச் சுண் டாங்கி;*** boiled with jaggery or sugar and used in food to give it relish; a seasoning for food.

மறுவ. இஞ்சிவடிப்பு, இஞ்சிமுறைப்பா, இஞ்சித் தித்திப்பு.

*[இஞ்சி + விறைப்பு.]*

**இஞ்சிவேர்** *iñjivēr*, பெ. (n.) ***இஞ்சிக்கிழங்கு, இஞ்சிப்பாவை;*** ginger root.

ம., குட., கோத. இஞ்சி; பர். சிங்கிவேர.

*L.* Zingiber; *G.K.* Zingiberis; *LL.* gingiber; *OE.* gingiber; *E.* ginger; *Skt.* Srngavera.

*[இஞ்சு - இஞ்சி + வேர். இஞ்சுதல் = நீரை உள்ளிழுத்தல்.]*

இஞ்சி என்பது தொன்றுதொட்டுத் தமிழ்நாட்டில் விளைந்து வரும் மருந்துக் கிழங்கு. "செய்யாப் பாவை வளர்ந்து கவின் முற்றிக் காயங் கொண்டன இஞ்சி" (மலைபடு.125-6). "இஞ் சிவிராய பைந்தார் பூட்டி" (பதிற்றுப்.42.10). "மஞ்சளும் இஞ்சியும் மயங்கரில் வலயத்து" (சிலப்.10:74).

இஞ்சி, கிறித்துவிற்கு முற்பட்ட பண்டைக்காலத்திலேயே இங் கிருந்து மேனாடுகளுக்கு ஏற்றுமதியான பொருள்களுள் ஒன் றாம்.

"மேலையாரியச் சொற்களெல்லாம் இஞ்சிவேர் என்னும் தமிழ் வடிவைப் பெரிதும் ஒத்திருக்கின்றன. அவற்றை வழங்குவோ ரும் அவற்றைத் தமிழ்ச் சொல்லின் திரிபென ஒத்துக்கொள்வர். ஆயின் வடமொழியாளரோ இஞ்சிவேர் என்பதைச் சிருங்க வேர் எனத் திரித்து மான்கொம்பு போன்ற வடிவினது என்று வலிந்தும் நலிந்தும் பொருள் கூறி, அதை வடசொல்லாகக் காட்ட முயல்வர். 'ச்ருங்க' என்பது கொம்பு என்று மட்டும் பொருள்படும். இஞ்சிவேர் பொதுவாகக் கிளை கிளையாயிருப்பது பற்றி, அதை மான்கொம்பொடு ஒப்பிட்டு மான் என்னும் சொல்லை யும் சேர்த்துக் கொண்டது பொருந்துவதன்று. வேர என்பதும் 'உடம்பு' என்று பொருள்படுவதேயன்றி வேர் என்னும் பொருள் கொண்டதன்று", (வ.மொ.வ.87) எனப் பாவாணர் தந்துள்ள விளக்கத்தைக் காண்க.

**இஞ்சிவேர்ப் புல்** *iñji-vēr-p-pul*, பெ. (n.) ***சுக்குநாறிப் புல்*** (K.R.) பார்க்க; ginger-grass. (செ.அக.).

ம. இஞ்சிப்புல்லு.

*[இஞ்சி + வேர் + புல்.]*

**இஞ்சு[1]-தல்** *iñju-*, 15 செ.கு.வி. (v.i.) 1. ***சுவறுதல்*** (இ.வ.); to be absorbed, as water in the ground. 2. ***சுண்டுதல்*** (இ.வ.); to evaporate. 3. ***இறுகுதல்*** (வின்.); to be curdled, as milk, become congealed; get thick, as ghee.

க. இங்கு; தெ. இங்கு, இகுக, இவுரு, இமுரு, இனுகு, ஈகு; து. இங்கு.

*[இல் - (துளைத்தற் கருத்துவேர்) உட்புகுந்து துளைத்தலும் உள்ளீட்டை வெளியிலிழுத்துத் துளைத்தலும் ஆம். (இல் +து) - இல் + சு - இஞ்சு. இஞ்சுதல் = சுவறுதல், உள்ளீரம் அற்றுப்போதல்.]*

**இஞ்சு[2]-தல்** *iñju*, 12 செ.குன்றாவி. (v.t.) 1. ***குத்துதல்;*** to pierce, to stab. 2. ***வருத்துதல், துன்புறுத்துதல்;*** to cause pain, inflict.

*[இல் - இய் - இஞ்சு. ஒ.நோ. துல் - துய் (துயில்) - துஞ்சு.]*

**இஞ்சுசாரை** *iñju-sārai*, பெ. (n.) ***வெல்லம்*** (இராட்.) jaggery. (செ.அக.).

*[இஞ்சு + (சருக்கரை) சாரை. சருக்கரை - சாரை எனத் திரிந்தது மரூஉ. ஒ.நோ. பனை இஞ்சுசாரை > ம. பனஞ்சார. சருக்கரை = வட்டவடிவமாக வார்க்கப்படுவது. வார்க்கப்பட்டு ஈரம் குறைந்து கட்டியாதலின் இஞ்சுசாரை எனப்பட்டது.]*

**இஞ்சுச் சாறு** *iñju-c-cāṟu*, பெ. (n.) ***வெல்லம்;*** jaggery. (சா.அக.).

*[இஞ்சு + சாரை - இஞ்சிச்சாரை → இஞ்சிச்சாறு.]*

**இஞ்சை** *iñjai*, பெ. (n.) 1. ***துன்பம்;*** injury, harm. 2. ***கொலை;*** killing, slaying, murder. "இஞ்சைபொய் களவு" (உத்தரரா. அரக்கர்பிற.26). (செ.அக.).

*[இஞ்சு - இஞ்சை. > Skt. himsa.]*

**இட்டங்கட்டல்** *iṭṭaṅkaṭṭal-*, தொ.பெ.(vbl.n.) ***இட்டங் கட்டுதல்*** பார்க்க (ஆ.அக.); see *iṭṭaṅ-kaṭṭu.*

**இட்டங்கட்டு-தல்** *iṭṭaṅkaṭṭu*, 15 செ.கு.வி. (v.i.) ***ஓரை*** (இராசி) ***நிலை வரைதல்.*** (வின்.); note on a diagram of the Zodiac indicating the position of the various planets at a particular time. (செ.அக.)

*[இட்டம் + கட்டுதல். ஒருகா. விட்டம் - இட்டம். விண் - விட்டம் = விண்ணில் கோள்நிலை. இனி, விடு - விட்டம் (பிரிவு) என்றுமாம்.]*

**இட்டசட்டம்** *itta-cattam,* பெ. (n.) ***தன்னிச்சை*** (வின்.); freedom from constraint, free choice. (செ.அக).

*[இடு - இட்ட. இட்ட + சட்டம்.]*

**இட்டசித்தி** *itta-citti* பெ. (n.) *விருப்பவெற்றி* பார்க்க; see *viruppa-verri.*

**இட்டடுக்கி** *ittadukki,* பெ. (n.) ***காதணிவகை;*** old-fashioned ear-ornament; one of many ornaments worn through the ear-lobes. (செ.அக.).

*[இட்டு + அடுக்கி.]*

**இட்டடை** *ittadai,* பெ. (n.) ***இட்டிடை*** (வின்.); dial. (செ.அக.).

*[இட்டு + இடை - இட்டிடை - இட்டடை.]*

**இட்டடைச்சொல்** *ittadai-c-col,* பெ. (n.) ***தீச்சொல்;*** foul word. ''இட்டடைச் சொல்லார் பொறுப்பார்'' (பெருந்தொ.பக்.609). (செ.அக.).

*[இட்டிடை + சொல் → இட்டிடைச்சொல் → இட்டடைச்சொல்.]*

**இட்டம்** *ittam,* பெ. (n.) 1. ***கோள் நிலையால் விளையும் விளைவு;*** (astrol.) good or evil consequences resulting from the position and influence of a planet in the horoscope. 2. ***ஞாலத்தின் முனைக்கும்*** (துருவத் திற்கும்) ***ஓரைக்கும் இடையேயுள்ள தொலைவு*** (வின்.); (astron.) longitudinal difference between the turuvam and the end of a sign. (செ.அக.).

**இட்டலி** *ittali,* பெ. (n.) ***இட்டளி*** பார்க்க; see *ittali.*

*[இட்டளி → இட்டலி.]*

**இட்ட வழக்கு** *itta-valakku,* பெ. (n.) ***சொன்னது சட்டமாயிருக்கை;*** issuing an order or directive by sheer force of authority; dictatorial assertion. 'அவர்கள் இட்ட வழக்கா யிருக்குமிறே' (ஈடு.அக.ஜீ.) (செ.அக.).

*[இடு → இட்ட + வழக்கு.]*

**இட்டவை** *ittavai,* பெ. (n.) ***வழி*** (அக.நி.); path. (செ.அக.).

*[இட்டு - சிறிய. இட்டு - இட்ட. இயவு - வே - வை. இயவு = பாதை. இட்டு + இயவு - இட்டியவு - இட்டயவு - இட்டவை.]*

**இட்டளப்படு-தல்** *ittala-p-padu-,* 20 செ.கு.வி. (v.i.) ***சிறிய இடத்தில் திரண்டு தேங்குதல்;*** to be brought together as fragments and concentrated within a small space. ''சௌந்தரிய சாகரம் இட்டளப் பட்டுச் சுழித்தாற் போலே.'' (ஈடு.10,10,9). (செ.அக.).

*[இடு - இட்டு = சிறிது. அள் - அளம் = செறிதல், நெருங்குதல். இட்டு + அளம் - இட்டளம் + படுதல்.]*

**இட்டளம்**[1] *ittalam,* பெ. (n.) 1. ***நெருக்கம்;*** crowd, throng, concourse, insufficient air-space. ''பரமபதத்தி லிட்டளமுந்தீர்ந்தது'' (ஈடு.3,8,2). 2. ***துன்பம்;*** difficulty affliction, pain, sorrow ''அடியே னிட்டளம் கெடவே'' (தேவா.988,1). 3. ***தளர்வு*** (பிங்.); weakness, weariness.

**க.** இட்டள; **தெ.** இட்டல.

*[இட்டு + அளம். அள் - அளம் = செறிவு, நெருக்கம். இட்டு - சிறிது, சிறியஇடம்.]*

**இட்டளம்**[2] *ittalam,* பெ. (n.) 1. ***பொன்*** (பெரியபு.ஏயர் கோன்.133, உரை); gold. (செ.அக.). 2. ***துன்பம்;*** distress. ''என்செய்த வாறடிகேள் அடியேன் இட்டளங் கெடவே.'' (சுந்தரர் தேவா.988-1).

*[இட்டளம் = செறிவு, மிகுதி. மிகுதியாகக் காய்ச்சப்படும் பொன்.]*

**இட்டளர்** *ittalar,* பெ. (n.) ***மனக்கலக்கமுள்ளவர்*** (திருநூற்.61,உரை); unsteady, wavering persons. (செ.அக.).

*[இட்டளம் - சிறிய இடத்தில் நெருக்கமுறுதல். மனக்கலக்க மடைதல்.]*

**இட்டளி** *ittali,* பெ. (n.) ***அரிசிமாவும், உளுந்து மாவும் சேர்த்து ஆவியில் வேகவைக்கும் சிற்றுண்டி வகை;*** cake prepared by steaming semi-solid dough made of rice mixed with black gram.

**ம.** இட்டலி; **க.** இட்டலி; **தெ.** இட்டென.

*[இட்டம் - சிறிய இடத்தில் தேங்குதல். இட்டளப்படுதல், இட்ட ளித்தல் - தேங்கச் செய்தல். இட்டள் - இட்டளி.]*

**இட்டளிக்கொப்பரை** *ittali-k-kopparai,* பெ. (n.) ***இட்டளி சமைக்கும் ஏனம்;*** brass vessel into which the ittali-t-tattu. is placed for making steamed rice-cakes.(செ.அக.).

*[இட்டள் → இட்டளி + கொப்பரை.]*

**இட்டளிச்சட்டி** *ittali-c-catti,* பெ. (n.) ***இட்டளி வேகவைத்தற்குரியதோரேனம்.*** (பாண்டி.வழ.); the vessel in which ittali is prepared.

*[இட்டள் → இட்டளி + சட்டி.]*

**இட்டளித்தட்டு** *ittali-t-tattu,* பெ. (n.) ***இட்டளிவார்க் கும் தட்டு;*** perforated metal plate, with depressions, inserted into the ittali-k-kopparai, with the dough to steam and prepare rice-cakes.

*[இட்டளி + தட்டு.]*

**இட்டளித்தவலை** *ittali-t-tavalai,* பெ. (n.) ***இட்டளிக் கொப்பரை*** பார்க்க; see *ittali-k-kopparai.*

*[இட்டளி + தவலை.]*

**இட்டறுதி**[1] *ittarudi,* பெ. (n.) ***உறுதிசெய்த எல்லை*** (வின்.); limited time or space. (செ.அக.).

*[இடு → இட்டு + அறுதி. அறுதி - உறுதி, முடிவு. இட்டறுதி - உறுதியிடப்பட்டது - முடிவுசெய்யப்பட்டது.]*

**இட்டறுதி**[2] *ittarudi,* பெ. (n.) 1. ***இக்கட்டான நேரம்*** (வின்.); critical time. 2. ***வறுமை*** (வின்.); destitution, extreme want. (செ.அக.).

*[இட்டு - நெருக்கம், நெருக்கடி. அறு - அறுதி - நல்வாய்ப்பும் செல்வமும் அற்றுப்போன துன்பநிலை.]*

**இட்டறை** *ittarai,* பெ. (n.) ***யானையை வீழ்த்துங் குழி*** (சம்.அக.); invisible deep pit covered over with twigs etc. for catching elephants.

*[இட்டு - நெருக்கம்; சிறுமை அறை - சிறுமை இடம், பள்ளம்.]*

**இட்டன்** *ittan,* பெ. (n.) ***வணங்கத்தக்க பெரியவன்*** (நாநார்த்த.); venerable person. (செ.அக.).

**இட்டி**[1] *itti,* பெ. (n.) ***ஈட்டி;*** spear, lance. "இட்டிவேல் குந்தங் கூர்வாள்" (சீவக.2764). (செ.அக.).

ம., க. இட்டி; *Skt.* yaṣṭi.

*[ஈட்டி - இட்டி.]*

**இட்டி**[2] *itti,* பெ. (n.) 1. ***சுருக்கச் செய்யுள்;*** epigrammatic verse. 2. ***கொடை;*** gift. 3. ***பூசை;*** worship. 4. ***இச்சை;*** desire, longing.

*[இடு - இட்டு - இட்டி]*

**இட்டிகை**[1] *ittigai,* பெ. (n.) ***செங்கல்;*** bricks. "கண்சொரீஇ யிட்டிகை தீற்றுபவர்". (பழமொழி.108). (செ.அக.).

க. இட்டகெ, இட்டிகெ.

*[இட்டு - இட்டிகை (சிறிய வடிவிலான செங்கல்).]*

**இட்டிகை**[2] *ittigai,* பெ. (n.) 1. ***இடுக்கு வழி;*** narrow way. 2. ***கூட்டுமெழுகு;*** mixture of wax, resin, etc. (செ.அக.).

*[இட்டு = சிறிது. இட்டு - இட்டிகை.]*

**இட்டிகை**[3] *ittigai,* (n.) ***பலிபீடம்;*** alter for offering sacrifice. "நாட்பலி மறந்த நரைக்கண் இட்டிகை" (அகநா.287). (சங்.இலக்.சொற்.).

**இட்டிகை**[4] *ittigai,* பெ. (n.) 1. ***திண்மை,*** (குறள்.743 பரி.உரை); firmness, stability. 2. ***அருமை;*** rarity.

*[இட்டு - இட்டி = செறிவு, திண்மை, அருமை.]*

**இட்டிகை வாய்ச்சி** *ittigai-vāycci,* பெ. (n.) ***செங்கற் களைச் செதுக்கும் கருவி*** (சீவக.2689,உரை); chisel for cutting burned clay. (செ.அக.).



இட்டிகைவாய்ச்சி

*[இட்டிகை + வாய்ச்சி. வாய்ச்சி - வாயகன்ற கருவி.]*

**இட்டிடை**[1] *ittidai,* பெ. (n.) ***சிறுகிய இடை;*** slender waist. "இட்டிடையின் மின்னிப் பொலிந்து" (திருவாச.7, 16). (செ.அக.).

க. இட்டிடெ (நெருக்கம், சந்து).

*[இட்டு + இடை.]*

**இட்டிடை**[2] *ittidai,* பெ. (n.) 1. ***சிறுமை*** (சூடா.); smallness, minuteness. "இட்டிடை யிடை தனக்கு" (கந்தபு.தெய்வயா.183). 2. ***இடையூறு;*** hindrance, impediment. "மிகுபிணி யிட்டிடைசெய" (திருப்பு. 1053). 3 ***கடைசற்கருவியின் ஒருறுப்பு*** (யாழ்ப்.); vice in a turner's lathe. (செ.அக.).

*[இட்டு + இடை. இடை - முதனிலைப்பொருள் ஈறு.]*

**இட்டிடைஞ்சல்** *ittidaiñjal,* பெ. (n.) 1. ***துன்பம்;*** trouble, affliction.'யாதோர் இட்டிடைஞ்சலும் வாராமற் காப்பாற் றினான்.' (யாழ்ப்.). 2. ***வறுமை;*** adversity, straits, great want; இது இட்டிடைஞ்சல் வருங்காலத்திலுதவும் (யாழ்ப்.) (செ.அக.). 3. ***இட்டறுதி*** (வின்.); critical time.

*[இட்டு + இடைஞ்சல்.]*

**இட்டிது** *ittidu,* பெ. (n.) 1. ***சிறிது;*** scantiness, slenderness. "ஆகாறளவிட்டி தாயினும்" (குறள்.478). 2. ***அணுக்கம்;*** proximity, nearness. "இட்டிதாக வந்துரை மினோ" (தேவா.1240,2). (செ.அக.).

*[இட்டு → இட்டிது.]*

**இட்டிமை** *ittimai,* பெ. (n.) 1. ***சிறுமை*** (திவா.); smallness. 2. ***ஒடுக்கம்*** (திருக்கோ.149, உரை); narrowness. (செ.அக.).

*[இட்டு → இட்டிமை.]*

**இட்டிய** *ittiya,* கு.பெ.எ. (adj.) ***சிறிய*** (ஐங்குறு.215); small. (செ.அக.).

*[இட்டு → இட்டிய.]*

**இட்டியம்** *ittiyam,* பெ. (n.) *பாகம்* (ஆ.அக.); part.

*[இட்டு → இட்டியம்.]*

**இட்டிவனம்** *ittivaṉam,* பெ. (n.) *ஒரு சடங்கு* (ஆ.அக.); ritual.

*[இடு → இட்டி → இட்டிவனம்.]*

**இட்டிறை** *ittirai,* பெ. (n.) *இறையிடுகை* (கப்பம் கட்டுதல்); paying tribute. (திவ்.அக.).

*[இட்டு + இறை.]*

**இட்டீடு** *ittīdu,* பெ. (n.) *வழக்கு;* dispute. "என்னோட இட்டீடு கொண்டலல்லது தரியா தாளாய்" (ஈடு.8,2,6).

*[இட்டு + ஈடு. இடு → ஈடு = அடித்தல், அடிதடி, கலவரம், இட்டீடு = சில்லறைக் கலகம்.]*

**இட்டீடுகொள்ளு-தல்** *ittīdu-kollu-,* 16. செ.கு.வி. (v.i.) *சொல் கொடுத்துச் சொல் வாங்குதல்;* provoke greater irritation and retort. "அவனுக்கு இட்டீடுகொள்ளு கைக்குப் பற்றாசு இல்லாதபடி" (ஈடு.6,2,ப்ர). (செ.அக.).

*[இட்டு + ஈடு + கொள்ளு.]*

**இட்டீறு** *ittīṟu,* பெ. (n.) *செருக்காற்செய்யும் செயல்;* action proceeding from one's haughtiness or arrogance. "இட்டீறிட்டு விளையாடி" (திவ். நாச்சி.14,1). (செ.அக.).

*[இட்டு - சிறுமை. இட்டு + ஊறு → இட்டூறு → இட்டீறு. சிறுமையுறும் செயல்கள்.]*

*இட்டூறு* பார்க்க; see *ittūṟu.*

**இட்டு**[1] *ittu,* கு.வி.எ. (adv.) 1. *தொடங்கி;* beginning with. "முதலிட்டு ஐந்து பாட்டாலே" (திவ்.திருவாய்.2,10 பன்னீ.ப்ர.). 2. *காரணமாக* (கொ.வ.); for the sake of, on account of, as in அதையிட்டு வந்தான் - இடை. (part.) ஓர் அசை (உரி.நி.); expletive, as in செய்திட்டு. (செ.அக.).

*[இடு → இட்டு.]*

**இட்டு**[2] *ittu,* பெ. (n.) *சிறுமை;* smallness. "இட்டுவாய்ச் சுனைய" (குறுந்.193). (செ.அக.).

க. இட்டு.

*[இடு → இட்டு. இள் → இடு = சிறுத்தல்.]*

**இட்டு**[3] *ittu,* பெ. (n.) 1. *விருப்பம்;* desire. 2. *நுண்மை* (ஆ.அக.); minuteness.

*[இள் → இட்டு.]*

**இட்டுக்கட்டு-தல்** *ittu-k-kattu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. *இல்லாததை ஏற்றிச் சொல்லுதல்* (கொ.வ.); to concoct. 2. *கற்பனை செய்தல்*(ஆ.அக.); to draw upon the imagination, as in writing poetry or drama. 'அவன் கவி இட்டுக் கட்டுகிறான்' (செ.அக.). 3. *செயலை முடிக்க முனைந்து நிற்றல்;* to determine, to finish a deed.

*[இட்டு + கட்டு.]*

**இட்டுக்கொடு**[1]**-த்தல்** *ittu-k-kodu-,* 4. செ.குன்றாவி. (v.t.) *ஏற்றிக் கொடுத்தல்* (ஆ.அக.); to give over and above or extra. "ஒன்றிரண் டிட்டுக்கொடுத்த லியல்பு" (பு.வெ.1,17). (செ.அக.).

*[இடுதல் = வைத்தல். இடு → இட்டு + கொடு. இட்டுக்கொடுத்தல் = மேலொன்று வைத்துக்கொடுத்தல்.]*

**இட்டுக்கொடு**[2]**-த்தல்** *ittu-k-kodu-,* 4 செ.கு.வி. (v.i.) *புலாலுணவு படைத்தல்* (இராட்.); to serve meat. (செ.அக.).

*[இடுதல் = பிடுதல், பிசைதல். இடு → இட்டு + கொடு.]*

**இட்டுக்கொண்டுபோ-தல்** *ittu-k-kondu-pō-,* 10 செ.குன்றாவி. (v.t.) *கூட்டிக்கொண்டு செல்லுதல்* (கொ.வ.); to take a person along with oneself. (செ.அக.).

*[இட்டு + கொண்டு + போ. இடுதல் = வைத்தல். இடு → இட்டு = உடனழைத்து, உடன்வைத்து.]*

**இட்டுக்கொண்டுவா-தல்** (இட்டுக்கொண்டு வருதல்) *ittu-k-konduvā-,* 15 செ.குன்றாவி. (v.t.) *உடனழைத்து வருதல்;* to bring, to take along with. 'செட்டியாரையுமிட்டுக் கொண்டு வாருங்கள்' (பிரதாப சந்.67).

*[இட்டு + கொண்டு + வா.]*

**இட்டுநீட்டு-தல்** *ittunīttu-,* 5 செ.குன்றாவி. (v.t.) (நேரே வாராது) *தூதர் வாயிலாக வரவிடுதல்;* to send through an emissary or messenger. (திவ்.81).

*[இட்டு + நீட்டு.]*

**இட்டுநீர்** *ittu-nīr,* பெ. (n.) *தாரைவார்க்கும் நீர்* (இ.வ.); water poured by the donor in the palms of the donee, in making a gift. (செ.அக.).

*[இடுதல் = மேலிடுதல், தெளித்தல். இடு → இட்டு + நீர்.]*

**இட்டுப்பிரி-தல்** *ittu-p-piri-,* 4 செ.குன்றாவி. (v.t.) *அணிமையிற்றலைவன் பிரிதல்* (கலித்.121, உரை); to be separated from one's lady - love by only a short distance. (செ.அக.).

*[இட்டு - சிறுமை, சிறிதுகாலம். இட்டு + பிரி.]*

**இட்டுப்பிரிவு** *ittu-p-pirivu,* பெ. (n.) *மிக அண்மையிற் றலைவன் பிரியும் பிரிவு* (ஆ.அக.); separation by a short distance; parting of a lover to go to a place not far off. "இட்டுப்பிரி விரங்கினும்" (தொல்.பொருள். 111.) (செ.அக.).

*[இட்டு + பிரிவு.]*

**இட்டுப்பிற-த்தல்** *ittu-p-pira-,* 3 செ.கு.வி. (v.i.) *ஒரு காரியத்திற்காகப் பிறத்தல்* (ஆ.அக.); to be born with a mission "கைங்கரிய ஸாம்ராஜ்யத்துக்கு இட்டுப்பிறந்து." (ஈடு.2,3,1) (செ.அக.).

*[இட்டு + பிறத்தல். இடுதல் - வைத்தல் ஒன்றின் மேலிட்டுப் (ஒரு காரணத்தை முன்வைத்து) பிறத்தல்.]*

**இட்டுப்புகுதல்** *ittu-p-pugudal,* பெ. (n.) ***நாட்டியத்துக் குரிய கால்களுள் ஒன்று.*** (சிலப்.3.14,பக்.90.கீழ்க்கு றிப்பு); a kind of step in dance. (செ.அக.).

*[இட்டு + புகுதல்.]*

**இட்டுமாறு-தல்** *ittumāṟu,* 5 செ.கு.வி. (v.i.) ***பழைமை நீங்கிப் புது நிலைமை அடைதல்;*** old yielding place to new, revival, refreshment. (திவ்.அக.).

*[இட்டு + மாறு.]*

**இட்டுரை-த்தல்** *itturai-,* 4 செ.குன்றாவி. (v.t.) ***சிறப்பித்துச் சொல்லுதல்*** (பு.வெ.4,11); praise, extol, admire, value. (செ.அக.).

*[இடு - இட்டு = மேல் வைத்து, புகழ்ந்து. இட்டு + உரைத்தல்.]*

**இட்டு வட்டி** *ittu-vatti,* பெ. (n.) ***சோற்றுக்கரண்டி*** (நெல்லை.); vessel for serving rice.

*[இடு → இட்டு. இடுதல் = பிடுதல், பிரிதல், இட்டுவட்டி = பிரித்தெடுக்கும் வட்டி.]*

**இட்டுவா(வரு)-தல்** *ittu-vā-,* 15 செ.குன்றாவி. (v.t.) 1. ***அழைத்து வருதல்*** (கொ.வ.); fetch, as a person. 2. ***கொடுத்துவிட்டு வருதல்*** (ஆ.அக.); give and come back. ''இட்டுவாவென்றால் சுட்டுவந்தவன் இவ்வநுமா னன்றோ.''

*[இடு → இட்டு + வா.]*

**இட்டுறுதி**[1] *itturudi,* பெ. (n.) ***கண்டிப்பு*** (வின்.); firmness, severity, rigour.

*[இட்டு + உறுதி. இடுதல் = வைத்தல், நம்புதல். இட்டுறுதி = நம்பிக்கை உறுதி.]*

**இட்டுறுதி**[2] *itturudi,* பெ. (n.) ***இடுக்கண் காலத்து உதவி*** (யாழ்.அக.); help in times of distress.

*[இடு = வைத்தல், தருதல். உதவுதல். இடு → இட்டு + உறுதி.]*

‡**இட்டூறு** *ittūṟu,* பெ. (n.) ***பழிகூறுதல், செய்ய வேண் டிய நலன்களைச் செய்யவில்லை என்பதற்காகக் கூறப்படும் குற்றச்சாட்டு;*** grievance.

*[இடு + ஊறு = இட்டூறு.]*

**இட்டேற்றம்** *ittēṟṟam,* பெ. (n.) 1. ***பொய்யாகக் குற்றஞ்சாட்டுகை;*** false accusation. இப்படி இட்டேற் றம் பேசுவதாகாது. (கொ.வ.). 2. ***கொடுமை;*** tyranny, cruelty, injustice. ஏனிப்படி இட்டேற்றம் பண்ணுகிறாய்? (யாழ்ப்.). (செ.அக.). 3. ***அல்நயன்;*** foulplay. 4. ***முழுப்பொய்;*** blatant lie. (ஆ.அக.).

*[இடுதல் = வைத்தல். இடு → இட்டு + ஏற்றம்.]*

**இட்டேறி**[1] *ittēṟi,* பெ. (n.) 1. ***வயல்களினிடையே செல்லும் வரப்புப்பாதை*** (தெ.ஆ.); narrow raised foot path between two fields. 2. ***வண்டிப்பாதை*** (கோவை); cart-tract.

ம. இட்ளு.

*[இடு - இட்டு = சிறுமை. ஏறு - ஏறி = ஏறிச்செல்லும் வரப்பு, ஒற்றையடிப் பாதை.]*

**இட்டேறு-தல்** *ittēṟu-,* 6 செ.கு.வி. (v.i.) 1. ***கூடியதா தல்;*** to be achieved. 2. ***போதியதாதல்;*** to be sufficient. (செ.அக.).

*[இட்டு = வைத்து. ஏறுதல் = மிகுதல். இட்டேறுதல் - மிகுதியாக வைத்திருத்தல், வளமையால் சிறத்தல்.]*

**இட்டோட்டு** *ittōttu,* பெ. (n.) ***அலைக்கழிவு*** (யாழ்ப்.); vexation, trouble. (செ.அக.).

*[இட்டு + ஓட்டு, இட்டோட்டு = பிரித்து அலைத்தல், துன்புறுத்து தல்.]*

**இட்டோடு** *ittōḍu,* பெ. (n.) ***ஒன்றாமை;*** disunion, discord, separation. இட்டோடு பண்ணுகிறது. (வின்.).

*[இட்டு + ஒடு, இட்டு = பிரிவு.]*

**இட-த்தல்** *iḍa-,* 3 செ.கு.வி. (v.i.) 1. ***பிளவுபடுதல்;*** to be cracked, broken. ''களிறு வழங்கலி னிடந்தமண்'' (கூர்மபு.அந்தக.40). 2. ***உரிதல்;*** to be stripped off, as the outer covering. 'முத்துக்கள் தோல்தேய்ந்தனவும் தோலிடந்தனவும்' (S.I.I.93,49). - செ.குன்றாவி. (v.t.). 1. ***தோண்டுதல்*** (பெரியபு.கண்ணப்.183); to dig, scoop out, hollow. ம. இட. 2. ***பிளத்தல்;*** to force away through, as an elephant in battle; to root up, as a hog; to gore, as a bull. ''பொன்பெயரோன் மார்பிடந்த'' (திவ்.இயற்.1,23). 3. ***பெயர்த்தல்;*** to dislodge, as a stone, to throw up, as clods in a furrow. ''எயிற்றுப் படையா லிடந்து'' (பு.வெ.6,13). 4. ***குத்தியெடுத்தல்,*** (திவ். இயற்.1,2); to fork. 5. ***உரித்தல்*** (திவா.); to peel off. (செ.அக.).

*[இல் - துளைத்தற் கருத்துவேர். இல் → இள் → இள → இட. இடத்தல்.]*

**இடக்கண்** *iḍakkaṇ,* பெ. (n.) 1. ***இடப்புறக் கண்;*** left eye. 2. ***ஓரப்பார்வை;*** side glance.

க. எடகண்.

*[இடம் + கண்.]*

**இடக்கண்ணியன்** *iḍakkaṇṇiyaṉ,* பெ. (n.) ***அலர்ந்த கண்ணியன்;*** one wearing wreath on the head. ''பகலிடக் கண்ணியன் பைதற் குழலன்'' (கலி.101). (சங்.இலக்.சொற்.).

*[இடம் + கண்ணியன்.]*

**இடக்கர்**[1] *iḍakkar,* பெ. (n.) ***சொல்லத்தகாத சொல்;*** indecent words; terms denoting things or actions too obscene to be uttered in good society. (செ.அக.).

*[இள் - இள - இட - இடக்கர்.]*

**இடக்கர்**[2] *iḍakkar,* பெ. (n.) ***தாறுமாறு செய்பவர்*** (ஆ.அக.); wrong doer, rude person.

*[இடக்கு → இடக்கர்.]*

**இடக்கர்**[3] *iḍakkar,* பெ. (n.) ***குடம்*** (பிங்.); water pot. (செ.அக.).

*[இடு - இடம் (சிறிய பகுதி). இட - இடக்கர். (குடம்).]*

**இடக்கர்**[4] *iḍakkar,* பெ. (n.) 1. ***மீதூர்கை*** (நாநார்த்த.); being close and crowded. (செ.அக.). 2. ***நெருக்கம்*** (ஆ.அக.); compactness.

*[இள் → இடு = நெருங்குதல், நெருக்கம்.]*

**இடக்கரடக்கல்** *iḍakkar-aḍakkal,* பெ. (n.) ***தகுதிவழக் குகளிலொன்று*** (நன்.267), நன்மக்களிடத்தே சொல லத்தகாத இடக்கரான வார்த்தைகளை மறைத்துப் பிற வற்றாற் சொல்வது; euphemism; use of indirect expre-ssion to avoid indecent language; one of three tagudi-vaḷa-kku.

*[இடக்கர் + அடக்கல்.]*

**இடக்கரடக்கு** *iḍakkar-aḍakku,* பெ. (n.) ***இடக்கரடக் கல்*** பார்க்க; (செ.அக.); see *iḍakkaraḍakkal.*

*[இடக்கர் + அடக்கு.]*

**இடக்கரிசை** *iḍakkarišai,* பெ. (n.) ***செய்யுட்குற்றத் தொன்று*** (யாப்.வி.525); defect in versification. (செ.அக.).

*[இடக்கர் + இசை.]*

**இடக்கல்** *iḍakkal,* பெ. (n.) 1. ***தோண்டல்;*** digging. 2. ***கடைக்கால்;*** foundation. (சேரநா.).

ம. இடக்கல் (அடிக்கல்).

*[இடக்கு → இடக்கல்.]*

**இடக்கன்** *iḍakkan,* பெ. (n.) ***தாறுமாறு செய்பவன்*** (வின்.); rude, disrespectful person.

க. இடக்கன் (பணிக்கு வராதோன், பயனற்றவன்).

*[இடக்கு → இடக்கன்.]*

**இடக்காரை யென்பு** *iḍakkārai enbu,* பெ. (n.) ***இடது சவடி யெலும்பு;*** left collar-bone. (சா.அக.).

*[இட + காரை + என்பு.]*

**இடக்கியம்** *iḍakkiyam,* பெ. (n.) ***வல்லூறு வடிவம் எழுதிய தேர்க்கொடி*** (வின்.); flag; swallow-tail banner; standard hoisted on a car.

தெ. டெக்கியமு; க. டெகெ.

*[இடக்கு[3] → இடக்கியம்.]*

ஏனைப்பறவைகளை எதிர்த்துத் தாக்கும் இயல்புள்ள வல்லூறு என்னும் பறவை வடிவம் எழுதியதேர்க் கொடி.

**இடக்கு**[1]**-தல்** *iḍakku,* செ.கு.வி. (v.i.) ***விழுதல்;*** to fall down, fall. "மேனின் றிடிக்குமேல்" (சினேந்.444).

*[இடக்குதல் = இடத்தல். இடத்தல் = பெயர்த்தல், இடம் பெயர்த் தல், விழுதல்.]*

**இடக்கு**[2] *iḍakku,* பெ. (n.) 1. ***இடக்கர்;*** vulgar language. 2. ***ஏறுமாறு*** (கொ.வ.); cavil, captious speech. 3. ***முரண்செயல்;*** rudeness, incivility, insubordination, pertinacity, obstinacy, as of a balky horse. குதிரை இடக்குப்பண்ணுகிறது. (கொ.வ.), (செ.அக.). 4. ***இழி சொல்;*** mean word (ஆ.அக.).

க. எடகு.

*[இட → இடக்கு, இடத்தல் = தோண்டுதல், துருவுதல், துன்புறுத் தல்.]*

**இடக்கு**[3] *iḍakku,* பெ. (n.) 1. ***தடை;*** obstacle. 2. ***வல்லூறு என்னும் பறவை;*** royal falcon.

*[இட → இடக்கு.]*

பறவையைக் குறித்த 'இடக்கு' என்னும் சொல் பேச்சு வழக்கில் 'டேகை' எனத் திரிந்துள்ளது.

**இடக்குமடக்கு** *iḍakku-maḍakku,* பெ. (n.) 1. ***ஏறு மாறு;*** cavil, specious objection. (செ.அக.). 2. ***அலைக் கழிவு;*** harassment.

*[இடக்கு + மடக்கு. முடக்கு → மடக்கு.]*

**இடக்குமுடக்கு** *iḍakku-muḍakku,* பெ. (n.) 1. ***நெருக் கம்;*** straits, difficult circumstances. 2. ***இடர்ப்பாடு;*** dilemma, predicament.

*[இடக்கு + முடக்கு.]*

**இடக்கை**[1] *iḍakkai,* பெ. (n.) 1. ***இடது கை;*** left hand. 2. ***இடக்கையாற் கொட்டும் ஒரு தோற்கருவி*** (சிலப்.3,27, உரை); small drum beaten by the left hand.



இடக்கை

க. எடகய்.

*[இள + இட + கை - இடக்கை. வலக்கையை நோக்க இடதுகை வலிமை குறைந்ததாகக் கருதப்படும் மென்மை நோக்கி, இள + கை - இளக்கை → இடக்கை என வழக்கூன்றியது.]*

**இடக்கை**[2] *iḍakkai,* பெ. (n.) 1. ***ஆமந்திரிகை;*** musical instrument. 2. ***ஒரு நாடு;*** name of a territory.

*[இட → இடக்கை. இட = அகன்ற.]*

**இடக்கை**[3] *iḍakkai,* பெ. (n.) ***பெருமுரசு வகை;*** large double drum. (செ.அக.).

*[இடம் → இடக்கை = வாயகன்ற தோற் கருவி.]*

**இடக்கைச்சி** *iḍakkaicci,* பெ. (n.) ***ஒரு வகை நாடி;*** a kind of pulse. (சா.அக.).

*[இடம் + கை + சி.]*

**இடக்கையன்** *iḍakkaiyan,* பெ. (n.) ***இடக் கையால் வேலை செய்பவன்;*** one who does work by left hand.

ம. இடத்தன்; க. எடகய்ய.

*[இடம் + கையன்.]*

**இடக்கையான்** *iḍakkaiyāṉ,* பெ. (n.) ***அஞ்சாவீரன்*** (கதி.அக.); man with undaunted courage.

*[இடக்கு → இடக்கையான்.]*

**இடகலை** *iḍa-kalai,* பெ. (n.) ***நிலவின் கலை;*** phase of the moon.

*[இட + கலை.]*

**இடகன்** *iḍagaṉ,* பெ. (n.) ***இடப்பக்கத்தவன்;*** one who is on the left side. "குடகர்க்கிடகர்" (பெருந்தொ. 1005). (செ.அக.).
(செ.அக.).

*[இட → இடகன்.]*

**இடங்கசாலை** *iḍaṅga-sālai,* பெ. (n.) ***அக்கசாலை;*** mint. "வேங்கடாத்திரி தேவமகாராஜய்யனுக்குத் திரு வையாறு இடங்க சாலை பாலிக்கையில்" (S.I.I.V, 224.) (செ.அக.).

*[ஒருகா: விடங்கசாலை - இடங்கசாலை. விடங்கன் - சிவன்; தெய்வச்சிற்பம், தெய்வப்படிமங்கள் செய்யுமிடம்.]*

**இடங்கட்டுக்கொம்பு** *iḍaṅ-kaṭṭu-k-kombu,* பெ. (n.) ***மாட்டுக்குற்ற வகை*** (பெரியமாட்டு.161); defect in cattle. (செ.அக.).

*[இட(து) + கட்டுக்கொம்பு.]*

**இடங்கண்** *iḍaṅkaṇ* பெ. (n.) 1. ***பறையின் அகன்ற கண் பகுதி*** (அக.87); middle of the membrane of a drum. 2. ***அகற்சி, பரப்பு;*** broad, big in area.

*[இடம் + கண்.]*

**இடங்கணம்**[1] *iḍaṅkaṇam,* பெ. (n.) ***வெண்காரம்*** (நன். 273, மயிலை); borax. (செ.அக.).

*[இள - இடம் + கணம். இடம் = வெண்மை.]*

**இடங்கணம்**[2] *iḍaṅkaṇam,* பெ. (n.) ***56 நாடுகளுள் ஒன்று;*** country, one of 56 tēyam. "கன்னட மிடங்கணம்", (திருவேங்கட.97) (செ.அக.).

*[இடங்கண் - இடங்கணம்.]*

**இடங்கணி**[1] *iḍaṅ-kaṇi,* பெ. (n.) 1. ***சங்கிலி*** (திவா.); chain. 2. ***இடங்கணிப்பொறி*** (சீவக.102, உரை) பார்க்க; see *iḍaṅkaṇi-p-poṟi.* 3. ***ஆந்தை;*** owl. (சா.அக.).

*[இடம் + கணி. இடங்கணி = இடமகலப் பருத்தது.]*

**இடங்கணி**[2] *iḍaṅ-kaṇi,* பெ. (n.) ***உளி*** (வின்.); chisel. (செ.அக.).

*[இடுதல் - பிடுதல், பிளத்தல், பிரித்தல். இடு - இட - இடங்குணி - இடங்கணி.]*

**இடங்கணிப்பொறி** *iḍaṅkaṇi-p-poṟi,* பெ. (n.) ***கோட்டை மதிலில் வைக்கப்படும் இயந்திரங்களு ளொன்று;*** (சிலப்.15,210 உரை); chain instrument mounted on the ramparts of a fort for slinging stones at the enemy advancing to attack the fortification.

*[இடங்கணி + பொறி. இடங்குணி → இடங்கணி.]*

**இடங்கப்பட்டை** *iḍaṅga-p-paṭṭai,* பெ. (n.) ***இலவங் கப்பட்டை;*** cinnamon (சா.அக.).

*[இலவங்கம் - இலங்கம் - இடங்கம் + பட்டை. (கொ.வ.).]*

**இடங்கம்**[1] *iḍaṅgam,* பெ. (n.) ***உளி*** (தணிகைப்பு.அகத். 69); chisel, stone cutter's chisel. (செ.அக.).

*[இடுதல் = பிடுதல், பிளத்தல், இடு → இடங்கம்.]*

**இடங்கம்**[2] *iḍaṅgam,* பெ. (n.) 1. ***செம்மணி*** (இரத்தி னம்) ***நிறுக்கப்பயன்படுவதும் 24 செம்மணி கொண் டதுமான நிறைகல்*** (சுக்கிரநீதி,189); weight of 24 iratti, for weighing precious stones. 2. ***மண் தோண்டும் படை*** (நாநார்த்த.); shovel. 3. ***வாளினுறை*** (நாநார்த்த.); scabbard. 4. ***கணைக்கால்*** (நாநார்த்த.); ankle. 5. ***பொரிகாரம்*** (நாநார்த்த.); borax. 6. ***சினம்*** (நாநார்த்த.); anger. 7. ***செருக்கு*** (நாநார்த்த.); pride, arrogance. 8. ***கற்சாணை*** (நாநார்த்த.); whetstone. 9. ***இலவங்கம்,*** (சா.அக.); clove.

*[இடங்கம் - பிளக்கும் அல்லது தோண்டுங் கருவி. அவ்வடிவி லமைந்த நிறைகல். வெட்டு வாளின் உறை. வெட்டுவது போன்று சினத்தின் வெளிப்பாடான செருக்கு.]*

**இடங்கர்**[1] *iḍaṅgar,* பெ. (n.) 1. ***இழிந்தோர்*** (சூடா.) debauchees, libertines, licentious men. 2. ***முதலை வகை*** crocodile. "கொடுந்தாண் முதலையு மிடங்கருங் கராமும்" (குறிஞ்சிப்.257). (செ.அக.).

*[இடு - இட - இடங்கர். பிரிக்கும் குணம் கொண்ட கயவர், இழிகுணம் வாய்ந்தோர், வாயகன்ற முதலை.]*

**இடங்கர்**[2] *iḍaṅgar,* பெ. (n.) 1. ***நீர்ச்சால்*** (திவா.) large bucket. 2. ***குடம்*** (திவா.); pot. (செ.அக.).

*[இடம் - இடங்கர் = வாயகன்ற கலம்.]*

**இடங்கர்**[3] *iḍaṅgar,* பெ. (n.) ***சிறுவழி*** (வின்.); narrow path. (செ.அக.).

க. இடுகுரு; தெ. டொங்க.

*[இடு = சிறு. இடு - இடங்கர்.]*

**இடங்கரம்** *iḍaṅgaram,* பெ. (n.) ***மகளிர்க்குண்டாகும் மாதவிடாய்த்தீட்டு;*** defilement from menses. (செ.அக.).

*[இடு - இட - இடங்கரம் - பிரிந்து அல்லது விலகியிருத்தற்குக் காரணமான தீட்டுக் காலம்.]*

**இடங்கருங்குட்டம்** *idankaruṅkuṭṭam*, பெ. (n.) ***இடம் கரிதாகிய குழி;*** dark depth. "இடங்கருங் குட்டத்துடன் றொக்கோடி" (புறம்.37).

*[இடம் + கரும் + குட்டம்.]*

**இடங்கழி[1]-த்தல்** *idaṅ-gaḻi-*,4 செ.குன்றாவி. (v.t.) ***இடத்தினின்று நீக்கப்படுதல்;*** to be dismissed, to be expelled. "தடங்கணார்க் கிடங்கழி காமனன்ன காளை" (சீவக.2038) (செ.அக.).

*[இடம் + கழி.]*

**இடங்கழி[2]** *idaṅgaḻi*, பெ. (n.) 1. ***எல்லை கடக்கை;*** passing beyond bounds; overstepping the proper limit. "இடங்கழி காமமொ டடங்கா னாகி" (மணி.18,119). 2. ***காம மிகுதி;*** excess of lust. "இடங்கழிமான் மாலையெல்லை" (பு.வெ.12, பெண்பாற்.5). 3. ***மீதூர்கை*** (பிங்.); being pressed for want of space. 4. ***மர வேனம்;*** wooden vessel for keeping salt or other things. உப்பிடங்கழி. (கொ.வ.). 5. ***ஒரு படியளவு;*** (T.A.S.i, 293); measure of capacity = 8 ollocks. (செ.அக.).

**ம.** இடங்ஙழி. இடங்ஙாழி.

*[இடம் + கழி. இடம் - இருப்பிடம், எல்லை.]*

**இடங்கழிநாயனார்** *idaṅ-kaḻi-nāyaṉār*, பெ. (n.) ***அறுபத்துமூன்று நாயன்மாருள் ஒருவர்*** (பெரியபு.); chief of Kōnāḍu, who is canonized and included in the galaxy of 63 saiva saints (செ.அக.).

*[இடங்கழி[2] + நாயனார்.]*

**இடங்கழிமை** *idaṅgaḻi-mai*, பெ. (n.) ***இடங்கழி*** பார்க்க; see *idaṅgaḻi*.

**இடங்கழியார்** *idaṅgaḻiyār*, பெ. (n.) 1. ***கயவர்*** (சூடா.); lewd persons. 2. ***காமுகர்*** (செ.அக.); profligates.

*[இடங்கழி + அர்.]*

**இடங்காரம்[1]** *idaṅ-gāram*, பெ. (n.) 1. ***மத்தளத்தின் இடப்பக்கம்*** (வின்.); left hand side of a double drum, the end of which is glued to produce the required tone. 2. ***புகழ்;*** fame, reputation. (ஆ.அக.).

**ம.** இடங்காரம்.

*[இடம் → இடங்காரம்.]*

**இடங்காரம்[2]** *idaṅgāram*, பெ. (n.) ***வில்லின் நாணோசை*** (சங்.அக.); twang of a bow-string (செ.அக.).

*[ஒருகா. இழுங்காரம் - இடங்காரம்.]*

**இடங்கெட்டபாவி** *idaṅ-keṭṭa-pāvi*, பெ. (n.) 1. ***சீரழிந்தவன்*** (வின்.); utterly destitute, miserable wretch. (செ.அக.). 2. ***ஆதரவற்றவன்;*** destitute person.

*[இடம் + கெட்ட + பாவி.]*

**இடங்கெட்டபேச்சு** *idaṅ-keṭṭa-pēccu*, பெ. (n.) ***ஒழுங்கற்ற சொல்*** (கொ.வ.); words spoken without any regard to reason, season, place or person. (ஆ.அக.).

*[இடம் + கெட்ட + பேச்சு.]*

**இடங்கெட்டவன்** *idaṅ-keṭṭavaṉ*, பெ. (n.) 1. ***அலைபவன்;*** wanderer. 2. ***கயவன்;*** dishonest man. (செ.அக.).

*[இடம் + கெட்டவன்.]*

**இடங்கேடு[1]** *idaṅ-kēḍu*, பெ. (n.) 1. ***ஏழ்மை*** (வின்.); poverty. 2. ***தாறுமாறு;*** inconsistency, incoherence. (செ.அக.).

**ம.** இடங்கேடு.

*[இடம் + கேடு.]*

**இடங்கேடு[2]** *idaṅ-kēḍu-*, பெ. (n.) 1. ***நாடுகடத்துகை*** (இராட்.); banishment. 2. ***எக்கச்சக்கம்;*** awkward predicament. "இடங்கேடாய்ச் சென்று சிக்கிக்கொண் டாய் சிறுபிள்ளாய்" (தெய்வச். விறலிவிடு.373). (செ.அக.).

*[இடம் + கேடு.]*

**இடங்கை** *idaṅgai*, பெ. (n.) 1. ***இடக்கை;*** left hand. "நெடுங் கோதண்ட மிடங்கையி லெடுத்து" (திருவிளை. யானை.30). 2. ***திரவிடர்களின் மதிப்புரவின் பொருட்டுத் தங்களுக்குள் பகைத்துப் பிரிவுபட்ட வகுப்பினருள் ஒரு பிரிவார்;*** left hand clan, one of the two clans into which some Dravidian castes in the Cōḻā country had separated themselves by about the 11th c.A.D., such as the artisan against the agricultural - the fued arising chiefly from each claiming certain honours such as riding a horse on marriage occasions, etc. (செ.அக.).

**ம.** இடங்கை; **க.** எடகெய்; **தெ.** எடம; **கொலா.** எடமகை; **குவி.** டெம்பா; பட. எடகை.

*[இடம் (இடது) + கை.]*

**இடங்கொடு-த்தல்** *idaṅ-koḍu-*, 4. செ.கு.வி. (v.i.) 1. ***கண்டிப்பின்றி நடக்கவிடுதல்;*** to be indulgent or lax; to show lenience. சிறுபிள்ளைகட்கு இடங்கொடுத்தால் தலைமேலேறும். 2. ***பிடிகொடுத்தல்;*** to yield, give in. "என்னவு மிடங்கொடாம லெதிருற" (பாரத. நிரைமீட்சி.124). (செ.அக.).

**க.** எடகொடு.

*[இடம் + கொடு.]*

**இடங்கொள்(ளு)-தல்** *idaṅ-koḷ-*, 16 செ.கு.வி. (v.i.) 1. ***பரவுதல்;*** to spread from place to place. "இடங் கொள் சமயத்தை யெல்லாம்" (திவ். திருவாய்.5,2,4). 2. ***இடம் பற்றுதல்;*** to have sufficient room. "சாது மருண்டால் காடு இடங்கொள்ளாது" (பழ.). 3. ***அகலமாதல்;*** to be spacious, vast, capacious. "இடங்கொள் பூதலம்" (நைடத.நகரப்.16) - 7 செ. குன்றாவி. (v.t.).

இருப்பிடமாகக் கொள்ளுதல்; take up one's abode in; to accept, as residence; to occupy, as one's residence. "இறைவனே நீ யென்னுட லிடங்கொண்டாய்" (திருவாச. 22,5). (செ.அக.).

க. எடெகொள்.

*[இடம் + கொள்.]*

**இடங்கோலு-தல்** *idaṅ-kōlu -*, 16 செ.கு.வி. (v.i.) 1. ***ஊன்ற இடஞ்செய்து கொள்ளுதல்*** (வின்.); to gain a footing, establish oneself in a place. 2. ***முன்னேற் பாடு செய்தல்;*** to take preparatory measures. (செ.அக.).

*[இடம் + கோலு.]*

**இடச்சுக் குளம்பு** *idaccu-k-kuḷambu*, பெ. (n.) ***நீர் முள்ளி;*** water-thorn (சா.அக.).

*[இடத்து + குளம்பு.]*

**இடச்சுரிகை** *idaccurigai*, பெ. (n.) ***உடைவாள்;*** sword or dagger suspended from the girdle.

ம. இடச்சுரிக.

*[இடை → இட + சுரிகை.]*

**இடச்சுற்று** *ida-c-cuṟṟu*, பெ. (n.) 1. ***இடப்புறமாய்ச் செல்லும் வளைவு;*** curving to the left as a line on the palm of the hand. 2. ***இடஞ்செல்லுகை;*** going from right to left. (செ.அக.).

*[இடம் (இடது) + சுற்று.]*

**இடசாரி** *ida-sāri*, பெ. (n.) ***இடப்பக்கமாக வரும் நடை;*** turning or wheeling to the left, as in dancing and in military tactics. (செ.அக.).

க. எடசாரி (இடத்தினின்று வலத்திற்குச் சுற்றுவது).

*[இட(து) + சாரி.]*

**இடஞ்சுழி** *idañ-cuḻi*, பெ. (n.) ***உடம்பிலே இடப்பக்கம் நோக்கியிருக்குஞ் சுழி;*** curl that turns to the left, as one of the points of a horse; curves that turn to the left, as on the thumb.

*[இடம் (இடது) + சுழி.]*

**இடத்தகைவு** *ida-t-tagaivu*, பெ. (n.) ***எதிர்வழக்காளி யைக் குறிப்பிட்ட இடம் விட்டுப்போகாமல் வழக் காளி அரசாணை சொல்லித் தடுக்கை*** (சங்.அக.); prohibition by the complainant, in the name of the King, of a defendant's leaving a prescribed location (செ.அக.).

*[இடம் + தகைவு.]*

**இடத்து** *idattu*, இடை. (part.) ***இடத்தில் என்ற பொருளில் பெயரெச்சம் சுட்டு வினாவுடன் இணைந்துவரும் இடைச்சொல்;*** at the place, at the time. (எ-டு) அவ்விடத்து, எவ்விடத்து.

ம. இடத்து.

*[இடம் → இடத்து.]*

**இடத்து மாடு** *idattu-māḍu*, பெ. (n.) ***நுகத்தின் இடப்பக்கத்து எருது;*** ox tied to the left side of the yoke. (செ.அக.).

மறுவ. இடத்தை.

*[இடது + மாடு = இடத்துமாடு.]*

**இடத்துய்த்தகறல்** *idattuyttagaṟal*, பெ. (n.) ***தலை மகளை இடத்துய்த்த தோழி தலைமகன் எதிர்ப்படுவ னென்று கருதித் தானீங்குதலைக் கூறும் அகத்துறை*** (களவியற்.73); theme which describes the maid leaving the heroine alone to meet the hero, in the appointed place.

*[இடத்து + உய்த்து + அகறல்.]*

**இடத்துய்த்தல்** *idattuyttal*, பெ. (n.) ***தோழி தலை மகற்கு இடங்காட்டி மீண்டுந் தலைமகளுழைச் சென்று அவளைத் தலைமகனின்றவிடத்துச் செலவி டுக்கும் அகத்துறை*** (களவியற்.72); theme in which the maid indicates to the hero, the appointed place of meeting and then leads the heroine to that place.

*[இடத்து + உய்த்தல்.]*

**இடத்துறை** *idattuṟai*, பெ. (n.) ***காசாகச் செலுத்தும் வரி;*** ancient tax in money.

*[ஒருகா. இடத்து + உறு - இடத்துறு → இடத்துறி → இடத்துறை பொற்காசு அச்சிடப்படும் அக்கசாலையில் காசாகவே பெறப் படும் வழக்கம் நோக்கிப் பெற்ற பெயராகலாம்.]*

**இடத்தை** *idattai*, பெ. (n.) ***இடத்து மாடு*** பார்க்க; see *idattu māḍu*.

*[இடது → இடத்தை.]*

**இடத்தையச்சொல்** *idattaiya-c-col*, பெ. (n.) ***இடத்தை ஐயப்படுத்துஞ் சொற்கள்: அவை, யாங்கு, யாண்டு, யாங்ஙனம் முதலியன;*** interrogative words which denote place (ஆ.அக.).

*[இடம் → இடத்து + ஐயம் + சொல்.]*

**இடது** *idadu*, கு.பெ.எ. (adj.) ***இடப்புறமான*** (கொ.வ.); left. (செ.அக.).

ம. இடது; க. எட; **கோத.** எட; **துட.** ஒட; **குட.** எடதெ; **து.** எட,யட; **கொலா.** எடம; **நா.** டாவ; **பர்.** எம்பரி; **கோண்.** டாவா; **குவி.** டெம்ப.

*[இடம் → இடது.]*

**இடது கன்னம்** *idadu-kaṉṉam*, பெ. (n.) ***எழுவோரை யின்*** (இலக்கினத்தின்) பதினோராமிடம். (சங்.அக.); the 11th house from the ascendant. (செ.அக.).

*[இடம் → இடது + கன்னம்.]*

**இடது கை** *idadu-kai*, பெ. (n.) ***இடக்கை*** பார்க்க; see *idakkai*.

*[இடம் - இடது + கை.]*

**இடது கைக்காரன்** *iḍadu-kai-k-kāraṉ,* பெ. (n.) ***இடக்கை வழக்கமுள்ளோன்;*** left handed man. (செ.அக.).

க. எடச.

*[இடது + கை + காரன்.]*

**இடதுகைப் படுக்கை** *iḍadu-kai-p-paḍukkai,* பெ. (n.) ***இடதுகைப் பக்கமாக ஒருக்கணித் துறங்கல்;*** lying resting the body on the left side. (சா.அக.).

*[இடது + கை + படுக்கை.]*

**இடதுகைவெட்டு** *iḍadu-kai-veṭṭu,* பெ. (n.) ***நாணயக் குற்ற வகை*** (சரவண.பணவிடு.67); blemish in coins. (செ.அக.).

*[இடது + கை + வெட்டு.]*

**இடதுசெவி** *iḍadu-ševi,* பெ. (n.) ***எழுவோரையின்*** (இலக்கினத்தின்) ***பதினோராமிடம்.*** (சங்.அக.); 11th house from the ascendant. (செ.அக.).

*[இடம் - இடது + செவி.]*

**இடதுநாளக்குழல்** *iḍadunāḷakkuḻal,* பெ. (n.) ***இடப் பக்கம் ஓடும் சாரி அரத்தக் குழாய்;*** left dilated channel for venous blood - left sinus venosus. (சா.அக.).

*[இடது + நாளம் + குழல்.]*

**இடந்தலைப்படல்** *iḍantalai-p-paḍal,* பெ. (n.) ***ஒன்று கூடுதல்;*** to join with, to meet.

*[இடம் + தலைப்படல்.]*

**இடந்தலைப்பாடு** *iḍan-talai-p-pāḍu,* பெ. (n.) ***இயற் கைப் புணர்ச்சி நிகழ்ந்த இடத்தில் இரண்டாமுறை தலைவனுந் தலைவியுங் கூடுகை*** (தொல்.பொ.498, உரை.); second meeting of the lovers in the same place where they first had intercourse.

*[இடம் + தலைப்பாடு.]*

**இடந்துடி-த்தல்** *iḍan-tuḍi-,* 4 செ.கு.வி. (v.i.) ***இடக் கண், இடத்தோள் துடித்தல்*** (கம்பரா.காட்சி.35); to have twitchings on the left side, referring to the muscles of the eyes and the shoulder, considered to forebode good if in women and evil if in men, the reverse being predicted of the twitchings on the rightside.

*[இடம் + துடித்தல்.]*

**இடநாகம்** *iḍa-nāgam,* பெ. (n.) ***அடைகாக்கும் நல்ல பாம்பு.*** (சங்.அக.); incubating cobra, (செ.அக.).

*[இடம் + நாகம்.]*

**இடநாள்** *iḍa-nāḷ,* பெ. (n.) ***உருள், கொடுநுகம், சுளகு, முக்கோல்*** (உரோகிணி, மகம், விசாகம், திருவோணம்) ***முதலாக மும்மூன்று விண்மீன்கள். (விதான.கால சக்.2);*** technical term referring to the set of three naksatras beginning with each of the 4th, 10th, 16th or 22nd asterism for calculation. (செ.அக.).

*[இடம் + நாள்.]*

**இடநிலைப்பாலை** *iḍa-nilai-p-pālai,* பெ. (n.) ***பண் வகை.*** (சிலப்.10.கட்டுரை,14.); class of ancient melody-types. (செ.அக.).

*[இடை + நிலை + பாலை.]*

**இடப்படி** *iḍappaḍi,* பெ. (n.) ***ஓர் அடிவைப்பு;*** length of a step, pace. (செ.அக.).

*[இடம் + படி.]*

**இடப்பு** *iḍappu,* பெ. (n.) 1. ***பிளப்பு;*** large cleft, gap. 2. ***பெயர்த்த மண்கட்டி*** (வின்.); clod of earth thrown out by digging or ploughing.

*[இட → இடப்பு. இடத்தல் = பிளத்தல், தோண்டுதல், பெயர்த்தல்.]*

**இடப்புக்கால்** *iḍappu-k-kāl,* பெ. (n.) ***அகல வைத்த கால்.*** (வின்.) legs spread apart. (செ.அக.).

*[இடத்தல் = பிளத்தல், விரித்தல். இட + இடப்பு + கால்.]*

**இடப்புறம்** *iḍa-p-puṟam,* பெ. (n.) ***இடது பக்கம்;*** left side. (செ.அக.).

க. எடகடெ.

*[இடம் + புறம்.]*

**இடப்பெயர்** *iḍa-p-peyar,* பெ. (n.) ***இடத்தைக் குறிக் கும் பெயர்ச்சொல்.*** (நன்.132) noun denoting place. (செ.அக.).

*[இடம் + பெயர்.]*

**இடப்பொருள்** *iḍa-p-poruḷ,* பெ. (n.) ***ஏழாம் வேற்று மைப்பொருள்.*** (நன்.302); sense of the locative. (செ.அக.).

*[இடம் + பொருள்.]*

**இடம்**[1] *iḍam,* பெ. (n.) 1. ***தாவு;*** place, room, site, spot, situation. 2. ***சூழல்;*** context. இடத்தைப் பார்த்துப் பொருள் கொள்க. 3. ***வீடு*** (திவா.); house, residence. 4. ***காரணம்;*** ground, reason. அப்படிச் சொல்லுவதற்கு இடமுண்டா? 5. ***வானம்*** (திவா); sky, heaven. 6. ***அகலம்*** (சூடா.); breadth, width, expanse.7. ***இடப்பக் கம்;*** left side. பாதையில் இடம் செல்க (உவ.). 8. ***அளவு;*** measure, degree, limit. "உகலிடந் தான்சென்று" (திருக்கோ.42). 9. ***ஆடையின் அகலமுழம்*** (இ.வ.); cubit, in measuring the width of cloth. 10. ***பொழுது;*** time. "அகலிரு விசும்பிற் பகலிடந் தரீஇயர்" (பதிற்றுப். 52,28). 11. ***ஏற்ற சமயம்;*** fitting time, opportunity. "நாடொறு மிடம்பெறாமல்" (திருவாலவா.35,8). 12. ***செல்வம்;*** wealth, affluence, prosperity. "இடமில்லாக் காலுமிரவொல்லாச் சால்பு" (குறள்.1064). 13. ***வலிமை*** (பிங்.); ability, power. 14. ***மூவகையிடம்*** (நன்.259); person, three in number, viz, தன்மை, முன்னிலை, படர்க்கை. 15. ***படுக்கை*** (பிங்.); bed. 16. ***தொலைவு;*** distance. திருநாவாய் எத்தனை இடம் போகும்? (ஈடு,9,8,1) - இடை. (part) ஏழனுருபு (நன். 302); sign of the locative, as in அவனிடம். (செ.அக.).

ம. இடம்; **க.** இடெ, எட; **தெ.** எட, எடமு; **கோத.** எடம்; **துட.** இடன்; **குட.** எடெ.

*[இல் → இள் → இடு → இடம் = இடைவெளி, பக்கம்.]*

இடு → இடம். இடுதல் - வைத்தல். இடம் = ஒன்றை வைத்துக் கொள்ளுவதற்குரிய இருப்பிடம். இடு = ஒடுங்குதல், சிறுத்தல். ஓரிடத்தில் ஒரு பொருளை ஒடுக்கமாக ஒடுக்கிச் செப்பமாக நிலைபெறுத்துதல்; அங்ஙனம் வைத்தற்குரிய இடம். கக்கத்தில் இடுக்கிக் கொள்ளவும் குழந்தையை இடப்பக்கத்து இடுப்பில் இருத்திக்கொள்ளவும் உடம்பின் வலப் பகுதியை விட இடப் பகுதி இடமாகப் பயன்படுதலின் இடத்தோள் இடது இடுப்பு இவற்றுக்கு உரிய இடமாயின. தோள் கொடுத்துத் தூக்குதற்கு இடத்தோளே பயன்படுதல் காண்க. வலக்கை வலிமை (வலம்) யுடையதாதலின் வலம் - அப்பகுதி முழுவதும் வலப்பக்கம் ஆயிற்று.

இடம், வினையடியாக ஒரு பொருளை வைத்தற்குரிய இடத்தையும் பெயரடியாக இடைவெளி, பக்கம், அகலம் ஆகிய பொருள்களையும் குறித்தது.

**இடம்**[2] *iḍam,* இடை. (part.) ***உடன், ஒடு என்ற பொருளில் வரும் இடைச் சொல்;*** to, with.

ம. இடம்.

*[இடு → இடம்.]*

**இடம்**[3] *iḍam,* பெ. (n.) ***ஓரை*** (இராசி) (நாநார்த்த.); sign of the Zodiac. (செ.அக.).

*[இடு → இடம் = விண்மீன்கள் பல இருத்தற்கு இடமாக இருப்பது.]*

**இடம்பகம்** *iḍambagam,* பெ. (n.) ***பேய்;*** devil. "இடம்பக மகளிவள்" (நீலகேசி.64), (செ.அக.).

*[இடம்பு → இடம்பகம்.]*

**இடம்படு-தல்** *iḍam-paḍu-,* 20 செ.கு.வி. (v.i.) 1. ***அகலித்தல்;*** to be broad, be spacious, to cover a vast extent; "இடம்பட வீடெடேல்". (ஆத்திசூடி). 2. ***மிகுதியாதல்;*** to be intense, outreach. "இடம்பட மெய்ஞ்ஞானங் கற்பினும்" (நாலடி.116). 3. ***விரிதல்;*** to expand (செ.அக.).

ம. இடம்பெடுக.

*[இடம் + படு. படுதல் = உண்டாதல். இடம் = அகலம்.]*

**இடம் பண்ணு-தல்** *iḍam-paṇṇu-,* 15 செ.கு.வி. (v.i.) ***பூசை, உணவு முதலியவற்றிற்கென்று இடத்தைத் தூய்மை செய்தல்,*** (கொ.வ.); to purify a place by daubing it with cowdung solution, as for worship, or by water before spreading the leaf for meal.

க. எடெமாடு.

*[இடம் = இடைவெளி, அகலம். இடம் + பண்ணு.]*

**இடம்பம்** *iḍambam,* பெ. (n.) ***பகட்டு;*** pomposity, ostentation (செ.அக.).

*இடம் → இடம்பம் > Skt. ḍamba. இடம் = அகலம். இடம்பம் = பெருமை, வீம்பு.]*

**இடம்பரம்** *iḍambaram,* பெ. (n.) 1. ***இடப்பக்கம்;*** left side. 2. ***வழிவகை;*** method, procedure. (ஆ.அக.).

*[இடம் → இடம்பரம்.]*

**இடம்பன்** *iḍamban,* பெ. (n.) ***பகட்டுள்ளவன்;*** pompous showy fellow, coxcomb. "இடம்பனை யழைத்து" (பிரபோத.24,67).

*இடம்பன் > Skt. dambhaka.*

*[இடம் → இடம்பம் → இடம்பன்.]*

**இடம்பாடு** *iḍam-pāḍu,* பெ. (n.) 1. ***அகலம்*** (வின்.); width. 2. ***செல்வம்;*** wealth. இடம்பாடுள்ளவன் அவன் (இராட்.). 3. ***பருமை;*** mass; bulkiness. 4. ***விரிவு;*** expansion; extensiveness. (ஆ.அக.).

ம. இடம்பாடு.

*[இடம் + படு = இடம்படு → இடம்பாடு.]*

**இடம்பார்-த்தல்** *iḍam-pār-,* 4 செ.கு.வி. (v.i.) 1. ***இடந்தேடுதல்;*** to seek a place, secure an abode, find a situation. 2. ***சமயமறிதல்;*** to seek an opportunity; wait for suitable occasion. (செ.அக.).

க. எடெநோடு.

*[இடம் + பார்.]*

**இடம்பு**[1]**-தல்** *iḍambu-,* 15 செ.கு.வி. (v.i.) 1. ***விலகுதல்*** (யாழ்ப்.); to keep aloof, as persons who are not on good terms with each other. (செ.அக.). 2. ***அகலித்தல்;*** to widen. 3. ***பெருமை பேசுதல்;*** to boast.

ம. இடம்பல் (பகைமை).

*[இடம் → இடம்பு = விலகு. இடம்புதல் = விலகுதல், அகலித்தல், பெரிதாக்குதல்.]*

**இடம்பு**[2] *iḍambu,* பெ. (n.) ***அகலம்;*** width.

*[இட → இடம்பு.]*

**இடம்புரி**[1] *iḍampuri,* பெ. (n.) 1. ***இடப்புறம் சுழியுள்ள சங்கு*** (பிங்.); common chank with spiral curving to the left. 2. ***இடப்பக்கந் திரிந்த கயிறு;*** rope twisted to the left. (செ.அக.).

ம. இடம்புரி (iḍampuri) க. எடெமுரி, எடெமுரிசங்கு.

*[இடம் + புரி. புரிதல் = வளைதல், இடம் = இடப்பக்கம்.]*

**இடம்புரி**[2] *iḍampuri,* பெ. (n.) ***பூடுவகை*** (வின்.); medicinal shrub (செ.அக.).

**இடம்புரிக்காய்** *iḍampuri-k-kāy,* பெ. (n.) ***திருகுகாய்;*** Indian screw tree. It is opposed to twisted horn. (சா.அக.).

*[இடம் + புரி + காய்.]*

**இடம்பூணி** *iḍam-pūṇi,* பெ. (n.) ***நுகத்தின் இடப் பக்கத்து மாடு;*** ox tied to the left side of the yoke. "இடம்பூணி யென்னாவின் கன்று அன்று". (நேமி. சொல்.5, உரை). (செ.அக.). 2. ***நுகத்தின் இடப் பக்கம்;*** left side of a yoke (கருநா.).

க. எடெகோலு.

*[இடம் + பூண் + இ.]*

**இடம்பெறவிரு-த்தல்** *idam-pera-viru-*, 3 செ.கு.வி. (v.i.) ***ஓலக்கமிருத்தல்;*** to give audience in the court. "இடம்பெறவிருந்த நல்லிமயத்துள்" (திவ்.பெரியதி. 1,2,1). (செ.அக.).

*[இடம் + பெற + இருத்தல். இடம் = அகலம், பெருமை, உயர்வு.]*

**இடம் வருதல்** *idam-varudal*, பெ. (n.) ***வலத்தினின்று இடம் நோக்கிச் சுற்றுதல்;*** to go round in the anti-clockwise direction.

ம. இடத்து வய்க்குக.

*[இடம் + வருதல்.]*

**இடமயக்கம்** *idamayakkam*, பெ. (n.) 1. ***ஒன்றற்குரிய உரிப்பொருளைப் பிறிதோரிடத்திற்குரியதாகக் கூறும் இடமலைவு*** (வின்.); fault in poetry, which consists in the ascription of a wrong place of origin to natural products. 2. ***ஒரிடத்திற்குரியதை மற்றோரிடத்ததாகக் கூறும் இலக்கண வழு*** (நன்.374, மயிலை); defect which consists in the wrong use of persons.

*[இடம் + மயக்கம்.]*

**இடமலைவமைதி** *ida-malaivamaidi*, பெ. (n.) ***இடமலைவாகிய வழுவை அமைத்துக்கொள்ளுகை;*** poetical licence which allows *'idamalaivu'* when it adds to the beauty. "மரகதச் சோதியுடன் மாணிக்கச் சோதி இருமருங்குஞ் சேர்ந்தரிவை பாகன் - உருவ மலைக்கு மகில்சுமந்தாரத்து வான்கோ டலைத்து வரும்பொன்னி யாறு" — இதில் காவிரியுட் பிற மலைக்கும் பிற நாட்டிற்குமுரிய மரகதமும், மாணிக்கமும், சந்தனமும் அலைத்து வருகின்றது என்றமையான் இடமலை வமைதி யாயிற்று. (தண்டி.125, உரை).

*[இடம் + மலைவு + அமைதி.]*

**இடமலைவு** *ida-malaivu*, பெ. (n.) ***ஒரிடத்துப் பொருளை மற்றோரிடத்துள்ளதாகச் சொல்லும் வழு;*** fault in poetry, which ascribes products to places where they are not found as pearls to the mountain or gold to the sea. "தொன்மலையின் மான்மதமும்" (தண்டி. 119.உரை).

*[இடம் + மலைவு.]*

**இடமற்றபிள்ளை** *idamarra-pillai*, பெ. (n.) ***நல்வினை*** (பாக்கியம்) ***அற்ற பிள்ளை*** (வின்.); child without inheritance or fortune (செ.அக.).

*[இடம் + அற்ற + பிள்ளை.]*

**இடமன்** *idaman*, பெ. (n.) ***இடப்புறம்;*** left side. (இ.வ.).

க. எடமக்குலு.

*[இடம் → இடமன்.]*

**இடமானம்**[1] *idamānam*, பெ. (n.) 1. ***அகலம்;*** spaciousness. இடமான வீடு. 2. ***மாளிகை;*** spacious place, magnificent house.

*[இடம் → இடமானம். மானம் = பெயரீறு. ஒ.நோ. தேய் -தேய்மானம்.]*

**இடமானம்**[2] *idamānam*, பெ. (n.) ***பறைவகை.*** (திருநெல்.பு.விட்டுணு.25); double drum carried on the back of an animal. (செ.அக.).

தெ. டமாரமு, டமாய, டம்மாரமு.

*[இடம் + மானம் = இடமானம். ஒருகா. வாயகன்ற பறை.]*

**இடமிடு-தல்** *idamidu-*, 20 செ.கு.வி. (v.i.) ***பருத்தல்;*** to become large in size. இந்தப்புண் இடமிட்டுக்கொண்டு வருகிறது (உ.வ.).

*[இடம் + இடு.]*

**இடமிடைஞ்சல்** *idamidaiñjal*, பெ. (n.) ***நெருக்கடி*** (கொ.வ.); lack of room; crowdedness for want of space. (செ.அக.).

ம. இடகூடுக.

*[இடம் + இடைஞ்சல்.]*

**இடமுடங்கு** *ida-mudangu*, பெ. (n.) ***இடமிடைஞ்சல்*** பார்க்க; see *idamidaiñjal*.

*[இடம் + முடங்கு.]*

**இடமை** *idamai*, பெ. (n.) 1. ***நிலம்;*** earth. 2. ***இடப்பக்கம்;*** leftside 3. ***இடையின எழுத்துகள்;*** Tamil letters called idaiyinam. "ஆவி இடைமை இடம் மிடறாகும்" (நன்.).

*[இடம் → இடமை; இடைமை → இடமை.]*

**இடர்** *idar*, பெ. (n.) 1. ***வருத்தம்;*** affliction, distress, trouble "எண்கணிடரினும் பெரிதாலெவ்வம்" (பு.வெ. 11.7). 2. ***வறுமை;*** poverty, pinch of poverty. "இன்றுபோ மெங்கட் கிடர்" (பு.வெ.8,32) 3. ***ஏதம்;*** jeopardy.

ம. இடர்; க. இடரு; தெ. எடரு.

*[இல் → இள் → இடு = குத்துதல், துளைத்தல், பெயர்த்தல். இடு → இடல் → இடர் = துன்பம்.]*

**இடர்ப்படு-தல்** *idar-p-padu-*, 20 செ.கு.வி. (v.i.) 1. ***வருத்தமுறுதல்;*** *to suffer affliction.* 2. ***நலிந்துகொள்ளுதல்;*** to labour hard, to put forth considerable effort, as in comprehending the sense of a passage. இடர்ப்பட்டுப் பொருள் கண்டார். (உ.வ.).

க. எடர்பாடு

*[இடு → இடல் → இடர் + படு.]*

**இடர்ப்பாடு** *idar-p-pādu-*, பெ. (n.) ***துன்புறுகை;*** experiencing affliction or a reverse of fortune. "இடுக்கணிடர்ப்பா டுடைத்து" (குறள்.624).

*[இடு → இடல் → இடர் + படு. இடர்ப்படு → இடர்ப்பாடு.]*

**இடர்ப்பில்லம்** *idar-p-pillam*, பெ. (n.) ***கண்ணோய் வகை*** (சீவரட்.); curable kind of blear-eye. (செ.அக.).

*[இடர் + பில்லம்.]*

**இடரெட்டு** *iḍar-eṭṭu*, பெ. (n.) ***நாட்டிற்கு வரக்கூடிய எண்வகைத் தீமை; இடரெட்டாவன: விட்டில், கிளி, நால்வாய், வேற்றரசு, தன்னரசு, நட்டம், பெரும்புயல், காற்று*** (பு.வெ.9,17,உரை); eight forms of affliction that may afflict a country like locust, parrot, elephant, foreign royal tyranny, native royal tyranny, loss, rain, strong wind. (செ.அக.).

*[இடர் + எட்டு.]*

**இடல்** *iḍal*, பெ. (n.) 1. ***எறிதல்;*** to throw. 2. ***கொடுத்தல்*** to give, bestow. 3. ***இடுதல்;*** to put, drop.

ம. இடல்.

*[இடு → இடல்.]*

**இடலம்** *iḍalam*, பெ. (n.) ***அகலம்;*** width, extent "இடலமாகிய ரத்தக் கடல்" (இராமநா.யுத்த.89), 'இது இடலமானது' (தஞ்சை.).

தெ. வெடல்ப்பு

*[இடு → இடல் + அம்.]*

**இடலித்தல்** *iḍalittal*, பெ. (n.) ***அகலித்தல்*** (ஆ.அக.); widening.

தெ. வெடலின்சுட

*[இடு → இடல் → இடலித்தல்.]*

**இடலிப்பு** *iḍalippu*, பெ. (n.) ***அகலம்;*** breadth, width.

தெ. வெடல்ப்பு.

*[இடல் → இடலிப்பு.]*

**இடலை**[1] *iḍalai*, பெ. (n.) 1. ***அகன்றது;*** that which is wide. 2. ***ஒரு மர வகை,*** *(L.); wild olive. (செ.அக.).*

*ம. இடல*

*[இடல் → இடலை. ஒருகா. பருத்த மரமாகலாம்.]*

**இடலை**[2] *iḍalai*, பெ. (n.) 1. ***துக்கம்;*** worry. 2. ***துன்பம்;*** distress.

*[இடு → இடல் → இடலை. இடல் → இடர்.]*

**இடலை இட்டலி** *iḍalai iṭṭali*, பெ. (n.) ***அகன்ற ஒரே இட்டலி;*** a large boiled rice cake prepared on a special occasion. (தஞ்சை.).

*[இடலை[1] + இட்டலி.]*

**இடவகம்** *iḍavagam*, பெ. (n.) 1. ***மா, பனை ஆகிய மரங்களின் பிசின்.*** (வின்.); gum of the mango or the palmyra tree. 2. ***இலவங்கம்*** (மலை.); clove-tree. (செ.அக.).

*[இல் → இள் → இடு : குத்துதல், பிளத்தல், பெயர்த்தல், வெளிவரல், இடு → இடுவு → இடவு → இடவகம் = கசியும் பிசின்.]*

**இடவகை** *iḍa-vagai*, பெ. (n.) 1. ***வீடு,*** (பிங்.); house. 2. ***இடம்*** (ஆ.அக.); place.

*[இடம் + வகை.]*

**இடவயின்** *iḍavayiṉ*, இடை. (part.) 1. ***இடத்து;*** at, in. "ஒல்லா ரிடவயின்" (தொல்.பொருள்.76) 2. ***இடது பக்கம்;*** left side.

*[இடம் + வயின்.]*

**இடவழு** *iḍa-vaḻu*, பெ. (n.) 1. ***தன்மை முதலிய மூவகையிடங்களைப் பிறழக் கூறுகை.*** (நன். 375); fault in the usage of pronouns belonging to the three persons. 2. ***ஐந்திணைக்குரியவற்றுள் ஒன்றற்குரியவற்றை மற்றொன்றிற்குக் கூறுவதுமாம்.*** (ஆ.அக.); fault in the mentioning of the five divisions of land.

*[இடம் + வழு.]*

**இடவன்**[1] *iḍavaṉ*, பெ. (n.) ***மண்ணாங்கட்டி;*** lump of mud. "எந்தை யிடவனெழ வாங்கி யெடுத்த மலை". (திவ்.பெரியாழ்.3,5,5). (யாழ்ப்.).

*[இடத்தல் = பெயர்த்தல். இட → இடவன் = பெயர்த்தெடுத்த மண்ணாங்கட்டி.]*

**இடவன்**[2] *iḍavaṉ*, பெ. (n.) 1. ***நுகத்தில் இடப்பக்கத்து மாடு;*** left ox in the yoke. 2. ***கூட்டெருது*** (யாழ்ப்.); fellow or mate in a yoke of oxen. 3. ***எதிரிமாடு;*** ox of the opponent.

க. எடகோலு.

*[இடம் = இடதுபக்கம். இடம் → இடவன் = இடப்பக்கத்து மாடு.]*

**இடவன்**[3] *iḍavaṉ*, பெ. (n.) ***பிளக்கப்பட்ட பொருள்*** (வின்.); anything split or cloven.

*[இடத்தல் = தோண்டுதல், பிளத்தல். இட → இடவன்.]*

**இடவாகுபெயர்** *iḍa-v-āgupeyar*, பெ. (n.) ***இடப்பெயர் அவ்விடத்துள்ள பொருளுக்கு ஆகிவருவது*** (நன். 290,உரை); that kind of metonymy where the name of the location is used for the name of the person or thing located there in.

*[இடம் + ஆகு + பெயர். எ-டு: கூறை உடுத்தாள். கூறை நாட்டில் நெய்யப்பட்ட புடவை கூறை எனப்பட்டது.]*

**இடவிய** *iḍaviya*, கு.பெ.எ. (adj.) 1. ***பரந்த;*** wide, extensive, spacious. "இடவிய வறை நின்று" (தணிகைப்பு.வீராட்.65). 2. ***விரைவுள்ள;*** quick, swift "இடவிய கதியின் வாசி", (திருவாலவா. 28,59). 3. ***சார்ந்த;*** adjoined, attached "இடவிய மனமே யின்பதுன்பங்க ளெய்துற" (ஞானவா.உற்பத்.33). (செ.அக.).

*[இடத்தல் = பிளத்தல், அகலித்தல், பரவுதல், விரைதல், சார்தல். இட → இடவிய.]*

**இடவியம்** *iḍaviyam*, பெ. (n.) ***அகலம்;*** breadth.

*[இடம் → இடவியம்.]*

**இடவை** *iḍavai,* பெ. (n.) *வழி* (பிங்.); way.

*[இடம் = இடைவெளி. இடம் → இட → இடவை = பாதை, வழி.]*

**இடறல்** *iḍaṟal,* பெ. (n.) 1. *கால்தடுக்குகை;* stumbling 2. *தடை;* obstacle, impediment. 3. *பழிச்சொல்* (ஆ.அக.); scandal. "இடறலுண்டாக்கினான்" (இராட்.). (செ.அக.). 4. *குறைகாணல்;* fault finding, (ஆ.அக.). 5. *பதறல்;* faltering, perturbation (சேரநா.).

ம. இடர்ச்ச; க. எடரு, இடரு; து. எட்டுனி.

*[இடறுதல் = பெயர்தல், நிலை தடுமாறல். இடலல் - இடறல்.]*

**இடறி** *iḍaṟi* பெ. (n.) *யானை;* elephant. (சா.அக.).

*[இடறுதல் = பெயர்த்தல், பிளத்தல், உடைத்தல். இடறு → இடறி.]*

**இடறு**[1]**-தல்** *iḍaṟu-,* 9 செ.கு.வி. (v.i.) 1. *கால்தடுக்குதல்;* to stumble, strike one's foot against. இடறின காலிலேயே இடறுகிறது. (உ.வ.). 2. *துன்பப்படுதல்;* to be afflicted, troubled. "ஈமி னெமக்கொரு துற்றென் றிடறுவர்" (திவ். திருவாய்.4,1,7) -12 செ.குன்றாவி. (v.t.) 1. *எற்றுதல்* (பெரியபு. திருநாவுக்.110); to strike against, kick, to kick off, as the elephant does the head of a criminal 3. *மீறுதல்;* to transgress. "எண்டரு நெறிமுறை யிடறு கீசகன்" (பாரத.கீசகன்.33). 4. *ஊறுபடுத்துதல்;* to wound. "ஊனிடறு வாளிகள்" (பாரத.மணிமான்.30). 5. *தடுத்தல்;* to obstruct, hinder. "இடையிலேன் கெடு வீர்கா ளிடறேன்மினே" (தேவா.717,1). (செ.அக.). 6. *கடத்தல்* (ஆ.அக.); to pass.

ம. இடறு; க. இடறு, எடறு; து. எட்டுனி.

*[இடலுதல் = பெயர்த்தல். இடலு → இடறு..]*

**இடறு**[2] *iḍaṟu,* பெ. (n.) *தடை* (வின்.); obstacle, barrier, impediment, hindrance. (செ.அக.).

*[இடல் → இடறு.]*

**இடறுகட்டை** *iḍaṟu-kaṭṭai,* பெ. (n.) *தடையாயிருப்பது;* stumbling block, hindrance, obstruction "தாய்மாரா கிற இடறுகட்டைகளாலே" (திவ். திருநெடுந்.21,வ்யா, பக்.180). (செ.அக.).

*[இடறு + கட்டை.]*

**இடன்** *iḍaṉ,* பெ. (n.) 1. *அகலம்;* wide space. "இடனுடை வரைப்பு" (பொருந.65). 2. *நல்ல காலம்;* auspicious time, good time. "திண்டேர் களையினோ விடனே" (கலித்.121). 3. *செல்வம்* (ஆ.அக.); wealth. 4. *இடம்* (ஆ.அக.); space. 5. *இடப்பக்கத்திலிருப்பவன்* (ஆ.அக.); one who is on left side.

*[இடம் → இடன்.]*

**இடனறி-தல்** *iḍaṉaṟi-,* 2 செ.கு.வி. (v.i.) *அரசன் வினை செய்தற்குரிய இடத்தைத் தெரிகை* (குறள். அதி.50); knowing the most suitable strategic place for commencing hostilities against an enemy. (செ.அக.).

*[இடம் → இடன் + அறிதல்.]*

**இடனறிந்தொழுகு-தல்** *iḍaṉ-aṟindoḻugu-,* 9 செ.கு.வி. (v.i.) 1. *வணிகரெண்குணங்களுளொன்று* (பிங்.); adopting the customes and usages of different countries, a desirable virtue in merchants trading with many countries. 2. *இருக்கும் இடம் நோக்கி அதற் கிசைய நடக்கை;* adjusting one's conduct to one's environment. (செ.அக.).

*[இடம் → இடன் + அறிந்து + ஒழுகல்.]*

**இடனில் சிறுபுறம்** *iḍaṉilciṟupuṟam,* பெ. (n.) *அகற்சி யில்லாத பிடரி;* close set mane "இடனில் சிறுபுறத்தி ழையொடு துயல் வர" (அகம்.142).

*[இடம் - இடன் + இல் + சிறுபுறம்.]*

**இடா** *iḍā,* பெ. (n.) 1. *இடார், இறைகூடை* (சிலப்.10, 111, உரை); palm-leaf bucket for irrigation. 2. *ஓரளவு* (தொல்.எழுத்.170, உரை); a measure. 3. *படைக்கலன் வகை;* a weapon. 4. *அகப்படுத்தும் பொறி;* a trap.

*[இடம் = இடைவெளி. இடம் → இடார் → இடா. இடா = குறித்த கொள்ளளவு கொண்ட கூடை, முகத்தலளவு வாயகன்ற கருவி.]*

**இடாகினி** *iḍāgiṉi,* பெ. (n.) 1. *சுடுகாட்டிற் பிணங் களைத் தின்னும் பேய்* (சிலப்.9,21); female goblin feeding on corpses in the burning ground. (செ.அக.). 2. *காளியேவல் செய்பவள்;* a female demon attending on Kāḷi. (அபி.சிந்.).

க. டாகினி.

*[இடுகாடு → இடுகாடினி → இடாகினி. இடாகினி > Skt. ḍākini.]*

**இடாகு** *iḍāgu,* பெ. (n.) *புள்ளி* (அக.நி.); brand, spot, dot.

தெ. டாகு. *Skt.* dāku.

*[ஒருகா. இலக்கு = புள்ளி, அடையாளம் புள்ளியிடுதல். இலக்கு → இளக்கு → இளாக்கு → இடாக்கு → இடாகு.]*

**இடாகுபோடு-தல்** *iḍāgu-pōḍu-,* 20 செ.கு.வி. (v.i.) *கால்நடைகட்குச் சூடுபோடுதல்;* to brand, as on cattle. (செ.அக.).

*[இலக்கு → இளக்கு → இளாக்கு → இடாக்கு → இடாகு + போடுதல்.]*

**இடாசல்** *iḍāšal,* பெ. (n.) **இடாசு-தல்** பார்க்க; see *iḍāšu.*

**இடாசு-தல்** *iḍāšu-,* 5 செ. குன்றாவி. (v.t.) 1. *நெருக்குதல்* (வின்.); to press. 2. *மோதுதல்* (வின்.); to strike, collide. 3. *மேற்படுதல்* (வின்.); to beat, as in a competition. 4. *அவமதித்தல்* (வின்.); to disregard, slight, neglect.

*OE.* dassche; *E.* dash; *Dan.* dske; *Sw.* daska.

*[இடுதல் = வைத்தல், நெருக்குதல்.]*

**இடாடிமம்** *iḍāḍimam,* பெ. (n.) *தாதுமாதுளை* (மலை.); common pomegranate. (செ.அக.).

க. தாளிம்ப, தாளிம்பெ; தெ. தாளிம்ப, தாளிம்மு, தானிம்ம.

*[தாதுமாதுளை > Skt. dāḍima > த. தாடிமம் - டாடிமம் -இடாடிமம் (கடுங்கொ.).]*

**இடாப்பு[1]-தல்** *iḍāppu-,* 15 செ.கு.வி. (v.i.) ***காலை அகலவைத்தல்*** (வின்.); to straddle in walking. (செ.அக.).

*[இடப்புதல் → இடாப்புதல்.]*

**இடாப்பு[2]** *iḍāppu,* பெ. (n.) 1. ***அட்டவணை*** (வின்.); catalogue, list, register. 2. ***பார்த்தெழுதும்படி;*** copy-book. 3. ***பெயர், முகவரி*** (ஆ.அக.); name, address.

தெ. டாபு.

*[இடு → இடப்பு → இடாப்பு.]*

**இடாம்பிகம்** *iḍāmbigam,* பெ. (n.) ***இடம்பம்;*** pomposity, parade.

*[இடம்பு → இடாம்பு → இடாம்பிகம்.]*

**இடாம்பிகன்** *iḍāmbigaṉ,* பெ. (n.) ***இடம்பக்காரன்;*** pompous fellow, coxcomb. "இடாம்பிக ரோடும் புக்குநீ" (பிரபோத.24, 67). (செ.அக.).

*[இடம்பு → இடாம்பு → இடாம்பிகம் → இடாம்பிகன். > Skt. ḍāmbika]*

**இடாமிடம்** *iḍā-miḍam,* பெ. (n.) ***ஒழுங்கற்ற பேச்சு*** (சங்.அக.); improper or unbecoming language. (செ.அக.).

*[இடம்பு → இடாம்பிகம் → இடாம்பிடம் → இடாமிடம் -(கொ.வ.).]*

**இடாமுடாங்கு** *iḍā-muḍāṅgu,* பெ. (n.) ***ஒழுங்கின்மை*** (யாழ்.அக.); irregularity, impropriety. (செ.அக.).

*[இடாம்பு + முடங்கு - இடாமுடாங்கு - எதுகை குறித்த இணைமொழி.]*

**இடாயம்** *iḍāyam,* பெ. (n.) ***இசைத்துறை ஐந்தனுள் ஒன்று*** (பெரியபு. ஆனாய.26); one of five classification of music. (செ.அக.).

*[ஒருகா. இடம் → இடாயம். விரித்த அலுக்கு (கமகம்) கொண்ட இசைத்துறையாகலாம்.]*

**இடாயர்** *iḍāyar,* பெ. (n.) 1. ***இறைகூடை;*** palm-leaf bucket. 2. ***உலுத்தர்;*** miser. 3. ***எலி முதலியன பிடிக்கும் பொறி;*** rat-trap.

*[இடா + அர் = இடாயர்.]*

**இடார்** *iḍār,* பெ. (n.) 1. ***இறைகூடை*** (பிங்.); palm-leaf bucket for irrigation. 2. ***எலி முதலியன பிடிக்கும் பொறி;*** trap for squirrels or rats. "இடாரி லகப்பட்ட எலிபோல". (யாழ்ப்.).

*[இடால் → இடார்.]*

**இடாரேற்று-தல்** *iḍār-ēṟṟu-,* 15 செ.கு.வி. (v.i.) ***எலிப்பொறியை ஆயத்தப்படுத்தி வைத்தல்*** (யாழ்ப்.); to lay a trap as for squirrels and rats. (செ.அக.).

*[இடார் + ஏற்றுதல்.]*

**இடால்** *iḍāl,* பெ. (n.) 1. ***கத்தி;*** sword. "கண்டகோடாரி யைப்போல் ஏந்து வெள்ளைப் பக்கறை யிடாலினான்" (விறலிவிடு.49). (செ.அக.). 2. ***வாயகன்ற கூடை;*** wide mouthed basket.

*[இடு → இடல் → இடால். இடால் = வாயகன்றது.]*

**இடாவு** *iḍāvu,* பெ. (n.) ***இடைகலை;*** iḍaikalai, breath inhaled through the left nostril. "இடாவு பிங்கலையா னைய" (கம்பரா.மிதிலை.130). (செ.அக.).

இடைகலை பார்க்க see *iḍaikalai.*

*[இடம் → இடவு → இடாவு.]*

**இடாவேணி** *iḍā-vēṇi,* பெ. (n.) ***அளவிடப்படாத பரப்பு;*** unlimited extent. "இடாவேணி யியலறைக் குருசில்" (பதிற்றுப். 24,14).

*[இடம் = அகலம். இடா = அகல எல்லைக்கு உட்படாத, பரந்து சென்று அணுகமுடியாத. இடா + ஏணி. ஏணி = உயர்ச்சி.]*

**இடி[1]-தல்** *iḍi-,* 4 செ.கு.வி. (v.i.) 1. ***தகர்தல்*** (கம்பரா. மகுடபங்.15); to break, crumble, to be in ruins, as a wall; to fall to pieces. 2. ***கரையழிதல்;*** to be washed away; to become eroded, as the bank of a river. 3. ***முனை முறிதல்;*** to become bruised; to be broken, as the grain of rice. அரிசி இடிந்து போயிற்று. (கொ.வ.). 4. ***வருந்துதல்;*** suffer. "என்னோயுங் கொண்டதனை யெண்ணி யிடிவேனோ" (அருட்பா. ஆற்றா.5). 5. ***மலைத்தல்;*** to be stunned, staggered. அவள் அந்த துக்க சமாசாரம் கேட்டு இடிந்து போனாள். 6. ***முறிதல்*** (பிங்.); to break in two, part in two. (செ.அக.).

தெ., க., ம. இடி.

*[இல் → இள் → இடு → இடி = குத்துதல், துளைப்படல், உடைபடுதல், துன்புறுதல்.]*

**இடி[2]-த்தல்** *iḍi-,* 4. செ.கு.வி. (v.i.) 1. ***முழங்குதல்;*** to sound loud; to make a noise, as a gun, to roar, as a lion "அரிமா னிடித்தன்ன" (கலித்.15). 2. ***இடி யொலிபடுதல்;*** to thunder. "இடித்து முழங்கியதோர் யோசனையோர் கேட்பர்" (நாலடி.100). 3. ***நோதல்;*** to throb, to beat, to ache, as the head. தலையிடிக்கிறது. 4. ***தாக்கிப்படுதல்;*** to come in contact with, hit against. 'கதவு நிலை தலையில் இடிக்கும்.' 5. ***மோதுதல்;*** to strike against, as a ship against the shore. கப்பல் கரையில் இடித்தது (வின்.). 6. ***சினத்தல்;*** to be angry, furious "கூற்றின் னிடிக்குங் கொலைவேலவன்" (சீவக.432) - 4 செ.குன்றாவி. (v.t.) 1. ***தூளாக்குதல்;*** to pound in a mortar; to bray with a pestle; to reduce flour. "பொற்சுண்ண மிடித்து நாமே" (திருவாச.9,1). 2. ***தகர்த்தல்;*** to beat so as to break, to batter to pieces, demolish, shatter. 'வீட்டையிடித்துத் தள்ளினான்.' 3. ***நசுக்குதல்;*** to press; to crush, as sugarcane. "கரும் பினை....யிடித்துநீர் கொள்ளினும்" (நாலடி.156). 4. ***தாக்குதல்;*** to push or thrust side-wise, as with the elbow. 'குந்தத்தால் இடித்தான்.' 5. ***முட்டுதல்;*** to attack

with the horns, as a bull; to butt against the udder, as a sucking calf. அந்த மாடு இடிக்கும். 6. ***கழறிச் சொல்லுதல்;*** to reprove sharply or admonish incisively. "இடிப்பாரையில்லாத வேமரா மன்னன்" (குறள்,448). 7. ***கொல்லுதல்;*** to kill, slay. "இடிக்குங்கொ லிவனை யென்பார்" (சீவக. 1108). 8. ***தோண்டுதல்;*** to dig. "கணிச்சிகளிற் கயம்பட நன்கிடித்து" (சீவக.592). 9. ***கெடுத்தல்;*** to destroy, annihilate. "விருப்பிடித்து" (இரகு.தேனுவ.71). 10. ***உதைத்தல்;*** to kick. 11. ***துடித்தல்;*** to palpitate. 12. ***இடியிடித்தல்*** (ஆ.அக.); to thunder.

ம. இடிக்குக; **க.** இடி, இடகு, டிகா, டீகு; **துட.** இட்; **து.** எடபுனி, எடுபுனி, எட்புனி; **தெ.** டீகொனு; **கொலா.** இட்.

*[இல் → இள் → இடு → இடி = குத்தல். துளைத்தல், உடைத்தல், துன்புறுத்துதல்.]*

**இடி**[3] *iḍi,* பெ. (n.) 1. ***தாக்கு;*** stroke, blow, push. 'உரலுக்கு ஒரு பக்கம் இடி, மத்தளத்துக்கு இரண்டு பக்கமும் இடி'. 2. ***மா*** (பிங்.); flour, esp. of rice or millet. 3. ***சிற்றுண்டி*** (பிங்.); light meal with flour as its chief ingredient. 4. ***சுண்ணம்*** (பிங்.); powder, dust, anything pulverised. 5. ***இடியேறு*** (பிங்.); thunder. 6. ***பேரொலி*** (பிங்.); roar, great noise. 7. ***கழறுஞ்சொல்;*** rebuke, reproof. "இடிபுரிந் தெள்ளுஞ் சொற்கேட்பர்" (குறள்.607). 8. ***குத்துநோவு;*** ache, throbbing pain. 'மண்டையிடி' (கொ.வ.) (செ.அக.).

ம. இடி; **கோத.** இரி; **துட.** ஈரி.

*[இல் → இள் → இடு → இடி.]*

**இடி**[4] *iḍi,* பெ. (n.) ***நெருப்பு, தீ;*** fire. "இடியிருந்தகட் பதினொரீசர்" (தக்கயாகப்.353). (செ.அக.).

*[இடு → இடி = வானம் இடித்தலால் தோன்றும் மின்னல், நெருப்பு.]*

**இடி**[5] *iḍi,* பெ. (n.) ***உறுதிச்சொல்*** (அக.நி.); word of admonition. (செ.அக.).

*[இடு → இடி.]*

**இடி**[6] *iḍi,* இடை. (adj.). ***அனைத்து;*** எல்லா; the whole. (கருநா.).

குட., து. இடி.

*[இடு[3] → இடி.]*

**இடி**[7] *iḍi,* பெ. (n.) ***ஆட்டுக்கிடாய்*** (அக.நி.); ram, he-goat. (செ.அக.).

*[ஏழகம் → ஏடகம். Skt. iḍika > த. ஈடி → இடி. (கொ.வ.).]*

**இடிக்கடை** *iḍi-k-kaḍai,* பெ. (n.) ***இடுக்கடி*** (இ.வ.) பார்க்க; see *iḍukkaḍi.*

*[இடுக்கடி → இடுக்கடை → இடிக்கடை.]*

**இடிக்கொடியன்** *iḍi-k-koḍiyaṉ,* பெ. (n.) ***இடிக்கொடி யோன்*** பார்க்க; see *iḍikkoḍiyōṉ.* (ஆ.அக.).

*[இடி + கொடியான். ஆன்-ஒன்-அன்.]*

**இடிக்கொடியோன்** *iḍi-k-koḍiyōṉ,* பெ. (n.) ***இந்திரன்;*** Indra so called as he has the symbol of thunder bolt on his banner. (செ.அக.).

*[இடி + கொடியோன்.]*

**இடிக்கொள்ளு** *iḍi-k-koḷḷu,* பெ. (n.) ***காட்டுக்கொள்;*** black horse-gram. (செ.அக.).

*[இடி + கொள்ளு. இடி = மாவு.]*

**இடிகரை** *iḍi-karai,* பெ. (n.). ***ஆறு முதலியவற்றின் அழிந்த கரை;*** eroded bank, as of a river. "ஆக்கை யெனு மிடி கரையை" (தாயு.சின்மயா.2). (செ.அக.).

*[இடி → இடிதல், சரிதல். இடி + கரை.]*

**இடிகிணறு** *iḍi-kiṉaṟu* பெ. (n.) ***இடிந்துவிழு நிலையி லுள்ள கிணறு;*** dilapidated well.(செ.அக.).

*[இடி → இடிதல். இடி + கிணறு.]*

**இடிகொம்பு** *iḍi-kombu,* பெ. (n.) ***கழியில் அடித்துள்ள அதிர்வேட்டுக் குழாய்*** (வின்.); small mortars set into a pole, used in pyrotechny. (செ.அக.).

*[இடிதல் = அதிர்தல், வெடித்தல். இடி + கொம்பு.]*

**இடிச்சக்கை** *iḍi-c-cakkai,* பெ. (n.) ***பலாப்பிஞ்சு*** (நாஞ்.); tender jack fruit. (செ.அக.).

*[இட்டி → இடி = சிறியது. இடி + சக்கை.]*

**இடிச்சொல்** *iḍi-c-col,* பெ. (n.) ***இடித்துரைக்கும் கடுஞ்சொல்;*** sharp reproof. "இடிச்சொற் பொறாஅ விலக்கண வினையர்" (பெருங்.உஞ்சைக்.38,345). (செ.அக.).

*[இடி + சொல்.]*

**இடிசல்**[1] *iḍišal,* பெ. (n.) ***நொறுங்கின தவசம்*** (கொ.வ.); grain bruised in pounding. (செ.அக.).

*[இடிதல் = நொறுங்குதல். இடி → இடியல் → இடிசல்.]*

**இடிசல்**[2] *iḍišal,* பெ. (n.) 1. ***அழிவு;*** dilapidation; ruin. 'கோயில் இடிசலாய்க் கிடக்கிறது' (இ.வ.). 2. ***நொய்ய ரிசி*** (கொ.வ.); broken rice. (செ.அக.).

*[இடி → இடியல் → இடிசல்.]*

**இடிசாந்து** *iḍi-šāndu,* பெ. (n.) ***இடித்துத் துவைத்த சுண்ணாம்பு*** (இ.வ.); pounded mortar-lime. (செ.அக.).

*[இடித்தல் = குற்றுதல், மாவாக்குதல். இடி + சாந்து.]*

**இடிசாமம்**[1] *iḍi-šāmam,* பெ. (n.) ***கெடு காலம்*** (வின்.); evil hour. (செ.அக.).

*[இடி + சாமம். யாமம் = பொழுது, காலம். யாமம் → ஜாமம் → சாமம்.]*

**இடிசாமம்**[2] *iḍi-šāmam,* பெ. (n.) ***இகழ்ச்சி*** (நிந்தை) (வின்.); defamation, reproach. (செ.அக.).

*[இடி + சாமம். சமம் = போர்க்களம், குழப்பம், கலவரம். சமம் → சாமம்.]*

**இடிசிலைச்சாறு** *idišilai-c-cāṟu,* பெ. (n.) ***இலையை யிடித்துப் பிழிந்த சாறு;*** extracted juice of the leaves (சா.அக.).

*[இடித்த + இலை + சாறு = இடித்திலைச்சாறு → இடிசிலைச்சாறு (கொ.வ.).]*

**இடிசுவர்** *iḍi-šuvar,* பெ. (n.) ***இடிந்த சுவர்;*** ruined wall. (செ.அக.).

*[இடி + சுவர்.]*

**இடிசூலை** *iḍi-šūlai,* பெ. (n.) ***மண்டையிடி, மண்டைக் குத்தல்;*** a type of severe head-ache attended with digging pain (சா.அக.).

*[இடி + சூலை. சுல் - குத்துதல். சுல் → சூலை = மண்டையிடி. இடிதல் = வருத்துதல்.]*

**இடிஞ்சில்** *iḍiñjil,* பெ. (n.) ***விளக்குத்தகழி;*** hollow portion of a lamp, which is the receptacle for the oil. "உடலெனு மிடிஞ்சி றன்னில் நெய்யமர் திரியுமாகி" (தேவா.503,2). (செ.அக.).

ம. இடிஞ்ஞில் (சிறு மண்விளக்கு).

*[இடிதல் = வீழ்தல், தாழ்தல், உட்குழிதல். இடி → இடிஞ்சில் = உட்குழிந்த தகழி.]*

**இடித்தடு** *iḍittaḍu,* பெ. (n.) ***பிட்டு;*** loose confectionary made of flour. "நரைத்தலை முதியோ ளிடித்தடு கூலி கொண்டு" (கல்லா.46). (செ.அக.).

*[இடித்தடு = பிட்டு, இட்டளி. இடித்து + அடு = இடித்தடு.]*

**இடித்துரை** *iḍitturai,* பெ. (n.) ***கழறிக்கூறுஞ்சொல்;*** admonition, expostulation, criticism, at once kind and severe (செ.அக.).

*[இடித்து + உரை.]*

**இடிதலைநோய்** *iḍi-talainōy,* பெ. (n.) ***நோய் வகை*** (கடம்ப.பு. இலீலா.149); disease. (செ.அக.).

*[இடி + தலைநோய்.]*

**இடிதாங்கி** *iḍi-tāṅgi,* பெ. (n.) ***கட்டடத்தின்மீது இடி விழாதபடி காக்க வைக்குங் காந்தக்கம்பி;*** lightning conductor. (செ.அக.).



இடிதாங்கி

*[இடி + தாங்கி.]*

**இடிப்பணி** *iḍippaṇi,* பெ. (n.) ***குறிப்புரை, விளக்கவுரை*** (இலக்.அக.); gloss, comment. (செ.அக.).

க. டிப்பண, டிப்பணி; தெ. டிப்பணமு; மரா. டிப்பண.

*[இடி + பணி. இடு → இடி = இட்டுரைக்கும் அல்லது விளக்கி எழுதும் உரை. இடு → ஈடு, ஈட்டுரை என்பவற்றை ஒப்புநோக்குக.]*

த. இடிப்பணி > skt. tippani.

**இடிப்பு** *iḍippu,* பெ. (n.) 1. ***இடி;*** thunder. "இடிப்பென வார்த்து." (கந்தபு. சிங்கமு.431). 2. ***ஒலி;*** noise, clangour. "சேவலங்கொடி யிடிப்பினால்" (கந்தபு.திருப் பரங்.20) (செ.அக.).

*[இடி → இடிப்பு.]*

**இடிபடு-தல்** *iḍi-paḍu-,* 20 செ.கு.வி. (v.i.) 1. ***தாக்கப்படுதல்;*** to be assaulted, elbowed. 2. ***நொறுங்கு தல்;*** to be comminuted, as rice. இடிபட்ட அரிசி. 3. ***வெடிபடுதல்;*** to crackle, as fire. இடிபடமுழங்கிச் செந்தீ. (சீவக.1084). 4. ***துன்பப்படுதல்;*** to be vexed or harried. 'அவன் தரித்திரத்தால் இடிபடுகிறான்.' (கொ.வ.) (செ.அக.).

*[இடி + படு.]*

**இடிம்பம்** *iḍimbam,* பெ. (n.) 1. ***கைக்குழந்தை;*** baby, small child. 2. ***பெருந்துன்பம்;*** misery. 3. ***மண்ணீரல்;*** spleen. 4. ***பறவை முட்டை;*** egg of birds. 5. ***ஆமணக்கு;*** castor plant. (செ.அக.).

*[இட்டி → இடி → இடிம்பம் = சிறியது. இடிம்பம் > skt. dimbha சிறுமை.]*

**இடிம்பன்** *iḍimbaṉ,* பெ. (n.) ***வீமனாற் கொல்லப்பட்ட ஓர் அரக்கன்*** (பாரத. வேத்திர.16); name of a Rāksasa who was slain by Bhima. (செ.அக.).

*[இடும்பன் → இடிம்பன்.]*

**இடிம்பை** *iḍimbai,* பெ. (n.) ***வீமன் மனைவியாகிய அரக்கி*** (பாரத. வேத்திர.9); name of Hiḍimbā's sister, who married Bhīma. (செ.அக.).

*[இடும்பை → இடிம்பை.]*

**இடிமயிர்** *iḍi-mayir,* பெ. (n.) ***சவரி*** (இ.வ.); false hair, usually obtained from the tail of the yak. (செ.அக.).

*[இடு + மயிர் - இடிமயிர். இடுமயிர் பார்க்க; see iḍumayir.]*

**இடிமரம்** *iḍi-maram,* பெ. (n.) 1. ***உலக்கை*** (வின்.); pestle. 2. ***அவலிடிக்கும் ஏற்றவுலக்கை*** (இ.வ.); heavy wooden hammer in a frame, worked by a pedal and used for pounding parched rice into flakes. (செ.அக.).

ம. இடிமரம்.

*[இடித்தல் = குற்றுதல். இடி + மரம்.]*

**இடிமருந்து** *iḍi-marundu,* பெ. (n.) ***பொடி மருந்து;*** medicinal preparation of drugs pounded together. (செ.அக.).

*[இடி + மருந்து. இடித்தல் - பொடித்தல்.]*

**இடிமாந்தம்** *iḍi-māndam,* பெ. (n.) ***பொய்யான குற்றச் சாட்டு*** (இ.வ.); false accusation. (செ.அக.).

*[இடு → இடுமம் → இடுமந்தம் → இடிமந்தம் → இடிமாந்தம்.]*

**இடிமீன்** *iḍi-mīṉ,* பெ. (n.) ***மீன்வகை*** (பாண்டி.); fish. (செ.அக.).

*[இடி + மீன் = இடிமீன் - தாக்கும்மீன் வகையைச் சார்ந்ததாய் இருக்கலாம்.]*

**இடிமுழக்கம்** *iḍi-muḻakkam,* பெ. (n.) ***இடியொலி;*** thunder clap. (செ.அக.).

ம. இடிமுழக்கம்.

*[இடி + முழக்கம்.]*

**இடிமேலிடி** *iḍi-mēl-iḍi,* பெ. (n.) 1. ***மாட்டுச்சுழிக்குற்றம்*** (பெரியமாட்.20); defect in cattle. (செ.அக.). 2. ***அடுத்தடுத்து வரும் இடர்;*** continuous misfortunes. 'அவனுக்கு இடிமேல் இடி விழுந்தது.' (உ.வ.).

*[இடி + மேல் + இடி.]*

**இடியப்பம்** *iḍi-y-appam,* பெ. (n.) ***சிற்றுண்டி வகை;*** steamed rice-cake pressed through perforated mould and resembling vermicelli. (செ.அக.).

ம. இடியப்பம்.

*[இடி + அப்பம். இடி = இடித்த மாவு.]*

**இடியப்பவுரல்** *iḍiyappavural,* பெ. (n.) ***இடியப்பம் பிழியும் ஏனம்*** (ஆ.அக.); vessel used for making iḍi-y-appam.

*[இடி + அப்பம் + உரல். உரல் = உருண்ட வடிவிலான குழி.]*

**இடியம்பு** *iḍi-y-ambu,* பெ. (n.) ***இடிகொம்பு*** (வின்.) பார்க்க; see *iḍikombu.*

**இடியல்** *iḍiyal,* பெ. (n.) ***பிட்டு;*** loose confectionary made of flour. ''இடியலினுணவு'' (குமர.பிர.காசி.4). (செ.அக.).

*[இடி → இடியல். இடி = மாவு.]*

**இடியாப்பம்** *iḍi-y-āppam,* பெ. (n.) ***இடியப்பம்*** (செ.அக.) பார்க்க; see *iḍiyappam.*

ம. இடியப்பம்.

*[இடி + அப்பம் - இடியப்பம் → இடியாப்பம். அப்பு → அப்பம் = நீரொடு பிசைந்த மாவினால் செய்த பண்ணிகாரம்.]*

**இடியிளகியம்** *iḍiyiḷagiyam,* பெ. (n.) ***கல்லுரலில் வெல்லத்தையும், மருந்துப் பொடியையும் கொஞ்சங் கொஞ்சமாகச் சேர்த்துப் பூணில்லா உலக்கையால் இடித்தும் பிறகு அம்மியில் வைத்துக் குழவியால் புரட்டிப் புரட்டி இடித்து முடித்த இளகியம்*** (இலேகிய மருந்து); electuary prepared by pounding jaggery mixed with powdered drugs with a rice pounder without nozzle at the ends and then on a grinding stone till it is reduced to a soft and consistent paste. (சா.அக.).

*[இடி + இளகியம்.]*

**இடியுரல்** *iḍiyural,* பெ. (n.) 1. ***மருந்துச் சரக்குகளிடிக்கு மோர் வகைக் கல்லுரல்;*** stone vessel with obconical ends connected by a constricted neck, used for pounding drugs. 2. ***இடியப்ப வுரல்;*** mould made of iron or wood for making pastry.

*[இடி + உரல்.]*

**இடியேறு** *iḍi-y-ēṟu,* பெ. (n.) ***பேரிடி*** (திவா.); thunder-bolt. (செ.அக.).

*[இடி + ஏறு.]*

**இடிலேகியம்** *iḍi-lēgiyam,* பெ. (n.) ***இடியிளகியம்*** பார்க்க; see *iḍi-y-iḷagiyam.*

**இடிவளி** *iḍivaḷi,* பெ. (n.) ***குத்தலோடு கூடிய வளி*** (வாயு); acute rheumatic pain (சா.அக.).

*[இடி + வளி.]*

**இடிவாங்கி** *iḍi-vāṅgi,* பெ. (n.) **இடிவிழுங்கி;** lightning conductor. (சா.அக.).

*[இடி + வாங்கி.]*

**இடி விலக்கி** *iḍi-vilakki,* பெ. (n.) ***காந்தம்;*** magnet, load stone. (சா.அக.).

*[இடி + விலக்கி.]*

**இடிவிழு-தல்** *iḍi-viḻu-,* 2 செ.கு.வி. (v.i.) ***இடி தரையில் இறங்குதல்;*** to strike, as lightning; to fall with a crash, as a thunderbolt. 'அடி வயிற்றில் இடி விழுந்தாற்போல.' (பழ).

*[இடி + விழு.]*

**இடிவு** *iḍivu,* பெ. (n.) 1. ***அழிவு;*** decay, destruction. ''இடிவில் பெருஞ்செல்வம்'' (தேவா.707,6). 2. ***இடிந்து விழுகை*** (வின்.); crumbling down, as of an undermined bank.

ம. இடிவு.

*[இடி + இடிவு.]*

**இடிவெட்டு** *iḍiveṭṭu,* பெ. (n.) ***இடிமுழக்கம்;*** thunder-stroke, thunder. (சேரநா.).

*[இடி + வெட்டு.]*

**இடு[1]-த்தல்** *iḍu-,* 20 செ.கு.வி. (v.i.) ***சிறுத்தல்;*** to be small (வே.க.13).

**இடு[2]-தல்** *iḍu-,* 18 செ.குன்றாவி. (v.t.). 1. ***குத்துதல்;*** to hit against, thrust in. ''இடுமருப்பியானை'' (கலித்.24, 10). 2. ***வெட்டுதல்;*** to cut off. 3. ***போகடுதல்;*** to throw, cast away. ''ஈந்தான் சிலைநிலத்தி லிட்டான்'' (கந்தபு.வள்ளி.36). 4. ***வைத்தல்;*** to place, deposit,

put in, keep. ''காயத்திடுவாய்'' (திருவாச.33,8). 5. ***பரிமாறுதல்;*** to serve, distribute.'இடுகிறவள் தன்னவ ளானால் அடிப்பந்தியி லிருந்தா லென்ன, கடைப்பந்தியி லிருந்தாலென்ன?' (உ.வ.). 6. ***கொடுத்தல்;*** to give, grant, bestow, as alms. ''இட்டார் பெரியோர்'' (நல்வ.2). 7. ***சொரிதல்*** (திவா.): to pour, shower as rain. 8. ***அணிவித்தல்;*** to put on, as a bangle on one's wrist. ''புங்கவனிடுவளை'' (திருவிளை.வளையல்.27). 9. ***உவமித்தல்.*** (சீவக.2423,உரை); to compare. 10. ***குறியிடுதல்;*** to give, as a name to a new-born child, to assign. ''இட்டதொரு பேரழைக்க வென்னென்றாங்கு'' (சி.போ.2,1,1). 11. ***ஏற்றிச்சொல்லுதல்;*** to charge, to incriminate by laying a false charge against. ''படாத தொரு வார்த்தையிட்டன ரூரார்'' (சிலப்.9,48). 12. ***சித்திரமெழுதுதல்*** (சீவக.2383); to draw, as a figure. 13. ***உண்டாக்குதல்;*** to yield, generate. ''கள்ளியிட்ட வகில்'' (இரகு.நகர.52). 14. ***முட்டையிடுதல்;*** to lay, as an egg. 15. ***தின்பண்டம் முதலியன உருவாக்கு தல்;*** to form or fashion, to mould, as cakes.'இன்றைக்கு எத்தனை அப்பளம் இட்டாய்?' (உ.வ.). 16. ***தொடுத்து விடுதல்;*** to discharge, as arrows. ''கணையிட்டு'' (திருப்பு.4180). 17. ***கைவிடுதல்;*** to forsake, desert. "இளையவள நாகிட்டு" (சீவக.1226). 18. ***தொடங்குதல்*** (திவ். திருவாய்.2,10,பன்னீ.ப்ர.); to begin. 19. ***செய்தல்;*** to do. ''அரக்கனாங் காளமேக மிடுகின்ற வேள்வி.'' (கம்பரா.நிகும்.99). 20. ***புதைத்தல்;*** to bury. (சீவக. 1680,உரை). - து.வி. (v.caus.) ***ஒரு துணைவினை;*** auxiliary of verbs which become vbl.pple. of the past-tense before it.' உரைத்திடுகின்றான்.' (செ.அக.).

**ம., க., தெ., து.** இடு; **கோத.** இட்; **குட.** ஈட்; **து.** இடுபிணி; **நாய்.** இர்; **கட.** இர்; **கொண்.** இட்; **குவி.** இட.

*[இல் → இள் → இடு = குத்துதல், பொத்துதல், பொருத்துதல், வைத்தல்.]*

**இடு**[3] *iḍu,* பெ. (n.) 1. ***குழி;*** pit. 2. ***வட்டம்;*** circle. 3. ***நிறைவு;*** fullness.

**க.** இடி (நிறைவு).

*[இல் → இள் → இடு.]*

**இடுக்கடி** *iḍukkaḍi,* பெ. (n.) ***துன்பம்*** (கொ.வ.). distress. (செ.அக.).

*[இடு → இடுக்கு + அடி - இடுக்கடி. இடுக்கு = துன்பம். அடி = தாக்குறல்.]*

**இடுக்கண்** *iḍukkaṇ,* பெ. (n.) 1. ***மலர்ந்த நோக்க மின்றி ஊையனோக்கம் படவரும் இரக்கம்*** (தொல்.பொ.260,உரை); misery that is reflected by shrunken eyes. 2. ***துன்பம்.*** (சீவக.509); distress, woe, affliction (செ.அக.). 3. ***இக்கட்டு*** (ஆ.அக.); trouble, difficulty. 4. ***வறுமை*** (ஆ.அக.); poverty. ''இடுக்கண் வருங்கால் நகுக.'' (குறள்).

*[இடு = குத்துதல், துன்புறுத்துதல். இடு → இடுக்கண். கண் -தொழிற்பெயரீறு. பண்புப் பெயரீறு, ஒ.நோ. அலக்கண், புன்கண், இன்கண்.]*

**இடுக்கணழியாமை** *iḍukkaṉ-aḻiyāmai,* பெ. (n.) ***துன்பக் காலத்து மனங்கலங்காமை.*** (குறள்,அதி.63); imperturbability in distress, serenity of mind, courage in trouble. (செ.அக.).

*[இடு → இடுக்கண் + அழியாமை.]*

**இடுக்கணி** *iḍukkaṇi,* பெ. (n.) ***பொருள் வைக்கப்படும் மூலையான இடம்; கைக்குள் அல்லது விரல்களுக் குள்ளான இடம்; ஒரு பொருள் அல்லது ஒருவர் அகப்பட்டிருக்கும்படியான இடுக்கானவிடம்.*** (செ.அக.); corner, nook where a thing may be held, as under the arms or between the fingers or under the hams; a narrow niche where a person or thing may become confined, jammed in or wedged in.

*[இடுக்கு = சிறிய இடம், மூலைமுடுக்கு. இடுக்கு → இடுக்கணி.]*

**இடுக்கப்படு**[1]**-தல்** *iḍukka-p-paḍu-,* 18 செ.குன்றாவி. (v.t.) 1. ***ஒடுக்கப்படல்;*** to be suppressed. 2. ***துன்பப் படல்*** (ஆ.அக.); to be made to suffer.

*[இடுக்கம் + படு.]*

**இடுக்கப்படு**[2]**-த்தல்** *iḍukka-p-paḍu-,* 18 செ. குன்றாவி. (v.t.) 1. ***துன்பப்படுத்தல்;*** to torment. 2. ***நெருக்கல்*** (ஆ.அக.); to inflict pain.

*[இடுக்கம் + படு.]*

**இடுக்கம்** *iḍukkam,* பெ. (n.) 1. ***ஒடுக்கம்;*** closeness, narrowness of space. 2. ***துன்பம்;*** affliction, distress, trouble. ''சொர்க்கத்த ரிடுக்கங்கெட'' (திருப்பு.419). (செ.அக.). 3. ***நெருக்கம்*** (ஆ.அக.); crowdedness. 4. ***வறுமை*** (ஆ.அக.); poverty.

*[இடுக்கு → இடுக்கம்.]*

**இடுக்கல்** *iḍukkal,* பெ. (n.) ***ஒடுங்கிய இடைவெளி;*** crevice, aperture. (செ.அக.).

*[இடுக்கு → இடுக்கல்.]*

**இடுக்காஞ்சட்டி** *iḍukkāñ-caṭṭi,* பெ. (n.) ***விளக்குத் தகழி*** (நெல்லை.); bowl of a lamp made of clay. (செ.அக.).

*[இடுக்கு + ஆம் + சட்டி.]*

**இடுக்கி** *iḍukki,* பெ. (n.) 1. ***குறடு;*** pincers, tongs, forceps, tweezers, nippers. 2. ***எலி முதலியவற்றை அகப்படுத்தும் பொறி;*** steel trap. 3. ***உலுத்தன்*** (வின்.); stingy person, miser, niggard, pinch-fist. 4. ***நண்டு முதலியவற்றின் கவ்வுமுறுப்பு*** (இ.வ.); prehensile chelae of a crab or a scorpion.

**ம.** இடுக்கி; **க.** இக்குழ, இக்கழ; **கோத.** இக்கள்; **து.** ஈக்குளெ, இக்குளி.

*[இடுக்கு → இடுக்கி.]*



இடுக்கி

**இடுக்கிச்சட்டம்** *iḍukki-c-caṭṭam,* பெ. (n.) ***கம்பிச்சட்டம்;*** cleat. (செ.அக.).

*[இடுக்கி + சட்டம்.]*

**இடுக்கிடை** *iḍukkiḍai,* பெ. (n.) ***நெருக்கம்*** (வின்.); closeness, narrowness (செ.அக.).

*[இடுக்கு + இடை.]*

**இடுக்கு**[1]**-தல்** *iḍukku-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. ***கவ்வுதல்*** (ஆ.அக.); to take between the fingers or toes, to grasp or grip, as with pincers. 2. ***அணைத்தல்;*** to take under one's arm. "இடுக்குவார் கைப்பிள்ளை". (தாயு.பன்மா.6). 3. ***நெருக்குதல்;*** to press or squeeze as between two boards. 'இடுக்கு மரம்' (வின்.).

ம. இடுக்கு; க. இடிகு.

*[இடு → இடுக்கு.]*

**இடுக்கு**[2] *iḍukku,* பெ. (n.) 1. ***சந்து, முடுக்கு;*** narrow lane. 2. ***மூலை;*** nook, corner. 3. ***இடுக்கிக் கொள்ளக்கூடிய இடம்;*** parting between fingers, crevices between the teeth, cleft in the split wood, the axilla, any place where a person or thing may get pressed or wedged in. "கவட்டுத் தொன்மரத் திடுக்கிற் கானுழைத்துக் கொண்டே" (தனிப்பா.). 4. ***கவ்வுமுறுப்பு*** (வின்.); prehensile claws, as those of a scorpion or of a lobster. 5. ***இடைஞ்சல், துன்பம்.*** difficulty, trouble, straits. "இடுக்கிவ ணியம்புவ தில்லை" (கம்பரா.யுத்.மந்தி. 27). 6. ***இவறன்மை;*** miserliness, niggardliness. "இடுக் குடை யுள்ளத்தான் பெற்ற பெருஞ்செல்வம்" (நாலடி. 274).

ம. இடுக்கு; க. இடங்கு, இடுகு.

*[இடு → இடுக்கு.]*

**இடுக்குடை** *iḍukkuḍai,* பெ. (n.) ***இடுக்கிடை*** பார்க்க; see *iḍukkiḍai.*

*[இடுக்கிடை → இடுக்குடை.]*

**இடுக்குத்திருத்துழாய்** *iḍukku-t-tiru-t-tuḻāy,* பெ. (n.) ***திருமால் கோயிலில் மதிப்புரவாகத் திருவடி நிலையினிடையில் வைத்துக் கொடுக்கும் துளசி.*** (இ.வ.) (செ.அக.); tulasi leaves kept between the sacred sandals of the idol, which are, in a Vishnu shrine, enthroned on a pedestal, such leaves being specially given as 'pirasatam' to worshippers of great eminence.

*[இடு → இடுக்கு. இடுக்குதல் = வைத்தல், இடுதல். இடுக்கு + திரு + துழாய்.]*

**இடுக்குதடி** *iḍukku-taḍi,* பெ. (n.) ***கள்ளூறும்படி பாளையை நெருக்கிப் பிடிக்க வைக்கும் இரட்டைத் தடி*** (வின்.); double stick used to press things with, such as that used by a toddy-drawer to press the flower or fruit-stem of the palmyra.

*[இடுக்கு + தடி. இடுக்குதல் = நெருக்குதல்.]*

**இடுக்குப்பனை** *iḍukku-p-panai,* பெ. (n.) ***கள்ளூறும் பனை*** (யாழ்ப்.); palmyra tree from which toddy is drawn (செ.அக.).

*[இடுக்கு + பனை.]*

**இடுக்குப்பாளை** *iḍukku-p-pāḷai,* பெ. (n.) ***பதநீர் இறக்கும் பனை*** (வை.மூ.); palmyra tree for drawing sweet toddy (செ.அக.).

*[இடுக்கு + பாளை.]*

**இடுக்குப்பிள்ளை** *iḍukku-p-piḷḷai,* பெ. (n.) ***கைக் குழந்தை;*** infant in arms, as carried on the hip. (செ.அக.).

*[இடுக்கு + பிள்ளை.]*

**இடுக்குப்பொட்டணி** *iḍukku-p-poṭṭaṇi,* பெ. (n.) ***அக்குளில் இடுக்கிச் செல்லத்தக்க ஏனம் அல்லது பை, அக்குள்பாளம்*** (கக்கப்பாளம்) (யாழ். அக.); vessel or bag carried under the armpit. (செ.அக.).

*[இடுக்கு + பொட்டணி. பொத்தலி → பொத்தளி → பொட்டளி - பொட்டணி (கொ.வ.) பொத்தலி = பை.]*

**இடுக்குமரம்**[1] *iḍukku-maram,* பெ. (n.) ***கடவை மரம்*** (வின்.); narrow passage which leads to a field and is made of wooden posts. (செ.அக.).

*[இடுக்கு + மரம்.]*

**இடுக்குமரம்**[2] *iḍukku-maram,* பெ. (n.) ***செக்கு வகை*** (வின்.); a kind of oil-press. (செ.அக.).

*[இடுக்கு + மரம்.]*

**இடுக்குமுடுக்கு** *iḍukku-muḍukku,* பெ. (n.) 1. ***மூலை முடுக்கு;*** cramped place, narrow corner, tight spot. (செ.அக.). 2. ***இடர்ப்பாடு;*** predicament.

*[இடுக்கு + முடுக்கு.]*

**இடுக்கு வழி** *iḍukku-vaḻi,* பெ. (n.) ***சந்து வழி;*** narrow way or lane. (செ.அக.).

ம. இடுக்கு வழி; க. இடுக்கு; து. இட்டிமெ; தெ. இருக்கு.

*[இடுக்கு + வழி. இடுக்கு = சிறுசந்து.]*

**இடுக்கு வாசல்** *iḍukku-vāśal,* பெ. (n.) ***சிறு நுழைவா சல்*** (வின்.); strait narrow gate. (செ.அக.).

*[இடுக்கு + வாசல். இடுக்கு - சிறுசந்து.]*

**இடுக்குவார்கைப்பிள்ளை** *iḍukkuvārkai-p-piḷḷai,* பெ. (n.) ***எடுப்பார் கைப்பிள்ளை*** (இ.வ.); one who is easily led by others; gullible fellow (செ.அக.).

*[இடுக்கு - இடுக்குவார் (வினையா.பெ.). இடுக்குவார் + கை + பிள்ளை.]*

**இடுகடை** *iḍu-kaḍai,* பெ. (n.) ***பிச்சையிடும் வீட்டு வாயில்*** (வின்.); front of a house, where alms are given. (செ.அக.).

*[இடு + கடை. கடை = வாயில். வாயிலுள்ள வீடு.]*

**இடுகளி** *iḍu-kaḷi,* பெ. (n.) ***அதிமதுரத் தழை முதலிய வற்றை யானைக்கு இடுதலால் அதற்கு உண்டாம் மதம்;*** must caused to an elephant by feeding it with the leaves of 'atis', etc. ''இடுகளியானை'' (பெருங்.மகத. 27,145) (செ.அக.).

*[இடு + களி.]*

**இடுகறல்** *iḍugaṟal,* பெ. (n.) ***விறகு*** (நிகண்டு.); fuel. (செ.அக.).

*[இடுகு - சிறியது. இடுகு + அறல். அறல் = உலர்ந்தது. இடுகறல் = உலர்ந்த சுள்ளி.]*

**இடுகாடு** *iḍu-kāḍu,* பெ. (n.) ***பிணம் புதைக்குமிடம்*** (நாலடி.90); burial ground, cemetary. (செ.அக.).

ம. இடுகாடு.

*[இடு + காடு. இடுதல் = புதைத்தல்.]*

**இடுகால்** *iḍukāl,* பெ. (n.) ***பீர்க்கு*** (மலை.); spongegourd. (செ.அக.).

*[இடுகல் → இடுகால். இடுகல் - உள்ளொடுங்குதல்.]*

**இடுகு-தல்** *iḍugu-,* 6 செ.கு.வி. (v.i.) 1. ***ஒடுங்குதல்;*** to shrink ''கண்களை யிடுகக் கோட்டி'' (சீவக.2086). 2. ***சிறுகுதல்;*** to become shrivelled or dwindled. ''இடுகிடைத்தோகாய்'' (கம்பரா.சித்திர.19). (செ.அக). 3. ***சுருங்குதல்.*** (ஆ.அக.); to contract.

*[இடு → இடுகு.]*

**இடுகுறி**[1] *iḍu-kuṟi,* பெ. (n.) 1. ***வைக்கப்படும் அடையாளம்;*** symbol. 2. ***பெயர்;*** name given to a person by his parents. ''இடுகுறி கோத்திர முதன்மற்றியாவுந் தோன்ற'' (திருவாலவா.31,3). 3. ***இடுகுறிப்பெயர்;*** name without any reason behind it to be called so.

*[இடு + குறி.]*

**இடுகுறி**[2] *iḍu-kuṟi,* பெ. (n.) ***முற்காலத்தில் நெல்லைச் சேமித்து வைக்கும் படியாக ஒருவரிடம் ஒப்புவிக்கும் ஆவணம்*** (Tm.Rev.N.iv; Glossary); document by which paddy was entrusted to private individuals, to be stored up in their houses.

ம. இடுகுறி.

*[இடு + குறி.]*

**இடுகுறிச்சிறப்புப் பெயர்** *iḍu-kuṟi-c-ciṟappu-p-peyar,* பெ. (n.) ***இடுகுறிக்கு மட்டுமே வருஞ் சிறப்புப்பெயர்.*** (ஆ.அக.); proper noun (grammar).

*[இடு + குறி + சிறப்பு + பெயர்.]*

**இடுகுறிப்பெயர்** *iḍu-kuṟi-p-peyar,* பெ. (n.) ***காரணமின்றி வழங்கி வரும் பெயர்*** (நன்.62); noun connoting the primeval sense in which it has been used, as dist. fr. Kāraṇa-p-peyar.

*[இடு + குறி + பெயர். எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவாதலின் இடுகுறிப்பெயர் என்று எதுவும் இல்லை என்பது பாவாணர் கருத்து.]*

**இடுகுறிமரபு** *iḍu-kuṟi-marabu,* பெ. (n.) ***இடுகுறியாகத் தொன்று தொட்டு வரும் பெயர்***(நன்.275, உரை.) (செ.அக.); noun used in the conventional sense which it continues to bear from the remote past.

*[இடு + குறி + மரபு. நன்னூலார் இடுகுறியாகக் கொள்ளும் பெயர்கள் ஒரு காலத்தில் காரணம் கருதியவை. ஆதலின் இடுகுறிப்பெயர் என்று ஒன்று இல்லை என்பதே பாவாணர் கருத்து. ஆதலின் இடுகுறி மரபு என்பதும் வறுஞ்சொல்லாதல் காண்க.]*

**இடுகுறியாக்கம்** *iḍu-kuṟi-y-ākkam,* பெ. (n.) ***இடுகுறியாக ஒருவன் கொடுத்த அல்லது ஆக்கிக்கொண்ட பெயர்*** (நன்.275,உரை.) (செ.அக.); unconventional name which a person assumes of his own accord or is arbitrarily given by others, classified as a distinct class of proper names in Tamil grammar.

*[இடு + குறி + ஆக்கம்.]*

**இடுகை**[1] *iḍugai,* பெ. (n.) ***இடுங்கிய வழி;*** a narrow passage, lane.

ம. இடுவ.

*[இடு - இடுகை.]*

**இடுகை**[2] *iḍugai,* பெ. (n.) ***கொடை*** (பிங்.); gift (செ.அக.).

*[இடு → இடுகை = இடுதல், வைத்தல், கொடுத்தல்.]*

**இடுங்கலம்** *iḍuṅ-kalam,* பெ. (n.) ***கொள்கலம்.*** (பிங்.); vessel, receptacle (செ.அக.).

*[இடும் + கலம்.]*

**இடுங்கற்குன்றம்** *iḍuṅ-kaṟ-kuṉṟam,* பெ. (n.) ***செய் குன்று;*** artificial hill; an artificially made up mound resorted to for pleasure ''எந்திரக் கிணறு மிடுங்கற் குன்றமும்'' (மணி. 19, 102). (செ.அக.).

*[இடும் + கல் + குன்றம்.]*

**இடுங்கு-தல்** *iḍuṅgu-,* 15 செ.கு.வி. (v.i.) ***உள்ளொடுங்குதல்;*** to shrink, contract. ''கண்ணிடுங்கி'' (திவ். பெரியதி.1,3,4). (செ.அக.).

ம. இடுங்கு; **க.** இடுங்கு; **து.** இட்டிடெ.

*[இடு → இடுங்கு.]*

**இடுசிவப்பு** *idu-šivappu,* பெ. (n.) ***செயற்கைச் சிவப்பு*** (ஈடு, 7,7,9); artificial red dye. (செ.அக.).

*[இடு + சிவப்பு.]*

**இடுதங்கம்** *idu-tangam,* பெ. (n.) ***புடமிட்ட தங்கம்*** (வின்.); refined gold, gold of the best quality. (செ.அக.).

*[இடு[1] + தங்கம். இடுதல் - செய்தல், வேலைப்பாடு.]*

**இடுதண்டம்** *idu-tandam* பெ. (n.) 1. ***தண்டம்;*** penalty, fine. 2. ***முறையற்ற தண்டம்;*** unjust penalty. (செ.அக.).

*[இடு + தண்டம்.]*

**இடுதிரை** *idu-tirai,* பெ. (n.) ***திரைச்சீலை*** (திவா); curtain.

*[இடு + திரை.]*

**இடுதேளிடு-தல்** *idu-tel-idu-,* 20 செ.கு.வி. (v.i.) ***பொய்க்காரணங்காட்டிக் கலங்கப் பண்ணுதல்;*** cause needless panic by false suggestion, as by sending one into a fright by throwing an imitation scorpion at him. "இட்டன ரூரா ரிடுதேளிட் டென்றன் மேல்", (சிலப்.9, 48).

*[இடு + தேள் + இடுதல். இடுதேள் = மற்றவர் மேல் இடுவதற் கான தேள், பொய்த்தேள், செயற்கைத்தேள். ஒ.நோ. இடுசி வப்பு.]*

**இடுப்பு** *iduppu,* பெ. (n.) 1. ***அரை;*** waist, sides, loins. 2. ***ஒக்கலை;*** hip. 3. ***மறைவுறுப்பு;*** (C.G.); euphemism for the private parts. (செ.அக.).

*[இடு → இடுப்பு. இடுதல் = வைத்தல். குழந்தை, குடம் போன்ற வற்றை வைத்துக்கொள்ளுதற்கு அல்லது இடுதற்குரிய இடம் இடுப்பு.]*

**இடுப்புக்கட்டு-தல்** *iduppu-k-kattu-,* 15 செ.கு.வி. (v.i.). ***சண்டை பிடிக்க முந்துதல்;*** to gird up one's loins, as for a fight. "நீ சண்டைக்கு இடுப்புக்கட்டாதே" (பெண்மதி. மாலை.பக்.9). (செ.அக.).

*[இடுப்பு + கட்டுதல் = இடுப்பில் ஆடையை வரிந்து கட்டுதல்.]*

**இடுப்பு வலி** *iduppu-vali,* பெ. (n.) 1. ***இடுப்புநோவு*** (வின்.); pain in the loins; lumbago. 2. ***பிள்ளைப்பேற்று வலி;*** labour pains. (செ.அக.).

*[இடுப்பு + வலி.]*

**இடுபலம்** *idupalam,* பெ. (n.) ***பேய்ப்புடல்*** (வை.மூ.); wild snakegourd. (செ.அக.).

*[இடு + புடல் - இடுபுடல் - இடுபலம். (கொ.வ.). இடுபுடல் = பொய்ப்புடல்.]*

**இடும்பர்** *idumbar,* பெ. (n.) 1. ***அரக்கர்*** (அக.நி.); Raksasas. (செ.அக.). 2. ***செருக்கர்*** (ஆ.அக.); arrogant person. 3. ***துயர் செய்வோர்*** (ஆ.அக.); offender.

*[இடும்பு → இடும்பர்.]*

**இடும்பன்[1]** *idumban,* பெ. (n.) ***ஓர் அரக்கன்;*** a demon, Rāksasa.

**இடும்பன்[2]** *idumban.* பெ. (n.) ***செருக்குள்ளவன்*** (இராட்.); haughty man, arrogant person. (செ.அக.).

*[இடம்பு → இடம்பன் → இடும்பன்.]*

**இடும்பன்[3]** *idumban,* பெ. (n.) ***குமரக்கடவுள், கணத்த லைவன்*** (வின்.); name of the leader of Skanda's hosts. (செ.அக.).

*Skt.* hidimba

*[இடும்பு → இடும்பன்.]*

**இடும்பாகம்** *idumbāgam,* பெ. (n.) ***கொத்தான் கொடி*** (சா.அக.); leafless creeper, mose creeper.

*[இடு = இடுகுதல், சிறுத்தல். இடு → இடும்பு → இடும்பகம் -இடும்பாகம் = சிறுத்த மெல்லிய கொடி.]*

**இடும்பி** *idumbi,* பெ. (n.) 1. ***இடும்பை செய்பவள்;*** demoness. 2. ***இடும்பனின் தங்கை, வீமனின் மனைவி;*** name of Hidimba's sister; Bhima's wife. இடும்பி கொழுநன் (பிங்.).

*[இடும்பு → இடும்பி.]*

**இடும்பில்** *idumbil,* பெ. (n.) ***ஓர் ஊர்*** (சிலப்பதிகாரம்); name of a place.

*[இடும்பு → இடும்பில்.]*

**இடும்பு[1]** *idumbu,* பெ. (n.) 1. ***செருக்கு;*** haughtiness, arrogance. "இடும்பால்... உரைத்தாய்" (செல்வந்திப்பு. பிரமதேவன்.15). 2. ***கொடுஞ்செயல்;*** cruelty, oppression, tyranny. "சம்பளத்து... அவரவரிடும்பா லழிந்த வன்றோ" (குமரே.சத.47). 3. ***புலக்குறும்பு*** (சேட்டை); mischief, pranks. ஏழையிடும்பு (இராட்.). 4. ***வெறுப்பு*** (ஆ.அக.); hatred. 5. ***அவமதிப்பு*** (ஆ.அக.); disgrace, dishonour. 6. ***துன்பம்*** (ஆ.அக.); affliction.

*[இடு → இடும்பு.]*

**இடும்பு[2]** *idumbu,* பெ. (n.) ***இடும்பாத வனம்;*** a forest. "மாறா வல்விலிடும்பிற் புறத்திறுத்து" (பதிற்று.பதிக.5:9).

*[இடு → இடும்பு.]*

**இடும்பை** *idumbai,* பெ. (n.) 1. ***துன்பம்;*** suffering, affliction, distress, calamity." ஏமஞ்சாலா விடும்பை" (தொல்.பொ.50). 2. ***தீமை;*** evil, harm, injury. "பூதம்... இடும்பை செய்திடும்" (மணி.1,22). 3. ***நோய்;*** disease. "கரப்பிடும்பை யில்லாரைக் காணின்" (குறள்.1056). 4. ***ஏழ்மை;*** poverty."இடும்பையா லடர்ப்புண்டு" (திவ். பெரியதி.1,6,5). 5. ***அச்சம்*** (திவா.); fear, dread. (செ.அக.). 6. ***ஏதம்;*** danger. (ஆ.அக.). 7. ***எலி;*** rat. (சா.அக.).

*[இடும்பு + இடும்பை.]*

**இடும்போகம்** *idumbōgam,* பெ. (n.) ***சிவப்பவரை;*** red bean. (சா.அக.).

**இடுமம்** *iḍumam,* பெ. (n.) ***குயவன் சக்கரத்தை நிலத்திற் பொருத்தற்கு இடும் மண்கட்டி*** (இ.வ.). (செ.அக.); clod of mud or earth on which the potter rests his wheel.

*[இடு → இடுமம்.]*

**இடுமருந்து** *iḍu-marundu,* பெ. (n.) 1. ***வசிய மருந்து;*** drugs administered secretly with food or drink in order to win over a person; philter potion stealthily administered. ''இடுமருந்தோடு சோற்றை யேயிடும்'' (திருப்பு.820). 2. ***கொல்லும் நோக்கத்துடன் இடும் கைமருந்து*** (நீர்நிறக்.18,உரை) (செ.அக.); potion containing a poisonous drug or the venom of reptiles.

*[இடு + மருந்து.]*

**இடுமுடை** *iḍu-muḍai,* பெ. (n.) ***நிறைந்த தீநாற்றம்;*** stench, bad smell, stink. ''இடுமுடை மருங்கில் தொடு மிடம் பெறாஅது'' (நற்.329).

*[இடு + முடை. இடு = குழித்தல், வட்டமாதல், நிறைதல்.]*

**இடுமுள்** *iḍu-muḷ,* பெ. (n.) ***வேலியாக இடும் முள்*** (சீவக.774,உரை) (செ.அக.); thorns thrown over the entrance to a field or garden to prevent intruders.

*[இடு + முள்.]*

**இடுலி** *iḍuli,* பெ. (n.) ***பெண் ஆமை*** (வின்.); female turtle. (செ.அக.).

*Skt.* ḍuli

*[இடு - இடுலி. இடுதல் - குழித்தல், வட்டமாதல், வட்டமான ஆமை; முட்டையிட மண்ணைப்பறிக்கும் பெண்ணாமை.]*

**இடுவந்தி** *iḍu-vandi,* பெ. (n.) ***குற்றமில்லாதவர்மேற் குற்றத்தையேற்றுகை;*** accusation of an innocent person. 'பொற்கொல்லன் நெஞ்சம் இடுவந்தி கூறுதலைப் புரிந்துநோக்க', (சிலப்.16,120,உரை), (செ.அக.).

*Skt.* kimvadanti

*[இடு + வந்தி. வன் + தி - வந்தி = கடுஞ்சொல், தீமொழி, இடுவந்தி = செயற்கையாக அல்லது பொய்யாக இட்டுரைக்கும் கடுஞ்சொல்.]*

**இடுவல்**[1] *iḍuval,* பெ. (n.) ***இடுக்கு;*** crevice, aperture (செ.அக.).

*[இடு → இடுவல்.]*

**இடுவல்**[2] *iḍuval,* பெ. (n.) ***வழி*** (நெல்லை); way (செ.அக.).

*[இடு - இடுவு - இடுவல். இடுவு - சிறிய வழி.]*

**இடுவை** *iḍuvai,* பெ. (n.) ***சந்து*** (இ.வ.); lane. (செ.அக.).

*[இடு → இடுவை.]*

**இடை**[1] *iḍai,* பெ. (n.) 1. ***நடு*** (திவா.); middle in space, midst, centre. 2. ***நடுவண் காலம்;*** middle in time. ''இடைக் கொட்கின்'' (குறள்.663). 3. ***அரை, இடுப்பு;*** middle of the body, the waist. ''மின்னேர் நுடங்கிடை'' (திருவாச.11,9). 4. ***நடுத்தர மக்கள்;*** middle class people. ''இடையெலாமின்னாமை யஞ்சும்'' (நாலடி. 297). 5. ***இடைக்குலம்;*** herdsman caste. 6. ***இடை எழுத்து;*** medial consonants of the Tamil alphabet. ''அல்வழி யுயிரிடைவரின்'' (நன்.220). 7. ***இடைச் சொல்*** (நன்.239); indeclinable particle, as one of the parts of speech. 8. ***இடம்;*** place, space. ''கருங்கல்லிடை தொறும்'' (புறநா.5,1). 9. ***இடப்பக்கம்;*** left side. ''எங்கள் பெம்மானி டையாளை'' (அபிரா.84). 10. ***வழி;*** way. ''நீரில்ல நீளிடைய'' (புறநா.3). 11. ***தொடர்பு;*** connection. ''உங்களோ டெங்களிடையில் லையே'' (திவ்.திருவாய்.8,2,7). 12. ***தக்க நேரம், தகுந்த சூழல்;*** suitable time, opportunity, season. ''உடையோர் போல விடையின்று குறுகி'' (புறநா.54). 13. ***காரணம்;*** cause. ''இடைதெரிவரியது'' (சூளா. கலியாண.144). 14. ***நீட்டலளவையு ளொன்று*** (வின்.); measure of length, breadth, thickness.

*[இடு → இடை.]*

**இடை**[2] *iḍai,* இடை. (part.) ***ஏழனுருபு;*** sign of the loc. ''நிழலிடையுறங்குமேதி'' (கம்பரா.நாட்டுப்.6). (செ.அக.).

*[இடு → இடை.]*

**இடை**[3]**-தல்** *iḍai-,* 4. செ.கு.வி. (v.i.) 1. ***சோர்தல்*** (சீவக.446, உரை); to grow weary, as with long waiting. 2. ***மனந்தளர்தல்;*** *to be damped in spirits. ''இடைந்தி டைந் துருகு மெளியனேன்'' (தாயு.சிற்சு,3).* 3. ***பின் வாங்குதல்;*** to retreat, fall back. ''அசமுகி யிடைந்து போனாள்'' (கந்தபு.மகாகாளர்.20). 4. ***விலகுதல்;*** to make room, get out of the way. 'இடைந் தொதுங்குகை' (ஈடு.5,4,6). 5. ***தாழ்தல்;*** to submit. 'அவனுக்குச் சிறிது இடைந்துபோ' (செ.அக.).

*[இழு → இழை → இடை - இடைதல். இழைதல் = தளர்தல்.]*

**இடை**[4] *iḍai,* பெ. (n.) 1. ***தடுத்தல், இடையிடுதல்;*** check, stoppage, protest, impediment. ''இடை கொண்டி யாமிரப்ப'' (கலித்.3,7). 2. ***துன்பம்*** (திருக்கோ.368, உரை); trouble, difficulty.(செ.அக.).

*[இடு → இடை.]*

**இடை**[5] *iḍai,* பெ. (n.) 1. ***இடைவெளி;*** gap, unfilled space. ''இடையில் வண்புகழ்க் கொடைமை யானும்'' (தொல்.பொ.76). 2. ***உலகம்;*** earth. ''இடையிற் படுகி லம்யாம்'' (கம்பரா.அதிகாய.73). 3. ***வீடு பேற்றுலகம்;*** svarga, heaven.

*[இடு → இடை.]*

**இடை**[6] *iḍai,* பெ. (n.) ***பதின்நாடியுளொன்று*** (சிலப்.3, 26,உரை); principal tubular organ of the human body, one of tacanāḍi, (செ.அக.).

*[இடு → இடம் → இடை.]*

**இடை**[7] *iḍai,* பெ. (n.) ***எடை*** பார்க்க; see *eḍai,* ''இடை தான் குறைந்தது மச்சமுங் காட்டுவ தில்லை யென்றால்''

(ஒருதுறைக்.185), (கொ.வ.).

*[எடை → இடை (கொ.வ.). இது வழுச் சொல்லாதலின் இரு வகை வழக்கிலும் தவிர்த்தல் வேண்டும்.]*

**இடை**[8] *idai,* பெ. (n.) 1. ***இடைப்பட்ட காலம், பொழுது*** (குறிஞ்சிப்.137, உரை); time. 2. ***நடுவுநிலை;*** equity. "இடைதெரிந்துணரும்.....காட்சி" (பெரும் பாண்.445). 3. ***முன்னதற்கும் பின்னதற்குமுள்ள வேறுபாடு;*** difference. "வாசவதத் தையோ டிடைதெரி வின்மையின்" (பெருங்.வத்தவ.6,56) "இடைக்கண் முரிந்தார் பலர்" (குறள்.473) (செ.அக.).

*[இடு → இடை (இடைவெளி).]*

**இடை**[9] *idai,* பெ. (n.) ***பின்வாங்கி ஓடுதல்;*** retreating.

*[திட - இடை. (ஒ.மொ.371).]*

**இடை**[10] *idai,* பெ. (n.) 1. ***ஆ;*** cow. 2. ***மென்சொல்;*** softword. (செ.அக.).

ம. இட. *Skt.* idā

*[இள → இட → இடை. இளமையுடைய ஆவும், இளக்கமான மென்சொல்லும் இடை எனப்பட்டன.]*

**இடைக்கச்சு** *idai-k-kaccu,* பெ. (n.) ***அரைக்கச்சை*** பார்க்க; see *araik-kaccai.*

*[இடை + கச்சு.]*

**இடைக்கச்சை** *idai-k-kaccai,* பெ. (n.) ***இடைக்கச்சு*** பார்க்க; see *idai-kaccu,* (செ.அக.).

ம. இடக்கச்ச.

*[இடை + கச்சை. இடை - இடுப்பு.]*

**இடைக்கட்டு**[1] *idai-k-kattu,* பெ. (n.) 1. ***அரைக்கச்சு;*** girdle or belt. 2. ***ஓர் அணி*** (S.I.I.ii,205); front plate, an adornment of idols, so called from its being fastened in the middle. 3. ***இடைகழி;*** intermediate passage way between the entrance door and the second doorway in an Indian dwelling house. 4. ***வீட்டின் நடுக்கட்டு;*** the middle compartment of an Indian dwelling house. (செ.அக.).

ம. இடக்கெட்டு.

*[இடை + கட்டு.]*

**இடைக்கட்டு**[2] *idai-k-kattu,* பெ. (n.) ***சமன் செய்வதற் குரிய நிறை*** (இ.வ.); balancing weight (செ.அக.).

*[இடை + கட்டு.]*

**இடைக்கணம்** *idai-k-kanam,* பெ. (n.) ***இடையின எழுத்துகள்: ய,ர,ல,வ,ழ,ள;*** group of medial consonants in Tamil, as a classified group distinct from van-kanam and men-kanam. (செ.அக.).

*[இடை + கணம்.]*

**இடைக்கருவி** *idai-k-karuvi,* பெ. (n.) ***சல்லியென்னுந் தோற்கருவி*** (சிலப்.3,27,உரை); ancient musical instrument of percussion, a kind of drum. (செ.அக.).

*[இடை + கருவி.]*



இடைக்கருவி

**இடைக்கலம்** *idai-k-kalam,* பெ. (n.) ***மட்பாண்டம்;*** earthern vessel for cooking. 'இல்லுள்வில்லேற்றி இடைக் கலத் தெய்து விடல்' (பழ.24).

*Skt.* idā

*[இடை + கலம் - வாயகன்ற மட்கலம்.]*

**இடைக்கழகம்** *idai-k-kalagam,* பெ. (n.) ***கபாடபுரம் என்னும் கதவபுரத்தில் இருந்ததாகக் கூறப்படும் இரண்டாந் தமிழ்க் கழகம்*** (இறை.பாயி.); middle sangam, said to have flourished for a long period at Kapādapuram, the second of the three ancient Tamil academies. (செ.அக.).

*Skt.* sangha.

*[இடை + கழகம்.]*

**இடைக்காடர்** *Idai-k-kādar,* பெ. (n.) ***கடைக்கழகத்துச் சான்றோருள் ஒருவர்*** (திருவாலவா.20,1); a Tamil Sangam poet of Idai-k-kādu. (செ.அக.).

*[இடைக்காடு + அர். தொண்டை மண்டலத்தில் இடையன் திட்டிலிருந்த இடையர்.]*

**இடைக்காடனார்** *idai-k-kādanār,* பெ. (n.) ***இடைக்கா டர்*** (அகநா.) பார்க்க; see *idai-k-kādar.* (செ.அக.).

*[இடைக்காடன் + ஆர்.]*

**இடைக்கார்** *idai-k-kār,* பெ. (n.) ***நெல்வகை*** (நாநார்த்த.); a kind of paddy. (செ.அக.).

*[இடை + கார்.]*

**இடைக்காலம்** *Idai-k-kālam,* பெ. (n.) 1. ***இடையி லுள்ள காலம்;*** interim period. 2. ***குறைந்த முன்புள்ள காலம்;*** recent past. 3. ***காலமல்லாக்காலம்;*** improper time.

ம. இடைக்காலம்; க. எடகால.

*[இடை + காலம்.]*

**இடைக்காற்பீலி** *idai-k-kār-pīli,* பெ. (n.) ***பரதவ மகளிர் அணியும் கால்விரலணி வகை;*** a toe-ring worn on the toe next to the little toe usually by the women folk among the fishermen community (செ.அக.).

*[இடை + கால் + பீலி.]*

**இடைக்கிடப்பு** *idai-k-kidappu,* பெ. (n.) ***இடைப்பிறவரல்*** (சீவக.2697, உரை); word or words used as complement to the predicate or subject in a sentence. (செ.அக.).

*[இடை + கிடப்பு.]*

**இடைக்கிடை** *idai-k-kidai,* கு.வி.எ. (adv.) 1. ***ஊடேயூடே;*** at frequent intervals. (செ.அக.). 2. ***ஒன்றுவிட்டொன்று;*** alternate (ஆ.அக.).

*[இடைக்கு + இடை.]*

**இடைக்குலநாதன்** *idai-k-kula-nādan,* பெ. (n.) ***கண்ணன்*** (இராட்.); Krishna (செ.அக.).

*[இடை + குலம் + நாதன்.]*

**இடைக்குலம்** *idai-k-kulam,* பெ. (n.) ***இடையரது குலம்*** (யாதவர்); community of sheperds. (ஆ.அக.).

*[இடை + குலம்.]*

**இடைக்குழி** *idai-k-kuli,* பெ. (n.) ***இடையெலும்பிரண்டுக்குமிடையிலுள்ள பள்ளம்*** (இங்.வை.); pelvic cavity. (செ.அக.).

க. எடெகுளி.

*[இடை + குழி.]*

**இடைக்குறை** *idai-k-kurai,* பெ. (n.) ***செய்யுள்திரிபுகளுள் ஒன்று*** (நன்.156, உரை); (Gram.) poet. licence consisting in the shortening of a word by elision of one or more letters in the middle, syncope, (எடு) இல்லை - இலை, ஓதி (ஓந்தி).

*[இடை + குறை.]*

**இடைக்குன்றூர்கிழார்** *idai-k-kunrūrkilār* பெ. (n.) ***தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனைப் பாடிய புலவர்*** (புறநா.); Sangam poet of Idai-k-kunrūr.

*[இடைக்குன்றூர் + கிழார்.]*

**இடைக்கொள்ளை** *idai-k-kollai,* பெ. (n.) 1. ***ஊடுதட்டு;*** plunder by a third party of a property in dispute between two. 2. ***கொள்ளை நோயால் வரும் அழிவு*** (வின்.); ravages of an epidemic disease. (செ.அக.).

*[இடை + கொள்ளை.]*

**இடைகலை** *idai-kalai,* பெ. (n.) 1. ***பத்து நாடியுள்ளொன்று;*** principal tubular coil like organ of the human body. 2. ***இடது நாசியால் விடும் மூச்சு*** (செ.அக.); breathing through the left nostril.

*[ஒருகா. இடது + கால் (காற்று). இடது - இடம் - இடை (திரிபு). கால் - காலை - கலை (திரிபு).]*

**இடைகழி**[1] *idai-kali,* பெ. (n.) 1. ***இடைக்கட்டு*** (திவ். இயற்.1,86); intermediate passage way between the entrance door and the second, doorway in an Indian dwelling house. (செ. அக.). 2. ***வாயில்*** (ஆ.அக.); gate. 3. ***இடைகழிநாடு;*** a region known as Idai-kali-nādu.

*[இடை + கழி. கழி = கழிந்து (கடந்து) செல்லும் வாயில். இடையிலுள்ள நிலப்பகுதி.]*

**இடைகழி**[2] *idaikali,* பெ. (n.) ***திருக்கோவலூர் திருமால் கோயில்;*** Viṣṇu shrine at Tiru-k-kōvalūr, "நீயுந் திருமகளு நின்றாயால் .... கோவலிடை கழியே பற்றியினி" (திவ்.இயற்.முதல் திருவந்.86), (செ.அக.).

*[ஒருகா. இடைகழி நாட்டின் பெயரால் அமைந்த கோயிலாகலாம்.]*

**இடைகழிநாட்டு நல்லூர் நத்தத்தனார்** *idai-kali-nāttu-nallūr-nattattanār,* பெ. (n.) ***கடைக்கழகப் புலவர்;*** Sangam poet.

*[இடைகழி + நாடு + நல்லூர் + நத்தத்தன் + ஆர்.]*

**இடைச்சரி** *idai-c-cari,* பெ. (n.) ***தோள்வளை*** (ஈடு,2, 5,6); armlet worn by men as an ornament, arm. (செ.அக.).

*[இடை + சரி. செறி → சரி.]*

**இடைச்சன்** *idaiccan,* பெ. (n.) 1. ***இரண்டாம்பிள்ளை*** (கொ.வ.); second child. (செ.அக.). 2. ***நடு மகன்;*** middle child. (ஆ.அக.). 3. ***இரண்டாம் பேறு*** (ஆ.அக.); second birth.

*[இடை - இடைச்சன்.]*

**இடைச்சனி** *idai-c-cani,* பெ. (n.) ***இடைக்காரி*** பார்க்க; see *idai-k-kāri* (செ.அக.).

*[இடை + சனி.]*

**இடைச்சி** *idaicci,* பெ. (n.) 1. ***முல்லைநிலப் பெண்*** (பிங்.); woman of the herdsmen caste inhabiting the forest pasture tracts. 2. ***இடையுடையவள்;*** woman, with special reference to her waist. "ஓசை பெற்ற துடிக்கொளிடைச்சிகள்" (திருப்பு.254). (செ.அக.).

ம. இடயத்தி; க. எடதி.

*[இடைத்தி → இடைச்சி.]*

**இடைச்சியார்** *idaicciyār,* பெ. (n.) ***கலம்பகத்துள் ஓர் உறுப்பு*** (குமர.பிர.மதுரைக்.62); stanza or stanzas forming part of the literary composition known as kalampakam and describing the idaicci. (செ.அக.).

*[இடைத்தி - இடைச்சி + ஆர்.]*

**இடைச்சீலை** *iḍai-c-cīlai,* பெ. (n.) *திரை* (இராட்.); curtain. (செ.அக.).

*[இடை + சீலை.]*

**இடைச்சுரநாதர்** *iḍai-c-curanādar,* பெ. (n.) *திருவி டைச்சுரத்திற் கோயில் கொண்டிருக்கு மிறைவன்* (ஆ.அக.); deity at Tiruviḍaiccuram.

*[இடைச்சுரம் + நாதர்.]*

**இடைச்சுரிகை** *iḍai-c-curigai,* பெ. (n.) *உடைவாள்* (சம்.அக.); sword, dagger, as suspended from a girdle round the waist. (செ.அக.).

ம. இடச்சுரிக.

*[இடை + சுரிகை.]*



இடைச்சுரிகை

**இடைச்சுருக்கம்** *iḍai-c-curukkam,* பெ. (n.) 1. *உடுக்கை போல் நடுவில் சுருங்கி ஒடுக்கமா யிருத்தல்;* contraction of an organ (as the stomach or the uterus) at or near the middle of the body, hour-glass contraction. 2. *இடுப்பின் ஒடுக்கம்;* narrowness of the waist. (சா.அக.).

*[இடை + சுருக்கம்.]*

**இடைச்சுவர்** *iḍai-c-cuvar,* பெ. (n.) *இடையூறு;* impediment, obstacle as an intervening wall, barrier. "இதுக்கு இடைச்சுவ ருண்டாவதே" (திவ்.திருமா லை.வ்யா.19,பக்.69). (செ.அக.).

ம. இடச்சுவர்.

*[இடை + சுவர்.]*

**இடைச்சூரி** *iḍai-c-cūri,* பெ. (n.) *அக்கமணி முதலிய வற்றுக்கிடையில் கோக்கும் மணி* (செ.அக.); gold or silver beads interspersed in a rosary of rudraksha or tulasi etc.

*[இடை + சூரி. செறி - சூரி.]*

**இடைச்செருகல்** *iḍai-c-cerugal,* பெ. (n.) *ஒருவர் செய்யுளிற் பிறர் வாக்கைக் கலக்கை;* interpolation. (செ.அக.).

*[இடை + செருகல்.]*

**இடைச்செறி** *iḍai-c-ceṟi,* பெ. (n.) 1. *குறங்குசெறி* பார்க்க; ancient thigh ornament. "இடைச்செறி குறங்கு கௌவி" (சீவக.2445). 2. *துணை மோதிரம்* (ஈடு.6, 1,1); second ring on a finger worn to keep another ring in place. (செ.அக.).

*[இடை + செறி.]*

**இடைச்சேரி** *iḍai-c-cēri,* பெ. (n.) *இடையரூர்* (சீவக. 422, உரை); hamlet populated by herdsmen. (செ.அக.).

ம. இடச்சேரி.

*[இடை + சேரி.]*

**இடைச்சொல்** *iḍai-c-col,* பெ. (n.) *பெயர் வினைக ளைச் சார்ந்து வழங்குஞ் சொல்* (நன்.420); particle which cannot be used by itself in any sense but which, when occurring in combination with nouns and verbs, functions as inflectional or conjugational suffix, adverb, preposition, expletive, conjunction, interjection etc., one of the four parts of speech in Tamil grammar. (செ.அக.).

*[இடை + சொல்.]*

**இடைச்சோழகம்** *iḍai-c-cōḻagam,* பெ. (n.) *தென்றல் வீசும் பருவத்தின் இடைக்காலம்* (யாழ்ப்.); middle period of the south-west monsoon (செ.அக.).

*[இடை + சோழகம்.]*

**இடைசுருங்குபறை** *iḍai-curuṅgu-paṟai,* பெ. (n.) *துடி* (சூடா.); small drum tapering in the middle like an hour-glass (செ.அக.).

*[இடை + சுருங்கு + பறை.]*

**இடைசூரி** *iḍai-cūri,* பெ. (n.) *அறுப்பு, வளையம், அக்கமணி முதலியவற்றின் இடையிற்கோக்கும் மணி* (யாழ்ப்.); gold or silver beads interspersed in a rosary of rudrākṣa, tulasi, etc. (செ.அக.).

*[இடை + செறி = இடைச்செறி → இடைச்சூரி. இதனை இடைசூரி என்பது வழு.]*

**இடைஞ்சல்** *iḍaiñjal,* பெ. (n.) 1. *நெருக்கம்;* narrowness, closeness. இடைஞ்சல் வழி (கொ.வ.). 2. *தடை* (கொ.வ.); obstruction, hindrance. 3. *தொல்லை;* trouble, distress. "அடியா ரிடைஞ்சல் களைவோனே" (திருப்பு.34) (செ.அக.).

ம. இடச்சல்.

*[இடைதல் → இடைஞ்சல்.]*

**இடைத்தட்டு** *iḍai-t-taṭṭu,* பெ. (n.) 1. *இடைக் கொள்ளை;* plunder by a third party of a property about which two parties are quarrelling. (செ.அக.). 2. *இடையிலே காரியம் பார்த்தல்* (ஆ.அக.); to work during intervals.

ம. இடத்தட்டு.

*[இடை + தட்டு.]*

**இடைத்தலைவலி** *iḍai-t-talai-vali,* பெ. (n.) ***விட்டு விட்டு வரும் தலைநோய்;*** headache usually occurring at intervals - Intermittent headache (சா.அக.).

*[இடை + தலைவலி.]*

**இடைத்தரம்** *iḍai-t-taram,* பெ. (n.) ***நடுத்தரம்;*** medium quality, intermediate grade, neither big nor small. (செ.அக.).

ம. இடத்தரம்; க. எடெதர; து. இடெதர.

*[இடை + தரம்.]*

**இடைத்திரிசொல்** *iḍai-t-tiri-col,* பெ. (n.) ***இயற்சொற் போல் தம்பொருள் விளக்காது அரிதுணர் பொருளன வாய் நிற்கும் இடைச்சொல்*** (ஆ.அக.); grammatic terminology signifying inexplicable word formation.

*[இடை + திரி + சொல்.]*

**இடைத்தீன்** *iḍai-t-tīṉ,* பெ. (n.) ***இடைத்தின்றி, சிற்றுண்டி*** (பாண்டி.); lunch, light refreshments. (செ.அக.).

*[இடை + தீன். தின் = தீன். தீன் = தின்னப்படும் சிற்றுண்டி, தீனி. தின்றி, திண்டி என்பவற்றை ஒப்புநோக்குக.]*

**இடைதல்**[1] *iḍaital,* பெ. (n.) ***நிலம்*** (அக.நி.); earth. (செ.அக.).

*[இட → இடம். இடை. இடைதல்.]*

**இடைதல்**[2] *iḍaital,* தொ.பெ. (v.n.) 1. ***சேலை;*** clothing. 2. ***வசங்கெடுதல்*** (ஆ.அக.); losing consciousness.

*[இடைதல் = நெருக்குதல். நெருங்க இறுக்கி உடுக்கும் துணி. பின் வாங்குதல், நினைவுதப்புதல்.]*

**இடை தெரி-தல்** *iḍai-teri-,* 2 செ.குன்றாவி. (v.t.) ***செவ்வியறிதல்;*** to judge the appropriate time, as when one wishes to speak in an assembly. "இடை தெரிந்து நன்குணர்ந்து சொல்லுக." (குறள்.712), (செ.அக.).

*[இடை + தெரிதல். காலம் தெரிதல் போன்று தக்க இடம் தெரிதல்.]*

**இடைதெரியா இருவர்** *iḍai-teriyā-iruvar,* பெ. (n.) ***உருப்பசியும் திலோத்தமையும்;*** Ūrvasi and Thilōttamai. "இடைதெரியாஏளர் இருவருந் தத்தம்" (கலித்.109). (சங். இலக்.சொற்.).

*[இடை + தெரியாத + இருவர்.]*

**இடைநரை** *iḍai-narai,* பெ. (n.) ***அங்கும் இங்கும் சிறிது நரைத்திருக்கை*** (வின்.); hair or beard grown grey here and there. (செ.அக.).

க. எடெநரெ.

*[இடை + நரை.]*

**இடைநாடி** *iḍai-nāḍi,* பெ. (n.) ***இடைகலை*** பார்க்க; principal tubular organ of the human body. (செ.அக.).

*[இடை + நாடி.]*

**இடைநாழிகை** *iḍai-nāḻigai,* பெ. (n.) 1. ***கோயிலில் உள் மண்டபத்துக்கும் வெளிமண்டபங்கட்கும் இடைப்பட்ட இடம்;*** (T.A.S.100); middle corridor, a passage between the ardha-mandapa and the maha-mandapa of a temple. 2. ***இரண்டு கட்டடத்துக்கோ, அறைகட்கோ நடுவே உள்ள வழி;*** a corridor.

ம. இடநாழிக.

*[இடை + நாழிகை.]*

**இடைநிகரா-தல்** *iḍai-nigarā-,* 6 செ.கு.வி. (v.i.) ***நடுத்தரமான நிலையிலிருத்தல்*** (குறள்.635, உரை); be neither affluent nor penurious.

*[இடை + நிகராதல்.]*

**இடைநிகழ்வு** *iḍai-nigaḻvu,* பெ. (n.) ***தற்செயல்;*** chance, accident. (செ.அக.).

*[இடை + நிகழ்வு.]*

**இடைநிலை**[1] *iḍai-nilai,* பெ. (n.) 1. ***நடுவில் நிற்கை;*** state of being in the middle. இடைநிலைத் தீவகம். 2. (இலக்.) ***பெயர்வினைகளின் பகுதிவிகுதிகளுக்கு இடையில் நிற்கும் ஓர் உறுப்பு*** (நன்.141); medial particles coming between the root and the ending in a word (i) in verbs, to indicate tense, as த் in செய்தான் (ii) in personal nouns as an inserted euphonic connective particle, as ஞ் in அறிஞன்.

ம. இடநிலை.

*[இடை + நிலை.]*

**இடைநிலை**[2] *iḍai-nilai,* பெ. (n.) 1. (இலக்.) ***எச்ச முதலியன கொண்டு முடியுஞ் சொற்களினிடையில் ஏற்ற பிறசொல் வருகை;*** (Gram.) occurrence of word or words as complementary to the subject or predicate in a sentence. 2. ***இரண்டுக்குமிடை, இடைப்பட்டிருத்தல்;*** middle stage. 3. ***இடைப்பட்டிருக்கும் நிலை, தடை;*** obstacle. 4. ***நடுநிலையில் இருத்தல்;*** intermediary.

ம. இடநில.

*[இடை + நிலை.]*

**இடைநிலைத்தீவகம்** *iḍai-nilai-t-tīvagam,* பெ. (n.) ***தீவகவணிவகை*** (தண்டி.38); (Rhet.) literally a lamp in the centre illuminating all around, applied to denote a figure of speech in which a word used in the middle of a sentence goes to amplify the sense of the poem in various parts of the same. (செ.அக.). நடுவில் உள்ள விளக்கொளி சுற்றிலும் ஒளி பரப்புவதைப்போல் சொற்றொடரின் இடையில் உள்ள ஒரு சொல், வேறு பகுதிகளில் உள்ள சொற்களுடன் இணைந்து, பொருள் சிறக்க வைக்குமாறு பாடப்படும் அணி வகை.

*[இடை + நிலை + தீவகம்.]*

**இடைநிலைப்பாட்டு** *iḍai-nilai-p-pāṭṭu,* பெ. (n.) ***கலிப்பாவினோருறுப்பு*** (தாழிசை); (தொல்.பொ.

444); one of several parts of the verse appearing in the middle of the kali type. (செ.அக.).

*[இடை + நிலை + பாட்டு. கலிப்பாவினிடையில் வரும் உறுப்பு இடைநிலைப்பாட்டு எனப்பட்டது.]*

**இடைநிலை மயக்கம்** *idai-nilai-mayakkam,* பெ. (n.) ***இடைநிலை மெய்ம்மயக்கு*** பார்க்க; see *idai-nilai mey-m-mayakku*

**இடைநிலைமயக்கு** *idai-nilai-mayakku,* பெ. (n.) ***இடைநிலைமெய்ம்மயக்கு*** பார்க்க; see *idai-nilai-mey-m-mayakku.*

**இடைநிலைமெய்ம்மயக்கு** *idai-nilai-mey-m-mayakku,* பெ. (n.) (இலக்.) ***சொல்லிடையில் மெய்யெழுத்துகள் ஒன்றோடொன்று உடனிலை மெய்ம்மயக்கமாக அல்லது வேற்றுநிலை மயக்கமாகக் கூடும் நிலை.*** (நன்.110,உரை); (Gram.) permissible conjuction, in Tamil of consonantal sounds, either in the same word or in words coming together, classified into two kinds accg. as the consonants are similar or dissimilar, as உடனிலை மெய்ம்மயக்கு and வேற்றுநிலை மெய்ம்மயக்கு. (செ.அக.).

*[இடை + நிலை + மெய்ம்மயக்கு.]*

**இடைநிலையெழுத்து** *idai-nillai-eluttu,* பெ. (n.) ***இடைநிலை மெய்ம்மயக்கு*** பார்க்க; see *idai-nilai-mey-m-mayakku.*

*[இடை + நிலை + எழுத்து.]*

**இடைநிலை விளக்கு** *idai-nillai-vilakku,* பெ. (n.) ***இடைநிலைத்தீவகம்*** பார்க்க (சிலப்.1,22,உரை); see *idai-nilai-t-tivagam. (செ.அக.).*

*[இடை + நிலை + விளக்கு.]*

**இடை நீக்கம்** *idai-nīkkam,* பெ. (n.) 1. ***சம்பளம் பெறும் பணியாளரை, அவரது பணியொழுங்கின்மைக்காகப் பணியிலிருந்து விலக்கிவைத்தல்;*** to debar from any privilage, office, emolument, etc., for a time. 2. ***கட்சிக்கட்டுப்பாட்டை மீறும் தொண்டரைக் கட்சியிலிருந்து இடைக்காலமாக நீக்குகை;*** to put or hold in a state of suspense or suspension. 3. ***குறுங்காலிகமாக நிறுத்திவைத்தல்;*** to stop for a time.

*[இடை + நீக்கம்.]*

**இடைநீரில்(நில்)-த(ற)ல்** *idai-nīril-nil-,* 14.செ.கு.வி. (v.i.) ***நீந்துகையில் நிலைக் குத்தாய் நிற்றல்;*** to gain vertical posture while swimming.

*[இடை + நீரில் + நில்.]*

**இடைநேரம்** *idai-nēram,* பெ. (n.) 1. ***சிற்றுண்டி கொள்ளுஞ் சமயம்;*** recess, tiffin time, interval. (செ.அக.). 2. ***நடுப்பகல்;*** noon. 3. ***இரண்டு காலப்பகுதிகளுக்கு இடைப்படும் நேரம்;*** interval between two periods of time.

**ம.** இடநேரம்; **க.** எடெவகல்.

*[இடை + நேரம். செய்யும் பணிக்கிடையில் விடப்படும் ஒழிவு நேரம்.]*

**இடைப்படி** *idai-p-padi,* பெ. (n.) ***12 பலம் எடை கொண்ட ஒரு நிறை அளவு.*** (தைலவ.தைல.121, உரை); measure of weight equal to 12 palams. (செ.அக.).

*[இடை + படி.]*

**இடைப்படு-தல்** *idai-p-padu,* 20.செ.கு.வி. (v.i.) 1. ***நடுவாதல்;*** to appear in the midst, intervene. 2. ***இடையில் இருத்தல்*** (வின்.); to happen in an interim. (செ.அக.). 3. ***வழியிற் சந்தித்தல்*** (ஆ.அக.); to come across, encounter.

**க.** எடெவாய்.

*[இடை + படு.]*

**இடைப்படுதானம்** *idai-p-padu-tānam,* பெ. (n.) ***இடைப்பட்டோருக்குச் செய்யும் ஈகை;*** charity to the ordinary indigent folk being the medium grade of benevolence. (செ.அக.).

*[இடை + படு + தானம்.]*

**இடைப்படு வள்ளல்கள்** *idai-p-padu-vallalgal,* பெ. (n.) ***இடை வள்ளல்கள்*** பார்க்க; (கந்தபு.ஆற்று.39); intermediate galaxy of liberal benefactors. (செ.அக.).

*[இடை + படு + வள்ளல் + கள்.]*

**இடைப்படை** *idai-p-adai,* பெ. (n.) ***நடுவிலுள்ள படை;*** middle army. ''இடைப்படை யழுவத்து'' (புறம். 295-5).

*[இடை + படை.]*

**இடைப்பரு** *idai-p-paru,* பெ. (n.) ***இடைமுள்*** பார்க்க; (சா.அக.); see *idaimul.*

**இடைப்பழம்** *idai-p-palam,* பெ. (n.) ***காய்க்குலையில் இடையிடையே பழுத்திருப்பது*** (வின்); ripe - fruits interspersed in a bunch of unripe plantains. (செ.அக.).

*[இடை + பழம்.]*

**இடைப்பழுப்பு** *idai-p-aluppu,* பெ. (n.) ***பச்சையும் மஞ்சளுங்கலந்த இலை; முக்காற் பழுப்பிலை;*** leaf partially green and partially ripe. (சா.அக.).

*[இடை + பழுப்பு.]*

**இடைப்பாட்டம்** *idai-p-pāttam,* பெ. (n.) ***பழைய வரிவகை;*** (S.I.I.ii,521,ft.); ancient tax on herdsmen. (செ.அக.).

ம. இடயர்வரி.

*[இடை + பாட்டம். இடை - இடையர். பாட்டம் - வரி. பாட்டம் பாட்டமாய் அல்லது காலமுறைப்படி பெறும் வரி.]*

**இடைப்பிறவரல்** *idai-p-pira-varal,* பெ. (n.) (இலக்.) ***எழுவாய் முதலியன கொண்டுமுடியுஞ் சொற்களினிடையில் ஏற்ற பிறசொல் வருகை;*** (Gram.) word or words used as complements to the subject or predicate in a sentence. 'சாத்தன் (வயிறார) உண்டான்' (நன்.356. உரை).

*[இடை + பிற + வரல்.]*

**இடைப்புணரியைபு** *iḍai-p-puṇar-iyaibu,* பெ. (n.) ***நடுவிரு சீர்க்கண்ணுமியைபு வருவது.*** (ஆ.அக.); rhyming in the middle foot of a verse.

*[இடை + புணர் + இயைபு.]*

**இடைப்புணரெதுகை** *iḍai-p-puṇar-eḍugai,* பெ. (n.) ***நடுவிரு சீர்க்கண்ணும் எதுகை வருவது*** (ஆ.அக.); similarity or agreement of the second and/or subsequent syllables of the first foot of a metrical line with the other lines in a verse is termed edugai. If the same agreement occurs in the middle foot of a metrical line it is termed iḍaip-puṇar eḍugai.

*[இடை + புணர் + எதுகை.]*

**இடைப்புணர்முரண்** *iḍai-p-puṇar muraṇ,* பெ. (n.) ***நடுவிரு சீர்க்கண்ணும் முரண்வரத்தொடுப்பது.*** (ஆ.அக.); antithesis of words or ideas in the middle of a metrical line in a verse.

*[இடை + புணர் + முரண்.]*

**இடைப்புலம்** *iḍai-p-pulam,* பெ. (n.) ***நடுவிடம்;*** middle-land, intermediate land between the mountains and the low lands "திண்பிணி முரச மிடைப்புலத் திரங்க" (புறநா.288).

*[இடை + புலம்.]*

**இடைப்புழுதி** *iḍai-p-puḻudi,* பெ. (n.) ***விதைப்பாட்டு நிலம், புழுதி நிலம்*** (வின்.); land which is neither very moist nor very dry which is suitable for sowing. (செ.அக.).

*[இடை + புழுதி.]*

**இடைப்பூட்சி** *iḍai-p-pūṭci,* பெ. (n.) ***இடைப்பாட்டம்*** (S.I.I.ii, 521) பார்க்க; see *iḍai-p-pāṭṭam* (செ.அக.).

*[இடை + பூட்சி.]*

**இடைப்பூட்டு** *iḍai-p-pūṭṭu,* பெ. (n.) 1. ***அரைக்கச்சு*** (வின்); gridle belt. (செ.அக.). 2. ***அரைப்பூட்டு.*** (ஆ.அக.); knotted undergridle.

*[இடை + பூட்டு]*

**இடைப்பேச்சு** *iḍai-p-pēccu,* பெ. (n.) ***நடுநடுவே சொல்லும் சொல்;*** interject.

க. எடெவாது, எடெமாது.

*[இடை + பேச்சு.]*

**இடைப்போகம்** *iḍai-p-pōgam,* பெ. (n.) 1. ***இடைக்காலத்து விளைவு;*** interim crop. (செ.அக.). 2. ***இடையில் புன்செய்ப்பயிர் விளைவு*** (ஆ.அக.); dry crop between two spells of wet cultivation.

*[இடை + போகம்.]*

**இடைபாகம்** *iḍai-pāgam,* பெ. (n.) ***இடுப்புப் பாகம்;*** lumber region (சா.அக.).

*[இடை + பாகம்.]*

**இடைபாடு** *iḍai-pāḍu,* பெ. (n.) 1. ***அலுவல்;*** transaction. 2. ***வணிகம் முதலிய தொடர்பாக இருவரிடை நிகழுஞ் செய்தி;*** business liaison. (செ.அக.).

ம. இடபாடு.

*[இடை + பாடு.]*

†**இடைபேசி** *iḍai-pēci,* பெ. (n.) ***ஒரே வளமனையில் உள்ளவர்களுடன் மட்டும் பேசும் வகையில் அமைந்த தொலைபேசி;*** intercom, telephone system within a building.

*[இடை + பேசி.]*

**இடைமகன்** *iḍai-magaṉ,* பெ. (n.) ***இடையன்;*** cowherd or shepherd. "இடைமகன் கொன்ற வின்னா மரத்தினேன்." (சீவக.1914) (செ.அக.).

*[இடை + மகன்.]*

**இடைமடக்கு** *iḍai-maḍakku,* பெ. (n.) 1. ***பேச்சினடுவே தடுக்கை*** (வின்.); interrupting a conversation. 2. ***மடக்கணி வகை*** (தண்டி.91); play on words used in different senses. (செ.அக.). 3. ***இடக்குமடக்கான பேச்சு*** (ஆ.அக.); controversial verbal engagement.

*[இடை + மடக்கு.]*

**இடைமடு-த்தல்** *iḍai-maḍu-,* 18 செ.குன்றாவி. (v.t.) ***இடைச்செருகுதல்;*** to interpolate. "புன்சொலிற் றந்திடை மடுத்த கந்தி" (பரிபா.பாயி.) (செ.அக.).

*[இடை + மடு.]*

**இடைமதில்** *iḍai-madil,* பெ. (n.) ***இடையேயுள்ள மதில்;*** middle wall of a fortress. "பருந்துயிர்த்திடை மதில் சேக்கும்" (புறம்.343-6).

*[இடை + மதில்.]*

**இடைமிடை-தல்** *iḍai-miḍai-,* 2 செ.குன்றாவி. (v.t.) ***நடுவே கலத்தல்;*** intermingle. "பொய்யோ டிடைமிடைந்த சொல்" (நாலடி.80). (செ.அக.).

க. எடெயொட்டு.

*[இடை + மிடை.]*

**இடைமுள்** *iḍai-muḷ,* பெ. (n.) 1. ***புண்ணிலே தோன்றும் மறுமுள்;*** small new eruption about a healing ulcer. 2. ***கரப்பான் வகை;*** a kind of eruption (செ.அக.).

மறுவ. இடைப்பரு; க. எடெமுள் (இடைஞ்சல்).

*[இடை + முள்.]*

**இடைமூளை** *iḍai-mūlai,* பெ. (n.) ***நடுவிலுள்ள மூளை;*** interbrain - thalamencephalon. (சா.அக.).

*[இடை + மூளை.]*

**இடைமேடு** *iḍai-mēḍu,* பெ. (n.) ***இடையிடையே சிறிது மேடான பாகமுள்ள வயல்*** (வின்.); field, parts of which are slightly raised in level than the surrounding parts. (செ.அக.).

க. எடெதெவரு. (நடுத்திட்டு).

*[இடை + மேடு.]*

**இடைமை** *idai-mai,* பெ. (n.) ***இடையின வெழுத்து கள்; ய,ர,ல,வ,ழ,ள முதலியன;*** medial consonants of the Tamil alphabet. "ஆவியிடைமை யிடமிடறாகும்." (நன்.75). (செ.அக.).

*[இடை → இடைமை.]*

**இடையணி** *idaiyani* பெ. (n.) ***இடையில் அணியும் அணிவகை;*** 1. ***அரைப்பட்டிகை.*** 2. ***மேகலை.*** 3. ***குறங்கு செறி;*** kind of an ornament. (ஆ.அக.).

*[(இடை + அணி.]*

**இடையது** *idai-y-adu,* வி.எ. (adv.) ***இடையிலுள்ளது;*** that which is in the middle. "வடமலைப் பெயர்குவை யாயி னிடையது" (புறம்.67.7.).

*[இடை + அது.]*

**இடைய நெடுங்கீரனார்** *idai-y-anedun kiranār,* பெ. (n.) ***கடைக்கழக மருவிய புலவர்.*** (அபி.சிந்.); poet of Sangam age.

*[இடையன் + நெடும் + கீரன் + ஆர்.]*

**இடையர்** *idaiyar,* பெ. (n.) ***குறிஞ்சி நிலத்துக்கும் மருத நிலத்துக்கும் இடைப்பட்ட காடும் காடு சார்ந்த நிலமாகிய முல்லை நிலத்தில் கால்நடைகளை மேய்த்து வாழும் இனத்தார்.*** (திவ்.பெரியதி.11,8,6); herdsmen of mullai or forest pasture lying midway between hilly tracks or kurinci and plains or marutam. (செ.அக.).

*[இடை + அர்.]*

நெய்தலும் பாலையும் தனிநிலங்களாக வகைப்படுத்தாமல், மலையும் காடும் வயலும் குறிஞ்சி முல்லை மருதம் ஆகிய முத்திணைகளாக மட்டும் வழங்கிய காலத்தில் முல்லை நிலம் இடைநிலமாகக் கருதப்பட்டிருக்கலாம். நெய்தல் மருதத்தை யொட்டிய கடற்புறமாதலின் மருதமாகவே கணிக்கப்பட்டுக் காலப்போக்கில் கடல்வளத்தையே வாழ்க்கைத் தொழிலாகக் கொண்ட மக்கள் தோன்றியபின் நெய்தல் திணை புதிதாகச் சேர்க்கப்பட்டிருக்கலாம்.

**இடையர் வரி** *idaiyar vari,* பெ. (n.) ***இடைப்பாட்டம்*** பார்க்க; see *idai-p-pāttam.*

**இடையல்**[1] *idaiyal,* பெ. (n.) ***இடுப்புத் துகில்*** (திவா.); garment, cloth worn round the waist. (செ.அக.).

*[இடை + இடையல் (இடையில் உடுப்பது).]*

**இடையல்**[2] *idaiyal,* பெ. (n.) 1. ***ஒதுங்கல்;*** withdrawing. 2. ***தாழல்;*** lowering. 3. ***பின்னிடல்;*** retreating.

*[இடு - இடை - இடையல் = தாழ்தல்.]*

**இடையவியல்** *idai-y-aviyal,* பெ. (n.) ***சதை உராய்வத னாலேற்படும் ஓர்வகைப்படை;*** ecezema resulting from a chafe of the skin-Intertriga. (சா.அக.).

*[இடை + அ + வியல். இடை - இடுப்பு, வியல் - பரவுதல்.]*

**இடையறல்** *idaiyaral,* பெ. (n.) ***நடுவே முடிந்து போதல்*** (ஆ.அக.); cease or end in the middle.

*[இடை + அறல். அறு - அறல் = நீங்குதல்.]*

**இடையறவு** *idai-y-aravu,* பெ. (n.) ***இடைவிடுகை;*** interval, break. "இடையறவின் றிமைப்பளவும்" (சூளா. துற.221) (செ.அக.).

தெ. எடபடு.

*[இடை + அறவு.]*

**இடையறாவன்பு** *idaiyarāvanbu,* பெ. (n.) ***முடியா வன்பு*** (ஆ.அக.); unbreakable love. "இடையறாப் பேரன்பும் மழைவாரும் இணைவிழியும்" (காஞ்சிப்பு.).

*[இடை + அறா + அன்பு.]*

**இடையறு**[1]**-தல்** *idai-yaru-,* 2 செ.கு.வி. (v.i.) ***தடைப் படுதல்;*** to be interrupted, to cease in the middle. "இன்பமிடையறா தீண்டும்" (குறள்.369). (செ.அக.).

*[இடை + அறு.]*

**இடையறு**[2]**-த்தல்** *idai-y-aru-,* 18 செ.குன்றாவி. (v.t.) ***படை முதலியவற்றை ஊடறுத்துச்சென்று பிரித்தல்;*** to cut through or divide, as an army."வருபுனற் கற்சிறை கடுப்பவிடையறுத்து" (மதுரைக்.725); (செ.அக.).

*[இடை + அறு.]*

**இடையன்** *idaiyan,* பெ. (n.) 1. ***இடையர்*** பார்க்க; see *idaiyar.* 2. ***முல்லைநிலத்தவன்;*** herdsman. "மா சுண் உடுக்கை மடிவாயிடையன்" (புறம்.54-11).

ம. இடயன்; க. எடெய.

*[இடை + அன்.]*

**இடையன்கால்வெள்ளி** *idaiyan-kāl-velli,* பெ. (n.) ***தாழி*** (பரணி) (வின்.); second naksatra. (செ.அக.).

*[இடையன் + கால் + வெள்ளி.]*

**இடையன் சேந்தன் கொற்றனார்** *idaiyan šēndan korranār,* பெ. (n.) ***கடைக்கழக மருவிய புலவர்;*** one of the poets of Sangam age.

*[இடையன் + சேந்தன் + கொற்றன் + ஆர்.]*

**இடையாகெதுகை** *idai-y-āgedugai,* பெ. (n.) ***அடி தோறும் இரண்டாமெழுத் தொன்றே யொன்றிவரத் தொடுப்பது*** (காரிகை.ஒழிபி.6,உரை); variety of initial edugai where only the second letter in each line of the verse is the same, as "அகரமுதல வெழுத்தெல்லா மாதி, பகவன் முதற்றே யுலகு". (குறள்.1) (செ.அக.).

*[இடை + ஆகு + எதுகை.]*

**இடையாந்தரம்** *idai-y-āndaram,* பெ. (n.) 1. ***இடைப் பட்ட காலம் அல்லது இடம்;*** intermediate space or time.'அந்த வேலை இடையாந்தரத்திலே கெட்டுப்போ யிற்று' (வின்.) (செ.அக.). 2. ***நடு*** (ஆ.அக.); middle, centre.

*[இடை + அந்தரம் - இடையந்தரம் - இடையாந்தரம்.]*

**இடையாபரணம்** *iḍai-y-ābaraṇam,* பெ. (n.) ***இடையணி*** பார்க்க; see *iḍai-y-aṇi.*

*Skt.* ābharaṇa > த. ஆபரணம்.

*[இடை + ஆபரணம்.]*

**இடையாமம்** *iḍai-yāmam,* பெ. (n.) ***இடையிருள் யாமம்*** பார்க்க; (ஆசாரக்.43-1); see *iḍaiyiruḷ yāmam*

*[இடை + யாமம்.]*

**இடையாமர்** *iḍaiyāmar,* பெ. (n.) ***இடையாயார்*** பார்க்க; (ஆ.அக.); see *iḍaiyāyār.*

*[இடை + (ஆயவர் → ஆயார்) ஆமர்.]*

**இடையாயார்** *iḍai-y-āyār,* பெ. (n.) ***நடுவர்;*** middle class, those belonging to the intermediate grade in any broad classification "இடையாயார் தெங்கினனையர்" (நாலடி.216) (செ.அக.).

*[இடை + ஆயார். ஆகியவர் → ஆயவர் → ஆயார்.]*

**இடையாள்** *iḍaiyāḷ,* பெ. (n.) ***இருவர் அல்லது இரு குழுக்களிடை நின்று பணியை முடிப்பவன், தரகன்;*** intermediary, contact man, broker.

ம. இடயாள்.

*[இடை + ஆள்.]*

**இடையாறு** *iḍai-yāṟu* பெ. (n.) ***இடையாற்றுமங்கலம் என்னும் ஊர்;*** place name. "வெல்போர்ச் சோழனிடை யாற்றன்ன" (அகநா.141-23).

*[இடை + ஆறு.]*

**இடையிட்டெதுகை** *iḍaiyiṭṭedugai,* பெ. (n.) ***அடிக ளொன்றை விட்டொன்றெதுகை யொன்றி வருவது*** (ஆ.அக.); similarity or agreement of the second and/or subsequent letters of the first foot of alternate lines of a verse.

*[இடை + இட்டு + எதுகை.]*

**இடையிடு-தல்** *iḍai-y-iḍu-,* 20 செ.கு.வி. (v.i.) 1. ***இடையில் நிகழ்தல்;*** to intervene, happen or occur in the middle. "தலைமகள் காரணமாக இடையிடும் இடையீடில்லை" (இறை.33,உரை). 2 ***இடையில் ஒழிதல்;*** to be omitted in the middle. - 18 செ.குன்றாவி. (v.t.) 1. ***நடுவிலிடுதல்;*** to place between, interpose. "மறையொளி மணிச்சுவ ரிடையிட்டு" (சீவக.656). 2. ***மதித்தல்;*** to obstruct, "வாயிலை இடையிட்டுக் கொண்டு நிற்கும்படியாக" (கலித்.109,26 உரை). (செ.அக.). 3. ***முன்னிருத்துதல், காரணமாக்குதல்;*** to make (something or some one) cause of. 4. ***காலம் அல்லது தொலைவு முன்னிடுதல்;*** to pass time, to cover distance, etc. (சேரநா.).

ம. இடயிடுக.

*[இடை + இடு.]*

**இடையிடை** *iḍai-y-iḍai,* கு.வி.எ. (adv.) 1. ***ஊடே யூடே;*** intermittently, at frequent intervals. "இடையிடை யடிக்கும்" (கல்லா.7) (செ.அக.). 2. ***நடுவே, கூடக் கூட;*** occasionally, alternately. (சேரநா.).

ம. இடயிடெ; க. எடெயெடெ (திரும்பத்திரும்ப); தெ. எடனெட.

*[இடை + இடை.]*

**இடையிருள்யாமம்** *iḍai-y-iruḷ-yāmam,* பெ. (n.) ***இரவு 10 மணி முதல் 2 மணி வரைப்பட்ட நள்ளிருள் பொழுது*** (மணி.20-82); midnight from 22 to 2 hours.

*[இடை + இருள் + யாமம்.]*

**இடையில் காட்சி** *iḍai-y-il-kāṭci,* பெ. (n.) ***இடைவி டாத காட்சி; தொடர்ந்த நட்பின் நெருக்கம்;*** unbroken link of friendship. "இடையில் காட்சி நின்னோ டுடனுறை வாக்குக வுயர்ந்த பாலே" (புறநா.236-11).

*[இடை + இல் + காட்சி. இடைதல் = பின்வாங்குதல், தளர்தல். இல் = இல்லாத.]*

**இடையினம்** *iḍai-y-iṉam,* பெ. (n.) ***இடையெழுத்து;*** medial consonants of the Tamil alphabet. "இடையினம் ய ர ல வ ழ ள வென வாறே" (நன்.70).

ம. இடயினம்.

*[இடை + இனம்.]*

வன்மைக்கும் மென்மைக்கும் இடைநிகர்த்ததாதலாலும் வல் லெழுத்துத் தோன்றும் மார்புக்கும். மெல்லெழுத்துத் தோன்றும் மூக்குக்கும் இடையிலான கழுத்தில் பிறத்தலாலும் இடையின மாயிற்று. இற்றை மொழியியலார் வல்லின எழுத்துகளை நிறுத்தம் (stop) என்றும் மெல்லின எழுத்துகளை மூக்கினம் (nasal) என்றும் கருதுகின்றனர். இடையினம் என்று மரபிலக்க ணத்தாரால் கொள்ளப்பட்டவை அதிர்வொலி (trill), பக்க வொலி (lateral), உரசுஒலி (fricative), அரையுயிர் (semivowel), எனப்பல பிரிவுகளுக்கு உட்படுத்தி விளக்கப்படுகின்றன.

**இடையினமோனை** *iḍai-y-iṉa mōṉai,* பெ.(n.) ***இடை யினத்துள் யகரவகரங்கள் ஒன்றற்கொன்று மோனை யாக வருவது*** (யா.கா. ஒழிபி.6, உரை); variety of consonantal alliteration at the beginning of lines in which medial consonants 'ya' and 'va' are interchangeable.

எ-டு: யாமெய்யாக் கண்டவற்று ளில்லை எனைத்தொன்றும்
வாய்மையின் நல்ல பிற.

*[இடை + இன + மோனை.]*

**இடையினவெதுகை** *iḍai-y-iṉa-v-edugai,* பெ. (n.) ***இடையினத்துள் வந்தவெழுத் தன்றி அவ்வினத்து வேறெழுத்து இரண்டாமெழுத்தாய் நிற்க வரும் எதுகை*** (யா.கா.ஒழிபி.6,உரை). (செ.அக.); interchangeability of any one of the medial consonants while determining the agreement of the second and/or subsequent letters of the first foot of successive lines in a metrical composition.

எ-டு: "எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு".

*[இடை + இன + எதுகை.]*

**இடையீட்டெதுகை** *idai-y-ittedugai*, பெ. (n.) ***ஒவ்வோரடி இடையிட்டு வரும் எதுகை*** (யா.கா. ஒழிபி.6, உரை); similarity or agreement of the second and/or subsequent letters of the first foot of alternate lines in a verse.

எ-டு: "தோடா ரெல்வளை நெகிழ நாளும்
நெய்த லுண்கண் பைதல கலுழ
வாடா வவ்வரி தகைஇப் பசலையும்
வைகல் தோறும் பைபயப் பெருகின".

*[இடை + ஈட்டு + எதுகை.]*

**இடையீடு**[1] *idai-y-idu*, பெ. (n.) 1. ***இடையில் தோன்றுவது;*** that which occurs or happens in the middle. 2. ***தடை;*** obstacle, impediment. 'பகற்குறி யிடையீடு' (நம்பியகப்.155). 3. ***மாறுபாடு;*** difference. "பெரு மறை யுடன்மெய்த் தொண்டர்க் கிடையீடு பெரிதாமன் றே" (பெரியபு.திருஞான.592). 4. ***அமைவு;*** answer to a query. "ஏவிய கடாவுக் கிடையீடாவது" (ஞானா.67, 10). 5. ***இடையில் விடுகை;*** interruption. "விட்டுவிட் டறிவ தன்றி இடையீடின்றி அறியமாட்டாது" (சி.சி.2, 94, சிவஞா.). 6. ***இடையிட்டுக்கொண்டது*** (ஆ.அக.); that which had happened in the middle.

ம. இடயீடு.

*[இடை + இடு = இடையிடு → இடையீடு.]*

**இடையீடு**[2] *idai-y-idu*, பெ. (n.) ***அரசின் வுரிமையாயிருந்து பிறருக்கு மாற்றப்பட்ட நிலம்;*** land, the ownership of which had been transferred from government to an individual. "இக்கச்சம் பிழைப்போர் யில்லங்களுடைய இடையீடு அக நாழியைச் செலவினோடொக்கும்." (T.A.S. iii, p.193) (செ.அக.).

*[இடை + ஈடு.]*

**இடையுவா** *idai-y-uvā*, பெ. (n.) ***முழு நிலவு; வெள்ளுவா.*** (திவ்.நாச்.7,3); full moon, as coming in the middle of the lunar month (செ.அக.).

*[இடை + உவா.]*

**இடையுற்ற மலடி** *idaiyurra maladi*, பெ. (n.) ***பெண்களுக்கு இடுப்பு பருத்து அதனாலுண்டாகு மோர் வகை மலட்டுத்தன்மை;*** abnormal growth of the hip in a woman causing barrenness. (சா.அக.).

*[இடை + உற்ற + மலடி. இடை = இடுப்பு. உறுதல் = மிகுதல், பருத்தல்.]*

**இடையூறு** *idai-y-ūru*, பெ. (n.) ***இடைஞ்சல், தடை*** (திருவிளை.விடையில.10); impediment, obstruction, hindrance. (செ.அக.).

ம. இடையூறு.

*[இடை + ஊறு.]*

**இடையெடு-த்தல்** *idai-y-edu-*, 18 செ.குன்றாவி. (v.t.) ***எடைஎடுத்தல்*** பார்க்க; see *edai-edu.*

*[எடை + எடுத்தல். எடை - இடை (கொ.வ.) இஃது வழூஉச் சொல்லாதலின் ஆளாமல் விலக்குதல் வேண்டும்.]*

**இடையெண்** *idai-y-en*, பெ. (n.) ***முச்சீர் ஓரடியாய் வரும் அம்போதரங்க வகை*** (யா.கா.செய்.10,உரை); verse of a class known as ambōtarangam-consisting of trimetric lines. (செ.அக.).

*[இடை + எண்.]*

**இடையெழுஞ்சனி** *idai-y-eluñ-cani*, பெ. (n.) ***கணை (பூர) நாள்*** (பிங்.); middle asterism of the fifth sign of the Zodiac wherein saturn is reputed to exert a malignant influence. (செ.அக.).

*[இடை + எழும் + சனி.]*

**இடையெழுத்து** *idai-y-eluttu*, பெ. (n.) ***வல்லினத்துக்கும் மெல்லினத்துக்கும் இடைப்பட்ட இடையின எழுத்துகள்;*** six consonants of the Tamil alphabet viz., ய், ர், ல், வ், ழ், ள். classified as medial consonants as dist. fr. valleluttu and melleluttu. (செ.அக.).

*[இடை + எழுத்து.]*

**இடையொடிவு** *idai-y-odivu*, பெ. (n.) ***கடைசி அழிவுக்குமுன் ஏற்படும் அழிவுகள்*** (ஈடு.1,3,3); calamity before the final dissolution of the world. (செ.அக.).

*[இடை + ஒடிவு. ஒடிவு - அழிவு, முடிவு.]*

**இடையொடு கடைமடக்கு** *idaiyodu-kadai-madakku*, பெ. (n.) ***அணி வகையுளொன்று. அஃது அடிகளினிடையுங்கடையும் மடங்கி வருவது;*** (ஆ.அக.); figure of speech based on metrical composition.

*[இடை + ஒடு + கடை + மடக்கு.]*

"வா மான மான மழைபோன்மத மானமான
நா மான மான கமுற்றாழக மானமான
தீ மான மான வர்புகாத்திற மானமான
கா மான மான கல்கரங்கனன் மானமான"
இதில் "மான மான" என்ற சொல் நான்கடிகளின் இடையிலும் ஈற்றிலும் மடங்கி வந்தது. (தண்டி.95,உரை).

**இடையொத்து** *idai-y-ottu*, பெ. (n.) ***தாள வகை*** (திவ்.திருவாய்.); variety of time-measure. (செ.அக.).

க. எடெயொத்து.

*[இடை + ஒத்து. ஒற்று - ஒத்து.]*

**இடையோர்** *idai-yōr*, பெ. (n.) ***இடையிற்செல்வோர்;*** those who are marching in the middle of a group. "இடையோர் பழத்தின் பைங்கனி மாந்த" (புறநா.225.2)

*[இடை → இடையோர்.]*

**இடைவட்டை** *idai-vattai*, பெ. (n.) ***நடுவிலுள்ளது*** (S.I.I.viii,232); that which is in the middle. (செ.அக.).

க. எடெகாண (நடு பாகம்).

*[இடை + வட்டை.]*

**இடைவண்ணம்** *idai-vannam,* பெ. (n.) ***இசை வகை*** (பெரியபு.ஆனாய.28); variety of melody. (செ.அக.).

க. எடெயொத்து (மத்திய தாளம்). *Skt.* varna.

*[இடை + வண்ணம்.]*

**இடைவரி** *idai-vari,* பெ. (n.) ***எடைவரி*** பார்க்க; எடைக்கற்களுக்கான வரி (Insc.); tax on measures and weights. (செ.அக.).

*[எடை + வரி → எடைவரி → இடைவரி. எடை - இடை எனத் திரிந்த கொச்சை வழக்கு, வழூஉச் சொல்லாதலின் விலக்கத் தக்கது.]*

**இடைவழக்காளி** *idai-valakkli* பெ. (n.) ***வழக்காளிக்கும் எதிர் வழக்காளிக்கும்*** (வாதி பிரதிவாதி) ***இடையில் தனி வழக்குக் கொண்டு வருவோன்*** (யாழ்ப்.); third party intervening between the plaintiff and the defendant in a law suit. (செ.அக.).

*[இடை + வழக்கு + ஆளி.]*

**இடை வழக்கு** *idai-valakku,* பெ. (n.) 1. ***வழக்கின் நடுவே பிறராற் கொண்டுவரப்படும் வழக்கு*** (யாழ்ப்.); suit of law instituted by a new claimant while the previous suit is under trial, interlocutary suit (செ.அக.). 2. ***கிளை வழக்கு*** (ஆ.அக.); off shoot of a previous suit.

*[இடை + வழக்கு.]*

**இடைவழி** *idai-vali,* பெ. (n.) 1 ***வழியின் நடு,*** (திவ்.பெரியாழ்.4,5,5); middle of the way; half-way to a destination. (செ.அக.). 2. ***வலதோ இடதோ அன்றி நடுவழி;*** middle path.

க. எடெவட்டெ.

*[இடை + வழி.]*

**இடைவழித்தட்டில்** *idai-vali-t-tattil,* கு.வி.எ. (adv.) ***எதிர்பாராமல்;*** accidentally, unexpectedly, by chance. 'அந்தப் பொருள் எனக்கு இடை வழித் தட்டில் கிடைத்தது.' (இ.வ.) (செ.அக.).

*[இடை + வழி + தட்டில்.]*

**இடைவள்ளல்கள்** *idai-vallalgal,* பெ. (n.) ***முதலேழு வள்ளல்கள், கடையேழு வள்ளல்கள் போன்று இடை ஏழு வள்ளல்கள்;*** intermediate galaxy of philanthropists or benefactors celebrated in literature there being seven such patrons, viz., அக்குரன், சந்திமான், அந்திமான், சிசுபாலன், தந்த வக்கிரன், கன்னன், சந்தன், dist. fr முதல் வள்ளல்கள் and கடை வள்ளல்கள் (பிங்.) (செ.அக.).

*[இடை + வள்ளல்கள்.]*

**இடைவாய்** *idai-vāy,* பெ. (n.) ***கழுத்துக்கோலின் அளவுக்குறியிடம்*** (இராட்.); degrees or marks upon a steelyard. (செ.அக.).

*[இடை + வாய்.]*

**இடைவாவி** *idai-vāvi,* பெ. (n.) ***வாவிகளில் ஒரு வகை*** (கருநா.); a kind of tank. (செ.அக.).

க. எடெபாவு.

*[இடை + வாவி.]*

**இடைவாழை** *idai-vālai,* பெ. (n.) ***ஒரு மலைச்செடி*** (இ.வ.); common bracken. (செ.அக.).

*[இடை + வாழை.]*

**இடைவிடல்** *idai-vidal,* தொ.பெ. (vbl.n.) ***விட்டுவிட்டுத் தொடங்கல்*** (ஆ.அக.); off and on, intermittent activity, irregular functioning.

*[இடை + விடல்.]*

**இடைவிடாமல்** *idai-vidāmal,* கு.வி.எ.(adv.) 1. ***எப்போதும்;*** always; incessantly, constantly. 2. ***தொடர்ந்து;*** uninterruptedly, continually. (செ.அக.).

*[இடை + விடாமல்.]*

**இடைவிடு-தல்** *idai-vidu-,* 20 செ.கு.வி. (v.i.) ***இடையில் ஒழிதல்;*** to intermit or cease now and then. "இடைவிடாமற் றுழாவி" (தைலவ.தைல.94). (செ.அக.).

க. எடெவிடு, எடெபிடு.

*[இடை + விடு.]*

**இடைவிரல்** *idai-viral,* பெ. (n.) ***நடுவிலுள்ள விரல்;*** middle finger.

க. எடெவெரல்.

*[இடை + விரல்.]*

**இடைவிழுநாடி** *idai-vilu-nādi,* பெ. (n.) 1. ***விட்டு விட்டு எழும்புவதும், அமிழுவதுமான நாடி நடை;*** pulsation sinking and rising at intervals - undulating pulse. 2. ***நடுவில் விட்டுவிட்டு அடிக்கும் நாடி;*** pulse in which beats are skipped. (சா.அக.).

*[இடை + விழு + நாடி.]*

**இடைவீடு** *idai-vīdu,* பெ. (n.) ***நடுவில் விட்டு விடுகை*** (திவ்.திருவாய்.1,10,8); leaving in an incomplete condition, breaking off or ceasing in the middle. (செ.அக.).

*[இடை + வீடு.]*

**இடைவு** *idaivu,* பெ. (n.) 1. ***தோல்வி;*** defeat. 2. ***நீக்கம்;*** interspace, gap. 3. ***வெளி;*** open space. (செ.அக.).

*[இடை - இடைவு.]*

**இடைவெட்டிலே** *idai-vettilē,* கு.வி.எ. (adv.) ***தற்செயலாய்;*** by chance, by accident. 'அவனுக்கு இது இடைவெட்டிலே கிடைத்தது.' (செ.அக.).

*[இடை + வெட்டு + இல் + ஏ.]*

**இடைவெட்டு** *idai-vettu,* பெ. (n.) ***இடையிற்பெற்ற பொருள்*** (கொ.வ.); something other than the object

of pursuit; diversion from purpose or main issue. (செ.அக.).

*[இடை + வெட்டு.]*

**இடைவெட்டுப் பணம்** *idai-vettu-p-panam,* பெ. (n.) 1. ***மாறுமுத்திரை விழுந்த பணம்*** (வின்.); clipped or imperfectly stamped coin. 2. ***வேறு வழியாகக் கிடைத்த ஊதியம்*** (யாழ்ப்.); profit made indirectly; wrongful earning. (செ.அக.). 3. ***பொறுக்கியெடுத்த பணம்*** (ஆ.அக.); picked up money.

*[இடை + வெட்டு + பணம்.]*

**இடைவெட்டுப்பேச்சு** *idai-vettu-p-peccu,* பெ. (n.) ***ஏளனப்பேச்சு*** (வின்.); derision, ridicule, raillery, (செ.அக.).

*[இடை + வெட்டு + பேச்சு.]*

**இடைவெளி** *idai-veli,* பெ. (n.) 1. ***வெளிப்பரப்பு;*** gap, intervening space. 2. ***பிளப்பு;*** hole, as in a wall; cleft. (செ.அக.).

*[இடை + வெளி.]*

**இடோல்** *idol,* பெ. (n.) ***இடால்*** பார்க்க; see *idal;* (செ.அக.).

*[இடு → இடல் → இடால் → இடோல் = வாயகன்ற பறை. இச்சொல் இடோல் - டோல் எனத்திரிந்து வடபுல மொழிகளில் வழங்குகின்றது.]*

**இடோலி** *idoli,* பெ. (n.) ***ஒருவகைச் சிவிகை*** (வின்.); litter. (செ.அக.).

*H.* doli.

*[இடல் - இடாலி - இடோலி. இடலுதல் - அகலமாதல். சற்று அகலமான பல்லக்கு இப்பெயர் பெற்றிருக்கலாம்.]*

**இண்டங்கொடி** *indangodi,* பெ. (n.) ***இண்டு;*** sensitive creeper - (சா.அக.).

*[இண்டு + அம் + கொடி.]*

**இண்டங்கொழுந்து** *indangolundu,* பெ. (n.) ***இண்டஞ் செடியின் கொழுந்திலை;*** tender leaf of Indu, a sensitive plant. (சா.அக.).

*[இண்டு + அம் + கொழுந்து.]*

**இண்டஞ்செடி** *indan cedi,* பெ. (n.) ***இண்டு*** பார்க்க; see *indu.* (சா.அக.).

*[இண்டு + அம் + செடி.]*

**இண்டந்தண்டு** *indan-tandu,* பெ. (n.) ***இண்டஞ் செடியின் அடித்தண்டு;*** stalk of Indu plant. (சா.அக.).

*[இண்டு + அம் + தண்டு.]*

**இண்டம்** *indam,* பெ. (n.) ***சவ்வரிசி;*** sago.

*[இண்டு + அம்.]*

**இண்டம்பொடி** *indam-podi,* பெ. (n.) ***சவ்வரிசி நொய்*** (M.M); sago grit (செ.அக.).

*[இண்டு + அம் + பொடி.]*

**இண்டமுள்ளு** *inda mullu,* பெ. (n.) ***இண்டஞ்செடியின் முள்;*** thorn of indu plant. (சா.அக.).

*[இண்டு + அம் + முள்ளு.]*

**இண்டர்**[1] *indar,* பெ. (n.) 1. ***இடையர்*** (வின்.); shepherds. 2. ***இழிந்தோர்;*** outcastes, men who are extremely degraded villains. "இண்டக்குலத்தை" (திவ்.திருப்பல்.5) (செ.அக.).

*[இண்டு + அர்.]*

**இண்டர்**[2] *indar,* பெ. (n.) 1. ***நண்பர்;*** friends. 2. ***சுற்றம்;*** relatives. (ஆ.அக.).

*[இண்டு + அர்.]*

**இண்டரி** *indari,* பெ. (n.) ***ஓர் பணிகாரம்;*** a kind of confection. (சா.அக.).

*[இண்டு[1] + அரி. இண்டு = மாவு. அரி = அரிசி.]*

**இண்டல்** *indal,* பெ. (n.) ***விரைதல்;*** to move quickly.

**இண்டனம்** *indanam,* பெ. (n.) 1. ***விளையாட்டு;*** play, sport. 2. ***புணர்ச்சி;*** sexual intercourse. 3. ***ஊர்தி;*** vehicle. (செ.அக.).

*Skt.* hindana.

*[இண்டல் = நெருங்கல், விரைதல். இண்டல் + அம் - இண்டலம் → இண்டனம்.]*

**இண்டிடுக்கு** *indidukku,* பெ. (n.) ***சந்துபொந்து;*** (கொ.வ.); nook and corner. (செ.அக.).

*[இண்டு + இடுக்கு.]*

**இண்டிமாமா** *indi-mama,* பெ. (n.) ***கூட்டிக்கொடுப்பவன்;*** panderer, pimp, 'uncle' to every one in the house. (செ.அக.).

**தெ.** இண்டி மாமா.

*[இல் = வீடு. இல் - தெ. இண்டி (வீட்டுக்குரிய) + மாமா.]*

**இண்டிறுக்கெனல்** *indirukkenal,* பெ. (n.) ***குறட்டை விடுங் குறிப்பு;*** onom.expr. of snoring "இண்டிறுக்கென் னும் கொரக்கை விடுதலால்" (நீலகேசி,375,உரை) (செ.அக.).

*[இண்டு + இறுக்கு + எனல்.]*

**இண்டு**[1]**-தல்** *indu-,* 5 செ.குன்றாவி. (v.t.) ***இடித்தல்;*** to pound.

*[உள் - இள் - இண்டு.]*

**இண்டு**[2] *indu,* பெ. (n.) ***மிகச்சிறிய இடைவெளி அல்லது துளை;*** cleft nook, minute cavity. "இண்டும் இடுக்கும்" (உ.வ.). (மு.தா.91). 2. ***மாவு;*** flour.

*[உள் → இள் → இண்டு.]*

**இண்டு**[3] *indu,* பெ. (n.) 1. ***கொடி வகை;*** eight-pinnate soap-pod. "இண்டு படர்ந்த இடுகாடு" (பதினோ.மூத்.10). 2. ***தொட்டாற்சுருங்கி*** (L.); sensitive plant, mimosa.



இண்டு

3. ***செடி வகை*** (L.); species of sensitive tree. 4. ***புலி தொடக்கி*** (மலை.); tiger-stopper (செ.அக.). 5. ***மட்டிச் சிங்கை;*** prickly brasiletto climber (சா.அக.).

*[இள் → இண்டு (திரட்சி, தொகுதி).]*

**இண்டை**[1] *indai,* பெ. (n.) 1. ***தாமரை*** (திவா.); lotus. 2. ***மாலை வகை;*** circlet of flowers, variety of garland. "இண்டைச் சடைமுடியா யென்றேனானே" (தேவா. 297,5). (செ.அக.).

ம. இண்ட; க. இண்டெ; தெ. இண்டெ.

*[இண்டு → இண்டை.]*

**இண்டை**[2] *indai,* பெ. (n.) 1. ***இண்டு*** (பிங்.); eight-pinnate soap-pod. 2. ***முல்லை*** (L.); trichotomous - flowering smooth jasmine. 3. ***புலி தொடக்கி*** (மலை.); tiger-stopper. 4. ***இண்டு***[2] பார்க்க; species of sensitive-tree. 5. ***ஆதொண்டை*** (L.); thorny caper. (செ.அக.).

**இண்டைகட்டு-தல்** *indai-kattu,* 12 செ.குன்றாவி. (v.t.) ***பூ மாலை தொடுத்தல்*** (கருநா.); to twine garland.

க. இண்டெகட்டு.

**இண்டைச்சுருக்கு** *indai-c-curukku,* பெ. (n.) ***மாலை வகை*** (பெரியபு.முருக.9); chaplet of flowers. (செ.அக.).

*[இண்டை + சுருக்கு.]*

**இணக்கம்** *inakkam,* பெ. (n.) 1. ***இசைப்பு;*** fitting well together as two planks. 2. ***பொருத்தம்;*** fitness, suitability. 3. ***நட்பு;*** friendship, congeniality, compatibility. "நல்லிணக்க மல்ல தல்லற் படுத்தும்" (கொன்றைவே.). 4. ***இசைவு;*** agreement, acquiescene. 5. ***திருத்தம்;*** exactness. "இதனை யிணக்க மாய்ச்செய்" (யாழ்ப்.) (செ.அக.).

ம. இணக்கம்.

*[இணக்கு - இணக்கம்.]*

**இணக்கு**[1]**-தல்** *inakku-,* 12 செ.குன்றாவி. (v.t.) ***இசைவித்தல்*** (திவ்.திருவாய்.6,2,8); to cause to agree; to unite, connect, adjust, fit, persuade. (செ.அக.).

ம. இணக்குக; தெ. எனியின்சு (ஒன்றாதல், இணைதல்).

*[இணங்கு → இணக்கு.]*

**இணக்கு**[2] *inakku,* பெ. (n.) 1. ***இசைவு;*** union, harmony. "இணக்குறுமென் னேழைமைதான்" (தாயு.பராபர. 273). 2. ***ஒப்பு;*** comparison, match. "இணக்கிலாததோ ரின்பமே" (திருவாச.30,1). (செ.அக.). 3. ***உடன்பாடு;*** agreement.

ம. இணக்கு.

*[இள் - இள - இளக்கு - இணக்கு.]*

**இணக்கு**[3] *inakku,* பெ. (n.) 1. ***சிறிது, கொஞ்சம்;*** little quantity, twig. 2. ***துண்டு;*** a piece, bit.

ம. இணக்கு; க. இண்டெ; தெ. இண்டை.

*[இள் - இள - இணக்கு.]*

**இணக்குப்பார்வை** *inakku-p-pārvai,* பெ. (n.) ***பார்வை விலங்கு;*** decoy. "இணக்குப் பார்வை யிட்டு மிருகம் பிடிப்பாரைப் போலே ஸஜாதீயரைக் கொண்டே காரியங்கொள்வோ மென்று" (ஆசார்ய.அவ.பக்.2) (செ.அக.).

க. இணிகு கண்டி (மறைவாக நின்று பார்ப்பதற்கு ஏற்ற சந்து).

*[இணக்கு + பார்வை.]*

**இணக்கோலை** *inakkōlai,* பெ. (n.) 1. ***உடன்படிக்கை முறி*** (வின்.); deed of cession, of reconcilation or of agreement. (செ.அக.). 2. ***பொருத்தோலை;*** memorandum of association. (ஆ.அக.).

*[இணங்கு - இணக்கு + ஓலை.]*

**இணகாலன்** *inagālan,* பெ. (n.) ***நேர்வாளம்;*** croton seed, purging croton. (சா.அக.).

*[இளகல் - இளகலன் - இளகாலன் - இணகாலன்.]*

**இணகு** *inagu,* பெ. (n.) ***உவமை;*** simile. "இணகிறந் தகன்ற பாசம்" (ஞானா.45). (செ.அக.).

*[இல் - இள் - இள - இண - இணை - இணைகு - இணகு.]*

**இணங்கர்** *inangar,* பெ. (n.) ***ஒப்பு;*** match, comparison. "கற்பிற் கிணங்க ரின்மையான்" (கம்பரா.மீட்சிப்.147). (செ.அக.).

*[இணைகு - இணங்கு - இணங்கர்.]*

**இணங்கல்** *inangal,* பெ. (n.) 1. ***உடன்பாடு;*** consent, assent. 2. ***எட்டு;*** number 8. (செ.அக.).

*[இணங்கு - இணங்கல்.]*

**இணங்கலர்** *inangalar,* பெ. (n.) ***பகைவர்;*** enemies, adversaries. (செ.அக.).

*[இணங்கு + அல் + அர்.]*

**இணங்கற்பிஞ்சு** *inangar-pinju*, பெ. (n.) ***இரண்டு;*** (செட்.நா.); two. (செ.அக.).

*[இணங்கல் + பிஞ்சு.]*

**இணங்கன்** *inangan*, பெ. (n.) 1. ***நண்பன்;*** friend, man in agreement with another. "வணங்குவோ ரிணங் கன் வந்தான்" (திருவாலவா.28,27). 2. ***வெடியுப்பு*** (வின்.); saltpetre. (செ.அக.).

ம. இணங்கன்.

*[இணங்கு - இணங்கன்.]*

**இணங்கனுப்பு** *inanganuppu*, பெ. (n.) ***வெடியுப்பு;*** nitre or salt-petre. (சா.அக.).

*[இணங்கன் + உப்பு.]*

**இணங்கார்** *inangār*, பெ. (n.) ***இணங்கலர்*** பார்க்க; see *inangalar*. (செ.அக.).

*[இணங்கலர் - இணங்கார்.]*

**இணங்கி** *inangi*, பெ. (n.) ***தோழி*** (பிங்.); girl's companion; lady's maid. (செ.அக.).

க. எணவளிகெ, ஏண்வளிகெ (பெண்கள் கூட்டம்).

*[இணங்கு - இணங்கி.]*

**இணங்கு[1]-தல்** *inangu-*, 15 செ.கு.வி. (v.i.) ***மனம் பொருந்துதல், ஒத்துக்கொள்ளல்,*** to consent, comply with, agree to. "இச்சையாயின வேழையர்க்கே செய்தங் கிணங்கியே திரிவேனை" (திருவாச.41,9). (செ.அக.).

ம. இணங்கு; க. எணெ, எண; தெ. எனுசு, என்க; குட. எணெ; து. இனெ, இணை.

*[இள - இண - இணங்கு.]*

**இணங்கு[2]-தல்** *inangu-*, 15 செ.கு.வி. (v.i.) ***நட்புச் செய்தல்;*** to be friend. "இனிச் சிவபத்தர்களோ டிணங்குக." (சி.போ.12,2). (செ.அக.).

ம. இணங்கு (நட்பு).

*[இண → இணங்கு.]*

**இணங்கு[3]** *inangu*, பெ. (n.) 1. ***இணக்கம்;*** union, friendship. "உள்ளப் பெறா ரிணங்கை யொழிவேனோ" (திருப்பு.288). 2. ***ஒப்பு;*** match, fitmate. "இணங்காகு முனக்கவளே" (திருக்கோ.68). 3. ***பேய்*** (திவா); devil. (செ.அக.).

ம. இணங்கு.

*[இண - இணங்கு.]*

**இணங்கு[4]** *inangu*, பெ. (n.) 1. ***நண்பின-ன்-ள்;*** comrade. "அவனது துணை அவனது இணங்கு என்பன துணைக்கிழமை" (தொல்.சொல்.80, சேனா.) (செ.அக.). 2. ***உறவு*** (சேரநா.); relationship, kinship.

ம. இணங்கு.

*[இண → இணங்கு.]*

**இணம்** *inam*, பெ. (n.) 1. ***கிச்சிலி மரம்;*** orange tree. 2. ***தளிர்;*** sprout. (சா.அக.).

*[இள → இண → இணம்.]*

**இணர்[1]-தல்** *inar-*, 2 செ.கு.வி. (v.i.) ***நெருங்குதல்;*** to be dense, to intensify. "இணரிய ஞாட்பினுள்" (களவழி.34). (செ.அக.).

ம. இணர்.

*[இள் - இண் - இணர்.]*

**இணர்[2]-தல்** *inar-*, 2 செ.கு.வி. (v.i.) ***பரவுதல்;*** to pervade, spread. "இணரு மவன்றன்னை யெண்ணல்" (திருமந்.3035). (செ.அக.).

ம. இணர்ச்ச.

*[இள் - இள - இளர் - இணர். ஒ.நோ. ஈண்டுதல்.]*

**இணர்[3]** *inar*, பெ. (n.) 1. ***பூங்கொத்து;*** cluster of flowers. "மெல்லிணர்க் கண்ணி" (புறநா.24,8). 2. ***பூ;*** blossom, full-blown flower. "தேங்கமழ் மருதிணர் கடுப்ப" (திருமுருகு.34). 3. ***பூவிதழ்;*** flower petal. "பல்லிணர்க் குரவம்" (குறிஞ்சிப்.69). 4. ***பூந்தாது*** (பிங்.); pollen. 5. ***ஒளிச்சுடர்;*** flame. "இணரெரி" (குறள்.308). 6. ***காய்குலை;*** bunch of fruit. "இணர்ப்பெண்ணை" (பட்டினப்.18). 7. ***ஒழுங்கு;*** order, arrangement, as of troops, "புகரிணர்சூழ் வட்டத்தவை" (பரிபா.15,61). 8. ***தொடர்ச்சி*** (பழமொழி.78); continuance. 9. ***கிச்சிலி*** (மலை.) பார்க்க; orange. 10. ***மாமரம்*** (மலை.) பார்க்க; mango-tree. (செ.அக.). 11. ***மீன் முட்டை;*** spacon of fish.

ம. இணர்.

*[இள் - இளர் - இணர்.]*

**இணர்[4]** *inar*, பெ. (n.) ***சூலை;*** stomach pain.

*[இள் - இளர் - இணர் = நெருக்குதல், வலித்தல்.]*

**இணர் தகை கடுக்கை** *inar-tadai-kadukkai*, பெ. (n.) ***கொத்து நிறைந்த கொன்றை;*** bunch of a konrai. "இணர் ததை கடுக்கை ஈண்டிய தாதிற் குடவர் புழுக்கிய பொங்கவிழ்ப்புன்கம்." (அகநா.393-15).

*[இணர் + ததை + கடுக்கை.]*

**இணர்ததை தண்கா** *inar-tadai-tankā*, பெ. (n.) ***பூங்கொத்து நெருங்கின குளிர்ந்த பொழில்;*** flower-garden. "இணர்ததை தண்காவின் இயன்றநின்குறி வந் தாள்" (கலித்.69-16).

*[இணர் + ததை + தண்கா.]*

**இணரெரி** *inareri*, பெ. (n.) ***பல சுடருள்ள நெருப்பு;*** conflagration, fire throwing ample flames. "இணரெரி தோய்வன்ன இன்னா செயினும்" (குறள்.308).

*[இணர் + எரி.]*

**இணரோங்கு-தல்** *inar-ōṅgu-,* 5 செ.கு.வி. (v.i.) ***குடிவழி உயர்தல்;*** to prosper from generation to generation. "இணரோங்கி வந்தாரை" (பழமொழி.72). (செ.அக.).

*[இணர் + ஓங்குதல். இணர் - கொத்து, கொத்தான உறவு, தலைமுறை.]*

**இணாட்டு** *iṇāṭṭu,* பெ. (n.) 1. ***மீன் செதிள்*** (யாழ்ப்.); gill of fish. 2. ***ஓலைத்துண்டு*** (யாழ்ப்.); small bit of palm leaf. (செ.அக.). 3. ***ஓலைத்தளிர்*** (ஆ.அக.); tender palm leaf.

*[ஒருகா. இணர் + ஆட்டு - இணராட்டு - இணாட்டு (தொகுதியின் அடைவு).]*

**இணாப்பு[1]-தல்** *iṇāppu-,* 5 செ.குன்றாவி. (v.t.) ***ஏய்த்தல்*** (யாழ்.); to deceive, cheat. defraud, beguile. (செ.அக.).

**க.** எட்டிசு.

*[இணைப்பு → இணாப்பு.]*

**இணாப்பு[2]** *iṇāppu,* பெ. (n.) ***ஏய்ப்பு*** (யாழ்.); deceit, cheating, fraud, guile. (செ.அக.).

*[இணை → இணைப்பு → இணாப்பு. ஏய்த்தலாவது பொருந்தச் சொல்லி ஏமாற்றுதல், (வே.க.25).]*

**இணலாடு-தல்** *iṇalāḍu-,* 5 செ.கு.வி. (v.i.) ***புணர்தல்;*** to copulate as snakes do. "பாம்பு இணலாடுகிறது" (கொங்.வ.).

*[இணல் + ஆடு.]*

**இணி** *iṇi,* பெ. (n.) 1. ***எல்லை;*** boundary. 2. ***தளை;*** fetter. 3. ***ஏணி;*** ladder. 4. ***அணி*** (ஆ.அக.); ornament.

*[இள் → இளி → இணி.]*

**இணிக்கு-தல்** *iṇikku,* 12 செ.குன்றாவி. (v.t.) 1. ***மறைவாக நின்று பார்த்தல்;*** to peep furtively (கருநா.). 2. ***காட்டிக் கொடுத்தல்;*** to betray.

**க.** இணிக்கு, இணக்கு.

*[இள் - இனி - இணி - இணிக்கு.]*

**இணுக்கு[1]-தல்** *iṇukku-,* 6 செ.குன்றாவி. (v.t.) ***இணுங்கு*** பார்க்க; see *iṇuṅku.* 'இலைகளை இணுக்கிக் கொண்டு வந்தான்' (செ.அக.).

*[இல் - இள் - இண் - இணுக்கு.]*

**இணுக்கு[2]** *iṇukku,* பெ. (n.) 1. ***கைப்பிடியளவு;*** little quantity, as a handful of leaves from a plant. 2. ***இலைக் கொத்து;*** stalk with leaves. "ஒரு கருவேப்பிலையிணுக்குப் போதும்". 3. ***வளார்;*** twig, forming part of foliage. 4. ***கிளை முதலியவைகளின் இடைச்சந்து*** (வின்.); fork or joining of a twig, its branch. (செ.அக.).

**ம.** இணுக்கு; **க.** இண்டெ; **தெ.** இண்டெ.

*[இணுகு - இணுங்கு - இணுக்கு. இல் - இள் - இணு - இணுக்கு.]*

**இணுக்கு[3]** *iṇukku,* பெ. (n.) ***அழுக்கு, கறை*** (அக.நி.); dirt, stain. (செ.அக.).

*[இழுக்கு - இணுக்கு.]*

**இணுங்கு-தல்** *iṇuṅgu-,* 5 செ.குன்றாவி (v.t.) ***பறித்தல்*** (சீவக.124,உரை); pull off, as a leaf from a twig; pluck, as a flower from a tree. (செ.அக.).

*[இணுக்கு - இணுங்கு.]*

**இணை[1]-தல்** *iṇai-,* 2 செ.கு.வி. (v.i.) 1. ***சேர்தல்;*** to join, unite. "இணைந்துடன் வருவ திணைக்கை" (சிலப்.3,18,உரை). 2. ***இசைதல்;*** to agree, acquiesce; to be suited. 3. ***ஒத்தல்*** (தனிகைப்பு.நாட்டு.53); to be like, to resemble. (செ.அக.). 4. ***கூடுதல்;*** to couple.

**ம.** இணயுக; **க.** எணெ, எண; **தெ.** எனயின்சு; **குட.** எணெ; **து.** இனெ, இணெ.

*[இயை - இசை - இண - இணைதல். இள் - இள - இண - இணை.]*

**இணை[2]-த்தல்** *iṇai,* 4. செ.குன்றாவி. (v.t) 1. ***கட்டுதல்;*** to fasten together, entwine, as a garland. "இணைத்த கோதை" (திருமுருகு.200). (செ.அக.). 2. ***சேர்த்தல்;*** to link, inter-connect, unite. 3. ***உவமித்தல்;*** to compare. (ஆ.அக.).

**ம.** இணய்க்குக.

*[இயை - இசை - இணை - இணைத்தல்.]*

**இணை[3]** *iṇai,* பெ. (n.) 1. ***இசைவு;*** union, conjunction. 2. ***ஒப்பு;*** likeness, similitude, resemblance, analogy. "இணைகடி சீய மன்னான்" (சீவக.1721). 3. ***இரட்டை;*** two things of a kind, pair, couple, brace. "குறிலே நெடிலே குறிலிணை ஏனைக் குறில்நெடிலே" (யா.கா.உறுப்.5). 4. ***உதவி*** (சூடா.); aid, help, support. 5. ***பின்னல்*** (சூடா.); woman's locks. 6. ***எல்லை;*** limit, boundary. "இணையிலின்ப முடையோய் நீ" (சீவக.1243). 7. ***இணைத்தொடை*** (யா.கா..உறுப்.19) பார்க்க; see iṇaittoḍai (செ.அக.). 8. ***கண்ணிணை*** (ஆ.அக.); eyes. 9. ***தோழன்*** (ஆ.அக.); friend, companion.

**ம.** இண; **க.** இண்டெ; **தெ.** இண்ட.

*[உள் - இள் - இழை - இணை. ஒ.நோ. தழல் - தணல் (மு.தா.19).]*

**இணை அணை சேக்கை** *iṇai-aṇai-sēkkai* பெ. (n.) ***அணைந்த படுக்கை*** (நெடுநல்.133); twin bed.

*[இணை + அணை + சேக்கை.]*

**இணையீர் ஓதி** *iṇai-y-īr-ōdi,* பெ. (n.) ***கூடையொத்த நெய்ப்பினையுடைய மயிர்*** (திருமுருகு.20); tressed hair.

*[இணை + ஈர் + ஓதி. இரு - ஈர்.]*

**இணைக்கயல்** *iṇai-k-kayal,* பெ. (n.) 1. ***எண்மங்கலங்களுளொன்று*** (திவா.); brace of carp, in gold or silver, an auspicious object carried before kings or other great personages, one of aṭṭa-maṅgalam. 2. ***மீனவரி*** (மச்சரேகை); two lines on the palm of hand resembling a fish, and considered to augur prosperity. "மதிமருண்டா னிணைக்கயற் கையான்" (பாரத. கீசகன்.3) (செ.அக.).

*[இணை + கயல்.]*

**இணைக் கருப்பம்** *iṇai-k-karuppam,* பெ. (n.) ***இரட்டைப் பிள்ளை;*** two children born at the same birth, twins. (சா.அக.).

*[இணை கருப்பம்.]*

**இணைக்கல்லை** *iṇaik-k-kallai,* பெ. (n.) ***இரண்டிலைகளால் தைக்கப்பட்ட கலம்*** (தொன்னை) (பெரியபு.கண்ணப்ப.118) (செ.அக.); cup shaped out of folded leaves.

*[இணை + கல்லை. இணை = இரண்டு.]*

**இணைக்குறளாசிரியப்பா** *iṇai-k-kuṟaḷ-āciriya-p-pā,* பெ. (n.) ***ஈற்றடியும் முதலடியும் அளவடியாக, இடையடிகள்பல குறளடியானும் சிந்தடியானும் வரும் அகவல்*** (யா.கா.செய்.8,உரை); variety of agaval verse where two or more lines contain lesser number of feet than the standard four. (செ.அக.).

*[இணை + குறள் + ஆசிரியம் + பா.]*

**இணைக்கை** *iṇai-k-kai,* பெ. (n.) ***இரண்டு கைகளாற் புரியும் 15 வகை செய்கைக்குறிகள்*** (அபிநயம்) (சிலப்.3,18,உரை); gesture involving the use of both the hands in one of 15 different attitudes, in dancing posture. அஞ்சலி, புட்பாஞ்சலி, பதுமாஞ்சலி, கபோதம், கர்க்கடகம், சுவத்திகம், கடகாவருத்தம் , நிடதம், தோரம், உற்சங்கம், புட்படம், மகரம், சயந்தம், அபயவத்தம், வருத்தமானம் and dist. fr. iṇaiyā-viṉai-k-kai. (செ.அக.).

*[இணை + கை.]*

**இணைக்கொடைப்பொருள்** *iṇai-k-koḍai-p-poruḷ,* பெ. (n.) ***திருவிழா முதலிய நல்ல காலங்களில் மணமக்களுக்கு உற்றார் முதலியோர் கொடுக்கும் பொருள்*** (சங்.அக.); gifts made to a married couple on auspicious and festive occasions by relatives and others. (செ.அக.).

*[இணை + கொடை + பொருள்.]*

**இணைக்கோணம்** *iṇai-k-kōṇam,* பெ. (n.) ***மூக்கிரட்டைச் செடி*** (இராசவைத்.40); pointed-leaved hogweed. (செ.அக.).

*[இணை + கோணம்.]*

**இணைத்தொடை** *iṇai-t-toḍai,* பெ. (n.) ***அளவடியுள் முதலிருசீர்க்கண்ணும் மோனை முதலாயின வரத் தொடுப்பது*** (இலக்.வி.723,உரை); concatenation in which there is metrical assonance or alliteration as between the first two feet of a line of four feet. (செ.அக.).

*[இணை + தொடை.]*

**இணைதல்** *iṇaidal,* பெ. (n.) 1. ***சேர்தல்;*** uniting. 2. ***விலங்குகளின் புணர்ச்சி;*** having sexual connection said of animals. (சா.அக.).

க. எணெ (இரட்டை; சேர்தல்).

*[இல் - இன் - இணை.]*

**இணைதாரை** *iṇaidārai,* பெ. (n.) ***விந்துவை விந்துக் குழியிலிருந்து வெளித்தள்ளும் நாடிக்குழல் தாரை;*** canal conveying the semen to the urethra - ejaculatory duct. (சா.அக.).

*[இணை + தாரை.]*

**இணைப்படைத்தானை** *iṇai-p-paḍai-t-tāṉai,* பெ. (n.) ***துணைப்படைச்சேனை;*** army with allies. "இணைப்படைத் தானை யரசோடுறினும்" (கலித்.15-3).

*[இணை + படை + தானை.]*

**இணைப்பாம்பு** *iṇai-p-pāmbu,* பெ. (n.) 1. ***சாரைப் பாம்பு;*** male-cobra. 2. ***பிணையும் பாம்பு;*** snake sexually uniting with another snake.

*[இணை + பாம்பு.]*

**இணைப்பிணையல்** *iṇai-p-piṇaiyal,* பெ. (n.) ***இணை மாலை*** (பரிபா.2-53); pair of garlands.

*[இணை + பிணையல்.]*

**இணைப்பிரியன்** *iṇai-p-piriyaṉ,* பெ. (n.) ***ஒரு வகைப் பாம்பு;*** a kind of snake. (சா.அக.).

*[இணை + பிரியன்.]*

**இணைப்பிரியாமை** *iṇaippiriyāmai,* பெ. (n.) ***ஆணும் பெண்ணும் துணைபிரியா திருத்தல்;*** indivisibility of couple.

*[இணை + பிரியாமை (வே.க.25).]*

**இணைப்பு** *iṇaippu,* பெ. (n.) 1. ***இசைப்பு;*** union, connection, coupling. 2. ***ஒப்பு;*** equality, similarity. "இணைப்பரும் பெருமையீ சன் காண்க" (திருவாச. 3,46). (செ.அக.).

க. எணவளிகெ, ஏணவளிகெ.

*[இணை → இணைப்பு.]*

**இணைப்புறு பிணையல்** *iṇaippuṟu piṇaiyal,* பெ. (n.) ***கட்டுதலுறுகின்ற மாலை*** (திருமுருகு.30); twinned garlands.

*[இணைப்பு + உறு + பிணையல்.]*

**இணைபிரியாமை** *iṇai-piriyāmai,* பெ. (n.) ***விட்டுப் பிரியாதிருக்கை;*** inseparability of pair, impartibility of affinity, fastness of friendship,

*[இணை + பிரியாமை.]*

**இணைமட்டப்பலகை** *iṇai-maṭṭa-p-palagai* பெ. (n.) ***இரட்டைக்கோடு காட்டுங் கருவி*** (C.E.M.); parallel ruler; indicator of parallelism. (செ.அக.).

*(இணை + மட்டம் + பலகை.]*

**இணை மடியூசி** *iṇai-maḍi-ūci,* பெ. (n.) ***தாள்களை இணைக்கச் செய்யும் கம்பி;*** wire, or pin, to fasten the papers with stapler-pin.

*[இணை + மடி + ஊசி.]*

**இணை மடியூசிக்கருவி** *iṇai-maḍi-ūci-k-karuvi,* பெ. (n.) ***தாள்களை இணைக்கச் செய்யும் கம்பியை மடிக்க உதவும் கருவி;*** stapling-machine, a machine that stitches paper with wire.

*[இணை + மடி + ஊசி + கருவி.]*

**இணைமணிமாலை** *iṇai-maṇi-mālai,* பெ. (n.) ***சிற்றிலக்கிய வகை*** (இலக்.வி.818); அந்தாதியில் அமைந்திருக்கும் 100 பாடல்களைக் கொண்டது. பாடல்கள் இரண்டு இரண்டாக இருக்கும். பாடல்கள் வெண்பா, அகவல் அல்லது வெண்பா, கட்டளைக்கலித்துறையில் அமைந்திருக்கும்; literary work of 100 stanzas in andadi form, consisting of alternative pairs of either veṇpa and akaval or veṇpa and kaṭṭalai-k-kalitturai. (செ.அக.).

*[இணை + மணி + மாலை.]*

**இணைமுரண்** *iṇai-muraṇ,* பெ. (n.) ***ஓரடியின் முதலிரு சீரும் முரண்பட இணைந்து வருந் தொடை*** (யா.கா.உறு்ப்.16,உரை); anti-thesis in the first two feet of a line in a verse (செ.அக.).

*[இணை + முரண்.]*

**இணைமுரண்தொடை** *iṇai-muraṇ-toḍai,* பெ. (n.) ***இணை முரண்*** பார்க்க; see *iṇaimuraṇ* (ஆ.அக.).

*[இணை + முரண் + தொடை.]*

**இணைமோனை** *iṇai-mōṇai,* பெ. (n.) ***ஓரடியின் முதலிருசீரினும் மோனை இயைந்து வருந் தொடை*** (யா.கா.உறுப்.16,உரை); alliteration in the first two feet of a line of verse. (செ.அக.).

*[இணை + மோனை.]*

**இணைமோனைத்தொடை** *iṇaimōṇai-t-toḍai,* பெ. (n.) ***இணைமோனை***பார்க்க; see *iṇaimōṇai.* (ஆ.அக.).

*[இணை + மோனை + தொடை.]*

**இணையசை** *iṇai-yašai,* பெ. (n.) ***நிரையசை*** (ஆ.அக.); (prosodical) two matching phonemes making up a syllable.

*[இணை + அசை.]*

**இணையடி**[1] *iṇaiyaḍi,* பெ. (n.) ***அணிவகைகளு ளொன்று. அஃது இருசீரொன்றாய் வருதல்.*** (ஆ.அக.); metrical formulation of identical feet in adjacent lines as a figure of speech.

*[இணை + அடி.]*

**இணையடி**[2]**-த்தல்** *iṇai-y-aḍi-,* 4 செ.கு.வி. (v.i.) ***முட்டுக்கால் தட்டுதல்*** (இ.வ.); knock-knee. (செ.அக.).

*[இணை + அடித்தல்.]*

**இணையடிகால்** *iṇai-y-aḍi-kāl,* பெ. (n.) ***மாட்டுக் குற்றவகை*** (பெரியமாட்.18); defect in cattle. (செ.அக.).

*[இணை + அடி + கால்.]*

**இணையணை** *iṇai-y-aṇai,* பெ. (n.) ***பலவணை;*** mattresses spread one over another for comfort. "இணையணை மேம்படத் திருந்து துயில்" (சிலப்.4:67). (வே.க.25).

*[இணை + அணை.]*

**இணையளபெடை** *iṇai-y-aḷabeḍai,* பெ. (n.) ***முதலிரு சீரினும் அளபெடை வருந் தொடை;*** (யா.கா. உறுப்.16,உரை); variety of rhyme in which the first two feet of a line in a stanza have protracted vowel-sounds. (செ.அக.).

*[இணை + அளபெடை.]*

**இணையாமார்பன்** *iṇai-yā-mārbaṉ,* பெ. (n.) ***கம்பர் சோழ நாட்டை வெறுத்துப் பாண்டிய நாட்டிலிருந்த போது அவரை அழைத்துவரப் பாண்டியன் அவைக் குச் சென்றவர்*** (அபி.சிந்.); messenger sent by Chola king to bring the great poet Kamban from the Pandiyan court.

*[இணையா + மார்பன்.]*

**இணையாவினைக்கை** *iṇaiyā-viṉai-k-kai,* பெ. (n.) ***ஒரே கையால் புரியும் 33 வகை சைகை*** (அபிநயம்) (சிலப்.3,18,உரை); gesture with one hand, of which 33 varieties are mentioned in dancing treatise. (செ.அக.).

*[இணையா + வினைக்கை. அவையாவன: பதாகை, திரிபதாகை, கத்தரிகை, தூபம், அராளம், இளம்பிறை, சுகதுண்டம், முட்டி, கடகம், சூசி, கமல கோசிகம், காங்கூலம், கபித்தம், விற்பிடி, குடங்கை, அலாபத்திரம், பிரமரம், தாம்பிர சூடம், பிசாசம், முகுளம், பிண்டி, தெரிநிலை, மெய்ந்நிலை, உன்னம், மண்டலம், சதுரம், மான்றலை, சங்கு, வண்டு, இலதை, கபோதம், மகரமுகம், வலம்புரி.]*

**இணையாளி** *iṇaiyāḷi,* பெ. (n.) ***கூட்டுக்காரன்;*** companion. (சேரநா.).

ம. இணயாளி.

*[இணை + ஆள் + இ.]*

**இணையியைபு** *inai-y-iyaibu,* பெ. (n.) ***ஓரடியின் ஈற்றுச் சீரிரண்டும் இணைந்து வருந் தொடை*** (யா.கா.உறுப்.16,உரை). (செ.அக.); rhyming of the last two feet.

*[இணை + இயைபு.]*

**இணையுதி** *inaiyudi,* பெ. (n.) ***உடம்பினில் தசையி ழைகளைப் பொருத்தும் பொருள்;*** tissue which binds together the various structures of the body - connective tissue. (சா.அக.).

*[இணை + உதி. உத்து - உது - உதி. உத்துதல் = பொருத்துதல்.]*

**இணையுப்பு** *inai-y-uppu,* பெ. (n.) ***இரண்டு வகை உப்பு சேர்ந்த கரைசல்;*** solution composed of two salts. (சா.அக.).

*[இணை + உப்பு.]*

**இணையெதுகை** *inai-y-edugai,* பெ. (n.) ***ஓரடியின் முதலிரு சீரினும் எதுகையியைந்து வருந் தொடை*** (யா.கா.உறுப்.16,உரை.); form of rhyme in which the first two feet of a line of verse rhyme with each other. (செ.அக.).

*[இணை + எதுகை.]*

**இணையேருண்கண்** *inaiyērunkan,* பெ. (n.) ***எழில் மிகு இருகண்கள்*** (ஐங்குறு.378); beautiful eyes.

*[இணை + ஏர் + உண்கண்.]*

**இணைவன்** *inaivan,* பெ. (n.) ***இணைந்திருப்பவன்;*** one who is closely related to or intimately associated with companion "இணைவனா மெப்பொருட்கும்" (திவ். திருவாய்.2,8,1). (செ.அக.).

*[இணை → இணைவன்.]*

**இணைவிழைச்சு** *inai-vilaiccu* பெ. (n.) ***புணர்ச்சி;*** sexual copulation. "இணைவிழைச்சு தீதென்ப" (இறை.1, உரை, பக்.9). (செ.அக.).

*[இணை + விழைச்சு.]*

**இணைவு** *inaivu,* பெ. (n.) 1. ***ஒன்றிப்பு;*** junction. 2. ***கலப்பு;*** merger. 3. ***சேர்மானம்;*** addition. 4. ***புணர்ச்சி*** (ஆ.அக.); copulation.

*[இணை - இணைவு.]*

**இத்தம்** *ittam,* பெ. (n.) ***புளி*** (சங்.அக.); tamarind. (செ.அக.).

*[இந்தம் - இத்தம்.]*

**இத்தனை** *i-t-tanai,* கு.வி.எ. (adj.). 1. ***இவ்வளவு;*** so much, this much. "இத்தனை காலமும் போய்க்கிறிப் பட்டேன்" (திவ்.பெரியாழ்.5,3,8). 2. ***சில;*** few. "இத் தனை நாளிலுயர்த்துகையே" (திருநூற்.85) (செ.அக.).

**ம.** இத்தின, இத்தினி; **க.** இனிது, இனித்து, இந்துடு, ஈசு; **து.** ஈது; பட. ஈசக.

*[இத்துணை - இத்தனை.]*

**இத்தால்** *ittāl,* கு.வி.எ. (adv.) ***இதனால்;*** hereby, by this means. "தான் வந்து தொடரு மித்தால்" (தாயு. ஆகார.15). (செ.அக.).

**க.** இத்தலு (இவ்வகையில்); *Skt.* ittham (thus, in this manner).

*[இது + ஆல் - இத்தால்.]*

**இத்தி**[1] *itti,* பெ. (n.) 1. ***கல்லால்*** (திருவாச.4,162); white fig. 2. ***கல்லிச்சி*** (L.); stone-fig. 3. ***கல்லித்தி*** (L.); tailed oval-leaved fig. (செ.அக.).

**ம.** இத்தி; **குட.** இத்தி.

*[இல் - இத்தி. வன்னிலத்திலும் கல்லிலும் வேரூன்றி வளரும் மரம். இல் = குத்துதல், துளைத்தல்.]*

**இத்தி**[2] *itti,* பெ. (n.) 1. ***பூனை*** (அக.நி.); cat. (செ.அக.). 2. ***வெண்மை;*** whiteness.

**ம.** இத்தி.

*[இல் - இது - இத்து - இத்தி. இல் = மென்மை, இளமை, பிள்ளை.]*

**இத்திநடையம்** *itti-nadaiyam,* பெ. (n.) ***நத்தை*** (வின்.); snail. (செ.அக.).

*[இல் - இது - இத்து - இத்தி = மென்மை. நடையம் = மெதுவாக நடத்தல்.]*

**இத்தியால்** *ittiyāl,* பெ. (n.) ***கல்லால்;*** white fig. (சா.அக.).

*[இத்தி + ஆல். இத்தி = வெண்மை.]*

**இத்து**[1] *ittu,* பெ. (n.) 1. ***ஒருவகைப்புல்*** (காமாட்சிப்புல்) (மலை.); citronella. (செ.அக.). 2. ***காவட்டம்புல்*** (ஆ.அக.); a kind of grass.

*[இல் - இது - இத்து.]*

**இத்து**[2] *ittu,* பெ. (n.) ***அண்மைச்சுட்டு;*** indicative of nearness or proximity.

*[இல் - இஃது - இத்து (மு.தா.323).]*

**இத்துணை** *i-t-tunai,* கு.வி.எ. (adv.) ***இவ்வளவு;*** this much, so much. "நங்களுக் கித்துணை யலக்கண்வந் தெய்திற்று" (கந்தபு.சூரனமை.98). (செ.அக.).

**தெ.** இன்னி, இனி; **ம.** இதர; **க.** இனிது, இனித்து, ஈசு; **துட.** இந்க்; **குட.** இச்செ; **கொலா.** இத்தெ; **நா.** இத்தெக்; **பர்.** இத்னி; **கோண்.** இச்சோர்; **கூ.** இசெ; **குவி.** இசெக; **குர்.** இயுந்தா, இயுரா; **மால்.** இனொந்த; **பிரா.** தாக; **பட.** ஈசக.

*[இ + துணை.]*

**இத்தை**[1] *ittai,* இடை. (part.) ***முன்னிலையசைச் சொல்;*** poet. expletive to indicate imperative of verbs."நீயொன்று பாடித்தை" (நன்.440, உரை). (செ.அக.).

*[ஈ - ஈத்தை - இத்தை.]*

**இத்தை**[2] *ittai,* பெ. (n.) ***இதனை*** (கொ.வ.); this, in the accusative case (செ.அக.).

*[இது + ஐ - இத்தை.]*

**இதக்கை** *idakkai,* பெ. (n.) ***பனங்காயின் தலையி லுள்ள தோடு*** (அகநா.365); integument on the top of a palmyra fruit. (செ.அக.).

*[உது - இது - இதண் - இதக்கை. உது = மேல். இதக்கை = மேலிருப்பது.]*

**இதஞ்சொல்(லு)-தல்** *idañ-col-,* 13 செ.கு.வி. (v.i.) 1. ***புத்தி கூறுதல்;*** to give salutary advice or wholesome counsel. (செ.அக.). 2. ***ஆறுதல் மொழிதல்;*** to console.

*[இதம் + சொல்லுதல்.]*

**இதடக்கு** *idaḍakku,* பெ. (n.) ***அணியுறுப்பு வகை;*** part in jewels. (செ.அக.).

*[இதழ் + அடக்கு.]*

**இதடி**[1] *idaḍi,* பெ. (n.) ***பெண்ணெருமை;*** she-buffalo. "இதடி கரையும்" (திணைமாலை.83) (செ.அக.).

*[இருளை - இதளை - இதளி - இதடி.]*

விரவுப்பெயர்கள் மக்களுக்கும் வளர்ப்பு விலங்குகளுக்கும் பொதுவாய் வருதலின் பெண்ணைக் குறித்த இருளை வடிவு திரிந்து பெண்ணெருமையைக் குறித்தது.

**இதடி**[2] *idaḍi,* பெ. (n.) ***நீர்*** (பிங்.); water. (செ.அக.).

*[இல் - இது - இதள் - இதடி = மண்ணைக் குடைந்து செல்லும் நீர்.]*

**இதண்** *idaṇ,* பெ. (n.) 1. ***காவற்பரண்*** (திணைமாலை.2.); high shed put up temporarily with a platform from which to watch a field. (செ.அக.). 2. ***பரண்;*** loft. (ஆ.அக.).

*[உது - இது - இதண் = உயரமானது.]*

**இதணம்** *idaṇam,* பெ. (n.) ***இதண்*** (குறிஞ்சிப்.41) பார்க்க; see *idaṇ* (செ.அக.).

*[உது - இது - இதண் (உயரம்) இதண் + அம் - இதணம்.]*

**இதம்**[1] *idam,* பெ. (n.) 1. ***இன்பமானது;*** consensus comfort, agreeability. "இதந்தரு மடந்தை" (திருவாத.பு. கடவுள்வா.1). 2. ***நன்மை;*** sage counsel, wholesome words. "நேச ரிதங் கூற நிலவலயந் தாங்குநளன்" (நள.காப்பு.). (செ.அக.).

ம. இதம்; தெ. இதமு.

*[இல் - இது - இதம். இல் - இளமை, மென்மை, இனிமை. இதம் > skt hida.]*

**இதம்**[2] *idam,* பெ. (n.) ***அறிவு*** (நாநார்த்த.); knowledge, wisdom. (செ.அக.).

*[இல் - இதம். இல் - இளமை, மென்மை, தெளிவு, அறிவு. இதம் > Skt. hida.]*

**இதம்**[3] *idam,* பெ. (n.) ***இதயம்;*** heart. "இதஞ்சலிப் பெய்தநின் றேங்கின ரேங்கவும்" (திருவாச.2,139) (செ.அக.).

**க.** எதெ.

*[இல் - இத்து - இது - இதம். (ஒ.நோ. மது - மதம்) இல் = குத்தல், துளைத்தல். இதம் = உட்டுளையுள்ளது, உட்குழிவானது. ஒ.நோ. இல்லிக்குடம் = ஓட்டைக்குடம். குல் - குத்து - குதம். குல் - குந்து (புட்டம் தரையில் ஊன்ற உட்கார்) இதம் > Skt. hridaya. ஒ.நோ. மெது > Skt. mṛdu.]*

**இதம்பண்ணல்** *idam-paṇṇal,* தொ.பெ. (vbl.n.) ***இன்பஞ்செய்யல்;*** give pleasure, gratify.

*[இதன் + பண்ணு + அல்.]*

**இதமல்லிதம்** *idamallidam,* பெ. (n.) ***நன்மை தீமை;*** good and evil.

*[இதம் + அல் + இதம்.]*

**இதமாகச் செய்-தல்** *idamāga-c-cey,* 1 செ.கு.வி. (v.i.) ***உடம்பிற்கொத்துக் கொள்ளும்படிச் செய்தல்;*** make or render anything suitable or agreeable to the constitution. (சா.அக.).

*[இதம் + ஆக + செய்.]*

**இதமி-த்தல்** *idami-,* 4 செ.கு.வி. (v.i.) 1. ***பற்றுச்செய்தல்;*** to be attached. "இதமித்தல் பாசத்திலின்றி" (சி.போ.10,2,5) (செ.அக.). 2. ***ஒன்றித்தல்*** (ஆ.அக.); unite.

*Skt.* hita.

*[இதைத்தல் = இணைத்தல், கெட்டிப்படுத்துதல், ஒன்றிணைத்தல். இதை - இதம் - இதமித்தல்.]*

**இதமிப்பு** *idamippu,* பெ. (n.) ***ஒன்றிப்பு*** (ஆ.அக.); union.

*[இதம் - இதமிப்பு.]*

**இதமியம்** *idamiyam,* பெ. (n.) 1. ***இதப்படுதல்;*** gratification. 2. ***இனிமை;*** pleasure.

*[இதம் + இயம்.]*

**இதயம்** *idayam,* பெ. (n.) 1. ***இதயப் பை;*** heart. "கருதுவாரிதயத்து" (தேவா.619,1). 2. ***மார்பு;*** chest. "இதயமென்மயி ரணிந்திடில்" (காசிக.மகளிர்.23). 3. ***மனம்;*** mind. (செ.அக.).

மறுவ. கருள், இதம், மாங்காய், தாமரைக்காய், குண்டிக்காய்; **க.** எதெ, எழ்தெ, எர்தெ; **தெ.** எத; **து.** எதெ; **பர்.** எத்ரம், எத்ரொம். *Skt.* hṛdaya.

*[இல் - இத்து - இது - இதம்[3] > வ. ஹிர்தய - த. இதயம்.]*

இதயம் இருக்கும் இடமாகிய மேற்புறத்து மார்பும் மனமும் வழிநிலைப்பொருள்களாகும். இது வடசொற்றிரிபாகும். *இதம்[3] பார்க்க; see idam[3]*

**இதய மாற்றொட்டு** *idaya-māṟṟoṭṭu,* பெ. (n.) ***மாற்றிதய அறுவை மருத்துவம்;*** heart transplantation.

*[இதயம் + மாற்று + ஒட்டு.]*

**இதயாரி நோய்** *idayāri-nōy,* பெ. (n.) ***இதயத்தின் நாளச்சுவரில் ஏற்படும் வலி;*** valvular disease of the heart. (சா.அக.).

*[இதயம் + ஆர் + இ + நோய்.]*

**இதர்-தல்** *idar-,* 6 செ.குன்றாவி (v.t.) ***பிரித்தல்;*** to divide.

*[இதல் → இதர்.]*

**இதரக்கூடு மருந்து** *idara-k-kūḍu marundu,* பெ. (n.) ***இதளியம் சேர்ந்த மருந்து;*** any medicine containing mercury as the chief ingredient - mercurial compound. (சா.அக.).

*[இதள் - இதளம் - இதரம் + கூடு + மருந்து.]*

**இதரம்**[1] *idaram,* பெ. (n.) 1. ***வேறு;*** another, the other. 2. ***பகை;*** hostility, enmity. "இதரங் கடந்தா னுதிட்டிரன்" (பாரத.துருவாச.12). (செ.அக.).

*Skt. itara.*

*[இது = பின்னுள்ளது. இது - இதுர் - இதிர் - இதிரம் - இதரம்.]*

**இதரம்**[2] *idaram,* பெ. (n.) ***கீழ்மை*** (நாநார்த்த.); baseness. (செ.அக.).

*Skt* itara.

*[இது = பின்னுள்ளது, கீழுள்ளது, கீழ்மை. இது - இதுர் - இதிர் - இதிரம்.]*

**இதரமதம்** *idaramadam,* பெ. (n.) ***புறச்சமயம்;*** alien religion. (ஆ.அக.).

*[இதரம் + மதம்.]*

**இதரமருந்து** *idara-marundu,* பெ. (n.) ***இதளியத்திலிருந்து செய்த மருந்து;*** any preparation of mercury. (சா.அக.).

*[இதளமருந்து → இதரமருந்து.]*

**இதரயிட்டம்பனை** *idarayiṭṭam-paṉai,* பெ. (n.) ***பிற பனை*** பார்க்க; see *pira paṉai* வருவாய்த் துறையில் வருவாய்க்காகப் பிரித்து வைத்துள்ள பருவப்பனை, காய்ப்பனை, காட்டுப்பனை, ஓலைவெட்டுப்பனை, வடலி என்னும் ஐந்துவகைப் பனைகள். (நெல்லை.); other items of palmyra trees; classification, for revenue purposes, of palmyras. (TN.D.G.i.307) (செ.அக.).

*Skt.* itara.

*[இதரம் + அயிட்டம் (E.item) + பனை.]*

**இதரர்** *idarar,* பெ. (n.) 1. ***வேற்றவர்;*** strangers, foreigners. 2. ***கீழ்மக்கள்;*** inferiors, persons of no worth or character.(W.).

*[இது - இதுர் - இதுரர் - இதரர்.]*

**இதரல்** *idaral,* பெ. (n.) ***பிரித்தல்;*** dividing.

**இதரன்**[1] *idaraṉ,* பெ. (n.) 1. ***எளியவன், பாமரன்*** (நாநார்த்த.); ignorant person, simpleton. 2. ***கீழ்மகன்*** (அக.நி.); mean person. (செ.அக.).

*[இது → இதரன். இது - கீழ் நோக்கிய சுட்டு. தாழ்வு = தாழ்ந்த இடம்; தாழ்ந்தோர் எனப் பொருள் தந்து ஆகுபெயராயிற்று. ஒ.நோ. உது → உதரம். உடம்பின் நடுவிலுள்ள வயிற்றைக் குறித்தது. அது → அதரம். அதுத்தல் = பருத்தல்; சற்றே பருத்த இதழைக் குறித்தது.]*

**இதரன்**[2] *idaraṉ,* பெ. (n.) 1. ***அற்பன்;*** a low man. 2. ***பிறன், அன்னியன்;*** alien, other man, man of another group. "இதரர்க்கு மாதர்க் காகா" (விருத்தாசல.சிவபூ. 34; சங்.அக.).

*[இல் = பிளத்தல், இரண்டாக்கல்; இல் → இது → இதலுதல். இதரல் = பிரித்தல். ஒ.நோ.மெல். - மெது. இதல் → இதலன் → இதரன். இதரர் என்னும் சொல்லை வடமொழி தமிழினின்று கடன் பெற்றுள்ளது. இதரர் > Skt itara.]*

**இதல்-தல்** *idal-,* 8 செ.குன்றாவி. (v.t.) ***பிரித்தல்;*** to divide.

*[இல் - இது - இதல். தாயிடமிருந்து குழந்தையைப் பிரிக்கும் தொப்பூழ்க் கொடி இதலை எனப்படுதலை நோக்குக.]*

**இதல்** *idal,* பெ. (n.) ***காட்டுக்கோழியைப்போல உருவுடையதும் கவுதாரியின் அளவுடையதுமான ஒரு பறவை;*** the red spur fowl. "புதன்மிசைத் தளவி னிதன்முட் செந்நனை" (அகநா.23.3.).



இதல்

மறுவ. சருகுக்கோழி, வரகுக்கோழி, மணிக்கண், முள்ளன் கோழி, சுண்டால் கோழி.

*[இல் → இது → இதல். இல் = முள். காலின்புறத்தே முள்ளுடைமையின் பெற்றபெயர். இது கவுதாரியின் வேறுபட்டது. பல வண்ணங்கள் கொண்ட இதன் மற்றொருவகை, கல்கோழி எனப்பட்டது.]*

**இதலதம்** *idaladam,* பெ. (n.) ***காரீயம்*** (சா.அக.); black lead.

*[இது → இதுலம் → இதுலதம் → இதலதம். இது → இதுலம் = தாழ்வானது. தரத்தில் குறைந்தது.]*

**இதலை** *idalai,* பெ. (n.) ***கொப்பூழ்*** (திவா.); navel, umbilicus. (செ.அக.).

*[இல் → இது → இதல் → இதலை = தாயிடமிருந்து குழந்தை

கொப்பூழ்க்கொடி அறுப்பதன் மூலம் பிரிக்கப்படுதல்; பிரிக்கப் படுதற்கான கொப்பூழ்.]

**இதவிய** *idaviya,* கு.பெ.எ. (adj.) 1. ***நன்மையான;*** pleasant, agreeable, good. "இதவிய புல்லு மிட்டேம்" (திருவாலவா.29,6.). 2. ***பொருத்தமுள்ள;*** suitable.

ம. இதவிய.

*[இல் → இளமை = குறுமை, நன்மை. இல் → இது → இதம் → இதவிய.]*

**இதவு** *idavu,* பெ. (n.) 1. ***இதம்;*** pleasant, agreeable manners. "இதவார் குலசேகரன்" (அழகர்கலம்.காப் பு.3). 2. ***முகமன்;*** praise, flattery. (செ.அக.).

ம. இதவு.

*[இல் - இது - இத - இதவு. ஒ.நோ. மெல் → மெது.]*

**இதழ்**[1] *idal,* பெ. (n.) 1. ***பூவின் தோடு;*** petal, leaf of the corolla. "புல்லிதழ் பூவிற்கு முண்டு" (நாலடி. 221.). 2. ***உதடு;*** lip. "மீகீழிதழுறப் பம்மப் பிறக்கும்" (நன்.81). 3. ***கண்ணிமை;*** eyelid. "நீரெறி மலரிற் சாஅயிதழ் சோரா" (குறிஞ்சிப்.247). 4. ***பனையேடு*** (திவா.); palmyra leaf, palm leaf. 5. ***மாலை;*** garland. "சோர்ந்தவி ழிதழின்" (பரிபா.17,27). 6. ***பாளை*** (அக.நி.); coconut flower being the spadix of the coconut palm. 7. ***சாதிபத்திரி*** (மூ.அ.); mace. 8. ***கதவின் இலை*** (வின்.); thin slat in a venetian blind. 9. ***பொத்தகத்தின் தாள்;*** leaf of a book."இதழ் கிழிக்காத புதுப்புத்தகம்." (செ.அக.).

ம. இதழ்; க. எசள்; து. எசள், எசளு.

*[உதடு → (உதழ்) → இதழ்; உதடு போன்ற பூவிதழ்; இல் → இளமை, குறுமை, நன்மை, மென்மை. இல் → இது → இதழ் = மெல்லிய பூவின் பகுதி.]*

**இதழ்**[2] *idal,* பெ. (n.) ***ஓரிதழ்த் தாமரை*** (வை.மூ.); pasture weed.

*இதழ்*[1] பார்க்க; see *idal.*[1]

**இதழ்**[3] *idal,* பெ. (n.) ***காலவரம்புக் குட்பட்டு வெளியி டப்படும் பருவ இதழ், தாளிகை*** (பத்திரிகை); periodical.

*[பூவின் இதழ் போன்று புத்தம் புதியதாய்ப் பொலியும் பொத்தக வடிவிலான ஏடுகள், கிழமையிதழ், மாத இதழ் எனப் பல் வகைப் பருவ இதழ்கள் இப்பொதுப் பெயர் பெற்றன.]*

**இதழ்**[4] *idal,* பெ. (n.) ***உதழ்*** பார்க்க; see *udal.*

*[பூவின் இதழை ஒருமருங்கு ஒத்திருத்தலின் உதழ், இதழ் எனப்பெயர் பெற்றது.]*

**இதழ்க்குச்சி** *idal-k-kucci,* பெ. (n.) ***வாயுதட்டுச் சாயமிடும் அழகுக் குச்சி;*** lip-stick.

**இதழ் குவி**[1]**-தல்** *idal-kuvi-,* 4 செ.கு.வி. (v.i.) 1. ***மலர் கூம்புதல்;*** to close, as the petals of a flower. 2. ***இமை கூடுதல்;*** to droop one's eyelids. 3. ***மேலுதடுங் கீழுதடுங் குவித்து நிற்றல்*** (நன்.78); to join the lips conically, as in pronouncing the rounded vowels உ, ஊ, ஒ, ஓ, ஔ. (செ.அக.).

**இதழ் குவி-த்தல்** *idal-kuvi-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. ***உதட்டைக் குவித்தல்;*** shrinking of the lips conically making a small orifice with the lips. 2. ***கண்மூடுதல்;*** closing the eye-lids. (சா.அக.).

*[இதழ்*[1] *+ குவித்தல்.]*

**இதழ் விரிவு** *idal-virivu,* பெ. (n.) ***பூவினிதழ் விரிந்து, மலர்தல்;*** process of bud opening petals into flower - florescence.

*[இதழ்*[1] *+ விரிவு.]*

**இதழ் விள்ளல்** *idal villal* பெ. (n.) 1. ***பேசல்;*** speaking. 2. ***மலரல்;*** blossom. 3. ***வாய்திறத்தல்;*** opening mouth as on speaking.

*[இதழ்*[1] *+ விள்ளல்.]*

**இதழகலந்தாதி** *idal-agal-andādi,* பெ. (n.) ***உதடு ஒட்டாமல் பாடப்படும் அந்தாதி;*** a kind of andādi verse without labio-dentals or labials (Pros.).

*Skt.* anta-ādi.

*[இதழ்*[1] *+ அகல் + அந்தாதி.]*

**இதழலர்-தல்** *idal-alar-,* 2 செ.கு.வி. (v.i.) ***பேச வாய் திறத்தல்;*** to open the lips. "இதழலர்ந்துநின் றோர் மொழி யென்னுடன் மொழிவீர்" (குலோத்.கோ.14).

*[இதழ்*[1] *+ அலர்.]*

**இதழவிழ்தல்** *idal-avildal,* தொ.பெ. (vbl.n.) ***பூத்தல்;*** to unfold petals (i.e.) blossoming. (சா.அக.).

*[இதழ்*[1] *+ அவிழ்தல்.]*

**இதழி** *idali,* பெ. (n.) ***கொன்றை*** (திவா.); cassia fistula. (செ.அக.).

க. எசளெ.

*[இதழ்*[1] *→ இதழி.]*

**இதள்** *idal,* பெ. (n.) 1. ***இதளியம்*** (பாதரசம்); mercury. (மூ.அக.). 2. ***சிறுதூறு*** (ஆ.அக.); low jungle, thicket, bushes(w.).

*[இல் → இது → இதல் → இதள் = இளமை, அழகு, பளபளப்பு.]*

**இதளிய விளக்கு** *idaliya-vilakku,* பெ. (n.) ***அதிகஒளி வழங்கும் வகையில் இதளிய ஆவி*** (பாதரசம்.) ***கொண்டமைக்கப்பட்ட மின் விளக்குவகை;*** mercury lamp.

*[இதளியம் + விளக்கு.]*

**இதளை** *idalai,* பெ. (n.) ***கொப்பூழ்*** (சங்.அக.); navel, umbilicus.

*[இதலை → இதளை.]*

**இதளைக்காற்பூடு** *idaḷai-k-kāṟpūḍu,* பெ. (n.) **ஒரு பூடு** (சா.அக.); plant.

*[இதளை + கால் + பூடு.]*

**இதா** *idā,* இடை. (int.) 1. **அண்மைச் சுட்டு** (வின்); demonstrative which refers to a person, place or thing near, opposed to சேய்மைச் சுட்டு. 2. **இதோ** (வின்.); see here! Lo! "மற்றிதா தோன்றுகின்ற" (சீவக.1232). 3. **உடன், சிறிது நேரத்தில், இப்பொழுதுதான்;** just now, immediately.

ம. இதா; க. இதா, இதோ; தெ. இதிகோ, இதெ, இகோ; து. இத்தெ, இந்தா; படை. இதா; கோத. இலா. *Gk* itha; *Goth.* ith; *Z* idha.

*[ஈது → இது → இதா (சு.வி.16).]*

**இதாகிதம்** *idākidam,* பெ. (n.) 1. **நன்மை தீமை;** good and evil "இதாகிதம் பகையுறவு விட்டு" (சேதுபு. விதும.32). 2. **விருப்பு வெறுப்பு;** like and dislike. **இதமல்லிதம்** பார்க்க; see *idamallidam.*

*[இல் → இன் → இனிமை. இல் → இது. இதமல்லிதம் → இதாமிதம் → இதாவிதம் → இதாகிதம். ஒ.நோ. தமல் → தமது. இது என்னும் சொல் கல்லாத மக்கள் பேச்சு வழக்கில் இன்பம் எனப் பொருள்படும். "குடிப்பது அவனுக்கு இது வாயிருந்தது" என்று உரையாடுதலைக் காணலாம்.]*

**இதார்த்தம்** *idārttam,* பெ. (n.) **எதார்த்தம்** (ஆ.அக.); conformable to the truth or true meaning, agreeing with fact, true, real, genuine, right, suitable, truthful etc.

*Skt.* yathārtha.

*[இதம் + ஆர்த்தம். இதம் = இனிமை, நன்மை. ஆர்த்தம் = பொருந்தியது.]*

**இதி**[1] *idi,* பெ. (n.) 1. **ஈதி** பார்க்க; see *īdi.* "ஈதி இடைஞ்சலிலே இடிவிழுந்த கானலிலே" (நாட்டுப்புறப் பாடல்). 2. **இறுதி** (அக.நி.); end.

ம. இதி, இறுதி. Skt. iti.

*[வடமொழியில் இது → இதி எனத்திரிந்து வழங்கும். இதுதான் என்னும் உறுதிப்பொருள் தரும் iti என்னும் வடசொல் இதே என்பதன் திரிபாகும்.]*

**இதி**[2] *idi,* பெ. (n.) **பேய்** (அக.நி.); devil, ghost (செ.அக.).

ம. இதி.

*[இருளி → இருள்தி → இத்தி → இதி.]*

**இதிரக்கிழங்கு** *idira-k-kiḻaṅgu,* பெ. (n.) **காட்டுக் கருணைக் கிழங்கு** (சா.அக.); wild yam tuber.

*[இதை → இதிரம் + கிழங்கு; இதை = மேட்டுநிலம், காடு.]*

**இது**[1] *idu,* சு.பெ. (demons. pron.) **அஃறிணை ஒருமைச் சுட்டு;** this, the thing close to the speaker, used impersonally - கு.பெ.எ. (adj.) **இந்த;** this before neut. sing. nouns. இது யாரும் அறிந்ததே. (செ.அக.).

ம. இது, ஈ; க. இது; தெ. இதி; கோத. இத்; துட. இந்த்; குட. இதி; து. இந்து; கொல. இத்; நா. இத்; பர். இத்; கூ. இவி; குவி. ஈதி; குரு. ஈத்; மா. இத்; பிரா. தா.தாத்; *Skt.* idam. *L.* is; *Goth.* hita; ஆத். இன்ன.

*[ஈ → ஈது → இது.]*

**இது**[2] *idu,* பெ. (n.) **இன்பம், மகிழ்ச்சி;** joy, happiness. "குடிப்பது அவனுக்கு ஒரு இதுவாயிருக்கிறது" (உ.வ.). (செ.அக.).

*[இல் → இது. இல் = இளமை, மென்மை, இனிமை. ஒ.நோ. மெல் → மெது.]*

**இது**[3] *idu,* பெ. (n.) 1. **இழிவானது, தாழ்வானது;** base, low, mean. 2. **பின்னுள்ளது;** the next.

*[இ → இது. பின்மைச் சுட்டு, தாழ்வுப் பொருள் தரும்.]*

**இதை**[1] *idai,* பெ. (n.) 1. **கலப்பை;** plough. 2. **மேட்டு நிலம்;** field for dry cultivation. "தத்தை தித்தித்த தோதிதை" (காஞ்சிப்பு. சுரகரீசப்.11). 3. **தினை;** italian millet. "பன்மணி யரித்திதை விளைப்பன குறிஞ்சி" (பெரியபு.திருக்குறிப்பு.7).

*As.* hoeth; *ME.* heth; *E.* heath; *Goth.* haithi; *L., G., D., Fris.* heide; *I.* heithr; *Dan.* hede; *Sw.* hed; *W.* hoed.

*[இல் = துளைத்தற் கருத்து வேர்ச்சொல். இல் → இது → இதை = வன்னிலம் உழும் கலப்பை. கொத்திக் கிளறி அல்லது உழுது பயிர் செய்ய வேண்டிய மேட்டுநிலம். மேட்டுநிலத்துப் பயிர் தினை, காராமணி.]*

**இதை**[2] *idai,* பெ. (n.) **கப்பற்பாய்;** sail of a ship. "நெடுங் கொடி மிசை யிதையெடுத்து" (மதுரைக்.79).

*[உது → இது → இதை (உயரம், உயரத்திலிருப்பது கப்பற்பாய்).]*

**இதைப்புனம்** *idai-p-puṉam,* பெ. (n.) **புதுக்கொல்லை** (திவா.); newly cultivated field of dry crops such as millet, dist. fr. முதைப் புனம். (செ.அக.).

*[இதை[1] + புனம்.]*

**இதோ** *idō,* இடை. (int.) **அண்மைச் சுட்டு; இங்கே. வியப்பின் பொருட்டு முன்னிற்போரின் கவனத்தை ஈர்ப்பது;** lo, behold! an exclamation calling a person's attention to something to be taken notice of. "இதோ வந்து நின்றதென் மன்னுயிரே (திருக்கோ.39).

க. இதோ, இதுகோ; தெ. இதிகோ; ம. இதா, இதிகோ; து. இதிகோ; கோண். இத்ரா, இப்புடெ; பிரா. ஈரா, இதிகோ. *Pkt.* idō; *Skt.* itah. *E.* Lo.

*[இது + இதோ; இதா → இதோ (சு.வி.16).]*

**இதோள்** *idōḷ* கு.வி.எ. (adv.) **இவ்விடம்** (தொல்.எழுத். 398,உரை.); here.

*As.* hider; *E.* hither; *Goth.* hidre; *I.* hethra.

*[இது + உள் - இதுள் → இதோள்.]*

**இதோளி** *idōḷi,* கு.வி.எ. (adv.) **இதோள்** (தொல். பொருள்.392,உரை.) பார்க்க; see *idōḷ* (செ.அக.).

*[இது + உள் - இதுள் - இதோள் → இதோளி.]

**இந்த** *inda,* சு.பெ.எ. (adj.) ***இந்த;*** this; demonstrative adjective and pronoun to indicate person or thing close at hand. 'இந்த நாடு' (நன்.267,உரை).

ம. இந்த; க. இந்த; தெ. இந்த; குட. இந்தெ, இன்னதெ.

*[இ → இந்த.]*

**இந்தண்டை** *indandai,* சு.வி.எ. (adv.) ***இப்பக்கம்*** (கொ.வ.); this side. (செ.அக.).

*[இது → இந்த + அண்டை.]*

**இந்தப்படிக்கு** *inda-p-padikku,* சு.வி.எ. (adv.) ***இப்படிக்கு*** பார்க்க; see *ippadikku.* term used in writing documents, and meaning 'in confirmation of which'. 'இந்தப் படிக்கு என் மனோராசியில் எழுதிக் கொடுத்த அடைமானப் பத்திரம்.' (செ.அக.).

*[இந்த + படி + கு.]*

**இந்தம்** *indam,* பெ. (n.) *புளி* (மூ.அ.); tamarind.

தெ. சிந்த.

*[இன் → இந்து → இந்தம். புளியம்பழம் அறப்பழுத்த நிலையில் புளிப்புச் சுவையுடன் சிறிது இனிப்பும் தருதலின் **இன்தீம்புளி** எனக்குறிப்பிடப்படும். வடபுலத்தில் சகர முதல் சேர்ந்து தெலுங்கில் சின்தபண்டு (புளியம்பழம்) ஆயிற்று. ஒ.நோ. முன் → முந்து → முந்தம்.]*

**இந்தம்வரம்** *indam varam,* பெ. (n.) ***நீலோற்பலம்*** (சங்.அக.); blue Indian water-lily. (செ.அக.).

*Skt.* indambara; ம. இந்தீவரம்.

*[இந்தம் + வரம்; இந்தம் = இனிப்பு, சிறப்பு.]*

**இந்தளங்குறிஞ்சி** *indalan-kurinji,* பெ. (n.) ***ஒரு பண்*** (திவ்.திருவாய்); (mus.) ancient melody-type.

ம. இந்தளம்.

*[இந்தம் → இந்தளம் = இனிமை. இந்தளம் + குறிஞ்சி.]*

**இந்தளம்**[1] *indalam,* பெ. (n.) ***தூபமுட்டி*** (சீவக.558, உரை); incensory, censer.

**இந்தளம்** > *Skt.* indhana.

*[இன் → இந்து → இந்தளம்.]*

**இந்தளம்**[2] *indalam,* பெ. (n.) ***மருதயாழ்த்திற வகை*** (பிங்.); (mus.) ancient secondary melody type of the marudam class. (செ.அக.).

**இந்தளம்** > *Skt.* hindōla.

*[இன் → இந்து → இந்தளம்.]*

**இந்தளம்**[3] *indalam,* பெ. (n.) ***இந்தனம், கும்மட்டிச் சட்டி;*** chafing dish, used for warming. "இந்தளத்திலே தாமரை பூக்கையிலே" (திவ்.திருக்குறுந்.5,வ்யா) (செ.அக.).

*[இருந்தை = அடுப்புக்கரி. இருந்தை → இந்தை → இந்தனம் → இந்தளம்.]*

**இந்தனம்**[1] *indanam,* பெ. (n.) 1. ***விறகு;*** fuel, fire-wood. "இந்தனத்திற்றீ" (வேதா.சூ.154) (செ.அக). 2. ***காடு*** (ஆ.அக.); jungle, forest. 3. ***மேல்;*** high, above (ஆ.அக.).

**இந்தனம்** > *Skt.* indhana.

*[இருந்தை → இந்தை → இந்தனம்.]*

**இந்தனம்**[2] *indanam,* பெ. (n.) 1. ***இந்தளம்***[1] (நாநார்த்த.) பார்க்க; see *indalam.*[1] 2. ***புகை*** (அக.நி.); smoke. (செ.அக.).

*[இந்தளம் → இந்தனம்.]*

**இந்தா** *indā,* இடை. (int.) 1. ***இதோ*** (சீவக.1232,உரை); exclamation calling a person's attention to something near. Lo! behold. 2. ***இங்கே வா என்னுங் குறிப்பு மொழி;*** come here! 3. ***இதை வாங்கிக்கொள் என்னுங் குறிப்புமொழி;*** an interjection used in the sense of Here! take this! "இந்தா விஃதோ ரிளங்குழவியென்றெ டுத்து......தேவிகையிலீந்தனனே" (கந்தபு.வள்ளி.35) (செ.அக).

து. இத்தெ, இந்தா.

*[இது → இதா → இந்தா.]*

**இந்தாளி** *indāli,* பெ. (n.) ***தாளிப்பனை;*** South Indian talipot. palm. (செ.அக.).

*[இது → இந்தாளி.]*

**இந்தி**[1] *indi,* பெ. (n.) ***பூனை*** (வின்); cat. (செ.அக.).

ம. இத்தி.

*[இத்தி → இந்தி; இள் → இத்தி = இளையது, சிறியது.]*

**இந்தி**[2] *indi,* பெ. (n.) ***இந்தி மொழி*** (mod.); Hindi language. (செ.அக.).

***இந்து*** பார்க்க; see *Indu.*

*[இந்து → இந்தி. வடபுலத்துப் பிற சமயத்தாரை நோக்க இந்துக் களின் மொழியாகக் கருதப்பட்டு இந்தி எனப்பட்டது.]*

**இந்திகை** *indigai,* பெ. (n.) ***மிகு ஆற்றலுள் ஒன்று*** (சதாசிவரூ.); one of the five energies of aparanātam. (செ.அக.).

*[இந்துகை → இந்திகை.]*

**இந்திடம்** *indidam,* பெ. (n.) ***இவ்விடம்;*** this place. "வேதிய ரோதிட முந்திட மிந்திடமே" (திருக்கோ.223).

*[இங்கு → இந்து + இடம்.]*

**இந்தியம்** *indiyam,* பெ. (n.) ***ஐம்பொறி*** (ஆ.அக.); five sense organs.

*[இள் → இந்து → இந்தியம். இந்தியம் = மென்மையும் ஒண்மை யும் வாய்ந்த புலன்கள்.]*

**இந்தியன்** *indiyan,* பெ. (n.) ***இந்திய நாட்டான்;*** Indian. (ஆ.அக.).

*[இந்து → இந்தியன்.]*

**இந்தியா** *indiyā,* பெ. (n.) ***இந்தியநாடு;*** India, Bharat.

*[சிந்து → இந்து → இந்தியா.]*

**இந்திரகணம்** *indiraganam,* பெ.(n.) ***செய்யுட்கணத் தொன்று*** (இலக்.வி.800,உரை); foot of three nēr (---), as தேமாங்காய், considered as auspicious at the commencement of a poem. (செ.அக.).

*[இந்திரம் + கணம்.]*

**இந்திர காந்தச் சேலை** *indira-kānda-c-cēlai,* பெ. (n.) ***புடைவை வகை*** (பஞ்ச.திருமுக.1161); a kind of saree. (செ.அக.).

*[இந்திரம் + காந்தம் + சேலை.]*

**இந்திரகாளியம்** *indira-kāliyam,* பெ.(n.) ***ஓர் இசைத் தமிழ் நூல்*** (சிலப்.உரைப்பாயி.); name of an ancient Tamil treatise dealing with išai-t-tamil written by Yāmalēndirar. (செ.அக.).

*[இந்திரம்[1] + காளியம்.]*

**இந்திரகோபம்** *indira-kōbam,* பெ. (n.) ***தம்பலப்பூச்சி;*** cochineal insect, coccus cacti. "இந்திர கோபங் கௌவி யிறகுளர்கின்ற மஞ்ஞை" (சீவக.1819) (செ.அக.).

*[இந்திரம்[2] + கோபம்.]*

**இந்திரசாபம்** *indira-šābam,* பெ. (n.) ***வானவில்;*** rainbow, poetically described as the bow of Indra. "தாலந் தனில் வந்ததொரிந்திர சாப மென்ன" (அரிச்சந்.நாட்டு.10), "தணியா திந்திர சாபமுண்டாகலின்" (மணி.24-65). (செ.அக.).

*[ஐந்திரம் → இந்திரம் + சாபம்; சாய்பம் → சாபம் = சாய்ந்தது அல்லது வளைந்தது.]*

**இந்திரசாலம்** *indira-šālam,* பெ. (n.) 1. ***புலன்களால் அறியப்படாத மாயவித்தை;*** magical tricks, sleight of hand, phantasmagoria, optical illusions. "இந்திர சாலங் காட்டிய வியல்பும்" (திருவாச.2,43). 2. ***வஞ்சகச் சொல்;*** specious doctrines, such as those of heretics. "உழல்வார் சொன்ன விந்திரசால மொழிந்து" (தேவா. 691,10). 3. ***சூரபதுமன் தேர்*** (கந்தபு.வரம்பெறு.21); name of the chariot of Šūrapadma. 4. ***அறுபத்து நான்கு கலைகளுள் ஒன்று;*** one of the sixty four arts and science. (செ.அக.).

*[இந்திரம் + சாலம். சலம் - சாலம்.]*

**இந்திரசாலி** *indira-šāli,* பெ. (n.) 1. ***இந்திரவித்தை எனப்படும் மாயவித்தை செய்பவன்;*** magician. 2. ***அழிஞ்சில்*** (மலை.); sage-leaved alangium, having fruits which are said to have the magic power to drop from and return to the tree on dark nights. (செ.அக.).

*[இந்திரம்[2] + சாலி.]*

**இந்திரசித்து** *indira-cittu,* பெ. (n.) ***இராவணனுடைய மூத்தமகன்*** (கம்பரா.பாசப்.38); Mēghanāda, Ravaṇa's eldest son, who vanquished Indra.

*[இந்திரன் + சித்து. Skt. Jit → த. சித்து. இந்திரசித்து = இந்திரனை வென்றவன்.]*

**இந்திர சிற்பம்** *indira-cirpam,* பெ. (n.) ***சிற்ப நூலி னொன்று*** (ஆ.அக.); work on sculpture.

*[இந்திரம் + சிற்பம்.]*

**இந்திரசிறப்பு** *indira-cirappu,* பெ. (n.) ***பகல் விருந்து படைப்பதற்குமுன், இந்திரன் உள்ளிட்ட தெய்வங்களுக்கு முன்னூட்டாக இடப்படும் தளிகை அல்லது சிறுபடையல்;*** religious ceremony performed before the midday meal, consisting in the offering of small portions of cooked food to Indra and other gods. "இந்திர சிறப்புச் செய்வோன் முன்னர்" (மணி.11,88).

*[இந்திரம்[1] + சிறப்பு; இந்திரம் = உயர்வு, மேன்மை.]*

**இந்திரதந்திரம்** *indira-tandiram,* பெ. (n.) ***இந்திர சாலம்*** (திருப்பு.229) பார்க்க; see *indirasālam.*

*[இந்திரம்[2] + தந்திரம்.]*

**இந்திரதரு** *indirataru,* பெ. (n.) ***மருது*** (சித்.அக.); Arjuna. (செ.அக.).

*[இந்திரம்[1] + தரு.]*

**இந்திரதனு** *indira-danu,* பெ. (n.) ***வானவில்;*** rainbow, the bow of Indra. "இந்திர தனுவென விலங்கக முடுத்து" (மணி.28,22.).

*Skt.* dhanu > த. தனு. ***வானவில்*** பார்க்க. see *vānavil.*

*[இந்திரன் + தனு.]*

**இந்திரதிசை** *indira-dišai,* பெ. (n.) ***கிழக்கு*** (திவா.); cardinal direction of the east of which the guardian deity is Indra.

*[இந்திரன் + திசை.]*

**இந்திர திருவன்** *indira-tiruvan,* பெ. (n.) ***இந்திரனைப் போற் செல்வமுடையவன்;*** person of great affluence, having the wealth of Indra. "இந்திர திருவன் சென்றினி தேறலும்" (மணி.19,116).

*[இந்திரன் + திருவன்.]*

**இந்திர நீலம்** *indira-nīlam,* பெ. (n.) ***நீலமணி;*** sapphire. "இந்திரநீல மொத் திருண்ட குஞ்சியும்" (கம்பரா. மிதிலைக்.56). (செ.அக.).

*Skt.* indra - nīla.

*[இந்திரம்[1] + நீலம். இந்திரம் = அழகு, உயர்வு சிறப்புப் பொருள் குறித்த இச்சொல் தலைமைப் பொருள் முன்னொட்டாயிற்று. இந்திர நீலம் = சிறந்த நீலம்.]*

**இந்திரப் பிரத்தம்** *indira-p-pirattam,* பெ. (n.) ***புது தில்லிக் கருகில் யமுனை நதிக் கரையில் அமைந்திருந்த பாண்டவர் தலைநகரம்*** (பாரத.இந்திரப்.14); Indra-prastha, a city on the banks of the Jumna and the ancient capital of the empire of the Pāṇḍavas, situated near the site of the modern Delhi. (செ.அக.).

*[இந்திரம்[1] + பிரத்தம். இந்திரம் = சிறப்பு, உயர்வு. புரம் + தானம் = புரத்தானம் → பிரத்தானம் → பிரத்தம் எனத் திரிந்தது. Skt prasthanam → த. பட்டணம் எனத் திரிந்தது.]*

**இந்திரபதம்** *indira-padam,* பெ. (n.) 1. ***துறக்கம்*** (வின்); svarga, Indra's heaven. 2. ***இந்திரபதவி*** பார்க்க; see *Indira padavi.* (செ.அக.).

*[இந்திரம்[1] + பதம். இந்திரம் = தலைமைப் பொருள் குறித்த முன்னொட்டு; பதம் = நிலை, பதவி. இந்திரபதம் = தலை சிறந்த பதவி நிலையாகிய துறக்க வாழ்வையும், தேவருலக வாழ்வையும் குறித்தது. இந்திர பதவி நிலையில்லாதது. ஆத லின் நிலைத்த துறக்கம் இந்திரன் பதம் எனப் பெயர் பெற்றி ருக்க வாய்ப்பில்லை; சிறப்பு, உயர்வு, தலைமை எனப் பொருள்படும் இந்திரம் என்னும் சொல்லே இக்கூட்டுச் சொல் லின் நிலைமொழியாதல் வேண்டும்.]*

**இந்திரபதவி** *indira-padavi,* பெ. (n.) ***இந்திரனாயிருக் கும் நிலை;*** office of Indra. ''இந்திரன் முதலிய இறையவர் பதங்களும்''. (பரிமே.உரைப்).

*[இந்திரன் + பதவி.]*

**இந்திரபுரி** *indira-puri,* பெ. (n.) ***இந்திரனின் தலைநக ரான அமராவதி*** (பாரத.இந்திரப்.24); Amarāvati, Indra's capital. (செ.அக.).

*Skt* indra pura.

*[இந்திரன் + புரி.]*

**இந்திரம்**[1] *indiram,* பெ. (n.) 1. ***வேந்தியல்பு;*** regal attitude. 2. ***உயர்வு, தலைமை;*** superiority, leadership.

*[வேந்து → வேந்திரம் → விந்திரம் → இந்திரம். வேத்தியல், பொதுவியல் என நாடகம் இருவகைத்து; உயர்ந்த இலக்கிய, கலைப் பாங்குடையது வேத்தியல். வடமொழியாளர் வேந்தன் என்ற சொல்லை இந்திரன் எனத்திரித்து ஒலித்தமையின் உயர்வுப் பொருள் தந்த வேந்திரமும், இந்திரமாயிற்று.]*

**இந்திரம்**[2] *indiram,* பெ. (n.) ***அழகானது;*** that which is beautiful. ''அச்சுதற் காமெனு மிந்திரத் திருமாமுடி'' (கந்தபு.பட்டாபி.6) (செ.அக.).

*[ஐந்திரம் → இந்திரம். ஐ = அழகு, உயர்வு, மேன்மை, சிறப்பு. ஐ → ஐந்து → ஐந்திரம். ஒ.நோ. மன் → மந்தரன் → மாந்தரன். ஐந்திரம் - இந்திரம் > Skt. indra.]*

**இந்திரம்**[3] *indiram,* பெ. (n.) ***ஐந்திரம் என்னும் பழைய இலக்கண நூல்;*** ancient Tamil grammar. ''இந்திரத்தை இனிதாக ஈந்தார் போலும்'' (தேவா.721.8).

*[ஐந்திரம் → இந்திரம்.]*

**இந்திரர்** *indirar,* பெ. (n.) ***தேவர்;*** Dēvas as those living in Indra's world. ''இந்திரர் அமிழ்தம் இயைவ தாயினும்'' (புறநா.182). (செ.அக.).

*[இந்திரம் → இந்திரர்.]*

**இந்திர வண்ணப்பட்டு** *indira-vaṇṇa-p-paṭṭu,* பெ. (n.) ***பட்டுப் புடைவை வகை;*** kind of silk saree. ''இழையாயிரம் விலைப் பொன் இந்திரவர்ணப் பட்டாடை'' (கோவ.க.17).

*[இந்திரம்[2] + வண்ணம் + பட்டு.]*

**இந்திர வருணி** *indira-varuṇi,* பெ. (n.) ***பேய்க்கொம் மட்டி;*** wild bitter gourd.

*[இந்திரம் + வருணி. வண்ணம் → வருணம் → வருணி.]*

**இந்திரவல்லி** *indira-valli,* பெ. (n.) 1. ***பிரண்டை*** (தைலவ.); square-stalked vine. 2. ***முடக்கொற்றான்*** (தைலவ.தைல.93);balloon vine. 3. ***கொற்றான்*** (M.M.); parasitic leafless plant. (செ.அக.).

*[இந்திரம்[1] + வல்லி.]*

**இந்திரவாசம்** *indira-vāsam,* பெ. (n.) ***நெய்தல் மலர்*** (மலை.); white Indian, water-lily. (செ.அக.).

*[ஐந்திரம் → இந்திரம் + வாசம். ஐந்திரம் = அழகு, சிறப்பு.]*

**இந்திரவாழை** *indira-vāḻai,* பெ. (n.) ***கானல் வாழை;*** wild plantain.

*[இந்திரம்[2] + வாழை.]*

**இந்திரவிகாரம்** *indira-vigāram,* பெ. (n.) ***காவிரிப்பூம் பட்டினத்திலிருந்த ஒரு பவுத்தப்பள்ளி*** (மணி.26. 55); name of a Buddhist monastery in Kāviri-p-pū-m. paṭṭiṉam, reputed to have been established by Indra. (செ.அக.).

*[இந்திரம்[1] + விகாரம்.]*

**இந்திரவில்** *indira-vil,* பெ. (n.) ***வானவில்*** (திவா.); rainbow, the bow of Indra. (செ.அக.).

*[ஐந்திரம் → இந்திரம் + வில். ஐந்திரம் = அழகு, சிறப்பு.]*

**இந்திரவிழவு** *indira-viḻavu,* பெ. (n.) ***மேழ(சித்திரை)த் திங்களில் காவிரிப்பூம் பட்டினத்தில் இந்திரனைக் குறித்துச் செய்யும் ஒரு விழா*** (சிலப்.பதி.67); ancient annual festival in honour of Indra held in the month of Cittirai by the Cōḻa kings in their capital city of Kāviri-p-pū-m-paṭṭiṉam. (செ.அக.).

*[இந்திரன் + விழவு.]*

**இந்திரவிழா** *indira-viḻā,* பெ. (n.) ***இந்திரவிழவு*** பார்க்க; see *Indiraviḻavu.* (அபி.சிந்.).

*[இந்திரன் + விழா.]*

**இந்திரன்** *indiraṉ,* பெ. (n.) 1. ***தலைவன்;*** chief. 2. ***அரசன்;*** king. ''இந்திரராகிப் பார்மேல்'' (கந்தபு.நூற் பயன்). 3. ***வேத கால ஆரியர்க்குத் தலைவனாகவும் வழிபடு தெய்வமாகவும் விளங்கியவன்;*** Indra who

was the chief and the god of the Vedic Aryans. ''இந்திரனே சாலுங்கரி'' (குறள்.25).

*[வேந்தன் → இந்தன் → இந்தர் → இந்திரன்.]*

வேதகால ஆரியர்களுக்கு முற்பட்ட மேலையாரியத்தில் 'இந்தர்' எனக்குறிப்பிடப்பட்ட ஆரியத்தலைவன் பெயர் வேத காலத்தில் இந்திரன் எனத்திரிந்தது.

''மாயோன் மேய காடுறை உலகமும்
சேயோன் மேய மைவரை உலகமும்
வேந்தன் மேய தீம்புனல் உலகமும்
வருணன் மேய பெருமணல் உலகமும்
முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனச்
சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே'' (தொல். பொருள்.5)

என்னும் தொல்காப்பிய நூற்பா உரையில் இளம்பூரணர் வேந்தன் என்னும் சொல்லுக்கு இந்திரன் எனப்பொருள் வரைந்திருப்பது ஏற்புடைத்தன்று. இந்திரனைத் தேவர் தலைவனாக வல்லது தமிழக நிலத்தெய்வங்களுள் ஒருவனாகக்கடைக்கழக இலக்கியங்கள் யாண்டும் குறிப்பிடவில்லை. வேந்தன் என்னும் சொல் அரசன் என்று மட்டும் பொருள் தரும் செந்தமிழ்ச் சொல். இது மேலையாரியத்தில் தலைவன் என்னும் பொருளில் இந்தர் என்னும் வடிவில் கடன் சொல்லாகப் புகுந்தது.

'The origin of the round proto Indian seals discovered in Sumer' என்னும் கட்டுரையில் திரவிடவியல் ஆராய்ச்சிவல்லுநராகிய அருளாளர் ஈராசு அடிகளார் இந்திரன் வரலாற்றை விரித்துரைத்திருக்கிறார்.

மொசபதோமியா பகுதியிலும் பாரசீகப் பகுதியிலும் பரவிய ஆரியர் குடியேற்ற காலத்தில் அவர்களுக்கிடையில் நேர்ந்த பூசல்களால் ஒரு பிரிவுக்குத் தலைவனாக இருந்த இந்திரன் யதுகுலத்தையும் துருவாசகுலத்தையும் சார்ந்த சிலரை உடனழைத்துக்கொண்டு கடல்கடந்து செல்லத் திட்டமிட்டான். மொசபதோமியாவில் தங்கியிருந்த பணிகள் (panis) என்னும் கடல் வாணிகர் துணைபெற்று கப்பலில் ஏறி இன்றைய கத்தியவார் (சூரிய ராட்டிரம் → சௌராட்டிரம்) தீவமுனைக்கு வந்து இந்திரன் குடியேறினான். இந்திரனின் முதற் கடற்பயணம் இருக்கு வேதத்திலும் குறிப்பிடப்பட்டுள்ளது. மேலையாரியர்களால் கத்தியவார் உள்ளிட்ட மேற்கிந்தியப் பகுதி கதிரவன் தோன்றும் நாடு (கிழக்கு) என்று அழைக்கப்பட்டது. ஆரியர்களை மீண்டும் அழைத்து வருதற்காகக் கப்பலில் ஏறி மொசபதோமியாவுக்குச் சென்ற இந்திரன் ஆரியர்களுக்கிடையில் நிகழ்ந்த போரில் இறந்து விட்டான். அவன் நினைவைப் போற்றும் வகையில் யது துருவாச மரபினர் இந்திரனுக்குச் சோமநாதன் (சோம மதுவுக்குரிய கடவுள்) என்று பெயரிட்டு சோமநாதபுரம் கோயில் எழுப்பினர். அதுவே இந்தியாவில் ஆரியர் வருகையால் ஏற்பட்ட முதல் இந்திரன் கோயில் நாளடைவில் அது சிவன் கோயிலாகக் கருதப்படினும் நந்தியின் வடிவத்துக்கு மாற்றாக இந்திரனின் யானை ஊர்தியே அக்கோயிலில் கல்லில் வடிக்கப்பட்டிருக்கிறது என்று ஈராசு அடிகளார் கூறுகிறார். செண்டு அவெத்தாநூலில் கொடிய அரக்கருள் ஒருவனாக இந்திரன் சித்தரிக்கப்படுகிறான் என்று இங்கிலாந்து நாட்டு சமற்கிருதப் பேராசிரியர் ஆர்தர்-ஏ-மாக்டொனால் (1899) A history of Sanskrit Literature (P.72) என்னும் நூலில் குறிப்பிட்டிருக்கிறார்.

இந்திரனை மக்கள் வழிபடாததும் இந்திரன் சினந்து மழை பொழியச் செய்ததும் கண்ணன் கோவர்தன மலையைக் குடையாகப் பிடித்ததுமாகிய தொன்மக்கதைகளும் ஆரிய இந்திரர்களுக்கும் திரவிடமன்னர்களுக்கும் நிகழ்ந்த பகைமைப் போராட்டங்களைக் காட்டுகின்றன. இருசாராரும் பகைமை நீங்கி நட்பாக வாழ்ந்த காலத்தில் அரசர்களுள் நூறு வேள்வி செய்தவன் இந்திரனாகலாம் என்னும் கொள்கை உருவாயிற்று. இந்தியாவுக்குக் கிழக்கே அசாம் மலைத்தொடர், காழகம் (Burma), கடாரம் (மலேயா) போன்ற பகுதிகளில் வென்றும் குடியேறியும் மேலாண்மை பெற்ற ஆரியக்குடிவழியினர் இந்தியாவில் நூறு வேள்வி செய்து இந்திர பதவி பெற்றவர்களுக்கு நாடாளும் பெற்றி தந்தனர். தென்கிழக்கு ஆசியப்பகுதிகள் இந்திர உலகம் என்று அழைக்கப்பட்டன. இந்திரனுக்குரிய யானையின் பெயராகிய ஐராவதம் காழகத்திலுள்ள ஐராவதி ஆற்றுக்கும் இடப்பட்டது. இந்திரனின் செல்வாக்கு நன்கு பரவிய பிறகு தோன்றிய சமண பவுத்த மதத்தினரும் இந்திரனை விண்ணவர் கோமானாக ஏற்றுக் கொண்டனர். வடகிழக்குப் பருவக்காற்றால் இந்தியாவில் மழைமிகுதலின் கிழக்குத் திசைக்குரிய இந்திரனே மழைத் தெய்வமாகக் கருதப்பட்டான். ஆதலின் தமிழில் மருதநிலத் தெய்வமாகக் கருதப்பட்ட வேந்தனுக்கும், மழைத்தெய்வமாகிய ஆரிய இந்திரனுக்கும் வேர்ச்சொல்வழித் தொடர்பன்றி வரலாற்றுத் தொடர்பு எதுவும் இல்லை. வேள்வி செய்யும் இந்திரனுக்கு விழவெடுத்தும் மழைபெய்விக்கலாம் என்பது ஆரியமரபு. மன்னன் அறநெறி பிழையாது செங்கோலாட்சி புரிந்தால் மழை வளஞ்சிறக்கும் என்பதும், கொடுங்கோலாட்சி புரிந்தால் மழை பெய்யாது என்பதும் தமிழ்மரபு.

''முறைகோடி மன்னவன் செய்யின் உறைகோடி
ஒல்லாது வானம் பெயல்'' (குறள் 559).

என்னும் திருவள்ளுவர் கருத்தும் ஒப்புநோக்கத்தக்கது. தமிழ் வேந்தனும் ஆரிய இந்திரனும் மழைக்குக் காரணமானவர்கள் எனக் கூறப்படினும் தமிழ் மரபின் பாங்கு உலகியல் செம்மைக்கு ஊற்றுக் கண்ணாவதைத் தெற்றென உணரலாம்.

**இந்திரன்றிசை** *indiraṉ-ṟisai*, பெ. (n.) ***கிழக்கு*** (திவா.): cardinal direction of the east, of which the guardian deity is Indra. ''அருணனிந்திரன் றிசை யணுகினன்'' (திருவாச.20.2).

*[இந்திரன் + திசை.]*

**இந்திரனாள்** *indiraṉāḷ*, பெ. (n.) ***தழல்*** (கேட்டை) (திவா.); 18th nakṣatra, an asterism sacred to Indra-Indra's day.

*[இந்திரன் + நாள்.]*

**இந்திரனூர்** *indiraṉ-ūr*, பெ. (n.) ***பொன்னாங்காணி*** (தைலவ.தைல.66); plant growing in damp places. (செ.அக.).

*[ஒருகா. இந்திரம் + ஊரி. இந்திரமூரி → இந்திரனூரி → இந்திரனூர். இந்திரனூர் = அழகு ஊரப்பெறுவது. பொன்னாங் காணிக் கீரை உண்பார்க்கு மேனி பொன்னாகும் என்னும் நம்பிக்கை இருந்தது.]*

**இந்திராணி** *indirāṇi,* பெ. (n.) ***இந்திரை*** பார்க்க; see *Indirai.* (செ.அக.).

*[இந்திரை → இந்திராணி.]*

**இந்திரி** *indiri,* பெ. (n.) 1. ***ஒரு முள்மரம்;*** sensitive prickly tree. 2. ***காந்தம்;*** magnet or load-stone. (சா.அக.).

*[இந்திரம் → இந்திரி.]*

**இந்திரை** *indirai,* பெ. (n.) ***இந்திரன் மனைவி;*** wife of Indira.

ம. இந்திரை.

*[இந்திரன் (ஆ.பா) - இந்திரை (பெ.பா.).]*

**இந்திவா** *indivā,* பெ. (n.) 1. ***செங்குவளை;*** sweet smelling red water-lily. 2. ***நீர்க்குளிரி;*** water archer. (சா.அக.).

*[இந்தீவரம் → இந்திவா. இந்தீவரம் கருங்குவளையைக் குறித் தாலும் குவளை என்னும் பொதுமையான் செங்குவளையை யும் குறித்ததாகலாம்.]*

**இந்து**[1] *indu,* பெ. (n.) 1. ***நிலவு;*** moon. "அருக்க னெச்சன் இந்து அனல்" (திருவாச.13,4). 2. ***கருப்பூர மரம்*** (மூ.அ.); camphor, cinnamon. 3. ***மாழ்கு*** (மிருக சீரிடம்) (விதான. குணா.1.); fifth nakṣatra. 4. ***சிந்து நதி*** (வின்.); river Indus. 5. ***இந்து மதத்தவன்*** (ஆ.அக.); Hindu, as one who professes Hinduism. (செ.அக.).

இந்து > *Skt.* indu.

*[நீர் → நீத்தம். நீர் → நீர்ந்து → ஈர்ந்து → ஈந்து → இந்து (தண்ணீர், குளிர்ச்சி; குளிர்ந்த நிலவு. இந்து → சிந்து (தண்ணீர்); ஒ.நோ. நீர் → நீரம் → ஈரம். மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே சிந்து வெளி நாகரிகத்தின் எச்சமாகச் சிதைந்த பாகத, வடதமிழ் (பலவகைப் பிராகிருத மொழிகள்) வழக்குகளான இச்சொற்கள் வடபுலத்துக் கொச்சை வழக்குக ளாகத் தென்புலத்தில் வழக்கூன்றின.]*

**இந்து**[2] *indu,* பெ. (n.) ***இந்துப்பு*** (தைலவ.); rock-salt (செ.அக.).

*Skt.* sindhuja.

*[இன் → இந்து. ஒ. நோ. முன் → முந்து. இந்து = இனிமை அல்லது சுவை கூட்டுவது. உணவுக்குச் சுவை சேர்த்தலின் உப்பு இனிமைப் பொருள் பெற்றது. இந்து (உப்பு) விளைந்த இடம். இந்து - சிந்து எனப்பட்டது.]*

**இந்து**[3] *indu,* பெ. (n.) ***கரடி*** (அக.நி.); Indian black bear. (செ.அக.).

*[ஒருகா. இருள் → இருந்து → இந்து.]*

**இந்து**[4] *indu,* பெ. (n.) ***கரி*** (அக.நி.); charcoal.

***இருந்தை*** பார்க்க; see *Irundai.*

*[இருந்தை → இருந்து → இந்து.]*

**இந்துக்கடுக்காய்** *indu-k-kaḍukkāy,* பெ. (n.) 1. ***நாட்டுக் கடுக்காய்;*** Indian gall-nut, as opposed to காபுலிக் கடுக்காய்; foreign gall-nut exported from Kabul. 2. ***முதிர்ந்த கடுக்காய்;*** ripe gall nut as opposed to பிஞ்சிக் கடுக்காய்; tender or immature gall-nut. (சா.அக.).

*[இந்து + கடுக்காய். இந்து = இந்திய நாட்டு. இந்து = குளிர்ச்சி, இளமை.]*

**இந்துப்பு** *induppu,* பெ. (n.) ***மருந்துப்பு வகை*** (பதார்த்த.1096.); rock salt or sodium chloride used in medicine, so called because it was brought from Sindh. (சா.அக.).

*Skt.* sindhu.

*[இந்து + உப்பு.]*

**இந்துரம்** *induram,* பெ. (n.) 1. ***எலி;*** rat. 2. ***கப்பற் கடுக்காய்;*** large variety of gall-nut. (சா.அக.).

இந்துரம் > *Skt.* indira.

*[ஒருகா. இண்டுரம் (குடையும் எலி.) → இந்துரம்.]*

**இந்துரு** *induru,* பெ. (n.) ***பெருச்சாளி;*** bandicoot. (சா.அக.).

*Skt.* indūra.

*[ஒருகா. இண்டுரம் → இண்டுரு → இந்துரு. இண்டு = பெரியது. இந்துரு > skt. indūra.]*

**இந்துள்** *induḷ,* பெ. (n.) ***இந்துளி*** பார்க்க; see *induḷi.*

*[இந்து + உள். இந்து - நீர்.]*

**இந்துளம்** *induḷam,* பெ. (n.) ***நெல்லி*** (வை.மூ.); emblic myrobalan. (செ.அக.).

*[இந்து → இந்துள் → இந்துளம்.]*

**இந்துளி** *induḷi,* பெ. (n.) ***பெருங்காயம்;*** asafoetida. (செ.அக.).

*[இந்துள் → இந்துளி. இந்து = நீர். இந்துளி = உள் ஈரம் கொண்டது.]*

**இந்தோ** *indō,* இடை. (int.) ***அண்மைச் சுட்டு;*** lo behold.

க. இதோ.

*[இந்தா → இந்தோ. (மு.தா.323).]*

**இப்படி**[1] *i-p-paḍi,* கு.வி.எ. (adv.). 1. ***இவ்விதம்*** (ஆ.அக.); in this manner, thus, so. 2. ***இவ்வாறு;*** likewise (செ.அக.).

ம. இப்படி; க. இன்து; தெ. இப்பாடு; பிரா. தகன், தான்; பட. இத்தெ.

*[இ + படி = இப்படி; படி = வகை. இ = அண்மைச் சுட்டு.]*

**இப்படி**[2] *ippadi,* பெ. (n.) ***தண்டத்தீர்வை*** (R.T.); penal assessment. (செ.அக.).

தெ. இப்புதி.

*[ஒருகா. இழப்பு + படி = இழப்படி → இப்படி.]*

**இப்படிக்கு** *i-p-padikku,* கு.வி.எ. (adv.). ***இங்ஙனம்*** (ஆ.அக.); thus: in these terms: a term used in the subscription in a letter or document over the writer's signature, meaning, I remain thus. 'இப்படிக்கு உங்கள் அன்புள்ள கண்ணன்' (உ.வ.) (செ.அக.).

*[இ + படி = இப்படி + கு. படி = வகை, தன்மை.]*

**இப்படிக்கொத்த** *i-p-padikkotta,* கு.பெ.எ. (adj.). ***இத்தன்மையான;*** such as this (செ.அக.).

*[இப்படி + கு + ஒத்த.]*

**இப்பந்தி** *ippandi,* பெ. (n.) ***இருபந்தி*** பார்க்க; see *irupandi.*

தெ. இப்புந்தி; க. இப்பந்தி.

*[இரு + பகுதி. பகுதி → தெ. பந்தி. பந்தி = வரிசை. வகை. இரு + தெ. பந்தி → இப்பந்தி = இருவகைப்பட்டது. கலப்பானது.]*

**இப்பந்தி யாடு** *ippandi-yādu,* பெ. (n.) ***இருபந்தியாடு*** பார்க்க; see *irupandiyādu.* (சா.அக.).

*[இரு + பந்தி + ஆடு. பகுதி → தெ. பந்தி.]*

**இப்பம்** *ippam,* கு.வி.எ. (adv) ***இப்பொழுது*** (கொ.வ.); now, at the present moment. (செ.அக.).

ம. இப்பம்; க., பட. ஈக; தெ. இப்புடு; து. இத்லெ.

*[இப்பொழுதும் → இப்பவும் → இப்பம் (கொ.வ.).]*

**இப்பர்** *ippar,* பெ. (n.) 1. ***வணிக இனத்தார்*** (சீவக.1756.); one of the three subcastes among the vaišyas. 2. ***கோவணிகர்*** (கோவைசியர்) (பிங்.); sect among the vaisyas whose chief vocation is to tend cows and live on dairy produce; dairymen vaišya. 3. ***வேளாளர்*** (ஆ.அக.); agriculturist.

*[இடைப்பர் → இப்பர்.]*

**இப்பவும்** *ippavum,* கு.வி.எ. (adv.) 1. ***இப்பொழுதும்*** (கொ.வ.); even now. 2. ***இப்பொழுது;*** term meaning just now, generally used as a prefatory word in epistolary writing. (செ.அக.).

ம. இப்போழும்.

*[இப்பொழுதும் → இப்பவும்.]*

**இப்பாடு** *ippādu,* கு.வி.எ. (adv.) ***இவ்விடம்;*** to this place, hither. ''இப்பாடே வந்தியம்பு'' (திருவாச.19,6).

*[இ + பாடு. படு → பாடு. படுதல் = வைத்தல், தங்குதல். பாடு = வைத்தற்குரிய இடம்.]*

**இப்பால்** *ippāl,* கு.வி.எ. (adv.) 1. ***இவ்விடம்*** (ஆ.அக.); on this side, herein. ''இப்பா லலைத்தது காமன் சேனை'' (சீவக.490). 2. ***பின்பு;*** hereafter, affer this event. ''இப்பாற் பார்செலச் செல்லச் சிந்தி'' (சீவக.469). 3. ***இனிமேல்*** (ஆ.அக.); hereaftər.

ம. இப்பால்.

*[இ + பால். பால் = பகுப்பு, பிரிவு, பகுதி. பகுக்கப்பட்ட இடம்.]*

**இப்பி** *ippi,* பெ. (n.) 1. ***சங்கு;*** conch - shell. 2. ***கிளிஞ்சில்;*** bivalvular shell - fish. ''விரிகதிர் இப்பியை வெள்ளி யென்றுணர்தல்'' (மணி.27-64). 3. ***சிப்பி;*** oyster. 4. ***முத்துச் சிப்பி;*** pearl oyster - shell. (சா.அக.).

ம. இப்பி; க. சிப்பி; தெ. சிப்ப; து. சிப்பி.
*Pkt.* sippi.

*[இல் → இள் → இளுப்பி → இப்பி = துளையுள்ளது சங்கு.]*

**இப்பியை** *ippiyai,* பெ. (n.) 1. ***வெள்ளைக் குங்கிலியம்*** (நாநார்த்த.); konkani resin. 2. ***பெண்யானை; பிடி;*** female elephant. (செ.அக.).

இப்பியை> *Skt.* ibhya.

*[இப்பி = சங்கு. இப்பி → இப்பியை = சங்கு போன்று வெண்மை யானது. இப்பி = ஒருபுடை ஒப்புமை கருதிய பெண்பாற் சொல்லாட்சி.]*

**இப்பிவெள்ளி** *ippi-veḷḷi,* பெ. (n.) ***கிளிஞ்சிலை வெள்ளியென் றெண்ணும் மயக்க வுணர்ச்சி*** (சித். சிகா.23,5); mistaking a brilliant shell for silver. (செ.அக.).

*[இப்பி = கிளிஞ்சில், சங்கு. இப்பி + வெள்ளி. கிளிஞ்சில்கள், சோழிகள் ஆகியவை பண்டமாற்றுக் காலத்தில் சில்லறை நாணயங்களாகக் கருதப்பட்டதும் ஒப்புநோக்கத்தக்கது.]*

**இப்புறம்** *ippuram,* பெ. (n.) ***இவ்விடம்;*** this place, this side. ''இப்புறப்பரப் பெங்கணும்'' (இரகு. யாக.44).

ம. இப்புறம்.

*[இ + புறம். புறம் = புறத்தேயுள்ள இடம், பகுதி.]*

**இப்பேர்ப்பட்ட** *i-p-ēr-p-patta,* கு.பெ.எ. (adj.) ***இத்தன் மையதான;*** such as, of this kind. (செ.அக.).

ம. இப்பேர்ப்பட்ட.

*[இ + பேர் + பட்ட = இப்பேர்ப்பட்ட. பெயர் → பேர். இத்தகைய பெயர் தாங்கிய என்பது இதன் சொல் வழிப்பொருள். இத்தன்மையுடைய என்பது சொல்லாட்சிப்பொருள்.]*

**இப்பை** *ippai,* பெ. (n.). ***இருப்பை*** (L.); South Indian mahua. (செ.அக.).

தெ. இப்ப; க. இப்பெ.

*[இலுப்பை → இருப்பை → இப்பை.]*

**இப்பொழுது** *ippoḷudu,* கு.வி.எ. (adv.) ***இந்நேரம்*** (ஆ.அக.); now. ''இப்பொழுது எம்மனோரால் இயம்பு தற்கெளிதோ?'' (கம்பர்).

ம. இப்பொழுது; க. ஈஹொத்து, ஈபொத்து; தெ. இப்புடு, இபுடு; பர். இபொட; நா. இகட்; குர். ஈம்பிரி; பட. ஈக.

*[இ + பொழுது.]*

**இப்பொழுதே** *ippo̱lude,* கு.வி.எ. (adv.) ***இந்நேரத்தி லேயே;*** at this very moment, now itself.

ம. இப்போழே.

*[இ + பொழுது + ஏ.]*

**இப்போ** *ippō,* கு.வி.எ. (adv.) ***இப்பம்*** பார்க்க; see *ippam.* (செ.அக.).

ம. இப்போ.

*[இ + பொழுது = இப்பொழுது → இப்போது → இப்போ (கொ.வ.).]*

**இப்போது** *ippōdu,* கு.வி.எ. (adv.) ***இப்பொழுது*** (திவ். இயற். பெரியதிருவ.87); now, at this time. (செ.அக.).

ம. இப்போது.

*[இப்பொழுது → இப்போது.]*

**இப்போதே** *ippōdē,* கு.வி.எ. (adv.). ***இப்பொழுதே;*** this very moment. (செ.அக.). 'அப்போதைக்கு இப் போதே சொல்லிவைத்தேன்.'

ம. இப்போழே.

*[இ + பொழுது + ஏ = இப்பொழுதே → இப்போதே.]*

**இம்பர்** *imbar,* பெ. (n.) 1. ***இவ்வுலகம்;*** this material world. ''உம்பரு மிம்பரு முய்ய'' (திருவாச.9,17). -கு.வி.எ. (adv.). 2. ***இவ்விடத்து;*** here, in this place. ''இம்பரிவ்வுலக மொப்பாய்க்கு'' (சீவக.1737). 3. ***பின்;*** next, after. ''நெட்டெழுத்திம்பர்'' (தொல். எழுத்.41). (செ.அக.).

*[இம் → இம்பு → இம்பர். (மு.தா.323.) இ → இம்பர்.]*

**இம்பரர்** *imbarar,* பெ. (n.) ***இவ்வுலகத்தவர்;*** beings of this world. ''இம்பர ரேக்குறு மினிய புத்தமுது'' (திருவாட்போக்கிப். இந்திரன் சாப.6.) (செ.அக.).

*[இ → இம்பர் → இம்பரர்.]*

**இம்பல்** *imbal,* பெ. (n.) ***பலகைச் சுருக்கத்தால் தோன்றும் இடைவெளி*** (இ.வ.); slit caused by the shrinking of wood, as in a door.

*[இம்பு → இம்பல்.]*

**இம்பி** *imbi,* பெ. (n.) ***கருந்தினை*** (மூ.அ.) பார்க்க; black Italian millet. (செ.அக.).

*[இரும்பி → இம்பி.]*

**இம்பிகம்** *imbigam,* பெ. (n.) ***மிளகு;*** black pepper. (சா.அக.).

*[மிரியல் → இரியல் → இம்பு → இம்பிகம்.]*

**இம்பிடி** *imbiḍi,* பெ.எ. (adj.) ***சிறிய குறைந்த, கொஞ்சம்;*** small, little (சேரநா.).

*[இம் + பிடி.]*

**இம்பில்** *imbil,* பெ. (n.) ***பண்டைக்காலத்து விளை யாட்டு வகை*** (பாடுது.109); ancient game with music. (செ.அக.).

*[இம் → இம்பு → இம்பில்.]*

**இம்புசி** *imbuśi,* பெ. (n.) ***கடலழிஞ்சில்;*** a kind of alangium tree.

*[இம் → இம்பு → இம்புலி.]*

**இம்புராவேர்** *imburā-vēr,* பெ. (n.). ***சாயவேர்*** (இ.வ.); root, used for dying scarlet. (செ.அக.).

*[இம்பு → இம்புரி → இம்புரா + வேர்.]*

**இம்பூறல்** *imbūṟal,* பெ. (n.) ***சாயவேர்*** (வின்.) பார்க்க; root, used for dying scarlet. (செ.அக.).

*[இம்புரி → இம்பூரல் → இம்பூறல்.]*



இம்பூறல்

**இம்பூறற் சக்களத்தி** *imbūṟaṟ-cakkaḷatti,* பெ. (n.) ***சாயவேர் போன்ற ஒருவகைப் பூண்டு*** (M.M.); root which resembles imbūṟal, (செ.அக.).

*[இம்பூரி → இம்பூரல் → இம்பூறல் + சக்களத்தி.]*

**இம்மட்டும்** *i-m-maṭṭum,* கு.வி.எ. (adv.) ***இது வரை யும்;*** thus far, until now. (செ.அக.).

ம. இம்மட்டு (இவ்வாறு).

*[இ → மட்டும்.]*

**இம்மடி** *immaḍi,* பெ. (n.) ***யானை;*** elephant. (சா.அக.).

*[இரு + மடி = இம்மடி.]*

**இம்மி**[1] *immi,* பெ. (n.) 1. ***மத்தங்காய்ப் புல்லரிசி;*** grain of red little millet. ''இம்மியன நுண்பொருள்களீட்டி'' (சீவக.495). 2. ***அணு*** (வின்.); atom. minute particle. 3. ***ஒரு சிற்றெண்*** (சீவக.495,உரை); smallest fraction = the 1,075. 200-th part of a unit. 4. ***ஒரு சிறு நிறை*** (சீவக.3027); small weight.

ம. இம்மி.

*[இல் → இம் → இம்மி (த.வ.145.).]*

**இம்மி**[2] *immi,* பெ. (n.) 1. ***பொய்மை*** (அக.நி.); lie. 2. ***புலன்;*** sense. (செ.அக.).

*[இ → இம் → இம்மி.]*

**இம்மிக்கணக்கு** *immi-k-kaṇakku,* பெ. (n.) ***கீழ்வா யிலக்கக் கணக்கு;*** general term to indicate the computation of very small fractions. (செ.அக.).

*[இம்மி + கணக்கு.]*

**இம்மிணி** *immiṇi,* பெ. (n.) 1. ***மிகச்சிறிய; மிகக் குறைவு;*** a little, very little quantity. (சேரநா.). 2. ***மிகுதி;*** much.

*[இம் → இம்மி → இம்மிணி.]*

**இம்மென்கீரனார்** *immeṉkīraṉar* பெ. (n.) ***கடைக்கழ கப் புலவர்;*** a Sangam poet.

**இம்மெனல்** *im-m-eṉal,* பெ. (n.) 1. ***விரைவுக்குறிப்பு;*** onom. expr. of hurry. celerity, haste. "ஏறுடை முதல்வன் மைந்த னிம்மென வங்கட் சென்றான்" (கந்தபு.சூரபன் மன்வதை.245). 2. ***ஓர் ஒலிக்குறிப்பு;*** onom. expr. of humming, rustling, pattering. "இம்மெனப் பெய்ய வெழிலி முழங்குந் திசையெல்லாம்" (நாலடி..392). (செ.அக.).

*[இம் + எனல்.]*

**இம்மை** *immai,* பெ. (n.) ***இப்பிறப்பு;*** present birth, present state, this life. dist. fr. மறுமை, "இம்மைக்கு மேழேழ் பிறவிக்கும் பற்றாவான்" (திவ்.நாச்.6,8) "இம்மைச் செய்தது மறுமைக் காமெனும்" (புறநா. 134-1) (செ.அக.).

*[இம் → இம்மை. (சு.வி.17).]*

**இமம்**[1] *imam,* பெ. (n.) ***பனி;*** frost, snow "இமஞ்சூழ் மலையும்" (திவ்.இயற். 3,98) ***இமயம்*** பார்க்க; see *Imayam.* (செ.அக.).

இமம் > *Skt. hima.*

*[இமயம் → இமம்.]*

**இமம்**[2] *imam,* பெ. (n.) 1. ***சந்தனம்*** (நாநார்த்த.); sandal wood. 2. ***குளுமை*** (சீதளம்); coldness, chilliness.

*Skt.* hima.

*[இமம்*[1] *→ இமம். பனியைக் குறித்த சொல் குளிர்ச்சியையும் குளிர்ந்த சந்தனத்தையும் குறித்தது.]*

**இமயம்** *imayam,* பெ. (n.) 1. ***ஒரு குலமலை*** (பதிற்றுப்.43,7); Himālayan range, one of the aṣṭa-kula-parvadam. 2. ***பாற்கடலில் அமுதம் கடைவதற்குப் பயன்பட்ட மந்தரமலை*** (சீவக.963); Mt.Mandara which was used as the churning staff for churning the sea of milk. 3. ***மேரு*** (கலித்.38); Mt.Mēru. 4. ***பொன்;*** gold. "இமயம்புனை மன்றில்" (குமர.பிர.சிதம்பரச் செய்.23). (செ.அக.).

*[உம் → இம் → இமை → இமையம் → இமயம். உம் = உயர்வுக் கருத்து வினையடி. உயர்ந்த மலையைக் குறித்த இச்சொல் பனிபடர்ந்த மீமிசை ஓங்கலின் முகட்டையும் குறித்தலால், குளிர்ச்சிமிக்க பனிப்பொருளையும், அப்பனியின் மீது கதிரவனின் பொன்னொளி பட்டுப் பொன் என்னும் பொருளையும் குறித் தது. வடமொழியில் "ஹிம" என்னுஞ்சொல் பனியைக் குறிப்பி னும் அது தமிழ்ச் சொல்லின் திரிபேயாகும். சப்பானிய மொழியில் 'இம' மலையைக் குறிக்கிறது. மேலையாரிய மொழியில் "ஹிம" என்னுஞ்சொல் பனிப்பொருளிலும் மலைப்பொருளிலும் ஆளப்படவில்லை என்பது அறியத்தக்கது. "வடாஅது பனிபடுநெடுவரை" எனப் பண்டைத்தமிழில் ஆளப்பட்டிருத்தல் காண்க.]*

**இமயவரம்பன்** *imaya-varambaṉ,* பெ. (n.) ***பனி*** (இமய) ***மலையை வரம்பாகக் கொண்டு ஆண்ட சேரமன்னன்*** (பதிற்றுப்.20,பதிகம்); name of a distinguished Chēra king implying that his conquests and jurisdiction extended upto the Himālayas. (செ.அக.).

*[இமயம் + வரம்பன்.]*

**இமயவல்லி** *imaya-valli,* பெ. (n.) ***இமவான் மகளான மலைமகள்*** (பார்வதி) (திவா); Pārvati, daughter of Himavat. (செ.அக.).

*[இமயம் + வல்லி.]*

**இமயவில்லி** *imaya-villi,* பெ. (n.) ***மேருமலையை வில்லாகக் கொண்ட சிவன்*** (சீகாழித்.சேட.27); Śiva, who took up Mt. Mēru as His bow in a war with asuras. (செ.அக.).

*[இமயம் + வில்லி.]*

**இமிசை** *imiśai,* பெ. (n.) ***தீங்கு;*** violence, annoyance, torment, injury, harm. "பொய்யிலாரி மிசை செய்யார்" (நல்.பாரத.ஆசார.30) (செ.அக.).

*[இன்னாத்தல் - இன்னல்விளைத்தல். இன்னா - இன்மி - இன்மித்தல் - இமிசித்தல் (கொ.வ.) > Skt. himsa]*

**இமிர்**[1]-தல் *imir-,* 2 செ.கு.வி. (v.i.) 1. ***ஒலித்தல்;*** to sound, hum. "சுரும்பிமிர்ந் திம்மென" (கலித்.119.8). 2. ***ஊதுதல்;*** to blow. "கைவைத் திமிர்பு குழல்" (பரிபா. 19,41).

ம. இமிருக.

*[இம் → இமிர். இம் = ஒலிக்குறிப்பு.]*

**இமிர்**[2]-தல் *imir,* 2 செ.கு.வி. (v.i.) 1. ***உலர்தல்;*** to dry up. 2. ***ஆறுதல், வற்றுதல்;*** to evaporate as in boiling, to disappear, as a boil. 3. ***களை குன்றுதல்*** (கருநா.); to waste away. 4. ***அவிதல், கெடுதல்;*** to get spoiled. 'அவனுக்குக் கண் இமிர்ந்து விட்டதா?' (கொங்.வ.).

க. இமரு, இமிரு, இமுரு; தெ. இவுரு, இமுரு.

*[உம் → உமிர் → இமிர். உம் = வெப்பம்; வெப்பத்தால் உலர்தல், குறைதல்.]*

**இமில்** *imil,* பெ. (n.) ***எருத்துத் திமில்;*** hump on the withers of an Indian bull, hump of the Zebu. "எழிலேற் றிமிலின் னேற்ப முடித்தான்" (சீவக.2437) (செ.அக.).

ம. இமி.

*[உம் → இம் → இமில். உம் = கூடுதல், திரளுதல், பெருத்தல், உயர்தல்.]*

**இமிலெருது** *imil-erudu,* பெ. (n.) 1. ***திமிலுடைய எருது*** (hump + bull); humped Indian ox. 2. ***பெருமாள் மாடு;*** temple bull. (சா.அக.).

*[இமில் + எருது.]*



இமிலெருது

**இமிலை** *imilai,* பெ. (n.) ***ஒருவகைப் பறை;*** a kind of drum. "தவில்கணம் பறைகாள மோடிமிலை" (திருப்பு.220) (செ.அக.).

*[இமில் → இமிலை.]*



இமிலை

**இமிழ்¹-தல்** *imiḻ-* 2 செ.கு.வி. (v.i.) 1. ***ஒலித்தல்;*** to sound. "புள்ளின மிமிழும் புகழ் சால் விளைவயல்" (புறநா.15,4.). 2. ***யாழொலித்தல்*** (பிங்.); to buzz; to make a low continued sound, as the strings of a yāḻ. 3. ***தழைத்தல்;*** to sprout, shoot forth. "மருதிமிழ்ந் தோங்கிய நளியிரும் பரப்பின்" (பதிற்றுப்.23). 4. ***மிகுதல்;*** to abound "உண்மகி ழுவகை யூக்க மிமிழ" (பெருங்.நரவாண 7,3).

*[இம் - இமிழ். இம் = ஒலிக்குறிப்பு. இமிழ் = இன்னோசை, மகிழ்ச்சி, தழைத்தல்.]*

**இமிழ்²-தல்** *imiḻ,* 2 செ.குன்றாவி (v.t.) 1. ***கட்டுப்படுத் தல்;*** to bind, as by an order; to restrain. "ஆணையினா லிமிழ்ந்திடப்பட்டு" (விநாயகபு. 17,14). 2. ***சிமிட்டு தல்;*** to wink.

*[அம் → இம் → இமிழ். அம்முதல் = அணைத்தல், கட்டுதல்.]*

**இமிழ்³-த்தல்** *imiḻ* 2 செ.கு.வி. (v.i.) ***ஒலித்தல்*** (பிங்.); to sound, hum.

*[இமிழ்¹ பார்க்க; see imiḻ.¹]*

**இமிழ்⁴-த்தல்** *imiḻ-* 3 செ.குன்றாவி.(v.t.) ***கட்டுதல்*** to fasten or tie. "இரண்டுட னிமிழ்க் கொளீஇ" (சீவக. 1835).

*[இமிழ்² பார்க்க - see imiḻ²]*

**இமிழ்⁵** *imiḻ,* பெ. (n.) 1. ***ஒலி;*** sound, hum roar. "தெரியிமிழ் கொண்டநும் மியம்போ லின்னிசை" (மலைபடு.296). 2. ***பிணைப்பு;*** tie, bond, as of love or devotion. "இமிழ்கொளு மன்பு" (திருவானைக்.வரங் கொள்.20). 3. ***கயிறு;*** cord. "சொல்லிமிழிற் பூட்டி" (சீவக.1091) (செ.அக.).

*[இமிழ்¹ → இமிழ் (பெ.) இமிழ்¹ பார்க்க; see imiḻ.¹]*

**இமிழ்⁶** *imiḻ,* பெ. (n.) 1. ***இனிமை*** (அக.நி.); sweetness, pleasantness, charm. 2. ***இசை;*** melody. (செ.அக.).

க. இம்பு; தெ. இவிமி; து. இம்பு.

*[அம் → அமிழ் → இமிழ்.]*

**இமிழி** *imiḻi,* பெ. (n.) ***இசை*** (அக.நி.); melody. (செ.அக.).

*[இமிழ்தல் = ஒலித்தல், இசைத்தல். இமிழ் → இமிழி.]*

**இமை¹-த்தல்** *imai-,* 4 செ.கு.வி.(v.i.) ***தூங்குதல்;*** to sleep. "பூணாக நோக்கி யிமையான்" (கலித்.60) (செ.அக.).

*[அமைத்தல் = பொருத்துதல், கூடுதல். அமை → இமை. இமைத்தல் = கண்மூடுதல், தூங்குதல்.]*

**இமை²-த்தல்** *imai-,* 4 செ.குன்றாவி. (v.t.) ***இமை கொட்டுதல்;*** to wink. "அழித்திமைப்பின்" (குறள். 775) - 4 செ.கு.வி. (v.i.) 1. ***ஒளிவிடுதல்*** (திவா.); to glitter, twinkle, shine. 2. ***சுருங்குதல்;*** to diminish, shrink "இமையா வருங்கடன்" (கல்லா.7).

ம. இமய்க்குக; க. சிமிடு, சிவடு, சிவிடு; தெ. சிமிடு.

*[அமை → இமை. இமைத்தல்.]*

**இமை³** *imai,* பெ. (n.) 1. ***கண்ணிமை;*** eye lid. 2. ***கண்ணிமைக்கை;*** winking of the eye. "கண்ணிமை நொடியென" (தொல்.எழுத்.7) 3. ***கண்ணிமைப் பொழுது;*** time spent in winking. "எண்ணத் தானாமோ விமை" (திவ்.இயற்.1,31). 4. ***கண்ணிமை மயிர், கண்பீலி*** (சேரநா.); eye lash.

ம. இம; க. இமெ, எமெ; து. இமெ, சிமெ, சிம்மெ.

*[அமை → இமை.]*

**இமை**[4] *imai,* பெ. (n.) 1. ***கரடி*** (அக.நி.); bear. 2. ***மயில்*** (அக.நி.); pea-cock. (செ.அக.).

*[ஒருகா. இருமை → இமை. இருமை = கருமை.]*

**இமைக்கட்டி** *imai-k-katti,* பெ. (n.) ***இமையி லுண்டா குமோர் கட்டி;*** adenoma of the eye-lid. (சா.அக.).

*[இமை + கட்டி.]*

**இமைக்கண்** *imai-k-kan* பெ. (n.) ***சிமிட்டுக்கண்;*** constantly winking eye, continuous blinking - Blepharism. (சா.அக).

*[இமை + கண்.]*

**இமைக்குரு** *imai-k-kuru,* பெ. (n.) ***இமையிலுண்டா கும் சிறு கட்டி;*** sty. (சா.அக.).

*[இமை + குரு.]*

**இமைக்குலைவு** *imai-k-kulaivu,* பெ. (n.) ***கண்ணிமை யிலேற்படும் நிலையழிவு;*** sagging of the skin of the eye-lid, due to atrophy of the tissues - Blepharochalasis. (சா.அக.).

*[இமை + குலைவு.]*

**இமைக்கேடு** *imai-k-kēdu,* பெ. (n.) ***வளியினால் இமைகளுக்கேற்படும் உணர்ச்சியழிவு;*** paralysis of the muscles of both eye-lids. (சா.அக.).

*[இமை + கேடு.]*

**இமைகொட்டு-தல்** *imai-kottu-,* 5 செ.கு.வி. (v.i.) ***கண்ணிதழ் சேர்தல்;*** to wink, twinkle. (செ.அக.).

ம. இமவெட்டுக; க. எமெயிக்கு.

*[இமை + கொட்டுதல். கொட்டுதல் = அடித்தல், ஒன்றோ டொன்று இணைந்து பொருந்துதல்.]*

**இமைச்சந்தி** *imai-c-candi,* பெ. (n.) ***கண்ணிமையி னுட்பக்கமுள்ள யிடைவெளி; இது வெள்விழிக்கும் இமைக்கும் நடுவேயுள்ளது;*** intervening crevice between the eyelids and the white of the eye. (சா.அக.).

*[இமை + சந்தி.]*

**இமைதிறத்தல்** *imai-tirattal,* பெ. (n.) ***மயிர் உதிர்ந்து இமை வெளித்தோன்றல்;*** eyelids losing hairs and opening out. (சா.அக.).

*[இமை + திறத்தல்.]*

**இமை திறந்த கண்** *imai-tiranda-kan,* பெ. (n.) 1. ***விழித்த கண்;*** wide-open eyes. 2. ***இமை மயிர் உதிர்ந்த கண்;*** eye lids deprived of lashes. 3. ***முண்டக்கண்; அளவிற்கு மேல் விலகிக் காணுங் கண்;*** blepharodiastasis. (சா.அக.).

*[இமை + திறந்த + கண்.]*

**இமைநீர்** *imai-nīr,* பெ. (n.) ***கண்ணீர்;*** tear, drops of water secreted from the eyes. (சா.அக.).

*[இமை + நீர்.]*

**இமைநீர்ப்பாய்ச்சல்** *imai-nīr-p-pāyccal,* பெ. (n.) ***தலையிலுள்ள நீர் இமை நரம்பின் வழியாகக் கண்ணிமையில் இறங்கி, வீக்கமுண்டாக்கும் கண்ணோய்;*** disease of the eye-lids marked by swelling supposed to be due to the draining of fluid from the head. (சா.அக.).

*[இமை + நீர் + பாய்ச்சல்.]*

**இமைப்பளவு** *imaippalavu,* பெ. (n.) ***இமைக்கின்ற நேரம்; சிறிது நேரம்; கண்ணிமைப்போது;*** time taken in winking; a moment. "இமைப்பளவுந் துன்ப மொன்றில் லாத" (சூளா.துற.221).

ம. இமப்பளவு.

*[இமைப்பு + அளவு. அளவு = நேரம்.]*

**இமைப்பு** *imaippu,* பெ. (n.) 1. ***இமைப்பளவு*** பார்க்க; see *imaippalavu.* "இழைபக விமைப்பின் எய்திட்டு" (சீவக.1680) 2. ***விளக்கம்;*** brilliance. "மின்னுறழிமைப் பிற் சென்னிப் பொற்ப" (திருமுரு.85). (செ.அக.).

*[இமை → இமைப்பு.]*

**இமைப்பொழுது** *imai-p-poludu,* பெ. (n.) ***கண்ணி மைக்கும் நேரம்;*** brief moment of time, as the twinkling of the eye. "இமைப்பொழுதும் என்னெஞ்சில் நீங்கா தான் தாள் வாழ்க" (திருவாச.1,2). (செ.அக.)

*[இமை + பொழுது.]*

**இமைபிற-த்தல்** *imai-pira-,* 3. செ.கு.வி. (v.i.) ***இமைத் தல்;*** to wink, as the eyes. "உம்பரிமை பிறப்ப" (பரிபா.17,31).

*[இமை + பிற. பிறத்தல் = தோன்றுதல், செய்தல். இமைபிறத்த லாவது இமைக்குந் தொழில் வெளிப்படுதல்.]*

**இமை பொருந்து-தல்** *imai-porundu-,* 15. செ.கு.வி. (v.i.) ***உறங்குதல்*** (திவ்.நாச்.5,4); sleep, close one's eyelids. (செ.அக.).

*[இமை + பொருந்துதல். பொருந்துதல் = சேர்தல், மூடுதல்.]*

**இமையவர்** *imaiyavar,* பெ. (n.) ***தேவர்*** (திவ்.பெரி யாழ்.4.7,4); celestials who have characterstic eyelids which do not bat. (செ.அக.).

ம. இமயவர், இமயோர்.

*[இமையாதவர் → இமையார் → இமையவர் (கொ.வ.).]*

**இமையாடு-தல்** *imai-yādu-,* 5. செ.கு.வி. (v.i.) ***கண்கொட்டுதல்;*** wink as the eyes. (செ.அக.).

*[இமை + ஆடுதல். ஆடுதலாவது செயற்பாடுறுதல்.]*

**இமையார்** *imaiyār,* பெ. (n.) ***தேவர்;*** gods, who never wink their eyes. "இமையாரின் வாழினும் பாடிலரே" (குறள்.906) (செ.அக.).

ம. இமயவர், இமயோர்.

*[இமையாதவர் → இமையார்.]*

**இமையொட்டி** *imai-yotti,* பெ. (n.) ***இயற்கையாகவே இமைகள் ஒன்றோடொன்று ஒட்டிக் கொண்டு வளருதல்;*** growing together or adhesion of the eye-lids - Blepharosynechia. (சா.அக.).

*[இமை + ஒட்டி.]*

**இமையொட்டிக் கொள்ளல்** *imai-y-otti-k-kollal,* பெ. (n.) ***கண்ணின் பீளை அதிகரிப்பதால் இமை மூடிக் கொள்ளுதல்;*** eye-lids adhering together from excessive purulence. (சா.அக.).

*[இமை + ஒட்டி + கொள்ளல்.]*

**இமையோர்** *imaiyōr,* பெ. (n.) ***இமையவர்*** (தொல். பொருள்.248) பார்க்க; see *imaiyavar.* (செ.அக.).

*[இமை → இமையோர்.]*

**இமையோரம்** *imaiyōram,* பெ. (n.) ***மயிர் முளைத்திருக்கும் கண்ணிமையின் நுனி;*** edge or the margin of the eye-lids - Tarsus. (சா.அக.).

*[இமை + ஓரம்.]*

**இய-த்தல்** *iya-,* 3 செ.குன்றாவி. (v.t.) ***கடத்தல்;*** to pass beyond; excel, transcend. "உணர்ந்துரு வியந்தவிந் நிலைமை" (திவ்.திருவாய். 1,3,6) (செ.அக.).

*[உ-உய்-இய்-இய. இயத்தல் = செல்லுதல், கடத்தல் இய என்னும் வினைச்சொல். யா → யாத்திரை. **இந்தி.** ஜா → ஜாத்திரை, என இந்தியிலும், பிற மொழிகளிலும், ஏ → ஏகு, எனப் பிற்காலத் தமிழிலும் மருவியது.]*

**இயக்க சத்துவம்** *iyakka - cattuvam,* பெ. (n.) ***பத்து மெய்ப்பாடுகளுள்*** (சத்துவங்களுள்) ***இயக்கசாதிப் பெண்ணின் சத்துவம்*** (கொக்கோ.4); (செ.அக.). natural disposition of a woman classed under the yaksa type.

*[இயக்கர் + சத்துவம்.]*

**இயக்க நரம்பு** *iyakka - narambu,* பெ. (n.) ***அசைவுறும் நரம்பு;*** nerve whose function is motion; vasomotor nerves. (சா.அக.).

*[இயக்கம் + நரம்பு.]*

**இயக்கம்**[1] *iyakkam,* பெ. (n.) 1. ***நடமாட்டம். "நாணகத் தில்லார் இயக்கம்"*** (குறள்.1020); motion, moving, about, as showing signs of life, activity. 2. ***அசைவுக் குறிப்பு;*** expression as of the eyes "கண்ணிணையியக் கம்" (மணி.25-8). 3. ***வழி;*** way, path. "ஏறிநீ ரடைகரை யியக்கந் தன்னில்" (சிலப்.10.90). 4. ***இசைப்பாட்டு வகை, குழலிசைத்தல்;*** (சிலப்.3,67.); musical composition of four different kinds, viz., முதனடை, வாரம், கூடை, திரள். 5. ***இசை நடப்பு;*** pitch of three kinds, viz., powerful, weak and mean மெலிவு, சமன், வலிவு என்னும் மூவகை யியக்கம், "மூவகையியக்கமு முறையு ளிக் கழிப்பி" (சிலப்.8,42.). 6. ***நன்மை, மேன்மை, பெருமை*** (திவா.); greatness, goodness, excellence. 7. ***ஒளி;*** shine, splendour. 8. ***வாழ்வு;*** livelihood. 9. ***மரபு, பழக்கம்;*** custom, manner.

ம. இயக்கம்; க. எசக; தெ. எசகமு (மகிழ்வு); து. எத்து, எச்சு.

*[இய → இயக்கம்.]*

'இய்' என்னும் தமிழ் வினை ஆரிய மொழிகளில் 'இ' என்று குறுகி வழங்குகிறது. *G.K.* imen, *L.* imus; iter; *slav.* idu = I go, iti = to go *Goth.* iddja = I went. இ(இ.வே; அ.வே) = செல்; இத் = செல்கை, இத்த = போய், இத்தம் = வழி (ச.பி.) இயங்கு - இக் (ikh) = இயங்கு, செல்; இயங்கு - இங்க் (inkh) = இயங்கு, செல், இயங்கு - இங் (இ.வே.ing) - இயங்கு, செல், ஏ(இ.வே.) = ஏகு, நெருங்கு, அடை, ஏத்த = சென்று, அடைந்து (இ.வே.) ஏ → யா,(இ.வே.) = செல், யாத்த = போய்(இ.வே.) யாத்ரி(இ.வே.) = செலவு வழிப்போக்கு.

இ(இய்)ஏ(ஏகு) என்னும் இருவினைகளையும், வேதமொழி யில் செல்லுதல் சென்றடைதல், அடைதல், பெறுதல் என்னும் பொருள்களில் ஆண்டிருக்கின்றனர். இப்பொருள்களில் அவை 'எய்து' என்னும் வினையை ஒத்திருக்கின்றன. எய்து தல் = சென்றடைதல், அடைதல், பெறுதல், இய் - எய் - எய்து.

செல்லுதல் என்னும் பொருளில் வேத மொழியில் வழங்கும் 'கம்' (gam) என்னுஞ் சொல், தியூத்தானியத்திலுள்ள gan(E.go) என்னும் சொல்லைப் பெரிதும் ஒத்திருத்தல் காண்க.

செலவு என்று பொருள்படும் கம (gama), கமன (gamana) முதலிய சொற்களில் 'கம்' என்பது முதனிலையாயிருப்பினும், கத (போய்). கதி(போக்கு) முதலிய சொற்களில் 'க' (ga) என்பதே முதனிலையாயிருப்பது கவனிக்கத் தக்கது. மேலும் 'gan' என்பது 'gam' என்று திரிதலும் இயல்பே. (வ.மொ.வ. 16.17.).

**இயக்கம்**[2] *iyakkam,* பெ. (n.) ***வடதிசை*** (வின்.); north quarter, which is the abode of the yakṣas. (செ.அக.).

*[இய → இயக்கம்.]*

**இயக்கம்**[3] *iyakkam,* பெ. (n.) 1. ***கிளர்ச்சி;*** movement, agitation. 2. ***செயல், அமைப்பு, விளம்பரம்;*** activity, enterprise; 3. ***கூட்டுறவு இயக்கம்;*** co-operative movement. (செ.அக.).

ம. இயக்கம்.

*[இயங்கு → இயக்கம்.]*

**இயக்கமாதர்** *iyakka-mādar,* பெ. (n.) ***தேவ கன்னியர்;*** celestial damsels. (ஆ.அக.).

*[இயக்கர் + மாதர்.]*

**இயக்கர்** *iyakkar,* பெ. (n.) ***பதினெண் கணத்துளொரு கணத்தார்*** (கம்பரா.தாடகை.26); yakṣas, a class of celestials, one of padinen - kaṇam. (செ.அக.).

ம. இயக்கன்.

*[இயம் → இயக்கர்.]*

**இயக்கர் கோமான்** *iyakkar-kōmāṉ,* பெ. (n.) ***குபேரன்*** (சூடா); kubēra, king of the yakṣas. (செ.அக.).

*Skt.* Yakṣa.

*[இயக்கர் + கோமான். கோமகன் → கோமான் = அரசன்.]*

**இயக்கர் வேந்தன்** *iyakkar-vēndan,* பெ. (n.) ***இயக்கர் கோமான்*** (பிங்.) பார்க்க; see *iyakkar-kōmān.* (செ.அக.).

*[இயக்கர் + வேந்தன்.]*

**இயக்கல்** *iyakkal,* பெ. (n.) ***மின்னல்;*** lightning. (ஆ.அக.).

*[இயங்கு → இயக்கு → இயக்கல்.]*

**இயக்கன்**[1] *iyakkan,* பெ. (n.) 1. ***இயக்ககணத்தான்*** (கம்பரா.தாடகை.26); yakṣa. 2. ***குபேரன்*** (திவா.); Kubēra, king of the yakṣas. (செ.அக.).

*[இயம் → இயக்கன்.]*

**இயக்கன்**[2] *iyakkan,* பெ. (n.) ***தலைமையாக நின்று நடத்துபவன்*** (கலித்.95,உரை.); leader.

*[இய → இயக்கு → இயக்கன். இயக்குதல். முன்னின்று நடத்து தல்.]*

**இயக்கி** *iyakki,* பெ. (n.) 1. ***இயக்கப்பெண்*** (சீவக. 1219); female yakṣa. 2. ***அறத்தெய்வம்*** (பிங்.); goddess of virtue. (செ.அக.).

இயக்கி > *Skt.* yakṣi.

*[இயக்கு → இயக்கி. இயக்கி> Skt. yakṣi.]*

**இயக்கி காசு** *iyakki-kāsu,* பெ. (n.) ***இயக்கியின் உருவம் பொறித்த ஒரு பழைய நாணயம்*** (சேரநா.); old coin bearing the figure of a yakṣi.

*[இயக்கி + காசு.]*

**இயக்கினி** *iyakkini,* பெ. (n.) ***கண்டங்கத்திரி*** (மலை.) பார்க்க; prickly plant.

*[இயக்கு → இயக்கி → இயக்கினி. இனி - பெண்பாலீறு. ஒ.நோ. நல்லி → நல்லினி.]*

**இயக்கு**[1]**-தல்;** *iyakku-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. ***செலுத்துதல்;*** to drive, cause to go. "தோணியியக்கு வான்" (நாலடி.136). 2. ***தொழிற்படுத்துதல்;*** to activate and influence the movements of, as God prompts, all living beings. 3. ***பழக்குதல்;*** to train or break in, as a bull or a horse. 'காளையை இயக்குகிறது' (வின்.). 4. ***ஒலிப்பித்தல்;*** to cause, to sound. "கோடுவாய் வைத்துக் கொடுமணி யியக்கி" (திருமுருகு.246). 5. ***நடத்துதல்;*** to conduct. "இயக்கக் கடவனாகவும்" (S.I.I.i,79) (செ.அக.).

ம. இயக்குக.

*[இய → இயங்கு → இயக்கு.]*

**இயக்கு**[2] *iyakku,* பெ. (n.) ***போக்கு;*** motion, as of a stream; flowing, going, marching, "நீரியக்கென்ன நிரை செல னெடுந்தேர்" (மலைபடு.571) (செ.அக.).

*[இயங்கு → இயக்கு.]*

**இயக்குநர்** *iyakkunar,* பெ. (n.) ***இயக்குபவர், தலைவர்;*** director, leader.

*[இயக்கு → இயக்குநர்.]*

**இயங்கல்** *iyangal,* பெ. (n.) 1. ***நடத்தல்;*** walking. 2. ***உயிர்த்தல்;*** breathing, respiring. (சா.அக.).

*[இயங்கு → இயங்கல்.]*

**இயங்கியற்பொருள்** *iyangiyar-poruḷ* பெ. (n.) ***நகரும், இடம் பெயரும் பொருள்*** (நன்.259,விருத்.); living, animate and mobile beings. (செ.அக.).

*[இயங்கு + இயற்பொருள். இயங்குகின்ற அல்லது அசைகின்ற உயிர்த்திரள்கள்.]*

**இயங்கியோர்** *iyangiyōr,* வி.அ.பெ. (vpl.n.) ***சென்றோர்;*** onward mover. "பெருவரை அத்தம் இயங்கியோ ரே" (அகநா.359).

*[இயங்கு + ஆர் = இயங்கியார் → இயங்கியோர். ஆர் → ஓர் (திரிபு.).]*

**இயங்கு**[1]**-தல்** *iyangu-,* 15 செ.கு.வி. (v.i.) 1. ***அசைதல்;*** to move. stir. 2. ***போதல்*** (திவா.); to go, travel, proceed. 3. ***உலாவுதல்*** (பிங்.); to walk about, promenade. (செ.அக.).

ம. இயங்ஙுக.

*[இய → இயங்கு.]*

**இயங்கு**[2]**-தல்** *iyangu-,* 15 செ.கு.வி. (v.i.) ***ஒளி செய்தல்*** (நாநார்த்த.); to shine, glitter. (செ.அக.).

*[ஒருகா. வயங்கு → வியங்கு → இயங்கு.]*

**இயங்கு**[3] *iyangu,* பெ. (n.) ***செல்லுகை;*** movement, act of going. "இயங்கிடையறுத்த கங்குல்" (சீவக.1360) (செ.அக.).

*[இய → இயங்கு.]*

**இயங்குதி** *iyangudi,* செ.கு.வி.மு. (v.i.fin) ***செல்கின்றாய்*** (அகநா.12.3); you go, move (2nd person, sing. finite verb).

*[இயங்கு + தி.]*

**இயங்குதிசை** *iyangu-tišai,* பெ. (n.) ***மூச்சுக்காற்று இயங்கும் மூக்குத்துளை*** (வின்.); nostril through which the breathing passes. (செ.அக.).

*[இயங்கு + திசை.]*

**இயங்குதிணை** *iyangu-tinai,* பெ. (n.) ***அசையும் பொருள்*** (நன்.299,விருத்.); class of things that move, opp. to நிலைத் திணை. (செ.அக.).

*[இய → இயங்கு + திணை.]*

**இயங்குநர்** *iyangunar,* பெ. (n.) ***வழிப்போவார்;*** travellers. "இயங்குநர் மடிந்த வயந்திகழ் சிறுநெறி" (நற். 257).

*[இயங்கு + நர்.]*

**இயங்குபடையரவம்** *iyangu-padai-y-aravam,* பெ. (n.) ***பகையரணை முற்றுதற்கெழுந்த படையின் செலவால் உண்டாம் ஆரவாரத்தைக் கூறும் புறத்துறை***

(தொல்.பொருள்.63); literary theme describing the uproar caused by the march of a besieging army. (செ.அக.).

*[இயங்கு + படை + அரவம்.]*

**இயங்கெயில்** *iyaṅgeyil,* பெ. (n.) ***முப்புரம்;*** legendary three forts. "இயங்கெயி லெய்யப் பிறந்த எரிபோல" (கலித்.150-2.).

*[இயங்கு + எயில்.]*

**இயங்கொலி** *iyaṅgoli,* பெ. (n.) ***பரவுகின்ற ஒலி;*** vibrating sound. "இயங்கொலி நெடுந்திண்தேர் கடவுமதி விரைந்தே" (கலித்.135-20).

*[இயங்கு + ஒலி.]*

**இயத்து** *iyattu,* பெ. (n.) ***இயற்று***[2] (யாழ்ப்.) பார்க்க; implement, utensil. (செ.அக.).

*[இயற்று → இயத்து (கொ.வ.).]*

**இயந்தா** *iyandā,* பெ. (n.) 1. ***யானைப்பாகன்;*** mahout. 2. ***தேரோட்டி;*** driver of chariots, etc. (செ.அக.).

*[இய = செல், நட, நடத்து. இய → இயந்தன் → இயந்தா.]*

**இயந்திரம்**[1] *iyandiram,* பெ. (n.) 1. ***இயங்குபொறி;*** machine; "இயந்திரப் படிவ மொப்பான்" (கம்பரா. உருக்கா.78). 2. ***தேர்*** (திவா.); car, chariot (செ.அக.).

*[இய → இயங்கு → இயந்திரம்.]*

**இயந்திரம்**[2] *iyandiram,* பெ. (n.) 1. ***பாண்டவகை*** (நாநார்த்த.); a kind of vessel or receptacle. 2. ***கண்ணி;*** net. (செ.அக.).

*[ஒருகா. உயந்திரம் → இயந்திரம். உய்த்தல் = உட்செலுத்துதல்.]*

**இயந்திரமயில்** *iyandira-mayil,* பெ. (n.) ***மயிற்பொறி*** (வின்.); legendary flying machine fashioned after the pattern of a peacock. (செ.அக.).

*[இயந்திரம் + மயில்.]*

***மயிற்பொறி*** பார்க்க; see *mayiṟpoṟi.*

**இயந்திரி-த்தல்** *iyandiri-,* 4 செ.கு.வி. (v.i.) 1. ***இயங்குபொறி அமைத்தல்*** (சீவக.103,உரை.); to design or construct, as mechanism. 2. ***இயந்திரத்தி லாட்டுதல்;*** to press, as seeds in an oil mill "இக்கெனவே செக்கிடையிட் டியந்திரிப்பர்" (சிவதரு. சுவர்க்க. நரகவி.161). 3. ***மந்திரம் ஓதி இயந்திரத் தகட்டில் எழுதுதல்;*** to write on a thin copper sheet chanting mantras.'மந்திரக்காரர் செப்புத்தகட்டில் யந்திரித் துக் கொடுத்தார்.' (உ.வ.), (செ.அக.).

*[இயம் = ஒலியெழுப்பும் அல்லது இயக்கப்படும் கருவி. இயம் + திரித்தல். திரித்தல் = ஆட்டுதல், அசைத்தல், செய்தல்.]*

**இயந்தை** *iyandai,* பெ. (n.) ***செவ்வழி யாழ்த்திறவகை*** (பிங்.); ancient secondary melody-type of the cevvaḻi class. (செ.அக.).

*[இயம் → இயந்தை.]*

**இயபரம்** *iya-param,* பெ. (n.) ***இம்மை மறுமை;*** this world and the next, here and hereafter. "இயபரமாவன வின்னம் பரான்ற னிணையடியே" (தேவா.252,9).

*[இகம் + பரம் = இகபரம் → இயபரம். இவ் → இவம் → இகம் (இவ்வுலகம்). பரு → பரம் (பேரண்டம், எல்லா உலகங்களை யும் உள்ளடக்கிய அகல்விசும்பு.]*

**இயம்**[1] *iyam,* பெ. (n.) ***முழைஞ்சினையுடைய மலை;*** high hill, mountain. "விடரியங் கண்ணிப் பொதுவனைச் சாடி" (கலித்.101-22).

*[இய → இயம். உட்செலும் பாங்குடைய முழைஞ்சு.]*

**இயம்**[2] *iyam,* பெ. (n.) 1. ***சொல்*** (திவா.); word. 2. ***ஒலி;*** (சூடா.); sound. 3. ***இசைக்கருவி*** (பிங்.); musical instrument. (செ.அக.).

*[இய → இயம்.]*

**இயம்**[3] *iyam,* பெ. (n.) ***ஈ;*** fly. (செ.அக.).

*[ஒருகா. ஈ + அம் = ஈயம் → இயம். ஒ.நோ. குட + அம் = குடம். தட = வளைவு. தட + அம் = தடம் = வளைந்த பாதை.]*

**இயம்பல்** *iyambal,* பெ. (n.) 1. ***சொல்*** (அக.நி.); word. 2. ***அம்பல், பழமொழி;*** gossip about love affairs, proverb, old saying. (செ.அக.).

*[இய → இயம்பு → இயம்பல். இசைக்கருவியினின்றெழும் இழும் எனும் மெல்லோசை போல் இனிமையாகக் குரலெழுப் பிப் பேசுதல்.]*

**இயம்பு**[1]**-தல்** *iyambu-,* 11 செ.கு.வி. (v.i.) 1. ***ஒலித்தல்;*** to sound. "ஓசை... கடிமனையியம்ப" (புறநா.36). 2. ***இசைக்கருவி ஒலித்தல்;*** to sound, as a musical instrument. "வென்றிகெழு தொண்டகம் வியன்றுடியி யம்ப" (கந்தபு.வள்.92)- 4 செ.குன்றாவி (v.t.). 1. ***சொல்லுதல்*** (பிங்.); to say, speak, utter. 2. ***துதித்தல்;*** to praise. "ஞானக்கொடிதனை... இயம்புவோமே" (குற்றா.குற.7); (செ.அக.).

ம. இயம்புக.

*[இய → இயம்பு.]*

**இயம்பு**[2]**-தல்** *iyambu-,* 11 செ.கு.வி. (v.i.) ***கூப்பிடுதல்;*** to call, as for help. "மடப்பிடி... நெடுவரை யியம்பும்" (மலைபடு.309,உரை), (செ.அக.).

*[இயம்புதல் = ஒலித்தல், அழைத்தல், விளித்தல். குறிப்பிட்ட ஓசை யெழுப்பி அழைத்தல்.]*

**இயம்புணர்தூம்பு** *iyambuṇar-tūmbu,* பெ. (n.) ***நெடு வங்கிய மென்னும் இசைக்கருவி*** (ஐங்குறு.377); ancient wind instrument. (செ.அக.).

*[இயம்பு + உணர் + தூம்பு. சொல்லக்கருதும் அல்லது வெளியி டக் கருதும் உணர்வினை இசையான் வெளிப்படுத்தும் தூம்பா கிய நெடுவங்கியம் என்னும் நீண்ட புல்லாங்குழல்.]*

**இயமகம்** *iyamagam,* பெ. (n.) ***மடக்கணி*** (தேவா.582); style of versification where a word or phrase is repeated but connotes different senses.

அடிதோறும் ஒன்றும் பலவுமாகிய சீர்கள் மடங்கிவருவது.
பொன்னடி மாதவர் சேர்புற வத்தவன்
பொன்னடி மாதவர் சேர்புற வத்தவன்
பொன்னடி மாதவர் சேர்புற வத்தவன்
பொன்னடி மாதவர் சேர்புற வத்தவன்.

*[இயம் + அகம். இசையொழுங்கினை உட்கொண்டது. இயமகம் → யமகம் எனத் திரிந்தது. இயமகம் > Skt. yamaka.]*

**இயமகாமாலை** *iyama-kāmālai,* பெ. (n.) ***காமாலை வகை*** (தஞ்.சரசு.iii,122); a kind of jaundice.

*[இயமம் + காமாலை.]*

**இயமநியமம்** *iyama-niyamam,* பெ. (n.) ***இயல்மம்*** பார்க்க; see *iyalmam.* (அபி.சிந்.).

*[இய → இயல் → இயல்மம் → இயமம். இய = நட. இயமம் = நடத்தை. இயமநியமம் என்பது எதுகைபற்றி வந்த அடுக்குத் தொடர்.]*

**இயமம்** *iyamam,* பெ. (n.) ***ஒகத்திற்குரிய எண் வகை உறுப்புகளுள் ஒன்று*** (தொல்.பொருள்.75,உரை); abstention from lying, killing, theft, lust, covetousness etc., one of the elements of aṣṭāṅga yōgam. (செ.அக.).

*[இயல்மம் → இயமம். இயல்மம் = ஒழுங்கு.]*

**இயமரம்** *iya-maram,* பெ. (n.) ***பறைவகை*** (பதிற்றுப்.50, உரை); a kind of ancient drum. (செ.அக.).

*[இயம் → இயமரம்.]*

**இயமன்** *iyamaṉ,* பெ. (n.) ***எமன்;*** yama, god of death. (செ.அக.).

இயமன் > Skt. yama.

*[இய - இயமன் = செலுத்துவோன்.]*

**இயமனூர்தி** *iyamaṉ-ūrdi,* பெ. (n.) ***எருமைக்கடா*** (பிங்.); he-buffalo, yama's vehicle.

*[இயமன் + ஊர்தி.]*

**இயமான்** *iyamāṉ,* பெ. (n.) ***இயவான் 1.*** பார்க்க; see *iyavāṉ-1,* "நான்மறை யோனுமகத்திய மான்பட" (திருவாச.14.14), (செ.அக.).

இயமான் > *Skt* yajamāna.

*[இய → இயமான்.]*

**இயமானன்** *iyamāṉaṉ* பெ. (n.) ***இயவான்*** பார்க்க; see *iyavāṉ* 1. ***வேள்வித் தலைவன்;*** sacrificer. "இயமா னனாம் விமலா" (திருவாச.1,36). 2. ***ஆதன்*** (ஆன்மா); life, soul, "இருசுடரோ டியமான னைம்பூத மென்று" (மணி.27,89), (செ.அக.).

இயமானன் > *Skt.* yajamāna.

*[இய → இயவன் → இயவான் → இயமான் → இயமானன் > Skt. yajamāna. ஒ.நோ. இயவுள் = கடவுள். இயவு = வழி. இயவுள் = வழிநடத்துபவன், தலைவன். இயவான் தமிழில் வழக்கிழந்த காலத்திற்கு முன்பே வடமொழி கடன்கொண்டது.]*

**இயர்** *iyar,* இடை. (part.) ***வியங்கோள் ஈறு;*** vbl. opt. ending. "பொய்யா கியரோ பொய்யா கியரோ" (புறநா. 233). (செ.அக.).

*[ஈ → ஈயர் → இயர் (வியங். வி.மு. ஈறு)]*

**இயல்[1](லு)-தல்** *iyal-,* 13 செ.கு.வி. (v.i.) 1. ***கூடியதாதல்;*** to be possible. "இயல்வது கரவேல்" (ஆத்திசூ.). 2. ***நேர்தல்;*** to befall, happen. "இயன்ற தென் பொருட்டினா லிவ்விட ருனக்கு" (கம்பரா.குகப். 40). 3. ***பொருந்துதல்;*** to be associated with. "வெயிலி யல் வெஞ்சுரம்" (வின்.). 4. ***தங்குதல்;*** to abide. "மாவியல்கின்ற வீரமகேந்திர புரத்துக்கு" (கந்தபு. ஏமகூ.4). 5. ***செய்யப்படுதல்;*** to be made or constituted. "சிறியவர்கட் கெற்றா லியன்றதோ நா" (நாலடி.353). 6. ***அசைதல்*** (திருமுருகு.215); to move, dance, frisk about. 7. ***நடத்தல்;*** to go on foot; to move forward. "அரிவையொடு மென்மெல வியலி" (ஐங்குறு.175). 8. ***உலாவுதல்;*** to walk about gaily. "பீலி மஞ்ஞையி னியலி" (பெரும்பாண்.331)— 8 செ.குன்றாவி. (v.t.) 1. ***உடன்படுதல்;*** to accept, agree to. "யாதுநீ கருதிற் றன்ன தியன்றனன்" (ஞானவா. வைராக்.42). 2. ***அணுகுதல்*** (கலித். 83,16); to draw near, approach. 3. ***ஒத்தல்;*** to resemble; to be like. "பொன்னியலுந் திருமேனி" (திருவாச.49.6). 4. ***போட்டியிடுதல்;*** to compete, wager. "இயலுமாலொடு நான்முகன்" (தேவா. 601,8) (செ.அக.).

ம. இயலுக; க. ஈலு (விலங்குகள் மக்களுடன் கொள்வது போன்ற பிணைப்பு); து. இயவுனி.

*[உய் → இய் → இய → இயல்.]*

**இயல்[2]** *iyal,* பெ. (n.) 1. ***தன்மை;*** nature, property, quality. "ஈண்டு செலன் மரபிற் றன்னியல் வழாஅது" (புறநா.25,2). 2. ***தகுதி;*** fitness, worth. "இயலன் றெனக்கிற்றிலை" (திருக்கோ.240). ம. இயல். 3. ***ஒழுக்கம்*** (சூடா); good conduct; conduct appropriate to one's status, upbringing, rank or office. 4. ***உழுவலன்பு;*** affection continued from birth to birth. "தொல்லி யல் வழாமை" (கலித்.2). 5. ***செலவு;*** pace; gait, as of a horse. "புள்ளியற் கலிமா" (தொல். பொருள்.194). 6. ***ஒப்பு;*** likeness, similitude. "மின்னியற்சடை மாதவர்" (திருவிளை. குண்டோ.2). 7. ***இயற்றமிழ்*** (பிங்.); literary Tamil. 8. ***நூல்;*** treatise esp. the Āgama works. "இயலோதேல்" (சைவச. பொது.346). 9. ***நூலின் பகுதி;*** section of a work containing chapters treating of a series of subjects or things in order; chapter தொல்காப்பியத்தில் செய்யுளியல் உவமவியல் முதலியன. 10. ***மாலியப் பாடல்களை ஓதுதல்;*** (திவ்வியப்பிரபந்தத்தைச் சேர்ந்து நின்று ஓதுகை); chanting in a chorus the Divya-p-pirapandam, constituting the vaiṣṇava sacred hymns (செ.அக.). 11. ***ஆற்றல்;*** strength; power. 12. ***அழகு;*** beauty, delicacy. 13. ***நாட்டியத்தாளம்;*** dancing beats. "இயலைந்தும்" (சிலப்.அரங்.வெண்பா.).

ம. இயல்; க. இம்புகை.

*[இய → இயல்.]*

**இயல்**[3] *iyal,* பெ. (n.) ***தம்பலப் பூச்சி;*** scarlet insect called lady fly - (சா.அக.).

*[இய → இயல்.]*

**இயல்**[4] *iyal,* பெ. (n.) ***மாறுபாடு;*** rivalry, competition. "இயலாடிய பிரமன்னரி யிருவர்க்கறி வரிய" (தேவா. 979,9). (செ.அக.).

*[இகல் → இயல் (கொ.வ).]*

**இயல்**[5] *iyal,* பெ. (n.) 1. ***சாயல்*** (நாநார்த்த.); resemblance. 2. ***பெருமை;*** greatness. "இது தமிழ்முனி வன் வைகுமியற் குன்றம்" (கம்பரா. மீட்சிப்.174).

*[இய → இயல்.]*

**இயல்**[6]**(லு)-தல்** *iyal-,* 8 செ.குன்றாவி (v.t.) 1. ***சித்திர முதலியன எழுதுதல்;*** to paint, draw. "புது வதியன்ற மெழுகுசெய் படமிசை" (நெடுநல்.159), (செ.அக.). 2. ***கைக் கொள்ளுதல், சேர்தல், அணிதல்;*** to have, to be joined or united, be associated with, to put on, assume. (சேரநா).

ம. இயலுக; க. ஈலு; தெ. ஈலுவு (மதிப்பு, ஒன்றுதல்); து. இயவுனி (போதியதாதல்).

*[இய → இயல் → இயலுதல்.]*

**இயல்பகத்திணை** *iyalbagattiṇai,* பெ. (n.) ***அவ்வவ் வியல்பைக் கொண்டு பொருளைக் காட்டுவது;*** classification according to the nature and content of things. (ஆ.அக.).

*[இயல்பு + அகம் + திணை.]*

**இயல்பளவை** *iyalbaḷavai,* பெ. (n.) 1. ***சொல்லின் பொருளைச் சூழ்நிலையால் உறுதிப்படுத்தும் ஆணை*** (சந்தர்ப்பத்தினால் நிச்சயிக்கும் பிரமாணம்). (சி.சி. அளவை 1.); determination of the meaning of a word from the context; one of four kinds of judgement. (செ.அக.).

*[இயல்பு + அளவை.]*

**இயல்பாயிரு-த்தல்** *iyalbāyiru-,* 4 செ.கு.வி. (v.i.) ***செல்வாக்கோடிருத்தல்*** (வின்.); to be influential or powerful. (செ.அக.).

*[இயல்பு + ஆய் + இருத்தல்.]*

**இயல்பு**[1] *iyalbu,* பெ. (n.) 1. ***தன்மை;*** nature, property, quality. "இயல்புகாண்டோற்றி மாய்கை" (சி.சி.1.3.). 2. ***ஒழுக்கம்;*** proper behaviour, good conduct. "சால்பும் வியப்பு மியல்பும் குன்றின்" (குறிஞ்சிப்.15). 3. ***நற் குணம்;*** goodness "ஏதிலா ரென்பாரியல்பில்லார்" (நான் மணி.44). 4. ***நேர்மை*** (இ.வ.); propriety, regularity, genuineness. 5. ***முறை;*** prescribed code of conduct - "இயல்பினானில்வாழ்க்கை வாழ்பவன்" (குறள்.47). 6. ***வரலாறு;*** circumstances, account. "உலகீன்றாடக்கன் மகளா யுதித்த வியல்பும்" (கூர்மபு. திருக்கலி.1). (செ.அக.).

ம. இயல்வு.

*[இய - இயல் → இயல்பு.]*

**இயல்பு**[2] *iyalbu,* பெ. (n.) ***அளவை*** (பிரமாணம்) ***பத்தனுள் ஒன்று*** (மணி.27,10); one of ten methods of acquiring true knowledge. (செ.அக.).

*[இயல் → இயல்பு.]*

**இயல்புகணம்** *iyalpu-kaṇam,* பெ. (n.) ***உயிர்க்கணம் மென்கணம் இடைக்கணங்கள்*** (தக்கயாகப்.602); vowels, nasals and semi-vowels. (செ.அக.).

*[இயல்பு + கணம்.]*

**இயல்புநயம்** *iyalbu-nayam,* பெ. (n.) ***நயங்கள் நான்கி னுள் ஒன்று*** (மணி.30,218); one of nayaṅgaḷ nāṉgu, or four principles of life according to Buddhism. (செ.அக.).

*[இயல்பு + நயம்.]*

**இயல்பு புணர்ச்சி** *iyalbu-puṇarcci,* பெ. (n.) ***தோன் றல், திரிதல், கெடுதல் போன்ற மாற்றமின்றிச் சொற்கள் புணர்வது*** (நன்.153, உரை.); (gram.) natural combination of words without augmentation, change or elision. (செ.அக.).

*[இயல்பு + புணர்ச்சி.]*

**இயல்பு வழக்கு** *iyalbu-vaḻakku,* பெ. (n.) ***எப்பொரு ளுக்கு எப்பெயர் இயல்பிலமைந்ததோ அப்பெயரா லேயே அப்பொருளைக் கூறுகை*** (நன்.267); ***இது இலக்கணமுடையது; இலக்கணப் போலி, மரூஉ என்ற மூவகையில் ஆளப்படுகிறது;*** denoting a thing by the word that usage has sanctioned as its natural name, which usage is of three kinds, viz, இலக்கணமுடையது; இலக்கணப்போலி, மரூஉ, as dist. fr. தகுதி வழக்கு. (செ.அக.).

*[இயல்பு + வழக்கு.]*

**இயல்புவிளி** *iyalbu-viḷi,* பெ. (n.) ***ஈறுதிரியாது நிற்கும் விளிவேற்றுமை*** (கலித்.80, உரை); vocative case in which the noun is uninflected. (செ.அக.).

*[இயல்பு + விளி.]*

**இயல்புளி** *iyalbuḷi,* கு.வி.எ. (adv.) ***முறைப்படி;*** in accordance with the established custom or order "இயல்புளி வழிபட்டு" (காஞ்சிப்பு. அபிராமி.4) (செ.அக.) "இயல்புளிக் கோலோச்சும் மன்னவன்" (குறள்.545).

*[இயல்பு + உளி.]*

**இயல்பூ** *iyalpū,* பெ. (n.) ***வில்வம்;*** beel flower. (ஆ.அக.).

*[இயல் + பூ.]*

**இயல்பொன்** *iyalpon,* பெ. (n.) ***இயற்கைப் பொன்;*** natural gold as opposed to alchemical gold. (சா.அக.).

*[இயல் + பொன்.]*

**இயல்மம்** *iyalmam,* பெ. (n.) ***ஒழுங்கு, சீர்மை;*** regularity.

*[இயல் + இயல்மம்.]*

**இயல் மொழி** *iyalmoli,* பெ. (n.) ***இயன்மொழி*** (பதிற்று.24.11) பார்க்க; see *iyanmoli.*

*[இயல் + மொழி.]*

**இயல்வது** *iyalvadu,* பெ. (n.) ***பொருந்த நடப்பது;*** perfect functioning, natural existence. "உறுபசியும் ஓவாப் பிணியும் செறுபகையும் சேராது இயல்வது நாடு" (குறள்.734). (பாண்டி.அக.).

*[இயல்வு + அது.]*

**இயல் வரையறை** *iyalvaraiyarai,* பெ. (n.) ***பொருளின் தன்மையை அல்லது சொல்லின் பொருளைத் திட்ப நுட்பமாக தெளிந்துரைத்தல்;*** stating precise nature of thing or meaning of word.

*[இயல் + வரையறை. இயல் - இயல்பு.]*

**இயல்வாகை** *iyalvāgai,* பெ. (n.) ***பெருங்கொன்றை*** (L.); a species of unarmed brasiletto. (செ.அக.).

*[இயல் + வாகை.]*

**இயல்வாணர்** *iyal-vāṇar,* பெ. (n.) ***புலவர்;*** poets. "இயல் வாணருக் களித்தான்" (பெருந்தொ.1348). (செ.அக.).

*[இயல் + வாணர்.]*

**இயல்வு** *iyalvu,* பெ. (n.) 1. ***இயல்பு;*** nature. 2. ***பெறுகைக்குத்தக்க ஆம்புடை;*** means of attaining, as salvation. "ஏனமாய் நின்றார்க் கியல்வு" (திவ்.இயற். 1,12). (செ.அக.).

*[இய → இயல் → இயல்வு.]*

**இயலசை** *iyal-aśai,* பெ. (n.) ***நேரசை நிரையசைகள்;*** class of general metrical syllables. "இயலசை முதலிரண்டு" (தொல்.பொருள்.318), (செ.அக.).

*[இயல் + அசை.]*

**இயலடி** *iyaladi,* பெ. (n.) ***இயற்சீரான்*** (நான்கு சீரான்) ***வருமடி*** (ஆ.அக.); line containing feet of two metrical syllables each.

*[இயல் + அடி.]*

**இயலவர்** *iyalavar,* பெ. (n.) ***இயல்பினையுடையவர்;*** possessing desirable attributes. "தணந்ததன் றலையுநீ தளரியலவ ரொடு" (கலித்.66-17).

*[இயல் + அவர்.]*

**இயலல்** *iyalal,* பெ. (n.) 1. ***இசைதல்;*** agreeing. 2. ***ஏலுதல்;*** to be able. 3. ***கூடியதாயிருத்தல்;*** being accessible. 4. ***உடன்படல்;*** consent. 5. ***நடத்தல்;*** walking. 6. ***அசைதல்;*** moving. (ஆ.அக.).

*[இயல் + அல்.]*

**இயலறிவு** *iyal-arivu,* பெ. (n.) ***சொல்லறிவு*** (சப்த ஞானம்); knowledge of words with their meanings and relations to each other. "பிள்ளை இயலறிவுக்கு" (ஈடு.2,5,10). (செ.அக.).

*[இயல் + அறிவு.]*

**இயலாசிரியன்** *iyal-āśiriyan,* பெ. (n.) ***பரத நூல் கற்பிப்போன்*** (சீவக. 672, உரை.); dancing master. (செ.அக.).

*[இயல் + ஆசிரியன்.]*

**இயலாமை** *iyal-ā-mai,* பெ. (n.) ***கூடாமை,*** inability infeasibility, impossibility. (செ.அக.).

*[இயல் → இயலாமை.]*

**இயலார்** *iyalār* பெ. (n.) ***இயல்பினையுடையார்;*** people who possess good nature and conduct. "மயிலியலார் மருவுண்டு மறந்தமைகுவான் மன்னோ" (கலித்.30-6) (பாண்டி..அக.).

**இயலிசை யந்தாதி** *iyal-iśai-y-andādi,* பெ. (n.) ***பொருளாலன்றி ஓசையால் வரும் அந்தாதித் தொடை*** (ஈடு.1,6,2,ஜீ); variety of andādi-t-todai in which the concluding letter, word or phrase of a stanza is apparently repeated at the commencement of the next stanza but is different in sense though alike in sound, dist. fr. பொருளிசையந்தாதி (செ.அக.).

*[இயல் + இசை + அந்தாதி.]*

**இயலொழுக்கம்** *iyal-olukkam,* பெ. (n.) ***நல்லொழுக் கம்;*** right conduct. "இணையில்லா வியலொழுக்க மிசைத்ததுநின் னிறைமையோ" (பெருந்தொ.169).

*[இயல் + ஒழுக்கம்.]*

**இயவம்**[1] *iyavam,* பெ. (n.) 1. ***தவசவகை;*** a kind of grain. 2. ***நெல்;*** paddy. (செ.அக.).

இயவம் > *Skt.* yava.

*[ஒருகா; வேய் → வேயம் (மூங்கிலரிசி). தெ. பிய்யமு. வேயம் → வியம் → வியவம் → இயவம்.]*

**இயவம்**[2] *iyavam,* பெ. (n.) ***கண்ணுள்ளே வட்டமாயும், இருபுறமுங் குவிந்துமுள்ள பளிங்குபோன்ற ஆடிக்கல்;*** crystalline lens of the eyes. (சா.அக.).

இயவம் > *Skt.* yava.

**இயவர்** *iyavar,* பெ. (n.) ***இசைக்கருவிகளை இயக்குப வர்;*** operator of musical instruments, instrumentalist. (சு.வி.63).

*[இய → இயவர்.]*

**இயவன்** *iyavaṉ,* பெ. (n.) 1. ***தோற்கருவியாளன்;*** drummer. ''கலித்தவியவரியந்தொட்டன்ன'' (மதுரைக். 304). 2. ***கீழ்மகன்*** (அக.நி.); base man, man of low upbringing. (செ.அக.).

*[இயம் - இய + அன் = இயவன்.]*

**இயவனர்** *iyavaṉār,* பெ. (n.) 1. ***கம்மாளர்;*** smiths. 2. ***சித்திரக்காரர்;*** artists. 3. ***சோனகர்;*** Romans and Greeks. 4. ***பிறர்;*** others.

*[இயவு - இயவனர் = வழிப்போக்கர்; பிறர், வேற்றூர் கம்மப் பணியாளர், அயலார்.]*

**இயவனன்** *iyavaṉaṉ,* பெ. (n.) ***கிரேக்கநாட்டினன்*** (யவனன்); foreigner. ''இனைய நுட்பத் தியவன ரியற்றிய'' (பெருங்.நரவாண.9,59) (செ.அக.).

*[G.K. Ayonia → yavana → த. இயவனன்.]*

**இயவனிகை** *iyavaṉigai,* பெ. (n.) ***எழினி*** பார்க்க; see *eḻiṉi.* திரை; curtain. (ஆ.அக.).

*[எழினி > Skt. யவனிகா > த. இயவனிகை.]*

**இயவான்** *iyavāṉ,* பெ. (n.) 1. ***வழிநடத்துவோன், தலைவன்;*** one who leads, leader, chief. 2. ***கடவுள்;*** god.

*[இய → இயவு (வழி) → இயவான்.]*

**இயவானி** *iyavāṉi,* பெ. (n.) ***ஓமம்*** (தைலவ.தைல.77); bishop's weed. (செ.அக.).

இயவானி > *Skt.* yavānī.

*[ஒருகா: இயவம் (= அரிசி) → இயவானி = மெல்லிய அரிசி போன்ற ஓமம்.]*

**இயவு** *iyavu,* பெ. (n.) 1. ***வழி;*** way. ''இயவிடை வருவோன்'' (மணி.13,16). 2. ***செலவு;*** leading, proceeding. ''இடைநெறிக் கிடந்த வியவுக் கொண் மருங்கில்'' (சிலப்.11,168) (செ.அக.). 3. ***புகழ்*** (ஆ.அக.); renown, fame, celebrity.

*[இய → இயவு.]*

**இயவுள்**[1] *iyavuḷ,* பெ. (n.) 1. ***தலைமை;*** leadership, superiority. ''இயவுள் யானை'' (அகநா.29). 2. ***எப்பொருளுக்கும் இறைவன்;*** supreme Lord. ''பெரியோ ரேத்தும் பெரும்பெய ரியவுள்'' (திருமுருகு.274). 3. ***தெய்வம்*** (பிங்.); God, deity. 4. ***புகழாளன்*** (திவா.); famous person. 5. ***வழி*** (அகநா.29,உரை); way. (செ.அக.).

ம. இயவுள்.

*[இய - இயவு - இயவுள்.]*

**இயவுள்**[2] *iyavuḷ,* பெ. (n.) ***பிள்ளை*** (அக.நி.); child. (செ.அக.).

*[இல் → இள. இய → இயவுள்.]*

**இயவை**[1] *iyavai,* பெ. (n.) 1. ***வழி*** (திவா.); way, path. 2. ***காடு*** (அக.நி.); jungle. (செ.அக.).

*OE. OS. OHG.* Way; *ON.* Vegr; *Goth.* Wigs; *F.* Weg; *L.* Vehere; *G. Dutch. Yidd.* Veg; *Hung.* ut; *Nor.* Vei.

*[இய → இயவு - இயவை.]*

**இயவை**[2] *iyavai,* பெ. (n.) 1. ***மலைநெல்வகை*** (பிங்.); paddy raised in hilly districts. 2. ***மூங்கிலரிசி*** (திவா.); bamboo seed which resembles rice. (செ.அக.).

*[வேய் → வேயம் (மூங்கிலரிசி) - வியம் → வியவு → வியவை - இயவை. இயவை > Skt. yava.]*

**இயவை**[3] *iyavai,* பெ. (n.) ***துவரை*** (பச்.மூ.); dholl. (செ.அக.).

*[ஒருகா. உலவை - உயவை - இயவை.]*

**இயற்காட்சி** *iyaṟ-kāṭci,* பெ. (n.) ***நற்காட்சி;*** right faith. ''பேதில்லா வியற்காட்சியருளியது நின்பெருமையோ'' (பெருந்தொ.167). (செ.அக.).

*[இயல் + காட்சி.]*

**இயற்காந்தம்** *iyaṟ-kāndam,* பெ. (n.) ***இயற்கையாகவே நிலத்திலகப்படும் காந்தம்;*** load stone; natural magnet, as opposed to artificial magnet. (சா.அக.).

*[இயல் + காந்தம்.]*

**இயற்குணப்பெயர்** *iyaṟ-guṇa-p-peyar,* பெ. (n.) ***தொழிலையன்றிப் பண்பைக் குறிக்கும் பெயர்*** (நன். 269, மயிலை.); nomenclature which indicates nature but not function.

*[இயல் + குணம் + பெயர்.]*

**இயற்கை**[1] *iyaṟkai,* பெ. (n.) 1. ***இயல்பு*** (திவ்.திரு வாய்.4,9,1); nature, disposition; inherent quality. 2. ***இயல்பாக இருத்தல், செயற்கைக்கு எதிர்;*** that which is natural; opp.to செயற்கை. ''இயற்கை யல்லன செயற் கையிற் றோன்றினும்'' (புறநா.35). 3. ***வழக்கம்;*** custom, practice. ''உலகத் தியற்கை யறிந்து செயல்'' (குறள், 637.). 4. ***இலக்கணம்;*** distinguishing characteristic. ''பிரமசாரி யியற்கையைத் தெரித்த வாறும்'' (கூர்மபு. அறுக்கி.23). 5. ***நிலைமை;*** state, condition, circumstances வறுமையான இயற்கை (வின்.). 6. ***கொள்கை;*** opinion, conviction, belief. ''பெரியவரியற்கை'' (கம்பரா.அயோத்.மந்திர.63). 7. ***பணிமுட்டு*** (யாழ்ப்.); instrument, tool. (செ.அக.).

*[இயல் + கை = இயற்கை.]*

**இயற்கைக்குணம்** *iyaṟ-kai-k-kuṇam,* பெ. (n.) ***இயல்பு;*** natural disposition, temper. (செ.அக.).

*[இயல் → இயற்கை + குணம்.]*

**இயற்கைக்குறி** *iyaṟkai-k-kuṟi,* பெ. (n.) ***இயற்கையாகவே வுண்டாகுங் குறி*** (in pathology); natural symptoms as in diseases. (சா.அக.).

*[இயல் → இயற்கை + குறி.]*

**இயற்கைப்புணர்ச்சி** *iyaṟkai-p-puṇarcci,* பெ. (n.) ***தலைவனும் தலைவியும் தெய்வத்தால் கூடும் முதற் கூட்டம்*** (இறை.2, பக்.33.); first union of lovers brought about by destiny.

*[இயல் → இயற்கை + புணர்ச்சி.]*

**இயற்கைப்பொருள்** *iyaṟ kai-p-poruḷ,* பெ. (n.) ***தோன்றியபோது தொடங்கி ஒருநிலைய வாகிய பொருள்*** (தொல்.சொல்.19.); that which is natural; natural product. (செ.அக.).

*[இயற்கை + பொருள்.]*

**இயற்கையளபெடை** *iyaṟkai-y-aḷabeḍai,* பெ. (n.) ***இசை விளி பண்டமாற்று முதலிய இடங்களில் நிகழும் அளபெடை*** (பிர.விவே.5, உரை.); natural prolongation of a vowel sound as in singing, calling bartering, lamenting, etc., கண்ணாஅ; முருகாஅ; மோரோஒ மோர். (உ.வ.).

*[இயற்கை + அளபெடை.]*

**இயற்கை யவா** *iyaṟkai-yavā,* பெ. (n.) ***இயல்பாகவே ஏற்படும் ஆசை;*** natural desire "ஆரா இயற்கை அவா நீப்பின்" (குறள்.370) (சா.அக.).

*[இயற்கை + அவா.]*

**இயற்கைய்றிவு** *iyaṟkai-y-aṟivu,* பெ. (n.) ***உய்த்துணரும் அறிவு;*** instinct, intuition. (செ.அக.).

*[இயற்கை + அறிவு.]*

**இயற்கையின்பம்** *iyaṟ-kai-iṉbam,* பெ. (n.) ***இயற்கைப் புணர்ச்சியாலாகிய இன்பம்*** (சீவக.2063.); experience of pleasure by lovers in their first union brought about by destiny. (செ.அக.).

*[இயற்கை + இன்பம்.]*

**இயற்கையுணர்வினனாதல்** *iyaṟkai-y-uṇarviṉaṉ-ādal,* பெ. (n.) ***சிவனெண் குணத் தொன்று*** (குறள்,9, உரை); having intuitive wisdom; one of Šivaṉ-eṉ-kuṇam. (செ.அக.).

*[இயற்கை + உணர்வினன் + ஆதல்.]*

**இயற்சீர்** *iyaṟ-cīr,* பெ. (n.) ***அகவலூரிச்சீர்*** (தொல். பொருள்.325); foot of two metrical syllables. (செ.அக.).

*[இயல் + சீர்.]*

**இயற்சீர்வெண்டளை** *iyaṟ-cīr-veṇḍaḷai,* பெ. (n.) ***மாமுன் நிரையும், விளமுன் நேரும் வருந்தளை*** (இலக்.வி.718, உரை.); metrical succession which should be observed in veṇbā. The metrical connection of a simple (நேரசை) syllable at the end of a foot with the compound (நிரையசை) syllable at the beginning of the succeeding foot and vice versa when both the feet happen to be two syllabled. (செ.அக.).

*[இயல் + சீர் + வெண் + தளை.]*

**இயற்சொல்** *iyaṟ-col,* பெ. (n.) ***எல்லார்க்கும் பொருள் விளங்குஞ் சொல்*** (நன்.271); திரிசொல்லின் வேறானது; standard words which are in common use and are understood by all, dist. fr. திரிசொல் (செ.அக.).

*[இயல் + சொல்.]*

**இயற்பகை நாயனார்** *iyaṟ-pagai-nāyaṉār,* பெ. (n.) ***அறுபத்து மூன்று நாயன்மாருள் ஒருவர்*** (பெரியபு.); name of a canonized šaiva saint; one of the sixty-three.

*[இயற்பகை + நாயனார்.]*

**இயற்படமொழிதல்** *iyaṟ-paḍa - moḻidal,* பெ. (n.) ***தலைவன் குணங்களைத் தலைவி புகழ்ந்து கூறும் அகத்துறை*** (திருக்கோ.378); woman's expatiation of her lover's good qualities. (செ.அக.).

*[இயல் + பட + மொழிதல்.]*

**இயற்படுத்துரைத்தல்** *iyaṟ-paḍu-t-turai-t-tal,* பெ. (n.) ***வழிபடுத்திச் சொல்லல்*** (ஆ.அக.); indicate way while narrating.

*[இயல் + படுத்து + உரைத்தல்.]*

**இயற்பலகை** *iyaṟ-palagai,* பெ. (n.) ***தமிழ்க்கழகப் பலகை,*** (சங்கப் பலகை), (திருவாலவா.56,10); miraculous seat-board of the last Tamil Sangam in Madurai. (செ.அக.).

*[இயல் + பலகை.]*

**இயற்பழித்தல்** *iyaṟ-paḻittal,* பெ. (n.) ***தலைவன் குணங்களைத் தோழி இகழ்ந்து கூறும் அகத்துறை*** (திருக்கோ.376); literary theme in which the companion of the heroine belittles the hero's qualities. (செ.அக.).

*[இயல் + பழித்தல்.]*

**இயற்பா** *iyaṟ-pā,* பெ. (n.) ***மாலியப் பாடல்களுள்*** (திவ்வியப் பிரபந்தத்துள்) ***ஒருபகுதி;*** name of a section of the Divya-p-pirabandam. (செ.அக.).

*[இயல் + பா.]*

**இயற்பெயர்**[1] *iyaṟ-peyar,* பெ. (n.) 1. ***வழங்குதற்கு இடப்பட்ட சிறப்புப் பெயர்*** (தொல்.சொல்.173); proper name, naturally or arbitrarily given. (செ.அக.). 2. ***பெற்றோரிட்ட பெயர்*** (ஆ.அக.); christened name.

*[இயல் + பெயர்.]*

**இயற்பெயர்**[2] *iyaṟ-peyar,* பெ. (n.) ***விரவுப்பெயர்*** (தொல்.சொல்.174, சேனா.); noun common to both uyartiṇai and aḵriṇai. (செ.அக.).

*[இயல் + பெயர்.]*

**இயற்பெயர்க்கிளவி** *iyar-peyar-k-kiḷavi,* பெ. (n.) ***இயற்பெயராகிய சொல்;*** proper noun. (தொல். சொல்.196-2).

*[இயல் + பெயர் + கிளவி.]*

**இயற்றண்டம்** *iyaṟṟaṇḍam,* பெ. (n.) ***தண்டனை;*** ordinary fine. "நாலே கால் காணம் இயற்றண்ட மிடப் பெறுவதாகவும்" (SI.I.iv; 295) (செ.அக.).

*[இயல் + தண்டம்.]*

**இயற்றமிழ்** *iyaṟṟamiḻ-*, பெ. (n.) ***முத்தமிழுள் ஒன்று*** (பிங்.); literary Tamil, poetry or prose, conforming to the rules of Tamil grammar; one of mu-t-tamiḻ; a broad division of Tamil literature embracing all belles-letters except dramas and musical compositions. (செ.அக.).

*[இயல் + தமிழ்.]*

**இயற்றல்** *iyaṟṟal*, பெ. (n.) 1. ***முயற்சி*** (திவா.); effort, exertion, endeavour. (செ.அக.). 2. ***ஏவுதல்*** (ஆ.அக.); commanding. 3. ***செய்தல்*** (ஆ.அக.); doing, making. 4. ***யாத்தல்;*** composing.

*[இயல் → இயற்றல். பி.வி.]*

**இயற்றளை** *iyaṟṟaḷai*, பெ. (n.) 1. ***இயற்சீர் வெண்டளை*** (யா.கா.ஒழிபி.4.) பார்க்க; see *iyaṟcīr veṇḍaḷai.* (செ.அக.). 2. ***ஆசிரியத்தளை;*** metrical connection between the first and last syllables of - adjacent feet as applicable to āsiriya-p-pā.

*[இயல் + தளை.]*

**இயற்றனம்** *iyaṟṟaṉam*, பெ. (n.) 1. ***கருவி;*** instrument. 2. ***ஏனம்*** (பாத்திரம்); vessel. (ஆ.அக.).

*[இயல் → இயற்று → இயற்றனம்.]*

**இயற்றி**[1] *iyaṟṟi*, பெ. (n.) 1. ***முயற்சி*** (பிங்.); effort, exertion. 2. ***ஏந்து, வலிவு;*** position of ease, comfort and happiness; strength. ''தனக்கு இயற்றியுள்ள காலத்திலே'' (ஈடு.9,1,4). (செ.அக.).

*[இயல் → இயற்றி.]*

**இயற்றி**[2] *iyaṟṟi*, பெ. (n.) 1. ***உதவி;*** support. ''கைநிற்கும் பரிகர முண்டாயிருக்க இயற்றி யில்லாதாரைப் போலே'' (திவ்.பெரியாழ்.5,3,6, வ்யா.பக்.574). 2. ***திறமை*** (ஈடு.9,1,4.ஜீ); skill. 3. ***தகுதி*** (ஈடு.9,1,4,ஜீ); qualification. 4. ***உச்சாயம்*** (ஈடு.9,1,4,ஜீ); high position. (செ.அக.).

*[இயற்று → இயற்றி.]*

**இயற்று**[1]**-தல்** *iyaṟṟu*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. ***செய்தல்;*** to do, make, perform, effect, execute. ''இசையா தெனினு மியற்றியோ ராற்றால்'' (நாலடி. 194). 2. ***நடத்துதல்;*** to cause to act, direct or control the movements of ''நெஞ்சே யியற்றுவா யெம்மொடு'' (திவ்.இயற்.பெரிய திருவந்.1.). 3. ***பொருள்தேடல்;*** to acquire, earn; ''ஒண் பொருள் காழ்ப்ப வியற்றி யார்க்கு'' (குறள்.760). 4. ***தோற்றுவித்தல்*** (சிருஷ்டித்தல்); to create, germinate. ''கெடுக வுலகியற்றி யான்'' (குறள். 1062). 5. ***நூல் செய்தல்;*** to compose; to write, as a book.'சாத்தனார் இயற்றிய மணிமேகலை.' (செ.அக.).

**ம.** இயற்றுக; **க., தெ.** எசகு; **து.** இயருனி, இயவுனி.

*[இயல் → இயற்று.]*

**இயற்று**[2] *iyaṟṟu*, பெ. (n.) ***ஏனம்*** (யாழ்ப்.); implement, utensil; any hollow vessel, as a cup or a coconut shell. (செ.அக.).

*[இயல் → இயற்று.]*

**இயற்றுதற் கருத்தா** *iyaṟṟudaṟ-karuttā*, பெ. (n.) ***பயனிலைச் செயலை நேரே செய்யும் வினை முதல்*** (நன்.297, உரை.); direct agent who carries out a function, as in the sentence.'தச்சன் தேரை யமைத்தான்;' dist.fr. ஏவுதற்கருத்தா (செ.அக.).

*[இயற்றுதல் + கருத்தா.]*

**இயறல்** *iyaṟal*, பெ. (n.) 1. ***வீடுபேறு*** (அக.நி.); final bliss. (செ.அக.). 2. ***போதல்;*** the act of moving, going. (ஆ.அக.).

*[இயலல் → இயறல்.]*

**இயன்ஞானம்** *iyaṉ-ñāṉam*, பெ. (n.) ***நல்லறிவு;*** right knowledge. ''இருளில்லா வியன்ஞான மியம்புவதுன் னியல் பாமோ'' (பெருந்தொ.167.). (செ.அக.).

*[இயல் + ஞானம். **இயலறிவு** பார்க்க; see iyalaṟivu.]*

**இயன்மகள்** *iyaṉ-magaḷ*, பெ. (n.) ***கலைமகள்*** (பிரமோத்.8,20); Sarasvati, goddess of letters. (செ.அக.).

*[இயல் + மகள்.]*

**இயன்மணம்** *iyaṉ maṇam*, பெ. (n.) ***இயற்கை மணம்;*** natural fragrance. (ஆ.அக.).

*[இயல் + மணம்.]*

**இயன்மாலை** *iyaṉ-mālai*, பெ. (n.) ***இயங்கும் மாலைக் காலம்;*** agreeable evening. ''யாழ்கொண்ட இமிழிசை இயன் மாலை அலைத் தரூஉம்'' (கலித்.29-17).

*[இயல் + மாலை.]*

**இயன்மொழி** *iyaṉ-moḻi*, பெ. (n.) ***இயன்மொழி வாழ்த்து*** (தொல்.பொருள்.90.உரை.) பார்க்க; see *iyaṉ-moḻi-vāḻttu.* (செ.அக.).

*[இயல் + மொழி.]*

**இயன்மொழி வாழ்த்து** *iyaṉ-moḻi-vāḻttu*, பெ. (n.) 1. ***தலைவன் குடியினர் செய்திகளை அவன் மேலேற்றி வாழ்த்தும் புறத்துறை*** (தொல்.பொருள். 90); literary theme of glorifying a hero by attributing to him all the noble deeds of his ancestors. 2. ***இன்னாரின்னது கொடுத்தார் அவர் போல நீயுங் கொடுப்பாயாக என யாவரும் அறியக் கூறும் புறத்துறை*** (பு.வெ.9,6.); literary theme of requesting one to emulate the noble example set by the great benefactors of olden times. 3. ***அரசன் தன்மையினைப் புகழ்ந்து சொல்லும் புறத்துறை*** (பு.வெ.9,7.); theme of extolling the high qualities of the king. (செ.அக.).

*[இயல் + மொழி + வாழ்த்து.]*

**இயனம்** *iyaṉam*, பெ. (n.) ***கள்ளிறக்குவோனது கருவிபெய் புட்டில்*** (யாழ்ப்.); bag which loosely hangs down from the waist belt of a toddy drawer, containing

implements which he may require for climbing trees and for cutting branches etc. (செ.அக.).

*[ஏனம் → யானம் → இயானம் → (கொ.வ.)இயனம்.]*

**இயனிலை யுருவகம்** *iyanilai-yuruvagam,* பெ. (n.) ***உருவக அணிவகையு ளொன்று; அஃது ஒன்ற னுறுப்பு பலவற்றை யுமுருவகித்தும் உருவகியாதும் உரைத்து அங்கியை வருவித்து உரைப்பது.*** (ஆ.அக.); figure of speech.

*[இயன் + நிலை + உருவகம்.]*

**இயனெறி** *iyaneri,* பெ. (n.) ***நல்லொழுக்கம்;*** path of approved conduct; even path of rectitude. "இயனெறி யுங் கைவிடாது" (நாலடி.294) (செ.அக.).

*[இயல் + நெறி.]*

**இயூகம்** *iyūgam,* பெ. (n.) ***கருங்குரங்கு*** (பெருங். வத்தவ.17,14); black monkey.

*[ஏ - கருமை. ஏ + ஊகம் - ஏயூகம் - இயூகம்.]*

**இயை[1]-தல்** *iyai-,* 2 செ.கு.வி. (v.i.) 1. ***பொருந்துதல்;*** to be agreeable, be palatable. "என்போ டியைந்த வமிழ்து" (நாலடி.210). 2. ***இணங்குதல்;*** to agree, harmonise. 3. ***நிரம்புதல்;*** to become quite full. "மாக்கடல் கண்டியைய மாந்திக் கார் தோன்ற" (திணை மாலை. 100) - 2 செ.குன்றாவி. (v.t.) ***ஒத்தல்*** (நன்.367); to resemble. (செ.அக.).

**ம.** இயயுக; **க.** ஈலு; **தெ.** ஈயகோலு, உய்யகோலு (ஒப்புகை.); **து.** இயருனி, இயவுனி.

*[இல் → இள் → இய் → இயை.]*

**இயை[2]-த்தல்** *iyai-,* 2 செ.குன்றாவி. (v.t.) ***பொருத்து தல்;*** to join, connect, adapt. (செ.அக.).

**ம.** இய்யக்குக.

*[இள் → இய் → இயை - இயைத்தல்.]*

**இயைபிலிசைக்குறி** *iyaipil-išai-k-kuri,* பெ. (n.) ***இடைப்பிறவரலாக வருஞ்சொற்களை யடைக்குங் குறிகள்*** (பாலபாடம்.); bracket. (செ.அக.).

*[இயைபு + இல் + இசை + குறி.]*

**இயைபி லுருவகம்** *iyaipil-uruvagam,* பெ. (n.) ***அணிவகையுளொன்று; அஃது பல பொருளையுந் தம்முளொன்றோ டொன் றியையாமல் உருவகஞ் செய்வது*** (ஆ.அக.); figure of speech.

*[இயைபு + இல் + உருவகம்.]*

**இயைபின்மை நீக்கம்** *iyaibinmai-nikkam,* பெ. (n.) ***தன்னோடியை பின்மை நீக்கும் தன்மை;*** non-restrictive attribution of a quality to a noun by a purely descriptive epithet, as செம்மை in செஞ்ஞாயிறு which only defines ஞாயிறு without carrying with it any implication that there are other suns. (செ.அக.).

*[இயைபு + இன்மை + நீக்கம்.]*

**இயை** *iyai,* பெ. (n.) ***வாழை*** (அக.நி.); plantain. (செ.அக.).

*[இள் - இள - இளை - இயை (கொ.வ.).]*

**இயைந்துரை** *iyainturai,* பெ. (n.) ***பல பொருள்களின் வரையறைப்பட்ட தொகுதி*** (மணி.30,193); collection of several distinct objects. (செ.அக.).

*[இயை → இயைந்து + உறை = இயந்துறை → இயைந்துரை.]*

**இயைபின்மை நீக்கல்** *iyaibinmai-nikkal,* பெ. (n.) ***இயைபின்மை நீக்கம்*** (தொல்.சொல்.182,சேனா.) பார்க்க; see *iyaibinmai-nīkkam* (செ.அக.).

*[இயைபு + இன்மை + நீக்கல்.]*

**இயைபின்மையணி** *iyaibinmai-y-ani,* பெ. (n.) ***பொருள் தனக்குத் தானே யுவமை என்று உரைக்கும் அணி*** (அணியி.2.); figure of speech in which a thing is compared only to itself as being peerless and as having nothing else comparable to it. (செ.அக.).

*[இயைபு + இன்மை + அணி.]*

**இயைபு** *iyaibu,* பெ. (n.) 1. ***புணர்ச்சி*** (தொல்.சொல். 308); combination, union. 2. ***பொருத்தம்;*** harmony. "பண்ணென் னாம் பாடற் கியைபின்றேல்" (குறள். 573). 3. ***இது கேட்டபின் இது கேட்கத்தக்கதென்னும் யாப்பு*** (நன்.சிறப்புப்.விருத்.); sequence of study; appropriateness, logical arrangement of subject matter which determines the order in which topics should be taken up for study. 4. ***எழுத் தொத்துவரும் தொடை வகை.*** (காரிகை, உறுப்.16.); rhyme. 5. ***மெல்லின இடையின மெய்களுள் ஒன்றில் முடியும் செட்யுட்க ளைக் கொண்ட வனப்பு வகை*** (தொல்.பொ.552) (ஞ, ண, ந, ம, ன, ய, ர, ல, வ, ழ, ள என்ற பதினொரு புள்ளியீறாய் வந்த பாட்டு); long, continuous, narrative poem consisting of verses which end in any one of the possible consonantal endings, (செ.அக.).

*[இயை - இயைவு - இயைபு.]*

**இயைபுத்தொடை** *iyaibu-t-todai,* பெ. (n.) ***ஐந்தொடை யுள்ளொன்று; ஈற்றெழுத்து ஒன்றிவரத் தொடுப்பது*** (இலக்.வி.723); rhyming, concatenation in which the last letter of each line of a verse is the same; one of five todais. (செ.அக.).

*[இயைபு + தொடை.]*

**இயைபுருவகம்** *iyaiburuvagam,* பெ. (n.) ***உருவக வணியு ளொன்று*** (தண்டி.35, உரை); a kind of metaphor. (செ.அக.).

*Skt.* rūpaka.

*[இயைபு + உருவகம்.]*

**இயைபுவண்ணம்** *iyaibu-vannam,* பெ. (n.) ***இடை யெழுத்துகள் மிகுந்து வருஞ் சந்தம்*** (தொல்.பொ.

530); rhythm produced by the frequent use of the consonants of the medial class. (செ.அக.).

*[இயைபு + வண்ணம்.]*

**இயைபுவனப்பு** *iyaipu-vaṉa-p-pu,* பெ. (n.) ***செய்யுள் வனப்பெட்டினொன்று: அஃது*** இடைமெல்லின வொற்றீற்றிற் பயின்று வருவது (ஆ.அக.); figure of speech.

*[இயைபு + வனப்பு.]*

**இயைமே** *iyaimē* பெ. (n.) ***இயை*** பார்க்க ***வாழைப்பொது*** (மலை); plantain, musa. (செ.அக.).

*[இயை → இயைமே. (கொ.வ.).]*

**இயைவு** *iyaivu,* பெ. (n.) 1. ***சேர்க்கை*** (திவா.); union, joining together. (செ.அக.). 2. ***பொருத்தம்*** (ஆ.அக.); harmony, appropriateness. 3. ***இசைவு*** (ஆ.அக.); consent, willingness.

*[இயை → இயைவு.]*

**இர்** *ir,* இடை. (part), 1. ***முன்னிலைப் பன்மை ஈறு;*** suffix denoting second person plural. ''வந்தனிர்''. 2. ***படர்க்கைப்பன்மை ஈறு;*** suffix denoting third person plural. கேளிர், பெண்டிர். (செ.அக.).

*[நீர் → ஈர் → இர்.]*

இர். விகுதி முன்னிலையாயின் வினையில் வரும். படர்க்கை யாயின் பெயரில் வரும்.

**இர**[1] *ira,* பெ. (n.) ***இரவு;*** night. ''இர வரவுரைத்தது'' (திருக்கோ.156, கொளு.) (செ.அக.).

*[இரவு - இர.]*

**இர**[2]**-த்தல்** *ira-,* 3 செ.குன்றாவி. (v.t.) 1. ***பிச்சையெடுத் தல்;*** to beg alms, solicit aid, seek livelihood by begging. ''இரந்து முயிர்வாழ்தல் வேண்டின்'' (குறள்.1062). 2. ***வேண்டுதல்;*** to pray, beseech, entreat, solicit. ''இனி யுன்னை யென்னி ரக்கேனே'' (திருவாச.22,5). (செ.அக.).

ம. இரக்குக; க. எரெ; தெ. எரவு (கடன்); து. எரவு; குவி. ரீசல லசலி, ரிஹனை; குட. எர.

*[இள் → இள → இர.]*

**இரக்கக் குறிப்பு** *irakka-k-kurippu,* பெ. (n.) ***பரிவு துயரம் இவைகளைக் குறிக்கும் மொழி*** (சீவக.295, உரை.); interjection expressive of pity or of grief. (செ.அக.).

*[இரக்கம் + குறிப்பு.]*

**இரக்கம்**[1] *irakkam,* பெ. (n.) 1. ***அருள்;*** mercy, grace, commiseration. ''இரக்கமுடை யிறைய வனூர்'' (தேவா. 145,9). 2. ***மனவுருக்கம்;*** pity, compassion; melting of heart, as of a mother at the sight of her child in distress, or of a cow for her calf. 3. ***மன வருத்தம்;*** regret, sorrow. ''உரித்தென மொழிப வாழ்க்கையு ளிரக்கம்'' (தொல்.பொ.226). 4. ***ஒலி;*** sound; squall, as of a pig. ''பன்றி வாய்விடு மிரக்கமும்'' (திருவிளை.பரிநரி. 31) (செ.அக.).

ம. இரக்கம்; க. எரக.

*[இள → இர → இரங்கு → இரக்கம்.]*

**இரக்கம்**[2] *irakkam,* பெ. (n.) ***ஈடுபாடு*** (திவ்.பெரியாழ். 3,6,10, வியா.பக்.696); absorption, involvement, state of being engrossed. (செ.அக.).

*[இரங்கு → இரக்கம்.]*

**இரக்கி-த்தல்** *irakki-,* 11 செ.குன்றாவி. (v.t). ***பாதுகாத் தல்;*** to protect, safeguard. ''இரக்கிக்கை யாலே யுயிரினை'' (சைவச.பொது.204). (செ.அக.).

*Skt.* rakṣ.

*[இரங்கு → இரக்கு → இரக்கித்தல் > Skt.-ரட்சித்தல்.]*

**இரகு** *iragu,* பெ. (n.) ***கதிரவக் குலத்தரசருள் புகழ் பெற்ற ஒருவன்;*** name of a celebrated king of the Solar race and an ancestor of Rāma. (செ.அக.).

*Skt.* raghu.

*[இரவி → இரவு → இரகு.]*

**இரகுநாத சேதுபதி** *iragu-nāda-šēdu-padi,* பெ. (n.) ***இருநூற்று முப்பது ஆண்டுகட்கு முன்னர் இராமநாத புரத்தில் அரசு செய்த சேது மன்னர்*** (ஆ.அக.); Prince of Ramnad some 250 years ago.

*[இரகுநாதன் + சேதுபதி.]*

**இரங்கல்** *iraṅgal,* பெ. (n.) 1. ***அழுகை*** (திவா); weeping, crying. 2. ***நெய்த லுரிப்பொருள்*** (தொல்.பொ.14); lady's bemoaning her lover's absence, a mood appropriate to the maritime tracts; one of five uri-p-poruḷ. 3. ***ஒலி*** (திவா); sound, noise. 4. ***யாழ்நரம்போசை*** (பிங்.); sound of the yāḻ (செ.அக.). 5. ***துன்பப்பாடல்*** (ஆ.அக.); elegy, song of lamentation, esp. for the dead.

*[உள் → இள் → இர → இரங்கு → இரங்கல்.]*

**இரங்கற்பா** *iraṅgaṟpā,* பெ. (n.) ***துன்பியற் பாடல்கள்;*** elegy. (செ.அக.).

*[இரங்கல் + பா.]*

**இரங்கு**[1]**-தல்** *iraṅgu,* 15 செ.கு.வி.(v.i.) 1. ***கூறுதல்;*** tell, speak. ''புலம்பெலாந் தீர்க்குவேமன் னென்றிரங்குபு'' (கலித்.83-23). 2. ***ஈடுபடுதல்;*** to be absorbed, involved. ''இரங்குங் கூம்பும்'' (திவ்.பெரியாழ்.3,6,10).

*[இள → இர → இரங்கு, இரங்குதல் = மனமிரங்கிக் கூறுதல்.]*

**இரங்கு**[2]**-தல்:** *iraṅgu-,* 15 செ.கு.வி (v.i) 1. ***பரிவு காட்டு;*** to feel pity. ''சிற்றுயிர்க் கிரங்கிக் காய்சின வால முண்டாய்'' (திருவாச.6,50). 2. ***அருள் செய்தல்;*** to condescend, to show grace. ''அரக்கர்க் காற்றா தெய்தின னிரங்கல் வேண்டும்'' (ஞானவா.வைராக். 43). 3. ***மனமழிதல்;*** to be aggrieved; to be distressed in mind. ''இரங்கி நாடொறும் வாய்வெரீஇ'' (திவ். திரு

வாய்.6,5,9). 4. ***அழுதல்*** (திவா.); to weep, cry. 5. ***கழிவிரக்கம்;*** to repent, feel sorry. ''எற்றென் றிரங்குவ செய்யற்க'' (குறள்.655). 6. ***ஒலித்தல்;*** to roar. ''இரங்கிவீ ழருவி'' (திருவிளை.நாகமெய்.17). 7. ***யாழொலித்தல்*** (திவா.); to sound as a yāḻ.

ம. இரங்குக; க. எரத; (இளகிய மனநிலை).

*[இள → இர → இரங்கு. இரங்குதல் = மனமிளகுதல், வருந்துதல், அன்புகாட்டுதல்.]*

**இரங்குக் கெளிறு** *iraṅgu-k-keḻiṟu,* பெ. (n.) ***கெளிற்று மீன்வகை;*** brownish estuary fish. (செ.அக.).



இரங்குக் கெளிறு

*[இரங்கும் + கெளிறு. இரங்கும் = மனமிளகத்தக்க ஓசையுண்டாக்குதல்.]*

**இரங்குகுடி குன்றநாடன்** *iraṅgukuḍi kuṉṟa nāḍaṉ,* பெ. (n.) ***கடைக்கழக மருவிய தமிழ்ப்புலவர்;*** one of the poets of the Sangam age.

*[இரங்கு + குடி + குன்றம் + நாடன். இரங்குகுடி என்பது குடிப்பெயராகலாம். எளியோர்க்கும் இரங்கும் கொடைத் தன்மை பெற்ற குடி இரங்குகுடி.]*

**இரங்கேச வெண்பா** *iraṅgēša veṇbā,* பெ. (n.) ***அறநெறிகளைக் கதைகளுடன் கூறும், நேரிசை வெண்பாவாலான சிற்றிலக்கியம்;*** name of a poem in the nērišaiveṇbā metre, composed by Cāntakavirāyar and addressed to God Iraṅgēšaṉ, the presiding deity in the shrine at Sriraṅgam, and consisting of verses the latter half of which is some couplet chosen from the Kural while the first half giving an illustrative story to enforce the moral of the Kural couplet. (செ.அக.).

*[அரங்கு + ஈசன் + வெண்பா.]*

**இரங்கேசன்:** *iraṅgēšaṉ,* பெ. (n.) ***அரங்கநாதன்;*** Viṣṇu, the Lord of Sriraṅgam. (செ.அக.).

*[அரங்க + ஈசன். அரங்கேசன் - வ. ரங்கேசன் - இரங்கேசன் - த. ஈசன் = தலைவன்.]*

**இரஞ்சகம்** *irañjagam,* பெ. (n.) ***துமுக்கியின் பற்றுவாய் மருந்து*** (வின்.); priming powder. (செ.அக.).

தெ. ரஞ்சகமு.

*[இலஞ்சு → இலஞ்சகம் → இரஞ்சகம் = செந்நிறமுடையது.]*

**இரஞ்சனம்** *irañjaṉam,* பெ. (n.) 1. ***செஞ்சாந்து*** (நாநார்த்த.); red sanders. (செ.அக.). 2. ***திரிவாய் மருந்து*** (ஆ.அக.), medicine.

*[இலஞ்சனம் - இரஞ்சனம்.]*

**இரட்டபாடி** *iraṭṭa-pāḍi,* பெ. (n.) ***சோழரால் வெல்லப் பட்ட நிலப்பகுதி;*** a territory conquered by Cholas.

*[இரட்டம் + பாடி.]*

**இரட்டம்** *iraṭṭam,* பெ. (n.) ***பெருநிலப்பகுதி, நாடு;*** land mass, country.

*[இரு → இருமை = பெருமை, பெரும்பரப்பு. ஒ.நோ. இரு நிலம். இரு → இரட்டு → இரட்டம் > Skt. Rastra.]*

**இரட்டர்** *iraṭṭar,* பெ. (n.) 1. ***இராட்டிர கூட அரசர்;*** Rāṣṭrakūṭa kings. ''ஒண்டிற லிரட்ட மண்டலம்'' (சோழ வழி.பக்.91) (செ.அக.). 2. ***வணிகர்*** (வைசியர்); mercantile community. (ஆ.அக.).

*Skt.* rāṣtra kūṭa

*[இரு → இருமை = பெருமை, பரப்பு, பகுதி. இரு → இரட்டும் → இரட்டம் = பரந்த நிலப்பகுதி. இரட்டம் → இரட்டர் = பெருநில மன்னர், இரட்டப்பகுதி வணிகர்.]*

**இரட்டல்** *iraṭṭal,* பெ. (n.) 1. ***இரட்டிக்கை*** (நன்.136); doubling. 2. ***ஒலிக்கை*** (பிங்); sounding, roaring. 3. ***யாழ்நரம்போசை*** (பிங்); sound of the strings of a yāḻ. (செ.அக.).

ம. இரட்டி.

*[இரட்டு → இரட்டல்.]*

**இரட்டாங்காலி** *iraṭṭāṅ-kāli,* பெ. (n.) ***இரட்டையாகக் கிளைக்கும் மரம்*** (யாழ்ப்); double tree with single trunk. esp. a freak of the palmyra species. (செ.அக.).

*[இரண்டு → இரட்டாம் + காலி.]*

**இரட்டி¹-த்தல்** *iraṭṭi-,* 4 செ.கு.வி.(v.i) ***இகழ்தல்;*** to slight, despise. ''இதை நாம் இரட்டிக்கப் போகாது.'' (தமிழறி.43) (செ.அக.).

*[இரட்டுதல் = ஒலித்தல், முழக்குதல், பழி கூறித்திரிதல்.]*

**இரட்டி²-த்தல்** *iraṭṭi-,* 11 செ.குன்றாவி (v.t.) 1. ***இரு மடங்காக்குதல்;*** to double. 2. ***திரும்பச் செய்தல்;*** to repeat; to continue crosswise, as ploughing. ''அடியிரட்டித் திட்டாடு மாட்டு'' (பு.வெ.2,8). 4. செ.கு.வி. (v.i.) 1. ***ஒன்று இரண்டாதல்;*** to be doubled. மகரம் இரட்டித்தது. 2. ***மீளவருதல்;*** to return, relapse. 'நோய் இரட்டிக் கின்றது' (வின்). 3. ***மாறுபடுதல்;*** to differ from; to be discrepant; to disagree. 'இந்தச் சாட்சி அந்தச் சாட்சிக்கு இரட்டிக்கிறது'' (வின்.) (செ.அக.). 4. ***ஒவ்வாமை;*** unfitness. (ஆ.அக.).

ம. இரட்டிக்குக; தெ. ரெட்டின்சு.

*[இரு → இரட்டி.]*

**இரட்டி**[3] *iratti,* பெ. (n.) 1. ***இருமடங்கு;*** double the quantity; twice as much. ''அன்பிரட்டி பூண்டது'' (கம்ப ரா.சூர்ப்ப.133). 2. ***இணைக்கை*** (சிலப்.3,20,அரும்.); gesture with both hands. (செ.அக.).

**தெ.** ரெட்டி; **ம.** இரட்டி; இரட்டிப்படி.

*[இரு → இரட்டி (இருமடங்கு).]*

**இரட்டி**[4] *iratti,* பெ. (n.) ***ரெட்டியார் எனப்படும் தெலுங்கு வேளாளர்;*** Telugu caste of cultivators. ''இரட்டியாம் பண்ட குலத்தின்'' (வெங்கையு.64) (செ.அக.).

**தெ.** ரெட்டி.

*[இரு → இருமை = பெருமை, உயர்வு. இரு → இரட்டி = பெரியோர், பெருமைக்குரியோர். ஒ.நோ: க. இரியர் = பெரியோர். இனி, அரசர்களின் அரண்மனைகளில் கவரி வீசுவோரும், இசைக்கருவிகள் முழக்குவோரும் இரட்டிகள் எனப் பெயர் பெற்றிருத்தலால் அப்பணிகளை ஒருகாலத்தில் செய்தோரும் அப்பெயர்க்குரியராம்.]*

**இரட்டித்துச் சொல்லு-தல்** *irattittu-c-collu-,* 8 செ.குன்றாவி. (v.t.) 1. ***மீட்டுங் கூறுதல்;*** to repeat, reiterate. 2. ***மாறுபடச் சொல்லுதல்*** (வின்.); to make a discrepant statement or a statement different from that given by some one else. (செ.அக.).

*[இரட்டு → இரட்டித்து + சொல்.]*

**இரட்டிப்பு** *irattippu,* பெ. (n.) ***இருமடங்கு*** (கொ.வ.); double quantity, duplication, doubling. (செ.அக.)

ம. இரட்டிப்பு.

*[இரு → இரட்டு → இரட்டிப்பு.]*

**இரட்டு**[1] *irattu,* பெ. (n.) ***இரட்டை நூலால் நெய்யப் பட்ட கம்பளி அல்லது போர்வை;*** dungaree, double - threaded cloth, sack cloth.

பட. ரட்டு; ம. இரட்டு.

*[இரு → இரட்டு.]*

**இரட்டு**[2]**-தல்** *irattu-,* 5 செ.கு.வி.(v.i) 1. ***இரட்டித்தல்;*** to double, as a consonant in sandhi or combination of words. ''டற வொற்றிரட்டும்'' (நன்.183). 2. ***மாறி யொலித்தல்;*** to sound alternately, as the beating of a double drum or the bells on an elephant. ''இலங்கு வெள்ளருவியொடு சிலம்பகத் திரட்ட'' (மதுரைக்.299). 3. ***ஒலித்தல்;*** to sound. ''நுண்ணீராகுளி யிரட்ட'' (மதுரைக்.606). 4. ***அசைதல்;*** to wave, as a leaf; to oscillate. ''மென்கா லெறிதலி னிரட்டல் போலும்'' (கந்தபு. திருவா.111). 5 செ.குன்றாவி (v.t.) 1. ***வீசுதல்;*** to wave alternately on opposite sides, as fly-whisks in a procession. ''குளிர்சாமரை யிருபாலு மிரட்ட'' (பாரத. அருச்சு னன்றவ.150). 2. ***கொட்டுதல்;*** to cause to sound; beat, as a drum. ''அரசுடை வாணன் .... குடமுழ விரட்ட'' (கல்லா.21). 3. ***உச்சரித்தல்;*** to pronounce; utter. ''அஞ்செழுத்துக் குறையா திரட்ட'' (கல்லா.57). 4. ***தெளித்தல்;*** to sprinkle, as water. ''நீரை யிரட்டிக் கொள்ளுமா போலே'' (திவ்.திருக்குறுந்.1,வ்யா). (செ.அக.).

*[இரு → இரட்டு = இருபால் வீசுதல், இரண்டையும் மோதவிட்டு ஒலித்தல், கொட்டுதல், அசைதல், அசைத்தல்.]*

**இரட்டு**[3] *irattu,* பெ. (n.) 1. ***இரட்டையாயிருக்கை;*** doubleness, twoness. ''இரட்டைக்கிளவி யிரட்டிற்பிரிந் திசையா'' (தொல்.சொல்.48). 2. ***ஒருவகை முருட்டுத் துணி*** (சிலப்.14,108,உரை); dungaree, as double-threaded cloth, sackcloth. 3. ***ஒலி;*** noise, vibrating sound. ''முழக்கிரட்டொலிகலி'' (நன்.459).

*[இரண்டு → இரட்டு = இரட்டை நூலால் நெய்த துணி. இரண்டு பக்கமும் அசைத்து ஒலி எழுப்புதல்.]*

**இரட்டுமி** *irattumi,* பெ. (n.) ***பறைவகை*** (வின்.); a kind of drum. (செ.அக.).

*[இரட்டு → இரட்டுமி.]*

**இரட்டுறக் காண்டல்** *irattura-k-kāndal,* பெ. (n.) ***ஐயக்காட்சி;*** indistinct perception; production of double images; problematical or hypothetical knowledge. ''திரியக் காண்டலும் இரட்டுறக்காண்டலும் தெளியக்காண்டலு மெனக் காட்சி மூவகைப்படும்'' (சி.போ.பா.9, பக்.190) (செ.அக.).

*[இரண்டு + உற → இரட்டுற + காண்டல்.]*

**இரட்டுறமொழிதல்** *irattura-molidal,* பெ. (n.) ***இரு பொருள்படக் கூறுமோர் உத்தி*** (நன்.14); making intentionally a statement capable of being interpreted in two ways, one of 32 uttis. (செ.அக.).

*[இரண்டு + உற = இரட்டுற + மொழிதல்.]*

**இரட்டுறல்** *irattural,* பெ. (n.) ***இருபொருள்படக் கூறுதல்*** (மாறன.299,உரை); paronomasia, in which a word or phrase has a double sense. (செ.அக.).

*[இரண்டு + உறல் = இரட்டுறல்.]*

**இரட்டுறு-தல்** *iratturu-,* செ.கு.வி.(v.i) 1. ***இரு பொருள்படுதல்;*** to be ambiguous. 2. ***ஐயுறுதல்;*** to be in doubt. ''இரட்டுற வெண்ணலிர்'' (சேதுபு.பலதீ. 14.). 3. ***மாறுபடுதல்;*** to change, metamorphose. ''தானத்து மணியுந் தானு மிரட்டுறத் தோன்றினானே'' (சீவக.387).

*[இரண்டு + உறுதல் = இரட்டுறுதல்.]*

**இரட்டை** *irattai,* பெ. (n.) 1. ***சோடு;*** pair. 2. ***தம்பதிகள்*** (சூடா.); married couple. 3. ***இரட்டைப் பிள்ளைகள்;*** twins. 4. ***இரண்டு ஒன்றானது;*** two things naturally conjoined, as a double fruit. 5. ***இரட்டையெண்;*** even numbers, as 2,4,6 opp.to ஒற்றை. 'ஒற்றையிரட்டை விளையாடுதல்'. 6. ***அரையாடை மேலாடைகள்;*** pair of cloths, one tied round the waist and the other thrown over the shoulders. ''இரட்டைகளமுக்கானாலும் மடிகு

லையாமல் வைக்குமா போல" (ஈடு.5,9,3). 7. **துப்பட்டி;** double sheet. "மேலே சுற்றின இரட்டைகளும்" (ஈடு.3,5,4). 8. **ஆடவை ஓரை** (திவா.); sign Gemini in the Zodiac.9. **ஆடவைத் திங்கள்** (இராசவைத்.71); month Āṉi, June-July. 10. **வேதமோதுமுறைகளு ளொன்று** (சி.சி.8,11, மறைஞா); particular method of reciting the Vēdas. (செ.அக.).

ம. இரட்ட; க. இர்மெ, இம்மெ; தெ. ரெட்ட, ரெண்ட; துட. இம், இமு; குட. தண்டி, இம்ப; து. ரட்டு; கொலா. இன்தின்; நா. இன்திங்; பர். இர்டு, இரொடு; கோண். ரண்டெ, இருர்; கூ. ரிண்டெ; குவி. ரிண்டி; குர். இர்ம்ப், ஏண்டு; மால். இவ்ர், இஸ்; பிரா. இரா; பட. ரட்டெ.

*[இரு → இரட்டை.]*

**இரட்டை**[2] *irattai,* பெ. (n.) **முத்துவகை** (S.I.I.ii, 22); a kind of pearl. (செ.அக.).

*[இரு → இரட்டை.]*

**இரட்டை அக்கமணி** *irattai-akkamani,* பெ. (n.) **இரட்டைமணி, அக்க மணி;** double beads of rudra's tears. (சா.அக.).

*[இரு → இரட்டை + அக்கமணி.]*

**இரட்டைக் கத்தி** *irattai-k-katti,* பெ. (n.) **இரண்டு அலகுள்ள கத்தி** (ஆ.அக.); double bladed knife. (செ.அக.).



இரட்டைக் கத்தி

*[இரண்டு → இரட்டை + கத்தி.]*

**இரட்டைக்கதவு** *irattai-k-kadavu,* பெ. (n.) **இரண்டு பிரிவாயுள்ள கதவு;** double doors. (செ.அக.).

*[இரட்டை + கதவு.]*

**இரட்டைக்கரளன்** *irattai-k-karalan,* பெ. (n.) **மிகவும் திடமான ஆள்;** very strong man.

*[இரட்டை + கரளன்.]*

**இரட்டைக் கருப்பம்** *irattai-k-karuppam,* பெ. (n.) **இரண்டு பிள்ளை யுண்டா யிருத்தல்;** double pregnancy-twin pregnancy. (சா.அக.).

*[இரட்டை + கருப்பம்.]*

**இரட்டைக் கழலை** *irattai-k-kalalai,* பெ. (n.) **ஒன்றாக அல்லது ஒன்றன்பின் ஒன்றாக எழும்பும் கழலைக் கட்டி;** couple of contiguous tumours cropping up simultaneously or one after the other. (சா.அக.).

*[இரட்டை + கழலை.]*

**இரட்டைக்கழு** *irattai-k-kalu,* பெ. (n.) **பேரழிவு** (சேரநா.); double gallows, great peril.

ம. இரட்டக்கழு.

*[இரட்டை + கழு.]*

**இரட்டைக் கற்றூண்** *irattai-k-karrūn,* பெ. (n.) **இரண்டு கற்களால் ஆகிய தூண்** (C.E.M.); column assembled with two rocks. (செ.அக.).

*[இரட்டை + கல் + தூண்.]*

**இரட்டைக்கிளவி** *irattai-k-kilavi,* பெ. (n.) **இரட்டையாக நின்றே பொருளுணர்த்துஞ் சொல்** (தொல். சொல்.48); words framed by doubling of certain syllables. எ-டு, கலகல, மளமள. (செ.அக.).

*[இரட்டை + கிளவி.]*

**இரட்டைக்குச்சி** *irattai-k-kucci,* பெ. (n.) **சிலம்பக் கலை வகை** (மதி.களஞ். 1,66); art of fencing with quarter staves in both hands.

*[இரட்டை + குச்சி.]*

**இரட்டைக் குண்டட்டிகை** *irattai-k-kundattigai,* பெ. (n.) **கழுத்தணி வகை;** necklace of double gold beads. (செ.அக.).

ம. இரட்டக்குழல்.

*[இரட்டை + குண்டு + அட்டிகை.]*



இரட்டைக் குண்டட்டிகை

**இரட்டைக்குலுக்கி** *irattai-k-kulukki,* பெ. (n.) **நெடுங் கோடுள்ள புடைவை வகை** (இ.வ.); a kind of saree, with long stripes. (செ.அக.).

*[இரட்டை + குலுக்கி.]*

**இரட்டைக்குறுக்கு** *irattai-k-kuṟukku,* பெ. (n.) ***மாட்டுக் குற்ற வகை*** (பெரியமாட்.141); defect in cattle. (செ.அக.).

*[இரட்டை + குறுக்கு.]*

**இரட்டைக்கை** *iraṭṭai-k-kai,* பெ. (n.) ***இணைக்கை*** (சிலப்.3,18,உரை) பார்க்க; gesture with both the hands.

*[இரட்டை + கை.]*

**இரட்டைக் கொடியடுப்பு** *iraṭṭai-k-koḍi-y-aḍuppu-,* பெ. (n.) ***அடுப்புவகை*** (இந்துபாக.பக்.66): இது மூன்று பிரிவாக இருக்கும்; oven with two branches from the main chamber for the passage of flames, for the cooking of side dishes along with rice. (செ.அக.).



இரட்டைக் கொடியடுப்பு



இரட்டைக் கொடியடுப்பு

**இரட்டைச் சிரட்டை** *iraṭṭai-c-ciraṭṭai,* பெ. (n.) ***இரட்டைக் கொட்டாங் கச்சி*** (வின்.); shell with a scaly lining, from its looking like a double shell. (செ.அக.).

*[இரட்டை + சிரட்டை.]*

**இரட்டைச் சிவப்பலரி** *iraṭṭai-c-civappalari,* பெ. (n.) ***இரட்டைச் சிவப்புப் பூக்களை யுடைய அலரிச்செடி;*** oleander rosebay. (சா.அக.).

*[இரட்டை + சிவப்பு + அலரி.]*

**இரட்டைச் சின்னம்** *iraṭṭai-c-cinnam,* பெ. (n.) ***இரட்டையான ஊதுகுழல் வகை*** (தக்கயாகப்.344, உரை); double clarion.

*[இரட்டை + சின்னம்.]*

**இரட்டைச்சுழி** *iraṭṭai-c-cuḻi,* 1. ***இருசுழி*** (வின்.); two curls, as marks on horses and cattle. 2. ***ஐகார வொலி யைக் குறிக்கும் "ை" என்னும் சுழி;*** secondary consonantal symbol. "ை" of the vowel 'ஐ' from its being a double loop. (செ.அக.).

*[இரட்டை + சுழி.]*

**இரட்டைச் செம்பரத்தை** *iraṭṭai-c-cemparattai,* பெ. (n.) ***இரட்டைப் பூக்களையுடைய செம்பரத்தைச் செடி;*** double shoe flower. (சா.அக.).

*[இரட்டை + செம்பரத்தை.]*

**இரட்டைச் சொல்லு** *iraṭṭai-c-collu,* பெ. (n.) ***இரட் டையாக வருங்குறிப்புச் சொல்*** (தக்க யாகப்.415, உரை); reduplicated onom. word (செ.அக.).

*[இரட்டை + சொல் + உ. சொல்லு என்பது கொச்சை வழக்கு.]*

**இரட்டைத் தலையன்** *iraṭṭai-t-talaiyaṉ,* பெ. (n.) 1. ***இரண்டு தலையைப் பொருத்தியதுபோல் நடுவில் பள்ளமாகவுடைய தலையையுடையவன்;*** one having a skull with two prominences and a depression in between. 2. ***இருதலையையுடைய உரு;*** monster fetus (male) with two heads-Dicephalous. (சா.அக.).

*[இரட்டை + தலையன்.]*

**இரட்டைத் தலைவலி** *iraṭṭai-t-talaivali,* பெ. (n.) ***இரண்டு பக்கமும் வலியை யுண்டாக்கும் தலைவலி;*** head-ache affecting both the sides of the head. It is opposed to ஒற்றைத் தலைவலி, pain in one side of the head-Hemicrania. (சா.அக.).

*[இரட்டை + தலை + வலி.]*

**இரட்டைத் தவிசு** *iraṭṭai-t-taviśu,* பெ. (n.) ***இருவர் இருத்தற்கு உரிய ஓரிருக்கை*** (பெருங்.உஞ்சைக்.34, 42); double seat, seat for two. (செ.அக.).

*[இரட்டை + தவிசு.]*

**இரட்டைத் தாப்பு** *iraṭṭai-t-tāppu,* பெ. (n.) ***இருமுறை அளத்தல்; இருவேறு அணுகு முறை*** (சேரநா); two approaches, duplicity, double-dealing.

ம. இரட்டத்தாப்பு.

*[இரட்டை + தாப்பு.]*

**இரட்டைத்தாளம்** *iraṭṭai-t-tāḷam,* பெ. (n.) ***தாளவகை;*** a kind of tāḷam. "இரட்டைத் தாளத்திற்குப் பொருந்த ஒரு பாட்டினை யான் பேணிப் பாடுதற்கு முன்னே" (பொருந.71,உரை). (செ.அக.).

*[இரட்டை + தாளம்.]*

**இரட்டைத் திருமுகம்** *irattai-t-tirumugam,* பெ. (n.) ***முன்னாளில் திருவிதாங்கூர் மன்னர்கள் சிறப்பான தொண்டு புரிந்தோர்க்கு நல்கி வந்த ஓர் சிறப்புப் பெயர்*** (சேரநா.); title of honour awarded by the sovereigns of Travancore to persons who rendered meritorious service.

ம. இரட்டத்திருமுகம்.

*[இரட்டை + திருமுகம்.]*

**இரட்டைத் தேங்காய்** *irattai-t-tēngāy,* பெ. (n.) ***ஒரு காயுள் இரண்டு விதையுள்ள தேங்காய்*** (சேரநா.); double-coconut. Lodoicea Sechelliana.

ம. இரட்டத் தேங்க.

*[இரட்டை + தேங்காய்.]*

**இரட்டைத்தொடை** *irattai-t-todai,* பெ. (n.) ***ஓரடி முழுதும் ஒரு சொல்லே வரத்தொடுப்பது*** (காரிகை, உறுப்.18,உரை); concatenation in which the same word is repeated throughout a line of verse (pros.) (செ.அக.).

*[இரட்டு - இரட்டை + தொடை.]*

**இரட்டை நந்தியாவட்டம்** *irattai-nandiyā-vattam,* பெ. (n.) ***அடுக்கு நந்தியாவட்டம்;*** Indian rose bay-It is so called from its double petals. (சா.அக.).

*[இரட்டை + நந்தியாவட்டம்.]*

**இரட்டை நாக்கோளி** *irattai-nākkōli,* பெ. (n.) ***இரட்டை நாக்குடைய உடும்பு;*** a guana having double or forked tongue. (சா.அக.).

*[இரட்டை + நா + கோளி. கொள் → கோள் → கோளி = இரையை விழுங்கிக் கொள்ளும் இயல்புடையது.]*

**இரட்டை நாடி** *irattai-nādi,* பெ. (n.) ***தடித்த உடம்பு*** (கொ.வ.); corpulent body. (செ.அக.).

*[இரட்டை + நாடி.]*

**இரட்டைப்படி** *irattai-p-padi,* பெ. (n.) ***இரண்டு படிகள் உள்ள இடம்: அலுவலகம்*** (சேரநா.); place with two steps, office.

ம. இரட்டப்படி.

*[இரட்டை + படி.]*

**இரட்டைப்படை** *irattai-p-padai,* பெ. (n.) 1. ***இரட்டிப்பு*** (கொ.வ.); double. 2. ***இரட்டைப்பட்ட எண்*** (கொ.வ); even number (செ.அக.).

*[இரட்டை + படை.]*

**இரட்டைப்பத்தாக்கு** *irattai-p-pattākku,* பெ. (n.). ***திருவிதாங்கூரின் ஒரு பழைய நாணயம்; 26½. பணம் மதிப்பு*** (சேரநா.); coin used in Travancore in olden times. (செ.அக.).

ம. இரட்டப்பத்தாக்கு.

*[இரட்டை + பத்தாக்கு.]*

**இரட்டைப்பாக்கு** *irattai-p-pākku,* பெ. (n.) ***இரு கண்ணுள்ள பாக்கு*** (வின்.); arecanut with two eyes or germ pores (ஆ.அக.).

*[இரட்டை + பாக்கு.]*

**இரட்டைப்பிள்ளை** *irattai-p-pillai,* பெ. (n.) 1. ***ஒரே கருப்பத்தினின்றும் தனித்தனியாக ஒரே நேரத்தில் பிறந்த இருவர்;*** twins. 2. ***இரட்டையாகக் கிளைத்த தென்னை அல்லது கமுகு;*** double shoot young coconut or areca-nut tree. (செ.அக).

*[இரட்டை + பிள்ளை.]*

**இரட்டைப்பூட்டு** *irattai-p-püttu,* பெ. (n.) 1. ***இரு முறைபூட்டும் பூட்டு*** (கொ.வ.); double lock, requiring separate action for each part. 2. ***பாதுகாப்புக்காக இடும் இருவேறு பூட்டு*** (கொ.வ.); two locks put on for greater security. (செ.அக.).

*[இரட்டை + பூட்டு.]*

**இரட்டைப்பூரான்** *irattai-p-pūrān,* பெ. (n.) ***சதங்கைப் பூரான்*** (வின்.); a species of large centipede. (செ.அக.).

*[இரட்டை + பூரான்.]*

**இரட்டைப்பேய்மருட்டி** *irattai-p-pēy-marutti,* பெ. (n.) ***வெதுப்படக்கி;*** soft woolly plant. (செ.அக.).



இரட்டைப் பேய்மருட்டி

ம. இரட்டப்பே மருட்டி.

*[இரட்டை + பேய் + மருட்டி.]*

**இரட்டைப்பேய்மிரட்டி** *irattai-p-pēy-miratti,* பெ. (n.) ***இரட்டைப்பேய் மருட்டி*** பார்க்க; see *irattai-p-pēy-marutti* (பாலவா.494). (செ.அக.).

*[இரட்டை + பேய் + (மருட்டி) → மிரட்டி.]*

**இரட்டைப்பேர்** *iratti-p-pēr,* பெ. (n.) 1. ***இட்டபெயரோடு சேர்க்கும் மற்றொருபேர்;*** surname. 2. ***நகைச் சுவையாக விளிக்கும் பெயர்;*** nick name (சேரநா.).

ம. இரட்டப்பேரு.

*[இரட்டை + பேர். பெயர் → பேர்.]*

**இரட்டைப் பேறு** *iratti-p-pēru,* பெ. (n.) ***இரட்டைப் பிள்ளை பெறுதல்;*** giving birth to twins. (சா.அக.).

*[இரட்டை + பேறு.]*

**இரட்டைபிரமட்டை** *irattai piramattai,* பெ. (n.) ***இரட்டைப்பேய் மருட்டி*** பார்க்க; see *irattai-p-pēy-marutti.* (சா.அக).

*[இரட்டை + பிரமட்டை.]*

**இரட்டை மஞ்சட் செம்பரத்தம்** *irattai-mañjat sembarattam,* பெ. (n.) ***இரட்டை மஞ்சட் பூக்களை யுடைய செம்பரத்தஞ்செடி;*** double - buff shoe -flower - Hibiscus Rusasinensis. (flara plona) (சா.அக.).

*[இரட்டை + மஞ்சள் + செம்பரத்தம்.]*

**இரட்டை மண்டை** *irattai-mandai,* பெ. (n.) ***அகல மாய்ப் பருத்த தலை*** (கொ.வ.); huge head. (செ.அக.).

*[இரு → இரட்டை. இரட்டை + மண்டை. மண்டை = மட்கலம், மட்கலம் போன்ற தலையோடு.]*

**இரட்டைமணி** *irattai-mani,* பெ. (n.) ***அணிவகை*** (I.M.P.Tj.305); ornament. (செ.அக.).

*[இரு → இரட்டை + மணி.]*

**இரட்டைமணிமாலை** *irattai-mani-mālai,* பெ. (n.) ***அந்தாதித் தொடையாலமைந்த சிற்றிலக்கிய வகை; 20 பாடல்களைக் கொண்டது. வெண்பாவாலும், கட்டளைக் கலித்துறையாலும் இயற்றப்பட்டது*** (இலக்.வி.819); poem in andādi-t-todai consisting of 20 stanzas composed alternately in the two types, venbā and Kattalai-k-kalitturai. (செ.அக.).

*[இரு → இரட்டை + மணி + மாலை.]*

**இரட்டை மல்லிகை** *irattai-malligai,* பெ. (n.) ***இரண்டடுக்குப் பூவிதழுள்ள மல்லிகை;*** double petal-lined jasmine. (சா.அக).

*[இரு → இரட்டை + மல்லிகை.]*

**இரட்டை முண்டு** *irattai-mundu,* பெ. (n.) ***இரண்டாக மடக்கி யுடுக்கும் வண்ணம் நீளத்தில் நெய்த வேட்டி;*** double-dhoti. (சா.அக.).

ம. இரட்டமுண்டு.

*[இரு → இரட்டை + முண்டு.]*

**இரட்டையர்** *irattaiyar,* பெ. (n.) 1. ***இரட்டைப் பிள்ளைகள்;*** twins, "இனிய விரட்டையரிற் புந்தி நகுலன்" (பாரத வெண்.). 2. ***நகுல சகதேவர்*** (பிங்); Pāndava twins. Nakulan and Šagadēvan. 3. ***இரட்டைப் பிள்ளைகளான இளஞ்சூரியர், முதுசூரியர் என்ற புலவர்*** (தமிழ்நா.113.). இவர்களில் ஒருவர் கண்ணில் லாதவர்; மற்றவர் முடவர்; 15ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த வர்கள். இருவரும் சேர்ந்து திருவேகம்ப நாதர் உலா, திருவாமாத்தூர் கலம்பகம், தில்லைக் கலம்பகம் முதலிய நூல்களை இயற்றினர். முடமானவர் வழிகாட்ட கண்ணி லார் அவரைத் தூக்கிக் கொண்டு செல்வார்; twin Tamil Poets named Ilañ-šuriyar and Mudu-šūriyar, one of whom was born blind and the other a cripple, who flourished about the 15th C., and who were the joint authors of the Tiru-v-ēkāmbaranātar-ulā, the Tiruvāmāttūr-k-kalambagam, the Tillai-k-kalambagam, and also of many occasional verses composed extempore as they travelled from place to place, the blind brother carrying the crippled one. (செ.அக.).

*[இரு → இரட்டை → இரட்டையர்.]*

**இரட்டையாட்சி** *irattai-y-ātci,* பெ. (n.) ***இருதிறத்தார் பகுத்துக் கொண்டு செய்யும் அரசாட்சி;*** dyarchy.

*[இரட்டை + ஆட்சி.]*

**இரட்டையேணி** *irattai-y-ēni,* பெ. (n.) 1. ***கவை யேணி;*** fork-legged ladder. 2. ***ஒன்றின்முன் ஒன்று வைத்துக் கட்டப்பட்ட ஏணி;*** longer ladder formed by tying together two ladders joined together at their ends. (செ.அக.).

*[இரட்டை + ஏணி.]*

**இரட்டைவரி** *irattai-vari,* பெ. (n.) ***ஒரே நிலத்துக்காக அரசுக்கும், உள்ளாட்சி நிறுவனங்களுக்கும் தனித் தனியாகச் செலுத்தும் வரி;*** double taxation, as taxes paid to Government and local body. (செ.அக.).

*[இரட்டை + வரி. வரித்தல் = இழுத்தல், கோடிடுதல், கட்டுதல், கட்டுப்படுத்துதல். கட்டுப்படுத்தப்பட்ட அல்லது வரையறுக்கப் பட்ட தொகை.]*

**இரட்டைவாலன் (வாலி)** *irattai-vālan (vāli)* பெ. (n.) 1. ***பொத்தகங்களிலும் துணிகளிலும் காணப்படும் வெண்ணிறப் பூச்சி வகை;*** silver - fish. 2. ***இரட்டை வால் உள்ள கருத்த சிறு பறவை;*** a kind of bird having twin tail.

ம. இரட்ட வாலன், இரட்டவாலி.

*[இரட்டை + வாலன்.]*

**இரட்டை வாழைப்பூ** *irattai-vālai-p-pū,* பெ. (n.) ***நெடுங்கோடுள்ள புடைவை வகை*** (இ.வ.); a kind of saree, with long stripes. (செ.அக.).

*[இரட்டை + வாழை + பூ.]*

**இரட்டைவிரல் தேவாங்கு** *irattai-viral-tēvāngu,* பெ. (n.) 1. ***இருவிரல்களுடைய தேவாங்கு;*** two toed sloth c.f. ***மூன்றுவிரல் தேவாங்கு;*** the three toed one. (சா.அக.).

*[இரட்டை + விரல் + தேவாங்கு.]*

**இரட்டை விருத்தம்** *irattai-viruttam,* பெ. (n.) ***பதி னொருசீர்க்கு மேற்பட்ட சீரான்வரும் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்*** (வீரசோ.யாப்.3, உரை.); verse of more than 11 metrical feet to a line. (செ.அக.).

*[இரட்டை + விருத்தம்.]*

**இரட்டை வெள்ளைச் செம்பரத்தை** *irattai-vellai-c-cembarattai,* பெ. (n.) ***இரட்டை வெள்ளைப் பூக்களையுடைய செம்பரத்தஞ்செடி;*** downy angular -leaved shoe flower. (சா.அக.).

*[இரட்டை + வெள்ளை + செம்பரத்தை.]*

**இரட்டை வெள்ளையலரி** *irattai-vellai-y-alari,* பெ. (n.) ***இரண்டு பூக்களுள்ள வெள்ளை யலரி;*** Indian double flowered white oleander. (சா.அக.).

*[இரட்டை + வெள்ளை + அலரி.]*

**இரட்டை வேட்டி** *irattai-vētti,* பெ. (n.) ***எட்டுமுழ வேட்டி;*** double - dhoti (சேரநா.).

ம. இரட்ட வேஷ்டி.

*[இரட்டை + வேட்டி.]*

**இரண்டகம்** *irandagam,* பெ. (n.) 1. ***ஏமாற்று;*** duplicity double dealing, treachery, perfidy. "உண்ட வீட்டுக்கிரண்டகம் நினையாதே". (பழ.). 2. ***இருமனம்*** (ஆ.அக.); double - mindedness, wavering.

*[இரண்டு + அகம். அகம் = மனப்பாங்கு. இரண்டகம் = ஒருநெறி நில்லாது ஏய்த்தல், ஏமாற்றிக் கெடுக்கும் மனப்பாங்கு.]*

**இரண்டடியெதுகை** *irandadi-y-edugai,* பெ. (n.) ***முதலிரண்டடி நேரெதுகையாய் மற்றையடிகளோ ரெதுகை யாயேனும் பலவெதுகையாயேனும் வருவது.*** (ஆ.அக.); agreement of the second/subsequent syllables of the initial foot in respect of two adjacent lines.

*[இரண்டு + அடி + எதுகை.]*

**இரண்டகவாதி** *irandaga-vādi,* பெ. (n.) ***நம்பவைத்துக் கெடுப்பவன்;*** betrayer, confidence trickster. (ஆ.அக.).

*[இரண்டகம் + வாதி. வாதித்தல் = பேசுதல்.]*

**இரண்டறக்கல-த்தல்** *irandara-k-kala-,* 3 செ.கு.வி. (v.i.) 1. ***வீடுபேறடைதல்;*** to so realize God in one's self as to merge emotionally with Him; to attain salvation. (செ.அக.). 2. ***ஒன்றாகக் கலத்தல்;*** to become merged into one.

*[இரண்டு + அற + கலத்தல்.]*

**இரண்டாகு-தல்** *irandāgu-,* 7 செ.கு.வி. (v.i.) ***இருதுண்டாதல்;*** to be split up, get divided; to fall into two pieces. (செ.அக.).

க. எரடாகு, எரடிடு.

*[இரண்டு + ஆகு.]*

**இரண்டாங்கட்டு** *irandān-kattu,* பெ. (n.) ***வீட்டின் இரண்டாம் பகுதி;*** second set of apartments inside a house; inner court. (செ.அக.).

*[இரண்டு + ஆம் + கட்டு.]*

**இரண்டாங்காலம்** *irandān-kālam,* பெ. (n.) ***கோயிலில் அந்திக் காப்புக்கும் நடு இரவுப் பூசைக்கும் நடுவில் நடக்கும் வழிபாடு*** (இ.வ.); temple services at night, services between the evening and the midnight. (செ.அக.).

*[இரண்டு + ஆம் + காலம்.]*

**இரண்டாங்குட்டம்** *irandān-kuttam,* பெ. (n.) ***உடம்பு கறுத்துச் சொறியுடன் எரிவுண்டாகிப் பன்னீர் பாய்ந்து கலங்கட்டுமோர் வகைக் குட்டநோய்;*** a form of leprosy known as the second stage of the 10 stages of leprosy. (சா.அக.).

*[இரண்டு + ஆம் + குட்டம்.]*

**இரண்டாட்டு-தல்** *irandāttu-,* 5 செ.கு.வி. (v.i) ***இருநெறிப்படுதல்;*** to be double minded; to be unstable, be irresolute between two paths; "இரண்டாட்டா தொழிந்தீ சன்றிறமே பேணி" (தேவா.811,3). (செ.அக.).

*[இரண்டு + ஆட்டு.]*

**இரண்டாநிலம்** *irandā-nilam,* பெ. (n.) ***மேன்மாடம்*** (திவ். திருப்பா.10,வ்யா); upper storey. (செ.அக.).

*[இரண்டு + ஆம் + நிலம் = இரண்டாம் நிலம் → இரண்டா நிலம். மகரக்கேடு இடைக்குறை.]*

**இரண்டாம் நிலை** *irandāmnilai,* பெ. (n.) 1. ***முதன்மையில்லாதது;*** secondary importance 2. ***உறுதி செய்யாதது;*** unconfirmed. 3. ***இரண்டாவது நிலை;*** second stage.

**இரண்டாம் பாட்டன்** *irandām-pāttan,* பெ. (n.) ***பாட்டனின் தந்தை;*** great-grandfather. (செ.அக.).

*[இரண்டாம் + பாட்டன்.]*

**இரண்டாம் போகம்** *irandām-bōgam,* பெ. (n.) ***இரண்டாமுறைப் பயிர் விளைவு;*** second crop raised on land in a year. (செ.அக.).

*[இரண்டு + ஆம் + போகம்.]*

**இரண்டாம் வேளை** *irandām-vēlai,* பெ. (n.) ***இரண்டாம்வேளைச் சிற்றுண்டி*** (இ.வ.); light luncheon, tiffin, as second meal during the day. (செ.அக.).

*[இரண்டு + ஆம் + வேளை. வேலை = எல்லை. வேலை → வேளை = கால எல்லை.]*

**இரண்டா முறைக் காய்ச்சல்** *irandā-murai-k-kāyccal,* பெ. (n.) 1. ***ஒரு நாள் விட்டு ஒருநாள் வருமோர்வகைக் காய்ச்சல்;*** form of intermittent fever -tertian fever. (சா.அக.). 2. ***மீண்டும் வரும் காய்ச்சல்;*** relapsing fever.

*[இரண்டு + ஆம் + முறை + காய்ச்சல்.]*

**இரண்டிகை** *irandigai,* பெ. (n.) ***இண்டை*** (மலை); eight-pinnate soap-pod.

*[இரண்டு → இரண்டிகை. 'கை' சொல்லாக்க ஈறு. யகர மன்றி ஐகார வருமொழி முன்னும் குற்றுகரம் குற்றிய விகர மாயிற்று.]*

**இரண்டில் மூன்றில்** *irandil-mūnril*, கு.வி.எ. (adv.) ***இரண்டு அல்லது மூன்று நாள்களுக்கொருமுறை;*** once in two or three days. 'அவன் இரண்டில் மூன்றில் வருவான்' (கொ.வ.) (செ.அக.).

*[இரண்டு + இல் + மூன்று + இல்.]*

**இரண்டிலொன்று** *irandilonru*, பெ. (n.) ***இறுதிமுடிவு;*** final decision. 'இரண்டிலொன்று இன்றைக்குள் பார்த்து விடவேண்டும்.' (உ.வ.).

*[இரண்டு + இல் + ஒன்று.]*

**இரண்டு**[1] *irandu*, பெ. (n.) 1. ***இரண்டு என்னும் எண்ணுப்பெயர், ஒன்றும் ஒன்றும் சேர்ந்த கூட்டுத் தொகை;*** number two. "இரண்டறிவதுவே அதனொடு நாவே" (தொல். மரபி.27). 2. ***சில;*** few. "இரண்டு நாளைச் சுற்றமே இரங்கல் வேண்டா" (சீவக.270). 3. ***உகரவெழுத்து;*** letter 'உ'. "எட்டினோ டிரண்டும் மறியேனையே" (திருவாச.5,49) (செ.அக.).

மறுவ. பாதி (பகுதி), துமி, ஒன்ஒன், ஓர்ஓர்;

**ம.** இரண்டு, ரண்டு; **க.** எரடு, எரழ்; பட. ஏரடு; குட. தண்டு, தண்டி; **கோத.** எடெ, எய்டு; **துத.** எட்; குறும். யெரடு; இரு. இரெண்டு; **து.** ரட்டு; **தெ.** எரு, ரெண்டு; **கொலா.** இண்டிங், இண்ட்; **பர்.** இர்டு; கட. இண்டி; **கோண்.** ராணு, ரண்ட்; **கூ.** ரி; குரு. ஏர், ஏண்ட்; **குவி.** ஏர், ஏண்ட்; மால். இவ், இத்தி; **நாய்.** இண்டி; **கைக்.** ரண்ட்; **பிராகு.** இராட்.

*Central India: Gayati.* rand; *Madi.* randu; *Madia.* rand; *Rutluk.* rand.

*[இல் → ஈல் → ஈர் → இரு → இரள் → இரண்டு]*

**ஈர்தல் = பிளத்தல், வெட்டுதல், இரண்டாக்குதல். இதே பொருளில் பகுத்தல் துமித்தல் என்னும் வினையடியாகத் தோன்றிய பகு** → பா, துமி, என்னும் சொற்களும் பண்டைக் காலத்தில் இரண்டைக் குறிக்கும் எண்ணுப் பெயர்களாக வழங்கின. இச்சொற்களை யறியாத ஒருசார் பழங்குடியினர் இரண்டு என்னும் பொருளில் ஒன்று ஒன்று, ஒன்னு ஒன்னு, ஒன்ஒன், ஒன்னும் ஒன்னும் போன்ற அடுக்குச் சொற்களை வழங்கினர். இவையன்றி இரண்டு என்னும் எண்ணுப் பெயரின் குறிப்புப் பெயரெச்ச அடியாகிய இரு, ஈர், என்பனவும் அவற்றின் திரிபுகளாகிய கொச்சைச் சொற்களும் பல்வேறு பழங்குடி மக்களிடை எண்ணுப் பெயர்களாகவே வழங்குகின்றன. எண்ணுப் பெயரின் முதனிலை திரிந்தனவெல்லாம் அடிநிலைத் திரிபுற்றவை யென்றும் முதனிலை நீங்கி ஈறு மட்டும் திரிந்தன வெல்லாம் முடிநிலைத் திரிபுற்றவை யென்றும் திரவிடமொழிகளிலும் ஏனைக் குடும்ப மொழிகளிலும் வகைப்படுத்தப்பட்டுள்ளன. இரண்டு என்னும் எண்ணுப்பெயரின் ஒருபொருட் பன்மொழிகளாகப் பண்டுதொட்டே முந்துதிரவிடத்தில் வழங்கி நாளடைவில் அருகிய பகு (பா = பாதி), **துமி, ஒன்ஒன், ஓர்ஓர்** என்னும் எண்ணுப்பெயர்களின் நிலவழிப் பரவலும் வகைப்படுத்தப்பட்டுள்ளது.

**இரண்டு → இரு. முதல்வகை அடிநிலைத் திரிபுற்றவை.**

*Korean.* iru; *Chinese. (Mandrin)* eer, erh; *(Canton)* i; *(Peking)* urh; *(Nankin)* urh (ar); (Shangai) ni; *Jap.* ni; *Tib.* nyi; *Tablung Naga* ih; *Bur* (kami) ni; *Turk.* iki; *Ara.* ethnan, itsnayn; *Heb.* schnayim; *O.Egy.* s.n.w.; *Burma.* nhit, nach; *Afri.* (peul + Housa). bin.

கொரியன் மொழியில் **'இரு'** என்றும் சீனமண்டாரின் மொழியில் **'ஈர்'** என்றும், துருக்கி மொழியில் **'இக்கி'** என்றும் அடிநிலைத் திரிபுற்ற இரண்டு என்னும் எண்ணுப் பெயர் சித்திய கிழக்காசிய மொழிகளில் இயல்பான சொல் வடிவத்திலேயே ஊடாடித் திரிந்துள்ள நிலையைக் காட்டுகிறது. திபேத்திய சப்பானிய பருமிய மொழிகளிலும் எபிரேய அராபிய எகுபதிய மொழிகளிலும் பன்மடி அடிநிலைத் திரிபுகளுற்றுள்ளன.

ஆறு ஏழு எட்டு என்னும் சொற்கள் ஒரே சீராகவும் விரைவாகவும் பெரும்பான்மை உலகமொழிக் குடும்பங்களில் ஊடாடியிருப்பதுபோல் இரண்டு என்னும் எண்ணுப்பெயர் ஊடாடவில்லை. முந்துதமிழில் காலத்தால் முற்பட்ட எண்ணுப்பெயர் காலத்தால் முற்பட்ட மொழிகளில் ஊடாட்டம் பெற்றன வென்றே இதற்கு அமைவு கூறமுடியும்.

இரண்டு என்னும் பொருளில் உலகமொழிகளில் ஊடாடியுள்ள பகு - பாதி, துமி என்னும் வடதமிழ்ச் சொற்கள் வணிகராலும் பொதுமக்களாலும் ஆங்காங்குப் படைக்கப்பட்டவை.

சீன திபேத்திய மொழிக்குடும்பங்களும் சித்திய மொழிக் குடும்பங்களும் தமிழொடு நெருங்கியிருந்த காலத்திய சொல்லாட்சி என்று இரண்டு என்னும் எண்ணுப் பெயரை வகைப்படுத்தலாம்.

குடகு மொழியில் அடிநிலைத் திரிபுற்றபோது ரகரம் தகர மெய்யெழுத்தாகத் திரிந்து தண்டு, தண்டி எனத் திரிந்துவிட்டது. இதனை ஆறு என்னும் எண்ணுப் பெயரில் முடிநிலைத் திரிபுற்ற றுகரம் துகரமாகத் திரிந்த பூட்டானிய திபேத்திய நேப்பாள மொழிநிலைகளோடு ஒப்பிடலாம்.

பெரும்பாலும் குழந்தை மொழி நிலையில் ரகரம் ஒலிப்பருமை கருதி ல, ந, த, ட மெய்யெழுத்துக்களாகத் திரிவதுண்டு. கல்லாத மக்கள் குழந்தைகளின் ஒலிப்பையே வழக்குச் சொல்லாக்கியதால் நேர்ந்த விளைவாகக் குடகு மொழிச் சொல்லாட்சியைக் கொள்ளலாம். இரண்டு என்பதில் முன்னுயிர் நீக்கிய மொழிகளும் இடையில் ரகரம் நீக்கிய மொழிகளும் கூட குழந்தை மொழி ஒலிப்பை ஏற்றனவாகலாம். எழுத்து மொழியை அல்லது செவிவழி இலக்கியச் செல்வத்தைப் பேணிக் காக்காத மொழிகளில் குழந்தைமொழிச் சிதைவுகளே கிளை மொழிகளின் தோற்றத்திற்குக் காரணமாகிவிடுகின்றன.

கொரிய சீனமொழிகளில் இரு, ஈர் என்னும் ஓரசை வடிவிலான குறிப்புப் பெயரெச்சங்களே எண்ணுப் பெயர்களாகி யுள்ளன. சீனமொழியின் ஓரசையமைப்பு பெயரெச்சத்தையே எண்ணுப் பெயராக ஏற்றுக்கொள்ள வழிவகுத்தது எனலாம்.

பகு → பகுதி → பாதி: அடிநிலைத் திரிபுற்றவை

நடுவண் இந்திய மொழிகள்

***Savara.*** bagu; ***Kuri.*** barku; ***Raj.*** makis; ***Mundala.*** baria; ***Bhumij.*** baria; ***Santali.*** barea; ***Ho-kol.*** barria; ***Guj.*** ba, be; ***Sin.*** ba. ***L.*** paria, par; ***F.*** pair; ***E.*** pair, bi-; ***Skt.*** uba, upa; ***Jap.*** fo, f'tats; ***Basque.*** bi, bia, biga; ***Siam*** (Talain). pa; ***Burmah.*** (Khyeng v. shou). pan-uhi (Mru v.Toung) pre.

வட இந்திய மொழிகள் பலவற்றிலும் ஐரோப்பிய மொழிகள் சிலவற்றிலும் சயாம் பருமியக் கிளைமொழிகள் ஒன்றிரண்டிலும் இரண்டைக் குறிக்கும் பாதி என்னும் சொல் அடிநிலைத் திரிபுற்று வழங்கி வருகின்றது. இலத்தீனம், பாசுக்கு, சப்பானியம் ஆகிய மொழிகளிலும் ஊடாடியிருப்பதால் கடல் வாணிகர் வாயிலாக வெளிநாடுகளுக்குப் பரவிய சொல்லாட்சியாகலாம். ஏனெனில் இதன் நிலவழிப் பரவல் ஒரு சீராக இல்லை. சப்பானியம், பாசுக்கு, சயாம், இலத்தீனம் நடுவணிந்தியாவிலுள்ள சவார் சந்தாளியர் மொழிகள் ஆகியவை நிலவழிச் சொற் பரவலுக்கு ஊடாட்ட எளிமை வாய்ந்தனவல்ல. அதுவும் இது பெருமளவில் பரவிய சொல்லாட்சியன்று.

ஏதேனும் ஒன்றைக் கையால் பகிர்ந்து அல்லது வகிர்ந்து இரண்டாக்கித் தருவதையே இச்சொல் முதலில் குறித்திருக்கலாம். குறிப்பாக இச்சொல் குச்சர மொழியில் காணப்படுதலால் குச்சரத்து வணிகர்களால் பரவிய சொல் என்று கருத முடிகிறது.

இரண்டு என்னும் எண்ணுப் பெயர் காலத்தால் முந்தையது. துமி அதனினும் பிந்தையது. பகு - பாதி என்பன மிகவும் காலத்தால் பிந்தைய சொல்லாட்சிகள். எனினும் அனைத்துமே கடல் வாணிகத்திற்கு முற்பட்ட காலத்தன. அரைப்படியளவுள்ள தவசத்தை இருபகுதியாகப் பங்கிட்ட காற்படியளவை வடபுலத்து வணிகர் பாவு எனக் குறிப்பிடுவதைக் காணலாம். சமமாகப் பகிர்ந்தது பங்கிட்டுக் கொண்டது என்னும் பொருளில் தோன்றிய சொல்லாதலின் வணிகரின் படைப்புச்சொல் என்று கூறப்படுகிறது.

துமி: அடிநிலைத்திரிபுற்றவை.

***Mar.*** don, do; ***Punj.*** do, dwa; ***Rajas.*** dho; ***Beng.*** duli; ***Beng., Ass., Ori.*** dui; ***Hin., uru.*** do; ***Pkt.*** dva; ***Pal.*** dvi; ***Skt.*** dva, dwi; ***Sinh.*** dekay; ***Nep.*** (Darhi) (Denwar) dwi; (Tharu). dui; ***Beng.*** ***(Kocch).*** du; ***(Deoria chutia)*** dukuni; ***Nep.*** (Newar) dui; ***L.*** duo; ***Gk.*** dio; ***Russ.*** dva; ***F.*** deux; ***Sp.*** dos; ***Ita.*** due; ***Port.*** dois; ***Rum.*** doi; ***Dut.*** twee; ***Swed.*** twa; ***Dan.*** to; ***Pol.*** dwa; ***Czec.*** dve; ***Indon.*** dud; ***yidd.*** tsvei; ***O.Iri.*** da-du; ***Iri.*** ado; ***E.*** Two; ***Nor.*** to; ***Goth.*** twai; ***Serb.*** dva. ***Ger.*** zwei. ***Afri.*** twee, tve; ***Hung.*** ketto; ***Mong.*** khoyar, kaet. ***Mantshu.*** dchoue; ***Javanese*** (Krama). Kalish; ***Malay.*** dua.

வட இந்திய மொழிகளிலும் ஐரோப்பிய மொழிகளிலும் அங்கேரி உள்ளிட்ட துரானிய மொழிகளிலும் ஆப்பிரிக்க மொழிகள் சிலவற்றிலும் இரண்டைக் குறிக்கும் **'துமி'** என்னும் எண்ணுப்பெயர் ஊடாடியுள்ளது.

பொதுவாக ஒன்று முதல் ஐந்து வரையுள்ள எண்ணுப் பெயர்கள் வணிகர்களால் பரப்பப்படவில்லையென்றும் இவை நிலவழிப் பரவல்களாக ஒரு கூட்டத்தாரிடமிருந்து மற்றொரு கூட்டத்தார் அறிந்துகொண்டனவாகக் கற்காலம் முதல் வளர்ந்தவை என்றும் கூறப்படுகிறது. ஐந்துக்கு மேற்பட்ட எண்ணுப் பெயர்களே வணிர்களால் உலகெங்கும் அறிமுகப்படுத்தப்பட்டவை என்பர்.

துணித்தலும் துமித்தலும் வெட்டுதற் பொருள்தரும் தமிழ்ச் சொற்கள். சிந்துவெளியில் வாழ்ந்த தமிழருள் ஒருசாரார் இரண்டு என்பதைத் **'துமி'** என வழங்கியிருக்கலாம். துணையோர், துணைமையோர் என்பன 'இருவர்' எனப் பொருள்படுதலைக் காணலாம். இருவர் என்பதை இந்தியில் 'தோனோ' என்பர்.

உலக மொழிகள் பெரும்பாலானவற்றில் **இரண்டு, துமி** ஆகிய இருசொற்களே ஊடாடியுள்ளன. உலகின் பிறமொழிகளிலிருந்து கடன்பெறாமல் இரண்டு என்னும் கருத்துப் புலப்படுமாறு வெட்டுதல், பிளத்தல் பொருள்தரும் வினைச் சொற்களைத் தெரிந்தெடுத்து இரண்டைக் குறிக்கும் பெயர்ச்சொற்களை ஆங்காங்கு வாழ்ந்த தமிழ்மக்கள் தாம் விரும்பியவாறு படைத்துக்கொண்டனர்; உலகமொழிகளுக்கும் கடன்சொற்களாக வழங்கியுள்ளனர்.

ஒன்ஒன்: அடிநிலைத்திரிபுற்றவை.

***Uraon.*** enotan; ***Bhut.*** nyi; ***Sik.*** nyet. ***Manipuri.*** ani; ***Mithan Naga.*** ane; ***Angami Naga.*** kane; ***Namsang Naga.*** vanyi; ***Nowgang Naga.*** anna; ***Tengsa Naga.*** annat; ***Abor Miri.*** aniko; ***Beng.*** (Bodo) mangne, manne; (Dhimal) nhelong gnelong; (Garo). gining aning; *(Kachari)* mannai, munai; ***Siamese.*** sang, song; ***shan.*** htsoung; ***Annamitic.*** hai. ***Ahom.*** sang; ***khamti.*** song; ***Laos.*** song; ***Egypt*** (coptic) sum, sem. ***Sum.*** min; ***Caucasian*** (Abkh) u-ba; ***America - (Aztec)*** u-me, umte; ***America (puebio Nahuati)*** ome; ***America (Huasteca Nahuati).*** O-me.

ஓர்ஓர் (ஒக்ஒக்-ஒச்ஒச்): அடிநிலைத்திரிபுற்றவை

***Geor.*** ori; ***Circa.*** oh, ori; ***Javanses*** (Ngoko). ro; ***Tib.*** (sokpa) hoyur (Gyami) ăr; ***Fin.*** kaksi (1+1). ***Nep.*** (Dungmali) hi-chi; (Sang pang). hich-chi, hi-sali (Balaji) hich-che; (Lohorong) hich-chi, hi-pang; (Thulungya). ni-chi, (yakha) kich-chi; (Podong) hakara; (kiranti) ha-sat; ***Afri.*** **(Nubian).** orre. ***(Swa)*** eru; (Couch) ***ori;*** (Bari) ori-i, ***(Berber)*** rdet. ***(kabyl)*** eraa. ***O.Georg.*** jori.

பிளத்தல், துணித்தல், பகுத்தல் கருத்தின் அடிப்படையில் இரண்டு என்னும் எண்ணுப்பெயரை அமைத்துக்கொள்வதற்கு முன்பு **ஒன்றும் ஒன்றும்** என்னும் கூட்டுச்சொல் எண்ணுப்பெயரே பல்வேறு வகையில் அடுக்குச்சொல்லாகி வழக்கில் பயின்றுள்ளது.

வடபுலத்து மலைவாழ் பழங்குடிகளிடை ஒன்ஒன் என்பதும் ஆப்பிரிக்க மொழிகளில் 'ஓர்ஓர்' என்பதும் பெருக வழங்கியுள்ளன.

திபேத்திய சர்கேசிய சியார்ச்சிய மொழிகள் ஓர்ஓர் என்பதைத் தக்க வைத்துக்கொண்டிருப்பதால் ஆப்பிரிக்கா வரை இதன் ஊடாட்டம் புலப்படுகிறது. ஒக்ஒக் (1+1) என்பது

துரானிய மொழிக்குடும்ப மொழியான பின்னிசில் முடிநிலைத் திரிபுற்று கக்சி எனத் திரிந்துள்ளது.

சுமேரிய எகுபதிய நாகரிக மொழிகளிலும் அமெரிக்கச் செவ் விந்தியர் மொழிகளிலும் ஊடாடிய ஒன்ஒன் (1+1) என்னும் சொல்லாட்சி இரண்டைக் குறிக்கும் ஒரேசொல் வழக்கூன்றிய பின்னும் பழைய வழக்கத்தை மறக்கவியலாமல் நீடுநிலைத்ததா கலாம். தென்கிழக்காசிய மொழிகளிலும் புதுக்கலவை மொழி யான எகுபதிய காப்டிக் மொழியிலும் சகர மெய்யெழுத்து முன்னெழுத்தாகச் சேர்ந்திருப்பது காலத்தால் பிந்தைய சொல் லாட்சி. பழைய எகுபதிய மொழியும் ஒன்ஒன் என்பதனுடன் சகரம் சேர்த்து வழங்கியுள்ளது. சுமேரிய வங்கக் கிளைமொழி கள் மகரமெய்யை முன்னெழுத்தாகச் சேர்த்துக் கொண்டன.

**இரண்டு**[2] *irandu,* பெ. (n.) ***ஈயத்தண்டு;*** lead rod (சா.அக.).

**இரண்டுக்குற்றது** *irandukkurradu,* பெ. (n.) 1 ***இதுவோ! அதுவோ வென்னு நிலை.*** (வின்.); that which is dubious, dilemma, that which admits of alternatives. (செ.அக.). 2. ***உண்மையோ, பொய்யோ வென் பது*** (ஆ.அக.); true or false.

*[இரண்டு + கு + உற்றது.]*

**இரண்டுங்கெட்ட நேரம்** *irandun-ketta-neram,* பெ. (n.) ***அந்திப் பொழுது;*** dusk of the evening which is neither day or night. (செ.அக.).

*[இரண்டு + உம் + கெட்ட + நேரம்.]*

**இரண்டுங்கெட்டான்** *irandun-kettan,* பெ. (n.) 1 ***நன்மை தீமை யறியாதவன்*** (கொ.வ.); one who cannot distinguish between good and evil. 2 ***ஒருவழிக் கும் வராதவன்*** (கொ.வ.); one who will not take up any course definitely, one who is not himself knowledgeable nor will heed good advice. (செ.அக.).

*[இரண்டு + உம் + கெட்டான்.]*

**இரண்டு நினை-த்தல்** *irandu-ninai-,* 4 செ.கு.வி. (v.i.) ***இரண்டகம் நினைத்தல்*** (கொ.வ.); to indulge in double dealing, duplicity, confidence tricking. (செ.அக.).

*[இரண்டு + நினை.]*

**இரண்டுப்பு** *irand、uppu,* பெ. (n.) ***இருவகையுப்பு, அதாவது இயற்கை செயற்கை;*** two kinds of salt, viz; the natural and the artifical salts. (சா.அக.).

*[இரண்டு + உப்பு.]*

**இரண்டுபடு-தல்** *irandu-padu-,* 20 செ.கு.வி. (v.i.) 1. ***பிரிவுபடுதல்;*** to disagree, dissent, to get divided "ஊர் இரண்டு பட்டால் கூத்தாடிக்குக் கொண்டாட்டம்" (பழ.). 2. ***ஐயுறுதல்;*** to be doubtful.

*[இரண்டு + படு.]*

**இரண்டு பண்ணு-தல்** *irandu-pannu-,* 15 செ.கு.வி. (v.i.) 1. ***புரளி பண்ணுதல்;*** to tease. 2. ***வேற்றுமை உண்டாக்குதல்;*** to cause to disagree. (ஆ.அக.).

*[இரண்டு + பண்ணு.]*

**இரண்டுரு** *ranḍuru,* பெ. (n.) 1. ***ஆணும் பெண்ணுமா கிய இரண்டு உரு;*** combination formed of male and female figures. "இரண்டுருவாய் ஈரணி பெற்ற வெழிற் றகையன்" (பதிற்.கட.7). 2. ***சிவனும் திருமாலும் ஆகிய இருவர் உருவங்கள்;*** Siva and Vishnu as manifestations of the supreme being. "இரண்டுருவும் ஒன்றாயிசைந்து" (திவ். திருவந்.63).

*[இரண்டு + உரு.]*

**இரண்டுவவு** *iranduvavu,* பெ. (n.) ***காருவாவும் வெள்ளுவாவும்;*** new moon and full moon.

*[இரண்டு + உவவு.]*

**இரண்டெட்டில்** *irandettil,* கு.வி.எ. (adv.) 1. ***விரை வில்;*** very soon, quickly, literally in two strides. 'இரண்டெட்டில் வா' (கொ.வ.). 2. ***வெகு அண்மை யில்;*** very near. 'அவர் வீடு என் வீட்டிலிருந்து இரண்டெட்டில் இருக்கிறது' (உ.வ.).

*[இரண்டு + எட்டில். எட்டு - எட்டிவைக்கும் பாதம். இரண்டு அடி எடுத்து வைக்கும் தொலைவு. இரண்டு அடி எடுத்து வைக்கும் குறுகிய நேரம்.]*

**இரண்டை** *irandai,* பெ. (n.) 1. ***கைம்பெண்;*** widow. 2. ***எலியால் விதை;*** glaucous-leared physic nut. (செ.அக.).

*[இரள் → இரண்டை. இரள் = பிரிதல், இரண்டாதல். இரண்டை = கணவனைப் பிரிந்தவள், தனிமையுற்ற கைம்பெண். பிள வுண்ட வித்து அல்லது முளை.]*

**இரண்டொன்று** *irandonru,* கு.வி.எ. (adv.) ***சில;*** one or two, a few. 'இரண்டொன்று தா.' (உ.வ.).

*[இரண்டு + ஒன்று - இரண்டொன்று. ஓரிரண்டுதா என்னும் போது சற்றுக் கூடுதலாகக் கொடு என்பதும், இரண்டொன்றுதா என்னும்போது எண்ணிக்கை சற்றுக் குறைந்தாலும் பழுதில்லை என்பதும் குறிப்பால் உணர்த்தப் படுவனவாம்.]*

**இரணமுட்டம்** *irana muttam,* பெ. (n.) ***பழங்காலத்தி லிருந்த ஊர்ப்பகுதி;*** a division of habitation.

*[இரிணம் - இரணம். இரிணம் = உவர்நிலம். இரணம் முட்டம்.]*

**இரணியமுட்டத்துப் பெருங்கௌசிகனார்** *iraniya muttattu-p-perunkausiganar,* பெ. (n.) ***கடைக்கழகப் புலவர்;*** Sangam poet.

*[இரணமுட்டம் - இரணியமுட்டம் + பெரும் + கௌசிகன் + ஆர். இவர் மலைபடுகடாம் இயற்றிய புலவர். இரணமுட்டம் பார்க்க; see iraṇa muṭṭam.]*

**இரத்தி** *iratti,* பெ. (n.) 1. ***இலந்தை மரம்;*** jujube tree. ''இரத்தி நீடிய வகன்றலை மன்றத்து'' (புறநா.34, 12). 2. ***மரவகை;*** tree. 3. ***இத்தி மரம்*** (சூடா.); jointed ovate - leaved fig.

**ம.** இலந்த, லந்த; **க** எர, எலசி, எளசி, இலிசி, எகசி, ரேகு; **தெ.** ரேகு; **கொலா.** ரெங்கா; **பர்.** ரேகா; **கோண்.** ரெங்கா, ரெங்கு.

*[இல் → இர் → இரத்தி.]*

**இரத்திரி** *irattiri,* பெ. ***இத்தி*** (வின்); fig tree. (செ.அக.).

*[இரத்தி - இரத்திரி.]*

**இரதம்** *iradam,* பெ. (n.) ***இரத்தி*** பார்க்க: see *iratti,* இத்தி (வை.மூ); jointed ovate leaved fig. (செ.அக).

*[இரத்தி - இரதம்.]*

**இரந்திரி** *irandiri,* பெ. (n.) ***இரத்தி*** பார்க்க; see *iratti.*

*[இரத்தி - இரந்திரி.]*

**இரந்துண்ணி** *irandunni,* பெ. (n.) ***இரப்போன்;*** begger (ஆ.அக.) ''அப்பன் இரந்துண்ணி ஆத்தாள் மலை நீலி''. (தனிப்பா.).

*[இரந்து + உண்ணி. இரந்துண்ணி - இரந்து உண்பவன்.]*

**இரந்துணி** *iranduṇi,* பெ. (n.) ***இரந்துண்ணி*** பார்க்க; see *irandunni.*

*[இரந்துண்ணி - இரந்துணி.]*

**இரந்தை** *irandai,* பெ. (n.) ***இலந்தை மரம்*** (ஆ.அக்.); jujube tree. ''இரந்தையின் கனி'' (சேதுபு. காசிப.46) (செ.அக.).

*[இலந்தை - இரந்தை.]*

**இரப்பாண்டி** *irappāṇḍi,* பெ. (n.) ***இரப்பாளன்*** பார்க்க; see *irappāḷan.*

*[இரப்பு + ஆண்டி.]*

**இரப்பாளன்** *irappāḷan,* பெ. (n.) ***வறுமையுற்று இரப்பவன்*** (ஈடு.2,6.1); beggar, mendicant, suppliant. (செ.அக.).

**ம.** இரப்பாளி; குட. எரபெ.

*[இரப்பு + ஆளன்.]*

**இரப்பு** *irappu,* பெ. (n.) 1. ***இரத்தல்;*** begging, asking alms. ''இரப்பு மோர் ஏஎர் உடைத்து''. (குறள்.1053) (செ.அக.). 2. ***வறுமை*** (ஆ.அக.); poverty.

**ம.** இரப்பு.

*[இர → இரப்பு.]*

**இரப்புணி** *irappuṇi,* பெ. (n.) ***இரந்துண்ணி*** (வின்): (ஆ.அக.); beggar who begs for his food. (செ.அக.).

*[இரப்பு + (உண்ணி) உணி.]*

**இரப்பை** *irappai,* பெ. (n.) ***இமையிதழ்;*** eyelid (செ.அக.).

**க.** ரெப்பெ; **தெ.** ரெப்ப.

*[இறப்பை - இரப்பை (கொ.வ.).]*

இறப்பை பார்க்க; see *iṟappai.*

**இரப்போடு** *irappōḍu,* பெ. (n.) ***இரப்பதற்குப் பயன் படுத்தும் ஏனம்;*** beggar's bowl. (சேரநா.).

**ம.** இரப்போடு.

*[இரப்பு + ஓடு.]*

**இரப்போர்** *irappōr,* பெ. (n.) 1. ***இரவலர்;*** poor people. 2. ***இரந்து வேண்டுவோர்;*** beggars. 3. ***பரிசிலாளர்;*** poets who seek presents from the patron. (ஆ.அக.).

*[இர → இரப்பு → இரப்போர்.]*

**இரப்போன்** *irappōṉ,* பெ. (n.) ***இரந்துண்ணி;*** beggar.

*[இர → இரப்பு → (ஆன்) ஓன்.]*

**இரம்பம்**[1] *irambam,* பெ. (n.) ***கத்தூரி மான்*** (அக.நி); musk deer. (செ.அக.).

*[ஒருகா. இரு → இரும்பம் → இரம்பம்.]*

**இரம்பம்**[2] *irambam,* பெ. (n.) ***அரம்பம் பார்க்க, மரமறுக்கும் வாள்;*** saw. (செ.அக.).

**தெ.** ரம்பமு.

*[அரம்பம் → ரம்பம் - இரம்பம். அரம்பம் > Skt. ramba > இரம்பம்.]*

**இரம்பிகம்** *irambigam,* பெ. (n.) ***மிளகு*** (சங்.அக.); pepper (செ.அக.).

இரம்பிலம் > இரம்பிகம்.

*[மிரியல் - இரியல் - இரிம்பம் - இரிம்பகம் - இரம்பகம்.]*

**இரம்பிலம்** *irambilam,* பெ. (n.) ***மிளகு;*** black pepper. (செ.அக.).

*[இரிம்பம் - இரம்பகம் - இரம்பலம்.]*

**இரலை**[1] *iralai,* பெ. (n.) 1. ***கலைமான்*** (திவா.); stag. 2. ***புல்வாய்*** (ஆ.அக.); a kind of deer. ''இரலையுங்



இரலை

கலையும் புல்வாய்க்குரிய" (தொல்.பொருள்.600). 3. **கருமான்** (ஆ.அக.); black-buck. (செ.அக.) "இரலை நன்மான் இனம் பரந்தவை போல்" (அகநா.194).

**க.** எரளெ, எரலெ; **தெ.** இற்ற, லேட்டி, லேடி; **மால்.** இலரு.

*[இரு - இரல் - இரலை. இரல் (இரள்) = வளைதல், திருகுதல், சுற்றுதல், முறுக்குதல். இரலை = திருகிய கொம்புடைய மான் வகை. இரு - இருல் = கருமை. இருலை - இரலை = கரிய மான்.]*

**இரலை**[2] *iralai*, பெ. (n.) 1. ***துத்திரி யென்னும் ஊதுகொம்பு*** (சீவக.434); trumpet. 2. ***இரலை நாண்மீன்*** (அசுவினி); first nakṣatra. (பிங்.).

*[இரல் = வளைதல். இரலை = வளைந்த ஊது கொம்பு போன்று வளைந்த அமைப்பு காணப்படும் விண்மீன் தொகுதி.]*

**இரவச்சம்** *iravaccam*, பெ. (n.) 1. ***மானந் தீரவரும் இரப்புக்கு அஞ்சுகை*** (குறள்.அதி.107); vexation of beggary. 2. ***குருதி கண்டு அஞ்சும் அச்சம்;*** hemophobia. (செ.அக.).

**இரவணம்** *iravaṇam*, பெ. (n.) 1. ***கழுதை கத்துகை;*** braying of a donkey. 2. ***வண்டு;*** beetle. (செ.அக.).

*[இரை + அணம் = இரைவணம் - இரவணம். இரைதல் = தொடர்ந்து ஒலி எழுப்புதல்.]*

**இரவம்**[1] *iravam*, பெ. (n.) ***இருள்;*** darkness.

*[இரு → இருவம்.]*

**இரவம்**[2] *iravam*, பெ. (n.) ***ஒலி;*** sound.

*[அரவம் - இரவம்.]*

**இரவம்**[3] *iravam*, பெ. (n.) ***இரவமரம் - இலந்தை;*** jujube tree. "தீங்கனி யிரவமொடு வேம்பு மனைச் செரீஇ." (புறநா.281-1) (சங்.இலக்.சொற்).

*[இரு - இர - இரவம்.]*

**இரவரல்** *iravaral* தொ.பெ. (vbl.n.) ***இரவுக் குறியில் வருதல்;*** coming at the appointed time during night for love meeting. (குறிஞ்.239) (சங்.இலக்.சொற்).

*[இரவு + வரல் = இரவரல்.]*

**இரவல்** *iraval* பெ. (n.) 1. ***வேண்டிப் பெறுதல், கேட்டல்*** (ஆ.அக); begging, to get by asking. "இரவன் மாக்களீகை நுவல" (புறநா.24.30). 2. ***மீண்டு தருவதாகக் கொண்ட பொருள்;*** materials borrowed. 'இரவலுடம்போ சுமந்து கொண்டிருக்கைக்கு' (ஈடு.2.4.2) (செ.அக.).

*[இரத்தல் = மனம் தாழ்ந்து வேண்டுதல். இர - இரவல்.]*

**இரவல் மாக்கள்** *iraval mākkaḷ* பெ. (n.) ***பரிசிலர், வள்ளலின் பால் பரிசு வேண்டிச் செல்லும் புலவர், கலைவலார், பாணர், கோடியர், கூத்தர் முதலியோர்;*** poets, artists, singers, musicians and dancers who seek presents from the patron. "இரவன் மாக்களீகை நுவல" (புறநா.24-30).

*[இர - இரவல் + மாக்கள். இரவல் = இரத்தல்.]*

**இரவலர்த் தடுத்த வாயில்** *iravaler-t-taḍutta vāyil*, பெ. (n.) ***இரவலர்களை நீங்கிச் செல்ல மனமின்றித் தடுத்த வாயில்;*** gate of a patron, forbidding the prize. "குய்குரல் மலிந்த, கொழுந்துவை அடிசில் இரவலர்த் தடுத்த வாயில்." (புறநா.250).

*[இரவலர் + தடுத்த + வாயில்.]*

**இரவலன்** *iravalaṉ* பெ. (n.) ***இரப்பவன்*** (பெரும்பாண். 45); suppliant, recipient. (செ.அக.).

*[இர - இரவல் - இரவலன்.]*

**இரவலாளன்** *iraval-āḷaṉ* பெ. (n.) ***இரவலன்*** (தமிழ் நா.161); beggar.

*[இரவல் + ஆளன்.]*

**இரவற்குடி** *iravaṟ-kuḍi*, பெ. (n.) 1. ***குடிக் கூலியின்றிக் குடியிருக்குங் குடும்பம்*** (வின்.); family occupying a borrowed house. 2. ***அடுத்து வாழுங் குடும்பம்*** (வின்); family living with the owners of a house and without paying rent (செ.அக.). 3. ***இரவல் வீடு;*** house lent.

*[இரவல் + குடி.]*

**இரவற் சோறு** *iravaṟ-cōṟu*, பெ. (n.) ***பிறரைச் சார்ந்து பிழைக்கும் பிழைப்பு*** (யாழ்ப்.); livelihood obtained by sponging upon others. (செ.அக.).

*[இரவல் + சோறு.]*

**இரவறிவான்** *iravaṟi-vāṉ*, பெ. (n.) ***சேவற்கோழி*** (வின்); cock, from its making the watch of the night. (செ.அக.).

*[இரவு + அறிவான். இரவுப் பொழுதின்கண் யாமம் அறிந்து கூவும் இயல்பான் பெற்ற பெயர்.]*

**இரவன்** *iravaṉ*, பெ. (n.) ***திங்கள்;*** moon, who is lord of the night. "இரவன் பகலோனு மெச்சத் திமையோரை" (தேவா.571,4). (செ.அக.).

*[இரவு → இரவன் = இரவில் வரும் நிலவு.]*

**இரவாளர்** *iravāḷar*, பெ. (n.) ***கொங்குப் பகுதியில் வாழும் இருளருள் ஒரு பிரிவினர்;*** sect of the iruḷar community in Coimbatore district.

*[இரவு + ஆளர். ஒ.நோ. அருவாளர்.]*

**இரவி**[1] *iravi*, பெ. (n.) ***வாணிகத் தொழில்*** (பிங்.); commercial practice (செ.அக.).

*[இரு → இருவி → இரவி. இரு = பெருமை; இரவி = பெருமளவில் செய்யப்படும் மொத்த வாணிகம்.]*

**இரவி**[2] *iravi,* பெ. (n.) 1. ***ஞாயிறு;*** sun. "கண்ணாரிரவி கதிர்வந்து கார்கரப்ப" (திருவாச.7.18). 2. ***மலை*** (பிங்.); mountain. (செ.அக.).

*[உல் - உரு - உரி (எரிதல்). உரு - உரவி - இரவி = ஒளி சிந்தும் கதிரவன், கதிரவன் சாயும் மலை.]*

**இரவிக்கை** *iravikkai,* பெ. (n.) 1. ***மகளிர் சட்டை;*** blouse. (செ.அக.). 2. ***ஞாயிற்றுக்கதிர்கள்;*** sun's rays. (சா.அக.).

க. ரவிக்கெ; தெ. ரவிக.

*[இறவு - இறவுதல் = சுற்றுதல், வளைதல். இறவு - இறவுகை - இறவுக்கை - இரவிக்கை. இரவி + கை = இரவிக்கை = கதிரவனின் கை, ஒளிக்கதிர். ஒ.நோ. இறவு = வளைந்த இறால் மீன். இறவு - இறா - இறால்.]*

**இரவிகாந்தம்** *iravi-kāndam* பெ. (n.) 1. ***ஞாயிறு காந்தக்கல்*** (ஆ.அக.); sun-stone. "இரவி காந்தத் திலகமுமே" (நீதிவெண்.50). 2. ***தாமரை*** (மலை.); lotus. (செ.அக.).

*[இரவி + காந்தம்.]*

**இரவிகுலம்** *iravi-kulam,* பெ. (n.) ***கதிரவக்குலம்*** (ஆ.அக.); solar race. "இரவிகுலம் பாரிக்கத் தருவ னென்றே" (கலிங்.10,6) (செ.அக.).

*[இரவி + குலம்.]*

**இரவிச் சீலை** *iravi-c-cīlai,* பெ. (n.) ***சிவப்புக்கல், கற்காவி;*** red ochre. (சா.அக.).

*[இரவி + (சிலை) சீலை. இரவி = கதிரவன், செந்நிறம். சிலை = கல்.]*

**இரவிற்றிரிவோன்** *iraviṟṟirivōṉ,* பெ. (n.) ***அரக்கன்;*** demon or goblin, one who roams during night. "இரவிற் றிரிவோர் கட்கிறை" (தேவா.111,8) (செ.அக.).

*[இரவு + இல் + திரி + (ஆன்) ஒன்.]*

**இரவு**[1] *iravu,* பெ. (n.) 1. ***இருளடர்ந்தநேரம்;*** night, time from sunset to sunrise. "எல்லையு மிரவு மெண் ணாய்" (புறநா.7,7). 2. ***மஞ்சள்*** (தைலவ.தைல.103); c.f. Skt. niśākvā, turmeric. 3. ***இருள் மரம்*** (பெருங். உஞ்சைக் 52,40) பார்க்க; a kind of tree. (செ.அக.).

ம. இரவு; க. எரெ, இருள், இர; தெ. ரே, இருலு, ரேயி; கோத. இர்ல்; துட. இள்; குட. இரி; துளு. இர்க்; பட. இரு.

*[இல் - இரு - இரவு.]*

**இரவு**[2] *iravu* பெ. (n.) ***இரக்கம்*** (அக.நி.); mercy, compassion. (செ.அக.).

*[இர - இரவு.]*

**இரவு**[3] *iravu* பெ. (n.) ***பன்றி வாகை*** (L); tube-in-tube wood. (செ.அக.).

*[இர - இரவு.]*

**இரவு**[4] *iravu,* பெ. (n.) 1. ***இரத்தல்;*** beggary. "கோலொடு நின்றா னிரவு." (குறள்.552) (செ.அக.). 2. ***வறுமை*** (ஆ.அக.); poverty.

ம. இரவு; க. ரெவு; தெ., து. எரவு.

*[இர - இரவு.]*

**இரவுக்குறி** *iravu-k-kuṟi,* பெ. (n.) ***இரவிலே தலைவ னுந் தலைவியுஞ் சேரும்படி குறிக்கப்பட்ட இடம்*** (தொல்.பொருள்.131.); clandestine meeting place of lovers by night. (செ.அக.).

*[இரவு + குறி.]*

**இரவுக்குறியிடையீடு** *iravuk-kuṟi-yiḍai-yīḍu,* பெ. (n.) ***எட்டாம் நாள் இரவுக் குறிக்கண் வந்த தலைவன், அல்ல குறிப்படுதலால் இடையீடு பட்டுப் போதல்.*** (அபி.சிந்); interruption of regularity of love meeting at night, literary genre of Tamil agam poems.

*[இரவு + குறி + இடையீடு.]*

**இரவுச்சோறு** *iravu-c-cōṟu,* பெ. (n.) 1. ***அரசின் கீழ் நிலைப் பணியாளர்க்கு இராக் காலத்திலிடும் உணவு*** (T.A.S.ii,65); supply of food at night, to government menial servents. (செ.அக.). 2. ***இரந்து உண்ணும் உணவு;*** food got through begging at night. (சேரநா.).

ம. இரவு சோறு.

*[இரவு + சோறு.]*

**இரவுத் தலைச் சேறல்** *iravuttalaiccēṟal,* பெ. (n.) ***தலைவனைக் காணவேண்டும் என்னும் ஆசை யோடு இருள்செறிந்த யாமத்து மாண்புறு மென்மை யாள் தன் இல்லினின்றும் புறப்படுதல். பெருந் திணைத் துறைகளுள் ஒன்று.*** (பு.வெ.); literary genre of Tamil agam poems - peruntiṇai.

*[இரவு + தலை + சேறல். பெண் ஆணை நாடிச் செல்லுதல் நாணுவரையிறத்தல் என்னும் குற்றத்தின் பாற்படுதலின் இத னைப் பெருந்திணைத் துறைகளுள் ஒன்றாக்கினர்.]*

**இரவு பகல்** *iravu-pagal,* பெ. (n.) ***இராக் காலமும் பகற் காலமும்;*** day and night.

பட. இருஹகலு.

*[இரவு + பகல்.]*

**இரவு மலர்** *iravu malar,* பெ. (n.) ***பொய்கைப் பூப் போலன்றி இரவுக் காலத்தும் மலர்ச்சி நிலை பெற்ற மலர்;*** nocturnal flower. "இரவு மலர் நின்று, திருமுகத் தலமரும்" (பதிற்று.21-34).

*[இரவு[1] + மலர்.]*

**இரவுரை** *iravurai,* பெ. (n.) ***இரப்புரை;*** entreaty, imploration. "இரவுரை நெடுவாரரிப்ப வட்டித்து" (புறநா.398.13).

*[இரவு[4] + உரை.]*

**இரவெரி** *iraveri,* பெ. (n.) ***ஒளிமரம்*** (சோதி மரம்) (மச்சபு.நைமிச.8); a kind of tree said to shine at night. (செ.அக.) ''செந்தழல் ஒளியிற் பொங்கும் தீபமா மரங்களாலும்'' (பெரியபு.கண்ணப்ப.131).

*[இரவு[1] + எரி.]*

**இரவைக்கு** *iravaikku,* கு.வி.எ. (adv.) ***இராப்பொழு துக்கு;*** to night; for the night. 'இரவைக்குப் புழுக்குக் கறியமுது' (S.I.I.vii, 267) (செ.அக.)..

*[இரவு - இரவை + கு.]*

**இரவோன்[1]** *iravōṉ,* பெ. (n.) 1. ***இரவலன்*** (திவா.); beggar. (செ.அக.). 2. ***வறியவன்;*** poor man. (ஆ.அக.).

*[இரவு + (ஆன்) ஓன்.]*

**இரவோன்[2]** *iravōṉ,* பெ. (n.) ***திங்கள்*** (பிங்.); moon, who is the lord of the night. (செ.அக.).

*[இரவு + (ஆன்) ஓன்.]*

**இரளி** *iraḷi,* பெ. (n.) ***கொன்றை*** (மலை); cassia. (செ.அக.).

**க.** ரேலா; **தெ.** ரேலா-செட்டு.

*[இர - இரளி.]*

**இரற்று-தல்** *iraṟṟu-,* 15 செ.கு.வி. (v.i.) 1. ***ஒலமிடுதல்;*** to shout; utter a shriek as a bird. ''கடலினாரை யிரற்றும்'' (ஐங்குறு.114). 2. ***ஒலித்தல்;*** to sound.

*[அரற்று - இரற்று.]*

**இரா[1]** *irā,* பெ. (n.) ***இரவு;*** night. ''நீடுக மன்னோ விரா'' (குறள்.1329).

**ம.** இரா; **தெ.** இருலு. *Skt.* rātri.

*[இரவு - இரா.]*

**இராக்கடைப் பெண்டிர்** *irā-k-kaḍai-p-peṇḍir* பெ. (n.) ***விலை மாதர்*** (சிலப்.5,50,உரை); prostitutes. (செ.அக.).

*[இரவு + கடை + பெண்டிர்.]*

**இராக்கடை வேசையர்** *irā-k-kaḍai-vācaiyar,* பெ. (n.) ***இராக்கடைப் பெண்டிர்*** பார்க்க; see *irā-k-kaḍai--p-peṇḍir.*

*[இரவு + கடை + வேசியர்.]*

**இராக்கண்** *irākkaṇ,* பெ. (n.) ***இரவில் கண் தெரியாத வொரு நோய்;*** failure of or imperfect vision at night or in a dim light, night blindness-nyctalopia.

*[இரவு + கண்.]*

**இராக்கதம்** *irākkadam,* பெ. (n.) 1. ***தலை மகளை வலிதிற் கொள்ளும் மணம்*** (தொல்.பொருள்.92, உரை); a form of marriage in which the bride is carried away by force characteristic of Rakshasas of asta-vivākam. 2. ***இரவின் 15 நேரப் பிரிவுகளுள் ஆறாவது*** (விதான,குணா.73,உரை); the sixth of 15 divisions of the night. (செ.அக.). 3. ***பெண்ணுஞ் சுற்றமும் உடன்படாது வலிதிற் கொள்ளும் மணம்*** (ஆ.அக.); forced marriage.

*[அரக்கன் - அரக்கதம் - ராக்கதம் - இராக்கதம்.]*

**இராக்கதிர்** *irā-k-kadir,* பெ. (n.) ***திங்கள்*** (திவா.); moon, from its shining at night. (செ.அக.).

*[இரவு - இரா + கதிர்.]*

**இராக்கறி** *irāk-kaṟi,* பெ. (n.) ***இரவுச் சாப்பாட்டிற் குதவுங் கறிகள்;*** curries fit to be used in food during nights, as distinguished from பகற்கறி, those taken during the day. (சா.அக.).

*[இரவு + கறி = இராக்கறி.]*

**இராக்கனி** *irākkaṉi,* பெ. (n.) ***இரவு உணவுக்குப் பின் மெல்லப்படும் வெற்றிலை;*** betel, it is so called from its being invariably chewed in the night before retiring to bed. (சா.அக.).

*[இரவு + கனி. கண்ணுக்குப்புலப்படப்பூத்துக் காய்க்காத இயல் புடைய வெற்றிலை கனித் தன்மையைத் தனக்குள் பெற்றிருக்கி றது என்னும் கருத்தில் கனி எனப்பட்டது. இரவு நேரத்தில் வெற்றிலை போட்டுக் கொள்வது வழக்கமாதலின் இப்பெயர் பெற்றது.]*

**இராக்கனியாள்** *irākkaṉiyāḷ,* பெ. (n.) ***இரவிற் குடிப்ப தற்குப் பாலைக் கொடுக்கும் மாடு;*** cow, as supplying milk to drink in the night before bed time. (சா.அக.).

*[இரவு + கனி + ஆள்.]*

**இராக்குருடு** *irāk-kuruḍu* பெ. (n.) ***மாலைக்கண்;*** night-blindness, nyctalobia.

*[இரவு - இரா + குருடு.]*

**இராட்டிரம்** *irāṭṭiram,* பெ. (n.) 1. ***நாடு;*** country, territory. 2. ***நகரிலிலுள்ள மக்கள்;*** towns folk; citizens. (செ.அக.).

*[இரு = பெரிய. இரட்டு = பெரியது, பெரிய நிலப்பரப்பு. இரட்டம் → Skt. raṣtra > த. இராட்டிரம். இரட்டபாடி என்னும் வழக்கை நோக்குக.]*

**இராட்டினத்தொட்டி** *irāṭṭiṉatoṭṭi,* பெ. (n.) ***இராட்டி னம் போலச் சுழல் தொட்டி;*** vessel rotating like a wheel.

*[இரட்டுதல் = சுற்றுதல். இரட்டு → இரட்டினம் → இராட்டினம்.]*

**இராட்டினம்** *irāṭṭiṉam* பெ. (n.) 1. ***நூல் நூற்குங் கருவி;*** spinning wheel. 2. ***நீரிறைக்கும் கருவி;*** machine for drawing water. 3. ***பஞ்சரைக்குங் கருவி;*** machine for reeling. 4. ***ஏறிவிளையாடும் சுழல்தேர்;*** giant wheel in which people ride and amuse themselves at festivals. (ஆ.அக.).

*[இரட்டுதல் = சுற்றுதல். இரட்டு → இரட்டினம் → இராட்டினம்.]*

**இராட்டின வாழை** *irāṭṭiṉa vāḻai,* பெ. (n.) ***ஒரு தண்டில் நடுவிட்டு மேலுங்கீழுஞ் சீப்பிடும் வாழை;*** a species of plantain whose bunches have an intermediate blank space. (வின்.).

*[இராட்டினம் + வாழை.]*

**இராட்டின வூசல்** *irāṭṭiṉa vūšal* பெ. (n.) ***இராட்டின வூஞ்சல்*** பார்க்க; see *irāṭṭiṉa-vūñjal.* (ஆ.அக.).

*[இராட்டினம் + ஊசல்.]*

**இராட்டின வூஞ்சல்** *irāṭṭiṉa-vūñjal,* பெ. (n.) ***இராட்டினம் போற் சுழலு மூஞ்சல்;*** a kind of turning swing with four vanes like a wind-mill-sometimes called the fandango. (வின்.).

*[இராட்டினம் + ஊஞ்சல்.]*

**இராட்டு**[1] *irāṭṭu,* பெ. (n.) ***தேன்கூடு*** (இ.வ.); honey comb. (செ.அக.).

*[இறால் → இராட்டு.]*

**இராட்டு**[2] *irāṭṭu,* பெ. (n.) ***இறால்;*** shrimp, prawn. (ஆ.அக.).

*[இறால் → இறாட்டு → இராட்டு.]*

**இராட்டை** *irāṭṭai,* பெ. (n.) ***நூல் நூற்குங் கருவி;*** spinning wheel.

*[இரட்டுதல் = சுற்றுதல். இரட்டு - இராட்டு - இராட்டை.]*

**இராடம்**[1] *irāḍam,* பெ. (n.) 1. ***பெருங்காயம்;*** asafoetida. 2. ***வெண்காயம்;*** onion. (சா.அக.).

*[இரதம் - இராதம் - இராடம். இரதம் = சாறு, சாறுள்ளது.]*

**இராடம்**[2] *irāḍam,* பெ. (n.) ***குச்சரநாடு;*** ancient Gujarat. (சா.அக.).

*[இரட்டம் → இராடம்.]*

**இராத்திரி** *irāttiri,* பெ. (n.) 1. ***இரவு;*** night. 2. ***இராக்காலம்;*** night time. (சா.அக.).

*[இரவு → இரா > Skt. rāthri > த. இராத்திரி.]*

**இராத் தூக்கம்** *irāttū-k-kam,* பெ. (n.) ***இரவுத்தூக்கம்;*** night sleep as opposed to day sleep. 'இராத்தூக்கம் கெட்டுப்போச்சு' (இ.வ.) (சா.அக.).

*[இரா + தூக்கம்.]*

**இராப்பகல்** *irā-p-pagal,* பெ. (n.) 1. ***இரவும் பகலும்;*** night and day. "இராப்பகனாம் பேசும்போது" (திருவாச.7,2). (செ.அக.). 2. ***எப்பொழுதும்;*** always, constantly. (சா.அக.).

*[இரவு → இரா + பகல் = இராப்பகல்.]*

**இராப்பண்** *irā-p-paṉ,* பெ. (n.) ***இராக்காலத்திற் பாடுதற்குரிய பண்கள்;*** melodies to be sung at night. (செ.அக.).

*[இரவு → இரா + பண்.]*

**இராப்பத்து** *irā-p-pattu,* பெ. (n.) ***விண்ணகப் பதினோரமை முதல்*** (வைகுந்த ஏகாதசி) ***வருகின்ற பத்து இரவுகள்;*** *latter half of the attiyayaṉōrcavam in Viṣṇu temples beginning with vaikuṇḍa-ēgādaši day and continuing for ten nights. (செ.அக.).*

*[இரவு → இரா + பத்து.]*

**இராப்பள்ளிக்கூடம்** *irā-p-paḷḷi-k-kūḍam,* பெ. (n.) ***இரவில் நடத்தப்படும் பள்ளி;*** night-school. (செ.அக.).

*[இரவு → இரா + பள்ளி + கூடம்.]*

**இராப்பாடி** *irā-p-pāḍi,* பெ. (n.) 1. ***இரவில் வீடுவீடாகச் சென்று சோறு வாங்கும் சலவைத் தொழிலாளி*** (இ.வ.); member of a sect of the washerman caste called pudara vaṇṇāṉ, who begs by singing from door to door during night. (செ.அக.). 2. ***இரவிற்பாடுங் குருவி;*** small bird that sings at night. (சா.அக.).

*[இரவு → இரா + பாடி.]*

**இராப்பாடிக் குருவி** *irā-p-pāḍi-k-kuruvi,* பெ. (n.) ***வால்கொண்டலாத்தி என்னும், இரவிற்பாடுமொரு வகைக் குருவி;*** Madras boolbool or paradise fly catcher. (சா.அக.).

*[இரவு → இரா + பாடி + குருவி.]*



இராப்பாடிக் குருவி

**இராப்பாலை** *irā-p-pālai,* பெ. (n.) ***மரவகை*** (L.); garden tree with smooth grey bark. (செ.அக.).

*[இரு → இரா + பாலை.]*

**இராப்பாறை** *irāppārai,* பெ. (n.) ***ஒருவகைக் கடல் மீன்;*** a kind of sea fish.



இராப்பாறை

**இராப்பிச்சை** *irā-p-piccai,* பெ. (n.) ***இரவில் எடுக்கும் பிச்சை;*** begging at night. (செ.அக.).

*[இரவு → இரா + பிச்சை.]*

**இராப்பூ** *irā-p-pū,* பெ. (n.) ***இரவில் மலரும் பூக்கள்*** (சிலப்.2,14,உரை); flowers that blossom at night-fall like the water-lily. (செ.அக.).

*[இரவு → இரா + பூ.]*

**இராவைக்கு** *irāvaikku,* கு.வி.எ. (adv.) ***இரவுக்கு;*** for or during night "இராவைக்குப் போனகப் பழவரிசி" (S.I.I.ii,146). (செ.அக.).

*[இரவு → இராவு + கு = இராவுக்கு - இராவைக்கு (கொ.வ.).]*

**இராவோன்** *irāvōṉ,* பெ. (n.) ***நிலவு;*** moon. "முளைத் தன னிராவோன்" (திருவாத.பு.புத்தரை.30). (செ.அக.).

*[இரவு + ஆன் = இராவான் - இராவோன்.]*

**இரி[1]-தல்** *iri-,* 4, செ.கு.வி. (v.i.) 1. ***கெடுதல், தோற்றோடுதல்;*** to be destroyed. "மாறிரியச்சீறி" (பு.வெ.2,9). 2. ***ஓடுதல்;*** to run, to flee away, as a defeated army; to scamper away through fear. "புனலொழுகப் புள்ளிரியும்" (நாலடி.212). 3. ***விலகுதல்;*** to fall away, as a garment; to drop; to recede. "உத்தரீயங்களு மிரிய வோடுவார்" (கம்பரா.ஊர்தேடு. 51). 4. ***வடிதல்;*** to drop, as perspiration; to ebb, as the tide. 5. ***அஞ்சுதல்*** (திவா.); to fear, dread (செ.அக.). 6. ***பின்னுக்கோடுதல்*** (மு.தா); to retreat.

ம. இரிதல் (அழிவு.).

*[இல் → இலி → இரி.]*

**இரி[2]-த்தல்** *iri-,* 4, செ.குன்றாவி. (v.t.) 1. ***தோற்றோடச் செய்தல்;*** to rout, defeat. 2. ***கெடுத்தல்;*** to destroy, ruin; to dispel. "வெஞ்சிலைக் காய்ந்திரிக்கும் புருவக் கருங்கண்ணியர்" (சீவக.1769). 3. ***ஓட்டுதல்;*** to drive away, scare away. "மள்ளர் குழூஉக்குரல்... அன்ன மிரிக்கும்" (கம்பரா.நாட்.32) (செ.அக.).

*[இல் → இலி → இரி.]*

**இரிக்கி** *irikki,* பெ. (n.) ***பெருங்கொடிவகை*** (L.); scimitar-pod. (செ.அக.).

*[இரிகம் → இரிக்கி.]*

**இரிகக்கத்தை** *irigakkattai,* பெ. (n.) ***இதய சடாக்குழியில் நீட்டிக் கொண்டிருக்கும் தசைநார்;*** muscular projections (fleshy columns) inside the ventricles of the heart - columna carneae. (சா.அக.).

*[இரிகம் + கத்தை.]*

**இரிகநாடி** *iriganāḍi,* பெ. (n.) ***இதயத்தின் நாடி;*** cardiac artery. (சா.அக.).

*[இரிகம் + நாடி.]*

**இரிகம்** *irigam,* பெ. (n.) 1. ***இதயம்;*** heart. 2. ***மனம்;*** mind. (செ.அக.). 3. ***வழக்கு;*** dispute. (ஆ.அக.).

*[இரி → இரியம் → இரிகம்.]*

**இரிகரம்** *irigaram,* பெ. (n.) ***இதயத்திற் குண்டான அழற்சி;*** inflammation of the heart-carditis. (சா.அக.).

*[இரி → இரிகரம்.]*

**இரிகு** *irigu,* பெ. (n.) ***பகைவன்;*** enemy. (ஆ.அக.).

*[இரி (அச்சம்) → இரிகு.]*

**இரிங்கணம்** *iriṅgaṇam,* பெ. (n.) ***ஒரு பறவை;*** a kind of bird. (சா.அக.).

*[இரி → இரிங்கணம்.]*

**இரிசம்** *irisam,* பெ. (n.) ***பூனைக்காலி*** (மலை.); cowhage. (செ.அக.).

*[இரி - இரிசம்.]*

**இரிசல்** *irišal,* பெ. (n.) 1. ***பிளவு*** (யாழ்ப்); break, crack. 2. ***மனமுறிவு*** (யாழ்ப்.); alienation of mind, discord. (செ.அக.). 3. ***புலனை வேறொன்றிற் செலுத்தல்;*** division of the mind; diversion.

*[இரி → இரியல் → இரிசல் .]*

**இரிசியா** *irišiya-,* பெ. (n.) ***இரிசம்*** பார்க்க; see *irisam.*

**இரிஞ்சகம்** *iriñjagam,* பெ. (n.) ***ஊசிமல்லிகை;*** needle shaped jasmine; harlot jasmine. (சா.அக.).

*[இரி → இரிஞ்சகம்.]*

**இரிஞ்சி** *iriñji,* பெ. (n.) ***மகிழ்*** (மலை); pointed-leaved ape-flower. (செ.அக.).

*[இரி → இரிஞ்சி.]*

**இரிஞ்சிகம்** *iriñjigam,* பெ. (n.) ***இரிஞ்சி*** பார்க்க; see *iriñji.* (சா.அக.).

*[இரி → இரிஞ்சி → இரிஞ்சிகம்.]*

**இரிஞன்** *iriñan,* பெ. (n.) ***பகைவன்*** (திவா.); foe, enemy. (செ.அக.).

*[இரி → இரிஞன்.]*

**இரிட்டம்**[1] *irittam,* பெ. (n.) ***நல்லது;*** good. (செ.அக.).

*[இரு - (பெரியது. நல்லது) இரு - இரி - இரிட்டம்.]*

**இரிட்டம்**[2] *irittam,* பெ. (n.) 1. ***தீயது;*** inauspicious. 2. ***வாள்;*** sword. 3. ***அழிவு, முடிவு;*** end, destruction. 4. ***அறக்கடை*** (பாவம்); sin (செ.அக.).

*[இரு - இரி - இரிட்டம். இரு - கரியது, தீயது, அழிவு, அழிப்பது.]*

**இரிணம்** *iriṇam,* பெ. (n.) 1. ***உவர்நிலம்*** (சூடா.); saline soil. (செ.அக.). 2. ***பாழடைந்தது;*** ruined (ஆ.அக.).

*[இரி - (கெடுதல்) - இரி - இரிணம்.]*

**இரித்தகம்** *irittagam,* பெ. (n.) ***பாழடைந்த வீடு;*** ruined house. (ஆ.அக.).

*[இரி → இரித்தகம்.]*

**இரித்தம்** *irittam,* பெ. (n.) ***செல்வம்;*** wealth. (ஆ.அக.).

*[இரு → இரி → இரித்தம். இரு = பெரியது. ஆக்கம்.]*

**இரித்தை** *irittai,* பெ. (n.) 1. ***நான்காவது, ஒன்பதாவது, பதினான்காவது மதி நாள்கள்*** (சதுர்த்தி, நவமி, சதுர்த்தசி என்னும் திதிகள்); 4th, 9th and 14th phases of the moon. 2. ***நாழிகை*** (பிங்.); period of 24 minutes. (செ.அக.).

*[இரு → இரி → இரித்தை (மீன் கூட்டம், அல்லது ஓரை).]*

**இரிப்பு** *irippu,* பெ. (n.) 1. ***இருத்தல், உட்காரும் செயல்;*** sitting. 2. ***நிலை;*** state, condition. 3. ***இருப்பிடம்;*** residence. 4. ***வாழும் நிலை, ஒழுக்கம்;*** mode of living, position, conduct. 5. ***ஒருவருக்கொருவர் கொண்டுள்ள உறவு முறையின் நிலை;*** nature of mutual relations. 6. ***இருக்கை;*** a seat. (சேரநா.) 7. ***முறியடிக்கை;*** defeating, (W.).

ம. இரிப்பு; க. இரபு; தெ. இரவு.

*[இருப்பு → இரிப்பு (கொ.வ.).]*

**இரிபு** *iribu,* பெ. (n.) 1. ***அச்சம்;*** fear. 2. ***ஓடுதல்;*** fleeing. 3. ***பகை;*** hatred, animosity. 4. ***தோல்வி;*** defeat, discomfiture. (ஆ.அக.).

*[இரி → இரிபு.]*

**இரிபேரம்** *iripēram,* பெ. (n.) ***வெட்டிவேர்*** (தைலவ. தைல.56); cuscus grass. (செ.அக.).

*Skt* hribēra.

*[இரு → இரி (வேர் - வேரம் -) + பேரம்.]*

**இரிமான்** *irimāṉ,* பெ. (n.) ***எலிவகை*** (இ.வ.); a species of rat. (செ.அக.).

*[இரு + (மா)மான். இரு = கரிய. மா = விலங்கு.]*

**இரியல்**[1] *iriyal,* பெ. (n.) 1. ***அச்சத்தால் நிலை கெடுகை*** (பெரும்பாண்.202:); being agitated, perturbed or tossed about through fear. 2. ***விரைந்து செல்கை;*** running, speeding, racing. "பெருநீர் போகு மிரியன் மாக்களொடு" (சிலப்.6,112). 3. ***அழுகை;*** weeping. "அழுவாளிரியற் குரல்" (கம்பரா.நகர் நீ.35) (செ.அக.).

*[இல் → இரி - இரியல்.]*

**இரியல்**[2] *iriyal,* பெ. (n.) ***நல்லாடை*** (வின்.); fine cloth (w.).

*[இரு → இரி → இரியல்.]*

**இரியல்**[3] *iriyal,* பெ. (n.) ***இலவங்கப்பட்டை;*** cinnamon. (சா.அக.).

*[இரி → இரியல்.]*

**இரியல்போ-தல்** *iriyal-pō-,* 8 செ.கு.வி. (v.i.) ***தோற்றோடுதல்;*** to be routed, put to flight. "அமரினாற்றாது... இரியல் போக. (கூர்மபு.தக்கன் வேள்.47.) (செ.அக.).

*[இரி → இரியல் + போதல்.]*

**இரியல்போக்கு-தல்** *iriyal-pōkku-,* 5 செ.குன்றாவி. (v.t.) ***சாய்த்துக் கொடுத்தல்;*** to give unsparingly, liberally "கயைடி யானை யிரியல் போக்கும்" (புறநா.135,12). (செ.அக.).

*[இரி → இரியல் + போக்கு.]*

**இரிவிகஞ்சம்** *irivikañjam,* பெ. (n.) ***அருளாளர்கள் சட்டை;*** coat of fibres obtained from the substance between the bark and the wood of a certain tree. In olden days it was used by siddhars. (சா.அக.).

*[இரி → இரிவி + கஞ்சம்.]*

**இரு**[1]**-த்தல்** *iru-,* 2 செ.கு.வி. (v.i.) 1. ***உளதாதல்;*** to exist. 'ஊரிலே ஏரி இருக்கிறது' (தெ.ஆ.). 2. ***நிலை பெறுதல்;*** to remain. "வலம் வரும்படி யிருப்பது கயிலைமால் வரையே" (கந்தபு. திருக்கைலாச.12). 3. ***உட்காருதல்;*** to sit down. "நிற்றலிருத்தல் கிடத்தலியங்குத லென்று" (நாலடி.334). 4. ***உள்ளிறங்குதல்;*** to sink, as a foundation; to disappear, come down. 'சுவர் இருந்துபோயிற்று'. 5. ***உயிர்வாழ்தல்;*** to live. "நெடுநாளிருந்த பேரும்" (தாயு.பரிபூ.10). 6. ***அணியமாயிருத்தல்;*** to be ready to act., to be in readiness for any duty or project; to be on the point of acting or going. 'மீன் பிடிக்க இருக்கிறான்' (கொ.வ.). 7. ***நினைத்தல்;*** to fancy; imagine, expect, hope. ***"நம்பிமா ரென்றிருந்தோம்"*** (தமிழ் நா.216). - இடை (part.) ஒரு துணை வினை; auxiliary verb. 'எழுந்திருந்தான்'. (செ.அக.).

ம. இரி; க. இரு; ஆத். இக்கத்தி.

*[இல் → இர் → இரு.]*

**இரு**[2] *iru,* கு.பெ.எ. (adj.) 1. ***இரண்டு;*** two. 2. ***இரட்டை;*** double.

ம. இரு; கூ. ரி; க. இரு, இர், இக்; தெ. இரு, ஈர்; குட. இரு; து. இர்; குவி. ரீ; கட. இர்; குரு. இர்ப், (இருவிர்); பிரா. இரா.

*[இரண்டு → இரு.]*

**இரு**[3] *iru,* கு.பெ.எ. (adj.) 1. ***பெரிய;*** great, spacious, vast. "மாயிரு ஞாலம்" (குறள்.999). 2. ***கரிய;*** black. "இருமலர்க் குவளை யுண்கண்" (சீவக.1171) (செ.அக.). 3. ***காட்டுமல்லிகை;*** wild jasmine. (சா.அக.).

இருமை = கருமை, பெருமை.

*[இருமை → இரு.]*

**இருக்கணை** *irukkaṉai,* பெ. (n.) ***சித்திர வேலைக்குத வும் மரவகை*** (Nels.); crenulate leaved spindle tree. (செ.அக.).

*[இரு + கணை.]*

**இருக்கம்** *irukkam,* பெ. (n.) 1. ***விண்மீன்;*** nakṣatra, star. 2. ***கரடி;*** bear. 3. ***ஓரை*** (இராசி.); zodiacal sign. (செ.அக.).

*[ஒருகா: இரு = கரிய. இரு → இருக்கம். கரடிவடிவிலமைந்த விண்மீன் தொகுதி.]*

**இருக்கமாலி** *irukkamāli,* பெ. (n.) ***766 முழ அகலமும் உயரமுமுள்ளதாய் 766 உச்சிகளோடு 96 மேனி லைக்கட்டுகள் கொண்ட கோயில்*** (சுக்கிரநீதி, 229); temple of the width of 766 cubits and of the same height, with 766 towers and 96 storeys.

*[இரு → இருக்க (பெரிய + (மா) மாலி.]*

**இருக்கன்** *iru-k-kaṉ,* பெ. (n.) ***நான்முகன்;*** Brahmā, literally one who recites the vēda. "தரைவிசும்பைச் சிட்டித்த விருக்கன்" (திருப்பு.419).

*[இருக்கு → இருக்கன். இருக்கு மறையை (வேதம்) ஓதுபவன்.]*

**இருக்கால்** *iru-k-kāl,* பெ. (n.) 1. ***இரண்டு முறை*** (பாரத.பதின் மூன்றாம்.111.); twice 2. ***கவற்றிற் குறித்த ஓர் எண்*** (வின்.); cast of dice for the number 2. (செ.அக.).

ம. இருக்கால.

*[இரண்டு → இரு + கால்.]*

**இருக்காவி** *irukkāvi,* பெ. (n.) ***கட்டுமரப்பக்கங்களை இணைத்துக்கட்டுஞ் சிறு பலகை;*** small piece of wood which connects the planks of a catamaran. (சேரநா.).

ம. இருக்காவி.

*[இரு + காவி. காவு - காவி; காவுதல் = தாங்குதல்.]*

**இருக்காழி** *iru-k-kāḻi,* பெ. (n.) ***இரண்டு விதையுடைய காய்*** (யாழ்ப்.); fruit with two kernels, as the palmyra. (செ.அக.).

*[இரண்டு → இரு + (காழ்.) காழி. காழ் = வித்து.]*

**இருக்கு** *irukku,* பெ. (n.) 1. ***வேதமந்திரம்;*** vēdic hymns. "வேதப்புனித விருக்கை நாவிற் கொண்டு" (திவ்.திருவாய்.5,2,9). 2. ***இருக்குவேதம்*** (திவ்.பெரி யாழ்.5,1,6.); the rig. vēda. (செ.அக.).

*[அருக்குதல் = புகழ்தல், பரவுதல். அருக்கு → Skt ருக். அர்ச் → த. இருக்கு.]*

**இருக்குக்குறள்** *irukku-k-kuṟaḷ,* பெ. (n.) ***சிறிய பாவகை;*** a kind of short verse. "ஏகபாதந் தமிழிருக்குக் குறள் சாத்தி" (பெரியபு.திருஞான.276) (செ.அக.).

*[ஒருகா: இறுக்கு → இருக்கு + குறள்.]*

**இருக்குவேள்** *irukku-vēḷ,* பெ. (n.) ***புதுக்கோட்டைக் கருகில் உள்ள கொடும்பாளூரில் 8வது 9வது நூற் றாண்டில் அரசாண்ட வேளிர் சிற்றரசர்*** (கல்வெ.); line of powerful chieftains who flourished about the 8th and 9th c at Koḍumbālūr, in the Pudukkōṭṭai Dt. (செ.அக.).

*[இரு → இருக்கு (பெருமை) + வேள். ஒ.நோ. அருக்கு = அருமை. "நிதியினருக்கு முன்னி" (திருக்கோ.275).]*

**இருக்கை** *irukkai,* பெ. (n.) 1. ***உட்கார்ந்திருக்கை;*** sitting. "பார்வலிருக்கை" (புறநா.3,19). 2. ***உட்காருமி டம்*** (ஆசனம்) (நாலடி.143.); seat. 3. ***இருப்பிடம்,*** residence, dwelling, situation. 4. ***குடியிருப்பு;*** residential quarters, as in a village. "தண்பணை தழீஇய தளரா விருக்கை" (பெரும்பாண்.242). 5. ***கோள்களிருக்கும் ஓரை*** (இராசி) (பரிபா.11,3); sign of the zodiac, as the seat of the planets. 6. ***திரிதரவுள்ள விருக்கை, திரிதரவில்லா இருக்கை என்ற இருவகை இருக்கை கள்*** (சிலப்.8,25, உரை.); posture of two kinds viz., திரிதரவுள்ள விருக்கை; 'moving posture', திரிதரவில்லா விருக்கை motionless posture mentioned in the treatise on painting. (சிலப்.8,25, உரை.). 7. ***ஊர்*** (பிங்); town, village. 8. ***கோயில்;*** temple. "நீலியிருக்கை" (கந்தபு. மார்க்க.144). 9. ***அரசர் போர் புரியுக் காலங் கருதியி ருக்கும் இருப்பு*** (பு.வெ.9,37, உரை.); waiting for an opportunity to open hostilities or to commence war. (செ.அக.).

ம. இரிப்பு; க. இரவு; தெ. இருவு.

*[இரு → இருக்கை.]*

**இருக்கையுதவல்** *irukkai-y-udaval,* பெ. (n.) ***உட்கார இடமளித்தல்*** (திருவேங்:சத.58.); providing a seat esp. for a great person. (செ.அக.).

*[இருக்கை + உதவல்.]*

**இருகண்** *iru-kaṉ,* பெ. (n.) ***ஊனக்கண், ஞானக்கண்;*** eye of the body and eye of the mind. "இருகணும் புதைத்து வைக்கும்" (சீவக.1578). (செ.அக.).

*[இரண்டு → இரு + கண்.]*

**இருகணி** *iru-kaṇi,* பெ. (n.) ***இரு கண்களாலும் தொலைவிலுள்ள பொருள்களைக் காணவுதவும் தொலை நோக்குக்கருவி;*** binoculars.

**இருகரந்தை** *irukarandai,* பெ. (n.) ***சிவகரந்தை, திருமால்*** (விட்டுணு) ***கரந்தை எனும் இருகரந்தை*** (ஒருவகைச்செடி); two kinds of plants of sweet basil.

*[இரு + கரந்தை.]*

**இருகரையன்** *iru-karaiyaṉ,* பெ. (n.) 1. ***இரண்டு எண்ணம் உடையவன்*** (திவ்.பெரியாழ். திருப்பல்.2. வியா.). 2. ***மற்றொன்றிலும் பற்றுள்ளவன்;*** double minded man, vacillating person. (செ.அக.).

*[இரண்டு → இரு + கரையன்.]*

**இருகழஞ்சு** *irukaḻañju,* பெ. (n.) ***இரண்டரை வராக னெடை;*** two and a half pagodas. (சா.அக.).

*[இரண்டு → இரு + கழஞ்சு.]*

**இருகழுத்துக்குப்பி** *irukaḻuttukkuppi,* பெ. (n.) ***இரண்டு கழுத்தமைந்த ஒருவகைக்குப்பி;*** two necked bottle used in medicinal preparation - woulfe's bottle. (சா.அக.).

*[இரண்டு → இரு + கழுத்து + குப்பி.]*

**இருகால்** *irukāl,* பெ. (n.) 1. ***அரை;*** half. (ஆ.அக.). 2. ***இருமுறை;*** two times. (சா.அக.).

*[இரண்டு → இரு + கால்.]*

**இருகா லாட்டல்** *irukālāṭṭal,* பெ. (n.) ***இரண்டு தடவை மருந்தைக் கலுவத்திலிட்டு அரைத்தல்;*** grinding a medicine twice in a stone mortar.

*[இரண்டு → இரு + கால் + ஆட்டல்.]*

**இருகாற் பிரண்டை** *irukāṟpiraṇḍai,* பெ. (n.) ***களிப்பி ரண்டை;*** a species of the vitis (genus). (சா.அக.).

*[இரண்டு - இரு + கால் + பிரண்டை.]*

**இருகுரங்கின்கை** *iru-kuraṅkiṉ-kai,* பெ. (n.) ***முசு முசுக்கை*** (மலை); bristly bryony. (செ.அக.).

*[இரண்டு → இரு + குரங்கு + இன் + கை. முசு = குரங்கின் பெயர்களுள் ஒன்று. முசுமுசு = குரங்கின் பெயர் அடுக்கு. முசுமுசு + கை = முசுமுசுக்கை என்னும் கொடி.]*

**இருகுமிழி** *iru kumiḻi,* பெ. (n.) 1. ***இரண்டுவகைக் குமிழ மரம். அதாவது பெருங்குமிழ், சிறுகுமிழ்;*** two species of trees viz. big cashmere tree - Gmelina arborea and small cashmere tree - Gmelina asiatica. 2. ***நீர்க்குமிழ்; நிலக்குமிழ் என இருவகைக் குமிழ்;*** two kinds of Gmelina water borne and earth borne. (சா.அக.).

*[இரண்டு → இரு + குமிழி.]*

**இருகுறணேரிசை வெண்பா** *irukuṟaṉēri šai veṇbā,* பெ. (n.) ***நேரிசை வெண்பா வகை*** (காரிகை, செய்.3.) இது இரண்டு குறள் வெண்பாவாலாகி இரண்டுக்கும் நடுவில் தனிச்சொல் பெற்று வரும்; variety of nēriśai-veṇbā composed of two Kuṟal-veṇbā linked by an isolated foot. (செ.அக.).

*[இரண்டு → இரு + குறள் + நேரிசை + வெண்பா.]*

**இருகூறு** *iru kūṟu,* பெ. (n.) 1. ***இரண்டு பங்கு;*** two parts, two shares. 2. ***மாறானது, எதிரானது;*** opposition, duelity, contrariety. (சேரநா.).

ம. இருகூறு.

**இருகொம்பு** *iru-kombu,* பெ. (n.) ***'ை' என்ற எழுத்திலுள்ள இரண்டு கொம்பு;*** double loop which stands as a symbol for the vowel ஐ when forming vowel consonants ai, viz ை in letters like கை, தை, etc. (செ.அக.).

*[இரண்டு → இரு + கொம்பு.]*

**இருகோட்டறுவை** *iru-kōṭṭaṟuvai,* பெ. (n.) ***முன்னும் பின்னும் தொங்கலாக நால விட்ட துகில்*** (ஆ.அக.); cloth left hanging on either ends.

*[இரண்டு → இரு + கோடு + அறுவை.]*

**இருங்கரம்** *iruṅgaram,* பெ. (n.) ***ஓரளவு;*** dry measure = குறுணி; பதக்கு. (தைலவ.தைல.6) (செ.அக.).

*[இரு + கரம்.]*

**இருங்காரை** *iruṅkārai,* பெ. (n.) ***ஒருவகைக் கடல் மீன்;*** a kind of sea fish.

*[இரு - இரும் + காரை.]*



இருங்காரை

**இருங்கு** *iruṅgu,* பெ. (n.) ***சிவப்புச்சோளம்:*** a kind of red millet. (சா.அக.).

*[அரிங்கு - இரிங்கு - இருங்கு.]*

**இருங்கெளுத்தி** *iruṅkeḷutti,* பெ. (n.) ***ஒருவகைக் கடல் மீன்;*** a kind of sea fish.



இருங்கெளுத்தி

**இருங்கோவேள்** *iruṅgōvēḷ*, பெ. (n.) ***வேளிர் தலைவருள் ஒருவன்*** (புறநா.201.); name of an ancient chief of the vēḷ line of ruling chiefs. (செ.அக.).

*[இரு = பெரிய. இரு + கோ + வேள். ஒ.நோ. பெரு - பெரும், இரு - இரும். இருங்கோ = பெருங்கோ (பேரரசன்).]*

**இருங்கோன் ஒல்லை ஆயன் செங்கண்ணனார்** *iruṅkōṉ-ollai-āyaṉ-seṅkaṇṇaṉār*, பெ. (n.) ***கடைக்கழகப் புலவருள் ஒருவர்*** (அகநா.279); Sangam poet.

*[இரும் + கோன் + ஒல்லை + ஆயன் + செம் + கண்ணன் + ஆர்.]*

**இருசங்கன்** *iruśaṅgaṉ*, பெ. (n.) ***இருவகைச் சங்கன் செடி. அதாவது, நற்சங்கன், பீச்சங்கன்;*** two varieties of the plant 1. mistle berry thorn. 2. smooth velkameria. (சா.அக.).

*[இரண்டு → இரு + சங்கன்.]*

**இருசமய விளக்கம்** *iru-śamaya-viḷakkam*, பெ. (n.) ***அரிதாசர் 16 ஆம் நூற்றாண்டிலியற்றிய சிவ, மாலிய மதங்களை ஆராயும் ஒருநூல்;*** name of a controversial treatise on the relative merits of Śaivaism and Vaiṣṇavaism, by Ari-tācar, 16th C. (செ.அக.).

*[இரண்டு → இரு + சமயம் + விளக்கம்.]*

**இருசீர்ப்பாணி** *iru-cīr-p-pāṇi*, பெ. (n.) ***இரட்டைத் தாளம்*** (பொருந.71.); a kind of tāḷam. (செ.அக.).

*[இரண்டு → இரு + சீர் + பாணி.]*

**இருசு**[1] *iruśu*, பெ. (n.) 1. ***நேர்மை*** (திவா.); straightness, directness. 2. ***வண்டியச்சு*** (பிங்.); axletree. 3. ***மூங்கில்*** (மலை); bamboo.

க. இரசு; தெ. இருசு.

*[இரு = பெரிது, நேரிது. இரு → இருசு.]*

**இருசு**[2] *iruśu*, பெ. (n.) ***திருநாமப்பாலை;*** wild sarasaparilla (சா.அக.).

*[இரு (வலிமை) → இருசு.]*

**இருசுகந்தப்பூண்டு** *iru-śuganda-p-pūṇḍu*, பெ. (n.) ***மருக்கொழுந்து;*** southern wood. (செ.அக.).

*[இரு + சுகந்தம் + பூண்டு.]*

**இருசுடர்** *iru-śuḍar*, பெ. (n.) ***ஞாயிறு, திங்கள்*** (சந்திரசூரியர்); sun and moon, the two bright orbs which illumine the earth. "இருசுடர் மீ தோடா விலங்கை" (தேவா.320,10) (செ.அக.).

*[இரண்டு → இரு + சுடர்.]*

**இருசுடர்த்தோற்றம்** *iru-śuḍar-t-tōṟṟam*, பெ. (n.) ***பெருங்காப்பியவுறுப்பு ளொன்று*** (ஆ.அக.); appearance of sun and moon described in poetry-one of the elements of epics. "இருசுடர்த்தோற்றமென் றினையன புனைந்து" (தண்டி.8).

*[இரண்டு → இரு + சுடர் + தோற்றம்.]*

**இருசுழி** *iru-śuḻi*, பெ. (n.) ***இரட்டைச்சுழி;*** double curls or rings, believed to indicate either comfortable life or chill penury. 'இருசுழி இருந்துண்டாலு முண்ணும், இரந் துண்டாலுமுண்ணும்.' (செ.அக.).

*[இரண்டு → இரு + சுழி.]*

**இருஞ்சிறை** *iruñ-ciṟai*, பெ. (n.) 1. ***நரகம்*** (வின்.); hell, considered as a great prison-house. (செ.அக.). 2. ***மதில்*** (ஆ.அக.); fortress.

*[இரும் + சிறை.]*

**இருட்கண்டம்** *iruṭ-kaṇḍam*, பெ. (n.) ***கழுத்தணி வகை;*** necklace. "பிறங்கிருட்கண்டமும்" (S.I.I.viii, 39) (செ.அக.).

*[இருள் + கண்டம்.]*

**இருட்கண்டர்** *iruṭ-kaṇḍar*, பெ. (n.) ***சிவன்;*** Śiva as having a dark throat. "கூர்ந்த விருட்கண்டர்" (பெரியபு.திருமுறை.12). (செ.அக.).

*[இருள் + கண்டம் + அர்.]*

**இருட்கம்மல்** *iruṭkammal*, பெ. (n.) ***கண்ணிற் புகை சூழ்ந்தது போற் காணுமோர்வகைக் கண்நோய்;*** eye disease marked by smoky appearance. (சா.அக.).

*[இருள் + கம்மல்.]*

**இருட்சி** *iruṭci*, பெ. (n.) 1. ***இருட்டு;*** darkness. (செ.அக.). 2. ***மயக்கம்*** (ஆ.அக.); illusion.

*[இருள் + சி. ஒ.நோ: மருள் + சி = மருட்சி.]*

**இருட்டல்** *iruṭṭal*, பெ. (n.) ***இருளாதல்;*** becoming dark. (ஆ.அக.).

*[இருள் → இருளல் → இருண்டல் → இருட்டல்.]*

**இருட்டறை** *iruṭṭaṟai*, பெ. (n.) 1. ***ஒளியில்லா அறை;*** darkroom. "இருட்டறையி லேதில்பிணந் தழீஇ யற்று" (குறள்.913) (செ.அக.). 2. ***அறியாமை;*** ignorance. "இருட்டறையில் உள்ளதடா உலகம்" - (பாரதிதாசன்).

ம. இருட்டற.

*[இருள் + து = இருட்டு + அறை. இருட்டு = இருள் உடையது.]*

**இருட்டு**[1] *iruṭṭu,* பெ. (n.) 1. ***இருள்;*** darkness. 2. ***அறியாமை*** (வின்.); figuratively, obscurity of mind; ignorance. (செ.அக.). 3. ***மயக்கம்*** (ஆ.அக.); illusion.

தெ. இருளு. இருலு; ம. இரிட்டு. இருட்டு; க. இருள், இரடு. இருளு; கோத. இர்ள் (இரவு); துட. ஈள்; குட. இரிடி; து. இருலு. இளளு; கொலா. சிரும் (மிகவிருள்); பா். சிருல் (கரி.).

*[இருள் → இருட்டு.]*

**இருட்டு**[2]**-தல்** *iruṭṭu-,* 15, செ.கு.வி. (v.i.) 1. ***இருளடைதல்;*** to grow dark. 2. ***மந்தாரமிடுதல்;*** to darken; as when clouds gather. 'வானம் இருட்டி வருவதால்' மழை விரைவில் வரும்,' (செ.அக.).

ம. இருட்டுக; க. இருளாகு.

*[இருள் + து = இருட்டு + தல்.]*

**இருட்பகை** *iruṭ-pagai,* பெ. (n.) ***ஞாயிறு;*** sun, the enemy of darkness. 'இருட்பகை மண்டிலம்' (கல்லா.13). (செ.அக.).

*[இருள் + பகை.]*

**இருட்படலம்** *iruṭ-paḍalam,* பெ. (n.) ***இருட்தொகுதி;*** sheet of darkness, as a dense layer. (செ.அக.).

*[இருள் + படலம்.]*

**இருட்பிழம்பு** *iruṭ-piḻambu,* பெ. (n.) ***இருள்;*** darkness. "படரு மிருட்பிழம் பறுக்கும் பண்ணவன்" (மச்சபு. மச்சா.12) (செ.அக.).

*[இருள் + பிழம்பு.]*

**இருட்பூ** *iruṭ-pū,* பெ. (n.) ***மரவகை*** (L); malabar wrinkled log's matrix. (செ.அக.).

*[இருள் + பூ.]*

**இருடி**[1] *iruḍi,* பெ. (n.) ***முனிவன்;*** saint.

*[இரு = பெருமை. இரு - இருளி - இருடி.]*

**இருடி**[2] *iruḍi,* பெ. (n.) ***ஆந்தை*** (பிங்.); owl. (செ.அக.).

*[இருள் - இருளி - இருடி - இருளில் வாழும் ஆந்தை. முனிவனைப் போல் வருவது உரைக்கும் கணியனாகச் செயற் படுவது நோக்கி ஆந்தைக்கு இட்ட பெயர். சாவு அல்லது கேட்டினை முன்கூட்டி தெரிவிக்கும் என்னும் நம்பிக்கையால் இதனைச் சாக்குருவி என்றும் கூறுவர்.]*

**இருண்ட செவலை** *iruṇḍa-ševalai,* பெ. (n.) ***கருமை கலந்த மங்கல் நிறமான மாட்டுநிறவகை*** (பெரிய மாட். 13); dark brown colour of cattle. (செ.அக.).

*[இருள் → இருண்ட (பெ.எ.) + (சிவலை) செவலை (கொ.வ.).]*

**இருண்மதி** *iruṇ-madi,* பெ. (n.) 1. ***தேய்பிறைத் திங்கள்;*** waning moon, in the dark fortnight. "இருண்மதி யிற் றேய்வன கெடுக" (மதுரைக்.195). 2. ***காருவா*** (அமாவாசை.) (பரிபா.11,37.); new moon. (செ.அக.).

*[இருள் + மதி.]*

**இருண்மலம்** *iruṇ-malam,* பெ. (n.) ***ஆணவமலம்*** பார்க்க; see *āṇavamalam.* "எண்ணரிதாய் நித்தமா யிருண்மலத்தி னழுந்தி" (சிவப்பிர.2, 1). (செ.அக.).

*[இருள் + மலம்.]*

**இருண்மை** *iruṇmai,* பெ. (n.) ***இருண்டிருக்குந் தன்மை;*** *being dark, darkness.*

*[இருள் + மை = இருண்மை.]*

**இருணம்**[1] *iruṇam,* பெ. (n.) 1. ***உவர் நிலம்*** (பிங்.); saline soil. (செ.அக.). 2. ***உப்பளம்;*** salt field; salt pan. 3. ***எதிர்மறை;*** negative. (சா.அக.).

*[அளம் → அளவணம் > Skt. lavaṇa, ṛuna > த. இருணம்.]*

**இருணம்**[2] *iruṇam,* பெ. (n.) ***கடன்;*** debt. (செ.அக.).

க. ருண; தெ. ருணமு.

*[உப்பைக் கடன் வாங்கும் தொன்முதுகால இயல்பினால் உப் பைக் குறித்த சொல் கடன் பொருளுக்கு உரியதாயிற்று.]*

**இருணாள்** *iruṇāḷ,* பெ. (n.) ***தேய்பிறை நாள்*** (திவ் பெரியதி.8,8,9); titi of the dark fortnight. (செ.அக.).

*[இருள் + நாள் = இருணாள்.]*

**இருணி** *iruṇi,* பெ. (n.) ***பன்றி;*** hog. "இருணியா யெழுந்த சோதியிரணியாக் கனைத்தான் கொல்ல" (வரத. பாகவத. நரசிங்க.5). (செ.அக.).

ம. இருளி.

*[இருளி → இருணி.]*

**இருத்தல்** *iruttal,* பெ. (n.) 1. ***உரிப்பொருள்கள் ஐந்தனுள் முல்லைக் குரியது*** (நம்பியகப்.25); heroin's bearing patiently separation from hero, a literary mode appropriate to the mullai or forest pasture tracts, one of five uri-p-porul. (செ.அக.). 2. ***உயிரோடிருத்தல்;*** being alive. 3. ***வாழ்வு;*** living. (சா.அக.).

*[இல்-குழித்தற் கருத்து, இருத்துதல் கருத்து. இல் → இர் → இருத்தல்.]*

**இருத்தி**[1] *irutti,* பெ. (n.) ***வட்டி*** (T.A.S. viii,15); interest.

*Skt.* rddhi.

*[இரு → இருத்து → இருத்தி (இ.எச்சம்).]*

**இருத்தி**[2] *irutti,* பெ. (n.) 1. ***சித்தி;*** super natural powers obtained by abstract meditation and exercised at one's will. "அளப்பிலிருத்தியொடு" (மணி.21,166) (செ.அக.). 2. ***மேன்மை;*** excellence. (ஆ.அக.).

*[இரு → இருத்து → இருத்தி = உள்ளத்தின் கண் இருத்திக் கொள்ளப் பட்ட ஆற்றல்கள்.]*

**இருத்திப்பேசு-தல்** *irutti-p-pēcu-,* 5 செ.குன்றாவி. (v.t.) ***அழுத்திச்சொல்லுதல்;*** to speak emphatically or impressively (w.).

*இருத்தி + பேசு.]*

**இருத்திப்போடு-தல்** *irutti-p-pōḍu-, 19 செ.குன்றாவி. (v.t.) 1.* ***நிலைக்கச் செய்தல்*** (வின்.); to cause to settle, fix; to cause to run aground, as a vessel. 2. ***அசையாமற்***

*செய்தல்* (கொ.வ.); to bring to a stand still, stop one's progress. (செ.அக.).

*[இரு → இருத்து → இருத்தி + போடு.]*

**இருத்து[1]-தல்** *iruttu-,* 5 செ.குன்றாவி(v.t.) 1. ***உட்காரச் செய்தல்;*** to cause to sit. ''உபசாரமுடனருகுறவிருத்தி'' (பாரத.நாடுகரந்.31). 2. ***தாமதிக்கச் செய்தல்;*** to detain, cause one to wait for a time. 3. ***அமுத்துதல்;*** to press down; to bear upon, as with a style or other instrument. ''பொன் மௌலியை யிருத்தினான்'' (பாரத. பதினெட்டாம்.187). 4. ***அடித்து உட்செலுத்துதல்;*** to beat down, as a floor, to drive in, as a nail, to make firm or compact by beating.'ஆணியை உள்ளே இருத்து.' 5. ***நிலை பெறச் செய்தல்*** (குறள்,660,உரை); to fix permanently, make stationary.- 5 செ.கு.வி. (v.i.) ***கீழிறங்குதல்;*** to sink down, as a foundation. ''வீடு இருத்திக் கொண்டது'' (செ.அக.).

*[இரு → இருத்து.]*

**இருத்து[2]** *iruttu,* பெ. (n.) ***வயிரக் குற்றங்களுள் ஒன்று*** (சிலப்.14,180,உரை); flaw in diamond one of twelve vayira-k-kuṟṟam. (செ.அக.).

*[இருள் + து = இருத்து.]*

**இருத்து[3]** *iruttu,* பெ. (n.) 1. ***நிலையான பொருள்;*** that which is firm, permanent. ''என்னெஞ்சத்து இருத்தாக விருத்தினேன்'' (திவ்.திருவாய்.9,4,6). 2. ***அமுக்குகை;*** pressure ''அவனை ஓர் இருத்து இருத்தினான்'' (கொ.வ.) (செ.அக.).

*[இரு → இருத்து = நிலை பெற்ற பொருள். இறு → இறுத்து = தாக்குதல், கீழே அழுந்துமாறு அமுக்குதல்.]*

**இருத்தை[1]** *iruttai,* பெ. (n.) ***சேங்கொட்டை*** (மலை); marking-nut tree. (செ.அக.).

*[இரு - இருத்தை.]*

**இருத்தை[2]** *iruttai,* பெ. (n.) ***ஒரு பெண் தேவதை;*** woman deity. (அபி.சிந்).

*[இரு (கரிய) → இருத்தை.]*

**இருதலை** *iru-talai,* பெ. (n.) ***இருமுனை;*** two ends. ''நடுவண தெய்த விருதலையு மெய்தும்'' (நாலடி.114) (செ.அக.).

*[இரண்டு → இரு + தலை.]*

**இருதலை ஏய்ப்பு** *irudalai-ēyppu,* பெ. (n.) 1. ***விலாங்கு மீன்*** (ஆ.அக.); eel. 2. ***ஏமாற்றும் பேச்சு;*** spoken of as being deceitful. (செ.அக.).

*[இரு + தலை + ஏய்ப்பு. ஏய்ப்பு = ஒத்திருத்தல்.]*

**இருதலைக் குழவி** *irutalai-k-kulavi,* பெ. (n.) ***அம்மிக் குழவி;*** pestle with grinding facility on both ends, as opposed to the common pestle shaped on one side. (சா.அக.).

*[இரு + தலை + குழவி.]*

**இருதலைக்கொள்ளி** *iru-talai-k-kolli,* பெ. (n.) ***இரு முனையிலுந் தீயுள்ள கட்டை;*** brand burning at both ends. ''இருதலைக் கொள்ளி யிடைநின்று வருந்தி'' (அகநா.339-9). 2. ***எப்பக்கத்தும் துன்பஞ் செய்வது;*** that which causes trouble in all directions. (செ.அக.) ''இருதலைக்கொள்ளியின் உள்ளெறும்பு ஒத்து'' (திருவாச.113).

*[இரு + தலை + கொள்ளி.]*

**இருதலைஞாங்கர்** *iru-talai-ñāṅgar,* பெ. (n.) ***இருதலையுங் கூருள்ள குமரன்வேல்*** (யாழ்.அக.); double-pointed lance. (செ.அக.).

*[இரு + தலை + ஞாங்கர்.]*

**இருதலைப்பகரங்கள்** *iru-talai-p-pagaraṅgal,* பெ. (n.) ***எழுத்துகளை உள்ளடக்கி நிற்கும்*** [ ] (பகர) அடைப்பு; square brackets. (செ.அக.).

*[இரு + தலை + பகரங்கள்.]*

**இருதலைப்பாம்பு** *iru-talai-p-pāmbu,* பெ. (n.) 1. ***இருதலை மணியன்;*** semi-nocturnal sand-snake. 2. ***இருதலைப்புடையன்*** (இ.வ.); blind snake with very short head and tail. 3. ***மண்ணுளிப் பாம்பு;*** harm less kind of snake (w.). (செ.அக.).

*[இரு + தலை + பாம்பு.]*



இருதலைப்பாம்பு

**இருதலைப்புடையன்** *iru-talai-p-pudaiyan,* பெ. (n.) ***இரண்டு பக்கமும் சிறிய தலையுடைய பாம்பு வகை;*** blind snake with very short head and tail, including the smallest species of snakes, supposed to have a head at either end, typhlopidae. (செ.அக.).

*[இரு + தலை + புடையன்.]*

**இருதலைப்புள்** *iru-talai-p-pul,* பெ. (n.) ***இரண்டு தலைகளுள்ள பறவை*** (சீவக.1631, உரை); fabulous bird with two heads. (செ.அக.).

*[இரு + தலை + புள்.]*

**இருதலைமணியம்** *iru-talai-maṇiyam,* பெ. (n.) 1 ***நண்பன் போல் நடித்து இருவருள் கலகம் விளைக் குந்தொழில்*** (செ.அக.); act of setting one person against another by pretending to be friend of each of them. 2 ***ஒருவகை நச்சுப் பாம்பு;*** a kind of poisionous snake. (சேரநா.).

ம. இருதலை மணியன்.

*[இரு + தலை + மணியம்.]*

**இருதலைமணியன்** *iru-talai-maṇiyaṉ,* பெ. (n.) 1. ***தலைகள் இரண்டும் உடல் ஒன்றுமாகவுள்ள பாம்பு வகை;*** semi-nocturnal sand-snake. 2. ***குறளை சொல் வோன்*** (இ.வ.); back biter, tale bearer. (செ.அக.).

ம. இருதலை மணியன்.

*[இரண்டு → இரு + தலை + மணியன்.]*

**இருதலைமாணிக்கம்** *iru-talai-māṇikkam,* பெ. (n.) ***சிவமந்திரம்;*** a šaiva mantra, viz. சிவாயவாசி, which reads the same whether uttered from the beginning or from the end. (செ.அக.).

*[இரண்டு → இரு + தலை + மாணிக்கம்.]*

**இரு தலை மூரி** *iru-talai-mūri,* பெ. (n.) ***மண்ணுளிப் பாம்பு*** (இ.வ.); harmless kind of snake (w.). (செ.அக.).

*[இரண்டு → இரு + தலை + மூரி.]*

**இருதலை விரியன்** *iru-talai-viriyaṉ,* பெ. (n.) ***இரண்டு தலையும் நான்கு அடி நீளமும் உடைய பாம்பு வகை;*** sand snake, nearly 4 ft. long, mutilated by snake charmers in such a way as to make the tail resemble the head-eryx johni. (செ.அக.).

ம. இருதல மூரி.

*[இரண்டு → இரு + தலை + விரியன்.]*

**இருதாள்** *irutāḷ,* பெ. (n.) ***இரண்டு திருவடிகள்*** (ஐங்குறு. கட.); two divine feet. (w.).

*[இரண்டு → இரு + தாள்.]*

**இருதிணை** *iru-tiṇai,* பெ. (n.) 1. ***உயர்திணை, அஃறிணை என்ற இரண்டு பிரிவு;*** two classes of nouns and verbs referring to (i) the personal and (ii) the impersonal, viz., உயர்திணை, அஃறிணை. (தொல். சொல்.1.). 2. ***இயங் குதிணை, நிலைத்திணை என்ற இரு பிரிவு;*** two classes into which creatures are divided, viz, இயங்குதிணை 'moving' and நிலைத்திணை 'fixed' (செ.அக.).

*[இரண்டு → இரு + திணை.]*

**இருதிரிமருப்பு** *irutirimaruppu,* பெ. (n.) ***பெரிய முறுக்கு டைய கொம்பு;*** twisted horn. "இருதிரி மருப்பி னண்ணல் இரலை" (அகநா.34-4).

*[இரு + திரி + மருப்பு.]*

**இருது** *irudu,* பெ. (n.) 1. ***இரண்டு மாதம் கொண்ட பருவகாலம்;*** season of two months. "இருதிள வேனி லெரிகதி ரிடபத்து" (மணி.11,40). 2. ***மகளிர் பூப்பு;*** catamenia. 3. ***முதற் பூப்பு;*** first menstrual discharge. (செ.அக.).

*[இரு → இருது = பெருகி முதிரும் பருவம்.]*

**இருதுக்கொடியோன்** *irudu-k-koḍiyōṉ,* பெ. (n.) ***பவளம்; கொடிப் பவளம்;*** coral, coral creeper. (சா.அக.).

*[அரு → அருது → இருது + கொடியோன்.]*

**இருதுகாலம்** *irudu-kālam,* பெ. (n.) 1. ***மாதவிடாய்க் காலம்;*** time of woman's periods. 2. ***கருத்தரிக்குங் காலம்;*** period favourable for conception. (செ.அக.) 3. ***மழைக்கா லம்;*** rainy season.

*[இருது + காலம். இரு - இருது > Skt. ṛutu.]*

**இருது சாந்தி** *irudu-šānti,* பெ. (n.) ***சாந்திமணம்;*** propitiatory rite performed in connection with the ceremonial consummation of marriage in the period recognised in the šāstrās as favourable for conception, consummation. (செ.அக.).

*[இருது + சாந்தி. சாந்தி = விழா.]*

**இருதுடையாதவள்** *iruduḍaiyādavaḷ,* பெ. (n.) ***எப் பொழுதுமே பருவமடையாதவள்;*** woman who has not menstruated at all. (சா.அக.).

*[இரு - இருது = பெரிது. வளர்ந்து எய்தும் பருவம், பருவ காலத்தில் மகளிர்க்குண்டாகும் பூப்பு இருது > Skt. ருது.]*

**இருதுத்தம்** *iruduttam,* பெ. (n.) ***இருவகைத் துத்தம்;*** two kinds of vitriol (tuttam) - zinc sulphur or white vitriol and copper sulphate or blue vitriol. (சா.அக.).

*[இரண்டு → இரு + துத்தம்.]*

**இருது நுகர்வு** *irudu-nugarvu,* பெ. (n.) ***பருவங்கட் குரிய பட்டறிவு*** (சீவக.2668,தலைப்பு.); enjoyment appropriate to the season. (செ.அக.).

*[இருது + நுகர்வு.]*

**இருதுப்பெண்** *iruduppeṇ,* பெ. (n.) 1. ***திரண்ட பெண்;*** matured girl. 2. ***மாதவிடாய்ப் பெண்;*** a woman in her mensės. (சா.அக.).

*[இருது + பெண்.]*

**இருதுமதி** *irudu-madi,* பெ. (n.) 1. ***பருவப்பெண்;*** girl who has attained puberty. 2. ***மாதவிலக்கான பெண்கள்*** (சைவச.பொது.307); woman during her periods. 3. ***கருத்தரித்தற்குரிய நிலையிலிருப்பவள்;*** woman just after her periods, being then in a condition favourable for conception. (செ.அக.).

*[இருது + மதி. மதி = பெண்பாலீறுகளுள் ஒன்று. நிலவைப் (மதி) பெண்ணாகக் கருதும் பெற்றி நோக்கி இச்சொல் பெண்பாலீ றாக ஆளப்பட்டது.]*

**இருதுவா-தல்** *irudu-v-ā-*, 6 செ.கு.வி. (v.i.) ***பருவமடைதல்;*** to attain puberty, said only of a girl. (செ.அக.).

*[இருது + ஆதல்.]*

**இருந்த திருக்கோலம்** *irunda-tiru-k-kōlam,* பெ. (n.) ***திருமாலின் வீற்றிருக்கும் இருப்பு;*** sitting posture of Viṣṇu, one of three tiru-k-kōlams. (செ.அக.).

*[இரு → இருந்த + திருக்கோலம்.]*

**இருந்ததேகுடியாக** *irundade-kuḍi-yāga,* கு.வி.எ. (adv.) ***எல்லாருமாக;*** all gathered together. "இருந்ததே குடியாகக் காணும்படி" (ஈடு.4,1,1.) (செ.அக.).

*[இரு → இருந்தது + ஏ + குடி + ஆக.]*

**இருந்த நம்பி** *irunda-nambi,* பெ. (n.) ***நூற்றெட்டுத் திருப்பதிகளு ளொன்றாகிய திருக்குறுங் குடியிற் கோயில் கொண்ட திருமால்*** (ஆ.அக.); Lord Vishnu in sitting posture at Thirukkuruṅguḍi, one of 108 Vaiṣṇavite shrines.

*[இரு - இருந்த + நம்பி.]*

**இருந்த வழி** *irunda vaḻi,* பெ. (n.) ***இருந்த இடம்*** (மதுரைக்.158); place one had lived.

*[இருந்த + (உழி) வழி.]*

**இருந்தவளமுடையார்** *irunda-vaḷa-muḍaiyār,* பெ. (n.) ***கூடலழகர்*** (சிலப்.18,4,அரும்.); Viṣṇu in the perumāl temple at Madura so styled with special reference to the beauty of His sitting posture. (செ.அக.).

*[இரு → இருந்த + வளம் + உடையார். வளம் = அழகு.]*

**இருந்தாழி** *iruntāḻi,* பெ. (n.) ***கரிய தாழி;*** black vessel. "இருந்தாழி கவிப்ப" (நற்.271).

*[இரு → இரும் + தாழி.]*

**இருந்தாற்போல்** *irundāṟ-pōl,* கு.வி.எ. (adv.) ***திடீரென்று*** (திவ்.திருவிருத்.12, வ்யா.அப்பு); suddenly. (செ.அக.).

*[இருந்தால் + போல். இருந்தாற்போலிருந்து என்னும் மரபுத் தொடர் திடுமென ஏற்படும் மாற்றத்தைக் குறித்தது. இருந்தாற் போலிருந்து - இருந்தாற்போல்.]*

**இருந்தில்** *irundil,* பெ. (n.) 1. ***இருந்தை*** (திவ். பெரியதி.2,10,3) பார்க்க; see *irundai.* 2. ***நிலக்கரி;*** coal. (சேரநா.).

க. இத்தல்; ம. இருன்னல்.

*[இரும் = கரிய - இரும் + த் + இல் = இருந்தில்.]*

**இருந்து**[1] *irundu,* பெ. (n.) ***இருந்தை*** பார்க்க; see *irundai.* (செ.அக.).

*[இருந்தில் → இருந்தை → இருந்து.]*

**இருந்து**[2] *irundu,* இடை. (part.) ***ஐந்தாம் வேற்றுமைச் சொல்லுருபு;*** sign of the abl. case as in எங்கிருந்து. (செ.அக.).

*[இரு → இருந்து.]*

**இருந்துபோ-தல்** *irundu-pō-,* 8 செ.குன்றாவி. (v.t.) 1. ***செயலறுதல்;*** to be rendered inactive, to be stupefied; to be paralysed. 'அந்தத் துக்கத்தைக் கேட்டதும் அவன் இருந்து போனான்'. 2. ***கீழே அழுந்துதல்;*** to sink. 'அடிவாரம் இருந்து போயிற்று.' 3. ***விலை போகாது தங்குதல்;*** to remain unsold, as goods. 'இருந்து போன சாமான்.' (செ.அக.).

*[இரு → இருந்து + போ.]*

**இருந்தும்** *irundum,* இடை. (conj.) ***ஆகவும்;*** for all that, nevertheless, yet, notwithstanding. 'அப்படியிருந்துஞ் செய்தான்.' (செ.அக.).

*[இரு → இருந்து + உம்.]*

**இருந்தேத்துவார்** *irundēttuvār,* பெ. (n.) ***மாகதர்*** (சிலப்.5,48,உரை); courtiers. (செ.அக.).

*[இரு → இருந்து + ஏத்துவார்.]*

**இருந்தை** *irundai,* பெ. (n.) ***கரி;*** charcoal. "வாலி தாம் பக்கமிருந்தைக் கிருந்தன்று" (நாலடி.258). (செ.அக.).

*[இருந்தில் → இருந்தை.]*

**இருந்தையூர்** *iruntai-y-ūr,* பெ. (n.) ***மதுரையில் திருமால் கோயில் கொண்டுள்ள இடம்*** (பரிபா. பக்.165); ancient suburb of Madurai where a Viṣṇu temple dedicated to Irunta-vaḷam-uḍaiyār is situated.

*[இரு → இருந்தை + ஊர். திருமால் இருந்த கோலத்தில் கோயில் கொண்டு இருக்கும் ஊர். இருந்த வளமுடையார் பார்க்க.]*

**இருந்தையூர்க் கருங்கோழி மோசியார்** *irundai-yūrkkauṅ-kōḻi-mōśiyār,* பெ. (n.) ***கடைக் கழகத்திலிருந்த தமிழ்ப் புலவருள் ஒருவர்;*** poet of the Sangam age.

*[இருந்தை + ஊர் + கரும் + கோழி + மோசி + ஆர். இருந்தையூர் = திருமால் இருந்த கோலங்கொண்ட கோயில் உள்ள ஊர்.]*

**இருந்தையூர்க் கொற்றன் புலவன்** *irundai-yūr-k-koṟṟaṉ-pulavaṉ* பெ. (n.) ***கடைக்கழகப் புலவருள் ஒருவர்;*** poet of the Sangam age.

*[இருந்தை + ஊர் + கொற்றன் + புலவன்.]*

**இருந்தோட்டுப்புள்** *irundōṭṭu-p-puḷ,* பெ. (n.) ***பெருங் கூட்டப்பறவை;*** flock of birds.

*[இரும் + தோடு + புள். இரும் = பெரிய. தோடு = தொகுதி, கூட்டம். புள் = பறவை.]*

**இருந்தோன்றல்** *irun-tōṉṟal,* பெ. (n.) ***கரிய தோற்றத் தினையுடைய;*** blackish appearance. "அளப்பரிதாகிய குவையிருந்தோன்றல்" (அகநா.162).

*[இரும் + தோன்றல்.]*

**இருநிதிக்கிழவன்** *iru-nidi-k-kiḻavaṉ,* பெ. (n.) ***குபேரன்;*** kubēra, the possessor of wealth.

*[இரு + நிதி + கிழவன். இரு = பெரிய.]*

**இருநிலம்** *iru-nilam,* பெ. (n.) ***அகண்ட நிலப்பகுதி;*** wide world, vast expanse of earth. "இருநில மாள்வோன்" (சிலப்.28,78) (செ.அக.).

*[இரு + நிலம்.]*

**இருநினைவு** *iru-ninaivu,* பெ. (n.) ***இரண்டுபட்ட மனம்*** (கொ.வ.); double mindedness, wavering disposition. (செ.அக.).

*[இரு + நினைவு.]*

**இருநூறு** *iru-nūṟu,* பெ. (n.) ***இரண்டு நூறு;*** two hundreds.

ம. இருநூறு; க., தெ., பட. இன்னூறு; கோத. இனூர்; துட. இனூர்; குட. இன்னூர்; துளு. இர்நூறு; (செ.அக.).

*[இரண்டு - இரு + நூறு.]*

**இருநெறித்தெரிப்பு** *iru-neṟi-terippu,* பெ. (n.) ***இரண்டு தொடைச் சந்திலும் நெறிக்கட்டி, வலியைத் தருமோர் நோய்;*** disease characterised by the inflammation of the lymph glands of the groin. (சா.அக.).

*[இரு + நெறி + தெரிப்பு.]*

**இருநேரம்** *irunēram,* பெ. (n.) ***இரண்டு வேளை; அதாவது காலை, மாலை;*** two periods of the day viz. the morning and the evening. (சா.அக.).

*[இரண்டு → இரு + நேரம்.]*

**இருநொச்சில்** *irunoccil,* பெ. (n.) ***இருவகை நொச்சிச் செடி;*** two species of negundu plant viz. 1. ***வெண் ணொச்சி;*** white leaved negundo-itex negundo. 2. ***கருநொச்சி;*** black leaved negundu (unidentified). It is said that it is not ordinarity visible, but can only be recognised by siddhars and yogis through psychic vision. (சா.அக.).

*[இரண்டு → இரு + நொச்சில்.]*

**இருப்படி** *iruppaḍi,* பெ. (n.) ***குதிரைவண்டி போன்ற வற்றில் உட்காருவதற்காக அமைக்கப்பட்ட இடம்;*** raised seat in a coach. (சேரநா.).

ம. இருப்படி.

*[இருப்பு + அடி.]*

**இருப்பணிச் சட்டம்** *iruppaṇi-c-cattam,* பெ. (n.) ***இருப்புச் சட்டம்*** பார்க்க (இ.வ.); cart-drivers seat. (செ.அக.).

*[இரும்பு → இருப்பு + அணி + சட்டம்.]*

**இருப்பவல்** *iruppaval,* பெ. (n.) ***ஒரு மருந்துப் பூண்டு*** (m.m.); Indian cudweed. (செ.அக.).

*[ஒருகா. இரு + பவல். பவல் → பவர் = கொடிவகை.]*

**இருப்பன** *iruppaṉa,* பெ. (n.) ***நிலைத்திணைப் பொருள்கள்;*** motionless things such as vegetation and lower forms of life. "இருப்பன முதற் றேகங்க ளத்தனை யும்" (தாயு.பரி.2) (செ.அக.).

*[இரு - இருப்பன. (வினையா.பெ.).]*

**இருப்பாணி** *iruppāṇi,* பெ. (n.) ***இரும்பாணி;*** iron nail. "அடிப்பேன் கவியிருப் பாணி கொண்டே" (தனிப்பா.1.120.22).

ம. இரும்பாணி.

*[இரும்பு - இருப்பு + ஆணி.]*

**இருப்பாரை** *iruppārai,* பெ. (n.) ***கருமூஞ்சிப்பாரை மீன்;*** grey horse-mackerel. caranire. (செ.அக.).

*[இரு + பாரை.]*

**இருப்பாவல்** *iruppāval,* பெ. (n.) ***கருநிறக்காயுள்ள பாவல்; காட்டுப் பாவல்;*** wild momordica eharantia. (சேரநா.).

ம. இருப்பாவல்.

*[இரு + பாவல்.]*

**இருப்பிடம்** *iruppiḍam,* பெ. (n.) 1. ***தங்குமிடம்*** (திவ்.இராமானுச.106); residence, lodging, abode, dwelling. 2. ***இருக்கை;*** seat. (செ.அக.).

ம. இருப்பிடம், இரிப்பிடம்.

*[இருப்பு + இடம்.]*

**இருப்பு** *iruppu,* பெ. (n.) 1. ***இருக்கை*** (பாரத.சூது.5); seat. 2. ***குதம்;*** seat of the body, posteriors. "இருப்பினி னாகர்" (கந்தபு.சூர.வதை.425). 3. ***இருப்பிடம்;*** residence: "முத்தொழிற்புரி மூவரிருப்புடன்" (சேதுபு. இராமதீர்த். 20). 4. ***நிலை;*** stage at which matter rests, condition, position in life. 'உன்னிருப்பென்ன அவளிருப்பென்ன?' 5. ***கையிருப்பு;*** balance on hand, surplus, whether of cash, reserve funds or commodities. 6. ***பொருண்மு தல்;*** stores, merchandise, capital. (செ.அக.).

ம. இருப்பு.

*[இரு → இருப்பு.]*

**இருப்புக்கச்சை** *iruppu-k-kaccai,* பெ. (n.) ***வீரரணியும் இரும்புடை*** (வின்.); iron girdle worn by warriors. (செ.அக.).

*[இரும்பு - இருப்பு + கச்சை.]*

**இருப்புக்கட்டி** *iruppukkaṭṭi,* பெ. (n.) ***வரிவகை;*** tax (S.I.I.IV.79) (செ.அக.).

*[இருப்பு + கட்டி.]*

**இருப்புக்கட்டை**[1] *iruppu-k-kaṭṭai,* பெ. (n.) ***சுத்தியல்;*** hammer.

*[இரும்பு - இருப்பு + கட்டை.]*

**இருப்புக்கட்டை**[2] *iruppu-k-kaṭṭai,* பெ. (n.) ***திறவு கோல்*** (வின்.); shank of a key.

*[இரும்பு - இருப்பு + கட்டை.]*

**இருப்புக்கம்பை** *iruppu-k-kambai,* பெ. (n.) ***வண்டி யோட்டுபவனுக்கு முன் வண்டியில் அமைக்கப் பட்ட இருக்கை*** (கொ.வ.); driver's seat, in front of a cart. (செ.அக.).

ம. இருப்படி.

*[இரும்பு + கம்பை.]*

**இருப்புக்கரண்டி** *iruppu-k-karaṇḍi,* பெ. (n.) ***இரும்புக் கரண்டி;*** iron ladle.

*[இரும்பு + கரண்டி.]*

**இருப்புக்காய் வேளை** *iruppu-k-kāyvēḷai,* பெ. (n.) ***இரும்புக்காய் வேளை*** (வின்.); plant. (செ.அக.).

*[இரும்பு - இருப்பு + காய் + வேளை.]*

**இருப்புக்கிட்டம்** *iruppu-k-kiṭṭam,* பெ. (n.) ***இரும்புரு கிய கட்டி;*** scoria of iron, iron dross. (செ.அக.).

*[இரும்பு - இருப்பு + கிட்டம்.]*

**இருப்புக்கொல்லி** *iruppu-k-kolli,* பெ. (n.) ***சிவனார் வேம்பு;*** wiry indigo. (செ.அக.).

*[இரும்பு - இருப்பு + கொல்லி.]*

**இருப்புகில்** *iruppugil,* பெ. (n.) ***இருபோக முறை பயிர்;*** yielding two crops, double crops. (சேரநா.).

ம. இருப்புகில்.

*[இரு + புகில்.]*

**இருப்புச்சட்டம்** *iruppu-c-caṭṭam,* பெ. (n.) ***வண்டி யோட்டுவோன் அமரும் முகவணை;*** cart-driver's seat from the slats united at the pole. (செ.அக.).

ம. இருப்படி.

*[இருப்பு + சட்டம்.]*

**இருப்புச்சலாகை** *iruppu-c-calāgai,* பெ. (n.) ***இரும்புச் சலாகை*** பார்க்க (செ.அக.); see *irumbu-c-calāgai.*

*[இரும்பு - இருப்பு + சலாகை.]*

**இருப்புச்சிட்டம்** *iruppu-c-ciṭṭam,* பெ. (n.) ***இருப்புக் கிட்டம்*** (வின்.); oxide of iron.

*[இரும்பு - இருப்பு + சிட்டம்.]*

**இருப்புச்சில்** *iruppu-c-cil,* பெ. (n.) ***சிறுவர் விளை யாட்டுக் கருவி*** (வின்.); small round plate of iron used in a game played by children. (செ.அக.).

*[இரும்பு - இருப்பு + சில்.]*

**இருப்புச்சீரா** *iruppu-c-cīrā,* பெ. (n.) ***இருப்புச்சட்டை*** (வின்); iron coat of mail. (செ.அக.).

*[இரும்பு - இருப்பு + சீரா. சீரை - சீரா.]*

**இருப்புச்சுவடு** *iruppu-c-cuvaḍu,* பெ. (n.) ***இருப்புச் சீரா*** (வின்.); பார்க்க see *iruppu-c-cīrā.*

*[இரும்பு - இருப்பு + சுவடு.]*

**இருப்புத்தாள்** *iruppu-t-tāḷ,* பெ. (n.) ***இரும்புக்கோல்*** (ஞானா.55,12, உரை); iron rod. (செ.அக.).

*[இரும்பு - இருப்பு + தாள்.]*

**இருப்புத்திட்டம்** *iruppu-t-tiṭṭam,* பெ. (n.) ***செலவு நீக்கி எஞ்சியுள்ள தொகை;*** remanent after spending. (செ.அக.).

*[இருப்பு + திட்டம்.]*

**இருப்புநகம்** *iruppu-nagam,* பெ. (n.) ***வெற்றிலை கிள்ளும் கருவி*** (இ.வ.); betel clipper.

*[இரும்பு - இருப்பு + நகம் ]*

**இருப்புநெஞ்சு** *iruppu-neñju,* பெ. (n.) ***வன்மனம்;*** cruel, unfeeling heart, heart steeled against all tender feelings. '"வன்னெஞ்சோ விரங்காத மரநெஞ்சோ விருப்பு நெஞ்சோ" (தாயு.ஆசையெனு.4) (செ.அக.).

*[இரும்பு - இருப்பு + நெஞ்சு]*

**இருப்புப்பாதை** *iruppu-p-pādai,* பெ. (n.) ***தொடர் வண்டிப்பாதை;*** railway. (செ.அக.).

*[இரும்பு - இருப்பு + பாதை.]*

**இருப்புப்பாளம்** *iruppu-p-pāḷam,* பெ. (n.) ***இரும்புக் கட்டி*** (வின்.); pig iron. (செ.அக.).

*[இரும்பு - இருப்பு + பாளம்.]*

**இருப்புமணல்** *iruppu-maṇal,* பெ. (n.) ***இரும்பு கலந்த மண்;*** sand containing iron, iron stone. (செ.அக.).

*[இரும்பு - இருப்பு + மணல்.]*

**இருப்புமுகம்** *iruppu-mugam,* பெ. (n.) ***இரும்புப் பூண்*** (தந்தப் பூண்); protective metal band at the end of a rod. "இருப்பு முகஞ்செறித்த வேந்தெழின் மருப்பிற் கருங்கை யானை" (புறநா.369-1).

*[இரும்பு - இருப்பு + முகம்.]*

**இருப்புமுள்** *iruppu-muḷ,* பெ. (n.) ***தாறு;*** spike of a goad. (செ.அக.).

*[இரும்பு - இருப்பு + முள்.]*

**இருப்புமுளை** *iruppu-muḷai,* பெ. (n.) ***குழிகல்லுங் கருவி;*** pickaxe. (ஆ.அக.).

*[இரும்பு - இருப்பு + முளை.]*

**இருப்புமுறி** *iruppu-muṟi,* பெ. (n.) ***செடிவகை*** (L.); silvory leaved indigo, m.gh. Indigofera. argentea. (செ.அக.).

*[இரும்பு - இருப்பு + முறி.]*

**இருப்புயிர்** *iruppuyir,* பெ. (n.) ***கொடியவர் உயிர், நிரயத்தில் இருப்பவர் உயிர்;*** literally, iron-soul, fig, souls that undergo purgation in hell, one of five class of souls arranged accg.to spiritual purity. "இருப்புயிராகி வெந்து" (சீவக.3108) (செ.அக.).

*[இரும்பு - இருப்பு + உயிர்.]*

**இருப்புலக்கை** *iruppulakkai,* பெ. (n.) ***ஒரு கருவி;*** iron pestle, a weapon in warfare. (செ.அக.).

*[இரும்பு - இருப்பு + உலக்கை.]*

**இருப்பூறல்** *iruppūṟal,* பெ. (n.) ***ஊறல், இரும்புக்கறை;*** iron stain on cloth. (செ.அக.).

*[இரும்பு - இருப்பு + ஊறல்.]*

**இருப்பூறற்பணம்** *iruppūṟaṟ - paṇam,* பெ. (n.) ***கலப்பு வெள்ளி நாணயம்*** (வின்.); adulterated silver counterfiet coin. (செ.அக.).

*[இரும்பு - இருப்பு + ஊறல் + பணம்.]*

**இருப்பெழு** *iruppeḻu,* பெ. (n.) ***உழலை;*** crossbar made of iron. "மருப்புநிலைக் கந்தி னிருப்பெழுப்போக்கு". (பெருங்.இலாவாண.5,38) (செ.அக.).

*[இரும்பு - இருப்பு + எழு.]*

**இருப்பேனம்** *iruppēṉam,* பெ. (n.) ***இரும்பினாற் செய்த ஏனம்;*** iron vessel. (சா.அக.).

*[இரும்பு + ஏனம் - இரும்பேனம் - இருப்பேனம்.]*

**இருப்பை**[1] *iruppai,* பெ. (n.) ***இலுப்பை மரம்;*** (பெருங்.உஞ்சைக்.50,53); South Indian Mahua. (செ.அக.).

**ம.** இருப்ப; **க., து.** இப்பெ மர; **தெ.** இப்ப.

*[இரு + இருப்பை.]*

**இருப்பைத்திப்பி** *iruppai-t-tippi,* பெ. (n.) ***இலுப்பைப் பிண்ணாக்கு;*** cake of mahua seed from which oil has been pressed out. (சா.அக.).

**ம.** இருப்பப்பிண்ணாக்கு.

*[இருப்பை + திப்பி.]*

**இருப்பைப்பூச்சம்பா** *iruppai-p-pū-c-cambā,* பெ. (n.) ***நெல்வகை;*** a kind of paddy of the campā variety, from its having the odour of the iruppai flower. (செ.அக.).

*[இருப்பை + பூ + சம்பா.]*

**இருபத்துநாலாயிரப்படி** *iru-pattu-nālā-yira-p-paḍi,* பெ. (n.) ***பெரிய வாச்சான் பிள்ளையால் எழுதப்பட்ட திருவாய்மொழியின் உரை;*** commentary on the Tiruvāymoḻi, by Periya-Vāccāṉ-Pillai, aggregating 24,000 granthas of 32 syllables each. (செ.அக.).

*[இரண்டு - இரு + பத்து + நான்கு + ஆயிரம் + படி.]*

**இருபது** *iru-padu,* பெ. (n.) ***ஓர் எண்;*** number 20, being twice ten. (செ.அக.).

**ம.** இருபது; **க.** இர்பத்து, இப்பத்து; **தெ.** இருவை, இருவதி; **பட.** இப்பத்து; **இரு.** இர்பது; **எரு.** யிர்வது, யிரபொத்து; **கோத.** இர்பத், இவொத்; **குரு.** இப்பத்த; **குட.** குர்பத, இருவத; **து.** இர்வ், இருவ; **கொலா.** இருவெ.

*[இரண்டு - இரு + (பத்து) பது.]*

**இருபந்தியாடு** *irupandiyāḍu,* பெ. (n.) ***எந்த இனத்திலும் சேராத ஆடு;*** sheep of mixed breed.

*[இரு + பந்தி + ஆடு. பகுதி → தெ. பந்தி.]*

**இருபன்னியம்** *irupaṉṉiyam,* பெ. (n.) ***சேங்கொட்டை*** (மலை.) பார்க்க; marking nut. (செ.அக.).

*[இரண்டு - இரு + பன்னியம்.]*

**இருபாடு** *irupāḍu,* பெ. (n.) ***இருபுறம்;*** two sides. (சேரநா.).

**ம.** இருபாடு.

*[இரண்டு - இரு + பாடு.]*

**இருபாவிருபஃது** *iru-pā-v-iru-paḵtu,* பெ. (n.) 1. ***சிற்றிலக்கிய வகை*** (பன்னிருபா.337); வெண்பாவும், அகவலுமாக மாற்றிமாற்றி அந்தாதித்தொடையில் பாடப்பட்ட இலக்கியம்; class of literary composition of 20 verses, in which venbā and agaval alternate in antāti-t-toḍai. 2. ***மெய்கண்ட சாத்திரத்தொன்று; அருணந்தி சிவாச்சாரியார் இயற்றியது;*** text-book of the saiva siddhānta philosophy by Arunanti-civācāriyar. one of 14 Meykaṇḍa-cāttiram. (செ.அக.).

*[இரண்டு - இரு + பா + இரு + (பத்து) பஃது.]*

**இருபாவிருபது** *iru-pā-irubādu,* பெ. (n.) ***இருபாவிருபஃது*** பார்க்க (செ.அக.); see *irupāvirupaktu.*

*[இரு + பா + இரு + (பத்து) பது.]*

**இருபான்** *iru-pāṉ,* பெ. (n.) ***இருபது;*** twenty. "இருபான் கணைதுரந்து" (கந்தபு.அக்கினிமு.82) (செ.அக.).

*[இரண்டு - இரு + (பத்து-பதின்-பான்) பான்.]*

**இருபிறப்பாளன்**[1] *iru-piṟappāḷaṉ,* பெ. (n.) 1. ***திங்கள்;*** moon. 2. ***வெள்ளி*** (சுக்கிரன்); Sukkiran, as twice -born.

*[இரண்டு - இரு + பிறப்பு + ஆளன்.]*

**இருபிறவி** *iru-piṟavi,* பெ. (n.) ***கலப்பின விலங்கு வகை;*** hybrid animal. (செ.அக.).

*[இரண்டு - இரு + பிறவி.]*

**இருபுடைமெய்க்காட்டு** *iru-puḍai-mey-k-kāṭṭu,* பெ. (n.) ***ஒன்றே இருவேறு வகையாகத் தோற்றுவது*** (திவ். திருநெடுந்.21,வ்யா); that which appears in two functions as the discus of viṣṇu which is at once a pleasing ornament as well as a destructive weapon. (செ.அக.).

*[இரண்டு - இரு + புடை + மெய் + காட்டு.]*

**இருபுரியா-தல்** *iru-puri-y-ā-* 6 செ.கு.வி. (v.i.) ***மாறுபாடாதல்*** (திவ்.கண்ணிநுண்.11,வ்யா); to be contrariwise one to another, as a rope twisted contrariwise at the two ends. (செ.அக.).

*[இரண்டு - இரு + புரி + ஆ.]*

**இருபுலன்** *iru-pulaṉ,* பெ. (n.) **உடற்கழிவுகள்** (மல சலங்கள்); two fold evacuation, urine and excrement. "உமிழ்வோ டிருபுலனுஞ் சோரார்" (ஆசாரக்.33) (செ.அக.).

*[இரண்டு - இரு + புலன்.]*

**இருபுறம்** *irupuṟam,* பெ. (n.) ***இரண்டு பக்கம்;*** two sides. (சேரநா.).

ம. இருபுறம்.

*[இரண்டு - இரு + புறம்.]*

**இருபுறவசை** *iru-puṟa-vašai,* பெ. (n.) ***வசைபோன்ற வாழ்த்து*** (யாப்.வி.95, பக்.512); what appears to be censure but is actually meant to praise. (செ.அக.).

*[இரண்டு - இரு + புறம் + வசை.]*

**இருபுறவாழ்த்து** *iru-puṟa-vāḻttu,* பெ. (n.) ***வாழ்த்துப் போன்ற வசை*** (யாப்.வி.95.பக்.512); seeming praise which is in such a form, that it is actually meant to censure. (செ.அக.).

*[இரண்டு - இரு + புறம் + வாழ்த்து.]*

**இருபுனல்** *iru-puṉal,* பெ. (n.) ***கீழ்நீர், மேல்நீர்கள்*** (குறள்.737); two sources of water. viz. underground water as that in springs, wells and tanks, and surface water as in lakes and rivers. (செ.அக.).

*[இரண்டு - இரு + புனல்.]*

**இருபூ** *iru-pū,* பெ. (n.) ***இருபோகம்*** பார்க்க (ஈடு.) (செ.அக.); see *irubōgam.*

[இரண்டு - இரு + பூ.]

**இருபூலை** *irupūlai,* பெ. (n.) 1. ***பூலா*** (L.) பார்க்க; small Indian snow - berry. 2. ***வெள்ளைப்பூலாஞ்சி*** (L.) பார்க்க; Indian snow berry. (செ.அக.).

*[இரண்டு - இரு + (பூலாஞ்சி) பூலை.]*

**இருபெயரொட்டாகு பெயர்** *iru-peyar-oṭṭāgu-peyar,* பெ. (n.) ***இரு பெயர் ஒட்டிநின்று ஒரு சொல்நீர்மைத் தாய் ஆகுபெயராகி வருவது;*** two nouns in apposition, one of which is used figuratively. "வகரக்கிளவி, அதுவாகு கிளவி மக்கட்சுட்டு". (நன்.290.விருத்).

*[இரண்டு - இரு + பெயர் + ஒட்டு + ஆகுபெயர்.]*

**இருபெயரொட்டு** *iru-peyar-oṭṭu,* பெ. (n.) ***ஆகிய என்னும் பண்புருபு தொக்கு நிற்கும் பெயர்கள் இணைந்து வருவது*** (நன்.365.உரை); combination of two nouns in apposition where the adj. particle ஆகிய is understood.

*[இரண்டு - இரு + பெயர் + ஒட்டு.]*

**இருபெருந்தெய்வம்** *iru-perun-teyvam,* பெ. (n.) ***பனைக் கொடியை உடையவனும், நீலநிறத் திருமேனியையுடையவனுமாகிய இரண்டு பெருந்தெய்வங்கள்:*** two gods Balaraman and Kannan. "இருபெருந் தெய்வமு முடனின்ற ஆங்கு" (புறநா.58.16).

*[இரண்டு - இரு + பெரும் + தெய்வம்.]*

**இருபெருநியமம்** *iru-peru-niyamam,* பெ. (n.) ***இரு பெரிய அறங்கள், இல்லறம், துறவறம்;*** two kinds of virtues, domestic and ascetic. (மதுரைக்.365).

*[இரண்டு - இரு + பெரு + நியமம்.]*

**இருபொருள்** *iru-poruḷ,* பெ. (n.) ***கல்வி, செல்வம் ஆகிய இரண்டு பொருள்கள்;*** two kinds of wealth, as learning and riches. (செ.அக.).

*[இரண்டு - இரு + பொருள்.]*

**இருபோகம்** *iru-pōgam,* பெ. (n.) 1. ***இருமுறை விளைவு;*** two crops, one raised in the wet season and another in the dry. 2. ***நிலமுடையோனுக்கும் பயிரிடுவோனுக்குமுரிய பங்கு;*** two shares of the crop, one of the landlord and the other of the tenant. (R.F) (செ.அக.).

ம. இருப்புகில்.

*[இரண்டு - இரு + போகம்.]*

**இருபோது** *iru-pōdu,* பெ. (n.) ***காலைமாலை பொழுதுகள்;*** morning and evening. "இருபோதும் பணிவார்" (தேவா.634.6).

*[இரண்டு - இரு + (பொழுது) போது.]*

**இரும்பல் காஞ்சி** *irum-pal-kāñji,* பெ. (n.) ***ஒரு தமிழ் நூல்*** (புறத்.); ancient Tamil work. (செ.அக.).

*[இரு - இரும் + பல் + காஞ்சி.]*

**இரும்பலி** *irumbali,* பெ. (n.) ***இரும்பிலி*** (L.) பார்க்க; see *irumpili.* (செ.அக.).

*[இரும்பிலி - இரும்பலி.]*

**இரும்பவல்** *irumbaval,* பெ. (n.) ***இருப்பவல்*** பார்க்க; see *iruppaval.* (சா.அக.).

*[இரும்பு + அவல்.]*

**இரும்பன்** *irumbaṉ,* பெ. (n.) 1. ***எலி*** (திவா.); rat. 2. ***அகழெலி*** (பிங்.); field rat. 3. ***திருடன்;*** thief. (சேரநா.) (செ.அக.).

*[இரும் = கரிய. இரும்பன் = கரிய எலி.]*

**இரும்பாட்டல்** *irumbāṭṭal,* பெ. (n.) ***இதளிய வாதம் செய்தல்; இரும்பைப் பொன்னாக்கல்;*** play_with iron, transmuting iron into gold. (சா.அக.).

*[இரும்பு + ஆட்டல்.]*

**இரும்பாரமூலி** *irumbāra-mūli,* பெ. (n.) ***அழுகண்ணி*** பார்க்க; see *aḻukaṇṇi.* (சா.அக.).

[இரும்பு + ஆரல் + மூலி.]

**இரும்பாலை** *irum-bālai,* பெ. (n.) ***பாலைமரவகைகளுள் ஒன்று*** (L.); blue - dyeing Rosebay.

ம. இரும்பால.

*[இரு - இரும் + பாலை.]*

**இரும்பிடர்த்தலை** *irumbiḍar-t-talai,* பெ. (n.) ***பெரிய கழுத்து;*** neck of abnormal size. "பெருங்கையானை யிரும்பிடர்த்தலை யிருந்து" (புறநா.3-11).

*[இரும் + பிடர் + தலை.]*

**இரும்பிடர்த்தலையார்** *irumbiḍar-t-talai-y-ār,* பெ. (n.) ***கரிகாற்சோழனிடம் அமைச்சராகவும், புலவராகவு மிருந்தவர். இவர் கரிகாற் சோழனின் தாய் மாம னாவார்;*** name of the poet who was the uncle of Chola king Karikālan. (அபி.சிந்.).

*[இரு - இரும் + பிடர் + தலை + ஆர். இரும்பிடர்த்தலை என்னும் ஊரில் வாழ்ந்தவர். பிடர் = பானை.]*

**இரும்பிலி** *irumbili,* பெ. (n.) 1. ***செடிவகை;*** (L.) box leaved satin ebony, supposed to be used in alchemy to convert iron into gold. 2. ***ஓர் ஊர்ப்பெயர்;*** name of a village. 3. ***ஒரு வகைப்பாம்பு;*** a kind of snake. (செ.அக.).

*[இரும்பு + இலி]*

**இரும்பினீர்மை** *irumbinīrmai,* பெ. (n.) ***இழிந்தநிலை;*** state or condition of iron used fig. for low condition, mean position etc. "இரும்பினீர்மை கெடுத்து" (சீவக. 952) (செ.அக.).

*[இரும்பின் + நீர்மை.]*

**இரும்பு**[1] *irumbu,* பெ. (n.) 1. ***பொன்;*** gold. 2. ***செங்காந்தள்*** (L.) red species of malabar glorylily. (செ.அக.).

*[இரும் + பொன் = இரும்பொன் - இரும்பு. இரும் = பெரிய. பெரிய பொன் என்னும் பொருளினது.]*

**இரும்பு**[2] *irumbu,* பெ. (n.) 1. ***கரும்பொன்*** (தேவா. 209,3); iron, literally, the black metal. 2. ***கருவி;*** instrument, weapon. "இரும்பு மேல் விடாது நிற்பார்". (சீவக.782).

**ம.** இரும்பு; **க.** இரும்பு (கடினத்தன்மை); **தெ.** இனுமு, இனுப; **இரு.** இரும்பு; **எரு.** எயரும்பு; **கை.** இல்மு; **கோத.** இம்ப்; **துட.** இம்ப (ஊசி); **குட.** இரிம்பி; **து.** இரும்ப; **குவி.** இர்ப; **கொலா.** இனும்.

*[இர் → இரு → இரும்பு (மு.தா.197). இரு - இரும் + பொன் = இரும்பொன் - இரும்பு. இரும் - கரிய. ஒ.நோ. கரும் + பொன் = கரும்பொன்.]*

**இரும்புக்காம்பு** *irumbu-k-kāmbu,* பெ. (n.) 1. ***இரும்புக் கோல்;*** iron rod. 2. ***சூட்டுக்கோல்;*** branding iron. (சா.அக.) (செ.அக.).

*[இரும்பு + காம்பு.]*

**இரும்புக்காய்வேளை** *irumbu-k-kāy-vēḷai,* பெ. (n.) ***வேளைவகை*** (மூ.அ.); species of cleome. (செ.அக.).

*[இரும்பு + காய் + வேளை.]*

**இரும்புக்கிட்டம்** *irumbukkiṭṭam,* பெ. (n.) ***இரும்புருக் கும்போது மேல் திரண்ட கட்டி;*** iron dross; scoria of iron. (சா.அக.).

*[இரும்பு + கிட்டம்.]*

**இரும்புக்குணம்** *irumbukkuṇam,* பெ. (n.) ***இரும்பிற்கு இயற்கையாகவே அமைந்துள்ள ஐந்து குணம்; அவையாவன:- சவுடு, உடைதல், ஊறல், திரை, உருகாக்குணம்;*** natural qualities peculiar to iron ore; cracking, brittleness, prone to rust, contractile and not easily fusible or melted. (சா.அக.)

*[இரும்பு + குணம்.]*

**இரும்புக்கெண்டி** *irumbu-k-keṇḍi,* பெ. (n.) ***இரும்புக் கமண்டலம்;*** iron water-bowel used by mendicants. (சா.அக.).

*[இரும்பு + கெண்டி.]*

**இரும்புக்கொல்லன்** *irumbu-k-kollan,* பெ. (n.) ***கருங் கொல்லன்;*** blacksmith. (செ.அக.).

*[இரும்பு + கொல்லன்.]*

**இரும்புச்சட்டி** *irumbu-c-caṭṭi,* பெ. (n.) ***இரும்பால் செய்த பெரிய ஏனம்; சீனச்சட்டி;*** an iron pan.

ம. இரும்புச்சட்டி.

*[இரும்பு + சட்டி.]*

**இரும்புச்சலாகை** *irumbu-c-calāgai,* பெ. (n.) 1. *அறுவை மருத்துவக்கருவி வகை;* surgeon's probe, pointed instrument made of iron. 2. ***இருப்புநாராசம்;*** iron rod.

*[இரும்பு + சலாகை.]*

**இரும்புச்சிந்தூரம்** *irumbu-c-cindūram,* பெ. (n.) ***அயச் சிந்தூரம் பார்க்க. இதைப் பலவீனத்திற்கும், மாத விடாய் நோய்களுக்கும், புழுக்களைக் கொல்லவும் பயன்படுத்துவதுண்டு;*** red oxide of iron - ferrus oxide alias ferric per oxidum alias F.rubizo. It is medicinally used as a tonic. (சா.அக.).

*[இரும்பு + (செந்தூரம்) சிந்தூரம்.]*

**இரும்புச்செப்பு** *irumbu-c-ceppu,* பெ. (n.) ***இரும்பா லாகிய செம்பு*** (சா.அக.); vessel.

*[இரும்பு + (செம்பு) செப்பு.]*

**இரும்புண்டநீர்** *irumbuṇḍa-nīr,* பெ. (n.) ***இரும்புண்ட நீரைப்போலா மென்பது பொதுவாக நோய் அகல்வ தைக் குறிக்கும்; இரும்புண்ட நீரானது மறுபடியும் தோன்றாவாறு போல் நோய்களும் மீண்டும் தோன் றாவாம்;*** water absorbed by heated iron. The disease absorbed by the system will just disappear as the water absorbed by heated iron. "இரும்பனன்று உண்ட நீரும்" (திவ்.திருக்குறுந்.13) (சா.அக.).

*[இரும்பு + உண்ட + நீர்.]*

**இரும்புத்துப்பு** *irumbu-t-tuppu,* பெ. (n.) **இரும்புத்துரு** (மூ.அ.) பார்க்க; iron rust. (செ.அக.).

*[இரும்பு + (துரு - துருப்பு) துப்பு.]*

**இரும்புத்துரு** *irumbu-t-turu,* பெ. (n.) ***மண்டூரம்;*** iron rust, ferri peroxidum. (செ.அக.).

*[இரும்பு + துரு.]*

**இரும்புநாக்கு** *irumbunākku,* பெ. (n.) ***அம்பின் கூரியமுனை;*** iron tongue, the sharp iron edge of an arrow.

ம. இரும்பு நாக்கு.

*[இரும்பு + நாக்கு.]*

**இரும்புநீற்றி** *irumbunīṟṟi,* பெ. (n.) ***எருக்கிலை;*** leaf of the madar plant. (சா.அக.).

*[இரும்பு + நீற்றி.]*

**இரும்புப்பாளம்** *irumbu-p-pāḷam,* பெ. (n.) ***இரும்புக் கட்டி;*** oblong mass of iron, as they come from the blast furnace, pig iron. (சா.அக.).

*[இரும்பு + பாளம்.]*

**இரும்புப்பெட்டி** *irumbu-p-peṭṭi,* பெ. (n.) ***உருக்கா லமைந்த பேழை;*** cash chest, iron safe. (செ.அக.).

ம. இரும்புப் பெட்டி.

*[இரும்பு + பெட்டி.]*

**இரும்புப்பொடி** *irumbu-p-poḍi,* பெ. (n.) ***அரப்பொடி*** (மூ.அ.); iron filings. (செ.அக.).

*[இரும்பு + பொடி.]*

**இரும்பு மலை** *irumbu-malai,* பெ. (n.) ***வடஅமெரிக்கா கண்டத்தில் உள்ள மெக்சிகோ நாட்டில் 640 அடி உயரமும் 4 சதுர கல் (மைல்) அகலமும் உள்ள மலை;*** iron mountain in Mexico. (அபி.சிந்.).

*[இரும்பு + மலை.]*

**இரும்புயிர்** *irumbuyir,* பெ. (n.) **இருப்புயிர்** (சீவக.3111, உரை) பார்க்க; see *iruppuyir.* (செ.அக.).

*[இரும்பு + உயிர்.]*

**இரும்புருக்கி** *irumburukki,* பெ. (n.) ***நத்தைச்சூரி, நத்தைமண்டலி;*** that which is capable of melting iron viz., butten weed, red water plant. (சா.அக.).

*[இரும்பு + உருக்கி.]*

**இரும்புருக்கு** *irumburukku,* பெ. (n.) ***எஃகு;*** steel. (சா.அக.).

*[இரும்பு + உருக்கு.]*

**இரும்புலி** *irumbuli,* பெ. (n.) ***துவரை;*** dhall. (ஆ.அக.).

*[இரும் + புலி.]*

**இரும்புளி** *irumbuḷi,* பெ. (n.) ***மரவகை*** (வின்.); tree whose fruit is sour and is used for curry. (செ.அக.).

*[இரும் + புளி.]*

**இரும்பை**[1] *irumbai,* பெ. (n.) **இருப்பை** (திருப்பு.105); South Indian mahua. (செ.அக.).

*[இரும் + இரும்பை.]*

**இரும்பை**[2] *irumbai,* பெ. (n.) 1. ***குடம்*** (பிங்.); water-pot. 2. ***பாம்பு*** (உரி.நி.); snake. (செ.அக.).

*[இரும் + பை.]*

**இரும்பொறை** *irum-poṟai,* பெ. (n.) ***சேரர் பட்டப் பெயர்களுள் ஒன்று*** (பதிற்றுப்.39.9); title of the Cēra kings. (செ.அக.).

*[இரும் + பொறை. இரும் = பெரிய. பொற்றை - பொறை = மண் மலை.]*

**இருமடங்கு** *irumaḍaṅgu,* பெ. (n.) 1. ***இரண்டு பங்கு;*** two portions or parts. 2. ***இரட்டித்த அளவு;*** doubled quantity. (ஆ.அக.).

*[இரண்டு - இரு + மடங்கு.]*

**இருமடி** *irumaḍi,* பெ. (n.) **இருமடங்கு** பார்க்க; see *irumaḍaṅgu.*

*[இரண்டு - இரு + மடி.]*

**இருமடியாகுபெயர்** *iru-maḍi-y-āgu-peyar,* பெ. (n.). ***இருமுறை மடிந்து ஆகி வரும் பெயர். ஆகுபெயர் வகைகளுள் ஒன்று;*** āgu-peyar of double transference; variety of metonymy, where in a word used fig. in one sense in the first instance is once again applied to signify another with which it bears a certain relation. Kār, meaning black used to signify a cloud is used again to connote the rainy season. (செ.அக.).

*[இரண்டு + மடி + ஆகு + பெயர். கார் நிகர் வண்கை என்புழிக், காரென்னும் நிறப்பெயர் அதனையுடைய மேகத்திற்காதலால் ஆகுபெயர். கார் வந்தது என்புழிக், காரென்னும் நிறப்பெயர் மேகத்திற்காகி மேகத்தின் பெயர் அது பெய்யும் பருவத்திற் காதலால் இருமடியாகுபெயர். (நன்.290 - காண்டி. உரை).]*

**இருமடியேவல்** *iru-maḍi-y-ēval,* பெ. (n.) ***பிறவினை யின்மேற் பிறவினை;*** double caus.verb as கற்பிப்பி. (செ.அக.).

*[இரண்டு - இரு + மடி + ஏவல்.]*

**இருமண்** *iru-maṇ,* பெ. (n.) ***மணற்களிமண்;*** sandy clay. (செ.அக.).

*[இரு + மண்.]*

**இருமரபு** *iru-marabu,* பெ. (n.) ***தாய்தந்தை வழிமுறை*** (திவா.); two fold ancestry, paternal and maternal. (செ.அக.).

*[இரண்டு - இரு + மரபு.]*

**இருமருந்து** *iru-marundu,* பெ. (n.) ***சோறும் தண்ணீரும்;*** two medicines. fig applied to rice and water as the mainstay of life. "இரு மருந்து விளைக்கு நன்னாட்டுப் பொருநன்". (புறநா.70-9) (செ.அக.).

*[இரண்டு - இரு + மருந்து.]*

**இருமல்** *irumal,* பெ. (n.) 1. ***செறுமுதல்*** (காசம்); cough, bronchitis. 2. ***ஆட்டுநோய்வகை***(M.C.D. [1887] 249); contagious disease of sheep. (செ.அக.).

ம. இருமல்; க. கெம்மு; தெ. செருமல்; பட. கெம்மலு.

*[இரு - இருமு (பெருகிய ஓசை எழுப்பு) - இருமு - இருமல்.]*

**இருமல்லி** *irumalli,* பெ. (n.) 1. ***சிறுமல்லி;*** jasmine (small). 2. ***பெருமல்லி;*** jasmine (big).

*[இரு + மல்லி.]*

**இருமனப்பெண்டிர்** *iru-mana-p-pendir,* பெ. (n.) ***பரத்தையர்;*** prostitutes. "இருமனப்பெண்டிருங் கள்ளும்" (குறள்.920) (செ.அக.).

*[இரண்டு - இரு + மனம் + பெண்டிர்.]*

**இருமனம்** *iru-manam,* பெ. (n.) 1. ***இரண்டகம்;*** double-mindedness. "இருமனப்பெண்டிரும் (குறள். 920). 2. ***துணிவின்மை;*** irresolution, indecision. "இருமனமுள்ளவன் தன் வழிகளிலெல்லாம் நிறையற்றவன்" (விவிலி.யாஞ்.1.8) (செ.அக.).

*[இரண்டு - இரு + மனம்.]*

**இருமா** *iru-mā,* பெ. (n.) ***பத்திலொரு பகுதியைக் (1/10) குறிக்கும் பின்னவெண் 'ஐ';*** fraction of 1/10.

ம. இருமா.

*[இரண்டு - இரு + மா. மா என்பது இருபதில் ஒரு பங்கு.]*

**இருமாவரை** *iru-mā-varai,* பெ. (n.) ***அரைக்கால்;*** fraction 1/8 being the sum of இருமா (1/10) and அரைமா (1/40). (செ.அக.).

*[இரண்டு - இரு + மா + அரை (மா) அஃதாவது இருபதில் இரண்டரை அல்லது அரைக்கால்.]*

**இருமான்** *irumān,* பெ. (n.) ***எலிவகை*** (இ.வ.); a species of rat. (செ.அக.).

ம. இருமான்.

*[இரு - இருமான். இரு - கரிய.]*

**இருமியுமிழ்தல்** *irumi-yumildal,* பெ. (n.) ***காரியுமிழ்தல்;*** act of coughing up and spitting out phlegm. (சா.அக.).

*[இருமு - இருமி (வி.எ.) + உமிழ்தல்.]*

**இருமு[1]-தல்** *irumu,* 8. செ.கு.வி. (v.i.) ***இருமல்;*** cough. "இருமி யிளைத்தீர்" (திவ்.பெரியதி.1,3,8) (செ.அக.).

க., பட. கெம்மு; தெ. செருமு.

*[இரு - இருமு. இருமுதல்.]*

**இருமு[2]** *irumu,* பெ. (n.) ***இருமல்;*** cough. "இருமிடைமிடைந்த சில சொல்" (புறநா.243,13) (செ.அக.).

பட. கெம்மலு.

*[இருமல் - இருமு.]*

**இருமுடகநில்லான்** *irumuḍaganillān,* பெ. (n.) ***கரிசலாங் கண்ணி;*** eclipse plant. (சா.அக.).

*[இரு + முடகம் + நில்லான்.]*

**இருமுட்டி** *irumuṭṭi,* பெ. (n.) ***இருவகைமுட்டி;*** two varieties of sticky mallow: 1. ***பேராமுட்டி;*** Ceylon sticky mallow. 2. ***சிற்றாமுட்டி;*** fragrant sticky mallow. (சா.அக.).

*[இரண்டு → இரு + முட்டி.]*

**இருமுடி** *iru-muḍi,* பெ. (n.) 1. ***இரண்டு கட்டுகள் ஒன்றாக இணைத்து உயர்த்தித்தூக்கும் வண்ணம் நடுவில் சேர்த்துக் கட்டிய பண்டம்;*** double-baggage with equipoised load. 2. ***மலைகளுக்கு வழிநடைப்பயணம் செல்வோர் தோளில் அல்லது தலையில் சுமந்து செல்லும் இருமுடிப் பண்டங்கள்;*** double-baggage carried either on head or on shoulders by those who go on a pilgrimage to the hills.

*[இரண்டு - இரு + முடி.]*

**இருமுடிக்கட்டு** *irumuḍi-k-kaṭṭu,* பெ. (n.) ***இருமுடி*** பார்க்க; see *irumuḍi*

**இருமுதுகுரவர்** *iru-mudu-kuravar,* பெ. (n.) ***தாய்தந்தையர்*** (சிலப்.16,67); parents. (செ.அக.).

*[இரண்டு - இரு + முது + குரவர்.]*

**இருமுதுமக்கள்** *irumudu-makkaḷ,* பெ. (n.) ***இருமுதுகுரவர்*** பார்க்க; see *irumudukuravar.* (ஆ.அக.).

*[இரண்டு - இரு - முது + மக்கள்.]*

**இருமுரடன்** *irumuraḍaṉ,* பெ. (n.) ***முரட்டுக்குணன்;*** ruffian, muscle man. (ஆ.அக.).

*[இரு (பெரிய) + முரடன்.]*

**இருமுள்ளூர்** *irumuḷḷūr,* பெ. (n.) ***மலையமான் திருமுடிக் காரியின் ஊர்;*** native place of Malaiyamāṉ Thirumuḍikkāri. "மாயிரு முள்ளூர் மன்னன்" (நற். 291-7) (பாண்டி.அக.).

**இருமுற்றிரட்டை** *iru-muṟṟiraṭṭai,* பெ. (n.) ***ஒரு செய்யுளில் ஓரடி முற்றெதுகையாய், மற்றையடி மற்றொரு முற்றெதுகையாய் வருவது*** (யாப்.வி.பக். 182); concatenation in which each of two successive liness of a stanza has identical initial letters in all its feet. (செ.அக.).

*[இரண்டு - இரு + முற்று + இரட்டை.]*

**இருமுறி** *iru-muṟi,* பெ. (n.) ***இருப்புமுறி என்னும் செடி;*** silvery-leaved indigo. (செ.அக.).

*[இருப்புமுறி - இருமுறி.]*

**இருமுறை** *iru-muṟai,* பெ. (n.) ***இரண்டு முறை;*** twice, two times. "ஒன்றிருமுறை யிருந்துண்ட பின்றை"; (புறநா.269-5) (பாண்டி.அக.).

*[இரண்டு - இரு + முறை.]*

**இருமூடம்** *iru-mūḍam,* பெ. (n.) ***தானாகவும் அறியாது பிறர் அறிவிக்கவும் அறியாத மூடத்தனம்*** (கொ.வ.); double stupidity, characterised by not knowing oneself and, in not listening to others' advice. (செ.அக.).

*[இரண்டு - இரு + மூடம்.]*

**இருமூடி** *irumūḍi,* பெ. (n.) 1. ***இரண்டு பிரிவாகப் பொருந்தியது;*** that which consists of two parts. 2. ***கும்பிடுகிளிஞ்சில்;*** shell consisting of two parts which can be opened and shut, bivalve. (சா.அக.).

*[இரண்டு - இரு + மூடி.]*

**இருமை**[1] *irumai,* பெ. (n.) 1. ***பெருமை*** (தொல்.சொல். 396,உரை); greatness, largeness, hugeness, eminence. 2. ***கருமை*** (சீவக.1171); darkness, blackness. (செ.அக.).

*[இரு - இருமை.]*

**இருமை**[2] *irumai,* பெ. (n.) 1. ***இருதன்மை;*** two fold state. "அருவதா யுருவா யிருமையாயுறை பூரணன்" (கந்தபு.ததீசிப்.57). 2. ***இருபொருள்;*** two things. 'இருமை வகை தெரிந்து' (குறள்.23). 3. ***இம்மை மறுமைகள்*** (கம்பரா.அயோத்.மந்திர.63); this birth and the future birth, this life and the life to come. (செ.அக.).

ம. இரும.

*[இரண்டு - இரு - இருமை.]*

**இருமை**[3] *irumai,* பெ. (n.) 1. ***துக்கம்;*** sorrow. 2. ***மகிமை;*** glory. 3. ***உள்ளும் புறமும்;*** in and out. (ஆ.அக.).

*[இரண்டு - இரு - இருமை.]*

**இருமை**[4] *irumai,* பெ. (n.) ***எருமை;*** buffalo.

கோத். இர்.

*[இரு[1] - இருமை.]*

**இருமையியற்கை** *irumai-y-iyaṟkai,* பெ. (n.) ***அணிவகையுள் ஒன்று;*** figure of speech. அஃது கூடுவதையும் கூடாததையும் கூடக் கூறுவது. (ஆ.அக.).

*[இருமை + இயற்கை.]*

**இருமொழி** *iru-moḻi,* பெ. (n.) ***இரண்டு வகைச் சொற்கள்;*** two kinds of words. "நல்ல பல்லோரிரு நன்மொழியே" (புறநா.85).

*[இரண்டு - இரு + மொழி.]*

**இருமோட்டதிரை** *irumōṭṭa-tirai,* பெ. (n.) ***கரிய பெரிய அலைகள்;*** large black waves "பிணங்கிரு மோட்டதிரை வந்தளிக்கும்" (கலித்.131).

*[இரு + (முகட்டு - மோட்டு) மோட்ட + திரை.]*

**இருமோட்டுவீடு** *iru-mōṭṭu-vīḍu,* பெ. (n.) ***மச்சுங் கூரையுமுள்ள வீடு*** (இ.வ.); thatched house with a small upper room. (செ.அக.).

*[இரண்டு - இரு + (முகட்டு) மோட்டு + வீடு.]*

**இருவகிர்ஈருள்** *iru-vagir-īrul,* பெ. (n.) ***இருபிளவாகிய ஈரல்;*** lever consisting of two parts "இருவகிர் ஈருளின் ஈரிய துயல்வர" (அகம்.294-8) (சங்.இலக். சொற்.).

*[இரு + வகிர் + ஈருள்.]*

**இருவகைத்தொட்டி** *iruvagaittoṭṭi,* பெ. (n.) ***இரண்டு வகைத் தொட்டிச் செடி;*** two kinds of 'Thotti' plant viz. 1. ***சாத்தொட்டிச் செடி;*** Ceylon caper. 2. ***செந்தொட்டி,*** climbing nettle mercury. (சா.அக.).

*[இரண்டு - இரு + வகை + தொட்டி.]*

**இருவங்கம்** *iruvaṅgam,* பெ. (n.) ***இரண்டுவகை ஈயம்;*** two kinds of lead. 1. ***வெள்வங்கம் அல்லது வெள்ளீயம்;*** white lead or powder. 2. ***கருவங்கம் அல்லது காரீயம்;*** black lead or graphite. (சா.அக.).

*[இரண்டு - இரு + வங்கம்.]*

**இருவணைக்கட்டை** *iru-v-aṇai-k-kaṭṭai,* பெ. (n.) ***வண்டியின் முகவணை;*** cart-driver's seat. (செ.அக.).

*[இரண்டு - இரு + அணை + கட்டை.]*

**இருவயிற்பற்று** *iru-vyiṟ-paṟṟu,* பெ. (n.) ***இரண்டுவகைப்பற்று;*** 1. ***அகப்பற்று*** 2. ***புறப்பற்று;*** two kinds of desires one of the mind and the other of the world. (ஆ.அக.).

*[இரண்டு → இரு + வயின் + பற்று.]*

**இருவர்** *iruvar,* பெ. (n.) ***இரண்டு பேர்;*** two persons.

ம. இருவர்; க. இர்வர், இர்பர், இப்பர்; தெ. இருவுரு; குட. இப்ப; து. இர்வர், இர்வெரு; கோத. இத்தர்; நா. இத்தர்; பர். இருப்; கட. இருள்; கோண். ஈற்று; குரு. கிர்ப்; மால். இவ்வர்.

**இருவரிசி** *iruvariśi,* பெ. (n.) 1. ***கார் போக வரிசி;*** hazy leaved psoralea. 2. ***வெட்பாலரிசி;*** medicinal echitis. (சா.அக.).

*[இரண்டு - இரு + அரிசி.]*

**இருவருந்தபுநிலை** *iruvarun-tabu-nilai,* பெ. (n.) ***எயிலின் அகத்தும் புறத்தும் நின்ற வேந்தரிருவரும் பொருது வீழ்ந்ததைக் கூறும் புறத்துறை*** (தொல்.பொ. 68); theme describing the death of both the besieged and the besieging kings. (செ.அக.).

*[இருவரும் + தபு + நிலை.]*

**இருவல்நொருவல்** *iruval-noruval,* பெ. (n.) 1. ***இடிந்துமிடியாது முள்ள அரிசி முதலியன;*** rice inadequately pounded. 2. ***நன்றாக மெல்லப் படாத உணவு;*** food not-well masticated. (செ.அக.).

*[இருவல் + நொருவல் - இருவல்நொருவல்.]*

**இருவாட்சி** *iruvāṭci,* பெ. (n.) ***செடிவகை*** (திவ்.பெரி யாழ்.2,7,10); tuscan jasmine. (செ.அக.).

*[இரு + வாய்ச்சி - இருவாய்ச்சி - இருவாட்சி.]*

**இருவாட்டித்தரை** *iru-vāṭṭi-t-tarai,* பெ. (n.) ***மணலுங் களியுமான நிலம்;*** soil composed of sand and clay. (செ.அக.).

*[இரண்டு - இரு + வாட்டி - இருவாட்டி + தரை. வாட்டு -வாட்டி. இருவாட்டி - இருவகை. ஒ.நோ. பக்கவாட்டு -பக்கப்பகுதி. பகுதிப்பொருள் வகைமைப்பொருளையும் சுட் டும்.]*

**இருவாடி** *iruvāḍi,* பெ. (n.) ***இருவாட்சி;*** tuscan jasmine. (செ.அக.).

*[இரண்டு - இரு + வாடி. ஒருகா. வாட்சி - வாடி.]*

**இருவாம்** *iruvām,* பெ. (pron.) ***நாமிருவரும்;*** both of us; we two. "இருவாமையனை யேத்துவாம்" (கலித். 43.) (செ.அக.).

*[இரண்டு - இரு + ஏம் - இருவேம் - இருவாம்.]*

**இருவாய்க்கட்டு** *iru-vāy-k-kaṭṭu,* பெ. (n.) ***உடற்கழி வுக்கட்டு*** (மலசலக்கட்டு); suspension or retention of urine and facal matter. (stools) (சா.அக.).

*[இரண்டு - இரு + வாய் + கட்டு.]*

**இருவாய்க்குருவி** *iru-vāy-k-kuruvi,* பெ. (n.) ***ஒரு வகை மலைப் பறவை;*** concave-casqued hornbill, a mountain bird having harsh voice. (செ.அக.).

*[இரு + வாய் + குருவி. இரு - பெரிய, கரிய.]*



இருவாய்க்குருவி

**இருவாய்க்குழல்** *iruvāy-k-kuḻal,* பெ. (n.) ***இரட்டைக் குழல் துமுக்கி;*** double barrelled gun. (சேரநா.).

ம. இருவாய்க்குழல்.

*[இரண்டு - இரு + வாய் + குழல்.]*

**இருவாய்ச்சி**[1] *iruvāycci,* பெ. (n.) ***இருவாட்சி;*** tuscan jasmine. (செ.அக.).

ம. இருவாச்சி; க. இருவந்திகெ.

*[இரு + வாய்ச்சி.]*

**இருவாய்ச்சி**[2] *iruvāycci,* பெ. (n.) ***மரம் செதுக்கும் தச்சுக்கருவி;*** carpenter's tool. (செ.அக.).

*[இரு - (பெரிய, அகன்ற) + (வாய்த்தி-) வாய்ச்சி = அகன்ற (வாயுடைய) விளிம்புடைய இரும்புக்கருவி.]*

**இருவாரம்** *iru-vāram,* பெ. (n.) ***மேல்வாரமும், குடிவார மும்;*** two shares, viz., the landlord's and the tenant's share of the crop. (செ.அக.).

*[இரண்டு → இரு + வாரம்.]*

**இருவாரு** *iru-vāru,* பெ. (n.) 1. ***ஒருவகை வெள்ளரி;*** a kind of cucumber. 2. ***கொம்மட்டி;*** a kind of bitter gourd. (சா.அக.).

**இருவி** *iruvi,* பெ. (n.) ***தினை முதலியவற்றின் அரிதாள்;*** stubble of grain, esp. of Italian millet. "இருவி வேய்ந்த குறுங்காற் குரம்பை" (குறிஞ்சிப்.153) (செ.அக.).

ம. இருவி.

*[இரு (கரிய) → இருவி.]*

**இருவிடரகம்** *iruviḍaragam,* பெ. (n.) ***பெரிய முழைஞ் சிடம்;*** cavern. "நீடிரு விடரகஞ் சிலம்பக் கூய்" (கலித்.38).

*[இரு (பெரிய) + விடர் + அகம்.]*

**இருவில்** *iru-vil,* பெ. (n.) ***கரியவொளி;*** darkening, as of the countenance. "வாண்முகத் தோடிய விருவிலும்" (சீவக.339).

*[இரு (கரிய) + வில்.]*

**இருவிள** *iruviḷa,* பெ. (n.) 1. ***பனையோலை*** (தொல். எழுத்.216.உரை); palm leaf. 2. ***வேணாட்டகத்து ஓர் ஊர்;*** town in Vēṇāḍu. 3. ***கருவூரினிடத்து ஒருசேரி;*** slum in Karuvūr. (செ.அக.).

*[இருவிளை - இருவிள (கொ.வ.).]*

**இருவினை** *iru-viṉai,* பெ. (n.) ***நல்வினை தீவினை கள்;*** two classes of moral attributes, the good and the evil. "இருள்சேர் இருவினையும்" (குறள்.5.) (செ.அக.).

ம. இருவின.

*[இரண்டு → இரு + வினை.]*

**இருவினையொப்பு** *iru-viṉai-y-oppu,* பெ. (n.) ***அற னும் அறக்கடையும் சமனுறச் செய்துவிடுகை*** (சி.போ.பா.8,1 பக்.362, புதுப்); state of the soul in which it takes the attitude of perfect equanimity towards both meritorious and sinful deeds. (செ.அக.).

*[இரண்டு - இரு + வினை + ஒப்பு.]*

**இருவீடு** *iruvīḍu,* பெ. (n.) ***ஒருவகை மரம்*** (நாநார்த்த.); a kind of tree. (செ.அக.).

*[இரு + வீடு.]*

**இருவீர்** *iruvīr,* பெ. (n.) ***இருவர்;*** two persons. "இருவீர் வேறலியற்கையு மன்றே" (புறம்.45-6).

*[இரண்டு → இரு + ஈர் = இருவீர்.]*

**இருவு-தல்** *iruvu-,* 5. செ.குன்றாவி. (v.t.) ***இருக்கச் செய்தல்;*** cause to be or abide. "என்னெஞ்சிரு வியவம் பொற்றிருவடி" (காஞ்சிப்பு.தழுவ.145) (செ.அக.).

*[இரு → இருவு (இருந்து) - தல்.]*

**இருவேரி** *iruvēri,* பெ. (n.) ***வெட்டிவேர்;*** cuscuss grass. "நறை நானமு நாறிருவேரியும்" (பெருங்.இலா வாண.18,47.) (செ.அக.).

ம. இருவேரி.

*[இரு + வேரி.]*

**இருவேல்** *iru-vēl,* பெ. (n.) ***கீழ்நாட்டு மரவகை;*** Burmah iron wood. (செ.அக.).

ம. இருவுள்; க. இத்ரள்.

*[இரு + வேல்.]*

**இருவேலி** *iruvēli,* பெ. (n.) ***இருவேரி*** (திவா.) பார்க்க; see *iruvēri.* (செ.அக.).

*[இருவேரி - இருவேலி.]*

**இருவேறுமண்டிலம்** *iruvēṟu-maṇḍilam,* பெ. (n.) ***ஞாயிறும் திங்களும்;*** sun and moon. "இருவேறுமண் டிலத்திலக்கம் போல" (பரி-13-8).

*[இரு + வேறு + மண்டிலம்.]*

**இருள்** *iruḷ,* பெ. (n.) 1. ***இருட்டு;*** darkness. 2. ***கறுப்பு;*** dark colour, swarthiness, blackness. "இரும்பிடி மேஎந்தோ லன்ன விருள்சேர்பு" (மதுரைக்.634). 3. ***மயக்கம்;*** mental delusion, clouded state of mind. "பொறிகட்கிருளீயு ஞாலத்து" (பு.வெ.9,41). 4. ***அறியாமை;*** spiritual ignorance concerning God. "உலக மிருணீங்க விருந்தவெந்தை" (சீவக.2812). 5. ***துன்பம்;*** trouble, difficulty. "அச்சற் றேம மாகியிரு டீர்ந்து" (பதிற்றுப்.90,2). 6. ***நிரய விசேடம்*** (குறள்.121); region of darkness, which is one of many hells. 7. ***பிறப்பு;*** birth. "இருணீங்கி இன்பம் பயக்கும்" (குறள்.352). 8. ***குற்றம்;*** fault, blemish. "இருடீர் பொறையும்" (ஞானா. ஆசிரியர்துதி). 9. ***மரகதக்குற்றம் எட்டனுள் ஒன்றா கிய கருகல்*** (சிலப்.14,184); flaw in emeralds, one of eight marakata-k-kuṟṟam. 10. ***மலம்*** (சி.சி.பாயி.50); corruption affecting the soul. 11. ***யானை*** (வின்.); elephant. 12. ***இருவேல்*** பார்க்க; Burmah iron wood. 13. ***இருள் மரம்*** பார்க்க (பெருங்.உஞ்சைக்.41,33); iron wood of Ceylon.

ம., க. இருள்; தெ. இருளு; து. இர்னு; பட. இரு (செ.அக.).

*[இல் → இர் → இரு → இருள்.]*

**இருள்(ளு)-தல்** *iruḷ,* 16 செ.கு.வி. (v.i.) 1. ***ஒளிமங்கு தல்; இருட்டாதல்; வானம் மேகத்தால் மறைத்து இருட்டாதல்;*** to become dark, as the sky over-cast, to become dim, to become obscure. 2. ***கறுப்பாதல்;*** to be black in colour. "இருண்ட கல்லையும்" (கம்பரா. வரைக்காட்சி). 3. ***அறியாமை கொள்ளுதல்;*** to be darkened, as the mind. "இருளாத சிந்தையராய்" (திவ். இயற்.3,19) (செ.அக.).

ம. இருளுக.

*[இரு → இருள் - இருளுதல்.]*

**இருள்அளை** *iruḷ-aḷai,* பெ. (n.) ***இருண்டகுகை;*** dark cave. "ஏகல் அடுக்கத் திருளளைச் சிலம்பின்" (அகநா.52).

*[இருள் + அளை.]*

**இருள்கொள்நாகம்** *iruḷ-koḷ-nāgam,* பெ. (n.) ***இருண்ட நிறமுடைய யானை;*** black elephant. "கொ டிபிணங்கரில இருள் கொள் நாகம்" (அகநா.73) (சங்.இலக்.சொற்.).

*[இருள் + கொள் + நாகம். நாகு - நாகம் = பெண் யானை.]*

**இருள்பாலை** *iruḷ-pālai,* பெ. (n.) ***ஏழிலைப்பாலை;*** (nels); seven leaved poon tree. (செ.அக.).

*[இருள் + பாலை.]*

**இருள்புகா** *iruḷ-pugā,* பெ. (n.) ***இருள்முகா*** பார்க்க; see *iruḷmugā.* (சா.அக.)

**இருள்மதி** *iruḷmadi,* பெ. (n.) ***இருள்உவா;*** new moon "எண்மதிநிறை உவா இருண்மதிபோல" (பரி.11-37).

*[இருள் + மதி.]*

**இருள்மயக்கம்** *iruḷmayakkam,* பெ. (n.) ***மூடல், சிறிது இருள் ஆதல், அந்திமயக்கம்;*** gloom, twilight. (செ.அக.).

ம. இருள்மயக்கம்.

*[இருள் + மயக்கம்.]*

**இருள்மரம்** *iruḷ-maram,* பெ. (n.) ***ஒருவகைப் பெரிய மரம்;*** ironwood of Ceylon. (செ.அக.).

*[இருள் + மரம்.]*

**இருள்மருகி** *iruḷ-marugi,* பெ. (n.) ***கருங்குவளை;*** blue lotus. (சா.அக.).

*[இருள் + மருகி.]*

**இருள்மருது** *iruḷ-marudu,* பெ. (n.) ***கருமருது;*** black murdah-Terminalia tomentosa (typica). (சா.அக.).

*[இருள் + மருது.]*

**இருள்மூலி** *irul-muli,* பெ. (n.) 1. ***இருள்செடி*** பார்க்க; see *irulsedi,* 2. ***கருங்காலி;*** black catechu. (சா.அக.).

*[இருள் + மூலி.]*

**இருள்வட்டம்** *irul-vattam,* பெ. (n.) ***எழுநிரயத் தொன்று*** (திவா); hell of darkness, one of elu-narakam. (செ.அக.).

*[இருள் + வட்டம்.].*

**இருள்வலி** *irul-vali,* பெ. (n.) ***ஞாயிறு*** (பிங்.); sun, as the dispeller of darkness. (செ.அக.).

*[இருள் + வலி.]*

**இருள்விடுசெடி** *irul-vidu-sedi,* பெ. (n.) ***காமாலை யைப் போக்கும் ஒரு வகை மூலி;*** herb capable of curing jaundice. (சா.அக.).

*[இருள் + விடு + செடி.]*

**இருள்வெளி** *irul-veli,* பெ. (n.) ***இருட்டும் வெளிச்ச மும்;*** darkness and brightness. (சா.அக.).

*[இருள் + வெளி.]*

**இருள்வேல்** *irul-vēl,* பெ. (n.) ***கீழ்நாட்டு மரவகை;*** Burmah iron wood. (செ.அக.).

*[இருள் + வேல்.]*

**இருளடி-த்தல்** *irul-adi,* 4 செ.கு.வி. (v.i) ***இருளால் தீங்குண்டாதல்;*** to act malignantly, as the powers of darkness esp. on infants. (செ.அக.).

*[இருள் + அடி.]*

**இருளடை-தல்** *irul-adai,* 2 செ.கு.வி. (v.i.) ***பொலி வின்றியிருத்தல்;*** to be void of beauty or charm, being steeped in darkness. 'வீடு இருளடைந்திருக்கிறது' (செ.அக.).

*[இருள் + அடை.]*

**இருளப்பன்** *irul-āppan,* பெ. (n.) ***பாண்டிநாட்டில் கொண்டாடப்பட்ட தெய்வம்;*** folk deity in Pandya country. (அபி.சிந்).

*[இருள் + அப்பன்.]*

**இருளன்** *irulan,* பெ. (n.) 1. ***ஒருசார் வேட இனத்தான்;*** member of a primitive tribe of hunters inhabiting the Nilgiris and the Eastern Plains, so called from being dark in complexion. 2. ***ஒரு சிறு தெய்வம்;*** folk deity. 3. ***வரிக்கூத்துவகை*** (சிலப்.3,13,உரை); masquerade dance. (செ.அக.).

ம. இருளன்; கோத. எர்ல்.

*[இருள் + அன்.]*

**இருளாயி** *irul-āyi,* பெ. (n.) ***பாண்டிநாட்டில் கொண்டாடப்பட்ட பெண் தெய்வம்;*** folk goddess. (அபி.சிந்.).

*[இருள் + ஆயி.]*

**இருளி[1]** *iruli,* பெ. (n.) ***வெட்கம்*** (யாழ்.அக.); shame. (செ.அக.).

*[ஒருகா. இருளி - இருளி.]*

**இருளி[2]** *iruli,* பெ. (n.) 1. ***பன்றி*** (திவா.); pig. 2. ***கருஞ்சீரகம்*** (மலை.) பார்க்க; black cumin. 3. ***பெரிய சிலந்தி;*** a kind of spider. (சேரநா.) 4. ***ஈராவு என்னும் மரம்;*** tree. (சேரநா.).

ம. இருளி.

*[இருள் - இருளி.]*

**இருளிச்செவி** *iruli-c-cevi,* பெ. (n.) ***அமுக்கிரா*** (தைலவ.தைல.32); winter cherry.

ம. இருளிச் செவி.

*[இருளி + செவி.]*

**இருளுலகம்** *irul-ulagam,* பெ. (n.) ***நிரையம்;*** hell, region of darkness. "இம்மூன்று மிருளுலகஞ் சேராத வாறு" (திரிகடு.90). (செ.அக.).

*[இருள் + உலகம்.]*

**இருளுவா** *irul-uvā,* பெ. (n.) ***காருவா*** (அமாவாசை) (பரிபா.11,37,உரை); new moon. (செ.அக.).

*[இருள் + உவா.]*

**இருளை** *irulai,* பெ. (n.) ***நாணம்*** (பிங்.); bashfulness, shyness, delicacy. (செ.அக.).

*[இருளி - இருளை - இருளை.]*

**இரெக்கை** *irekkai,* பெ. (n.) ***சிறகு;*** feather. (ஆ.அக.).

*[இறக்கை - இரெக்கை (கொ.வ.).]*

**இரெட்டி** *ireddi,* பெ. (n.) ***ஓர் இனம்;*** a kind of caste. (ஆ.அக.).

*[இரட்டு - இரட்டர் - இரட்டியர் - இரெட்டி.]*

**இரெப்பை** *ireppai,* பெ. (n.) 1. ***கண்மடல்;*** eyelid. 2. ***இரப்பை;*** lashes.

*[இறப்பை - இரெப்பை (கொ.வ.).]*

**இரேக்கு** *irēkku,* பெ. (n.) 1. ***தங்கத்தாள்*** (இ.வ.); gold leaf, tinsel. 2. ***பூவிதழ்*** (இ.வ.); petal of a flower 3. ***மென்துகில்;*** gauze. (செ.அக.).

தெ. ரேகு.

*[இறகு - இறக்கு - றேக்கு - ரேக்கு - இரேக்கு.]*

**இரேழி** *ireli,* பெ. (n.) ***இடைகழி*** (கொ.வ.); corridor between the entrance and the next inner door of an Indian house. (செ.அக.).

*[இடைகழி - டேகழி - ரேழி - இரேழி.]*

**இரை[1]-தல்** *irai-,* 2 செ.கு.வி. (v.i.) ***ஒலித்தல்;*** to sound; to roar, as the sea; to rumble, as a crowd; to wamble, as the bowels; to whiz, as birds when flying. (செ.அக.).

ம. இர.

*[இல் - இர் (ஒலிக்குறிப்பு) - இரை.]*

**இரை**[2]**-த்தல்** *irai,* 2 செ.கு.வி. (v.i.) 1. ***ஒலித்தல்*** (பாரத.வெளிப்பாட்டு.5); to cry out, as in anger. 2. ***சீறுதல்;*** to hiss and dart forth, as a snake. "இரைக்கின்ற பாம்பினை" (பதினொ.காரைக்.திருவீரட்.7). 3. ***மூச்சு வாங்குதல்;*** to pant, breathe hard; to palpitate, as from running; to wheeze, as an asthmatic. "ஈண்டு துன்பத் திரைத்திட வோடினான்" (உபதேசகா.அயமுகி.55). 4. ***வீங்குதல்;*** to puff up; to swell, as the body sometimes does after the use of sulphur. (செ.அக.).

ம. இரய்க்குக.

*[இல் - இர் - இரை. இரைதல் - இரைத்தல்.]*

**இரை**[3] *irai,* பெ. (n.) 1. ***ஒலி;*** sound, roar, splash, as of a running river. "இரையுந் தெழுதூநீர் வையை" (திருவிளை.பரிநரி.57). 2. ***பேச்சு;*** speech. (செ.அக.).

*[இல் - இர் - இரை.]*

**இரை**[4] *irai,* பெ. (n.) 1. ***நிலம்;*** earth. 2. ***நீர்;*** water. 3. ***கள்;*** toddy.

*[இரை = ஒலித்தல், பசித்தல், பசி நீக்குதற்கான உணவும் நீரும்.]*

**இரை**[5] *irai,* பெ. (n.) 1. ***பறவை விலங்கு முதலியவற்றின் உணவு*** (குறள்.946,உரை); food of birds, beasts, and of other inferior animals; prey. 2. ***உண்ட உணவு*** food eaten; nutriment in the system. 3. ***நாக்குப் பூச்சி*** (இ.வ.); intestinal worm, as interfering with digestion.

**தெ.** எர; **க.** எரெ; **ம.** இர; **கோத.** எர்; **பிரா.** இரக்; *Skt.* irā (any drinkable fluid, food or refreshment).

*[இரைத்தல் = ஒலித்தல், பசித்தல், பசிதணித்தற்குரிய உணவு.]*

**இரைக்குடர்** *irai-k-kuḍar,* பெ. (n.) ***இரைக்குடல்*** பார்க்க; see *irai-k-kuḍal.*

*[இரை + (குடல்) - குடர்.]*

**இரைக்குடல்** *irai-k-kuḍal,* பெ. (n.) ***இரைப்பை*** (வின்.); stomach.

*[இரை + குடல்.]*

**இரைக்குடற்புளிப்பு** *irai-k-kuḍar̠-pulippu,* பெ. (n.) ***உண்ட உணவு சரியாகச் செரியாமையினால் இரைக்குடலுக்குள் ஏற்படும் புளிப்பு;*** acidity in the stomach. (சா.அக.).

*[இரை + குடல் + புளிப்பு.]*

**இரைக்குழல்** *irai-k-kuḻal,* பெ. (n.) ***உணவு செல்லுங் குழாய்*** (இங்.வை); oesophagus, gullet. (செ.அக.).

*[இரை + குழல்.]*

**இரைகொள்ளி** *irai-koḷḷi,* பெ. (n.) 1. ***இரையொதுக்கும் பறவை மிடறு;*** crop in birds, craw. 2. ***பெருந்தீனி தின்போன்*** (வின்.); glutton. (செ.அக.).

*[இரை + கொள்ளி.]*

**இரைச்சல்**[1] *iraiccal,* பெ. (n.) 1. ***ஒலி;*** sound, noise, clamour, hubbub, uproar, hullabaloo, vociferation, din. "இரைச்சலவ்லூ ரெடுத்திட" (இராமநா.யுத்.24). 2. ***தொடக்கம்;*** starting. (ஆ.அக.).

ம. இரைச்சல்.

*[இரை - இரைதல் - இரைத்தல் - இரைச்சல்.]*

**இரைச்சல்**[2] *iraiccal,* பெ. (n.) ***வீக்கம்;*** to puff up. (ஆ.அக.).

*[இரை - இரைதல் - இரைத்தல். இரைச்சல் = ஒலித்தல், பெருகுதல்.]*

**இரைசல்** *iraišal,* பெ. (n.) 1. ***மாணிக்கக் குற்ற வகை;*** (கொ.வ.); flaw, as of a precious stone. 2. ***சுரசுரப்பு;*** roughness, as of a brick, pourousness 'அவ்வூர்ச் செங்கல்கள் இரைச்சலாயிருக்கு' (கொ.வ.).

*[இரை - இரைசல்.]*

**இரைதல்** *iraidal,* பெ. (n.) 1. ***ஒலித்தல்;*** sounding, making a rumbling noise. 2. ***வீங்குதல்;*** swelling. (சா.அக.).

*[இரை - இரைதல்.]*

**இரைதேடுதல்** *irai-tēḍutal,* பெ. (n.) ***இரைதேர்தல்*** பார்க்க; see *iraitērdal.* (ஆ.அக.).

*[இரை + தேடுதல்.]*

**இரைதேர்தல்** *irai-tērdal,* தொ.பெ. (vbl.n.) ***உணவு தேடுதல்;*** roam or fly about in search of food, as animals and birds. "இரைதேர்வண் சிறுகுருகே" (திவ்.திருவாய்.1,4,5). (செ.அக.).

*[இரை + தேர்.]*

**இரைதேறு-தல்** *irai-tēṟu,* 7 செ.கு.வி. (v.i) ***உணவு செரியாமறறங்குதல்*** (வின்.); to remain undigested, as food in the stomach. (செ.அக.).

*[இரை + தேறு.]*

**இரைநீர்** *irai-nir,* பெ. (n.) ***கடல்;*** sea. (ஆ.அக.).

*[இரை + நீர்.]*

**இரைப்பற்று** *irai-p-paṟṟu,* பெ. (n.) ***செரியாத உணவு*** (யாழ்ப்.); undigested food lodged in the system. (செ.அக.).

*[இரை + பற்று.]*

**இரைப்பு**[1] *iraippu,* பெ. (n.) 1. ***இரைச்சல்;*** buzzing, din, hullabaloo. 2. ***மூச்சுவாங்குகை;*** hard breathing. wheezing, panting, shortness of breath. 3. ***ஈளை நோய்;*** asthma.

ம. இரைப்பு.

*[இரை - இரைப்பு.]*

**இரைப்பு**[2] *iraippu,* பெ. (n.) ***மோகம்;*** infatuation. "புதுப்பிணத் திரைப்புமிக்கு" (தக்கயாகப்.129) (செ.அக.).

*[இரை → இரைப்பு.]*

**இரைப்பு**[3] *iraippu,* பெ. (n.) ***கரப்புப்பூச்சி;*** cockroach. (செ.அக.).

*[இரை → இரைப்பு.]*

**இரைப்புகாசம்** *iraippu-kāšam,* பெ. (n.) ***நுரையீரலின் மூச்சுக் குழல்கள் சுருங்குவதால் மூச்சுவிட முடியாமை, நெஞ்சிலிரைச்சல், இருமல் முதலிய குணங்களைக் காட்டுமோர் நோய்;*** a disease marked by attacks of paroxysm with wheezing, coughing and a sense of constriction due to spasmodic contraction of the bronchi in the lungs. (சா.அக.).

*[இரைப்பு + காசம்.]*

**இரைப்புகாப்பாசி** *iraippu-kā-p-pāši,* பெ. (n.) ***கொடிப் பாசி;*** moss, creeping in water. (சா.அக.).

*[இரைப்பு + புகா + பாசி.]*

**இரைப்புமாந்தம்** *iraippu-māndam,* பெ. (n.) ***செரியாமை நோய்வகை*** (மாந்தவகை) (சீவரட்); kind of convulsion in children. (செ.அக.).

*[இரைப்பு + மாந்தம்.]*

**இரைப்பூச்சி** *irai-p-pūcci,* பெ. (n.) ***நாக்குப்பூச்சி*** (Tinn); worms in the stomach. (செ.அக.).

*[இரை + பூச்சி.]*

**இரைப்பெட்டி** *irai-p-petti,* பெ. (n.) 1. ***பறவை இரையொதுக்கும் மிடற்றுப்பை*** (யாழ்ப்.); crop of birds, craw. 2. ***பிச்சை வாங்கும்பெட்டி;*** begging bowl. (செ.அக.).

*[இரை + பெட்டி.]*

**இரைப்பெலி** *iraippeli,* பெ. (n.) ***இழுப்புண்டாக்கும் எலி*** (வின்.); a species of rat whose bite is supposed to cause shortness of breath. (செ.அக.).

*[இரைப்பு + எலி.]*

**இரைப்பை** *irai-p-pai,* பெ. (n.) ***இரைக்குடல்;*** stomach. (செ.அக.).

*[இரை + பை.]*

**இரைப்பையசைவு** *iraippai-yašaivu,* பெ. (n.) ***உட்கொண்ட உணவு செரிப்பதற்காகக் குடலுக்கியற்கையாக அமைந்த வோர் அசைவு;*** natural movement during which the stomach digests the food. (சா.அக.).

*[இரை + பை + அசைவு.]*

**இரைப்பை வீக்கம்** *iraippai-vīkkam,* பெ. (n.) ***மாடுகளுக்கு வயிறுப்பிக்கொள்ளுமோர் நோய்;*** disease in cattle. (சா.அக.).

*[இரை + பை + வீக்கம்.]*

**இரைமீள்(ட்)-த(ட)ல்** *irai-mīl,* 16 செ.கு.வி. (v.i.) ***அசைபோடுதல்;*** chew the cud, ruminate. (செ.அக.).

*[இரை + மீள்.]*

**இரையெடு-த்தல்** *irai-y-edu-,* 4 செ.கு.வி. (v.i.) 1. ***பறவை, பாம்பு முதலியன உணவு கொள்ளுதல்;*** pick up food, as birds; to catch prey, as snakes. 2. ***உணவு தின்னுதல்;*** to eat food, usu. said of dogs and cattle. 3. ***அசைபோடுதல்;*** to chew the cud. (செ.அக.).

*[இரை + எடு.]*

**இல்**[1]**-தல்** *il,* 8 செ.குன்றாவி. (v.t.) 1. ***குத்துதல்;*** to pierce, to make a hole. 2. ***பிளத்தல்;*** to cut into two, divide. 3. ***கீழே விழுதல்;*** to fall.

*[உல் → இல்.]*

**இல்**[2]**-தல்** *il,* 13 செ.கு.வி. (v.i.) 1. ***பொருந்துதல்;*** to fit, to adhere. 2. ***இணைதல், கூடுதல்;*** to join.

*[உல் → இல்.]*

**இல்**[3]**-தல்** *il,* 13 செ.கு.வி. (v.i.) 1. ***மெல்லியதாதல்;*** to become tender. 2. ***இளையதாதல்;*** to become young.

*[உல் → இல்.]*

**இல்**[4]**-தல்** *il,* 13 செ.கு.வி. (v.i.) 1. ***நடத்தல்;*** to walk. 2. ***இயங்குதல்; செல்லுதல்;*** to go.

*[இல்[1] → இல்[4] = காலூன்றி நடத்தல்.]*

**இல்**[5] *il,* பெ. (n.) 1. ***இடம்*** (பிங்.); place. 2. ***வீடு;*** house, home. "ஈனமா யில்லிருந் தின்றி விளியினும்" (நாலடி.198). 3. ***இல்லறம்;*** domestic life. "இல்வாழ்வா னென்பான்" (குறள்.41). 4. ***மனைவி;*** wife. "புகழ்புரிந் தில்லி லோர்க்கில்லை" (குறள்.59). 5. ***மருதமுல்லை நிலங்களின் தலைவியர்*** (திவா.); housewife of the families belonging to agricultural lands and forest lands. 6. ***குடி;*** family. "இற்பிறந்தார்" (குறள்.951). 7. ***ஓரை*** (பிங்.); constellation, zodiacal sign. 8. ***தேற்றாங் கொட்டை;*** clearing-nut. "இல்லா மலகமிரண்டு மபின் றால்" (இராசவைத்.45) (செ.அக.).

ம. இல்; க. இல், இல்லு; தெ. இல்லு; து. இல்லு; கோண். இல், இந்த்; பர். இல், பொதி (கூரை); நா. எல்ல; கொலா. எல்ல; கூ. இடு; குவி. இல்லு.

*[இல் - துளைத்தற் கருத்துவேர். இல் = பாறைப்பிளவு. குகையிருப்பிடம், மலைபிளப்பு இருப்பிடம், இயற்கையான குகை போன்ற வாழிடம், தோண்டியெடுக்கப்பட்ட பக்கப்பள்ளம்.]*

**இல்**[6] *il,* பெ. (n.) 1. ***இன்மை*** (நாலடி.52); non existence. 2. ***சாவு*** (சூடா.); death. - இடை. (part). ***ஓர் எதிர்மறை யிடைநிலை;*** negative sign.' செய்திலேன்.' (செ.அக.).

*[உல் - இல்[1]. இல் - துளைத்தல், குழித்தல், உள்ளீடு இல்லாமற் செய்தல்.]*

**இல்**[7] *il,* பெ. (n.) 1. ***கருமை;*** blackness, darkness. 2. ***பெருமை, பெருக்கம்;*** largeness.

*[உல் → இல்.]*

**இல்**[8] *il,* இடை. (part.) 1. ***ஐந்தாம் வேற்றுமை உருபு*** (நன்.299); sign of abl. as in 'காக்கையிற் கரிது

களாப்பழம்.' 2. ***ஏழாம் வேற்றுமை யுருபு*** (நன்.302); sign of the loc. as in மணியில் ஒளி. 3. ***வினையெச்ச விகுதி;*** if, suffix of verbs used in a conjunctive sense. "இருவர் தந்நாளும் பெறில்" (விதான.கடிமண.17). 4. ***தொழிற்பெயர் பின்னொட்டு;*** suffix of verbal nouns. (எ.-டு.) 'வெயில்', 'துயில்'. (செ.அக.).

ம. இல்; க. ஒளகெ, ஒள்; தெ. லோ, இல்லு; து. ஒலை; படை. ஒகெ; இரு. இல்லெ; துட. ஒன்; கொலா. எல்ல; கோண். இல்; கூ. இடு; குவி. இல்லு, இல்லு.

*[இல் = இடப்பொருளில் ஏழாம் வேற்றுமை உருபாயிற்று. இல் - குழித்தற் பொருளிலிருந்து தவிர்த்தல் பொருள் சுட்டி ஐந்தன் உருபாயிற்று. விட என்னும் ஐந்தன் சொல்லுருபு தவிர்த்தல் பொருளில் ஆளப்பட்டிருத்தல் காண்க. இல் = வாழிடம். குறிப்பிட்ட பண்புக்கு அப்பண்பியே இருப்பிட மாதலானும் உலகப்பெயர்களும் அப்பெயர்த் தன்மைகளுக்கு இருப்பிட மாதலானும் "இல்" இடப் பெயரீறு ஆயிற்று.]*

**இல்**[9] *il*, பெ. (n.) ***இது;*** this.

க. இல்லி.

*[இ - இல். இகரம் அண்மைச் சுட்டெழுத்து, லகர வீறு சேர்ந்து அண்மைச்சுட்டுச்சொல்லாயிற்று. கன்னடத்தில் இதே வடிவில் வழக்கூன்றியுள்ளது. தமிழில் இல் → இது எனத் திரிந்தது.]*

**இல்பொருள்** *il-poruḷ*, பெ. (n.) ***இல்லாதது*** (அசத்து); that which does not exist. "பிரமப் பொருளாவது உள்பொருளுமன்று இல்பொருளுமன்று" (சி.சி.6,5, சிவஞா.) (செ.அக.).

*[இல் + பொருள்.]*

**இல்பொருளுவமை** *il-poruḷ-uvamai*, பெ. (n.) ***உலகில் இல்லாத ஒரு பொருளை உவமையாக்குவது*** (குறள்.273,உரை); figure of speech, a simile in which things non-existent are handled. (செ.அக.).

*[இல் + பொருள் + உவமை.]*

**இல்பொலி மகடூஉ** *il-poli-magaḍūu*, பெ. (n.) ***மனைவி;*** wife. "நீணெடும் பந்தருண் முறை யூட்டும் இற்பொலி மகடூஉப் போல" (புறநா.331-9) (பாண்டி.அக.).

*[இல் + பொலி + மகடூஉ. மகள் - மகடு - மகடூஉ.]*

**இல்லக்கிழத்தி** *illa-k-kiḻatti*, பெ. (n.) ***மனைவி;*** wife, mistress of the house. (செ.அக.).

*[இல் - இல்லம் + கிழத்தி.]*

**இல்லகம்** *il-l-agam*, பெ. (n.) ***வீடு;*** house, home. "மனையாளை யில்லா தானில்லகம்" (நாலடி.361) (செ.அக ).

*[இல் + அகம்.]*

**இல்லடை**[1] *il-l-aḍai*, பெ. (n.) 1. ***அடைக்கலப் பொருள்*** (பிங்.); anything lodged in a house for security. 2. ***அடைமானப் பொருள்;*** pledged article. 3. ***பண்ட சாலை*** (ஆ.அக.); store-room. (செ.அக.).

*[இல் + அடை.]*

**இல்லடை**[2] *il-l-aḍai*, பெ. (n.) ***ஒட்டடை;*** cobweb, adhering to the inner side of the roof.

க. இல்லண; ம. இல்லட்டக்கரி.

*[இல் + அடை.]*

**இல்லடைக்கலம்** *il-l-aḍai-k-kalam*, பெ. (n.) ***இல்லடை***[1] *-1* பார்க்க; see *illaḍai-1*. (செ.அக.).

*[இல் + அடை + கலம்.]*

**இல்லடைப்புல்** *illaḍai-p-pul*, பெ. (n.) ***முயற்புல்;*** cough grass-cynoden dactylon. (சா.அக.).

*[இல் + அடை + புல்.]*

**இல்லத்தலைவன்** *illa-t-talaivan*, பெ. (n.) 1. ***வீட்டின் தலைவன்;*** head of the family. 2. ***அறிவுடையோன்;*** wiseman, the prudent. (அபி.சிந்.).

*[இல்லம் + தலைவன்.]*

**இல்லத்துப் பிள்ளை** *illattu-p-piḷḷai*, பெ. (n.) ***ஈழவர்*** (G.Tn.D.144); title assumed by people of the Īḻavar caste.

*[இல்லம் + அத்து + பிள்ளை.]*

**இல்லது** *illadu*, பெ. (n.) ***இயற்கை*** (பிரகிருதி) (திவ்.திருவாய்.1,2,4); non-spirit matter.

*[இல் → இல்லது.]*

**இல்லதுநிரப்பல்** *illadunirappal*, பெ. (n.) ***இல்லாத பொருளைத் தேடி நிரப்புதல்;*** securing the unavailable. "இல்லது நிரப்பலாற்றா தோரினும்" (புறநா.203); (பாண்டி.அக.).

*[இல் → இல்லது + நிரப்பல்.]*

**இல்லம்** *illam*, பெ. (n.) 1. ***வீடு;*** house, home. "இல்லங்கடோறு மெழுந்தருளி" (திருவாச.7,17). 2. ***தேற்றா*** (அகநா.4) பார்க்க; clearing-nut tree. 3. ***மனைவி;*** wife. (செ.அக.).

ம. இல்லம்; க. இல்லு, இல்; குட. இல்லவெண் (உறவினன்); துளு. இல்லு; தெ. இல்லு; ஆத். வில்லும்.

*[இல் + அம் - இல்லம்.]*

**இல்லர்** *illar*, பெ. (n.) ***இல்லிடத்தர்;*** people of the house. "அன்னையு அத்தனும் இல்லராயாய் நாண" (கலித்.115-8).

*[இல் + அவர் = இல்லவர். இல்லவர் → இல்லர்.]*

**இல்லல்** *illal*, பெ. (n.) ***நடக்கை*** (பிங்.); walking. (செ.அக.).

*[இல்[4] - குழித்தல், செலுத்துதல், கடத்தல், நடத்தல். இல் + அல் = இல்லல்.]*

**இல்லவர்** *illavar*, பெ. (n.) 1. ***இல்லறத்தவர்;*** people following domestic life. "இல்லவர் ஒழுக்கம் போல் இருங்கழி மலர் கூம்ப" (கலித்.148-6). 2. ***இல்லில் உள்ளார்;*** people of the house. "இல்லவரறித லஞ்சி

மெல்லென" (அகநா.34-16). 3. ***மகளிர்;*** women, housewives.

*[இல் + அவர் - இல்லவர்.]*

**இல்லவழிக்கார்** *illavaḻi-k-kār,* பெ. (n.) ***உறவினன், ஒரே குலத்தோன்;*** relative, people of the same class. (சேரநா.).

ம. இல்லவழிக்கார்.

*[இல்லம் + வழிக்கார் (வழியர்).]*

**இல்லவள்** *illavaḷ,* பெ. (n.) ***மனைவி*** (குறள்.53); wife, mistress of the house. (செ.அக.).

*[இல் + அவள் - இல்லவள்.]*

**இல்லவன்** *illavaṉ,* பெ. (n.) 1. ***ஏழ்மையன்;*** poor man. "இல்லவ ரொழுக்கம் போல்" (கலித்.148). 2. ***கணவன்;*** husband. (ஆ.அக.) (செ.அக.).

*[இல் + அவன் - இல்லவன்.]*

**இல்லவை** *illavai,* பெ. (n.) 1. ***இல்லாப் பொருள்;*** the unavailable, non existent. 2. ***மனைப்பொருள்;*** house-hold things. (ஆ.அக.).

*[இல் + அவை - இல்லவை. இல் = குழித்தற் பொருளில் உள்ளீடு நீக்கிய இன்மைப்பொருள் குறித்தது.]*

**இல்லறத்தின் புலி** *illa-aṟattiṉ-puli,* பெ. (n.) ***பச்சைக் கல்*** (மரகதம்); emerald. (சா.அக.).

*[இல்லறத்தின் + புலி.]*

**இல்லறம்** *il-l-aṟam,* பெ. (n.) 1. ***இல்வாழ்க்கை;*** domestic life of the house holder, opp. to துறவறம். 2. ***இல்வாழ்தலின் அறம்*** (திவா.); duties incumbent on a house holder. (செ.அக.).

*[இல் (வீடு) + அறம் - இல்லறம். இல்லறத்திலிருந்து செய்யும் அறம்]*

**இல்லாக்காட்டில்** *illā-k-kāṭṭil,* கு.வி.எ. (adv.) ***இல்லாவிட்டால்*** (pond.); if not, otherwise. (செ.அக.).

ம. இல்லாக்கால்.

*[இல்லாக்கால் - இல்லாக்காலில் - இல்லாக்காலத்தில் - இல்லாக்காத்தில் - இல்லாக்காட்டில் - இல்லாக்காட்டி (கொ.வ.).]*

**இல்லாக்குடி** *illā-k-kuḍi,* பெ. (n.) ***வறுமையான குடும்பம்;*** destitute family. (செ.அக.).

*[இல் - இல்லா + க் + குடி.]*

**இல்லாக்குற்றம்** *illā-k-kuṟṟam,* பெ. (n.) 1. ***ஏழ்மை;*** poverty. 2. ***இடுவந்தி*** (pond); calumny. (செ.அக.).

*[இல் + ஆ + க் + குற்றம்.]*

**இல்லாங்காட்டி** *illāṅ-gāṭṭi,* கு.வி.எ. (adv.) ***இல்லாக் காட்டில்*** (இ.வ.) பார்க்க; see *illākāṭṭil* (செ.அக.).

*[இல்லாக்கால் - இல்லாக் காலத்தில் - இல்லாக்காத்தில் - இல்லாக்காட்டி - இல்லாங்காட்டி (கொ.வ.).]*

**இல்லாட்டி** *illāṭṭi,* பெ. (n.) ***மனைக்கிழத்தி*** (குறள். 201); wife. (சங்.இலக்.சொற்).

*[இல் + (ஆள் + தி) ஆட்டி.]*

**இல்லாண்முல்லை** *illāṇ-mullai,* பெ. (n.) 1. ***பாசறைத் தலைவனை இல்லாள் நினையும் புறத்துறை;*** literary theme of a faithful wife thinking about her husband during his absence from home or in a military camp. 2. ***தலைவி கணவனை வாழ்த்தி விருந்தோம்பும் இல்லின் மிகுதியைப் புகழும் புறத்துறை*** (பு.வெ.10, முல்லை.5); literary theme of a wife's loving adoration of her husband and her praise of his unstinting hospitality as a house holder. (செ.அக.).

*[இல்லாள் + முல்லை.]*

**இல்லாண்மை** *il-l-āṇmai,* பெ. (n.) ***குடியினையாளுந் தன்மை;*** (குறள்.1026) ability to support one's family and manage domestic affairs. (செ.அக.).

*[இல் + ஆண்மை = ஆளுந்திறம்.]*

**இல்லாத்தனம்** *illā-t-taṉam,* பெ. (n.) ***வறுமை;*** poverty, destitution. (செ.அக.).

*[இல் + ஆ + த் + தனம். தன்மை - தனம்.]*

**இல்லாததும் பொல்லாததும்** *illādadum-pollādadum,* பெ. (n.) ***பொய்யும் தீங்கு விளைப்பதும்*** (கொ.வ.); falsehood and slander. (செ.அக.).

*[இல்லாதது + உம் + பொல்லாதது + உம்.]*

**இல்லாதபொய்** *illāda-poy,* பெ. (n.) ***முழுப்பொய்*** (கொ.வ.); downright-lie, utter falsehood. (செ.அக.).

*[இல் + ஆ + த + பொய்.]*

**இல்லாதவன்** *illādavaṉ,* பெ. (n.) ***வறியவன்;*** one utterly destitute, an impecunious person. (செ.அக.).

*[இல் + ஆ + த - இல்லாத + அவன்.]*

**இல்லாது** *illādu,* கு.வி.எ. (adv.) ***இல்லாமல்;*** without.

*[இல்லது → இல்லாது (மு.தா.336) இல்லா + அது - இல்லாது.]*

**இல்லாப்புலம்பு** *illāp-pulambu,* பெ. (n.) ***இல்லாத தனிமை;*** loneliness "நாமில்லாப் புலம்பாயின் நடுக்கஞ் செய் பொழுதாயின்" (கலித்.27-23) (சங்.இலக்.சொற்).

*[இல் + ஆ + ப் + புலம்பு.]*

**இல்லாப் புளுகு** *illā-p-puḷugu,* பெ. (n.) ***பெரும்பொய்;*** utter falsehood.

*[இல்லா + புளுகு.]*

**இல்லாமை** *illāmai,* பெ. (n.) 1. ***இன்மை;*** non-existence. 2. ***ஏழ்மை;*** poverty, want. "இல்லாமை சொல்லி" (அபிரா.54) (செ.அக.).

ம. இல்லாய்ம; க. இல்லவெ, இல்லத, இல்லததன்; தெ. லேமி.

*[இல் + ஆ + மை.]*

**இல்லாவாட்டி** *illā-v-ātti,* பெ. (n.) ***வறியவள்*** (Tinn); destitute woman. (செ.அக.).

*[இல்லா + (ஆள் + தி) ஆட்டி.]*

**இல்லாள்** *illāḷ,* பெ. (n.) 1. ***மனைவி*** (குறள்.52); wife, mistress of the house. 2. ***மருதமுல்லை நிலங்களின் தலைவியர்*** (திவா.); term used to designate a lady of rank in towns or in forest-pasture tracts. 3. ***ஏழைப்பெண்;*** poor girl (செ.அக.).

*[இல் + ஆள்.]*

**இல்லாளன்** *il-l-ālaṉ,* பெ. (n.) 1. ***இல்லவன்;*** householder. 2. ***கணவன்;*** husband, ruler of the home. "இல்லாளன் வைக்கவென" (பெரியபு.காரைக்.20) (செ.அக.).

*[இல் + ஆளன்.]*

**இல்லாளி** *il-l-āḷi,* பெ. (n.) ***குடும்பத்தான்*** (சைவச. பொது.376); householder, one who has entered on the order of a householder. (செ.அக.).

*[இல் + ஆளி.]*

**இல்லான்** *illāṉ,* பெ. (n.) 1. ***வறியவன்;*** poorman; one in want. "இல்லானை யில்லாளும் வேண்டாள்". (நல்வ.34). 2. ***கணவன்;*** husband. (ஆ.அக.) (செ.அக.).

*[இல் + ஆன்.]*

**இல்லி** *illi,* பெ. (n.) 1. ***துளை;*** orifice, as of the teat. 2. ***தேற்றா*** (மூ.அ.) பார்க்க; clearing-nut tree. 3. ***வால் மிளகு;*** tail pepper, 4. ***கடற்கரையோரங்களில் வாழும் புழு;*** small molluse found on the seashore. 5. ***வெற்றிலை;*** betel leaf-piper betel. 6. ***பெண்ணுறுப் பிற் குறையுடையவள்;*** woman wanting in or defective of genital organs in her body. 7. ***ஒருவகை மூங்கில்;*** a bamboo. (சா.அக.).

ம. இல்லி.

*[உல் → இல் → இல்லி (வே.க.87) இல் - துளைத்தற்கருத்து வேர். இல் - இல்லி.]*

**இல்லிக்கண்ணன்** *illi-k-kaṉṉaṉ,* பெ. (n.) 1. ***மிகச் சிறிய கண்ணுடையான்*** (இ.வ.); one who has eyes which appear like two small holes in the head, one with very tiny eyes. 2. ***கூச்சக்கண்ணுள்ளவன்*** (வின்.); one whose eyes are sensitive to light and who, therefore, contracts his eyes to a small aperture when facing light. (செ.அக.).

*[இல் - இல்லி + கண்ணன்.]*

**இல்லிக்கயிறு** *illi-k-kayiṟu,* பெ. (n.) ***சன்னமான கயிறு;*** very thin variety of coir. (சேரநா.).

ம. இல்லிக்கயர்.

*[இல்லி + கயிறு.]*

**இல்லிக்காது** *illi-k-kādu,* பெ. (n.) ***சிறு துளைக்காது*** (வின்.); bored ear with a small hole, opp to தொள்ளைக்காது. (செ.அக.).

*[இல் - இல்லி + காது.]*

**இல்லிகம்** *illigam,* பெ. (n.) ***சிறுகீரை;*** pig's greens - Amaranthus compestris. (சா.அக.).

**இல்லிடம்** *il-l-iḍam,* பெ. (n.) 1. ***வீடு*** (பிங்.); house, abode. 2. ***ஊர்*** (பிங்.); town, village. (செ.அக.).

[இல் + இடம்]

**இல்லிப்பூச்சி** *illippūcci,* பெ. (n.) ***கடற்கரையில் காணப்படும் பூச்சி;*** seashore insect.



இல்லிப்பூச்சி

**இல்லிமூக்கு** *illi-mūkku,* பெ. (n.) ***சில்லி மூக்கு;*** easily bleeding nose, epistaxis. (செ.அக.).

*[இல்லி + மூக்கு.]*

**இல்லியல்பு** *illiyalbu,* பெ. (n.) ***குடிப்பிறப்பிற்கு உரிய இயல்பு;*** nature of family people. "ஆயர் மகளிர்க்கு இருமணங்கூடுதல் இல்லியல்பன்றே" (கலித்.114-21).

*[இல் + இயல்பு.]*

**இல்லிருந்தமைவோர்** *illirund-amaivōr,* பெ. (n.) ***இல்லின்கண் வாளா அமைந்திருப்பவர்;*** - people settled in a family "இல்லிருந் தமைவோர்க் கில்லென் றெண்ணி" (அகநா.231-3).

*[இல் + இருந்து + அமைவோர்.]*

**இல்லிறை** *illiṟai,* பெ. (n.) ***வீட்டின் இறவாணம்;*** eaves of a house.

*[இல் + இறை.]*

**இல்லுறைகல்** *il-l-urai-kal,* பெ. (n.) ***அம்மிக்கல்;*** mashing stone, domestic utensil. "இல்லுறைகல்லின் ... செங்கால் பிடித்து" (கல்லா-18) (செ.அக.).

*[இல் + உறை + கல்.]*

**இல்லுறைதெய்வம்** *illurai-teyvam,* பெ. (n.) ***வீட்டுத் தெய்வம்;*** deity of a house. "இல்லுறை தெய்வ மன்னார்" (சீவக.1095) (செ.அக.).

*[இல் + உறை + தெய்வம்.]*

**இல்லெலி** *il-l-eli,* பெ. (n.) ***வீட்டெலி;*** house-rat, mus decumanus."இல்லெலி பார்த்து"(சீவக.2985) "இல் லெலி மடிந்த தொல்சுவர் வரைப்பிற்" (புறநா.211-19) (செ.அக.).

*[இல் + எலி.]*

**இல்லெழுவயலை** *illalu-vayalai,* பெ. (n.) ***மனையில் முளைத்த வயலைக் கொடி;*** a kind of creeper growing around the house. "இல்லெழு வயலை ஈற்று ஆ தின்றென" (நற்.179-1) (பாண்டி.அக.).

*[இல் + எழு + வயலை.]*

**இல்லெனல்** *il-l-enal,* பெ. (n.) 1. ***சாவு*** (பிங்.); death. 2. ***இல்லாமல் செய்தல்;*** becoming extinct. 3. ***இல்லை யென்கை*** (பிங்.); negating existence. (செ.அக.).

*[இல் + எனல்.]*

**இல்லை** *illai,* பெ. (n.) ***உண்டென்பதன் எதிர்மறை;*** no. இல், இல்லை என்பன, உள், உண்டு என்னும் வினைகட்கு எதிர்மறையாம். (செ.அக.) "உள்" என் னும் வினை மலையாளத்தில், பழமொழிகளில் இன்றும் வழங்குகின்றது.

**ம.** இல்ல; **க.** இல்ல; **தெ.** லே, லேது; **து.** இச்சி, இஞ்சி; **குட.**, **பட.**, **இரு.** இல்லை; **கொர.** இல்ல; **கோத.** இல்; **பர்.** சில; **கோண்.** கில்லெ; **ஆத்.** இல்ல.

*[இலது → லேது. இல் → லே(தெ) - இலக்கணப்போலி (metathesis) லே → னே → னை → நை (இந்தி) = இல்லை.]*

*O.G.* ni, *Goth.* ni. *A.s.* ne. *M.E.* Ice - nei. Dan - net, E.nay,no.

அல் → அன் → ன. *Skt.* -na.

*[இல் + ஐ.]*

**இல்லை செய்-தல்** *illai-cey,* 1 செ.குன்றாவி. (v.t.) ***மறுத்தல்;*** to deny. 'இல்லை செய்யாதே இசை கையிறே' (திவ்.திருப்பா.15,வ்யா) (செ.அக.).

*[இல்லை + செய்.]*

**இல்லையா-தல்** *illai-y-ā-,* 6 செ.கு.வி. (v.i.) ***செத்து விடுதல்;*** to be no more; to die. "இல்லையாயின னுன்மக னின்றென" (கம்பரா.இராவணன்சோ.3) (செ.அக.).

*[இல்லை + ஆதல்.]*

**இல்லொடுவரவு** *illodu-varavu,* பெ. (n.) ***குடிப்பிறப்பு;*** high birth; noble parentage. "இளமையும் வனப்பு மில் லொடு வரவும்" (பெருங்.உஞ்சைக்.36,89) (செ.அக.).

*[இல் + ஒடு + வரவு.]*

**இல்லொழுக்கம்** *il-l-olukkam,* பெ. (n.) ***இல்லறம்;*** life of a house holder; family life. "கூறுமில்லொழுக்கந்தன் னை" (கந்தபு.மார்க்கண்டேய.33).

*[இல் + ஒழுக்கம்.]*

**இல் வழக்கு** *il-valakku,* பெ. (n.) 1. ***பொய்வழக்கு;*** false or untenable plea or contention. 2. ***இல்லதனை இல்லையென்கை;*** categorical denial. "முயற்கோடின் றில் வழக்கே" (சி.சி.பர.சௌத்.10) (செ.அக.).

*[இல் + வழக்கு.]*

**இல்வழங்காமை** *il-valangāmai,* பெ. (n.) ***புடை பெயர்ந்து நடவாமை;*** inability to walk. "இல்வழங்கா மையிற் கல்லென வொலித்து" (புறநா.320-9) (சங்.இலக்.சொற்.).

*[இல் + வழங்காமை.]*

**இல்வாழ்க்கை** *il-vālkkai,* பெ. (n.) ***இல்லறத்தில் வாழ்கை*** (குறள்.5,அதி.); domestic life; the order of domestic life. (செ.அக.).

*[இல் + வாழ்க்கை.]*

**இல்வாழ்வான்** *il-vālvān,* பெ. (n.) ***இல்லறத்தான்;*** householder. "இல்வாழ்வா னென்பான்" (குறள்.41) (செ.அக.).

*[இல் + வாழ்வான்.]*

**இல**[1] *ila,* பெ. (n.) ***இலவு*** பார்க்க; red flowering silk-cotton tree. "இலவ லர்ப் பஞ்சிப் பாதத்து" (சீவக.264) (செ.அக.).

*[இல் - இல. (வே.க.16).]*

**இல**[2] *ila,* பெ. (n.) ***ஏடியென்னும் பொருளுள்ள விளிப்பெயர்;*** always in the voc. case; used in ancient times in addressing a woman in an intimate manner "எவனில குறுமக ளியங்குதி" (அகநா.12). (செ.அக.).

*[இல் - இல.]*

**இலக்கணக் கருமம்** *ilakkana-k-karumam,* பெ. (n.) ***இயல்புணர்த்தும் மெய்க்குறி, முகக்குறி முதலாயின*** (பெருங்.உஞ்சைக்.38,292); descriptive marks or qualities. (செ.அக.).

*[இலக்கணம் + கருமம்.]*

**இலக்கணக்கொத்து** *ilakkana-k-kottu,* பெ. (n.) ***17-ஆம் நூற்றாண்டில் சுவாமிநாத தேசிகர் எழுதிய இலக்கண நூல்;*** treatise on grammar by Suvāminada-Dēsigar, 17th c. (செ.அக.).

*[இலக்கணம் + கொத்து.]*

**இலக்கணச்சிதைவு** *ilakkana-c-cidaivu,* பெ. (n.) ***வழுவாய் வழங்குஞ்சொல்;*** irregular usage of a word. (ஆ.அக.).

*[இலக்கணம் + சிதைவு.]*

**இலக்கணச்சுழி** *ilakkaṇa-c-culi,* பெ. (n.) ***நற்சுழி*** (வின்.); auspicious curve or curvature in the lines of the body, in the hair of horses, and in cattle generally. (செ.அக.).

*[இலக்கணம் + சுழி.]*

**இலக்கணச்சொல்** *ilakkaṇa-c-col,* பெ. (n.) ***இலக்கண வழியால் வரும்சொல்; இயற்சொல், செஞ்சொல்*** (நன்.267); word that is regularly formed, and is part of the legitimate vocabulary, one of three iyaibu. vaḻakku. (ஆ.அக.).

*[இலக்கணம் + சொல்.]*

**இலக்கண நூல்** *ilakkaṇa-nūl,* பெ. (n.) ***இலக்கணத்தைப் பற்றிக் கூறும் நூல்;*** treatise on grammar. (செ.அக.).

*[இலக்கணம் + நூல்.]*

**இலக்கணப்போலி** *ilakkaṇa-p-pōli,* பெ. (n.) ***இலக்கணமுடையது போல் தொன்று தொட்டு வழங்குஞ் சொல்*** (நல்.267); words which, though not strictly grammatical, have, nevertheless, by long usage secured unquestioned admission into the standard dialect and are, on that account, accepted to be as good as 'ilakkaṇam -uḍaiyatu; one of three 'iyalpu - vaḻakku.' (செ.அக.).

*[இலக்கணம் + போலி.]*

**இலக்கணம்** *ilakkaṇam,* பெ. (n.) 1. ***சிறப்பியல்பு*** (வேதா.சூ.20); definition, accurate description. 2. ***இயல்பு;*** quality, property, attribute, characteristic. 3. ***அடையாளம்;*** sign, symbol, distinctive mark. 4. ***அழகு;*** elegance, symmetry, comeliness, beauty. 5. ***ஐந்து இலக்கணம்;*** grammar, consisting of five parts, viz. எழுத்திலக்கணம், சொல்லிலக்கணம், பொருளிலக்கணம், யாப்பிலக்கணம், அணியிலக்கணம். 6. ***நூன்மொழி யொழுங்கு, அதைக்கூறும் நூல், சிறந்த நடைக்கு எடுத்துக்காட்டாக அல்லது கற்றோர் பின்பற்றும் இலக்காகக் கூறப்பெறும் மொழியமைதி;*** style of writing a mature work of literature etc. (செ.அக.).

**இலக்கணம் என்பதற்குப் பாவாணர் காட்டும் விளக்கம்:**

ஆரியர் இந்தியாவிற்குட் புகுமுன்னரே, தமிழுக்கு இலக்கணம் வகுக்கப்பட்டிருந்ததனாலும், வேறெம் மொழியிலுமில்லாத பொருளிலக்கணம் தமிழுக்கிருத்தலாலும்,

''கண்ணுதற்பெருங் கடவுளுங் கழகமோ டமர்ந்து
பண்ணுறத் தெரிந் தாய்ந்தவிப் பசுந்தமிழ் ஏனை
மண்ணிடைச்சில இலக்கண வரம்பிலா மொழிபோல்
எண்ணிடைப்படக் கிடந்ததா எண்ணவும் படுமோ.''

என்று பரஞ்சோதியார் கூறியதற்கேற்ப இலக்கண வரம்பிற் சிறந்த மொழி தமிழேயாதலாலும், இலக்கணத்தைத் தனிப்படச் சுட்ட வேறு தமிழ்ச் சொல்லின்மையாலும், இயல் என்னுஞ் சொல் ஒரு பொருளின் இயல்பையே குறித்தலாலும், இலக்கியத்தைக் குறிக்க இயல் என்னுஞ் சொற்கு இனமான தொன்று மின்மையாலும், இலக்கணம் இலக்கியம் என்னும் சொற்கள் தூய தென்சொற்களே யென்று தெளிக.

லக்ஷண, லக்ஷ்ய என்னும் வடசொற்கள், இலக்கண விலக்கியத்தைக் குறியாமல், குறி (அடையாளம்) என்னும் பொருளையும் அதன் வழிப் பொருள்களையுமே குறித்தலாலும், வடமொழியில் இலக்கணத்தைக் குறிப்பது 'வ்யாகரணம்' என்னும் சொல்லாதலாலும்; இலக்கணம் இலக்கியம் என்னுஞ் சொற்களின் பகுதியான இலக்கு என்னுஞ் சொற்கு அடிப்படையும் உயிர் நாடியுமான இகரம் வடசொற்களில் இன்மையாலும், அவை தென்சொற்கு மூலமன்மை யறிக.

இனி, குறி யென்னும் பொருள் இருமொழிச் சொற்கட்கும் பொதுவாயிருத்தலாலும், தென் சொற்கள் இயற்சொற்களாயும் வடசொற்கள் திரிசொற்களாயுமிருப்பதாலும், வடசொற்கட்குத் தென்சொற்களே மூலம் என்பது பெறப்படும்.

எழுதுதல் என்னும் பொருளில், இலக்கு என்னும் தென்சொல் வடமொழியில் 'லிக்' என்று திரியும். இலக்கு என்னுஞ் சொல் மிகப் பழைமையானதாதலால், அதன் பகுதி இன்று இழுத்தற் கருத்தை வெளிப்படையாய் உணர்த்தவில்லை. குமரிநாடும் தொன்னூலும் பல பழஞ்சொற்களும் மறைந்து போனமையும் இதற்குக் காரணமாம். (மு.தா.329,330).

*[இலக்கு - இலக்கணம்.]*

**இலக்கணமுறை** *ilakkaṇa-muṟai,* பெ. (n.) ***இலக்கண நெறி;*** grammatical norm. (ஆ.அக.).

*[இலக்கணம் + முறை.]*

**இலக்கண வழு** *ilakkaṇa-vaḻu,* பெ. (n.) ***இலக்கணப் பிழை;*** grammatical error. (செ.அக.).

*[இலக்கணம் + வழு.]*

**இலக்கண விளக்கச்சூறாவளி** *ilakkaṇa-viḷakka-c-cūṟāvaḷi,* பெ. (n.) ***சிவஞான முனிவர் 18ஆம் நூற்றாண்டில் எழுதிய ஓர் இலக்கணநூல்;*** treatise on Tamil grammar written by Civañāṉa-Muṉivar, 18th c. in refutation of the Ilakkaṇa-viḷakkam. (செ.அக.).

*[இலக்கணம் + விளக்கம் + சூறாவளி.]*

**இலக்கண விளக்கம்** *ilakkaṇa-viḷakkam,* பெ. (n.) ***வைத்தியநாத தேசிகர் 17ஆம் நூற்றாண்டில் எழுதிய ஐந்திலக்கணமும் கொண்ட ஒரு நூல்;*** treatise on Tamil grammar in its five parts, by Vaittiyanāta-Tēcigar, 17th c. (செ.அக.).

*[இலக்கணம் + விளக்கம்.]*

**இலக்கணை** *ilakkaṇai,* பெ. (n.) ***ஒரு பொருளைக் காட்டற்கு உரிய சொல்லை மற்றொரு பொருட்குத் தந்து உரைப்பது*** (நன்.269.விருத்.). secondary significative capacity of a word, of three kinds. viz; விட்ட விலக்கணை, விடாதவிலக்கணை, விட்டும் விடாத விலக்கணை. (நன்.269.விரு.) (செ.அக.).

*[இலக்கு + அணை.]*

**இலக்கம்**[1] *ilakkam,* பெ. (n.) ***வெளிச்சம்;*** brightness, light. ''எல்லே யிலக்கம்'' (தொல்.சொல்.271) (செ.அக.).

*[இலக்கு + அம்.]*

**இலக்கம்**[2] *ilakkam,* பெ. (n.) 1. ***குறிப்பொருள்;*** target, butt, aim. ''இலக்க முடம் பிடும் பைக்கு'' (குறள்.627). 2. ***நூறாயிரம்;*** one lakh, 100,000. ''இலக்கத் தொன்ப தின்மர்'' (கந்தபு.திருவவதார.129). 3. ***எண்;*** number, digit. ''அநந்தமென்று சொல்வதே... கணைக் கிலக்கம்'' (கந்தபு.சிங்கமு.386). 4. ***எண்குறி;*** numerical figure.

"குறியிலக்கமெழுதே" (தைலவ.பாயி.15) (செ.அக.).

*[இல் - இலக்கு - இலக்கம்.]*

**இலக்கமடை-த்தல்** *ilakkam-adai-* 3 செ.கு.வி. (v.i.) ***எப்படிக்கூட்டினும் மொத்த எண் ஒன்றேயாகும்படி எண்களைச் சதுரங்களில் அடைத்தல்*** (வின்.); to enclose numbers in squares in such a manner that in whatever way they are added the total shall be the same, a device used also for magical purposes. (செ.அக.).

*[இலக்கம் + அடை.]*

**இலக்கமிடு-தல்** *ilakkam-idu-,* 18 செ.குன்றாவி. (v.t.) ***கணக்கிடுதல்*** (வின்.); count, reckon, compute, allot numbers as to pages. (செ.அக.).

*[இலக்கம் + இடு.]*

**இலக்கர்**[1] *ilakkar,* பெ. (n.) ***நூறாயிரவர், இலக்க மென்னுந் தொகையினர்*** (கந்தபு.சதமுகன்வ.15); multitude, numbering around 1,00,000. (செ.அக.).

*[இலக்கு + அர்.]*

**இலக்கி-த்தல்** *ilakki-,* 11 செ.குன்றாவி. (v.t.) ***உரு வரைதல்;*** to draw as a sketch on a canvas. "இவ்வுருவு நெஞ்சென்னுங் கிழியின் மேலிருந் திலக்கித்து" (சீவக.180) (செ.அக.).

*[இலக்கு → இலக்கி - இலக்கித்தல் (மு.தா.329).]*

**இலக்கிதம்** *ilakkidam,* பெ. (n.) ***குறிக்கப்பட்டது;*** that which is marked, indicated or characterised by. "பேசும் பொருளுக் கிலக்கிதமாம்" (திருவாச.48.7). (செ.அக.).

*[இலக்கு - இலக்கிதம்.]*

**இலக்கியம்** *ilakkiyam,* பெ. (n.) 1. ***இலக்கண மமைந்தது;*** thing defined. "இலக்கியமாம் பொருளில்" (வேதா.சூ.20.). 2. ***எடுத்துக்காட்டு;*** example from classical writings to illustrate rule of grammar, or the different meanings of a word or an expression. "ஏற்றப் படாதன வின்னிசைச் சிந்திற் கிலக்கியமே" (காரிகை. செய்.5,உரை). 3. ***ஆன்றோர் நூல்;*** classical writings which form the basis for inductively framing the rules of grammar, literary works. 4. ***குறி;*** mark, butt, "தாரணை மனோவியாபாரமின்றி யிலக்கியத்திற் சாரச் செய்தல்." (பிரபோத.44,19). (செ.அக.).

*[இலக்கு + இயம்.]*

பாவலன், இலக்கணம் வழுவாத முறையில் தான் எடுத்துக் கூறக்கருதும் இலக்கை, நால்வகைப்பாவினத்தில் ஏதேனும் ஒருவகையில் சொற்சுவை, பொருட்சுவை பொருந்த, அணிகள் பல அமைத்துப் பாடியவைகள் இலக்கியமாம்.

**இலக்கு**[1]**-தல்** *ilakku,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. ***ஒளிர்தல்;*** to brighten, cause to blaze. "எரியத்திரத்திலக்கியே" (சைவச.பொது.294). 2. ***அடையாளமிடுதல்*** (ஆ.அக.); impress a sign or stamp for identification. (செ.அக.).

*[இலங்கு - இலக்கு.]*

**இலக்கு**[2]**-தல்** *ilakku.* 5. செ.குன்றாவி. (v.t.) 1. ***குத்துதல்;*** to pierce. 2. ***வரைதல்;*** to draw, delineate. 'இரேகை யிலக்குக' (சைவச.பொது.274) 3. ***தைத்தல்;*** stitching. (செ.அக.).

*[இல் - இல - இலக்கு.]*

**இலக்கு**[3] *ilakku,* பெ. (n.) 1. ***குறிப்பொருள்;*** mark, butt, target. 2. ***அம்பெய்யும் இலக்கு*** (பாரத.வாரணா. 56); target for an arrow, of four kinds, viz. பெரு வண்மை, சிறுநுண்மை, சலம், நிச்சலம். 3. ***அடையா ளம்;*** distinguishing mark or sign. 'அவ்விடம் போக உனக்கு இலக்குச் சொல்வேன்;' distinguishing mark or sign. 4. ***இடம்;*** place. 'எந்த இலக்குக்குப் போகிறாய்?' (Madu.). 5. ***நாடிய பொருள்;*** end, object in view aim; 'இலக்கை நோக்கித் தொடருகிறேன்' (விவிலி.பிலிப்.3, 14). 6. ***எதிரி;*** rival, competitors, opponent in games or tests of ability and strength. 'உனக்கு இவனே இலக்கு' (வின்.). 7. ***அளவு;*** measure. "தடத்திட்டதேது மிலக் கின்றி யோங்குமால்" (சேதுபு.இராமதீ.3). 8. ***குறித்த காலம்;*** favourable opportunity, convenient time. "இலக்கு வாய்த்துழி ஏது வாதன் மாத்திரையே யாம்" (சி.போ.பா.12,2,பக்-233).

ம. இலக்கு.

*[இல - இலக்கு.]*

**இலக்குப்பார்-த்தல்** *ilakku-p-pār,* 4 செ.கு.வி. (v.i.). 1. ***குறிபார்த்தல்;*** to take aim. 2. ***நேரம்பார்த்தல்*** (கொ.வ.); to watch for opportunity generally to do evil. (செ.அக.).

*[இலக்கு + பார்.]*

**இலக்குவை-த்தல்** *ilakku-vai-,* 4 செ.கு.வி. (v.i.) ***குறிவைத்தல்;*** to take aim. (செ.அக.).

*[இலக்கு + வை.]*

**இலக்கை**[1] *ilakkai,* பெ. (n.) 1. ***ஆடை;*** clothing. 2. ***மாதச்சம்பளம்;*** monthly wages. (ஈடு.4,8,8,ஜீ). (செ.அக.).

*[இலக்கு → இலக்கை. இலக்குதல் = தைத்தல், இலக்கை = தைத்த ஆடை.]*

**இலக்கை**[2] *ilakkai,* பெ. (n.) ***பாதுகாவல்;*** protection. "இலக்கை யற்றதவ் விலங்கைக்கு மிராவணன் றனக்கும்" (கம்பரா.கும்பகரு.339). (செ.அக.).

*[இலக்கு → இலக்கை.]*

**இலகு**[1]**-தல்** *ilagu-,* 7 செ.கு.வி. (v.i). 1. ***விளங்குதல்*** (திவ்.திருவாய்.8,8,1); to shine, glisten, glitter. 2. ***மிகுதல்*** (சங்கற்பநி. சங்கிராந்த.96); to increase aggravate, expand. (செ.அக.).

ம. இலகு.

*[உல் → இல் → இல → இலகு - இலகுதல்.]*

**இலகு**[2] *ilagu,* பெ. (n.) 1. ***இலேசு*** (சூடா.); levity, lightness, as of cotton or feathers. 2. ***எளிது;*** ease, facility. 3. ***சிறுமை*** (உரி.நி.); minuteness, smallness. 4. ***காலவகை*** (பரத.தாள.27); one of ten varieties of time divisions which consists of 16384 moments. 5. ***தணிவு;*** relief, mitigation, alleviation. 'வியாதி கொஞ்சம் இலகுவாயிருக்கிறது.' 7. ***குற்றெழுத்து*** (யாப்.வி.95, பக்.471); short vowel. 8. ***அகில்*** (வின்.); eagle-wood. (செ.அக.).

*Skt.* laghu.

*[இலவு → இலகு.]*

**இலங்கிழை** *ilaṅgiḻai,* பெ. (n.) ***விளங்கும்படியான ஒளியுடைய கல்லிழைத்த அணி; பெண்;*** literally, glittering ornaments, figuratively applied to denote a woman adorned with jewels. "இலங்கிழை யெவ்வ நலிய" (பு.வெ.12, பெண்பாற்.19). (செ.அக.).

*[இலங்கு + இழை.]*

**இலங்கிழைமகளிர்** *ilaṅgiḻai-magaḻir,* பெ. (n.) ***அணிகலன்கள் பூண்ட மகளிர்;*** women adorned with jewels.

*[இலங்கு + இழை + மகளிர்.]*

**இலங்கு[1]-தல்** *ilaṅgu-,* 5 செ.குன்றாவி. (v.t.) ***வெட்டுதல், குழித்தல்;*** to dig, cut.

*[இல் → இல → இலங்கு.]*

**இலங்கு[2]-தல்** *ilaṅgu-,* 15 செ.கு.வி. (v.i.) ***ஒளிவிடுதல்*** (பிங்); to shine, emit rays, gleam, glitter, be bright. (செ.அக.).

*[இல் → இல → இலங்கு.]*

**இலங்கு[3]-தல்** *ilaṅgu-,* 15 செ.கு.வி. (v.i.) ***செல்லுதல், போதல்;*** to go, to pass.

*[இல் → இல → இலங்கு.]*

**இலங்கு[4]** *ilaṅgu,* பெ. (n.) ***குளம்*** (வின்.); tank, pool. (செ.அக.)

*[இல் → இல → இலங்கு. குழித்து அல்லது நிலத்தைத்தோண்டிச் செய்த நீர்நிலை.]*

**இலங்குபொழுது** *ilaṅgu-poḻudu,* பெ. (n.) ***படுஞாயிறு*** (J); glimmering sun as it shines when setting. (செ.அக.).

*[இலங்கு + பொழுது.]*

**இலங்கேசன்** *ilaṅgēsaṉ,* பெ. (n.) ***இராவணன்;*** Rāvaṇa, lord of Laṅkā. (செ.அக.).

*[இலங்கை + ஈசன்.]*

**இலங்கை** *ilaṅgai,* பெ. (n.) 1. ***ஆற்றிடைக்குறை*** (பிங்.); islet in a river, ait. 2. ***ஈழமண்டலம்*** (Ceylon); Srilanka. 3. ***இராவணன் தலைநகர்;*** ancient capital of Laṅkā. "பூரியரிலங்கை மூதூர்" (கம்பரா.ஊர்தே.96). 4. ***தொண்டை நாட்டில் ஓரூர்*** (புறநா.379); ancient town in the Tamil land, the capital of a chief named Oymāṉ villi-y-ātan. (செ.அக.).

*Skt.* laṅka. *[இலங்கு → இலங்கை.]*

**இலங்கைக் கடற்பாசி** *ilaṅgai-k-kaḍaṟ pāśi,* பெ. (n.) ***ஒருவகைக் கடற்பாசி;*** Ceylon moss or edible sea weed. (சா.அக.).

**இலங்கைத்தீச்சுடர்** *ilaṅgai-ttccuḍar,* பெ. (n.) ***மாவிலிங்க மரம்;*** lingam tree. (சா.அக.).

*[இலங்கை + தீ + சுடர்.]*

**இலங்கை யேலம்** *ilaṅgai-yēlam,* பெ. (n.) ***இலங்கைத் தீவில் விளையும் ஏலம்;*** Ceylon cardamom. (சா.அக.).

*[இலங்கை + ஏலம்.]*

**இலச்சினை** *ilacciṉai,* பெ. (n.) 1. ***முத்திரை;*** seal, signet. "அரக்கிலச்சினை செய்து" (திவ்.திருச்சந்த.76). 2. ***முத்திரை மோதிரம்*** (பிங்.); signet-ring. (செ.அக.).

ம. இலச்சன.

*[இலக்கு → இலத்து → இலச்சு → இலச்சினை > Skt. lāñchana.]*

**இலசு** *ilaśu,* பெ. (n.) ***சிறியது, கனமில்லாதது, எளியது;*** little, small, slight, unimportant, trivial, insignificant, of little worth or estimation.

*Skt.* laghu, *Gr.* elachys, *L.* levis, *Ger.* leight, *A.S.* leught, *E.* light, *Ice.* lettr, *Fr.* aise, *It.* agio, *E.* ease.

*[இல் - இலகு - இலேசு (சு.வி.19).]*

**இலஞ்சி[1]** *ilañji,* பெ. (n.) 1. ***குளம்;*** reservoir, tank for drinking and other purposes. "இலஞ்சி மீனெறி தூண்டில்" (ஐங்குறு.278). 2. ***ஏரி*** (சூடா.); lake for irrigation. 3. ***கொப்பூழ்;*** navel. "இலஞ்சி பெற்றோன்" (மாறன.மேற்.359). 4. ***குணம்*** (சூடா.); disposition, temper. 5. ***சாரைப்பாம்பு*** (பிங்.); rat snake. 6. ***மகிழமரம்*** பார்க்க; pointed-leaved ape flower. "நிழன் முதிரிலஞ்சி" (ஐங்குறு.94). 7. ***மதில்*** (சூடா.); wall round a fortress or a town. 8. ***புன்கு*** (மலை.); Indian beech. (செ.அக.).

ம. இலஞ்.

*[இல் - இல - இலங்கு - இலங்கி - இலஞ்சி. இல் - குழித்தல், வெட்டுதல், துளைத்தல்.]*

**இலஞ்சி[2]** *ilañji,* பெ. (n.) ***மாமரம்*** (அக.நி.); mango tree. (செ.அக.).

*[இல் - இல - இலஞ்சி.]*

**இலஞ்சிமன்றம்** *ilañji-maṉṟam,* பெ. (n.) ***காவிரிப்பூம் பட்டினத்திருந்த மன்றம் ஐந்தனுள் ஒன்று;*** one of the five pavilions in ancient Kāvirippūmpaṭṭiṉam. (அபி.சிந்.).

*[இலஞ்சி + மன்றம்.]*

**இலஞ்சில்** *ilañjil,* பெ. (n.) ***நீர்நிலை யருகில் தோன்றும் செடிகொடிகள்;*** flora near the water tank.

*[இலஞ்சி → இலஞ்சில்.]*

**இலஞ்சிலாங்கொடி** *ilañjilāṅkoḍi,* பெ. (n.) ***கருங்கோவை;*** a kind of black creeper. (சா.அக.).

*[இலஞ்சில் + ஆம் + கொடி.]*

**இலண்டம்** *ilaṇḍam,* பெ. (n.) ***இலத்தி*** (தொல்.சொல். 443,உரை); dung, as of elephants. (செ.அக.).

*[இல்[1] - இலண்டு - இலண்டம். இல் = கீழிறங்குதல், விழுதல்.]*

**இலத்தி** *ilatti,* பெ. (n.) 1. ***யானை முதலியவற்றின் கழிவு, எரு;*** dung of elephants, horses, camels and asses. "சோறு மத்தியிலத்தி சொரிந்த தால்" (திருவாலவா.26,18). 2. ***சிப்பிலி மீன்;*** purple sea-fish. (சா.அக.).

தெ., க. லத்தி.

*[இல்[1] - இலண்டு - இலட்டு - இலத்து - இலத்தி. இல் = கீழேவிழுதல்.]*

**இலதை[1]** *iladai,* பெ. (n.) 1. ***படர் கொடி*** (பிங்.); creeper, running plant, twining tendril. 2. ***வள்ளிக்கொடி*** (பிங்.) பார்க்க; panicled bindweed. 3. ***தக்கோலம்***

(தைலவ.); cubebs. (செ.அக.).

*[இல்[1] - இலதை. இல்[1] - கீழே விழுதல் படர்தலுக்காயிற்று.]*

**இலதை**[2] *iladai,* பெ. (n.) 1. ***இணையா வினைக்கை வகை*** (சிலப்.3,18, உரை); gesture with one hand in which the fore finger and the middle finger are joined and held up and the thumb touches their roots while the other two fingers are held erect. 2. ***ஒருவகை யொலி*** (இலக்.வி.3,உரை); a kind of sound. (செ.அக.).

*[இல்[1] - இலதை.]*

**இலதைவன்னி** *iladai-vanni,* பெ. (n.) ***கொடுவேலி*** (தைலவ.தைல.43.) பார்க்க; Ceylon leadwort. (செ.அக.).

*[இலத்தை → இலதை + வன்னி.]*

**இலந்தை**[1] *ilandai,* பெ. (n.) ***முள்மர வகை*** (திவா.); Jujube-tree.

ம. இலந்த; க. எலச்சி.

*[இல்[1] - இலந்தை.]*



இலந்தை[1]

**இலந்தை**[2] *ilandai,* பெ. (n.) ***நீர்நிலை*** (பிங்.); water tank.

*[இலஞ்சி - இலந்தை.]*

**இலந்தைவடை** *ilandai vadai,* பெ. (n.) ***இலந்தைப் பழத்தின் சதைப்பற்றைக் காயவைத்துத் தட்டின அடை;*** round cake preserved by drying the fleshy portion of the jujube fruit. (சா.அக.).

**இலந்தை வற்றல்** *ilandai-varral* பெ. (n.) ***இலந்தைப் பழத்தைக் காயவைத்துப் பதப்படுத்தியது;*** dried jujube fruit. (சா.அக.).

**இலம்**[1] *ilam,* பெ. (n.) ***வறுமை;*** poverty. "இலம் என்கிளவிக்குப் படுவரு காலை" (தொல்.எழுத்.316); "இலமென்று அசைஇ இருப்பாரை" (குறள்.1040) (செ.அக.).

*[இல்[6] - இலம்.]*

**இலம்**[2] *ilam,* பெ. (n.) ***வீடு*** (ஆ.அக.); house.

*[இல்[5] - இலம்.]*

**இலம்பகம்** *ilambagam,* பெ. (n.) 1. ***நூலின் உட்பிரிவு;*** chapter or section. 'நாமகளிலம்பகம்' (சீவக.). 2. ***மாலை*** (திவா.); garland. 3. ***தலைக்கோலமென்னும் அணி;*** ornamental chain for a woman's fore head. "மகளிர் ஆய்நுதல்... இலம்பகத் தோற்ற மொத்ததே". (சீவக.1442) (செ.அக.).

*[இலை - இலம்பகம்.]*

**இலம்படு-தல்** *ilam-padu-,* 20 செ.கு.வி. (v.i.) ***வறுமை யடைதல்;*** to become poor. "இலம்படு புலவரேற்றகைந் நிறைய" (மலைபடு.576.) (செ.அக.).

*[இல் - இலம் + படு.]*

**இலம்படை** *ilam-padai,* பெ. (n.) ***வறுமை;*** want, poverty, destitution. "இலம்படை வந்துழி" (கந்தபு. மூவா.46). (செ.அக.).

*[இலம் + படு. படு - படை. இலம் + படை - இலம்படை - இலம்பாடு = வறுமை.]*

**இலம்பத்தகடு** *ilampa-t-tagadu* பெ. (n.) ***மூக்கினுட்பக் கத்தில் கீழ்ப்பகுதியில் அகம் புறமென, இருபக்கங்க ளுள்ள நீண்ட மெல்லிய வெலும்பு;*** long, soft bone or cartilage within the nose dividing it at the bottom - Nasal septum. (சா.அக.).

*[இல்[1] - இலம்பம் + தகடு.]*

**இலம்பம்**[1] *ilambam,* பெ. (n.) 1. ***தொங்கல்*** (யாழ். அக.); anything hanging down, as a pendulam. 2. ***செங்குத்து*** (வின்.); perpendicular. 3. ***மாலை*** (யாழ். அக.); garland. 4. ***புவியியலிற் கூறப்படும் ஒரு பாகையளவு*** (வின்.); complement of the latitude or arc between the pole and the zenith of a given place, which is the same as the altitude of the equator. (செ.அக.).

*[இல் - இலம்பம். இல் = வீழ்தல்.]*

**இலம்பம்**[2] *ilambam,* பெ. (n.) 1. ***உயர்வு;*** height. 2. ***அகலம்;*** expanse, width. (செ.அக.).

*[இல் = குத்தல், குழித்தல் வேர்ச்சொல். இல் → இலம் → இலம்பம் = குழித்தலால் ஏற்படும் அகற்சியும், நீட்சியுமாம். பிளத்தற் கருத்துடைய விடு - வீடு என்னும் சொல்வளர்ச்சியும், பிளத்தலிலிருந்து தோன்றும் அகற்சிக்கருத்தால் மலைப் பாறைப் பிளப்புகள் மக்கள் வதியும் உள்ளகன்ற விடர்களாக வும், வீடுகளாகவும் இருந்ததையும் ஒப்பு நோக்குக.]*

**இலம்பாட்டார்** *ilambāttār,* பெ. (n.) ***வறியோர்;*** the poor. (ஆ.அக.).

**இலம்பாட்டோன்** *ilam-pāttōn,* பெ. (n.) ***வறுமை யாளன்*** (சூடா.); destitute-person. (செ.அக.).

*[இலம் + படு, படு - பாடு. இலம் + பாடு + ஆன் - இலம்பாட்டான் - இலம்பாட்டோன். ஆன் → ஓன் - ஈற்றுத்தி ரிபு.]*

**இலம்பாடு**[1] *ilambāḍu,* பெ. (n.) ***வறுமை;*** privation, indigence. "இலம்பாடு ஒற்கம் ஆயிரண்டும் வறுமை" (தொல்.சொல்.360.) "இலம்பாடு நாணுத்தரும்" (சிலம்பு.) (செ.அக.).

*[இலம் + படு. படு - பாடு. இலம் + பாடு - இலம்பாடு. இலம் = இன்மை, வறுமை. பாடு = படுதல், உண்டாதல்.]*

**இலம்பாடு**[2] *ilambāḍu,* பெ. (n.) ***துயரம்,*** (அக.நி.); sorrow, grief. "இலம்பாடுழந்த என்இரும்பேரொக்கல்" (புறநா.378-13) (செ.அக.).

*[இலம் + படு. படு → பாடு. இலம் + பாடு - இலம்பாடு = வறுமை, வறுமையால் அல்லது இன்மையால் தோன்றும் துன்பம்.]*

**இலம்பு** *ilambu,* பெ. (n.) ***தொங்குகை;*** hanging down. "இலம்புடை நறுமலர்" (பெருங்.மகத.14,136.) (செ.அக.).

*[இல் - இலம்பு. இல் = வீழ்தல், தொங்குதல்.]*

**இலம்பை** *ilambai,* பெ. (n.) 1. ***வறுமை;*** penury. 2. ***இடுக்கண்;*** distress. 3. ***துயரநிலை;*** unfortunate plight or predicament. (செ.அக.).

*[இலம் → இலம்பு → இலம்பை.]*

**இலமலர்** *ila-malar,* பெ. (n.) ***இலவமலர்;*** flower of the silk-cotton tree. "இலமலரன்ன வஞ்செந்நாவின்" (அகநா.142.) (செ.அக.).

*[இலவு + மலர் - இலவுமலர் - இலமலர். இலவமலர் எனப் புணர வேண்டிய சொல் யாப்பமைதி நோக்கி 'வ'கர ஈறு கெட்டது.]*

**இலவங்கப்பட்டை** *ilavanga-p-paṭṭai,* பெ. (n.) 1. ***கருவாப்பட்டை;*** cinnamon bark. 2. ***தாளிசபத்திரி;*** cassia cinnamon. (செ.அக.).

*[இலவங்கம் + பட்டை.]*



இலவங்கப்பட்டை

**இலவங்கப்பூ** *ilavanga-p-pū,* பெ. (n.) 1. ***உலர்ந்த இலவங்கப்பூ;*** clove, flower of the clove tree. 2. ***காதணி வகை*** (கொ.வ.); ornament worn on the ear as having the design of a clove. (செ.அக.).

*[இலவங்கம் + பூ.]*

**இலவங்கபத்திரி** *ilavanga-pattiri,* பெ. (n.) ***ஒரு மருந்திலை*** (மூ.அ.); cinnamon leaf. (செ.அக.).

*[இலவங்கம் + பத்திரம். இலவங்கம் போன்றது.]*

**இலவங்கம்** *ilavangam* பெ. (n.) 1. ***இலவங்கப்பூ*** (திவா.); clove. 2. ***இலவங்க மரம்*** (சீவக.1901); clove tree. 3. ***கருவாமரம்;*** cinnamon-tree. 4. ***காட்டுக்கருவா மரம்;*** wild cinnamon. (செ.அக.).

ம. இலவங்கம். *Skt.* lavanga.

*[இலவு - இலவம் - இலவங்கம். இலவம் என்னும் தீவிலிருந்து வந்ததால் பெற்ற பெயர்.]*

**இலவசம்** *ilavaśam,* பெ. (n.) ***இலவயம்*** பார்க்க; see *ilavayam.* (செ.அக.).

*[இல் - இலா + வயம். - இலாவயம் - இலவயம் - இலவசம். விலையேதும் இல்லாமல் வயப்படுத்திக் கொள்ளுதல்.]*

**இலவடி-த்தல்** *ilavaḍi-,* 4 செ.கு.வி. (v.i.) ***நெற்கதி ரடித்தல்*** (கொ.வ.); to threshout sheaves of corn. (செ.அக.).

ம. இலவடித்தல்.

*[ஒருகா. இணையடித்தல் - இளைவடித்தல் - இளவடித்தல் - இலவடித்தல். இணையடித்தல் = மாடுகளைப் பிணைகட்டி ஏற்கெனவே கதிரடித்த நெல்லரிதாளைக் களத்தில் பரப்பிப் பிணையோட்டுதல்.]*

**இலவணம்** *ilavaṇam,* பெ. (n.) ***உப்பு;*** salt. (செ.அக.).

*[அளம் = உப்பு. அளம் + அணம் - அளவணம்> Skt. lavaṇam > த. இலவணம்.]*

**இலவந்தி** *ilavandi,* பெ. (n.) ***இலவந்திகை*** (சிலப். 25,4) பார்க்க; see *ilavandigai* (செ.அக.).

*[இலவந்தி = இளமரக்கா. வாவியை நடுவணதாகக் கொண்ட இளமரக்கா.]*

**இலவந்திகை** *ilavandigai,* பெ. (n.) 1. ***வாவியைச் சூழ்ந்த இனிய சோலை;*** garden encircling a large tank. "இலவந்திகையி னெயிற்புறம் போகி" (சிலப்.10, 31.). 2. ***இயந்திரவாவி*** (மணி.3,45.); big tank provided with machinery for filling as well as emptying. (செ.அக.).

*[இலை + வந்தி → இலவந்தி = இலைகளும் தழைகளும் மண்டிய பசுஞ்சோலை. இலவந்தி - இலவந்திகை. இலவந்தி = இளமரக்கா. இலவந்திகை = இளமரக்கா சூழ்ந்த வாவி.]*

**இலவந்தீவு** *ilavantīvu,* பெ. (n.) ***ஏழு தீவுகளுள் ஐந்தாவது*** (கந்தபு. அண்டகோ.19); fifth of legendary seven islands. (செ.அக.).

**இலவம்**[1] *ilavam,* பெ. (n.) 1. ***மென்மை;*** softness. 2. ***இலவமரம்;*** silk cotton tree. 3. ***இலவந்தீவு;*** a legendary island.

ம. இலவம்.

*[இல - இலவு - இலவம்.]*

**இலவம்**[2] *ilavam,* பெ. (n.) 1. ***சிறிது;*** little, trifle. 2. ***எட்டுக் கணங்களாலான காலவகை*** (பரத. தாள.27,உரை); variety of time measure which consists of eight moments. (செ.அக.).

ம. இலவம். *Skt.* lava.

*[இலவு → இலவம்.]*

**இலவம்**[3] *ilavam,* பெ. (n.) ***இலவங்கம்;*** clove. "ஏலத்தொடு நல்லிலவங் கமழுமீங்கோய்" (தேவா. 353,2) (செ.அக.).

*[இலவு - இலவம். இலவு = சிறியது. சிறிதாகிய இலவத்தீவிலிருந்து கொண்டுவரப்பட்ட இலவங்கமரம்.]*

**இலவம்**[4] *ilavam,* பெ. (n.) 1. ***பூ;*** flower. 2. ***பூசை*** (அக.நி.); worship. (செ.அக.).

**இலவம்பஞ்சு** *ilavam-pañju,* பெ. (n.) ***இலவமரத்துப் பஞ்சு;*** silk cotton. "இலவம்பஞ்சிற்றுயில்" (ஆத்திசூ.). (செ.அக.).

*[இலவு - இலவம் + பஞ்சு. இல் - இல - இலவு = மென்மை.]*

**இலவம்பிசின்** *ilavam pišin* பெ. (n.) ***இலவமரத்துண்டாகும் பிசின்;*** gum from silk cotton tree. (ஆ.அக.).

*[இலவம் + பிசின்.]*

**இலவயம்** *ilavayam,* பெ. (n.) ***விலையின்றிப் பெறுவது*** (வின்.); gratuity, anything obtained free, free gift.

*[இல் → இலா + வயம் - இலாவயம் → இலவயம்.]*

**இலவர்** *ilavar,* பெ. (n.) ***இல்லாதவர்*** those who does not possess. "அகத்துறுப்பு அன்பிலவர்க்கு" (குறள்.79-2.); (பாண்டிச்.அக.).

*[இல்லவர் - இலவர்.]*

**இலவன்** *ilavaṉ* பெ. (n.) ***இராமனுடைய மக்களுள் ஒருவன்;*** Lava, one of the sons of Sri Rama. (ஆ.அக.).

*[இலவு (சிறியது) - இலவன் (இளையவன்).]*

**இலவன் கண்ணாடி** *ilavaṉ kaṇṇāḍi* பெ. (n.) ***வாசப் புளியாறு என்னும் பறவை;*** a kind of bird. (சேரநா.).

ம. இலவன் கண்ணாடி.

*[இலவன் (சிறிய) + கண்ணாடி. பளபளப்பான தோற்றத்தால் கண்ணாடி எனப்பெயர் பெற்றிருக்கலாம்.]*

**இலவியஞ் செய்தல்** *ilaviyañ ceydal,* பெ. (n.) ***மொய்யளித்தல்;*** making presents on festival occasions especially to the bridal couple at wedding.

*[இலவு - இலவியம் + செய்தல்.]*

**இலவியப்பணம்** *ilaviya-p-paṇam,* பெ. (n.) ***மொய்யளித்ததிற்கிடைத்த பணம்;*** money collected by way of presents. (ஆ.அக.).

*[இலவியம் + பணம்.]*

**இலவு**[1]**-தல்** *ilavu-,* 8 செ.குன்றாவி. (v.t.) ***எழுதுதல்;*** to write

*[இல் - இல - இலவு. இலவுதல் - இலக்குதல் என வழக்கூன்றியது.]*

**இலவு**[2] *ilavu,* பெ. (n.) ***மரவகை;*** red silk-cotton tree. (செ.அக.).

ம. இலவு; க. எலவ; கோண். எலகெ.

*[இல் → இலவு (மென்மை).]*



இலவு

**இலவு**[3] *ilavu,* பெ. (n.) 1. ***நொய்ய பஞ்சு;*** soft cotton. 2. ***கனமின்மை;*** lightness 3. ***எளிமை;*** simplicity 4. ***சிறுமை;*** tiny, small (objects).

*[உல் → இல் → இல → இலவு.]*

**இலவு**[4] *ilavu,* பெ. (n.) 1. ***நறுமணம்;*** fragrance. 2. ***அழகு;*** beauty.

*[இல் → இல (மென்மை) → இலவு (நறுமணம், அழகு).]*

**இலாடம்** *ilāḍam,* பெ. (n.) ***ஒரு நிலப்பகுதி;*** name of a country division.

*[நாடு - லாடு - லாட த. இலாடம்.]*

**இலாமிச்சு** *ilāmiccu,* பெ. (n.) ***இலாமிச்சை*** (கடம்ப.பு. இலீலா.182.) பார்க்க; see *ilāmiccai* (செ.அக.).

**இலாமிச்சை** *ilāmiccai,* பெ. (n.) ***ஒருவகை மணவேர்*** (திவா.); cuscus-grass, anatherum muricatum with aromatic root. (செ.அக.).

ம. இலாமச்சம்.

*[இலவு - இலமு - இலமிச்சை - இலாமிச்சை. இலவு = நறுமணம்.]*

**இலாவணம்** *ilāvaṇam,* பெ. (n.) 1. ***பெயர்ப் பதிவு;*** enlistment. 2. ***வீரர்களின்பட்டி*** (இ.வ.); list of soldiers, or recruits for army enlistment. 3. ***குடிவழி வரும் வேலை அமர்த்தத்துக்குக் கொடுக்கும் ஆணை.*** (கோவை வழக்கு); conferring on a person the permanent right to a hereditary office. 4. ***வீடுதோறும் இனவாரி வழங்கும் அரிசி, பணம் முதலியன;*** food

stuffs and money distributed to the needy of the villages on festive occasions by the Nāṭṭukkōṭṭai chettis according to a prepard list. (செ.அக.).

ம., க. இலாவண; தெ. லாவணமு.

*[இல் - இலக்குதல் = குறித்தல், பொறித்தல், கணக்கு எழுதுதல், இல் - இலவு - இலவணம் - இலாவணம்.]*

**இலாவணமெழுது-தல்** *ilāvaṇameḻudu-,* 5 செ.கு.வி. (v.i.) ***படைக்கு ஆள்சேர்த்தல்*** (இ.வ.); to enroll recruits for army etc. (செ.அக.).

*[இலாவணம் + எழுது.]*

**இலாவணியம்** *ilāvaṇiyam,* பெ. (n.) ***அழகு;*** beauty, loveliness, charm. (செ.அக.).

*[இலவு = மென்மை, அழகு. இலவணியம் - இலாவணியம்> Skt. lāvaṇya]*

**இலாளம்** *ilāḷam,* பெ. (n.) ***இலாடம்*** (S.I.I.183.) பார்க்க; see *ilāḍam.*

**இலி[1]** *ili,* பெ. (n.) 1. ***இல்லாதவன்;*** one who is without, generally used as a suffix at the end of compounds as in. பிறப்பிலி, இறையிலி. 2. ***ஒரு பாகையில் $^{1}/_{60}$ பாகம்;*** one sixtieth of a degree. 3. ***ஒரு சிறுபொழுது;*** moment. (சேரநா.).

ம. இலி.

*[இல் - இல்லி - இலி (கு.வினையா.பெ.).]*

**இலி[2]** *ili,* பெ. (n.) ***எலி;*** rat. (செ.அக.).

ம. இலி.

*[இல் = துளைத்தல். இலி = மண்ணைத் துளைக்கும் எலி. இல் → இலி. இலி - எலி.]*

**இலிர்-த்தல்** *ilir-,* 9 செ.குன்றாவி. (v.t.) ***சிலிர்த்தல்;*** to stand erect, as the hair stands on end from fright, rapture, anger or cold. "இலிர்த்த மெய்ம்மயிர்" (சீவக. 3009) - 4 செ.கு.வி. (v.i.) ***தளிர்த்தல்*** (திவா.); to sprout, germinate. (செ.அக.).

க. எலர்சு; தெ. எலருச்சு.

*[உலிர் - இலிர்.]*

**இலில்** *ilil,* தொ.பெ. (v.n.) ***ஊறுதல்;*** oozing. (செ.அக.).

*[இல் + இல் - இலில்.]*

**இலிற்று-தல்** *iliṟṟu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. ***சுரத்தல்;*** to exude, percolate, spring, stream or flow, as milk from the breast or water from the fountain. "குழவிக்கிலிற்று முலைபோல" (புறநா.68). 2. ***துளிர்த்தல்;*** to fall in drops. "அமிழ்து பொதிந்திலிற்றும்" (சிறுபாண்.227). 3. ***சொரிதல்;*** to sprinkle, trickle. "தேனினங் கவர்ந்துண விலிற்று மும்மதத்து" (சீவக.2521) (செ.அக.).

*[இலில் - இலிறு - இலிற்று.]*

**இலுப்பெண்ணெய்** *iluppeṇṇey,* பெ. (n.) ***இலுப்பை நெய்*** பார்க்க; see *iluppainey.* (செ.அக.).

*[இருப்பை → இலுப்பை + எண்ணெய்.]*

**இலுப்பை** *iluppai,* பெ. (n.) ***இருப்பை*** (பிங்.) பார்க்க; see *iruppai* (செ.அக.).

ம. இலிப்ப; க. இப்பெ; தெ. இப்ப; பர். இர்ப, இருப; கோண். ஈரு; கொலா. இப்பா, இப்ப; கூ. இர்பி.

*[இருப்பை → இலுப்பை.]*



இலுப்பை

**இலுப்பைக்கட்டி** *iluppai-k-kaṭṭi,* பெ. (n.) ***இலுப்பைப் பிண்ணாக்கு*** பார்க்க; see *iluppai-p-piṇṇākku* (செ.அக.).

*[இருப்பை → இலுப்பை + கட்டி.]*

**இலுப்பைக் கடுகு** *iluppai-k-kaḍugu,* பெ. (n.) 1. ***இலுப்பெண்ணெய்க் கசடு*** (வின்.); sediment of mahua oil. 2. ***இலுப்பைப் பருப்பு*** (மூ.அ.); kernal of mahua seeds. (செ.அக.).

*[இருப்பை → இலுப்பை + கடுகு. கடு → கடுகு = உலர்ந்து காய்ந்து கட்டியாதல், உலர்ந்து காய்ந்த வித்து அல்லது வித்துகளின் பருப்பு. - கடுகு ஆதல் பார்க்க.]*

**இலுப்பைக் கற்கண்டு** *iluppai-k-kaṟkaṇḍu,* பெ. (n.) ***இலுப்பைப் பூவினின்று உருவாக்கும் கற்கண்டு;*** sugar candy obtained from the bassia flower. (சா.அக.).

*[இருப்பை - இலுப்பை + கற்கண்டு.]*

**இலுப்பைச் சாராயம்** *iluppai-c-cārāyam,* பெ. (n.) ***இலுப்பை மரத்தின் பூவினின்று காய்ச்சி வடிக்கும் சாராயம்;*** arrack distilled from bassia flower. (சா.அக.).

*[இருப்பை → இலுப்பை + சாராயம்.]*

**இலுப்பை நெய்** *iluppai-ney,* பெ. (n.) ***இலுப்பையெண்ணெய்*** (பதார்த்த.158); oil of mahua seeds. (செ.அக.).

*[இருப்பை → இலுப்பை + நெய்.]*

**இலுப்பைப் பருப்பு** *iluppai-p-paruppu,* பெ. (n.) ***இலுப்பை விதையினுள்ளிருக்கும் பருப்பு;*** kernal of mahua seeds. (சா.அக.).

*[இருப்பை → இலுப்பை + பருப்பு.]*

**இலுப்பைப் பால்** *iluppai-p-pāl,* பெ. (n.) ***இலுப்பை நெய்;*** oil of mahua seeds. "இலுப்பைப் பால் முக்கலனே குறுணி நானாழி" (S.I.I. ii, 426.) (செ.அக.).

*[இருப்பை - இலுப்பை + பால்.]*

**இலுப்பைமேற்புல்லுருவி** *iluppai mērpulluruvi,* பெ. (n.) ***இலுப்பை மரத்தின் மேற்பாய்ந்த புல்லுருவி;*** parasitic plant grown on the bassia tree. (சா.அக.).

*[இருப்பை → இலுப்பை + மேல் + புல்லுருவி.]*

**இலேசவணி** *ilēsa-v-aṇi,* பெ. (n.) 1. ***குறிப்பை வெளிப்படுத்தும் மெய்ப்பாடு வேறொன்றால் நிகழ்ந் ததாக மறைத்துச் சொல்லும் அணி*** (தண்டி.64,உரை); figure of speech in which an expression is delibrately attributed to a different cause to conceal the original emotion. 2. ***குணத்தைக் குற்றமாகவும், குற்றத்தைக் குணமாகவும் சொல்லும் அணி*** (அணியி.72); figure of speech in which a merit is represented, as a demerit, and vice versa. (செ.அக.).

*[இல - இலவு - இலசு + அணி. இலவு = மென்மை.]*

**இலேசு** *ilēsu,* பெ. (n.) 1. ***நொய்ம்மை*** (திவா.); lightness in weight, buoyancy. 2. ***எளிது*** (கொ.வ.); easiness. 3. ***மிகச்சிறியவளவு*** (சீவக.770); minuteness smallness in quantity. 4. ***விதப்புச்சொல்*** (நன்.194. விருத்.); short and significant word.

*[இல - இலவு - இலசு - இலேசு.]*

**இலை**[1] *ilai,* பெ. (n.) 1. ***மரஞ்செடிகளின் இலை;*** leaf of trees or plants. "இலைவளர் குரம்பை" (சீவக. 1432). 2. ***பூவிதழ்;*** petal. "அகவிலை யாம்பல்" (தேவா.511,8). 3. ***வெற்றிலை;*** betal leaf, leaf of the betel-pepper. "இலை பிளவதனை நடித்துக் கேட்க வும்" (திருப்பு.47). 4. ***கதவின் இலை;*** wooden slats made to overlap one another as in a venetion-blind. 5. ***படலை மாலை*** (பரிபா.6,19); garland of green leaves and flowers. 6. ***அணிகளின் இலைத்தொழில்;*** foliage like ornamental work on jewels. "இலைகொள் பூண்" (சீவக.1371). 7. ***பச்சிலை*** (தைலவ.தைல.98); herb. 8. ***சக்கரத்தின் ஆர்;*** spoke of a wheel. "இலைமுகத் துழலுகின்ற வெந்திரத் திகிரி நாப்பண்" (பாரத.திரௌ.31). 9. ***ஆயுத வலகு;*** blade of a weapon or instrument. "நச்சிலை வேற்படைவீரர்" (சீவக.2229) (செ.அக.).

**ம.** இல, எல; **க.** எலெ, எல; **து.** இரை, எரை; **கோத.** எல்; **பட.** எலெ; **துட.** எல்; **குரு.** யெல்ல; **எர்.** யெரெ, எல; **இரு.** யெல்லெ; **கட.** வொல்ல; **கூ.** யெல; **பர்.** எவ்; **நா.** எல்; **கொலா.** எக.

*[இல் - இல - இலை. இல் = மென்மை.]*

**இலை**[2]**-த்தல்** *ilai-,* 4 செ.கு.வி. (v.i.) 1. ***சோர்தல்*** (கொ.வ.); to grow weary. 2. ***தன்மை குன்றுதல்;*** to diminish or grow less and less. 'அவன் நிலைமை வரவர இலைத்துப் போயிற்று' (கொ.வ.). 3. ***சுவை குன்றுதல்;*** to become tasteless, as food when unseasoned or kept too long. 4. ***சுவைகுன்றல்*** (கொ.வ.); to lose the sense of taste, as one's mouth in sickness. (கொ.வ.) (செ.அக.).

*[இளை - இலை.]*

**இலை**[3]**-த்தல்** *ilai-,* 4 செ.கு.வி. (v.i.) ***பச்சை நிறமாதல்.*** (J); to become green. (செ.அக.).

*[இலை - இலைத்தல்.]*

**இலைக்கடுக்காய்** *ilai-k-kaḍukkāi,* பெ. (n.) 1. ***வெண்மருது;*** paniculate winged myrobalan. 2. ***பூ மருது;*** flowering mardas. (செ.அக.).

*[இலை + கடுக்காய்.]*

**இலைக்கட்டு** *ilaikkaṭṭu,* பெ. (n.) ***புண், கட்டி முதலியவைகளுக்குப் பச்சிலை மூலிகைகளை வைத்துக் கட்டுதல்;*** bandage of green medicinal leaves applied to ulcers, abscesses etc., (சா.அக.)

**இலைக்கதவு** *ilai-k-kadavu,* பெ. (n.) ***இலைபோல் மரத்தட்டுகள் தொடுக்கப்பட்ட கதவு;*** venetian door or window. (செ.அக.).

*[இலை + கதவு.]*

**இலைக்கம்மம்** *ilai-k-kammam,* பெ. (n.) ***இலைவ்வடி வாக அணியிகலனமைக்கும் தொழில்*** (பெருங். இலாவண.19,136); art of making filigree; foliage ornamentation in jewels. (செ.அக.).

*[இலை + கம்மம்.]*

**இலைக்கலம்** *ilaikkalam,* பெ. (n.) ***இலைகளால் செய்த ஏனம், தொன்னை;*** cup like vessel formed out of dried leaves. (சா.அக.).

**இலைக்கள்ளி** *ilai-k-kaḷḷi,* பெ. (n.) 1. ***கள்ளி வகை;*** five - tubercled spurge. "ஓதுமிலைக்கள்ளிப் பால்" (பதார்த்த.123). 2. ***கானாங்கள்ளி;*** spiral five - tubercled spurge. (செ.அக.).

ம. இலக்கள்ளி.

*[இலை + கள்ளி.]*



இலைக்கள்ளி

**இலைக்கற்றாழை** *ilaik-k-kaṟṟāḻai,* பெ. (n.) ***முள்ளுக் கற்றாழை;*** prickly aloe, spiked aloe. (சா.அக.).

*[இலை + கற்றாழை.]*

**இலைக்கறி**[1] *ilai-k-kaṟi,* பெ. (n.) ***கீரைக்கறி*** (பிங்.); leaves prepared for food; greens. (செ.அக.).

ம. இலக்கறி.

*[இலை + கறி.]*

**இலைக்கறி**[2] *ilaikkaṟi,* பெ. (n.) ***அடகு;*** betal leaf. (ஆ.அக.).

**இலைக்காம்பு** *ilai-k-kāmbu,* பெ. (n.) ***இலையின் தண்டு;*** stalk of a leaf. (செ.அக.).

*[இலை + காம்பு.]*

**இலைக்கிளி** *ilai-k-kiḷi,* பெ. (n.) ***வெட்டுக்கிளி வகை;*** mantis having leaf-like wings. (செ.அக.).

ம. இலக்கிளி.

*[இலை + கிளி.]*



இலைக்கிளி

**இலைக்கின்னி** *ilai-k-kiṉṉi,* பெ. (n.) ***மழைக்கிளி*** (வின்.); grasshoper, locust, locustidae. (செ.அக.).

*[இலை + கின்னி. கிளி → கிண்ணி. கிண்ணி - கின்னி (கடுங்கொச்சை).]*

**இலைக்குரம்பை** *ilai-k-kurambai,* பெ. (n.) ***இலைக் குடில்*** (பர்ணசாலை) (திவ்.இயற்.பெரிய.திரும.13); hut made of leaves and twigs. (செ.அக.).

ம. இலக்குடிஞ்ஞு ல்.

*[இலை + குரம்பை.]*

**இலைக்குழல்** *ilai-k-kuḻal,* பெ. (n.) ***இலையால் அமைந்த ஊதுகருவி;*** musical leaf-pipe. ''அண்ண லிலைக் குழலூதி'' (திவ்.பெரியதி.10,7,6) (செ.அக.).

*[இலை + குழல்.]*

**இலைக்குறடு** *ilai-k-kuṟaḍu,* பெ. (n.) ***ஒருவகைத் தட்டார் கருவி*** (வின்.); goldsmith's tongs. (செ.அக.).

ம. இலக்கொடில்.

*[இலை + குறடு.]*



இலைக்குறடு

**இலைக்கூலம்** *ilai-k-kūlam,* பெ. (n.) 1. ***கூலி;*** daily wage. 2. ***வரிவகை*** (S.I.I. iii.411); tax. (செ.அக.).

*[இலை + கூலம். இலையில் கட்டித்தரப்படும் கூலம் ஆகலாம்.]*

**இலைக்கொடி** *ilai-k-koḍi,* பெ. (n.) ***வெற்றிலைக் கொடி*** (பிங்.); betel creeper, piper betel. (செ.அக.).

*[இலை + கொடி.]*

**இலைக்கொழுக்கட்டை** *ilai-k-koḻu-k-kaṭṭai* பெ. (n.) ***பணிகாரவகை*** (வின்.); a kind of thin pastry. (செ.அக.).

*[இலை + கொழுக்கட்டை.]*

**இலைக்கோட்டை** *ilai-k-kōṭṭai,* பெ. (n.) ***தையலி லைக்கட்டு*** (கொ.வ.); bundle of stitched leaf plates. (செ.அக.).

*[இலை + கோட்டை.]*

**இலைகிள்ளல்** *ilai-kiḷḷal,* பெ. (n.) ***மகளிர் விளையாட் டுக் கைத்தொழில்களுள் ஒன்று*** (பிங்.); nipping leaves into various figures, a recreative hand - work of women. (செ.அக.).

*[இலை + கிள்ளல்.]*

**இலைச்சருகு** *ilai-c-carugu,* பெ. (n.) ***உலர்ந்த இலை;*** dry leaves. (சா.அக.).

*[இலை + சருகு.]*

**இலைச்சாறு** *ilai-c-cāṟu,* பெ. (n.) ***இலையினின்று பிழிந்த சாறு;*** juice extracted from leaves. (சா.அக.).

*[இலை + சாறு.]*

**இலைச்சினை** *ilaicciṉai,* பெ. (n.) ***இலச்சினை;*** emblem, 'இடபவிலைச்சினையை' (கலித்.82,உரை).

*[இலைச்சு - இலைச்சினை - **இலைச்சுதல்,** பார்க்க; see ilaiccudal.]*

**இலைச்சு-தல்** *ilaiccu,* 4 செ.கு.வி. (v.i.) ***முத்திரை யிடுதல்*** (பெருங்.நரவா.1,46.); to mark with a seal. (செ.அக.).

*[இலை - இலைத்தல் - இலைத்துதல் - இலைச்சுதல் = குத்துதல் அல்லது இலையொற்றி அடையாளம் செய்தல்.]*

**இலைச்சுருள்** *ilai-c-curul,* பெ. (n.) ***வெற்றிலைச் சுருள்;*** roll of betel leaves. "இலைச்சுருளைப் பிளவோடே குதட்டிய" (திருப்பு.124.). (செ.அக.).

*[இலை + சுருள்.]*

**இலைச்சுருளி** *ilaiccuruli,* 1. ***ஒரு பூண்டு;*** grass. (ஆ.அக.). 2. ***வெற்றிலைச்சுருள்;*** betel leaf, vine-piper betel. (சா.அக.).

*[இலை + சுருளி.]*

**இலைச்செப்பு** *ilai-c-ceppu,* பெ. (n.) ***பூசைக்குரிய ஏனம்*** (S.I.I. ii, 5); utensil for worship. (செ.அக.).

*[இலை + செப்பு.]*

**இலைச்செறிவு** *ilaicceṟivu,* பெ. (n.) ***இலைநெருக்கம், இலைமிகுதி;*** leaves collectively - foliage. (சா.அக.).

*[இலை + செறிவு.]*

**இலைச்சு** *ilaiccu,* பெ. (n.) 1. ***இலையின் நிறம்;*** colour of the leaf. 2. ***பசுமை;*** green.

*[இலை - இலைச்சு.]*

**இலைச்சை** *ilaiccai,* பெ. (n.) ***நிறம்;*** colour. "வெண் சங்கே ரிலைச்சை". (சூளா.துற.226) (செ.அக.).

*[இலை - இலைச்சு - இலைச்சை = பசுமைநிறம், நிறமூட்டுவதற் குப் பசிய இலைகளை ஆண்டதால் நிறத்தைக் குறிக்கும் பொதுச் சொல்லாயிற்று.]*

**இலைசாடு-தல்** *ilai-cāḍu-,* 5 செ.கு.வி. (v.i.) ***செடி கொடிகள் மிகுதியாக வளர்தல்*** (Tinn.); to grow too luxuriantly to be productive, as plants. (செ.அக.).

*[இலை + சாடு.]*

**இலைசுனி** *ilaicuṉi,* பெ. (n.) ***மாணிக்கக் குணத் தொன்று;*** white speck, a property of ruby. "மாணிக்கம் சட்டமும் இலை சுனியும் ஒன்றும் உட்பட" (S.I.I.ii, 430, 434, 71). (செ.அக.).

*[இலைச்சு - இலைச்சை - இலைச்சினி - இலைசுனி (பசுமை மிகுதி).]*

**இலைஞெமல்** *ilai-ñemal,* பெ. (n.) ***இலைச் சருகு;*** dry leaves. "மகளிரிலைஞெமலு ளீன்ற குழவி" (முத்தொள்) (செ.அக.).

*[இலை + ஞெமல்.]*

**இலைத்தகடு** *ilaittagaḍu,* பெ. (n.) ***இலையைப் போல் மென்மையாகத் தட்டியெடுத்த தகடு;*** metal beaten into a sheet as thin as a leaf. (சா.அக.).

*[இலை + தகடு.]*

**இலைத்தட்டு**[1] *ilai-t-taṭṭu,* பெ. (n.) ***வெற்றிலைத் தட்டம்*** (S.I.I.ii,;419); salver for keeping betel leaves. (செ.அக.).

*[இலை + தட்டு.]*

**இலைத்தட்டு**[2] *ilai-t-taṭṭu,* பெ. (n.) ***பூசைத்தட்டு வகை*** (S.I.I. ii, 6); a kind of plate used in worship. (செ.அக.).

*[இலை + தட்டு.]*

**இலைத்தடை** *ilai-t-taḍai,* பெ. (n.) 1. ***வாழையிலை யேடு*** (இ.வ.); section of a plantain leaf cut lengthwise for a plate. 2. ***வாழைப்பட்டையிலை*** (இ.வ.); plate made by stitching together pieces of plantain sheaths. (செ.அக.).

*[இலை + தடை.]*

**இலைத்தண்டு** *ilaittaṇḍu* பெ. (n.) ***இலையைத் தாங்கிநிற்கும் காம்பு*** (in botany); a partial stem supporting the leaf foot-stalk. (செ.அக.).

*[இலை + தண்டு.]*

**இலைத்திரி** *ilai-t-tiri,* பெ. (n.) ***காதுத் துளையிற் செருகும் ஓலைச்சுருள்*** (வின்.); roll of palmyra leaf inserted in the bored perforation of the ear. (செ.அக.).

*[இலை + திரி.]*

**இலைத்தொடை** *ilai-t-toḍai,* பெ. (n.) ***அழகுத்*** (அலங்காரத்) ***தொங்கல்;*** decorative hangings, as garlands. "சாத்தின இலைத் தொடை யாதலாம்' (திவ். பெரியாழ்.3,4,1, வ்யா.பக்.592) (செ.அக.).

*[இலை + தொடை.]*

**இலைநரம்பு** *ilai-narambu,* பெ. (n.) ***இலையில் உள்ள நரம்பு;*** fibre of a leaf. (செ.அக.).

*[இலை + நரம்பு.]*

**இலைநிறம்** *ilainiṟam,* பெ. (n.) ***பச்சைநிறம்;*** green colour. (ஆ.அக.).

*[இலை + நிறம்.]*

**இலைநொச்சி** *ilai-nocci,* பெ. (n.) ***கருநொச்சி;*** black purification plant. (சா.அக.).

**இலைப் பசலை** *ilai-p-pašalai* பெ. (n.) ***பெரும் பசலை;*** large - flowered purslane - portulaca quadrifida. (சா.அக.).

*[இலை + பசலை.]*

**இலைப்பசளி** *ilai-p-pašaḷi,* பெ. (n.) ***பெரும்பசலை*** (மலை.); large-flowered purslane. (செ.அக.).

*[இலை + பசளி.]*

**இலைப்பணி** *ilai-p-paṇi,* பெ. (n.) ***இலை வடிவாகச் செய்யுந் தொழிலமைந்த அணி*** (பெருங்.மகத.5,22); leaf-shaped jewel. (செ.அக.).

*[இலை + பணி.]*

**இலைப்பணிகாரம்** *ilai-p-paṉigāram,* பெ. (n.) ***பணி கார வகையுளொன்று;*** edible delicacy.

*[இலை + பணிகாரம்.]*

**இலைப்பருப்பு** *ilai-p-paruppu,* பெ. (n.) ***மட்டமான துவரம் பருப்பு*** (கொ.வ.); inferior dhal which is as thin as a leaf. (செ.அக.).

*[இலை + பருப்பு.]*

**இலைப்பழுப்பு** *ilai-p-paḻuppu.* பெ. (n.) ***இலையுதிர் காலத்தில் இலைகளுக்குண்டாகும் பழுப்பு நிறம்;*** the yellow colour of plants with ripe leaves in the autumn. (சா.அக.).

*[இலை + பழுப்பு.]*

**இலைப்பாசி** *ilai-p-pāši,* பெ. (n.) ***பாசிவகை*** (மூ.அ.); a species of duckweed. (செ.அக.)

*[இலை + பாசி.]*



இலைப்பாசி

**இலைப்பாசிக்கள்ளி** *ilaippāši-k-kaḷḷi,* பெ. (n.) ***இலைக்கள்ளி*** பார்க்க; see *ilai-k-kaḷḷi.*

**இலைப்புரைகிளை-த்தல்** *ilai-p-purai-kiḷai-,* 4 செ.குன்றாவி. (v.t.) ***எங்குந்தேடுதல்;*** to make a through search everywhere, as among leaves turning them all over one by one. ''ஈட்டமும் வேறுமாகி யிலைப்புரை கிளைத்திட்டேமே'' (சீவக.1741) (செ.அக.).

*[இலை + புரை + கிளை.]*

**இலைப்புரை தடவு-தல்** *ilai-p-purai-taḍavu-,* 5 செ.குன்றாவி. (v.t.) ***இலைப்புரை கிளை*** பார்க்க; see *ilaippurai kiḷai.* (செ.அக.).

*[இலை + புரை + தடவு.]*

**இலைப்புல்** *ilai-p-pul,* பெ. (n.) ***புல்வகை*** (மூ.அ.); species of panic grass (செ.அக.).

*[இலை + புல்.]*

**இலைப்பூச்சி** *ilai-p-pūcci,* பெ. (n.) ***இலைதின்னும் புழு;*** insect which eats through leaves, pulchri-phyllium. (செ.அக.).

ம. இலப்புழு.

*[இலை + பூச்சி.]*



இலைப்பூச்சி வகை 1



இலைப்பூச்சி வகை 2

**இலைப்பேன்** *illaippēṉ,* பெ. (n.) ***இலைப்புழு;*** walking-leaf. (சேரநா.).

ம. இலப்பேன்.

*[இலை + பேன்.]*

**இலைப்பொங்கு** *ilaippoṅgu,* பெ. (n.) ***கோங்கு;*** common caung. (சா.அக.).

ம. இலப்போங்ங.

*[இலை + பொங்கு.]*

**இலைப்பொல்லம்** *ilai-p-pollam,* பெ. (n.) 1. ***இலை தைக்கை;*** sewing or stitching leaves together for use as plates. 2. ***வாழையிலைத் துண்டு;*** piece of plantain leaf used as a plate to eat from. (செ.அக.).

*[இலை + பொல்லம்.]*

**இலைபோடு-தல்** *ilai-pōḍu-,* 20 செ.கு.வி. (v.i.) ***உணவுக்கு இலைக்கலம் இடுதல்;*** to set leaf-plates in order to serve food. (செ.அக.).

*[இலை + போடு.]*

**இலைமறைகாய்** *ilai-marai-kāy,* பெ. (n.) *மறைபொருள்;* meaning hidden in an expressoin, just as the fruit is hidden among the rich foliage. (செ.அக.).

*[இலை + மறை + காய்.]*

**இலைமீன்** *ilaimīn,* பெ. (n.) *ஒருவகைமீன், தாடமீன்;* a kind of marine fish. (சேரநா.).

ம. இலமீன்.

*[இலை + மீன்.]*



இலைமீன்

**இலைமுலைமாது** *ilaimulai mādu* பெ. (n.) *தூதுவளை;* three lobed night shade. (சா.அக.).

*[இலை + முலை + மாது. மருத்துவப் பயன் நோக்கி இட்ட பெயர்.]*

**இலைமூக்கரி கத்தி** *ilai-mūkkari-katti,* பெ. (n.) 1. *வெற்றிலைக் காம்பரியுங்கத்தி* (திவா.); special kind of knife for cutting the stem of the betel leaf. 2. *குளிர்;* cold. 3. *கணிச்சி;* axe. (செ.அக.).

*[இலை + மூக்கு + அரி + கத்தி.]*

**இலைமேற்காய்** *ilai-mēṟ-kāy,* பெ. (n.) 1. *வெள்ளைக் கடம்பு* (L.); bridal-couch plant. 2. *மலைத்தணக்கு* (L.); olio vateleaved bridal-couch plant. 3. *நாய்க்கடம்பு;* bastard cedar. (சா.அக.) (செ.அக.).

*[இலை + மேல் + காய்.]*

**இலையடை** *ilai-y-aḍai,* பெ. (n.) *அப்பவருக்கம்;* (பிங்.); a kind of flat sweet cake prepared by steaming the dough enclosed in a leaf. (செ.அக.).

ம. இலயட.

*[இலை + அடை.]*

**இலையத்தி** *ilaiyatti,* பெ. (n.) *ஒருவகை அத்தி;* a kind of fig. (சா.அக.).

*[இலை + அத்தி.]*

**இலையப்பம்** *ilaiyappam,* பெ. (n.) *இலையடை* பார்க்க; see *ilaiyaḍai.*

ம. இலயப்பம்.

*[இலை + அப்பம்.]*

**இலையம்** *ilaiyam,* பெ. (n.) *ஒரு கூத்து வகை* (அக.நி.); a kind of dance. (செ.அக.).

*[இல - இலையம். மென்மெல இயங்கும் கூத்தாகலாம்.]*

**இலையமுதிடுவோர்** *ilai-y-amudiḍuvōr,* பெ. (n.) *வெற்றிலை விற்பார்* (சிலப்.5,26,உரை.); venders of betel leaves. (செ.அக.).

*[இலை + அமுது + இடுவோர்.]*

**இலையமுது** *ilai-y-amudu* பெ. (n.) *வெற்றிலை;* betel leaf. 'அடைக்காயமுது இரண்டும் இலையமுது நாலும்' (S.I.I. iii, 136) (செ.அக.).

ம. இலயமிர்து.

*[இலை + அமுது.]*

**இலையான்** *ilaiyāṉ,* பெ. (n.) *ஈ* (J.); fly. (செ.அக.).

*[இலை + ஆன்.]*

**இலையிலைத்தல்** *ilaiyilaittal,* பெ. (n.) 1. *சுவை கெடுதல்;* to lose taste. 2. *பச்சைநிறமாதல்;* to become green. (செ.அக.).

*[இலை + இலைத்தல்.]*

**இலையுதிர்காலம்** *ilai-y-udir-kālam,* பெ. (n.) *இலைகள் உதிர்தற்குரிய பருவம்;* season when leaves wither from trees, autumn. (செ.அக.).

*[இலை + உதிர் + காலம்.]*

**இலையுதிர்வு** *ilai-y-udirvu,* பெ. (n.) 1. *இலையுதிர்கை;* deciduousness of leaves from trees. 2. *முதுகாடு* (திவா.); cremation ground. (செ.அக.).

*[இலை + உதிர்வு.]*

**இலையெடு-த்தல்** *ilai-y-eḍu-* 4 செ.கு.வி. (v.i.) *எச்சிலிலையெடுத்துத் தூய்மை செய்தல்;* to clear leaves after the meals. (செ.அக.).

*[இலை + எடு.]*

**இலையொளி மாதர்** *ilaiyoḷi-mādar* பெ. (n.) *சாரைப் பாம்பு;* rat snake or male cobra. (சா.அக.).

*[இலை + ஒளி + மாதர்.]*

**இலைவடகம்** *ilai-vaḍagam,* பெ. (n.) *இலையில் எழுதிச் சமைக்கும் வடகம்;* wafers of rice flour prepared on leaves and steamed. (செ.அக.).

*[இலை + வடகம்.]*

**இலைவடாம்** *ilai-vaḍām* பெ. (n.) *இலை வடகம்* பார்க்க; see *ilai vaḍagam.* (செ.அக.).

*[இலை + வடகம். (வடகம் - வடாம்.) (கொ.வ.).]*

**இலைவாகை** *ilaivāgai,* பெ. (n.) *பெருவாகை;* large vaugay tree. (சா.அக.).

*[இலை + வாகை.]*

**இலைவாணிகம்** *ilaivāṇigam*, பெ. (n.) 1. ***இலை வாணிகம்;*** trading in leaves. 2. ***வெற்றிலை முதலிய விளைபயிர் வேளாண்மை;*** cultivation etc. of betel leaves. (ஆ.அக.).

*[இலை + வாணிகம்.]*

**இலைவாணிபம்** *ilaivāṇibam*, பெ. (n.) ***இலைவாணிகம்*** பார்க்க; see *ilaivāṇigam*. (ஆ.அக.).

**இலைவாணியர்** *ilai-vāṇiyar*, பெ. (n.) ***வெற்றிலைப் பயிர் செய்யும் பிரிவினர்,*** (T.A.S.i.165); class of people who cultivate betel creepers and sell their leaves. (செ.அக.).

ம. இலவாணியன்.

*[இலை + வாணியர்.]*

**இலைவாழை** *ilai-vāḻai*, பெ. (n.) 1. ***மலட்டு வாழை வகை;*** a kind of plantain grown for its leaves which does not yield fruits. 2. ***கொட்டை வாழை;*** a kind of plantain yielding stony fruit. (செ.அக.).

*[இலை + வாழை.]*

**இலைவித்துண்டாம்மரம்** *ilaivittu uṇḍām maram*, பெ. (n.) ***இலைகள் முதிரும் காலத்தில் அதன் அடிப்புறத்தில் அரும்புகள் உண்டாகி முதிர்ந்து காய்கள் போன்று வெடித்து விதைகளை நாற்பக்கமும் பரவச் செய்யும் ஒருவகைமரம்;*** a kind of European tree. (அபி.சிந்.).

*[இலை + வித்து + உண்டாகும் + மரம்.]*

இது ஐரோப்பாவின் வடபாகத்தில் காணப்படுகிறது.

**இலைவேல்** *ilaivēl* பெ. (n.) ***இலைத் தொழில்களால் சிறந்தவேல்;*** spear decorated with foliage design. (ஆ.அக.).

*[இலை + வேல்.]*

**இவ்** *iv*, சு.பெ. (demons.pron.) ***இவை;*** these, used imper. ''இவ்வே பீலியணிந்து'' (புறநா.95) (செ.அக.).

ம. இவ; க., பட. இவெ; தெ. இவி.

*[இ → இவ்.]*

**இவ்வத்து** *ivvattu*, கு.வி.எ. (adv.) ***இங்கே;*** here.

*[இவ் + அத்து. 'அத்து' ஏழனுருபு. இச்சொல் நாட்டுப்புறங்களில் 'இவத்தே' எனத் திரிந்து வழங்குவது கொச்சை.]*

**இவ்விடத்து** *ivviḍattu*, கு.வி.எ. (adv.) ***இங்கே;*** here.

*[இவ் + இடத்து.]*

**இவ்விடம்** *ivviḍam* பெ. (n.) 1. ***இம்பர்;*** this place. 2. ***இவண்;*** here. (ஆ.அக.).

*[இவ் + இடம்.]*

**இவ்விரண்டு** *iv-v-iraṇḍu*, பெ. (n.) 1. ***தனித்தனி இரண்டு;*** two each. ''ஆளுக்கு இவ்விரண்டு கொடுத்தான்''. 2. ***இந்த இரண்டு*** (ஆ.அக.); these two. (செ.அக.).

*[இ + இரண்டு.]*

**இவக்காண்** *iva-k-kāṇ*, இடை. (int.) 1. ***இங்கே;*** here! ''இவக்காணென் மேனி பசப்பூர்வது'' (குறள்.1185). 2. ***இந்நேரமளவும்;*** up till now. (செ.அக.).

*[இ - இவ் + அ + காண்.]*

**இவண்** *ivaṇ*, பெ. (n.) 1. ***இவ்விடம்;*** this place. 2. ***இம்மை*** (திவா.); this world; present life. (செ.அக.).

*[இ - இவ் + அண்.]*

**இவணம்** *ivaṇam*, பெ. (n.) ***இங்கே;*** here. (ஆ.அக.).

*[இவண் + அம்.]*

**இவணர்** *ivaṇar*, பெ. (n.) ***இவ்வுலகத்தார்;*** people who inhabit this world. 'இவணர்க் கருங்கடனிறுத்த' (பதிற்றுப்.74) (செ.அக.).

*[இவண் + அர்.]*

**இவர்-தல்** *ivar-*, 15 செ.கு.வி. (v.i.) 1. ***உயர்தல்;*** to rise on high, ascend. ''விசும்பிவர்ந் தமரன் சென்றான்'' (சீவக.959). 2. ***செல்லுதல்;*** to go, proceed. ''இருவிசும் பிவர்தலுற்று'' (சீவக.959). 3. ***உலாவுதல்;*** to move about, pass to and fro. ''இரைதேர்ந்திவருங் கொடுந் தாண் முதலையொடு'' (மலைபடு.90). 4. ***பரத்தல்;*** to spread, as a creeper. ''தூவற் கலித்த விவர்நனை வளர்கொடி'' (மலைபடு.514). 5. ***செறிதல்*** (திவா.); to be close, crowded. 6. ***பாய்தல்;*** to spring, leap, rush out. ''குன்ற விறுவரைக் கேண்மா விவர்ந்தாங்கு'' (கலித். 86.132). 7. ***பொருந்துதல்;*** to be an integral part of, be united with, become inseparable from. ''மாதிவர் பாகன்'' (திருவாச.43,1) - 15 செ.குன்றாவி. (v.t.) 1. ***மேற்கொள்ளுதல்*** (குறள்.1055); climb over; mount, as on horseback. 2. ***விரும்புதல்;*** to desire, long far, hanker after. ''ஆனெய் பாற் கிவர்ந்த தொத்தது'' (சீவக. 1051). 3. ***ஒத்தல்*** (பு.வெ.11.ஆண்பாற்.1); to resemble, look like. (செ.அக.).

*[உவர் → இவர் → இவர்தல்.]*

**இவர்** *ivar*, சு.பெ. (demons.pron.) 1. ***இவன், இவள் என்பதன் பன்மை;*** pl. of இவன் or இவள்; these persons. 2. ***ஒருவரைக் குறிக்கும் பன்மைச் சொல்;*** this person, used as an honorific term of reference. (செ.அக.).

ம., க. இவர்; தெ. வீரு; **கோத.** இவ்ர்; **துட.** இந்தம்; **து.** இம்பெ, மேரு; கொலா. இவ்ர், இத்தர்; **கூ.** ஈயரு, ஈரி; **நா.** இதவ்; பர். இவ்; **குவி.** ஈவரி; **குரு.** இம்பர்; **மா.** ஈர்.

*[இ + அர்.]*

**இவர்கள்** *ivargaḷ*, சு.பெ. (demons.pron.) 1. ***இவன், இவள் என்பதன் பன்மை;*** double pl. of இவன் or இவள். 2. ***ஒருவரைக் குறிக்கும் பன்மைச் சொல்;*** this person, used as an honorific term and considered to be more so than- இவர். (செ.அக.).

ம. இவர்கள்.

*[இ + அர் + கள். அர் - பன்மை குறித்த உயர்சொற் கிளவி 'கள்' பன்மையீறு அடுக்கிப் புணர்ந்தது. இவை இலக்கண வழக்கல்ல.]*

**இவரி-த்தல்** *ivari-*, 18 செ.குன்றாவி. (v.t.) ***எதிர்த்தல்;*** to oppose; contend against, to attack, as an army. "இவரித்தரசர் தடுமாற" (திவ்.பெரியதி.8,8,9) (செ.அக.).

*[உவர் - இவர் - இவரி.]*

**இவல்-தல்** *ival-*, 13 செ.கு.வி. (v.i.) 1. ***மேலுயர்தல்;*** to go up. 2. ***மேலேறுதல்;*** to ascend. 3. ***மேன்மேலும் ஆசைப்படுதல்;*** to become greedy. 4. ***மேற் செல்லல், நடத்தல்;*** to go, proceed.

*[உ - உவல் - இவல்.]*

**இவள்** *ival*, சு.பெ. (demons.pron.) ***பெண்ணைக் குறிக்கும் அண்மைச்சுட்டுச்சொல்;*** this woman or girl; she, used to denote the female among rational beings. (செ.அக.).

ம. இவள்; **க.** இவளு, இவள்; **தெ.** இதி; பட. இவ; **துட.** இவள்; **கோத.** இவள்; **குட.** இவ; **து.** இமள், இம்பாள், இபொளு; **கொலா.** இத். இவர்; **நா.** இத்; **பர்.** இவ்; **கோண்.** இத்; **கூ.** ஈரி; **குவி.** ஈதி, ஈவதி; **குர்.** ஈத்; **மா.** ஈத்; **கட.** இத்.

*[இ + அள்.]*

**இவறல்** *ivaral*, பெ. (n.) 1. ***விருப்பம்;*** wish. "யாது கொலிவறலென்றான்" (இரகு.சீதை.13). 2. ***பேராசை;*** covetousness, avarice. "இவறலின்றிக் கோத் தொழி னடாத்து மன்றே" (சீவக.2583). 3. ***இவறன்மை*** (தொல்.சொல்.396,உரை) miserliness, niggardliness. 4. ***மறதி*** (பிங்.); forgetfulness. (செ.அக.).

*[இவறு + அல்.]*

**இவறன்மை** *ivaranmai*, பெ. (n.) 1. ***ஈயாமை நிலை;*** parsimony, stinginess. "பற்றுள்ள மென்னும் மிவறன்மை" (குறள்.438). 2. ***அசட்டை;*** negligence. (ஆ.அக.) (செ.அக.).

*[இவறு + இவறல் + மை.]*

**இவறு-தல்** *ivaru-*, 8 செ.குன்றாவி. (v.t.) 1. ***விரும்பு தல்;*** to desire, earnestly wish for "ஈட்டமிவறி யிசைவேண்டா வாடவர்" (குறள்.1003). 2. ***மறத்தல்*** (பிங்.); to forget. - 5 செ.கு.வி. (v.i.) 1. ***ஈயாமை*** (கருமித்தனம்) (குறள்.432); to be niggardly. 2. ***மிகுதல்;*** to heighten, enhance, as pleasure. "இன்பத் திவறினார் காமவெள்ளத்து" (சீவக.966). 3. ***உலாவுதல்;*** to roll, as billows, to and fro. "இவறு திரைதிளைக்கு மிடுமணல்" (ஐங்குறு.177) (செ.அக.).

ம. இவருக; **க.** எகுரு; **தெ.** எகரு.

*[இவல் - இவறு.]*

**இவன்** *ivan*, சு.பெ. (demons.pron.) ***ஆணைக் குறிக்கும் சொல்;*** this man or this boy; he, is used to denote the male among rational beings. "மவனிவன் உவன்" (திவ்.திருவாய்,1,1,4) (செ.அக.).

ம. இவன்; **க.** இவ; **தெ.** வீடு; பட. இம; **கோத.** இவ்ன்; **துட.** இந்த்; **குட.** இவு, இவ, இவெனு; **து.** இம்பெ; **நா.** இவ்ந்த்; **பர்.** இத்; **கோண்.** ஏல்; **கொலா.** இந்த், இம்; **கூ.** இயன்சு; **குவி.** ஈவசி; **குர்.** ஈஸ்; **மால்.** ஈக்.

*[இ + அன்.]*

**இவியாடம்** *iviyādam*, பெ. (n.) ***இதளிய கருப்பூரம்*** (மூ.அ.); calomel. (செ.அக.).

*[ஒருகா. அவியாடம் - இவியாடம். இதளியத்தைப் புடமிட்டு மாற்றிய பொடித்துகள்.]*

**இவுளி** *ivuli*, பெ. (n.) 1. ***குதிரை;*** horse. "வாச் செலலிவுளி" (புறநா.197). 2. ***மாமரம்*** (இராசவைத்); mango tree. (செ.அக.).

*[இவல் (இவர்) - இவலி - இவுலி - இவுளி = மேலேறிச் செல்லத்தக்கது.]*

**இவுளிமறவன்** *ivuli-maravan*, பெ. (n.) 1. ***குதிரை வீரன்;*** mounted warrior, trooper. "இவுளிமறவரும் யானை வீரரும்" (ஞானா.9,18). 2. ***எண்பேராயத்து ளொருவன்*** (ஆ.அக.); a member of the assembly of the eight ministers. (செ.அக.).

*[இவுளி + மறவன்.]*

**இவேசித் தொகையேடு** *ivēci-t-togai-yēdu*, பெ. (n.) ***திரட்டிய தவசம், பணம் முதலியவற்றின் கணக் கைக் காட்டும் விளக்கக் குறிப்பு*** (R.t.); statement showing the amount of collection and balance in money or in kind. (செ.அக.).

*[இவேசி + தொகை + ஏடு. ஒருகா. தவசி - அவசி - இவேசி. தவசி - தவசம்.]*

**இவை** *ivai*, சு.பெ. (demons.pron.) ***சுட்டியறியப்படும் அண்மைப் பொருள்கள்*** (திருக்கோ.223,உரை); these, the things close to the speaker, impers. pl. (செ.அக.).

*[இ → இவை.]*

**க.** இவு, இதவ; **தெ.** இவி; **கோத.** இத்; **துட.** இதம்; **குட.** இதி; **து.** இன்து; **கோண்.** ஈவு, இவ்; **கூ.** ஈவி; **பர்.** இவ்; **குவி.** ஈவ்வதி; **கொலா.** இதவ்; **நா.** இதவ்; **குரு.** இப்பறா; **மா.** இத்; **பிரா.** எத்க்.

*[இ + ஐ.]*

**இழ-த்தல்** *ila-*, 3 செ.குன்றாவி. (v.t.) 1. ***தவறவிடுதல்*** (நாலடி.9); to lose, forfeit. 2. ***சாகக் கொடுத்தல்;*** to lose by death. "மக்களிழந்த விடும்பையினும்" (உத்தர.திக்குவி.138) (செ.அக.).

ம. இழக்குக.

*[இழி - இழ.]*

**இழந்த நாக்கடி-த்தல்** *ilanda-nākkadi-*, 3 செ.கு.வி. (v.i.) 1. ***முன்பின் நினையாமல் உறுதியின்றி வாக்க ளித்தல்*** (Tinn.); to promise or consent lightly without

due consideration. 2. **இரக்கப்படுதல்** (இ.வ.); to commisserate. (செ.அக.).

*[இழந்த + நாக்கு + அடி.]*

**இழந்த நாள்** *ilanda-nāl,* பெ. (n.) ***பயனின்றிக் கழிந்த நாள்*** (அஷ்டகா.முமுக்ஷிப்படி, திருமந்.1,110); wasted day.

*[இழந்த + நாள்.]*

**இழப்பாளி** *ilappāli,* பெ. (n.) ***செல்வத்தை வீணாகச் செலவழிப்பவன்;*** spend thrift. (ஆ.அக.).

*[இழப்பு + ஆளி.]*

**இழப்பு** *ilappu* பெ. (n.) ***இழக்கை*** (ஒழிவி. பொதுவிலு.2); loss. "இழப்பினும் பிற்பயக்கும் நற்பாலவை" (குறள்.659).

*[இள் → இழ → இழப்பு]*

**இழப்புணி** *ilappuni,* பெ. (n.) ***இழந்தவன்*** (வின்.); one who has suffered loss, as of child, husband or property. (செ.அக.).

*[இழப்பு + உணி.]*

**இழப்புவெற்றிலை** *ilappu-verrilai,* பெ. (n.) ***நல்லதுங் கெட்டதுங் கலந்த வெற்றிலை*** (இ.வ.); unsorted betel leaves. (செ.அக.).

*[இழப்பு + வெற்றிலை.]*

**இழவு**[1] *ilavu,* பெ. (n.) 1. ***இழப்பு;*** loss, deprivation, detriment. "உனக்கிங்கிழவென்றான்" (கம்பரா. ஊர்தேடு.83). 2. ***கேடு;*** destruction, ruin. "செந்தொடை இழவுபடுமென மறுக்க" (தொல்.பொ.406,உரை). 3. ***சாவு;*** death. 4. ***இறுதிச் சடங்கு;*** funeral. 'இழவுக்கு வந்தவள் தாலியறுப்பாளா? 5. ***தொந்தரவு*** (கொ.வ.); trouble, worry. 6. ***எச்சில்*** (பிங்.); leavings in plates after eating. 7. ***வறுமை;*** destitution. "பேறிழ வின்பமோடு.....ஆறும்" (சி.சி.2,9) (செ.அக.).

ம. இழவு.

*[இள் → இழ → இழவு.]*

**இழவு**[2] *ilavu,* பெ. (n.) ***கருவுளமைப்பு ஆறனுள் ஒன்றான பந்துநட்டம்*** (பிங்.); bereavement, one of six karuvul-amaippu, (செ.அக.).

*[இழிவு → இழவு. பேறு, இழவு, இன்பம், பிணி, மூப்பு, சாவு என்று கருவுளமைப்பு ஆறுவகை.]*

**இழவுக்கடி-த்தல்** *ilavukkadi-,* 4 செ.கு.வி. (v.i.) 1. ***செத்தவீட்டில் மார்படித்துக் கொள்ளுதல்;*** to beat one's breast-in funeral out of grief for the departed. 2. ***வீணுக்கு முயலுதல்;*** exert oneself in vain. (செ.அக.).

*[இழவுக்கு + அடி.]*

**இழவுகா-த்தல்** *ilavu-kā-,* 4 செ.கு.வி. (v.i.) ***சாவுத்துயரங் கொண்டிருத்தல்*** (வின்.); to stay at home to mourn till the eighth day after the funeral ceremony. (செ.அக.).

*[இழவு + கா.]*

**இழவுகாரன்** *ilavukāran,* பெ. (n.) ***சாவுக்குரியவன்;*** mourner. (ஆ.அக.).

*[இழவு + காரன்.]*

**இழவுகூட்டு-தல்** *ilavu-kūttu* 5 செ.கு.வி. (v.i.) ***தொந்தரவுண்டாக்குதல்*** (இ.வ.); to cause confusion and uproar, as at a funeral; to create trouble; be a nuisance. (செ.அக.).

*[இழவு + கூட்டு.]*

**இழவுகொடு-த்தல்** *ilavu-kodu,* 3 செ.கு.வி. (v.i.) ***இழவு கூட்டு*** பார்க்க; see *ilavu-kūttu.* (செ.அக.).

*[இழவு + கொடு.]*

**இழவுகொடுப்பான்** *ilavu-koduppān,* பெ. (n.) ***தொல்லைகொடுப்பவன்*** (இ.வ.); troublesome fellow, a pest, rabble rouser. (செ.அக.).

*[இழவு + கொடுப்பான்.]*

**இழவுகொண்டாடு-தல்** *ilavu-kondādu-,* 5 செ.கு.வி. (v.i.) ***சாவுத்துயரங் கொண்டிருத்தல்*** (கொ.வ.); to mourn for the dead, in a public manner, both at the funeral as well as at subsequent obsequies. (செ.அக.).

*[இழவு + கொண்டாடு.]*

**இழவு சொல்லு-தல்** *ilavu-collu-,* 15 செ.கு.வி. (v.i.) ***சாவறிவித்தல்;*** to give intimation concerning a funeral. (செ.அக.).

*[இழவு + சொல்லு.]*

**இழவுடுப்பு** *ilavuduppu,* பெ. (n.) ***துயரக்குறியான உடை*** (pond); mourning dress. (செ.அக.).

*[இழவு + உடுப்பு.]*

**இழுவு விழு-தல்** *ilavu-vilu,* 2 செ.கு.வி. (v.i.) ***இறப்பு நேரிடுதல்;*** to befall, as death. (செ.அக.).

*[இழவு + விழு.]*

**இழவுவீடு** *ilavu-vīdu,* பெ. (n.) ***சாவீடு;*** house where a death has occurred. (செ.அக.).

*[இழவு + வீடு.]*

**இழவூழ்** *ilavūl,* பெ. (n.) ***கேடுதரும் வினைப்பயன்;*** destiny which brings trouble and loss. "பேதைப் படுக்குமிழவூழ்" (குறள்.372) (செ.அக.).

*[இழவு + ஊழ்.]*

**இழவோலை** *ilavōlai,* பெ. (n.) ***சாவையறிவிக்கும் மடல்;*** funeral notice. (செ.அக.).

*[இழவு + ஓலை.]*

**இழி**[1]**-தல்** *ili-,* 2 செ.கு.வி. (v.i.) 1. ***இறங்குதல்*** (அகநா.66); to descend, dismount. 2. ***விழுதல்;*** to fall, drop down. "வெண்மதியம்... நிலத்திழிந்த தொத்தனவே" (சீவக.2238). 3. ***இழிவுபடுதல்;*** to be degra-

ded, disgraced, reduced in circumstances. "மாந்தர் நிலையி னிழிந்தக் கடை" (குறள்.964). 4. ***தாழ்தல்*** "நாலிலும்கீழிழிந்து" (திவ்.திருவாய்.3,7,9); to be inferior, low in comparison. 5. ***வெளிப்படுதல்;*** to be revealed. "வானின்றிழிந்து வரம்பிகந்த மாபூதத்தின்" (கம்பரா.அயோத்.மந்திர.1). 6. ***நுழைதல்;*** to enter into. "தருமத்தி னெறிக் கென்று மிழியா" (கம்பரா. பிரமா. 111) (செ.அக.).

ம. இழியுக; க. இழி; தெ. ஈடு, டிகு; கோத. உக்; துட. ஊக், ஊங்க்; குட. இளி; துட. இழி, இளியுனி; கொலா. டிக், டிக்கு; நா. டிக்கு; பர். இர், இர்வ், இரி; கூ. தீவ; கோண். ஈய்யானா; குவி. ரீயதி; பிரா. டரிங்கி; பட. ஈகு, எரகு.

*[இ - இழி.]*

**இழி[2]-த்தல்** *ili-*, 2 செ.குன்றாவி. (v.t.) 1. ***இறக்குதல்;*** to lower, let-down, degrade. "இழித்தனனென்னை யானே" (திருவாச.5,66). 2. ***நிந்தித்தல்;*** to condemn, despise. 3. ***அருவருத்தல்;*** to loathe. 4. ***கெஞ்சுதல்;*** to entreat, crave.

*[இ → இழி → இழி.]*

**இழிக்கப் பெறு-தல்** *ilikka-p-peru*, 13 செ.கு.வி. (v.i.) ***ஆழமாகத் தோண்டப்படுதல்;*** to be dug or sunk, as a well. 'துரவு கிணறிழிக்கப் பெறுவதாகவும்' (S.I.I. ii, 521.) (செ.அக.).

*[இழி - இழிக்க + பெறு.]*

**இழிகட்பெருங் கண்ணனார்** *ilikatperunkannanār*, பெ. (n.) ***கடைக் கழகப் புலவர்களுள் ஒருவர்;*** a Sangam poet.

*[இழிகண் + பெரும் + கண்ணன் + ஆர். இழிகண் = ஊர்ப்பெயர். (ஒ.நோ.) பூங்கண் உத்திரையார்.]*

**இழிகடை** *ili-kadai*, பெ. (n.) ***மிக இழிந்தது*** (வின்.); that which is lowest, most-mean, most degraded. (செ.அக.).

*[இழி + கடை.]*

**இழிகண்** *ili-kan*, பெ. (n.) ***பீளைநீரொழுகுங் கண்;*** blear-eyes secreting matter. "குழிந்த கண்ணனிழி கண்ணன்" (சைவச.ஆசாரிய.11) (செ.அக.).

*[இழி + கண்.]*

**இழிகு-தல்** *iligu-*, 7 செ.கு.வி. (v.i.) 1. ***தாழ்தல், இறங்குதல்;*** to come down, godown. 2. ***வீழ்தல்;*** to fall. 3. ***குத்துதல்;*** to stab.

*[இழி - இழிகு.]*

**இழிகுலத்தார்** *ilikulattār*, பெ. (n.) ***இழிந்த குலத்தார்*** low caste people. "இழிகுலத்தவர்களேனும் எம்மடி யார்களாகில்" (ஆ.அக.) (திருமாலை.42).

*[இழி + குலத்தார்.]*

**இழிகுலம்** *ili-kulam*, பெ. (n.) ***தாழ்ந்தகுடி;*** low caste or family. (அஷ்டப்.திருவரங்.கலம்.15) (செ.அக.).

ம. இழிகுலம்.

*[இழி + குலம்.]*

**இழிகை** *iligai*, பெ. (n.) ***கைச்சுரிகை;*** dagger. "பவளப் பாய்காற்பசுமணி யிழிகை" (சீவக.558) (செ.அக.).

*[இழிகு - இழிகை. இழிகுதல் = ஆழக்குத்துதல்.]*

**இழிங்கு** *ilingu*, பெ. (n.) 1. ***ஈனம்;*** meanness. 2. ***வடு;*** *scar. (ஆ.அக.).*

*[இழி → இழிங்கு.]*

**இழிச்சல்** *iliccal*, பெ. (n.) 1. ***பழித்தல்;*** despising. 2. ***இழிச்சுதல்;*** degrading. (ஆ.அக.).

*[இழி → இழிச்சல்.]*

**இழிச்சல்வாய்** *iliccalvāy*, பெ. (n.) ***திறந்தவாய்;*** open mouth.

*[இழி → இழிச்சல் + வாய்.]*

**இழிச்சு-தல்** *iliccu-*, 12 செ.குன்றாவி. (v.t.) 1. ***இறக்குதல்;*** to lower, let down, help or hand down. "அரிவழிபட்டிழிச்சிய விமானத் திறையவன்" (தேவா.584,7). 2. ***தள்ளிக் கொடுத்தல்;*** to remit, as taxes. "இறையிழிச்சிக் கொடுத்தோம்" (S.I.I. i,69). 3. ***இடித்தல்;*** to pull down, dismantle, as a building. 'திருமண்டபமிழிச்சி யெடுப்பதற்கு' (S.I.I. iii,93). 4. ***அவமதித்தல்*** (வின்.); to disgrace, insult. (செ.அக.).

*[இழி → இழிச்சு.]*

**இழிச்சொல்** *ili-c-col*, பெ. (n.) ***இழிசொல்*** (பிங்.); condemnatory, or deprecatory language. (செ.அக.).

*[இழி + சொல்.]*

**இழிசினர்** *ilicinar*, பெ. (n.) 1. ***அறிவீனர்;*** ignoramous people. 2. ***கீழ்மக்கள்;*** mean-minded people. (செ.அக.).

*[இழி → இழிசினர்.]*

**இழிசினர் மொழி** *ilicinar-moli*, பெ. (n.) ***இழிவழக்கு*** (அவப்பிரஞ்சம்) (உரி.நி.); slang, vulger dialect; corrupt language, as the spoken tongue of low, uncivilized people. (செ.அக.).

*[இழி → இழிசினர் + மொழி.]*

**இழிசினன்** *ilicinan*, பெ. (n.) 1. ***புலைமகன்;*** a man of oppressed class. "கட்டினிணக்கு மிழிசினன்" (புறநா. 82). 2. ***தாழ்ந்தோன்;*** low, uncivilized person. "இழிசி னர் வழக்கு" (தொல்.பொ.649,உரை) (செ.அக.).

*[இழி → இழிசினன்.]*

**இழிசு-தல்** *ilicu-*, 12 செ.குன்றாவி. (v.t.) ***பூசுதல்;*** to smear, plaster, spread over. "சாந்திழிசிய கோலம்" (திவ்.பெரியதி.2,8,7) (செ.அக.).

*[இழி → இழிசுதல்.]*

**இழிசொல்** *ili-col*, பெ. (n.) 1. ***பழிச்சொல்*** (பிங்.); calumny, slander. 2. ***இழிவுச்சொல்;*** blame worthy term,

improper language of four kinds, viz., பொய், குறளை, கடுஞ்சொல், பயனில் சொல் (திவா.) i.e., flasehood, calumny gossip, harsh words and the useless ones. (செ.அக.).

*[இழி + சொல்.]*

**இழிஞன்** *ilinan*, பெ. (n.) ***இழிசினன்;*** a man of oppressed class. ''இழிஞன் புலைக்கரந் தீண்டி'' (காஞ்சிப்.பரசிரா.42) (செ.அக.).

*[இழி → இழிஞன்.]*

**இழித்து-தல்** *ilittu-*, 12 செ.குன்றாவி. (v.t.) 1. ***இறக்குதல்;*** to lower, let down. 2. ***வரிநீக்குதல்;*** to remit, as taxes. 'எப்பேர்ப்பட்ட இறையும் இழித்தி' (S.I.I.iii,103); (செ.அக.).

*[இழி → இழித்து.]*

**இழிதகவு**[1] *ilidagavu*, பெ. (n.) ***இழிவு*** (பிங்.); inferiority, baseness, meanness. (செ.அக.).

*[இழி + தகவு.]*

**இழிதகவு**[2] *ilidagavu*, பெ. (n.) ***எளிமை;*** simplicity. (ஆ.அக.).

*[இழி + தகவு.]*

**இழிதிணை** *ili-tinai*, பெ. (n.) ***அஃறிணை;*** nouns and verbs referring to impers, beings. ''எல்லா மென்ப திழிதிணை யாயின்'' (நன்.245) (செ.அக.).

*[இழி + திணை. அல் + திணை - அஃறிணை என்பதே மரபு. உயர்திணை = மேன்மேலும் உயரும் மக்கள் பிரிவு. இஃதுணராத நன்னூலார் உயர்திணைக்கு எதிராக இழிதிணை எனச் சொற்படைத்தது தவறாகும்.]*

**இழிந்தார்** *ilindār*, பெ. (n.) ***தாழ்ந்தோர்;*** inferiors (ஆ.அக.).

*[இழி → இழிந்தார்.]*

**இழிந்தோர்** *ilindōr*, பெ. (n.) ***இழிந்தார்*** பார்க்க; see *ilindār* (ஆ.அக.).

*[இழிந்தார் → இழிந்தோர்.]*

**இழிப்பு** *ilippu*, பெ. (n.) 1. ***தாழ்த்திப் பேசுதல்;*** insult, contemptuous treatment ''கையறியாமாக்க ளிழிப்பு மெடுத்தேத்தும்'' (நாலடி.163.). 2. ***இழிப்புச்சுவை*** (சிலப்.3,13,உரை); sentiment of disgust. (செ.அக.).

*[இளி → இழி → இழிப்பு (மு.தா.301.).]*

**இழிப்புச்சுவை** *ilippu-c-cuvai*, பெ. (n.) ***இழிவுணர்வு*** (சிலப்.3,13,உரை); sentiment of disgust. (செ.அக.).

*[இளி - இழி - இழிப்பு + சுவை.]*

**இழிபு**[1] *ilibu*, பெ. (n.) ***குறைவு;*** little, small quantity, minimum.

*[இழி → இழிவு.]*

**இழிபு**[2] *ilibu*, பெ. (n.) ***அணிவகையுளொன்று; அஃது இழிபுதோன்றக் கூறுவது;*** a figure of speech. ''வெள்ளைக் கிழிபு'' (யா.கா.உறுப்.15) (ஆ.அக.).

*[இழி → இழிவு.]*

**இழியற்கண்** *iliyar kan*, பெ. (n.) ***இமை திறந்த கண்;*** eye the lids of which remain open. (ஆ.அக.).

*[இழி + அல் + கண்.]*

**இழியினன்** *iliyinan*, பெ. (n.) ***இழிசினன்*** பார்க்க; see *ilisinan*. ''இழியினர்க்கே யானும் பசித்தார்க் கூணீதல்'' (சிறுபஞ்.75).

*[இழி → இழியினன்.]*

**இழிவழக்கு** *ili-valakku*, பெ. (n.) ***இழிசினர் வழக்கு*** (தொல்.எழுத்.64,நச்.); slang, vulgar usage. (செ.அக.).

*[இழி + வழக்கு.]*

**இழிவு** *ilivu*, பெ. (n.) 1. ***தாழ்வு*** (பிங்.); inferiority, lowness, baseness. 2. ***இகழ்ச்சி*** (சூடா.); disgrace, dishonour, ignominy. 3. ***குறைவு;*** diminution, decrease, deficiency. ''இழிவறிந்துண்பான்'' (குறள்.946). 4. ***கேடு*** (திவா.); ruin, destruction. 5. ***குற்றம்*** (திவா.); fault, blemish. 6. ***தீட்டு;*** pollution, defilement. ''இழிவு தொடக் கிற்று'' (பெரியபு. நமிநந்.24). 7. ***பள்ளம்*** (திவா.); hollow, depression, pit. (செ.அக.).

**ம., க.** இழிவு; **தெ.** திகுவு.

*[உள் → இள் → இளி → இழி - இழிவு (மு.தா.301).]*

**இழிவுச்சிறப்பு** *ilivu-c-cirappu*, பெ. (n.) ***ஒன்றிற்கேயுள்ள இழிவைக் காட்டியது;*** indicative of baseness as a special quality. (ஆ.அக.).

*[இழிவு + சிறப்பு.]*

**இழிவுச்சிறப்பும்மை** *ilivu-c-cirappummai*, பெ. (n.) ***இழிவின் மிகுதியை விளக்கும் உம்மை;*** particle expressing marked inferiority.

*[இழிவு + சிறப்பும்மை.]*

**இழிவுபடல்** *ilivu-padal*, பெ. (n.) ***ஈனப்படல்;*** get insulted. (ஆ.அக.).

*[இழிவு + படல்.]*

**இழிவுபடுத்தல்** *ilivupaduttal*, பெ. (n.) ***தாழ்வுபடுத்தல்;*** demean. (ஆ.அக.).

*[இழிவு + படுத்தல்.]*

**இழிவுபண்ணல்** *ilivupannal*, பெ. (n.) ***தாழ்வு படுத்துதல்;*** insult. (ஆ.அக.).

*[இழிவு + பண்ணல்.]*

**இழினெனல்** *ilin-enal*, பெ. (n.) ***ஓர் ஒலிக்குறிப்பு;*** onom expr. to denote the bustle and stir in an inhabited house. ''ஏந்து மாடங்க டாமிழி னென்பன'' (சீவக. 2315) (செ.அக.).

*[இழி → இழினெனல்.]*

**இழு-த்தல்** *ilu-*, 4 செ.குன்றாவி. (v.t.) 1. ***ஈர்த்தல்;*** to draw, pull, haul, drag along the ground. 2. ***கவர்தல்;*** to draw to oneself, attract as a magnet. 3. ***வயப்படுத்துதல்;*** to influence, persuade by coaxing, wheedle. 4. ***நீளச் செய்தல்;*** to lengthen, stretch, attenuate by pulling, draw out. 5. ***வலிந்து தொடர்பு படுத்துதல்;*** to drag one into an affair; to haul up a person, as to court; to delibrately bring in one's name in support of an argument. 6. ***காலநீட்டித்தல்*** (கொ.வ.); to protract as time. 7. ***ஒலியை நீட்டுதல்*** (கொ.வ.); to lengthen, as the sound in singing, speaking or in reading. 8. ***உள்வாங்குதல்;*** to draw into, as whirlwind; to swallow up, engulf, as vortex in a stream. 'வெள்ளம் இழுக்கிறது'. 9. ***உறிஞ்சுதல்;*** to absorb, as a sponge. - 3 செ.கு.வி. (v.i.) 1. ***வலிப்புண்டாதல்;*** to have one's features or limbs distorted in spasms, have convulsions; to be twitched with pain, often used impersonally. 'கைகால் வாயுவினால் இழுக்கிறது'. 2. ***மூச்சு வாங்குதல்;*** to grasp for breath, as from asthma or from approach of death. 3. ***பின்வாங்குதல்;*** to draw back, retreat. (செ.அக.).

ம. இழு; க. இழ்; தெ. இடு, ஈட்சு; பட. இகி.

*[உ - உள் - இள் - இழு.]*

**இழுக்கடி-த்தல்** *ilukkadi-*, 3 செ.குன்றாவி. (v.t.) ***அலையவைத்தல்;*** cause vexatious trouble to a person by constantly putting off the fulfilment of an obligation to him. "இழுக்கடித்தாய் நெஞ்சே" (தாயு.உடல்பொய். 65) (செ.அக.).

*[இழு → இழுக்கடி.]*

**இழுக்கம்** *ilukkam*, பெ. (n.) 1. ***பிழை;*** fault, offence, transgression. 'நாளிழுக்கம் நட்டார் செயின்' (குறள். 808). 2. ***ஒழுக்கந் தவறுகை;*** violation of social and caste rules. "இழுக்க மிழிந்த பிறப்பாய் விடும்" (குறள். 133). 3. ***ஈனம்;*** ignominy, discomfiture. "மழுவாளவ னிழுக்க முற்ற வன்றினும்" (கம்பரா.அயோத்.மந்திர. 41) (செ.அக.).

*[இழு → இழுக்கு → இழுக்கம் (மு.தா.116).]*

**இழுக்கல்**[1] *ilukkal*, பெ. (n.) 1. ***தளர்வு*** (திவா.); languor, lassitude, enfeeblement. 2. ***வழுக்குகை;*** slipping, gliding. "இழுக்க லுடையுழி யூற்றுக்கோ லற்றே" (குறள்.415) (செ.அக.).

க. இழிகெ.

*[இழு - இழுக்கல்.]*

**இழுக்கல்**[2] *ilu-k-kal*, பெ. (n.) ***வழுக்குநிலம்;*** slippery ground. (ஆ.அக.).

*[இழு - இழுக்கல்.]*

**இழுக்காமை** *ilu-k-kāmai*, பெ. (n.) ***மறவாமை;*** remembering. "இழுக்காமை யார்மாட்டும்" (குறள்.536) unforgetting. (ஆ.அக.).

*[இழுக்கு + ஆமை. 'ஆ' எ.ம.ஈறு.]*

**இழுக்காறு** *ilukkāṟu*, பெ. (n.) ***தீநெறி;*** evilway; path of iniquity. "இழுக்காற்றி னேதம் படுபாக்கறிந்து" (குறள்.164) (செ.அக.).

*[இழுக்கு + ஆறு. ஆறு = வழி.]*

**இழுக்கியான்** *ilu-k-kiyāṉ*, பெ. (n.) ***மறந்திருந்தவன்;*** one who did not remember. "முன்னுறக் காவாது இழுக்கியான்" (குறள்.535) (ஆ.அக.).

*[இழுக்கியவன் - இழுக்கியான்.]*

**இழுக்கு**[1]**-தல்** *ilukku-*, 7 செ.கு.வி. (v.i.) 1. ***தவறுதல்*** (சீவக.2238); to slip down from a great height, fall from a high rank. 2. ***துன்புறுதல்*** (அகநா.18); to suffer misery, undergo pain. 3. ***வழுக்குதல்*** (சீவக.476); to slip, slide. 4. ***தளர்தல்*** (திவா.); to grow weak, lose vigour; to become dispirited. 5. ***அகப்படுதல்*** (சிலப்.12, 24, அரும்.); to be caught, entrapped. 12 செ.குன்றாவி. (v.t.) 1. ***மறத்தல்;*** to forget. "முன்னுறக் காவா திழுக்கி யான்" (குறள்.535). 2. ***இழத்தல்;*** to lose. "மகிழ்நகை யிழுக்கியான்" (புறநா.71). 3. ***கடிதல்;*** to give up, avoid. "நான்கு மிழுக்கா வியன்ற தறம்" (குறள்.35). 4. ***அழித்தல்*** (சிலப்.12,24); to destroy. (செ.அக.).

க. இழிகு.

*[இழு - இழுக்கு.]*

**இழுக்கு**[2] *ilukku*, பெ. (n.) 1. ***பொல்லாங்கு*** (பிங்.); evil, vice, wickedness. 2. ***இகழ்ச்சி*** (நிந்தை); disgrace, reproach. 'தன்குலத்துக் கிழுக்கு வைத்தான்' (வின்.). 3. ***வழு;*** imperfection, flaw, defect. "இழுக்குடைய பாட்டிற் கிசைநன்று" (நல்வழி.31). 4. ***தாழ்வு;*** inferiority, baseness. 'இழுக்கான பொன்னைப் புடத்தில் வைத்தெடுப்பார்கள்'. வ.உ. 5. ***மறதி*** (திவா.); forgetfulness. 6. ***வழுக்குநிலம்;*** slippery ground. "நூழிலுமிழுக்கும்' (குறிஞ்சிப்.258) (செ.அக.).

ம. இழுக்கு.

*[இழு → இழுகு → இழுக்கு.]*

**இழுக்கு**[3]**-தல்** *ikku-*, 7 செ.கு.வி. (v.i.) ***சாதல்;*** to die. "முள்ளினெய்தெற விழுக்கிய கானவர்" (மலைபடு. 301, உரை.) (செ.அக.).

ம. இழுக்குக; க. எழவு.

**இழுக்குச்சொல்** *ilukku-c-col*, பெ. (n.) ***ஈனமான சொல்;*** slang term. (ஆ.அக.).

*[இழுக்கு + சொல்.]*

**இழுக்குடையான்** *ilukkudaiyaṉ*, பெ. (n.) ***கீழானவன்;*** low, uncivilized person. (ஆ.அக.).

*[இழுக்கு + உடையான்.]*

**இழுக்குப்பொடுக்கெனல்** *ilukku-p-podukkenal*, பெ. (n.) ***எச்சரிக்கைக் குறிப்பு*** (J.); expr. of warning. (செ.அக.).

*[இழுக்கு + பொடுக்கு + எனல்.]*

**இழுகு-தல்** *iḻugu,* 7 செ.கு.வி. (v.i.) 1. ***வீசுதல்;*** waft, blow, as the wind. ''தென்றலிழுக மெலிந்து'' (கம்பரா. ஊர்தேடு.174). 2. ***பரத்தல்;*** to extend, spread over. ''மழைக்குலமிழுகித் திக்கெலாம்'' (கம்பரா.இராவணன் வதை.62). 3. ***படிதல்;*** to settle, as particles of dust. ''சீறடி கதுவுந்துகளிழுகப் பெற்றனன்'' (உபதேசகா. சூராதி.73). 4. ***தாமதித்தல்*** (J.); to procrastinate, linger; to be tardy. - 5 செ.குன்றாவி. (v.t.) ***பூசுதல்;*** to daub, to smear, rub over, as mortar. ''வெண்சுதையிழு கிய மாடத்து'' (மணி.6,43) (செ.அக.).

*[இழு → இழகு → இழுகு (மு.தா.329).]*

**இழுகுணி** *iḻuguṇi,* பெ. (n.) 1. ***சோம்பேறி;*** procrastinating person, sluggard. 2. ***இவறன்;*** miser. (செ.அக.).

*[இழுகு + உணி]*

**இழுகுபறை** *iḻugu-paṟai,* பெ. (n.) ***துடிப்பறை*** (அகநா. 19, உரை); small drum shaped like an hour-glass. (செ.அக.).

*[இழுகு + பறை.]*

**இழுங்கு** *iḻuṅgu,* பெ. (n.) ***நீங்குகை*** (சீவக.3093, உரை.); separation, withdrawal (செ.அக.).

*[இழு - இழுகு - இழுங்கு.]*

**இழுத்தல்** *iḻuttal,* பெ. (n.) ***ஈர்த்தல்;*** to draw or pull, as in drawing a wire. 2. ***மூச்சு வாங்கல்;*** to gasp for the breath, as in asthma or on the approach of death. 3. ***வலிப்புண்டாதல்;*** having convulsions; to twitch, with pain. 4. ***உள்வாங்குதல்;*** to draw into; to swallow up. 5. ***உறிஞ்சுதல்;*** to absorb. (சா.அக.).

*[இள் → இழு → இழுத்தல்.]*

**இழுத்துக்கொண்டு நில்(ற்)-த(ற)ல்** *iḻuttu-k-koṇḍu-nil-,* 14 செ.கு.வி. (v.i.) 1. ***இகலிமாறுபடுதல்*** (கொ.வ.); to pull against; to draw away from each other, as refractory oxen in yoke. (செ.அக.).

*[இழுத்து + கொண்டு + நில்]*

**இழுத்துப்பறி-த்தல்** *iḻuttu-p-paṟi,* 14 செ.குன்றாவி. (v.t.) ***வலிந்து கொள்ளுதல்;*** to take away by force. ''அடர்ந்தியமனிழுத்துப் பறிக்கில்'' (அருட்பா.5 வேட்கை.4) - 4. செ.கு.வி. (v.i.) 1. ***பெருமுயற்சி செய்தல்;*** put forth great and protracted effort. 'இழுத்துப் பறித்து அந்தக் காரியம் நடந்தது.' 2. ***போராடுதல்;*** to struggle against, contend. 'அவனோடு இழுத்துப் பறித்துக் கொண்டு நிற்கிறான்.' (செ.அக.).

*[இழுத்து + பறி.]*

**இழுத்துப் பிடித்தல்** *iḻuttu-p-piḍittal,* பெ. (n.) ***கை,கால்,வயிறு முதலிய பாகங்களில் தசை சுருங்கு வதால் திடீரெனக் காணும் ஒருவகை நிலைமை;*** sudden involuntary rigid contraction of limbs, abdomen etc. due to mascular action - spasm. (சா.அக.).

*[இழுத்து + பிடித்தல்.]*

**இழுத்துப்பேசு-தல்** *iḻuttu-p-pēsu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. ***நிறுத்தி மெள்ளப்பேசுதல்;*** to speak slowly, in a measured manner. 2. ***நழுவ விட்டுப் பேசுதல்;*** to speak evasively. (செ.அக.).

*[இழுத்து + பேசு.]*

**இழுத்துவிடு-தல்** *iḻuttu-viḍu-,* 18 செ.குன்றாவி. (v.t.) 1. ***செயலை நீட்டித்து விடுதல்;*** to protract, delay, continue putting off indefinitely. 2. ***வலிந்து தொடர்புண் டாக்குதல்;*** to drag, as into court. அவனை அந்த வழக்கில் இழுத்து விட்டார்கள். 3. ***வெளிப்படுத்து தல்;*** to make public, as one's faults. 'கமுக்கத்தையெல் லாம் இழுத்து விட்டான்.' 4. ***புதிதாய் உண்டாக்குதல்;*** to bring about, cause produce. 'இம் மருந்து வயிற்று வலியை இழுத்து விட்டது' (செ.அக.).

*[இழுத்து + விடு.]*

**இழுது**[1] *iḻudu,* பெ. (n.) ***தித்திப்பு*** (நாநார்த்த.); sweetness. (செ.அக.)

*[இள் → இழு → இழுது.]*

**இழுது**[2] *iḻudu,* பெ. (n.) 1. ***வெண்ணெய்;*** butter. "இழுதார்மென் பள்ளிமேல்" (சீவக.1576). 2. ***நெய்;*** ghee. ''இழுதமை யெரிசுடர் விளக்கு'' (சீவக.2630). 3. ***நிணம்;*** fat, grease. ''இழுதுடையினமீன்'' (கம்பரா. வருண.29). 4. ***தேன்;*** honey. இழுதார்...பூ (சீவக. 3137). 5. ***குழம்பு;*** thick semi-liquid substance. ''சேறிழுது செய்யினுள்'' (பெரியபு.திருநாட்.12). 6. ***சேறு;*** mud. (செ.அக.).

ம. விழுது.

*[இள் → இழு → இழுது.]*

**இழுது**[3]**-தல்** *ilaudu-dal.* 2 செ.கு.வி. (v.i.) ***கொழுத்தல்;*** grow fat. (சா.அக.).

*[இள் → இழு → இழுது.]*

**இழுதை** *iḻudai* பெ. (n.) 1. ***அறிவின்மை;*** ignorance. ''இழுதை நெஞ்சமிதென்படுகின்றதே'' (தேவா.1203.8). 2. ***பேய்*** (சங்.அக.); devil. 3. ***பொய்*** (சங்.அக.); falsehood. 4. ***முட்டாள்;*** ignorant person. (செ.அக.).

*[இழு → இதை.]*

**இழுப்பறை** *iḻuppaṟai,* பெ. (n.) ***செருகுபெட்டியின் அறை*** (வின்.); drawer. (செ.அக.).

*[இழுப்பு + அறை.]*

**இழுப்பாசாமி** *iḻuppāšāmi,* பெ. (n.) ***ஒழுங்கற்ற நடத்தையுள்ளவன்;*** immoral person. (செ.அக.).

*[இழுப்பு + ஆசாமி.]*

**இழுப்பாட்டம்** *iḻuppāṭṭam,* பெ. (n.) 1. ***காலச்சுணக் கம்;*** tardiness, procrastination, lingering 2 ***உறுதி யின்மை*** (யாழ்ப்.); uncertainty. (செ.அக.).

*[இழுப்பு + ஆட்டம்.]*

**இழுப்பாட்டியம்** *iluppāttiyam,* பெ. (n.) ***இழுப்பாட்டம்*** பார்க்க; see *iluppāttam.* (செ.அக.).

*[இழுப்பு + ஆட்டியம்.]*

**இழுப்பாணி**[1] *iluppāṇi,* பெ. (n.) ***சுணக்கம் செய்பவன்*** (J); one who delays or postpones; a lingerer. (செ.அக.).

*[இழுப்பு + ஆளி - இழுப்பாளி - இழுப்பாணி.]*

**இழுப்பாணி**[2] *iluppāṇi,* பெ. (n.) ***ஏர்க்காலை நுகத்தில் பூட்டும் முளை*** (ஆணி.) (யாழ்ப்.); movable peg which fastens the yoke to the beam of the plough. (செ.அக.).

*[இழுப்பு + ஆணி.]*

**இழுப்பாளி** *ilu-p-pāli,* பெ. (n.) ***காலத்தாழ்வு செய் பவன்;*** procrastinator. (ஆ.அக.).

*[இழுப்பு + ஆளி.]*

**இழுப்பு**[1] *iluppu,* பெ. (n.) 1. ***இழுக்கை;*** drawing, pulling. 2. ***கவர்ச்சி;*** attraction. 3. ***இசிவுநோய்;*** spasm, convulsion. 4. ***ஈளைநோய்*** (சுவாசகாசம்) (தைலவ. தைல.117); asthma. 5. ***நீரிழுப்பு;*** force of a current of water. 6. ***காலத்தாழ்வு;*** procrastination, delay. 'காரியம் இன்னும் இழுப்பிலேயிருக்கிறது'. 7. ***குறைவு;*** deficiency, insufficienty. 'செலவுக்குப் பணம் இழுப்பாயிருக் கிறது'. 8. ***நிச்சயமின்மை;*** doubtfulness, uncertainty. 'அவன் வார்த்தை இழுப்புத்தான்.' (செ.அக.).

**ம.** இழுப்பு; **தெ.** ஈடுபு.

*[இள் → இழி → இழு → இழுப்பு.]*

**இழுப்பு**[2] *ilu-p-pu,* பெ. (n.) ***நீட்டி இசைத்தல்;*** flow of music. (ஆ.அக.).

*[இழு → இழுப்பு.]*

**இழுப்புண்ணுதல்** *iluppunṇudal.* பெ. (n.) ***இழுக்கப்ப டுதல்;*** being drawn. (ஆ.அக.).

*[இழுப்பு + உண்ணுதல்.]*

**இழுப்புத்தேர்** *iluppu-t-tēr,* பெ. (n.) ***இழுத்துச்செல லும் தேர்*** (w.); temple car to be dragged dist. for eduppu-t-tēr. (செ.அக.).

*[இழுப்பு + தேர்.]*

**இழுப்புப்பறிப்பா-தல்** *iluppu-p-parippā-,* 6 செ.கு.வி. (v.i.) 1. ***போராட்டமாதல்;*** to be in a state of scuffling and struggling; to be in a problematical or unsettled condition. 2. ***போதியதும், போதாததும் ஆதல்;*** to be scarce. (செ.அக.).

*[இழுப்பு + பறிப்பு + ஆதல்.]*

**இழுப்புப்பறிப்பு** *iluppu-p-parippu,* பெ. (n.) 1. ***ஒழுங்கீனமான நடக்கை;*** immorality "அவனுக்கு இழுப்புப் பறிப்புண்டு". 2. ***கடன்,*** debt. (செ.அக.).

*[இழுப்பு + பறிப்பு.]*

**இழுப்பும்பறிப்புமா-தல்** *iluppum-parippumā-,* 6 செ.கு.வி. (v.i.) ***இழுப்புப்பறிப்பா-தல்*** பார்க்க; see *iluppu-p-parippā.* (செ.அக.).

*[இழுப்பும் + பறிப்பும் + ஆ.]*

**இழுப்புமாந்தம்** *iluppu-māndam,* பெ. (n.) ***செரியாமை நோய்வகை*** (சீவரட்.); digestive disorder in children accompanied by fits. (செ.அக.).

*[இழுப்பு + மாந்தம்.]*

**இழுப்புவலை** *iluppu-valai,* பெ. (n.) ***மீன்பிடிக்கும் வலைவகை*** (pond.); a kind of fishing net. (செ.அக.).

*[இழுப்பு + வலை.]*

**இழுபறி**[1] *ilu-pari.* பெ. (n.) ***இழுவை, 1, 2.*** பார்க்க; see *iluvai.* (செ.அக.).

*[இழு + பறி.]*

**இழுபறி.**[2] *ilupari,* பெ. (n.) ***போராட்டம்;*** scuffle, struggle. 'அவனோடு பெரிய இழுபறியாயிருக்கிறது' (செ.அக.).

*[இழு + பறி.]*

**இழும்** *ilum,* பெ. (n.) 1. ***தித்திப்பு*** (பிங்.); sweetness. 2. ***மகிழ்ச்சி*** (ஆ.அக.); happiness. (செ.அக.).

*[இள் → இழு → இழும்.]*

**இழுமு** *ilumu.* பெ. (n.) ***தித்திப்பு;*** sweetness. (சா.அக.).

*[இழு → இழுமு.]*

**இழுமெனல்** *ilum-eṉal,* பெ. (n.) 1. ***ஒலிக்குறிப்பு*** "ஏம முரச மிழுமென முழங்க" (புறநா.3). 2. ***இன்னோ சைக் குறிப்பு*** (தொல்.பொருள்.550); sweet, pleasant, agreeable sound, both vocal and instrumental. 3. ***வழுவ ழுப்பு;*** slipperiness. (செ.அக.).

*[உள் → இள் → இழு → இழும் → இழுமெனல்.]*

**இழுவல்** *iluval,* பெ. (n.) 1. ***இழுக்கை;*** drawing, pulling. 2. ***சுணக்கம்;*** putting off, delaying, postponing. 'வழக்கு இன்னும் முடியாமல் இழுவலிலிருக்கிறது'. 3. ***தன் செயலில் கவனமின்றிப் பிறர் செயலில் வீணே நுழைபவன்*** (யாழ்ப்.); one who neglects his own affairs and busies himself with those of others; a busy-body. 4. ***சுறுசுறுப்பில்லாதவன்;*** lazy, slothful person. 'அவன் பெரிய இழுவல்'. 5. ***குறைவு;*** a deficiency as of money.'கையில் பணம் இழுவலாயிருக்கி றது' (இ.வ.). 6. ***உறுதியின்மை;*** uncertainty, unreliability. 'அவன் பேச்சு இழுவல்தான்'. (இ.வ.) (செ.அக.).

ம. இழுவலி.

*[இழு → இழுவல்.]*

**இழுவல் நழுவல்** *iluval-naluval,* பெ. (n.) ***உறுதி யின்மை*** (பாவலர்சரித்.11); uncertainty. (செ.அக.).

*[இழுவல் + நழுவல்.]*

**இழுவை**[1] *iḻuvai,* பெ. (n.) 1. ***பணியில் சுணக்கம்*** (இ.வ.); delay, procrastination, dilatoriness. 2. ***இடைஞ்சல்;*** obstruction. "நற்குடிக்குத் துன்பமடா நாளும் பல விழுவை". (பஞ்ச.திருமுக.768). 3. ***ஒரு முட்செடி*** (வின்.); thorny shrub. (செ.அக.).

*[இழு → இழுவை.]*

**இழுவை**[2] *iḻuvai,* பெ. (n.) 1. ***இழுக்கை;*** dragging, pulling, as of the eddies in a stream. 'வெள்ளத்தின் இழுவை அதிகம்'. 2. ***இழுக்கப்படுவது*** (வின்.); things drawn, as thorns, fishes or timber. 3. ***வடம்*** (வின்.); long rope for draught, cable. 4. ***இழுத்த தடம்;*** track made on the ground by a thing which is drawn. 'இழுவை கண்டால் அடிபார்க்கிறதேன்?' (உ.வ.) (செ.அக.).

*[இழு → இழுவை.]*

**இழுவைக்கயிறு** *iḻuvai-k-kayiṟu,* பெ. (n.) 1. ***இழுக் குங் கயிறு;*** rope used to pull or draw. 2. ***நெடுங்கயிறு;*** long rope.

*[இழு → இழுவை + கயிறு.]*

**இழை**[1]**-தல்** *iḻai-,* 4 செ.கு.வி. (v.i.) 1. ***நூற்கப்படுதல்;*** to be reeled as yarn. "இழைந்த நூலிணை" (கம்பரா.சித் திர.9). 2. ***உராய்தல்;*** to rub against as the shoots of the bamboo tree. 'மூங்கில் ஒன்றோடொன்று இழைந்து பற்றிக்கொள்ளும்' (உ.வ.). 3. ***சோறு குழைதல்*** (வின்.); to become soft and pasty, as boiled rice by being overcooked. 4. ***நெருங்கிப் பழகுதல்;*** to associate intimately. 'அவர்களிருவரும் இப்போது நிரம்ப இழைகிறார்கள்' (உ.வ.). 5. ***உள் நெகிழ்தல்;*** to have tender emotions, as in love. 'விழைந்திழைந்து வேண்டியவர்க் கண்ட கண்' (குறள். 1177). 6. ***கூடு தல்;*** to be together, as husband and wife. "இழைந்தவர் நலத்தை யெய்தி" (சீவக.2720). 7. ***பிணைதல்;*** to copulate as snakes. 'பாம்புகள் ஒன்றோ டொன்றிழையும்' (வின்.). 8. ***மூச்சு சிறுகுதல்;*** breathe in a scarcely audible manner, as by a dying person. 'உயிரிழைந்து கொண்டிருக்கிறது' 9. ***மனம் பொருந்து தல்;*** to agree, be in accord. "இழையச் சொல்லி" (சீவக.1593) (செ.அக.).

*[இள் → இழை.]*

**இழை**[2]**-தல்** *iḻai-,* 2 செ.கு.வி. (v.i.) ***மெலிதல்;*** to become emaciated, reduced. 'குழந்தை நூலாய் இழைந்து விட்டது'. (செ.அக.).

*[இள் → இழை.]*

**இழை**[3]**-த்தல்** *iḻai-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. ***நூற்றல்;*** to spin. "சின்னூல் பலபல வாயாலிழைத்துச் சிலம்பி பின்னும்" (அட்டப்.திருவரங்.மாலை,18). 2. ***செய்தல்;*** to make do, construct, fabricate. "இழைத்தவிச் சிற்றிலை" (திவ்.நாச்.2,2). 3. ***சூழ்தல்*** (சீவக.1089); to turn over in one's mind, deliberate calmly, consider. 4. ***செதுக்குதல்*** (ஈடு.1.4,7); to plane, scrap off. 5. ***நுண்பொடியாக்குதல்*** (பரிபா.10.91); to grind into fine powder. 6. ***மா முதலியன மெதுவாக்குதல்;*** to make soft, as fine powder. "இழையஞ்சன மால்களிறு" (கம்பரா. அதிகாய.21). 7. ***பதித்துச் செய்தல்;*** to set, as precious stones. "மணியினிழைத்த செய்குன்றின்" (நைடத.நகர.6). 8. ***கூறுதல்;*** to utter, say. "கிழவனை நெருங்கி யிழைத்து" (தொல்.பொ.150). 9. ***விதித்தல்;*** to appoint, determine, destine, fix. "இழைத்த நாளெல்லை கடப்பதன்றால்" (தேவா. 727,5). 10. ***வரைதல்;*** to paint, draw, daub. "குங்கும வருணங் கொங்கையினி ழைத்து" (சிலப்.14,90). 11. ***அமைத்தல்;*** to take, accept. "பொற்பாவிழைத்துக் கொளற்பாலர்" (சீவக.4). 12. ***திரட்டி வைத்தல்;*** to store up. "பொங்கரி னிழைத்த" (மாறன.பக்.244). 13. ***தீர்மானித்தல்;*** to determine; to take a vow. "இழைத்த திகவாமை" (குறள்.779). 14. ***மாத்திரை முதலியன உரைத்தல்*** (கொ.வ.); to rub so as to be dissolved as a pill in honey or milk. 15. ***இழையாக்குதல்;*** to divide into strands as a thread. "கதிரிலுள்ள நூலையிழைத்தான்" (கொ.வ.). 16. ***நிமிண்டுதல்;*** to squeeze the flesh so as to give pain. 'கன்னத்தைப் பிடித்து இழைத்தான்' (இ.வ.). 17. ***பஞ்சு முதலியன ஆய்ந்தெடுத்தல்*** (வின்.); to select, pickout, separate; to cull, as cotton. 18. ***பின்னுதல்;*** to braid, as mats; to plait, weave. 'பாயிழைத்தான்' (J.). 19. ***நுண்ணிதாக ஆராய்தல்;*** to scrutinize. "'இழைத்துணர்ந்து" (குறள்.417) - செ.கு.வி. (v.i.) மூச்சிரைத்தல்; to breathe hard. (செ.அக.).

*[இள் → இழை. இழைத்தல் (வே.க.23).]*

**இழை**[4] *iḻai,* பெ. (n.) 1. ***நூல்;*** yarn, single twisted thread. "பனுவலிழையாக" (நன்.24). 2. ***நூலிழை;*** darning. 3. ***கல் இழைத்த அணிகலன்;*** ornament. "வாலிழை மடமங்கையர்" (புறநா.11,2). 4. ***மாதரணி வடம்*** (பிங்.); kind of necklace, garland. 5. ***கையிற் கட்டுங் காப்பு*** (வின்.); string tied about the wrist for a vow. (செ.அக.).

**ம.** இழ; **க.** எழெ; **தெ.** எள; **கோத.** எள்; **து.** எழெ; **குவி.** இச.

*[இள் → இழை.]*

**இழைக்கட்டி** *iḻai-k-kaṭṭi,* பெ. (n.) ***கழலை வகை*** (இங்.வை.); fibrous tumour. (செ.அக.).

*[இழை + கட்டி.]*

**இழைக்கட்டு** *iḻai-k-kaṭṭu,* பெ. (n.) ***காப்புக்கட்டு*** (வின்.); tying of a string on the wrist for religious ceremonies and for vows. (செ.அக.).

*[இழை + கட்டு.]*

**இழைக்கயிறு** *ilai-k-kayiru,* பெ. (n.) 1. ***நூற்கயிறு;*** cord, piece of string. 2. ***காப்பு நூல்*** (வின்.); thread or string fastened as an amulet about the hair, on the arm or around a tree. (செ.அக.).

ம. இழக்கயிறு.

*[இழை + கயிறு.]*

**இழைக்குதல்** *ilaikkudal,* பெ. (n.) 1. ***கலத்தல்;*** mixing. 2. ***மருந்து கலத்தல்;*** *compounding medicine.* 3. ***இழைத்தல்;*** to rub with a liquid on a flat stone; the reduction of solid bodies to a powder by continuous rubbing. (சா.அக.).

*[இழை → இழைக்கு.]*

**இழைக்குளிர்ச்சி** *ilai-k-kulircci,* பெ. (n.) ***இழைக் குளிர்த்தி*** பார்க்க; see *ilaikkulirtti.* (செ.அக.).

*[இழை + குளிர்ச்சி.]*

**இழைக்குளிர்த்தி** *ilai-k-kulirtti,* பெ. (n.) ***ஆடையின் மென்மை*** (இ.வ.); fine texture of cloth pleasing to the sight. (செ.அக.).

*[இழை + குளிர்த்தி.]*

**இழைக்கோல்** *ilaikkōl,* பெ. (n.) ***பின்னல் ஊசி;*** knitting - needle. (சேரநா.).

ம. இழக்கோல்.

*[இழை + கோல்.]*

**இழைகூடு** *ilai-kūdu,* பெ. (n.) ***சிறு மரச்சட்டகத்துள் கூர்நுனி மட்டும் வெளியே அமைந்த உளிவகை*** (வின்.); joiner's plane. (செ.அக.).

*[இழை + கூடு.]*

**இழைகொள்(ளு)-தல்** *ilai-kol-,* 7 செ.குன்றாவி. (v.t.) ***தைத்தல்*** (பதிற்றுப்.42, உரை); to sew, stitch. (செ.அக.).

*[இழை + கொள்.]*

**இழைநெருக்கம்** *ilainerukkam,* பெ. (n.) ***ஆடையின் மென்மை;*** fine texture of the cloth.

*[இழை + நெருக்கம்.]*

**இழைப்படம்** *ilaippadam,* பெ. (n.) ***இரத்தினக்கல் பதித்துச் செதுக்கிச் செய்யும் வேலைப்பாடு;*** encasing gems in gold, by a kind of fine work, dist. fr. கட்டடம். (செ.அக.).

*[இழை - இழைப்பு - இழைப்படம். அடம் - சொல்லாக்க ஈறு.]*

**இழைப்பு**[1] *ilaippu,* பெ. (n.) ***செய்தொழில்;*** exertion, work; application of effort. ''உழைக்கல மகளிரு மிழைப்பி ரிந்தரற்றவும்'' (பெருங்.உஞ்ஞைக்.46,334) (செ.அக.).

*[இழை → இழைப்பு.]*

**இழைப்பு**[2] *ilaippu,* பெ. (n.) ***காசநோய்*** (இ.வ.); asthma. (செ.அக.).

*[இழு - இழுப்பு - இழைப்பு.]*

**இழைப்புடைவை** *ilai-p-pudavai,* பெ. (n.) ***நூலினால் நெய்யப்பட்ட சேலை;*** (ஆ.அக.); saree with woven - in design.

**இழைப்புளி** *ilaippuli,* பெ. (n.) ***இழைக்குந் தச்சுக் கருவி;*** tool for smoothening wooden surface, joiners plane, trying plane. (செ.அக.).

*[இழைப்பு + உளி.]*



இழைப்புளி

**இழைப்புளியலகு** *ilaippuli-y-alagu,* பெ. (n.) ***இழைப் புளியிரும்பு*** (C.E.M); steel chisel in a plane. (செ.அக.).

*[இழைப்பு + உளி + அலகு.]*

**இழைபிடி-த்தல்** *ilai-pidi-,* 4 செ.குன்றாவி. (v.t.) ***காயந் தைத்தல்*** (வின்.); to stritch up, as a wound. (செ.அக.).

*[இழை + பிடி.]*

**இழைபு** *ilaibu* பெ. (n.) ***வல்லொற்று வராது செய்யுளி யலுடையரால் எழுத்தெண்ணி வகுக்கப்பட்ட குற ளடி முதலாப்பதினேழ் நிலத்து ஐந்தடியு முறை யானே உடைத்தாய் ஓங்கிய சொற்களான் வருவது.*** (அபி.சிந்.); poetic composition in an easy flowing style of writing consisting of choice diction in which long vowels, soft consonants and the liquids 'l' and 'ḷ' are prominent and hard consonants are avoided.

*[இழை - இழைபு.]*

**இழைபோடு-தல்** *ilai-pōdu-,* 19 செ.குன்றாவி. (v.t.) ***இழையாடு*** பார்க்க; see *ilaiyādu.*

*[இழை + போடு.]*

**இழைமுருந்து** *ilai-murundu* பெ. (n.) ***நார்த்தசைக ளினா லாக்கப்பட்ட முருந்து;*** tough and elastic cartilage containing a large amount of fibrous tissue. (சா.அக.).

*[இழை + முருந்து.]*

**இழையாடு-தல்** *iḻai-y-āḍu-,* 12 செ.குன்றாவி. (v.t.) ***நூலால் தைத்தல்;*** to darn, draw together in sewing. (செ.அக.).

*[இழைபு + ஆடு.]*

**இழையிடு-தல்** *iḻai-y-iḍu-,* 18 செ.குன்றாவி (v.t.) ***இழையாடு*** பார்க்க; see *iḻaiyāḍu.* (செ.அக.).

*[இழை + இடு.]*

**இழையூசி** *iḻai-y-ūsi,* பெ. (n.) ***இழைவாங்கி;*** darning-needle. (செ.அக.).

ம. இழக்கோல்.

*[இழை + ஊசி.]*

**இழையோட்டு-தல்** *iḻai-y-ōṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) ***இழையாடு*** பார்க்க: see *iḻaiyāḍu.*

*[இழை + ஒட்டு.]*

**இழையோடு-தல்** *iḻai-y-ōḍu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. ***நூற்சரடு செல்லுதல்;*** to wind thread on a spindle. 2. ***மூச்சுக் குறைந்தோடுதல்*** (கொ.வ.); to breathe very gently, as when nearing death. (செ.அக.).

*[இழை + ஓடு.]*

**இழைவாங்கி** *iḻai-vāṅgi,* பெ. (n.) ***இழையூசி;*** darning - needle. (செ.அக.).

*[இழை + வாங்கி.]*

**இள்(ளு)-தல்** *iḷ(ḷu),* 15 செ.கு.வி. (v.i.) 1. ***பொருந்துதல்;*** to fit. 2. ***இணைதல்;*** to join. 3. ***மெல்லியதாதல்;*** to become tender. 4. ***இளையதாதல்;*** to become young. 5. ***குத்துதல்;*** to pierce. 6. ***பிளத்தல்;*** to cut, divide. 7. ***பள்ளமாக்குதல், தாழ்த்துதல்;*** to make a dip, to lower the position or plane. 8. ***இழிவு படுத்துதல்;*** to degrade, look down, under-estimate.

*[இல் → இள்.]*

**இள-த்தல்** *iḷa-,* 3 செ.கு.வி. (v.i.) ***மெல்லியதாதல்;*** to become tender. (வே.க.16).

*[இல் - இள் - இள. இளத்தல்.]*

**இள** *iḷa,* பெ. எ. (adj.) 1. ***இளைய;*** young. ''எள்ளல் இளமை'' (தொல்.மெய்.4). 2. ***சிறிய;*** small. இளநாகன் (உ.வ.).

*[இல் - இள் - இள.]*

**இளஃகு-தல்** *iḷakku-,* 5 செ.கு.வி. (v.i.) ***தளிர்த்தல்;*** to be so refreshed as to put on a fresh glow. ''இன்னுயிர் ........ இளஃகுமே'' (சீவக.149) (செ.அக.).

*[இளகு - இளஃகு. இளஃகுதல். (வே.க.17).]*

**இளக்கத்தாலி** *iḷakkattāli,* பெ. (n.) ***ஒரு கழுத்தணி வகை;*** a kind of necklace. (சேரநா.).

ம. இளக்கத்தாலி.

*[இளக்கம் + தாலி.]*

**இளக்கம்** *iḷakkam,* பெ. (n.) 1. ***நெகிழ்ச்சி;*** laxity, relaxation, tenderness. 2. ***தளர்ச்சி;*** weariness, faintness. ''இளக்கமில் கடற்படை'' (கம்பரா.ஊர்தேடு.71). 3. ***விலைக்குறைவு;*** lessened amount, lower price. 'இளக்கமாய் விற்றேன்' (இ.வ.). 4. ***மென்மை;*** softness, as of pure gold. 'இளக்கமான பொன்' (வின்.). 5. ***இளக்காரம்;*** leniency.(செ.அக.).

ம. இளக்கம்.

*[இளகு → இளக்கு → இளக்கம் (வே.க.17).]*

**இளக்கரம்** *iḷakkaram,* பெ. (n.) ***இளக்கம்;*** softness. (ஆ.அக.).

*[இள → இளக்கம்.]*

**இளக்கரி** *iḷakkari,* ***இளக்கரி-த்தல் காண்க*** (ஆ.அக.); see *iḷakkari-.*

**இளக்கரி-த்தல்** *iḷakkari-,* 4 செ.கு.வி. (v.i.) 1. ***வேகந்தணிதல்;*** to relax, slacken. 2. ***கருமத்தில் விழிப்பின்றி யிருத்தல்;*** to be negligent in action. 3. ***தளிர்தல்;*** to become weary, dispirited, disheartened. ''இளக்கரிப்பதேன்'' (இராமநா. அயோத்.) 4. ***இளகிப் பின்னிடுதல்*** (வின்.); to yield before an opponent or a rival; the lose in a race or trial of strength. (செ.அக.). 5. ***மதிப்பின்மை;*** to dishonour.

*[இள → இளகு → இளக்கு → இளக்குரு → இளக்குரி → இளக்கரி → இளக்கரித்தல்.]*

**இளக்கல்** *iḷakkal* ***இளக்கு*** பார்க்க (ஆ.அக.); see *iḷakku.*

*[இள → இளக்கல்.]*

**இளக்காரம்** *iḷakkāram,* பெ. (n.) 1. ***ஈவிரக்கம்;*** indulgence. 2. ***மனநெகிழ்ச்சி;*** laxity, relaxation. 3. ***தாழ்நிலை;*** inferiority, low state. ''இளக்காரமாய்த் தளர்ந்தேன்'' (இராமநா.ஆரணிய.24). 4. ***குறைவு;*** defect. (செ.அக.).

*[இளக்கரி → இளக்காரம்.]*

**இளக்கு-தல்** *iḷakku-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. ***நெகிழச்செய்தல்;*** to slacken; to relax, as a spring; to loosen, as a rope; to moisten, as the throat with liquid; to relieve, as the bowels by cathartics; to cause to relent. 2. ***அசைத்தல்;*** to shake; to make less firm, as a peg driven into the ground.

ம. இளக்குக; க. எலுகு.

*[இளகு → இளக்கு.]*

**இளக்குமருந்து** *iḷakku-marundu* பெ. (n.) 1. ***தசையை மென்மையாக்கும் மருந்து;*** an agent which softens or soothes the skin, as does gum etc.-emolient. 2. ***தடையை நீக்கும் மருந்து;*** a medicine that removes obstruction by softening the obstructing matter - De-obstruent. 3. ***குடலையிளகச் செய்து பேதியையுண்டாக்கும் மருந்து;***

a medicine capable of relaxing the bowels for a free discharge of the faeces; a laxative medicine. (சா.அக.).

*[இளகு - இளக்கு + மருந்து.]*

**இளகக் காய்ச்சல்** *iḷaka-k-kāy-c-cal*, தொ.பெ. (vbl.n.) ***இளகும்படி காய்ச்சுதல்;*** boiling to a soft semi-solid state as in the preparation of medicated oils. (சா.அக.).

*[இளகு - இளக + காய்ச்சுதல்.]*

**இளகம்** *iḷagam* பெ. (n.) ***மருந்துக் குழம்பு;*** unctuous medical preparation. (சா.அக.).

*[இளகு → இளகம்.]*

**இளகல்** *iḷagal*, பெ. (n.) 1. ***மெல்லிதாதல், சிறிதாதல்*** (சு.வி.18); to become mellow, thin. 2. ***அன்பு*** (அக.நி.); love. (செ.அக.).

*[இள > இளகு > இளகல்.]*

**இளகாதவன்** *iḷagādavaṉ*, பெ. (n.) ***மனமுருகாதவன், கன்னெஞ்சன்;*** unyielding person, merciless person.

*[இளகு → இளகாதவன்.]*

**இளகிக்காண்(ணு)-தல்** *iḷagi-k-kāṇ-*, 16 செ.கு.வி. (v.i.) ***நெகிழ்ந்து தோன்றுதல்*** (வின்.); to become soft; loose, pliant; to become yielding; to grow less strict or rigid, as the mind. (செ.அக.).

*[இளகு + காண்.]*

**இளகிய** *iḷagiya*, பெ.எ. (adj.) 1. ***குழம்பு போன்ற;*** resembling that which is reduced to a semi solid state. 2. ***மென்மையான;*** soft. 3. ***கைப்பான;*** flaccid. (சா.அக.).

*[இளகு + இ + அ = இளகிய.]*

**இளகியம்** *iḷagiyam* பெ. (n.) ***இளக்கமாகச் செய்த நாட்டுமருந்து;*** medicine in the form of doughy mixture.

*[இளகு → இளகம் → இளகியம்.]*

**இளகிப்பதி-த்தல்** *iḷagi-p-pati-*, 4 செ.கு.வி. (v.i.) ***அழகாகப்பதித்தல்*** (திவ்.அமலனாதி.3,வ்யா.பக்.48); to be nicely set. (செ.அக.).

*[இளகு - இளகி + பதித்தல்.]*

**இளகு-தல்** *iḷaku-*, 7 செ.கு.வி. (v.i.) 1. ***நெகிழ்தல்;*** to liquify; to grow soft; to become tender, mild, yielding. 2. ***மெல்குதல்;*** to get reduced in hardness owing to moisture, to become pliable, as heated iron. "நீர்நின் றிளகிற் றிதுவேண்டா" (சீவக.718). 3. ***கட்டுநெகிழ்தல்;*** to become relaxed, as a bowstring; to get loose, as screws. "வார்நின்றிளகும்" (சீவக.718). 4. ***களைத்தல்;*** to grow weary, to become tired. "மல்லாலிளகாது மலைந்தனன் மால்" (கம்பரா.அதிகாய.68). 5. ***அசைதல்;*** to shake, agitate. "காடிளகப் பரிகொண்டவே" (சீவக.1778). 6. ***படுதல்*** (சீவக.2146); to fade away, an euphemism meaning to die, to perish. 7. ***தழைத்தல்;*** to sprout afresh, send forth tender shoots. இளகு காடு (சீவக. 1778). 8. ***தணிதல்*** (J); to diminish, abate; to lessen in intensity or severity, as wind, rain, sunshine, fever etc. 9. ***உருகுதல்;*** to melt. (செ.அக.).

ம. இளகு; க. எளது.

*[எல் → எல்கு → இளகு. (சு.வி.79) இளகு = நெருப்பின்சூட்டினால் உருகு.]*

**இளகுசம்** *iḷagušam* பெ. (n.) ***கத்தரி;*** brinjal - solanum melongena. (சா.அக.).

*[இள - இளகு - இளகுயம் - இளகுசம்.]*

**இளகுபதம்** *iḷagu padam* பெ. (n.) ***குழைந்த பதம் அதாவது சருக்கரையுடன் நீர்த்தன்மையான ஏதேனு மொன்றைச் சேர்த்துக் காய்ச்சும்போது அப்பாகு நார் போல் ஆகும்பதம். இதற்குப் பாகுபதம் அல்லது தந்துபாகம் என்று பெயர்;*** soft semi-solid state, the state to which a concentrated solution of sugar, often medicated, is reduced by boiling into a thick viscid consistence.

*[இளகு + பதம்.]*

**இளங்கடுங்கோ** *iḷaṅkaḍuṅkō*, பெ. (n.) ***கடைக்கழக மன்னருள் ஒருவன்;*** king in Sangam age.

*[இளம் + கடும் + கோ.]*

**இளங்கண்டீரக்கோ** *iḷaṅkaṇḍīrakkō*, பெ. (n.) 1. ***பெருந்தலைச் சாத்தனார்*** பார்க்க; see *perundalai-c-cāttaṉār.* 2. ***கண்டீரக்கோவின் தம்பி*** (புறநா.151); brother of Kaṇḍīrakkō.

*[இளம் + கண்டன் + வீரன் + கோ.]*

**இளங்கண்ணி** *iḷaṅgaṇṇi*, பெ. (n.) ***முதிராத அடைக் காய், பைங்காய்;*** tender arecanut. (சேரநா.).

ம. இளங்கண்ணி.

*[இளமை + கண்ணி.]*

**இளங்கதிர்** *iḷaṅkadir*, பெ. (n.) 1. ***பயிரின் முற்றாக்கதிர்*** (பிங்.); tender ears of corn. 2. ***எழுஞாயிற்றின் கதிர்;*** early rays of the sun. 3. ***எழுஞாயிறு;*** early morning sun. (செ.அக.).

ம. இளங்கதிர்.

*[இளம் + கதிர்.]*

**இளங்கம்பு** *iḷaṅ-kambu*, பெ. (n.) ***கம்புவகை*** (வே.க. 17); bulrush millet, sown in september and october. (செ.அக.).

*[இளம் + கம்பு.]*

**இளங்கருக்கு** *iḷaṅkarukku*, பெ. (n.) ***சிறிது காய்ச்சிய கருக்கு*** (கசாயம்); decoction, infusion.

*[இளம் + கருக்கு (வே.க.18).]*

**இளங்கருவு** *iḷaṅkaruvu,* பெ. (n.) ***முதிர்ச்சியடையாத கருப்பம் அதாவது கருப்பமடைந்த காலமுதல் மூன்றுமாதம் வரைக்கும் இளநீர் வழுக்கையைப் போல் வளருகின்ற கரு;*** foetus in its earlier stages of development, especially before the end of the third month, embryo. (சா.அக.).

*[இளம் + கருவு.]*

**இளங்கலையன்** *iḷaṅkalaiyaṉ,* பெ. (n.) ***நெல்வகை;*** a paddy that rippens early. (செ.அக.).

*[இளம் + கலையன்.]*

**இளங்கள்** *iḷaṅkaḷ* பெ. (n.) ***புளிக்காத கள், இனிப்புக் கள்;*** sweet toddy. (சேரநா.).

ம. இளங்கள்.

*[இளம் + கள்.]*

**இளங்கன்று** *iḷaṅ-kaṉṟu,* பெ. (n.) 1. ***ஆவின் கன்று;*** young calf. 2. ***மரக்கன்று;*** sapling. (செ.அக.).

*[இளம் + கன்று.]*

**இளங்காட்டுத்தரிசு** *iḷaṅ-kāṭṭu-t-tarišu,* பெ. (n.) ***பத்தாண்டுப் புறம் போக்கு*** (வே.க.18); land left waste for ten years so as to allow growth of young jungle. (செ.அக.).

*[இளம் + காடு + தரிசு.]*

**இளங்காய்** *iḷaṅgāy,* பெ. (n.) ***முதிராக்காய்*** (வின்.); fruit just formed. (செ.அக.).

*[இளம் + காய்.]*

**இளங்கார்** *iḷaṅkār,* பெ. (n.) 1. ***நெல்வகை*** (வே.க.18); variety of paddy which is reaped in the early part of the rainy season. (செ.அக.).

*[இளம் + கார்.]*

**இளங்காரத்திரி** *iḷaṅ-kāra-t-tiri,* பெ. (n.) ***காயத்திற்குப் பயன்படும் காரஞ்சேர்த்த மருந்துச் சீலை;*** a lint steeped in mild irritants. (சா.அக.).

*[இளம் + காரம் + திரி.]*

**இளங்காரம்** *iḷaṅkāram,* பெ. (n.) ***போதுமான காரம்;*** mild irritant. (சா.அக.).

*[இளம் + காரம்.]*

**இளங்கால்**[1] *iḷaṅkāl,* பெ. (n.) 1. ***தென்றல்;*** lit. gentle breeze generally, applied to the south wind. ''இளங்காற் றூத னிசைத்தன னாதலின் (சிலப்.8,9). 2. ***வெற்றிலை யிளங்கொடி*** (வின்.); betel creeper recently planted. (செ.அக.).

*[இளம் + கால்.]*

**இளங்கால்**[2] *iḷaṅ-kāl,* பெ. (n.) ***இளமைப்பருவம்;*** period of youth. ''இளங்காற்றுறவாதவர்'' (சிறுபஞ்.24) (செ.அக.).

*[இளம் + கால்.]*

**இளங்கால் வெற்றிலை** *iḷaṅ-kāl veṟṟilai,* பெ. (n.) ***இளங்கொடியிற் கிள்ளிய முதுவெற்றிலை*** (C.G.); well developed betels plucked from creepers planted comparatively recently. (செ.அக.).

*[இளம் + கால் + வெற்றிலை.]*

**இளங்காலி** *iḷaṅ-kāli,* பெ. (n.) ***மாட்டுக்கன்று*** (திவ். பெரியாழ் 3,31, வ்யா,பக். 560); calf. (செ.அக.).

*[இளம் + காலி.]*

**இளங்காலை** *iḷaṅ-kālai,* பெ. (n.) 1. ***வைகறை;*** early morning. ''இளங்காலையிற் புதுமலர் கவர்ந்து'' (செவ்வந்திப்பு.உறையூரழித்.5). 2. ***இளமைப்பருவம்;*** period of youth ''இளங்காலையே யாண்டுகொண் டருளிய'' (அருட்பா.9,அருட்பெருஞ்சோதியக.290) (செ.அக.).

*[இளம் + காலை.]*

**இளங்காற்று** *iḷaṅ-kāṟṟu,* பெ. (n.) ***மெல்லிய காற்று;*** gentle breeze. (செ.அக.).

ம. இளங்காற்று; க. எள காளி.

*[இளம் + காற்று.]*

**இளங்கிடை** *iḷaṅkiḍai,* பெ. (n.) ***ஊர்மாடுகளெல்லாம் வரும்வரை மாடுகளை நிறுத்திவைக்கும் வெளியிடம்*** (நாஞ்.); open place where the cattle of the village be gathered before driving them to regular pasture. (செ.அக.).

*[இளம் + கிடை. கடை → கிடை.]*

**இளங்கிளை** *iḷaṅgiḷai,* பெ. (n.) ***தங்கை;*** younger sister. ''மாலவற் கிளங்கிளை'' (சிலப்.12,68.).

*[இளம் + கிளை.]*

**இளங்கீரந்தையார்** *iḷaṅkīrandaiyār,* பெ. (n.) ***கடைக் கழகப் புலவர்*** a poet in Sangam age.

*[இளம் + கீரன் + அந்தை + ஆர். அந்தை - மதிப்புரவுச்சொல்.]*

**இளங்கீரனார்** *iḷaṅkīraṉār,* பெ. (n.) ***கடைக்கழகப்புலவர்;*** a poet in Sangam age.

*[இளம் + கீரன் + ஆர். கீரன் = பழையன்.]*

**இளங்குடர்** *iḷaṅkuḍar,* பெ. (n.) ***இளங்குடல்*** பார்க்க; see *iḷaṅkuḍal*

*[இளம் + (குடல்) குடர்.]*

**இளங்குடல்** *iḷaṅkuḍal,* பெ. (n.) 1. ***கடைக்குடல்;*** rectum. 2. ***சிறிய குழந்தையின் குடல்;*** the soft bowels of a child.

*[இளம் + குடல்.]*

**இளங்குட்டம்** *ilanguttam*, பெ. (n.) ***தொழுநோயின் ஆரம்ப நிலை;*** leprosy in its early stage. (சா.அக.).

*[இளம் + குட்டம்.]*

**இளங்குத்தி** *ilan-kutti*, பெ. (n.) ***இளங்கொற்றி*** பார்க்க; see *ilankorri*.

*[இளம் + குத்தி.]*

**இளங்குரல்**[1] *ilan-kural*, பெ. (n.) ***குழந்தையின் குரல்;*** shrill, fine voice as of a child. (செ.அக.).

*[இளம் + குரல்.]*

**இளங்குரல்**[2] *ilankural*, பெ. (n.) 1. ***பயிர்;*** crops. 2. ***இளங்கதிர்;*** morning sun rays. (ஆ.அக.).

*[இளம் + குரல். குரல் = கொத்து. கொத்தான பயிர், கொத்தான கதிர்.]*

**இளங்குருத்து** *ilankuruttu*, பெ. (n.) ***முதுமையில்லாத குருத்து;*** tender shoot. (ஆ.அக.).

*[இளம் + குருத்து.]*

**இளங்குழம்பு** *ilankulambu*, பெ. (n.) ***திண்ணமில்லாத சாறு; ஒரு வகைக் குழம்பு;*** a kind of loose broth. (வே.க.18).

*[இளம் + குழம்பு.]*

**இளங்குழவி** *ilankulavi*, பெ. (n.) ***பிறந்த குழந்தை;*** new-born baby.

*[இளம் + குழவி.]*

**இளங்குளவி** *ilankulavi*, பெ. (n.) ***நீலநஞ்சு;*** a kind of arsenic. (சா.அக.).

*[இளம் + குளவி.]*

**இளங்கூறு** *ilan-kūru*, பெ. (n.) ***இளவரசன்;*** crown prince. வேணாட்டு இளங்கூறு வாழுமவற்கு (T.A.S.ii,64) (செ.அக.).

*[இளம் + கூறு.]*

**இளங்கேள்வி** *ilan-kēlvi*, பெ. (n.) ***உதவிக் கோயிற் கண்காணியர்*** (கோயிலொ.); subordinate supervising officer, as of a temple. (செ.அக.).

*[இளம் + கேள்வி.]*

**இளங்கொட்டைப்பாக்கு** *ilankottaippākku*, பெ. (n.) ***ஈழ நாட்டில் வளருமோர் முதிராப்பாக்கு;*** a kind of tender arecanut grown in Ceylon. (சா.அக.).

*[இளம் + கொட்டை + பாக்கு.]*

**இளங்கொடி** *ilan-kodi*, பெ. (n.) 1. ***கொடிபோன்ற உடலமைப்புள்ள இளம் பெண்;*** slim woman as resembling a young vine. "இருங்குன்ற வாண ரிளங்கொடியே" (திருக்கோ.15). 2. ***ஆவின் நஞ்சுக்கொடி*** (வின்.); after-birth of a cow. (செ.அக.). 3. ***முதிராத கொடி;*** tendril. (ஆ.அக.).

*[இளம் + கொடி.]*

**இளங்கொற்றி** *ilan-korri*, பெ. (n.) ***ஈன்றணிமை ஆவு*** (வே.க.17); cow that has recently calved. (செ.அக.).

*[இளம் + கொற்றி.]*

**இளங்கோ** *ilangō*, பெ. (n.) 1. ***இளவரசன்;*** prince who is either a brother or a son of the king. "இளங்கொடி தோன்றுமா விளங்கோ முன்னென்" (மணி.4,125). 2. ***வணிகக் குலத்துள் உழுதொழிலாளர்*** (பிங்.); agriculturist considered to be a member of a sub-division of the vaisya caste. (செ.அக.).

ம. இளங்கோ.

*[இளம் + கோ. வணிகரும் அரசராதற்குத் தகுதியுடையராதலின் இளங்கோக்கள் எனப்பட்டனர்.]*

**இளங்கோசர்** *ilangōsar*, பெ. (n.) ***கொங்குமண்டலத் தரசர்*** (ஆ.அக.); chieftains of the Kongu region of Tamil Nadu.

*[இளம் + கோசர்.]*

**இளங்கோயில்** *ilan-kō-y-il*, பெ. (n.) ***பழங்கோயில் பழுதுபார்க்கப்படும்போது கட்டப்பெறும் குறுங் காலக் கோயில்*** [T.A.S.I.177]; temporary shrine put up for worshipping while a temple is under renovation. (செ.அக.).

*[இளம் + கோயில்.]*

**இளங்கோவடிகள்** *ilangō-v-adigal*, பெ. (n.) ***சேரன் செங்குட்டுவனின் இளவல், தமிழ்க் காப்பியங்களுள் ஒன்றான சிலப்பதிகார நூலினாசிரியர்;*** ascetic brother of the cēra king Cenkuttuvan, and the author of the Cilappatikaram. (செ.அக.).

*[இளம் + கோ + அடிகள்.]*

**இளங்கோவேள்** *ilangō-vēl*, பெ. (n.) ***வேள் குலத்து இளவரசன்*** (சைவசிகா.36); prince of vēl family. (செ.அக.).

*[இளம் + கோ + வேள்.]*

**இளசு** *ilasu*, பெ. (n.) ***இளைது*** (கொ.வ.); that which is young or tender. (செ.அக.).

**க.** எளது; **தெ.** எல, லே, லேத; **து.** எள, எளெத், லத்; **குட.** ஏளீ; **கொலா., நா.** லேங்; **கோண்டி.** லயொர்; **பட.** எளசு.

*[இள → இளது → இளசு (சு.வி.18.). **இளசு** = சிறியது, பிஞ்சு.]*

**இளஞ்சாமை** *ilan-cāmai*, பெ. (n.) ***சாமை வகை*** (விவசா.4); a kind of millet. (செ.அக.).

*[இளம் + சாமை.]*

**இளஞ்சாயம்** *ilan-cāyam*, பெ. (n.) ***சிறிது தோய்த்த சாயம்; பற்றாத சாயம்*** (வின்.); slight tinge in dyeing. (செ.அக.).

*[இளம் + சாயம்.]*

**இளஞ்சார்வு** *iḷan-cārvu,* பெ. (n.) ***குருத்தோலை*** (யாழ்.); tenderleaf of the palmyra or talipot palm next to the core of the tree. (செ.அக.).

*[இளம் + சார்வு.]*

**இளஞ்சாலவம்** *iḷañ-cālavam,* பெ. (n.) ***சிவப்புச் சிற்றகத்தி;*** red variety of agathi. (அகத்தி) (சா.அக.).

*[இளம் + சாலவம்.]*

**இளஞ்சிவப்பு** *iḷan-civappu,* பெ. (n.) ***வெண்சிவப்பு*** (வின்.); light red, pink. (செ.அக.).

*[இளம் + சிவப்பு.]*

**இளஞ்சினி** *iḷañcini,* பெ. (n.) ***அவுரி;*** indigo plant. (சா.அக.).

*[இளஞ்சு → இளஞ்சினி.]*

**இளஞ்சீலை** *iḷañ-cīlai,* பெ. (n.) 1. ***மென்துகில்;*** muslin cloth. 2. ***வலைத்துணி;*** gauge. (சா.அக.).

*[இளம் + சீலை.]*

**இளஞ்சூடு** *iḷañ-cūḍu,* பெ. (n.) ***வெதுவெதுப்பு;*** gentle heat, warmth. (செ.அக.).

*[இளம் + சூடு.]*

**இளஞ்சூரியர்** *iḷañ-cūriyar,* பெ. (n.) ***இடைக்காலத்தில் வாழ்ந்த இரட்டைப் புலவர்களுள் இளையவர்*** (தமிழ்நா.103, தலைப்பு); younger of the twin poets iraṭṭaiyar. (செ.அக.).

*[இளம் + சூரியர்.]*

**இளஞ்சூல்** *iḷañ-cūl,* பெ. (n.) 1. ***பயிரினிளங்கரு*** (பிங்.); young ears of corn which have not yet shot forth. 2. ***முதிராக் கரு*** (வே.க.18); embryo. (செ.அக.).

*[இளம் + சூல்.]*

**இளஞ்சென்னி** *iḷañcenni,* பெ. (n.) ***சோழ அரசர்களுள் ஒருவன்;*** a king of Chola dynasty. (ஆ.அக.).

*[இளம் + சென்னி.]*

**இளஞ்சேரலிரும்பொறை** *iḷañcēral-irum-porai,* பெ. (n.) ***சேரவரசர்களுள் ஒருவன்;*** a king of Cēra Dynasty.

*[இளம் + சேரல் + இரும் + பொறை.]*

**இளந்தண்டு** *iḷan-taṇḍu,* பெ. (n.) ***முளைக்கீரை*** (தைலவ.பாயி.57); plant, the leaves of which serves as a pot. herb. (செ.அக.).

*[இளம் + தண்டு.]*

**இளந்தயிர்** *iḷantayir,* பெ. (n.); ***முற்றும் உறையாத தயிர்;*** half-curdled milk. (சா.அக.).

*[இளம் + தயிர்.]*

**இளந்தலை** *iḷan-talai,* பெ. (n.) 1. ***இளமைப்பருவம்;*** youth, juvenility. இளந்தலைப் பெண். 2. ***எளிமை;*** lowness of spirit or of circumstances; poverty, dejection. "இளந்தலை யுறாதபடி யேகுமின்" (பாரத.முதற்போர். 59). 3. ***கனமின்மை;*** lightness. "ஆளிளந்தலை கண்டு தோணி மிதக்கும்" (வின்.). 4. ***மரத்தின் முற்றாத பாகம்*** (சர்வார்த்த.சிற்.68); tender part of timber; dist. fr. முதுதலை.

ம. இளந்தல.

*[இளம் + தலை.]*

**இளந்தலைக் கைம்பெண்** *iḷantalai-k-kaimpeṇ,* பெ. (n.) ***இளம்வயதில் கணவனை இழந்த பெண்;*** young widow. (சா.அக.).

*[இளம் + தலை + கைம்பெண்.]*

**இளந்தரன்** *iḷandaran,* பெ. (n.) ***இளந்தாரி*** பார்க்க; see *iḷandāri.*

*[இளந்தை → இளந்தரன்.]*

**இளந்தாரி** *iḷan-dāri,* பெ. (n.) ***இளைஞன், இளைஞை*** (வே.க.17); youth; youngman or woman.

ம. இளந்தாரி.

*[இளம் → இளந்தை → இளந்தரன் → இளந்தாரி.]*

**இளந்தாரிக்கல்** *iḷan-dāri-k-kal,* பெ. (n.) ***உடல் வலிமை ஆய்ந்தறிய ஆகும் ஒருவகை உருண்டைக் கல்*** (இ.வ.); round stone about 1 ft in diameter, common in villages, with which the young men in a village test or compare their strength. (செ.அக.).

*[இளந்தாரி + கல்.]*

**இளந்தாரித்தத்துவம்** *iḷan-tāri-t-tattuvam,* பெ. (n.) ***இளமையின் வலிமை.*** (வின்.); vigour of youth. (செ.அக.).

*[இளந்தாரி + தத்துவம் (மெய்மை).]*

**இளந்தை** *iḷandai,* பெ. (n.) ***இளைமை;*** youth. (வே.க.17).

*[இள் → இள → இளந்தை.]*

**இளந்திரையம்** *iḷan-tirayam,* பெ. (n.) ***இளந்திரையன் என்பவனால் செய்விக்கப்பட்ட ஒரு நூல்*** (இறை.1,பக்.3,உரை.); literary work produced under the patronage of Iḷam-tiraiyan. (செ.அக.).

*[இளந்திரையன் > இளந்திரையம்.]*

**இளந்தெய்வம்** *iḷan-teyvam,* பெ. (n.) ***குக்குலத் தேவதை, சிறுதெய்வம்;*** minor malignant deity. "அணங்காடு மிளந் தெய்வ மன்று" (திவ்.திருவாய். 4,6,2). (செ.அக.).

*[இளம் + தெய்வம்.).]*

**இளந்தென்றல்** *iḷan-tenral* பெ. (n.) ***தென்திக்கிலிருந்து வீசும் மெல்லிய காற்று;*** gentle breeze from the south.

*[இளம் + தென்றல்.]*

**இளந்தேகம்** *iḷan-dēgam,* பெ. (n.) 1. ***இளமை உடம்பு;*** the body of a young man. 2. ***குழந்தைபெற்ற பெண்ணின் உடம்பு;*** the delicate body of a woman immediately after child birth. 3. ***குழந்தை உடம்பு;*** child's body. (சா.அக.).

*[இளம் + தேகம். இளமேனி பார்க்க; see iḷa-mēni.]*

**இளந்தேவி** *iḷan-dēvi,* பெ. (n.) 1. ***அரசனது இளைய மனைவி;*** younger queen. "இறந்தான்ற னிளந்தேவி". (கம்பரா.குக.68.) (செ.அக.). 2. ***அரசனின் மகள்;*** daughter of the king. (வே.க.17).

*[இளம் + தேவி.]*

**இளந்தை** *iḷandai,* பெ. (n.) ***இளமை;*** youth; tender years. "இளந்தைப் பருவமதன்" (திருப்பு.372). (செ.அக.).

க. எளபு.

*[இளம் → இளமை → இளந்தை.]*

**இளந்தோகை** *iḷan-tōgai* பெ. (n.) ***சிவப்புப் பொன் னாங்காணி;*** a kind of red plant. (சா.அக.).

*[இளம் + தோகை.]*

**இளந்தோய்ச்சல்** *iḷan-tōyccal,* பெ. (n.) 1. ***தயிர் சிறிது திரைதல்;*** state of milk when partially curdled. 2. ***அலகைச் சிறிது பதப்படுத்துதல்*** (வே.க.18); preparation in water of heated blade for tempering. (செ.அக.).

*[இளம் + (தோய்த்தல்) தோய்ச்சல்.]*

**இளந்தோயல்** *iḷan-tōyal,* பெ. (n.) ***இளந்தோய்ச்சல்*** பார்க்க; see *iḷan-tōyccal.*

*[இளம் + தோயல்.]*

**இளநகை** *iḷa-nagai,* பெ. (n.) ***புன்சிரிப்பு;*** smile. "இளநகை காணச் செல்வேன்" (அருட்பா,6, தலைவி வருந்துதல்,12) (செ.அக.).

க. எளநகெ.

*[இளம் + நகை.]*

**இளநாக்கடி-த்தல்** *iḷa-nākkaḍi-,* 4 செ.கு.வி. (v.i.) ***உடன்பாடின்மை போற் காட்டுதல்*** (யாழ்.); feign, reluctance. (செ.அக.).

*[இளம் + நாக்கு + அடித்தல்.]*

**இளநாக்கு** *iḷa-nākku,* பெ. (n.) ***பேச்சுத்திருந்தாத நாக்கு;*** tongue not yet fully drilled for clear speaking, as a child's.

*[இளம் + நாக்கு.]*

**இளநாள்** *iḷa-nāḷ,* பெ. (n.) ***இளவேனில்;*** temperate part of the hot season. "இகழுந ரிகழா விளநா ளமையம்" (அகநா.25) (செ.அக.).

*[இளம் + நாள்.]*

**இளநிலா** *iḷa-nilā,* பெ. (n.) ***அந்தி நிலா*** (சிலப்.14,103, உரை); evening moon. (செ.அக.).

*[இளம் + நிலா.]*

**இளநீர்** *iḷa-nīr,* பெ. (n.) 1. ***முற்றாத தேங்காய்நீர்;*** tender coconut. "தெங்கிளநீர் பெய்பண்டியும்" (சீவக. 62). 2. ***மணியின் இளநிறம்.*** (வின்.); faint colour in a gem. (செ.அக.).

ம. இளநீர்; க. எளநீரு; தெ. எடநீரு, எலநீரு.

*[இளம் + நீர் = முதிராத தெங்கங்காயின் நீர்; மென்னீர்.]*

**இளநீர்க்கட்டு** *iḷa-nīr-k-kaṭṭu,* பெ. (n.) ***உண்ணாக்கு நோய்;*** tonsillitis. (செ.அக.).

*[இளம் + நீர் + கட்டு.]*

**இளநீர்க்காய்** *iḷa-nīr-k-kāy* பெ. (n.) ***முற்றாத தேங்காய்;*** tender coconut. (சா.அக.).

*[இளம் + நீர் + காய்.]*

**இளநீர்க்குழம்பு** *iḷa-nīr-k-kuḻambu,* பெ. (n.) ***இளநீராற் செய்யப்படும் கண்மருந்து வகை;*** medicinal preparation of young coconut milk for certain diseases of the eye. "இளநீர்க்குழம்பு இடுகிற துரும்பைச் சொல்லுதல்." (ஈடு.5,6,1.ஜீ) (செ.அக.).

*[இளம் + நீர் + குழம்பு.]*

**இளநீர்த்தா-தல்** *iḷanīrttā-,* 6 செ.கு.வி. (v.i.) ***தேய்ந்து மெலிதல்*** (நன்.431, மயிலை); to grow lean, to be worn out and become thin. (செ.அக.).

*[இளம் + நீர்த்து + ஆதல்.]*

**இளநீரமுது** *iḷa-nīr-amudu,* பெ. (n.) ***வழிபாட்டின் போது படையல் செய்யப்படும் இளநீர்*** (S.I.I. iii, 150, 14); tender coconut milk used as an offering in connection with worship. (செ.அக.).

*[இளநீர் + அமுது.]*

**இளநீலம்** *iḷa-nīlam,* பெ. (n.) ***வெளிறிய நீலம்*** (வின்.); light blue. (செ.அக.).

*[இளம் + நீலம்.]*

**இளநெஞ்சு** *iḷa-nenju,* பெ. (n.) 1. ***இரக்கமுள்ள மனம்;*** tender, compassionate heart. 2. ***கோழைமனம்*** (வின்.); timidity, cowardice, pusillanimity. (செ.அக.).

*[இளம் + நெஞ்சு.]*

**இளநேரம்** *iḷa-nēram,* பெ. (n.) ***மாலை;*** evening. "இளநேரம் வீதியிலே வந்துநில்லு". (தெய்வச்.விறலி விடு.337) (செ.அக.).

*[இளம் + நேரம்.]*

**இளப்பம்**[1] *iḷappam,* பெ. (n.) ***மதிப்புக்குறைவு;*** disgrace. 'அவனுக்கு இது பெரிய இளப்பம்' (கொ.வ.) (செ.அக.).

ம. இளப்பம்.

*[இள → இளப்பு - இளப்பம் (வே.க.17).]*

**இளப்பம்**[2] *iḷappam,* பெ. (n.) 1. ***தாழ்வு;*** Inferiority, baseness, meanness. 2. ***உறுதியின்மை;*** flimsiness, worthlessness. (செ.அக.).

ம. இளப்பம்.

*[இள → இளப்பு → இளப்பம்.]*

**இளம்பச்சை** *iḷam-paccai* பெ. (n.) ***வெளிறிய பச்சை;*** whitish green, light green. (சா.அக.).

*[இளம் + பச்சை.]*

**இளம்பசி** *iḷam-paśi,* பெ. (n.) ***சிறுபசி;*** slight appetite, as that between meals which is easily relieved by light refreshments. (செ.அக.).

*[இளம் + பசி.]*

**இளம்படியர்** *iḷam-paḍiyar,* பெ. (n.) ***இளம்பெண்கள்;*** damsels. "வானிளம்படியர் வந்துவந்தீண்டி" (திவ்.பெரி யாழ்.3,6,3) (செ.அக.).

*[இளம் + படியர். படி = தன்மை. படியர் = தன்மையர், மெல்லியலார்.]*

**இளம்பதம்** *iḷam-padam,* பெ. (n.) 1. ***முற்றாநிலை;*** immaturity. 'இளம்பதத்திற் பயிரறுத்தான்.' 2. ***இளவரசுப் பதவி;*** position and responsibilities of the heir-apparent to the throne. "இளம்பதமியற்றுநாள்" (கம்பரா.நட்புக். 50). 3. ***மருந்தெண்ணெய் முதலியன காய்ச்சுவதில் இளம்பாகம்;*** consistency of a liquid resulting from the slow application of uniform gentle heat, as in the preparation of medicinal oils. 4. ***மாழைகளின் உருகு பதம்*** (வின்.); thin consistency obtained by melting; first stage of melting. 5. ***சிறிது வெந்த நிலை*** (வின்.); state of being moderately prepared, as in cooking, parching, toasting. 6. ***நெல் முதலியவற்றின் காய்ச்சற் குறைவு*** (வின்.); quality of soaked paddy that is not well dried after boiling. (செ.அக.).

*[இளம் + பதம்.]*

**இளம்பயிர்** *iḷam-payir,* பெ. (n.) ***நாற்றைப்பிடுங்கி நட்டுச் சிலநாளான பயிர்*** (இ.வ.); seedlings that have been recently transplanted. (செ.அக.).

*[இளம் + பயிர்.]*

**இளம்பருவம்** *iḷam-paruvam,* 1. ***இளமை;*** young age. 2. ***மெல்லிய பதம்;*** under-cooked. (ஆ.அக.).

*[இள → இளம் + பருவம்.]*

**இளம்பறியல்** *iḷam-paṟiyal,* பெ. (n.) ***முற்றாதநிலை யிற் பறிக்குங்காய்*** (வின்.); that which is plucked when it is yet immature, as tender coconuts etc. (செ.அக.).

*[இள → இளம் + பறியல். பறியல் = பறித்தல்.]*

**இளம்பனை** *iḷam-paṉai,* பெ. (n.) ***பனைமரத்தின் இளமை; போந்தை,*** (வடலி) (ஆ.அக.); young palm.

*[இள → இளம் + பனை.]*

**இளம்பாக்கு** *iḷam-pākku,* பெ. (n.) ***பாக்குவகை*** (விறலிவிடுதூது); a kind of areca nut. (செ.அக.).

*[இளம் + பாக்கு.]*

**இளம்பாகம்** *iḷam-pāgam,* பெ. (n.) *1* ***இளம்பதம், 3*** பார்க்க; see *iḷam-padam, 3.* (செ.அக.).

*[இள → இளம் + பாகம்.]*

**இளம்பாடு** *iḷam-pāḍu,* பெ. (n.) 1. ***இளமையிற் படும் பாடு;*** sufferings peculiar to the period of youth. 2. ***முற்றாமை*** (வின்.); immaturity. (செ.அக.).

*[இள → இளம் + பாடு. படு → பாடு.]*

**இளம்பாலாசிரியன்** *iḷampāl-āciriyaṉ,* ***பெ. (n.) இளம் பாலார்க்குக் கற்பிக்கும் ஆசிரியன்*** (அகநா.102); teacher of children, dist. fr. pātāciriyaṉ. (செ.அக.).

*[இளம் + பாலர் + ஆசிரியன்.]*

**இளம்பிசின்** *iḷam-piśiṉ* பெ. (n.) ***நல்ல பிசின்;*** gum of good quality and one easily soluble. (சா.அக.).

**இளம்பிடி** *iḷam-piḍi,* பெ. (n.) 1. ***அழகிய பெண்;*** beautiful woman. "இளம்பிடி யிவனுக்கென்னினைந்தி ருந்தாய்". (திவ்.பெரியதி.2,7,2) (அக.நி.). 2. ***இளைய பெண்யானை;*** young female elephant.

*[இளம் + பிடி. பேடு - பெடு - பிடு - பிடி.]*

**இளம்பிள்ளை** *iḷam-piḷḷai,* பெ. (n.) ***சிறுபிள்ளை*** (திவா.); baby, infant, child. (செ.அக.).

*[இள - இளம் + பிள்ளை.]*

**இளம்பிள்ளைக்காரி** *iḷam-piḷḷai-k-kāri,* பெ. (n.) ***கைக்குழந்தை வைத்திருக்குந் தாய்;*** mother with a child in arms. (சா.அக.).

*[இள - இளம் + பிள்ளை + காரி.]*

**இளம்பிள்ளைவாதம்** *iḷam-piḷḷai-vādam,* பெ. (n.) ***குழந்தைகளுக்கு வரும் வாதநோய்வகை;*** infantile paralysis. (செ.அக.).

*[இளம் + பிள்ளை + வாதம்.]*

**இளம்பிறை** *iḷam-piṟai,* பெ. (n.) 1. ***சிறு பிறை;*** crescent moon. இளம்பிறை நோக்கினன். (உபதேசகா.சிவவிர. 305). 2. ***இணையா வினைக்கை வகை*** (சிலப். 3,18,உரை); gesture in dance with one hand in which the four fingers are joined and curved like a crescent, while the thumb is kept apart. (செ.அக.).

*[இள - இளம் + பிறை. சுட்டுவிரல் நடுவிரல் அணிவிரல் சிறுவிரல் சேர்ந்து உள்வளையப் பெருவிரல் அவற்றை விட்டு நீங்கி வேறாயிருப்பது. (சிலப்.3, 18 உரை).]*

**இளம்புடம்** *iḷam-puḍam,* பெ. (n.) ***சிறியபுடம்;*** small fire for calcination. (சா.அக.).

*[இள - இளம் + புடம்.]*

**இளம்புல்** *iḷam-pul,* பெ. (n.) 1. ***முதிராப்புல்*** (திவா.); fresh, tendergrass. 2. ***அறுகு*** (மலை.); Bermuda grass (செ.அக.).

**க.** எளெவுல்.

*[இள் - இளம் + புல்.]*

**இளம்பூரணர்** *iḷam-pūraṇar*, பெ. (n.) ***தொல்காப்பியத் தின் முதல் உரையாசிரியர்*** (நன்.359,மயிலை); first commentator of the Tholkāppiyam. (செ.அக.).

*[இளம் + பூரணர். இளம்பூரணம் = பிறைநிலா. இளம்பூரணர் - சிவன் பெயர்களுள் ஒன்று.]*

**இளம்பூரணவடிகள்** *iḷam-pūraṇa-v-aḍigaḷ*, பெ. (n.) ***இளம்பூரணர்*** (சிலப்.8,1,உரை); Ilampūraṇar, who was an ascetic. (செ.அக.).

*[இளம் + பூரணம் + அடிகள். இளம்பூரணம் = பிறைநிலா.]*

**இளம்பெண்** *iḷam-peṇ*, பெ. (n.) 1. ***கற்றாழை*** (தைலவ்.தைல.94) பார்க்க; aloe (செ.அக.). 2. ***இளகிய மனத்தினை உடைய பெண்;*** soft-hearted lady. (கருநா.). 3. ***இளமையுடையாள்;*** young lady.

க. எளவெண்.

**இளம்பெருவழுதி** *iḷam-peru-vaḻudi*, பெ. (n.) ***கடைக்கழகக்கால அரசனும் புலவனும் ஆவன்;*** chieftain and poet of the third Tamil Sangam period.

*[இளம் + பெரு + வழுதி. இவர் பெருவழுதியின் தம்பியாகலாம்.]*

**இளம்போதியார்** *iḷam-pōdiyār*, பெ. (n.) ***கடைக்கழக காலப் புலவருள் ஒருவர்;*** a Sangam poet.

*[இளம் + போதி + ஆர்.]*

**இளம்வயிறு** *iḷam-vayiṟu*, பெ. (n.) 1. ***குழந்தை வயிறு;*** child's stomach. 2. ***பேறுகாலப்புண் ஆறாதவயிறு;*** painful abdomen of a woman after delivery. (சா.அக.).

*[இள → இளம் + வயிறு.]*

**இளமகன்** *iḷa-magaṉ*, பெ. (n.) ***அகம்படியச் சாதியான்;*** member of a cultivating caste found chiefly in the zamin taluk of Tiruppattur in the Ramnad district. (செ.அக.).

க. எளமக.

*[இள → இளம் + மகன்.]*

**இளமட்டம்** *iḷa-maṭṭam*, பெ. (n.) 1. ***குறுமட்டக்குதிரை*** (வின்.); small pony. 2. ***இளைஞன்*** (வே.க.17); little boy or girl; stripling, youth; young woman. (செ.அக.).

*[இள → இளம் + மட்டம்.]*

**இளமண்** *iḷa-maṇ*, பெ. (n.) ***மணற்றரை*** (வின்.); sandy soil. (செ.அக.).

*[இள → இளம் + மண்.]*

**இளமண்டை** *iḷa-maṇḍai*, பெ. (n.) ***சிறிய, மெல்லிய தலை, குழந்தையின் தலையோடு;*** skull of a child. (சா.அக.).

*[இளம் + மண்டை.]*

**இளமணல்** *iḷa-maṇal*, பெ. (n.) ***குருத்துமணல்;*** quick sand. "தேரோ டிளமண லுட்படலோம்பு" (கலித்.98) (செ.அக.).

*[இளம் + மணல்.]*

**இளமணற்பாய்[1]-தல்** *iḷamaṇaṟ-pāy-*, 2 செ.கு.வி. (v.i.) ***இளமணலிற் காலமுழுந்துதற்போல அகப்படுதல்;*** to be caught, as the feet in quick-sand. "திருச்சோலையின் யோக்யதையிலே இளமணற் பாய்ந்து கால்வாங்க மாட்டாதே நிற்கும்." (திவ்.அமலனாதி6,வியா.பக்.77) (செ.அக.).

*[இளம் + மணல் + பாய்தல்.]*

**இளமணற்பாய்[2]-தல்** *iḷa-maṇaṟ-pāy-*, 2 செ.கு.வி. (v.i.) ***மனமிளகி யீடுபடுதல்*** (ஈடு.1,3,ப்ர.); to be irresistably drawn to, as a devotee to God in meditating on His attributes and benignity, just as fine sand is carried away by a flood. (செ.அக.).

**இளமரக்கா** *iḷa-mara-k-kā*, பெ. (n.) ***வயல்சூழ்ந்த சோலை.*** (சிலப்.11,14, உரை); grove reared in the midst of green fields. (செ.அக.).

*[இளம் + மரம் + கா.]*

**இளமரல்** *iḷa-maral*, பெ. (n.) ***அறுகம்புல்*** (சா.அக.); Bermuda grass.

*[இளம் + அரல்.]*

**இளமழை** *iḷa-maḻai*, பெ. (n.) ***சிறுபெயல் முகில்;*** drizzling. "இளமழையாடும்" (கலித்.41) (செ.அக.).

*[இளம் + மழை.]*

**இளமார்பு** *iḷa-mārbu*, பெ. (n.) ***கருப்பூரவகை;*** a kind of camphor. (செ.அக.).

*["மலைச்சரக்கு கலை அடைவுசரக்கு மார்பு இளமார்பு ஆரூர்க் கால் கையொட்டுக்கால் மாரப்பற்று வராசான் குமடெறிவான் உருக்குருக்கு வாறோசு சூடன் சீனச்சூடன் என்று பெயர்கூறப் பட்ட பலவகை" (சிலப்.14, 109 உரை).]*

**இளமுறை** *iḷa-muṟai*, பெ. (n.) ***குடும்ப வழிமரபினர்-பின்தோன்றியவர்*** (இ.வ.); heir apparent, the second member of a family. (செ.அக.)

ம. இளமுறை.

*[இளம் + முறை.]*

**இளமை** *iḷamai*, பெ. (n.) 1. ***இளம்பருவத்து அழகிய தோற்றம்;*** childhood, youthfulness "இளமையிற் கல்" (ஆத்தி.). 2. ***மென்மை*** (வின்.); tenderness. 3. ***அறிவு முதிராமை*** (வின்.); indiscretion; immaturity of knowledge and intellect. 4. ***ஒன்றை வேறொன்றாக மயக்கும் மயக்கம்*** (பிங்.); illusion. 5. ***தாழ்வு*** (சூடா.); inferiority, baseness. 6. ***காமம்*** (சூடா.); amorousness. (செ.அக.).

ம. இளது; க. எளெமெ.

*[இள → இளம் → இளமை.]*

**இளமைச்செவ்வி** *iḷamai-c-cevvi*, பெ. (n.) ***விடலைப் பருவ அழகு*** (திவா.); charm or beauty of youth. (செ.அக.).

*[இளமை + செவ்வி. விடலைப் பருவம். 16 - 30 அகவை கொண்டது.]*

**இளமையாடு-தல்** *iḷamai-y-āḍu-,* 5 செ.கு.வி. (v.i.); ***ஒன்றை மற்றொன்றாக உணர்தல், திரிபுணர்ச்சி யுறுதல்;*** be deluded into believing one thing to be quite a different one. மந்தி...."இளமையாடி யிருக்கும் வனத்து" (சீவக.2491) (செ.அக.).

*[இளமை + ஆடு.]*

**இளவட்டக்கல்** *iḷa-vaṭṭa-k-kal,* பெ. (n.) ***இளந்தாரிக் கல்*** பார்க்க; see *iḷandāri-k-kal.*

*[இளம் + வட்டம் - இளவட்டம் + கல்.]*

**இளவட்டப்பணம்** *iḷa-vaṭṭa-p-paṇam,* பெ. (n.) 1. ***மணமகன் தன்னூர் நோக்கிச் செல்லுமிடையிற் சந்திக்கும் ஊரார்க்கு அளிக்கும் கால்உருபா மதிப்புர வுப் பணம்;*** customary present of a quarter rupee coin which a newly married bridegroom has to pay to the people of the village or villages through which he passes on his return home after his marriage in the bride's house. 2. ***வேற்றூரிலிருந்து வந்த மணமகன் திருமணம் முடிந்து ஊர்கோலம் வருவதற்குப் பல் லக்கில் ஏறும்போது தான்மணம்புரிந்த சிற்றூர் இளைஞர்களுக்குக் கொடுக்கும் மதிப்புரவுப் பணம்;*** small present, prob. of the nature of a permit-fee, which a bridegroom who is not a native of the village wherein his marriage is celebrated has to pay to the youths of the locality, just before the usual marriage procession starts in a palanquin. (செ.அக.).

*[இளவட்டம் + பணம்.]*

**இளவட்டம்** *iḷa-vaṭṭam,* பெ. (n.) ***இளமட்டம்*** பார்க்க; see *iḷa-maṭṭam.*

**இளவடி** *iḷa-vaḍi,* பெ. (n.) ***இளம்பதத்தில் வடிக்கை*** (வின்.); imperfect distillation. (செ.அக.).

*[இளம் + வடி.]*

**இளவணி** *iḷa-v-aṇi,* பெ. (n.) ***காலாட்படை;*** infantry. "நின்ற இளவணி கலங்கி" (ஈடு.7.41) (செ.அக.).

*[இளம் + அணி.]*

**இளவத்தி** *iḷavatti* பெ. (n.) ***அத்திப்பிஞ்சு;*** young or tender fruit of the country fig tree. (சா.அக.).

*[இளம் + அத்தி.]*

**இளவரசன்** *iḷavarašaṉ,* பெ. (n.) 1. ***இளங்கோ*** (அருங்கலைச்.53); crown prince, heir-apparent to a throne. 2. ***இளம்பருவத்தரசன்;*** king in his minority. (செ.அக.).

ம. இளவரசு.

*[இளம் + அரசன்.]*

**இளவரசு** *iḷa-v-arašu,* பெ. (n.) ***பட்டத்திற்குரிய அரசனின் மகன்;*** crown prince "தன்போ லிளவரசாக் கினானே" (சீவக.2912).

ம. இளவரசு.

*[இள + அரசு.]*

**இளவல்** *iḷaval,* பெ. (n.) 1. ***தம்பி;*** younger brother, he who is younger than one's self. "இளவல்பின் னெழுந்து" (கம்பரா.மூலபல.67). 2. ***சிறுவன்;*** lad. "இளவறன் னுயிரும்...... காத்தார்" (கம்பரா.மிதிலை. 129). 3. ***மகன்;*** son. "கயமுக னாவி மாட்டுமுன் னிளவல்" (காஞ்சிப்பு.குமர.3). 4. ***முதிராதது;*** that which is not fully developed. இந்தத் தேங்காய் இளவல். (இ.வ.) (செ.அக.).

ம. இளவன்.

*[இள + அல். அல் - சொல்லாக்கப் பெயரீறு.]*

**இளவழிபாடு** *iḷa-vaḻipāḍu,* பெ. (n.) ***சிறுபிள்ளைக் கல்வி*** (யாழ்.அக.); child education. (செ.அக.).

*[இள + வழிபாடு. ஆசிரியனை வழிபட்டுப் பெறுங் கல்வி.]*

**இளவழுக்கை** *iḷa-vaḻukkai,* பெ. (n.) 1. ***இளங்காய்;*** any glutinous tender fruit, generally said of a cocoanut. 2. ***கருப்பையிலிருக்கும் முதிராத மூன்று மாதத்திய பிண்டக் கரு;*** an euphemistic term for an undeveloped foetus. (சா.அக.).

*[இளம் + வழுக்கை.]*

**இளவளை** *iḷavaḷai,* பெ. (n.) ***இளைய சங்கு;*** tender conch. "நாகிள வளையொடு" (புறநா.266.5) (சங்க. இலக்.சொற்.).

*[இளம் + வளை.]*

**இளவறுப்பு** *iḷavaṟuppu,* பெ. (n.) ***இளம்பதமாய் வறுத்தல்;*** frying without scorching with the aid of a gentle heat. (சா.அக.).

*[இள + வறுப்பு.]*

**இளவன்** *iḷavaṉ,* பெ. (n.) 1. ***ஒருவகை நஞ்சு*** (மூ.அ.); prepared arsenic (செ.அக.). 2. ***ஒரு வகைப் பூசணிக் காய்;*** a kind of pumpkin. 3. ***முதிராத காய்;*** young or unripe fruit. (சேரநா.).

ம. இளவன்.

*[இள - இளவன். ஒருகா. இளக்கமாகச் செய்த செய்நஞ்சுக் கூட்டு.]*

**இளவனமுலை** *iḷa-vaṉa-mulai* பெ. (n.) ***இளம் பெண் ணின் அழகிய மார்பகம்;*** breast with youthful elgance. "எதிர்த்த தித்தி ஏரிள வனமுலை" (நற்.160-4).

*[இளம் + வன + முலை. வன-வனப்பு.]*

**இளவாடை** *iḷa-vāḍai,* பெ. (n.) ***வடக்கிருந்து வரும் மென்காற்று;*** mild north wind. "இன்னிளவாடை" (திவ்.பெரியதி.9,5,2) (செ.அக.).

*[இள + வாடை. வாடை = வடக்கினின்றும் வீசும் காற்று. இளவாடை = மென்பதமான வடகாற்று.]*

**இளவாளிப்பு** *iḷa-vāḷippu,* பெ. (n.) 1. ***ஈரம்*** (யாழ்ப்.); dampness, moisture. 2. ***இளகுதல்;*** melting. (செ.அக.).

*[இள + வாளிப்பு. ஒருகா. வளி - வாளிப்பு.]*

**இளவிச்சிக்கோ** *iḷa-vicci-k-kō,* பெ. (n.) ***கடைக்கழக காலத்துமன்னருள் ஒருவன்;*** a king in Sangam age.

*[இளம் + விச்சி + கோ.]*

**இளவித்து** *iḷa-vittu,* பெ. (n.) ***மூன்று திங்களில் விளையும் ஒருவகை நெல்;*** a kind of paddy. (சேரநா.).

ம. இளவித்து.

*[இளம் + வித்து.]*

**இளவிரிசு** *iḷa-viriśu,* பெ. (n.) ***ஒருமரம்*** (சா.அக.); a kind of tree.

*[இளம் + விரிசு.]*

**இளவிளவெனல்** *iḷa-v-iḷa-v-eṉal,* பெ. (n.) ***பயிர் பசுஞ் செழிப்பாயிருத்தல்;*** expr. denoting luxuriant growth of vegetation. (செ.அக.).

*[இள + இள + எனல்.]*

**இளவுச்சி** *iḷa-v-ucci,* பெ. (n.) ***நண்பகற்கு அணித்தான முற்பொழுது*** (விதான.எச்சவினை.4); forenoon nearer midday. (செ.அக.).

*[இள + உச்சி = உக்கம் → உத்தம் → உத்தி → உச்சி.]*

**இளவுடையான்** *iḷa-v-uḍaiyāṉ,* பெ. (n.) ***இளவரசன்;*** son of a king. ''இளவுடையானென்றேத்த'' (சீவக.2568) (செ.அக.).

*[இளம் + உடையான்.]*

**இளவுறை** *iḷav-urai,* பெ. (n.) ***நன்றாகத் தோயாத தயிர்*** (யாழ்.அக.); milk not fully formed into curds. (செ.அக.).

*[இளம் + உறை. உறைதல் - தோய்தல்.]*

**இளவெந்நீர்** *iḷa-vennīr,* பெ. (n.) ***சிறுசூடுள்ள வெந்நீர்;*** tepid water. (செ.அக.).

*[இளம் + வெம் + நீர்.]*

**இளவெந்நீர் முழுக்கு** *iḷavennīr muḻukku* பெ. (n.) ***இளஞ்சூடான நீரில் தலைக்குக் குளித்தல்;*** having a bath in tepid water. (செ.அக.).

*[இளம் + வெம் + நீர் + முழுக்கு.]*

**இளவெயில்** *iḷa-veyil,* பெ. (n.) ***காலை வெயில்;*** morning sunshine which is warm but not sensibly hot. (செ.அக.).

ம. இளவெயில்; க. எளபிசில.

*[இளம் + வெயில்; வெம் = வெய் - வெயில்.]*

**இளவெயிற் காய்தல்** *iḷaveyiṟ-kāydal,* பெ. (n.) ***காலை நேரத்தில் சூரிய வெளிச்சத்தில் சூடேறும்படி உடம்பைக் காட்டிக் காய்தல்; இதனால் உடம்பிலுண்டான பித்தம் மயக்கம் முதலிய நோய்களெல்லா மதிகப் படும்;*** exposing oneself to the morning sun. (சா.அக.).

*[இளம் + வெயில் + காய்தல்.]*

**இளவெழுத்து** *iḷa-v-eḻuttu,* பெ. (n.) ***திருந்தா வெழுத்து*** (வின்.); unformed handwritting as that of a child just learning to write. (செ.அக.).

*[இள + எழுத்து.]*

**இளவேங்கை** *iḷa-vēṅgai,* பெ. (n.) ***முதிராதவேங்கை மரம்;*** young margosa tree. ''நாகிள வேங்கையிற் கதிர்த்தொளி திகழும்'' (புறநா.352.12) (சங்.இலக். சொற்.).

*[இளம் + வேங்கை.]*

**இளவேனில்** *iḷa-vēṉil,* பெ. (n.) 1. ***மேழம் விடைத் திங்கள்*** (சிலப்.8,7); period of time included in the months of Chitrai and Vaikāsi, being the milder part of the hot season, one of six paruvam. 2. ***வெப்பம் முதிராக் கோடை,*** (செ.அக.); summer season.

*[இளம் + வேனில்.]*

**இளி[1]-தல்** *iḷi-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. ***இணுக்குதல்;*** to pluck. "இளிந்த வீயும்" (சீவக.1241). 2. ***உரித்தல்*** (சூடா.); to strip off. - செ.கு.வி. (v.i.) ***இகழப்பட்டு எளிய னாதல்*** (தொல்.பொ.253,உரை); to become low spirited because of being ridiculed by others. (செ.அக.).

*[இல் → இள் → இளி. இல் = குத்துதல். இளிதல் = குத்திப்பிரித்தல், உரித்தல்.]*

**இளி[2]-த்தல்** *iḷi-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. ***இகழ்தல்*** (வின்.); to disgrace, condemn. 2. ***எள்ளல்*** (வின்.); to laugh, scorn, ridicule. - செ.கு.வி. (v.i.) ***பல்லைக் காட்டுதல்;*** to grin; to show the teeth, as in cringing or in craving servilely. (செ.அக.).

ம. இளிக்குக.

*[இல் → இள் → இளி. இளித்தல் = பிரித்தல். உதடு பிரித்தல், பல்லைக்காட்டுதல்.]*

**இளி[3]** *iḷi,* பெ. (n.) 1. ***இகழ்ச்சி;*** disgrace, contempt, contumely, scorn. 2. ***குற்றம்;*** fault, defect. ''இளியொரு வற் கஃதிறந்து வாழ்துமெனல்'' (குறள்.971). 3. ***சிரிப்பு*** (பிங்.); grin, laughter. 4. ***இகழ்ச்சிக் குறிப்பு நகை;*** derisive laughter; unseasonable jocularity. 5. ***இசையின் ஏழொலியுள் ஐந்தாவது;*** the fifth tone of the gamut. (செ.அக.).

ம. இளி.

*[இல் → இள் → இளி. இளி = பிறர் சிரிக்கத்தக்க எள்ளி நகையாடத் தக்க குற்றம், இகழ்ச்சி.]*

**இளிகண்** *iḷi-kaṇ,* பெ. (n.) ***பீளைக்கண்;*** blear eyes; eyes sore with rheum; ectropion. "இளிகண்ணனைப் புண்டரீகாட்சனென்றும்" (ஈடு.3,9,10) (செ.அக.).

*[இள் → இள → இளி. இளி + கண். இளி = குற்றம், நோய்.]*

**இளிச்சகண்ணி** *iḷicca-kaṇṇi,* பெ. (n.) ***காமக்குறிப் போடு பிறரை நோக்குந் தன்மையுடையவள்;*** woman having amorous look. 'இளிச்சகண்ணிக்குப் புளிச்ச கண்ணி தேவலை' (செ.அக.).

*[இளித்த + கண்ணி. இளித்த = சிரித்த.]*

**இளிச்சவாய்** *iḷicca-vāy,* பெ. (n.) ***பல்தெரியும்படி திறந்தவாய்;*** open mouth in which the lips are parted so as to make the teeth visible. (சா.அக.).

*[இளித்த → இளிச்ச + வாய்.]*

**இளிச்சவாய்ப்பட்டம்** *iḷcca-vāy-p-paṭṭam,* பெ. (n.) ***ஒன்றுந் தெரியாதவன் என்ற பட்டம்;*** notoriety of being a fool. 'முடிச்சு அவிழ்க்கக் கொடுத்தது மல்லாமல் இளிச்ச வாய்ப்பட்டமுங் கிடைத்தது' (செ.அக.).

*[இளித்த → இளிச்ச + வாய் + பட்டம்.]*

**இளிச்சவாயன்** *iḷicca-vāyaṉ,* பெ. (n.) 1. ***எப்போதும் பல்லைக்காட்டுபவன்;*** one who is always showing his teeth; one who grins like a monkey. 2. ***எளிதில் ஏமாற்றப் படுபவன்;*** one who is easily misled, simpleton. (செ.அக.).

ம. இளிச்சவாயன்.

*[இளித்த → இளிச்ச + வாய் + அன். **இளித்த வாயன்** பார்க்க; see iḷittavāyaṉ.]*

**இளிச்சற்கண்** *iḷccaṟ-kaṇ,* பெ. (n.) ***இளிகண்*** (வின்.) பார்க்க (செ.அக.); see *iḷikaṇ.*

*[இளித்தல் → இளிச்சல் + கண்.]*

**இளித்தல்** *iḷittal* பெ. (n.) ***பல்லைக்காட்டல்;*** grinning to have the lips open so as to expose the teeth, as dogs do. (சா.அக.).

*[இள் → இளி → இளி-த்தல்.]*

**இளித்தவாயன்** *iḷitta-vāyaṉ,* பெ. (n.) ***குரங்குபோல் பல்லைக் காட்டுபவன்; இழுப்பு நோய் காணின் தோன்றும் குறி;*** one who shows his teeth like a monkey. It is also a sign in tetanus or delirium. (சா.அக.).

*[இளி → இளித்த + வாயன்.]*

**இளிதேர்தீம்குரல்** *iḷitēr-tīmkural* பெ. (n.) ***குரலாகத் தேர்ந்து இசைக்கும் மேற்செம்பாலை யென்னும் பண்;*** an ancient musical term. "இளிதேர் தீங்குர லிசைக்கு மத்தம்" (அகநா.33.7).

*[இளி + தேர் + தீம் + குரல்.]*

**இளிந்த காய்** *iḷinda-kāy* பெ. (n.) ***பாக்கு;*** areca-nut. Areca catechu (சா.அக.).

*[இளி - இளிந்த + காய்.]*

**இளிப்படு-தல்** *iḷi-p-paḍu-,* 20 செ.கு.வி. (v.i.) ***அகப் படுதல்;*** to be caught, trepanned "இளிப்பட்டன வீகைப்போர்" (கலித்.95) (செ.அக.).

*[இளி + படு.]*

**இளிப்பு** *iḷippu* பெ. (n.) 1. ***பல்லைக் காட்டிச் சிரித்தல்;*** grinning. 2. ***நாணுதல்;*** feeling disgrace or bashful. 3. ***குதிரை கனைத்தல்;*** neighing of a horse. (சேரநா.).

ம. இளிப்பு.

*[இளி → இளிப்பு.]*

**இளிம்பு** *iḷimbu,* பெ. (n.) ***திறமையின்மை;*** unskilfulness incompetancy. 'இடையரிளிம்பு கண்டால்' (ஈடு.3,5,3) (செ.அக.).

*[இளி → இளிம்பு.]*

**இளிவரல்** *iḷi-varal,* பெ. (n.) ***இழிப்புச் சுவை;*** emotion of disgust one of eight mey-p-pāḍu. "மூப்பே பிணியே வருத்தம் மென்மையொடு யாப்புற வந்த இளிவரல் நான்கே" (தொல்,பொருள்,மெய்.6) (செ.அக.).

*[இளி + வரல்; இளிவரல் = இகழ்ச்சிவரல்.]*

**இளிவு** *iḷivu,* பெ. (n.) 1. ***இகழ்ச்சி;*** disgrace, ridicule. "இளிவென்னு மேதப்பாடு" (குறள்.464). 2. ***இழிதகவு*** (திவா.); wretchedness, lowness in rank or character. 3. ***அருவருப்பு;*** disgust. "இரவும் பகலும் இளிவுடன் தரியாது" (மணி.6.28).

*[இளி → இளிவு.]*

**இளை**[1] *iḷai,* பெ. (n.) 1. ***தலைக்காவல்*** (திவா.); main guard; strong watch in a fortress. 2. ***காவற்காடு;*** jungle growth maintained as a defence around a fortified city. "இளையுங் கிடங்குஞ் சிதைய" (பு.வெ. 5,3). 3. ***கட்டுவேலி;*** hedge, fence, protecting enclosure. "இளைசூழ் மிளை" (சிலப்.14,62) (செ.அக.).

*[மிளை → இளை. மிளை - மிடைந்துகட்டும் வேலி காவற்காடு.]*

க. எளெ.

*[இள் → இளை.]*

**இளை**[2] *iḷai,* பெ. (n.) ***திருமகள்*** (ஆ.அக.); Lakshmi the goddess.

*[இள் → இளை.]*

**இளை**[3] *iḷai,* பெ. (n.) ***இளைப்பு;*** lean. (ஆ.அக.).

*[இள் → இளை.]*

**இளை**[4]**-த்தல்** *iḷai-,* 4 செ.கு.வி. (v.i.) 1. ***சோர்தல்;*** to grow weary, to be fatigued, to get exhausted. "எல்லாப்பிறப்பும் பிறந்திளைத்தேன்" (திருவாச.1,31). 2. ***மெலிதல்;*** to be emaciated, to grow lean, to become worn out. "இளைத்தனர் நாயனா ரென்று" (பெரியபு.கண்

ணப்.123). 3. ***பின்னடைதல்;*** to fail before a foe; to lag behind a rival; to yield to superior force. ''மதனனம்புக் கிளையார்'' (பதினொ.திருவிடை.மும்.21). 4. ***ஏழைமைப்படுதல்;*** to become impoverished. 'அந்தக் குடும்பம் இளைத்துப் போயிற்று' (கொ.வ.). 5. ***வளங் குறைதல்;*** to reach the stage of diminishing returns as land; to grow weak and lacking in fruitfulness, as trees, to fade, lose vigour, as a plant. 'பயிர் இளைத்துக் காட்டுகிறது' (வின்.) (செ.அக.).

*[இள → இளை-தல்.]*

**இளை[5]-த்தல்** *iḷai-,* 4 செ.கு.வி. (v.i.) ***நெகிழ்நிற்றல்;*** to get slack. ''தானே யிளைக்கிற் பார்கீழ் மேலாம்'' (திவ்.இயற்.பெரியதிருவந்.24) (செ.அக.).

*[இள → இளை → இளை-த்தல்.]*

**இளை[6]** *iḷai-,* பெ. (n.) 1. ***கிடங்கு;*** ditch, moat. 2. ***கரடி;*** Indian black bear. (செ.அக.).

*[இல் - இள் - இளை.]*

**இளை[7]** *iḷai,* பெ. (n.) 1. ***தம்பி;*** younger brother. 'இளைபுரிந் தனித்தன்மே லிவர்ந்த காதலன்' (கம்பரா. கவந்த.27) (செ.அக.). 2. ***இளைமை;*** tenderness;

க. எளெ.

*[இள - இளை.]*

**இளை[8]** *iḷai,* பெ. (n.) ***முகில்*** (பிங்.); cloud. (செ.அக.).

*[இல் - இள் - இளை.]*

**இளை[9]** *iḷai,* பெ. (n.) ***நிலம்;*** earth. ''இளையெனுந் திருவினை யேந்தினான்'' (கம்பரா.கிளை.119).

*[இள் → இளை.]*

**இளைச்சி** *iḷaicci,* பெ. (n.) ***தங்கை;*** younger sister. ''அகிலமுண்டார்க்கு நேரிளைச்சி'' (திருப்பு.1037) (செ.அக.).

*[இள் - இள - இளைச்சி.]*

**இளைசு** *iḷaišu-,* பெ. (n.) ***இளைது*** பார்க்க; see *iḷadu.*

*[இளைது - இளைசு.]*

**இளைஞன்** *iḷainaṉ,* பெ. (n.) 1. ***விடலைப் பருவத்தன்;*** lad, youngman. ''இளையோர் சிந்தைபோல்'' (கம்பரா.நாட்டுப்.52). 2. ***தம்பி*** (வின்.); younger brother. (செ.அக.).

*[இள் - இளை → இளைஞன்.]*

**இளைத்தமண்** *iḷaittamaṇ* பெ. (n.) ***சத்துக் குறைந்த மண்;*** strengthless soil. (ஆ.அக.).

*[இளைத்த + மண்.]*

**இளைத்தவன்** *iḷaittavaṉ,* பெ. (n.) 1. ***எளிமைப்பட்டவன்;*** poorman. 2. ***மெலிவடைந்தவன்*** (கொ.வ.); weakman. (செ.அக.).

*[இளை → இளைத்தவன்.]*

**இளைது** *iḷaidu,* பெ. (n.) 1. ***முதிராதது;*** that which is young and not fully developed. ''இளைதாக முண்மரங் கொல்க'' (குறள்.879) (செ.அக.). 2. ***பக்குவம் சரியாக வராதது;*** (காய்ச்சிய எண்ணெய் போல்வன); that which is not fully boiled or heated (சேரநா.). 3. ***தாழ்ந்தது, குறைவு;*** inferiority, baseness, disgrace. (சேரநா.).

ம. இளது.

*[இள் → இளை → இளையது → இளைது.]*

**இளைப்படு-தல்** *iḷai-p-paḍu-,* 20 செ.கு.வி. (v.i.) ***வலையிலகப்படுதல்*** (அகநா.3,உரை); to be caught in the snare. (செ.அக.).

*[இளை + படு.]*

**இளைப்படுபேடை** *iḷai-p-paḍu-pēḍai,* பெ. (n.) ***காவலெய்திய பேடை;*** female detained for protection. ''இளைப்படு பேடையிரிய'' (அகம்.310-15) (சங்.இலக்.சொற்) ''பருந்திளைப் படூஉம் பாறுதலை யோமை'' (அகநா.21-15) (சங்.இலக்.சொற்).

*[இள் → இளை → இளைப்படு + பேடை.]*

**இளைப்பாற்றி[1]** *iḷaippāṟṟi,* பெ. (n.) ***இளைப்பை நீக்குதல்;*** that which refreshes; that which relieves fatigue. ''கோடையிலே இளைப்பாற்றிக் கொள்ளும் வகைகிடைத்த குளிர்தருவே'' (திருவருட்பா) (செ.அக.).

*[இளைப்பு + ஆற்றி.]*

**இளைப்பாற்றி[2]** *iḷaippāṟṟi,* பெ. (n.) ***களைப்பை யாற்றும் சிற்றுணவு;*** refreshing light food after fatigue, refection. (சா.அக.).

*[இளைப்பு + ஆற்றி.]*

**இளைப்பாற்று-தல்** *iḷaippāṟṟu-,* 15 செ.கு.வி. (v.i.) ***விடாய் தீர்த்தல்;*** to refresh; to relieve fatigue, cause to rest,to quench thirst. (செ.அக.).

*[இளைப்பு + ஆற்று.]*

**இளைப்பாறு-தல்** *iḷaippāṟu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. ***விடாய் நீங்குதல்;*** to allay fatigue by taking rest, enjoy repose after fatiguing work. 2. ***இளைப்பாறப் பொழுதின்றி நீங்கி ஓய்ந்திருத்தல் (இ.வ.) to retire from active work, as a pensioner. (செ.அக.).***

*[இளைப்பு + ஆறு.]*

**இளைப்பாறுதல்** *iḷaippāṟudal,* பெ. (n.) ***துஞ்சுதல்;*** eternal rest. ''மேரியம்மாள் கருத்தருடைய இளைப்பாறுதலுக்குட் பிரவேசித்தாள்'' (Chr.).

*[இளைப்பு + ஆறுதல்.]*

**இளைப்பிருமல்** *iḷaippirumal* பெ. (n.) ***இளைப்பை யுண்டாக்குமோர் வகைக் காசநோய்;*** a form of asthma causing fatigue by coughing. (சா.அக.).

*[இளைப்பு + இருமல்.]

**இளைப்பு**[1] *iḷaippu,* பெ. (n.) 1. ***சோர்வு;*** weariness, fatigue, lassitude. "இளைப்பெய்த" (திவ்.இயற்.பெரிய திருவ.23). 2. ***அச்சம்;*** affliction, distress. "இளைப் பினை யியக்க நீக்கி" (திவ்.திருக்குறுந்.18) (செ.அக.).

**ம.** இளப்பு; **க.** டப்பு; **தெ.** ட்ய்யு; **கோத.** எள்வ்; **துட.** எள்வ்; **கொலா.** டய்.

*[இளை - இளைப்பு.]*

**இளைப்பு**[2] *iḷappu-,* பெ. (n.) ***மெலிவு*** (ஆ.அக.); leanness; emaciation.

*[இளை - இளைப்பு.]*

**இளைமை** *iḷaimai-,* பெ. (n.) ***இளமை*** பார்க்க; (செ.அக.); see *iḷamai.*

*[இள - இளமை - இளைமை.]*

**இளைய ஆடுநடை** *iḷaiya āḍu naḍai* பெ. (n.) ***இளமையில் அசைந்தியங்கும் நடை;*** swing walking "வாடாப் பைம்மயிரிளைய வாடுநடை" (பதிற்றுப். 12:11).

*[இள் → இளைய + ஆடுநடை.]*

**இளைய நயினார்** *iḷaiya-nayiṉār-,* பெ. (n.) ***முருகக் கடவுள்;*** Lord Murugan (M.E.R.507 of 1929-30); (செ.அக.).

*[இள - இளைய + (நாயனார்) நயினார்.]*

**இளைய பிள்ளையார்** *iḷaiya-piḷḷaiyār,* பெ. (n.) ***முருகக் கடவுள்;*** Muruga, the younger son of Śiva as dist. for Mūtta-pillaiyar. (செ.அக.).

*[இள - இளைய + பிள்ளையார்.]*

**இளைய பெருமாள்** *iḷaiya-perumāḷ-,* பெ. (n.) ***இராம னின் தம்பி; காட்டுக்கு இராமனோடு துணையாகச் சென்ற; இலக்குவன்*** (திவ்.திருநெடுந்.21,வ்யா.); lit; the junior Lord, an appellation of Lakṣhmana, who was the younger brother of Rāma the Perumāl or Lord, and who accompanied his elder brother through his voluntary exile. (செ.அக.).

*[இள - இளைய + பெருமாள்.]*

**இளையம்** *iḷaiyam.,* பெ. (n.) ***இளமையையுடையது;*** that which is tender and young. "இளைய்மாகத் தழையா யினவே" (புறநா.248-2).

*[இளை - இளையம்.]*

**இளையமரக்கால்** *iḷaiya-marakkāl,* பெ. (n.) ***சிறு மரக்கால்;*** a small marakkāl. 'கலத்துவாய்த் தூணி இளையமரக்காலால் வரிசையிட்ட படி' (S.I.I.IV,30) (செ.அக.).

*[இளம் - இளைய + மரக்கால்.]*

**இளையர்** *iḷaiyar,* பெ. (n.) 1. ***இளைஞர்*** (பரிபா.6.27); youths, youngmen. 2. ***வேலைக்காரர்;*** servants. "இளையர் விருந்தினர்" (தொல்.பொ.193) (செ.அக.).

*[இள → இளையர்.]*

**இளையவர்** *iḷaiyavar,* பெ. (n.) ***இளம்பெண்கள்;*** young women. "இளையவர் வலைப்பட்டிருந்து" (தேவா. 462,9).

*[இள → இளையவர்.]*

**இளையவள்** *iḷaiyavaḷ,* பெ. (n.) ***திருமகள்;*** Lakshimi.

*[இள் - இளை - இளையவள்.]*

**இளையவன்** *iḷaiyavaṉ,* பெ. (n.) 1. ***அகவையிற் குறைந்தவன்;*** younger person, one who is junior in age. அவன் எனக்கு இளையவன். 2. ***விடலைப்பரு வத்தன்;*** lad, youth. 3. ***தம்பி;*** younger brother, so called because he is junior than oneself. "இதனைக் கேட்ட விளையவன்" (கம்பரா.மூலபல.62). 4. ***முரு கன்*** (திருவிளை.கடல்சுவற.1.); Murugan (செ.அக.).

**ம.** இளையவன்.

*[இள → இளையவன்.]*

**இளையன்** *iḷaiyaṉ,* பெ. (n.) ***தம்பி;*** younger brother. "வாலியோற்கவனிளையன்" (பரிபா.2,21).

*[இள → இளையன்.]*

**இளையாட்டக்குடி** *iḷaiyaṭṭa-k-kuḍi-,* பெ. (n.) ***நாட் டுக்கோட்டை செட்டிமார் பிரிவிலொன்று*** (அபி. சிந்.); a sub-division among the Nāttu-k-kottai chetty caste, and they are living in and around the village iḷaiyaṭṭa-k-kuḍi in Ramnad District.

*[இள → இளை + ஆட்டக்குடி. ஆட்டக்குடி என்னும் ஊரின் தொடர்பால் பெற்ற பெயராயிருக்கலாம்.]*

**இளையார்**[1] *iḷaiyār,* பெ. (n.) 1. ***பெண்கள்;*** young women, lasses. "முற்றா விளையார் விளையாட்டொடு" (திவ்.பெரியதி.3,8,8). 2. ***தோழியர்;*** female attendants. "இளையார் குழாத்திடையாள்" (சீவக.2585) (செ.அக.).

*[இளை → இளையார்.]*

**இளையார்**[2] *iḷaiyār,* பெ. (n.) ***கொழுந்தர்*** (இ.வ.); husband's younger brothers. (செ.அக.).

*[இளை - இளையார்.]*

**இளையாழ்வார்** *iḷai-y-āḻvār,* பெ. (n.) ***இராமானுசர்*** (குருபரம்); a distinctive appellation of Irāmāṉucar who is also called Laksmaṇa. (செ.அக.).

*[இளம் - இளைய + ஆழ்வார்.]*

**இளையாள்** *iḷaiyāḷ,* பெ. (n.) 1. ***தங்கை;*** younger sister. 2. ***திருமகள்*** (பிங்.); Lakshmi, as the younger of two sisters, mūtēvi being the elder. 3. ***பின் முறை மனைவி;*** any wife married after the first. (செ.அக.).

*[இளை - இளையாள்.]*

**இளையான்** *iḷaiyāṉ,* பெ. (n.) 1. ***தம்பி;*** younger brother. "அவனுமுனக் கிளையானோ" (கம்பரா.சூர்ப்ப.132). 2. ***இளமையுடையவன்*** (சீவக.1593); lad, youth.

ம. இளையான்; க. எளெய.

*[இளை + ஆன்.]*

**இளையான்குடிமாறநாயனார்** *iḷaiyāṉ-kuḍi-māṟa-nāyaṉār* பெ. (n.) ***நாயன்மார் அறுபத்து மூவருள் ஒருவர்*** (பெரியபு.); a canonized Saiva saint, one of Arupattu-mūvar. (செ.அக.).

*[இளையான் குடி - ஊர்; மாறன் - இயற்பெயர். நாயனார் சிவத்தொண்டினால் பெற்ற பெயர். இளையான் + குடி + மாறன் + நாயன் + ஆர்.]*

**இளையெள்** *iḷai-y-eḷ,* பெ. (n.) ***முற்றாத எள்*** (பிங்.); unripe rape seed. (செ.அக.).

*[இளை + எள்.]*

**இளையோன்**[1] *iḷai-y-ōṉ;* பெ. (n.) 1. ***சிறுவன்*** (பிங்.); boy, lad, youth. 2. ***தம்பி*** (பிங்.); younger brother. (செ.அக.).

ம. இளயோன்.

*[இளை + ஆன் - இளையான் - இளையோன்.]*

**இளையோன்**[2] *iḷaiyōṉ,* பெ. (n.) ***முருகக்கடவுள்*** (தக்கயாகப்.5,உரை); Murugan. (செ.அக.).

*[இளை → இளையன் → இளையான் → இளையோன்.]*

**இற்கடை** *iṟkaḍai,* பெ. (n.) ***வீட்டுவாயில்;*** entrance to a house. "இற்கடை... யூர்ந்தாயுநீ" (கலித்.97) (செ.அக.).

*[இல் + கடை.]*

**இற்கிழத்தி** *iṟ-kiḻatti,* பெ. (n.) ***குடும்பத்தலைவி;*** wife, who is the mistress of the house. "தனதிற்கிழத்தி தனையிகழின்" (கூர்மபு.தக்கன்.56).

*[இல் + கிழத்தி.]*

**இற்செறி-த்தல்** *iṟ-ceṟi-,* 4 செ.கு.வி. (v.i.) ***தலைவனைச் சந்தித்தற்கிடமின்றி, பெற்றோர் தலைவியை அவள் அகவை நோக்கி வீட்டினுள் இருத்துதல்*** (திருக்கோ.134); to restrain the heroine within the parental house in view of her adolescence, and thus indirectly impede her meeting her lover. (செ.அக.).

*[இல் + செறி.]*

**இற்செறிவு** *iṟ-ceṟivu,* பெ. (n.) ***தலைவனைச் சந்தித்தற்கிடமின்றிப் பெற்றோர் தலைவியை அவள் அகவை முதிர்ச்சி நோக்கி வீட்டினுள் இருத்துகை*** (திருக்கோ.133.கொளு); the restraint placed by her parents on the heroine in view of her reaching adolescent womanhood ;to stay within the house, which impedes her meeting her lover. (செ.அக.).

*[இல் + செறிவு.]*

**இற்பரத்தை** *iṟ-parattai,* பெ. (n.) ***காமக்கிழத்தியாகக் கொண்ட பரத்தை*** (பரிபா.6,உரை); concubine, kept as mistress, dist. fr. காதற்பரத்தை (செ.அக.).

*[இல் + பரத்தை.]*

**இற்பாலர்** *iṟ-pālar-,* பெ. (n.) ***நற்குடிப்பிறந்தவர்*** (பழ.1.84); persons of good birth, those born in a respectable family. (செ.அக.).

*[இல் + பாலர்.]*

**இற்பிறந்தார்** *iṟ-piṟandār,* பெ. (n.) ***நற்குடிப்பிறந்தார்;*** good qualities as inherited in a family. "இற்பிறந்தார் கண்ணேயும்" (குறள்.1044).

*[இல் + பிறந்தார்.]*

**இற்பிறப்பு** *iṟ-piṟappu-,* பெ. (n.) ***உயர்குடிப்பிறப்பு;*** descent from a good family, of noble extraction. "இற்பிறப் பறியீர்" (திவ்.பெரியதி.1,1,7) (செ.அக.).

*[இல் + பிறப்பு.]*

**இற்புலி** *iṟ-puli-,* பெ. (n.) ***பூனை*** (பிங்.); lit. domestic tiger, a familiar name for the cat. (செ.அக.).

*[இல் + புலி.]*

**இற்றவை** *iṟṟavai* பெ. (n.) ***முறிந்தவை;*** broken, wornout, corroded. "நறுவடி ஆர் இற்றவை போலழிய" (கலி 84-2).

*[இறு + அவை - இற்றவை.]*

**இற்றி**[1] *iṟṟi,* பெ. (n.) ***ஊன்*** (வின்.); meat. (செ.அக.).

*[இல் + தி - இற்றி.]*

**இற்றி**[2] *iṟṟi,* பெ. (n.) ***இத்தி;*** tailed oval-leaved fig. (செ.அக.) "கல்லிவரிற்றி" (ஐங்குறு.279).

*[இல் + தி - இத்தி - இற்றி.]*

**இற்றிறந்துபோ-தல்** *iṟṟiṟandu-pō-,* 8 செ.கு.வி. (v.i.) ***ஏழ்மையினால் இறத்தல்;*** to die of poverty. (சா.அக.).

*[இற்று + இறந்து + போதல்.]*

**இற்று**[1] *iṟṟu,* வி.மு. (fin.v.) ***இத்தன்மையுள்ளது;*** form of a verb, meaning, (lt.) is of such a nature. "இயற்கைப் பொருளை யிற்றெனக் கிளத்தல்" (தொல்.சொல்.19) (செ.அக.).

*[இல் + து → இற்று.]*

**இற்று**[2] *iṟṟu,* இடை. (part.) ***ஒரு சாரியை*** (நன்.244); a euphonic particle occuring in the combination of the different parts of the same word, or of two distinct words, as in அவையிற்றை, பதிற்றுப்பத்து.

ம. இற்று

*[இல் + து.]*

**இற்றுச் சொட்டு-தல்** *iṟṟu-c-coṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) ***நீர் இடைவிட்டுச் சொட்டுதல்;*** to exude and drip at intervals, as water. (செ.அக.).

ம. இற்றிக்குக.

*[இறு - இற்று + சொட்டுதல்.]*

**இற்றுப்போ-தல்** *irru-p-pō-*, 8 செ.கு.வி. (v.i.) ***நைந்து போதல்;*** to be worn off, reduced, broken; to become decayed. (செ.அக.).

*[இறு → இற்று + போதல்.]*

**இற்றும்** *irrum*, கு.வி.எ. (adv.) ***மேலும்;*** moreover, besides, further. 'இற்றுங்கூறுவேன்' (பெருங்.வத்தவ. 6,38) (செ.அக.).

*[ஒருகா. இன்னும் → இத்தும் → இற்றும்.]*

**இற்றுவிழு-தல்** *irru-vilu-*, 2 செ.கு.வி. (v.i.) ***நைந்து கெட்டு விழுதல்;*** to decay and fall. 'மரம் இற்று விழுந்தது' (வின்.) (செ.அக.).

*[இறு - இற்று + விழு.]*

**இற்றை** *irrai*, கு.வி.எ. (adv.) ***இன்றைக்கு;*** to day. "இற்றைப் பறைகொள்வா னன்றுகாண்" (திவ்.திருப்பா. 29) - பெ. (n.) இன்று; this day "இற்றையில் விளித்தனை" (கந்தபு.தெய்வயா.5) (செ.அக.)..

*[இன்று → இற்றை (வலித்தல் திரிபு).]*

**இற்றைத்திங்கள்** *irrai-t-tingal* பெ. (n.) ***இந்தத் திங்கள்,*** this month "இற்றைத் திங்களிவ் வெண்ணிலவின்" (புறநா.112) (சங்.இலக்.சொற்).

*[இற்றை + திங்கள்.]*

**இற்றைநாள்** *irrainā!*, பெ. (n.) ***இன்று;*** this day; today. (சா.அக.).

*[இன்று → இன்றை - இற்றை + நாள்.]*

**இற-த்தல்** *ira-*, 3 செ.குன்றாவி. (v.t.) ***கடத்தல்;*** to go beyond, transcend, pass over. "புலவரை யிறந்த தோன்றல்" (புறநா.21) - 3 செ.கு.வி. (v.i.) 1. ***கழிதல்;*** to pass by, elapse, as time. "இறந்தநாள் யாவர் மீட்பார் (சீவக.2616). 2. ***நெறிகடந்து செல்லுதல்;*** to transgress, trespass, overstep. "இல்லிறப்பா னெய்தும்... பழி" (குறள்.145). 3. ***மிகுதல்,*** to excel, to be pre-eminent. "இறந்த கற்பினாட்கு" (கலித்.9). 4. ***சாதல்;*** to die. "இறந்தாரை யெண்ணிக் கொண் டற்று" (குறள்.22). 5. ***வழக்கு வீழ்தல்;*** to cease to be current, become obsolete. 'இது இறந்த வழக்கு'. (சீவக.2108, உரை). 6. ***நீங்குதல்;*** to depart, leave. "உம்பரிமை பிறப்ப" (பரிபா.17,31) (செ.அக.).

ம. இறக்குக.

*[இள் - இறு - இற. இறு = பின்வாங்குதல்; இற = பின்தங்கச் செய்தல்.]*

**இறக்கம்**[1] *irakkam*, பெ. (n.) 1. ***இறங்குகை;*** descent, debarkation. 2. ***சரிவு;*** declivity, slope, depression. 'ஏற்றமு மிறக்கமுமான வழி'. 3. ***இறங்குதுறை*** (வின்.); ford, crossing of a river. 4. ***விலங்குகள் செல்வழி*** (வின்.); tracks of beasts in a jungle. 5. ***நிலை தவறுகை;*** decline from a high position. "இறக்கமுற் றானென வேக்க மெய்தினான்" (கம்பரா. சடாயுகா.19). 6. ***சாவு;*** death. (செ.அக.).

ம. இறக்கம்.

*[இறு - இற - இறக்கம்.]*

**இறக்கம்**[2] *irakkam*, பெ. (n.) ***குறைவு;*** deficiency.

*[இற → இறக்கம்.]*

**இறக்கம்**[3] *irakkam*, பெ. (n.) ***உணவு முதலியன உட்செல்லுகை;*** swallowing as of food. "சோற்றிறக்கமு மறந்தான்" (குருகூர்ப்.) (செ.அக.).

*[இறு → இற - இறங்கு - இறக்கு - இறக்கம்.]*

**இறக்கமின்மை** *irakkaminmai*, பெ. (n.) ***உண்ண இயலாமை;*** loss of appetite. 'நோயாளிக்குச் சோறு இறக்கமில்லை' (சா.அக.).

*[இறக்கம் + இன்மை.]*

**இறக்கிடு-தல்** *irakkidu-*, 20 செ.கு.வி. (v.i.) ***தாழ்த்து தல்;*** to bow low or bend, as one's head. "தலையிறக்கிட் டுச் செல்வார்" (திருவிளை.திருமண.125) (செ.அக.).

*[இறக்கு + இடு.]*

**இறக்கு**[1]**-தல்** *irakku-*, 15 செ.கு.வி. (v.i.) 1. ***இறங்கச் செய்தல்;*** to lower, let-down, put down as a load; to land, unload, as from a boat. 2. ***எண்ணெய் முதலியவை வடித்தல்;*** to distil. 3. ***அடக்குதல்;*** to reduce or bring down, as pride. 'கொழுப்பை யிறக்கி விடுவேன்'. 4. ***உயர்த்துவது போல இகழ்தல்;*** to praise ironically. 5. ***கெடுத்தல்;*** to injure; to aunnul, as a charitable gift. "இத்தர்ம மிறக்குவான்" (S.I.I.I.77). 6. ***கொல்லுதல்;*** to kill, slay. "எரிமாலை வேணுதி யினிறக்கி" (சீவக.961).

ம. இறக்கு; க. எறகு.

*[இற - இறங்கு - இறக்கு.]*

**இறக்கு**[2]**-தல்** *irakku-*, 15 செ.கு.வி. (v.i.) ***பணத்தைக் கட்டாயப்படுத்தித் திரும்பப்பெறல்*** (கொ.வ.); to compel repayment. (செ.அக.).

*[இறு - இற - இறக்கு.]*

**இறக்கு**[3] *irakku*, பெ. (n.) ***இறக்குகை;*** unburdening, discharging. 'சாமானிறக்கி முடிந்ததா?' (வின்.) (செ.அக.).

*[இறக்கு → இறக்கு.]*

**இறக்கு**[4]**-தல்** *irakku-*, 15 செ.கு.வி. (v.i.) 1. ***நஞ்சைத் தணித்தல்;*** to counteract or subdue the effect of poisons or poisonous bites. 2. ***எண்ணெய், அமிலம் வடித்தல்;***

to distil, as acid; to extract, as medicinal oils. 3. ***கொல்லல்;*** to kill. 4. ***சாதல்;*** to die. (சா.அக.).

*[இறுக்கு - இறக்கு.]*

**இறக்குங்கால்** *irakkuṅkāl* கு.வி.எ. (adv.) ***உயிர்போகும் நேரத்தில்;*** at the moment of death; while dying-inarticulo martis. (சா.அக.).

*[இறக்கும் + கால். கால் - பொழுது, காலம்.]*

**இறக்குதுறை** *irakku-turai,* பெ. (n.) ***பொருளிறக்குந் துறைமுகம்;*** place of debarkation or of discharging cargo. (செ.அக.).

*[இறங்கு - இறக்கு + துறை.]*

**இறக்குமதி** *irakkumadi,* பெ. (n.) 1. ***துறைமுகத்திலிருந்து பொருள் இறக்குகை;*** importing. 2. ***இறக்குந் துறைமுகப் பொருள்கள்;*** imports.

ம. இறக்குமதி.

*[இறக்கு + மதி. மதி - தொழிற்பெயரீறு.]*

**இறக்கை**[1] *irakkai,* பெ. (n.) ***சிறகு;*** wing, pinion. (செ.அக.).

தெ. ரெக்க.

*[இறுக்கு = தாழ்த்து. இறக்கு - இறக்கை = தாழ்த்தியுயர்த்தும் உறுப்பு.]*

**இறக்கை**[2] *irakkai,* பெ. (n.) ***கண்ணாற்றின் இருபுறங்கவிலுமுள்ள துணைச்சுவர்*** (கட்டட.நாமா); wing wall. (செ.அக.).

தெ. ரெக்க.

*[இறக்க - இறக்கை போல் இருபுறத்துமுள்ள சுவர்.]*

**இறக்கைச்சுவர்** *irakkai-c-cuvar,* பெ. (n.) ***துணைச் சுவர்*** (C.E.M.); wing-wall. (செ.அக.).

*[இறக்கை + சுவர்.]*

**இறகர்** *iragar* பெ. (n.) 1. ***சிறகு;*** wing, pinion. 2. ***இறகு*** (வின்.); feather. (செ.அக.).

*[இறகு + அர்.]*

**இறகின்முள்** *iragin-mul,* பெ. (n.) ***இறகின் அடிக் குருத்து*** (சூடா.); quill of a feather. (செ.அக.).

*[இறகு + இன் + முள்.]*

**இறகு** *iragu,* பெ. (n.) 1. ***சிறகு;*** wing; pinion. 2 ***தனியிறகு;*** feather, quill. 3. ***மயிற்பீலி*** (திவா.) peacock's feather. (செ.அக.).

*[இறு - ஒடிதல், வளைதல், தாழ்தல். இறு - இற - இறகு.]*

**இறகுக்கூடு** *iragu-k-kūḍu,* பெ. (n.) ***தூவல்*** (பேனா) ***வைக்குங் கூடு;*** pen rack. (செ.அக.).

*[இறகு = எழுத உதவும் இறகின் அடி. எழுதுகருவி. எழுது கோல். இறகு + கூடு.]*

**இறகுதூவல்** *iragu-tūval,* பெ. (n.) ***இறகாலான எழுதுகோல்;*** quill pen. (செ.அக.).

*[இறகு + தூவல்.]*



இறகுதூவல்

**இறகுபேனா** *iragu pēṉā,* பெ. (n.) ***இறகு தூவல்*** பார்க்க; see *iragu tūval.*

*[இறகு + (E.Pen) பேனா.]*

**இறகுமஞ்சள்** *iragu-mañjal,* பெ. (n.) ***சாப்பிராவிரை*** (L.); arnotto. (செ.அக.).

*[இறகு + மஞ்சள்.]*

**இறகுளர்-தல்** *iragular-,* 4 செ.கு.வி. (v.i.) ***சிறகடித்துக் கொள்ளுதல்;*** to flap the wings, as a bird. "எருவை யிறகுளரும்" (பு.வெ.9,19) (செ.அக.).

*[இறகு + உளர்.]*

**இறகெறும்பு** *iragerumbu,* பெ. (n.) ***சிறகுள்ள எறும்பு*** (m.m.); winged red ant, drepanagnathus saltator. (செ.அக.).

*[இறகு + எறும்பு.]*

**இறங்கச்சங்கு** *iraṅga-c-caṅgu-,* பெ. (n.) ***கோயிற்குக் கொடையளித்தோர் சிவிகை முதலியவற்றிலிருந்து இறங்கும்போது மதிப்புக்காக முழக்கப்படும் சங்கு*** (இ.வ.); blowing the chank, in honour of a chief or of any liberal donar to a temple just when he alights from his vehicle; dist fr. ஏறச்சங்கு. (செ.அக.).

*[இறங்கு + சங்கு → இறங்கச்சங்கு.]*

**இறங்கண்டம்** *iraṅgaṇḍam,* பெ. (n.) ***அண்ட நோய் வகை; குடலிறக்க நோய்*** (ஜீவரட்.112); hernia, rupture. (செ.அக.).

*[இறங்கு + அண்டம்.]*

**இறங்கமாட்டான்** *iraṅa-māṭṭāṉ,* பெ. (n.) ***கீழைநாட்டு நெல்வகை*** (யாழ்ப்); Burmese paddy. (செ.அக.).

**இறங்கர்** *iraṅgar,* பெ. (n.) ***குடம்*** (பிங்.); water pot. (கொ.வ.) (செ.அக.).

*[இடங்கர் → இறங்கர்.]*

**இறங்கல்** *irańgal*, பெ. (n.) 1. ***இறங்குமிடம்;*** place of descent, of debarkation. 2. ***அடைபடுகை*** (S.I.I. 1, 119); state of being closed; neglected condition, as of a temple. 3. ***அரசிறையின்மை*** (I.M.D.cg.1068); exemption from taxation. 4. ***நெல்வகை*** (Rd.); a variety of coarse paddy sown in July, and harvested after six months. (செ.அக.).

ம. இறங்கல்.

*[இறங்கு → இறங்கல்.]*

**இறங்கல்மீட்டான்** *irańgal-mīttān*, பெ. (n.) ***ஒரு வகை நெல்;*** a kind of paddy. "போரிறங்கல்மீட்டான் புழுதிபு ரட்டி" (நெல்விடுதூது.189) (செ.அக.).

*[இறங்கல் + மீட்டான்.]*

**இறங்கலிடு-தல்** *irańgal-idu-*, 20 செ.கு.வி. (v.i.) 1. ***போதல்;*** to pass away, vanish. "ஏதங்களாயின வெல்லா மிறங்கலிடு வித்து" (திவ். பெரியாழ்.5,2,8). 2. ***கொடை, வழிபாடு முதலியன நிறுத்துதல்;*** to neglect, as a charitable endowment; to close, as a temple. "தானத்தை இறங்கலிட்ட இதுவும்" (S.I.I.1,119) (செ.அக.).

*[இறங்கல் + இடு.]*

**இறங்கழிஞ்சில்** *irańgaliñjil*, பெ. (n.) ***அழிஞ்சில்வகை*** (இ.வ.); sage-leaved alangium. (செ.அக.).

*[இறங்கு + அழிஞ்சில்.]*

**இறங்கு[1]-தல்** *irańgu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. ***விட்டு நீங்குதல்;*** to leave, abandon. "அருணோக்க மிறங்காத தாமரைக்கணெம் பெருமான்" (கம்பரா.விராதன்.50). 2. ***தொடங்குதல்;*** to commence, begin to act. 'அற வழியில் இறங்கியுள்ளான்.' (செ.அக.).

*[இறு - இற - இறங்கு.]*

**இறங்கு[2]-தல்** *irańgu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. ***இழிதல்;*** to descend; to get down, as from a tree; to alight, as from a horse; to fall, as rain; to flow down, as a torrent. 2. ***கரைசேர்தல்;*** to disembark, to be unladen. 'கப்பலிலிருந்து பயணிகள் இறங்கின பின்புதான் பொருள்கள் இறங்கும்.' 3. ***அடியில் தங்குதல்;*** to sink to the bottom as sediment in water. 'கலங்கல் தெளியும்பொழுது அழுக்கெல்லாம் அடியில் இறங்கிவிடுகிறது.' 4. ***உட்செல்லுதல்;*** to settle into its place, as a peg in a hole; to be driven home, as a nail. 'பலகையினுள்ளே ஆணியெல்லாம் இறங்கின.' 5. ***தங்குதல்;*** to halt; to stay; to encamp, as a company or an army. 'முதலியார் சென்னையில் சத்திரத்தில் இறங்குவது வழக்கம்.' 6. ***தாழ்வடைதல்;*** to be reduced in circumstances. 'அந்தக் குடும்பம் இறங்கிப் போயிற்று' (கொ.வ.). 7. ***நஞ்சு, நோய் முதலியன தணிதல்;*** to abate, as poison, small pox and other diseases, which are popularly supposed to pass away from the head, downward, to the extremities. 8. ***விலை குறைதல்;*** to fall or be reduced, as the prices of articles. 'அரிசி விலை இறங்கியிருக்கிறது.' (கொ.வ.). 9. ***தாழ்ந்து வணங்குதல்;*** to bow respectfully, show reverence. "இறங்கிச் சென்று தொழுமின்" (தேவா.1131,2). 10. ***நிலைகுலைதல்;*** to fall from a high state. "இறங்கு கண்ணிமையார்" (சீவக.248) (செ.அக.).

ம. இறங்ஙுக; க., பட. எறகு, இறகு; தெ. எறகு; கோத. எர்க்; துட. எர்க்; குட. எறங்க்; பிரா. இரிங்க்.

*[இள் → இற → இறங்கு.]*

**இறங்குஓரை** *irańgu ōrai*, பெ. (n.) ***ஞாயிறு தென் திசையில் செல்வதற்கு இடமாய்க் கடக முதல் சிலை வரையுள்ள ஆறு ஓரைகள்;*** six signs through which the sun passes in its southern course.

*[இறங்கு + ஓரை.]*

**இறங்குகிணறு** *irańgu-kiṉaṟu*, பெ. (n.) ***உள்ளிறங்கிச் செல்வதற்குப் படிவரிசையுள்ள கிணறு*** (இ.வ.); well with steps leading down to the water. (செ.அக.).

*[இறங்கு + கிணறு.]*

**இறங்குகெண்டை** *irańgu-kendai* பெ. (n.) ***வலிமைக் குறைவால் சொறுக்குவாங்கல் அதாவது நரம்பு இழுத்தல்;*** the alternate contraction or relaxation of muscles-clonic spasm. It is opposed to ஏறுகெண்டை, another form of spasm. (சா.அக.).

*[இறங்கு + கெண்டை.]*

**இறங்குசட்டம்** *irańgu-cattam*, பெ. (n.) 1. ***மாட்டுக் குற்ற வகை*** (பெரியமாட்.18); a defect in cattle. (செ.அக.). 2. ***வீழ்ச்சிக்காலம்;*** a time of loses. "அவனுக்கு இப்போ இறங்குசட்டம்; தொட்டதெல்லாம் நட்டமாகுது". (முகவைவழக்.)

*[இறங்கு + சட்டம் - மாட்டுக்குரிய மச்சங்களுள் ஒன்று.]*

**இறங்குசாத்து** *irańgu-cāttu*, பெ. (n.) ***செட்டிமார்களுள் ஒரு சாரார்*** (S.I.I. VIII, 232); a sect of the chetti caste. (செ.அக.).

*[இறங்கு + சாத்து. இறக்குமதி செய்யும் வணிகர்.]*

**இறங்குதுறை** *irańgu-turai*, பெ. (n.) ***இழியும். நீர்த் துறை;*** landing place. (செ.அக.).

*[இறங்கு + துறை.]*

**இறங்குநாகம்** *irańgu-nāgam*, பெ. (n.) ***மாட்டுச்சுழி வகை*** (பெரியமாட்.21); a kind of curl-mark in cattle. (செ.அக.).

*[இறங்கு + நாகம்.]*

**இறங்குநெற்றி** *irańgu neṟṟi* பெ. (n.) ***முன்பக்கமாகப் புடைத்துக்காணும் நெற்றி;*** a rounded eminence projecting on the surface of the forehead - bossy fore-head. It is opposed to ஏறுநெற்றி, receding forehead. (சா.அக.).

*[இறங்கு + நெற்றி.]*

**இறங்குபனை** *iraṅgu panai,* பெ. (n.) ***ஒருவகை யம்மை;*** a severe type of small-pox. It is opposed to ஏறுபனை. (சா.அக.).

*[இறங்கு + பனை.]*

**இறங்குபொழுது** *iraṅgu-poḻudu,* பெ. (n.) ***பிற்பகல்;*** afternoon, the period of the sun's declivity from the point overhead. It is opposed to ஏறுபொழுது (செ.அக.).

*[இறங்கு + பொழுது.]*

**இறங்குபொறை** *iraṅgu porai,* பெ. (n.) ***வளைந்த கதிர்கள்;*** stooping ears of corn due to weight of grain. ''ஏனலும் இறங்குபொறை உயிர்த்தன.'' (அகநா. 192-8). (சங்.இலக்.சொற்).

**இறங்குமிராசி** *iraṅgum-iraši,* பெ. (n.) ***இறங்கு ஓரை*** பார்க்க; see *iraṅgu orai.*

*[இறங்கும் + இராசி.]*

**இறங்குமுகம்** *iraṅgu-mugam,* பெ. (n.) ***தணியும் நிலை;*** declination, ebb in affairs. ''என் துன்பமனைத் தும்.... ஏறுமுகங் கொண்டதல்லா லிறங்குமுக மிலை யால்'' (அருட்பா.5, தனித்திருத்.12) (செ.அக.).

*[இறங்கு + முகம்.]*

**இறங்குவெயில்** *iraṅgu-veyil,* பெ. (n.) ***பிற்பகல் வெயில்;*** decreasing sunshine, as the sun descends towards the horizon. (செ.அக.).

*[இறங்கு + வெயில்.]*

**இறங்கொற்றி** *iraṅgorri,* பெ. (n.) ***நுகர்வு ஒற்றி*** (இ.வ.); usufructuary mortgage. (செ.அக.).

*[இறங்கு + ஒற்றி.]*

**இறசால்** *irašāl,* பெ. (n.) ***இறையால்*** (J.) பார்க்க; see *iraiyāl.* (கொ.வ.) (செ.அக.).

*[இறையால் - இறசால்.]*

**இறஞ்சி**[1] *iranji,* பெ. (n.) ***ஒருவகைத் துகில்*** (சிலப்.14, 108, உரை); garment of ancient times. (செ.அக.).

*[ஒருகா. இலஞ்சி - இறஞ்சி.]*

**இறஞ்சி**[2] *iranji,* பெ. (n.) ***அவுரி*** (மலை); Indian indigo (செ.அக.).

**இறஞ்சித சேம்பு** *iranjida sēmbu,* பெ. (n.) ***கருஞ் சேம்பு;*** a black variety of சேம்பு; a garden plant. caladium nymphaefolium. (சா.அக.).

*[இரு = கருமை. இரு - இறு - இற - இறஞ்சிதம் + சேம்பு.]*

**இறட்டு-தல்** *irattu-,* 5 செ.குன்றாவி. (v.t.) ***முகந்து வீசுதல்;*** to sprinkle, splash. முகத்திலே நீரை இறட்டிக் கொள்ளுதல் (திவ்.திருமா.36, வ்யா.118) (செ.அக.).

*[இற - இறட்டு.]*

**இறடி** *iradi,* பெ. (n.) 1. ***தினை;*** Italian millet. ''இறடிப் பொம்மல் பெறுகுவிர்'' (மலைபடு.169). 2. ***கருந்தினை*** (திவா.); black Italian millet. (செ.அக.).

*[இரு → இறு → இறடி. மு.தா.197.]*

**இறடிப்பொம்மல்** *iradi-p-pommal,* பெ. (n.) ***தினைச் சோறு;*** cooked Italian millet. ''இறடிப்பொம்மல் பெறுகு விர்''. (மலைபடு.169) (சங்.இலக்.சொற்).

*[இறடி + பொம்மல்.]*

**இறத்தல்** *irattal,* பெ. (n.) 1. ***சாதல்;*** dying. 2. ***மிகுதி;*** being in excess. (சா.அக.).

*[இற - இறத்தல்.]*

**இறத்திர்** *irattir,* வி.மு. (v.) ***கடப்பீர்;*** let you pass. ''குன்றழல் வெஞ்சுரம் இறத்திரால் ஐய'' (கலித்.25-12) (சங்.இலக்.சொற்.).

*[இற - இறத்திர்.]*

**இறந்த கற்பினாள்** *iranda karpināl,* பெ. (n.) ***மிக்க கற்பினையுடையாள்;*** woman of perfect chastity. ''இறந்த கற்பினாட் கெவ்வம் படரன்மின்''. (கலித்.9-21).

*[இறந்த + கற்பினாள்.]*

**இறந்தகால இடைநிலை** *iranda, kāla-idainilai,* பெ. (n.) ***சென்ற காலத்தைக் காட்டும் இடைநிலை;*** particle indicating past tense.

*[இறந்த + காலம் + இடைநிலை.]*

**இறந்தகாலம்** *iranda-kālām,* பெ. (n.) 1. ***சென்ற காலம்*** (மணி.30,14); past time. 2. ***முக்காலத்தொன்று*** (நன். 142); past tense. (செ.அக.).

*[இற → இறந்த + காலம்.]*

**இறந்தது** *irandadu,* பெ. (n.) ***தாண்டிச் சென்றது;*** that which has crossed. ''பெருமலை இறந்தது நோவேன்''. (அகநா.93-3).

*[இற - இறந்தது.]*

**இறந்தது விலக்கல்** *irandadu-vilakkal,* பெ. (n.) ***உத்தி 32-இல் ஒன்று*** (நன்.14); rejection of an obselete expression or usage, one of 32 utti. (செ.அக.).

*[இறந்தது + விலக்கல்.]*

**இறந்தவழக்கு** *iranda-vaḻakku,* பெ. (n.) ***வீழ்ந்த வழக்கு*** (சீவக.2108, உரை); obselete usage. (செ.அக.).

*[இறந்த + வழக்கு.]*

**இறந்திசினோர்** *irandišinōr,* பெ. (n.) ***கடந்து சென் றோர்;*** those who have crossed. ''வழங்கருங் கானம் இறந்திசினோரே'' (நற்.302-10).

*[இற → இறந்திசினோர்.]*

**இறந்திரி** *irandiri,* பெ. (n.) ***இத்தி*** (மலை); white fig. (செ.அக.).

*[இற → இறந்திரி.]*

**இறந்துபடு-தல்** *irandu-padu-,* 20 செ.கு.வி. (v.i.) ***சாதல்;*** to die. "எனதாற்றாமை கண்டவிடத்து இறந்து படும்" (இறை.3, உரை பக்.53).

*[இற → இறந்து + படு.]*

**இறந்துபாடு** *irandu-pādu,* பெ. (n.) ***உயிர்நீத்தல்;*** death. "இறந்துபா டாயினான்கொல்" (கந்தபு. காமதக.91) (செ.அக.).

*[இறந்து + பாடு. படு - பாடு.]*

**இறந்துபோ-தல்** *irandu-pō-,* 8 செ.கு.வி. (v.i.) ***சாதல்;*** to die. (சா.அக.).

*[இறந்து + போ.]*

**இறந்தை** *irandai,* பெ. (n.) ***அழுகல்;*** decaying. (சா.அக.).

*[இற - இறந்தை.]*

**இறப்ப** *irappa,* கு.வி.எ. (adv.) ***மிகவும்;*** much, exceedingly. "இறப்பப் புகழ்ந்தன்று" (பு.வெ.11, ஆண் பாற். 7, கொளு).

*[இற - இறப்ப.]*

**இறப்பருங்குன்றம்** *irapparuṅ kuṉṟam,* பெ. (n.) ***கடத்தற்கரிய மலை;*** unsurmountable mountain. (குறுந்.109) (சங்.இலக்.சொற்).

*[இற → இறப்பு + அருமை + குன்றம்.]*

**இறப்பு** *irappu,* பெ. (n.) 1. ***வரம்பு கடத்தல்;*** transgression, trespass. "பொறுத்த லிறப்பினை யென் றும்" (குறள்.152). 2. ***போக்கு*** (பிங்.); going, passage, passing. 3. ***சாவு*** (திருவாச.5, 12); death. 4. ***மிகுதி*** (பிங்.); excess, abundance. 5. ***உயர்ந்த பொருள்;*** that which is superior; "ஒப்பிறப்பில் வெங்கையுடையோய்" (வெங்கைக்க.75). 6. ***துறக்கம்;*** heavenly bliss, emancipation. "இறுக லிறப்பென்னும் ஞானிக்கும்" (தில்.திரு வாய். 4,1,10). 7. ***வீட்டிறப்பு;*** inside or under part of a sloping roof, eaves. "இறப்பிற் றுயின்று" (திருக்கோ. 328). 8. ***இறந்த காலம்;*** past tense. "இறப்பி னெதிர்வி னிகழ்வின்" (தொல்.சொல்.202) (செ.அக.).

ம. இறப்பு; **க.** இகுர், இக்கு; **து.** இர்காவுனி.

*[இற - இறப்பு.]*

**இறப்புபிறப்பிலான்** *irappu-pirappilān,* பெ. (n.) ***தோன்றலும் மறைதலுமில்லாதவன்;*** one having neither death nor birth. (சா.அக.).

*[இறப்பு + பிறப்பு + இலான்.]*

**இறல்**[1] *iral,* பெ. (n.) 1. ***இறுதி;*** ruin, disaster. "இறலீனு மெண்ணாது வெஃகின்" (குறள்.180). 2. ***சிறு தூறு*** (சூடா.); small root. 3. ***கிளிஞ்சல்*** (திவா.); bivalve shell-fish, mussel. (செ.அக.).

*[இறு - இறல்.]*

**இறல்**[2] *iral,* பெ. (n.) 1. ***ஒடிவு;*** bend. 2. ***வளைவு;*** curve. 3. ***வட்டம்;*** round.

*[இறு → இறல்.]*

**இறல்**[3] *iral,* பெ. (n.) 1. ***விசை;*** force. 2. ***நரம்பு முறிதல்;*** nerve break. (ஆ.அக.).

*[இறு → இறல்.]*

**இறலாகிகம்** *iralāgigam,* பெ. (n.) ***எரிமூலிகை;*** blistering plant.

*[இறு → இறலாகிகம்.]*

**இறலி**[1] *irali,* பெ. (n.) ***பட்டுப்பூச்சி;*** silkworm.

*[இறல் - இறலி.]*

**இறலி**[2] *irali-,* பெ. (n.) 1. ***இத்தி*** (பிங்.) பார்க்க; white fig. 2. ***கொன்றை*** (மலை.); cassia. 3. ***மருது*** (மலை.); myrobalan. (செ.அக.).

*[இற - இறலி.]*

**இறலித்தீவு** *irali-t-tīvu,* பெ. (n.) ***ஏழுதீவினுளொன்று*** (திவா.); second annular continent, one of ēḻu-tīvu-, (செ.அக.).

*[இறலி + தீவு.]*

**இறலிப்பை** *irali-p-pai,* பெ. (n.) ***பட்டுப்பூச்சிக்கூடு;*** cacoon of the silk-worm. (Pond); (செ.அக.).

*[இறலி + பை.]*

**இறவாணம்**[1] *iravāṇam,* பெ. (n.) ***தோற்கருவி வகை*** (யாழ்.அக.); tambourine. (செ.அக.).

*[இற + வாணம்.]*

**இறவாணம்**[2] *iravāṇam,* பெ. (n.) ***இறவாரம்*** பார்க்க; see *iravāram* (செ.அக.).

*[இற → இறவாணம் (மு.தா.24).]*

**இறவாரம்** *iravāram,* பெ. (n.) ***தாழ்வாரத்து மேற் கூரையின் முன்பாகம்;*** eaves of a house. (செ.அக.).

ம. இறவாரம்.

*[இற → இறவாரம் (மு.தா.247).]*

**இறவி** *iravi,* பெ. (n.) ***சாவு;*** death. "இறவியொடு பிறவியற" (திருப்பு.790) (செ.அக.).

*[இற → இறவி.]*

**இறவின்குப்பை** *iṟavin kuppai,* பெ. (n.) ***இறாமீனின் தொகுதி;*** cloud of prawns. "சிறுவெள் ளிறவின் குப்பை யன்ன" (அகநா.152-8).

*[இற → இறவின் + குப்பை.]*

**இறவு**[1] *iṟavu,* பெ. (n.) 1. ***வீட்டிறப்பு;*** sloping roof. (யாழ்.அக.). 2. ***எல்லை;*** boundary. (செ.அக.).

ம. இறவு.

*[இற → இறவு.]*

**இறவு**[2] *iṟavu,* பெ. (n.) 1. ***மலைச்சாரல்;*** slope of the hill. 2. ***மலை;*** mountain.

*[இற - இறவு.]*

**இறவு**[3] *iṟavu,* பெ. (n.) 1. ***சாவு;*** death. "பிறவியினொடிறவு மானான்" (தேவா.447,1). 2. ***நீக்கம்;*** removal, separation. "இறவு பார்க்கின்ற... இராவணன்" (கம்பரா.சடாயுவு.20). 3. ***முடிவு;*** end, termination, close. "இறவிலே யுன்னைச் சிக்கெனப் பிடித்தேன்" (திருவாச.37,6) (செ.அக.).

ம. இறவு.

*[இறு → இறவு.]*

**இறவு**[4] *iṟavu,* பெ. (n.) ***இறால்மீன்;*** prawn. "கடலிறவின் சூடுதின்றும்" (பட்டினப்.63). 2. ***தேன்கூடு*** (ஞான வா.தா.சூர.69); honey comb. (செ.அக.).

*[இற → இறவு.]*

**இறவுப்புறத்தன்ன பிணர்** *iṟavu ppuṟattaṉṉa piṇar,* பெ. (n.) ***இறால்மீனின் முதுகுபோன்ற சருச்சரை*** (சொரசொரப்பு); texture resembling the back of prawn "இறவுப்புறத்தன்ன பிணர்படுதடவு" (நற்.19) (சங். இலக்.சொற்.).

*[இற → இறவுப்புறத்தன்ன + பிணர்.]*

**இறவுள்** *iṟavuḷ,* பெ. (n.) ***குறிஞ்சி நிலம்*** (யாழ்.அக.); hilly tract. (செ.அக.).

*[இற → இறவுள் - சரிவான நிலம்.]*

**இறவுள்ளாளன்** *iṟavuḷḷāḷaṉ,* பெ. (n.) ***உள்ளாடன் என்னும் பறவை;*** a hawk. (சேரநா.).

ம. இறவுள்ளாளன்.

*[இற → இற உள்ளாளன்.]*

**இறவுளர்** *iṟavuḷar,* பெ. (n.) ***குறிஞ்சிநில மக்கள்*** (பெரியபு.கண்ணப்.16); inhabitants of the hilly tracts; hill tribes. (செ.அக.).

ம. இறவாளர்; க. எறவ, இட; தெ. எறுக்குவாண்டு.

*[இறவு = மலை. இறவு + உளர்.]*

**இறவெள்ளம்** *iṟa-veḷḷam,* பெ. (n.) ***இறவினின்று*** (கூரை) ***வீழும் தண்ணீர்;*** water dropping from the eaves. (சேரநா.).

ம. இறவெள்ளம்.

*[இற → இறவெள்ளம்.]*

**இறவை**[1] *iṟavai,* பெ. (n.) ***ஏணி*** (சூடா.); ladder. (செ.அக.).

*[இற → இறவை (சாய்வானது).]*

**இறவை**[2] *iṟavai,* பெ. (n.) ***இறைகூடை*** (சூடா.); irrigation basket. (செ.அக.).

ம. இறவ.

*[இற → இறவை = வளைவானது.]*

**இறா** *iṟā,* பெ. (n.) ***இறால்மீன்;*** prawn, shrimp, macroura. "கயலொடு பச்சிறாப் பிறழும்" (பெரும்பாண்.270) (செ.அக.).

ம. இறாவு.

*[இற → இறா - வளைவானது.]*

**இறாசில்** *iṟāsil,* பெ. (n.) ***மகிழம்பூ;*** west Indian medlar-mimusops elegi.

*[இற → இறாசில்.]*

**இறாஞ்சு-தல்** *iṟāñju-,* 5 செ.குன்றாவி (v.t.) 1. ***பறவையறைதல்;*** to pounce or dart upon, as a brid on its prey.'பருந்து இறாஞ்சினாற் போலே' (ஈடு.7,6,1). 2. ***பறித்தல்;*** to seize by force. 'தன்னதான பூமியை மகாபலிபோல்வார் இறாஞ்சிக் கொள்ள' (ஈடு.2,8,7) (செ.அக.).

*[இற - இறாஞ்சு = இறக்கையால் அடித்துப் பறித்தல்.]*

**இறாட்டாணியம்** *iṟāṭṭāṇiyam,* பெ. (n.) ***இடுக்கண்*** (யாழ்.அக.); distress; trouble. (செ.அக.).

*[இற → இறாட்டு + ஆணியம்.]*

**இறாட்டு**[1] *iṟāṭṭu,* பெ. (n.) ***மீன்;*** fish.

*[இறா → இறால் → இறாட்டு.]*

**இறாட்டு**[2]**-தல்** *iṟāṭṭu-,* 5 செ.குன்றாவி (v.t.) 1. ***உரைசுதல்*** (யாழ்.அக.); to rub against each other as bamboos. 2. ***பகைத்தல்*** (யாழ்.அக.); to hate. (செ.அக.).

*[இற → இறா → இறாட்டு.]*

**இறாட்டுப் பிறாட்டு** *iṟāṭṭu-p-piṟāṭṭu,* பெ. (n.) ***எதிரிடை*** (யாழ்ப்.); quarrel, squabble, strife, scuffie. (செ.அக.).

*[இறா → இறாட்டு + பிறாட்டு.]*

**இறாத்தல்** *iṟāttal,* பெ. (n.) ***மீனாயத்துறை*** (யாழ்ப்.); a place where custom is paid for fish. (செ.அக.).

*[இறால் + தலம் - இறாத்தலம் - இறாத்தல்.]*

**இறாத்தலம்** *iṟā-t-talam,* பெ. (n.) ***இறவுமீன் விற்குமிடம்*** (இ.வ.); place where prawns are offered for sale. (செ.அக.).

*[இறவு + தலம்.]*

**இறாப்பாவை** *irā-p-pāvai,* பெ. (n.) ***பாவைபோன்ற இறால்மீன்;*** maid-prawn, "முடிவலை முகந்த முடங்கி றாப் பாவை". (நற்.49-3).

*[இற → இறா + பாவை. (இறால்மீன் கைமுதலாய உறுப்புகள் போலும் முள் முதலியவற்றை யுடைத்தாகிப் பாவை போறலிற் பாவையென்றார்.]*

**இறாய்-த்தல்** *irāy-,* 4. செ.கு.வி. (v.i.) ***பின்வாங்குதல்;*** to draw back, retreat. "அவ்விருளுக் கிறாய்த்து அங்கே யிங்கே சஞ்சரியாநிற்க" (ஈடு.2,1,8) (செ.அக.).

*[இற → இறாய்.]*

**இறால்**[1] *irāl,* பெ. (n.) 1. ***மீன்வகை,*** (பிங்.); shrimp, prawn, macroura. 2. ***வெள்ளிறால்;*** bluish sea-fish. 3. ***ஆரல்*** (கார்த்திகை) (திவா.); the third naksatra. (செ.அக.).

ம. இறாவு.

*[இற - இறால்.]*



இறால் 1 - ஆண்



இறால் 2 - பெண்

**இறால்**[2] *irāl,* பெ. (n.) 1. ***ஏருது;*** bull. 2. ***விடைஓரை;*** sign of taurus.

*[இறு - இற - இறல் - இறால்.]*

**இறால்**[3] *irāl,* பெ. (n.) ***தேன்கூடு;*** honey comb. "பெருஞ்சினை தொடுத்த நெடுங்கண் இறாஅல்" (நற்.168).

*[இறல்[2] - இறால்.]*

**இறால்**[4] *irāl,* பெ. (n.) ***தங்குதல்;*** staying. "ஊர்முகத் திறா அலியரோ பெரும நின்றானை" (பதிற்.40-2).

*[இறு - இறல் - இறாஅல் (உயிரளபெடை.).]*

**இறால்வறையல்** *irāl-varaiyal,* பெ. (n.) ***வறுத்த இறால்*** (வின்.); roasted shrimps prepared as a curry. (செ.அக.).

*[இறால் + வறையல்.]*

**இறாவிமுகன்** *irāvimugan* பெ. (n.) ***கொல்லு நாபி;*** aconite of a killing nature. (சா.அக.).

*[இறாவி + முகன்.]*

**இறாவு-தல்** *irāvu-,* 5 செ.குன்றாவி. (v.t.) ***வாட்டி மயிர்போக்க வழித்தல்;*** to scrape off, after roasting, as the skin of a pig to remove the hair. "நளிபுகை கமழா திறாயினர் மிசைந்து" (மலைபடு.249) (செ.அக.).

**இறாற்று** *irārru,* பெ. (n.) 1. ***பெருவகை இறால்மீன்;*** a large species of prawn. 2. ***தேன்கூடு;*** honey comb. (சா.அக.).

*[இறால் + இறட்டு → இறாட்டு - இறாற்று.]*

**இறு**[1]**-தல்** *iru-,* 4 செ.கு.வி. (v.i.) 1. ***முறிதல்;*** to break; to snap, as a stick; to become severed, as a limb; to crackle and split. "பீலிபெய் சாகாடு மச்சிறும்" (குறள்.475). 2. ***சாதல்;*** to perish, die. "இறுமளவு மின்புறுவ தின்புற்று" (நாலடி.209). 3. ***முடிவுறுதல்;*** to end, terminate "உயிரிறு கிளவியும்" (தொல்.எழுத்.202). 4. ***கெடுதல்;*** to moulder, to be corroded, to decay. "கபால முமிற்று மண்ணாமே" (திருமந்.371). 5. ***தளர்தல்;*** to grow weak, to be wearied. "பாதவைப்பிற" (இரகு.தேனு.45) (செ.அக.).

ம. இறு, இறுக.

*[உறு → இறு. இறுதல்.]*

**இறு**[2]**-த்தல்** *iru-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. ***முறித்தல்*** (திவா.); to break off, as a branch; to snap asunder. 2. ***உடைத்தல்;*** to smash; to knock out, to break in pieces, as pottery. "இருவிகளி லொருவன்பல் விறுத்துக் கொண்டார்" (தேவா.1233,9). 3. ***அழித்தல்;*** to destroy. "ஏழுலகத்தையு மிறுக்க" (கம்பரா.மூலபல.12). 4. ***முடித்தல்;*** to bring to an end, finish. "உரைத்திறுக்கு மேல்வையில்" (கம்பரா.யுத்.மந்திர.28). 5. ***வீழ்த்துதல்;*** to bring down. "என்படு மிறுத்தோன்" (பாரத.பழம்.3). 6. ***தாக்குதல், அடித்தல்;*** to attack, beat. (செ.அக.).

*[உறு → இறு.]*

**இறு**[3]**-த்தல்** *iru-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. ***வரிமுதலியன செலுத்துதல்*** (திவ்.திருவாய்.5,2,8); to pay, as a tax, a debt. 2. ***எறிதல்;*** to throw, as a spear; to fling.

"முனைகெட விறுத்த வென்வே லாடவன்" (பு.வெ.3-24,கொளு). 3. ***விடை சொல்லுதல்;*** to answer in reply. "இல்லெனுந் தீச்சொ லிறுத்தனர் தோமும்" (கல்லா.74). 4. ***வினாதல்;*** to question, enquire. "எங்கே மகளென் றிறுப்பாள்" (வெங்கைக்கோ.319). 5. ***வடித்தல்;*** to strain; to percolate, as a liquid. "பதத்திறுத்துப் பருக" (தைலவ.தைல.32). - 2 செ.கு.வி. (v.i.) 1. ***தங்குதல்;*** to tarry, stay. "அந்தியென்னும் பசலை மெய்யாட்டி வந்திறுத்தனளால்" (மணி.5,141). 2. ***அம்பு முதலியன தைத்தல்;*** pierce through, as an arrow; to gore, stab. "அம்புசென் றிறுத்தவரும் புண் யானை" (புறநா.19,9) (செ.அக.).

*[உறு → இறு → இறுத்தல். (மு.தா.105).]*

**இறு[4]-த்தல்** *iṟu-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. ***சொல்லுதல்*** (நாநார்த்த.); to express. 2. ***நிறுத்துதல்;*** to stop. "வலஞ்செயவிடா விறுத்தனவேறு" (கலித்.104) (செ.அக.).

*[உறு → இறு. இறுத்தல்.]*

**இறுக்கநெருக்கம்** *iṟukka-nerukkam,* பெ. (n.) ***இடை வேளை;*** interval. 'தமது பணிக்கடமைகளுக்கு அடுத்த இறுக்க நெருக்கங்களில்' (மாலுமி.முக.1) (செ.அக.).

*[இறுக்கம் + நெருக்கம்.]*

**இறுக்கம்** *iṟukkam,* பெ. (n.) 1. ***நெகிழாத்தன்மை;*** tightness, compactness. 2. ***நெருக்கம்;*** closensss, rigidity. 3. ***கடுஞ்செட்டு;*** close-fistedness, niggardliness. 4. ***முட்டுப்பாடு;*** hardness, as of the times; immobility, as of trade. 'இப்பொழுது பணம் இறுக்கம்'. 5. ***புழுக்கம்;*** closeness of weather. sultriness. (செ.அக.).

ம. இறுக்கம்.

*[உறு → இறு → இறுக்கம்.]*

**இறுக்கர்** *iṟukkar,* பெ. (n.) ***பாலைநில மக்கள்*** (சூடா.); inhabitants of desert tracts, who live by oppression and rapine. (செ.அக.).

*[இறு → இறுக்கர்.]*

**இறுக்கல்** *iṟukkal,* பெ. (n.) ***செலுத்துதல்;*** paying, remitting. "இறுக்கல் வேண்டுந் திறையே" (புறநா.97-20).

*[உறு → இறு → இறுக்கல்.]*

**இறுக்கன்** *iṟukkaṉ,* பெ. (n.) ***ஈயாதவன்*** (கொ.வ.); miser. (செ.அக.).

ம. இறுக்கம்; க. இறுகு; குர். எர்க்.

*[உறு → இறு → இறுக்கன்.]*

**இறுக்கு[1]-தல்** *iṟukku-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. ***அழுந்தக்கட்டுதல்;*** to tighten, tie close or hard, make compact. "புயங்களாற் பிடித்திறுக்கினன்" (கம்பரா.கும்பக.266). 2. ***இறுக உடுத்துதல்*** (சூடா.); to clothe tightly. 3. ***ஒடுக்குதல்;*** to repress, restrain. 'அவற்றை நன்றாய் இறுக்கிவிட்டான்'. 4. ***உள்ளழுத்துதல்;*** to drive in, as a nail. "இறுக்காணி காட்டி" (திருப்பு.695). 5. ***உறையச் செய்தல்*** (வின்.); to thicken a liquid inspissate. 6. ***உடும்பு, நண்டு முதலியவற்றின் கடி;*** to pinch or sting (of an insect). 7. ***இறுக்குகால்;*** crab's claw. (சேரநா.) (செ.அக.).

ம. இறுக்குக; க., பட. இறுகு; கோத. இர்க்; துட. இகொட்; து. இரியுனி; தெ. இறுகு.

*[உறு → இறு → இறுக்கு.]*

**இறுக்கு[2]** *iṟukku* பெ. (n.) 1. ***ஒடுக்குகை*** (கொ.வ.); pressure, coercion. 2. ***கண்டிக்கை*** (வின்.); reprimand, reproof. 3. ***இறுகல் முடிச்சு*** (வின்.); hard knot. (செ.அக.).

*[உறு → இறு → இறுக்கு.]*

**இறுக்குவாதம்** *iṟukku-vādam,* பெ. (n.) ***உடலை வளைத்துக்கொள்ளும் இழுப்பு நோய்;*** acute rheumatism. 'இறுக்குவாதம் பற்றினாற்போலே' (ஈடு.3,5,2) (செ.அக.).

*[இறுக்கு + வாதம்.]*

**இறுகங்கியான்** *iṟugaṅgiyāṉ,* பெ. (n.) ***கையாந்தகரை*** (மலை); a plant found in wet place. (செ.அக.).

*[இறு + கங்கியான்.]*

**இறுகச்சுற்றல்** *iṟuga-c-cuṟṟal,* பெ. (n.) ***காற்றுப்புகாத படி கெட்டியாய்த் துணியினாற் சுற்றுதல்;*** winding round the cloth tightly so as to be air tight.

*[இறுக + சுற்றல்.]*

**இறு கண்ணியம்** *iṟu kaṉṉiyam* பெ. (n.) ***கருடக் கொடி;*** Brahminic kite creeper-Aristolochia indica. It is so called from its being a cure for snake bites. (சா.அக.).

*[இறு + கண்ணியம். கண்ணி = கயிறுபோன்ற கொடி.]*

**இறுகநீக்கு-தல்** *iṟuga-nīkku-,* 5 செ.கு.வி. (v.i.) ***கைவிடுதல்;*** to abandon or give up absolutely. "தேனு மூனும் பிழியலு மிறுக நீக்கி" (சீவக.1237) (செ.அக.).

*[இறுக + நீக்கு.]*

**இறுகப் பிசை-தல்** *iṟuka-p-pišai-,* 2 செ.கு.வி. (v.i.) ***வேண்டிய அளவு அழுத்தமாகப் பிசைதல்;*** to kneed dough; to press dough into a mass to work it into a suitable consistency for bread, paste etc. (சா.அக.).

*[இறுக + பிசை.]*

**இறுகப்பிடி-த்தல்** *iṟuga-p-piḍi-,* 4 செ.குன்றாவி (v.t.) ***இவறுதல்;*** to be stingy, parsimonious. (செ.அக.).

*[இறுக + பிடி.]*

**இறுகரை** *iṟukarai,* பெ. (n.) ***இடிகரை*** (அக.நி.) eroded bank, as of a river. (செ.அக.).

*[இறு + கரை.]*

**இறுகல்** *iṟugal,* பெ. (n.) 1. ***சுருங்குகை*** (திவ்.திரு வாய்.4,1,10); contraction, shrinking, diminution. 2. ***செம்மணிக் குற்றங்களுள் ஒன்று*** (இ.வ.); a defect in a ruby. 3. ***நான்கு காசு*** (இ.வ.); four pies, one third of an-anna. (செ.அக.).

*[இறு → இறுகல்.]*

**இறுகால்** *iṟu-kāl-,* பெ. (n.) ***ஊழிக்காற்று;*** tempest blowing at the dissolution of the world. "இறுகால் மேன்மேல்வந் தெழுந்தது போல்" (பெரியபு.எறிபத்த. 33) (செ.அக.).

*[இறு² + கால்.]*

**இறுகிய** *iṟugiya* பெ.எ. (adj.) ***உறைந்த;*** that which is inspissated. (சா.அக.).

*[உறு → இறு → இறுகிய.]*

**இறுகு¹-தல்** *iṟugu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. ***முடிச்சு முதலியன நெகிழாது அழுத்தமாதல்*** (நாலடி.328); to become tight, as a knot. 2. ***கெட்டிப்படுதல்;*** to harden, as land dried by the sun or as molten metals when they are cooled; to become dry, as mortar or as clay. 3. ***நெய் முதலியன உறைதல்;*** to thicken, as phlegm; to congeal, as wax; to coagulate; to be clotted, as blood; to soldify. 4. ***உறுதியாதல்;*** to become firm. "இறுகவேண் டும் பாவனை" (ஞான்வா.வேதாள.12). 5. ***நிலைபெறுதல்;*** to be fixed, to be rooted in. "அச்சத் திறுகல் நீ" (சீவக.946). 6. ***நெருங்குதல்;*** to be rich, luxuriant, as growing corn or as fruitful trees. "வாழை யிறுகு குலை முறுக" (மலைபடு.132). 7. ***மூர்ச்சித்தல்;*** to swoon. "இறுகி மெய்ம் மறந்து சோர்ந்தான்" (சீவக.299) (செ.அக.).

ம. இறுகு; தெ. இறுகு; க. இறுகு.

*[உறு → இறு - இறுகு.]*

**இறுகுதல்** *iṟugudal,* பெ. (n.) ***பைம்மணிக்*** (மரகதக்) ***குற்ற மெட்டனுள் ஒன்று*** (சிலப்.14,184,உரை); defect of emeralds, one of eight marakata-k-kuṟṟam, (செ.அக.).

*[இறு → இறுகுதல்.]*

**இறுங்கு** *iṟuṅgu,* பெ. (n.) 1. ***சோளம்;*** great millet. "கதிரணி யிறுங்கொடு" (சீவக.1561). 2. ***காக்காய்ச் சோளம்*** (மலை); black šōlam. (செ.அக.).

*[இறு → இறுங்கு.]*

**இறுங்குசோளம்** *iṟuṅgu šōlam* பெ. (n.) ***தித்திப்புச் சோளம்; இதனின்று கனிச்சாறு*** (சர்பத்) ***காய்ச்சலாம். ஒரு வகை மது இறக்குவர்;*** *kaffer corn; sweet reed; sugar millet-Sorghum saccharatum. It is useful in making syrup as it contains much sugar. A liquor like cider is also obtained from it. (சா.அக.).*

*[உறு → இறு → இறுங்கு + சோளம்.]*

**இறுத்தரு-தல்** *iṟu-t-taru-,* 15 செ.கு.வி. (v.i.) ***வருதல்;*** to come, arrive. "வேனி லிறுத்தந்த பொழுதினான்" (கலித்.34) (செ.அக.).

*[இறு → இறுத்தருதல் (தங்குதலைத் தருதல்.]*

**இறுத்தது** *iṟut-tatu* வி.மு. (fin.v.) ***தங்கியிருப்பது*** matter that settles to the bottom of the liquid. "ஆடுமழை இறுத்த தெங்கோடுயர் குன்றே" (நற்.156-10) (சங். இலக்.சொற்).

*[இறு → இறுத்தது - (காலவழு).]*

**இறுதி¹** *iṟudi,* பெ. (n.) 1. ***முடிவு*** (பிங்.); termination, end. 2. ***அழிவு;*** death, extinction. "உயிர்க்கிறுதி யாகி விடும்" (குறள்.476). 3. ***வரையறை;*** limit, bound. "இறுதியில்லதோர் விலங்கு" (கந்தபு.அசுரர் தோற்.29) (செ.அக.).

ம. இறுது.

*[இறு → இறுதி.]*

**இறுதிக்காலம்** *iṟudi-k-kālam,* பெ. (n.) 1. ***இறுதிக் காலம்;*** time of death. 2. ***ஊழிக்காலம்;*** end of all things. (செ.அக.).

*[இறுதி + காலம்.]*

**இறுதிநிலை** *iṟudi-nilai,* பெ. (n.) 1. ***இறுதியில் நிற்பது*** (கலித்.124, உரை, பக்.778); that which occurs in the end; ending. 2. ***விகுதி*** (நன்.134, சங்கர); termination, ending of a word. (செ.அக.).

*[இறுதி + நிலை.]*

**இறுதியிலின்பம்** *iṟudi-y-il-iṉbam,* பெ. (n.) ***துறக்க நுகர்வு;*** everlasting bliss. "இம்மையு மறுமையு மிறுதியி லின்பமும்" (மணி.3,96) (செ.அக.).

*[இறுதியில் + இன்பம்.]*

**இறுதியினற்கதி** *iṟudiyiṉaṟkadi,* பெ. (n.) ***உய்தி;*** final emancipation. "இறுதியினற் கதி செல்லும் பெருவழி" (மணி.12-59) (செ.அக.).

*[இறுதியில் + நற்கதி.]*

**இறுதி விளக்கு** *iṟudi-viḷakku,* பெ. (n.) ***கடைநிலை விளக்கு*** (குறள்.1281, உரை); figure of speech in which a word used at the end of a sentence has to be taken as understood in the other parts of the same. (செ.அக.).

*[இறுதி + விளக்கு.]*

**இறுதிவேள்வி** *iṟudi-vēḷvi,* பெ. (n.) ***அந்திக்கடன்;*** funeral oblations. "அன்னையர்க் கிறுதி வேள்வி...... யாற்றினானே" (இரகு... அவதாரநீ.44) (செ.அக.).

*[இறுதி + வேள்வி.]*

**இறுநாகம்** *iṟunāgam,* பெ. (n.) ***இலாமிச்சை*** (மலை.); cuscus-grass. (செ.அக.).

*[இறு + நாகம்.]*

**இறுப்பு**[1] *iṟuppu,* பெ. (n.) 1. ***தங்குகை*** (இ.வ.); abiding, tarrying. 2. ***கடன்செலுத்துகை;*** liquidation, payment of debt. 3. ***குடியிறை;*** tax. ''வைக லாயிர மிறுப்புத் தண்ட'' (சீவக.2570) (செ.அக.).

ம. இறுப்பு.

*[இறு → இறுப்பு.]*

**இறுப்பு**[2] *iṟuppu,* பெ. (n.) ***ஆவண ஓலை;*** archive document. (ஆ.அக.).

*[இறு → இறுப்பு.]*

**இறுபு** *iṟubu,* பெ. (n.) ***இறப்பு;*** death.''இறுபும் புலம்பும்'' (பெருங்.இலாவண.13,12) (செ.அக.).

*[இறு → இறுபு.]*

**இறும்பி** *iṟumbi,* பெ. (n.) ***எறும்பு*** (யாழ்.அக.); ant (செ.அக.).

ம. இறும்பு; **க.** இறும்பு, இறும்பெ, இறுபெ, இறவெ, இறுவெ, இறுவு, இரிவெ; **கோத.** இர்ங்; **துட.** இர்ப்; **குட.** உருபி; **பட.** இறுப்பு.

*[இறு → இறும்பி (கொட்டுவது, கடிப்பது).]*

**இறும்பு**[1] *iṟumbu,* பெ. (n.) 1. ***வண்டு*** (யாழ்.அக); bee. 2. ***புழு*** (சங்கற்பநி.9,15); worm. (செ.அக.).

*[இறு → இறும்பு. இறுத்தல் = தங்குதல்) .]*

**இறும்பு**[2] *iṟumbu,* பெ. (n.) 1. ***குறுங்காடு;*** thicket. ''வில்பயி லிறும்பிற் றகடூர் நூறி'' (பதிற்றுப்.78,9). 2. ***தூறு*** (பிங்.); shrub, bush. 3. ***மலை*** (திவா.); hill, mountain. 4. ***புதுமை*** (பிங்.); wonder. 5. ***அடை மழைக் காலம்;*** rainy season. (செ.அக.).

*[இறு → இறும்பு; இறுத்தல் = செறிதல், மிகுதல்.]*

**இறும்புகாப்பூ** *iṟumbukā-p-pū* பெ. (n.) ***கார்த்திகைப்பூ;*** november flower. (சா.அக.).

*[இறும்பு + காப்பூ.]*

**இறும்புளி** *iṟumbuḷi,* பெ. (n.) ***மரவகை*** (kodai); pulney rowan, Photinia notoniana, a Kodaikanal tree. (செ.அக.).

*[இறும் + புளி.]*

**இறும்பூது** *iṟumbūdu,* பெ. (n.) 1. ***புதுமை;*** amazement. ''விட்புலம் போய திறும்பூது போலும்'' (சிலப்.பதி.8). 2. ***வண்டு;*** bee. 3. ***தகைமை*** (சூடா.); magnanimity. 4. ***மலை*** (திவா.); mountain. 5. ***சிறுதூறு*** (திவா.); shrub, bush. 6. ***தளிர்*** (சூடா.); shoot, sprout. 7. ***தாமரை;*** *lotus.*

*[இறு → இறும் + பூது. இறு = செறிவு. பூது = மிகுதி.]*

**இறுமா-த்தல்** *iṟumā-,* 19 செ.கு.வி. (v.i.) 1. ***பெருமை பாராட்டுதல்;*** to be elated; to feel exulted. ''இறுமாந் திருப்பன் கொலோ'' (தேவா.1182,11). 2. ***செருக்கடைதல்;*** to be self-conceited. (செ.அக.).

ம. இறுமான்னு.

*[இறு - இறும் + ஆர்த்தல் - இறுமார்த்தல் - இறுமாத்தல்; ஒ.நோ. உரு - உரும்.]*

**இறுமாப்பு** *iṟumāppu,* பெ. (n.) 1. ***பெருமை பாராட்டுகை;*** elation, exultation. 2. ***செருக்கு*** (திருவிளை. வெள்ளை.14); pride, self-conceit, arrogance. 3. ***நிமிர்ச்சி*** (வின்.); erect posture. (செ.அக.).

*[இறு → இறும் + ஆர்ப்பு - இறுமார்ப்பு → இறுமாப்பு. இறும் = செறிவு, பெருக்கம். ஒ.நோ. உரு - உரும். ஆர்த்தல் = சேர்த்தல், கட்டுதல். ஆர்ப்பு → ஆப்பு = சேர்ப்பு, கூடுகை.]*

**இறுமுறி** *iṟu-muṟi,* பெ. (n.) ***தீர்ந்து போன காதற்ற ஆவணம்*** (வின்.); discharged bond, having a vital part of torn off. (செ.அக.).

*[இறுத்தல் = இறுக்குதல், நெருக்குதல், ஒடித்தல், எறிதல், இறுதியாதல். இறு + முறி.]*

**இறுமுறை** *iṟu-muṟai,* பெ. (n.) ***அழியும் முறைமை, இறந்துபடும் நிலைமை;*** turn to die ''இறுமுறை செய்யு முருவொடு'' (கலித்.93-19) (சங்.இலக்.சொற்.).

*[இறு + முறை.]*

**இறுவதஞ்சாமை** *iṟuvadañjāmai,* பெ. (n.) ***வணிகர் குணங்களுள் ஒன்று*** (பிங்.); indifference to losses, a desirable virtue in merchants. (செ.அக.).

*[இறுவது + அஞ்சாமை. இறுவது = மேற்கொண்ட செயலில் தோல்வியுறல். இழப்புகளை எதிர்கொள்ளல்.]*

**இறுவரை**[1] *iṟu-varai,* பெ. (n.) ***அழியுங்காலம்;*** time of ruin, downfall, death. ''இறுவரை காணிற் கிழக்காந் தலை.'' (குறள்.488) (செ.அக.).

*[இரு → இறு + வரை.]*

**இறுவரை**[2] *iṟu-varai,* பெ. (n.) 1. ***பெரியமலை;*** high mountain ''இறுவரை வீழ'' (பு.வெ.7.20). 2. ***பக்க மலை;*** foot hill. ''இருடூங் கிறுவரை'' (கலித்.43). 3. ***அடிவாரம்;*** foot of a mountain. ''குன்ற விறுவரைக் கோண்மா'' (கலித்.86) (செ.அக.).

*[இரு → இறு + வரை. வரை = வளைவு, சரிவு. சரிவுகள் உள்ள மலை.]*

**இறுவரையம்** *iṟu-varaiyam,* பெ. (n.) 1. ***எல்லை*** (யாழ்.அக.); limit. 2. ***இவ்வேளை*** (தற்சமயம்); present moment. (செ.அக.).

*[இல் = குழித்தல், நிலைப்படுத்ல், இல் → இரு → இறு + வரை + அம் = இறுவரையம். வரை = எல்லை, காலம், நேரம்.]*

**இறுவரையும்** *iṟu-varai-y-um,* பெ. (n.) ***இறக்குமளவும்;*** till death. (ஆ.அக.).

*[இறுத்தல் = இறத்தல். இறு + வரை + உம்.]*

**இறுவாக** *iṟu-v-āga,* கு.வி.எ. (adv.) ***இறுதியாக*** (சூடா. 12,98); at last, finally. (செ.அக.).

*[இறு + ஆக. இறு = இறுதி.]*

**இறுவாய்** *iṟu-vāy,* பெ. (n.) 1. ***ஈறு;*** end, termination. ''னகர விறுவாய்'' (தொல்.எழுத்.1). 2. ***சாவு;*** death. ''இறுவா யெய்த'' (கந்தபு.அசுரேந்.58).

*[இறு + வாய் = இறுவாய் = சாவு; வாய் = இடம்.]*

**இறுவேல்** *iṟu-vēl,* பெ. (n.) ***இருள்வேல்*** பார்க்க; see *iruḷvēl.*

*[ஒருகா. இருள்வேல் - இருவே - இறுவேல்.]*

**இறே** *iṟē,* இடை (part.) ***அன்றோ, அறிவிப்பு*** (பிரசித்தி) ***தெரியவேண்டிய செய்தி, தெளிவு இவற்றைக் குறிக்குஞ் சொல்*** (ஈடு.2,1,1); a particle, frequently used in vaisnava religious writings and occurring mostly at the end of sentences to indicate that the subject mentioned is either (1) common knowledge, or (2) one which must be known by all, or (3) one that is emphatically so.

*[ஈறு - இறே.]*

**இறை**[1] *iṟai,* பெ. (n.) 1. ***உயரம்;*** height. ''ஏந்து கொடி யிறைப் புரிசை'' (புறநா.17,27). 2. ***தலை*** (சூடா.); head. 3. ***கடவுள்;*** supreme God. ''இறைநிலையுணர்விது'' (திவ்.திருவாய்.1,3,6). 4. ***சிவன்*** (பிங்.); Siva. 5. ***நான்முகன்*** (பிரமன்) (பிங்.); Brahmā. 6. ***அரசன்;*** king, sovereign, monarch, ''இறைகாக்கும் வையக மெல்லாம்'' (குறள்.547). 7. ***தலைமை*** (பிங்.); eminence, greatness. 8. ***நடுவு நிலைமை;*** impartiality, justice. ''கண்ணோடா திறைபுரிந்து'' (குறள்.541). 9. ***உயர்ந்தோர்***(தொல்.பொ.256), (திவா.); anyone who is great, as one's father or guru or any renowned and illustrious person. 10. ***தலைவன்*** (திவா); superior, master, chief. 11. ***தமையன்*** (பரிபா.11-8); elder brother. 12. ***கணவன்;*** husband, as lord of his wife. ''நப்பின்னை தனக்கிறை'' (திவ்.பெரியதி.2,3,5). 13. ***வீட்டிறப்பு;*** inside of a sloping roof, eaves of a house. ''குறியிறைக் குரம்பை'' (புறநா.129). 14. ***இறகு*** (பிங்.); feather, quill. 15. ***சிறகு;*** wing, plumage. 16. ***இறத்தல்.*** (கலித்.18, உரை.); death, dying, extinction. 17. ***மாமரம்*** (மலை.); mango tree. (செ.அக.).

ம. இற; க. எறகெ, எறகில்; குட. எறகி.

*[1-2. ஏறு → ஏறை → இறை = உயரம், தலை. 3-12. இறுத்தல் = தங்குதல். நிலைபெற்றிருத்தல். இறு → இறை. எங்கும், என்றும் நிலையாக இருப்பவன், நிலைத்திருந்து காப்பவன், கடவுள், அரசன், தலைவன். 13-17. இறங்கு → இறப்பு → இற = தாழ்த்தல், சரிவாதல். வீட்டின் இறவாணம். இறகு, இறக்கை, கிளை, தாழ்ந்து கனி கொடுக்கும் மாமரம்.]*

**இறை**[2] *iṟai,* பெ. (n.) 1. ***தங்கல்;*** abiding, halting tarrying. ''நெஞ்சிறை கொண்ட'' (மணி 4,69). 2. ***இருக்கை;*** seat. ''இறையிடை வான்முறை யேறி'' (கம்பரா. அயோத். மந்திர.12). 3. ***கடமை*** (திவ்.திருவாய்.5,2,8); duty, obligation. 4. ***அரசிறை;*** tax on land, duty, share of the produce accuring to the king as rent. ''இறைவற் கிறையொருங்கு நேர்வது நாடு'' (குறள்.733). 5. ***விடை;*** answer, reply. ''எண்ணிறையுள்'' (நன்.386). 6. ***விரல் வரை;*** lines inside the finger joints. ''இறைக்கரஞ் சிவப்பெய்திட'' (இரகு. நாட்டுப். 34). 7. ***விரலிறையளவு;*** measure of the first joint of the fore finger being about 1 inch. 8. ***சிறுமை*** (அற்பம்); very small particle, atom. minute quantity, short space of time. ''இறையு ஞானமி லாதவென் புன்கவி'' (கம்பரா.சிறப்பு.10). 9. ***முன்கை;*** wrist, fore-arm ''எல்வளை யிறை யூரும்மே'' (கலித்.7). 10. ***கை;*** arm. ''இறைவளை யாழ்தழீஇ யிருப்ப'' (சீவக. 656). 11. ***உடலுறுப்பின் மூட்டுவாய்;*** joints of the body. ''இறைகளவை நெறு நெறென'' (திவ்.பெரியதி. 5.10,4). 12. ***மூலை;*** corner. ''முடங்கிறை''(முல்லை.87). (செ.அக.).

*[இறுத்தல் = தங்குதல், வைத்தல், தங்குதற்குரிய இடம். இறு → இறை. நிலைத்து ஆளும் அரசன். அரசனுக்குச் செலுத்தும் வரிப்பணம். இறு → இறை = வைத்தல், செலுத்துதல், விடைய ளித்தல். இறு → இறை = ஒடித்தல், சிறிதாக்குதல், சிறிது. இறு → இறை = தாழ்தல், தாழ்ந்த முன்கை, தாழ்வான பகுதி.]*

**இறை**[3]**-தல்** *iṟai-,* 2 செ.குன்றாவி. (v.t.) ***வணங்குதல்;*** to bow before, as in salutation; to worship. ''இணையடி யிறைமின்'' (பதினோ.ஆளு.திருக்கலம்.48). (செ.அக.).

க. எறகு.

*[இறு → இறை. ஒடிதல், வளைதல், வணங்குதல்.]*

**இறை**[4]**-தல்** *iṟai-,* 2 செ.கு.வி. (v.i.) ***சிதறிப் போதல்;*** to scatter, disperse. ''வளை முத்திறைய வெற்றும்........ வெண்டிரை'' (சூத.சிவமான்...2,2). (செ.அக.).

*[இறு → இறை. ஒடிதல், முறிதல், வெடித்துச் சிதறுதல்.]*

**இறை**[5]**-த்தல்** *iṟai-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. ***நீரை வீசித் தெளித்தல்;*** to splash, spatter, dash. 'அவன் முகத்தில் நீரை யிறைத்தான்.' 2. ***சிதறுதல்;*** to scatter abroad, strew, cast forth. 'பண்டங்களை யெல்லாம் இறைத்து விட்டான்.' 3. ***நீர் பாய்ச்சுதல்;*** to draw and pour out water, irrigate, bale out. ''இறைப்பவர்க் கூற்றுநீர் போல மிகும்'' (குறள்.1161). 4. ***நிறைத்தல்;*** to fill, as one's ears with strains of music. ''வீணையரின்னிசை செவிதொறு மிறைப்ப'' (உபதேசகா.சிவபுண்ணிய. 318). 5. ***மிகுதியாகச் செலவிடுதல்;*** to lavish, squander 'பணத்தை வாரி யிறைக்கிறான்.'

*[இறு → இறை = ஒடிதல், முறிதல், வெடித்துச் சிதறுதல், வீசுதல். நிறையத் தருதல். செலவழித்தல்.]*

**இறை**[6] *iṟai,* பெ. (n.) 1. ***கடன்*** (அக.நி.); debt. 2. ***வாளின் உறை;*** sheath of a sword. ''வாய்ந்த விறைவிட்டால் மருவலர்கள் மார்புறையாப் பாய்ந்து'' (கூளப்ப.45). 3. ***கூட்டம்*** (தக்கயாகப்.638, உரை); crowd. (செ.அக.).

*[இறு → இறை = நெருக்கம். நெருக்கடி.]*

**இறைக்கட்டு** *iṟai-k-kaṭṭu,* பெ. (n.) ***வரி;*** taxation. 'இறைக்கட்டும் தவிர்த்து' (S.I.I.VII.414). (செ.அக.).

ம. இற.

*[இறை + கட்டு.]*

**இறைக்கடன்** *iṟai-k-kaḍaṉ,* பெ. (n.) ***நிலவரி*** (சேரநா.); land-tax.

ம. இறக்கடம்.

*[இறை + கடன்.]*

**இறைக்கள்ளன்** *irai-k-kallan,* பெ. (n.) ***இறைப் பிளவை*** (வின்.) பார்க்க; see *irai-p-pilavai.* (செ.அக.).

*[இறை + கள்ளன்.]*

**இறைக்காசான்** *irai-k-kāšān,* பெ. (n.) ***முருகக் கடவுள்;*** Skanda, as the Guru of Šiva. "இறைக்காசா னெம்மருளா மாலையு மாலை" (பெருந்தொ.102). (செ.அக.).

*[இறைக்கு + ஆசான்.]*

**இறைக்குடி** *irai-k-kudi,* பெ. (n.) ***வரிகொடுப்போன்*** (சிலப்,4,9, உரை.); tax payer. (செ.அக.).

*[இறை + குடி.]*

**இறைக்குத்து** *irai-k-kuttu,* பெ. (n.) ***இறக்குந் தறுவாயில் கண்விழி அசைவற்று நிற்கை*** (இ.வ.); fixed gaze of the eyes at the approach of death. (செ.அக.).

*[இறை + குத்து. இறை = நிலையான, நெட்டான.]*

**இறைகாவல்** *irai-kāval,* பெ. (n.) ***தலையாரிக்குரிய வரி*** (I.M.P. TP.121-2); police cess, an ancient rate paid towards the cost of watch and ward in a village. (செ.அக.).

*[இறை + காவல்.]*

**இறைகிழவன்** *irai-kilavan,* பெ. (n.) ***அரசனாகுந் தன்மையை யுடையவன்;*** ruler endowed with all kingly qualities. "நில்லாத் தானை யிறை கிழவோயே" (பதிற்றுப்.54, 17). (செ.அக.).

*[இறை + கிழவன். கிழமை = உடைமை.]*

**இறைகுத்து-தல்** *irai-kuttu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. ***விரலிறையா லளவிடுதல்*** (வின்.); to dip the finger into a fluid to ascertain its depth. 2. ***மதிப்பிடுதல்;*** to estimate.

*[இறை + குத்துதல். இறை = முன்கை, முன்கை விரல்.]*

**இறைகூடு-தல்** *irai-kūdu-,* 5 செ.குன்றாவி. (v.t.). ***அரசாளுதல்*** (பொருந.79); to rule over, exercise authority. (செ.அக.).

*[இறை + கூடுதல்.]*

**இறைகூடை** *irai-kūdai,* பெ. (n.) ***நீரிறைக்கும் கூடை*** (திவா.); water-basket made of palmyra leaves for baling out water for irrigation purposes. (செ.அக.)

*[இறை + கூடை. இறை = இறைத்தல், நீரிறைத்தல்.]*



இறைகூடை

**இறைகூத்தன்** *irai-kūttan,* பெ. (n.) ***குராமரம்;*** common bottle flower - webera corymbosa. (சா.அக.).

*[இறை + கூத்தன்.]*

**இறைகூர்-தல்** *irai-kūr-,* 2 செ.கு.வி. (v.i.). ***தங்குதல்;*** to dwell, abide. "தெறன்மறவரிறை கூர்தலின்" (புறநா.345-5).

*[இறை + கூர்.]*

**இறைகொள்ளு-தல்** *irai-kollu-,* 13 செ.கு.வி. (v.i.) ***தங்குதல்;*** to dwell, abide.

*[இறை + கொள்ளுதல். இறை கொள்ளுதல் = இருப்புக் கொள்ளுதல்.]*

**இறைச்சி** *iraicci,* பெ. (n.) 1. ***இறைச்சி;*** flesh. "இறைச்சிக் குன்றாக்கினானே" (சீவக.801). 2. ***இறைச்சிப் பொருள்*** (தொல்.பொருள்.229) பார்க்க; see *Iraicci-p-porul.* 3. ***கருப்பொருள்;*** distinctive features of each of the ain-tinai relating to five tracts of land. "அன்புறு தகுந விறைச்சியுட் சுட்டலும்" (தொல்.பொருள்.231). 4. ***விருப்பமானது;*** that which is agreeable, pleasing. "வீழுநர்க் கிறைச்சியாய்" (கலித்.8).

ம. இறச்சி; தெ. எரசு, எரசி; குட. எரசி.

*[இறு → இறை = தங்குதல். இறை → இறைச்சி = தங்கியிருப்பது. சேர்ந்திருப்பது. ஒட்டியிருப்பது. உள்ளிருப்பது, உள்ளம் விரும்புவது. கவனத்தைக் கவர்வது.]*

**இறைச்சிக்குத்தி** *iraicci-k-kutti,* பெ. (n.) ***இறைச்சி குத்தி பார்க்க;*** see *iraicci-kutti.*

*[இறைச்சி + குத்தி.]*

**இறைச்சி குத்தி** *iraicci-kutti,* ***இறைச்சியைக் குத்தி வாட்டுங் கருவி*** (வின்.); spit, rod for holding meat while roasting. (செ.அக.).

*[இறைச்சி + குத்தி.]*

**இறைச்சி நீர்** *iraicci-nīr,* பெ. (n.) ***ஊன் தண்ணீர்;*** the thin transparent watery part of the blood-serum. (சா.அக.).

*[இறைச்சி + நீர்.]*

**இறைச்சிப்பொருள்** *iraicci-p-porul,* பெ. (n.) ***கருப்பொருளினுள்ளே கொள்ளும் பொருள்*** (தொல். பொருள்.229); suggestive meaning conveyed indirectly by reference to the distinctive features of the tract of land. (செ.அக.).

*[இறைச்சி + பொருள்.]*

**இறைச்சிப்போர்** *irraicci-p-pōr,* பெ. (n.) ***உடம்பு;*** the body, considered as a mass of flesh. "இறைச்சிப்போ ரிதனை யென்றான்" (சீவக.1585) (செ.அக.).

*[இறைச்சி + போர். போர் = குவியல்.]*

**இறைச்சோறு** *irai-c-cōru,* பெ. (n.) ***வரிவகை*** (S.I.I. VIII.87); a kind of tax. (செ.அக.).

*[இறை + சோறு.]*

**இறைஞ்சலர்** *irainjalar,* பெ. (n.) ***பகைவர்;*** enemies, foes or adversaries, as those who do not yield or submit.

"இறைஞ்சலர்க் கெழிலியே றனையான்" (பாரத.பதி னேழா.241) (செ.அக.).

*[இறைஞ்சு + அல் + அர். இறைஞ்சலர் = வணங்காதவர், பகைவர்.]*

**இறைஞ்சாடிப்பூ** *iṟaiñjāḍi-p-pū,* பெ. (n.) ***கஞ்சாங் கோரை;*** holy basil - ocimum sanctum. (சா.அக.).

*[இறைஞ்சு + ஆடி + பூ.]*

**இறைஞ்சார்** *iṟaiñjār,* பெ. (n.) ***இறைஞ்சலர்*** பார்க்க; see *iṟaiñjalar.* (செ.அக.).

*[இறைஞ்சாதார் → இறைஞ்சார்.]*

**இறைஞ்சி** *iṟaiñji,* பெ. (n.) ***மரவுரி*** (திவா.); bark of a certain tree, used for clothing. (செ.அக.).

*[இறைஞ்சு → இறைஞ்சி.]*

**இறைஞ்சு-தல்** *iṟaiñju-,* 5 செ.கு.வி. (v.i.) 1. ***தாழ்தல்;*** to hang low, as a cluster of coconuts; to bow, bend. "குலையிறைஞ்சிய கோட்டாழை" (புறநா.17,9). 2. ***வீழ்ந்து கிடத்தல்;*** to fall down. "புல்லுவிட் டிறைஞ்சிய பூங்கொடி" (கலித்.3,13). - 5 செ.குன்றாவி. (v.t.) ***வணங்குதல்;*** to make obeisance; to pay reverence; to worship by bowing or prostrating. "எழிலார் கழலி றைஞ்சி" (திருவாச.1,21).

ம. இரஞ்சுக; க. எரகு; தெ. எரகு; து. எரகுனி.

*[இற → இறை → இறைஞ்சு.]*

**இறைப்பாரம்** *iṟai-p-pāram,* பெ. (n.) ***பல்லுயிரைக் காக்கின்ற அரசன் பொறுப்பு;*** burden of government, responsibility of the king for the welfare of his subjects. "இறைப்பாரமெல்லாம்.......பூட்டி" (சீவக.475).

*[இறை + பாரம். இறை = அரசன்.]*

**இறைப்பிளவை** *iṟai-p-piḷavai,* பெ. (n.) ***கையிடை யில் வரும் ஒருவகைப்புண்;*** eruption in the finger joints or between the fingers at the roots. (செ.அக.).

*[இறை + பிளவை.]*

**இறைப்புரிசை** *iṟai-p-puriśai,* பெ. (n.) ***உயர்ந்த மதில்;*** high wall. "ஏந்து கொடி யிறைப்புரிசை" (புறநா.17-27).

*[இறை + புரிசை.]*

**இறைப்பொருட்டலைவன்** *iṟai-p-poruṭ-ṭalaivaṉ,* பெ. (n.) ***குடிகளுக்கு வேண்டிய உதவி யனைத்துஞ் செய்து அவர்களிடம் குடியிறை கொள்ளுவோன்;*** person collecting tax and attending to public services. (அபி.சிந்.).

*[இறை + பொருள் + தலைவன். இறைப்பொருள் = வரிப்பணம்.]*

**இறைப்பு** *iṟaippu,* பெ. (n.) ***நீர் இறைக்கை;*** drawing out and pouring water. (செ.அக.).

*[இறை → இறைப்பு.]*

**இறைப்புணைப்படு-தல்** *iṟai-p-puṇai-p-paḍu-,* 20 செ.கு.வி. (v.i.) ***ஒருவன் இறுக்க வேண்டும் வரிக்குப் புணை கொடுத்தல்*** (S.I.I. V, 376); to stand security for the payment of tax by a person. (செ.அக.).

*[இறை → இறைப்புணை + படு.]*

**இறைப்புப்பட்டரை** *iṟaippu-p-paṭṭarai,* பெ. (n.) ***கிணற்றுப் பாய்ச்சலுள்ள நிலம்*** (C.G.); land exclusively irrigated from wells. (செ.அக.).

*[இறைப்பு + பட்டரை.]*

**இறைப்பெட்டி** *iṟai-p-peṭṭi,* பெ. (n.) ***தண்ணீர் இறைக்க உதவும் ஓலைப்பெட்டி;*** ola basket for baling water. (செ.அக.).

*[இறை + பெட்டி.]*

**இறைபயப்பது** *iṟai-payappadu,* பெ. (n.) ***குறிப்பாகப் பொருளை விளைக்கும் விடை*** (தொல்.சொல்.13); indirect answer to questions. (செ.அக.).

*[இறை + பயப்பது.]*

**இறைமகள்** *iṟai-magaḷ,* பெ. (n.) 1. ***கொற்றவை;*** Koṟṟavai "இறைமகள் எழுதுசெய்ய" (தக்கயாகப்.751) (செ.அக.). 2. ***அரசன் மகள்;*** king's daughter. (ஆ.அக.).

*[இறை + மகள்.]*

**இறைமகன்** *iṟai-magaṉ,* பெ. (n.) 1. ***அரசன்;*** king. "இன்னுயிராகி நின்றா னிறைமகன்" (சூளா.நகர.31). 2. ***பிள்ளையார்*** (பிங்.); Ganēśa, son of iṟai, i.e. Śiva. (செ.அக.).

*[இறை + மகன்.]*

**இறைமரம்** *iṟai-maram,* பெ. (n.) 1. ***இறைகூடை தாங்கும் மரம்*** (வின்.); three poles united at the top to support a basket in irrigation. (செ.அக.). 2. ***ஏற்றமரம்*** (வின்.); well-sweep. 3. ***நீரிறைக்கும் மரப்பத்தல்*** (j.); long, boat shaped wooden trough suspended for watering fields. (செ.அக.).

*[இறை + மரம்.]*

**இறைமலை** *iṟai-malai,* பெ. (n.) ***மேருமலை;*** Mt. Meru. "இறைமலை வில்லி" (தக்கயாகப்.170) (செ.அக.).

*[இறை + மலை.]*

**இறைமா** *iṟaimā,* பெ. (n.) ***மாமரம்;*** mango tree. (சா.அக.).

*[இறை + மா.]*

**இறைமை** *iṟai-mai,* பெ. (n.) 1. ***தலைமை;*** kingly superiority, eminence, celebrity. "வீரங் குறைவரே

யிறைமை பூண்டோர்'' (கம்பரா.மூலபல.46). 2. ***அரசாட்சி;*** government, dominion. ''பாண்டியற்குத் தன்னிறைமை முழுதுமீந்தான்'' (திருவிளை.அங்க.27). 3. ***தெய்வத்தன்மை;*** divinity, divine nature. ''அவனது இறைமைக்கு, இழுக்காய் முடியும்'' (சி.சி.8,38, சிவஞா). (செ.அக.).

*[இறை → இறைமை.]*

**இறைமையாட்டி** *iraimai-y-āṭṭi,* பெ. (n.) 1. ***தலைவி*** (திவா.); lady, mistress. 2. ***அரசி;*** queen. (செ.அக.).

*[இறைமை + ஆட்டி. இறைமை = தலைமை.]*

**இறைமொழி**[1] *irai-moḻi,* பெ. (n.) ***மறுமொழி;*** answer, reply. ''அன்பர் கேட்க விறைமொழி கொடுத்து'' (திருவிளை.மண்.112) (செ.அக.).

*[இறை + மொழி. இறை = விடை.]*

**இறைமொழி**[2] *irai-moḻi-,* பெ. (n.) ***இறைவனருளிய மறை*** (ஆகமம்); āgamas. ''இறைமொழிக் கல்லது மறுதரவோதி'' (சிலப்.10, 206) (செ.அக.).

*[இறை + மொழி. இறை = தெய்வம்.]*

**இறையணி** *irai-y-aṇi,* பெ. (n.) ***வினாவுக்கு விடை கூறுதல் அணி;*** figure of speech in the form of question and answer. (அபி.சிந்).

*[இறை + அணி. இறை = விடை.]*

**இறையமன்** *irai-yamaṉ,* பெ. (n.) ***காரி*** (பரிபா.11,8); Saturn whose elder brother is Yama. (செ.அக.).

*[இளை → இறை + யமன் (கொ.வ.).]*

**இறையவன்** *iraiyavaṉ,* பெ. (n.) 1. ***தலைவன்;*** chief. 2. ***கடவுள்;*** God. 3. ***தேவர் தலைவன்;*** a leader among the gods. ''இந்திரன் முதலிய இறைய்வர் பதங்களும்'' (குறள், பரி, உரைப்பா) (செ.அக.).

ம. இறையான், இறையுவன்.

*[இறை → இறையவன்.]*

**இறையனார்** *iraiyaṉār,* பெ. (n.) ***கடைக்கழகப் புலவருள் ஒருவர்; 'கொங்குதேர் வாழ்க்கை' யென்னும் பாடலை எழுதியவர்*** (குறுந்.2); a poet of the time of the third Sangam at Madurai, popularly identified with Śiva. (செ.அக.) (அபி.சிந்).

**இறையனாரகப் பொருள்** *iraiyaṉār-aga-p-poruḷ,* பெ. (n.) ***இறையனாரியற்றிய களவியல்;*** grammar on agapporuḷ by Iraiyaṉār. (செ.அக.).

*[இறையனார் + அகப்பொருள்.]*

இந்நூல் அறுபது நூற்பாக்களைக் கொண்டது. இதன் உரை நக்கீரர் இயற்றியது என்பர்.

**இறையாமணக்கு** *irai-y-āmaṇakku,* பெ. (n.) ***செவ்வாமணக்கு;*** red variety of castor plant - Ricinus communis. (சா.அக.).

*[இறை + ஆமணக்கு]*

**இறையாயிரங்கொண்டான்** *irai-y-āyiraṅ-koṇḍāṉ,* பெ. (n.) ***ஒரு விரலிறைக்கு ஆயிரங்கலம் நெற்கொள்ளும் களஞ்சியம்*** (கோயிலொ.63); ***திருவரங்கம் கோயில், இராமநாதபுரம் அரண்மனை ஆகிய இடங்களில் இருப்பது போன்றது;*** large granary as in Srirangam temple and in the Ramnad pālace, in which paddy spread over the floor to the thickness of one irai or an inch would amount to 1000 kalam. (செ.அக.).

*[இறை + ஆயிரம் + கொண்டான்.]*

**இறையார்** *iraiyār* பெ. (n.) ***மகளிர்;*** ladies. ''வளை முன்கை வணங்கிறையார்''. (பரி.17-33) (பாண்டிச்.அக.).

ம. இறையாள்.

*[இறை + ஆர். இறையார் = அழகிய முன்கையை உடையவர்.]*

**இறையான்** *iraiyāṉ,* பெ. (n.) ***சிவன்;*** Śivaṉ ''இறையான் கையில் நிறையாத'' (திவ்.பெரியதி.5.1,8) (செ.அக.).

*[இறை + ஆன்.]*

**இறையிலி** *irai-y-ili,* பெ. (n.) ***வரிநீக்கப்பட்ட நிலம்;*** land that is tax-free. 'அறத்திற்குவிட்ட இறையிலி நிலங்களும்' (செ.அக.).

ம. இறயிலி.

*[இறை இல் + இ]*

**இறையிழிச்சு-தல்** *irai-y-iḻiccu,* 5 செ.கு.வி. (v.i.) ***இறையிழித்து*** பார்க்க; see *iraiy-iḻittu.* இறையிழிச்சிச் சிலாலேகை செய்து கொடுத்தோம் (S.I.I.iii,6) (செ.அக.).

*[இறை + இழிச்சுதல். இழிச்சுதல் = நீக்குதல்.]*

**இறையிழித்து-தல்** *irai-y-iḻittu-,* 15 செ.கு.வி. (v.i.) ***வரி நீக்குதல்;*** to exempt from payment of taxes. 'இறையிழித்திச் சிலாலேகை செய்து கொடுத்தோம்.' (S.I.I. iii.4). (செ.அக.).

**இறையிறுக்குங்கோல்** *irai-y-irukkuṅkōl,* பெ. (n.) ***வரியிடுவதற்காக நிலத்தை அளக்கப் பயன்படும் அளவுகோல்;*** rod for measuring land for the purpose of fixing the tax. 'இவ்வூரில் இறையிறுக்குங் கோலால் இந்நிலம் ஏழுமாவரை.' (S.I.I.V,107) (செ.அக.).

*[இறை + இறுக்கும் + கோல்.]*

**இறையிறை** *irai-irai,* இடை. (part.) ***சிறிது சிறிது*** (குறுந்.52); little by little. (சங்.இலக்.சொற்.).

*[இறை + இறை.]*

**இறையுணர்வு** *irai-y-uṇarvu,* பெ. (n.) ***வாலறிவு*** (பதிஞானம்); knowledge concerning the supreme being. (செ.அக.).

*[இறை + உணர்வு.]*

**இறையூர்தி** *irai-ūrdi,* பெ. (n.) ***காளை;*** bull, Śiva's vehicle. (பிங்.) (செ.அக.).

*[இறை + ஊர்தி.]*

**இறையெண்ணு-தல்** *irai-y-ennu-,* 11 செ.கு.வி. (v.i.). ***விரலிறையாற் கணக்கிடுதல்*** (வின்.); to count by the joints or lines on the fingers. (செ.அக.).

*[இறை + எண்ணுதல்.]*

**இறையோன்** *iraiyōn,* பெ. (n.) 1. ***கடவுள்*** (திவ்.திருவாய். 1,3,2); God. 2. ***சிவன்*** (திவா.); Śiva (செ.அக.).

ம. இறயோன்.

*[இறை → இறையோன்.]*

**இறைவரை** *irai-varai,* பெ. (n.) ***கணப்பொழுது;*** moment of time. ''இதோ ரிறைவரையாகும்.'' (கந்தபு. மோன.8) (செ.அக.).

*[இறை + வரை.]*

**இறைவளை** *iraivalai* பெ. (n.) ***தோள்சந்தில் அணிந்த வளை*** (குறுந்.289); a kind of ornament.

*[இறை + வளை.]*

**இறைவன்**[1] *iraivan,* பெ. (n.) ***எப்பொருளிலுந் தங்குதலுடைய கடவுள்*** (சிலப்.10,184, உரை); God, the all-abiding. (செ.அக.).

ம. இறயவன்.

*[இறை + அன்.]*

**இறைவன்**[2] *iraivan,* பெ. (n.) 1. ***தலைவன்;*** chief, master, superior. ''இவ்வூ ரிறைவனை யிழந்து'' (சிலப். 22,144). 2. ***கடவுள்;*** God. இறைவன் மலரடி (பாரத. இராசசூ.146). 3. ***திருமால்*** (குறள்.610,உரை); Viṣṇu. 4. ***சிவன்*** (பரிபா.11,78,உரை); Śiva. 5. ***நான்முகன்*** (பிங்.); Brahmā. 6. ***அரசன்;*** king. ''இறைவற் கிறையொருங்கு நேர்வது நாடு'' (குறள்.733). 7. ***கணவன்;*** husband; lord, in relation to a wife. ''நற்புவி தனக்கிறைவன்'' (திவ்.பெரியதி.2,3,5). 8. ***மூத்தோன்.*** (திவா); elder, venerable person. 9. ***குரு*** (பிங்.); preceptor. (செ.அக.).

ம. இறவன்.

*[இறை → இறைவன்.]*

**இறைவன்றொழில்** *iraivan-rolil,* பெ. (n.) ***இறைவனது செயற்பாடுகள்; அவை; படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்பனவாம்;*** God's deeds viz creation, protection, destruction, suppression and showing grace or mercy.

*[இறைவன் + தொழில்.]*

**இறைவனிம்பம்** *iraivanimbam,* பெ. (n.) ***சிவனார் வேம்பு*** (மலை.); wiry indigo. (செ.அக.).

*[இறைவன் + நிம்பம்.]*

**இறைவனூல்** *iraivanūl,* பெ. (n.) ***கடவுளருளிய*** (ஆகமம்) ***மறை நூல்கள்;*** agamas.' இறைவனூலையும் அவனருள் வழிப்பட்டுத் தத்தமரபின்வரும் குரவர் பலர் நூலையும்' (நன்.7, சங்கர) (செ.அக.).

*[இறைவன் + நூல்.]*

**இறைவனெண்குணம்** *iraivan-engunam,* பெ. (n.) ***இறைவனின் எட்டுக்குணங்கள்;*** eight attributes of God. எண்குணங்களாவன: தன்வயத்தனாதல், தூயஉடம்பினனாதல், இயற்கை உணர்வினனாதல், முற்றும் உணர்தல், இயல்பாகவே பாசங்களினீங்குதல், பேரருள் உடைமை, முடிவிலாற்றலுடைமை, வரம்பிலின்பமுடைமை எனவிவை (குறள்.பரி.உரை,9) ''எண்குணத் தான் கண்டாய்'' - (அப்பர் தேவாரம்). (செ.அக.).

*[இறைவன் + எண் + குணம்.]*

**இறைவாகனம்** *irai-vāganam,* பெ. (n.) (பிங்.); ***இறையூர்தி*** பார்க்க; see *irai-ūrdi.* (செ.அக.).

*[இறை + வாகனம்.]*

**இறைவாங்கு உயர்சினை** *iraivāngu uyarsinai* பெ. (n.) ***வளைதலையுடைய பெருங்கிளை;*** a big branch of a tree capable of being bent. ''உழையணந்து உண்ட இறைவாங்கு உயர்சினை'' (நற்.113-1).

*[இறை + வாங்கு + உயர்சினை.]*

**இறைவி** *iraivi,* பெ. (n.) 1. ***உமை*** (பிங்.); Pārvati. 2. ***கொற்றவை*** (சிலப்.12,உரைப்பாட்டுமடை,உரை); Goddess Korravai. 3. ***தலைவி;*** mistress, lady, queen. ''இந்துவின் நிருமுகத் திறைவி'' (கம்பரா.யுத்.மந்திர. 94) (செ.அக.).

*[இறை → இறைவி.]*

**இறைவிழுத்து-தல்** *irai-viluttu-,* 15 செ.கு.வி. (v.i.) ***வரிநீக்குதல்;*** to excempt from payment of taxes. 'சந்திராதித்தவரை இறைவிழுத்திக் கொடுத்தோம்.' (S.I.I. iii, 80) (செ.அக.).

*[இறை + விழுத்து.]*

**இறைவை**[1] *iraivai,* பெ. (n.) 1. ***புட்டில்*** (திவா.); a kind of basket. 2. ***இறைகூடை;*** receptacle for drawing water for irrigation purposes, as a well basket. ''இறைவை கொளுங் கூவல்.'' (திருப்பு.321) (செ.அக.).

ம. இறவ.

*[இறை → இறைவை.]*

**இறைவை**[2] *iraivai,* பெ. (n.) ***ஏணி;*** ladder. ''ஏறுதற்கமைத்த..... இறைவையின்'' (இரகு.யாக.104) (செ.அக.).

*[இறை → இறைவை.]*

**இறைவைமரம்** *iraivai-maram,* பெ. (n.) ***தண்ணீர் இறைக்க மரத்தாற் செய்த ஓடம் போன்ற கருவி*** (இ.வ.); a boat-like wooden trough used for bailing out water. (செ.அக.).

*[இறைவை + மரம்.]*

**இன்**[1] *in,* பெ. (n.) ***இனிமை;*** sweetness, pleasantness. ''இன்வள ரிளம்பிறை'' (சீவக.1008) (செ.அக.)

ம. இன்.

*[இல் = மென்மை, நொய்மை, இனிமை. இல் - இன்.]*

**இன்**[2] *in,* கு.பெ.எ. (adj.) ***இனிய;*** sweet, pleasant, agreeable. "இன்சொ லினிதீன்றல் காண்பான்" (குறள். 99).

*[இல் - இன்.]*

**இன்**[3] *in,* இடை. (part.) 1. ***ஐந்தனுருபு*** (நன்.299); an abl. ending. 2. ***ஏழனுருபு*** (திருக்கோ.19, உரை); a loc. ending. 3. ***இறந்தகால இடைநிலை;*** a sign of the past tense. உறங்கினான். 4. ***சாரியை;*** an euphonic augment. "வைப்பிற்கோர் வித்து" (குறள்.24) (செ.அக.).

ம., க. இன்; தெ. னி.

*[இல் - இடப்பொருள். இல் - இன்.]*

**இன்கடுங்கள்** *inkadunkal,* பெ. (n.) ***உண்டற்கினிமை யும் மயக்கமுந்தரும் கடுமையுமுடைய கள்;*** toddy. "இன்கடுங் கள்ளின் அஃதை" (அகநா.76).

*[இல் - இன் + கடுங்கள்.]*

**இன்கண்**[1] *in-kan,* பெ. (n.) 1. ***இன்பம்;*** delight, pleasure. "இன்க ணுடைத்தவர் பார்வல்" (குறள்.1152). 2. ***கண்ணோட்டம்;*** kindness, special favour. "இன் கணுடைய னவன்" (கலித்.37,22) (செ.அக.).

*[இல் - இன் + கண்.]*

**இன்கண்**[2] *in-kan,* பெ. (n.) ***ஒன்பது வகை மெய்ப்பாட் டுள் ஒன்று*** (நவரசத்திலொன்று); one of nine manifestations of emotions according to literary theory.

*[இன் + கண்.]*

**இன்கண்**[3] *inkan,* பெ. (n.) ***இனிய முழவின் கண் பகுதி;*** eye of a drum head. "மண்கணை முழவின் இன்கண் இமிழ்வில்" (பரிபா.22-36) (சங்.இலக். சொற்.).

*[இன் + கண்.]*

**இன்கண்ணி** *in kanni,* பெ. (n.) ***இனிய மாலை*** (பெரும்பாண்.218); pleasant evening.

*[இல் → இன் + கண்ணி.]*

**இன்கல்** *inkal,* பெ. (n.) ***இனிய மலை;*** gratifying hill or mountain. "இன்கல் யாணர்தம் உறைவின் ஊர்க்கே" (நற்.344.).

*[இல் → இன் + கல்.]*

**இன்கலியாணர்** *inkali yānar,* பெ. (n.) ***இனிய செருக்கினை யுடைத்தாகிய புதுவருவாய்*** (மதுரைக். 330); thriving income or new prosperity. (சங்.இலக். சொற்.).

*[இல் → இன் + கலி + யாணர்.]*

**இன்கழை** *inkalai,* பெ. (n.) ***அழகிய மூங்கில்;*** bamboo. "இன்கழை யமல்சிலம்பின்" (அகநா.177-6) (சங்.இலக்.சொற்.).

*[இன் + கழை.]*

**இன்களி** *inkali,* பெ. (n.) ***இனிய செருக்கு;*** haughtiness. "இன்களி மகிழ்நகை" (புறநா.71) (சங்.இலக்.சொற்.).

*[இன் + களி.]*

**இன்களி நறவு** *inkali naravu,* பெ. (n.) ***இனிய களிப்பைத் தரும் கள்;*** toddy. "இன்களி நறவி னியறேர் நன்னன்" (அகநா.173).

*[இன் + களி + நறவு.]*

**இன்காலை** *inkālai,* பெ. (n.) 1. ***இனிய காலம்;*** morning, "புதலொளி சிறந்த காண்பின் காலை" (அகநா. 139-8). 2. ***இனிய காலைப் பொழுது;*** morning. "வாந்தளி பொழிந்த காண்பின் காலை" (நற். 264-2) (சங்.இலக்.சொற்.).

*[இன் + காலை.]*

**இன்குரல் எழிலி** *inkural elili,* பெ. (n.) ***இனிய முழக்கம் செய்கின்ற முகில்கள்;*** clouds, as gives good sound. "இன்குரல் எழிலி" (நற்.247-3) (சங்.இலக்.சொற்.).

*[இன் + குரல் + எழிலி.]*

**இன்குளகு** *inkulagu,* பெ. (n.) ***இனியதழை*** (முல்லை. 33); agreeable foliage. (சங்.இலக்.சொற்.).

*[இன் + குளகு.]*

**இன்சாயல்** *insāyal,* பெ. (n.) ***இனிய மென்மை;*** elegant appearance. "அறலென விரிந்த உறலின் சாயல்" (அகநா.191-15) (சங்.இலக்.சொற்.).

*[இன் + சாயல்.]*

**இன்சாயலன்** *insāyalan,* பெ. (n.) ***மென்மையினிய நெஞ்சினன்;*** soft at heart. "பெரும்பெயர்ச் சாத்தன் ஈண்டோவின் சாயலன்" (புறநா.178-6).

*[இன் + சாயலன்.]*

**இன்சிறு பிண்டம்** *insiru pindam,* பெ. (n.) ***இனிய சிறு பிண்டம்*** (இகழ்ச்சிக் குறிப்பு); sweet little thing. "இன்சிறு பிண்டம் யாங்குண்டனன் கொல்" (புறநா. 234-4).

*[இன் + சிறு + பிண்டம்.]*

**இன்சீர்** *insīr,* பெ. (n.) ***இனிய ஓசை;*** sweet tone. "படுதிரை யின்சீர்ப் பாணி தூங்கும்" (புறநா.209-5).

*[இன் + சீர்.]*

**இன்சீர்ப்பாணி** *insīr-p-pāni,* பெ. (n.) ***இனிய சீராகிய தாளம்;*** pleasant rhythm. "படுதிரை யின்சீர்ப் பாணி" (புறநா.209-5).

*[இன் + சீர் + பாணி.]*

**இன்சுவை மூரல்** *insuvai mūral,* பெ. (n.) ***இனிய சுவையுடைச் சோறு*** (பெருபாண்.196); good tasteful food.

*[இன் + சுவை + மூரல்.]*

**இன்சொல்** *in-col,* பெ. (n.) ***இனிமையான சொல்;*** pleasant speech, kind word, courteous language, compliment opp. to வன்சொல். "இன்சொ லினிதீன்றல்" (குறள்.99) (செ.அக.).

*[இல் → இன் + சொல்.]*

**இன்சொல்லுவமை** *in-col-vuvamai,* பெ. (n.) ***அணிவகையு ளொன்று. இது பொருளில் உவமைக் கொரு விகுதி தோன்றக்கூறி இன்ன மிகுதியுடைத் தெனினு மொப்பதன்றிச் சிறந்ததன் றென்பது*** (ஆ.அக.); figure of speech.

*[இன் + சொல் + உவமை.]*

**இன்தீங் கிளவி** *intīṅkiḷavi,* பெ. (n.) ***மிக இனிய மொழி;*** sweet language. "இன்தீங் கிளவியாய்" (கலித். 24-3).

*[இன் + தீம் + கிளவி.]*

**இன்துகிர்** *intugir,* பெ. (n.) ***இனிய பவளப் பலகை;*** coral decoration. "காண்பு இன் துகிர்மேல்" (கலித்.86) (சங்.இலக்.சொற்.).

*[இல் → இன் + துகிர்.]*

**இன்தொடைச் சீறியாழ்** *intodaiccīṟiyāḻ,* பெ. (n.) ***இனிய நரம்பினை யுடைய சிறிய யாழ்*** (மதுரை.559) stringed musical instrument. (சங்.இலக்.சொற்.).

*[இன்தொடை + சீறியாழ்.]*

**இன்ப உத்தி** *inba utti,* பெ. (n.) ***அறம், பொருள், இன்பம், அச்சம் என்ற நான்கு உத்திகளுள் ஒன்று;*** crucial test of the continence of a minister or other officer of state conducted sub rosa, by a king, which consists in his (the king's) sending an old maid long in the service of the harem, to tempt the officer concerned, with a story that one of the queen is desperately in love with him (the officer), and that not only great pleasure but also splendid destiny await him if he would meet the queen's wishes, one of four utti.

*[இன்பம் + உத்தி.]*

**இன்பக்கொடி** *inba-k-kodi,* பெ. (n.) ***காமவல்லிக் கொடி;*** twining creeper found in svarga. "நந்தையுமின் பக் கொடியொத்தாள்" (சீவக.365) (செ.அக.).

*[இல் - இன் - இன்பம் + கொடி.]*

**இன்ப துன்பம்** *inba-tunbam,* பெ. (n.) ***நலமும் கேடும்;*** joy and sorrow, pleasure and pain. "சென்றாங்கு இன்ப துன்பங்கள்" (திவ்.திருவாய்.8,8,6).

*[இன்பம் + துன்பம்.]*

**இன்பம்**[1] *inbam,* பெ. (n.) 1. ***அகமகிழ்ச்சி*** (திவா.); delight, joy, happiness. 2. ***இனிமை*** (மதுரைக்.16); sweetness, pleasantness. 3. ***இன்பம்*** (காமம்); sensual enjoyment, sexual love. "அறம் பொருளின்பம்" (குறள். 501). 4. ***திருமணம்;*** marriage "கொம்பனையாளையும்... குன்றனையானையும்... இன்பமியற்றினார்" (சீவக.1980). 5. ***சொல்லினும் பொருளினுஞ் சுவை படுவதாகிய கணம்*** (தண்டி.18); sweetness of subject matter and of style and diction, a merit of poetic composition. (செ.அக.).

ம. இன்பம்.

*[இல் → இன் → இன்பு → இன்பம்.]*

**இன்பம்**[2] *inbam,* பெ. (n.) 1. ***நூற்பயனான்கி லொன்று;*** one of four benefits of learning. 2. ***பெரியோ ரியல்பி னொன்று;*** one of the characteristics of noblemen.

*[இல் → இன் → இன்பு → இன்பம்.]*

**இன்பவணி** *inba-v-aṇi,* பெ. (n.) ***முயற்சியின்றி விரும்பப்பட்ட செயல் கைகூடுதலும் விரும்பப்பட்ட பொருளினும் நிறைவாய்க் கைகூடுதலும், கைகூடு தற் பொருட்டுச் செய்யும் முயற்சி மற்றும் வழிவகை களால் திறன் வெளிப்படுதலுமாம்*** (அபி.சிந்.); figure of speech depicting fulfilment of desire.

*[இன்பம் + அணி.]*

**இன்பவுபதை** *inbavubadai,* பெ. (n.) ***இன்பஉத்தி*** பார்க்க; see *inbautti.*

**இன்பன்** *inbaṉ,* பெ. (n.) ***கணவன்;*** husband, as being dear to the wife. "பதுமத்தலர்மக டனக்கு மின்பன்" (திவ். பெரியதி.2,3,5).

*[இன்பு → இன்பன்.]*

**இன்பாயல்** *inpāyal,* பெ. (n.) ***இனிய படுக்கை;*** comfortable bed. "புரையோ ருண்கட் டுயிலின் பாயல்." (பதிற்றுப்.16:18).

*[இன் + பாயல்.]*

**இன்பி-த்தல்** *inbi-,* 11 செ.குன்றாவி. (v.t.) ***இன்ப மூட்டுதல்;*** to cause to be happy. "என்னையுருக்கி யின்பித்தவடி" (பாடு.திருவருட்) (செ.அக.).

*[இன்பு → இன்பி.]*

**இன்பு** *inbu,* பெ. (n.) ***இன்பம்*** பார்க்க; see *inbam.* "வளநக ரும்ப ரின்பொடு புரியவர்" (தேவா.553,8).

க., தெ. இன்பு.

*[இன் → இன்பு.]*

**இன்புளி** *inbuḷi,* பெ. (n.) ***நற்புளிப்பு;*** sour. (மலை.179); (சங்.இலக்.சொற்.).

*[இன் + புளி.]*

**இன்புளிப்பு** *inpuḷippu,* பெ. (n.) 1. ***தித்திப்பும் புளிப்புங் கலந்த சுவை;*** mixture of the sweet and the sour. 2. ***காடியுந் தேனுங்கலந்த குழம்பு;*** mixture or medicated syrup of vinegar and honey, used as an expectorant or demulcent-Oxymel. (சா.அக.).

*[இன் + புளிப்பு.]*

**இன்புளி வெஞ்சோறு** *inpuḷi vencōṟu,* பெ. (n.) ***இனிய புளிங்கறி யிடப்பட்ட வெவ்விய சோறு;***

tamarind rice. "ஈயல் பெய்தட்ட இன்புளி வெஞ்சோறு" (அகநா.394) (சங்.இலக்.சொற்.).

*[இன்புளி + வெஞ்சோறு.]*

**இன்புறல்** *inbu-ṟal,* பெ. (n.) ***மகிழ்ச்சி பொருந்தல்*** (ஆ.அக.); enjoyment.

*[இன்பு + உறல்.]*

**இன்புறவு** *inbuṟavu,* பெ. (n.) ***மகிழ்கை;*** gratification, pleasure. (திருக்கோ.219,அவ.) (செ.அக.).

*[இன்பு + உறவு.]*

**இன்புறாவேர்** *inbuṟāvēr,* பெ. (n.) ***சாயவேர்*** பார்க்க; see *śāyavēr.* (சா.அக.).

*[இன்பு → உறா + வேர்.]*

**இன்பை** *inbai,* பெ. (n.) ***துளசி;*** basil - ocimum sanctum. (சா.அக.).

*[இன்பு → இன்பை.]*

**இன்மணியாரம்** *in-maṇi-y-āram,* பெ. (n.) ***இறந்துபட் டதோ ரிசைநூல்*** (யாப்.வி.540); an ancient musical treatise. (செ.அக.).

*[இன் + மணி + ஆரம்.]*

**இன்மை** *inmai,* பெ. (n.) 1. ***இல்லாமை*** (திவ்.திரு வாய்.6,3,4); total negation of existence, dist.fr. அன்மை and opp. உண்மை. 2. ***வறுமை;*** poverty, destitution, adversity. "இன்மைதீர்த்தல் வன்மை யானே" (புறநா.3). 3. ***இன்மைவகை*** (வேதா.சூ.35); absolute negation, of four kinds, viz., முன்னின்மை, பின்னின்மை, ஒன்றினி லொன்றின்மை, என்றுமின்மை (செ.அக.).

*[இல் + இன் → இன்மை.]*

**இன்மை நவிற்சி யணி** *inmai naviṟci aṇi,* பெ. (n.) ***அணிவகையு ளொன்று. இது யாதேனு மொன் றின்மையால் உவமியத்துக்கு உயர்வேனுந் தாழ்வே னுந் தோன்றச் சொல்லுதல்;*** figure of speech. (ஆ.அக.).

*[இன்மை + நவிற்சி + அணி.]*

**இன்மை வழக்கு** *inmai vaḻakku,* பெ. (n.) ***இல்வழக்கு*** (மணி.30,194) பார்க்க; see *ilvaḻakku.* (செ.அக.).

*[இன்மை + வழக்கு.]*

**இன்றி** *inṟi,* கு.வி.எ. (adv.) ***இல்லாமல்;*** without. "தனக்கொரு பயனின்றி யிருக்க" (கலித்.96,30,உரை) (செ.அக.).

ம. இன்னி.

*[இல் - இன்றி.]*

**இன்றிய** *inṟiya,* கு.பெ.எ. (adj.) ***இல்லாத;*** that which is not, a word used as a negative affix. "தரித்தரலின்றிய விவற்றை" (பெருங்.மகத. 14,24) (செ.அக.).

*[இல் - இன்றி - இன்றிய.]*

**இன்றியமையாமை** *inṟi-y-amaiyāmai,* பெ. (n.) ***தானில்லாமல் முடியாமை;*** indispensableness, necessity, sinequa non. "இன்றியமையாச் சிறப்பின வாயினும்" (குறள்.961).

*[இன்றி + அமையாமை.]*

**இன்று**[1] *inṟu,* பெ. (n.) கு.வி.எ. (adv.) ***இந்நாள்;*** this day, to-day. "இன்று நம் ஆனுள் வருமேல் அவன் வாயில்" (சிலப்.17-20) (செ.அக.).

ம. இன்னு; க., படு. இந்து. தெ. இந்து, நேடு; கோத. இந்த்ய, துட. ஈத்; கு. இந்து; குட. இந்தி; து. இனி, இன்னெ; கொலா. இந்கெட், நெடீ; நா. இந்தர்; பர். இனெ; கூ. நேன்சு; குவி. நின்சு; கோண். நேண்ட்; குரு. இன்னா; மால். இனெ, அகினோ.

*[இஞ்ஞான்று → இஞன்று → இன்று.]*

**இன்று**[2] *inṟu,* இடை; (part.) ***ஓர் அசைச்சொல்*** (திவா.); expletive. (செ.அக.).

*[இன்று = இற்று. முடிந்தது எனப் பொருள்படுவதோர் இறந்த காலக் குறிப்பு வினைமுற்று. பழங்கால உலகவழக்கிலும் செய்யுள் வழக்கிலும் அசைநிலையாயிற்று.]*

**இன்று**[3] *inṟu,* கு.வி.எ (adv.) ***இன்றி;*** without. "உப்பின்று புற்கை யுண்கமா கொற்கை யோனே" (நன்.172, மயிலை).

*[இல் - இன்று இல்லை எனப் பொருள்படுவதோர் குறிப்பு வினைமுற்று இல்லாமல் எனப் பொருள் படுவதோர் குறிப்பு வினையெச்சம் ஆயிற்று.]*

**இன்று**[4] *inṟu,* கு.வி.மு. (imp.v.) ***இல்லை;*** no. "பருவந்து பாழ்படுத லின்று" (குறள்.83).

*[இல் + து - இல்து - இன்று.]*

**இன்றேல்** *inṟēl,* வி.எ. (adv.) ***இல்லாவிடில்;*** if not or else. "அஃதின்றேல் மன்னாவாம் மன்னர்க் கொளி" (குறள்.556).

*[இன்று → இன்றேல்.]*

**இன்றைக்கு** *inṟaikku,* கு.வி.எ. (adv.) ***இன்று;*** today "இன்றைக்கு இருப்பாரை நாளை இருப்பர் என்று எண்ணவோ திடமில்லை" (தாயுமானவர்) (செ.அக.).

*[இஞ்ஞான்று → இன்று + ஐ + கு.]*

**இன்ன** *inna,* கு.பெ.எ. (adj.) 1. ***இத்தன்மையான;*** such. 2. ***உவமவுருபு*** (நன்.367); like, a sign of comparison - பெ. (pron.) இப்படிப்பட்டவை; such things. "இன்னவாகிய பலவளனுண்டு" (கந்தபு.தவங்கண்.17) (செ.அக.).

ம. இன்ன; க., இந்து; தெ. இட்லு; கோத. இன, இன்னெ; துட. இனொவ்; குட. இன்னதெ, இந்தெ; து. இன்து; குரு. என்னெ; படு. இத்தெ.

*[இல் → இன் → இன்ன. இல் - இது எனப் பொருள்படும் அண்மைச்சுட்டு. கன்னடத்தில் இல்லி - இங்கேயென ஆளப்ப டுதல் நோக்குக.]*

**இன்னணம்** *innanam,* கு.வி.எ (adv.) ***இவ்வாறு;*** thus; in such state. ''ஈங்கிவ ளின்னண மாக'' (மணி.8,1) (செ.அக.).

*[இல் → இன் → இன்ன + அணம். இல் - இது. இன்ன - இந்த. வண்ணம் - வணம் - அணம்.]*

**இன்னதல்லதிதுவென மொழிதல்** *innatallatitu-v-ena-molidal,* பெ. (n.) ***32 வகை உத்திகளி லொன்று*** (நன்.14); making a definite statement about a thing where there is any room for doubt, that is only this and not the other, one of 32 utti, (செ.அக.).

*[இன்னது + அல்லது + இது + என + மொழிதல்.]*

**இன்னது** *innadu,* சு.பெ. (pron.) 1. ***இத்தன்மையு டையது;*** such as this. ''வளவயல் வைகலு மின்ன தென்ப'' (சீவக.64). 2. ***இது;*** this thing; what follows. ''இன்னது கேண்மென'' (கந்தபு.அசுரர்யாக.1) ''இன் னது இன்னுழி இன்னணம் இயலும்'' (நன்னூல்).

ம. இன்னது.

*[இன்ன + அது.]*

**இன்னம்** *innam,* கு.வி.எ. (adv.) ***இன்னும்*** பார்க்க; see *innum.* (செ.அக.).

*[இன்னும் → இன்னம்.]*

**இன்னமும்** *innamum,* கு.வி.எ. (adv.) ***இன்னும்*** (கம்பரா.திருவடி.59); yet. (செ.அக.).

ம. இன்னியும்.

*[இல் - இன் - இன்னும். இல் - இது. இன்ன = இதன். இன்னும் - இதனினும், மேலும்.]*

**இன்னயம்** *innayam,* பெ. (n.) ***முகமனுரை*** (உரி.நி.); word of courtesy, of welcome. (செ.அக.).

*[இல் → இன் (மென்மை, இனிமை) இன் + நயம்.]*

**இன்னர்** *innar,* பெ. (n.) ***விளைகேடு;*** portent, foreboding. ''இன்ன லின்னரொடு'' (பரிபா.4,19) (செ.அக.).

*[இல் → இல்லு → இன்னு → இன்னல் → இன்னர். இல்லுதல் = துளைத்தல், குத்துதல், துன்புறுத்துதல்.]*

**இன்னவை** *innavai,* பெ. (n.) ***கொடியவை;*** woe, outrage. ''ஈரத்துள் இன்னவை தோன்றின்.'' (கலித்.41-30) (பாண்டிச்.அக.).

*[இல் → இன் → இன்னவை.]*

**இன்னல்** *innal* பெ. (n.) ***துன்பம்;*** unpleasantness, trouble, pain, affliction. ''இன்னல் செயிராவணன்'' (கம்பரா.மந்தரை.39) (செ.அக.).

*[இல் - இல்லு - இன்னு - இன்னல். இல்லுதல் = குத்துதல், துளைத்தல், துன்புறுத்துதல்.]*

**இன்னலம்** *innalam,* பெ. (n.) ***நன்னலம்;*** welfare, good prosperity. (ஆ.அக.).

*[இல் → இன் + நலம் = இன்னலம்.]*

**இன்னவர்** *innavar,* பெ. (n.) ***இத்தகையவர்;*** the person indicated. (ஆ.அக.).

ம. இன்னவன்.

*[இன் → இன்னவர்.]*

**இன்னன்** *innan,* பெ. (n.) ***இன்னான்*** பார்க்க, see *innān.* (செ.அக.).

*[இல் → இன் → இன்ன + ஆன் = இன்னான் - இன்னன்.]*

**இன்னா**[1] *innā,* பெ. (n.) 1. ***தீங்குதருபவை*** (குறள்.32, அதி); those that cause misery. 2. ***துயரம்*** (திவா.); misery, distress. (செ.அக.).

*[இல் → இல்லு → இன்னு → இன்னல் - இன்னா.]*

**இன்னா**[2] *innā,* பெ. (n.) 1. ***துன்பம்;*** affliction. 2. ***இகழ்ச்சி;*** insult.

*[இன் → இன்னா.]*

**இன்னா**[3] *innā,* இடை. (int.) ***இதோ;*** behold, here. (Tinn.).

ம. இன்னா; க. இகொ, இதிகோ; தெ. இதிகொ, இகோ, இதோ; து. இந்தா; பட. இதா.

*[இல் → இன் → இன்னா (மு.தா.324).]*

**இன்னாங்கு** *innāṅgu,* பெ. (n.) 1. ***தீமை;*** evil, hurt, injury. ''இன்னாங்கு செய்வார்'' (நாலடி.355). 2. ***துன் பம்;*** pain, remorse, suffering. ''இன்னாங் கெழுந்திருப் பார்'' (நாலடி.11). 3. ***கடுஞ்சொல்;*** aspersion, insult; harsh, cruel words. ''ஒருவன் இன்னாங் குரைத்தான்'' (தொல்.சொல்.246,உரை) (செ.அக.).

ம. இன்னாங்கம்.

*[இல் → இன் + (ஆ) ஆங்கு.]*

**இன்னாங்கோசை** *innāṅg-ōsai,* பெ. (n.) ***கடுமை யான ஓசை*** (திவா.); discord, harsh sound, cacophony. (செ.அக.).

*[இன் → இன்னா → இன்னாங்கு + ஓசை.]*

**இன்னாச்சொல்** *innāccol,* பெ. (n.) ***இழிசொல்;*** insult. (ஆ.அக.).

*[இல் + இன் + ஆ + சொல்.]*

**இன்னாத** *innāda,* பெ. (n.) ***துன்பஞ்செய்வன;*** that which are evil or atrocious.

*[இன் + ஆ + த் + அ. (கு.வி.(அ)பெ).]*

**இன்னாதா-தல்** *innadā-,* 6 செ.கு.வி. (v.i.) ***துன்புறு தல்;*** to suffer pain, to be miserable. ''அவள்... இன்னா தாகிறாள்'' (ஈடு.1,4,7) (செ.அக.).

*[இல் → இன் + ஆ + து + ஆதல்.]*

**இன்னாதார்** *innādār,* பெ. (n.) 1. ***பகைவர்;*** adversaries, enemies. (ஆ.அக.). 2. ***தீயோர்;*** the wicked.

*[இல் → இன் + ஆ + த + ஆர்.]*

**இன்னாது** *innādu,* பெ. (n.) 1. ***தீது;*** evil. "பிறப்பின்னா தென்றுணரும்" (நாலடி.173). 2. ***துன்பு*** (ஈடு); pain. (செ.அக.).

*[இல் → இன் + ஆ + து.]*

**இன்னாநாற்பது** *innā-nāṟpadu,* பெ. (n.) ***பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுளொன்று; கபிலர் எழுதியது. 40 பாடல்கள் கொண்டது. ஒவ்வொரு பாடலும், இன்னாத கருத்துகள் நான்கினைக் கூறுவது;*** ancient didactic work by Kabilar consisting of 40 stanzas in each of which are mentioned certain outstanding causes of pain and suffering in general, one of patinen-kīl-k-kaṇakku (செ.அக.).

*[இல் → இன் + ஆ + நாற்பது.]*

**இன்னாப்பு** *innāppu,* பெ. (n.) ***துன்பம்;*** sorrow, pain "இன்னாப்பாலே சொல்லுகிறார்" (ஈடு.5,4,3) (செ.அக.).

*[இல் → இன் + ஆ + (ப்) + பு.]*

**இன்னா முகம்** *innāmugam,* பெ. (n.) ***மகிழ்ச்சியில்லாத முகம்*** (ஆ.அக.); sorrowful face.

*[இல் - இன் - ஆ + முகம்.]*

**இன்னாமை** *innāmai,* பெ. (n.) ***துன்பம்;*** pain, distress, misfortune. "இன்னாமை யின்பமெனக் கொளின்" (குறள்.630) (செ.அக.)

*[இல் - இன் + ஆ + மை.]*

**இன்னார்** *innār,* பெ. (n.) ***பகைவர்;*** enemies; persons not agreeable; unfriendly people "இனியார்போன் றின்னாராய்" (நாலடி.378) (செ.அக.).

ம. இன்னார்.

*[இல் - இன் + ஆ + ஆர்.]*

**இன்னாரினியார்** *innār-iniyār,* பெ. (n.) 1. ***பகைவரும் நண்பரும்;*** foes and friends. 'துறவிகட்கு இன்னா ரினியா ரென்பதில்லை'(உ.வ.). 2. ***இன்னா ரினையார்*** பார்க்க; see *innār-inaiyār* (செ.அக.).

*[இல் → இன் + ஆ + ஆர் + இனியார்.]*

**இன்னா ரினையார்** *innār-inaiyār,* பெ. (n.) ***இத்தன் மையுடையவர்;*** what sort of persons, such and such persons. "இன்னா ரினையாரென் றெண்ணுவா ரில்லை காண்" (திவ்.நாச்சி.75) (செ.அக.).

*[இல் → இன் + ஆர் + இனையார்.]*

**இன்னாலை** *innālai* பெ. (n.) ***இலைக்கள்ளி*** (மலை); five tubered spurse. (செ.அக.).

*[இல் → இன் + ஆலை. ஆலை = பாலுடையது (இல் → இன் = உட்புறம்).]*

**இன்னாவிச்சை** *innā-v-iccai,* பெ. (n.) ***செய்யுட் குற்றம் இருபத்தேழனு ளொன்று*** (யாப்.வி.525); one of the defects in the composition of verses. (செ.அக.).

*[இல் → இன் + ஆ + (வித்தை) விச்சை.]*

**இன்னாள்**[1] *innāḷ,* பெ. (n.) ***இன்ன ஆள்;*** such and such a person, so and so.

ம. இன்னாள்.

*[இன்ன + ஆள்.]*

**இன்னாள்**[2] *innāḷ,* கு.வி.எ. (adv.) 1. ***இந்நாள்*** பார்க்க; see *innāḷ.* 2. ***இன்றைய நாள், நடக்கும் நாள்; இன்று;*** (கொ.வ.); the day, on the day of occurance, today.

ம. இன்னாள்.

*[இன் + நாள் - இந்நாள். இதனை இன்னாள் என்பது தவறு.]*

**இன்னான்**[1] *innāṉ,* பெ. (n.) 1. ***இத்தன்மையான்;*** person of such a character. "இனத்தானா மின்னா னெனப்படுஞ் சொல்" (குறள்.453). 2. ***இன்னார்;*** so and so, such a person. "இன்னாரோலை இன்னார் காண்க" (சீவக.1041,201) (செ.அக.).

ம. இன்னான்.

*[இல் → இன் + ஆன்.]*

**இன்னான்**[2] *innāṉ,* பெ. (n.) ***துன்பஞ்செய்வோன்;*** tantaliser, tormentor, persecutor. "புணர்வினின்னான்" (ஐங்குறு.150) (செ.அக.).

*[இல் → இன் + ஆ + ஆன்.]*

**இன்னிக்கிலை** *innikkilai,* பெ. (n.) ***கம்மாறு வெற் றிலை;*** black betel. (சா.அக.).

*[இல் → இன் → இன்னிக்கு + இலை. இல் = கருமை.]*

**இன்னிசை** *iṉ-ṉ-iśai,* பெ. (n.) 1. ***இன்பந்தரும் இசை;*** melody, harmony. 2. ***பண்வகை*** (திவா.); melody type. 3. ***இன்னிசை வெண்பா*** (காரிகை.செய்யு.4) பார்க்க; see *inniśai veṇbā.* (செ.அக.).

ம. இந்நிச.

*[இல் → இன் + இசை.]*

**இன்னிசைக் கலிப்பா** *iṉ-ṉ-iśai-k-kalippa,* பெ. (n.) ***கலிப்பாவு ளொன்று;*** class of kalip-pā. (ஆ.அக.).

*[இல் → இன் + இசை + கலிப்பா.]*

**இன்னிசைகாரர்** *iṉ-ṉ-iśai-kārar,* பெ. (n.) ***பாணர்*** (திவா.); ancient caste of bards. (செ.அக.).

*[இல் → இன் + இசை + காரர்.]*

**இன்னிசைச் சிந்தியல்** *iṉ-ṉ-iśai-c-cindial,* பெ. (n.) ***வெண்பா வகையு ளொன்று;*** class of venba. இன்னிசை வெண்பாபோனடந்து மூன்றடியாக முடிவது.

*[இன்னிசை + சிந்தியல்.]*

**இன்னிசைமாலை** *inniśai-mālai,* பெ. (n.) ***அகப்பொ ருள் பற்றிய பெருநூல்*** (களவழி.24); treatise on akapporul. (செ.அக.).

*[இல் → இன் + இசை + மாலை.]*

**இன்னிசை வெண்பா** *in-n-isai-venbā,* பெ. (n.) ***நான்கடியாய்த் தனிச்சீரின்றிவரும் வெண்பா*** (காரிகை.செய்.4,உரை); venpā of four lines in which the second line has four feet instead of three feet plus the tani-c-cīr. (செ.அக.).

*[இல் → இன் + இசை + வெண்பா.]*

**இன்னிசை வெள்ளை** *in-n-isai-vellai,* பெ. (n.) ***இன்னிசை வெண்பா*** (பிங்.) பார்க்க; see *innisai venbā* (செ.அக.).

*[இல் → இன் + இசை + வெள்ளை.]*

**இன்னியம்** *in-n-iyam,* பெ. (n.) ***இசைக்கருவிகள்*** (பெருங்.வத்தவ 2,30); musical instruments (செ.அக.).

*[இல் → இன் + இயம்.]*

**இன்னியர்** *inn-iyar,* பெ. (n.) ***பாணர்*** (அகி.நி.); bards, singers. (செ.அக.).

*[இல் → இன் + இயர்.]*

**இன்னிலை** *innilai,* பெ. (n.) ***இல்வாழ்க்கை*** (குறள்.45, பரி.உரை); life of a householder, homelife. (செ.அக.).

*[இன் + நிலை. இதனை இல் + நிலை - இல்வாழ்க்கை பற்றிக் கூறுவதெனக் கொள்ளவியலாது. முப்பாலுடன் காட்டுலக வானப் பிரத்தம் ஒவ்வாதென்க.]*

**இன்னினி** *inn-ini,* கு.வி.எ (adv.) ***இப்பொழுதே;*** now, ever now, without a moments delay. "இன்னினியே செய்க வறவினை" (நாலடி.29) (செ.அக.).

*[இல் → இன் + இனி.]*

**இன்னீர்** *innīr,* பெ. (n.) ***இத்தன்மையீர்*** (you) of this nature or character "இன்னீ ராகலி னினியவு முளவோ" (புறநா.58-18).

*[இல் - இன் + நீர்.]*

**இன்னும்** *innum,* கு.வி.எ. (adv.) ***இவ்வளவு காலஞ் சென்றும்;*** still, yet. இன்னுந் தெரியவில்லை. 2. ***மறுபடியும்;*** again. இன்னும் வரும். 3. ***மேலும்;*** still more; more than this. இன்னும் வேண்டும். 4. ***அன்றியும்;*** also, more than that, in addition to, in a conjunctive sense. "இன்னு மிழத்துங் கவின்" (குறள்.1250) (செ.அக.).

ம. இன்னும்; க. இன்னும், இன்னு; குட. இஞ்ஞ ; து. நந; பட. இன்னு.

*[இல் → இன் + உம். இல் + இது. இன்னும் = இதன்மேலும்.]*

**இன்னுமின்னும்** *innum-innum,* கு.வி.எ. (adv.) ***மேன் மேலும்;*** more and more. "இன்னுமின்னுமெங் காம மிதுவே" (பரிபா.13,64) (செ.அக.).

*[இன்னும் + இன்னும்.]*

**இன்னுழி** *innuli,* கு.வி.எ (adv.) ***இன்னவிடத்து;*** in such a place "இன்னுழி யாகாது" (தொல்.பொருள்.186, உரை) (செ.அக.).

*[இல் → இன் + உழி.]*

**இன்னூகம்** *innūgam,* பெ. (n.) ***கப்பற்கடுக்காய்;*** large variety of foreign gall nut. (சா.அக.).

*[இல் → இன் + ஊகம்.]*

**இன்னே** *innē,* கு.வி.எ. (adv.) 1. ***இப்பொழுதே;*** now itself; at this moment. "உற்றதின்னே யிடையூ றெனக்கு" (சீவக.226). 2. ***இவ்விடத்தே;*** here, in this place. "இன்னே வாருங்கள்" (திருக்கோ.55). 3. ***இவ்விதமாக;*** thus, in this manner. "விதியார் செய்கை யின்னேயோ" (கந்தபு.மார்க்கண்.103) (செ.அக.).

*[இல் → இன் + ஏ.]*

**இன்னோசை** *innōsai,* பெ. (n.) ***இனிய ஓசை;*** melodious sound.

*[இல் → இன் + ஓசை.]*

**இனக்கட்டு** *ina-k-kattu,* பெ. (n.) 1. ***உறவின் நெருக்கம்;*** bond of union between relatives. 2. ***முறைமை*** (வின்.); due respect among the several branches of a family. (செ.அக.).

*[இனம் + கட்டு.]*

**இனங்கண்டு சேர்த்தல்** *inaṅkandu cērttal,* தொ.பெ. (vbl.n.) ***உறவான சரக்கைக் கலத்தல்;*** adding allied drugs in alchemy; finding which drug is suitable to add. (சா.அக.).

*[இனம் + கண்டு + சேர்த்தல்.]*

**இனங்காப்பார்** *inaṅ-kāppār,* பெ. (n.) ***கோவலர்;*** cowherds who protect cattle. (கலித்.143,37) (செ.அக.).

*[இனம் + காப்பார். இனம் = கால்நடையினம்.]*

**இனசாரிச்சரக்கு** *ina-cāriccarakku,* பெ. (n.) 1. ***ஓரினத்தைச் சேர்ந்த சரக்கு;*** drug falling under one group or class. 2. ***இனம்பிரித்த சரக்கு;*** sorted drug. (சா.அக.).

*[இனம் + சாரி + சரக்கு.]*

**இனத்தான்** *inattān,* பெ. (n.) 1. ***உறவினன்*** (செ.அக.); relative. 2. ***ஓரினத்தவன், தன் இனத்தைச் சார்ந்தவன்;*** person belonging to one's own community or caste.

ம. இனத்தான்.

*[இனம் + அத்து + ஆன்.]*

**இனம்**[1] *inam,* பெ. (n.) 1. ***'வகை, வகுப்பு*** (நன்.91); class, group, division, kind, species; sort. 2. ***குலம்;*** race, tribe. "விண்ணோர்க ளொருபடை தானும் நங்க ளினத்தை யுயிருண்ணாது" (கந்தபு.அக்கினிமு.203). 3. ***சுற்றம்*** (அக.நி.); comrades, associates, neighbours. 4. ***துணையாகச் சேரும் கூட்டம்;*** brotherhood, fellowship, society, company. "இனத்தானா மின்னா னெனப் படுஞ் சொல்" (குறள்.453). 5. ***நிரை;*** pack, herd. "கழுதைப் புல்லினம் பூட்டி" (புறநா.15). 6. ***ஒரு தொகுதியுட் சேர்த்து வழங்குதற்குரியது*** (நன்.358);

associated items. 7. *அமைச்சர்;* ministers in council. ''இனத்தாற்றி யெண்ணாத வேந்தன்''(குறள்.568). 8. *ஒப்பு;* equality. comparison. ''இனமேதுமிலானை'' (திவ்.திருவாய்.9,3,5). 9. *ஆள்;* individual.' பணத்தை நல்ல இனத்திற் கொடுத்திருக்கிறேன்' (இ.வ.) (செ.அக.).

ம. இனம்; க. என.

*[இல் = வீடு. இல் - (இலம்) - இனம் = வீட்டைச் சார்ந்தவர் உறவினர், உறவு.]*

**இனம்**[2] *inam,* பெ. (n.) ***தொடர்புடைய, உவமை;*** relatedness, simile, comparison. ''இன்னுனர் முழுநலம்'' (திவ். திருவாய்.111,2) (செ.அக.).

**இனம்பிரி-தல்** *inam-piri-,* 4 செ.கு.வி. (v.i.) ***துணைக் கூட்டத்தினின்று விலகுதல்;*** to be separated from the class or company. (செ.அக.).

*[இனம் + பிரிதல்.]*

**இனமாற்றல்** *inamāṟṟal,* பெ. (n.) ***ஓரினக்கணக்கைப் பிறிதோரினக் கணக்காய் மாற்றுகை;*** reduction from one denomination to another. (செ.அக.).

*[இனம் + மாற்றல்.]*

**இனமுறை** *ina-murai,* பெ. (n.) ***ஒத்த இனம்*** (C.G.); relationship of the same caste. (செ.அக.).

*[இனம் + முறை.]*

**இனமொழி** *ina-moli,* பெ. (n.) ***எண்வகை விடைகளு ளொன்று*** (நன்.386); நேரடியாக விடையளிக்காமல், ''பயருளவோ வணிகீர்?'' என்றார்க்கு ''உழுந்து அல்ல தில்லை'' எனக் கூறுவது; indirect answer related to the subject of the question, as, for example, when questioned "Have you green gram to sell," to answer "We have nothing but black gram" one of eight kinds of vidai, (செ.அக.).

*[இனம் + மொழி.]*

**இனமோனை** *ina-mōnai,* பெ. (n.) ***இனவெழுத்தால் வரும் வல்லின மெல்லின இடையின மோனைகள்*** (யா.கா.ஒழி.6); consonantal alliteration in which any letter of the group are repeated instead of, the usual, the same letter, of the three kinds, viz., வல்லின மோனை, மெல்லின மோனை, இடையின மோனை (செ.அக.).

*[இனம் + மோனை.]*

**இனவண்டு** *inavandu,* பெ. (n.) ***இனமான வண்டு கள்;*** same class of bees; ''யாழோர்த்தன்ன இன்குரல் இனவண்டு'' (நற்.176).

*[இனம் + வண்டு.]*

**இனவரி** *ina-vari* பெ. (n.) ***பழைய காசாய வரிவகை*** (S.I.I.i,89); ancient tax in cash (செ.அக.).

ம. இனவரி.

*[இனம் + வரி. ஆனினங்களுக்கு இடப்பட்ட வரியாகலாம்.]*

**இனவரிக்காசு** *ina-vari-k-kāsu,* பெ. (n.) ***பழையதொரு வரி*** (I.M.P.cg.1068); ancient village rate. (செ.அக.).

ம. இனவரி.

*[இனம் + வரி + காசு.]*

**இனவழி** *ina-vali,* பெ. (n.) 1. ***குடிவழி;*** descent from the same line or ancestry. 2. ***தலைமுறை*** (பரம்பரை) (வின்.); descent from the same breed, as of cattle. (செ.அக.).

*[இனம் + வழி.]*

**இனவழிக்கணக்கு** *ina-vali-k-kanakku,* பெ. (n.) ***பேரேடு;*** ledger. (செ.அக.).

*[இனம் + வழி + கணக்கு.]*

**இனவாரி** *ina-vāri,* கு.வி.எ. (adv.) ***இனம் இனமாய்;*** distributively, according to items of different classes. (செ.அக.).

*[இனம் + வாரி. வரை - வரி - வாரி = வரம்புக்குட்பட்டது. இஃது உருதுச்சொல்லன்று.]*

**இனவாளை** *ina-vālai,* பெ. (n.) ***வாளையின மீன்;*** a kind of fish. 'பூக்கதூஉ மினவாளை' (புறநா.18) (சங்.இலக்.சொற்.).

*[இனம் + வாளை.]*

**இனவெதுகை** *ina-v-edugai,* பெ. (n.) ***இனவெழுத் தால் வரும் வல்லின மெல்லின இடையின வெதுகை*** (யா.கா.ஒழிபு.6); rhyme in which the rhyming letters of the lines in a stanza are not the same, but are of the same class; this being of three kinds, viz., வல்லினம், மெல்லினம், இடையினம் (செ.அக.).

*[இனம் + எதுகை.]*

**இனவெழுத்து** *inaveluttu,* பெ. (n.) ***ஓரினவெழுத்து;*** letter of a main class as those related to each other.

*[இனம் + எழுத்து.]*

**இனவெழுத்துப்பாட்டு** *ina-v-eluttu-p-pāttu,* பெ. (n.) ***வல்லினம் முதலிய மூவினங்களுள் ஓரினத் தெழுத் துகளே வரப்பாடுஞ் சித்திரப் பாடல்வகை*** (கவி வகை) (யாப்.வி.503); a kind of cittira-kavi. (செ.அக.).

*[இனம் + எழுத்து + பாட்டு.]*

**இனன்**[1] *inan,* பெ. (n.) 1. ***உறவினன்;*** kinsman. ''இன்னா தினனில்'' (குறள்.1158). 2. ***ஒப்பானவன்;*** (திவ்.திருவாய்.1,1,2); equal. 3. ***ஆசிரியர்***(யாழ்.அக.); teacher. (செ.அக.).

ம. இனக்காரர்.

*[இனம் + அன்.]*

**இனன்**[2] *inan,* பெ. (n.) ***சூரியன்***(பிங்.); sun. (செ.அக.).

*[உல் - இல் - இன் - இனன்.]*

**இனாப்பி-த்தல்** *inappi*, 4 செ.கு.வி. (v.i.) ***துன்பமுண் டாக்குதல்;*** cause affliction, torment. "இனாப்பிச் செற்றிடு கூட்டில்" (திருப்பு.90).

**இனி**[1] *ini*, கு.வி.எ (adv.) 1. ***இப்பொழுது;*** now, immediately. "கேளினி" (மலைபடு.94) "இனிமேல்" (திவ்.இயற்.4,95); hereafter, henceforth. "இனிஅன்ன நின்னொடு சூழ்வார்" (குறள்.1294). 3. ***இப்பால்;*** from here onwards, used of place. "இனி நம்எல்லை வந்துவிட்டது" (செ.அக.).

ம. இனி; க. இன்னெ, இன்னு, இன்ன; கோத. இனி; குட. இக்க, இக்கனிஞ்சி; து. குத்தெ, குத்தெனெ; தெ. இக, இங்க, இந்த, இந்தட; நா. இன்டி; கோண். இன்கா, இத்ரா; பிரா. தாசா; ஆத். இன்ய.

*[இல் → இன் → இனி.]*

**இனி**[2]**-த்தல்** *ini-*, 4 செ.கு.வி. (v.i.) 1. ***தித்தித்தல்;*** to be sweet, to the taste "இனித்தமுடைய எடுத்த பொற்பாதம்" (அப்பர் தேவாரம்). 2. ***இன்பமாதல்;*** to be pleasant, attractive, fascinating. இனிக்கப் பேசினான் (செ.அக.).

ம. இனிக்குக; க. இன், இனி, இம்பு; து. இனி, இம்பு; தெ. இம்பு, இன்சு.

*[இல் → இனிமை, மென்மை. இல் → இன் → இனி. இனித்தல்.]*

**இனிச்ச பண்டம்** *inicca pandam*, பெ. (n.) ***தித்திப்புப் பொருள்*** (J); sweet eatable, confectionery. (செ.அக.).

*[இனி → இனித்த → இனிச்ச + பண்டம்.]*

**இனிதின் இனிது** *inidin inidu*, பெ. (n.) ***இனியவற் றினு மினிது;*** sweeter than most sweets. "இனிதினினிது தலைப்படுதும்" (நற்.134) (சங்.இலக்.சொற்.).

*[இனிதின் + இனிது.]*

**இனிது** *inidu*, பெ. (n.) 1. ***இன்பந்தருவது;*** that which is sweet, pleasing, agreeable. இனிதுறு கிளவியும் (தொல்.பொருள்.303). "அமிழ்தினும் ஆற்ற இனிதே" (குறள்.64). 2. ***நன்மையானது;*** that which is good. - கு.வி.எ. (adv.) ***நன்றாக;*** sweetly, favourably. "புலியூர்ப் புக்கினி தருளினன்" (திருவாச.2,145) (செ.அக.).

ம. இனிது; க. இனிது; தெ., து. இம்பு.

*[இல் → இன் → இனி+து - இனித்து - இனிது.]*

**இனிப்பி-த்தல்** *inippi-*, 4 செ.குன்றாவி. (v.t.) ***தித்திப் பாகச் செய்தல்;*** to sweeten. (சா.அக.).

*[இனிப்பு → இனிப்பி.]*

**இனிப்பிலந்தை** *inippilandai*, பெ. (n.) ***தித்திப் பிலந்தை;*** sweet. Indian apple. (சா.அக.).

*[இனிப்பு + இலந்தை.]*

**இனிப்பு** *inippu*, பெ. (n.) 1. ***தித்திப்பு;*** sweetness. "இனிப்பை நல்கு முக்கனி" (வைராக்.சத.45). 2. ***மகிழ்ச்சி;*** pleasure, delight. "இனிப்போடு நகையாடவே" (குமர.பிர.மதுரைக்.39) (செ.அக.).

ம. இனிப்பு; க. இனி, ஈன், இம்பு, இம்மு; து. இனி, இம்பு; தெ. இம்பு, இம்மு.

*[இல் → இன் → இனி → இனிப்பு.]*

**இனிப்புக்காட்டு-தல்** *inippu-k-kāttu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. ***ஆசைகாட்டுதல்;*** to give a gratifying foretaste. 2. ***இனிப்பாதல்*** (வின்.); to be sweet, delicious. (செ.அக.).

*[இனிப்பு + காட்டு.]*

**இனிப்புக் குழம்பு** *inippu-k-kulambu*, பெ. (n.) ***சருக்க ரையிட்ட பழக்குழம்பு;*** a conserve of fruits boiled with sugar and water, Jam. (சா.அக.).

*[இனிப்பு + குழம்பு.]*

**இனிப்புத்தட்டு-தல்** *inippu-t-tattu-*, 5 செ.கு.வி (v.i.) 1. ***ஆசையுண்டாதல்;*** to get relish for a thing. 2. ***சுவையுண்டாதல்;*** to be sweet to the taste. (செ.அக.).

*[இனிப்பு + தட்டுதல்.]*

**இனிப்பு நவ்வல்** *inippu navval*, பெ. (n.) ***தித்திப்பு நாவற்பழம்;*** sweet rose apple. (சா.அக.).

*[இனிப்பு + நாவல். நாவல் - நவ்வல்.]*

**இனிப்பு நாரத்தை** *inippu nārattai*, பெ. (n.) 1. ***சருக்கரை நாரத்தை;*** sweet lemon - circus medica lumia. 2. ***கொடி நாரத்தை;*** litron. (சா.அக.).

*[இனிப்பு + நாரத்தை.]*

**இனிப்புப் பிசி** *inippu-p-pisi* பெ. (n.) ***தித்திப்பான ஒருவகைப் பழம்;*** fruit.

*[இனிப்பு + பிசி.]*

**இனிப்பு மாதுளை** *inippu mādulai*, பெ. (n.) ***தித்திப்பு மாதுளை;*** sweet pomegranate as opposed to புளி மாதுளை (சா.அக.).

*[இனிப்பு + மாதுளை.]*

**இனிமேல்** *ini-mēl*, கு.வி.எ (adv.) 1. ***இதற்குப் பிற்பாடு*** (பு.வெ. 8,33,உரை); hereafter, at some future time. 2. ***இதுமுதல்;*** henceforth, from now onwards. (செ.அக.).

*[இன் → இனி + மேல்.]*

**இனிமை**[1] *ini-mai*, பெ. (n.) 1. ***தித்திப்பு*** (பிங்.); sweetness. 2. ***இன்பம்;*** pleasure, delight. "இனிமைகூர்ந்து" (திருவாலவா.1,18) (செ.அக.).

ம. இனிமை.

*[இன் → இனி → இனிமை.]*

**இனிமை**[2] *ini-mai* பெ. (n.) 1. ***மேன்மை;*** greatness. 2. ***அமிழ்து;*** ambrosia, nector. 3. ***இதளியம்;*** mercury. 4. ***சோறு;*** rice.

*[இன் → இனிமை.]*

**இனிய** *iniya,* கு.பெ.எ. (adj.) 1. ***இனிப்பான, மனத்துக்கு ஏற்றதான, அழகான;*** sweet, pleasant, agreeable. ''இனிய உளவாக இன்னாத கூறல்'' (குறள்.100). 2. ***நல்ல, சிறந்த;*** good, noble.

*[இன் → இனி → இனிய.]*

**இனிய உள்ளம்** *iniya ullam,* பெ. (n.) ***நல்ல நெஞ்சம்;*** mind. ''இனிய உள்ளம் இன்னா வாக'', (அகநா.98) (பாண்டிச்.அக.).

*[இன் → இனிய + உள்ளம்.]*

**இனிய சந்தம்** *iniya šandam,* பெ. (n.) ***நறுமணம்;*** perfume, scent; fragrant smell. (சா.அக.).

*[இன் → இனிய + சந்தம்.]*

**இனிய பிரிவு** *iniya-pirivu,* பெ. (n.) ***வைப்பாட்டி வீடு;*** concubine's house. ''சம்பிருதி யெல்லா மினிய பிரிவுக் களந்தாரென்றும்'' (சரவண.பணவிடு.182) (செ.அக.).

*[இன் → இனிய + பிரிவு.]*

**இனியர்** *iniyar,* பெ. (n.) 1. ***இனிமை தருபவர்;*** agreeable, loving person. ''நச்சுவார்க் கினியர் போலும்'' (தேவா.439,1). 2. ***மகளிர்;*** young ladies. ''இளையரு மினியரும்'' (பரிபா.6,27) (செ.அக.).

*[இன் → இனி + அர்.]*

**இனியவன்** *iniyavan,* பெ. (n.) 1. ***பிறரை மகிழ்விப்ப வன்;*** benign person. 2. ***இனிமையுடையவன்;*** one with lovable qualities. (ஆ.அக.).

*[இன் → இனி → இனிய + வன்.]*

**இனியவை** *iniyavai,* பெ. (n.) ***இனிய தன்மையுடை யவை*** (நான்மணி.78,1); desirable things.

*[இன் → இனி → இனியவை.]*

**இனியவை நாற்பது** *iniyavai-nārpadu,* பெ. (n.) ***பதினெண்கீழ்க் கணக்கு நூல்களுளொன்று; பூதஞ் சேந்தனார் பாடியது; 40 பாடல்கள் கொண்டது;*** ancient didactic work by pūdañ-cēndaṉār, consisting of 40 stanzas one of Patiṉeṇ-kīḻ-k-kaṇakku, q.v. (செ.அக.).

*[இன் → இனி → இனியவை + நாற்பது.]*

**இனியும்** *iniyum,* பெ. (n.) ***இனிமேலும்,. மீண்டும்;*** even after this, again.

ம. இனியும்.

*[இனி + உம்.]*

**இனுக்கா வலை** *inukkā-valai,* பெ. (n.) ***கடலில் வேலிபோற் கட்டி மீன்பிடிக்க உதவும் வலை;*** (இ.வ.); a kind of net, used in fishing at sea. (செ.அக.).

*[இல் → இன் → இனுக்கு → இனுக்கா(த) + வலை.]*

**இனை**[1] *inai,* கு.பெ.எ. (adj.) ***இன்ன;*** of this degree, used in respect of size or quantity. ''இனைத்துணைத்து'' (குறள்.87) (செ.அக.).

*[இல் → இன் → இனை.]*

**இனை**[2]**-தல்** *inai,* 2 செ.கு.வி. (v.i.) 1. ***வருந்துதல்;*** to be thrown into an agony of grief. ''இனைந்திரங்கிப் பள்ளி படுத்தார்களே'' (சீவக.292). 2. ***இரங்குதல்*** (திவா.); to lament, cry. 3. ***அஞ்சுதல்;*** to be afraid; ''என்னை வருவ தெனக் கென்றினையா'' (பரிபா.7,68) (செ.அக.).

*[இல் → இனை → இனைதல்.]*

**இனை**[3]**-த்தல்** *inai-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. ***வருத்துதல்*** (ஐங்குறு.237); to torment, worry. 2. ***கெடுத்தல்;*** to destroy, consume, ravage. ''வெவ்வெரி யினைப்ப'' (புறநா.23) (செ.அக.).

*[இள் → இளை → இனை. இனைத்தல்.]*

**இனைநலம்** *inai nalam,* பெ. (n.) ***இவ்வாறான நலம்;*** goodness of this sort, similar welfare; ''இனைநல முடைய கானஞ் சென்றோர்'' (கலித்.11-19).

*[இனை + நலம்.]*

**இனை நோக்கு** *inai-nōkku,* பெ. (n.) ***வருந்தும் நோக்கு;*** worried look. ''இனை நோக்குண் கண்நீர் நில்லாவே'' (கலித்.7-12).

*[இனை + நோக்கு.]*

**இனைபவள்** *inaibaval,* பெ. (n.) ***வருந்துபவள்;*** people who are worried. ''புலம்புகொண் டினைபவள்'' (கலித்.10-11).

**இனைபுகு நெஞ்சம்** *inaipugu neñjam* பெ. (n.) ***வருந்திக் கெடுகின்ற நெஞ்சம்;*** tormented mind; ''இனைபுகு நெஞ்சத்தால்'' (கலித்.35-1) (பாண்டிச். அக.).

*[இனை + புகு + நெஞ்சம்.]*

**இனைய** *inaiya,* கு.பெ.எ. (adj.) 1. ***இத்தன்மைய;*** of this nature. 2. ***இதுபோல்வன;*** of this appearance. (ஆ.அக.).

*[இல் → இன் → இனைய.]*

**இனையர்** *inaiyar* பெ. (n.) 1. ***இத்தன்மையர்;*** of this nature. 2. ***இவர்கள்;*** these people. ''இனையர் இவர் எமக்கு'' (குறள்.790) (ஆ.அக.).

*[இல் → இன் → இனை + அர்.]*

**இனையள்** *inaiyal,* பெ. (n.) ***இத்தன்மையள்;*** female person of a particular kind. (ஆ.அக.).

*[இன் → இனை + அள்.]*

**இனைவு** *inaivu,* பெ. (n.) 1. ***வருத்தம்;*** harrowing, sorrow, anguish, great pain of mind. (பாரத.கீசக.40). 2. ***இரக்கம்*** (சூடா); crying in distress. (செ.அக.).

*[இல் → இலை → இனை → இனைவு.]*

**இனைவி-த்தல்** *inaivittal,* பி.வி. (v.t.) ***வருந்துவித்தல்;*** to torment ''தன்நெஞ் சொருவற் கினைவித்தல்'' (கலித்.147-46) (பாண்டிச்.அக.).

*[இனை → இனைவி.]*

# ஈ

ஈ[1] *ī*, பெ. (n.) 1. ***தமிழ் மொழியின் நெடுங்கணக்கில் வரும் நான்காம் நெட்டுயிர்;*** symbol of the close front tense unrounded vowel in the Tamil language, being the fourth letter among the vowels of the Tamil alphabet, lengthened form of *i*. 2. ***அவ்வொலியைக் குறிக்கும் வரிவடிவு;*** written character representing that sound. இவ்வெழுத்தின் நெடில் வடிவமாகிய வளைகொம்பு குறில் மெய்களுடன் இணைக்கப்படுகிறது; secondary form of the letter is (i) "இ, ஈ, எ, ஏ, ஐ என இசைக்கும் அப்பால் ஐந்தும் அவற்றோ ரன்ன, அவைதாம் அண்பல் முதல்நா விளிம்புறல் உடைய" (தொல்.எழுத்.86).

ஈ[2] *ī*, பெ. (n.) ***அண்மைச் சுட்டெழுத்து;*** demons. letter or pronomical adj. pointing to what is near; this, these.

ம., க., தெ., து., பட. ஈ.

*[ஈ - இ என்பன அண்மை சுட்டிய ஒலிக்குறிப்பு. ஐந்திரவிட மொழிகளுள் ஒன்றாகக் கருதப்படும் மராத்தியில் ஈகார அண்மைச் சுட்டு இடப்பொருளில் புடை பெயர்ந்து ஏழன் உருபாயிற்று.]*

'ஈ' என்னும் நெடிலே இயற்கை அண்மைச் சுட்டு - அதன் குறுக்கமே 'இ'. நெடில் வடிவமாகிய 'ஈ' தெலுங்கு, கன்னடம், மலையாளம் முதலிய திரவிடமொழிகளில் வழங்கி வரினும், தமிழுலக வழக்கில் வழக்கற்றுப் போயிற்று. மலையாளம் பழஞ்சேர நாட்டு மொழியாதலால் அதில் வழங்கும் நெடிற் சுட்டு வழக்கைச் சேர நாட்டுத் தமிழ் அல்லது பழந்தமிழ் என்றுங் கொள்ளலாம்.

ஈ[3] *ī*, இடை. (int.) 1. ***வியப்புக் குறிப்பு;*** exclamation, expressive of wonder; யாருக்குந் தெரியாதபடி யிராநின் றதீ! (ஈடு.1, 3, 9). 2. ***வலி, துன்பம் முதலானவற்றைக் குறிக்கும் இடைச்சொல்;*** interjection of pain, sorrow, etc., 3. ***இகழ்ச்சிக் குறிப்பு;*** derisive expression. 'ஈ என்ன இது' (உ.வ.). 4. ***பேதைத்தனமாகப் பல்லிளித்தல்;*** baring teeth in sign of unrestrained stupidity. 'ஈ என்று இளிக்காதே'. 5. ***தனக்கு மேலுள்ளோர் மனம் கவர்தல் வேண்டி அவர் விருப்பத்திற்கிணங்க வலிந்து சிரித்தல்;*** showing teeth as a sign of amusement or to show affirmation to superiors.

ம., மரா. ஈ.

*[இ - ஈ. ஒலிக் குறிப்புகள். ஈ என்னும் இகழ்ச்சிக் குறிப்பு சீ என்றும் மருவியது.]*

ஈ[4] *ī*, இடை. (part.) 1. ***ஒரு முன்னிலையசை*** (நன்.440, உரை); poetic expletive in the 2nd pers. 2. ***ஒரு முன்னிலை வினை யீறு, வினைச்சொன்முன் வரும்;*** second person verb ending. "சென்றீ பெருமநிற் றகைக்குநர் யாரோ" (அகநா.46) "முன்னிலை முன்னர் ஈயும் ஏயும் அந்நிலை மரபின் மெய்யூர்ந்து வருமே" (தொல்.சொல்.451).

*[ஈ = ஒலிக்குறிப்பு ; முன்னிலையசை, அசைமொழி.]*

ஈ[5] *ī*, இடை. (int., part.) ***இசைவுக் குறிப்பு, இடைச்சொல்;*** particle indicative of affirmative sense. 'ஈ' என்று கேள் (கொங்கு.வ.).

*[உம் என்னும் ஒப்புதல் குறிப்பு இடைச்சொல், ஊம் - ஊ என்று ஈறு குறைந்ததுபோல ஈம் - ஈ எனத் திரிந்தது. உம் - இம் - ஈம் - ஈ. பல்லிளித்தல் வாய்திறத்தல் குறிப்பினதாகிய இகரஉயிர் நீட்டம் 'ஈ'.]*

ஈ[6] *ī*, பெ. (n.) ***இனிப்பு முதலானவற்றில் மொய்க்கும் தன்மையுடைய சிறகுகள் உள்ள சிறு பூச்சி;*** housefly. "ஈச்சிற கன்னதோர் தோலறினும்" (நாலடி.41). 2. ***தேனீ;*** honey bee. "ஈயின்றி யிருந்த தீந்தேன்" (சீவக. 712). 3. ***வண்டு*** (திவா.) beetle. 4. ***சிறகு*** (பிங்.); wing. 5. ***பூச்சி, உயிரி;*** insect.

**ம.** ஈ; **க.** ஈசல், ஈச்சல்; **கோத.** ஈப்; **துட.** ஈப்ய; **தெ.** ஈக்; **மரா.** ஈ; **கொலா.** நீங்க், நீங்க; **நா.** நீங்க; **கோண்.** கக்கி, பசீ; **கூ.** புகி, புக்கு; **குர்.** தீனி; **மால்.** தெனி; **பிராகு.** கீல், சீல்; பட. குன்னி (தேனீ).

*[ஈள் - ஈண் - ஈண்டு - மொய்த்தல், நெருங்குதல். ஈண் - ஈ=மொய்க்கும் உயிரினம்.]*

ஈ[7] *ī*, பெ. (n.) 1. ***அழிவு;*** destruction. "ஈபாவஞ் செய்து" (திருவாய். 2.2.2.). 2. ***அம்பு;*** arrow.

*[ஈ → ஈல், பிளத்தல், அழித்தல்.]*

ஈ[8] *ī*, பெ. (n.) ***துத்தவிசையின் எழுத்து*** (திவா.); symbol representing the second note of the gamut, usu. denoted by 'ரி'.

*[ஏழிசை நெடில்களுள் ஒன்று; இதன் பழைய வடிவம் ஈ.]*

ஈ[9] *ī*, பெ. (n.) 1. ***பாம்பு;*** snake. 2. ***அரைநாண்;*** waistcord. 3. ***குகை;*** cave. 4. ***தாமரை இதழ்;*** lotus leaves. 5. ***திருமகள்:*** Laksmi, Goddess of wealth. 6. ***கலைமகள்;*** Sarasvati, Goddess of learning. 7. ***மலைமகள்;*** Parvati, Goddess of valour.

*[ஈ = வளைவு, சுற்று, வட்டம்.]*

ஈ[1]**-தல்** *ī*, 2. செ.குன்றாவி. (v.t.) 1. ***ஈனுதல்;*** to give birth to. 2. ***கொடுத்தல்;*** to give. "ஈதல் இசைபட வாழ்தல்" (குறள்.23). 3. ***பகிர்ந்து கொடுத்தல்;*** to distribute, apportion. 4. ***இழிந்தோர்க்குக் கொடுத்தல்;*** to give to inferiors, give alms, bestow, grant. "ஈயென்கிளவி இழிந்தோன் கூற்றே" (தொல்.சொல்.445). 5. ***வீசுதல்;*** to give liberally, throw.

**தெ.** ஈ, இச்சு; **க.** ஈ, ஈயு; **கோண்.** சீயானா, சீ; **நா.** சீ; **பர்.** சீ; குவி. சீவ.

*[ஈல் - ஈன் - ஈ. ஈதல் = வெளிவருதல், வெளித்தள்ளுதல், கொடுத்தல், வீசுதல்.]*

**ஈ²-தல்** *ī-*, 2 செ.குன்றாவி. (v.t.). 1. ***வகுத்தல்;*** to divide (arith.) (w.), ஈய (கணக்கதி.). 2. ***படிப்பித்தல்;*** to arrange instruction. "ஈதலியல்பே யியம்புங் காலை" (நன்.36). 3. ***படைத்தல்;*** to create. "எவ்வுயிர்களு மீந்தான்" (கம்பரா.அகலி.49). 4. ***பரவுதல்;*** to spread.

*[ஈல் - ஈர் - ஈ = பிரித்தல், பிளத்தல், வகுத்தல், அமைத்தல், பரவல்.]*

**ஈ³-தல்** *ī-*, 6 செ.கு.வி. (v.i.) ***நேர்தல்*** (பரிபா.9,17); to agree, consent.

*[ஈ - ஈதல் = தருதல், மனமிசைதல், ஒத்துப்போதல்.]*

**ஈ⁴** *ī*, து.வி. (v.aux.). ***துணை வினை;*** an auxiliary verb. "தேறீயல் வேண்டும்" (கலித்.98,2.).

*[ஈ-பணிவொடு வேண்டிக்கோடற் குறிப்புவினை. நில்லீ, சென்றீ என்பனவற்றுள் துணைவினையாயிற்று.]*

**ஈக்கணம்** *īkkaṇam*, பெ. (n.) 1. ***தேனீத்தொகுதி, தேன்கூடு;*** bee-hive. 2. ***தேனீக்களைப் போன்ற பார்வை நுட்பம்;*** keen eye-sight as of the bees.

*[ஈ + கணம் = ஈக்கணம். ஈ = தேனீ. கணம் = தொகுதி, கூட்டம்.]*

**ஈக்கணி-த்தல்** *īkkaṇi-*, 4 செ.கு.வி. (v.i.) ***நல்லதைத் தேர்தல்;*** to distinguish the best.

*[ஈ + கணி - ஈக்கணி = தேனீக்கள் தேனுள்ள இடத்தைத் தேர்ந்தறிதல் போல நல்லனவற்றை நாடியறிதல், அறிவுநுட்பப் பணியாற்றுதல்.]*

**ஈக்கணிகை** *īkkaṇigai*, பெ. (n.) ***நற்குறி கூறுபவள்;*** conjuring woman.

*[ஈக்கணம் - ஈக்கணி - ஈக்கணிகை. ஈக்கணம் சிறப்பாகத் தேனீக்களின் கூட்டத்தைக் குறித்த சொல். தேன் உள்ள இடத்தைச் சரியாக நாடியறிதலின் ஈக்கணித்தல் நல்லது காணும் பார்வைத் திறமாயிற்று. நற்குறி கூறும் பெண்ணும் ஈக்கணிகை எனப்பட்டாள்.]*

**ஈக்கால்** *īkkāl*, பெ. (n.) ***வயிரக் குற்றவகை*** (கொ.வ.); flaw in a gem. esp. a diamond, so called from its resemblance to a fly's leg. (செ.அக.).

ம. ஈக்கால்.

*[வயிரத்தில் ஈக்கால் போன்ற (ஈ + கால்) பட்டைக் கீறல் குற்றம் ஆகலாம்.]*

**ஈக்காலாணி** *ī-k-kāl-āṇi*, பெ. (n.) ***சிற்றாணி*** (S.I.I.ii,213); rivet in an ornament, as small as a fly's leg.

*[ஈ + கால் + ஆணி. ஈக்கால் - சிறுமை குறித்த சொல்.]*

**ஈக்குடி** *ī-k-kuḍi*, பெ. (n.) ***சாவிக்கதிர்*** (இ.வ.); chaff left in the growing ears of paddy when insects have consumed the undeveloped grain.

*[ஈக்குடை - ஈக்குடி, ஈக்குடை = ஈ குடைந்ததால் உள்ளீடற்றுப் போன கதிர்.]*

**ஈக்கை** *īkkai*, பெ. (n.) 1. ***புலி தொடக்கி*** பார்க்க, (மூ.அ.); see *puli toḍakki*. 2. ***உப்பிலி*** (மலை.); species of stinking swallow wort. (செ.அக.).

**ஈக** *īga*, து.வி. (v.aux.) ***இக என்பதன் திரிபாய் வந்த ஒரு முன்னிலையசை;*** poetic expletive in second person. "என் போரியானை வந்தீக வீங்கு" (கலித்.86).

**ஈகம்¹** *īgam*, பெ. (n.) ***சந்தனமரம்*** (மலை.); sandal-wood tree.

*[ஈ - ஈகு = வீசுதல், பரவுதல், மணம் பரவுதல்.]*

**ஈகம்²** *īgam*, பெ. (n.) ***ஒப்புரவு*** (தியாகம்); sacrificing.

*[ஈ → ஈகு → ஈகம். எதனையும் சுணங்காது கொடையளிக்கும் மனப்பாங்கு.]*

**ஈகு-தல்** *īgu-*, 2 செ.கு.வி. (v.i.) 1. ***ஈ-தல்*** பார்க்க; see *ī-dal*. 2. ***கட்டியாதல்;*** to solidify. "திரட்டுப்பாலும் ஈகின நெய்யும் கட்டித் தயிரும்" (திவ்.பெரியாழ்.3,2,6, வியா. பக்.545).

*[ஈல் - ஈள் - ஈ - ஈகு.]*

**ஈகை¹** *īgai*, பெ. (n.) 1. ***கொடை;*** gift, grant. "வறியார்க்கொன் றீவதே யீகை" (குறள்.221). 2. ***பொன்;*** gold. "ஈகையங் கழற்கால்" (புறநா.99). 3. ***தொன்மக்கதையின்படி விரும்பியதை நல்குவதாகக் கருதப்பட்ட வானுலகக் கற்பக மரம்*** (அக.நி.); Kalpaga tree of heaven (Cuvarkkam) which according to Hindu myth, bestows everything that one desires.

*cf., E* yield; *A.S.* gildon, to pay; *Goth.* gildun; *Ger.* gelten; *Ice.* gjalda. see guild. *"E"* guild (orig.) an association in a town where payment was made... (A.S.gild, money, gildan, to pay, it is the same word as gold and gild) ch.E.D.

*[ஈ → ஈகை. (சு.வி.35) ஈ = கீழிடு, இடு. ஈல் → ஈகு → ஈகை.]*

**ஈகை²** *īgai*, பெ. (n.) 1. ***இண்டு*** (பிங்.); species of mimosa. 2. ***புலி தொடக்கி*** (மலை.) பார்க்க; see *puli toḍakki*.

*[ஈ - ஈங்கை - ஈகை.]*

**ஈகை³** *īgai*, பெ. (n.) ***காடை;*** quail. "ஈகைப்போர்" (கலித்.95,12).

*[ஈ → ஈகு → ஈகை = வீசுதல், பரவுதல், பறத்தல், பறவை.]*

**ஈகை⁴** *īgai*, பெ. (n.) 1. ***காற்று;*** wind. 2. ***மேகம்;*** cloud. 3. ***இல்லாமை*** (அக.நி.); want.

*[ஈ - ஈகு - ஈகை, வீசுதல், பரவுதல், கொடையளித்தல், வாரிக்கொடுத்தலால் வறுமையுறல்.]*

**ஈகையன்** *īgaiyaṉ*, பெ. (n.) ***கொடையாளன்;*** liberal, munificent person, philanthrophist. "இனிய சொல்லினன் ஈகையன்" (கம்பரா.மந்தரை.18).

*[ஈ - ஈகு - ஈகை - ஈகையன்.]*

**ஈகையாளன்** *īgai-y-āḷaṉ*, பெ. (n.) **ஈகையன்** (பிங்.) பார்க்க; see *īgaiyaṉ*.

*[ஈ - ஈகு - ஈகை. ஈகை + ஆளன்.]*

**ஈங்கண்** *īṅgaṇ*, பெ. (n.) **இவ்விடம்** (தொல்,எழுத்.114, உரை); this place.

*[ஈ = அண்மைச் சுட்டு. ஈ + கண் - ஈக்கண் - ஈங்கண்.]*

**ஈங்கரம்** *īṅgaram*, பெ. (n.) **குப்பைமேனி;** dung-hill plant, (சா.அக.).

*[இங்கு - இங்கரம் - ஈங்கரம்.]*

**ஈங்கன்** *īṅgaṉ*, கு.வி.எ. (adv.) **இவ்வாறு;** thus "ஈங்கனங் கனையிரு ளெல்லை நீந்தினான்" (சீவக. 1942).

**ஈங்கிசை** *īṅgišai*, பெ. (n.) 1. **கொலை** (வின்.); murder, killing. 2. **தொந்தரை;** affliction. "ஈங்கிசையுற்ற வலக்கு ணமட்டைகள்" (திருப்பு.263).

*[இமிசை - இங்கை - ஈங்கிசை (கொ.வ.).]*

**ஈங்கு**[1] *īṅgu*, கு.வி.எ. (adv.) 1. **இவ்விடம்;** here. "ஈங்கு நம்ஆனுள் வருமேல்" (சிலப்.17, பாட்டு.2). 2. **இப்படியே** (சீவக.1593); in this manner.

*[இங்கு - ஈங்கு.]*

**ஈங்கு**[2] *īṅgu*, பெ. (n.) 1. **ஈங்கை** (வின்.); species of a sensitive tree. 2. **புலி தொடக்கி** (மலை.).

*[இங்கு - ஈங்கு.]*

**ஈங்கு**[3] *īṅgu*, பெ. (n.) **சந்தனம்** (சங்.அக.); sandal-wood.

*[இங்கு - ஈங்கு.]*

**ஈங்கூகம்** *īṅgūgam* பெ. (n.) **குக்கில்;** false myrrh.

*[இங்கு + ஊகம்.]*

**ஈங்கூங்கு** *īṅgūṅgu*, பெ.எ. (adj.) **இங்கும் அங்கும்;** here and there.

*[ஈங்கு + ஊங்கு.]*

**ஈங்கை** *īṅgai*, பெ. (n.) 1. **இண்டஞ்செடி;** species of a sensitive-tree. "ஈங்கைப் பைம்புத லணியும்" (ஐங் குறு.456). 2. **உப்பிலி** (மூ.அ.) பார்க்க; see *uppili*.

**ஈங்கைத்துவக்கு** *īṅgai-t-tuvakku*, பெ. (n.) **ஒரு மரப்பட்டை** (தைல.தைலவ.அரும்பத.); the bark of a tree. (த.சொ.அக.).

*[ஈங்கை + துவக்கு.]*

**ஈச்சங் கசங்கு** *īccaṅ-kašaṅgu*, பெ. (n.) **ஈஞ்சினீர்க்கு;** switch of the date-palm, used in making country baskets.

*[ஈந்து - ஈத்து - ஈச்சு + அம் + கசங்கு.]*

**ஈச்சங்கள்** *īccaṅ-kaḷ* பெ. (n.) **ஈச்சமரத்தினின்றிறக் குங்கள்;** wild-date toddy. (சா.அக.).

*[ஈந்து + அம் + கள் = ஈந்தங்கள் - ஈத்தங்கள் - ஈச்சங்கள்.]*

**ஈச்சங்காடி** *īccaṅkāḍi*, பெ. (n.) **ஈச்சங்கள் பார்க்க;** see *īccaṅ-kaḷ*.

*[ஈச்சம் + காடி.]*

**ஈச்சங்குடை** *īccaṅkuḍai*, பெ. (n.) **ஈச்சம்புல் வேய்ந்த நிழற்குடை** (மதுரை.); umbrella made of date-palm leaves.

*[ஈச்சம் + குடை.]*

**ஈச்சம்பனை** *īccampaṉai*, பெ. (n.) **காட்டீந்து;** wild date-palm.

*[ஈந்தம் - ஈத்தம் - ஈச்சம் + பனை.]*

**ஈச்சம்பாய்** *īccam-pāy* பெ. (n.) **ஈந்திலை யாலாகிய பாய்;** mat made of the leaves of the date-palm.

*[ஈச்சம் + பாய்.]*

**ஈச்சமது** *īccamadu*, பெ. (n.) **ஈச்சங்கள்;** toddy from the date-palm.

*[ஈச்சம் + மது.]*

**ஈச்சவெல்லம்** *īccavellam*, பெ. (n.) **ஈச்சம்பாளையில் வடியும் சாற்றினின்று காய்ச்சியெடுக்கும் வெல்லம்;** jaggery prepared from the date-palm juice.

*[ஈச்சம் + வெல்லம்.]*

**ஈச்சாட்டி** *īccāṭṭi*, பெ. (n.) **இவறன், ஈயாதவன்;** avaricious person, miser.

ம. ஈச்சாட்டி.

**ஈச்சாடி** *īccāḍi*, பெ. (n.) 1. **அதிகமாகப் புழுங்கியபின் குற்றிய புழுங்கல் அரிசி;** rice husked after overboiling. 2. **நன்கு உலருமுன் குற்றிய புழுங்கலரிசி;** rice husked before it is dried adequately.

ம. ஈச்சாடி.

**ஈச்சில்** *īccil*, பெ. (n.) **இழிச்சில்** பார்க்க; see *iliccil*.

ம. ஈச்சில்.

**ஈச்சு** *īccu*, பெ. (n.) **ஈந்து** பார்க்க; see *īndu*.

*[ஈந்து - ஈத்து - ஈச்சு.]*

**ஈச்சுக்கொட்டு-தல்** *īccu-k-koṭṭu-*, 5 செ.கு.வி. (v.i.) **சீழ்க்கையடித்தல்** (வின்.); to whistle.

*[இச்சு - ஈச்சு + கொட்டு. இச் - இச்சு = ஒலிக்குறிப்பு.]*

**ஈச்சுரம்** *īccuram*, பெ. (n.) **தூய மெய்ம்மங்களுள் (சுத்த தத்துவங்களுள்) ஒன்று** (சிவப்.கட்.3); one of the five sutta-tattuvam.

*[ஈ - ஈச்சுரம். ஈ - ஈதல். வாய்மொழிந்தருளல், ஆசான் வழி அருளப்பட்ட மெய்ம்மொழி.]*

**ஈச்சுரமூலி** *īccura-mūli*, பெ. (n.) **பெருமருந்துக் கொடி** (பதார்த்த.256); Indian birth wort.

*[ஈச்சுரம் + மூலி.]*

**ஈச்சை** *īccai,* பெ. (n.) ***ஈந்து*** (கொ.வ.); date-palm.

*[ஈந்தை - ஈத்தை - ஈச்சை.]*

**ஈச்சோப்பி**[1] *īccōppi,* பெ. (n.) ***ஈயோட்டி*** (தேவா. 692,7); whisk for flies, fly-flapper.

*[ஈ + ஓப்பி - ஈயோப்பி - ஈச்சோப்பி.]*

**ஈச்சோப்பி**[2] *īccōppi,* பெ. (n.) ***சிலந்தி*** (யாழ்.அக.); spider.

*[ஈ + ஒப்பு. ஒப்பு - ஒப்பி.]*

**ஈசல்**[1] *īsal,* பெ. (n.) ***ஈயல்*** பார்க்க; see *īyal,* winged white ant. (செ.அக.).

*[ஈயல் = ஈக்களைப் போன்று மொய்க்கும் உயிரி வகை. ஈயல் → ஈசல்.]*



ஈசல்

**ஈசல்**[2] *īsal,* பெ. (n.) ***சீழ்க்கை;*** whistle; 'ஈசல் கொட்டுகிறான்' (இ.வ.) (செ.அக.).

*[இச் - ஈச் - ஈசல் = ஒலிக்குறிப்பு.]*

**ஈசலிறகு** *īsaliṟagu,* பெ. (n.) ***மெல்லியபொருள்;*** any substance as thin as a wing of a white ant.

*[ஈசல் + இறகு = ஈயலின் இறகுபோல் மெல்லியது.]*

**ஈசுக்கணுவெலும்பு** *īsukkaṇu-v-elumbu,* பெ. (n.) ***முழங்காலின் எலும்பு;*** the joint connecting the two principal parts of leg, knee, knee-cap. (சா.அக.).

*[ஈ - ஈசு (மெல்லிய) + கணு + எலும்பு.]*

**ஈசுரக் கோவை** *īsura-k-kōvai,* பெ. (n.) ***ஒருவகை மட்டையரிசி;*** a kind of brown rice.

*[ஈசல் - ஈசர - ஈசுர + கோவை.]*

**ஈசை** *īsai,* பெ. (n.) ***ஏர்க்கால்*** (வின்.); pole or shaft of a plough.

*[இத்தை → ஈத்தை → ஈதை → ஈசை.]*

**ஈஞ்சக்காடன்** *īñja-k-kāḍan,* பெ. (n.) ***மலைநெல் வகை;*** a variety of mountain paddy.

ம. ஈஞ்சக்காடன்.

*[ஈஞ்சல் + காடன்.]*

**ஈஞ்சல்** *īñjal,* பெ. (n.) ***மீன்சிறகு;*** fin of a fish.

ம. ஈஞ்சல்.

*[ஈல் = பிளத்தல், குத்துதல். ஈல் → ஈஞ்சு → ஈஞ்சல்.]*

**ஈஞ்சு** *īñju,* பெ. (n.) 1. ***பேரீஞ்சு;*** date-palm. 2. ***காட்டீஞ்சு;*** wild date-palm. 3. ***சிற்றீஞ்சு;*** dwarf wild date-palm.

*[ஈந்து - ஈத்து - ஈச்சு - ஈஞ்சு.]*

**ஈஞ்சை** *īñjai,* பெ. (n.) 1. ***கொலை;*** murder. 2. ***இகழ்ச்சி*** (நிந்தை); insult. (வின்.); disgrace, reproach. 3. ***தீங்கு;*** evil, harm.

*[ஒருகா. இழிஞ்சு → ஈஞ்சு = தாழ்வுபடுத்து, அல்லற்படுத்து. இழிஞ்சு → ஈஞ்சு → ஈஞ்சை.]*

**ஈட்டம்**[1] *īṭṭam,* பெ. (n.) ***பொருள் தேடுகை;*** acquiring, earning. ''ஈட்ட மிவறி யிசைவேண்டா வாடவர்'' (குறள். 1003).

*[ஈண்டு - ஈட்டு - ஈட்டம்.]*

**ஈட்டம்**[2] *īṭṭam,* பெ. (n.) 1. ***கூட்டம்;*** concourse, throng, congregation, group, assembly, etc. ''அடியா ரீட்டம்'' (தேவ.1100.11). 2. ***மிகுதி;*** store, treasure, abundance. ''புண்ணியத் தின்ப வீட்டம்'' (சி.சி.2,41). 3. ***செய்தல்;*** doing.

ம. ஈட்டம்.

*[ஈள் - ஈண்டு - ஈட்டு - ஈட்டம்.]*

**ஈட்டம்**[3] *īṭṭam,* பெ. (n.) 1. ***வலிமை;*** strength, force, vigour. ''ஈட்டமொ டொருகணை யேவி'' (கந்தபு.தாரக. 146). 2. ***நோயின் நீட்சி;*** height or crisis of a disease. (சா.அக.).

*[ஈள் = நெருங்குதல், வலிமை செறிதல். ஈள் - ஈடு - ஈட்டம்.]*

**ஈட்டல்** *īṭṭal,* பெ. (n.) ***வணிகர் எண் குணங்களு ளொன்று*** (பிங்.); amassing wealth, a desirable quality in merchants.

*[ஈண்டு - ஈட்டு - ஈட்டல்.]*

**ஈட்டி**[1] *īṭṭi,* பெ. (n.) 1. ***ஈட்டிமரம்;*** a kind of tree. 2. ***தோதகத்தி*** (L.); black wood.

ம. ஈட்டி; க. இம்படி, இட்டி; து. பீடி; தெ. இட்டிடி, இருகுடு, இருவுடு.

*[ஈட்டி = ஈட்டி செய்யப் பயன்பட்ட மரம். பதப்படுத்து முன் நீரிலிட்டால் அமிழும் தன்மையது. ஒரு கனஅடி மரம் 50-60 (பவுண்டு) கல்லெடையுள்ளது.]*

**ஈட்டி**[2] *īṭṭi,* பெ. (n.) ***குந்தம்*** (குத்தித் துளைக்கும் கருவி); lance, spear; pike.

ம., க. ஈட்டி; தெ. ஈடெ.

*[இல் - குத்தல் கருத்துவேர்; இல் - இள் - ஈட்டு (செலுத்து, குத்து) - ஈட்டி.]*

**ஈட்டிக்காரன்** *itti-k-kāraṉ*, பெ. (n.) 1. ***வட்டிக்குப் பணம் கொடுத்துத் தண்டுபவன்;*** pathan, money lender. 2. ***கொடுமைக்காரன்;*** usurer.

*[ஈட்டி + காரன்.]*

**ஈட்டித்தாங்கு** *iṭṭi-t-tāṅgu*, பெ. (n.) ***ஈட்டிப் பிடி*** (வின்.); shaft of a spear; hilt.

*[ஈட்டி + தாங்கு.]*

**ஈட்டிப் பிடங்கு** *iṭṭi-p-piḍaṅgu*, பெ. (n.) ***ஈட்டியின் முனையுள்ள பகுதி*** (வின்.); spear-head.

*[ஈட்டி + பிடங்கு.]*

**ஈட்டிமீன்** *iṭṭimīṉ*, பெ. (n.) ***மீன்வகை;*** a kind of fish.

ம. ஈட்டிமீன்.

**ஈட்டியது** *iṭṭiyadu*, வினையா.பெ. (vbl.n.) 1. ***தேட்டம்;*** acquisition, accumulation. (வின்.). 2. ***ஒருவன் இப்பிறப்பில் அல்லது முற்பிறப்பில் தேடிய வினை*** (சா.அக.); total quantity of karmic actions which one has acquired in this life or in his supposed previous birth.

*[ஈண்டு - ஈட்டு - ஈட்டி + அது.]*

**ஈட்டியெறி-தல்** *iṭṭi-y-eṟi-*, 2 செ.குன்றாவி. (v.t.) ***ஈட்டியால் குத்துதல், கொல்லுதல்;*** to throw spear, to thrust through and kill with spear.

*[ஈட்டி + எறி.]*

**ஈட்டியெழுபது** *iṭṭi-y-eḻubadu*, பெ. (n.) ***ஒட்டக்கூத்த ராற் பாடப்பெற்ற ஒரு நூல்;*** poem in 70 verses composed by Oṭṭa-k-kūttar having for its theme the spearmanship of the Ceṅkuntar clan. (செ.அக.).

*[ஈட்டி + எழுபது. குந்தம் எனப்படும் ஈட்டிப் படைக்கலன்களை ஆளும் திறன் பெற்ற செங்குந்தரைப் பாராட்டும் நோக்குடைய நூலாதலின் ஈட்டியெழுபது எனப் பெயர் பெற்றது.]*

**ஈட்டு[1]-தல்** *iṭṭu-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. ***கூட்டுதல்*** (பிங்.); to collect, amass, accumulate. 2. ***தடித்தல், பருத்தல், கொழுத்தல்;*** to become fat. 3. ***தேடுதல்;*** to earn, acquire, secure. "அறநோக்கா தீட்டிய வொண் பொருள்" (குறள்.1009) (செ.அக.).

ம. ஈட்டுக.

*[ஈண்டு - ஈட்டு. ஈட்டுதல்.]*

**ஈட்டு[2]** *iṭṭu*, பெ. (n.) ***கூட்டம்;*** flock, swarm, flight. "ஈட்டறாப் புள்ளினம்" (சீவக.95).

*[ஈண்டு - ஈட்டு.]*

**ஈட்டுக்கீடு** *iṭṭu-k-kīḍu*, பெ. (n.) ***சரிக்குச்சரி*** (வின்.); measure for measure. (செ.அக.).

*[ஈடு - ஈட்டு + கு + ஈடு.]*

**ஈட்டுமுறி** *iṭṭumuṟi*, பெ. (n.) ***அடைமான முறி;*** deed of hypothecation.

*[ஈட்டு + முறி.]*

**ஈடகம்** *iḍagam*, பெ. (n.) 1. ***மனத்தைக் கவர்வது;*** that which is charming, fascinating. "ஈடகமான நோக்கி" (தேவா.607,3) (செ.அக.). 2. ***புகழ்;*** fame.

*[ஈடு + அகம் = ஈடகம். இடு - ஈடு (செலுத்துதல்) + அகம் (மனம்).]*

**ஈடணத்திரயம்** *iḍaṇa-t-tirayam*, பெ. (n.) ***ஈடணமுப் பொருள்*** பார்க்க; see *iḍaṇa-mu-p-poruḷ.*

**ஈடணம்** *iḍaṇam*, பெ. (n.) 1. ***விருப்பம்;*** desire. 2. ***புகழ்*** (யாழ்.அக.); fame.

*[இடு - ஈடு + அணம் - ஈடணம் = விருப்பம், புகழ்.]*

**ஈடண முப்பொருள்** *iḍaṇa-mupporuḷ*, பெ. (n.) ***மூவகைப் பொருள்களின் விருப்பம்; அவையாவன மக்கள், மனைவி, பொன்;*** the three possessions which men commonly desire, the first for children, the second for wife, and the third for gold or riches (w.).

*[ஈடணம் + முப்பொருள்.]*

**ஈடணை** *iḍaṇai*, பெ. (n.) 1. ***ஆசை;*** attachment, wish, desire. மனைவி மக்க ளர்த்தவீ டணைகள் மூன்று (கைவல்ய.தத்துவ.13). 2. ***துன்பம்;*** distress, affliction. "என்னை வேறாக்கி யிந்த வீடணையில் விட்டதுவும் முன்னை வினை தானோ" (பதசாகித்தியம்). (செ.அக.).

Skt. īṣaṇā.

*[ஈடு = ஈடுபாடு, விருப்பம். ஈடு + அணை. அணை = சொல்லாக்க ஈறு. இச்சொல்லை வடமொழி 'ish' என்பதன் திரிபாகக் கூறுவது பொருந்தாது. இடு, இட்டம் என்பவை தூய தென்சொற்கள். இட்டம் வடமொழியில் iṣṭa எனத் திரிந்துள் ளது. iṣṭa என்பது வடமொழிச் சொல்லாயின் மேலையாரிய மொழிகளிலும் இச்சொல் அடிப்படைச் சொல்லாக வழங்கியி ருத்தல் வேண்டும். இட்டம் பார்க்க; see iṭṭam.]*

**ஈடத்து** *iḍattu*, வி.எ. (adv.) ***சிறிது*** (சங்.அக.); little.

*[இடு - இட்டு = சிறிது. இட்டு - இட்டித்து - இடத்து - ஈடத்து.]*

**ஈடம்[1]** *iḍam*, பெ. (n.) ***பிணை, பணயம்;*** bail, security.

ம. ஈடம்.

*[இடு - ஈடு - ஈடம்.]*

**ஈடம்[2]** *iḍam*, பெ. (n.) ***இடம்;*** place, location "நஞ்சுண்ட இருள்கண்டத்த ரீடமாவது" (தேவா.திரு.13).

*[இடம் - ஈடம். (உயிர் முதல் நீண்டது).]*

**ஈடழி-த்தல்** *iḍaḻi-*, 2 செ.குன்றாவி. (v.t.) ***வலிகெடுத் தல்;*** to quell one's power. "இராவணனை யீடழித்து" (தேவா.350,8) (செ.அக.).

*[இடு - ஈடு = அடித்தல், தாக்குதல் தாக்கியழித்தற்குரிய வலிமை. ஈடு + அழித்தல்.]*

**ஈடழி-தல்** *īḍali-,* 2 செ.கு.வி. (v.i.) ***வலிமை, பெருமைகள் கெடுதல்*** (திவ்.நாச்சி.8,3); to suffer, loss of power, of authority, of dignity or of wealth; to become poor. (செ.அக.).

*[ஈடு + அழி.]*

**ஈடழிவு** *īḍalivu,* பெ. (n.) 1. ***சீர்கேடு;*** disorder, derangement, irregularity. 2. ***நிலைகுலைவு*** (வின்.); misfortune. (ஆ.அக.).

*[ஈடு + அழிவு.]*

**ஈடறல்** *īḍaṟal,* பெ. (n.) ***வலி கெடுதல்;*** loss of power etc. ***ஈடழிவு*** பார்க்க; see *īḍalivu.* ''இந்தவெம் பகழிக் கெல்லாம் ஈடறான் இவனென்றெண்ணி'', (பாரத.நீரை மீட்சி.95) (த.சொ.அக.).

*[ஈடு + அறல்.]*

**ஈடறவு** *īḍaṟavu,* பெ. (n.) ***பெருமைக்கேடு*** (திவ்.இயற். பெரியதிரும.143); loss of diginity. etc. (செ.அக.).

ம. ஈடறவு.

*[ஈடு + அறவு.]*

**ஈடன்** *īḍaṉ,* பெ. (n.) 1. ***வலியோன்;*** influential man. 2. ***செல்வன்;*** wealthy man. 3. ***பெருமையுடையோன்;*** great person. (ஆ.அக.).

*[ஈடு + அன்.]*

**ஈடாக்கு-தல்** *īḍākku-,* 5 செ.குன்றாவி. (v.t.) ***வரிதண்டு தல், திரட்டுதல்;*** to collect tax, realise arrears.

ம. ஈடாக்குக.

*[ஈடு + ஆக்கு.]*

**ஈடாட்டம்** *īḍāṭṭam,* பெ. (n.) 1. ***போட்டி;*** competition. 2. ***செல்வரிடம் உள்ளதுபோன்ற பணப்புழக்கம்;*** money dealing; free use or employment of money, as by rich merchants. 3. ***நெகிழ்ச்சி;*** looseness, as of a dislodged nail. 4. ***ஏழ்மை நிலை;*** poorness, poverty, (செ.அக.).

*[ஈடு + ஆட்டம்.]*

**ஈடாடு-தல்** *īḍāḍu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. ***போட்டி போடுதல்*** (வின்.); to compete with another. 2. ***நெகிழ்ந்தசைதல்*** (யாழ்ப்.); to be shaky, loose, as a tooth, a nail, the spoke of a wheel. 3. ***தளர்தல்;*** to grow slack, become relaxed. 4. ***நேர் நிற்றல்;*** to stand face to face. 5. ***உழலல்*** (த.சொ.); to get involved in a monotonous work.

*[ஈடு = ஒப்பு, சமம். ஈடு + ஆடு = ஈடாடு. ஈடாடு = சமவலிமை யுள்ளவரோடு போட்டியிடுதல். ஆடுதல் = அசைத்தல், தளர்தல்.]*

**ஈடாதண்டம்** *īḍā-daṇḍam,* பெ. (n.) ***ஏர்க்கால்;*** thill or shaft of a vehicle. "நகைபெரும் ஈடாதண்டம்" (மச்சபு.சூரிய ரத.21).

*[ஈடு + ஆ(கு) + தண்டம்.]*

**ஈடி** *īḍi,* பெ. (n.) 1. ***மண்சுவர்;*** mud wall. 2. ***மண் சுற்றுமதில்;*** mud compound, boundary wall.

ம. ஈடி.

*[ஈடு → ஈடி. சம உயரத்துக்கு எழுப்பப்படும் சுவர்.]*

**ஈடிகை** *īḍigai,* பெ. (n.) ***எழுதுகோல்*** (யாழ்.அக.); painter's pencil, quill.

*[ஒருகா. : இழிகை - ஈழிகை - ஈடிகை.]*

**ஈடிடு-தல்** *īḍiḍu-,* 20 செ.கு.வி. (v.i.) ***முழங்கையாலும் முன்கையாலும் மோதிப் போரிடும் முட்டிப் போர்;*** to fight with fists and elbows.

ம. ஈடிடுக.

*[ஈடு + இடு. ஈடு = ஒப்பு. ஒப்பான முறையில் போரிடுதல். இதற்கு முட்டாமுட்டி என்றும் பெயர்.]*

**ஈடிதம்** *īḍidam,* பெ. (n.) ***முகமன் கூறுதல்;*** praising. (ஆ.அக.).

*[ஈடு = புகழ். ஈடு - ஈடிதம் = போற்றுதல், பரவுதல், தொழுதல்.]*

**ஈடிருப்பு** *īḍiruppu,* பெ. (n.) ***அடகுவைத்தல்;*** mortgaging, a pledge.

ம. ஈடிருப்பு.

*[ஈடு + இருப்பு.]*

**ஈடு**[1] *īḍu,* பெ. (n.) ***தாக்குதல், அடித்தல்;*** blow, stroke.

*[இல் - இள் - இடு - ஈடு. இல் = குத்துதல்.]*

**ஈடு**[2] *īḍu,* பெ. (n.) 1. ***இடுகை;*** applying, putting on. "ஈடமை பசும்பொற் சாந்தம்" (சீவக.1256). 2. ***பிறர்பால் ஒப்புவிக்கை*** (திருவாலவா.28,36); delivering, handing over. 3. ***மாற்று;*** substitute. 'அதற்கீடாகத் தந்தான்'. 4. ***மணமக்களின் அகவை, வளர்ச்சிப் பொருத்தம்;*** appropriateness, in respect of age and physical development, as between a would-be bridegroom and bride. அவளுக்கும் அவனுக்கும் ஈடு போதாது. 'இது ஈடான சோடி' (உ.வ.) 5. ***தகுதி;*** fitness, suitability. "ஆட்செய்யு மீடே" (திவ்.திரு. வாய்.1,6,2). 6. ***ஒப்பு;*** equality, comparison "ஈடு மெடுப்புமி லீசன்" (திவ்.திருவாய்.1,6,3). 7. ***அடைமானம்;*** pledge, security, mortgage. 8. ***பருமன்;*** bulkiness, bigness. "ஈடுசால் போரழித்து" (சீவக.59). 9. ***சுமை;*** heaviness. 10. ***எடை, கனம்;*** weight. 11. ***வலிமை;*** power, might, force. "ஒருகரி யீடழித் துரித்தனை" (தேவா.142, வரி,13). 12. ***நிலைமை;*** condition, state. "மலர்ந்த வீட்டினால்" (கம்பரா.இலங்கைகே.4). 13. ***மன வருத்தம்;*** unhappiness, pain of mind. "ஈடினா லிருந் தெண்ணி" (சீவக.1762). 14. ***உள்ளீடான பொருள்;*** content, subject as of a letter. "முடங்க லிமிர்த்தத வீடு நோக்கி" (கம்பரா.பள்ளி.6). 15. ***வழி;*** way, means. "அறியேன் சொல்லு மீடவர்க்கே" (திருக்கோ.111). 16. ***மெய்ம்மறை*** (கவசம்); coat of mail. "உடம்புக் கீடிடாதே" (ஈடு.7,5,9). 17. ***குழைவு*** (சூடா.); melting, becoming soft. 18. ***ஈடு முப்பத்தாறா***

*யிரம்* (உபதேசரத்.) பார்க்க; see īḍu muppat-tā ṟāyiram. name of a commentary on the Tiruvāymoḻi, by Vaḍakku-t-tiru-vīdi-p-piḷḷai. (செ.அக.).

ம. ஈடு; க. ஈடு.

*[இல் = குத்துதல், இருத்துதல், வைத்தல், பொருத்துதல். இல் - இள் - இடு - ஈடு.]*

**ஈடு**[3] *īḍu,* பெ. (n.) 1. ***ஏற்றபொருள்;*** fit or proper subject. "நின் சோதனைக்கு நான் ஈடா". (சர்வசமய. பக்.126). 2. ***முறை, தடவை;*** turn. 'இந்தத் தென்னை ஒரு ஈட்டுக்கு முப்பதுகாய் காய்க்கும்.' (உ.வ.).

*[ஈடு = பொருந்துதல், பொருந்தும் நிலை. முறை, தடவை. இடு - ஈடு.]*

**ஈடு**[4] *īḍu,* பெ. (n.) ***ஒரு அடைவு;*** set, collection. 'அவன் ஒரு ஈடு இட்டலி தின்பான்.' (தஞ்சை.வ.).

*[இடு → ஈடு. இடு = வைத்தல்.]*

**ஈடுகட்டு**[1]**-தல்** *īḍu-kaṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) ***பிணை கொடுத்தல்;*** to give as security.

*[ஈடு = ஒப்பு, சமம். ஈடு + கட்டு.]*

**ஈடுகட்டு**[2]**-தல்** *īḍu-kaṭṭu,* 15 செ.கு.வி. (v.i.) 1. ***துணி முதலான பொருள்கள் பல நாள் பயன்படுத்தப்பட்டும் வன்மை கெடாது இருத்தல்*** (இ.வ.); to be durable, as a piece of cloth for wear. 2. ***இழப்பீடு செய்தல்;*** to make amends, to make good; to indemnify. 3. ***பிணையாதல்;*** to be appropriate security. 4. ***பேரன்பு கொள்ளுதல்;*** to feel ardent devotion."ஈடு கட்டி வருவீரே லின்ப மிகப்பெறுவீர்" (அருட்பா.6,உறு திகூறல்,2,2).

*[ஈடு = ஒப்பு, சமம். ஈடு + கட்டு. ஈடு = வலிமை. ஈடு + கட்டு.]*

**ஈடுகொடு-த்தல்** *īḍu-koḍu-,* 4 செ.கு.வி. (v.i.) 1. ***இணையாதல்*** (வின்.); to be equal. 2. ***போட்டி போடுதல்*** (வின்.); to compete. 3. ***எதிர்ப்புக்குத் தளராது நிற்கை;*** to bear the brunt. 'வீடு பலமாக விருப்பதால் புயலுக்கு ஈடு கொடுக்கும்.' (இ.வ.). 4. ***பொந்திகை*** (திருப்தி) ***செய்தல்;*** to give satisfaction. (செ.அக.).

*[ஈடு = ஒப்பு, வலிமை. ஈடு + கொடு.]*

**ஈடுகொள்ளு-தல்** *īḍu-koḷḷu-,* 13 செ.கு.வி. (v.i.) ***மனங்கனிதல்;*** to soften; to melt, as the heart. "திருமுக மிறைஞ்சி யீடுகொண்டு" (திருவாலவா.55,20). (செ.அக.).

*[ஈடு + கொள்.]*

**ஈடுசெய்-தல்** *īḍu-cey-,* 1 செ.குன்றாவி. (v.t.) 1. ***மாற்றாகச் செய்தல்*** (இ.வ.); to compensate. 2. ***சரிக்கட்டுதல்;*** to adjust, balance. (செ.அக.).

*[ஈடு + செய்.]*

**ஈடுசெலுத்தல்** *īḍuśeluttal,* பெ. (n.) ***ஈடு செய்-தல்*** பார்க்க: see *īḍucey.*

*[ஈடு + செலுத்தல்.]*

**ஈடுசோடு** *īḍu-śōḍu,* பெ. (n.) ***இணை;*** pair, condition of being equal between two persons or things. "ஈடுசோடற்ற சிற்சத்தியாம்" (மசுதான்.92).

*[ஈடு = ஒப்பு, ஈடு + சுவடு. சுவடு - சோடு.]*

**ஈடுபடு-தல்** *īḍu-paḍu-,* 20 செ.கு.வி. (v.i.) 1. ***வலியழிதல்;*** to become weak, feeble. 2. ***அகப்படுதல்;*** to be ensnared, entangled. "விலங்க ரீடுபட்டதே" (பாரத.வாரணா.79). 3. ***மனங்கவிதல்;*** to be absorbed, engrossed, involved.'பகவத் குணங்களில் ஈடுபட்டவர்கள்.' 4. ***துன்பப்படுதல்;*** (சிவப்பிர.உண்மை.40. உரை); to suffer.

*[ஈடு = வலிமை, விருப்பம். படுதல் = அழிதல், குவிதல், உண்டாதல். ஈடு + படு.]*

**ஈடுபாடு** *īḍu-pāḍu,* பெ. (n.) 1. ***துன்பம்;*** trouble, suffering. "ஈடுபாடித்தனையும் பட்டு" (அரிச்.பு.மயான. 34). 2. ***மனங்கவிகை;*** state of being absorbed, en-grossed, involvement. 3. ***ஆதாயம் இழப்பு*** (இலாப நட்டம்) (வின்.); profit and loss. 4. ***ஈட்டுக்கமைந்திருத்தல்*** (த.சொ.அக.); remaining as security. 5. ***சார வைத்தல்*** (தாயு.ஆகாரபுவந.2.உரை); making one dependent. (செ.அக.).

*[ஈடு + (படு) - பாடு.]*

**ஈடுமாடு** *īḍumāḍu,* பெ. (n.) 1. ***எல்லை, வரம்பு;*** limit. 2. ***சுற்றுச் சுவர்;*** compound wall, boundary.

ம. ஈடுமாடு.

*[ஈடு + மாடு. 'மாடு' எதுகை மரபிணைமொழி.]*

**ஈடுமுட்டு** *īḍumuṭṭu,* பெ. (n.) ***தடை;*** resistance, obstruction.

ம. ஈடுமுட்டு.

*[ஈடு + முட்டு.]*

**ஈடுமுப்பத்தாறாயிரம்** *īḍu-muppattā ṟāyiram,* பெ. (n.) ***திருவாய்மொழி விரிவுரைகளு ளொன்று*** (உபதேசரத்.44); exhaustive commentary on the Tiruvāy-moḻi, written by Vaḍakku-t-tiru-vīti-p-piḷḷai following the discourse of his guru Nam-Piḷḷai, consisting of 36,000 granthas of 32 syllables each. (செ.அக.).

*[ஈடு + முப்பது + அத்து + ஆறு + ஆயிரம்.]*

**ஈடுமேடு** *īḍu-mēḍu,* பெ. (n.) ***மேடும் பள்ளமும், குண்டும் குழியும்;*** ups and down, undulations. (செ.அக.).

ம. ஈடுமேடு.

*[ஈடு + மேடு.]*

**ஈடேற்றம்** *īḍēṟṟam,* பெ. (n.) 1. ***உய்வு;*** deliverance. 2. ***விடுதலை;*** liberation, emancipation. 3. ***பாதுகாப்பு*** (வின்.); protection. 4. ***மீட்பு*** (த.சொ.அக.); redemption. 5. ***பேரின்ப வாழ்வு;*** bliss.

ம. ஈடேற்றம்; க. ஈடேரிக; தெ. ஈடேறுட.

*[ஈடு = விருப்பம்; ஏற்றம் = நிறைவுறுதல். ஈடு + ஏற்றம்.]*

**ஈடேற்றல்** *īḍēṟṟal,* தொ.பெ. (vbl.n.) ***ஈடேறச் செய்தல்;*** act of redeeming, liberating. (த.சொ.அக.).

*[ஈடு + ஏற்றல்.]*

**ஈடேற்று-தல்** *īḍēṟu-,* 6 செ.குன்றாவி. (v.t.) ***உய்வித்தல்;*** to deliver, redeem, liberate, emancipate.

*[ஈடு + ஏற்று.]*

**ஈடேறு-தல்** *īḍēṟu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. ***முடிவுறுதல்;*** to be completed. 2. ***உய்வடைதல்;*** to be liberated from a worldly life, saved from ruin, rescued from danger, difficulty or disease. "தொண்டர் குழா மீடேற" (குற்றா.தல. கடவுள்,13). 3. ***வாழ்வடைதல்;*** to become prosperous. "என்னை நீ யீடேற்றத் திருவுளத் தருள் செய்குக" (பாரத.நச்சு.5). 4. ***மனநிறைவடைதல்;*** to be pleased.

ம. ஈடேறுக.

*[ஈடு = விருப்பம். ஈடு + ஏறு.]*

**ஈடை** *īḍai,* பெ. (n.) 1. ***ஈசை*** (வின்.) பார்க்க; see *īšai.* 2. ***புகழ்ச்சி;*** fame, praise.

*[ஈடு - ஈடை.]*

**ஈண்டல்** *īṇḍal,* தொ.பெ. (vbl.n.) ***ஈண்டு-தல்*** பார்க்க: see *īṇḍu.*

*[ஈண்டு → ஈண்டல். 'அல்' = பெயரீறு.]*

**ஈண்டி** *īṇḍi,* பெ. (n.) ***மண்சுவர்;*** mud wall.

ம. ஈண்டி.

*[இண்டு - ஈண்டி.]*

**ஈண்டு**[1] *īṇḍu,* கு.வி.எ. (adv.) 1. ***இவ்விடத்தில்*** (திவா.); here, in this place. 2. ***இம்மையில்;*** in this world, in the present birth. "ஈண்டறம் பூண்டார்" (குறள்.23). 3. ***இவ்வாறு*** (சூடா.); in this way. 4. ***இப்பொழுது;*** now. "ஈண்டேகிக் கொணர்வேன்" (கம்பரா.திருவவ.57) (செ.அக.).

*[ஈ - ஈண்டு.]*

**ஈண்டு**[2]**-தல்** *īṇḍu-,* 15 செ.கு.வி. (v.i.) 1. ***கூடுதல்;*** to gather, come together. "ஈண்டிய வடியவ ரோடும்" (திருவாச.2,144). 2. ***செறிதல்;*** to be close together, to get to be a compact mass, as the atoms of matter/element. "இமிழ்கடல் வளைஇய வீண்டகன் கிடக்கை" (புறநா.19). 3. ***மிகுதல்;*** to abound, to be numerous. "இயைந் தொருங் கீண்டி" (சிலப்.6.145). 4. ***விரைந்து செல்லுதல்;*** to speed, make haste. "இடுக் கண் களைதற் கீண்டெனப் போக்கி" (சிலப்.13,101) - 5 செ.குன்றாவி (v.t.). ***தோண்டுதல்;*** to gouge, extract, pluck out, dig out. "மலர்க்கண்ணை யீண்ட.... ஆழி யீந்தார்" (தேவா.192.5).

க. இடி.

*[இல் = குத்துதல். நெருக்குதல், செறியச் செய்தல். இல் → இள் → இண்டு → ஈண்டு.]*

**ஈண்டு**[3]**-தல்,** *īṇḍu-,* 15 செ.கு.வி. (v.i.) 1. ***வருதல்;*** to come. 2. ***செல்லுதல்;*** to go.

சிந். ஈண்டு.

*[இல் - இள் - இண்டு - ஈண்டு.]*

**ஈண்டு**[3] *īṇḍu,* பெ. (n.) ***விரைவு*** (திவா.); haste, speed, despatch.

*[ஈண்டு = செறிவு, விரைவு.]*

**ஈண்டு**[4] *īṇḍu,* பெ. (n.) ***புலி தொடக்கி*** (மலை.); tiger stopper. (செ.அக.).

*[இண்டு - ஈண்டு.]*

**ஈண்டுநீர்** *īṇḍu-nīr,* பெ. (n.) ***கடல்;*** sea, literally a large collection of water. "ஈண்டுநீர் மிசைத் தோன்றி" (கலித்.100).

*[ஈண்டு + நீர்; ஈண்டுதல் = பெருகுதல், மிகுதல்.]*

**ஈண்டென** *īṇḍeṉa,* கு.வி.எ. (adv.) ***விரைவாக;*** expeditiously, promptly, speedily. "நீயே ஈண்டெனத் தந்தருள வேண்டுமென்கிறார்". (திவ்.திருவாய்.2,9,2, ஆறா) (செ.அக.).

*[ஈண்டு = செறிவு. விரைவு. ஈண்டு + என = ஈண்டென.]*

**ஈண்டை** *īṇḍai,* கு.வி.எ. (adv.). ***இங்கு;*** here, in this world. "ஈண்டை வலையகத்துச் செம்மாப்பார்" (நாலடி. 331). (செ.அக.).

*[இங்கு - ஈங்கு - ஈண்டு - ஈண்டை.]*

**ஈண்டையார்** *īṇḍaiyār,* பெ. (n.) ***ஈண்டையான்*** பார்க்க: see *īṇḍaiyāṉ*

*[ஈண்டை + ஆர்.]*

**ஈண்டையான்** *īṇḍaiyāṉ,* பெ. (n.) ***இவ்விடத்தான்;*** man of this place, locality etc. "ஈண்டையாரல்லர்" (கம்பரா. தைல.75).

*[ஈண்டு - ஈண்டை + ஆன்.]*

**ஈணி** *īṇi,* பெ. (n.) ***பனை நார்;*** palm-fibre (வின்.) (த.சொ.அக.).

*[ஈல் - ஈள் - ஈளி - ஈணி = பிரிக்கப்பட்ட நார்.]*

**ஈணு-தல்** *īṇu-,* 16 செ.குன்றாவி. (v.t.) 1. ***ஒடித்தல்;*** to break. 2. ***முன்னும் பின்னுமாக வளைத்தல்.*** to bend backward and forward, to snap.

ம. ஈணுக.

**ஈணை** *īṇai,* பெ. (n.) 1. ***அகணி;*** inferior, as of the fibrous part of the bark of a tree. 2. ***பனைநார்;*** palm-fibre. (த.சொ.அக.).

*[ஈல் - ஈள் - ஈணி - ஈணை - ஈணை.]*

**ஈத்தா** *īttā,* பெ. (n.) ***எச்சில், உமிழ்நீர்;*** saliva, spittle.

ம. ஈத்தா.

*[இழி - இழித்து - ஈத்து (கொ.வ.).]*

ஈக்கள் வகைகள்:



வீட்டு ஈ



இறைச்சி ஈ



கண் ஈ



கள் ஈ

**ஈத்து**[1] *ittu,* பெ. (n.) 1. ***வண்டியச்சு;*** axle of a cart. 2. ***ஏர்த்தடி;*** thill.

ம. ஈத்து.

*[உல் - உத்து - இத்து - ஈத்து.]*

**ஈத்து**[2] *ittu,* பெ. (n.) 1. ***பயப்பு, பிள்ளைப்பேறு;*** delivery. "ஒரு ஈத்தில் மூன்று பிள்ளை பெற்றாள்" (இ.வ.). 2. ***விலங்கு குட்டிபோடுதல்;*** yeaning of animals. 'இந்தக் கன்று எங்கள் மாட்டுக்கு நாலாம் ஈத்து.' (உ.வ.). 3. ***நிலைத்திணைகளின் கதிர் புடைவிடுதல்;*** sprouting of corn etc. from plants or crop. 'அவரை மறு ஈத்து விட்டிருக்கிறது.' (இ.வ.).

*[ஈன் → ஈத்து.]*

**ஈதா** *idā,* இடை (int.). ***இந்தா;*** exclamation inviting attention; Lo, see here. "அறிந்திலே னீதா" (பரிபா. 8,60). (செ.அக.).

*[இது - இதா (இதோ) - இந்தா = இங்கு. இந்தா - ஈதா. ஈதா = இங்கே பார்.]*

**ஈதி** *idi,* பெ. (n.) 1. ***நாட்டுக்குவருங் கேடு*** (குறள்.732, உரை); disaster which may befall the land, scourge in six forms, viz. storm, drought, rodent, locust proximity of royalty. 2. ***துன்பம், தொல்லை, நச்சரவு;*** affliction. "ஈதி இடைஞ்சலிலே இடி விழுந்த கானலிலே" (நாட்டுப்பா.).

ம. ஈதி.

*[இதை - ஈதை - ஈதி.]*

**ஈதிபாதை** *idipādai,* பெ. (n.) 1. ***ஈதி*** பார்க்க: see *idi.* pestilence. 2. ***இக்கட்டான நிலை;*** perplexity, quandary, dilemma.

*[இதை - ஈதை - ஈதி + பாதை.]*

**ஈது** *idu,* சு.பெ. (demon.pron.) ***இது;*** this. "ஈதேயென் றோழி" (திருவாச.7,1) (செ.அக.).

*[இது - ஈது.]*

**ஈதை** *idai,* பெ. (n.) ***துன்பம்;*** calamity, affliction. "ஈதைகள் தீர்க்கும் நாமத் திராமனை" (கம்பரா.நாகபா. 275) (செ.அக.).

*[இதை - ஈதை.]*

**ஈந்து**[1] *indu,* பெ. (n.) 1. ***பேரீச்சைமரம்;*** date-palm. "ஈந்தின் முற்றிய பெரு நறவு" (கல்லா.24). 2. ***சிற்றீந்து;*** dwarf wild date-palm. (வ.மொ.வ.90).

வ. ஹிந்தால; ம. ஈந்த; தெ. ஈந்த.

*[ஈர் (நுண்மை) - ஈர்ந்து - ஈந்து. கிளையில்லா மரங்கட்குள் மிகச் சிறிய ஓலையுள்ளது, அல்லது ஏறுவாரை அறுக்கும் அடியினது. ஈர் = நுண்மை. "ஈரயிர் மருங்கின்" (சிலப்.6.146).]*

**ஈந்து**[2] *indu,* பெ. (n.) ***நஞ்சு*** (சங்.அக.); poison.

*[ஈர் - ஈர்ந்து - ஈந்து. பிளக்கச் செய்வது; சாகச் செய்வது.]*

**ஈப்பி** *ippi,* பெ. (n.) ***பேன்முட்டை*** (யாழ்.அக.); nit.

***ஈர்ப்பி*** பார்க்க; see *irppi*

*[ஈர்ப்பி - ஈப்பி.]*

**ஈப்பிணி** *ippini,* பெ. (n.) ***கருமி, இவறன், ஈயாமாறி*** (யாழ்ப்.); miser.

***ஈப்பிலி*** பார்க்க; see *ippili.*

*[ஈ - ஈப்பு + இலி - ஈப்பிலி - ஈப்பினி - ஈப்பிணி. (கொ.வ.).]*

**ஈப்பிலி** *ippili,* பெ. (n.) ***ஈயாதவன்;*** miser.

*[ஈ - ஈப்பு (ஈகை) + இலி.]*

**ஈப்புகு-தல்** *i-p-pugu-,* 21 செ.கு.வி. (v.i.) ***காதில் ஈ நுழைதல்;*** entry of fly (into the ear).(சா.அக.).

*[ஈ + புகு.]*

**ஈப்புலி** *ippuli,* பெ. (n.) 1. ***ஒருவகைச் சிறு சிலந்திப் பூச்சி;*** species of small spider which devours flies. "ஈப்புலியோ டெலிப்புலியாய் வடிவங் கொண்டு" (தனிப்பா.1,86,169). 2. ***நாய்ப்புலி விளையாட்டு;*** native game similar to the game of fox and geese. (செ.அக.).

*[ஈ + புலி. ஈயைத்தின்னும் சிலந்திப்பூச்சி. ஈயைக் கொல்லும் புலியாக உருவகம் கொண்டது.]*



ஈப்புலி

**ஈம்** *im,* பெ. (n.) ***சுடுகாடு;*** place for the cremation of the dead, burning-ground. "ஈமுங் கம்மும்" (தொல். எழுத்.328).

*[ஈ - ஈம். ஈ = இளைதல் (வருந்தல்). துயரம் மிகுவிக்கும் இடம். குறிப்புக்கிளவி. ஒ.நோ.: பே - பேம்., தீ - தீம்.]*

**ஈமக்கடன்** *ima-k-kadan,* பெ. (n.) ***இறந்தோர்க்குச் செய்யும் சடங்கு;*** funeral rites. "ஈமக்கடனிறுவிப் போதென்றேவி" (திருவிளை.பழியஞ்.30).

***ஈம்*** பார்க்க; see *im.*

*[ஈ - ஈம் + அம் + கடன்.]*

**ஈமக்காடு** *imakkādu,* பெ. (n.) ***இறந்தவுடலை எரிக்குமிடம்; புதைக்குமிடம்;*** place where dead bodies are

cremated, burial ground.

ஈம் பார்க்க; see *īm*.

*[ஈ - ஈம் + அம் + காடு.]*

**ஈமக்கொடி** *īma-k-koḍi,* பெ. (n.) ***இண்டங்கொடி*** பார்க்க; see *iṇḍaṅkoḍi.*

*[ஈம் + அ + கொடி.]*

**ஈமத்தாடி** *īmattāḍi,* பெ. (n.) ***சுடலையில் ஆடும் சிவன்*** (திவா.); Siva, dancing on the burning-ground. (செ.அக.).

*[ஈமம் + அத்து + ஆடி.]*

**ஈமத்தாழி** *īmattāḻi,* பெ. (n.) ***முதுமக்கள்தாழி*** (புறநா. 256); burial urn for the dead in ancient times. (செ.அக.).

ம. ஈமத்தாழி.

*[ஈமம் + தாழி.]*

**ஈமந்தன்** *īmandaṉ,* பெ. (n.) ***மேலுதடு;*** upper lip. (சா.அக.).

*[உம் - இம் - ஈம் - ஈமந்தன்.]*

**ஈமப்பந்தர்** *īma-p-pandar,* பெ. (n.) ***சுடுகாட்டுப் பந்தர்;*** pavilion in burning ground. "ஈமப்பந்தரும் யாங்கணும் பரந்து" (மணிமே.6.63).

*[ஈமம் + பந்தர். பந்தல் - பந்தர்.]*

**ஈமப்பறவை** *īma-p-paṟavai,* பெ. (n.) ***இடுகாட்டில் அல்லது சுடுகாட்டி லிருக்கும் காகம், கழுகு முதலியன;*** crow, vulture, etc., found in the burial or cremation ground; birds of prey living on dead bodies.

*[ஈமம் + பறவை.]*

**ஈமப்புறங்காடு** *īma-p-puṟaṅgāḍu,* பெ. (n.) ***சுடுகாடு;*** burial ground. "ஈமப் புறங்கா டடங்கி தனயல" (மணிமே.6-38).

*[ஈமம் + புறம் + காடு. ஊர்ப்புறத்தே இருக்கும் காடாதலின் புறங்காடு எனப்பட்டது.]*

**ஈமம்**[1] *īmam,* பெ. (n.) 1. ***சுடுகாடு;*** burning ground. "ஈமஞ்சேர் மாலைபோல" (சீவக.210). 2. ***பிணஞ்சுடு தற்கு அடுக்கும் விறகடுக்கு;*** funeral pyre. "ஈமவொள் ளழற் குறுகினுங் குறுகுக" (புறநா.231).

ம. ஈமம்.

*[ஈ - ஈம் + அம். ஈம் பார்க்க; see īm.]*

**ஈமம்**[2] *īmam,* பெ. (n.) ***பாதிரி*** (மலை.); trumpet-flower.

*[ஈம் - ஈமம். இருளில் ஈமத்துத் தீயைப் போலச் சிவந்தொளிரும் பூக்களுடைய மரம்.]*

**ஈமவனம்** *īma-vaṉam,* பெ. (n.) ***சுடுகாடு;*** burning-ground. "ஈமவனத் தெரியாட் டுகந்த வெம்பெருமான்" (தேவா.84,7).

*[ஈமம் + வனம்.]*

**ஈமவாரி** *īma-vāri,* பெ. (n.) ***வசம்பு*** (மலை.); sweet-flag. (செ.அக.).

*[ஈமம் + வாரி.]*

**ஈமவிதி** *īma-vidi,* பெ. (n.) ***இறந்தோர்க்குச் செய்யுஞ் சடங்கு;*** funeral rites. "அரசை யீமவிதி செய்ய" (பாரத.சம்பவ.105) (செ.அக.).

*[ஈமம் + விதி.]*

**ஈமவிளக்கு** *īma-viḷakku,* பெ. (n.) ***பிணஞ்சுடும் விறகின் அழல்;*** funeral fire. "ஈமவிளக்கிற் பேஎய் மகளிரொடு" (புறநா.356-3).

*[ஈமம் + விளக்கு.]*

**ஈமவிறகு** *īma-viṟagu,* பெ. (n.) ***சிதை;*** funeral pile, pyre (w.). (ஆ.அக.).

*[ஈமம் + விறகு.]*

**ஈமன்** *īmaṉ,* பெ. (n.) ***சிவன்;*** Lord Siva. (ஆ.அக.).

*[ஈமம் - ஈமன்.]*

**ஈமவொள்ளழல்** *īmavoḷḷaḻal,* பெ. (n.) ***பிணஞ்சுடும் தீ;*** funeral fire. "கரிபுற விறகினீம வொள்ளழல்" (புறநா.231).

*[ஈமம் + ஒள் + அழல்.]*

**ஈமுக்கடுமை** *īmu-k-kaḍumai,* பெ. (n.) ***ஈமக்கடுமை;*** heat of a burning place. (ஆ.அக.).

*[உரும் - ஊம் - ஈம். ஈம் - ஈமு + கடுமை.]*

**ஈமோதல்** *īmōdal,* பெ. (n.) ***சிலந்தி, புண் முதலியவற்றில் ஈமொய்த்து முட்டை வைத்தல்;*** depositing of eggs by the fly on exposed wound or ulcer.

*[ஈ + மோதல்.]*

**ஈய** *īya,* கு.வி.எ. (adv.). ***வகுக்க*** (கணக்.); to divide.

*[ஈ - ஈய. ஈதல் = பிரித்தல், தருதல், வகுத்தல்.]*

**ஈயக்கந்தகம்** *īya-k-kandagam,* பெ. (n.) ***ஈயக் கலப்புள்ள கந்தகம்;*** sulphur mixed with lead ore. (சா.அக.).

*[ஈயம் + கந்தகம்.]*

**ஈயக்கல்** *īya-k-kal,* பெ. (n.) 1. ***கல்வங்கம்;*** lead-stone. 2. ***கல்லீயம்;*** pewter. (சா.அக.).

*[ஈயம் + கல்.]*

**ஈயக்களங்கு** *īya-k-kaḷaṅgu,* பெ. (n.) ***வங்கவெட்டை;*** (in alchemy) stage at which lead crumbles to powder by over-heating (natural or artificial). (சா.அக.).

*[ஈயம் + களங்கு.]*

**ஈயக்களிம்பு** *īya-k-kaḷimbu,* பெ. (n.) ***ஈயத்தைக் கொண்டு செய்யும் பசை;*** lead carbonate - Aerugo Plumbi.

*[ஈயம் + களிம்பு.]*

**ஈயக்கற்கண்டு** *īya-k-kaṟkaṇḍu,* பெ. (n.) ***வங்கச் சுண்ணம்*** (M.M.); sugar of lead, plumbi acetas. (செ.அக.).

*[ஈயம் + கற்கண்டு.]*

**ஈயக்காடி** *īya-k-kāḍi,* பெ. (n.) ***ஈயஞ்சேர்ந்த காடி;*** vinegar of lead. (சா.அக.).

*[ஈயம் + காடி.]*

**ஈயக்காரிகை** *īya-k-kārigai,* பெ. (n.) ***சுளுக்கு மருந்து;*** a kind of herb used in sprain. (சா.அக.).

*[ஈயம் + காரிகை.]*

**ஈயக்கிட்டம்** *īya-k-kiṭṭam,* பெ. (n.) 1. ***ஈயமுருக்கி யெடுத்த கிட்டம்;*** refuse of melted lead. 2. ***ஈயத்துரு*** (வின்.); lead rust. (சா.அக.).

*[ஈயம் + கிட்டம்.]*

**ஈயக்கேணி** *īya-k-kēṇi,* பெ. (n.) ***ஈயமெடுக்கும் சுரங்கம்;*** lead mine.

*[ஈயம் + கேணி.]*

**ஈயக்கொடி** *īya-k-koḍi,* பெ. (n.) ***இண்டங்கொடி;*** tiger-stopper. (சா.அக.).

*[ஈயம் + கொடி.]*

**ஈயங்கட்டி** *īyaṅgaṭṭi,* பெ. (n.) ***இரும்பிலி இலை;*** leaves of irumbili plant. (சா.அக.).

***இரும்பிலி*** பார்க்க: see *irumbili.*

*[ஈயம் + கட்டி.]*

**ஈயங்கொல்லி** *īyaṅgolli,* பெ. (n.) ***கரியபோளம்;*** black myrrh.

*[ஈயம் + கொல்லி.]*

**ஈயச்சத்துநீர்** *īya-c-cattu-nīr,* பெ. (n.) ***நிலத்திற் புதைந்து கிடக்கும் ஈயத்தின் வழியாகச் சூடேறி, வெந்நீராக மாறுந் தண்ணீர்;*** natural fountain of hot water issuing from the soil containing lead tin. (சா.அக.).

*[ஈயம் + சத்து + நீர்.]*

**ஈயச் சிமிழ்** *īya-c-cimiḻ,* பெ. (n.) ***மருந்தைப் பதனப் படுத்துவதற்காகப் பயன்படுத்தும் ஈயத்தாற் செய்த சிமிழ்;*** small round box made of lead for preserving medicines. (சா.அக.).

*[ஈயம் + சிமிழ்.]*

**ஈயச்சிவப்பு** *īya-c-civappu,* பெ. (n.) 1. ***சிவப்பு ஈயம்;*** red-lead. 2. ***ஈயச் செவ்வச்சிரம்;*** lead tetroxide. ($Pb_3O_4$). 3. ***ஈயச் செந்தூரம்;*** calcined red oxide of lead.

*[ஈயம் + சிவப்பு.]*

**ஈயச்சுண்ணம்** *īya-c-cuṇṇam,* பெ. (n.) ***ஈயத்தினின் றெடுக்கு மோர் மருந்து;*** preparation from lead, carbonate of lead.

*[ஈயம் + சுண்ணம்.]*

**ஈயச்செடி** *īya-c-ceḍi,* பெ. (n.) ***இண்டு*** (மூ.அ.); tiger - stopper

*[ஈயம் + செடி.]*

**ஈயச்செந்தூரம்** *īya-c-cendūram,* பெ. (n.) 1. ***ஈயச்சிந் தூரம்*** பார்க்க: see *īya-c-cindūram.* 2. ***ஈயச் சிவப்பு;*** red-lead. (சா.அக.).

*[சிந்தூரம் - செந்தூரம். ஈயம் + செந்தூரம்.]*

**ஈயசோலி** *īya-śōli,* பெ. (n.) ***வேலிப்பருத்தி;*** hedge cotton - Damoa extensa.

*[ஈயம் + சோலி.]*

**ஈயடிச்சான் காப்பி** *īyaḍiccāṉ kāppi,* பெ. (n.) ***ஈயடிச்சான் படி*** பார்க்க; see *īyḍiccāṉ-paḍi.*

*[ஈ + அடிச்சான் + காப்பி. E-copy > த. காப்பி. அடித்தான் - அடிச்சான்.]*

**ஈயடிச்சான் படி** *īyaḍiccāṉ-paḍi,* பெ. (n.) ***மூலத்திலுள் ளவாறு எழுதும் படி;*** exact reproduction, copy, including mistakes and all, even extending to ridiculous length, as the fixing of a dead fly on the page of the copy similar to the one found on the original page.

*[ஈ + அடித்தான் + படி.]*

**ஈயத்தகடு** *īya-t-tagaḍu,* பெ. (n.) ***ஈயத்தை இலை யைப்போல் மெல்லியதாகத் தட்டிய தகடு;*** leaf or thin plate of lead foil. (சா.அக.).

*[ஈயம் + தகடு.]*

**ஈயத்தண்டிலை** *īya-t-taṇḍilai,* பெ. (n.) ***இண்டிலை;*** leaf of the plant indu.

*[ஈயம் + தண்டு + இலை.]*

**ஈயத்தண்டு** *īya-t-taṇḍu* பெ. (n.) ***இண்டு*** (மூ.அ.); tiger - stopper.

*[ஈயம் + தண்டு.]*

**ஈயத்தின் குற்றம்போக்கி** *īya-t-tiṉ-kuṟṟam-pōkki,* பெ. (n.) ***பாற் சோற்றி;*** medicinal creeper - Euphorbia hypericifolia. It is so called by virtue of its characteristic of removing lead poisioning from the system. (சா.அக.).

*[ஈயம் + அத்து + இன் + குற்றம் + போக்கி.]*

**ஈயத்தை நாசமாக்கி** *īyattai nāśamākki,* பெ. (n.) ***கொடிக்கள்ளி;*** squat flowered creeping milk hedge-sarcos-temma brevistingma. It is so called from its destructive action on lead. (சா.அக.)

**ஈயநஞ்சு** *īyanañju,* பெ. (n.) ***ஈயத்தினா லுடம்பி லேற்பட்ட நஞ்சு;*** lead poison - Plumbism.

*[ஈயம் + நஞ்சு.]*

**ஈயப்பற்று** - *īya-p-paṟṟu,* பெ. (n.) ***வங்கப்பற்று;*** solder used for metal. (சா.அக.).

ம. ஈயப்பற்று.

*[ஈயம் + பற்று.]*

**ஈயப் பாளம்** *īya-p-pālam,* பெ. (n.) ***ஈயமூலக்கனி;*** oblong mass of unforged lead, as when first extracted from the ore-pig lead. (சா.அக.).

*[ஈயம் + பாளம்.]*

**ஈயப்பூச்சு** *īya-p-pūccu,* பெ. (n.) ***ஏனங்களுக்கு ஈயப்பூச்சிடுதல்;*** to coat vessals with lead lorication. (சா.அக.)

**ஈயப்பொடி** *īya-p-podi* பெ. (n.) ***ஈயத்தை முறைப்படி மூலிகைகளைக் கொண்டு தூய்மை செய்த வங்க பற்பம்;*** powdered lead. (சா.அக.).

*[ஈயம் + பொடி.]*

**ஈயபற்பம்** *īya parpam,* பெ. (n.) ***ஈயப்பொடி*** பார்க்க; see *īya-p-podi.*

**ஈயபற்பி** *īyaparpi,* பெ. (n.) ***ஈயத்தைப் பற்பமாக்கும் மூலிகை அதாவது வறட்சுண்டி;*** drug used for calcining lead, viz. - a species of sensitive plant - Mimosa tripuetra.

*[ஈயம் + பற்பி.]*

**ஈயம்**[1] *īyam,* பெ. (n.) 1. ***வெள்ளீயம்*** (திவா.) பார்க்க: see *vellīyam.* white-lead. 2. ***காரீயம்:*** black-lead. 3. ***கல்லீயம்;*** a hard kind of lead.

*Skt.* sīsa; *Sinh.* īya; *MHG.* lot; *O.E.* lead; *MLG.* lōd.

*[ஈயம் = வெண்மை. வெண்ணிற மாழை. எல் = வெள்ளை. எல் - இல் - ஈள் - ஈயம். இள் - இய - ஈ - ஈயம். (வ.மொ.வ.90).]*

**ஈயம்**[2] - *īyam,* பெ. (n.). 1. ***பாதிரி*** (மூ.அ.) பார்க்க: see *pādiri.* 2. ***மிருதார சிங்கி*** (மூ.அ.); prepared arsenic.

*[ஈயம் = வெண்மை. வெண்ணிறப்பூ பூப்பதனால் பாதிரி ஈயம் எனப்பட்டது.]*

**ஈயம்பூசு-தல்** *īyam pūsu-,* 5 செ.கு.வி. (v.i.) ***ஏனங்களுக்கு ஈயப்பூச்சிடுதல்;*** to coat utencils with lead. (செ.அக.).

*[ஈயம் + பூசுதல்.]*

**ஈயமஞ்சள்** *īyamañjal,* பெ. (n.) ***ஈயங்கலந்த ஒருவகை மஞ்சள்தூள்;*** lemon-yellow powder called chrome yellow, lead chromate. (சா.அக.).

*[ஈய + மஞ்சள்.]*

**ஈயமணல்** *īyamaṇal,* பெ. (n.) 1. ***ஈயப்பொடி;*** granular particles of lead. 2. ***ஈயஞ் சேர்ந்துள்ள மண் முதலிய கசடு;*** lead mixed with earth or other matter; lead ore. (செ.அக.).

*[ஈயம் + மணல்.]*

**ஈயமரம்** *īyamaram,* பெ. (n.) ***பாதிரிமரம்;*** tree with trumpet like flowers - Bignonia chelonocides.

*[ஈயம் + மரம்.]*

**ஈயமலை** *īyamalai,* பெ. (n.) ***ஈயமகப்படும் மலை;*** mountain yielding ore of lead.

*[ஈயம் + மலை.]]*

**ஈயமாக்கி** *īyamākki,* பெ. (n.) ***காட்டாமணக்கு;*** physic nut plant - Jatropha glandulifera.

*[ஈயம் + ஆக்கி.]*

**ஈயமூலிகை** *īyamūligai,* பெ. (n.) ***ஈயச்சத்து அடங்கிய மூலிகை;*** plants said to contain essence of lead.

*[ஈயம் + மூலிகை.]*

**ஈயல்** *īyal,* பெ. (n.) 1. ***சிறகு முளைத்த கறையான்;*** winged white ant, Terms bellicosus. "மஞ்ஞை ஈயற் கிவரும் வகை போல்" (சீவக.925). 2. ***தம்பலப்பூச்சி*** (இந்திரகோபப்பூச்சி) (சா.அக.); lady fly - Mutella occidentalis.

ம. ஈயல்; க. ஈசல்; தெ. ஈசுள்ளு; குரு. ஈம; மால். இமெ.

*[ஈ + அல் = ஈயல் (ஈபோன்றது).]*

**ஈயலி** *īyali,* பெ. (n.) ***தம்பலப்பூச்சி*** (வை.மூ.); cochineal insect, scarlet moth.

*[ஈயல் - ஈயலி.]*

**ஈயவரி** *īyavari,* பெ. (n.) ***பெருமருந்து*** பார்க்க; see *perumarundu* plant. Aristolochia Indica (W.).

*[ஈயம் + வரி.]*

**ஈயவாகை** *īya vāgai,* பெ. (n.) ***வாகை மரத்தின் ஒருவகை, வெண்வாகை.;*** a variety of vāgai tree.

ம. ஈயவாக.

*[ஈயம் + வாகை.]*

**ஈயவாரிகம்** *īya-vārigam,* பெ. (n.) ***வெள்ளறுகு;*** white doob grass-Enicostema littorale alias Adene ma hyssopifolium.

*[ஈயம் + வாரி + இகம்.]*

**ஈயவுப்பு** *īya-vuppu,* பெ. (n.) ***ஈயக்காடியுப்பு;*** salt of lead.

*[ஈயம் + உப்பு.]*

**ஈயவெண்பற்பம்** *īyavenparpam,* பெ. (n.) 1. ***ஈய வெள்ளை;*** soft white powder, blackened by sulphureted hydrogen - carbonate of lead. 2. ***வங்க பற்பம்;*** oxide of lead. It is a native preparation.

*[ஈயம் + வெண்மை + பற்பம்.]*

**ஈயவெள்ளை** *īya-vellai,* பெ. (n.) ***பொடிவகை;*** lead sulphide.

ம. ஈயவெள்ள.

*[ஈயம் + வெள்ளை.]*

**ஈயவெள்ளைக் களிம்பு** *īya vellai-k-kalimbu,* பெ. (n.) ***ஈயவெள்ளையினின்று செய்வித்த மேற்பூச்சு மருந்து;*** ointment of lead carbonate - Unguentum Plumbi

carbonatis. (சா.அக.).

*[ஈயம் + வெள்ளை + களிம்பு.]*

**ஈயன்மூதா** *īyaṉ-mūdā,* பெ. (n.) ***ஈயன் மூதாய்*** (பிங்.) பார்க்க; see *īyaṉ mūdāy.*

*[ஈயல் + மூதா. மூதாய் - மூதா.]*

**ஈயன்மூதாய்** *īyaṉmūdāy,* பெ. (n.) ***தம்பலப்பூச்சி.*** (இந்திரகோபம்) (கலித்.85. உரை); cochineal insect, coccus cacti.

*[ஈயல் + மூதாய். ஈசலின் பாட்டி என்னும் நகைச்சுவைக் குறிப் பினால் ஈயன் மூதாய் எனப்பட்டது.]*

**ஈயாப்பத்தன்** *īyā-p-pattaṉ* பெ. (n.) ***இவறன்*** (கஞ்சன்) (மதி.களஞ்.1,88); miser.

*[ஈ + ஆ + பத்தன். பற்றன் - பத்தன் ஆ.எ. ம. இ. நி.]*

**ஈயாம் கிழங்கு** *īyām-kiḻaṅgu,* பெ. (n.) ***யாமிச்சங் கிழங்கு;*** yam tuber - Dioscorea sativa. (சா.அக.).

*[ஈயாம் + கிழங்கு.]*

**ஈயிலை** *īyilai,* பெ. (n.) ***இண்டு*** பார்க்க: see *iṇḍu.* (சா.அக.).

*[ஈகை + இலை.]*

**ஈயுவன்** *īyuvaṉ,* பெ. (n.) ***இராவணன்*** (அக.நி.); Rāvaṇaṉ.

*[ஈழவன் - ஈயவன் - ஈயுவன் (கொ.வ.).]*

**ஈயெச்சத்தோல்** *ī-y-ecca-t-tōl,* பெ. (n.) ***பூச்சி யரித்த தோல்*** (யாழ்ப்.); fly-blown skin; worm-eaten sheath of the palmyra fruit. (சா.அக.).

*[ஈ + எச்சம் + தோல்.]*

**ஈயெச்சிற்கீரை** *īyecciṟ-kīrai,* பெ. (n.) ***புதினாக்கீரை*** (இ.வ.); mint, mentha viridis. (செ.அக.).

*[ஈ + எச்சில் + கீரை.]*

**ஈயெனல்** *īy-eṉal,* பெ. (n.) ***பல்லைக்காட்டுங் குறிப்பு*** (வின்.); expression signifying grinning.

*[ஈ + எனல். ஈ = இளித்தற்குறிப்புச் சொல்.]*

**ஈயோட்டி** *ī-y-ōṭṭi,* பெ. (n.). ***ஈயை விலக்குங் கருவி*** (சூடா.11.39); fly-whisk.

*[ஈ + ஓட்டி.]*

**ஈயோட்டு-தல்** *ī-y-ōṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.). ***வேலை யொன்றுமின்றியிருத்தல்*** (கொ.வ.); to drive away flies; fig. to be without any employment or work.

*[ஈ + ஓட்டு.]*

**ஈயோப்பி** *īyōppi,* பெ. (n.) ***ஈயோட்டி*** (சங்.அக.) பார்க்க; see *yōṭṭi.*

*[ஈ + ஓப்பி.]*

**ஈர்[1]-தல்** *īr-,* 2 செ.குன்றாவி. (v.t.) ***அறுத்தல்;*** to saw. "உயிரீரும் வாளது" (குறள்.334) - 2 செ.கு.வி. (v.i.) ***இழுக்கப்படுதல்;*** to be drawn out. "ஈர்ந்து நிலந் தோயு மிரும்பிடித் தடக்கை" (சிறுபாண்.19).

ம. ஈர்.

*[இல் - ஈல் - ஈர்.]*

**ஈர்[2]-த்தல்** *īr-,* 2 செ.குன்றாவி. (v.t.) 1. ***இழுத்தல்;*** to draw along, pull; to attract, as a magnet; to carry away, as does a current. "சிறுநீத ரீர்த்து" (மணிமே.7.55). 2. ***உரித்தல்;*** to excoriate, as a tiger does; to flay. "புலியி னீருரி யுடுக்குமோ" (கந்தபு. ததீசியுத்.3). 3. ***எழுதுதல்;*** to draw, paint, write. "மென்றோட் பெய்கரும் பீர்க்கவும் வல்லன்" (கலித்.143.32) (செ.அக.).

*[இல் → ஈல் → ஈர்.]*

**ஈர்[3]** *īr,* பெ. (n.) 1. ***நுண்மை;*** minuteness. "ஈரயிர் மருங்கின்" (சிலப்.6.146). 2. ***பேன்முட்டை;*** nit., Hemitera insecta. "நித்திலமாலை போற் றவளவீர் பொருந்தி" (செவ்வந்திப்பு. உறையூ.23). 3. ***ஈர்க்கு;*** rib of a palm leaf. "இடையீர் போகா விளமுலையாளை" (தேவா.1061.2). 4. ***இறகு*** (பிங்.); wing.

ம., க. ஈர்; தெ. ஈரு.

*[இல் = குத்தல், பொடித்தல், நுண்ணிதாக்கல். இல் - ஈல் -ஈர்.]*

**ஈர்[4]** *īr,* பெ. (n.) 1. ***ஈரம்;*** moisture, wetness. "ஈர்நறுங் கமழ் கடாஅத்து". (கலித்.21). 2. ***பசுமை;*** freshness, greenness. "இருவெதி ரீர்ங்கழை" (மலைபடு.207). 3. ***நெய்ப்பு;*** smoothness, oiliness. "ஈர்பெய்யுந் தளிரொடு " (கலித்.32). 4. ***இனிமை*** (திருக்கோ.28); sweetness, pleasantness, agreeableness. 5. ***கரும்பு***(மலை.) பார்க்க; see *karumbu.* (செல்வி.'73, நவம்.138).

ம. ஈர்; க. ஈர; தெ. ஈமிரி; கொல. ஈர்; நா. ஈர்; பிரா. தீர்.

*[நீர் - ஈர்.]*

**ஈர்[5]** *īr,* இடை (part.). ***முன்னிலைப் பன்மை ஈறு*** (தொல்.சொல்.226); 2nd pers. pl. ending as in வந்தீர்.

ம. ஈர்; க. இரி, ஈரி; குரு. அரி; கோத. இரி, ஈரி; துட. இ, எ; குட. இர; து. அர்; தெ., ரு. ரி; கோண். ஈத்; கூ. எரு. ஆரு; பிரா. ரி; பட. ரி.

*[நீர் - ஈர். நீர் - முன்னிலைப் பன்மை இடச் சொல்.]*

**ஈர்[6]** *īr,* பெ. (n.) ***கதுப்பு*** (அக.நி.); cheek.

*[எயிறு - ஈறு - ஈர். எயில் போல் சுற்றுக் காப்பானது எயிறு.]*

**ஈர்க்கம்பி** *īr-k-kambi,* பெ. (n.) ***ஈர்க்குக் கம்பி*** பார்க்க: see *īr-k-ku-k-kambi.* narrow stripes in the border of clothe.

*[ஈர் + கம்பி.]*

**ஈர்க்கில்** *īrkkil,* பெ. (n.) 1. ***அம்பினிறகு*** (சூடா.); feather of an arrow. 2. ***ஓலை நரம்பு*** (இ.வ.); rib of a palm leaf.

*[ஈர்க்கு + இல்.]*

**ஈர்க்கிறால்** *īrkkiṟāl,* பெ. (n.) ***இறால்மீன் வகை;*** lobster-, Astaeus marinus.

*[ஈர்க்கு + இறால்.]*

**ஈர்க்கு**[1] *īrkku,* பெ. (n.) 1. ***ஓலை நரம்பு;*** rib of a palm leaf. "ஈர்க்கிடை போகா" (திருவாச.4,34). 2. ***அம்பினிறகு;*** feather of an arrow. "சிலைவா ளிடமீர்க்கு" (கம்பரந்.21).

*[ஈர் - ஈர்க்கு.]*

**ஈர்க்கு**[2] *īrkku,* பெ. (n.) ***இறகு;*** feather. மஞ்ஞை யீர்க்கு.

*[ஈர் - ஈர்க்கு.]*

**ஈர்க்குக் கம்பி** *īrkku-k-kambi,* பெ. (n.) ***ஆடையின் சன்னக்கரை;*** narrow stripe in the border of a silk or cotton fabric.

*[ஈர்க்கு + கம்பி.]*

**ஈர்க்குக்கருக்குநீர்** *īrkku-k-karukku-nīr,* பெ. (n.) ***வேம்பீர்க்கு முதலான இலைகளைப் போட்டு நீர் விட்டுச் சுண்டக் காய்ச்சி யிறக்கும் நீர்; இந்நீர் நோய்களுக்குப் பயன்படும்;*** medicinal decoction prepared from the ribs of the leaves, such as those of margosa etc. (சா.அக.).

*[ஈர்க்கு + கருக்கு + நீர்.]*

**ஈர்க்குச்சம்பா** *īrkku-c-cambā,* பெ. (n.) ***சம்பாநெல் வகை*** (பதார்த்த.801); a variety of paddy with very slender stalk, sown between June and September and ripening in six months.

*[ஈர்க்கு + சம்பா.]*

**ஈர்க்கு மல்லிகை** *īrkku-malligai,* பெ. (n.) ***முல்லை வகை*** (மூ.அ.); a kind of jasmine with slender petioles - eared-jasmine - jasminum - auriculatum

*[ஈர்க்கு + மல்லிகை.]*

**ஈர்க்குழாம்** *īrkkuḻām,* பெ. (n.) ***ஈரினது திரள்;*** swarm of nits. "ஈர்க்குழாத்தோ டிறைகூர்ந்தபே எற்பகையென வொன்றென்கோ" (புறநா.136,4).

*[ஈர் + குழாம்.]*

**ஈர்க்கோல்** *īr-k-kōl,* பெ. (n.) ***ஈர்வலி*** (இ.வ.) பார்க்க; see *īr-vali.*

*[ஈர் + கோல்.]*

**ஈர்கொல்லி**[1] *īrkolli,* பெ. (n.) ***உப்பிலி*** (மூ.அ.) பார்க்க; see *uppili.* a species of stinking swallow-wort.

*[ஈர் + கொல்லி.]*

**ஈர்கொல்லி**[2] *īrkolli,* பெ. (n.) ***ஈர்வலி*** பார்க்க: see *īrvali.*

ம. ஈர்கொல்லி.

*[ஈர் + கொல்லி.]*

**ஈர்கொல்லிக்கொடி** *īrkolli-k-kodi,* பெ. (n.) ***ஒரு செடி;*** a kind of climbing plant, pentatropis microphylla. (வின்.)

*[ஈர்கொல்லி + கொடி.]*

**ஈர்கோலி** *īr-kōli,* பெ. (n.) ***ஈர்வலி*** (வின்.) பார்க்க; see *īrvali.*

*[ஈர் + கொல்லி, கொல்லி - கோலி.]*

**ஈர்ங்கட்டு** *īr-ṅ-kaṭṭu,* பெ. (n.) ***குளிர் காலத்துக்குரிய உடை;*** clothing suitable for cold weather. "இளையரு மீர்ங்கட் டயர" (கார்நாற்.22).

*[ஈரம் + கட்டு.]*

**ஈர்ங்கதிர்** *īr-ṅ-kadir,* பெ. (n.) ***ஈர்ங்கதிர்த் திங்கள்*** பார்க்க (வின்.); see *īr-ṅ-kadir-t-tiṅgal* moon, emitting cool rays. (அகநா.130.9) (செ.அக.).

*[ஈரம் + கதிர்.]*

**ஈர்ங்கதிர்த்திங்கள்** *īr-ṅ-kadir-t-tiṅgaḷ,* பெ. (n.) ***குளிர்ந்த ஒளிக்கற்றைகளைச் சொரியும் திங்கள்;*** cool-rayed moon (w.).

*[ஈரம் + கதிர் + திங்கள்.]*

**ஈர்ங்கழை** *īrṅgaḻai,* பெ. (n.) ***பசியகோல்;*** moist stem. "இருவெதிரீர்ங்கழை தத்தி" (மலைபடு.207).

*[ஈரம் + கழை.]*

**ஈர்ங்கை** *īrṅgai,* பெ. (n.) ***உண்டு பூசிய கை;*** wet hand, fig. hand that has been washed after taking one's meal and therefore wet. "ஈர்ங்கை விதிரார் கயவர்" (குறள்.1077).

*[ஈரம் + கை.]*

**ஈர்ந்தமிழ்** *īrntamiḻ,* பெ. (n.) ***தண்டமிழ்;*** sweet, melodious Tamil.

*[ஈரம் + தமிழ்.]*

**ஈர்ந்தளிர்** *īrn-taḷir,* பெ. (n.) ***ஈரிய தளிர்;*** wet, tender leaves. 'மாரி ஈர்ந்தளி ரன்ன மேனி' (அகநா.337.2).

*[ஈரம் + தளிர்.]*

**ஈர்ந்திரி** *īr-n-diri,* பெ. (n.) ***நெய் தோய்ந்த திரி;*** wick immersed in oil. "இரும்புசெய் விளக்கி னீர்ந்திரிக் கொளீஇ" (நெடுநல்.42).

*[ஈரம் + திரி.]*

**ஈர்ந்தை**[1] *īrndai,* பெ. (n.) 1. ***தோயன் மாறனுடைய கோ நகரம்;*** royal city of the chieftain Toyanmaran. 2. ***ஈரோடு நகரம்;*** The town 'Īrōḍu' (Erode) 3. ***ஈர்ந்தையென்னும் ஊர்;*** village Īrndai. "ஈர்ந்தை யோனே பாண்பசிப் பகைஞன்" (புறநா.180.7).

*[ஈர் - ஈர்ந்தை ஒ.நோ. உறை - உறைந்தை - உறந்தை.]*

**ஈர்ந்தை**[2] *īrndai,* பெ. (n.) ***பொடுகு;*** dandruff.

*[ஈர் = பேன்முட்டை, பொடுகு. ஈர் - ஈர்ந்தை.]*

**ஈர்ப்பி** *īrppi,* பெ. (n.) 1. ***ஈர்*** (வின்.); nits, scurf, dandruff in the hair.

*[ஈல் - (ஈன்) - ஈர் - ஈர்ப்பி.]*

**ஈர்ப்பு** *īrppu,* பெ. (n.) 1. ***இழுப்பு;*** pull, tug, attraction. "ஈர்ப்புடைக் கராத் தன்ன வென்னை" (புறநா.104). 2. ***இசிவுநோய்*** (வின்.); lock-jaw, tetanus, spasmodic contraction of the features or limbs. 3. ***இறக்குந் தறுவாயி லுண்டாகும் வலியோடு கூடிய மதி மயக்கம்:*** acute terminal delirium.

*[இல் - ஈல் - ஈர் - ஈர்ப்பு.]*

**ஈர்பட்டு** *īrpattu,* பெ. (n.) ***ஈர்வெட்டு*** (யாழ்.அக.) பார்க்க; see *īrvettu.*

*[ஈர்வெட்டு - ஈர்பட்டு.]*

**ஈர்பாதம்** *īrpādam,* பெ. (n.) ***ஒரு வகைப் பாம்பு;*** a kind of snake.

**ஈர்ம்படை** *īrmpadai,* பெ. (n.) ***ஈரியபடை;*** weapon, tool with both the points sharpened. "ஈர்ம்படைக்கொங்கர் ஆபரந்தன்ன" (பதிற்றுப்.77.10) நீர் வேண்டிக் கூவல் முதலியன தோண்டுதற்குரிய குந்தாலி முதலிய படைகளை "ஈர்ம்படை" யென்றார். (பதிற்.77.10,உரை) கூந்தாலி என வழங்குவர் பரிமேலழகர் (குறள்.1251). இருபுறமும் கூர்ந்த ஓராயுதம். (ஐங்.354.1)

**ஈர்ம்புறம்** *īrmpuram,* பெ. (n.) ***நனைந்த இடம்;*** wet location. "துறைமேய் இப்பி ஈர்ம்புறத்து உறைக்கும்" (நற்.87.7).

*[ஈரம் + புறம்.]*

**ஈர்மணி** *īrmani,* பெ. (n.) ***சிவப்பு ஒளிவட்டத்தையுடைய அளறு*** (ஏலா.67); hell, irattina-p-pirabai.

*[ஈர் + மணி.]*

**ஈர்மலர்** *īrmalar,* பெ. (n.) ***மெல்லிய மலர்;*** delicate flower. "இலையில் பிடவம் ஈர்மலர் அரும்ப" (நற்.242).

**ஈர்மை** *īrmai,* பெ. (n.) 1. ***நுண்மை;*** minuteness, subtlety. 2. ***வருத்தம்;*** distress, pain, suffering. "என்னை யீர்மை செய்து" (திவ்.திருவாய்.9,6,3). 3. ***குளிர்ச்சி;*** coolness.

*[இல் - ஈல் - ஈர் - ஈர்மை.]*

**ஈர்வடம்** *īrvadam,* பெ. (n.) ***பனையீர்க்குக் கயிறு*** (யாழ்ப்.); rope made of ribs of the palmyra leaf (w.).

*[ஈர் + வடம்.]*

**ஈர்வலி** *īrvali,* பெ. (n.) ***ஈர்வாங்குங் கருவி;*** long narrow wooden comb for clearing the hair of nits.

ம. ஈர்வலி.

*[ஈர் + வலி. வலி = இழு.]*

**ஈர்வலித்தல்** *īrvalittal,* தொ.பெ. (vbl.n.) ***ஈர்வாரல்*** (வின்.); combing out nits.

*[ஈர் + வலித்தல்.]*

**ஈர்வளி** *īrvali,* பெ. (n.) ***ஓர் மரவகை;*** a kind of tree.

**ஈர்வாங்கி** *īrvāngi,* பெ. (n.) ***ஈர்வலி*** பார்க்க: see *īrvali.* (செ.அக.).

*[ஈர் + வாங்கி.]*

**ஈர்வாணி** - *īr-vāni,* பெ. (n.) ***ஈர்வடம்*** (யாழ்ப்.) பார்க்க; see *īrvadam.*

*[ஈர் + வாணி. வலி - வாலி - வாளி - வாணி (இழுக்குங் கயிறு.]*

**ஈர்வாரி** *īrvāri,* பெ. (n.) ***ஈர்வலி*** பார்க்க: see *īrvali.*

*[ஈர் + வாரி. வாறு - வாறி - வாரி.]*

**ஈர்வாள்** *īrvāl,* பெ. (n.) 1. ***அரம்பம்*** (திவா.); saw. 2. ***அரிவாள்*** (அக.நி.); sickle.

ம. ஈர்வாள்.

*[ஈர் + வாள்.]*

**ஈர்வெட்டு** *īr-vettu,* பெ. (n.) ***பனையீர்க்குக் கயிறு*** (யாழ்.அக.); rope made of ribs of palmyra leaf.

*[ஈர் + வெட்டு.]*

**ஈரக்கல்** *īra-k-kal,* பெ. (n.) ***குருவிந்தக்கல்*** (வின்.); corundum.

*[ஈரம் + கல்.]*

**ஈரக்கற்பூரம்** *īra-k-karpūram,* பெ. (n.) ***பச்சைக் கருப்பூரம்;*** camphor, menthol. (சா.அக.)

*[ஈரம் + கருப்பூரம்.]*

**ஈரக்குழி** *īra-k-kuli,* பெ. (n.) ***கருப்பை;*** womb. (சா.அக.).

*[ஈரம் + குழி. குழி - கழி - கடும்பு. கடும்பு = வயிறு.]*

**ஈரக்கையாலேதடவு-தல்** *īra-k-kaiyālē-tadavu-,* 5 செ.குன்றாவி. (v.t.) ***அன்புகாட்டித் தேற்றுதல்;*** to console, to caress lovingly. "நாட்டை ஈரக்கையாலே தடவி கம்சன் காலத்திற்பட்ட நோவுதீரப் பாதுகாத்து" (திவ்.இயற்.திருகுறுந்.1.வியா).

*[ஈரம் + கை + ஆல் + தடவு.]*

**ஈரங்காயம்** *īrangāyam,* பெ. (n.) ***வெண்காயம்;*** onion - Allium cepa. (சா.அக.).

*[ஈரம் + காயம்.]*

**ஈரங்கார்த்தல்** *īrangārttal,* தொ.பெ. (vbl.n.). ***கசிவாயிருத்தல்;*** being in a state between dry and wet; holding water in suspension or absorption. (சா.அக.).

*[ஈரம் + கார்தல்.]*

**ஈரங்கை** *īrangai,* பெ. (n.) ***கொடுங்கை*** (அக.நி.); curved cornice or projection; corbel. ***ஈறங்கை*** பார்க்க: see *īrangai.*

*[ஈறு + அம் + கை. ஈறு - ஈர்.]*

**ஈரங்கொல்லி** *īran-kolli,* பெ. (n.) ***வண்ணான்.*** (பிங்.) (ஈடு.7,6,10); washerman.

ம. ஈரங்கொல்லி.

*[ஈரம் + கொல்லி. ஈரம் கொல்லுதல் - ஈரம் உலர்த்துதல்.]*

**ஈரங்கொல்லு-தல்** *īraṅkollu-,* 7 செ.குன்றாவி. (v.t.) ***ஈரமுலர்த்துதல்;*** to expel moisture from; to dehydrate, to allow to dry. "ஈரங்கொன்றவின் .... குஞ்சியை" (சீவக.2422).

*[ஈரம் + கொல்லுதல். கொல்லுதல் = இல்லாமல் செய்தல் நீக்குதல்.]*

**ஈரங்கோலி** *īraṅgōli,* பெ. (n.) ***ஈரங்கொல்லி*** பார்க்க: see *īraṅkolli.*

*[ஈரம் + கொல்லி. கொல்லி - கோலி.]*

**ஈரங்கோலியர்** *īraṅgōliyar,* பெ. (n.) ***ஈரங்கொல்லி*** பார்க்க: see *īraṅkolli.* (த.சொ.அக.).

*[ஈரம் + (கொல்லி) கோலி + அர்.]*

**ஈரஞ் சுவறுதல்** *īrañcuvaṟudal,* பெ. (n.) ***ஈரங் காய்தல்;*** drying (சா.அக.).

*[ஈரம் + சுவறுதல்.]*

**ஈரடி**[1] *īraḍi,* பெ. (n.) 1. ***இரண்டடி;*** two lines. "ஈரடிவெண்பா" (யா.கா.செய்யு.3) 2. ***ஐயம்*** (வின்); uncertainity. 3. ***கவர்*** (வின்); fork, that which is bifurcate. (செ.அக.).

ம. ஈரடி.

*[இரண்டு → ஈர் + அடி.]*

**ஈரடி**[2] *īraḍi,* பெ. (n.) ***ஈராடி***[1] (இ.வ.) பார்க்க; see *īrāḍi.*

*[ஈராடி - ஈரடி.]*

**ஈரடிப்பயன்** *īraḍi-p-payaṉ,* பெ. (n.) 1. ***கவர் பொருள்*** (வின்.); ambiguity in conversation, equivocation. 2. ***ஏமாற்றுவேலை;*** double dealing, acting with duplicity so as to suit both parties. 3. ***ஐயம்*** (வின்.); uncertainty, dubiousness. 4. ***மாறுபாடு*** (யாழ்ப்.); diverseness, disagreement, discrepancy, as of a report or an account differently related. (செ.அக.).

*[இரண்டு - ஈர் + அடி + பயன்.]*

**ஈரடிமடக்கு** *īraḍi-maḍakku,* பெ. (n.) ***அடிகளு ளிரண் டடி மடங்கி வருவது;*** repetition of a word/phrase in two successive lines in a stanza each time in a different sense.

*[இரண்டு → இரு → ஈர் + அடி + மடக்கு.]*

**ஈரடிவருக்கம்** *īraḍi-varukkam,* பெ. (n.) 1. ***செய்யுள் வகை;*** name given to a verse of two lines in which the first and middle letters of each are the same. (செ.அக.).

*[இரண்டு → இரு → ஈர் + அடி + வருக்கம்.]*

**ஈரடிவெண்பா** *īraḍi-veṇbā,* பெ. (n.) ***குறள் வெண்பா*** பார்க்க (யா.கா.செய்.3); see *kuṟaḷ veṇbā.* veṇbā of two lines. (செ.அக.).

*[இரண்டு → இரு → ஈர் + அடி + வெண்பா.]*

**ஈரடுக்கொலி** *īraḍukkoli,* பெ. (n.) ***இரட்டையாக அடுக்கி வரும் ஒலிக்குறிப்புச் சொல்;*** reiterated words imitative of sound, as நெறுநெறெனல்.

*[இரண்டு - இரு - ஈர் + அடுக்கு + ஒலி.]*

**ஈரண்டஊதை** *īraṇḍaūdai,* பெ. (n.) 1. ***இரண்டு விரைப்பக்கமும் நீர் கோத்துக்கொண்டு உண்டாகும் ஓதம்;*** double hydrocele. 2. ***இரண்டு பக்கமும் குடலிறக்கம்;*** scrotal hernia. (சா.அக.).

*[இரண்டு - இரு - ஈர் + அண்டம் + ஊதை.]*

**ஈரண்டவாதம்** *īraṇḍavādam,* பெ. (n.) ***ஈரண்டஊதை*** பார்க்க; see *īraṇḍaūdai.*

*[இரண்டு - இரு - ஈர் + அண்டம் + வாதம்.]*

**ஈரணம்** *īraṇam,* பெ. (n.) 1. ***கள்ளி;*** plant of the Euphorbia genus. 2. ***வயிறு வலித்து மலங் கழித்தல்;*** painful and laborious evacuation of the bowels. 3. ***களர் நிலம், வெறுநிலம்;*** dry land.

*[ஈரம் + அணம்.]*

**ஈரணி** *īraṇi,* பெ. (n.) ***புனலாடும்போது மகளிர் அணிதற்குரியவை;*** garments put on by women while bathing. "விரும்பிய ஈரணி மெய்யீரந் தீர" (பரிபா.7,61).

*[ஈரம் + அணி.]*

**ஈரணை** *īraṇai,* பெ. (n.) ***இரண்டு இணை மாடு*** (யாழ்ப்.); two pairs of oxen. ஈரணை ஏர் கொண்டு உழுது (உ.வ.) (செ.அக.).

*[இரண்டு - இரு - ஈர் + அணை.]*

**ஈரத்தட்டை** *īrattaṭṭai,* பெ. (n.) ***ஈரக்குழல் தட்டை;*** a kind of reed. (சா.அக.).

*[ஈரம் + தட்டை.]*

**ஈரத்திரையம்** *īrattiraiyam,* பெ. (n.) ***குங்கிலியம்;*** resinous gum.

*[ஈரம் + திரையம்.]*

**ஈரந்துவட்டு-தல்** *īrantuvaṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) ***நீராடியபின் ஈரத்தைத் துடைத்தல்;*** to wipe the head and body after bathing.

*[ஈரம் + துவட்டு.]*

**ஈரநா** *īranā,* பெ. (n.) ***புறங்கூறும் நாக்கு;*** slanderous tongue. ஈரநாவுக் கெலும்பில்லை' (வின்.).

*[ஈரம் + நா.]*

**ஈரப்பச்சை** *īrappaccai,* பெ. (n.) *ஈரப்பசை* பார்க்க: see *īrappašai.*

*[ஈரம் + பச்சை. பச்சை = செழிப்புநிலம்.]*

**ஈரப்பசுமை** *īra-p-pašumai,* பெ. (n.) *ஈரப்பற்று;* moisture. (சா.அக.).

*[ஈரம் + பசுமை.]*

**ஈரப்பசை** *īra-p-pašai,* பெ. (n.) 1. *ஈரக்கசிவு;* moisture, as in hands; wetness as in clothes. 2. *இரக்கம்;* sympathy, mercy, kindness, as the moisture in one's heart. 'அவன் மனத்தில் ஈரப்பசையற்றவன்' (உ.வ.) (செ.அக.).

*[ஈரம் + பசை. பச்சை - பசை.]*

**ஈரப்பசையுள்ளவன்** *īra-p-pašai-y-uḷḷavaṉ,* பெ. (n.) 1. *இரக்கமுள்ளவன்;* benevolent man. 2. *செல்வமுடையவன்;* prosperous man. (வின்.).

*[ஈரம் + பசை + உள்ளவன்.]*

**ஈரப்பலா** *īra-p-palā,* பெ. (n.) 1. *ஆசினி* (திவா.); bread-fruit tree, the wood of which is used for musical instruments, the Āšiṉi. 2. *மரவகை;* monkey Jack.

மறுவ. ஆசினிப் பலா.

*[ஈரம் + பலா. கொட்டையற்றதாகவும், மணமற்றதாகவும் உள்ள சீமைப்பலா. bread fruit tree cultivated in Ceylon and west coast resembling common jack fruit perfectly scentless and seedless. It is gathered before getting ripe, sliced and baked on cinders and eaten like bread (சா.அக.).]*



ஈரப்பலா

**ஈரப்பலாதிதம்** *īra-p-palādidam,* பெ. (n.) *குதிரைவாலி;* a kind of grass.

*[ஈரம் + பலாதிதம்.]*

**ஈரப்பற்று** *īra-p-paṟṟu,* பெ. (n.) 1. *ஈரக்கசிவு* (வின்.); moisture, dampness, fluid exuding or diffused. 2. *இரக்கம்;* sympathy, as the moisture in one's heart. 3. *செல்வம்* (வின்.); health, prosperity. 4. *நன்றி;* benevolence (w.).

*[ஈரம் + பற்று.]*

**ஈரப்பாடு** *īra-p-pāḍu,* பெ. (n.) 1. *ஈரமாயிருக்கை* (இ.வ.); condition of being moist. opp. to ularttarpāḍu. 2. *மனநெகிழ்ச்சி;* tenderness of heart. "ஈரப்பாட்டை விளைத்து" (ஈடு.9,6,4) (செ.அக.).

*[ஈரம் + பாடு. படு - பாடு.]*

**ஈரம்** *īram,* பெ. (n.) 1. *நீர்ப்பற்று* (பாரத. திரௌபதி.97); wetness, moisture, humidity, dampness. 2. *பசுமை;* freshness, greenness. 3. *குளிர்ச்சி* (சூடா.); coolness, agreeableness, pleasantness. 4. *நயனுடைமை;* love, affection, attachment. "எதிர்பெய்து மறுத்த வீரத்து மருங்கினும்" (தொல்.பொருள்.147). 5. *அருள், பரிவு;* grace, mercy, favour. "நாடனீரத்துள்" (கலித்.41). 6. *அறிவு* (அக.நி.); knowledge, wisdom. 7. *குங்குமம்* (மலை.); arnotto. 8. *கரும்பு* (மலை.); sugar-cane. 9. *அழகு;* beauty. 10. *வெள்ளரி;* cucumber. (செ.அக.).

ம. ஈரம்; க., பட. ஈர; தெ. ஈமிரி; கொலா. ஈர்; நா. ஈர்; பிரா. நீர்.

*[நீரம் - ஈரம் (செல்வி.'77. நவம்.பக்.138).]*

**ஈரம்** *īram,* பெ. (n.) 1. *பகுதி;* part. 2. *குங்குமப்பூ* (அக.நி.); saffron powder.

*[நிறம் - நீரம் - ஈரம்.]*

**ஈரம்பனை** *īram paṉai,* பெ. (n.) *கூந்தற்பனை* jaggery-palm (L.); *ஈரற்பனை* பார்க்க; see *īraṟ-paṉai.*

*[ஈரல் = விரிதல். ஈரம் + பனை.]*

**ஈரம்போக்கல்** *īram-pōkkal,* தொ.பெ. (vbl.n.). *உலர்த்தல்;* to dry thoroughly - desiccation.

*[ஈரம் + போக்கல்.]*

**ஈரம்போக்கி** *īram-pōkki,* பெ. (n.) 1. *உலர்த்து மருந்து;* drugs having drying properties - exsiccant. 2. *மின்னாற்றல்;* electric current.

*[ஈரம் + போக்கி.]*

**ஈரமாப்பூ** *īramāppū,* பெ. (n.) *குங்குமப் பூ;* English saffron; flower of crocus sativus, arnotto.

*[ஈரம் + மா + பூ.]*

**ஈரமாலை** *īramālai,* பெ. (n.) *குளிர்ந்த மாலை;* fresh garland, wreath. "ஈரமாலை இயலணியார்" (பரிபா.17.36).

**ஈரமானி** *īramāṉi,* பெ. (n.) *காற்றின் ஈரத்தைக் காட்டுங் கருவி;* instrument for measuring the moisture of the atmosphere, hydro-meter.

*[ஈரம் + மானி.]*

**ஈரமுலர்த்தல்** *īramularttal,* தொ.பெ. (vbl.n.). *ஈரம் சிறிதேனுமில்லாதபடி உலர்த்தல்;* drying thoroughly - exsiccation. (சா.அக.).

*[ஈரம் + உலர்த்தல்.]*

**ஈரமுறிஞ்சல்** *īramuriñjal,* தொ.பெ. (vbl.n.) ***ஈரமுறிதல்*** பார்க்க: see *īra-muridal.* (சா.அக.).

*[ஈரம் + உறிஞ்சல்.]*

**ஈரமுறிஞ்சி** *īramuriñji,* பெ. (n.) ***ஈரத்தைக் கவர்ந்து இளகித் தண்ணீராகுந் தன்மையுள்ளது;*** that which has a tendency to become a liquid by absorbing moisture from the atmosphere. (சா.அக.).

*[ஈரம் + உறிஞ்சி.]*

**ஈரமுறிதல்** *īramuridal,* தொ.பெ. (vbl.n.). ***காற்றினி லுள்ள ஈரத்தைக் கவர்ந்து இளகித் தண்ணீராகுந் தன்மை;*** characteristic of becoming liquified by absorbing water from the air - deliquescence. (சா.அக.).

*[ஈரம் + முறிதல்.]*

**ஈரரசு** *īrarašu,* பெ. (n.) ***இருவர் ஆளுகை;*** government by two, dyarchy. "ஈரரசு தவிர்த்தாலிறே சேசித்துவம் பூர்ணமாவது" (திவ். அமலனாதி.1.வியா.).

*[இரண்டு - இரு - ஈர் + அரசு.]*

**ஈரரத்தை** *īrarattai,* பெ. (n.) ***இரண்டு வகை யரத்தை - சிற்றரத்தை, பேரரத்தை;*** two kinds of galangal viz. the smaller and the bigger.

*[இரண்டு - இரு - ஈர் + அரத்தை.]*

**ஈரல்**[1] *īral,* பெ. (n.) 1. ***ஈருள்*** (பிங்.); internal organ in the body as the liver or spleen. 2. ***குடல்;*** intestines. 3. ***விரிதல்;*** spliting.

**ம.** ஈரல்; **க.** கீரி; **கோத.** இருவ்; **துட.** இருப்.

*[ஈரல் = பிளத்தல், இரண்டாதல், இரண்டாகப் பிரிந்திருக்கும் உறுப்பு.]*

**ஈரல்**[2] *īral,* பெ. (n.) ***வருத்தல்;*** harassing, tormenting. "பாதகவர்க்கத்துக்கு ஈரலாம்படி" (ஈடு.9,9,ப்ர.).

*[ஈரல் = பிளத்தல் போன்று நெஞ்சத்தை வருத்தும் துன்பம்.]*

**ஈரல்கட்டி** *īralkatti,* பெ. (n.) ***ஈரற்கட்டி*** பார்க்க: see *īarkatti.* (சா.அக.).

*[ஈரல் + கட்டி.]*

**ஈரல்கருகல்** *īralkarugal,* பெ. (n.) ***அளவிடற்கரிய அச்சத்தாலேற்படும் கல்லீரல் நடுக்கம்;*** fear, supposed to affect the liver, showing extreme shiver.

*[ஈரல் + கருகல்.]*

**ஈரல்கருகு-தல்** *īral-karugu-,* 7 செ.கு.வி. (v.i.) ***துன்பம் மிகுதல்;*** to be tormented with such intense anguish as to scorch the liver. 'ஈரல் கருகிப் போயிற்று' (வின்.) (சா.அக.).

*[ஈரல் + கருகுதல்.]*

**ஈரல்கழலை** *īral-kalalai,* பெ. (n.) ***ஈரற்கழலை*** பார்க்க: see *īrar-kalalai.* (சா.அக.).

**ஈரல்குடைச்சல்** *īral-kudaiccal,* பெ. (n.). ***ஈரற் குடைச் சல்*** பார்க்க: see *īrar kudaiccal.* (சா.அக.).

*[ஈரல் + குடைச்சல்.]*

**ஈரல்குழி** *īral-kuli,* பெ. (n.) ***ஈரற்குழி*** பார்க்க: see *īrarkuli.*

*[ஈரல் + குழி.]*

**ஈரல்தாங்கி** *īraltāngi,* பெ. (n.) ***மார்புக்குள் வயிற்றிற் கும் நெஞ்சிற்கும் நடுவாகவுள்ளவோர் தசைப்பற் றுள்ள சவ்வு;*** muscular and membraneous partition that separates the abdomen from the thorax-diaphragm. (சா.அக.).

*[ஈரல் + தாங்கி.]*

**ஈரல் நழுகல்** *īral nalugal,* பெ. (n.) ***ஈரல் சரிதல்;*** dislocation of the liver-hepatoptosis. (சா.அக.).

*[ஈரல் + நழுவல் - நழுகல்.]*

**ஈரல் நிறம்** *īral niram* பெ. (n.) ***கருஞ்சிவப்பு நிறம்;*** dark red, purple, the colour of the liver.

*[ஈரல் + நிறம். நிழல் - நிறன் - நிறம்.]*

**ஈரல் படைச்சால்** *īral padaiccāl,* பெ. (n.) ***ஈரலின் நாளம்;*** hepatic vein - vena portae. (சா.அக.).

*[ஈரல் + படைச்சால். படைச்சால் - உழுபடைச்சால் போன்ற நாளம்.]*

**ஈரல் பதறல்** *īral padaral,* பெ. (n.) ***அச்சப்படுதல்;*** frightened.'அவன் புலியைக் கண்டு ஈரல் பதறிப்போய் விட்டான்.' (இ.வ.).

*[ஈரல் + பதறு.]*

**ஈரல் பனை** *īral panai,* பெ. (n.) ***உலட்டிப்பனை; ஆண்டப்பனை, ஆணைப்பனை;*** bastard sagopalm, jaggery-palm.

**ம.** ஈறம்பன.

*[ஈரல் + பனை. ஈரல் = விரிதல்.]*

**ஈரல் வீக்கம்** *īral vīkkam,* பெ. (n.) ***கல்லீரலின் வீக்கம்;*** enlargement of the liver-hepatomegalia. (சா.அக.).

*[ஈரல் + வீக்கம். வீங்கு - வீக்கம்.]*

**ஈரலித்த சோறு** *īralittašōru,* பெ. (n.) ***தண்ணீர் அல்லது ஈரங் கசியுஞ் சோறு;*** cooked rice which has absorbed moisture. (சா.அக.).

**மறுவ.** தங்கல்சோறு, பழைய சோறு, பழசு, பழஞ்சோறு.

*[ஈரம் → ஈரலித்தல் + சோறு.]*

**ஈரலி-த்தல்** *īrali-,* 4 செ.கு.வி. (v.i.) 1. ***ஈரமாதல்;*** to become moist, damp (j). 2. ***பதனழிந்து நீர்கசிதல்;*** to perish and become moist.'பலாப்பழம் அறக்கனிந்து ஈரலித்தது' (உ.வ.).

*[ஈரம் - ஈரலி. ஈரலித்தல். ஈரலித்ததை 'ஈத்துப் போய்விட்டது நீத்துப்போய்விட்டது' என்று கொச்சையாக வழங்குவர்.]*

**ஈரலிரத்தம்** *īralirattam,* பெ. (n.) 1. ***நுரை யீரலினின்று வரும் அரத்தவொழுக்கு;*** discharge of blood, 2. ***ஈரலில் நிற்கு மிரத்தம்;*** blood contained in the lungs. 3. ***கல்லீரலினின் றுண்டாகும் அரத்தப்போக்கு;*** hemorrhage of the liver - hepatorrhagia. (சா.அக.).

*[ஈரல் + இரத்தம்.]*

**ஈரலுலர்த்தி** *īralulartti,* பெ. (n.) ***மாட்டுநோய் வகை*** (மாட்டுவை.சி.41); disease of the spleen, in cattle. (செ.அக.).

*[ஈரல் + உலர்த்தி.]*

**ஈரலுறுத் தானம்** *īraluruttāṉam,* பெ. (n.) ***ஈரற்குழி*** பார்க்க: see *īrarkuli.*

*[ஈரல் + உறு + தானம்.]*

**ஈரலெரிச்சல்** *īralericcal,* பெ. (n.) 1. ***ஒருநோய்;*** inflammation of the liver. 2. ***மாட்டுநோய்;*** inflammation of the liver in cattle. (சா.அக.).

*[ஈரல் + எரிச்சல்.]*

**ஈரவணி** *īravaṇi,* பெ. (n.) ***ஈரணி*** பார்க்க (பரிபா.11,86, உரை); see *īraṇi.*

*[ஈரம் + அணி - ஈரவணி.]*

**ஈரவன்** *īravaṉ,* பெ. (n.) 1. ***குளிர் நிலா;*** moon, producing coolness (w.). 2. ***ஈரம்*** (ஆ.அக.); moisture. 3. ***ஈர்ங்கதிர்;*** coolrays. (ஆ.அக.).

*[ஈரம் - ஈரவன்.]*

**ஈரவாலி** *īravāli,* பெ. (n.) ***குதிரைவாலி யரிசி*** (சா.அக.); a kind of millet.

*[ஈரம் + ஆலி. ஈரவாலி.]*

**ஈரவிதைப்பு** *īravidaippu,* பெ. (n.) 1. ***ஈர நிலத்தில் விதைக்கை;*** sowing on land when wet. 2. ***ஈரநிலத் துண்டான பயிர்;*** crop produced from seed sown in moist land.

*[ஈரம் + விதைப்பு. நீர் - நீரம் - ஈரம். ஈரம் பார்க்க; see īram.]*

**ஈரவுள்ளி** *īravuḷḷi,* பெ. (n.) ***ஈருள்ளி*** பார்க்க (மலை); see *iruḷḷi.*

ம. ஈரவுள்ளி; க. ஈருள்ளி.

*[ஈரம் + உள்ளி. உள்ளில் - உள்ளி. உள்ளில் = உள்ளே ஒன்றும் இல்லாதது.]*

**ஈரவூணிகம்** *īravūṇigam,* பெ. (n.) ***குத்து வல்லாரை;*** a species of Indian pennywort grown on mountains or on the top of hills.

*[ஈரம் + ஊணிகம்.]*

**ஈரவெங்காயம்** *īraveṅgāyam,* பெ. (n.) ***வெங்காயம்;*** onion.

படு. ஈர பெங்குவெ.

*[ஈரம் + வெம் + காயம். வெள்ளை வெங்காயம் எனப்படும் வெள்ளைப் பூண்டினின்றும் வேறுபடுத்துவதற்காக ஈர வெங் காயம் என்னும் சொல்லாட்சி தோன்றியது.]*

**ஈர வெண்காயம்** *īraveṅgāyam,* பெ. (n.) ***ஈரவெங் காயம்*** பார்க்க: see *īraveṅgāyam.*

*[ஈரம் + வெம் + காயம். வெம் + காயம் - வெங்காயம் -வெண்காயம் என்பது பிழையான வழக்கு.]*

**ஈரற்கட்டி** *īrarkaṭṭi,* பெ. (n.) 1. ***கல்லீ ரலிலுண்டாகுங் கட்டி;*** abscess of the liver. (சா.அக.). 2. ***மண்ணீரலின் வீக்கம்;*** enlargement of spleen.

*[ஈரல் + கட்டி.]*

**ஈரற்கதிப்பு** *īrarkadippu,* பெ. (n.) ***நோயினால் கல்லீரல் பருத்தல்;*** enlargement of the liver.

*[ஈரல் + கதிப்பு.]*

**ஈரற்கருகு-தல்** *īrarkarugu-,* 5 செ.கு.வி. (v.i.) ***மிகவும் அச்சப்படுதல்*** (யாழ்.அக.); to be very much afraid.

**ஈரற்கல்** *īrarkal,* பெ. (n.) ***மந்தாரச்சிலை எனப்படும் கல்*** (யாழ்.அக.); medicinal stone.

*[ஈரல் + கல்.]*

**ஈரற்கழலை** *īrar kalalai,* பெ. (n.) ***கல்லீ ரலிலுண்டா குங் கழலைக் கட்டி;*** tumour of the liver-hepatoma. (சா.அக.).

*[ஈரல் + கழலை.]*

**ஈரற்குலை** *īrarkulai,* பெ. (n.) ***ஈரலின் கொத்து;*** lobes of the liver.

*[ஈரல் + குலை.]*

**ஈரற்குலை நடுக்கம்** *īrarkulainaḍukkam,* பெ. (n.) ***அச்சத்தினால் ஈரற்குலைக்கேற்படும் அதிர்ச்சி;*** shock due to visceral tremor through fear. (சா.அக.).

*[ஈரல் + குலை + நடுக்கம்.]*

**ஈரற்குலை பதை-த்தல்** *īrarkulaipadai-,* 4 செ.கு.வி. (v.i.) ***மிகுவேதனைப்படுதல்;*** to become deeply grieved.

*[ஈரல் + குலை + பதை.]*

**ஈரற்குழி** *īrarkuli,* பெ. (n.) ***ஈரலுக்கு நேராக வயிற் றுக்கு மேலிருக்கும் குழி;*** upper middle portion of the abdomen, over or in front of the stomach - epigastric region. It is also called the pit of the stomach. (சா.அக.).

*[ஈரல் + குழி.]*

**ஈரற்கேடு** *īrarkēḍu,* பெ. (n.) ***கல்லீ ரலுக் கேற்படும் அழிவு;*** atrophy and degeneration of the liver - cirrhosis. (சா.அக.).

*[ஈரல் + கேடு.]*

**ஈரற்கொத்து** *īrarkottu,* பெ. (n.) ***ஈரற்குலை*** பார்க்க: see *īrarkulai.*

*[ஈரல் + கொத்து.]*

**ஈரற்கோளாறு** *īrarkōḷāṟu,* பெ. (n.) *ஈரற்பிசகு;* பார்க்க: see *irar piśagu.*

*[ஈரல் + கோளாறு.]*

**ஈரற்பிச்சு** *īrar piccu,* பெ. (n.) *ஈரற்பித்து* பார்க்க: see *īrar pittu.* (சா.அக.).

*[ஈரல் + பித்து → பிச்சு.]*

**ஈரற் பிசகு**[1] *īrar piśagu,* பெ. (n.) *கல்லீ ரலிலுண்டா குங் கோளாறு;* hepatic disorder. 2. *பொதுவாக ஈரலி லுண்டாகுங் குற்றம்;* disorder of the liver or the lungs or the spleen in general. (சா.அக.).

*[ஈரல் + பிசகு.]*

**ஈரற்பித்து** *īrar pittu,* பெ. (n.) 1. *கல்லீ ரலில்உண்டா கும் பித்தம்;* bile secreted in the liver. 2. *பித்தநீர் தங்கும் பை;* small membraneous sac which receives the bile from the liver gall-bladder. (சா.அக.).

*[ஈரல் + பித்து.]*

**ஈரறிவு** *īrarivu,* பெ. (n.) 1. *இம்மை மறுமை;* this birth and the supposed next. 2. *உற்றறிவு, சுவையறிவு;* senses of touch & taste. "நந்தும் முரளும் ஈரறிவினவே" (தொல்.பொருள்.மரபி.29).

*[இரு - ஈர் + அறிவு.]*

**ஈரா** *īrā,* பெ. (n.) *வெட்டுப்படாத;* not cut. "இருங்கோள் ஈராப்பூட்கை" (புறநா.381.25).

*[ஈர் + ஆ. (எ.ம.இ.நி.).]*

**ஈராங்கொல்லி** *īrāṅkolli,* பெ. (n.) *சலவைத் தொழி லாளி;* washerman. *ஈரங்கொல்லி* பார்க்க see *īrańkolli.*

ம. ஈராங்கொல்லி.

*[ஈரம் + கொல்லி - ஈரங்கொல்லி - ஈராங்கொல்லி (கொ.வ.).]*

**ஈரறம்** *īraram,* பெ. (n.) *இல்லறம் துறவறம் ஆகிய இருவகை அறம்;* family life and ascetic life.

*[இரு → ஈர் + அறம்.]*

**ஈரறிவுயிர்** *īrarivuyir,* பெ. (n.) 1. *ஊற்றறிவும் சுவையறிவுமுடைய சங்கு நத்தை முதலியன* (நன். 446); beings that have only two senses, viz., touch and taste like shell-fish, snail etc.

*[இரு - ஈர் + அறிவு + உயிர்.]*

**ஈராசிடை வெண்பா** *īrāśiḍai venbā,* பெ. (n.) *ய், ர், ல், ழ் ஒற்று நான்கும் ஆசாய் வரும் வெண்பா;* to insert ய், ர், ல், or ழ் in the rhyming foot in two lines of a stanza.

*[இரு → ஈர் + ஆசு + இடை + வெண்பா.]*

**ஈராட்டி**[1] *īrāṭṭi,* பெ. (n.) 1. *இரண்டு மனைவிகள்;* two wives. 2. *இரண்டு பெண்டாட்டிக்காரன்;* man having two wives. (சா.அக.).

*[இரு → ஈர் + ஆட்டி.]*

**ஈராட்டி**[2] *īrāṭṭi,* பெ. (n.) 1. *காற்று மாறியடிக்கை;* changeable state of the wind and weather, previous to the change of monsoon, indicative of rain. 2. *காற்றின் அமைதி;* calm, lull, failing of the wind between monsoons. 3. *நிலையின்மை;* fickleness, hesitation, fluctuation of mind. "மனம் ஈராட்டிப்படுகின்றது." (இ.வ.).

*[இரு - ஈர் + ஆட்டி. ஆடு - ஆட்டு - ஆட்டி. இருபாலும் இழுக்கப்படல் ஆட்டப்படுதல்.]*

**ஈராட்டை** *īrāṭṭai,* பெ. (n.) *இரண்டு ஆண்டுகள்;* two years.

*[இரு - ஈர் + ஆட்டை. ஆண்டு - ஆண்டை - ஆட்டை.]*

**ஈராட்டைப்பூடு** *īrāṭṭaippūḍu,* பெ. (n.) *இரண்டு ஆண்டு நிலைத்திருக்கும் பூடு அல்லது இரண்டு ஆண்டுக் கொருமுறை பூத்துக் காய்க்கும் பூடு;* plant which lives only for two years or which produces its flower and fruit once in two years. (சா.அக.).

*[இரு + ஆட்டை + பூடு. ஆண்டு - ஆண்டை - ஆட்டை. பூண்டு - பூடு.]*

**ஈராடி** *īrāḍi,* பெ. (n.) 1. *ஈரம்* (யாழ்.அக.); wetness, dampness. 2. *மழைக் குணம்;* cloudiness.

*[ஈரம் + ஆடு - ஆடி. ஈரம் ஆடியது என்பது ஈரம் பட்டது எனப் பொருள்படும்.]*

**ஈராண்டு மூலி** *īrāṇḍu mūli,* பெ. (n.) *சித்தர்கள் பசியெடுக்காதிருக்கவேண்டி இரண்டு ஆண்டிற் கொருமுறை யுட்கொள்வதாகக் கருதப்பட்ட அரிய தோர் மூலிகை;* unknown drug said to be taken by Siddhars once in two years with a view to keeping off hunger. (சா.அக.).

*[இரண்டு - இரு - ஈர் + ஆண்டு + மூலி.]*

**ஈரான்** *īrāṉ,* பெ. (n.) *பாரசீகம்;* Iran formerly known as Persia, (muham).

**ஈரி**[1] *īri,* பெ. (n.) 1. *இளம் மகளிர் கழற்சிக் காய்களில் ஒன்றை எற்றியும் பலவற்றை அள்ளியும் ஆடும் விளையாட்டு;* play of girls, usu. with molucca beans, in which first two and then more beans are taken up together from the ground while one bean is tossed in the air. 2. *ஐந்து அல்லது ஏழு கூழாங்கற்களைக் கொண்டு சிறுமியர் ஆடும் கொக்கான் விளை யாட்டு;* a game played by girls with five or seven pebbles.

*[இரண்டு - இரு - ஈர் → ஈரி.]*

**ஈரி**[2] *īri,* பெ. (n.) 1. *கந்தை;* rags, torn clothes. 2. *பலாக்காய்த் தும்பு;* fibres between the pulps in a jack fruit.

*[ஈர்தல் = பிளத்தல். ஈர் - ஈரி = பிளவுண்டது. பிய்ந்தது, சிதர்ந்த சிதார்.]*

**ஈரி**[3]**-த்தல்** *īri-*, 4 செ.கு.வி. (v.i.) 1. ***ஈரமாதல்;*** to become wet, moist, damp, cool. "சோறு ஈரித்துவிட்டது." 2. ***குளிர்தல்;*** to be cool, as a breeze; to be benumbed, or stiffened, by coldness or disease. "ஈரித்த தென்றல்" (குமர.பிர.மதுரைக்.31).

*[ஈரம் → ஈரி.]*

**ஈரி**[4] *īri*, பெ. (n.) ***மனக்கனிவுள்ளவன்;*** affectionate person. "என் கண்ணனுக்கென்றீரியா யிருப்பாள்" (திவ்.திருவாய்.6,7,9).

*[ஈரம் → ஈரி.]*

**ஈரிச்சல்** *īriccal* பெ. (n.) ***ஈரி-த்தல்*** பார்க்க: see *īri*. (சா.அக.).

*[ஈரித்தல் - ஈரிச்சல்.]*

**ஈரிடம்** *īriḍam*, பெ. (n.) ***இரண்டிடம்*** (தொல்.சொல். 226); two places. "முன்னிலை தன்மை ஆயீரிடத்தொடும்" (தொல்.சொல்.வினை.29).

*[இரண்டு → இரு → ஈர் + இடம்.]*

**ஈரிணம்** *īriṇam*, பெ. (n.) ***உழமண் நிலம்;*** soils of fuller's earth.

*[ஒருகா. ஈரம் + நிலம் = ஈரநிலம் → ஈரிலம் → ஈரிணம்.]*

**ஈரித்த சோறு** *īritta-sōṟu*, பெ. (n.) ***சில்லிட்டு ஈரந்தங்கிய சோறு;*** watery boiled rice which has absorbed moisture through coldness. ***ஈரலித்த சோறு*** (சா.அக.) பார்க்க; see *īralitta sōṟu*.

*[ஈரம் → ஈரித்தல் → ஈரித்த + சோறு.]*

**ஈரித்துப் போ-தல்** *īrittu-p-pō-*, 8 செ.கு.வி. (v.i.) 1. ***குளிர் அல்லது நோயினால் தொடுவுணர் வற்றுப் போதல்;*** to be benumbed or deadened by coldness or disease. 2. ***குளிர்ந்து போதல்;*** to get cold or moist. (சா.அக.).

*[ஈரம் → ஈரித்தல் → ஈரித்து + போதல்.]*

**ஈரிப்பு** *īrippu*, பெ. (n.) 1. ***ஈரம்;*** dampness, moisture. 2. ***நட்பு*** (ஈடு.2,4,3); friendship.

*[ஈரம் - ஈரி - ஈரிப்பு.]*

**ஈரிம்பு** *īrimbu*, பெ. (n.) 1. ***ஈரம்;*** moisture, dampness. 2. ***குளிர்மை;*** coldness.

*[ஈரம் - ஈரிப்பு - ஈரிம்பு.]*

**ஈரிய** *īriya*, கு.பெ.எ. (adj.) 1. ***ஈரமுள்ள;*** damp, wet. 2. ***குளிர்ந்த*** (ஆ.அக.); cold. "ஈரிய நிறம்பூ வாளி" (திருவிளை.மாயப்.21). 3. ***அன்புடைய;*** kindly, loving, affectionate. "ஈரிய நெஞ்சம்"

*[ஈரம் → ஈரி → ஈரிய.]*

**ஈரியம்** *īriyam*, பெ. (n.) ***உடம்பின் நான்குவகை நிலைகள். அவையாவன: நடத்தல், நிற்றல், இருத் தல், கிடத்தல்;*** four positions of the body viz., going, standing upright, sitting and lying down.

*[ஈரி → ஈரியம். ஈரித்தல் = பிளத்தல், இரண்டாக அல்லது நான்காகப் பிளவுபடுதல், நான்கு வகை.]*

**ஈரிலை** *īrilai*, பெ. (n.) ***ஞாயிறு*** (அக.நி.); sun. (செ.அக.).

*[ஒருகா. ஏர் + எல் - ஏரெல் - ஈரில் - ஈரிலை. ஏரெல் -எழுஞாயிறு.]*

**ஈரிலைத் தாமரை** *īrilai-t-tāmarai*, பெ. (n.) ***ஒருவகைப் பூடு;*** a kind of flowering (lotus) plant with leaves divided in to two parts. It is opposed to ஓரிலைத் தாமரை.

*[இரண்டு → இரு → ஈர் + இலை + தாமரை.]*

**ஈரிலைப்பயிர்** *īrilai-p-payir*, பெ. (n.) ***இரண்டிலையுள்ள இளம்பயிர்;*** young shoot when two blades appear. (w.).

*[இரண்டு → இரு → ஈர் + இலை + பயிர்.]*

**ஈரிழை** *īrilai*, பெ. (n.) ***ஆடையினிரட்டை நூல்;*** double thread used in weaving, as in muslin.'ஈரிழைத் துண்டு.'

ம. ஈரிழ.

*[இரண்டு → இரு → ஈர் + இழை.]*

**ஈரிறை** *īṟai*, பெ. (n.) 1. ***ஈரரசு;*** dyarchy. 2. ***இரண்டு முறை பெறும் வரி;*** double duty or similar impost. "நானும் பிறந்து அவர்களும் பிறக்க வேணுமோ? ஈரிறையுண்டோ?" (ஈடு.1,3,ப்ர.).

*[இரண்டு → இரு → ஈர் + இறை.]*

**ஈரீற்றா** *īrīṟṟā* பெ. (n.) ***இரண்டாம் ஈற்று மாடு*** (ஆ.அக.); the cow which yeaned for the second time.

*[இரண்டு → இரு → ஈர் → ஈற்று + ஆ.]*

**ஈருடல்** *īruḍal*, பெ. (n.) ***இருதன்மைத்தான வுடல்;*** body, which has two features. (ஆ.அக.) ஈருடல் ஒருயிர் (உ.வ.).

*[இரண்டு → இரு → ஈர் + உடல்.]*

**ஈரு-தல்** *īru-*, 5 செ.கு.வி. (v.i.) 1. ***ஈர்தல்;*** to fascinate. (ஆ.அக.). 2. ***வருத்துதல்;*** to afflict. "காமநோய் ஈருகின்றது" (கந்தபு.மாயைப்.72).

*[ஈர் → ஈரு. ஈருதல்.]*

**ஈருயிர்** *īruyir*, பெ. (n.) ***சூல்;*** pregnancy as the body is consisting of two lives. (சா.அக.).

*[இரண்டு → இரு → ஈர் + உயிர்.]*

**ஈருயிர்க்காரி** *īruyir-k-kāri*, பெ. (n.) ***சூல்கொண்ட பெண்;*** pregnant woman, as holding two lives. (w.).

*[இரண்டு → இரு - ஈர் + உயிர் + காரி.]*

**ஈருயிர்ப்பிணவு** *īruyir-p-piṇavu*, பெ. (n.) ***சூற்கொண்ட பிணவு*** (அகநா.72); pregnent female, either human or animal, having another life within her.

*[இரண்டு → இரு → ஈர் + உயிர் + பிணவு.]*

**ஈருயிராயிருத்தல்** *īryuirā-yiruttal,* பெ. (n.) ***கருக் கொண்ட பெண்ணாயிருத்தல்;*** woman in a state of pregnancy. (சா.அக.).

*[இரண்டு → இரு → ஈர் + உயிராய் + இருத்தல்.]*

**ஈருவாதி** *īru-vādi,* பெ. (n.) ***குப்பைக்கீரை;*** rubbish green. (சா.அக.).

*[ஒருகா. ஈரம் + வளர்த்தி = ஈரவளர்த்தி → ஈரவாதி → ஈருவாதி.]*

**ஈருவா** *īruvā,* பெ. (n.) ***காருவா, வெள்ளுவாக்கள்;*** new moon and full moon.

*[இரண்டு → இரு → ஈர் + உவா.]*

**ஈருருவி** *īruruvi,* பெ. (n.) ***ஈர்வலி*** பார்க்க (யாழ்ப்.); see *īrvali.*

*[இரண்டு → இரு → ஈர் + உருவி.]*

**ஈருள்** *īrul,* பெ. (n.) ***ஈரல்*** பார்க்க; see *īral,* "ஈருட்டடி மூடி." (சீவக.2791). (அகநா.394.8).

*[இரண்டு - இரு - ஈர் + உள்.]*

**ஈருள்ளி** *īrulli,* பெ. (n.) ***வெங்காயம்*** (மூ.அ.); onion, allium cepa.

**ம., க.** ஈருள்ளி; **தெ.** நீருல்லி, நீருல்லெ; **து.** நீருள்ளி.

*[ஈரம் + உள்ளி. உள்ளே ஈரமுடையது.]*

**ஈருள்ளிக்கோரை** *īrulli-k-kōrai,* பெ. (n.) ***கோரை வகை;*** a sedge, culon terete, cyperus articulatus. (செ.அக.).

*[ஈரம் + உள்ளி + கோரை.]*

**ஈரெச்சம்** *īreccam,* பெ. (n.) 1. ***பெயரெச்சம்;*** adjective. 2. ***வினையெச்சம்:*** adverb.

*[இரண்டு → இரு → ஈர் + எச்சம்.]*

**ஈரென்புப் பொருத்து** *īrenbu-p-poruttu,* பெ. (n.) ***நடுவே சதைப் பற்றின்றி இரண்டெலும்புங்கூடிய அசையா மூட்டு;*** an immovable joint with no intervening tissue between the bones - Synarthrosis. (சா.அக.).

*[இரண்டு → இரு → ஈர் + என்பு + பொருத்து.]*

**ஈரெண்வகைக்கூலம்** *īrenvagai-k-kūlam,* பெ. (n.) ***நெல், புல், வரகு, தினை, சாமை, இறுங்கு, தோரை, இறகி (ராகி.), எள், கொள், பயறு, உழுந்து, அவரை, கடலை; துவரை, மொச்சை என்பன;*** sixteen varieties of grain.

*[இரண்டு - இரு + ஈர் + எண் + வகை + கூலம்.]*

**ஈரெழுத்து ஒருமொழி** *īreluttu-orumoli,* பெ. (n.) ***இரண்டெழுத்துகளாலாகிய சொல்*** (தொல். சொல்.45); word made of two letters. (பல, சில).

*[இரண்டு - இரு - ஈர் + எழுத்து + ஒரு + மொழி.]*

**ஈரொட்டு**[1] *īrottu,* பெ. (n.) ***உறுதியின்மை;*** uncertainty, doubt. 'நோயாளியின் காரியம் ஈரொட்டாயிருக்கிறது' (உ.வ.).

*[இரு → ஈர் + ஒட்டு = ஈரொட்டு = இருவகை.]*

**ஈரொட்டு**[2] *īrottu,* பெ. (n.) ***உறுதியின் அடிப்படையி லமைந்த கொள் கொடை;*** conditional bargain.

*[இரு → ஈர் + ஒட்டு = ஈரொட்டு. ஒட்டு = ஆணை, சூளுரை, உறுதிமொழி. இரு → ஈர் = பெரிது, மிகுதி.]*

**ஈரொற்றுவாரம்** *īroṟṟu-vāram,* பெ. (n.) ***இரண்டு மாத்திரை பெற்றுவருஞ் செய்யுள்*** (சிலப்.3,136, உரை); musical composition sung with double beat.

*[இரண்டு → இரு → ஈர் + ஒற்று + வாரம்.]*

**ஈலி** *īli,* பெ. (n.) 1. ***கைவாள்;*** sword. 2. ***சுரிகை;*** dagger.

*[இல் (குத்துதல்) → ஈல் → ஈலி.]*

**ஈவி-த்தல்** *īvi-,* 4 செ.குன்றாவி. (v.t.) ***பங்கிடுதல்;*** to distribute, apportion.

*[ஈதல் = தருதல், பங்கிடுதல். ஈ → ஈவி → ஈவித்தல் (பி.வி.).]*

**ஈவிழுங்கி** *ī-vilungi,* பெ. (n.) 1. ***ஈயை விழுங்கும் பறவை;*** fly-catcher. 2. ***ஈத்தின்னும் பல்லி;*** fly-catching lizard. 3. ***ஈயுண்ணுஞ் செடி;*** fly-trap. 4. ***எதையும் நம்பும் மூடன்;*** simpleton who believes in any and everything told.

*[ஈ + விழுங்கு. ஈ = ஈதல்.]*

**ஈவிரக்கம்** *īvirakkam,* பெ. (n.) ***மனக்கசிவு;*** compassion associated with liberality, sympathy. (colloq).

*[ஈவு + இரக்கம்.]*

**ஈவு** *īvu* பெ. (n.) 1. ***கொடை;*** giving, bestowing. "ஈவுதனை மேற்கொண்ட" (கம்பரா.கார்முக.22). 2. ***நன்கொடைப் பொருள்;*** gift, donation. "புத்தியுள்ள மனைவியோ, கர்த்தருளும் ஈவு" (விவிலி.நீதி.19,14). 3. ***பங்கிடுகை;*** distribution, sharing. 4. ***ஒழிகை;*** disappearance, vanishing. "ஈவிலாத தீவினைகள்" (திவ்.திருவாய்.4,7,3). 5. ***கணக்கிற் பிரித்துக் கண்டபேறு;*** quotient. (math.).

**ம.** ஈவு; **க.** ஈ; **தெ.** ஈவி.

*[ஈ - ஈவு.]*

**ஈவுக்கணக்கு** *īvu-k-kanakku,* பெ. (n.) 1. ***வகுத்தல் கணக்கு;*** division (w.). 2. ***பிரிவு;*** part. 3. ***கணக்கு;*** mathematics.

*[ஈவு + கணக்கு.]*

**ஈவுசோய்வு** *īvu-šōyvu,* பெ. (n.) 1. ***மனம் இளகிக் கொடுக்கும் கொடை*** (யாழ்.அக.); gift out of sympathy. 2. ***கொடையும் இளக்காரமும்;*** charity and debasement.

*[ஈவு + சோய்வு, சோர்வு → சோய்வு.]*

**ஈவுசோர்வு** *īvu-šōrvu,* பெ. (n.) ***சூழ்நிலை அமைவு;*** seasonableness and unseasonableness with particular reference to the resources on hand. "ஈவு சோர்வு பார்த்துச் செய்ய வேண்டும்" (இ.வ.).

*[ஒருகா. ஈவு சோவு - ஈவுசோர்வு.]*

**ஈவுதரம்** *īvu-taram,* பெ. (n.) ***சராசரி வரித்தண்டல்;*** average collection (G.Tn.D.288).

*[ஈவு + தரம். ஈவு = கொடுத்தல். தரம் = அளவு.]*

**ஈவுமானியம்** *īvu-māniyam,* பெ. (n.) ***நில வரும்படிக் குத் தக்கபடி ஈவித்துக் கொடுக்கும் உரிமை;*** grant of a proportion or percentage on any branch of land revenue, which fluctuates with the improvement or deterioration of the produce. (R.F.).

*[ஈவு + மானியம்.]*

**ஈவோன்** *īvōn,* பெ. (n.) 1. ***கொடையாளி;*** donor, benefactor. 2. ***கற்பிப்போன்*** (தொல்.பாயி.உரை.); teacher.

ம. ஈவோன்.

*[ஈ → ஈவோன்.]*

**ஈழக்கருங்காசு** *īḻa-k-karuṅkāšū,* பெ. (n.) ***பழைய நாணய வகை;*** an old coin (M.E.R.47 of 1925).

*[ஈழம் + கரும் + காசு.]*

**ஈழக்காசு** *īḻa-k-kāšu,* பெ. (n.) ***நாணய வகை;*** a coin of Srilanka (I.M.P.Tj.38) ஈழநாட்டு நாணயம்.

ம. ஈழக்காசு.

*[ஈழம் + காசு.]*

**ஈழக்குலச்சான்றார்** *īḻa-k-kulaccāṉṟār,* பெ. (n.) ***சான்றார் பிரிவினர்*** (பெரியபு.ஏனாதி.2); division of the cāṉār caste.

*[ஈழம் + குலம் + சான்றார். சான்றார் = போர்மறவர்.]*

**ஈழங்கனாக் காண்(ணு)-தல்** *īḻaṅ-kaṉā-k-kāṉ-,* 12 செ.கு.வி. (v.i.) ***கண்ணாற் காணாததைக் கனவில் காணுதல்*** (திவ்.திருக்குறுந்.1.வியா.); to dream of things which had never before been in one's experience, referring to the dream experiences of those in ancient times who had not seen Ceylon.

*[ஈழம் + கனா + காணுதல் • ஈழத்துக்குப் பண்டைக் காலத்தில் சேரன்தீவு எனப்பெயரிருந்தது. அந்நாட்டுச் சேர இளவரசர்கள் எவரும் கண்டும் கேட்டு மிராத புதுமைப் பொருள்களைத் தம் கடற்பயணங்களால் கொணர்ந்து சேர்த்ததால் ஈழக்கனவு புதுமை காணலுக்கு ஆயிற்று.]*

**ஈழங்கிழங்கு** *īḻaṅ-kiḻaṅgu,* பெ. (n.) ***பெருவள்ளி;*** wing-stalked yam.

ம. ஈழச்சேம்பு.

*[ஈழம் + கிழங்கு.]*

**ஈழச்சேரி** *īḻa-c-cēri,* பெ. (n.) ***கள்ளிறக்குபவர் வாழிடம்;*** locality inhabited by toddy-drawers. (S.I.I.ii.44).

*[ஈழவர் + சேரி - ஈழவச்சேரி → ஈழச்சேரி.]*

**ஈழஞ்சுற்றியோடல்** *īḻañcuṟṟi-y-ōḍal,* பெ. (n.) ***இலங் கையின் கிழக்கு வழியே செல்லுங் கப்பற் செலவு*** (பயணம்); sailing round the eastern side of Ceylon.

*[ஈழம் + சுற்றி + ஓடல்.]*

**ஈழத்தலரி** *īḻattalari,* பெ. (n.) ***அலரி வகை;*** pagoda tree.

ம. ஈழத்தலரி.

*[ஈழம் + அத்து + அலரி.]*

**ஈழத்தி** *īḻatti,* (n.) ***கல்லத்தி;*** hill banyan.

*[ஈழம் + அத்தி.]*

**ஈழத்திமரவாழை** *īḻatti-maravāḻai,* பெ. (n.) 1. ***ஈழநாட் டின் மரவாழை;*** a kind of plantain in Srilanka. 2. ***நாட்டுமர வாழை;*** indegenous plantain. (சா.அக.).

ம. ஈழத்தி மரவாழ.

*[ஈழம் + அத்து + மரம் + வாழை. அத்து → அத்தி - சாரியைத்திரிபு.]*

**ஈழத்துத் தேங்காய்** *īḻattu-t-teṅgāy,* பெ. (n.) ***இலங் கையில் விளையும் தேங்காய்*** (யாழ்ப்பாணத்துக்காய் என்றும் சொல்வதுண்டு); cocoanut variety of Srilanka. (சா.அக.).

*[ஈழம் + அத்து + தேங்காய்.]*

**ஈழத்துணவு** *īḻattuṇavu,* பெ. (n.) ***ஈழநாட்டு உணவுப் பொருள்கள்;*** food preparation from Srilanka. "ஈழத்து ணவும் காழகத் தாக்கமும்" (பட்டினப்.).

*[ஈழம் + அத்து + உணவு.]*

**ஈழத்துப்பூதன்றேவன்** *īḻattu-p-pūdaṉṟēvaṉ,* பெ. (n.) ***கடைக் கழகப் புலவருள் ஒருவர்*** (குறுந்.343); a poet of Sangam Age.

*[ஈழம் + அத்து + பூதன் + தேவன். பூதன்றேவன் → பூதன்மகன் தேவன்.]*

**ஈழநாடு** *īḻa-nāḍu,* பெ. (n.) ***இலங்கை*** (தேவா.1239.7); Srilanka (Ceylon).

ம. ஈழத்து நாடு.

*[ஈழம் + நாடு.]*

**ஈழப்புளி** *īḻa-p-puḷi,* பெ. (n.) ***கொடுக்காய்ப் புளி;*** malabar gamboge.

*[ஈழம் + புளி.]*

**ஈழம்** *īḻam,* பெ. (n.) 1. ***இலங்கை*** (சிங்களம்) (திவா.); Srilanka (Ceylon). 2. ***பொன்*** (இரகுநகர.68); gold. 3. ***கள்*** (சூடா.); toddy, arrack. 4. ***கள்ளி*** (மலை.); spurge.

ம. ஈழம்; *pāli.* Sīhala.

*ஈழம் = ஈழநாடு, ஈழத்தில் விளைந்த பொன் மாழை. 1. இல் = குத்தல், தாழ்வு, பள்ளம், கிழக்கு. இல் → ஈல் → ஈளம் → ஈழம் = கிழக்கிலுள்ள 2. கிழக்கினின்று வந்தபொன். 3. ஈள் → ஈளம் (ஈளை) = தொய்வு, மயக்கம். ஈளம் → ஈழம் = மயக்கமுண்டாக்கும் கள். 4. உட்சாறு(கள்) கொண்ட கள்ளிச்செடி.]*

**ஈழம்புஞ்சை** *īḻam-puñjai,* பெ. (n.) ***வரிவகை;*** tax (S.I.I.Vii,122).

*[ஈழம் + பூட்சி = ஈழப்பூட்சி → ஈழப்பூஞ்சி → ஈழப்புஞ்சை.]*

**ஈழம்பூட்சி** *īḻam-pūṭci,* பெ. (n.) ***ஒரு பழைய வரி;*** ancient tax. (S.I.I.ii, 521,31).

*[ஈழம் + பூட்சி. ஈழம் = கள். பூண் → பூட்சி (கடமையாகச் செலுத்தப்பட்டது. ஈழப்பூட்சி=கள் வரி.]*

**ஈழமண்டலம்** *īḻa-maṇḍalam,* பெ. (n.) ***இலங்கை;*** country of Srilanka (Ceylon.) "ஈழமண்டல மளவு திறைகொண்ட" (தமிழ்நா.253).

*[ஈழம் + மண்டலம்.]*

**ஈழவக்கத்தி** *īḻava-k-katti,* பெ. (n.) ***ஈழவர்க்குரிய கத்தி*** (தொல்.எழுத்.153,உரை); knife used by īḻavas.

*[ஈழவர் + கத்தி.]*

**ஈழவர்** *īḻavar,* பெ. (n.) **ஈழவன்** பார்க்க; see *īḻavaṉ.*

*[ஈழம் → ஈழவர்.]*

**ஈழவன்** *īḻavaṉ,* பெ. (n.) ***மலையாள நாட்டிற் கள்ளிறக்கும் குடியினன்;*** class of people who emigrated from ceylon in the remote past and settled in Tirunelveli district and Kerala, the caste of toddy-drawers. 'தெங்கும் பனையும் இவர்கள் மனமின்றி ஈழவர் ஏறப் பெறாதா ராகவும்' (S.I.I.ii,509).

**ம.** ஈழவன்; **க.** ஈடிக; **தெ.** ஈடிக.

*[ஈழம் → ஈழவன்.]*

**ஈழற்கடிவரி** *īḻaṟkaḍivari,* பெ. (n.) ***வரிவகை;*** tax. (S.I.I.vii,24) (செ.அக.).

*[ஈழன் + கு + அடிவரி. ஈழநாடு காத்தற்குரிய வரியாகலாம்.]*

**ஈழுவன்** *īḻuvaṉ,* பெ. (n.) **ஈழவன்** பார்க்க; see *īḻavaṉ.*

**ஈழை** *īḻai,* பெ. (n.) 1. ***தொய்வு;*** slackening. 2. ***இளைப்பு;*** emaciation. 3. ***ஈளைநோய்;*** asthma. 4. ***பித்தம்;*** bile. 5. ***மஞ்சள் நிறம்;*** yellow colour.

*[ஈளை → ஈழை.]*

**ஈழைக்கொல்லி** *īḻai-k-kolli,* பெ. (n.) ***அரிதாரம்*** (சங்.அக.); yellow dye, orpiment. (செ.அக.).

*[ஈளை - ஈழை + கொல்லி.]*

**ஈளம்** *īḷam,* பெ. (n.) ***பாதிரி*** (சங்.அக.); yellow flower, fragrant trumpet flower-tree. (செ.அக.).

*[ஈளை - ஈளம்.]*

**ஈளமிளகு** *īḷa-miḷagu,* பெ. (n.) ***கொச்சி மிளகு;*** Cochi pepper. (சா.அக.).

*[ஈழம் + மிளகு. ஈழம் → ஈளம். ஈழத்திலிருந்து கொணர்ந்து பயிராக்கிய மிளகு.]*

**ஈளை** *īḷai,* பெ. (n.) 1. ***கோழை;*** phlegm. "ஈளையேங்கி யிருமி" (திவ்.பெரியதி.1,3,6). 2. ***இளைப்பு;*** asthma. "ஈளையும் வெப்பும்" (திருமந்.263). 3. ***எலும்புருக்கி நோய்;*** consumption, tuberculosis. 4. ***உமிழ் நீர்;*** saliva, spittle. (சேரநா.).

**ம.** ஈள; **க.** ஈளெ.

*[இளை → ஈளை.]*

**ஈளைக்காரன்** *īḷai-k-kāraṉ,* பெ. (n.) ***கோழை நோயாளி*** (ஆ.அக.); patient afflicted with bronchitis.

*[ஈளை + காரன்.]*

**ஈளைக்கொல்லி** *īḷai-k-kolli,* பெ. (n.) 1. ***காசநோயைக் கொல்லும் மருந்து;*** any medicine capable of killing (curing) asthma. 2. ***தாளகம்;*** orpiment. (சா.அக.).

*[ஈளை + கொல்லி.]*

**ஈளைத்தரை** *īḷai-t-tarai,* பெ. (n.) ***ஈரத்தரை;*** moist ground. "தெய்வத் தானமும் ... உமியும் பரலும் சேர்ந்த நிலம் களித்தரை, உவர்த்தரை, ஈளைத்தரை, பொல்லாச் சாம்பல் தரை பொடித்தரை என்று சொல்லப்பட்டன ஒழிந்து" (சிலப்.3.96,உரை).

*[ஈரம் → ஈலம் → ஈளம் + தரை.]*

**ஈளைபிடித்தான்** *īḷai-piḍittāṉ,* பெ. (n.) **ஈளைக்காரன்** பார்க்க: see *īḷai-k-kāraṉ.*

*[ஈளை + பிடித்தான்.]*

**ஈளையிருமல்** *īḷai-y-irumal,* பெ. (n.) ***கோழையுடன் கூடிய விருமல்;*** a cough attendant on expectoration, a wet cough. (சா.அக.).

*[ஈளை + இருமல்.]*

**ஈற்றசை** *īṟṟasai,* பெ. (n.) ***அடியிறுதி, சொல்லிறுதிக ளில் வரும் அசைச்சொல்*** (சீவக.334,228); expletive at the end of a line or sentence in a verse or at the end of a word.

*[ஈறு → ஈற்று + அசை.]*

**ஈற்றடி** *īṟṟaḍi,* பெ. (n.) ***செய்யுளின் இறுதியடி;*** last line of a verse

*[ஈறு → ஈற்று + அடி.]*

**ஈற்றம்** *īṟṟam,* பெ. (n.) 1. ***ஈனுகை;*** giving birth, bringing forth. "பேரறத் தாலீற்றம்" (சிறுபஞ்.74). 2. ***பெண் விலங்குகளின் பிறப்புறுப்பு;*** the generative organ of female animals. (சேரநா.).

**ம.** ஈற்றம்.

*[ஈன் → ஈற்றம்.]*

**ஈற்றயல்** *īṟṟayal,* பெ. (n.) ***இறுதிக்கடுத்தது;*** penultimate. "ஈற்றய லாவோ வாகலும்" (நன்.353).

*[ஈறு → ஈற்று + அயல்.]*

**ஈற்றரத்தம்** *īṟṟarattam,* பெ. (n.) ***பல்லீறுகளில் ஏற்படும் குருதி ஒழுக்கு;*** oozing of the blood from the gums, ulorrhea.

*[ஈறு → ஈற்று + அரத்தம்.]*

**ஈற்றா** *īṟṟā,* பெ. (n.) ***கன்றீன்ற பெற்றம்*** (சூடா.); cow that has calved. "ஈற்றாவை வெகுளவிடுத்து" (திருவிளை.பழியஞ்.37).

ம. ஈற்ற.

*[ஈன் → ஈற்று + ஆ.]*

**ஈற்று** *īṟṟu* பெ. (n.) 1. ***ஈனுகை;*** bringing forth, applied to animals. "மானீனு மீற்றினிடை" (பிரபோத.11,88). 2. ***ஈனப்பட்டது;*** young one brought forth. "தலையீற்று". 3. ***மரக்கன்று;*** young plant. - பெ.எ. (adj.) ***கடைசி;*** last. "ஈற்றுப்பல்."

ம. ஈற்று; க. ஈன்; தெ. ஈனு, ஈக.

*[ஈன் → ஈற்று.]*

**ஈற்றுக்கடன்** *īṟṟu-k-kaḍaṉ,* பெ. (n.) ***இறுதிக் கடன்;*** funeral rites, being the last duty to be performed to one's relative. "ஈற்றுக் கடன் பிறவுந் தாதைக்கு விதியா லாற்றி" (திருவிளை.தடாதகை.42).

*[ஈறு → ஈற்று + கடன்.]*

**ஈற்றுத்தாய்** *īṟṟu-t-tāy,* பெ. (n.) ***பெற்ற தாய்*** (திவ்.பெரியாழ்.3,9,4); one's own mother, dist. fr. māṟṟu-t-tāy.

*[ஈன் - ஈற்று + தாய்.]*

**ஈற்றுமிசை** *īṟṟu-misai,* பெ. (n.) ***ஈற்றயல்*** பார்க்க; see *īṟṟayal.* 'பாவு மென்னு மீற்றுமிசை உகரம் மெய்யொடுங் கெட்டுக் கால மயக்கமாய் நின்றது (திருக்கோ.164,உரை).

*[ஈறு → ஈற்று + மிசை.]*

**ஈற்றுளை-தல்** *īṟṟuḷai-,* 2 செ.கு.வி. (v.i.) ***மகப்பேற்று வலி, பேறுகாலப் பையுள்;*** to travail, to undergo pangs of child birth.(த.சொ.அக.).

*[ஈன் → ஈற்று + உளை.]*

**ஈற்றெழுத்து** *īṟṟeḻuttu,* பெ. (n.) ***உயிர் பன்னிரண்டும், ஞ், ண், ந், ம், ய், ர், ல், வ், ழ், ள், ன் என்னும் மெய் எழுத்துகளும்;*** twelve vowels and ஞ், ண், ந், ம், ய், ர், ல், வ், ழ், ள், ன் eleven consonants (த.சொ.அக.).

*[ஈறு → ஈற்று + எழுத்து. சொல்லுக்கு ஈறாகும் எழுத்து ஈற்றெழுத்து எனப்பட்டது.]*

**ஈற்றெழுத்துக் கவி** *īṟṟeḻuttu-k-kavi,* பெ. (n.) ***முதற் பாட்டின் ஈற்றில் வரும் சொல்லேனும் எழுத்தேனும் அடுத்த செய்யுளின் அல்லது அடியின் தொடக்க எழுத்தாகவோ சொல்லாகவோ வருவது;*** starting a new stanza with a letter or word from the end of the previous stanza in verse.

*[ஈறு - ஈற்று + எழுத்து + கவி.]*

**ஈற்றெழுத்துக் கவி சொல்லல்** *īṟṟeḻuttu-k-kavi-sollal,* பெ. (n.) ***ஒருவர் கூறிய பாட்டின் கடையெழுத்தை முதலாகக் கொண்டு பிறர் கவியை ஒப்பித்தல்;*** exhibition of one's memory in which after one has recited a verse, another, must recite a verse beginning with the last letter of that very verse or the letter next to it.

*[ஈறு → ஈற்று + எழுத்து + கவி + சொல்லல்.]*

**ஈற்றேறு-தல்** *īṟṟēṟu-,* 5 செ.கு.வி. (v.i.) ***பயிர்க்கரு முதிர்தல்;*** grain maturing on the stalk. "சாலி யீற்றேறும் போது" (ஏரெழு.47) (செ.அக.).

*[ஈன் - ஈற்று + ஏறுதல்.]*

**ஈறயில்** *īṟayil,* பெ. (n.) ***முரசு வெட்டி;*** gum lancet, a knife for incising the gums.

*[ஈறு + அயில்.]*

**ஈறல்** *īṟal,* பெ. (n.) 1. ***துயரம்;*** grief, as of a broken heart; deep-seated sorrow. என்னெஞ் சீறலை யாருக்குச் சொல்லி ஆற்றுவேன்' (யாழ்ப்.). 2. ***நெருக்கம்;*** closeness, thickness (w.).

*[இறு → இறல் → ஈறல். இறுக்குதல் = நெருக்குதல், நெருக்கும் துன்பம், நெருங்கப் பின்னும் பின்னல்.]*

**ஈறழற்சி** *īṟaḻaṟci,* பெ. (n.) ***பல்லீற்றுக்கேற்படும் எரிச்சல்;*** inflammation of the gum - gingivitis. (சா.அக.).

*[ஈறு + அழற்சி.]*

**ஈறற்பற்றை** *īṟaṟ-paṟṟai,* பெ. (n.) ***நெருக்கமான தூறு;*** dense thicket. (w.).

*[இறு → இறல். ஈறல் + பற்றை. இறுக்கம் = நெருக்கம்.]*

**ஈறாந்தம்** *īṟāndam,* பெ. (n.) ***ஆகமுடிவு;*** end, finiteness, utmost limit. (w.).

*[ஈறு + அந்தம்.]*

**ஈறாம் வரிசை** *īṟām-varišai,* பெ. (n.) ***கடைமுறை*** (திருவாலவா.); regularity of occuring in the final position. (த.சொ.அக.).

*[ஈறு + ஆம் + வரிசை.]*

**ஈறிலான்** *īṟilāṉ,* பெ. (n.) ***கடவுள்;*** God; He who has no end. "ஈறிலாரை யிவரணைந் தார்கொலோ" (கந்தபு.திருக்கல்.22).

*[ஈறு + இல்லான். இல்லான் → இலான்.]*

**ஈறிலி** *īṟili,* பெ. (n.) ***ஈறிலான்*** பார்க்க (அக.நி.); see *īṟilāṉ.*

*[ஈறு + இல்லி → இலி.]*

**ஈறு**[1] *īṟu,* பெ. (n.) 1. ***முடிவு*** (திவா.); end, termination. 2. ***இறப்பு;*** death. "புழுவுமீறெய்தின்" (காசிக. தேவ.அக.5). 3. ***எல்லை;*** limit, boundary. "கொன்ற மன்னரீறிலர்" (பாரத.நிரைமீ.49).

ம. ஈறு.

*[இறு → ஈறு. இறுதல் = முடிதல்.]*

**ஈறு**[2] *īṟu,* பெ. (n.) ***எயிறு, பல் நிற்கும் தசை;*** gum of the teeth.

*[இறு → ஈறு. இறு = இறுக்கிப் பிடிக்கும் தசை.]*

**ஈறு**[3] *īṟu-,* பெ. (n.) 1. ***பயன்*** (அக.நி.); result. 2. ***உப்பளம்;*** salt-pan.

*[இறு → ஈறு. இறு = முடிவு. இறுதி; வரப்புள்ள உப்பளம்.]*

**ஈறுகட்டல்** *īṟu-kaṭṭal,* தொ.பெ. (vbl.n.) ***ஈறு வீக்கம்;*** swelling of the gums. ***ஈறுகாப்பு*** பார்க்க: see *īṟukāppu.* (சா.அக.).

*[ஈறு + கட்டல.]*

**ஈறுகட்டி** *īṟu-kaṭṭi,* பெ. (n.) ***இதளியம்*** (சங்.அக.); calomel, bichloride of mercury.

*[ஈறு + கட்டி.]*

**ஈறுகடை** *īṟu-kaḍai,* பெ. (n.) ***இறுதிமுடிவு*** (யாழ்.அக.); final end.

*[இறு → ஈறு + கடை. இறு → இறுதி.]*

**ஈறுகரை-தல்** *īṟu-karai-,* 4 செ.கு.வி. (v.i.) ***பல்லீறு வீங்குதல்;*** to waste away as the gums of the teeth. (செ.அக.).

*[ஈறு + கரை.]*

**ஈறுகழலை** *īṟu-kalai,* பெ. (n.) ***பல்லீ றிலுண்டாகுங் கழலை;*** carcinoma of the gums-Ulocarcinoma. (சா.அக.).

*[ஈறு + கழலை.]*

**ஈறு கொப்புளம்** *īṟu-koppuḷam,* பெ. (n.) ***ஈறுகட்டி;*** a disease in which the roots of 2 or 3 teeth are marked by a violent swelling and pain-gumboil. (சா.அக.).

*[ஈறு + கொப்புளம்.]*

**ஈறுகொல்லி** *īṟu kolli,* பெ. (n.) ***ஈர்க்கொல்லி*** பார்க்க; see *īr-k-kolli.* (சா.அக.).

*[ஈறு + கொல்லி. ஈறு = ஈறில் உள்ள நோய்.]*

**ஈறு கொழு-த்தல்** *īṟu-koḻuttal,* 4 செ.கு.வி. (v.i.) ***பல்லீறு வீங்குதல்;*** to become swollen as the gums of the teeth. (செ.அக.).

*[ஈறு + கொழு-த்தல்.]*

**ஈறு தப்பின பேச்சு** *īṟu-tappiṉa-pēccu,* பெ. (n.) ***தகாத சொல்;*** improper language.

*[ஈறு + தப்பின + பேச்சு. ஒருகா: பல்லை மீறிய பேச்சு.]*

**ஈறு சுரப்பு** *īṟu-śurappu,* பெ. (n) ***ஈறு வீக்கம்;*** swelling of the gums through inflammation. (சா.அக.).

*[ஈறு + சுரப்பு.]*

**ஈறுநாவழற்சி** *īṟu-nā-v-aḻaṟci,* பெ. (n.) ***பல்லீறும் நாவும் புண்ணாதல்;*** inflammation of the gums and the tongue. (சா.அக.).

*[ஈறு + நா + அழற்சி. நாக்கு → நா.]*

**ஈறுபுண்** *īṟu-puṇ,* பெ. (n.) ***பற்களின் சந்தில் ஈறுகள் வெந்து நோயை யுண்டாக்குமோர் பல் வலி;*** superficial or deep-seated inflammation of the alveolar process-Interstilial gingivitis. (சா.அக.).

*[ஈறு + புண். ஈற்றுப்புண் → ஈறுபுண் (கொ.வ.).]*

**ஈறுவலி** *īṟu-vali,* பெ. (n.) 1. ***பல் லீற்றுக்குண்டாகும் வலி;*** inflammation of the gum of the teeth. 2. ***பல்லீறு நோய்;*** gingivitis. (சா.அக.).

*[ஈறு + வலி = ஈற்றுவலி → ஈறுவலி (கொ.வ.).]*

**ஈறு வெடிப்பு** *īṟu-veḍippu* பெ. (n.) ***குழந்தைகளுக்கு ஈறுசுரந்து வெடிப்புண்டாகிக் குருதி யொழுகு மோர் நோய்;*** an eruption in the gum of infants, attended with fissure and bleeding. (சா.அக.).

*[ஈறு + வெடிப்பு.]*

**ஈன்**[1] *īṉ,* பெ. (n.) 1. ***இவ்விடம்;*** this place. "ஈன் வருகென்ன" (தணிகைப்பு.வீராட்ட.89); 2. ***இவ்வுல கம்;*** *this world.* "ஈனு ம்ம்பரும் பெறலருங் குரைத்தே" (ஐங்குறு.401).

*[ஈ = அண்மைச் சுட்டு. ஈ → ஈன் = இவண், இங்கு.]*

**ஈன்**[2] *īṉ,* பெ. (n.) 1. ***மர வகை;*** ainecwood loc. 2. ***ஆச்சா*** (சித்.அக.); sal tree.

*[ஒருகா: ஊ - ஊன் - ஈன் (உயரமானது).]*

**ஈன்(னு)-தல்** *īṉ(ṉu)-,* 14 செ.குன்றாவி. (v.t.) ***கருவுயிர்த்தல்*** (நாலடி.400); to bear, bring forth, yean. 2. ***உண்டாக்குதல்;*** to produce, yield, bring into being. "நயனீன்று நன்றி பயக்கும்" (குறள்.97).

ம. ஈனுக; க., தெ., கோத., துட., பட., பர். ஈன்; பிரா. கீனிங்க்.

*[இல் - ஈல் - ஈன்.]*

**ஈன்றணிமை** *īṉṟaṇimai,* பெ. (n.) 1. ***புனிறு*** (திவா.); time immediately after calving, said of cow. "நாளீன் றணிய.... கன்று" (கூர்ம்பு.கன்னை.80).

*[ஈன்று + அணிமை.]*

**ஈன்றணிமைப்பால்** *īṉṟ-aṇimai-p-pāl,* பெ. (n.) ***மாடு கன்று போட்டவுடன் சுரக்கும் பால். இதைச் சீம் பால் என்றும் சொல்வதுண்டு;*** first milk given by a cow after calving.

*[ஈன்று + அண்மை + பால்.]*

**ஈன்றணுமை** *īnṟaṇumai* பெ. (n.) *ஈன்றணிமை* பார்க்க (தொல்.பொருள்.146); see *īnṟaṇimai.*

*[ஈன்று + அணிமை. அணிமை → அணுமை. (கொ.வ.).]*

**ஈன்றதாய்** *īnṟa-tāy,* பெ. (n.) ***பெற்ற தாய். ஐவகைத் தாயரில் ஒருவர்;*** mother who brought forth, one of ai-vagai-tāyar "உயிர்த்த பொழுதே ஒடிற் றீன்ற தாய்" (பிரபுலிங்.பிரபுதே.63) (செ.அக.).

*[ஈன் → ஈன்ற + தாய்.]*

**ஈன்ற நோக்காடு** *īnṟa-nōkkāḍu* பெ. (n.) ***பிள்ளை பிறந்ததால் உண்டாகும் வலி;*** pain which succeeds child birth-after pains. This is due to the contraction of the uterus.

*[ஈன்ற + நோக்காடு. நோக்காடு → நோவு.]*

**ஈன்றல்** *īnṟal,* தொ.பெ. (vbl.n.) 1. ***பெறுதல்;*** bringing forth. 2. ***உண்டாதல்;*** becoming. 3. ***விளைதல்;*** yielding. "இன் சொல் இனிதீன்றல் காண்பான்" (குறள்.99).

*[ஈன் → ஈன்றல்.]*

**ஈன்றார்** *īnṟār,* பெ. (n.) ***தந்தை தாயர்;*** father and mother. (ஆ.அக.).

*[ஈல் → ஈன் → ஈன்ற + (அவர்) ஆர்.]*

**ஈன்றாள்** *īnṟāḷ,* பெ. (n.) ***தாய்;*** mother. "ஈன்றாள் பசி காண்பானாயினும்" (குறள்.656).

*[ஈன் → ஈன்றவள் → ஈன்றாள்.]*

**ஈன்றான்** *īnṟāṉ,* பெ. (n.) ***தந்தை*** (பிங்.); father. (செ.அக.).

*[ஈன் → ஈன்றவன் → ஈன்றான்.]*

**ஈன்றுளார்** *īnṟuḷār,* பெ. (n.) ***தாய்தந்தையர்;*** parents. (ஆ.அக.) "ஆண்டையரோ எமை ஈற்றுளர்" (கந்தபு. சய.17).

*[ஈன் → ஈன்று + உளார்.]*

**ஈன்றோன்** *īnṟōṉ,* பெ. (n.) ***ஈன்றான்*** (சூடா.) பார்க்க; see *īnṟāṉ.* (செ.அக.).

*[ஈன்றான் → ஈன்றோன். ஆன் → ஓன். ஈறு திரிபு.]*

**ஈன்னம்** *īnnam,* பெ. (n.) ***வெள்ளி;*** silver. (சா.அக.).

*[ஈ → ஈயம் → ஈயன்னம் → ஈன்னம்.]*

**ஈனசாமந்தன்** *īṉa-šāmandaṉ,* பெ. (n.) ***சாமந்தர் வகையினர்*** (சுக்கிர.நீதி.26); class of Cāmantar.

*[ஈன + சாமந்தன்.]*

**ஈனதை** *īṉadai,* பெ. (n.) ***இழிவு;*** "தரமற வீனதை யடைய" (ஞானவா.தாகு.23). low state, degraded condition.

*[ஈன் → ஈனம் → ஈன்தை.]*

**ஈனம்**[1] *īṉam,* பெ. (n.) 1. ***இழிவு;*** degradation, baseness, meaness. "ஈனமா யில்லிருந்து" (நாலடி.198). 2. ***குறைபாடு;*** deficiency, want. (உரி.நி.).

*Skt.* hīna,

*[இல் → இள் (இளி, இழி) → ஈளம் → ஈனம் - என்பன தாழ்த்தலும் இழித்தலுமாகிய நேர்ப்பொருள் தரும் தூய தமிழ்ச் சொற்களாம். இவற்றை வடசொல்லெனக் காட்டல் பொருந்தாது.]*

**ஈனம்**[2] *īṉam,* பெ. (n.) ***சரிவு*** (அக.நி.); inclination, slope. (செ.அக.).

*[இல் → இள் → ஈளம் → ஈனம்.]*

**ஈனம்**[3] *īṉam,* பெ. (n.) ***முயல்*** (அக.நி.); hare.

*[இல் = மென்மை. இல் → ஈல் → ஈலம் → ஈனம்.]*

**ஈனல்** *īṉal* பெ. (n.) 1. ***கதிர்*** (வின்.). 2. ***ஈனுதல்;*** bringingforth, as a cow brings forth a calf. (சா.அக.).

*ஏனல்* பார்க்க; see *ēṉal.*

தெ. என்னு.

*[ஈன் → ஈனல்.]*

**ஈனவன்** *īṉavaṉ,* பெ. (n.) ***இழிந்தோன்*** (திவ்.இயற். நிரன்மு.6); degraded person, low fellow.

*[ஈனம் → ஈனவன்.]*

**ஈனன்** *īṉaṉ,* பெ. (n.) ***ஈனவன்*** பார்க்க (திருவாத.9, திருப்பெரு.133); see *īṉavaṉ.*

*[ஈனவன் → ஈனன்.]*

**ஈனா** *īṉā-,* பெ. (n.) ***ஈனாத பசுங்கன்று;*** uncalving cow-calf. (சா.அக.)

*[ஈன் + ஆ (எ.ம.இ.நி.).]*

**ஈனாக்கடாரி** *īṉā-k-kaḍāri,* பெ. (n.) ***கன்று போடாத ஆன் அல்லது எருமை;*** cow or buffalo that has not calved.

*[ஈன் + ஆ (எ.ம.இ.நி) + கடாரி.]*

**ஈனாக்குமரி** *īṉā-k-kumari,* பெ. (n.) ***மகப்பெறாத இளம்பெண்*** (வின்.); young woman who has not yet given birth to child.

*[ஈன் + ஆ (எ.ம.இ.நி.) + குமரி.]*

**ஈனாத்தாயர்** *īṉā-t-tāyar,* பெ. (n.) ***செவிலித்தாய்;*** foster mother. "ஈனாத் தாயர் மடுப்பவும் உண்ணாள்" (அகநா.105.6).

*[ஈன் + ஆ + தாயர். (ஆ.எ.ம.இ.நி).]*

**ஈனாமலடி** *īṉā-malaḍi,* பெ. (n.) 1. ***பிள்ளை பெறாத மலடி;*** barren woman. 2. ***மலட்டு ஆ;*** barren cow. (சா.அக.).

*[ஈல் + ஆ + மலடி.]*

**ஈனாமலடு** *īṉā-malaḍu,* பெ. (n.) ***ஈனாமாடு*** பார்க்க: see *īṉā-māḍu*

*[ஈன் + ஆ + மலடு.]*

**ஈனாமாடு** *īṉā-māḍu,* பெ. (n.) ***மலட்டு ஆன்;*** barren cow or buffalo. (செ.அக.).

*[ஈன் + ஆ + மாடு.]*

**ஈனாமேகப்பூ** *īṉā-mēga-p-pū,* பெ. (n.) ***செம்பரத்தம் பூ;*** shoe-flower. (சா.அக.).

*[ஈன் + ஆ + மேகம் + பூ.]*

**ஈனாயம்** *īṉāyam,* பெ. (n.) 1. ***இழிவு;*** ignominy, disgrace, dishonour. 2. ***இழித்துரை;*** rebuke, abuse. (ஆ.அக.).

*[ஈனம் + ஆயம்.]*

**ஈனாவரக்கி** *īṉā-v-arakki,* பெ. (n.) ***மகப்பெறாக் கொடியவள்*** (வின்.); cruel, merciless woman. lit., Rakṣasa woman who has not borne children. (செ.அக.).

ம. ஈனாஞ்சக்கி.

*[ஈன் + ஆ + அரக்கி.]*

**ஈனாவாழை** *īṉā-vāḻai,* பெ. (n.) ***பூ விடாத அல்லது குலைதள்ளாத வாழை மரம்;*** plantain tree which has not put forth flower. (சா.அக.).

*[ஈன் + ஆ + வாழை.]*

**ஈனில்** *īṉil,* பெ. (n.) ***பிள்ளைப்பேற்றிடம்;*** lying-in-chamber. ''பேடைச் செவ்வி நோக்கி யீனி லிழைக்க'' (பதினோ.திருவாரூ.19). (செ.அக.).

*[ஈன் + இல்.]*

**ஈனு-தல்** *īṉu-,* 14 செ.குன்றாவி. (v.t.). 1. ***ஈன்*** பார்க்க: see *īṉ.* 2. ***காய்த்தல்;*** to bear fruit. 3. ***வயிற்றினின்று குழவியைக் கீழிடுதல், பிள்ளை பெறுதல் அல்லது குட்டி போடுதல்;*** to bring forth a young one.

*E.* yean; *A.S.* eanian = to bring forth.

*[ஈ → ஈன் → ஈனு.]*

**ஈனு மணிமை** *īṉu-maṉimai,* பெ. (n.) ***பிள்ளை பெற்ற தீட்டு;*** ceremonial uncleanliness after delivery. (சா.அக.).

*[ஈனும் + அணிமை.]*

**ஈனை** *īṉai,* பெ. (n.) 1. ***இலை நரம்பு;*** vein of a leaf. 2. ***சித்திரக் குறிப்பு*** (w.); outline of a picture.

*[ஈன் - ஈனை. இல் - ஈல் - ஈன் = குத்துதல். புள்ளியிடுதல், வரை, படம் எழுதுதல்.]*

**ஈனையெழுது-தல்** *īṉai-y-eḻudu-,* 5 செ.கு.வி. (v.i.) ***சித்திரக் குறிப்பு வரைதல்;*** to delineate, make the first outline of a picture, design, or pattern. (w.).

*[ஈன் - ஈனை + எழுதுதல்.]*

**ஈனை வாங்கு-தல்** *īṉai-vāṅgu-,* 5 செ.கு.வி. (v.i.) ***ஈனையெழுது*** பார்க்க; see *īṉai-y-eḻudu.*

*[ஈனை + வாங்குதல்.]*

**ஈனோர்** *īṉōr,* பெ. (n.) ***இவ்வுலகத்தோர்;*** those who are of this world. ''ஈனோர் வடிவிற் காண்டலில்லென'' (சிலப்.பதிகம்.53).

*[ஈ - அண்மைச் சுட்டு. ஈ - ஈன் + ஓர்.]*